ஓம்.

ஸ்ரீசுவாமி தயானந்தசரஸ்வதியாரின்

# சத்தியார்த்தப் பிரகாசம்

(உண்மைநெறி விளக்கம்)

முதற்பாகம்.

மொழிபெயர்ப்பு ஆசிரியர்

## எம். ஆர். ஜம்புநாத ஐயர்

ஸ்ரீ தயானந்தரின் ஜீவியசரித்திர சுருக்கம்

அன்னார் கொள்கை என்னும் நூலை ஆக்கியோன்.

சுதேசமித்திரன் ஆசிரியரும்

இந்திய சட்டசபை அங்கத்தினருமான

## ஸ்ரீமான் ஏ. ரங்கஸ்வாமிஐயங்கார் அவர்களின்

முன்னுரை.



ஆர். நடேச ஐயர், பி. ஏ.
ஆரியபுத்தகாலையம்
14, பள்ளியப்பன் தெருவு, சௌகார்ப்பேட்டை
சென்னை.
1926.

 [இருபாகங்களின் விலை ரூ. 4

எனது அன்னையின்
பாதகமலங்களில் அளிக்கிறேன்.

PRINTED AT THE 'VAVILLA' PRESS, MADRAS.

# அட்டவணை.

# FOREWORD.

BY

## Sri Swami Shraddhanand Ji Maharaj

The name of Rishi Dayananda, the great all-round reformer and the moulder of the present activities in India, is a household word not only in the land of his birth, but in the whole of the civilised world. His teachings are contained in the SATYARTH PRAKASH-an encyclopaedic work of religious information and definition of true Dharma. That book deserves to be translated in all languages of India in the first instance and of the world afterwards.

**Mr M. R. JAMBUNATHAN** has rendered great public service in giving a Tamil translation of the same to the central portion of the Madras Presidency. It is a pity that Rishi Dayananda had no time to tour throughout Madras on his religious mission as he was enabled to do in the Punjab, the United Provinces, Bengal, Bombay and Poona. It is now the duty of his disciples to promulgate his teachings in places where the darkness of blind faith still rules supreme.

I hope the Tamil speaking portions of Madras will appreciate the Translator's services and will enable him to continue his well begun work.

DELHI,
*Feb. 1925.*

SHRADDHANAND SANYASI

# INTRODUCTION

BY

## M. R. Ry. A. RANGASWAMI IYENGAR Avl.,

**B. A., B. L.**

***Editor "SWADESAMITRAN"***

*(Tamil Daily & English Weekly)*

AND

***Member, Legislative Assembly, Delhi.***

In undertaking the introduction of this Magnum Opus of Swami Dayanand Saraswati to the Tamil World I am performing a function which is superfluous in many senses, but is perhaps necessary in one sense. That is, that the wholly rationalistic view of the Vedic religion which Swami Dayananda Saraswati inculcated incessantly during his life has formed the basis of an exposition of Hindu religion that would be a useful solvent at the present time in the variety of doctrinal and communal differences that abound in South India. The **Satyarth Prakash** will present to the Aryans and Dravidians of the South a view of the ancient religion of this land, free on the one hand from the animistic practices of ancient customs that have formed accretions of the Hindu faith in the South, and on the other hand free from the elaborate ritual and ceremonial combined with doctrinal and caste prejudice, that have marred the philosophic and spiritual beauty of the Aryan faith, and that stand in the way of the full natural development of the national and social structure of the land. The way by which Swami Dayananda, the great Vedic scholar and the renowned austere sanyasin, was able to cut through the mass of bigoted faiths and traditions and the array of elaborate sophisms and dreary discussions, is indicated by him in the simple words of his Introduction as follows :—

"I have expounded truth as truth and error as error. The exposition of error in place of truth and of truth in place of error does not constitute the unfolding of truth."

With this beacon light for his guide, **Swami Dayananda** has examined in the **Satyarth Prakash**, the fundamental principles of Vedic or Aryan religion and of the other great reilgions; and the impartiality and honesty with which he has performed his task is indicated by him in the same Introduction in the following words;-

"We have incorporated in this book whatever is true in all religions and in harmony with their highest teachings, but have refuted whatever is false in them. We have exposed to the view of men-learned or other wise-all evil practices whether resorted to secretly or openly. This will help our readers to discuss religious questions in a spirit of love and embrace the one true religion. Though we were born in Aryavarta (India) and still live in it, yet just as we do not defend the evil doctrines and practices of the religions prevailing in our own country, on the other hand expose them properly, in like manner we deal with alien religions. We treat the foreigners in the same way as we treat our own country-men in recognition of common humanity. It behoves all the rest to act like wise. Had we taken the side of one of the prevailing religions of India we would have but followed (blindly) the example of sectarians who extol defend and preach their own religion and decry, refute and check the progress of other creeds. In our opinion however such things are beneath the dignity of man.

Should a man act like an animal which when strong oppresses the weak and even puts them to death, he is more an animal than a man. He alone can fitly be called a man who being strong protects the weak. He that injures others in order to gain his own selfish ends can only be called a big animal."

It is unncessary to say that the Swami beleived in the religion of the Vedas, but that has not meant in his case the denunciation of other faiths. While he has subjected the Vedic religion as developed in the Puranas and Tantras and other like books to a rational and destructive criticism, which bigots might deem merciless if not profane, he has not hesitated to accept truths found imbedded in the Buddhist and Jain religions as well as in the Christian and Mohamedan religions merely because he was not a beleiver in any of these religions taken as a whole. On such a rational basis Swami Dayananda Saraswati examines and lays down the truth of the Aryan faith as he understood it not only in

relation to man's spiritual needs but also to his material and moral needs in the world into which he is brought into being. Indeed, the religious books of the Vedas as of the Hindus treat all parts of a man's life as well as of cosmogony as inter-related. He therefore deals with the life of a typical Arya or Hindu as he deduces it from the true and sound maxims of the Vedas and the Smrithies wherever they are applicable.

The ordinary Aryan's life of the four ashrams of Brahmacharya, Grihasta, Vanaprastha and Sanyasa, the basis of the Rajadharma or the science of government, the doctrines laid down as to the knowledge of Godhead and the means of attaining thereto, and the steps by which the knowledge that dispels ignorance can be used to attain emanciption from the bondage by which through ignorance and sin we are kept in the toils of Samsara, are all dealt with in the first ten chapters with a simplicity and directness and yet withal free from the cobwebs of intellectual wristling and superstitious reverence, that ought to be welcome to many an enquiring mind in South India at the present moment.

It is this that makes the work of my friend Mr. **M. R. Jambunathan** particularly welcome and I would commend it to the Tamil Nadu with all sincerity and humility.

MADRAS,
*June 1925.*

A. RANGASWAMI IYENGAR.



சுவாமி விரஜானந்த சரஸ்வதி

(தயானந்தரின் ஞானாசிரியர்)



சுவாமி தயானந்த சரஸ்வதி
1824—1883

நந்தலைவர்

ஸ்ரீ சுவாமி சிரத்தானந்தருடைய

# பொதுவுரை.

---

எல்லாத் துறைகளிலும் பெருஞ்சீர்த்திருத்தக்காரராயும், தற்கால இந்திய ஊக்கங்களுக்கு ஓர் உருவத்தை அளித்தவராயுமிருக்கிற ரிஷி தயானந்தருடைய திருநாமத்தைத் தான் பிறந்த தேசத்தில் மாத்திரமேயல்லாமல் நாகரிகம் பரவியுள்ள நாடுகள் முழுதிலும் உள்ளோர் யாவரும் அறிவர். அவரது போதனைகளனைத்தும், சமயாசாரங்களெல்லாம் அடங்கியுள்ள பெருங்களஞ்சியமாயும், சத்திய தர்மத்தினுடைய தத்துவங்களை விளக்குகிறதாயும் உள்ளது இச்சத்தியார்த்தப் பிரகாசமேயாகும். பொதுவாக உலகத்தின்கண்ணுள்ள, பாஷைகள் அனைத்திலும், சிறப்பாக நம் நாட்டு பாஷைகளிலும் இப்பெருநூல் மொழிபெயர்க்கத்தக்க நூலாகும்.

ம-ள-ள-ஸ்ரீ எம். ஆர். ஜம்புநாத ஐயர் அவர்கள் சென்னை இராஜதானியின் மத்தியபாகங்களின் உபயோகத்திற்காக, இதனுடைய மொழிபெயர்ப்பொன்றை யளிப்பதினால் பெரும் பொதுநன்மையைச் செய்தவராகிறார். பாஞ்சாலம், ஐக்கியமாகாணங்கள், பீகார், வங்காளம், பம்பாய், புனா முதலான தேசங்களில் மதவிஷயமாய்ச் சுற்றுப்பிரயாணம் செய்ததுபோல், சென்னை முழுவதிலும் சுற்றுப்பிரயாணஞ் செய்ய ரிஷி தயானந்தருக்கு அவகாசமில்லாது போனது வருந்தத்தக்கதே. அஞ்ஞான இருள் இன்னும் தன்னதிகாரத்தை நடத்திவரும் நாடுகளில் அப்பெரியாரின் போதனைகளைப் பிரசுரஞ்செய்தல் அவருடைய சிடர்களின் கடமையாகும்.

தமிழர்களனைவரும் இதனை மொழிபெயர்த்தோரின் ஊழியத்தை ஏற்க வேண்டுமென்பதும் அவர் ஆரம்பித்திருக்கும் இக்காரியம் இனிது முடிவு பெற வேண்டுமென்பதும் எனது விருப்பமாகும்.

டில்லி,
பிப்ரவரி, 1925.

சிரத்தானந்த சன்னியாசி.

சுதேசமித்திரன் ஆசிரியரும்
இந்திய சட்டசபை அங்கத்தினருமான
**ஸ்ரீமான் ஏ. ரங்கஸ்வாமி அய்யங்கார் அவர்களின்**

# முன்னுரை

சுவாமி தயானந்த சரஸ்வதியாரின் நூற்கள் பலவற்றில் சிறப்புற்றோங்கும் இச்சத்தியார்த்தப் பிரகாசத்தை அறிமுகம் செய்துவைக்கையில் தமிழுலகத்திற்கு அதிகவேலையைப்பலவகையில் செய்தவனுகின்றேன். ஆயினும் ஒருவகையில் இது அவசியமாகிறது. தன் வாழ்நாள் முழுவதும் சுவாமிகள் இடைவிடாது புகட்டியுள்ள வேதங்களின் உண்மைத் தத்துவம், இத்தென்னாட்டில் மலிந்து கிடக்கும் பற்பல கொள்கை வேற்றுமை, செய்கை வேற்றுமை, வகுப்பு வேற்றுமை, ஆகியவற்றைத் தீர்க்கவல்லது. ஹிந்து தர்ம விளக்கத்திற்கு அடிப்படையாயும் ஆதாரமாயுமுள்ளது. இத்தென்னாட்டில் ஹிந்து மதத்தினிடைப் புகுந்து பரவிக்கிடக்கும் பழைய பழக்க வழக்கம், மூடபக்தி, பொய்யாசாரம் இவைகளிலிருந்து தனியாயும், நாட்டின் சமூகமுன்னேற்றம் அறிவுமுதிர்ச்சி, இவைகளினுடைய இயற்கையான பரிபூரண வளர்ச்சிக்குத் தடையாயும், ஆரியர்களுடைய நம்பிக்கை, தத்துவஞானம் பரமார்த்திக அழகு ஆகியவற்றைப் பழுதாக்கினதாயும், பிரயாசையுடன் ஆக்கவும்பட்டுள்ள சடங்கு ஆசாரமுறை, முதலியவைகளுடன்கூட கொள்கை வேற்றுமை, ஜாதிக்கலவு ஆகியவைகளிலிருந்து விலகினதாயுமுள்ள, இந்நாட்டுப் புராதன சமயாசாரத்தைத்தென்னாட்டு ஆரியர்களுக்கும் திராவிடர்களுக்கும் சத்தியார்த்தப்பிரகாசம் விளக்குவதாகும். பிடிவாதக்காரர்கள் சம்பிரதாயத்தை அனுஷ்டிக்கிறவர்கள் இவர்களுடைய கொள்கைகள், சுற்றுச் சுழலான சொற்புரட்டுகள், விஷயம் புரியாதவாதானு வாதங்கள் ஆகிய குவியல் களிலிருந்து, வைதிகப் பேரறிவாளரும் துறவிபெரியாருமான சுவாமி தயானந்த சரஸ்வதி தன் வழியை எவ்விதம் தேடினரென்பது மிகவும் எளிய நடையில் எழுதப்பட்டுள்ள அன்னாரின் முகவுரையிலிருந்தே நன்கு விளங்கும்:—

> இந்நூலை ஆக்கியதின் நோக்கம் உண்மையை உலகிலுள்ளோர்க்கு விளக்கிக்காட்டவேண்டுமென்பதே. பொய்யைப் பொய்யென்றும், மெய்யைமெய்யென்றும் விளக்கியுள்ளோம். உண்மையைஉள்ளவாறே பேசுவதும் எழுதுவதும் நம்புவதுமேசத்தியமாகும்.

இவ்வொளியை முன் வைத்துக் கொண்டு சுவாமி தயானந்த சரஸ்வதி அவர்கள் ஆரிய அல்லது வைதிக சமயம், மற்றுமுள்ள பெருஞ் சமயங்கள், இவைகளின் தத்துவங்களை ஆராய்ந்திருக்கிறார். பக்ஷபாதமில்லாமல் நல்லெண்ணத்துடன் தன் கடமையை எவ்விதம் அன்னார் செவ்வனே செய்து முடித்திருக்கிறாரென்பதையும் அம்முகவுரையிலேயே காணலாம்.

> எல்லாச் சமயத்தினிடத்துள்ள நூற்களை ஆராய்ந்து அவைகளிற்புதைந்து கிடைக்கும் சத்தியவாக்கியங்களை எடுத்துக்கொண்டும், சத்தியவிரோதமானவைகளைக் கண்டித்தும் உள்ளோம். இந்நூலின் சிறப்பானமற்றொருநோக்கம் என்னவெனின், பலமதங்களிலும், வெளிப்படையாகவும் மறைவாகவும் சந்திரனிடைக்களங்கம்போல் இருக்கும் சத்தியமதத்திற்கு விரோதமான பொய்த் தத்துவங்களை, மனவளர்ச்சிபெற்ற அறிஞருக்கும் மனவளர்ச்சி பெறாத சாதாரண ஜனங்களுக்கும் உள்ளங்கை நெல்லிக்கனி போல் எடுத்துக் காட்டுவதே யாகும். நாம்பிறந்ததும் வளர்ந்ததும் இவ்வாரியவர்த்தமே (இந்தியா). எனினும், இந்நாட்டிலுள்ள நூல்களில் புதைந்து கிடக்கும் குற்றங்

களை எவ்வாறு பட்சபாதமில்லாது எடுத்துக்காட்டிக் கண்டித்துள்ளோமோ அதே போல் பிறமதநூல்களிலிருக்கும் குற்றங்களையும், குறைகளையும், அசத்தியமான தத்துவங்களையும் எடுத்துக்காட்டிக் கண்டித்துள்ளோம். எமது மதம் என்று யாம் விடுத்திலோம். சிலரைப்போல் பிறமதமென்று தூற்றியுமிலோம். எம்மதமாயினும் உண்மை யுண்மையே. பக்ஷபாதத்துடனிருப்பது மனிதத்தன்மையாகாது.

மிருகமானது பலங்காரணமாக எப்படி பலக்குறைவான மிருகங்களைத் துன்புறுத்தியும் கொன்றும் விடுகிறதோ, அப்படியே மனித சரீரத்தையடைந்ததின் பலனாக அதை ஓர் ஆதாரமாகவைத்துக்கொண்டு, ஒருவன் தீச்செயல்களில் பிரவேசிப்பானேயானால் அவன் மனிதனாகமாட்டான். மிருகமேயாவான். பலமுள்ளகாலத்தில் பல மற்றவைகளைக்காப்பாற்றுகிறவனே உண்மையான மனிதனாவான். பேராசையினால் மற்றவர்களுக்குத் தீங்கு இழைக்கிறவனை மிருகங்களிலும் இழிந்தவன் என்றே கொள்ளல் வேண்டும்.

வேதங்கள் விதிக்கும் சமயத்தையே சுவாமிகள் நம்பினார் எனக் கூற வேண்டியது அனாவசியம் அன்றோ? இந்நம்பிக்கையின் ஆதாரவைக்கொண்டு பிறமதங்களைத் தூஷித்தார் என்று அன்னார் விஷயத்தில் சொல்லுவதற்கியலாது. பிடிவாதக்காரர்கள், கருணையற்றது அல்லது அபசாரமானதெனச் சொல்லக்கூடியவாறு, புராணங்கள், தந்திரங்கள், முதலானவைகளிலிருக்கும் வண்ணம் வைதிக தர்மத்தை அவர் அறிவிற்கேற்றவாறு மறுத்திருந்தபொழுதிலும், பொதுவாகக் கூறுமிடத்து இவைகளொன்றிலும் மொத்தமாக அவர் நம்பாமலிருந்தபொழுதிலும், சமணம், பவுத்தம், கிறுஸ்து, மகம்மதிய ஆகிய மதங்களில் புதைந்து கிடைக்கும் உண்மைகளை ஏற்றுக்கொள்ள அவர் தயங்கவில்லை. இவ்வாறு அறிவை ஆதரவாகக்கொண்டு சுவாமி தயானந்த சரஸ்வதி மனிதனுடைய பரத்திற்கு மாத்திரமே யல்லாது, இவ்வுலக நன்மைகளான வைதிக லௌகிக மேன்மைக்கும் ஏற்றவாறு ஆரியக் கொள்கைகளை ஆராய்ந்து விளக்கியுள்ளார். மனித வாழ்க்கையின் அம்சங்கள் பலவற்றையும் உலகப்படைப்பு, காப்பு, அழிப்பு ஆகியவற்றையும் ஒன்றையொன்று தழுவினதென்றே ஹிந்துக்களுடைய வேதங்கள் எடுத்துரைக்கின்றன. ஆகவே வேதங்களினுடைய உண்மைத்தவங்களிலிருந்தும், கூடினவரையில் ஸ்மிருதிகளிலிருந்தும், ஆரிய அல்லது ஹிந்துவினுடைய வாழ்க்கையின் தர்மத்தைக் குறித்துள்ளார். பிரமசரியம், கிரகஸ்தம், வானப்பிரஸ்தம், சந்நியாசம் ஆகிய ஆரியர்களுடைய வாழ்க்கை தர்மம், இராஜதர்மம் அல்லது அரசிறை, பிரம்மம், பிரம்மஞானம், இவைகளை அடையும் வழி, நம்மை சம்சார சாகரத்தில் உழலச்செய்யும் அவித்தை, பாபம், ஆகிய பந்தங்களிலிருந்து மீறி, அவித்தையை அகல ஓட்டி, முக்தியை அடையவேண்டிய அறிவைப் பெறுவதற்கான வழிகள், இவைகளைக்குறித்து முதல்பத்து அத்தியாயங்களில், மூடபக்தி, நாவன்மையைக்கொண்டு ஏமாற்றல், இவைகளினால் பாதிக்கப்படாமல் தெளிவாகவும் நேராகவும் விளக்கிக் காட்டியுள்ளார். இது தற்காலத்திய தென்னிந்திய விசாரணைக்காரர்களுக்கு மிகவும் உபயோகமாகும்.

இக்காரணங்களே, எனது நண்பர் ஸ்ரீமான் எம். ஆர். ஜம்புநாதன் அவர்களை இவ்வூழியத்தை ஏற்குமாறு செய்தது; எனவே இது வரவேற்கத்தக்கது. இதனைத் தமிழ் நாட்டார் அறிந்து உபயோகப்படுத்திக் கொள்ளுமாறு பேராவலுடன் கேட்டுக்கொள்ளுகிறேன்

ஏ. ரங்கஸ்வாமி அய்யங்கார்

மொழிபெயர்ப்பாசிரியரின்

# நூன்முகம்

சத்திய நூற்களில் சிறந்ததும், ஜனங்களின் மரியாதையைக்கவர்ந்ததும் **வேதமே.** இவ்வேதத்தின் தத்துவத்தை ஜனங்கள் மறந்து வருகின்றனர். அவர்களின் மனத்திடைப் புராணங்கள் புகுந்திருக்கின்றன. என்றாலும் வேதத்தை ஜனங்கள் புண்ணிய நூலாகக்கருதுகின்றனர். வேதத்திடைக்கிடக்கும் சத்தியப் பொருள் நாளுக்குநாள் மறைந்துவருகிறது. உரையாசிரியர்களென்போர் தங்களுக்குத் தோன்றியவாறு புதுப்பொருள் கொடுத்துள்ளார்கள். எனவே இத்தெய்விக நூல் அறியாமையின் பயனால் தாழ்ந்த நிலைக்கு வந்துளது. சுவாமி **தயானந்தர்** கடந்த நூற்றாண்டின் பிற்பகுதியில் வடநாட்டில் தோன்றி மறைந்தனர். அப்பெரியார் வேதத்தைப் பழைய நிலைக்குக்கொண்டு வரவும் இந்நாட்டின் நாகரிகம் மீண்டும் சத்தியத்தில் வளரவேண்டியும் மெய்ப்பொருள் இன்னதென்றும் பொய்ப்பொருள் இன்னதென்றும் விளக்கக்கூடிய ஞானத்தை யளிக்கும் சத்தியார்த்தப் பிரகாசம் என்னும் இந்நூலை ஜனங்களுக்கு வழங்கியுள்ளார். இதைத் தமிழ்நாட்டார் படித்தறிதல் அவசியமாகும். நாட்டினிடை நிறைந்திருக்கும் பொய் மதங்களையும், தத்துவங்களையும் அசத்தியங்களையும் அறியாமையையும் களையவே இப்புது நூல் ஆக்கப்பட்டது. இது பத்தொன்பது பதிப்புகளைக் கண்டுளது. அறுபதினாயிரம் பிரதிகள் வடநாட்டில் இதுவரை பரவியுள்ளது. தற்காலம் வட இந்திய ஹிந்து சமூகத்தினரிடம் சாதிச்சண்டை, மதச்சண்டை என்பது கிடையாது. ஆங்கிலம் கொஞ்சமும் அறியாத சுவாமிகளால் தாபிக்கப்பட்ட ஆரிய சமாஜத்தின் கொள்கையும் இதுவே யாகும். ஏதோ துரதிருஷ்டவசத்தினால் பெரும் பான்மையோர்கள் இத்தென்னாட்டில் ஆரிய என்னும் பதத்தையே வெறுக்கிறார்கள். சரித்திர சம்பந்தமான நம்முடைய ஏற்றத்தாழ்வுகளுக்கெல்லாம் இப்பதத்தினால் குறிக்கப்படும் ஜனங்களையே காரணமென்று கருதுகிறார்கள். பிராமணரல்லாதார்களுள் இவ்வாரிய பதத்தின் உண்மை அர்த்தத்தை அறிந்து அதைப் பரவச்செய்கிற வெகு சிலருள் டாக்டர் வரதராஜுலு நாயுடுவைக் குறிக்கவேண்டும். இந்நூலாசிரியர் கூறும் வண்ணம் கற்றோர்கள், வித்வான்கள், சிறந்தகுணமுடையவர்கள், ஆகியவர்களையே வேதங்கள் **ஆரியர்** என்று போற்றுகின்றன. இதற்கு மாறினவர்களை **அநாரியர்**களென்கிறது. எனவே ஆரிய பதம் ஒரு வகுப்பையோ அல்லது ஒரு கூட்டத்தையோ குறிக்காது.

இந்நூலை மொழிபெயர்க்குங்கால் எனக்குப் போதிய ஊக்கமும் உதவியும் தந்த காலஞ்சென்ற சித்தாந்த சரபம் ஸ்ரீ கலியாணசந்திர யதீந்தரர் அவர்களுடைய பாதங்களில் எனது வணக்கத்தைச் செலுத்துகிறேன். ஸ்ரீமதி பரோபகாரிணி சபையினர், இதனை மொழிப்பெயர்த்துப் பிரசுரஞ்செய்ய

*

அனுமதி தந்தார்கள் என்பது குறிக்கத்தக்கதே. மகாத்மா ஹன்ஸ் ராஜர், ராவ் பகதூர் ஆனந்த ஸ்வரூபர் ஆகியவர்கள் இவ்வேலையை முடிக்கும் வழியில் ஊக்கமளித்தனர். சுவாமி சிரத்தானந்தர் அவர்கள், இதனை வெளிக்கொண்டு வருவதற்கு அதிகம் உதவியுள்ளாரென்பது மிகையாது. ஆகவே அவர் பால் எனது வணக்கத்தையும் அன்பையும் அளிக்கிறேன். இதை அச்சிட்டு வெளிக் கொண்டு வருவதற்கு பொருள் உதவி செய்த ஸ்ரீசுவாமிகளுக்கும் ஸ்ரீமான் மாணிக்ஜீ, பி. சர்மா அவர்களுக்கும் எனது நன்றியறிதலைச்செலுத் துகிறேன். அச்சுக்காப்பிகளைப் பார்ப்பதில் எனக்குப் பெரும் உதவியை அளி த்த ஸ்ரீமான்களான கே. ராஜகோபாலாசாரியார், சு. பெருமாள் பிள்ளைமுதலி யோர்களுக்கும் ஸ்ரீமான் அம்பாலாலுக்கும் எனது வந்தனத்தையளிக்கிறேன். இந்நூலுக்கு முன்னுரைத் தந்து வேண்டிய ஊக்கம் அளித்து உதவிய சுதேச மித்திரன் ஆசிரியா ஸ்ரீமான். ஏ. ரங்கஸ்வாமி ஐயங்கார் அவர்கட்கு மிகவும் கடமைப்பட்டிருக்கிறேன். அவர் பால் எனது அன்பைச் செலுத்துகிறேன். இப்புத்தகத்தைக் காலதாமதமன்னியில் வெளியிட அச்சுக்கூடத்தார் கூட்டு றவு தந்தது குறிக்கத்தக்கதே.

இம்மொழி பெயர்ப்பு பலவருட வேலை. இந்நூலின் கருத்துகளையும் ஆசிரியரது பொருளையும் தழுவியே மொழிப்பெயர்த் துள்ளேன். தமிழ் நாட்டார்க்குப் புதிய உணர்ச்சியையும் வாழ்க்கையில் தூய்மையையும் ஆழ் ந்து நோக்குந் தன்மையையும் இந்நூல் தருமாயின், எனது வேலைப் பயனைத் தந்தது என்று கருதுவேன். நான் விரும்பும் கைம்மாறும் அதுவே.

நூலி லிருக்கும் சிறு குற்றங்குறைகளை நீக்கிக்கொள்ளுமாறு வேண்டிக் கொள்ளுகிறேன்.

பஞ்சவடி, கோதாவரிக்கரை
இரக்தாக்ஷி, கார்த்திகை
பௌர்ணமி (1924)

எம். ஆர். ஜம்புநாதன்



**சச்சிதாநந்தேசுவராய நமோ நமஹ:**

# முகவுரை,

**சத்தியார்த்தப் பிரகாசம்** என நாமம் புனைந்த இந்நூலின் முதற் பதிப்பை ஆக்கத்துவக்குங்கால் எமக்கு ஒரு நூலை ஹிந்திபாஷையில் ஆக்கப் போதியபழக்கம் இல்லை. எமது தாய் பாஷையோ குஜராத்தி; பேசுவதும் பழகுவதுமோ சம்ஸ்கிருதம். பெரும்பான்மையோரான நம்மக்கள் இந்நூலைப் படித்தறியவேண்டி ஹிந்திபாஷையில் ஆக்கத்துணிந்தனம். எனவே சிறு பல இலக்கியப் பிழைகள் நூலிற் புகுவது இயல்பேயாகும். இரண்டாம் பதிப்பைத்துவக்குங்கால் எமக்கு ஹிந்தி பாஷையில் போதிய பழக்கம் ஏற்படவே இந்நூலினிடம் புகுந்துள்ள சிறு பிழைகளைக் களைந்துள்ளோம். பொருள் வேற்றுமையில்லாது இலக்கியத்தையும் இலக்கணத்தையும் ஒட்டி அவசியமான சில திருத்தங்களையும் செய்துள்ளோம்.

இந்நூலில் 14 அத்தியாயங்கள் அடங்கி இருக்கின்றன. முதல்பத்து முற்பகுதியும், மீதியாகிற நான்கும் பிற்பகுதியுமாகிறது. ஏதோ சில காரணங்களினால் முதற்பதிப்பில் சேர்க்கப்படாத கடைசி இரண்டு அத்தியாயங்களும் "என் நம்பிக்கைகளின் விவரம்" என்பதையும், இப்பதிப்பில் சேர்த்துள்ளோம்.

| | | |
|---|---|---|
| அத்தியாயம் | 1-ல் | ஈசுவரனுடைய ஓங்காராதி நாமங்களின் விளக்கம். |
| அத்தியாயம் | 2-ல் | குடும்பக்கல்வி. |
| அத்தியாயம் | 3-ல் | கல்விமுறை. |
| அத்தியாயம் | 4-ல் | கிரகஸ்தாசிரமம். |
| அத்தியாயம் | 5-ல் | வானப்பிரஸ்த சந்நியாசாசிரம விதிகள். |
| அத்தியாயம் | 6-ல் | இராஜதர்மம். |
| அத்தியாயம் | 7-ல் | கடவுளும், வேதமும். |
| அத்தியாயம் | 8-ல் | ஜகத்தினுடைய ஆக்குதல், அளித்தல், அழித்தல். |
| அத்தியாயம் | 9-ல் | வித்தை அவித்தை, பந்தம், மோக்ஷம். |
| அத்தியாயம் | 10-ல் | ஆகாரம்—விரும்பத்தகுந்தது, தகாதது. ஆசாரம்—வேண்டியது விலக்கப்படவேண்டியது |
| அத்தியாயம் | 11-ல் | இந்திய நாட்டிலிருக்கிற பற்பலமதம் கொள்கை இவைகளுடைய ஆராய்ச்சி. |

அத்தியாயம் 12-ல் சாரவாகம், பௌத்தமதம், சமணமதம், இவைகளைப் பற்றியது.

அத்தியாயம் 13-ல் கிருஸ்துவர்களுடைய மதவிஷயம்.

அத்தியாயம் 14-ல் மகம்மதியர்களுடைய மத விஷயம்.

நூலின் முடிவில் நம்மால் ஆதரிக்கப்படும் வைதிக தர்மத்தின் விசேஷ வியாக்கியானத்தை அப்படியே வரைந்துள்ளோம்.

இந்நூலை ஆக்கியதின் நோக்கம் உண்மையை உலகினுள்ளோர்க்கு விளக்கிகாட்டவேண்டுமென்பதே. பொய்யைப்பொய்யென்றும், மெய்யைமெய் யென்றும் விளக்கியுள்ளோம். உண்மையை உள்ளவாறே பேசுவதும் எழுது வதும் நம்புவதுமே சத்தியமாகும். ஒரு சிலர் பொய்யைமெய்யாகவும், மற்ற மதங்களுடைய மெய்யைப் பொய்யாகவும் காட்ட முயலுகிறார்கள். அறிஞர் களின் கடமையாதெனில் உள்ளதைஉள்ளவாறே மேற்கோள்களின் துணை யைக் கொண்டு சத்தியத்தை நிரூபித்துக்காட்டுவதேயாகும். பின்னர்ஜனங்கள் தாமாகவே நன்மை தீமைகளை அறிந்து சத்தியத்தைக் கிரகித்து பொய்களைக் களைந்து ஆனந்தத்தை அடைதல் கூடும்.

மானிட ஆத்மாவிற்குச் சத்தியாசத்தியத்தைப் பகுத்துத்தெரிந்துகொ ள்ளசக்தியிருந்தபோதிலும், சுயநலம், சண்டித்தனம் துராக்கிரகம் அவித்தை முதலான தோஷங்களினால் சத்தியத்தை விட்டு அது அசத்தியத்தின் வயமா கிறது. இந்நூலை எழுதுங்கால் நாம் இவைகளினால் பாதிக்கப்படவில்லை. மற் றவர்களுடைய மனதைப் புண்படுத்துவதோ நோகச்செய்வதோ நம்முடைய நோக்கமில்லை. எம்மனிதருக்கும் கஷ்டத்தையோ துக்கத்தையோ உண்டு பண்ணக்கூடிய தாத்பரியத்தை யுடைய வார்த்தைகள் யாதொன்றையும் மறைத்தோ பகிரங்கமாகவோ இந்நூலில் நாம் புகுத்தவில்லை. சத்தியாசத்திய த்தை யாவருமறிந்து சத்தியத்தைத் தழுவி அசத்தியத்தை ஒழிக்கவேண்டும். இதனாலேயே மனிதனுக்கு மேன்மையும் பெருமையும் உண்டாகின்றது. சத் தியாசத்திய உபதேசம் இருந்தாலொழிய மானிடவர்க்கம் மேல் எழமுடியாது. நல்ல எண்ணத்துடன் இந்நூலின் கண்ணுள்ள அச்சுப்பிழையையோ, வாசகப் பிழையையோ, அல்லது இலக்கியப்பிழையையோ யாராவது எமக்கெடுத்துக் காட்டினால் நாம் அதை வந்தனத்துடன்ஏற்றுக்கொள்வோம். இந்நூலைத்தூற்ற வேண்டுமென்ற வெண்ணத்துடனிருப்பின் நம்மால் ஏற்றுக்கொள்ள முடி யாது. ஒவ்வொருமதத்திலும் அறிஞர்கள் இருக்கின்றார்கள். எம்மதத்தி னரும் பிறமதங்களைத் தூற்றாமலும் மதங்களில்காணும் சத்தியத்தைஎடுத்துக் கொண்டு, சத்தியமற்றதைத் தள்ளி, உலகக்ஷேமத்தை கோருவாரேயானால் உலகத்திற்கு க்ஷேமம் அதிகமேற்படும். அதை விடுத்து அறிவை, மதத்தூற் றல் முதலிய செயல்களில் உபயோகப்படுத்துபவர்கள் உலகிற்கு என் நன்மை யையும் செய்தோராகார். அவர்களது கூற்று பாமரஜனங்களின் மனதில் கொதிப்பை உண்டுபண்ணும். இதனால் துக்கம் கஷ்டம் முதலானவைப்பெரு கின்றன. பெருகவே மனிதஜாதியின் சுகத்திற்குக் கேடுவிளைகிறது. அழி வும் ஏற்படுகிறது.

இந்த அழிவினால் சுயநலமுள்ளோருக்கு நன்மையும் மற்றவர்களுக்குத் தீமையும் துக்கமும் ஏற்படுகின்றன. மேலும் ஜனங்களுக்கு உபகாரம் செய்ய வேண்டிய வெண்ணத்துடன் எவரேனும் முன்வரின் அவருடையவேலைக்குச் சுயநலபிரியர்களுடைய செய்கைகளினால் இடுக்கண்கள் உண்டாகின்றன.

**"सत्यमेव जयते नानृतं सत्येन पन्था विततो देवयानः"** என்கிற ஆன்றோர் மொழிப்பிரகாரம் சத்தியமே வெல்லும். அசத்தியம் அழியும். சத்தியத்தினாலேயே வித்வான்களுடைய வழிவெளிச்சமாகிறது. இவ்வுறுதியைக்கைக் கொண்ட பெரியோர்கள் பரோபகாரம் செய்வதிலிருந்தும் சத்திய நெறியிலிருந்தும் ஒருபொழுதும் பிறழமாட்டார்கள். கீதையில் கூறியவாறு **यत्तदग्रे विषमिव परिणामाऽमृतोपमम्** வித்தையைக் கற்கவும் தர்மத்தை அறியவும்வேண்டி ஒருவன் ஆரம்பிக்குங்கால் அவை விஷத்தைப் போலவும், விஷமொக்குமெனின் முடிவில் அதற்கு மருந்து போலவும் ஆகும். எனவே இதைப்படிப்போரும், கேழ்ப்போரும் துவக்கத்திலேற்படும் சிரமத்தை பார்க்காது இந்நூலைப்படித்து, அதன் மூலம் ஏற்படும் உண்மைகளை அறிதல் வேண்டும் என்னும் எண்ணமே இந்நூலையாக்கத் தூண்டிற்று.

பொய்ச் சமயத்தினிடத்துள்ள நூற்களை ஆராய்ந்து, அவைகளிற் புதைந்து கிடைக்கும் சத்திய வாக்கியங்களை எடுத்துக்கொண்டும் சத்திய விரோதமானவைகளைக் கண்டித்தும் உள்ளோம். இந்நூலின் சிறப்பான மற்றொரு நோக்கம் என்னவெனின், பலமதங்களிலும், வெளிப்படையாகவும் மறைவாகவும் சந்திரனிடைக்களங்கம்போல் இருக்கும் சத்தியத்திற்கு விரோதமான பொய்த்தத்துவங்களை, மனவளர்ச்சிபெற்ற அறிஞருக்கும் மனவளர்ச்சி பெறாத சாதாரண ஜனங்களுக்கும் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் எடுத்துக் காட்டுவதே யாகும். நாம்பிறந்ததும், வளர்ந்ததும் இவ்வாரியவர்த்தமே. எனினும், இந்நாட்டிலுள்ள நூல்களில் புதைந்து கிடக்கும் குற்றங்களை எவ்வாறு பட்சபாதமில்லாது எடுத்துக்காட்டிக் கண்டித்துள்ளோமோ அதே போல் பிறமத நூல்களிலிருக்கும் குற்றங்களையும், குறைகளையும், அசத்தியமானதத்துவங்களையும் எடுத்துக்காட்டிக் கண்டித்துள்ளோம். எமது மதம் என்று யாம் விடுத்திலோம். சிலரைப்போல் பிறர்மதமென்று தூற்றியுமிலோம். எம்மதமாயினும் உண்மை யுண்மையே. பக்ஷபாதத்துடனிருப்பது மனிதத் தன்மையாகாது. மிருகமானது பலங்காரணமாக எப்படி பலக்குறைவான மிருகங்களைத் துன்புறுத்தியும் கொன்றும் விடுகிறதோ அப்படியே மனிதசரீரத்தை யடைந்ததின் பலனாக அதை ஓர் ஆதாரமாக வைத்துக்கொண்டு ஒருவன் தீச்செயல்களில் பிரவேசிப்பானேயானால் அவன் மனிதனாகமாட்டான்; மிருகமேயாவான். பலமுள்ளகாலத்தில் பலமற்றவைகளைக் காப்பாற்றுகிறவனே உண்மையான மனிதனாவான். பேராசையினால் மற்றவர்களுக்குத் தீங்கு இழைக்கிறவனை மிருகங்களினும் இழிந்தவன் என்றே கொள்ளல் வேண்டும்.

முதற்பதினோரு அத்தியாயங்களில் ஆரியவர்த்ததின்கண்ணுள்ள பல்வேறு சமயங்களிலுமுள்ள பெரும் விஷயங்களை விளக்கியுள்ளோம். இங்ஙனம்

வெளியிட்டுள்ள விஷயங்கள் வேதங்களின் ஆதரவைப் பெற்றவைகள். எனவே அவைகளை அங்ஙனமே அங்கீகரித்துள்ளோம். இடையில், பயிரினிடைத் தோன்றும் களைகளெனத் தோன்றியிருக்கும், புராணம் மந்திரம், தந்திரம முதலிய போலிப்புரட்டுக்ள விலக்கவேண்டியவைகளாகும். இவைகள் வேத சம்மதத்தைப் பெறுதவைகள். பன்னிரண்டாவது அத்தியாயத்தில் சாரவாகம் சமணம், பௌத்தம் முதலான மதங்களைப்பற்றி வரைந்துள்ளோம். சாரவாகமானது பௌத்தமதத்துடன் பலவிதத்தில் அநீசுவரவாதக்கொள்கைகளைக் கொண்டதாயிருக்கிறது. பொய்களைப்பரப்பும் அத்தகைய மதம் தற்காலம் மறைந்துள்ளது, எனினும் என்றும் ஜனங்களிடன் பரவாது அதைத் தடுத்தல் அவசியமாகும். இல்லையேல் அது கேட்டை விளைக்கும். தீபவம்சம் பௌத்தமத சங்கிரகம், சர்வதர்சன சங்கிரகம், முதலான பழய நம்பத்தகுந்த நூற்களைக்கொண்டே மேற்கோள்களுடன் பௌத்தமதத்தைக் கண்டித்திருக்கிறோம். நமது ஆராய்ச்சிக்கு எடுத்துக்கொண்ட சமண நூற்களாவன:—

**மூலசூத்திரங்கள் நான்கு:**—(1) ஆவசியக சூத்திரம். (2) விசேஷ ஆவசியக சூத்திரம். (3) தசவைகாலிக சூத்திரம். (4) பாட்சிக சூத்திரம்.

**அங்கங்கள் பதினொன்று:**— (1) ஆசாரங்க சூத்திரம். (2) சுகுடாங்க சூத்திரம். (3) தாணுங்க சூத்திரம். (4) சமவாயாங்க சூத்திரம் (5) பகவதி சூத்திரம். (6) ஞாதாதர்மகதா சூத்திரம். (7) உபாசகத்சா சூத்திரம். (8) அந்தகடதசா சூத்திரம். (9) அனுத்தரோவாயீ சூத்திரம். (10) விபாக சூத்திரம். (11) பிரச்சன வியாகரண சூத்திரம்.

**உபாங்கம் பன்னிரண்டு:**—(1) உபவாயி சூத்திரம். (2) ராயபசேனி சூத்திரம். (3) ஜீவாபிகம சூத்திரம். (4) பன்னவணு சூத்திரம். (5) ஜம்பூத்வீபபன்னதி சூத்திரம். (6) சந்தபன்னதீ சூத்திரம், (7) சூரபன்னதீ சூத்திரம். (8) நிரியாபலீ சூத்திரம். (9) கப்பியா சூத்திரம். (10) கபவடிசய சூத்திரம். (11) பூப்பியா சூத்திரம். (12) புஷ்ய சூலியா சூத்திரம்.

**கல்பசூத்திரங்கள் ஐந்து:**— (1) உத்தார்த்தியயன சூத்திரம், (2) நிசீத சூத்திரம். (3) கல்ப சூத்திரம். (4) வியவஹார சூத்திரம். (5) ஜீதகல்ப சூத்திரம்.

**சேதங்கள் ஆறு:**—(1) மகாநிசீத பிரகத்வாசன சூத்திரம். (2) மகாநிசீத லகுவாசன சூத்திரம். (3) மத்யமவாசன சூத்திரம். (4) பிண்ட நிருக்தி சூத்திரம். (5) ஓத நிருக்தி சூத்திரம். (6) பர்யூஷாண சூத்திரம்.

**பயன்ன சூத்திரங்கள் பத்து:**—(1) சதுச்சாரண சூத்திரம். (2) பஞ்சகாண சூத்திரம். (3) தது லவையாளிக சூத்திரம். (4) பக்திபரிஞ்ஞான சூத்திரம். (5) மகாப்ரத்தியாக்கியான சூத்திரம். (6) சந்தா விஜய சூத்திரம். (7) கனிவிஜய சூத்திரம். (8) மரணசமாதி சூத்திரம். (9) தேவேந்திரஸ்தமன சூத்திரம். (10) சம்சார சூத்திரம்—நந்தீ சூத்திர, யோகத்துவார சூத்திரமும் பிரமாணமாய் போற்றப்படுகிறது.

**பஞ்சாங்கம் ஐந்து :—**(1) முன்சொன்ன எல்லா நூற்களுடைய உரை (2) நிருக்தி. (3) சரணீ. (4) பாஷ்யம்—இவையெல்லாம் அவயவமெனப்படுகின்றது. இந்த அவயவங்களோடு மூலகிரந்தங்களுஞ் சேர்ந்து பஞ்சாங்கமென்று சொல்லப்படும். இதில்டுனேடிர்கள் அவயவங்களைக் கொள்ளுகிறதில்லை. இதுவுமன்றி சைனர்களால் கருதப்படும் பல பின்ன கிரந்தங்களும் இருக்கின்றன.

பன்னிரண்டாவது அத்தியாயத்தில் விவரமாய் இதைப்பற்றி ஆராய்ச்சி செய்திருக்கிறோம். புனருக்த தோஷமென்கிற, கூறியது கூறியல் குற்றம் சமண புத்தங்களில் நிறைந்து கிடக்கின்றன. வெளியானதும், சயினரல்லாதவர்களிடமிருக்கிறதுமான, சைனக்கிரந்தங்களை அம்மதத்தவர் தங்களுடையதென எற்றுக்கொள்ளுகிறதில்லை. இம்மாதிரியான சமணர்களுடைய நம்பிக்கை நகைக்கதக்கதேயாம். ஏனெனில் சிலரால் நம்பப்பட்ட நூல்கள், வேறு சிலரால் நிராகரிக்கப்பட்டபோதிலும் பிமாண மற்றது என சொல்லிவிட இயலாது. அவர்களில் சிலர் ஒரு நூலை நம்பாமலிருந்தாலும் சரி, நம்புகிறதில்லையானாலும் சரி, நம்பாவிட்டாலும் சரி அது அவர்களுடையதன்றெனக் கூறமுடியாது. சமணர்களாலோ அல்லது அவர்களைச் சார்ந்தவர்களாலோ நம்பப்படாத புத்தகம் மேற்கண்ட ஜாப்தாவிலொன்றுமில்லை. சமணர்களில் பலர் ஒரு நூலைப் பூரணமாக நம்பினபொழுதிலும், பகிரங்கமான சம்வாதங்களில் அதை நிராகரிக்கிறார்கள். அவர்கள் தங்களுடைய கிரந்தங்களை இரகசியமாகவே வைத்துக்கொண்டிருக்கிறார்கள். மற்ற மதத்தியவர்களுக்குத் தங்கள் புத்தகங்களைக் கொடுக்கிறது மில்லை. படிக்கிறதுமில்லை. கற்பிக்கிறது மில்லை. ஏனென்றால் தங்களால் காட்டுவதற்கு யோக்கிய மில்லாதவும் காப்பாற்றவுமுடியாததுமான அவ்வளவு அசம்பவங்களால் அவர்களின் கிரந்தங்கள் நிறைந்திருககின்றன. பொய் நம்பிக்கைக்கு விரோதமாக ஒருவர் பேசும்பட்சத்தில், அப்பொய்யை விட்டு விடுவதே அதற்குத்தக்க பதிலாகும்.

பதிமூன்றாவது அத்தியாயத்தில் கிருஸ்துவ மதத்தைப்பற்றியும் அம்மதத்தின் தர்ம நூலெனக்கருதும் பைபிளைப்பற்றியும் விரிவாய் ஆராய்ச்சி செய்துள்ளோம். அடுத்த அத்தியாயத்தில் மகம்மதிய மதத்தைப்பற்றி எடுத்துக்காட்டியுள்ளோம். அவர்கள் குர் ஆனைத் தங்களது ஆதி புத்தமாகக்கொள்ளுகிறார்கள். அந்நூலையும் ஆராய்ந்துள்ளோம். கடைசியில் வைதிக தர்மத்தின் கொள்கைகளின் உண்மைகளைச் சுருக்கமாக வரைந்திருக்கிறோம். எவர் நூலை ஆக்கியோனுடைய மனதிற்கு விரோதமான மனதுடன் படிக்கிறார்களோ அவருக்கு உண்மை புலனாகாது. ஒரு விஷயத்தின் பொருளை அறிய வழி நான்குண்டு. (i) ஆகாங்க்ஷை (ii) யோக்கியதை (iii) ஆசக்தி (iV) தாத்பரியம்.

பேசுகிறவர் அல்லது கிரந்தகர்த்தா இவர்களுடைய மனோவெண்ணத்திற்கேற்ப அறிவதே " ஆகாங்க்ஷை " யாம். (i) தெளிப்பதற்கு ஜலம் எப்படி

உசிதமாயிருக்கின்றதோ அப்படியே நம்முடைய எண்ணங்களைத் தெரிவிக்கும் ஏற்ற சொற்களுக்கு யோக்கியதை என்று பெயர். (iii) சந்தர்ப்பத்தி லிருந்து வேறுபடுத்தி இணைபிரியாமல் பேசுவதும் படிப்பதும் ஆசத்தியாம் (iv) எந்த எண்ணத்துடன் பேசுகிறாரோ அதே எண்ணத்துடன் அதையறி தலே தாத்பரியமாம்.

சிலர் பக்ஷபாதம், பிடிவாதம், காரணமாகக் கர்த்தாவினுடைய எண்ணத் திற்கு விரோதமாகப்பொருள் செய்யமுயலுகிறார்கள. சத்திய சாஸ்திரங் களின் ஆராய்ச்சியில் பக்ஷபாதமாய்ப் பேசுகிறவர்கள் பாபிகளே ஆவார்கள். நாம் புராணம், சமணகிரந்தம பைபிள் குர் ஆன் இவற்றைப் பக்ஷபாதத்தோடு நோக்காமல் குணத்தைத் கிரகித்தும் குற்றங்களைக்களைந்தும், பலருக்குப் பிர யோஜனப்படுமாறு விளக்கியுள்ளோம். எல்லோரும் இதைப் பின்பற்றுதலே நல மாகும். சத்தியா சத்தியங்களை அறிய எண்ணாது பக்ஷபாத எண்ணத்தோடு நூற்களுக்குப்பொருள்தர வரும் ஒருவன் அறிஞனாகமாட்டான். அறிவிலிகள் நாம் தொகுத்துள்ள இந்நூலை எவ்விதமாவது கொள்ளட்டும். அறிஞர்கள் இந் நூலைப்படித்து உள்ளதை உள்ளவாறே தெரிந்து கொண்டால் எமது எண்ணம் சித்திபெற்றதாகும். அறிஞர்கள் சத்தியத்தை அங்கீகரித்து அதனால் நாம் எடுத்த வேலையை முடித்துவைப்பார்களென்னும் நம்பிக்கை கொண்டு இந் நூலை உலகிற்கு அளிக்கின்றனம். அச்சமின்றி உண்மையை விளக்குவதே மனிதனது முதல்வேலையாகும். சர்வாத்மாவாயும் சர்வாந்தர்யாமியாயும் சச்சி தானந்தமுமான பரமாத்மாவுடைய கிருபையினால் இவ்வெண்ணம் நாட்டில் பரவி எந்நாளும் நிலை நிற்குமாக!

**अलमतिविस्तरेण बुद्धिमद्वरशिरोमाणिषु** புத்திமான்களுக்கு ஒரே வார்த்தை போதுமானது.

உதயபுரம் 1939வது
விக்ரம சகாப்தம்
பாத்ரபத சுக்ல பக்ஷம்
(கி. பி. 1882).

(சுவாமி) தயானந்த சரஸ்வதி



சச்சிதானந்தேச்வராய நமஃ.

# சத்தியார்த்தப் பிரகாசம்.

## முதல் அத்தியாயம்.

ओम् शन्नो मित्रः शं वरुणः शन्नो भवति अर्य्यमा ।
शन्न इन्द्रो बृहस्पतिः शन्नो विष्णु रुरुक्रमः ॥
नमो ब्रह्मणे नमस्ते वायो त्वमेव प्रत्यक्षं ब्रह्मासि । त्वामेव प्रत्यक्षं ब्रह्मवदिष्यामि ऋतं वदिष्यामि । सत्यं वदिष्यामि तन्मामवतु तद्वक्तारमवतु । अवतुमां अवतुवक्तारं ओं शान्तिश्शान्तिश्शान्तिः ॥१॥

**அர்த்தம்:**—(ஓம்). இந்த ஓங்காரசப்தம் பரமேஸ்வரனுடைய சர்வோத்தமமான பெயர். ஏனென்றால் இதில் "அகர உகர மகர" என்று மூன்று அட்சரங்கள் சேர்ந்து (ஓம்) என்கிற சமுதாயத்தை அடைகிறது. இந்த ஒருநாமத்திலிருந்து பரமேச்வரனுக்கு அனேகவிதமான நாமங்கள் உண்டாகின்றன. அதாவது "அ" காரத்திலிருந்து "விராட்" அக்னி, விச்வாதி முதலியவைகளையும் "உ" காரத்திலிருந்து ஹிரணியகர்ப்பம், வாயு, தேஜசாதிகளையும் "ம" காரத்திலிருந்து ஈச்வரன் ஆதித்தியன் ப்ராக்ஞாதி நாமவாசகங்களையும் அறிந்துக்கொள்ளவேண்டியது. வேதாதி சத்யசாஸ்திரங்களில் இங்ஙனமே தெளிவாகக்கூறப்பட்டிருக்கிறது. சொல்லுமிடங்களுக்கு தக்கவாறு எல்லாநாமங்களும் பரமேச்வரனுடையனவே.

**வினா:**—விராட் ஆதி நாமங்கள் பரமேச்வரனைக்காட்டிலும் பின்ன அர்த்த வாசகங்களுக்கு ஏனிருக்கக்கூடாது. பிர்மாண்டத்திற்கும், ப்ருதிவியாதி பூதங்களுக்கும், இந்திராதி தேவதைகளுக்கும், வைத்யசாஸ்திரத்தில் சுக்கு முதலிய ஔஷதங்களுக்கும் இந்நாமம் இருக்கின்றதா இல்லையா?

**விடை:**—இருக்கின்றது. ஆனால்பரமாத்மாவைத்தான் குறிக்கின்றது.

**வினா:**—இந்நாமங்கள் தேவதைகளைமாத்திரம் குறிக்கின்றதா இல்லையா?

**விடை:**—இல்லை. அப்படி கிரஹிப்பதற்கு பிரமாணம் யாது?

வினா:—தேவதைகள் எல்லாவற்றிற்கும் பிரசித்தமாயும் உத்தமமாயும் இருக்கிறபடியினால் இதை நான் கிரஹிக்கிறேன்.

விடை:—என்ன பரமேச்வரன் சப்ரஸித்தரா? அவரைவிட உத்தமர் யாவரேனும் உண்டோ? இந்நாமத்தைப் பரமேச்வரனுக்கு ஏன் அளிக்கலாகாது. பரமேச்வரன் சுப்ரசித்தராயும் அவருக்குத் துல்யமா யாருமில்லாதபடியால் அவரைவிட உத்தமமாய் எது இருக்ககூடும். ஆகையினால் தாங்கள் இப்படிச்சொல்வது சத்யமில்லை. ஏனென்றால் தாங்கள் இப்படிச் சொல்வதினால் பற்பல தோஷங்கள் உண்டாகின்றன. “उपस्थितं परित्यज्यानुपस्थितं याचत इति बाधितन्यायः” ஒருவன் மற்றொருவனுக்கு போஜனமளித்து உண்ணவேண்டும் என்று விரும்பிக்கூறவும் அதைவிட்டுவிட்டு அடையமுடியாத போஜனத்திற்கு இங்குமங்கும் திரிதலே பாதாதி நியாயமாகும். ஏனென்றால் சமீபத்திலுள்ளதும் அடையக்கூடியதுமானபதார்த்தங்களைவிட்டுவிட்டு தூரத்திலுள்ளதும் அடையக்கூடாததுமான பொருளை அடைய சிரமப்படுகிறான். எப்படி அவன் கார்யம் புத்தி யற்றதாயிருக்கிறதோ அதேமாதிரி நீர் சொல்லுவதும் கற்பனையே. ஏனென்றால் தாங்கள் விராடாதி நாமங்களுக்குப் பிரசித்த பிரமாண சித்த பரமேச்வர பிரமாண்டாதி உபஸ்தித அர்த்தங்களை விட்டு விட்டு அசம்பவ, அனுபஸ்தித தேவாதிகளைக் கிரகிக்க சிரமப்படுகிறீர். இதற்கு ப்ரமாணமும்யுக்தியும் ஒன்றுமில்லை. ப்ரகரணானுகூலப்பிரகாரம் அந்தந்த விடத்தில் அர்த்தம் உரைப்பது உசிதம். எப்படியென்றால், ஒரு எஜமானன் தன்னுடையசேவகனைப்பார்த்து हे भृत्य त्वं सैंधवमानय அதாவது நீ சைந்தவத்தை கொண்டுவா என்றால், அவன் சமயம் பிரகரண முதலியவைகளை யோசிப்பது அத்யா வசியமாகும். ஏனென்றால் “சைந்தவம்” என்பதற்குக்குதிரை என்றும், உப்பு என்றும், இரண்டுபொருள் உண்டு. எஜமானன் வெளியில் போகும் சமயத்தில் “குதிரையையும்” உண்ணும் சமயத்தில் “உப்பையும்” கொண்டுபோவது உசிதமாகும். வெளியில் போகும் சமயத்தில் “உப்பையும்” போஜனசமயத்தில் குதிரையையும் கொண்டுபோனால் எஜமானன் கோபமடைந்து, ஹே! நிர்புத்தி புருஷா! கமனசமயத்தில் உப்பையும் போஜன சமயத்தில் “குதிரை” யையும் கொண்டுவந்து நிறுத்தினல் என்ன பிரயோசனம் என்று உறுமி நீ ப்ரகரணானுகூலப்ரகாரம் யோசனை செய்யவில்லை என்றும், எந்தச் சமயத்தில் எதேது கொண்டுவர வேண்டுமென்றும், நீ இப்படி செய்தால் என் எதிரில் வரவேண்டியதில்லை என்றும் ஆக்ஞாபிப்பார். ஆகையினால் இதிலிருந்து என்ன தெரிந்துக்கொள்ளுகிறோமென்றால், எந்தந்த இடத்தில் எப்படி கிரகிக்கவேண்டுமோ அப்படிக்கிரகிக்க முயலவேண்டும். தாங்களும் இன்னும் மற்ற எல்லோரும் அங்ஙனமே ஏற்றுக்கொள்ளல் அவசியமாகும்.

ஓங்காராதி நாமங்கள்பரமாத்மாவையே குறிப்பிடுகிறதைகாண்பிப்பதற்கு இப்பிரமாணங்களை எழுதுவதின் நோக்கம் என்னெனின், இவ்வுலகில் தரித்திர

னுக்கு 'தனபதி' என்று நாமம் இருப்பதுபோல் பரமேச்வரனுக்கு அர்த்தமில்லாத நாமம் ஒன்றும் கிடையாது. மேலும் இந்நாமங்கள் கௌணிகங்களேயோ, கார்மிகங்களேயோ, சுவபாவிகங்களேயோ, நிருபிக்கிறது.

இப்பொழுது ஓங்காராதி நாமங்கள் அடியில் வருமாறு அர்த்தமாகின்றன.

### மந்திரார்த்தங்கள்.

1. ओ३म् खम्ब्रह्म । अवतीत्योम् । आकाशमिव व्यापकत्वात् खम् । सर्वेभ्यो ब्रह्मत्वाद् ब्रह्म । யஜு॰ 40 மன் 17.

ரக்ஷிப்பதால் (ஓம்) என்றும், ஆகாசம்போல் வியாபித்திருக்கிறபடியினால் 'ஸ்வம்' எனவும், எல்லாவற்றையும்விட உன்னதமாயிருக்கிறபடியினால் பிரம்மாவெனவும் ஈச்வரனின் நாமங்களாகும்.

2. ओमित्येतदक्षरमुदूगीथमुपासीत ॥ சாந்தோக்யம்.

எக்காலமும் அழியாதிருப்பவர் பெயரோ "ஓம்" அவரே உபாசனைக்குரியார். அவரைத் தவிர வேறுயாருமில்லை.

3. ओमित्येतदक्षरमिदꣳसर्वं तस्योपव्याख्यानम् ॥ மண்டூக்ய உபநிஷத்.

எல்லா வேதாதி சாஸ்திரங்களில் பரமேச்வரனுடைய பிரதானமானவும், உண்மையானவும் நாமம்"ஓம்"ஒன்றே. மற்றையதெல்லாம் கௌணிகநாமங்கள்

4. सर्वे वेदा यत्पदमामनन्ति तपाँसि सर्वाणि च यद्वदन्ति ।
यदिच्छन्तो ब्रह्मचर्य्यं चरन्ति तत्ते पदँ सङ्ग्रहेण ब्रवीम्योमित्येतत्.

கடோபநிஷத் 7. 15.

எல்லா வேதங்களும் சம்ஸ்ததர்மானுஷ்டான ரூபதபஸ் சரணாதிகள் எவரைக்குறித்து செய்யப்பட்டு கௌரவப்படுத்துகின்றதோ எவரை எண்ணிப் பிரமசரியாதி ஆச்ரமங்கள் ஆசரிக்கப்படுகின்றதோ அவருடைய திருநாமமே ஓம்.

5. प्रशासितारँ सर्वेषामणीयांसमणोरपि । रुक्माभं स्वप्नधीगम्यँ विद्यात्तं पुरुषं परम्॥

மனு. அத்தியாயம் 12 சுலோ. 122.

எல்லோருக்கும் குருவாயும், சூட்சமத்தைவிட சூட்சமமாயும், சுவயம்ப்ரகாச ஸ்வரூபமாயும் ஆத்ம புத்தியினால் அறிய யோக்கியமாயுமிருக்கிற அவரையே பரம புருஷரென்று அறியவேண்டும்.

6. एतमेके वदन्त्यग्निं मनुमन्ये प्रजापतिम् । इन्द्रमेके परे प्राणामपरे ब्रह्मशाश्वतम् ॥

சுலோ 123.

சுயம்பிரகாசராயிருப்பதினால் அக்னியென்றும், விக்ஞான ஸ்வரூபராயிருக்கிறபடியினால் மனுவென்றும் எல்லோரையும் ரட்சிப்பதாலும் பரம

ஐசுவரியவானுயிருப்பதாலும் இந்திரன் என்றும், எல்லாவற்றிற்கும் ஜீவன் மூல மாயிருப்பதினுல் ப்ராணன் என்றும், நிரந்தர வ்யாபகராயிருக்கிறபடியினுல், பிரம்மாவென்றும், பரமேச்வரனுக்கு பெயர்கள்.

7. स ब्रह्मा स विष्णुः स रुद्रस्स शिवस्सोऽक्षरस्स परमः स्वराट् ।
स इन्द्रस्स कालाग्निस्स चन्द्रमाः ॥ கைவல்யோபநிஷத்.

ஜகத்தை செய்கிறதினுல் பிரம்மாவென்றும், ஸர்வத்ர வ்யாபகராயிருப்பதினுல் விஷ்ணுவென்றும், துஷ்டர்களைத் தண்டித்துத் அக்கிக்கச்செய்கிறபடியினுல் ருத்திரனென்றும், எல்லோருக்கும் சுபத்தைக்கொடுத்து மங்களகரமாயிருக்கிறபடியினுல் சிவன் என்றும், சர்வ வியாபியாயும், அவினுசியாயும் இருப்பதால் "அக்ஷர்" என்றும், சுவயம்ப்ரகாச சுவரூபராயிருக்கிறபடியினுல் ச்வராட் என்றும், பிரளயகாலத்தில் யாவற்றிற்கும் காலனும் காலனுக்கு அக்கினி போலிருப்பதினுல் காலாக்கினியென்றும் அவரின் பெயர்கள்.

8. इन्द्रं मित्रं वरुणमग्निमाहुरथो दिव्यस्स सुपर्णो गरुत्मान् ।
एकं सद्विप्रा बहुधा वदन्त्यग्निं यमं मातरिश्वानमाहुः ॥

ரிக் மண்டலம், 1, 22, 64.

எந்த ஏக அத்விதீயமான சத்தியபிரம்மவஸ்து இருக்கின்றதோ அதற்கே இந்திராதி நாமங்கள்.

द्युषु शुद्धेषु पदार्थेषु भवो दिव्यः शोभनानि पर्णानि पालनानि कर्माणि वा यस्यः सः । योगुर्वात्मा सा गरुत्मान् । यो मातरिश्वा वायुरिव बलवान् स मातरिश्वा ॥

ப்ரகிருத்தியாதி எல்லா திவ்யபதார்த்தங்களிலும், இன்னும் அது சம்பந்தமான யாவற்றிலும் வியாபித்திருக்கிறபடியினுல், அவருக்கு இந்திரன் என்று பெயர். (2) அவருடைய காப்பாற்றுதல் உத்தமமாயிருக்கிறபடியினுலும், காரியங்கள் பரிபூரணமாயிருப்பதாலும் அவருக்கு "சுபர்ணன்" என்று பெயர். (3) அவருடைய ஆத்மா (சுவரூபம்) மகத்தாயிருக்கிறபடியினுல் "கருத்மான்" என்று பெயர். (4) வாயுவைவிட அனந்தமான சக்தியை உடையவனுகையால் "மாதரீசுவ" என்று பெயர். இவ்விதம் பரமேச்வரனுக்குத் திவ்யன், சுபர்ணன், கருத்மான், மாதரீசுவர், என்பனபெயர்கள். மீதிப்பெயர்கள் இனி விவரிக்கப்படும்.

9. भूरसि भूमिरस्यादितिरसि विश्वधाया विश्वस्य भुवनस्यधर्त्री ।
पृथिवीं यच्छ पृथिवीं दृंह पृथिवीं मा हिँसीः
भवन्ति भूतानि यस्यां स भूमिः ॥ யஜுர்வேதம் அத்தியாயம் 31.

சகலஜீவராசிகளும் தன்னிடத்திலிருக்கிறபடியினுல் ஈச்வரனுக்கு "பூமி", என்று பெயர். இதிலிருக்கும் ஈச்வரனின் இதர நாமங்கள் பின்னர் விவரிக்கப்படும்.

10. इन्द्रो महना रोदसी पप्रयच्छव इन्द्रः सूर्य्यं मरीचयत ।
इन्द्रेह विश्वा भुवनानि योमिर इन्द्रे स्वानास इन्द्रः ॥

சாமவே, 7, 3. 8. 16. 2. 3. 2.

இந்தப்பிரமாணத்தினுல் ஈச்வரனுர்கு "இந்திரன்" என்கிற பெயர் ஸ்தாபிதமாகிறது.

11. प्राणया नमो यस्य सर्वमिदं वशे । यो भूतः सर्वस्य ईश्वरो यस्मिन् सर्वं प्रतिष्ठतम् ॥

அதர்வ. காண் 11. அத. 2. சூக்தம் 2. மந். 1.

எப்படி ப்ரணவ சக்தினுல் எல்லா இந்திரியங்களும் இருக்கின்றனவோ அப்படியே யாவத்துலகமும் தெய்வத்தினுடைய வசத்திலிருக்கின்றது. (அதர்வ வேதம். 11. வது காண்டம், இரண்டாவது அத்தியாயம், 2-வது சூக்தம் முதல் மந்திரம்.)

## அக்கினியாதி நாமங்களின் சிறப்புப்பொருள்.

மேற்கண்ட பிரமாணங்களின் உண்மைப்பொருள் மூலம், பரமேச்வரனுடைய நாமங்கள், சித்தாந்தங்களுடன் நிருபிக்கப்படுகின்றன. ஏனென்றால் 'ஓம்' அக்னி முதலான நாமங்கள் சரியாய்ப்பேசும்பக்ஷத்தில் வ்யாகரணம் நிருக்தம் பிராமணம் சூத்ரம் ரிஷிமுதலிய வியாகரணங்களிலும் கிரந்தங்களிலும் சொல்லிய வண்ணம் கடவுளேயே குறிக்கின்றது. ஆகையினுல் இவ்வர்த்தங்கள் எல்லோராலும் அங்கீகரிக்கப்படவேண்டியது அவசியமாகும். "ஓம்" இது கேவலம் பரமாத்மாவினுடைய பெயரே. ஆனல் அக்னியாதி நாமங்கள் பிரகரண விசேஷ நியமகாரக சந்தர்ப்பங்களில் பரமேச்வரனை கிரஹிக்கவேண்டும். அதாவது எவ்வெவ்விடத்தில் ஸ்துதி, பிரார்த்தனை, உபாசனை, சர்வக்ஞ, வியாபக, சுத்த சனுதன சிருஷ்டிகர்த்தா ஆதிவிசேஷணங்கள் எழுதியிருக்கின்றதோ அவ்வவ்விடத்தில் பரமேச்வரனையே விளக்குகின்றது.

## அக்கினியாதி நாமங்களின் பொதுப்பொருள்.

ஆனுல் அடியில்வரும் ப்ரகரணங்களிலும்

ततो विराडजायत विराजो अधि पुरुषः ।
श्रोत्राद्वायुश्च प्राणश्च मुखादग्निरजायत ।
ततो देवा अजयन्त । पश्चात् भूमिमधोपुरः ॥ யஜுர்வேதம் அ. 31.
तस्माद्वा एतस्मादात्मन आकाशः सम्भूतः । आकाशात् वायुः । वायोरग्निः ।
अग्नेरापः । अद्भ्यः पृथिवी । पृथिव्या ओषदयः । ओषधीभ्योन्नम् ।
अन्नाद्रेतः । रेतसः पुरुषः । स वा एष पुरुषोन्नरसमयः ॥

தைத்திரேயோபநிஷத்தில் பிர்மானந்தவல்லி பிரதமானுவாகம் வசனம், இந்தப் ப்ரமாணங்களில் 'விராட்' புருஷ தேவ, ஆகாச, வாயு, அக்னி, ஜலம், பூமி ஆதிநாமங்கள் லௌகிகபதார்த்தங்களையே காட்டுகின்றன.

ஏனென்றால் எவ்வெவ்விடத்தில், உற்பத்தி ஸ்திதி பிரளயம் அல்பக்ஞும்—திர்டம் திர்சிய ஆதிவிசேஷணங்கள் எழுதியிருக்கின்றதோ அவ்வவ்விடத்தில் பரமேச்வரனைக்காட்டவில்லை. ஏனென்றால் அவர் உற்பத்தி வியவஹாரங்களிலிருந்து வேறாக யிருக்கின்றார். மேல்சொன்ன மந்திரங்களில் உற்பத்தியாதி வியாபாரங்களிருக்கின்றன. இதனால் இந்த "விராடாதி" நாமங்கள் பரமாத்மாவை காண்பிக்காமல் உலகத்தின் இயற்கைப்பதார்த்தங்களைக் காண்பிக்கின்றன. ஆனால் சர்வக்ஞாதி விசேஷணங்கள் எங்கே குறிப்பிட்டிருக்கின்றதோ அங்கே பரமாத்மாவையும் எங்கெங்கே இச்சை துவேஷம் பிரயத்தினம் சுகம் துக்கம் அல்பக்ஞாதி முதலிய விசேஷணங்கள் வருகிறதோ அங்கே "ஜீவனை"யே அர்த்தமாகுகின்றது. இங்ஙனம் எல்லாவிடத்திலேயும் தெரிந்துகொள்ளவேண்டியது. ஏனென்றால் பரமேச்வரனுக்கு ஜன்மமும் மரணமும் எப்பொழுதும் கிடையாது. அதனாலே விராட்டாதி நாமங்கள் சன்மாதி விசேஷணங்களினாலே ஜகத்தில் ஜட சீவாதி பதார்த்தங்களாலேயே கிரஹிக்க வேண்டியது உசிதமாகும். கடவுளைக் காண்பிக்கவில்லை. எந்தப்பிரகாரம் விராட்டாதி நாமங்களால் பரமேச்வரனைக் கிரஹிக்கவேண்டியது என்பதை அடியிலிருந்து தெரிந்துகொள்வோம்.

## பரமேச்வரனுடைய சத நாமங்கள்.

1. விராட்.—'ராஜ்' என்னும் தாதுவுடன், (வி) உபஸர்கபூர்வகமும் (க்யப்) ப்ரத்யமும் சேர்ந்து 'விராட்' (ப்ரகாசிக்கிறவர்) சப்தம் சித்தமாகிறது.

**यो विविधं नाम यराचरं जगद्राजयति स विराट् ।**

எவர் பல விதமாய் ஜகத்தைப் பிரகாசிக்கச்செய்கிறாரோ, அவருக்கே விராட் என்ற பெயர். ஆகையினால் இது பரமேச்வரனைத்தான் குறிக்கிறது.

2. அக்னி.—அக, அகி, இண், (கத்யர்த்தக சலனத்தைக் குறிப்பிடுகிற) தாதுக்கள். இவைகளிலிருந்து "அக்னி" (பூஜிக்கத்தகுந்த) சப்தம் சித்தமாகிறது.

**योऽञ्चति अच्यतेऽगत्यञ्चत्येति सोऽयमग्निः ।**

ஞானஸ்வரூபராயும், சர்வக்ஞராயும், எல்லாம் அறிந்தவராயும், அடைகிறதற்கும், பூஜிப்பதற்கும் எவர் யோக்யமோ அவருக்கே 'அக்னி' என்று பெயர். ஆகையினால் இக்நாமமும் பரமேச்வரனையே குறிக்கிறது.

3. விஸ்வன்.—"விஸ்" என்னும் தாதுவுடன், (வ) ப்ரத்யயம் சேர்ந்து 'விஸ்வ' (ஸ்தலம் அல்லது கர்த்தா) சப்தம் உண்டாகிறது

**विशन्ति प्रविष्टानि सर्वाण्याकाशादीनि भूतानि यस्मिन् यो वाऽकाशादिषु सर्वेषु भूतेषु प्रविष्टः स विश्व ईश्वरः ।**

அவரிடத்தில் ஆகாசாதி சமஸ்த பூதங்கள் ப்ரவேசிப்பதுமல்லாமல், இவைகள் எல்லாவற்றிலும் அவர் வியாப்தமடைந்து விளங்குகிறபடியினால்,

அந்தப்பரமேச்வரனுக்கே 'விஸ்வன்' என்று பெயர். இத்யாதி நாமங்களும் ஓங்காரத்திலிருக்கும் 'அ' காரத்திலிருந்து வெளியாகிறது.

**ஹிரண்ய கர்பன்.**—அய்த்ரேயம், ஷட்பாத்.

**ज्योतिर्वै हिरण्यं तेजो वै हिरण्यं**

**योहिरण्यानां सूर्यादीनां तेजसां गर्भ उत्पत्ति निमित्त मधिकरणं स हिरण्यगर्भः ।**

அவனல் சூர்யாதி தேஜஸுசுள்ள லோகங்கள் உற்பத்தியடைந்து அவருடைய ஆதராத்தினல் நிலை நிற்கிறது. அதுவுமன்றியில் சூர்யாதி தேஜஸ்வரூப பதார்த்தங்களுக்கு உத்பத்தி நிவாசஸ்தானம் அவரே. இதற்கு கீழ்க்கண்ட யஜுர்வேதப்ரமாணம்.)

**हिरण्यगर्भः समवर्तताग्रे भूतस्यजातः पतिरेक आसीत् ।**

**स दाधार पृथिवीं ध्यामुतेमां कस्मै देवाय हविषा विधेम ॥**

இத்யாதி விடங்களில் பரமேச்வரனுக்கே ஹிரண்ய கர்பம் என்று பெயர்.

5. **வாயு.**—'வ' என்னும் தாதுவிலிருந்து 'வாயு' (அலேகிறது) சப்தம் சித்தமாகிறது.

**वा गतिगन्धनयोः गन्धनं हिंसनम् ।**

**यो वाति चराऽचरञ्जगद्धरति बलिनां बलिष्टः स वायुः ।**

சராசரமான ஜகத்தைத்தரித்து, ஜீவனுடையதாகச்செய்து ப்ரளயிக்கச்செய்கிறவரராயும், பலவான்களுக்கெல்லாம, பலவந்தருமாயிருக்கிற அந்தப் பரமேஸ்வரனுக்கு "வாயு" என்று பெயர்.

6. **தேஜஸ்.**—'தஜ்' என்னும் தாதுவிலிருந்து 'தேஜஸ்' சப்தம் சித்திக்கிறது. இதே தாதுவுடன் நாமப்ரத்யயம் சேர்ந்து தேஜஸ் சப்தம் சித்தமாகிறது.

**तिजनिशानै तेजः ।**

ஸ்வயம் ப்ரகாச்சராயும், சூர்யாதி லோகங்களை ப்ரகாசிக்கச்செய்கிற அந்த பரமேஸ்வரனுக்குத் 'தேஜஸ்' என்றும் பெயர். ஷை நாமங்கள் ஓங்காரத்திலிருக்கும, 'உ' காரத்தினல் குறிப்பிடப் பட்டிருக்கிறது.

7. **ஈச்வரன்.**—'ஈஷ்' என்னும் தாதுவுடன் 'வர்' ப்ரத்யயம் சேர்ந்து 'ஈசவர' (ஆளுகிறவர்) சப்தம் சித்தமாகிறது.

**ईश ऐश्वर्ये य इष्टो सर्वैश्वर्यवान् वर्त्तेते स ईश्वरः ।**

சத்யவிசார சீல ஞானமுடையவராயும், அனந்த ஐஸ்வர்யவானுயுமிருக்கிற அந்தப் பரமாத்மாவுக்கே ஈஸ்வரன் என்று பெயர்.

8. **ஆதித்யன்.**—'தோ' என்னும் தாதுவுடன் (அ) உபஸர்கமும் (தி) ப்ரத்யயமும் சேர்ந்து 'அதோதி' என்பது 'அதிதி' என்பதாகமாறி 'ஆதித்ய' சப்தம் (அபாயமின்மை, அழிவின்மை) சித்தமாகிறது.

अदिति दो अवखण्डने न विद्यते विनाशो यस्य सो यमदितिः अदितिरेव ऽदित्यः ।

எவருக்கு எந்நாளும் அழிவில்லையோ, அவருக்கே ஆதித்யன் என்று பெயர். இந்த குணம் பரமேச்வருக்கே உரியதாகையினல் அவருக்கே 'ஆதித்யன்' என்று பெயர்.

9. ப்ராக்ஞன்.—'ஞ' என்னும் தாதுவுடன் 'ப்ர' உபஸர்க்கமாய் நாம ப்ரத்யயத்துடன் 'ப்ராக்ஞ' (எல்லாம் அறிகிறவன்) சப்தம் சித்திக்கிறது.

ज्ञा अवबोधने यः प्रकृष्टतया चराऽचरस्य जगतो व्यवहारं जानाति सः प्राज्ञः । प्रज्ञ एव प्राज्ञः ।

நிர்ப்ராந்தராயும், ஞானயுக்தராயும், சகல சராசர ஜகத்தினுடைய வியவகாரங்களனைத்தும், உள்ளதை, உள்ளவாறே அறிகிறஅந்தப்பரமேச்வரனுக்கே, ப்ராக்ஞன் என்று பெயர்.

இவ்விடத்தில் ஓங்காரத்திலிருக்கும், அ, உ, ம், என்னும் மூன்று சப்தங்களினல் காட்டப்பட்டிருக்கிற மூன்று குணங்களே, சொல்லப்பட்டிருக்கிறது. அதேமாதிரி அவைகளிலிருந்தே வேறு நாமங்களையும் அறிந்து கொள்ள வேண்டியது.

शन्नो मित्रः शं वरुणः शन्नो भवति अर्य्यमा ।
शन्न इन्द्रो बृहस्पतिः शन्नो विष्णु रुरुक्रमः ॥
नमो ब्रह्मणे नमस्ते वायो त्वमेव प्रत्यक्षं ब्रह्मासि । त्वामेव प्रत्यक्षं ब्रह्मवदिष्यामि ऋतं वदिष्यामि । सत्यं वदिष्यामि तन्ममवतु तद्वक्तारमवतु । अमतुमां अवतुवक्तारं ओं शान्तिश्शान्तिश्शान्तिः ॥१॥

இந்த மந்திரத்லிருக்கிற மித்ராதி நாமங்கள் பரமேச்வரனையே குறிக்கின்றன. ஏனென்றால் ஸ்துதி, ப்ரார்த்தனை உபாஸனை முதலானதுகள் சிரேஷ்டர்களைக் குறித்தேச் செய்யவேண்டும். எவர் குணகர்ம ஸ்வபாவங்களிலும், சத்யாசத்ய வியவகாரங்களிலும் எல்லாரைக்காட்டிலும் அதிகமோ, அவரையே சிரேஷ்டர் எனவேண்டும். அத்தகைய சிரேஷ்டர்களில் அத்யந்த சிரேஷ்டர் பரமேச்வரனே. அவருக்கு நிகராய் யாரும் முன் இருந்ததுமில்லை. இப்பொழுதுமில்லை. இனிமேல் இருக்கப்போகிறதுமில்லை. அவருக்கு நிகராய் யாருமில்லையாதலால், அவரைவிட வேறு பெரியவர் யார் இருக்கக்கூடும். சத்யம், நியாயம், தயை, சர்வசாமர்த்யம், சர்வக்ஞத்வம், முதலான யாவத் அனந்த குணங்களும், ஜகதேகரக்ஷகராகிய பரமேச்வரனுக்கு இருப்பதுபோல் வேறு சாதாரணமான ஜடபதார்த்தங்களுக்காவது, ஜீவன்களுக்காவது இல்லை. எப்பதார்த்தம் சத்யமோ அதனுடைய குணகர்மஸ்வபாவங்களும் சத்தியமே. ஆகையினல் பரமேச்வரனைக்குறித்தே ஸ்துதிப்ரார்த்தனை உபாசனைகள் செய்ய வேண்டியது மனிதர்களுக்கு யோக்யமானவை. அவருடைய பின்னங்களுக்கு

ஒருகாலும் பூஜை செய்யலாகாது. பிரம்மா, விஷ்ணு, மகாதேவன் என்னும் நாமங்களையுடைய கற்றுணர்ந்த புராதன ரிஷிகளும், வித்வான்களும், தைத்யதானவாதி நிக்ருஷ்ட மனிதர்களும், அந்நிய சாதாரண மனிதர்களும் பரமேச்வரனையேவிஸ்வாசித்து அவரைக்குறித்தேதுதி, பிரார்த்தனை, உபாசனைச் செய்தார்கள். அவருடைய பின்னனங்களைக்குறித்துச் செய்யவில்லை. அப்படியே நாம் எல்லோரும் செய்யவேண்டும். இந்த விஷயத்தைப்பற்றி விவரமாய், உபாசனைகள், பக்தி, இவைகளைப் புகட்டும் பகுதியில் விரித்துரைக்கப்படும்.

வி௵.—மித்திராதி நாமங்களினால், சிநேகிதர்களையோ, அல்லது (வ்யவஹாரங்களில் பிரசித்தி பெற்றிருக்கும்) இந்திராதி தேவதைகளையோ அறியவேண்டும்.

விடை.—இவ்விதம் இதை அறிவது தகுதியல்ல. ஏனென்றால் ஒருவனுடைய சிநேகிதன், மற்றொருவனுக்குச் சத்ருவாயும், வேறு ஒருவனிடத்தில் அலக்ஷ்யமுள்ளவனாயுமிருப்பதைப் பார்க்கிறோம். ஆகையினால் மித்திரன் வார்த்தையினால் சாதாரண சிநேகிதன் என்றாகாது. அது பரமேச்வரனையே குறிக்கிறது. பரமேச்வரனே, உலகம் யாவற்றிற்கும் நிச்சயமான மித்திரன். ஒருவருக்கும் ஒருவரையும் உதாசினம் செய்பவரில்லை. இதனால் பின்னமாயிருக்கப்பட்ட எந்த ஜீவனும் ஒரு நாளும் இம்மாதிரியிருக்கமுடியாது. ஆகையினால் பரமாத்மாவையே அறியவேண்டும். இலௌகீகார்த்தத்தில் மித்ராதிசப்தம் சிநேகிதாதி மனிதர்களைக்காட்டுகிறது.

10. மித்திரன்.—'இமித்' தாதுவுடன் 'க்த்ர' ப்ரத்யயமடைந்து 'மித்திர' சப்தம் சித்தமாகிறது.

**(ञिमिदा स्नेहने) "मेद्यति स्निह्यति स्निह्यते वा स मित्रः"**

அவர் எல்லோரையும் நேசிக்கிறார். எல்லோராலும் நேசிப்பதற்கு அருகராயிருக்கிறார். ஆகையினால் அந்தப்பரமேச்வரனுக்கே மித்திரன் என்று பெயர்.

11. வருணன்.—"வ்ரி" என்னும் தாதுவுடன் 'உனன்' ப்ரத்யயமடைந்து 'வருண' சப்தம் சித்திக்கிறது.

**(वृञ् वरणे, वर ईप्सायाम्)**

**"यः सर्वान् शिष्टान्मुमुक्षून्धर्मात्मनो वृणोत्यथवा यः शिष्टैर्मुमुक्षुभिर्धर्मात्मभिर्व्रियते वर्य्यते वा स वरुणः परमेश्वरः"**

அவர் ஆத்மயோகிகளையும், வித்வான்களையும் முக்திக்கு இச்சிக்கிறவர்களையும், தர்மாத்மாக்களையும், ஏற்றுக்கொள்ளுகிறார். மேலும் சிஷ்டர்களாலும், முமுக்ஷர்களாலும், தர்மாத்மாக்களாலும், கிருகிக்கப்படுகிறார். ஆகையினால் பரமேச்வரனுக்கே வருணன் என்று பெயர்.

12. அர்யமா.—'ரி' தாதுவுடன், 'யத்' த்' ப்ரத்யயம் சேர்ந்து 'அர்ய' சப்தமுண்டாகிறது. 'அர்ய' பூர்வகமாயும், 'ம' தாதுவுடன் 'கனின்' ப்ரத்யயமடைந்து 'அர்யமா' சப்தம் சித்தமாகிறது.

(ऋ गतिप्रापणयोः) (माङ् माने)

"योऽर्य्यान् स्वामिनो न्यायाधीशान् मिमीते मान्यान् करोति सोऽर्य्यमा"

சத்திய நியாயம்செய்யும் மனிதர்களை, பெருமைப்படுத்துகிறவரும், பாபம் புண்ணியம் செய்கிறவர்களுக்கு, பாப புண்ணியங்களுடைய பலங்களுக்குத் தகுந்த ப்ரகாரம், நியாயம் செய்கிறவருமா யிருக்கிறபடியினால் அந்தப் பரமேச்வரனுக்கே 'அர்யமா' என்று பெயர்.

13. இந்திரன்.—"இதி" என்னும் தாதுவுடன் 'ர' ப்ரத்யயமடைந்து 'இந்திர' சப்தம் சித்தமாகிறது.

"य इन्दतिपरमैश्वर्य्यवान् भवति स इन्द्रः परमेश्वरः"

அவர் அகில ஐஸ்வர்ய யுக்தனுயிருக்கிறபடியினால் பரமேச்வரனுக்கு 'இந்திரன்' என்று பெயர்.

14. பிரகஸ்பதி.—"ப" (காப்பாற்று) என்னும் தாதுவுடன் "பிரக" என்னும் ப்ரத்யயம் சேர்ந்து "த"காரலோபமடைந்து 'ச' காரம் சேர்ந்து 'பிரகஸ்பதி' சப்தம் சித்தமாகிறது.

"यो बृहतामाकाशादीनां पतिः स्वामी पालयिता स बृहस्पतिः"

பெரியோர்களுக்கெல்லாம், பெரியவராயும், உயர்ந்தவர்களுக்கு, உயர்ந்தவராயும், ஆகாசாதி பெரும் பிரம்மாண்டங்களுக்குச், சுவாமியாயுமிருப்பதால் பரமேச்வரனுக்கு "பிரகஸ்பதி" என்றும் பெயர்.

15. விஷ்ணு.—"விஷ" (பரவுகிறது) என்னும் தாதுவுடன் "நு" ப்ரத்யயமடைந்து விஷ்ணு சப்தம் சித்தமாகிறது.

"वेवेष्टि व्याप्नोति चराचरं जगत् स विष्णुः"

சராசர முழுவதிலும் பரவியிருக்கிறபடியினால் பரமேச்வரனுக்கு விஷ்ணு என்று பெயர்.

16. உருக்கிரமா.—

"उरुर्महान् क्रमः पराक्रमो यस्य स उरुक्रमः"

அனந்த பராக்கிரம யுக்தமாயிருக்கிறபடியினால் பரமேச்வரனுக்கு உருக்கிரமா என்று பெயர். எப்பரமாத்மா (உருக்ரம:) பெரும்பராக்ரமத்துடன் கூடினவராயும் (மித்ர:) எல்லோருக்கும் சிநேகிதராயும் அவிரோதியாயுமிருக்கிறாரோ, அவர் (சம்) சுகத்தை அளிப்பவர். (வருண:) சர்வோத்தமமானவர் (சம்) சுகஸ்வரூபரானவர். (அர்யமா) நீதிபதியானவர். (சம்) சர்வ வல்லமையுள்ள அவர் (இந்தர:) எந்த சகல ஐச்வர்யவானும் (சம்) சகல ஐச்வர்யத்தையளிக்கிறவரும் (பிரகஸ்பதி:) எல்லாவற்றினுடைய அறிவைப்புகட்டுகிறவரும் (சம்) வித்யாப்ரதரும் (விஷ்ணு:) எல்லாவற்றிலும் வ்யாபகராய் பரமேச்வரராயிருக்கிறவருமான அவர் (ந:) எங்களுக்குக் கல்யாண காரணத்தை (பவது) உண்டாக்கட்டும்.

17. பிரம்மா.—(ப்ரஹ்ம, ப்ருஹி) இந்த தாதுவிலிருந்து பிரம்ம சப்தம் உண்டாகிறது. எல்லாவற்றையும்விட உயர்ந்தவராய் எல்லாவற்றிற்கு முயர்ந்த அனந்தவல்லமையுடன் கூடினவராயு மிருப்பதால் அந்தப் பிரம்மத்தை நமஸ்காரம்செய்கிறேன். (**त्वमेव प्रत्यक्षं ब्रह्मासि**) ஹே பரமேச்வரா! தாங்களே அந்தர்யாமி ரூபத்துடன் விளங்குகிற பிரத்யக்ஷ பிரமம். (**त्वमेव प्रत्यक्षं ब्रह्म वदिष्यामि**) நான் உங்களையே ப்ரத்யக்ஷபிரம்ம என்று சொல்லுகிறேன். ஏனென்றால் தாங்கள் எல்லா ஜகம் முழுவதிலும் வியாபித்து எல்லாவற்றிற்கும் நித்யத்வத்தைக் கொடுத்திருக்கிறீர். (**ऋतं वदिष्यामि**) தங்களால் அளிக்கப்பட்ட வேதத்துடன்கூடின உண்மையான கட்டளைகளை எல்லோரின் பொருட்டு உபதேசமும் உபதேசித்து நானும் ஆசரணை செய்கிறேன். (**सत्यं वदिष्यामि**) எண்ணம், செய்கை நடத்தைமுதலானவைகளில், சத்தியத்தையே பின் பற்றுவேன். (**तन्मामवतु**) அப்படியே தாங்கள் என்னைக்காப்பாற்ற வேண்டியது (**तद्वक्तारमवतु**) அப்படியே தாங்கள் சன்மார்க்க ஒழுக்கத்தில் தவறாத என்னை ரக்ஷிக்கவேண்டும். அதினால் தங்களுடைய ஆக்ஞைகளில் என்னுடைய புத்தி ஸ்திரமடைந்து அதிலிருந்து ஒருபொழுதும்மாறாது. ஏனென்றால் தங்களுடைய ஆக்ஞை எதுவோ அதுவே தர்மம். அதற்கு விருத்தமாயிருக்கிறது அதர்மமேயாம். (**अवतुमां अवतुवक्तारं**) இரண்டு தடவை வாசகங்களைச் சொல்லியிருப்பதினால் அர்த்தம் அதிகமாகிறது. எப்படி என்றால் " **कश्चित् कश्चित् प्रति वदति त्वं ग्रामंगच्छ गच्छ** " இதில் வினைச்சொல்லை இரு தடவை உச்சரிப்பதால் "நீ சீக்கிரமாய் கிராமம்போ" என்பது ஊர்ஜிதமாகிறது.

அப்படியேஇவ்விடத்திலும். தாங்கள் என்னை அவசியம் ரக்ஷிக்கவேண்டிய தர்மத்தைக், கைக்கொண்டு அதர்மத்தைத் தள்ளச் செய்யவேண்டும். இத்தகைய கிருபையை எனக்கு அளிக்கவேண்டும். அதை நான் எப்பொழுதும் வெகுவாய்க்கருதவேன். (**ओं शान्तिः शान्तिः शान्तिः**) மூன்று விதமான துக்கம் இவ்வுலகத்திலிருக்கிறது. ஒன்று "அத்யாத்மிகம்" "அவித்தை" "ராகம்" "துவேஷம்" மடத்தனம், ஜ்வர முதலான, சரீரம் ஜீவன் இவைகளைப்பற்றின துக்கங்கள்.—இரண்டாவது "அதிபௌதிகம்" சத்ரு, புலி, பாம்பு முதலானவைகளினால் உண்டாகிறது.—மூன்றாவது "அதிதைவிகம்" அதாவது அதிக மழை அதிக சீதளம், அதிக உஷ்ணமுள்ள மனது, இந்திரியங்களுடைய அசாந்தி, இவைகளினால் உண்டாகிறது. இந்த மூவ்விதமான துக்கங்களை எங்களிடமிருந்து விலக்கிக் கல்யாண காரகங்களாயுள்ள கர்மங்களில் எப்பொழுதும் செல்லச்செய்யவேண்டும். ஏனென்றால் தாங்கள் கல்யாண ஸ்வரூபர். உலகம் முழுவதிற்கும் கல்யாணத்தைக் கொடுப்பவர். இதனாலேயே தாங்கள் தங்களுடைய ஸ்வய கருணையினால் எல்லா ஜீவன்களுடைய ஹிருதயத்திலும் பிரகாசிக்கிறீர். ஆனதுபற்றி

எல்லா ஜீவன்களும் தர்மங்களை ஆசரணைசெய்து அதர்மங்களைவிட்டுத் துக்கத்தினின்று விலகிப் பரமானந்தத்தில் அமரட்டும்.

18. சூரியன்.—

"सूर्य्य आत्मा जगतस्तस्थुषश्च"

யஜுர்வேத மந்திரம். உலகம் அதாவது சேதன பிராணிகளுக்கும், ஜங்கமமாவது, இங்குமங்கும் திரிகிறவைகளுக்கு, **तस्थुषः** "தஸ்துஷ:' அப்பிராணி அதாவது தாவர ஜட ப்ருத்வியாதிகள் முதலானவைகள் எல்லாவற்றிற்கும் ஆத்மாவாயும், ஸ்வப்ரகாச ஸ்வரூபராயுமிருக்கிறபடியினால் பரமேச்வரனுக்குச் சூர்யன் என்று பெயர்.

19. பரமாத்மா.—" அத் " (வ்யாபிக்கிறது) என்னும் தாதுவிலிருந்து " ஆத்மா " என்னும் சப்தம் சித்த மாகின்றது.

"योऽतति व्याप्नोति स आत्मा" "परश्चासावात्मा च य आत्मभ्यो जीवेभ्यः सूक्ष्मेभ्यः परोऽतिसूक्ष्मः स परमात्मा"

எல்லா ஜீவாதி ஜீவனிலும் நிரந்தரமாய், பரவியிருக்கப்பட்டது ஆத்மா. சகல ஜீவன்களைக்காட்டிலும், மேம்பட்டவராயும், ஜீவப்ரகிருதி ஆகாசம், இவைகளைவிட அதிசூக்ஷ்மராயும், எல்லாஜீவன்களுக்கும் அந்தர்யாமியாயுமிருக்கிற ஆத்மா ஈச்வரனனபடியினாலே அவருக்கே "பரமாத்மா" என்றுபெயர்.

20. பரமேச்வரன்.—சாமர்த்தியமாய் உள்ளவருக்கு ஈச்வரன் என்று பெயர்.

"यः ईश्वरेषुसमर्थेषु परमः श्रेष्ठः स परमेश्वरः"

சமர்த்தர்களுக்கு (ஈச்வரன்) சமர்த்தனும், அவருக்கு நிகராய் ஒருவருமில்லாதபடியினால் அவருக்கு " பரமேச்வரன் " என்று பெயர்.

21. சவிதா.—" ஸு " (உண்டாக்கிறது) என்னும் தாதுவுடன் 'தா' ப்ரத்யயம் சேர்ந்து " சவிதா " சப்தம் சித்தமாகிறது.

(षुञ् अभिषवे,पूङ् प्राणिगर्भविमोचने) "अभिषवः प्राणिगर्भविमोचनं चोत्पादनम्। यश्चराचरं जगत् सुनोति सूते वोत्पादयति स सविता परमेश्वरः"

எல்லா ஜகத்தையும் உற்பத்தி செய்கிறபடியினால் பரமேச்வரனுக்கு " சவிதா " என்று பெயர்.

22. தேவன்.—

(दिवु क्रीडाविजिगीषाव्यवहारद्युतिस्तुतिमोदमदस्वप्नकान्तिगतिषु)

திவ (விளையாட்டு, விருப்பம், சயிக்க, வேலை, பிரகாசிக்கச்செய்ய, துதிக்க, தண்டிக்க, தூங்க,) தாதுவிலிருந்து 'தேவ' சப்தம் சித்தமாகிறது.

"கிரீடா" மாசற்ற உலகத்திற்கு விளையாட்டுச்செய்கிறவராயும்

"விஜிகீஷா" தார்மிகர்களை ஜெயிக்கிறதிற்கு இச்சை இருக்கிறவராயும்.

"வ்யவஹார" எல்லா சேஷ்டைகளுக்குச் சாதனோபசாதனங்களைக் கொடுக்கிறவராயும்

(த்யுதி) ஸ்வயம் பிரகாச ஸ்வரூபராயும், எல்லாவற்றையும் பிரகாசம் செய்கிறவராயும்,

(ஸ்துதி) துதிக்கயோக்கியராயும்

"மோத" ஆனந்த ஸ்வரூபராயும், மற்றவர்களுக்கு ஆனந்தம் கொடுக்கிறவராயும்

"மத" மதோன்மத்தத்தை யழிக்கிறவராயும்

"ஸ்வப்ன" எல்லாருடைய சுபசயனத்திற்கு இரவையும் பிரளயத்தையும் உண்டுபண்ணுகிறவராயும்

"காந்தி" எல்லோருடைய ஆசைக்குப்பாத்திரமாயும்

"கதி" ஞானஸ்வரூபராயுமிருக்கிறார். இதனாலேயே அப்பரமேச்வரனுடைய பெயர் "தேவர்"

**"यो दीव्यति क्रीडति स देवः"**

தன்னுடைய ஸ்வயரூபத்தில் மகிழ்ச்சியுள்ளவர். அல்லது ஒருவருடைய சகாயமின்றியும் சுய ஸ்வபாவத்தினால் எல்லா ஜகத்தையும் செய்து எல்லாக்கிரீடைகளுக்கும் ஆதாரமாயுள்ளவர் எவரோ அவரே தேவர்.

**"विजिगीषते स देवः"** எல்லாவற்றையும் ஜெயிக்கப்பட்டவர், அதாவது ஒருவராலும் ஜயிக்கக் கூடாதவராயும்

**"व्यवहारयति स देवः"** நியாய அநியாயங்களை அறிந்து கற்பிப்பவராயும்

**"यश्चराचरं जगत् द्योतयति"** எல்லா வற்றையும்விட ஒளியாயும்,

**"यः स्तूयते स देवः"** சகலமனிதர்களுடைய துதிக்கு ஏற்றவராயும் எவருடைய நிந்தைக்கும் சரியில்லாதிருக்கிற அவர் தான் "தேவர்"

**"यो मोदयति स देवः"** ஸ்வயம் ஆனந்த ஸ்வரூபராய் சகலருக்கும் ஆனந்தம் அளித்து இன்பம்துன்பம் கொஞ்சமேனுமில்லாத அவர் எவரோ.

**"यो माद्यति स देवः"** எக்காலமும் மக்களைச் சந்தோஷிக்கச்செய்து துக்கத்திலிருந்து தனியாய் நிற்பவர் எவரோ அவரே தேவர்.

**"यः स्वापयति स देवः"** பிரளய சமயத்தில் எல்லா ஜீவன்களுக்கும் சாந்தம் கொடுப்பவர் எவரோ

**"यः कामयते काम्यते वा स देवः"** எவருடைய கார்யமெல்லாம் உண்மையோ சிஷ்டர்கள் எல்லாம் எவரை அடைவதற்கு நற்காரியம் செய்கிறார்களோ

**"यो गच्छति गम्यते वा स देवः"** எல்லாவற்றிலும் பரவியும் அறிகிறதற்கும் யோக்யமுள்ளவர் எவரோ அந்தப் பரமேச்வரனுடைய பெயரே "தேவர்"

23. **குபேரன்.**—"க்வி" தாதுவிலிருந்து "குபேர" சப்தம் சித்தமாகிறது.

**यः सर्वं कुत्रतिस्वव्यास्याच्छादयति स कुवेरो जगदीश्वरः**

தான் சிருஷ்டி அனைத்திலும் வியாபித்திருப்பதால் பரமேச்வரனுக்குக் குபேரன் என்று பெயர்.

24. **பிருதிவீ.**—(ப்ரத்விஸ்தாரே) இந்த தாதுவிலிருந்து பிருத்வீ சப்தம் சித்தமாகிறது.

**यः पृथते सर्वजगद्विस्तृणाति स पृथिवी**

படைத்தும், படைப்பை, விஸ்தரித்துமிருப்பதால் பரமேச்வரனுக்கு "ப்ருதிவீ" என்று பெயர்.

25. **ஜல.**—(ஜல தாதனே) இந்த தாதுவிலிருந்து ஜல சப்தம் சித்தமாகிறது.

**जलति घातयति दुष्टान्, संघातयति—अव्यक्तपरमाणवादीन् तद् ब्रह्म जलम्**

துஷ்டர்களை அழித்தும், அணுக்களை பிரித்தும், சேர்த்தும், மாற்றியும் ஒன்றுகச்செய்தும், வருகிறபடியினுல் பரமாத்மாவுக்கு "ஜல" மென்று பெயர்.

26. **ஆகாஷ.**—(காச்ரு தீப்தௌ) இந்த தாதுவிலிருந்து ஆகாஷ் சப்தம் சித்தமாகிறது.

**यः सर्वतः सर्वं जगत् प्रकाशयति स आकाशः**

எல்லா வழியிலும் அவர் ஜகத் ஒளியாயிருப்பதால் அவருக்கு "ஆகாஷ்" என்று பெயர்.

27. "அன்ன".—(அத்பக்ஷணே) இந்த தாதுவிலிருந்து "அன்ன" சப்தம் சித்தமாகிறது.

28. **அன்னுத்.**— 29. **அத்த.**—

**अद्यतेऽत्ति च भूतानि तस्मादन्नं तदुच्यते ॥**

**अहमन्नमहमन्नमहन्नम् । अहमन्नादोहमन्नादोहमन्नादः**

தைத்ரேய உபநிஷத், 2 அநுவாகம். 11.

**अत्ताचराचरग्रहणात् ॥**

வேதாந்த தர்சனே, பா 2 சூத்ரம் 9 11.

சகல சராசரங்கள் அவரிடத்தில் அடங்கியிருப்பதாலும் எல்லோரிலும் யோக்யரானபடியினுலும், சராசர ஜகத்திற்கு முக்யாதாரமாயிருப்பதாலும்

பரமேச்வரனுக்கு அன்ன, அன்னாத், அத்த, என்று மூன்று பெயர்கள் உண்டு. ஆகவே உபநிஷத்தில் அவர் நாமம் மும்முறை கூறப்படுகிறது. "குலார்" அத்திப்பழத்தினுள் கிருமிகள் உற்பத்தியாகி, வசித்து, எங்ஙனம் அழிகிறதோ அங்ஙனமே பரமேச்வரனிடத்தில் ஜகமும்.

30. வசு.—(வசநிவாசே) இந்த தாதுவிலிருந்து "வசு" சப்தம் சித்திக்கிறது.

**वसन्ति भूतानि यस्मिन्नथवा यः सर्वेषु वसति स वसुरीश्वरः**

எவரிடத்தில் சகல ஆகாசாதி பூதங்கள் வசிக்கின்றனவோ, எவர் அவை எல்லாவற்றிலும் வசிக்கிறாரோ, அவருக்கே "வசு" என்று பெயர்.

31. ருத்ரன்.—(ருதிர் அச்ரு விமோசனே) இந்த தாதுவுடன் "ணிச்" ப்ரத்யயமாகிறபடியினால் "ருத்ர" சப்தம் சித்தமாகிறது.

**यो रोदयत्यन्यायकारिणो जनान् स रुद्रः**

துஷ்கர்மங்கள் செய்கிறவர்களை அழச்செய்கிறவர் எவரோ அவர் பெயரே ருத்ரன்.

**यन्मनसा ध्यायति तद्वाचा वदति यद्वाचा वदति तत्**
**कर्मणा करोति यत् कर्मणा करोति तदभिसम्पद्यते ॥**

இது யஜுர்வேத பிராமணத்தினுடைய வசனம். மனிதன் மனவெழுச்சி பேச்சாக வெளிவருகிறது. அங்ஙனம் வெளிவரும் வார்த்தைகள் செயலாகமாறுகிறது. துஷ்ட கர்மங்களைச்செய்யும் ஜீவன் ஈஸ்வரனுடைய நியாயாவஸ்தையை ஒட்டி துக்கத்தை அடைந்து வியசனப்படுகிறான். பின்னர் செயல் நிகழ்சிக்கு ஏற்ப, பலன் ஏற்படுகிறது. இங்ஙனம் அழச்செய்கிறபடியினால் அவருக்கு ருத்ரன் என்று பெயர்.

32. நாராயணன்.—ஜலத்திற்கும், ஜீவனுக்கும் "நாரா" என்று பெயர். அயனம்" என்றால் நிவாசஸ்தானம்.

**आपो नारा इति प्रोक्ता आपो वै नर सूनवः ।**
**ता यदस्यायनं पूर्वं तेन नारायणः स्मृतः ॥** மனு, I-10

எல்லா ஜீவன்களிடத்திலும் வ்யாபகமாயிருக்கிறபடியினால் பரமேச்வரனுக்கு நாராயணன் என்று பெயர்.

33. சந்திரன்.—"சதி" என்னும் தாதுவிலிருந்து "சந்திர" சப்தம் (அனந்தம்) உண்டாகிறது.

**यश्चन्दति चन्दयति वा स चन्द्रः**

ஆனந்த ஸ்வரூபராய், எல்லாவற்றிற்கும் ஆனந்தத்தைக் கொடுக்கிறபடியினால் பரமேச்வரனுக்கு "சந்திரன்" என்று பெயர்.

34. **மங்களம்.**—"மகி" தாதுவுடன் "அல்" ப்ரத்யயம் சேர்ந்து மங்கள சப்தம் சித்தமாகிறது.

**यो मङ्गति मङ्गयति वा स मङ्गलः**

எவர் மங்களஸ்வரூபராய், எல்லா ஜீவன்களுடைய மங்களத்திற்குக் காரணமாயிருக்கிறரோ அவருடைய பெயரே "மங்களம்"

35. **புத்தன்.**—புத், (அறிய) என்னும் தாதுவிலிருந்து புத்த சப்தம் சித்தமாகிறது.

**यो बुध्यते बोधयति वा स बुधः**

ஸ்வயம் போதஸ்வரூபராயும், எல்லா ஜீவன்களுடைய போதத்திற்குக்காரணமாயிருக்கிறபடியினல் பரமேச்வரனுக்குப் புத்தன் என்று பெயர்.

பிரகஸ்பதியின்—அர்த்தம் முன்னமே கூறப்பட்டுள்ளது.

36. **சுக்கிரன்.**—" சு " (சுத்தம் செய்ய) என்னும் தாதுவுடன் " க்ர " ப்ரத்யயமாய் " சுக்கிர " சப்தம் சித்தமாகிறது.

**यः शुच्यति शोचयति वा स शुक्रः**

எவர் அத்யந்த பவித்ரரும், எவருடைய சங்கத்தினல் ஜீவன்களுக்கு பரிசுத்தமும் உண்டாகிறதோ அந்த ஈச்வரனுக்கே சுக்கிரன் என்றும் பெயர்.

37. **சனைஸ்ச்சர்.**—" சர் " (வியாபிக்க) சர கதிபக்ஷணயோ: என்னும் தாதுவுடன் " சனை " ப்ரத்யயமடைந்து " சனைஸ்ச்சர் " சப்தம் சித்தமாகிறது.

**यः शनैश्चरति स शनैश्चरः**

தனது தன்மையால் எங்கும வியாபித்து பராக்கிரமும், கருணையும் உள்ளவராய் இருப்பதால் பரமேச்வரனுக்குச் சனைஸ்ச்சரன் என்று பெயர்.

38. **ராகு.**— " ரஹு " என்னும் தாதுவிலிருந்து ராஹு சப்தம் சித்தமாகிறது.

**यो रहति परित्यजति दुष्टान् राहयति त्याजयति वा स राहुरीश्वरः**

எவர் ஏகாந்தஸ்வரூபராயும், எவருடைய ஸ்வரூபத்தில் வேறு கலப்புப் பொருள் இல்லையோ, எவர் துஷ்டர்களைவிட்டு மற்றவர்களைக் காப்பாற்றுகிறரோ, அவருக்கே இந்தப்பெயர். ஆகையினல் பரமேச்வரனுக்கே " ராகு " என்று பெயர்.

39. **கேது.**—" கித் " தாதுவிலிருந்து " கேது " சப்தம் சித்தமாகிறது.

**यः केतयति चिकित्सति वा स केतुरीश्वरः**

எல்லாஜகத்திற்கும் நிவாசஸ்தானமாயும், ரோகிகளையும், முமுக்ஷுக்களையும், முக்திசமயத்தில் விடுவிக்கிறபடியினல் பரமேச்வரனுக்கு " கேது " என்று பெயர்.

40. யக்ஞ.—"யஜ" தாதுவிலிருந்து யக்ஞ சப்தம் உண்டாகிறது.

**यज्ञो वै विष्णुः** பிராம்மண கிரந்த வாக்கியம்

**यो यजति विद्वद्भिरिज्यते वा स यज्ञः**

அவர் ஜகத்தின் பதார்த்தங்களைச் சம்யுக்தம் செய்கிறபடியினாலும், வித்வான்களுக்கெல்லாம் பூஜ்யருயிருக்கிறபடியினாலும், பிரம்மா முதல் எல்லா ரிஷிகளினாலும் பூஜிக்கப்படுகிறபடியினாலும், அந்தப் பரமேச்வரனுக்கே "யக்ஞன்" என்று பெயர். அவர் சர்வாந்தர வ்யாபகர்.

41. ஹோதா:—ஹு (கொடுக்க) என்னும் தாதுவுடன் 'த' ப்ரத்யயமடைந்து "ஹோதா" சப்தம் சித்தமாகிறது.

**हु दानादनयोः, आदाने चेत्येके ॥ यो जुहोति स होता**

அவர் ஜீவன்களுக்குக் கொடுக்கவேண்டிய யோக்யமான பதார்த்தங்களைத் தருகிறபடியினாலும், கிரஹிப்பதற்கு யோக்யமானதைக் கிரஹிக்கிறபடியினாலும், அந்தப்பரமேச்வரனுக்கே "ஹோதா" என்று பெயர்.

42. பந்து:—"பந்த" (கட்டுகிறது) என்னும் தாதுவுடன் "உ" ப்ரத்யயம் சேர்ந்து "பந்து" சப்தம் சித்தமாகிறது.

**यः स्वस्मिन् चराचरं जगद् बध्नाति बन्धुवद्धर्मात्मनां सुखाय सहायो वा वर्त्तते स बन्धुः**

சகல லோகாந்திரங்களையும் தன்னுடைய நியமனத்தினுல் கட்டுப்படுத்தி அவைகள், தங்களுடைய மண்டலங்களிலிருந்தும், நியமங்களிலிருந்தும் எல்லை கடக்காமல் வைத்திருக்கிறார். சகோதரனைப்போல் துணையாயிருந்து பரமேச்வரன் ப்ரத்வ்யாதி லோகங்களைத்தரித்து ரக்ஷித்து சுகத்தைத்தருகிறபடியினால் ஈச்வரனுக்குப் பந்து வென்று பெயர்.

43. பிதா.—"பா" (காப்பாற்ற) என்கிற தாதுவுடன் "தா" ப்ரத்யயம் சேர்ந்து "பிதா" சப்தம் உண்டாகிறது.

**पा रक्षणे ॥ यः पाति सर्वान् स पिता**

எல்லாவற்றிற்கும், ரக்ஷகராய், எங்ஙனம் தகப்பனானவர் தன் குழந்தைகளின்பேரில் எப்பொழுதும் தயை கொண்டு அவர்களுடைய மேன்மையை விரும்புகிறாரோ அங்ஙனமே பரமேச்வரன் எல்லா ஜீவன்களுடைய மேன்மையை விரும்புகிறார். ஆதலால் பரமேச்வரனுக்கு "பிதா" என்று பெயர்.

44. பிதாமஹ.—

**यः पितॄणां पिता स पितामहः ॥**

பரமேச்வரன் பிதாக்களுக்குப் பிதாவாயிருக்கிறபடியினால், "பிதாமஹ" என்று பெயர்.

45. ப்ரபிதாமஹ—

**यः पितामहानां पिता स प्रपितामहः ॥**

3

பிதாவினுடைய பிதாக்களுக்குப்பிதாவாயிருக்கிறபடியினால் பரமேச்வரனுக்கே "ப்ரபிதாமஹ" என்று பெயர்.

46. **மாதா.**—"மா" என்னும் தாதுவுடன் "தா" ப்ரத்யயம் சேர்ந்து "மாதா" சப்தம் சித்தமாகிறது.

**यो मिमीते मानयति सर्वाञ्जीवान् स माता ॥**

பூர்ண தயையுடன் தாயாரானவள் தன் சந்ததிகளுடைய சுகத்தையும், உன்னத ஸ்திதியையும் விரும்புகிறதுபோல் பரமேச்வரன் சகல ஜீவன்களுடைய விருத்தியை விரும்புகிறபடியினால் "மாதா" என்று பெயர்.

47. **ஆசார்ய".**— "சர்" என்னும் தாதுவிடன் "ஆ" உபசர்கபூர்வகமும், "ய" ப்ரத்யயமும் சேர்ந்து "ஆசார்ய" சப்தம் சித்தமாகிறது.

**चरगतिभक्षणयोः। य आचारं ग्राहयति सर्वा विद्या वा बोधयति स आचार्य ईश्वरः**

சத்யாசாரம் செய்கிறவரிடத்தில் அன்புள்ளவராயிருக்கிறபடியினாலும், எல்லா வித்தைகளுடைய ப்ராப்திக்குக் காரணமாயிருக்கிறபடியினாலும், பரமேச்வரனுக்கு "ஆசார்ய" என்று பெயர்.

48. **குரு.**—"க்ரி" என்னும் தாதுவிலிருந்து "குரு" சப்தம் உண்டாகிறது.

**गृ शब्दे। यो धर्म्यान् शब्दान् गृणात्युपदिशति स गुरुः ॥**

**स पूर्वेषामपि गुरुः कालेनानवच्छेदात् ॥**

(யோக சாஸ்திரம் சமாதி பாதம் 26)

சத்ய தர்ம பரிபாதக சகலவித்யாயுக்த வேதங்களை உபதேசிப்பவரும், சிருஷ்டியினாதியில் அக்னி, வாயு, ஆதித்யன், அங்கிரா, பிரம்மாதி குருவுக்குக் குருவாயும், நாசமென்பதை எக்காலும் அடையாதவராயுமிருக்கிற அந்தப் பரமேச்வரனுக்கே "குரு" என்று பெயர்.

49. **அஜ.**—"அஜ" என்னும் தாதுவிலிருந்து இச்சப்தம் வருகிறது.

**अज गतिक्षेपणयोः, जनी प्रादुर्भावे। योऽजति सृष्टिं प्रति सर्वान् प्रकृत्यादीन् पदार्थान् प्रक्षिपति जानाति वा कदाचित् न जायते सोऽजः**

எவர் எல்லா பிரகிருதியுடைய அவயவ ஆசாராதி பூதப்பிரமாணங்களை வேண்டியவாறு சேர்த்துச் சரீரத்துடன் ஜீவனை சம்பந்தம்செய்து ஜன்மத்தை அளிக்கிறாரோ, எவர் எப்பொழுதும் ஜன்மத்தை எடுக்கிறதில்லையோ, அந்த ஈச்வரனுக்கே "அஜ" என்று பெயர்.

50. **பிரம்மா.**—"ப்ரஹி" என்னும் தாதுவிலிருந்து "பிரம்மா" சப்தம் சித்தமாகிறது.

**बृहि वृद्धौ। योऽखिलं जगन्निर्माणेन बृंहति वर्द्धयति स ब्रह्मा ॥**

சம்பூர்ண ஜகத்தை ஆக்கி விருத்திசெய்கிற அப்பரமேச்வரனுக்கே பிரம்மா வென்று பெயர்.

**सत्यं ज्ञानमनन्तं ब्रह्म ॥**

(தைத்ரேய உபநிஷத்) பரமேச்வரனுக்கு சத்யம், ஞானம், அனந்தம், என்னும் பெயர்கள் உண்டு.

51. "சத்ய".—

**सन्तीति सन्तस्तेषु सत्सु साधु तत्सत्यम् ॥**

எப்பொருள்களிருக்கின்றனவோ அவைகள் யாவற்றிலும் "ஸாது" உண்மையான உருவமாய் அமைந்திருக்கிறபடியினால் பரமேச்வரனுக்கு "சத்ய" என்று பெயர்.

52. ஞான.—

**यज्जानाति चराऽचरं जगत्तज्ज्ञानम् ॥**

சகல சராசர ஜகத்தை அறிகிறபடியினால் பரமேச்வரனுக்கு "ஞான" மென்று பெயர்.

53. அனந்த.—

**न विद्यतेऽन्तोऽवधिर्मर्यादा यस्य तदनन्तम् ।**

எவருக்கு அந்தம், அவதி, மரியாதை, அதாவது நீளம், அகலம், சிறியது, பெரியது, என்ற பரிமாணங்களில்லையோ அந்தப் பரமேச்வரனுக்கே "அனந்த" என்று பெயர்.

54. அனாதி.—"தோ" என்னும தாதுவுடன் "அண்" உபசர்க பூர்வகம் சேர்ந்து "அனாதி" சப்தம் சித்தமாகிறது.

**डुदाञ् दाने । यस्मात् पूर्वं नास्ति परं चास्ति स आदिरित्युच्यते, न विद्यते आदिः कारणं यस्य सोऽनादिरीश्वरः ॥**

அவருக்கு முன் யாருமில்லை. அவர் யாரையும் மிக்தியவர். எல்லோரும் அவரைத் தொடருகிறவர்களே. ஆகையினால் அந்த ஈச்வரனுக்கே அனாதி என்று பெயர்.

55. ஆனந்த்.—"னந்த்" என்னும் தாதுவுடன் "ஆ" ப்ரத்யயம் சேர்ந்து "ஆனந்த" சப்தம் சித்தமாகிறது.

**आनन्दन्ति सर्वे मुक्ता यस्मिन् यद्वा यः सर्वाञ्जीवानानन्दयति स आनन्दः ॥**

எந்த ஆனந்த ஸ்வரூபத்தில் முக்த ஜீவன்கள் ஆனந்தமடைகிறதோ, தர்மாத்மா முதலான ஜீவன்களுக்கு எவர் ஆனந்தம் அளிக்கிறாரோ அந்தப் பரமேச்வரனுக்கே "ஆனந்தம்" என்று பெயர்.

56. ஸத்.—"அஸ்" என்னும் தாதுவிலிருந்து "ஸத்" (இருப்பவை) சப்தம் சித்தமாகிறது.

**अस भुवि । यदस्ति त्रिषु कालेषु न बाध्यते तत्सद् ब्रह्म ॥**

எக்காலமும் விளங்குகிறார். மேலும் காலபேதங்களால் பாதிக்கப்படாமலிருக்கிறார். ஆகையினால் பரமேச்வரனுக்கு "ஸத்" என்றும் பெயர்.

57. **சித்.**—"சித்" என்னும் தாதுவிலிருந்தே இந்த சப்தம் சித்தமாகிறது.

**चिती संज्ञाने । यश्चेतति चेतयति संज्ञापयति सर्वान् सज्जनान् योगिनस्त-**
**च्चित्परं ब्रह्म ॥**

சைதன்ய ஸ்வரூபராயும், சகல ஜீவன்களுக்கு ஞானத்தை ஊட்டி இருளைப் போக்கி உண்மையைக் கிரஹிக்கச்செய்கிறபடியினாலும் பரமேச்வரனுக்கு "சித்" என்று பெயர்.

58. **ஸச்சிதானந்த.**—

**सच्चिदानन्दस्वरूप ॥**

ஸத், சித், ஆனந்தம், இந்த மூன்று வார்த்தைகளும் பரமேச்வரனுடைய விசேஷகுணங்களை புலனாக்குகிறது. இந்த மூன்றும் ஒன்றாய்ச்சேர்ந்து "சச்சிதானந்தா" என்றாகிறது.

59. **நித்ய.**—

**यो नित्यध्रुवोऽचलोऽविनाशी स नित्यः ॥**

சலனமின்றியும், அழிவில்லாதவராயும் இருக்கிறபடியினால் பரமேச்வரனுக்கு "நித்ய" என்றும் பெயர்.

60. **சுத்த.**—"சுத்" என்னும் தாதுவிலிருந்து "சுத்த" சப்தம் சித்தமாகிறது.

**शुन्ध शुद्धौ । यः शुन्धति सर्वान् शोधयति वा स शुद्ध ईश्वरः ॥**

ஸ்வயம் பரிசுத்தமாயும், சகல அசுத்தங்களிலிருந்து வேறாயும், எல்லோரையும் பரிசுத்தமாய்ச் செய்கிறபடியினாலும் பரமேச்வரனுக்கு "சுத்தன்" என்று பெயர்.

61. **புத்த.**—"புத்" (அறிகிறது) என்னும் தாதுவுடன் "தா" உபசர்க பூர்வகம் சேர்ந்து "புத்த" சப்தம் சித்தமாகிறது.

**वुध अवगमने । यो बुद्धवान् सदैव ज्ञाताऽस्ति स बुद्धो जगदीश्वरः ॥**

எப்பொழுதும், எல்லாவற்றையும் தெரிந்தவராகையினால் அந்தப் பரமேச்வரனுக்கு "புத்த" என்று பெயர்.

62. **முக்த.**—"முச்" (விடுவதற்கு) என்னும் தாதுவுடன் "த" ப்ரத்யயம் சேர்ந்து "முக்த" சப்தம் சித்தமாகிறது.

**मुच्लृ मोचने, यो मुञ्चति मोचयति वा मुमुक्षून् स मुक्तो जगदीश्वरः ॥**
**अतएव नित्यशुद्धबुद्धमुक्तस्वभावो जगदीश्वरः ॥**

எப்பொழுதும் அசுத்தங்களிலிருந்து வேறானவராய், முமுக்ஷுகர்களனை வரையும் கிலேசத்திலிருந்து சுத்தம் செய்கிறவராகையினல் பரமேச்வரனுக்கு "முக்த" என்று பெயர்.

63. நிராகார்.—"க்ரி" என்னும் தாதுவுடன் உபஸர்க்க "நிர்" "ராம்", "அ" வும் சேர்ந்து "நிராகார்" சப்தம் சித்தமாகிறது.

**डुकृञ् करणे। निर्गत आकारात्स निराकारः ॥**

அவருக்கு ஒரு உருவமும் கிடையாது. ஒரு நாளும் சரீரத்தை எடுத்துக் கொள்ளமாட்டார். ஆகையினல் ஈஸ்வரனுக்கு "நிராகார்" என்று பெயர்.

64. நிரஞ்சன்.—"அன்ஜ்" என்னும் தாதுவுடன், (காண்பிக்கிறது இஷ்டப்படுகிறது, அசைகிறது) "நிர்" உபசர்கமும், "அன்" ப்ரத்யயமு மடைந்து "நிரஞ்சன" சப்த முண்டாகிறது.

**अञ्जू व्यक्तिम्रक्षणकान्तिगतिषु । अञ्जनं व्यक्तिर्म्रक्षणं कुकाम इन्द्रियैः प्राप्तिश्चेत्यस्माद्यो निर्गतः पृथग्भूतः स निरञ्जनः ॥**

இந்திரியங்களின் பாபகிருத்தியத்திலிருந்தும், சரீர பாதைகளிலிருந்தும், துஷ்டச் செய்கைகளிலிருந்தும் சக்ஷு முதலான இந்திரிய விஷயங்களிலிருந்தும் வேறானவராகையினல் பரமேச்வரனுக்கு "நிரஞ்சனர்" என்று பெயர்.

65. கணேஷ்.— (66) கணபதி.—"கண்" (எண்ண) என்னும் தாதுவுடன், "ஈஸ்" "பதி" இரண்டும் ப்ரத்யயமாய், "கணேசர்" சப்தமும், "கணபதி" (கணங்களுக்கு அதிகாரி) சப்தமும் சித்தமாகிறது.

**गण संख्याने । ये प्रकृत्यादयो जड़ा जीवाश्च गण्यन्ते संख्यायन्ते तेषामीशः स्वामी पतिः पालको वा ।**

இந்த இயற்கையான உலகைச்செய்கிற ஜட பதார்த்தங்களுக்கும், ஜீவன்களுக்கும், எஜமானனும், காப்பாற்றுகிறவனுயு மிருக்கிறபடியினல் பரமேச்வரனுக்கு "கணபதி" "கணேஸ்" என்ற பெயர்கள்.

67. விச்வேச்வரர்.—

**यो विश्वमीष्टे स विश्वेश्वरः ॥**

ஜகதேகநாயகனுயிருப்பதினல் பரமேச்வரனுக்கு "விச்வேச்வரர்" என்று பெயர். (விச்வ என்றால் ஜகம், ஈஸ்—நாயகன், வர்—ப்ரத்யயம்).

68. கூடஸ்த.—

சமஸ்த விவகாரங்களுக்கும் ஆதாரமாயிருந்து, வியாபித்து இருந்தபோதிலும்

**यः कूटेऽनेकविधव्यवहारे स्वस्वरूपेणैव तिष्ठति स कूटस्थः परमेश्वरः ॥**

(சமஸ்த விவகாரங்களில்) தன் ஸ்வரூபத்தை மாற்றுமலிருக்கிற படியினல் பரமேச்வரனுக்கு "கூடஸ்தன்" என்று பெயர்.

69. தேவி.—

ब्रह्म चितिरीश्वरश्चेति ॥

"தேவ" சப்தத்திற்கு எவ்வளவு அர்த்தம் கண்டோமோ அவ்வளவு அர்த்தம் இதற்கும் கொள்ளவேண்டும். பரமேச்வரனின் நாமங்கள் மூன்று பால்களால் குறிக்கப்பட்டிருக்கிறது. ஈச்வரனைக்குறிக்கவேண்டியிருந்தால் "தேவ" சப்தத்தை உபயோகிக்கிறோம். "சித்" (பெண்பாலை) குறிக்கவேண்டியிருந்தால் தேவி சப்தத்தை உபயோகிக்கிறோம். ஆகையினால் "தேவி" என்பது பரமேச்வரனின் பெயரே.

70. சக்தி.—"சக்" (வல்லமை) என்னும் தாதுவிலிருந்து "சக்தி" சப்தம் சித்தமாகிறது.

शक्लृ शक्तौ । यः सर्वं जगत् कर्तुं शक्नोति स शक्तिः॥

இப்பூலோக முழுவதையும் சிருஷ்டிக்க வல்லமையுள்ளவராகையினால் பரமேச்வரனுக்கு "சக்தி" என்று பெயர்.

71. ஸ்ரீ:.—"ச்ரி" சேவிக்க என்னும் தாதுவிலிருந்து "ஸ்ரீ" சப்தம் சித்தமாகிறது.

श्रिञ् सेवायाम् । यः श्रीयते सेव्यते सर्वेण जगता विद्वद्भिर्योगिभिश्च स श्रीरीश्वरः ॥

அவரையே சமஸ்த ஜகமும், மேதைகளும், யோகிகளும், பணிகிறார்கள். ஆகையினால் பரமேச்வரனுக்கு ஸ்ரீ என்று பெயர்.

72. லக்ஷ்மி.—"லக்ஷ்" (பார், அடையாளம்,) என்னும் தாதுவிலிருந்து (லக்ஷ்மி) சப்தம் சித்தமாகிறது.

लक्ष दर्शनाङ्कनयोः । यो लक्षयति पश्यत्यङ्कते ।चिह्नयति चराचरं जगदथवा वेदैराप्तैर्योगिभिश्च यो लक्ष्यते स लक्ष्मीः सर्वप्रियेश्वरः ॥

சராசரமான சர்வஜகத்தைப் பார்க்கிறார். அவைகளுக்கு உருவத்தை ஏற படுத்துகிறார். மேலும், சரீரத்திற்கு, கண் மூக்கு முதலானவைகளையும், மரங்களுக்கு இலை, பல, மூலங்களையும், கருப்பு, செகப்பு வெண்மை நிறங்களையும், பூமியிலும், ஜலத்திலும் இருக்கிற மண்களுக்கும், கற்களுக்கும, சூர்ய சந்திராதிகளுக்கும், உருவத்தை ஏற்படுத்தி, அடையாளங்களைச் செய்கிறார். சகல பிரகாசங்களைவிட ஒளியில் சிறந்தவராயும், வேதாதி சாஸ்திரங்களுக்கும், தர்மாத்மாக்களுக்கும், ஞானிகளுக்கும், யோகிகளுக்கும், பார்ப்பதற்கு யோக்யமாயிருக்கிறார். ஆகையினால் அந்தப் பரமேச்வரனுக்கே "லக்ஷ்மி" என்று பெயர்.

73. சரஸ்வதி.—("ஸ்ரு கதௌ") "ஸ்ரு" (போவதற்கு) என்னும் தாதுவுடன் "ஸரஸ்" என்றாகிறது. "வத்" "ஐ" என்னும் ப்ரத்யயங்களுடன் சரஸ்வதி சப்தம் சித்தமாகிறது.

सरोविविधं ज्ञानं विद्यते यस्यां चितौ सा सरस्वती ॥

அவருக்கு பற்பல விக்ஞானம் முதலானதும், சப்த, அர்த்த, சம்பத்தினுடைய உண்மை ஞானமுமிருக்கிறபடியினால், "சரஸ்வதி" என்று பெயர்.

74. சர்வசாக்ஷிமான்.—

**सर्वाः शक्तयो विद्यन्ते यस्मिन् स सर्वशक्तिमानीश्वरः ॥**

தன் கார்யங்களைச்செய்வதில், பரமேச்வரன் அன்னிய சகாயத்தைக்கோருகிற தில்லை. தன் வல்லமையினால் தன்னுடைய சகல கார்யங்களையும் தானாகவே பரிபூர்ணம் செய்துகொள்ளுகிறார். ஆகையினால் பரமேச்வரனுக்குச் சர்வ சாக்ஷிமான்" என்று பெயர்.

75. நியாயகாரி.—"நி" (அடைதவற்கு) "க்ரி" (செய்வதற்க்கு) என்னும் தாதுக்களுடன் "இன்" ப்ரத்யயமடைந்து "நியாயகாரி" என்னும் சப்தம் சித்திக்கிறது.

**णीञ् प्रापणे। प्रमाणैरर्थपरीक्षणं न्यायः।**

**पक्षपातरहित्याचरणं न्यायः।**

**न्यायं कर्त्तुं शीलमस्य स न्यायकारीश्वरः ॥**

நியாய சாஸ்திரத்திற்கு வாத்யாயன மகரிஷி செய்திருக்கும் பாஷ்யத்திலிருந்து மேற்சொன்ன வாக்யம். ப்ரத்யக்ஷாதி பிரமாணங்களினால் சத்யமாய்த் தரிசிக்கிறதிற்கும், பக்ஷபாதமின்றி ஆசரணை செய்யப்படுகிறதிற்கும் "நியாயம்" என்று பெயர். பக்ஷபாதமன்றி தர்மப்ரகாரம் நியாயம் செய்வது அவருடைய இயற்கையாகையினால், பரமேச்வரனுக்கு "நியாயகாரி" என்று பெயர்.

76. தயாளு.—

**दय दानगतिरक्षणहिंसादानेषु**

**दयते ददाति, जानाति, गच्छति, रक्षति, हिनस्ति, यया सा दया**

**बह्वी दया विद्यते यस्य स दयालुः परमेश्वरः ॥**

"தய" (அடைவதற்கு, காப்பாற்றுவதற்கு, கொடுப்பதற்கு, ஹதம், செய்வதற்கு, வாங்கிக்கொள்ளுவதற்கு) என்னும் தாதுவுடன் "லு" ப்ரத்யயஞ் சேர்ந்து "தயாளு" சப்தம் சித்தமாகிறது.

அபயம் கொடுக்கிறவராயும் சத்யாசத்தியத்தையும், சகல வித்தைகளையும் அறிகிறவராயும், சமஸ்த ஸஜ்ஜனங்களை ரக்ஷிக்கவராயும், துஷ்டர்களை தக்கவாறு தண்டிக்கிறவராயுமிருக்கிறபடியினால் பரமேச்வரனுக்குத் தயாளு என்று பெயர்.

77. அத்வைத.—

**द्वयोर्भावो द्विता द्वाभ्यामितं द्वीतं वा सैव तदेव वा द्वैतम्, न विद्यते द्वैतं द्वितीयेश्वरभावो यस्मिंस्तदद्वैतम् ॥**

த்வைதத்திலிருந்து பரமேச்வரர் ஒருவரே வேறாயிருக்கிறபடியினாலும், மனிதனுக்கு மனிதன் துணையாயிருப்பதுபோல் பரமேச்வரனுக்கு யாரும் இல்லாதிருப்பதினாலும் மனிதனுடைய யோசனாசக்திக்கு எதிராய் யோஜனா சக்தியற்ற கல், மண், மரம், முதலான ஜட பதார்த்தங்கள் இருப்பதுபோல் அவருக்கு எதிராய்ஒன்றும் இல்லாமலிருக்கிறபடியினாலும், மனிதனுக்குக் கண் மூக்கு முதலான அவயவ ரூபபேதங்கள் பின்னமாயிருப்பதுபோல் அவருக்கு இல்லாதபடியினாலும் பரமேச்வரனுக்கு "அத்வைதன்" என்று பெயர். ஆகையினால் பரமேச்வரன் அத்வைத தன்மையினால் விளங்குகிறார்.

78. "நிர்குணம்"

சத்துவம், ராஜசம், தாமசம், உருவ வறிவு, சுவையறிவு, பரிசவறிவு, முதலான ஜடகுணங்களிலிருந்தும், அவித்தை, அல்பக்ஞதை, ராகம், தவேஷம், முதலான ஜீவராசிகளுடைய குணங்களிலிருந்தும் வேறாயிருக்கிறபடியினால் பரமேச்வரனுக்கு "நிர்குணன்" என்று பெயர். உபநிஷத்துக்களும் இதை சித்தாந்தம் செய்கின்றன. உதாரணமாக.

**गण्यन्ते ये ते गुणा वा यैर्गणयन्ति ते गुणाः, यो गुणेभ्यो निर्गतः स निर्गुण ईश्वरः ॥**

**अशब्दमस्पर्शमरूपमव्ययम्।**

கடோபநிஷத். பரமேச்வரன். சப்த, ஸ்பர்ச, ரூபாதி குணங்களிலிருந்து வேறாயிருக்கிறார்.

79. "சகுணம்"—

**यो गुणैः सह वर्त्तते स सगुणः ॥**

எல்லாவற்றினுடைய ஞானத்தை உடையவராயும் சர்வசுகியாயும், பரிசுத்தராயும், அனந்த குணங்கள் அவரிடத்தில் இருக்கிறபடியினாலும் பரமேச்வரனுக்குச் "சகுணன்" என்று பெயர்.

(ग) கந்தாதி குணங்களைக் கொண்டிருக்கிறபடியினால், பூமியை (சகுண) மென்றும், இச்சாதி குணங்கள் இல்லாதபடியினால் பூமியை (நிர்குண) என்றும் சொல்லப்படுகிறது. அது போலவே, பரமேச்வரனுக்கு "சகுணன்" என்றும்" "நிர்குணன்" என்றும் பெயர்கள் உண்டு. ஜீவாதிகுணங்களினால் அடையக்கூடாதவராயிருப்பதினால், பரமேச்வரனுக்கு "நிர்குணன்" என்றும் சர்வக்ஞாதிகுணங்களைக்கொண்டிருக்கிறபடியினால் "சகுணரென்றும்"பெயர்களாகும். எப்படி சேதனகுணங்களிலிருந்து வேறாகயிருந்தால் ஜடபதார்த்தங்களை "நிர்குண" மென்றும் தன்குணங்களோடு சேர்ந்திருந்தால் "சகுண" மென்றும் சொல்லுகிறோமோ அப்படியே ஜடகுணங்களிலிருந்து வேறாகயிருப்பதினால் ஜீவனை "நிர்குணன்" என்றும், இச்சாதி தன் குணங்களோடு கூடியிருப்பதினால் "சகுணன்" என்றும் சொல்லுகிறோம். அப்படியே பரமேச்வரனுக்கும்.

80. அந்தர்யாமி :—

अन्तर्यन्तुं नियन्तुं शीलं यस्य सोऽयमन्तर्यामी

சமஸ்தமான பிராணி, அப்ராணி, ரூபத்திற்கும், ஜகம்யாவற்றிற்கும், தலைவராய் எல்லாவற்றையும் நியமிக்கிறவர். ஆகையினால் பரமேச்வரனுக்கு "அந்தர்யாமி" என்று பெயர்.

81. தர்மராஜ :—

यो धर्मे राजते स धर्मराजः

தர்மம் எல்லாவற்றையும் பிரகாசிக்கச்செய்கிறவராயும், அதர்மத்தை அழித்து தர்மத்தையே பக்ஷபாதமின்றி நிலைநிறுத்துகிறவராயுமிருக்கிற படியினால் பரமேச்வரனுக்கு "தர்மராஜா" என்று பெயர்.

82. எமன்:—"யம்" (அடக்க) என்னும் தாதுவிலிருந்து "எம" சப்தம் சித்தமாகிறது.

यमु उपरमे । यः सर्वान् प्राणिनो नियच्छति स यमः

சமஸ்த பிராணிகளுடைய கர்மபலத்தைக் கொடுப்பதற்கு ஏற்பாட்டைச் செய்கிறவராயும், சமஸ்த அநியாயங்களிலிருந்து வேறானபடியினாலும் பரமேச்வரனுக்கு "எமன்" என்று பெயர்.

83. பகவான்:—"பாஜ்" என்னும் தாதுவிலிருந்து "பாக்" என்னும் சப்தமும், "பாக்" என்னும் சப்தத்திலிருந்து "பகவான்" சப்தமும் சித்தமாகிறது.

भज सेवायाम् । भगः सकलैश्वर्य्यं सेवनं वा विद्यते यस्य स भगवान् ॥

சகல ஐஸ்வரியங்களுக்கு ஈச்வரனும், பூஜிப்பதற்கு யோக்யமாயுமிருக்கிறபடியினால் பரமேச்வரனுக்கு "பகவான்" என்று பெயர்.

84. மனு :—

मन ज्ञाने । यो मन्यते स मनुः ॥

"மன்" (யோசனைசெய்ய) என்னும் தாதுவிலிருந்து "மனு" சப்தம் சித்தமாகிறது. விக்ஞான சீலராயும், பூஜை செய்வதற்கு அவர் ஒருவரே அருகராயுமிருக்கிறபடியினால் "பரமேச்வரனுக்கு" "மனு" என்று பெயர்.

85. புருஷ :—(ப்ருபாலன கரணயோ:)

पॄ पालनपूरणयोः । यः स्वव्याप्तया चराऽचरं जगत् पृणाति पूरयति वा स पुरुषः॥

இந்த தாதுவிலிருந்து "புருஷ" சப்தம் சித்தமாகிறது. ஜகமுழுவதும் பரமேச்வரன் பூர்ணமாயிருக்கிறார். ஆகையினால் அவருக்கே "புருஷ" என்று பெயர்.

86. விச்வம்பர் :—"ப்ரி" (போஷிக்க, பிடிக்க) என்னும் தாதுவுடன் "விச்வ" உபசர்கமாய் "விஸ்வம்பர" சப்தம் சித்தமாகிறது.

डुभृञ् धारणपोषणयोः । यो विश्वं बिभर्त्ति धरति पुष्णाति वा स विश्वम्भरो जगदीश्वरः ॥

பரமேச்வரன் ஜகத்தைத்தரித்துப் போஷிக்கிறுர். ஆகையினல் அவருக்கு விச்வம்பர் என்று பெயர்.

87. "காலன்":—"கால்" (எண்ண) என்னும் தாதுவுடன் "அ" ப்ரத்யயமடைந்து "கால" சப்தம் சித்தமாகிறது.

**कल संख्याने । कलयति संख्याति सर्वान् पदार्थान् स कालः ॥**

ஜகத்தினுடைய சகல பதார்த்தங்களேயும், ஜீவன்களேயும், எண்ணுகிறுர். ஆகையினல் பரமேச்வரனுக்கு "காலன்" என்று பெயர்.

88. சேஷ :—

**शिष्लृ विशेषणे । यः शिष्यते स शेषः**

ஜகத்தினுடைய உத்பத்திக்கப்புறமும், ப்ரளயத்திற்கப்புறமும், மீதியாய் பரமேச்வரன் இருப்பதினல் அவருக்கு "சேஷ" என்று பெயர்.

89. ஆப்தன் :—"ஆப்" (பரவ) என்னும் தாதுவுடன் "த" ப்ரத்யயமாய் "ஆப்த" சப்தம் சித்தமாகிறது.

**आप्लृ व्याप्तौ । यः सर्वान् धर्मात्मन आप्नोति वा सर्वैर्धर्मात्मभिराप्यते छलादिरहितः स आप्तः**

சத்யோபதேசம் செய்கிறவராயும், சகலவித்யா யுக்தராயும், சகலதர்மாத்மாக்களால் அடையக்கூடியவராயும், சகல தர்மாத்மாக்களால் துதிப்பதற்கு யோக்யமாயும், கபடம், பொய், முதலானவைகளிலிருந்து வேருயிருக்கிறபடியினலும் பரமேச்வரனுக்கு "ஆப்த" என்று பெயர்.

90. "சங்கரன் :—"க்ரி" (செய்வதற்கு) என்னும் தாதுவுடன் "சம்" (நல்லது) என்பது உபசர்கமடைந்து "அ" ப்ரத்யயமும் சேர்ந்து "சங்கரன்" என்னும் சப்தம் சித்தமாகிறது.

**डुकृञ् करणे । यः शङ्कल्याणं सुखं करोति स शङ्करः**

நல்லதைச் செய்து எல்லோருர்கும் கல்யாண குணங்களேயும், சுகங்களேயும், கொடுக்கிறபடியினல் பரமேச்வரனுக்குச் சங்கரன் என்று பெயர்.

91. மகாதேவன்:—"தேவ" சப்தத்துடன் "மகத்" உபசர்க்கமாவதினல் "மகாதேவ" சப்தம் சித்தமாகிறது.

**यो महतां देवः स महादेवः ॥**

தேவர்களுக்கெல்லாம் பெரிய தேவராயிருப்பதினல் பரமேச்வரனுக்கு "மகாதேவன்" என்று பெயர். எப்படியென்ருல், மேதைகள் யாவர்க்கும் பெரியவராயும் சூர்யாதி பிரகாசங்களுக்கும் ஒளி தருபவர்.

92. பிரியன்:—

**प्रीञ् तर्पणे कान्तौ च । यः पृणाति प्रीयते वा स प्रियः ॥**

"ப்ரீ" (திருப்தியடைவது) என்னும் தாதுவிலிருந்து "ப்ரிய" சப்தம் சித்தமாகிறது. சமஸ்த தர்மாத்மாக்களையும், முமுக்ஷுக்களையும், சிஷ்டர்களையும், திருப்தி செய்வதும் அன்றி எல்லாருடைய பிரியத்திற்கும் பாத்திரமாயிருக்கிறார். ஆகையினால் பரமேச்வரனுக்கு "பிரிய" என்று பெயர்.

93. ஸ்வயம்பூ :—

**भू सत्तायाम् । यः स्वयं भवति स स्वयम्भूरीश्वरः ॥**

"பூ" (இருப்பதற்கு) என்னும் தாதுவுடன் "வயம்" (தானாகவே) உபஸர்கமாய் "ஸ்வயம்பூ" சப்தம் சித்தமாகிறது. தனக்குத் தானும் ஆக்கப்படாதவராயும் இருப்பதால் பரமேச்வரனுக்கு "ஸ்வயம்பூ" என்று பெயர்.

94. கவி :—

**कु शब्दे । यः कौति शब्दयति सर्वा विद्या स कविरीश्वरः ॥**

"கு" (உபதேசிக்க, சப்திக்க) என்னும் தாதுவிலிருந்து கவி சப்தம் சித்தமாகிறது. வேதங்களால் எல்லாவிதமான வித்தைகளையும் உபதேசித்து, தானும் அவைகளை யறிந்திருப்பதினால் பரமேச்வரனுக்கு "கவி" என்று பெயர்.

95. சிவன்:—

**शिवु कल्याणे । बहुलमेतन्निदर्शनम् ॥**

"சிவ" (மங்களகரமான) என்னும் தாதுவிலிருந்து சிவ சப்தம் சித்தமாகிறது. கல்யாண ஸ்வரூபராய், கல்யாண குணங்களை உடையவராய், கல்யாணத்தையே செய்கிறார். ஆகையினால் பரமேச்வரனுக்கு "சிவன்" என்று பெயர்.

இதற்கு முந்தி பரமேச்வரனின் ஐந்து நாமங்களையும் (ஓம், திவ்விய, சுபர்ன, கருத்மான், மாதரீச்வான்) விவரிக்கபட்டிருக்கின்றன. இப்பொழுது மீதியான தொண்ணூற்றைந்து நாமங்களும் விவரிக்கப்பட்டிருக்கின்றன. இப்படியாக அந்தப்பரமேச்வரனுடைய நூறுநாமங்களும் சொல்லப்பட்டிருக்கின்றது. இவைகளன்னியில், இன்னும் கணக்கற்ற நாமங்கள் பரமேச்வரனுக்கிருக்கின்றன. எம்மாதிரி பரமேச்வரனுடைய குண கர்ம ஸ்வபாவங்கள், எண்ணிறந்தவைகளோ, அப்படியே அவைகளைக் குறிக்கின்ற நாமங்களும் எண்ணிறந்தவைகளே. அவைகள், ஒவ்வொன்றும், அவருடைய குணகர்ம ஸ்வபாவமொன்றைக் குறிகின்றது. ஆகையினால் இப்பொழுது என்னால் எழுதப்பட்டது சமுத்திரத்திற்கு ஒரு துளியை ஈடுவது போலிருக்கிறது. ஏனென்றால் வேதாதி சத்யசாஸ்திரங்களில் பரமேச்வரனுடைய குணகர்ம ஸ்வபாவங்கள் கணக்கற்றதாய் குறிக்கப்பட்டிருக்கின்றது. அவைகளைப் படிப்பதும், போதிப்பதும், மனதைத் தெளிவாககுகின்றது. வேதாதி சாஸ்திரங்களைப் படிக்கிறவர்களுக்கு அன்னிய பதார்த்தங்களுடைய ஞானமும் உண்டாகிறது.

**வினா.**—இதர நூலாசிரியர்கள், கிரந்தத்தின் முதலிலும், மத்தியிலும், முடிவிலும், மங்களாசரணம் எழுதுகிறார்களே, நீங்கள் ஏன் அப்படிச் செய்யவில்லை?

விடை.—அப்படிச் செய்வது சரியல்ல. எப்படி என்றால் ஆரம்பம், நடுவு, முடிவுகளில், மங்களாசரணம் எழுதினால் அந்த இடங்கள் தவிர மற்ற இடங்களில் எல்லாம் அமங்களம் குடிகொண்டிருக்கும். அதற்கு "சாங்கிய சாஸ்திரத்தினுடைய" சித்தாந்தம்.

**मङ्गलाचरणं शिष्टाचारात् फलदर्शनाच्छ्रुतितश्चेति ॥**

கியாயமாய், பக்ஷபாதமின்றிச் சத்யமாயும், வேதோக்தமாயும், ஈஸ்வராக்ஞையைக் கீழ்ப்படிந்து, இருக்கிறதை இருக்கிறபடியே, எல்லாவற்றையும், எப்பொழுதும் கொண்டுநடப்பதுதான் மங்களாசரணமெனப்படும் என்பதே இதன் கருத்து. நூலினுடைய ஆரம்பமுதல் முடிவுவரையில் சத்யத்தையும் உண்மையையும் எழுதுவதே மங்களாசரணமாகும். ஆகையினால் ஒரு இடத்தில் மங்களத்தையும் மற்றொரு இடத்தில் அமங்களத்தையும் எழுதுவது மங்களாசரணமாகாது. மஹரிஷிகளும், பெரியவர்களும் எழுதுவதை அறியவும்.

**यान्यनवद्यानि कर्माणि तानि सेवितव्यानि नो इतराणि ॥**

(தைத்ரேய உபநிஷத், ப்ரபாடக் 7, அனுவாக் 11) இதன் தாத்பர்யமென்னவென்றால்:—ஏப்பிரஜைகளே! "அனவத்ய" அநிந்தியமென்றால் தர்மயுக்தமானகாரியங்கள். அவைகளைச்செய்வதுயோக்யமாகும். அதர்ம யுக்தகாரியங்கள் அல்ல. ஆகையினால் தற்கால நூல்களில் காணப்படும் "ஸ்ரீகணேசாய நம:" "சீதாராமாப்யாம் நம" "ராதாகிருஷ்ணாப்யாம் நம:" "ஸ்ரீ குருசரணாரவிந்தாப்யாம் நம:" "ஹநுமதே நம:" "துர்காயநம:" "வடுகாய நம:" "பைரவாயநம:" "சிவாயநம:" "சரஸ்வத்யைநம:" "நாராயணாயநம:" இன்னும் முதலான அநேகங்கள், வேத சாஸ்திரங்களுக்கு விரோதமாயிருக்கிறபடியினால், புத்திவான்களால் தப்பெனக் கருதப்படுகின்றது. எப்படி என்றால் வேதங்களிலும், ரிஷிகளுடைய நூல்களிலும், "ஓம்" "அத" என்பவைகளே காணப்படுகின்றன.

**'अथ शब्दानुशासनम्' अथेत्ययं शब्दोऽधिकारार्थः ॥**
(வ்யாகரண மகாபாஷ்யம்).

**'अथातो धर्मजिज्ञासा' अथेत्यानन्तर्ये वेदाध्ययनानन्तरम् ।** பூர்வ மீமாம்சம்.

**'अथातो धर्मं व्याख्यास्यामः' अथेति धर्मकथनान्तरं धर्मलक्षणं विशेषेण व्याख्यास्यामः ।** வைசேஷிதர்சனே.

**'अथ योगानुशासनम्' अथेत्ययमधिकारार्थः ।** யோக சாஸ்திரம்.

**अथ त्रिविधदुःखात्यन्तनिवृत्तिरत्यन्तपुरुषार्थः' सांसारिकविषयभोगानन्तरं त्रिविधदुःखात्यन्तनिवृत्त्यर्थः प्रयत्नः कर्त्तव्यः ।** சாங்கிய சாஸ்திரம்.

**अथातो ब्रह्मजिज्ञासा ।** வேதாந்த சூத்ரம்.

**ओमित्येतदक्षरमुद्गीथमुपासीत ।** சாந்தோக்யுபநிஷத்.

**ओमित्येतदक्षरमिदग्ं सर्वं तस्योपव्याख्यानम् ॥** மண்டூக்ய உபநிஷத்

இவைகள் முறையே அந்தந்தச் சாஸ்திரங்களுடைய ஆரம்ப வசனங்கள் இதேமாதிரி வேறு ரிஷிகளுடையவும், கிரந்தங்களும் "ஓம்" "அத" சப்தங்களினால் ஆரம்பம் செய்யப்பட்டிருக்கிறது. நான்கு வேதங்களுடைய ஆரம்பத்தில் "அக்னியாதி" நாமங்கள் இருக்கின்றனவே தவிர, "கணேசாயநம:" முதலான நாமங்கள் எங்கேயும் காணப்படுகிறதில்லை. வைதீகர்கள் வேதங்களுடைய ஆரம்பத்தில் "ஹரி: ஓம்" என்று சொல்லவும் எழுதவும் செய்கிறார்கள். இது புராணிகர்களுடையவும், தந்திரிகர்களுடையவும் அசத்ய கற்பனையினால் கற்றுக்கொள்ளப்பட்டது. வேதாதி சாஸ்திரங்களில் "ஹரி" சப்தம் சம்பவமாகிறதில்லை. ஆகையினால் கிரந்தங்களினுடைய ஆரம்பங்களில் "ஓம்" அல்லது "அத" வையே எழுதவேண்டும்.

ஈச்வரன் என்னும் விஷயத்தில் கொஞ்சம் எழுதினோம். அடுத்த அத்தியாயத்தில் குடும்பக்கல்வி என்னும் விஷயம் எடுத்துக்கொள்ளப்படும்.

முதல் அத்தியாயம்

*முற்றிற்று.*



## இரண்டாவது அத்தியாயம்.

### குடும்பக் கல்வி.

**मातृमान् पितृमानाचार्यवान् पुरुषो वेद ॥**

இம்மேற்கோள் **சதபத** பிராமணத்திலிருந்து, தாய், தந்தை, ஆசான் என்னும் உபாத்தியாயர்களை உடையவனே கற்றுணர்ந்த மேதையாகிறான். வித்வான்களாயுள்ள பெற்றோர்களுடைய குலமே மேன்மைப் பெறுகிறது. அவர்களுடைய மக்களே பாக்கியமுள்ளவர்களாவர். தாயினிடம் குழந்தைகள் உபதேசமும் உபகாரமும் பெறுவதுபோல் வேறு எங்கும் பெறுகிறார்கள் இல்லை. தன் குழந்தைகளினிடமுள்ள அன்பிற்கோ, அல்லது அவைகளுடைய முன்னேற்றத்தின் கவலைக்கோ தாய்க்கு நிகர் எவருமாகார். எனவே மேற்சொன்ன வசனத்தில் "மாத்ருமான்" சப்தம் உபயோகப்படுத்தப்பட்டிருக்கிறது. எவருடைய தாய் சிரத்தையுள்ளவளாயும் கற்றுணர்ந்தவளாயுமிருக்கிறாளோ, அவருடைய தாயையே தாயெனலாம். கர்ப்பத்தில் கருத்தரிக்குங் காலத்திலிருந்து வித்தை யாவற்றையும் அறியும் காலம் வரையில் சுசீலத்தை உபதேசிக்கும் தாயே உத்தமி.

### கர்ப்பகாலத்தில் ஆகாரம்.

கருத்தரித்ததற்குமுன்னும், கர்ப்பகாலத்திலும், பிரசவத்திற்குப்பின்னும், மயக்கத்தை யுண்டுசெய்யக்கூடிய மருந்துகள், லாகிரிவஸ்துகள், துர்நாற்றம், புளிப்பு, புத்தியை நாசஞ்செய்யும் பதார்த்தங்கள், முதலானவைகளை விலக்கி சாந்தம், ஆரோக்யம், பலம், புத்தி, பராக்கிரமம், நல்லொழுக்கம், நல்வழக்கம், முதலியவைகளை யுண்டு பண்ணும் சத்துள்ள பொருள்களாகிய நெய், தயிர், சர்க்கரை, முதலானவைகளை உபயோகஞ்செய்வது தாய் தகப்பனார்களுக்கு ஏற்றவைகளாகும். ஏனெனில் அவைகள் ரஜஸ் வீரியங்களுடைய குற்றங்களை நீக்கி உத்தமகுணங்களை யளிக்கும்.

### கர்ப்பதான காலம்.

மாதத்தீட்டு கண்ட ஐந்தாம் தினமுதல் பதினாறும் தினம வரையில் புணர்ச்சிக்கேற்ற காலங்களாகும். முதல் நான்கு தினங்களை விட்டுவிடவேண்டும். மிகுதியான பன்னிரண்டு தினங்களிலும், ஏகாதசி, திரயோதசி, தினங்களை விட்டுவிட்டு பாக்கி இரவுகளிலே பெண்களுடன் தேகசம்பந்தம் செய்தல் உத்தமமாகும். மாதத்தீட்டுகண்ட பதினாறுதினங்களுக்குப்பிறகு தேகசம்பந்தம் செய்யலாகாது. பின் மாதத்தீட்டுகாணும் வரையிலும், கருதரித்தபின் ஒரு வருஷகாலம் கழியும் வரையிலும் சம்போகஞ் செய்யக்கூடாது. புணர்ச்சிகாலத்தில் தம்பதிகள் ஆரோக்கிய முள்ளவர்களாயும், பரஸ்பர அன்புடனும் துக்கமன்றியும் இருத்தல்வேண்டும். ஆகாரம் உடை இவைகளைப்பற்றிய விஷயங்களில் சரகம், சுஸ்ருதம் சொல்லுகிறபடி நடக்கவேண்டும். பரஸ்பரம்

அன்புடனும் மன ஒருமையுடனும் மனுஸ்மிருதி சொல்லுகிறவண்ணம் அனுஷ்டிக்கவேண்டும். கருத்தரித்தப் பின்னர் ஆகாரம் உடை முதலானவைளில் தாய் மிக்கக் கவனத்துடன் இருத்தல் அவசியமாகும். குழந்தை பிறக்கும் வரையில் புத்தி, பலம், பராக்கிரமம், ரூபம், ஆரோக்யம், சாந்தம் முதலான குணங்களை உண்டுபண்ணும் பதார்த்தங்களையே உட்கொள்ளவேண்டும்.

## பிரசவம்.

பிரசவமானவுடன் சுகந்த பரிசுத்த ஜலத்தினல் குழந்தையை ஸ்நானஞ் செய்து வைக்கவேண்டும். தொப்புள் கொடியை நீக்கி, வீட்டின் பரிசுத்தமான விடத்தில் நெய் முதலான வாசனைப்பொருள்களைக்கொண்டு ஹோமம் செய்ய வேண்டும். (வேதோக்த தர்மங்கள், ஹோமம் முதலானவைகள் செய்ய வேண்டிய விதிகள் யாவும் என்னுடைய 'சமஸ்காரவிதி' என்னும் நூலில் கூறப்பட்டிருக்கின்றன.) குழந்தையும் தாயும் நிதானமாய் ஆரோக்யத்தையும் புஷ்டியையும் அடையும் வரையில் தாய்க்கு ஸ்நாகம், போஜனம் முதலானவைகளை அளிக்கத்தக்க ஏற்பாடுகள் செய்யவேண்டும். குழந்தையின் மேன்மையான குணங்களைப் பெருகச்செய்வதற்காக வேண்டிய பதார்த்தங்களைத் தாயாரோ அல்லது தாதியோ சாப்பிடவேண்டும்.

## குழந்தைகளைக் காப்பாற்றுதல்.

குழந்தைக்கு முதல்ஆறுநாள்வரையில் தாயின்பாலையே ஊட்டவேண்டும். பிறகு தாதியைநியமிக்கலாம். ஆனல் பெற்றோர்கள், உத்தமகுணங்களை உண்டு பண்ணக்கூடிய உயர்ந்த ஔஷதங்களைச் சுத்த நீரில் ஊரவைத்து காய்ச்சி வடிகட்டின ரசத்துடன் சரிக்குச்சரியான பசுவின் அல்லது ஆட்டின் பாலுடன்சேர்த்து குழந்தைகளுக்குக் கொடுக்கவேண்டும். சுத்த வாயு பரவியிருக்கும் இடத்தில் பிரசவமானவுடன் தாயையும் குழந்தையையும் மாற்றவேண்டும். சுத்தமாயும்பார்வைக்கு ரம்யமாயுமுள்ள வஸ்துக்கள் அவர்களிருப்பிடத்தில்வேண்டும். சுத்தவாயுவிருக்கும் இடங்களில் அவர்களை நடக்கச்செய்வது உத்தமம். தாதி பால் அல்லது பசு, ஆடு, முதலானவைகளின் பால் கிடைக்காத பக்ஷத்தில் எது ஏற்றதென்று புலப்படுகிறதோ அதைச்செய்யவேண்டும். கர்ப்பிணியுடைய சரீரத்திலிருந்து குழந்தையுடைய சரீரம் உண்டாகிறது. ஆதலாலேயே ஒவ்வொரு பிரசவத்திற்கப்புறம் பெண்களுக்குப் பலமற்று போகிறது. ஆகவே குழந்தைகளுக்குப் பால் கொடுக்காமலிருப்பது தாய்க்குநன்று. பால் வற்ற வேண்டி, மருந்தை ஸ்தனத்தில் தடவவேண்டும். பால் உலர்ந்துபோய் விட்டால், தாயானவள் திரும்பவும் இரண்டு மாதகாலத்தில் சரீர திடத்தை பெறுகிருள். அதுவரையில் புருஷன் தன்னடக்கத்தினல் ஐம்புலன்களை யடக்கி வீர்யத்தைக்காப்பாற்றிக் கொள்ளவேண்டும். இவ்விதம் பெற்றோர் இருவரும் நடந்துகொண்டால் உத்தம சந்தானங்கள் உண்டாகி பலம், பராக்கிரம் அதிகமாகும். இதனலே, பின்வரும் சந்தானங்களெல்லாம் சிறந்தவர்களாயும், பலமுள்ளவர்களாயும், பராக்கிரமத்துடன் கூடினதாயும், தர்மீகர்க

ளாயும் ஆவார்கள். ஸ்திரீ தன் யோனியைக் கவனித்துக்கொள்ளவேண்டும், புருஷனும் வீர்யத்தைக் காத்துக்கொள்ளவேண்டும். அவர்களுக்கு உண்டாகும் மக்களெல்லாம் சிறந்து ஓங்கும்.

### தாய் கற்பிக்க வேண்டியவைகளாவன.

மக்கள் நல்லவர்களாகவும் நன்னடத்தையுடன் கூடினவர்களாகவுமிருக்க வேண்டிய சிறந்த முறைகளை அவர்களுக்கு கற்பிக்கவேண்டும். அவர்களுடைய சரீர அங்கங்களைத் துர்பிரயோஜனம் செய்யாமலும் காத்துக்கொள்ள வேண்டும். குழந்தைகள் பேசத்தொடங்கினவுடன் உச்சாரணைகளைச்சரிவர பிழையன்னியில் செய்யத் தாய் கற்பித்துக்கொடுக்கவேண்டும். உதாரணமாக "ப" என்பதை உச்சரிக்கத்தக்க விடம் உதடேயாகும். அதைச்சரியாக உச்சரிக்க உதடுகள் இரண்டையும் சேர்த்தபின் வாயைத் திறக்கவேண்டும். மதுர ஸ்வரம் அந்தரஸ்வரம் கம்பீரமானஸ்வரம் முதலானவைகள் அவைகளுடைய பேசும் பாங்கு, வார்த்தைகள், ஒருமிப்பு, முதலானவைகள் எல்லாம் தனித்தனியே நன்றாய் விளங்கும்படி குறில், நெடில், முதலான எழுத்துக்களை உச்சரிக்கச்செய்யவேண்டும். குழந்தைகளுக்குக் கொஞ்சம் பேசவும், அறியவும் வேண்டிய வயதும் வந்தவுடன், பெரியோர், சிறியோர், தாய், தகப்பன், அரசன், முதலியவர்களிடத்தில் பேசவும் பழகவும் வேண்டிய விதிகளைக் கற்பிக்கவேண்டும். ஏனென்றால் அவர்கள் சமூகத்திலொதுக்கப்படாமல் மரியாதைப் பெற்றுக்கொள்ள வேண்டியவர்களா யிருக்கவேண்டும்.

யோக்யமற்ற நடவடிக்கைகளிலிருந்து நீங்கிக்கொள்ளவும், எல்லோராலும் நன்கு மதிக்கப்படுவதற்கும் வேண்டியவைகளை யெல்லாம் படிப்பிக்க வேண்டும். பயிற்சியிலும் வித்தையிலும் ஆசை அதிசமுள்ளவர்களாகவும், சமூகமேன்மை, ஐம்புலன்களுடைய அடக்கம், முதலானவைகளில் மிக்கப் பிரியமுள்ளவர்களாகவும்செய்ய மக்களின் மனதை ஆக்க முயலவேண்டும். வீண்விளையாட்டு, அழுகை, ஹாஸ்யம், சண்டை, சிரிப்பு, சோகம், எப்பொருளிலாவது துராசை, துவேஷம், முதலானவைகளை விலக்கிவிட வேண்டும். ஜனனேந்திரியங்களுடன் கையாடுவதினாலும், விளையாடுவதினாலும் வீர்யம் குறைந்து தளர்ச்சிக்கு இடம் தருகிறது. அதுவுமன்றி கைகளையும் அழுக்காக்கிவிடுகிறது. உண்மை உரைத்தல், தைர்யமாயிருத்தல், வீரத்தன்மையுடனிருத்தல், மலர்முகம் முதலான குணங்களையடைவதற்கான வழிகளைக் கற்பிக்கவேண்டும்.

### குழந்தைகளின் பயிற்ச்சி.

ஆண் பெண் குழந்தைகளாகிய இருவினத்தாருக்கும் வயது ஐந்து முடிந்தவுடன் தேவநாகரி அக்ஷரங்களையும், பிறபாஷைகளின் அக்ஷரங்களையும் கற்பிக்கவேண்டும். துஷ்டர்களால் வஞ்சிக்கப்பட்டு ஏமாற்றமடையாமலிருப்பதற்கு வேண்டிய உத்தமக்கல்வி, வித்தை, தர்மம், முதலியவைகளைக் காட்டுகிறதும் பரமேச்வரன், தாய், தந்தை, ஆசான், வித்வான் அதிதி, ராஜா, பிரஜை

குடும்பம், பந்து, சகோதரன், சகோதரி, வேலைக்காரன், முதலானவர்களிடத்தில் நடந்து கொள்ளவேண்டிய விதிகளை வெளியிடுகிறதுமான மந்திரம், சுலோகம், சூத்திரம், வாசகம், செய்யுள் முதலானவைகளை, அர்த்தத்துடன் மனப்பாடம் செய்து, பாராமல் சொல்லக் குழந்தைகளுக்குக் கற்பிக்க வேண்டும்.

### பூதவித்தை.

பூதம் பிரேதம் குருட்டாசாரம் பொய் வார்த்தைகள் முதலானவைகளின் மேல் நம்பிக்கை உண்டாகாமலிருப்பதற்கும், ஞானம், மதம் முதலானவைகளிலிருந்து வேறே ஆசைகளில் புத்தி செல்லாமலிருப்பதற்கும் அவர்களுக்குக் கூறவேண்டியது.

**गुरोः प्रेतस्य शिष्यस्तु पितृमेधं समाचरन् ।**
**प्रेतहारैः समं तत्र दशरात्रेण शुध्यति ॥** மனு 5. 65.

குரு இறந்தபிறகு அவருடைய சவத்திற்குப் பிரேதமென்று பெயர். சவத்தை மயானத்திற்குத் தூக்கிக்கொண்டு செல்லுகிற சிஷ்யர்களும் அதைத் தகனஞ் செய்கிறவனும் பத்து தினங்களில் சுத்தியை அடைகிறான். தகனஞ்செய்து முடித்த சவத்திற்குப் பெயர் "பூத" அதாவது போய்விட்டது என்பது அர்த்தம். அதாவது முன்னே வசித்திருந்து இப்பொழுது காலஞ்சென்றுவிட்டவர். பிறந்து இப்பொழுது இல்லாமல் காலஞ் சென்றுவிட்டவர், இறந்த காலத்துடன் அதாவது, பூதத்துடன் சேர்க்கப்படுகிறார். பிரம்மா முதற்கொண்டு இதுவரையிலிருந்த வித்வான்களுடைய சித்தாந்தம் இதுவேயாகும். ஆனால் சந்தேகங்கொள்ளுவது, தீயாருடன்கூடி இணங்குவது, கெட்ட நடத்தையுடனிருப்பது, இவைகளையுடையவர்கள், அவரவர்களுடைய மனோவெண்ணத்தினாலே யுண்டாக்கப்பட்ட பேய், பிசாசு, வேதாளம், பூதம், மோகினி முதலான வேதனைசெய்யும் மயக்கங்களினால் பீடிக்கப்பட்டு சஞ்சலத்திற்கும், துன்பத்திற்கும், ஆளாகிறார்கள். ஒருவன் இறந்தவுடன், அவனுடைய ஜீவன் பாபபுண்ணிய வசத்திலகப்பட்டு ப்ரமேச்வரனுடைய அழியா நியாயத்திற்குள்ளாகி, சுகதுக்கங்களை யனுபவிப்பதற்காக மறுபிறப்பை யடைகிறது. பரமேச்வரனுடைய அழிவில்லாத இந்நியாயத்தை யார் எதிர்க்கமுடியும்? அக்ஞானிகள் வைத்திய சாஸ்திரங்களையாவது, பொருள் விளக்கங்களையாவது படிக்காமலும், கேழ்க்காமலும, யோசித்துப் பார்க்காமலும், சித்தபிரமை, பிதற்றல், வெறி, ஜுரம் முதலான சரீரத்தை ஒட்டின வியாதிகளுக்குப் பேய் பிசாசு, பூதம் முதலான பெயர்களை யளித்துவிடுகிறார்கள். அவைகளுக்குத்தக்க ஔஷதம், பத்தியம், முதலான ஏற்ற சிகிச்சைகளை யளிக்காமல், துஷ்டர்கள், மோசக்காரர்கள், அறியாமையில் அழுந்தியவர்கள், சுயநலங்கருதுகிறவர்கள், பெருக்குகிறவர்கள், சக்கிலியர்கள், இழிந்த குலத்தவர்கள், முரட்டுத்தனமானவர்கள், காட்டுமிராண்டிகள், முதலானவர்களைக் கைக்கொண்டு, அவர்கள் உச்சிஷ்டங்களை உண்டு, தாழுத்து, மந்திரக்கயிறு, மாயக்கயிறு, குளிசம், இரக்ஷை, முதலானவைகளைச் சரீரத்தி

லணிந்துக்கொண்டு, திரிந்துக் கொண்டிருப்பதுமல்லாமல் ஏனையோர்களையும் அம்மாதிரியான பொய்க்கார்யங்களைச்செய்யத் தூண்டுகிறார்கள். செல்வத்தை விரயஞ்செய்து, மக்களை நாசப்படுத்தி வியாதிகளை விருத்தியாக்கி, துன்பங்களையும் அவர்கள் பெருகச்செய்கிறார்கள்.

### आंख के अन्धे ओर गांठ के पूरे

ஞானக்கண் குருடர்களாயும், தனத்திலதிகமுடையவர்களுமான பேதைகள், தீயநடத்தையுள்ளவர்களாயும், பாபிகளாயும், சுயநலங் கருதுகிறவர்களாயுமுள்ளவர்களையடைந்து "பிரபுவே குழந்தை, பெண், பையன், ஸ்திரி புருஷன், இவர்களுக்கு என்னவாய்விட்டதோ? தெரியவில்லையே" என்று முறையிடுங்கால் அவர்கள் கூறுவதாவது. அவள் அல்லது அவனுடைய சரீரத்தில் பெரும் பேய், பூதம், பிசாசு, மாரியம்மன், அல்லது வேறெந்த துர்தேவதை குடிகொண்டிருக்கிறது. தக்கப்பரிகாரம் ஒன்றும் செய்யாத பக்ஷத்தில் இது இவர்களை விட்டகலாது. பிராணனையே பழிவாங்கிவிடும். நீங்கள் சர்க்கரைக்கலந்த பூரியும் வெகுமதி யாதேனும் கொஞ்சம் எங்களுக்கு அளிப்பீர்களானல் எங்களுடைய மந்திரசக்தி ஜபசக்தி முதலியவைகளுடைய வலிமையைக்கொண்டு அவைகளெல்லாவற்றையும் தூரவிலகச்செய்வோம் என்று பதிலளிக்கிறார்கள். உடனே அறிவினர்களும் அவர்களுடைய தோழர்களும் "பிரபுவே எங்களுடைய யாவற்றையும் கொடுக்கத் தயாராயிருக்கிறோம், இவனை மாத்திரம் குணப்படுத்துங்கள்" என்பார்கள். அத்தூர்ப்போதகர்கள் தங்களுக்கு அனுகூலமான சமயம் ஏற்பட்டதைக்கண்டவுடன் சொல்லுவார்கள் "நல்லது இவ்வளவு சாமான்களைக் கொண்டுவாருங்கள். எங்களுக்கு வேண்டியதை சமர்ப்பியுங்கள். துஷ்டதேவதைகளுக்கு வேண்டியதைக் கொடுங்கள். கிரகதோஷங்களையும் பீடைகளையும் நிவர்த்தித்துக் கொள்ளுங்கள்." இவ்விதம் கூறிவிட்டு பீடிக்கப்பட்டவன் முன்னிலையில் பேரிகை கொட்டுமுழக்கத்துடன், பாட்டுப்பாடி ஆடுவார்கள். நேரம் போகப்போக அத்தூர்ப்போதகர்களிலொருவன் வெறிபிடித்தவன்போல் துள்ளித்துள்ளிக்குதித்து, நான் அவனுடைய—அவளுடைய—பிராணனை எடுத்து விடுவேன் என்பான். அப்பொழுது அறிவினர்கள் அவ்வயோக்கியனுடைய கால்களில் வீழ்ந்து முறையிடுவார்கள் "ஓ காப்பாற்றுங்கள்! காப்பாற்றுங்கள்!! சுவாமி உங்களுக்கு வேண்டியவைகளையளிக்கச் சித்தமாயிருக்கிறோம்." இதைக் கேட்ட நீசசாதியைச்சேர்ந்த அவன் சொல்லுவான் "நான் ஹனுமான். மிட்டாய்கள், தைலம், செந்தூரம், கூடை நிறைய ரொட்டித் துண்டுகள் செக்கிறமான வஸ்திரம் முதலானவைகள் எனக்கு வேண்டும்." என்றாவது, அல்லது "நான்தான் பைரவன், நானே தேவி, ஐந்து புட்டி சாராயம், இருபது கோழி, ஐந்து ஆடு, தின்பண்டங்கள், வஸ்திரம், முதலானவைகள் தேவை, சமூகத்தில் சமர்ப்பியுங்கள்." உடனே இப்பேதைகள் வேண்டியவைகளை அளிக்கிறோம் என்றவுடன் அவர்கள் குதித்துக் குதித்து உக்கிராவேசத்துடன் ஆடவும் ஆரம்பிப்பார்கள். அவர்களுடைய ஹனுமான், பைரவன், தேவி முதலியவைகளுக்குப் பலியளிப்பதைவிட அறிவுள்ளவர்கள்

எவரேனும அவர்களை நன்ருகக் கையினல் அல்லது செருப்பினல் அடித்து உதைத்தால் உடனே உள்ளங்கால் காணும் வண்ணம் அவர்கள் வேகமாக ஓட்டமெடுப்பார்கள். ஏனெனில் தனத்தை அபகரிக்கக் கபடர்கள் இவ்வாறு செய்யும் முறைகளேயாகும் இவைகளெல்லாம்.

## சோதிடம்

இவ்விதமே அறிவீனர்களான ஜனங்கள் ஜோசியனெருவனிடம் போய் "ஐயாவே இவனுக்கு என்ன சமாசாரம்" என்று வினவினல் அவன் சொல்லுவான் "இவனுக்குச் சூரியாதி கிரகங்கள் பிரதி கூலமாயிருக்கின்றன. பரிகாரமாக மந்திர ஜபமோ, பூஜையோ, தானமோ செய்தால் அவன் குணமடைந்துவிடுவான். அவ்விதம் செய்யாத விஷயத்தில், அவன் நீண்ட துன்பங்களுக்கு ஆளாகி கஷ்டப்பட்டுப் பிராணனை இழக்க நேர்ந்தாலும் நேரலாம்."

**விசாரிப்போன்.**—பிரியமுள்ள ஜோசியரவர்களே, நாமிருக்கும் இப்பூமியைப்போல் சூரியன் முதலான கிரகங்களும் ஜட பதார்த்தங்களே யென்பதை நீங்களறிவீர்கள். அவைகள் உஷ்ணம், பிரகாசம் முதலானவைகள் கொடுப்பதைத்தவிர வேறே யொன்றும் செய்யமுடியாதே. கோபத்தை யடையுங்கால் நமக்குத் துன்பத்தையும், சாந்தத்தை யடையுங்கால் நமக்கு இன்பத்தையும் உண்டுபண்ண அவைகளென்ன ஜீவனுள்ளவைகளா?

**ஜோசியன்**—கிரகங்களின் பலனல்லவோ சிலர் தனவந்தர்களாகவும், வேறு சிலர் தரித்திரர்களாகவும், சிலர் ஆளுவோர்களாகவும், வேறு சிலர் பிரஜைகளாகவும் ஆகிருர்கள்.

**வி—ன்.**—இல்லை, இவைகளெல்லாம் பாபபுண்ணியங்களுடைய பயன்.

**ஜோ—ன்.**—சோதிட சாத்திரம் பொய்யா என்ன?

**வி—ன்.**—இல்லை, அதினுள்ளடங்கியிருக்கும் கணித சாத்திரம், பீஜா கணிதம், வான சாத்திரம், முதலானவைகள் உண்மை. ஆனல் கிரகங்களுடைய பலாபலன்களைப்பற்றிச் சொல்லும் ஜோசியம் பொய்யானவைகளே.

**ஜோ—ன்.**—(ஜாதகம்) ஜன்மபத்திரம் பிரயோசன மற்றவையோ?

**வி—ன்.**—ஆமாம், பிரயோசனமற்றவைதான். அதை ஜன்மபத்திரமென்று அறியாமல் சோக பத்திரம் என்றறிதல்வேண்டும். ஏனெனில் குடும்பத்தில் குழந்தைப் பிறந்தவுடன் எல்லோரும் ஆனந்தத்தை யடைகிருர்கள். ஜன்மபத்திரத்தை எழுதாமலும் பெற்ருேர்களிடம் கிரகங்களுடையசெய்கைகளைத் தெறிவிக்காமலுமிருக்கிற வரையில்தான் இவ்வானந்தம் இருக்கிறது.

புரோகிதன், குழந்தைப் பிறந்ததும், ஜன்மபத்திரம் எழுதவேண்டும் என்றவுடன், பெற்ருேர்கள் சொல்லுவார்கள் "சுவாமி, ஜாதகம் நன்ருயிருக்கும்படி எழுதவேண்டும்." தனவந்தர்களாயிருந்தால் சிவப்பு, மஞ்சள், பச்சை முதலான விசித்திர கோலங்களுடனும், தரித்திரனயிருந்தால் சுத்தமாய் ஒன்று மன்னியில் ஜன்மபத்திரத்தை எழுதிக்கொண்டுக் காண்பிக்கக் குழந்தையுடைய கிருகத்திற்குப்போகிருன். அப்பொழுது பெற்ருேர்கள் ஜோசியன்

முன் உட்கார்ந்துகொண்டு பொருத்தங்களை வினவுவார்கள். அதற்கு அவன் சொல்லுவான் " உள்ளவாறே நான் படித்துக்காட்டுகிறேன். கேளுங்கள் இதனுடைய ஜனனகிரகமும் மித்திரக்கிரகமும் மிகவும் நன்றாயிருக்கிறது. இவைகள் உச்சஸ்தானத்திலிருக்கிறபடியினால் அதனுடைய பிரயோஜனம் மிகவும் உத்தமமானது. அதன் பலனாக இஜ்ஜாதகன் தனவந்தனாகவும், அபிமானிக்கத்தக்கவனாகவும் இருப்பான். எச்சபையிலும் விளங்குவான். பெருமையுள்ளவனாயிருப்பான், சரீராரோக்யத்தையடைந்து அரசனாலும் அபிமானிக்கப்படுவான்." இவ்வார்த்தைகளைப் பெற்றோர்கள் முதலான உறவினர்கள் கேட்டு "பேஷ்! கற்றுணர்ந்த ஜோசியரே!! நீங்கள் நன்குரைத்தீர்" என்பார்கள்.

ஜோசியன் இப்பிரயோஜனமற்ற—அவர்களுக்குப் பிரீதியான—வார்த்தைகளாலெல்லாம் தனக்குப்பிரயோசனம் யாதொன்றும் உண்டாகாது எனக் கண்டு இக்கிரகங்களின் பொருத்தமெல்லாம் நன்றாயிருக்கின்றது. ஆனால் சில ஆகாத கிரகங்களிருக்கின்றன. அதாவது சில கெட்ட கிரகங்களுடைய யோகத்தினால் எட்டாவது வயதில் மரணயோகம் சம்பவிக்கும் என்று சொல்வான். இதைக்கேட்டவுடன் புத்திரப்பிறப்பினாலுண்டான ஆனந்தமெல்லாம் பெற்றோர்களுக்கு இல்லாமல்போய் துக்கத்தில் முழுகி சோதிடனைப் பார்த்துச் சொல்லுவார்கள் " ஏனையா! நாங்கள் செய்யவேண்டியது என்ன? இப்பொழுது யாது செய்யவேண்டும்? " அதற்கு அவன் சொல்வான் " கிரகசாந்தி செய்தல் அவசியம் " " எவ்விதம் சாந்தி செய்வது " என்பார்கள். " தக்க மந்திரத்தைச் சபிக்கவேண்டும், தானங்கள் செய்யவேண்டும். தினந்தோறும் பிராமணர்களுக்கு அன்னமளிக்கவேண்டும். இவ்விதம் செய்வதினால் ஒரு சமயம் நவக்கிரகங்களுடையத் தீமைகளைத்திருப்பக் கூடும்." என்பான். " ஒருசமயம் " என்கிற வார்த்தையின் உபயோகம் சம்பவங்களுக்கேற்றவாறு தப்பித்துக்கொள்ளவேயாகும். அதாவது குழந்தை இறக்கும்பக்ஷத்தில் "நாம் என்ன செய்யக்கூடும்? பரமேச்வரனைவிட உயர்ந்தவர் யாவர்? நானும் என்னால் ஆனதைப் பிரயத்தினஞ்செய்தேன். தாங்களும் கஷ்டப்பட்டீகள். யார் என்ன செய்யக்கூடும்? அவன் பூர்வ ஜன்மாந்திர கர்மம் அப்படி " என்றும், குழந்தை இறக்காமல் பிழைத் திருந்துவிட்டால் " பிராமணர்களுக்கும் தேவதைகளுக்கும் மந்திரங்களுக்கும் சக்தி எம்மட்டிருக்கிறதென்பதைக்கண்டீர்களா? உங்களுடையகுழந்தையையும் காப்பாற்றிவிட்டது." என்று உற்சாகத்துடன் பெரு முழக்கஞ் செய்வான். இவ்விதச் சந்தர்ப்பங்களில் இத்துஷ்டர்கள் சொல்லும் வண்ணம் ஜபத்திலும், பாராயணத்திலும் மந்திரத்திலும் யாதொரு பிரயோசனமும் உண்டாகாமலிருக்கும் பக்ஷத்தில் தாங்கள் செலவிட்ட தொகைக்கு இரண்டு அல்லது மூன்று பங்கு அதிகமாக அத்துஷ்டர்களிடமிருந்து உதைத்து வாங்குவது உசிதமானது. சாதாரணமாய்க்குழந்தை பிழைத்திருந்தபொழுதிலும் அவர்களிடமிருந்து இத்தொகையைப் பெறவேண்டும். ஏனெனில் அவர்கள் கூறும் வண்ணமே "கர்மத்தை எவராலும் வெல்லமுடியாது. ஈசுவரனுடைய கட்டளையைமீறும் வல்லமை எவருக்குமில்லை." இதைச் சுட்டிக்காட்டி கர்மத்தினாலும்

பரமேச்வரனுடைய நியமனத்தினுலுமே பிழைத்ததே யொழிய உங்களுடைய முயற்சியினுலில்லை என வீட்டுக்குப் பெரியோர் சொல்லிக் காட்டவேண்டும்.

### வைசூரியும் மந்திரவாதமும்.

சீதளா தேவியையும், மந்திர தந்திரம் முதலான்வைகளையும் நம்புவது பெரும் ஏமாற்றமேயாகும். "நாங்கள் மந்திர ஜபம் ஏற்றின கயிற்றையோ அல்லது சிங்காரச்சிமிழையோ அணியும் பக்ஷத்தில் எங்களுடைய தெய்வம் அல்லது தேவதையுடைய சக்தியினுல், மந்திரோச்சாடன பிரபாவத்தினுல், கெடுதல்கள், இடையூறுகள், யாவும, நேராமல் விலகிவிடும்" என்று யாரேனும் சொல்லுவார்களேயானுல் இக்கேழ்வியை அவர்களிடம் கேழ்க்கவேண்டும். "நீங்கள்மரணத்திலிருந்தோ,கடவுளுடையகட்டளைகளிலிருந்தோ,ஊழ்வினைப் பயனிலிருந்தோ, ஜனங்களைத் தப்பிக்கச் செய்வீர்களா? நீங்கள் இப்பேர்ப்பட்ட தந்திரங்களனைத்தும் செய்தும் பலர் இறக்கின்ருர்களே? உங்களுடைய வீட்டிலும் மரணம் சம்பவிக்கன்றதே, இறப்பிலிருந்து நீங்கள் தப்பித்துக் கொள்வீர்களா?" இக்கேழ்விகளெல்லாம் அத்தூர்ப் போதகர், அவருடைய சகாக்கள் முதலானவர்களுடைய வாயையடைப்பது மல்லாமல், அவர்களும் இனிமேல் தங்களுடைய தந்திரங்கள் பயன் படாதென்று தெரிந்துகொண்டு ஓடிவிடுவார்கள்.

ஆகையினுல் இப்பொய் விஷயங்களை விட்டு விட்டு தர்மசிந்தனையுடனிருந்து, தர்மம் செய்பவர்களையும் தேசங்கள் எல்லாவற்றிற்கும் உபகாரம் செய்கிறவர்களையும், வஞ்சக மன்னியில் வித்தையை சகலருக்குப் பயிலுவிப்பவர்களையும், வித்வான்களையும் காப்பாற்ற வேண்டும். எச்சந்தர்ப்பத்திலும் உத்தமவித்தைகளின் ஆதரணையைக் கைவிடக்கூடாது.

### இரசாயனம்.

மரணமடையாமலிருப்பதற்கு வேண்டி அமிர்தத்தை உண்ணுவது (மாரணம்) மந்திரத்தினுல் இறக்கச் செய்வது (மோகனம்) புத்தியை ஸ்தரமில்லாமல் செய்வது(உச்சாடனம்)உபத்திரவத்தை யுண்டுபண்ணித்துன்பத்திற்காளாக்குவது (வசீகரணம்) சுவாதீனம் செய்துகொண்டு தனக்கு வேண்டியதை செய்துகொள்வது, இன்னும் இதையொத்த தீய, மாயா விநோதமெல்லாம் செய்வதாக நடித்து கபடஞ்செய்கிறவர்களைப் பெரும் அறிவீனர்களென்றே அறியவேண்டும். இவ்வித ஜாலங்களிலகப்பட்டுக் கொண்டு துக்கப்படாமலிருப்பதற்காக இந்தப் பொய் விஷயங்களைக் குறித்து சிறுவயதிலேயே மக்களுக்கு நல்லுபதேசம் செய்யவேண்டும்.

### வீர்யத்தைக் காப்பாற்றல்.

வீரியத்தைப் பாதுகாத்து காப்பாற்றுவதினுல் உண்டாகும் ஆனந்தத்தையும் அதை அழித்து நஷ்டஞ்செய்து கொள்வதினுலுண்டாகும் துக்கம் துன்பம் முதலானவைகளையும் நன்கு அவர்களுக்குப் புகட்டவேண்டும். உதாரணமாக எவனொருவன் தன் சரீர வீரியத்தை நன்ருகக் காப்பாற்றுகிருனே

அவனுக்கு ஆரோக்யம், புத்தி, பலம், பராக்கிரம் முதலானவைகள் விருத்தியடைந்து சுகம் ஏற்படுகிறதை நாம்கண்ணால் காண்கிறோமல்லவா? பிரமசாரிகளுக்கு இவைகளைக்காப்பாற்றுவதற்கு வேண்டிய உயர்ந்தவழிகள்யாதெனில்:—சிற்றின்பக்கதைகள், சிற்றின்பத்தைக் கோருவோர்களின் சேர்க்கை, சிற்றின்பவெண்ணம், ஸ்திரீகளின் தரிசனம், அவர்களுடன் தனிமையாயிருத்தல், கூடி சம்பாஷணை செய்தல், அவர்களைத்தொடல், முதலானவைகளிலிருந்து வேறுபட்டிருப்பதோடு உத்தமக்கல்வி, பயிற்ச்சியையும் அளிக்கிற வழியைத்தேடவேண்டும். தவிரவும் வீர்யத்தை நஷ்டஞ் செய்துகொள்பவன் ஆண்மைத்தனத்தை யிழந்து நற்குணங்களற்று மேக வியாதிகளையடைந்து பலஹீனனையும், தேஜஸ் அற்றவனையும், புத்திஹீனனையும், உற்சாகம், சகிப்புத்தன்மை, தைரியம், பலம், பராக்கிரமம் முதலான குணங்களிலிருந்து விலகினவனாகவும் மாறி நாசத்தை யடைகிறான்.

## பெற்றோர்களின் உபதேசம்.

சமயத்தில் நல்லபோதனையையும் பயிற்சியையும் வித்தையையும் பெற்று வீரியத்தைக் காப்பாற்றிக்கொள்ளாமல்போனால் உங்களுடைய வாழ்நாளில் இவ்வித விலைமதிக்கத்தகாத சமயம் இனி வாய்ப்பது அரிது என்று சிறுவர்களுக்கு வற்புறுத்துவதைப் பெற்றோர்கள் மறந்து விடக்கூடாது. பெற்றோர்கள் பிழைத்திருக்கும் வரையிலும், வீட்டு வேலைகளைப்பார்த்துக் கொள்ளும் வரையிலுமே, படித்து படிப்பையும், பக்குவமாக்கிக்கொள்ள முடியுமென்பதை அவர்கள் கவனத்தில் வைக்கவேண்டும். தகப்பன், தாய் இவர்களும் இன்னும் முக்கிய விஷயங்களில் அவர்களுக்குத்தக்க உபதேசம் செய்யவேண்டும். இவ்வத்தியாயவாரம்பத்திலிருக்கும் மேற்கோளில், "மாத்ரிமான்", "பித்ரிமான்" என்று உபயோகஞ்செய்திருப்பதின் காரணமிதுவேயாகும். தாய் பிறந்தது முதல் ஐந்துவயதுவரையிலும் தகப்பன் ஆறுவதுமுதல் எட்டாவதுவயது வரையிலும் அவர்களுக்குப்போதிக்கவேண்டும். ஒன்பதாவது வயதின் ஆரம்பத்தில் துவிஜர்கள் தங்களுடைய மக்களுக்கு பூணூல் போட்டுவிட்டு ஆசார்யருடைய குருகுலத்திற்கு அனுப்பிவிடவேண்டும். அதாவது பரிபூர்ணமான பயிற்சியையும் படிப்பையும் உடையவித்வான்களாலும் பண்டிதைகளாலும் நிறைந்து வித்யாதானம் செய்யப்படுகிறவிடத்தில் பிள்ளைகளையும் பெண்களையும் அனுப்பவேண்டும். சூத்திரர்களும் குருகுலத்திற்கு அனுப்பவேண்டியது. ஆனால் உபநயனம் (பூணூல் கல்யாணம்) செய்யாமலனுப்பவேண்டும்.

## ஒழுக்கம்.

கல்வி விஷயத்தில் சலுகைக்காட்டாமல் கண்டிப்பாய் கொண்டு வரப்படுகிற மக்களே பூர்ணமேதைகளாகவும் நன்னடத்தை யுடையவர்களாகவும், பயிற்சியில் தேர்ந்தவர்களாகவும் ஆகிறார்கள். இதற்கு வியாகரண பாஷ்யத்தினுடைய பிரமாணமாவது.

**सामृतैः पाणिभिर्घ्नन्ति गुरवो न विषोक्षितैः ।**

**लालनाश्रयिणो दोषास्ताडनाश्रयिणो गुणाः ॥** மகாபாஷ்யம். 8. 1. 8.

எந்தத்தாய் தகப்பன் ஆசான் தங்களுடைய மக்கள் அல்லது சீடர்களுடைய படிப்பு, பயிற்சி, முதலானவிஷயங்களில் கண்டிப்பாயிருக்கிறார்களோ அவர்கள் அம்ருதத்தையே அவர்களுக்குப் பானம்செய்யக் கொடுக்கிறவர்களாகிறார்கள். இவ்விஷயங்களில் கண்டிக்காமல் யார் இருக்கிறார்களோ அவர்கள் விஷத்தையே அளிக்கிறவர்களாகிறார்கள். ஆகையினால் அவர்களைக்கெடுத்துப் பிரயோசனமற்றவர்களாக்குகிறார்கள் என்றே சொல்லவேண்டும். குழந்தைகளும் கண்டித்தால் சந்தோஷப்பட்டும், சீராட்டினால் சந்தோஷப்படாமலும் இருக்கவேண்டும். சீராட்டலினால் மக்களும், சீடர்களும் உபயோகமற்றும், கண்டிப்பதினால் குணவான்களாயுமாகிறார்கள். துவேஷம், பகை முதலியவைகளை முன்னிட்டு தாய் தகப்பன் ஆசான் தண்டிக்கக்கூடாது. வெளிப்படையாக அவர்களை பயத்தில் வைத்திருக்கவேண்டும். அந்தரங்கமாக தயையும் பிரீதியும் உள்ளவர்களாக விருக்கவேண்டும்.

## சன்மார்க்க போதனை.

அப்படியே களவு, வியபசாரம், சோம்பல் உண்டாக்கக்கூடிய காரியங்கள், அகந்தை, இறுமாப்பு, வெறி, குடி, பொய் பேசுதல், துவேஷம், பகை, ஜீவஹிம்சை, எரிச்சல், பேராசை, முதலானவைகளிலிருந்து வேறாகவும், சத்தியசாரம், தர்மம் முதலானவைகளைப் பயிற்சிசெய்து விருத்தியாக்கக்கூடிய போதனைகளையே அளிக்கவேண்டும். ஒருதடவை கூட ஒருவன் களவு அல்லது வியபசாரம் செய்து அல்லது பொய் பேசிவிட்டால் அவனுடைய மரணபரியந்தம் ஜன சமூகத்தில் தன் மதிப்பை யிழந்துவிடுகிறான். எல்லாவற்றையும்விட சொற்பேச்சுமாறுதலும், பொய் பேசுதலும் மனிதனுடைய குணத்தை எங்ஙாளும் கெடுத்துவிடுகிறது. ஆகையினால் ஒருவனுக்கு உண்மையாய் வாக்களிக்கும் பக்ஷத்தில் அதைத் தீர்த்தே விடவேண்டும். "நான் உன்னைக் குறிப்பிட்டகாலத்திலும், இடத்திலும், சந்திப்பேன்" அல்லது "குறிப்பிட்டகாலத்தில் குறிப்பிட்டவஸ்து ஒன்றையளிப்பேன்" என்றால் அதை சொற்பிசகாமலிருக்க நடத்தியே தீரவேண்டும். இல்லாவிடில் எவரும் அவனை நம்பமாட்டார்கள். ஆகவே எல்லோரும் எக்காலமும் சத்தியபாவனையேசெய்து, சொல்தவறாமல் நடக்கவேண்டும். இறுமாப்புடன் ஒருபொழுதும் இருக்கக்கூடாது. ஏமாற்றுதல், கபடவேஷம்போடல், செய்நன்றிமறத்தல், இவைகளெல்லாம், இவைகளுக்கு இடங்கொடுக்கிற ஆத்மாவிற்கே பெரும் வருத்தத்தை யுண்டுபண்ணுகிறது. ஆத்மாவிற்கே இவ்வளவு துன்பத்தை யளித்தால் மற்றவர்களுடைய விஷயத்தில் கேழ்ப்பானேன். ஒன்றில் நம்பிக்கையிருக்க மற்றொன்றைப் பேசுவதும், அதனால் ஜனங்களைத் தன்னலத்தை முன்னிட்டு ஏமாற்றுவதுமே ஜாலம் (பொய்வேஷம்) எனப்படும். மற்றவர்கள் தன்னிடம் காட்டும் உதவிகளை அபிமானிக்காமலிருப்பதே **கிருதக்னதையாம்** (செய்ந்நன்றி மறத்தலாம்).

## பெற்றோர்களுக்குக் கீழ்ப்படிதல்.

பிள்ளைகள் எளிதில் சினங்கொள்ளலாகாது அல்லது கடுஞ்சொல்கூறலாகாது. சாந்தம் இன்சொல் இவைகளை பூஷணமாகக் கொள்ளவேண்டும்.

அளவுமின்றி பேசல்கூடாது. பெரியோர்களை வணங்கவேண்டும். அவர்கள் வரும்பொழுது எழுந்து நின்று "நமஸ்தே" என்று வந்தனஞ்செய்து உயர்ந்த ஆசனமளிக்கவேண்டும். கூட்டங்களில் தன் யோக்யத்தைக்கேற்றவாறும், மற்றவர்களால் தடுக்கமுடியாததுமான ஆசனங்களிலேயே அமரவேண்டும். ஒருவரோடும் பகைகொள்ளலாகாது. எக்காலமும் களிப்புடனிருக்கவேண்டும். குணங்களைக் கிரகித்து தோஷங்களைக்கைவிடவேண்டும். நல்லாரோடு இணங்கியிருக்கவேண்டும். தீயாரோடு இணங்காமல் விலகியிருக்கவேண்டும். தன் உடல் பொருள், ஆவி, முதலான சிறந்த பொருள்களினால் தகப்பன், தாய், ஆசான் இவர்களை வணங்கவேண்டும்.

**यान्यस्माकं सुचरितानि तानि त्वयोपास्यानि नो इतराणि ॥**

தைத்ரேயோபநிஷத் 7. 11.

"தாய் தகப்பன் ஆசான் எக்காலத்தும் தங்களுடைய மக்களுக்கும் சிடர்களுக்கும் சத்தியோபதேசத்தையே செய்யவேண்டும். அவர்களுடைய நன்மைகளைக்கிரகித்துத் தீமைகளை விலக்கும்படி போதிக்கவேண்டும்." பிள்ளைகள் எக்காலமும் உண்மையே பேசவேண்டும். கபடர்களையும் துராசாரமுள்ளவர்களையும் நம்பக்கூடாது. நன்மையான சகல விஷயங்களிலும் அவர்கள் பெற்றோர்களையும், ஆசாரியர்களையும் கீழ்ப்படிதல்வேண்டும். பெற்றோர்களால் சொல்லிக்கொடுக்கபட்டு மனப்பாடமாயிருக்கும் வேத மந்திரங்கள், அஷ்டாத்யாயி முதலான சூத்திரங்கள், நிருக்தம், நிகண்டு, முதலானவைகளுடைய உண்மையான பொருள்களை ஆசான் மக்களுக்கு நன்கு விளக்கவேண்டும். முன்னத்தியாயத்தில் விவரிக்கப்பட்ட பரமேச்வரனுடைய குணங்கள் முதலானவைகளை அவர்களுக்கு அறியச்செய்யவேண்டும்.

### சுகாதார எச்சரிக்கை.

ஆரோக்கியம், பலம், ஞானம், பயிற்சிமுதலானவைகளை அடைவதற்கு அனுகூலமாகவே, அன்னபானாதி விஷயங்களில் நடந்துக்கொள்ளவேண்டும். பசிக்குக்கொஞ்சம் அற்பமாகவே புசித்தல்வேண்டும். மாம்சாகாரம், மதுபானம் முதலானவைகளை விலக்கவேண்டும். ஆழமறியாத ஜலங்களில் இறங்கக்கூடாது. அபாயப்பிராணி (முதலை முதலானவைகளைப்போன்றது) களால் ஆபத்து ஏற்பட்டு, நீந்தத்தெரியாமல் போனால் முழுகவும் நேரிடும். **"नविज्ञाते जलाशये"** (தெரியாத ஜலாசயத்தில் ஸ்நாநம் செய்யக்கூடாது) என்று மனுவும் முறையிடுகிறார்.

**दृष्टिपूतं न्यसेत्पादं वस्त्रपूतं जलं पिबेत् ।**
**सत्यपूतां वदेद्वाचं मनःपूतं समाचरेत् ॥** மனு. 6. 46.

நடக்கும் பொழுது கீழே கவனித்துப்போகவும்; பேசும்பொழுது சத்திய நெறியினால் சுத்தஞ்செய்த வார்த்தைகளைப்பேசவும்; செய்யு முன்னால் காரியங்களை ஆராய்ந்து செய்யவும்."

## பெற்றோர்களின் கடமை.

சாணக்யருடைய நீதியில் பாவலர் ஒருவர் சொல்லுவதாவது :—

**माता शत्रुः पिता वैरी येन बालो न पाठितः ।**
**न शोभते सभामध्ये हंसमध्ये बको यथा ॥**

தங்கள் சந்ததிகளுடைய வித்தையைப் புறக்கணிக்கிறபெற்றோர்கள், அவர்களுடைய பெரும் விரோதிகள். சமூகத்தில், அன்னங்களுடைய கூட்டத்தில் நாரையைப்போலவே அவர்களும், தங்களுடைய சந்தானங்களுக்குச் சிறந்தவித்தை, கல்வி, சத்தியநெறியில் பழக்குதல், நடவடிக்கை செய்கைகளில் தேர்ந்தவர்களாகச்செய்தல், சுருங்கச்சொல்லின் பெற்றோர்கள் தங்களுடைய, உடல், பொருள் முதலான யாவற்றையும், இவைகளைப்புகட்டவேண்டி செலவழிப்பதே அவர்களுக்கேற்ற வேலையும், கீர்த்தியை யளிக்கும்படியான கார்யமும் ஆகும்.

புத்திமான்களுக்கு ஒரேவார்த்தை என்பதைக்கொண்டு மக்களுக்குக் கற்பிக்கவேண்டிய வித்தை முதலானவைகளைச் சுருங்கச்சொல்லி முடிக்கிறோம். அடுத்த அத்தியாயத்தில் கல்வி பயிற்சி முறைகளைப்பற்றி எழுதுவோம்.

இரண்டாவது அத்தியாயம்
முற்றிற்று.



## மூன்ருவது அத்தியாயம்.

### கல்வி கற்பிக்கும் முறை.

ஆழ்ந்த கல்வி, சிறந்தகுணம், கர்மம், ஸ்வபாவம், இதுபோன்ற பயிர்ச்சிகளான ஆபரணங்களினுல் மக்களை அலங்கரிப்பது, தாய், தகப்பன், ஆசான், உறவினர் முதலானவர்களுடைய முதற் கடமையாகும்.

பொன், வெள்ளி, மாணிக்கம், முத்து, பவளம் முதலிய ரத்தினங்களினுல் இழைக்கப்பட்ட நகைகளை அணிகிறதினுல் மனிதனுடைய ஆத்மா அலங்கரிக்கப்படுகிறதில்லை. வீண் பெருமையை அதிகரித்து தேகாபிமானம் சிற்றின்ப ஆசை இவைகளைப்பெருக்கி, திருடர்களுடைய பயத்திற்கு ஆளாக்கி மரணத்திற்கும் காரணமாகிறது. அநேகம் குழந்தைகள் நகைகளை யணிவதினுல் துஷ்டர்களுடைய கையிலகப்பட்டு மாண்டிருப்பதையும் பார்க்கின்ருேமல்லவா?

**विद्याविलासमनसो धृतशीलशिक्षाः**
**सत्यव्रता रहितमानमलापहाराः ।**
**संसारदुःखदलनेन सुभूषिता ये**
**धन्या नरा विहितकर्मपरोपकाराः ॥**

வித்தை ஞானம் இவைகளை அடைவதிலழுந்தியிருக்கும் மனதையுடைய ஸ்திரீகளும், புருஷர்களும்; சுசீலே, நன்னடத்தையுடன் கூடினவர்களும்; சத்தியம் பேசுதல் முதலானகற்புகளைக் கைக்கொண்டு நடக்கிறவர்களும்; கர்வம் அசுத்தம் இவைகளிலிருந்து விலகி யிருக்கிறவர்களும்; அஞ்ஞானத்தி லழுந்தினவர்களை திருத்துகிறவர்களும்; சத்யோபதேசஞ்செய்வதில் பெருமகிழ்ச்சியுள்ளவர்களும்; வித்யா தானத்தினுல் உலக துக்கத்தைநீக்கி, சுகத்தை ஜனங்களுக்குக் கொடுக்கிறவர்களும்; வேதங்கள்கூறும் தர்மங்களின் பிரகாரம் உபகாரம் செய்கிறவர்களுமே பாக்கியவான்களாகிருர்கள். பிள்ளைகளையும் பெண்களையும் எட்டுவயதானவுடன் முறையே அவரவர்களுடைய பாடசாலைகளுக்கு அனுப்புதல்வேண்டும். தீயநடத்தை யுள்ளவர்களைக்கொண்டு எக்காரணத்தினுலேயும், பயிற்சிசெய்விக்கலாகாது. சகல வித்தையுடன் கூடினவராயும், தர்மசுபாவம் உள்ளராயுமிருக்கிற ஆசான்களே படிப்பிப்பதற்கும், பயிற்சியளிப்பதற்கும் தகுதியுள்ளவர்கள். துவிஜர்கள் தங்களுடைய இல்லத்திலேயே ஆண்களுக்கும் பெண்களுக்கும் எக்ஞோபவீதம் (பூணுல்) செய்து, முறையே அவரவர்களுக்கான பாடசாலைகளுக்கு அனுப்புதல்வேண்டும்.

கல்விச்சாலைகள் தனியான விடங்களிலிருக்கவேண்டும். பிள்ளைகளுடையக் கல்விச்சாலையானது, பெண்களுடையக் கல்விச்சாலையிலிருந்து குறைந்தது மூன்றுமைல் தூரத்திலிருத்தல்வேண்டும். உபாத்தியாயர்கள், வேலைக்காரர்கள் முதலானவர்கள் அந்தந்த இனத்தைச் சேர்ந்தவர்களாகவே இரு பாடசாலைகளிலுமிருக்கவேண்டும். வேறு இனத்தைச் சேர்ந்த ஐந்து வயதுள்ள

வன்கூட கல்விச்சாலையில் நுழையக்கூடாது. பிரமசாரிகளாயிருக்கும் வரையில், வேறு இனத்தைச்சேர்ந்தவர்களுடைய ஆசையை யுண்டுபண்ணு கிற பின்வரும் எட்டுவிஷயங்களிலிருந்தும் விலகியிருக்கவேண்டும். (1) காமக் கண்களுடன் நோக்குதல் (2) ஆலிங்கனம் செய்தல் (3) தேகசம்பந்தம் செய்தல் (4) இரகசிய சம்பாஷணை செய்தல் (5) கூடிக்களித்தல் (6) கூடி இணங்குதல் (7) விஷய விவகாரங்களை விவரித்தல்—படித்தல்—பேசுதல் (8) காமவிகாரங்களில் அழுந்துதல்.

### குருகுல வாசத்தின் தத்துவம்.

சிறந்த வித்தைப்பயிற்சி, சுசீலம், சுபாவம், இவைகளுடன் கூடினவர்களா யிருந்துகொண்டு, சரீரத்தையும் ஆத்மாவையும் பலமுள்ளதாகச்செய்து பிரதி தினம் ஆனந்தத்தை விருத்திப்பண்ணிக்கொள்ளும் பொருட்டு பிரமசாரிகளை, ஆசான், இவ்வெட்டுவிதமான தீய நடத்தைகளிலிருந்தும் விலக்கிக் காப்பாற்ற வேண்டும். கிராமம் அல்லது நகரம் இவைகளுக்கு ஒரு யோசனை அல்லது நான்குமைல் தூரத்திற்குக்குறையாமல் கல்விச்சாலைகளிருத்தல் வேண்டும். ராஜனுடைய பிள்ளைகளாயிருந்தாலும் சரி, அல்லது ஏழைகளினுடைய பிள்ளைகளாயிருந்தாலும் சரி, நடை, உடை, பாவனை, ஆகாரம் முதலானவை களில் எல்லோரையும் யாதொரு வித்தியாசமுமின்றி, சமமாய் நடத்தவேண் டும். பெற்ருேர்களைக்காணவோ அல்லது பேசவோ கூடாது. அவர்களும் மக்களுடன் பேசவோ அல்லது காணவோ கூடாது. கடிதப்போக்குவரவும் கூடாது. இம்மாதிரி உலகக்கவலை துன்பம் முதலியவைகளிலிருந்து வேருகி, தன்னுடைய பாடம் முதலானவைகளை முழுக்கவலையுடன் ஓதல்வேண்டும். இளைப்பாறுதல் முதலான அவர்களுடைய நடைகளில், உபாத்தியாயர்கள் அவர்களுடன் கூடிச்சென்று துர்க்குணம், அசட்டை, சோம்பல், முதலானவை களுக்கு ஆளாகாமல் கவனித்துக் கொள்ளவேண்டும்.

### கட்டாயப்படிப்பு.

**कन्यानां सम्प्रदानं च कुमाराणां च रक्षणम् ॥** மனு 7· 152·

எட்டுவயதிற்குப்பிறகு மக்களை (ஆண், பெண், இருவர்களையும்) வீட்டில் வைக் காமலிருக்கச் சமூகமும், அரசாங்கமும் கட்டாயப்படுத்தவேண்டும். அப்படி கல்விச்சாலைக்கு அனுப்பாதவர்களைத் தண்டனைக்குள்ளாக்கவேண்டும்.

### காயத்ரி மந்திரம்.

வீட்டிலும் பின்னர் கல்விச்சாலையிருக்கும் ஆசாரியனிடத்திலும் மக்க ளுக்குப்பூணூல் அணியச்செய்யவேண்டும். பெற்ருேர்களும், உபாத்தியாயர்க ளும் தங்களுடைய மக்களுக்கு காயத்ரியை விளக்கி உபதேசம்செய்யவேண் டும். இதுவே மந்திரமாகும் :—

**ओं भूर्भुवः स्वः । तत्सवितुर्वरेण्यं भर्गो देवस्य धीमहि । धियो यो नः प्रचोदयात् ॥** யஜுர்வேதம் 36· மண் 3·

இதன் முதலிலிருக்கும் "ஓம்" என்பதற்கு முதல் அத்தியாயத்தில் பொருள் கூறியிருக்கிறது. மிகுதியாயிருக்கும் மூன்றுக்கும் பொருள் இப்பொழுது விரிவாய் எழுதுவோம். **भूरितिवै प्राणः यः प्राणयति चराऽचरं जगत् स भू स्वयम्भूरीश्वरः** சகல சராசர ஜகத்தினுடைய ஜீவராசிகளுக்கு ஆதாரமாயும், உயிரைவிட மேலானவராயும், சுயம்புவாயுமிருக்கிறபடியினால் "பூ:" பரமேச்வரனுடைய திருநாமமாகிறது. **भुवरित्यपानः यः सर्वं दुःखमपानयति सोऽपानः** அவர் எல்லாத்துன்பம், துக்கம், இவைகளிலிருந்து நீங்கினவராயும், அவருடைய சேர்க்கையினாலேயே ஜீவன், சகலதுக்கம், துன்பம் இவைகளிலிருந்து விடுதலையடைகிறபடியினாலுமே பரமேச்வரனுக்கு "புவ" என்றும் ஒருதிருநாமம். **स्वरिति व्यानः यो विविधं जगत् व्यानयति व्याप्नोति स व्यानः** பலவிதமான உலகமுழுவதிலும் பரவி எல்லாவற்றையும் தாங்குகிறவராகையினால் பரமேச்வரனுக்கே "சுவ" என்னும் திருநாமம். இம் மூன்று வசனங்களும் ஆரணியக தைத்ரேய உபநிஷத்திலிருப்பதைக் காணலாம்.

ஜபம்.

"சவிது:" சகல உலகங்களையும் படைத்து சகல ஐஸ்வர்யங்களையும் அளிக்கிறவராயும், "தேவஸ்ய" இன்பங்களனைத்தையும் அளித்து யாவராலும் அடைவதற்கு இஷ்டப்படுகிறவராயுமிருக்கிற அப்பரமேச்வரன் "வரேணியம்" ஏற்றுக்கொள்ளுவதற்கும் பூஜிப்பதற்கும், அதிக உத்தமமாயுமுள்ளவர்.

"பர்க" சுத்த சுரூபராயும், மற்றவர்களைச் சுத்தஞ்செய்கிறவராயும், எல்லாம் அறிந்தவராயுமிருக்கிற, "தத்" அப்பரமாத்மாவுடைய ஸ்வரூபத்தை நாங்கள், "தீமஹி:" "த்ரோமஹி:" துதிக்கிறோம். எதற்காகவெனின்:—

"ய:" (ஜகதீச்வர:) பரமாத்மாவானவர் "நஹ" எங்களுக்கு "தியஹ" புத்தியை "பிரசோதயாத்" புலனுக்கட்டும். தீயச்செயல்களிலிருந்து விலக்கி நற்செயல்களில் செல்லச் செய்யட்டும் என்பதாம்.

**हे परमेश्वर! हे सच्चिदानन्दस्वरूप! हे नित्यशुद्धबुद्धमुक्तस्वभाव! हे अज निरञ्जन निर्विकार! हे सर्वान्तर्यामिन्! हे सर्वाधार जगत्पते! सकलजगदुत्पादक! हे अनादे! विश्वम्भर! सर्वव्यापिन्! हे करुणामृतवरिधे! सवितुर्देवस्य तव यदों भूर्भुवः स्वर्वरेण्यं भर्गोऽस्ति तद्वयं धीमहि दधीमहि धरेमहि ध्यायेम वा कस्मै प्रयोजनायेत्यत्राह। हे भगवन्! यः सविता देवः परमेश्वरो भवानस्माकं धियः प्रचोदयात् स एवास्माकं पूज्य उपासनीय इष्टदेवो भवतु नातोऽन्यं भवत्तुल्यं भवतोऽधिकं च कञ्चित् मन्यामहे॥**

சச்சிதானந்த சுரூபியாயும், நித்திய சுத்தராயும், ஞானவடிவாயும், முக்தி வடிவாயும், கருணைக்கடலாயும், எந்நாளும் விளங்குகிறவராயும், அழிவில்லாதவராயும், பிறப்பு இறப்பு முதலானவைகளிலிருந்து நீங்கினவராயும், ஆகாரமில்லாதவராயும், தக்க நியாயத்தை யளிப்பவராயும், யாவையும் அறிகிறவராயும்,

எல்லாவற்றையும் ஆக்குகிறவராயும், எக்காலமும் ஜகங்களைக்காப்பாற்றி அளிக்கிறவராயும், சகல ஐச்வர்யமுள்ளவராயும், சுத்த சேதன ஸ்வரூபராயும், எங்கும் பரவியுமிருக்கும், ஏ! பிரபுவே!! கருணைக்கடலே! சிருஷ்டியின் உயிர் நீயே, ஞானவுருவம் நீயே, உன்னை நினைக்கும்பொழுதே எங்களுடைய துன்பங்களும் துக்கங்களும் தூரவிலகுகின்றன; ஜகத்தையளித்து நீ! காப்பாற்றுகிறவன், சகலருடையபிதா!பரமாத்மா. ஆதலால் உம்மையேநாம்தியானம்செய்யவேண்டும்.'' அப்பரமேச்வரன் நம்முடைய ஆத்மாவிலும், புத்தியிலும் அந்தர்யாமியாயிருந்துகொண்டு நம்மை துராசாரம், அதர்மம், முதலியவழிகளிலிருந்து நீக்கி, சிறந்த ஒழுக்கம், நெறிவழி முதலானவைகளில் செல்லும்படி துணைபுரியட்டும். அவரைத்தவிர வேறு யாதொரு பொருளையும் நாம் துதிக்காமலிருப்போமாக· ஏனெனில் அவருக்குவமையுள்ளவர் ஒருவருமில்லை. தனித்தலைவர் அவரே. அவரே நம்முடைய பிதா, அரசன், நீதிபதி, சகல இன்பங்களையுமளிப்பவர் அவரே. மேற்சொன்ன மந்திரத்தைக் கருத்துடன் கற்றுணர்ந்த பிறகு சந்தியோபாசனை, அதற்கேற்ற ஸ்நாநம், ஆசமனம், பிராணாயாமம், முதலானவைகளுக்கு வேண்டியதை கற்பிக்கவேண்டும்.

### சந்தியோ பாசனைக்குமுந்தி வேண்டியவைகள்.

சரீர சுத்தஞ்செய்து ஆரோக்யத்தை உண்டு பண்ணுவது **ஸ்நாநம்.**

**अद्भिर्गात्राणि शुध्यन्ति, मनः सत्येन शुध्यति ।**
**विद्यातपोभ्यां भूतात्मा, बुद्धिर्ज्ञानेन शुध्यति ॥** மனு 5· 109

தண்ணீரினல் சரீரத்தினுடைய வெளி அவயவங்களும் சத்தியாசாரத்தினல் மனதும் சுத்தமாகின்றது.

**வித்தை**—அதாவது சகல கஷ்டங்களிலும் தர்மத்தைக் கைப்பற்றுவதினல் ஜீவாத்மா ஞானத்தை யடைகிறது.

**புத்தி**—அதாவது, அணுவிலிருந்து பரமேச்வரன் வரையிலுள்ள பொருள்களுடைய விளக்கத்தினல் புத்தியானது பரிசுத்தமாகிறது. ஆகவே ஒவ்வொருவரும் முதல் ஆகாரத்தை உண்பதற்கு முந்தி ஸ்நாநம் செய்யவேண்டும்.

### பிராணயாமம்.

**योगाङ्गानुष्ठानादशुद्धिक्षये ज्ञानदीप्तिराविवेकख्यातेः ॥** யோக 2. 28.

பிராணயாமப் பழக்கமானது அசுத்தங்கள் யாவற்றையும் எரித்து ஆத்மாவையும் மேம்படுத்துகிறது. ஞானம் ஒளி பெறுகின்றது. முக்தியையும் ஞானவொளியையும் பெருக்கிக்கொண்டே போகிறது.

**दह्यन्ते ध्मायमानानां धातूनां हि यथा मलाः ।**
**तथेन्द्रियाणां दह्यन्ते दोषाः प्राणस्य निग्रहात् ॥** மனு 6. 71.

தங்கம் முதலான லோகங்கள் அக்கினியின்முன் மாசற்று சுத்தமடைவது போல் பிராணயாமத்தினல், மனம் முதலான இந்திரியங்களுடைய குற்றங்கள் குறைந்து நிர்மலமாகின்றன.

## பிராணுயாம விதிகள்.

**प्रच्छर्दनविधारणाभ्यां वा प्राणस्य ॥** யோக I. 34.

வேகமிகுந்த வாந்தியானது அடிவயற்றிலிருந்து அன்னத்தையும், நீரையும் வெளிக்கொண்டு வருவதுபோல் மூச்சுவிடும்போது வாயுவை வெளியில்விட்டு அவை மறுபடியும் உள்ளே வராமல் சக்திக்கேற்றவாறு தடுக்கவேண்டும். வெளிப்படுத்துங்காலத்து அபானத்துவாரத்தை மேலே இழுக்கவேண்டும். அதுவரையில் மூச்சுநிற்கிறது. இவ்விதம் மூச்சை வெகுநேரம் நிறுத்தலாம். கூடுமானவரையில் நிறுத்திவிட்டு பிறகு மெதுவாகக்காற்றை உள்ளே இழுக்க வேண்டும். மறுபடியும் முடியும்வரையில் செய்யவேண்டும். மனதில் "ஓம்" நாமத்தை உச்சரித்துக்கொண்டே யிருக்கவேண்டும். இப்படிச்செய்வதினல் ஆத்மாவினுடையவும் மனதினுடையவும் சுத்தம்பெருகி அவைகளுக்கு ஒரு நிலையும் ஏற்படுகிறது.

**நாலு நிலைமைகள்:—**

**बाह्यविषय। आभ्यन्तर। स्तम्भवृत्ति। बाह्यान्तराक्षेपी ॥**

(1) வெகுநேரம் வெளியில் மூச்சைத்தடுத்துவைப்பது—**பாஹ்யவிஷயம்.** (2) உள்ளே மூச்சையடக்கிவைப்பது—**அப்பியாந்திரம்.** (3) மூச்சுவிட்டுக்கொண்டிருக்கும்பொழுது எவ்வளவு நேரம் கட்டமுடியுமோ அவ்வளவு நேரம் கட்டுவது—**ஸ்தம்ப விருத்தி.** (4) சாதாரணமாய் மூச்சுவிடும் வழியை மாற்றித்திருப்பிவிடுதல். உள்ளே மூச்சையிழுத்துக்கொண்டிருக்குங்காலே வெளியாக்குதலைக் கைக்கொள்ளுதல்—வெளியே விட்டுக்கொண்டிருக்கும்பொழுதே உள்ளே யிழுத்துக்கொள்ளல். இவ்விதம் மூச்சுவிடுதலை மாற்றுவதினல் உள்ளே யிழுப்பதும், வெளியில் விடுவதும் முறையே நின்றுவிடுகின்றன. அப்படியே மூச்சுவிடும்வகையும், இவ்விதம் செய்வதினல் பிராணன் தன் சொந்த வசமடைந்து மனமும் இந்திரியங்களும் தன்னுடைய சுவாதீனத்தை யடைகின்றன.

சரீரபலமும், பராக்கிரமும் விருத்தியாவதினல், அதிநுட்பமானவும் சூக்ஷ்மமுமான விஷயங்களை எளிதில் அறிவதற்கு வேண்டிய சக்தி, புத்திக்கு உண்டாகிறது. இதினல் வீரியம் சரீரத்தில் விருத்தியடைந்து அதன் பலனுக மனிதனுக்குப் பலம், பராக்கிரமம், ஐம்புலன்களின் அடக்கம் முதலானவைகள் உண்டாகின்றன. அவ்விதம் உண்டாவதினல் சிறிது காலத்திலேயே சகல சாத்திரங்களையும் அறிந்து மேன்மையடைகிறுன். ஸ்திரீகளும் இங்ஙனமே யோகாப்பியாசம் செய்தல்வேண்டும்.

**ஒழுக்க முறைகள்:—**உண்ணல், உடுக்கல், உட்காரல், எழுந்திருத்தல், சம்பாஷணை செய்தல், விலகுதல், பெரியோர், சிறியோர்களிடம் தக்கவாறு நடந்துகொள்ளல், முதலான எல்லா உபதேசங்களையும் மக்களுக்குக் கற்பித்தல் வேண்டும்.

(1) **பிரம்ம யக்ஞம்:**—சந்தியோபாசனையுமிதுவே.

**ஆசமனம்:**—அதிகமும், குறைவில்லாததும், நெஞ்சிலிருந்து ஹிருதயம் வரையில் நனைக்கிறதற்கு வேண்டிய அளவு ஜலத்தைக், கைநடுவில் வைத்துக் கொண்டு உட்கொள்ளுவதே. அப்படி உரிஞ்சுவதினால் கண்டத்திலிருக்கும் கபம் நீங்கி, பித்தமும் சற்று குறையும்.

**மார்சனம்:**—சோம்பலைக்குலைப்பதற்காக நடுவிரல் நான்காவது விரல் இவைகளால் ஜலத்தைக்கொண்டு கண்கள் முதலிய அங்கங்களில் தெளிக்க வேண்டும். சோம்பலும் இல்லாமல், ஜலமும் கிடைக்காமல்போனால் இது அவசியமில்லை.

பிராணயாமத்தைக் கற்பிக்கவேண்டும். **மானசபரீட்சணம்** (அதாவது சிருஷ்டியின் சமுதாய விஷயங்கள்) **உபஸ்தானம்** (கடவுளுக்கு மனதினால் அர்ப்பணம் செய்வது) **உபாசனை** (அவருடைய துதி, பிரார்த்தனை தியானம்) இவைகள் யாவற்றையும் கற்பிக்கவேண்டும். **அகமர்ஷணம்** அதாவது பாபஞ் செய்யும் புத்தி எக்காலமும் இருக்கக்கூடாது. இச்சந்தியோபாசனையைத் தனிப்பிரதேசத்தில் ஒரே எண்ணத்துடன் செய்யவேண்டும். மனு சொல்லுவதாவது:

**अपां समीपे नियतो नैत्यिकं विधिमास्थितः ।**
**सावित्रीमप्यधीयीत गत्वारण्यं समाहितः ॥** மனு 2. 104.

தனித்த விடத்தில், நிதானமாய் ஜலத்தின் சமீபத்தில் நின்றுகொண்டு நித்தியகர்மம் செய்து காயத்ரியை அர்த்தஞானத்துடன் ஜபிக்கவேண்டும். அதற்கேற்றவாறே நடந்துக் கொள்ளவேண்டும். முதலிலிருந்தே ஆரம்பம் செய்தல்வேண்டும்.

(2) **தேவ யக்ஞம் (அக்னி ஹோத்திரம்.)**

அக்னி ஹோத்திரம், மேதைகளுடைய சங்கம், முதலியவைகளே தேவ யக்ஞமெனப்படும். சந்தியோபாசனை, அக்னி ஹோத்திரம் இவைகளைக் காலை, மாலை இருவேளைகளிலும் செய்யவேண்டும். ஏனெனில் பகலும் இரவும் சேருகிற சந்திக்கே "சந்தியா" (அந்திப்பொழுது) எனப்படும். குறைந்தது ஒரு தடவையாவது பிரதிதினமும தியானஞ்செய்தல்வேண்டும். பரமாத்மாவைத் தியானிப்பதில் யோகபுருஷர்கள். எப்படி சமாதியிலிருந்து தியானம் செய்கிறார்களோ அப்படியே சந்தியோபாசனை முதலானவைகளைச்செய்ய வேண்டும்.

**அக்னிஹோத்திரம்:**—சூரிய உதயமான பின்னர் சிறிதுநேரம், சூரியாஸ்தமனத்திற்கு முன்னர் சிறிதுநேரமும் அக்னிஹோத்திரத்திற்குறிய காலங்களாம். உபயோகத்திற்குத்தேவையான சாமான்களாவன:—

(1) **வேதி**—ஒரு பாத்திரம். (மண்ணினால் அல்லது உலோகத்தினால் செய்யப்பட்டது) குண்டத்தின் மேற்புரத்தின் உயரம், நீளம், அகலம், 12 அல்லது 16 அங்குலம் சதுரமுள்ளதாகவும் அடிப்புரம் 3 அல்லது 4 அங்குல

சதுரமுள்ளதாகவு மிருக்கவேண்டும். குண்டத்தின்வாய் அடியைவிட நான்கு மடங்கதிகமாய் இருக்கவேண்டும். (2) சந்தனம், பலா, மா முதலான மரத் துண்டுகளைக் குண்டத்திற்கு ஏற்றவாறு, சீவி அடியில்வைக்கவேண்டும். நடுவில் அக்னியை வைத்து சுற்றி ஸமித்துக்களைச்சரியாக வைக்கவேண்டும். (3) ஒரு அகப்பை. (4) ஒரு குடம். (5) நெய் வைக்கக் கிண்ணம். (6) கரண்டி (வெள்ளி அல்லது தங்கம் அல்லது மரத்தினால் செய்திருக்கவேண்டும்). வேதி யின் கீழே சரியாக சந்தனம் முதலான மரத்துண்டுகளையும் சீவல்களையும் வைத்து நடுவில் தீமூட்டி சுற்றி ஸமித்து முதலானவைகளை அடுக்கவேண்டும். அகப்பை, குடம், முதலானவைகளிலிருக்கும் ஜலத்தைக்கொண்டு கைகளைக் கழுவிக்கொண்டு பின்னர் கிண்ணம், அகப்பைகளிலுள்ள நெய்யை நன்றாய் பரி சோதித்து அக்னியில் கீழ்க்கண்ட மந்திரத்துடன் ஹோமஞ் செய்யவேண்டும்.

ओं भूरग्नये प्राणाय स्वाहा । भुववायवेऽपानाय स्वाहा । स्वरादित्याय व्यानाय स्वाहा । भूर्भुवः स्वरग्निवाय्वादित्येभ्यः प्राणापानव्यानेभ्यः स्वाहा ॥

யஜுர்வேதம்.

ஒவ்வொருதடவையும் மந்திரம் சொல்லும்பொழுது ஒரு கரண்டி நெய் யை வார்க்கவேண்டும். ஆகுதியதிகம் கொடுக்கநேரிடும் பக்ஷத்தில் கீழ்க்கண்ட மந்திரத்தினாலும், காயத்ரியினாலும் அதை அளிக்கவேண்டும்.

विश्वानि देव सवितर्दुरितानि परा सुव । यद्भद्रं तन्न आसुव ॥

யஜுர் 30. 3.

"ஓம்" "பூஹ:" "பிராண" முதலானவைகளெல்லாம் பரமேச்வரனுடைய திருநாமங்களே. அவைகளை விளக்கியாய்விட்டது. "ஸ்வாஹா:" என்பதின் பொருள், மனதிலுள்ளதையே பேசவேண்டுமென்பதும் அதற்கு விரோதமான தைக்கூடாதென்பதுமேயாம். சகல பிராணிகளுடைய சுகத்திற்காக ஜகத்தி லிருக்கும் பொருள்களை யெல்லாம் பரமேச்வரன் செய்திருப்பதுபோல், மனி தனும் எல்லாவற்றிற்கும் பரோபகாரம் செய்யவேண்டும்.

வினா.—ஹோமம் செய்வதினால் என்ன உபகாரம்?

விடை.—துர்கந்த வாயுவினாலும் கெட்ட ஜலத்தினாலும் மனிதனுக்குப் பிணியும், பிணியினால் பிராணிகளுக்குத்துக்கமும், சுகந்தவாயுவினாலும் பரி சுத்த ஜலத்தினாலும் ஆரோக்கியமுண்டாகி பிணிகள் குறைந்து, சுகம் பெறு குகிறதென்பது யாவரும் அறிந்த விஷயம்.

வினா.—சந்தனம் முதலானவைகளை நெருப்பில் எரித்து வீணாக்குவதை விட எவருக்காவது பூசி, தேய்த்தாலும் நெய் முதலானவைகளை யாருக்காவது கொடுத்து உண்ணச்செய்தாலும், பெருத்த உபகாரமாகுமே? அப்படி யிருக்க இங்ஙனம் வீண்செய்வது புத்திமான்களுக்கு அழகோ?

விடை.—உனக்குப் பொருளாராய்ச்சி சாஸ்திரம் தெரிந்திருந்தால் இங் ஙனம் சொல்லமாட்டாய். ஏனென்றால் எத்திரவியமும் அபாவத்தை அடைந் து வீணாகிறதில்லை. ஹோமம் செய்வதினால் தூரத்திலிருக்கிற மனிதனும்

சுகந்த வாசனையைக் கிரகிப்பதைப் பார்க்கிறாய். அக்னியில், ஆகுதி செய்யும் பதார்த்தங்கள் சூட்சுமமாய் வாயுவுடன்கூடிக் கலந்து தூரத்திலிருக்கும் எல்லா இடங்களிலும் பரவி துர்க்கந்தத்தை நிவர்த்திசெய்வது நன்றாய்த் தெரிகிறது.

**வினா.**—அப்படியிருக்கிற விஷயத்தில், கேசர் பவுடர், கஸ்தூரி, சுகந்த புஷ்பங்கள், அத்தர் முதலியவைகளை வீட்டில்வைத்து வாயுவை எல்லாம் சுகந்தமாகச்செய்து சுகத்தையும் ஆனந்தத்தையும் ஏன் அனுபவிக்கக்கூடாது?

**விடை.**—அச்சுகந்த வஸ்துக்களுக்கு வீட்டிலிருக்கும் கெட்டவாயுவை நீக்கி வெளியிலிருக்கும் பரிசுத்தவாயுவை பிரவேசிக்கச்செய்யவேண்டிய சக்தியில்லை. ஏனென்றால் பிரிக்கச்செய்யும் சக்தி அதற்குக்கிடையாது. துர்கந்தத்துடன்கூடின பதார்த்தங்களைச் சின்னபின்னம் செய்து மெல்லியதாக்கி வாயுவிலிருக்கும் அசுத்தங்களை வெளியில் தள்ளி, பரிசுத்தவாயுவைப் பிரவேசிக்கச்செய்யும் சக்தி அக்னிக்குத் தான் உண்டு.

**வினா.**—ஹோமம் செய்யும்பொழுது மந்திரம் சொல்வதின் பயன் என்ன?

**விடை.**—ஹோமம் செய்வதினால் உண்டாகும் இலாபங்கள் மந்திரத்திலிருக்கும் வியாக்கியானத்திலிருந்து வெளியாகிறது. அடிக்கடி சொல்வதினால் அம்மந்திரங்கள் மனதில் பதிந்துவிடுகிறது. அப்படி மனப்பாடமாகிறபடியால் வேதங்களுடைய படிப்பும் ஆவதுமன்னியில் அவைகளும் காப்பாற்றப் படுகின்றன.

**வினா.**—ஹோமம் செய்யாவிட்டால் பாபம் உண்டோ ?

**விடை.**—ஆமாம், மனிதர்களுடைய சரீரத்திலிருந்து உண்டாகும் எல்லா துர்கந்தம், வாயுவையும் ஜலத்தையும் கெடுத்து பிணிகளின் உற்பத்திக்குக் காரணமாய்ப்பிராணிகள் எவ்லாவற்றிற்கும் துக்கத்தையுண்டாக்குகிறது. இவ்வளவு பாபங்களும் மனிதர்களால் செய்யப்படுகிறது. இந்தப் பாபத்தை நிவாரணம் செய்வதற்காகவும், அதற்கு வேண்டிய அவ்வளவு சுகத்தை வாயுவிலும் ஜலத்திலும் பரவச்செய்யவும், ஹோமம் செய்தல்வேண்டும். அன்னபானாதிகளை ஒரு மனிதனுக்குக்கொடுத்து அருந்தச்செய்வதினால் அவ்வொருவனுக்கே சுகமும் ஆனந்தமும் உண்டாகின்றன. ஆனால், ஒரு மனிதனுக்கு அளிக்கும் நெய்யும் சுகந்தவாசனைகளையும் அக்கினியில் ஆகுதி செய்யும் பட்சத்தில், இலட்சக்கணக்கான ஜனங்கள் பயன் அடைகிறார்கள். ஆனால் மனிதர்கள் நெய் முதலிய புஷ்டி தரக்கூடிய பதார்த்தங்களை உண்ணாதிருக்கும் பட்சத்தில் தேகத்தினுடைய பலம் விருத்தியாகின்றதில்லை. ஆகையினால் புஷ்டிக்கொடுக்கக்கூடிய பதார்த்தங்களை உண்ணவும் குடிக்கவும் வேண்டும். ஆனால், ஹோமம் செய்வதினால் அதிக பயன் உண்டாகின்றது. எனவே, ஹோமம் செய்தல் அவசியமாகிறது.

**வினா.**—ஒவ்வொரு மனிதனும் எவ்வளவு ஆகுதி கொடுக்கவேண்டும்? ஒவ்வொரு ஆகுதியின் பரிமாணம் எவ்வளவாயிருக்கவேண்டும்?

**விடை.**—ஒவ்வொரு மனிதனும் பதினாறு தடவை ஆகுதி செய்யவேண்டும். நெய் முதலியவைகள் ஒவ்வொரு ஆகுதியிலும் 6 **மாசை** (அல்லது ரூபாயின் பன்னிரண்டில் ஒரு பங்கு) இடையாவது குறையாமலிருக்கவேண்டும். இதற்கு அதிகமாய் ஆகுதி செய்தால் அவ்வளவும் நல்லதே. இதனாலேயே ஆரிய வர்த்தசிரோமணிகள், ரிஷிகள், மகரிஷிகள், இராஜாக்கள் இராஜராஜாக்கள் முதலானவர்கள் அதிக ஹோமம் செய்துகொண்டும், செய்யச்சொல்லியும் இருந்தார்கள். ஹோமம் எக்காலம்வரையில் செய்யப்பட்டுவந்ததோ அக்காலம் வரையில் நோயில்லாமல் சுகம் இருந்துவந்தது. இப்பொழுதும் அவ்வாறேசெய்துவந்தால் முன்போலவே சுகமும்சௌக்கியமும்உண்டாகும்.

பிரமசாரிகள் செய்ய வேண்டிய இரண்டு யக்ஞங்களாவன :—

(1) வித்தைக்கற்றுக்கொள்ளுதல், கற்பித்தல், சந்தியோபாசனை, ஈச்வர ஸ்துதி, பிரார்த்தனை, உபாசனை முதலானவைகளைச் செய்வது "பிரம்மயக்ஞம்" (2) அக்னி ஹோத்திரத்திலிருந்து அசுவமேத பரியந்தம் உள்ளயக்ஞமும், வித்வான்களுடையபணிவிடையும்சங்கமுமே "தேவயக்ஞம்" பிரமசாரிகள் மாத்திரம் **பிரம்மயக்ஞமும்** அக்னிஹோத்திரமும் செய்ய வேண்டும்.

**ब्राह्मणस्त्रयाणां वर्णानामुपनयनं कर्त्तुमर्हति । राजन्यो द्वयस्य वैश्यो वैश्यस्यैवेति । शूद्रमपि कुलगुणसम्पन्नं मन्त्रवर्जमनुपनीतध्यापयेदित्येके ॥**

இது **சுசுருதத்தின்** சூத்திரஸ்தானமாகிற இரண்டாவது அத்தியாயத்தின் வசனம். பிராமணன், பிரம்ம க்ஷத்திரிய வைசியர்களுக்கும், க்ஷத்திரியன், க்ஷத்திரிய வைசியர்களுக்கும், வைசியன், வைசியனுக்கும் எக்ஞோபவீதம் போட்டுவித்து படிப்பிக்கலாம். வேலைக்காரவகுப்பில் சேர்ந்திருந்தும் நற்குலத்துடன் கூடினவராயும் நல்லொழுக்கத்துடன் கூடினவராயுமிருந்தால் மந்திர சங்கிதையைவிட்டு எல்லா சாஸ்திரங்களையும் படிப்பிக்கவேண்டும். சூத்திரம்படிக்கலாம்; ஆனால், உபநயனம் செய்யக்கூடாது என்பது அநேக ஆசாரியருடைய அபிப்பிராயம்.

### பிரமசரியம்.

ஐந்தாவது வயதிலிருந்து எட்டாவது வயது வரையில் பிள்ளைகளையும், பெண்களையும் அவரவர்கள் பாடசாலைகளுக்கு முறையே அனுப்பவேண்டும். அடியில்கண்ட கட்டளைகளின் பிரகாரம் போதனைமுறை ஆரம்பிக்கவேண்டும்.

**षट्त्रिंशदाब्दिकं चर्य्यं गुरौ त्रैवेदिकं व्रतम् ।**
**तदर्धिकं पादिकं वा ग्रहणान्तिकमेव वा ॥** மனு 3. 2.

எட்டாவது வயதிலிருந்து முப்பத்தாறாவது வயதுவரையில் பிரமசரிய விரதத்தைக் கைப்பற்றவேண்டும். அதாவது, ஒவ்வொரு வேதத்தையும் பன்னிரண்டு வருஷகால பரியந்தம் சாங்கோபாங்கமாய்ப் படித்து மூன்று வேதங்களையும் முப்பதி ஆறுவருஷத்தில் படித்து முடித்தல் வேண்டும். இந்த முப்பத்தாறு வருஷத்துடன் பாலகனுயிருந்த எட்டுவயதையும் சேர்த்தால் நாற்பத்து

நான்கு வருஷமாகிறது. அதுவரையிலும் பிரமசரியத்தைக் காப்பாற்ற வேண்டும். அல்லது பதினெட்டு வருஷகாலம் குருகுலவாசத்துடன் முன் சொல்லியிருக்கும் எட்டு வருஷமும் சேர்ந்து இருபத்தாறு வருஷகாலமாவது அல்லது ஒன்பது வருஷகாலமாவது அல்லது வித்தையை முழுவதும் கிரகிக்கும் வரையிலாவது பிரமசரியத்தைக் காப்பாற்றவேண்டும்.

## மூன்றுவித பிரமசரியம்.

கீழ்க்காணும் ஆறு மேற்கோள்களும் சாந்தோக்கிய உபநிஷத்திலிருந்து

**पुरुषो वाव यज्ञस्तस्य यानि चतुर्विंशतिवर्षाणि तत्प्रातः सवनं, चतुर्विंशत्यक्षरा गायत्री गायत्रं प्रातः सवनं तदस्य वसवोऽन्वायत्ताः प्राणा वाव वसव एते हीदं सर्वं वासयन्ति ॥**

1. பிரமசரிய விரதத்தை அனுஷ்டிப்பதில் மூன்று விதங்கள் இருக்கின்றன. கனிஷ்டம், உத்தமம், அதமம். "**கனிஷ்டம்**" யாதெனில் எப்புருஷனுடைய தேகம் அன்னரசமயமாயும், ஜீவாத்மாவினால் எங்கும் பரவியும், எவன் சற்சங்கங்களில் வசிக்கிருனே நற்காரியங்களையும் செய்கின்ருனே அவன் இருபத்திநான்கு வருஷகாலம்வரையில் இந்திரியங்களை ஜயித்து வேதாதிசத்திய சாஸ்திரங்களை பிரம்மசரியத்தோடிருந்து படித்து சுசீலத்தை அனுஷ்டிக்கவேண்டும். விவாகமானபிறகும் விஷய விவகாரங்களில் மூழ்கக்கூடாது. அப்பொழுது அவனுடைய தேகத்தில் பிராணன் பலத்தை அடைந்து எல்லா சுபகுணங்களுக்கும் இருப்பிடமாகிறது.

**तं चेदेतस्मिन् वयसि किञ्चिदुपतपेत्स ब्रूयात्प्राणावसव इदं मे प्रातःसवनं माध्यन्दिनं सवनमनुसंतनुतेति माहं प्राणानां वसूनां मध्ये यज्ञो विलोप्सीयेत्युद्धैव तत एत्यगदो ह भवति ॥**

(2) வித்தியாப்பியாசத்தைக் கிரகிப்பதிலேயே வாழ்நாட்களின் முதற்பாகத்தைக் கழிக்கவேண்டும். உபாத்தியாயர்கள் சிஷ்யர்களுக்கு அதைப்பற்றியே எப்பொழுதும் போதிக்கவேண்டும். "நான் பிரமசாரியம் முதலான விரதத்தைச் சரிவரக்காப்பாற்றினுல் என்னுடைய சரீரமும், ஆத்மாவும், ஆரோக்கியத்தையும், பலத்தையுமடைந்து என்னுடைய பிராணனும் சிறந்தகுண முதலியவைகளால் நிறைகின்றது." என்று ஒவ்வொரு பிரமசாரியும் நிச்சயம் செய்துகொள்ளவேண்டும். ஓ! மனிதர்களே! நீங்கள் இவ்விதம் இன்பங்களையும் சந்தோஷங்களையும் விருத்திசெய்துகொள்ளுங்கள். "பிரம்மசரியத்துக்குக் கெடுதலைசெய்யாமல் இருபத்திநான்கு வருஷத்திற்குப்பிறகு கிரஹஸ்தாசிரமம்செய்வேனேயானுல் என்னுடைய தேகம் பிணிகளிலிருந்து நீங்கி என்னுடைய ஆயுளும் எழுபது அல்லது எண்பது வருஷகாலம் நீடிக்கும்" என்பதை நீங்களே சொல்லிக்கொள்ளுங்கள்.

**अथ यानि चतुश्चत्वारिंꣳ शद्वर्षाणि तन्माध्यंदिनꣳ सवनं चतुश्चत्वारिंꣳश-दक्षरा त्रिष्टुप् त्रैष्टुभं माध्यंदिनगं सवनं तदस्य रुद्रा अन्वायत्ताः प्राणा वाव रुद्रा एते हीदꣳसर्वꣳ रोदयन्ति ॥**

(3) எம்மனிதன் நாற்பத்திநான்கு வருஷகாலம்வரையில் பிரமசரியத்தை அனுஷ்டித்து வித்தியாப்பியாசம் செய்கிறானோ, அவனுக்குப்பிராணன், இந்திரியங்கள், அந்தக்கரணம், ஆத்மா, முதலியவைகளின் பலம்விருத்தியாகி, அவன் தன் எல்லா கெட்ட நடத்தைகளையும் அழித்து, சிரேஷ்டமானவைகளைக் காப்பாற்றுகிறவனாகிறான்.

**तं चेदेतस्मिन्वयसि किञ्चिदुपतपेत्स ब्रूयात्प्राणा रुद्रा इदं मे माध्यंदिनꣳ सवनं तृतीयसवनमनुसन्तनुतेति माहं प्राणानाꣳरुद्राणां मध्ये यज्ञो विलोप्सीयेत्युद्धैव तत एत्यगदो ह भवति ॥**

இதுவே மத்தியம பிரமசரியம்.

(4) "என்னுடைய வாழ்நாளின் முற்பகுதியைப் பிரமசரியத்திலேயே கழிப்பேனேயாகில் ருத்திர ரூபமாயிருக்கப்பட்ட இப்பிராணனானது (சரீரத்தைவிட்டு பிராணன்போய்விடுமேயானால் அச்சரீரத்தைச் சார்ந்தவைகளுக்கெல்லாம் விசனத்தை உண்டுபண்ணுகிறது. அதற்காகப் பிராணனை ருத்திரரூபம் அல்லது விசனத்தின் ரூபம் என்று சொல்வது இயல்பு.) ஆனந்தத்தை அடைகிறது. ஆகவே மத்தியம பிரமசரியத்தை நான் சித்தம்செய்வேன் என்று பிரம்மசாரியானவன் குருவினிடத்தில் சொல்லவேண்டும். ஓ! பிரமசாரிகளே! நீங்களும் இந்தப் பிரமசரியத்தை விருத்தி செய்யவேண்டும். நான் எப்படி பிரமசரியத்தைக் கைக்கொண்டதினால் யக்ஞசுவரூபனாயிருக்கிறேனோ நீங்களும் அப்படியே இருத்தல்வேண்டும். நான் பழையகாலத்து ஆசாரியகுலத்திலிருந்தே வந்து வியாதி யொன்றுமில்லாமல் சௌக்கியமாயிருக்கின்றேன். ஆகையினால் பிரமசாரிகள் செய்யவேண்டிய உத்தமகாரியங்களை நீங்கள் செய்யவேண்டும் என்று குரு சொல்லவேண்டும்.

**अथ यान्यष्टाचत्वरिंꣳशद्वर्षाणि तत्तृतीयसवनमष्टाचत्वारिंꣳसदक्षरा जगती जगतं तृतीयसवनं तदस्यदित्यान्वायत्तः प्राणा वावादित्या एते हीदꣳ सर्वमाददते ॥**

(5) நாற்பத்தெட்டு வருஷகாலம் பிரமசரியத்தைக் காப்பாற்றிக்கொள்வதே மூன்றாவதான உத்தமபிரமசரியம். நாற்பத்தெட்டு அட்சரங்களால் உலகமிருப்பதுபோல் நாற்பத்தெட்டு வருஷபரியந்தம் உண்மையாய் பிரமசரியத்தை அனுஷ்டிப்பவன் தன்னுடைய பிராணனை வசிகரம்செய்து எல்லாவித்தைகளையும் கிரகிக்கிறான்.

तं चेदेतस्मिन् वयसि किञ्चिदुपतपेत्स ब्रूयात् प्राणा आदित्या इदं मे तृतीयसवनमायुरनुसंतनुतेति माहं प्रणानामादित्यानां मध्ये यज्ञो विलोप्सीयेत्युद्धैव तत एत्यगदो हवै भवति ॥

(6) ஆசான், மாதா, பிதா, தங்களுடைய சந்தானங்களை, வித்தையைக் கிரகிப்பதற்காகவும் நல்லவழக்கங்களை அனுசரிப்பதற்காகவும் தபஸ்விகளைப்போல் பழக்கி அங்ஙனம் செய்வதனல் உண்டாகும் பயன்களையும் அவர்களுக்கு உபதேசம் செய்யவேண்டும். சந்தானங்களும் இடைப்பிரியாமல் தங்களுடைய பிரமசரியவிரதத்தை அனுஷ்டிக்கவேண்டும். அப்படிச்செய்வதனல் அவர்கள் வித்வான்களாகவும், பூர்ணவயது (நானூறு) ஜீவிப்பவர்களாகவும் ஆகிருர்கள். ஏனென்ருல் இங்ஙனம் பிரமசரியத்தை அனுஷ்டித்து குறைசெய்யாமலிருப்பவர்கள் எல்லாவிதமான வியாதிகளிலிருந்தும் நீங்கி, தர்மார்த்த காமமோட்சத்தை அடைகிருர்கள்.

சரீரத்தினுடைய நான்கு பருவங்கள்.

चतस्रोऽवस्थाः शरीरस्य वृद्धिर्यौवनं सम्पूर्णता किञ्चित्परिहाणिश्चेति । आषोडशाद्वृद्धिः । आपञ्चविंशतेर्यौवनम् ।आचत्वारिंशतः सम्पूर्णता । ततः किञ्चित्परिहाणिश्चेति ॥

पञ्चविंशे ततो वर्षे पुमान् नारी तु षोडशे ।
समत्वागतवीर्यौ तौ जानीयात्कुशलो भिषक् ॥ சுஸ்ரு. சூத்ர. 335.

சரீரத்திற்கு நான்குபருவங்கள் உண்டு (1) விருத்தியடையும்: அதாவதுவளரும் பருவம்; அதாவது பதினறு வயதிலிருந்து இருபத்தைந்தாவது வயது வரையில் தேகத்திலிருக்கும் எல்லாத்தாதுக்களும் வளருகின்றன (2) யௌவனவஸ்தை: இருபத்தைந்தாவது வருஷத்தின் கடைசியிலிருந்து இருபத்தாருவது வயதின் ஆரம்பத்திலிருந்து யௌவனவஸ்தை ஆரம்பிக்கின்றது. (3) சம்பூர்ணத்தை: நாற்பதாவது வயது வரையில் எல்லாத்தாதுக்களும் புஷ்டியை அடைகின்றன. அதற்கே "சம்பூர்ணத்தை." (4) சரிவர சரீரத்திலிருக்கும் சகலதாதுக்களும் வலுவை அடைந்து "பூர்ணதை" அடைகின்றன. அதற்கு பிறகு விருத்தியாகும் தாதுவானது சரீரத்தில் நிற்காமல் கனவின் வழியாகவோ வியர்வையின் வழியாகவோ வெளியில் வந்து விடுகிறது. ஆகையினல் நாற்பதாவது வயது கலியாணம் பண்ணுவதற்கு மிகவும் உத்தமமான சமயம். ஆனல் சிறந்தகாலம் 48-ஆவது வயதே.

**வின:**—புருஷர்களுக்கும் ஸ்திரீகளுக்கும் பிரமசரியாதி நியமனங்கள் சமமானவைகளா? அல்லது வேருனவைகளா?

**விடை:**—இல்லை. புருஷன் 25 வயது வரையில் பிரமசரியத்தை அனுஷ்டித்தால் ஸ்திரீ பதினறு வயது வரையிலும் கன்னிகையாய் இருக்க வேண்டும். புருஷன் முப்பது வயதுவரையில் பிரம்மசரியாயிருந்தால் ஸ்திரீகள் பதினேழு வயது வரையில் இருக்கவேண்டும். புருஷர்களுக்கு

முப்பத்தாறு வயது வரையில் விவாகம் ஆகாமலிருந்தால், பெண் பதினெட்டு வயது வரையில் அங்ஙனமே இருக்கவேண்டும். நாற்பது வரையில் புருஷன் பிரமசரியத்தைக் காப்பாற்றினால், இருபது வரையில் பெண்ணும் இருக்க வேண்டும். நாற்பத்து நான்கு வரையில் இருந்தால், பெண் இருபத்திரண்டு வரையில் அப்படியே இருத்தல் வேண்டும். நாற்பத்தெட்டு வயது வரையிலிருந்தால் இருபத்திநான்கு வரையிலிருக்கவேண்டும். அதாவது புருஷனுக்கு நாற்பத்தெட்டு வயதிற்குமேலும், ஸ்திரீகளுக்கு இருபத்தி நான்குக்குமேலும் பிரமசரியத்தை அனுசரிக்கலாகாது. இந்நியமங்கள் கல்யாணம் செய்து கொள்ள எண்ணமுள்ளவர்களுக்கேயாம். அப்படிச் செய்துகொள்ள இஷ்டமில்லாதவர்கள் ஆயுள் பரியந்தம் பிரம்சாரிகளாயிருக்கலாம். அவர்கள் சுயேச்சையுள்ளவர்கள். இதைக்கைக்கொண்டு நடத்தக் கூடியவர்கள் பூர்ண வித்தையை யுடையவர்களும், ஐம்புலன்களை யடக்கினவர்களும், குற்றமில்லாமலும் இருக்கிற யோகிகளான ஸ்திரீகளும் புருஷர்களுமே. காமவேகத்தைத் தடுத்து இந்திரயங்களைத் தன்வசம் செய்துக் கொள்ளுவது மிகவும் பிரயாசையான வேலையாகும்.

## போதனைமுறைகள்

(1) ऋतं च स्वाध्यायप्रवचने च । (2) सत्यं च स्वाध्यायप्रवचने च ।
(3) तपश्च स्वाध्यायप्रवचने च । (4) दमश्च स्वाध्यायप्रवचने च ।
(5) शमश्च स्वाध्यायप्रवचने च । (6) आग्नयश्च स्वाध्यायप्रवचने च ।
(7) अग्निहोत्रञ्च स्वाध्यायप्रवचने च । (8) अतिथयश्च स्वाध्यायप्रवचने च ।
(9) मानुषं च स्वाध्यायप्रवचने च । (10) प्रजा च स्वाध्यायप्रवचने च ।
(11) प्रजनश्च स्वाध्यायप्रवचने च । (12) प्रजातिश्च स्वाध्यायप्रवनने च ॥

தைத்ரேய உபநிஷத், 79.

சீடர்களுக்கும் ஆசான்களுக்கும் ஏற்றவிதிகளாவன:—

(1) கற்கவும் கற்பிக்கவும், நன்னடைத்தை வேண்டும். (2) வேதம்முதலான உண்மையான சாஸ்திரங்களை மானிடர்கள் கற்கவும் கற்பிக்கவும் வேண்டும். (3) வேதம் முதலானவைகளைக் கற்று ஒழுகுவதினால், தபஸ்விகளாயும், தர்மானுஷ்டான முள்ளவர்களாயு மிருக்கவேண்டு. (4) கற்குங் காலத்தும் கற்பிக்குங்காலத்தும் தகாத வெண்ணங்களிலிருந்து இந்திரியங்களைத் திருப்ப வேண்டும் (5) தீய நடத்தைகளிலிருந்து மனதை நீக்கி, படிக்கவும் படிப்பிக்கவும் வேண்டும், (6) மின்னல், மின்சாரம், வெளிச்சம் முதலான இயற்கைச் சாத்திரங்களைப் படிப்பதிலும் படிபித்தலிலும் கவனத்தைச்செலுத்தவேண்டும். (7) கற்கும்பொழுதும் கற்பிக்கும் பொழுதும் ஹோமம் செய்தல் வேண்டும் (8) கற்கும் பொழுதும் கற்பிக்கும்பொழுதும் அதிதிகளை வரவேற்க வேண்டும் (9) மனிதனை ஒட்டின சகல விஷயங்களையும், கற்பிப்பவர்களும் கற்றுகொள்ளுகிறவர்களும் கவனிக்கவேண்டும் (10) மக்கள், அரசாங்கம் இவ்வகளுடைய ஆளுகையை ஒட்டின விதிகளை, படித்தும் படிப்பிக்கவும் வேண்டும். (11) போதனைகாலம் வரையில் வீரியத்தைக் காப்பாற்றிப் பெருக்கவேண்டும் (12) மக்களையும், சிஷ்யர்களையும் காப்பாற்றும் வழியை அறியவேண்டும்.

यमान् सेवेत् सततं न नियमान् केवलान् बुधः ।
यमान्पतत्यकुर्वाणो नियमान् केवलान् भजन् ॥ மனு 4. 204.

புத்திவான் எமங்களுடைய (நன்னெறி) முறைகளைத் தவறாமல் கவனிக்க வேண்டும். நியமங்களை (சமயாசாரக்கிரியைகளை) மாத்திரம் கவனித்தலில் பிரயோசனமில்லை. எமங்கள் அன்னியில் நியமங்களைக் கொண்டு ஒழுகி வந்த பொழுதிலும் ஒருவன் நேர்மையிலிருந்து வழுவுகிறான். எமங்களில் ஐந்து விதம் முண்டு. யோகசூத்திரத்தில் கூறியுள்ள வண்ணம்:—

तत्राहिंसासत्यास्तेयब्रह्मचर्यापरिग्रहा यमाः ॥ யோக. சாதன பாத. 30.

(1) அஹிம்சை (2) மனோவாக்கு எண்ணங்களிலும் சத்தியத்தையே கைக் கொள்ளுவது. (3) செய்கை, நடத்தை, எண்ணம் முதலானவைகளில் கூட திருட்டுப் புத்தியன்னியிலிருப்பது (4) போகம் முதலானவைகளில் ஆசையன் னியிலிருப்பது (5) பேராசை, சஞ்சல புத்தி முதலானவைகளை ஒழிப்பது (6) இவ்வைந்து எமாதிகளையும் எக்காலமும் கைக்கொள்ளவேண்டும்.

ஐந்து நியமங்களாவன:—

शौचसन्तोषतपः स्वाध्यायेश्वरप्राणिधानानि नियमाः ॥ யோக சாதன பாத 32.

(1) சுத்தமாயிருத்தல் (சரீரம், மனது) (2) திருப்தி—நிச்சிந்தை யுடனிருத்தல் அல்ல. கொண்ட எண்ணம் கைக்கூடவேண்டி மானிட பிரயத்தினம் செய்தல். ஆனல், அதினல் ஏற்படும் இலாபம் நஷ்டம், சந்தோஷம் துக்கம், இவைகளைக் கருதக்கூடாது. (3) பயன்களைக் கவனியாமல் கடமையை நடத் தல் (4) உண்மை யறிவைப் பெற்று பரவச்செய்தல் (5) அன்பு மேலிட்டு ஈச்வரனுக்கு ஆத்மாவை அர்ப்பணஞ் செய்தல். இவ்வைந்துமே நியமங்களெ னெப்படும். எமங்களன்னியில் நியமங்களைக் கைக்கொள்ளக் கூடாது. இவ்வி ரண்டையும் தழுவச் செய்யவேண்டும். எமங்களைக் களைந்து நியமங்களை மாத்திரம் தனித்துபின்பற்றுகிறவன் எப்பொழுதும் உயர்வதில்லை. இழிவை யும் அடைகிறான். அதாவது உலக விஷயங்களில் சுற்றிச் சுற்றி சுழலுகிறான்.

कामात्मता न प्रशस्ता ना चैवेहास्त्यकामता ।
काम्यो हि वेदाधिगमः कर्मयोगश्च वैदिकः ॥ மனு 2. 2.

மிதமிஞ்சின ஆசையுடனும் அல்லது ஆசையற்றும் இருப்பதினல் மனிதனு டைய இன்பத்திற்கு இடந்தராது. ஏனெனில், வேதங்களுடைய ஞானத்தைப் பெறவோ அல்லது கற்புடன் வாழவோ முடியாது.

स्वाध्यायेन व्रतैर्होमैस्त्रैविद्येनेज्यया सुतैः ।
महायज्ञैश्च यज्ञैश्च ब्राह्मीयं क्रियते तनुः ॥ மனு 2. 27.

சகலசத்திய சாத்திரங்க்களைகற்பதும் கற்பிப்பதும் பிரமசரிய விரதம், உண்மை உரைத்தல், இவைகளை ஒட்டி நடப்பது; ஹோமம் செய்வது, உண்மையை ஏற்று பொய்யை மறுப்பது; சத்திய தருமத்தைப் பரவச்செய்வது; வேதங்கள்

கூறும் வண்ணம் தர்ம வழியில் நடப்பது; கர்மோபாசனையும் வேதங்களுடைய ஞானத்தையும்பெறுவது; காலங்களுக் கேற்ற ஹோமங்களைச் செய்வது; நல்லமக்களைப் பெறுவது; பிரதி தினமும் பஞ்ச மகாயக்ஞங்களைச் செய்வது; கைத்தொழில் முதலான சிற்பவித்தைகளினால் சமூக மேன்மையும் நன்மையும் கொடுக்கும் கார்யங்களைச் செய்வது; இவையே **பிராம்மணம்** ஆகிறது. அதாவது, அவனுடைய மனது வேதங்களுடைய கல்விக்கும் கடவுள் பக்திக்கும் இருப்பிடமாயிருக்கவேண்டும். இவைகளைச் செய்தாலொழிய 'பிராமணன்' என்று அழைக்க ஒருவனும் தகுதியில்லை.

**इन्द्रियाणां विचरतां विषयेष्वपहारिषु ।**
**सँयमे यत्नमातिष्ठेद्विद्वान् यन्तेव वाजिनाम् ॥** மனு 2. 88.

கைப்பழக்கமுள்ள சாரதி யொருவன் குதிரைகளைத்தன்வசம் வைத்துக்கொள்ளுவதுபோல், புத்திமான் தன்னுடைய இந்திரியங்களை—மனம், ஆத்மா, இரண்டையும்கொடிய செய்கைகளிலிழுக்கக்கூடியது—தன்வசத்தில்வைத்துக் கொள்ளவேண்டும்.

**इन्द्रियाणां प्रसङ्गेन दोषमृच्छत्यसंशयम् ।**
**सन्नियम्य तुतान्येव ततः सिद्धिं नियच्छति ॥** மனு 2. 93.

ஜீவாத்மா ஐம்புலன்களுடைய வசமாவதினால் கொடுங்குற்றங்களைச் செய்கிறது. இந்திரியங்கள், ஜீவாத்மாவுடைய வசமாவதினால், சர்வசித்தியைப் பெறுகிறது.

**वेदास्त्यागश्च यज्ञाश्च नियमाश्च तपांसि च ।**
**न विप्रदुष्टभावस्य सिद्धिं गच्छन्ति कर्हिचित् ॥** மனு. 2. 97.

இழிவான ஆசாரங்களையுடையவன் ஐம்புலன்களைச் ஜயிக்காதவன்; வேதம் தியாகம், யக்ஞம், நியமம், தபசு முதலிய நல்ல காரியங்களில் சித்தியடைகிறானில்லை.

**वेदोपकरणे चैव स्वाध्याये चैव नैत्यके ।**
**नानुरोधोऽस्त्यनध्याये होममन्त्रेषु चैव हि ॥** மனு 2. 105.

வேதங்களைப்படிப்பதற்கும், படிப்பிப்பதற்கும், சந்தியோபாசனை முதலான பஞ்சமகாயக்ஞங்களைச் செய்வதற்கும், ஹோம மந்திரங்களுக்கும், ஒழிவு நாளென்பது ஒருபொழுதும் கிடையாது.

**नैत्यिके नास्त्यनध्यायो ब्रह्मसत्रं हितत्स्मृतम् ।**
**ब्रह्माहुतिहुतं पुण्यमनध्यायवषट्कृतम् ॥** மனு 2. 106.

நித்தியகர்மங்களை எப்பொழுதும் நிறுத்தலாகாது. ஏனெனில், சுவாசத்தை எப்படி நிறுத்துவதற்குச் சாத்தியப்படாமலிருக்கிறோமோ, அப்படியே நித்திய கர்மங்களை எப்பொழுதும் செய்யவேண்டும். "**அனத்யாய**" என்னும்படியான ஓய்வுநாளில் செய்யும் நற்செய்கைக்கு பயனில்லாமல் போகாது.

எப்படி பொய் சொல்லுவதினுல் எப்பொழுதும் பயமும், உண்மையை உரைப்பதினுல் எப்பொழுதும் புண்ணியமும் உண்டாகின்றதோ, அப்படியே தீயச்செயல்களைச் செய்வதினுல் எப்பொழுதும் தீமையையும் நற்காரியங்களைச் செய்வதினுல் நன்மையையும் பெறுவது அவசியம்.

अभिवादनशीलस्य नित्यं वृद्धोपसेविनः ।
चत्वारि तस्य वर्द्धन्त आयुर्विद्यायशोबलम् ॥ மனு 6. 121.

எப்பொழுதும் வணக்கத்துடனும் சுசில சுபாவத்துடனும் கற்றுணர்ந்தவனுயும் இருந்துகொண்டு பெரியோர்களுக்குப் பணிவிடை செய்கிறவனுக்கு இந்நான்காகிய ஆயுளும், ஞானமும், கீர்த்தியும், பலமும் விருத்தியாகின்றன. அப்படிச் செய்யாதவனுக்கு இந்நான்கும் விருத்தியாகின்றதில்லை.

अहिंसयैव भूतानां कार्यं श्रेयोऽनुशासनम् ।
वाक् चैव मधुरा श्लक्ष्णा प्रयोज्या धर्मविच्छता मனு 2. 159.

விரோதமான புத்தியை விட்டு எல்லா மனிதர்களிடத்தும் நல்லவனுக இருக்க அறிஞர், முயலவேண்டும். அவனுடைய வார்த்தைகள் இன்பமாயும், மதுரமாயுமிருக்கட்டும். சன்மார்க்கத்தை உபதேசஞ்செய்வது அவனுக்கு ஏற்றவையாம். தர்மத்தில் மேன்மை யடையவேண்டுமென்று விரும்புவோர்கள், எக்காலத்தும் மனேவாக்கு எண்ணங்களில், சத்தியத்தையேகைக் கொண்டு நடக்கவேண்டும்.

यस्य वाङ्मनसे शुद्धे सम्यग्गुप्ते च सर्वदा ।
स वै सर्वमवाप्नोति वेदान्तोपगतं फलम् மனு 2. 160.

எவனுடைய மனதும் பேச்சும் சுத்தமாயும் அடக்கமுள்ளதாயும் இருக்கின்றதோ, அவனுக்குத்தான் எல்லா வேதாந்த சித்தாந்தங்கள் விளங்கும்.

संमानाद् ब्राह्मणो नित्यमुद्विजेत विषादिव ।
अमृतस्येव चाकाङ्क्षेदवमानस्य सर्वदा ॥ மனு. 2. 162.

புகழ்மொழிகளை விஷத்தைப்போல் கருதியும், இழிவுமொழிகளை அம்ருதத்தைப்போல் எண்ணுகிறவனுமாகிற பிராம்மணனையே, எல்லா வேதங்களையும் கடவுளையும் அறிந்தவன் என்கிறூர்கள்.

अनेन क्रमयोगेन संस्कृतात्मा द्विजः शनैः ।
गुरौ वसन् संचिनुयाद् ब्रह्माधिगामिकं तपः ॥ மனு 2. 164.

இவ்வாறு, உபநயனம் செய்யப்பட்ட துவிஜர்களாகிய பிரமசாரிகள் (ஆண், பெண் இருபாலர்களும்), தங்களுடைய முதற்கடமையாகிய வேதங்களுடைய பொருளின் ஞானத்தைப்பெற்றுக் கொண்டிருக்கட்டும்.

योऽनधीत्य द्विजो वेदमन्यत्र कुरुते श्रमम् ।
स जीवन्नेव शूद्रत्वमाशु गच्छति सान्वयः ॥ மனு 2. 168.

வேதத்தை ஓதாமல் மற்றவிஷயங்களில் வீணாய்க் காலத்தைக் கழிக்கிற துவிஜர்களும் அவர்களுடைய புத்திர பௌத்திரர்களும், சூத்திரனாக மாறுகிறார்கள்.

**वर्जयेन्मधु मांसञ्च गन्धं माल्यं रसान् स्त्रियः ।**
**शुक्तानि यानि सर्वाणि प्राणिनां चैव हिंसनम्** மனு 2 177

பிரமசாரி (ஆண் அல்லது பெண்) மாம்சாகாரம், மதுபானம், மணம், பூமாலை சுவையுள்ள பாதார்த்தங்கள், ஸ்திரீபுருஷசங்கம், புளிப்புப்பதார்த்தங்கள், ஜீவஹிம்சை, முதலியவைகளை விட்டு விடவேண்டும்.

**अभ्यङ्गमञ्जनं चाक्ष्णोरुपानच्छत्रधारणम् ।**
**कामं क्रोधं च लोभं च नर्त्तनं गीतवादनम्** மனு 2. 178.

தேகத்தை எண்ணெயிட்டுத் தேய்த்தல், ஜனனேந்திரியங்களைத் தொடுதல், மையிடுதல், குடை, செருப்பு இவைகளை உபயோகித்தல், காமம், கோபம், லோபம், பயம், துக்கம், பகை, விரோதம், ஆடல், பாடல், களித்தல், முதலானவைகளையெல்லாம் பிரமசாரி விட்டு விடவேண்டும்.

**द्यूतं च जनवादं च परिवादं तथाऽनृतम् ।**
**स्त्रीणां च प्रेक्षणालम्भमुपघातं परस्य च** மனு 2. 179

சூதாடல், வீண் பேசல், அவதூறு சொல்லல், புறம் பேசல், பொய் மொழிதல் முதலியவைகளையும் ஸ்திரீகளுடைய பார்வை (காமக்கண்களுடன்) அவர்களை கட்டி அணைத்தல், பிறருக்குத் தீங்கிழைத்தல் இவை போன்ற தீயச்செயல்களை விலக்கி விடவேண்டும்.

**एकः शयीत सर्वत्र न रेतः स्कन्दयेत्क्वचित् ।**
**कामाद्धि स्कन्दयन्रेतो हिनस्ति व्रतमात्मनः** மனு 2. 180.

எக்காலத்தும் தனித்துத் படுத்துக் கொள்ளல் வேண்டும். ஆனால் இந்திரிய ஸ்கலிதமாகக் கூடாது. அவ்விதம் வீரியம் நஷ்டமானால், பிரமசர்ய விரதத்திற்கு பங்கம் ஏற்படுகிறது.

**(1) वेदमनूच्याचार्योऽन्तेवासिनमनुशास्ति । (2) सत्यं वद । (8) धर्मं चर । (4) स्वाध्यायान्मा प्रमदः । (5) आचार्य्याय प्रियं धनमाहृत्य प्रजातन्तुं मा व्यवच्छेत्सीः । (6) सत्यान्न प्रमदितव्यम् । (7) धर्मान्न प्रमदितव्यम् । (8) कुशलान्न प्रमदितव्यम् । भूत्यै न प्रमदितव्यम् । (९) स्वाध्यायप्रवचनाभ्यां न प्रमदितव्यम् । (1०) देवपितृकार्य्याभ्यां न प्रमदितव्यम् । (11) मातृदेवो भव । पितृदेवो भव । आचार्य्यदेवो भव । अतिथिदेवो भव । (12) यान्यनवद्यानि कर्माणि तानि सेवितव्यानि नो इतराणि । (18) यान्यस्माकं सुचरितानि तानि त्वयोपास्यानि नो इतराणि ।**

(14) ये के चास्मच्छ्रेयाग्ं सोत्राह्मणास्तेषां त्वयासनेन प्रश्वसितव्यम् । श्रद्धया देयम् । (15) अश्रद्धया देयम् । श्रिया देयम् । श्रिया देयम् । भिया देयम् । संविदा देयम् । (16) अथ यदि ते कर्मविचिकित्सा वा वृत्तविचिकित्सा वा स्यात् । ये तत्र ब्राह्मणाः सम्मर्शिनो युक्ता अयुक्ता अलूक्षा धर्मकामाः स्युर्यथा ते तत्र वर्त्तेरन् । तथा तत्र वर्त्तेथाः । (17) एष आदेश एष उपदेश एषा वेदोपनिषत् । एतदनुशासनम । एवमुपासितव्यम् । एवमु चेतदुपास्यम् ॥ தைத்ரேய. பிரப 7. அனு 11. 2. 3. 4.

இவ்விதமாய் ஆசான் தன் சிஷ்யனுக்கு உபதேசம் செய்தல் வேண்டும். "என் குழந்தாய்! (1) எக்காலமும் உண்மையேப்பேசு. (2) தர்மத்தை அனுசரி. (3) படிக்கும் பொழுதும் படிப்பிக்கும் பொழுதும், கவனமின்றி இராதே. (4) சகல கலைகளையும் கற்றுக்கொள்ளும் வரையில் பூரணமான பிரமசர்யத்தைக் கைக்கொள். (5) ஆசானுக்குவிலையுயர்ந்த பொருளைப்பிரியத்துடன்கொடு. விவாகஞ் செய்துகொண்டு சந்தானவிருத்தி செய் (6) சத்தியத்தை ஒருபொழுதும் கைவிடாதே, (7) அசட்டையினல் தர்மத்தை ஒருபொழுதும் கைவிடாதே (8) கவனமின்மையாய் ஆரோக்யம், சாதுர்யம், செழிப்பு முதலானவைகளை நாசஞ் செய்யாதே, (9) அசட்டையினல் படிப்பதையும் போதிப்பதையும் விடாதே. (10) கடவுள், மேதை, தாய், தகப்பன், முதலான பெரியோர்களை வழிபடுவதிலிருந்து ஒருபொழுதும் வழுவாதே, (11) பெற்ருேர், ஆசாரியன் ஏழை முதலியர்களை, வித்வான்களை வணங்குவதுபோலவே மரியாதை செய், (12) உண்மை பேசுதல் இன்னும் இதுபோன்ற நிந்தையற்றதாயும் தர்மமாயுள்ள காரியங்களைச் செய். இதற்கு மாருக பொய் பேசுதல் முதலியவைகளை செய்யாதே, (13) சமயாசாரத்திற்கேற்ப நம்முடைய நற்காரியங்களைக் கைக்கொள். ஆனல் நம்முடைய தீச்செயல்களை எடுத்துக்கொள்ளாதே. (14) எங்களிடத்திருக்கிற சிறந்த கற்றுணர்ந்த சமயாசார பிராமணர்களுடைய சமூகத்தைச் சேருங்கள், அவரையும் நம்புங்கள். (15) தர்மவானுயிருங்கள், நம்பிக்கையுடன் கொடுங்கள். பேருக்காகவோ, மானத்திற்காகவே கொடுங்கள். ஜன நிந்தைக்குப் பயந்தோ அல்லது சொல் வார்த்தையைக் காப்பாற்றவோ கொடுங்கள். எப்பொழுதும் கொடுங்கள். (16) எப்பொழுதாவது சந்தேகம் உண்டானல் விவேகிகள், யோகிகள், ஆழ்ந்த சிந்தையுடன் தர்மம் செய்கிறவர்கள், தர்மாத்மாக்கள், தர்ம மார்க்கத்ததிலிருப்பவர்கள், முதலானவர்களைக் கேட்டுத் தெரிந்து கொண்டு அவர்களைப்போல் நடந்துகொள்ளுங்கள் (17) இதுதான் கட்டளை, இதுதான் உபதேசம், இது தான் வேதம், இதுதான் உபநிஷத், இவைகளேயே பின்பற்ற வேண்டும். இதைக்கொண்டே உன்னுடைய குணங்களைத் திருத்திக்கொள்ளவேண்டும்.

अकामस्य क्रिया काचिद् दृश्यते नेह कर्हिचित् ।
यद्यद्धि कुरुते किञ्चित् तत्तत्कामस्य चेष्टितम् ॥ மனு 2. 4.

எண்ணமில்லாமல் ஒருவனுடைய இமைகள் கூட கொட்டுகிறதில்லை யென்பதை ஜனங்கள் அறியவேண்டும். அதாவது எவனொருவன் எதைச்செய்த போதிலும், எண்ணம், தோற்றம், இவைகளன்னியில் அதைச் செய்கிறதில்லை.

**आचारः परमो धर्मः श्रुत्युक्तः स्मार्त्त एव च ।**
**तस्मादस्मिन्सदा युक्तो नित्यं स्यादात्मवान् द्विजः ।।** மனு 1. 108.

பேசுதல், கேட்டல், படித்தல், படிப்பித்தல் இவைகளுடைய பிரயோசனம் யாதெனில், வேதம் வேதானு கூலமாயுள்ள சுருதிகள் இவைகளால் கூறப்படும் தர்மங்களை அநுசரிக்கவேண்டும். இதனால் தர்மத்தை எப்பொழுதும் அனுஷ்டிக்கவேண்டும்.

**आचाराद्विच्युतो विप्रो न वेदफलमश्नुते ।**
**आचारेण तु संयुक्तः सम्पूर्णफलभाग्भवेत् ।।** மனு 1. 109.

தர்மத்தினுடைய அநுசரணையிலிருந்து விலகியிருப்பவன், வேதத்தில் கூறப்பட்டிருக்கும் தர்மத்தினுடய பிறப்பிலிருந்து உண்டாகும் சுகரூபமான பலத்தை யடைகிறானில்லை. வித்தைகளைக் கற்று தர்மத்தினுடைய அநுசரணையைக் கைக்கொள்ளுகிறவன் பூரண சுகத்தை யடைகிறான்.

**योऽवमन्येत ते मूले हेतुशास्त्राश्रयाद् द्विजः ।**
**स साधुभिर्बहिष्कार्यो नास्तिको वेदनिन्दकः ।।** மனு 2. 11.

வேதம், வேதானுகூலமாயிருக்கும் முனிகளால் செய்யப்பட்ட நூல்கள் இவைகளை மறுப்போரை நாஸ்திகர்கள் என அறிந்து அப்புறப்படுத்தவேண்டும். வேததூஷணை செய்கிறவனாகையினால் அவனை ஜாதி, சமூகம், தேசம் நற்குணம் வாய்ந்தவர்கள், இவைகளிருந்து விலக்கவேண்டும்.

**वेदः स्मृतिः सदाचारः स्वस्य च प्रियमात्मनः ।**
**एतच्चतुर्विधं प्राहुः साक्षाद्धर्मस्य लक्षणम् ।।** மனு 2. 12.

தர்மாதர்மங்களை நிச்சியம்செய்வதற்கு நான்கு குறிகள் இருக்கின்றன. அதாவது (1) வேதம். (2) "ஸ்மிருதி"—வேதத்திற்கு அனுகூலமாய் ரிஷிகளால் எழுப்பட்டிருக்கும் கட்டளைகள் (மனுஸ்மிருதி முதலானவைகளைப் போன்றது) (3) சத்புருஷர்களுடைய ஆசாரம்—அது சனாதனம் அதுவே வேத மூலமாகப் பரமேச்வரனால் அறிவிக்கப்பட்டது (4) தன்னுடைய ஆத்மாவுக்குப் பிரியத்தை உண்டுபண்ணுகிறது. (உண்மை பேசுவது முதலானவைகளைப் போன்றது. பக்ஷபாதமின்றி நியாயம் சத்தியம் இவைகளைக் கிரகித்து அசத்தியத்தை எப்பொழுதும் விடும் ஆசாரமே தர்மமெனப்படும். இதற்கு விரோதமாய் பக்ஷபாதத்துடன் சத்தியத்தை விடுத்தல் அசத்தியத்தை கிரகித்தல் முதலிய கர்மங்களெல்லாம் அதர்மமெனப்படும்.

**अर्थकामेष्वसक्तानां धर्मज्ञानं विधीयते ।**
**धर्मं जिज्ञासमानानां प्रमाणं परमं श्रुतिः ।।** மனு 2. 13.

பொன் முதலான பொருள்கள், ஸ்திரீ இவைகளுடைய வலைகளில் எவன் அகப்பட வில்லையோ, அவனுக்குத் தர்மத்தின் ஞானம் உண்டாகிறது. தர்மத்தினுடைய ஞானத்தைக் கோரினுல் வேதத்தின் வழியாய் தர்மத்தை நிச்சியம் செய்யவேண்டும். ஏனென்ருல் தர்மாதர்மங்களுடைய நிச்சியத்தை வேத மிருந்தாலொழிய அறியமுடியாது.

இவ்விதம் ஆசாரியன் தன்னுடைய சிஷ்யர்களுக்கு உபதேசம் செய்ய வேண்டும். சிறப்பாய் இராஜ, இன்னும் மற்ற க்ஷத்திரிய வைசிய உயர்ந்த சூத்திர ஜனங்களுக்கும் வித்தையை அவசியமாய் கற்பிக்கவேண்டும். ஏனென்ருல் பிராமணர்களுக்குமாத்திரம் வித்தியாப்பியாசம்செய்து மற்றவர்களுக்கு இல்லாமல்செய்தால் வித்தை, தர்மம், ராஜ்ஜியம், தனம், முதலியவைகள் ஒருநாளும் விருத்தியடையாது. கேவலம் கற்பித்து கற்பிக்கச் செய்யும் பிராமணர்கள், க்ஷத்திரியர் முதலானவரிடத்தில் ஜீவித்து அவர்களாலேயே காலத்தைக் கழிக்கிருர்கள். க்ஷத்திரியர் முதலானவர்கள் கல்வியற்றுப் போவதினுல், இடும் கட்டளைகளை ஊகித்து அறிந்துகொள்ள சக்தியற்றுப் போகிருர்கள். அப்பொழுது பிராமணர்களுக்கு க்ஷத்திரியர்களிடத்திலிருக்கும் பயம் முதலிவைகளெல்லாம் நீங்கி, தங்களுடைய கார்யங்களை இடையூறு அன்னியில் அவர்கள் நடத்திக் கொள்ளுகிருர்கள். அவர்கள் இங்ஙனம் மெதுவாக சுயநலத்தின் பொருட்டு இச்சக்தியை உபயோகம் செய்து, கபடம் முதலியவைகளில் விழுந்து தங்களுக்கு தோன்றியவண்ணம் செய்கிருர்கள். இதைக் கண்டு ஏனையவகுப்பினர்களும் பின் தொடருகிருர்கள். க்ஷத்திரியர்களும் மற்றவர்களும் நன்கு கற்றுணர்ந்தவர்களாயிருந்தால், அவர்களை விட அதிகமாய் இருப்பதற்கும், மீருவதற்கும் வேண்டி பிராமணர்கள் மிகவும் பிராயாசைப் படுவார்கள். அப்பொழுது அவர்கள் பொய்ப்பாடஞ் சொல்லி, சுயநல வாழ்க்கை நடத்த முடியாது. ஆகவே பிராமணர்கள் தங்களுடைய சொந்த மேன்மைக்காகவும், இதரர்களுடைய முன்னேற்றத்திற்காகவும் வேதாதி சத்திய சாத்திரங்களை க்ஷத்திரியர் முதலானவர்களுக்கு வெகுப் பிரயாசையுடன் கற்றுக் கொடுத்துப் பயிற்சி செய்யவேண்டும் ஏனெனில் க்ஷத்திரிய முதலானவர்கள்தான் வித்தை, தர்மம் ராஜ்யம், ஐச்வர்யம், முதலிவைகளை விருத்தி செய்கிறவர்கள். அவர்கள் எப்பொழுதும் பிச்சை எடுக்கிறதில்லை யாதலால், வித்தியாவிஷயங்களில் பக்ஷபாதத்துடனிருக்க காரணமில்லை. எல்லாவகுப்பினரும் கசடறகற்றிருப்பின் எந்த ஒரு வகுப்பினரும் பிறரை வஞ்சித்தல் முடியாது. மோசம், அதர்மச்செயல்கள் முதலியவை இனத்தில பறவாது. அங்ஙனம் கற்றுணர்ந்த க்ஷத்திரியர்களால் முறையே பிராமணர்களும் சந்நியாசிகளும் காப்பாற்றப்படுகிருர்கள். ஆதலான் எல்லா இனத்தாருக்கும் ஆண் பெண் இருபாலர்களுக்கும் அறிவு அளித்தல் அவசியமாகும்.

அடியில்கண்ட ஐந்து சோதனைகளினுல், கற்றுக்கொண்டவும் உபதேசிக்கப்பட்டதுமான யாவற்றையும் பரிக்ஷித்துப் பார்க்கவேண்டும்.

(i) வேதம் ஈச்வரனுடைய குணங்கள். வேதங்களுடைய போதனை களுக்கு எற்றதாயும் ஈச்வரனுடைய குணம் இயல்பு, சுபாவம் முதலானவை களுக்கு அனுகூலமாயுமிருப்பது உண்மை. இவைகளுக்கு விரோதமாயிருப்ப வைகளெல்லாம் அசத்தியம் அல்லது உண்மையற்றவை.

(ii) இயற்கை அமைப்புக்கு ஒத்ததெல்லாம் சத்யம் அதற்கு விரோத மாயிருப்பவைகளெல்லாம் பொய். உதாரணம். பெற்றோர்களுடைய தேக சம்பந்தமன்னியில் சிசு உண்டாயிற்றென்பது இயற்கை யமைப்பிற்கு மாறான தினால் பொய்யே. உண்மையாகாது.

(iii) ஆப்தர்கள். அதாவது தர்ம குணமுள்ளவர்கள், வித்வான்கள், உண் மை உரைப்பவர்கள், கபடமற்றவர்கள் இவர்களுடைய உபதேசம், ஒழுக்கம். இவைகளுக்கு அனுகூலமானதெல்லாம் விரும்பத்தக்கவை. பிரதிகூலமான தெல்லாம் விரும்பத்தகாதவை.

(iv) ஆத்ம அறிவு. உனக்கு நன்மையானது உலகத்திற்கும் நன்மை யானதே. உனக்குத்துன்பமானது உலகத்திற்கும் துன்பமே. நாம் எப்படி சுகத்தைக்கோறி துக்கத்தை வெறுக்கிறோமோ அதேமாதிரி பிறர்களுடைய விஷயத்திலும் கருதவேண்டும்.

(v) பிரமாணங்கள் எட்டு வகைப்படும்.

(1) பிரத்யக்ஷ பிரமாணம் (2) அனுமானம் (3) உபமானம் (4) சப்தம் (திருஷ்டாந்தம்) (5) ஐதீகம் (6) அர்த்தாத்பத்தி (7) சம்பவம் (8) அபாவம்.

**इन्द्रियार्थसन्निकर्षोत्पन्नं ज्ञानमव्यपदेश्यमव्यभिचारि व्यवसायात्मकम्प्रत्यक्षम् ॥** நியாய சாஸ்திரம் 1. ஆன்ஹிகம் 1. சூத்திரம் 4.

(1) பிரத்தியக்ஷ பிராமணம்:—

பஞ்சேந்திரியங்களும் முறையே அவைகளுக்கேற்ற பொருள்களோடும் (கண்கள் வெளிச்சத்துடனும், காதுகள் சப்தத்துடனும், தோல் ஸ்பரிசத்து டனும், நாக்கு சுவையுடனும், மூக்கு முகருந்தன்மையுடனும்) மனம் (கவ னத்தையளிக்கும் உருபு) இந்திரியங்களுடனும், ஆத்மா மனதோடும் சேருவதி னால் உண்டாகும் உணர்ச்சியின் அறிவே பிரத்தியக்ஷமெனப்படும்.

(i) ஆனால், தண்ணீர் என்னும் வார்த்தைக்கும், அதைக்காட்டும் திரவ பதார்த்தத்திற்கும் உள்ள, சேர்க்கையினால் உண்டாகும் அறிவு பிரத் தியக்ஷமாகாது. உதாரணமாக நீங்கள் உங்களுடைய வேலையாளைக் கொஞ்சம் தண்ணீர் கொண்டுவரச் சொல்வதாக வைத்துக்கொள்ளு வோம். அவன் கொண்டுவந்து உங்கள் முன்வைத்து சொல்லுவான். "இதோ தண்ணீர்—ஸ்வாமி" இப்பொழுது நீங்களும், உங்களுடைய வேலைக்காரனும் கண்ணால் காணுவது தண்ணீர் என்னும் பெயரல்ல, அதைக்குறிக்கிற பொருளேயாம். ஆகவே தண்ணீர் என்று சொல்லப்

பட்ட பொருளுடைய பிரத்தியக்ஷ பிரமாணம் உண்டாகிறது. பெய ருக்கும், பெயரை விளக்குகிற பொருளுக்கும் உள்ள சம்பந்தத்தின் ஞானமே, நான்காவது பிரமாணமான "சப்தம்" மாகும்.

(ii) இந்த அறிவு நிலையற்ற குணத்தையுடையதாய் இருக்கக்கூடாது. அதாவது அனுகூலமற்ற சமயங்களில், கண்ட ஞானத்தின் அறிவா யிருக்கக்கூடாது. உதாரணமாக இருட்டில் ஒருவன் ஏதோ ஒன்றைக் கண்டு அதை மனிதனெனக் கொண்டான். ஆனல் பொழுதுவிடிந்த வுடன் அது தூணுகவிருப்பதைக் கண்டான். அவனுடைய விஷயத் தின் முதல் எண்ணம் நிலையற்றது. ஆனல் வெளிச்சத்தில் விளக்கின வுடன் பொருளின் உண்மை வடிவம் தெரிந்து நிலைத்திருக்கிற அறிவு உண்டாயிற்று.

(iii) சகல சந்தேகங்களிலிருந்தும் அது நீங்கினதாய், நிச்சியமாயிருக்க வேண்டும். உதாரணமாக தூரத்தில் ஒரு நதியைப் பார்த்துச் சொல் லுகிறீர். அங்கே தண்ணீரா என்ன? அல்லது வெள்ளை ஆடைகள் உலருவதற்காக விரிக்கப்பட்டிருக்கிறதா என்ன? இன்னுமொரு உதாரணம் எடுத்துக்கொள்வோம். தூரத்தில் நிற்கிற ஒருவனைக் கண்டு அங்கே நிற்பவன் தேவதத்தனு அல்லது எக்ஞதத்தனு? வென் கிறீர். உங்களுக்குச் சந்தேகமிருக்கிற வரையிலும் அதன் காரணமாக நிச்சயம் செய்ய முடியாமலிருக்கிற வரையிலும், அறிவு பிரத்தியக்ஷ மாகாது. அப்படி யிருக்கவேண்டினல் சந்தேகம் முழுவதும் அதில் இல்லாமலிருக்கவேண்டும்.

ஆகவே சுருங்கச்சொல்லுங்கால், பெயருக்கும் பொருளுக்குமுள்ள சம் பந்தத்தால் உண்டாகும் அறிவு இல்லாதவரையிலும், நிலையற்றகுண மில்லாததாயும் அல்லது சகல சந்தேகங்களிலிருந்தும் நீங்கினதாயும் இருக்கிற அறிவே பிரத்தியக்ஷமாகும்.

(2) **அனுமானம்:—**

**अथ तत्पूर्वकं त्रिविधमनुमानं पूर्ववच्छेषवत्सामान्यतो दृष्टञ्च ॥**

நியாயசூத்ரம். I. I. 5.

இரண்டுபொருள்கள் ஒரே சமயத்தில் ஒரேவிடத்திலிருப்பதைக் கண்டபிறகு வேருெருசமயத்தில், இரண்டிலொன்றைக்கண்டால், மீதியான மற்ருென்றை ஊகிக்கலாம். உதாரணமாக பிள்ளை யொன்றைக்கண்டவுடன், அதற்குப் பெற்ருேர்களிருக்க வேண்டுமென்பதை ஊகிக்கிறீர்கள். மலைக்குப் பின்னல் எழும் புகையிலிருந்து, நெருப்பை ஊகிக்கிறீர்கள். அல்லது இன்னுமொரு உதாரணத்தை எடுத்துக்கொள்ளுவோம். இச்சமயத்தில் இவ்வுலகில் இன்ப துன்பங்கள் ஏற்றத்தாழ்வாயிருப்பதிலிருந்து, முன் பிறப்பில் நம்புகிறீர்கள். அனுமானத்தில் மூன்று விதமுண்டு.

(1) **பூர்வவத்:**—காரணத்திலிருந்து கார்யத்தை யறிவதேயாம். அதாவது மேகங்களைக்கண்டு, வரப்போகும் மழையை யறிதலாம். அல்லது கல்யாணமொன்றைக்கண்டு, ஒருநாள் அத்தம்பதிகளிருவருக்கும் மக்கட்பேறு உண்டாகமென்பதாம். அல்லது கல்வியைப் பயிலுகிற திலிருந்து பிள்ளைகள் ஒருநாள், கற்றுணர்ந்த வித்வான்களாவார்க ளெனவறிதலாம்.

(2) **சேஷவத்:**—கார்யங்களைக்கண்டு காரணங்களை ஊகித்தல். உதாரணங்களாவன :—நதியில் ஜலப்பெருக்கைக்கண்டு, அது உண்டாகும் மலைப்பிரதேசத்தில் மழையதிகமாய் பெய்திருக்கவேண்டும் என்று ஊகிப்பது. பிள்ளையைக்கண்டவுடன், அதற்கு உடனே தகப்பனிருக்கவேண்டுமென்று நிச்சியிப்பது. சிருஷ்டியைக்கண்டு அதற்கு அநாதி கர்த்தாவான ஈச்வரனை ஊகிக்கிறோம். மேலும், இன்பம் அல்லது துன்பத்திலிருக்கிறவனைக்கண்டு முன்னே பாபம் அல்லது புண்ணியம் செய்திருப்பான் என்று அறிகிறோம். ஏனெனில் பாப புண்ணியகளுக்கேற்ப சுகதுக்கங்கள் விளைகின்றன வென்பதை நீங்கள் அறிவீர்கள்.

(3) **சாமான்யதோ திருஷ்ட:**—கார்ய காரண சம்பந்தமில்லாமல், இரண்டிற்கும் ஏதோவொரு உவமை இருப்பதை ஊகிக்கிறோம். உதாரணமாக முதற்விடத்திலிருந்து போகாமல் இரண்டாவது இடத்தை யடையமுடியாது. ஆகையால் ஒரு விடத்தில் ஒருவனைக்கண்டால் உடனே அவன் முன்னிடத்திலிருந்தே பின்னிடத்திற்கு வந்து இருக்கவேண்டுமென்று ஊகிக்கிறீர்கள்.

**प्रत्यक्षस्य पश्चान्मीयते ज्ञायते येन तदनुमानम् ॥**

பிரத்தியக்ஷமான பிறகு உண்டாகும் அறிவிற்கே அனுமானம் என்று பெயர். உதாரணமாக புகையைப் பிரத்தியக்ஷமாகப் பார்த்தாலொழிய பார்க்காமலிருக்கப்பட்ட அக்னியுடைய அறிவு உண்டாகாது.

(3) **உபமானம்:**—

**प्रसिद्धसाधर्म्यात्साध्यसाधनमुपमानम्** நியாய சாஸ் I. I. 6.

மற்றொரு பொருளுடன் இசைந்திருப்பதைக்கண்டு, ஒரு பொருளுடைய அறிவைக்கொள்ளலே உபமானமாகும்.

அறியவேண்டிய பொருளுக்குச் **சாத்ய** மென்றும், இருபொருளுக்கும் வேண்டிய உவமைகளைப் புலனுக்குகிற வழிக்குச் **சாதன** மென்றும் பெயர்களாம். உதாரணங்கள்:—“விஷ்ண மித்திரனை அழைத்துவா” என்று கட்டளையிடுகிறான். இதற்கு முன்னால் அவனைக்கண்டதில்லை யாதலால், வேலைக்காரன் “நான் அவனைப்பார்த்ததில்லை” என்கிறான். அதற்கு “உனக்குத் தேவதத்தனைத் தெரியுமல்லவா”? என்கிறான் எஜமானன். ஆமாம்

தெரியும் என்று பதில் சொன்னவுடன், எஜமானன் சொல்லுவான் "தேவதத்தனைப்போலவே விஷ்ணு மித்திரனும் இருப்பான்". உடனே வேலைக்காரன் விஷ்ணுமித்திரனை அழைத்துவரச் செல்வான். தேடிச்சென்று கொண்டிருக்கும்வழியில் தேவதத்தனை ஒத்து அவனைப்போலிருக்கிறவனைப் பார்த்து விஷ்ணு மித்திரனுயிருக்கவேண்டும் என நிச்சயித்து தன் எஜமானனிடம் அழைத்துச்செல்வான். இரண்டாவது உதாரண மெடுத்துக்கொள்வோம். "நீல் காம்" (கவரிமா) என்னவென்று ஒருவன் வினவ, மற்ருருவன் பசுவைப் போலிருக்கும் என்கிருன். காட்டிற்குச்சென்று அத்தகைய மிருகத்தைக் கண்டு இதுதான் "நீல் காம்" என்று நிச்சியம் செய்கிருன். தேவதத்தனைக் கண்டு விஷ்ணு மித்திரனை அறிவது பசுவையொத்த விலங்கைக்கொண்டு "நீல்காமை" அறிவது. இவ்விதமான அறிவிற்கே உபமான மெனப்பெயர். விஷ்ணு மித்திரன், நீல்காம் இவ்விரண்டும் சாத்தியம். தேவதத்தன், பசு இவ்விரண்டும் சாதனம்.

(4) சப்தம் (வார்த்தை)—

**आप्तोपदेशः शब्दः ॥** நியாய. I. I. 7.

முற்றும் கற்றுணர்ந்த வித்வான்கள்; தர்மபுத்தியுள்ளவர்கள்; பரோபகாரப்பிரியமுள்ளவர்கள்; உண்மை உரைப்பவர்கள்; ஊக்கமுள்ளவர்கள்; ஐம்புலன்களையடக்கினவர்கள்; சகல ஜனங்களுடைய நன்மையைக் கோருகிறவர்கள்; தங்களுடைய அறிவு, அனுபவம், கொள்கை, முதலானவைகளால் தான் அடைந்த இன்பத்தின் மார்க்கத்தைப் பிறர்களுக்கும் எடுத்துரைக்க வேண்டுமென்று உண்மையாய் விரும்புகிறவர்கள்; மனதில் உறுதியாயுள்ள உண்மை, நன்மை, இவைகளைப் பரவச்செய்கிறவர்கள்; அணுவிலிருந்து ஈச்வரன் வரையில் தெரிந்த அறிவாளர், இவர்களெல்லோரும் ஆப்தர்களெனப் படுகிருர்கள். ஆப்தர்களெல்லோரையும்விடச் சிறந்தவராயும் உண்மையுமானவர் கடவுளே. அவருடைய வார்த்தையே வேதமாகும். இதற்கே சப்தபிரமாணமென்று பெயர்.

(5) இதிகாஸ: —

**न चतुष्ट्वमैतिह्यार्थापत्तिसम्भवाभावप्रामाण्यात् ॥** நியாய. 2. 2. I.

எவ்வவ்மனிதன் எவ்வவ்மாதிரியிருந்தான். எவ்வவ்வேலை செய்தான். என்பதைப்புகட்டுவதே இதிகாசமாகும். அதாவது தேசசரித்திரமே அல்லது மனிதனுடைய ஜீவிய சரித்திரமேயாகும்.

(6) அர்த்தாபத்தி:—தீர்மானம். முடிவு.

**" अर्थादापद्यते सा अर्थापत्तिः " केनाचिदुच्यते " सत्सु घनेषु वृष्टिः सति कारणे कार्यं भवतीति किमत्र प्रसज्यते, असत्सु घनेषु वृष्टिरसति कारणे च कार्यं न भवति "**

சொன்ன விவரங்களிலிருந்து விளையும் முடிவுக்கே இப்பெயர். உதாரணமாக, "மேகங்களிலிருந்து மழை பெய்கிறது" "காரணங்களிலிருந்து கார்யமுண்டாகிறது" என்று ஒருவன் சொன்னால், இதிலிருந்து உண்டாகும் முடிவு இதுவேயாகும். "மேகங்களில்லாத விடத்தில் மழை யிராது" "காரணமில்லாத கார்யங்கிடையாது."

(7) சம்பவம்:—சாத்தியமானது.

**" सम्भवति यस्मिन् स सम्भवः "**

எதாவது ஒரு விஷயத்தைக் கேட்டவுடன் அது ஆகக்கூடியதா என்பது மனதில் உடனே உதிக்கிறது. இயற்கை அமைப்பிற்கு மாறாயிருப்பதெல்லாம் ஆகக்கூடாதது. ஆகையினால் அவை உண்மையாகாது. உதாரணமாக:—பெற்றோர்களன்னியில் பிள்ளை பிறந்தது; இறந்தவனுக்கு யாரோ ஒருவன் உயிர் அளித்தான்: சமுத்திரத்தில் கற்களைமிதக்கச்செய்தான்: மலைகளைத் தூக்கினான்; சந்திரனைத்துண்டு துண்டாகச் செய்து விட்டான்; பரமேச்வரனுடைய திரு அவதாரமே அவன்; மனிதன் தலையில் கொம்புகள் முளைக்கக்கண்டான்; மலடி வயிற்றுப்பிள்ளைகளுடைய விவாகத்தை முடித்துவைத்தான்: என்பவைகளெல்லாம் அசம்பவங்களாம். ஏனெனில் இவையெல்லாம் இயற்கை யமைப்பிற்கு விரோதமானவைகள். இயற்கை யமைப்பிற்கு ஒற்றவைகளே "சம்பவ"மாகும்

(8) அபாவம்:—இன்மை, இல்லாமலிருப்பது.

**" न भवन्ति यस्मिन् सोऽभावः "**

கிடைக்குமென்று சொன்ன விடத்தில் இல்லாமலிருப்பதைக் கண்டு, ஒருபொருள், வேறொரு இடத்தில் கிடைக்குமென்றறிந்து கொள்வது. உதாரணமாக "யானையை லாயத்திலிருந்து கொண்டுவா" என்பானேயானால் ஒருவன் அங்கே போய் அது இல்லாமலிருப்பதைக்கண்டு, வேறிடத்திலிருக்க வேண்டுமென அறிவான். உடனே அங்கு சென்று சமீபத்திலுள்ள அதை அவிழ்த்து வருவான். இப்பொழுது பிரமாணங்களில் எண்விதத்தைச் சுருங்கச் சொன்னோம். இதிகாசத்தை, சப்தத்துடனும் அர்த்தாபத்தி, சப்பவம், அபாவம் இவைகளை அனுமானத்துடனும் சேர்த்தால் எட்டை, நான்காக்கலாம். இவ்வைந்து பிரமாணங்களைக் கொண்டே எது உண்மை, எது பொய் என்பதை அறியமுடியும். வேறு எவ்விதத்திலும் முடியாது.

**धर्मविशेषप्रसूताद् द्रव्यगुणकर्मसामान्यविशेषसमवायानां पदार्थानां साधर्म्यवैधर्म्याभ्यां तत्त्वज्ञानान्निःश्रेयसम् ॥** வைசேஷிகசாஸ. I. I. 4.

தர்மத்தைத்தக்கவாறு அனுசரிப்பதினால் மனிதனுடைய ஆத்மாவானது பரிசுத்தத்தையும, சிறப்பையும் அடைந்து அடியில் கண்ட பொருள்களுடைய தத்துவஞானத்தையுமடைகிறது. ஸாதர்மயம் அதாவது வஸ்துஸ்வரூபம், குணங்களுடைய பொருத்தம், வைதர்ம்யம்; ஏற்றத்தாழ்வு. உதாரணமாக பூமி உறுதியானது தண்ணீர் இளகும் திரவியம்; பதார்த்தம், குணம்; தன்மை, கர்மம்: செய்கை, சாமான்ய; ஒற்றுமை, விசேஷம்; வேற்றுமை; சமாவாயம்; ஏற்ற உறவு.

நவதிரவியங்கள்.

**पृथिव्यापस्तेजोवायुराकाशं कालो दिगात्मा मन इति द्रव्याणि ॥** வை. 1. 1. 5.

பூமி, ஜலம், அக்கினி, காற்று, ஆகாசம், காலம், திசை, ஆத்மா, மனம், ஆக பதார்த்தங்கள் ஒன்பது, இவைகளுக்கே திரவிய மென்று பெயர்.

**क्रियागुणवत्समवायिकारणमिति द्रव्यलक्षणम् ॥** வைசே. 1. 1. 15.

எதில் குணம் மாத்திர மிருக்கின்றதோ அதற்கே திரவியம் என்றுபெயர். பூமி, ஜலம், அக்னி, காற்று, மனம், ஆத்மா இவ்வாறும் கிரியைகளையும், குணங்களையும் கொண்டிருக்கின்றன. ஆகாசம், திசை, காலம் இம்மூன்றிலும் கிரியை இல்லாமல் குணம் மாத்திரம் இருக்கின்றன.

**(समवायि) " समवेतुं शीलं यस्य तत् समवायि, प्राग्वृत्तित्वं कारणं समवायि च तत्कारणं च समवायिकारणम् "**

சேர்க்கையினால் உற்பத்தியை யடைந்து சுபவாத்தில் கலந்து, சுபாவ யுக்தகாரியத்திற்கு முந்தியிருக்கும் காரணத்தையுடையதாயிருக்கிற பொருள்களுக்குத் திரவியம் எனப்பெயர். எதனால் பொருள்களுடைய தோற்றம் வெளிப்படுகிறதோ அதற்கே லக்ஷண மெனப்படும். உதாரணமாக கண்ணினால் உருவமும், வெளிச்சமும் தெரியவருகிறது.

இவைகளுடைய விளக்கம்.

1. பிருத்வி.

**रूपरसगन्धस्पर्शवती पृथिवी ॥** வைசே. 2. 1. 1.

உருதி, உருசி வாசனை ஸ்பரிசிக்கக்கூடியது; முதலான குணங்களையுடையது பிருத்வி. தீ, தண்ணீர், வாயு இவைகளுடன் சேருவதினால் இக்குணங்கள் அதற்கு உண்டாயின.

**व्यवस्थितः पृथिव्यां गन्धः ॥** வைசே. 2. 2. 2.

பூமிக்குறியது வாசனை; ஜலத்திற்குறியது சுவை; நெருப்பிற்குறியது உருவம் அல்லது வெளிச்சம்; வாயுவுக்குறியது ஸ்பரிசிக்ககூடியத்தன்மை, ஆகாசத்திற்குறியது சப்தம்.

2. ஆப

**रूपरसस्पर्शवत्य आपो द्रवाः स्निग्धाः ॥** வைசே. 2. 1. 2.

ரூபம், சுவை, உறுதி, திரவத்தன்மை; மிருதுவாயிருத்தல், இக்குணங்களையுடையது ஆப: (தண்ணீர்.) இவைகளெல்லாவற்றிலும் சுவையே அதன் முக்கிய குணமாகும். தீ, காற்று இவைகளுடன் சேருங்கால், உருவத்தையும், ஸ்பரிசிக்கக்கூடிய தன்மையையும் அடைகிறது.

**अप्सु शीतता ॥** வைசே. 2. 2. 3.

சீதளம் ஜலத்தின் சாதாரண குணமாகும்.

3. தேஜ-

**तेजो रूपस्पर्शवत् ॥** வைசே. 2. 1. 3.

ஸ்பரிசிக்கக்கூடிய தன்மை, உருவம் அல்லது வர்ணம் இவை தீயுடைய குணங்களாகும். உருவமே (வர்ணம்) அதனுடைய இயற்கைக் குணம். ஸ்பரிசிக்கக்கூடியதன்மையை காற்றுடன் கலந்து பெறுகிறது.

4. வாயு.

**स्पर्शवान् वायुः ॥** வைசே. 2. 1. 4.

ஸ்பரிசிக்கக்கூடியத்தன்மையே வாயுவின் குணம். ஆனல் உஷ்ணத்தையும் சீதளத்தையும் தீ, ஜலம் இவைகளுடன் கலந்து பெறுகிறது.

5. ஆகாச

**त आकाशे न विद्यन्ते ॥** வைசே. 2. 1. 5.

ஆகாசத்திற்குரூப, ரஸ, ஸ்பர்ச, கந்தம் முதலானவைகள் கிடையாது. சப்தம் ஒன்றே அதன் குணமாகும்.

**निष्क्रमणं प्रवेशनमित्याकाशस्य लिङ्गम् ॥** வைசே. 2. 1. 20.

பிரவேசித்து வெளியாகிறபடியினல் அதற்கு ஆகாசம் என்றுபெயர்.

**कार्य्यान्तराप्रादुर्भावाच्च शब्दः स्पर्शवतामगुणः ॥** வைசே. 2. 1. 25.

பூமியிலேயோ, வேறு எதிலேயோ அல்லது அவைகளுடைய பொருள்களிலேயோ இல்லை-சப்தமொன்றே அதனுடைய குணமாகும்.

6. காலம்

**अपरस्मिन्नपरं युगपच्चिरं क्षिप्रमिति काललिङ्गानि ॥** வைசே. 2. 2. 6.

நிகழ்காலம், அதற்கு முன்னும், பின்னும் நிகழும் காலம், வேகம், தாமதம் முதலானவைகளைக்காட்டுகிறதே காலமாகும்.

**नित्येष्वभावादनित्येषु भावात्कारणे कालाख्येति ॥** வைசே. 2. 2. 9.

பௌதிக சம்பந்தங்களில் காலத்தைக் காணலாமே தவிர அதற்கு விரோதமான குணங்களைக் காணமுடியாது.

7. திசை

**इत इदमिति यतस्तद्दिश्यं लिङ्गम् ॥** வைசே. 2. 2. 10.

குறிப்பிட்ட இடத்திலிருந்து கிழக்கு, மேற்கு, தெற்கு வடக்கு என்று சொல்லுவனவே திசையெனப்படும்.

**आदित्यसंयोगाद् भूतपूर्वाद् भविष्यतो भूताच्च प्राची ॥** வைசே. 2. 2. 14.

சூரியன் உதயமாவது கிழக்கு என்றும், அது அஸ்தமனமாகும் திசை மேற்கு என்றும், கிழக்கு நோக்கிநிற்கும் மனிதனுடைய வலதுபக்கம் தெற்கு என்றும், இடதுபக்கம் வடக்கு என்றும், கூறப்படும்.

एतेन दिगन्तरालानि व्याख्यातानि ॥ வைசே. 2. 2. 16.

கிழக்கிற்கும் தெற்கிற்கும் இடையிலுள்ள பாகத்தை ஆக்னேயமென்றும், தெற்கு மேற்கு இவைகளிடையிலுள்ள பாகத்தை நைரித்யமென்றும், மேற்கு வடக்கு இவைகளிடையிலுள்ள பாகத்தை வாயவ்யமென்றும், வடக்கு கிழக்கு இவைகளுக்கு நடுவிலுள்ள பாகத்தை ஈசான்யம் என்றும் சொல்லுவார்கள்.

8. ஆத்மா

इच्छाद्वेषप्रयत्नसुखदुःखज्ञानान्यात्मनोलिङ्गमिति ॥ ந்யாயசர்ஸ. 1. 10.

ஆசை, விரோதம், பிரயத்தினம், சுறு சுறுப்பு, இன்பம், துன்பம், ஞானம், அறிவு இக்குணங்கள் எதில் விளங்குகிறதோ அதுவே ஜீவாத்மாவாகும். வைசேஷிகத்திலும் அடியில் கூறும் வண்ணம் விவரமாய் விளக்கப்பட்டிருக்கிறது.

प्राणाऽपाननिमेषोन्मेषजीवनमनोगतीन्द्रियान्तर्विकाराः सुखदुःखेच्छाद्वेष-
प्रयत्नाश्चात्मनो लिङ्गानि ॥ வைசே. 3. 2. 4.

வெளிக்காற்றை உட்கொள்ளல், உட்கொண்ட காற்றை வெளியில் விடல், கண்ணிமைகளை கீழ்ப்பக்கமாய்க் காட்டுதல், மேற்புறஞ் சேர்த்தல், பிராணனைத் தரித்துக் கொண்டிருத்தல், உருபுக்களுடைய வேலைகளை செய்தல், உயிர் உணர்ச்சிகள் (பசி, தாகம், ஜ்வரம், வலி முதலானவைகள்) ஆசை, வெறுப்பு. இன்பம், துன்பம், ஞாபகத்துடன் கஷ்டப்படல் ஞானம், இவைகளை அடக்கியிருப்பது ஆத்மா.

9. மனஸ்

युगपज्ज्ञानानुत्पत्तिर्मनसो लिङ्गम् ॥ ந்யா. 1. 1. 16.

ஒரே சமயத்தில் இருபொருளைக் கவலிக்க சக்தி எதற்கு இல்லையோ அதற்கே மனமென்றுபெயர். அவைகளுடைய குணங்களாவன:—

रूपरसगन्धस्पर्शाः संख्यापरिमाणानि पृथक्त्वं संयोगविभागौ परत्वाऽपर-
त्वे बुद्धयः सुखदुःखेइच्छादेषौ प्रयत्नाश्च गुणाः ॥ வைசே. 1. 1. 6.

உருவம், சுவை, வாசனை, ஸ்பரிசம், சப்தம், எண்ணிக்கை, அளவு, தனித்திருத்தல், சேர்ந்திருத்தல் பிரித்தல், தூரமாயிருத்தல் சமீபம், புத்தி, இன்ப துன்பம், ஆசை, பகை, பிரயத்தினம், கனமாயிருத்தல், இலேசாயிருத்தல், ஸ்நேகம் (பற்றுடனிருத்தல்) சமஸ்காரம், தர்மம், அதர்மம் ஆக குணங்கள் இருபத்திநான்கு.

द्रव्याश्रय्यगुणवान् संयोगविभागेष्कारणमनपेक्ष इति गुणलक्षणम् ॥
வைசே. 1. 2. 16.

தன் இருப்பிற்காகப் பொருளொன்றை தழுவி இருப்பதும், வேறு ஒன்றையும் தழுவாமலிருப்பதுமே குணமெனப்படும். சம்யோகவியோகத்தின் காரணமாக ஒருபொழுதுமில்லை. மற்றெவைகள் அன்னியிலும் இருப்பதே அது.

**श्रोत्रोपलब्धिर्बुद्धिनिर्ग्राह्यः प्रयोगेणाऽभिज्वलित आकाशदेशः शब्दः ॥** மகாபாஷ்.

காதால் கேட்டு, புத்தியினால் அறிந்து, பேச்சினால் தெரிந்து, ஆகாசத்தில் குடிகொண்டிருக்கிறதே சப்தமாகும். கண்களினால் பார்த்து தெரிந்து கொள்ளக் கூடியதே ரூபமாகும். இனிப்பு முதலியவைகளைப்போன்று நாக்கைப்பாதிக்கும் சுவையே ரஸமாகும். மூக்கினால் முகரப்படுகிறதே கந்தமாகும். தோல்களின் வழியாய் உணரப்படுகிறதே ஸ்பர்சம். ஒன்று, இரண்டு, மூன்று என்று எண்ணப்படுகிறதே சங்கியை. கனமானது, இலேசானது என்றவைகளைப்போல் நிறையைக்காண்பிப்பதே பரிமாணம். ஒன்றிலிருந்து வேறாயிருப்பதே **பிரதக்த்வம்.** ஒன்றுடன் சேர்ந்து கலந்துகொள்வதே **சம்யோகம்.** சேர்ந்திருப்பதைத் தனித்தனியாகப் பிரிப்பதே **விபாகம்.** ஓரிடத்திலிருந்து இவ்வளவு தூரமென்பதே **பரத்வம்.**

ஓரிடத்தைக் குறித்து அதற்குச் சமீபமாய் இருக்கிறது என்பதே **அபரத்துவம்.** எதனால் நல்லது கெட்டது என்கிற ஞானம் உதிக்கின்றதோ அதுவே **புத்தி.** இன்பமே **சுகம்.** துன்பே **துக்கம்.** ஆசையே **இச்சை.** பகைக்கொள்வது **துவேஷம்.** பலவிதமாக பலம் பாரக்கிரமம் முதலியவைகளை உபயோகிப்பது **பிரயத்தினம்.** பாரமாய் இருப்பது **குருத்வம்.** உருகுந்தன்மையுடனிருப்பது **திரவத்துவம்.** எண்ணெய்ப்பசையைப்போல் பிரியாமலும் சேர்ந்தும் இருப்பது **சிநேகம்.** பிறவஸ்துக்களினுடைய சேர்க்கையினால் உண்டாகும் பலங்களுக்குச் **சமஸ்காரம்** எனப்படும். கடினமாயும் நியாயாசரணை முதலியவைகளுடனிருப்பதற்குத் **தர்மம்** என்று பெயர். கடினம் முதலியவைகளுக்கு விரோதமாய் சுலபமாயிருக்கும் தன்மைகளுக்கும் அநியாயாசரணைகளுக்கும் **அதர்மம்** என்று பெயர்.

கர்மம்

**उत्क्षेपणमवक्षेपणमाकुञ्चनं प्रसारणं गमनमिति कर्माणि ॥** வைசே. I. I. 7.

ஏற்றம், இறக்கம், சுருக்கம், பெருக்கம், வருகை, செல்லுகை, சுழற்சி, முதலியவைகளெல்லாம் கர்மத்தினுடைய தன்மைகளாகும்.

**एकद्रव्यमगुणं संयोगविभागेष्वनपेक्षकारणमिति कर्मलक्षणम ॥** வைசே. I. I. 17.

**" एकन्द्रव्यमाश्रय आधारो यस्य तदेकद्रव्यं न विद्यते गुणो यस्य यस्मिन् वा तदगुणं संयोगेषु विभागेषु चाऽपेक्षरहितं कारणं तत्कर्मलक्षणम् "**

**" अथवा यत् क्रियते तत्कर्म, लक्ष्यते येन तल्लक्षणम् , कर्मणो लक्षणं कर्मलक्षणम् "**

ஏதேனுமொரு பொருளை ஆதாரமாகக் கொண்டு குணங்களிலிருந்து விலகி, சேர்க்கையிலும் பிரிவிலும் சம்பந்தமன்னியிலு மிருப்பதற்கே **கர்மம்** என்று பெயர்.

சாமான்யம்

**द्रव्यगुणकर्मणां द्रव्यं कारणं सामान्यम् ॥** வைசே. I. I. 18.

விளைவு, குணம், சுபாவம் இவைகளெல்லாவற்றிற்கும் காரணமாயும் அதனல் எல்லாவற்றிற்கும் சரியாயிருப்பதே **சாமான்ய** மெனப்படும்.

விசேஷம்

**द्रव्याणां द्रव्यं कार्यं सामान्यम् ॥** வைசே. I. I. 32.

**द्रव्यत्वं गुणत्वं कर्मत्वञ्च सामान्यानि विशेषाश्च ॥** வைசே. I. 2. 5.

திரவியங்களுக்குள் திரவியத்வமும், குணங்களுள் குணத்துவமும், செய்கையில் சுறு சுறுப்புமே சாமான்யங்களென்றும் (வித்தியாசம்) சொல்லப்படுகின்றன. திரவ்யத்வம் அதாவது (திரவ்யமாயிருத்தல்) சகல திரவ்யங்களுக்குச் சமானமானது. ஆனல் வேறு குணங்களிலிருந்தும் அது தனிமையாயிருக்கிறது. ஆகவே அது (திரவ்யத்வம்) சாமான்யமும் (சாதாரணப்பொருள்) விசேஷமும் (சிறப்புப் பொருளும்) ஆகிறது.

இவ்விதமே யாவற்றையும் அறிதல் வேண்டும்,

**सामान्यं विशेष इति बुद्ध्यपेक्षम् ॥** வைசே. I. 2. 3.

பொதுவானவைகளையும்(சாமான்யங்களையும்)சிறப்பானவைகளையும் புத்தியைக் கொண்டு அறியவேண்டும். மானிடவர்க்கத்தில் 'மனிதத்துவம்' சாதாரணமானது ஆனல் அதுவே தான், பசு முதலான விலங்குகளிலிருந்து பிரிக்கும் (சிறப்புப்பொருள்) விசேஷணம். ஆண் பெண்ணுயிருத்தலில், பிராமணத்வம் க்ஷத்திரயத்வம், வைசியத்வம், சூத்ரத்வம் விசேஷமாகின்றது. பிரம்மத்வத்தில் சகல பிராம்மணர்களும் சேருகிருர்கள். அது சாமான்யமானதே. ஆனல் க்ஷத்திரியர் வைசியர் முதலானவர்களிலிருந்து பிறிக்கும் விசேஷணம் அதுவே. வீரர்களிலே வீரத்தனமும் வைசியர்களில் வியாபாரதன்மையும் சூத்திரர்களில் (சேவகத்தனமும்) சாமான்யம். இவ்விதமே யாவற்றையும் அறியவேண்டும்.

சமாவாயா

**इहेदमिति यतः कार्यकारणयोः स समवायः ॥** வைசே. 7. 2. 26.

மொத்ததிற்கும், பாகத்திற்கும். கிரியைக்கும் கார்யத்திற்கும், கர்த்தாவுக்கும், பதார்த்தங்களுக்கும் அதனுடைய குணங்களுக்கும், கூட்டங்களுக்கும், கார்யங்களுக்குமுள்ள பரஸ்பர நித்யசம்பந்தத்திற்குச் **சமாவாய** வென்று பெயர். இருபதார்த்தங்களுக்கு முள்ள சம்பந்தத்திற்கு **சம்யோக** மென்று பெயர். அது அநித்யமான சம்பந்தம்.

சாதர்மியம்

**द्रव्यगुणयोः सजातीयारम्भकत्वं साधर्म्यम् ॥** வைசே. I. I. 9.

திரவியங்களுடையவும் குணங்களுடையவும் தக்க ஜாதிய கார்ய ஒற்றுமைக்கே **சாதர்மியம்** என்று பெயர். எப்படியெனில்: பூமியில் ஜடத்வதர்மம் அல்லது குணமிருக்கின்றது. அக்குணமே அப்பூமியிலிருந்து எடுத்து செய்யப்பட்ட மண்பாண்டத்திலு மிருக்கின்றது. அங்ஙனமே ஜடத்வகுணமானது, ஜலத்தி

லும் அதிலிருந்துண்டாகும் பதார்த்தங்களிலும் தென்படுகின்றது. உதாரணமாக பனிக்கட்டி முதலியவைகள், ஜடத்தனத்தில் பூமியையும் ஜலத்தையும் ஒத்திருக்கின்றது. அவை இரண்டிற்கும் அது சமமான தர்மம்.

வைதர்மியம்

" द्रव्यगुणयोर्विजातीयारम्भकत्वं वैधर्म्यम् "

சாதர்மியத்திற்கு மாறுனது அவை தர்மயம் குணங்கள் வேறுகும் பொழுது போலாம். உதாரணமாக பூமி, தண்ணீர். பூமி கடினமாயும், உலர்ந்தும் வாசனையுடனுமிருக்கிறது. தண்ணீரோ திரவமாயும், மிருது வாயுமிருக்கிறது. ஆகவே இச்சந்தர்ப்பத்தில் பூமியையும் தண்ணீரையும் வைதர்மயம் எனலாம்.

कारणभावात्कार्यभावः ॥ வைசே. 4. 1. 3.

காரணத்தினுலேயே கார்யமுண்டாகிறது.

न तु कार्याभावात्कारणाभावः வைசே. 1. 2. 2.

கார்யத்தினுடைய அபாவத்தினுலே மாத்திரம் காரண மில்லை யென்று சித்தமாகாது.

कारणाऽभावात्कार्याऽभावः வைசே. 1. 2. 1.

காரணமில்லாமல் கார்யமாகிறதில்லை.

कारणगुणपूर्वकः कार्यगुणो दृष्ट ॥ வைசே. 2. 1. 24.

காரணத்தைப் போலவே கார்யத்தினுடைய குணங்களும்.

अणुमहदिति तस्मिन्विशेषभावाद्विशेषभावाद्विशेषाभावाच्च ॥ வைசே. 7. 1. 11.

பரிமாணத்தில் இரண்டு வகைகள் உண்டு. அணு (சூட்சமம்) மகத் (பெரியது) திரசரேணு (அணுவின் ஒருபாகமானது) ஆனல் அது இரண்டு அணுக்களைக் காட்டிலும் பெரியது. எப்படி மலைகள் பூமியை விடச்சிறிதாயும் மரங்களை விடப் பெரியதாயும் இருக்கிறதோ.

सदिति यतो द्रव्यगुणकर्मसु सा सत्ता ॥ வைசே. 1. 2. 7.

பொருள்களுடைய குணகர்மங்களில் "சத்" (இருத்தல்) சப்தம் அடங்கி இருக்கின்றது. அதாவது சத்திரவ்யம், சற்குணம், சற்கர்மம் அதாவது நிகழுங்காலத்தைக் குறிக்கும் அன்வயங்கள் எல்லாவற்ருேடும் சேர்க்கப்பட்டிருக்கிறது.

भवोनुवृत्तेरेव हेतुत्वात्सामान्यमेव வைசே. 1. 2. 4.

சத் (விளங்கியிருத்தல்,) எல்லா வஸ்துக்களிலுமிருக்கிற அதை பெரிய பொது மடங்கு என்பார்கள். இவ்விதமே பொருள் விளக்க நியாயமும்

ஐந்துவிதமான அபாவங்கள்.

क्रियागुणव्यपदेशाभावात्प्रागसत् ॥ வைசே. 9. 1. 1.

விசேஷ நிமித்த காரணத்திற்கு முந்தி, பதார்த்தத்தினுடைய அல்லது கிரியா குணங்களுடைய அபாவத்திற்கு பிராக்பாவ மென்று பெயர்.

உதாரணமாக மண்பாண்டம் அல்லது துணி, உற்பத்திக்கு முன்னால் இருக்க வில்லை.

**सदसत्** வைசே. 9. I. 2.

அது பூர்வத்திலிருந்தது. தற்சமயமில்லை. அதாவது மண்பாண்டம் உடைந்த பிறகு உள்ள நிலைமை இதற்கே **பிராதுர்பாவ** மென்று பெயர்.

**सच्चासत् ॥** வைசே. 9. I. 4.

ஒன்றிலிருந்தும் மற்றொன்றில் இல்லாமலும் இருக்கிறது. இதற்கே **அன்யோன்யபாவ** மென்று பெயர்.

உதாரணமாக குதிரை பசுவில்லை, பசு குதிரையில்லை. அதாவது பசுவில் குதிரையில்லாமலிருக்கிறது. அப்படியே மற்றொன்றையும் மாற்றித் தெரிந்து கொள்ளவேண்டும். பசுவிலே பசுவும், குதிரையிலே குதிரையுந்தான் இருக்கின்றது.

**यच्चान्यदसदतस्तदसत् ॥** வைசே. 9. I. 5.

மேற்சொன்ன மூன்றுவகைகளிலிருந்து தனிமையாய் பிரிந்து நிற்பதற்கு **அத்யந்த அபாவ** மென்று பெயர் (அதாவது:—ஒருபோதுமில்லாமலிருப்பது) உதாரணங்கள். நரசிங்கம், மனிதர்களுக்கு கொம்பு இருப்பது, ஆகாசபுஷ்பங்கள், மலடியின் பிள்ளைகள், இவை போன்றன.

**नास्ति घटो गेह इति सतो घटस्य गेहसंसर्गप्रतिषेधः ॥** வைசே. 9. I. 10.

ஐந்தாவது. மண்பாண்டம் வீட்டிலில்லை. அது வேறு எவ்விடத்திலோ இருக்கிறது. வீட்டிற்கும் மண்பாண்டத்திற்கும் யாதொரு சம்பந்தமுமில்லை. இங்ஙனம் ஐந்து விதமான அபாவங்கள்.

**इन्द्रियदोषात्संस्कारदोषाच्चाविद्या ॥** வைசே. 9. 2. 11.

இந்திரியங்களினலும் சமஸ்காரங்களினலும் உண்டாகிற தோஷங்களினலேயே அவித்தை உற்பத்தியாகின்றன.

**तद्दुष्टज्ञानम् ॥** வைசே. 9. 2. 12.

பொய்யாயும் விபரீதமாயும் இருக்கப்பட்ட ஞானத்திற்கே **அவித்தை** யென்று பெயர்.

**अदुष्टं विद्या ॥** வைசே. 9. 2. 12.

ஏற்றதாயும் உண்மையாயு மிருக்கும் ஞானத்திற்கு **வித்தை** யென்று பெயர்.

**पृथिव्यादिरूपरसगन्धस्पर्शा द्रव्या नित्यत्वादनित्याश्च ॥** வைசே. 7. I. 2.

கார்யரூப பிருதிவி முதலான பொருள் அதிலிருக்கும் ரூபம், ரசம், கந்தம், ஸ்பரிசம், குணம், முதலான சகல திரவ்யங்களும், பதார்த்தங்களும் அநித்தியமாயிருக்கிறபடியினல் நித்தியமில்லாமலிருக்கிறது.

**एतेन नित्येपु नित्यत्वमुक्तम् ॥** வைசே. 7. I. 3.

இதில் காரணபூதமான பிருதிவி முதலியவைகளில் பிரகிருதி முதலான நித்திய பதார்த்தங்களில் கந்தாதி குணங்கள் இருக்கிறபடியினல் அதுவும் நித்யமாகின்றது.

**सदकारणवन्नित्यम् ॥** வைசே. 4. 1. 1.

எது எப்பொழுதும் இருந்துகொண்டு அதற்குக் காரணமும் இல்லாமலிருக்கின்றதோ அது நித்தியமாயுள்ளது. காரியத்தில் தென்படும் காரணங்களின் குணங்கள் அநித்தியமானது.

**अस्येदं कार्यं कारणं संयोगि विरोधि समवायि चेति लैङ्गिकम् ॥** வைசே. 9. 2. 1.

இதுகாரியம்,இதுகாரணம் என்றுசொல்லும்போது நான்குவிதஞானங்கள் உண்டாகின்றது. பதார்த்தத்திற்கும் அதனுடைய குணங்களுக்குமுள்ள சம்பந்தத்திற்கும் **சமவாயி** என்று பெயர். ஆகாசம் பரிமாணமாயுள்ளது (பரவியுள்ளது) என்ற நெருங்கின சம்பந்தம். பரஸ்பரசம்பந்தப் பட்டிருக்கிற ஞானத்திற்கு **சம்யோகி** என்று பெயர். தேகமென்று சொல்லும் பொழுதே தேகத்திள்தோல் என்கிற ஞானம் உண்டாகிறது. இங்ஙனம், இன்னும் இதுமாதிரியான சம்பந்தமும் நித்யமானது.

ஒன்றைச் சொல்வதினுல் இரண்டு பதார்த்தின் ஞானம் உண்டாகின்றது. அதற்கு **ஏகார்த்த சமவாயி** என்று பெயர்—தொடு என்ருல் தொடும்பதார்த்ததின் அறிவும் உண்டாகிறது.

விரோதமாயிருக்கப்பட்ட ஞானத்திற்கு **விரோதி** என்று பெயர். அதாவது பெய்த மழை பெய்யப் போகும் மழைக்கு விரோதமாயிருக்கிறது.

**नियतधर्मसाहित्यमुभयोरेकतरस्य वा व्याप्तिः ॥** சாங்கியபி. 5. 26.

**निजशक्त्युद्भवमित्याचार्याः ॥**

**आधेयशक्तियोग इति पञ्चशिखः ॥** சாங்கியபி. 5. 31.

சாத்தியம், சாதனம், இவ்விரண்டுகள் அதாவது சித்தஞ் செய்கிறதற்கு யோக்கியமாயிருக்கிறவும், எதினுல் சித்தஞ் செய்யப்படுகிறதோ அதுவும் இவை இரண்டோ அல்லது ஒன்ரோ, அதாவது அதற்கு வேண்டியவைகளில் சிலவற்றிற்கு **வியாப்தி** என்று பெயர். உதாரணமாக புகைக்கும் அக்னிக்கும் உடனிகழ்ச்சியிருக்கிறது. புகையானது தன்னுடைய உண்மையான சக்தியினுல் உற்பத்தியடைந்து எல்லா பிரதேசங்களிலும் வெகு தூரமான இடங்களிலும் சுற்றித்திரிகிறது. அப்படிச்சுற்றி வேறு இடங்களில் திரிந்தபோதிலும் அக்னியினுடைய சம்பந்தமில்லாமல் சுயமாகவே இருக்கிறது. இதற்குப் பெயர்தான் **வியாப்தி** அக்னியினுடைய சேதன பேதன சாமர்த்தியத்தால் ஜல முதலியவைகள் புகைரூபமாகப் பிரகாசமாகின்றது.

மகாதத்வங்கள் என்று சொல்லப்படுகிற பெரிய மூலவஸ்துக்களில் அல்லது பூதங்களிலிருக்கும் பிரகிருதியினுலாகிய பதார்த்தங்களினுடைய நிரம்புதலுக்கு வேண்டியிருக்கும் சக்திக்கும், புத்தி முதலியவைகளில் பரவப்படுகிறதற்கு அல்லது நிரம்பப்படுகிறதற்கு உள்ள சக்திக்கு அல்லது சாமர்த்தியத்துக்குமுள்ள, பரஸ்பர சம்பந்தத்திற்கு **வியாப்தி** என்று பெயர். உதாரணம்: சக்தியும் (ஆதேயரூபம்) சக்திமான் (ஆதாரரூபம்) இவைகள் இரண்டிற்குமுள்ள சம்பந்தம்.

लक्षणप्रमाणाभ्यां वस्तुसिद्धिः ॥

இவ்விதம் சாஸ்திரங்களுடைய பிரமாணங்களினுல் பரிட்சை செய்து படிக்கவும், படிப்பிக்கவும் வேண்டும். அப்படியில்லாமற்போனுல் மாணுக்கர்கள் சத்தியமான ஞானத்தை அடையமுடியாது. எந்தந்த நூல்களைப் படிப்பிக்கவேண்டுமோ அந்தந்த நூல்களை முன்சொன்ன வண்ணம் பரிட்சை செய்து எது சத்தியமென்று தோன்றுகிறதோ அதையே படிக்கவும் வேண்டும். மேற்கண்ட பரிட்சைக்குச்சரியாய் நிற்காத எப்புஸ்தகத்தையும் படிக்கவும், படிப்பிக்கவும், கூடாது. உதாரணமாக "கந்தவதி பிரிதிவி" (பூமியாயிருப்பது வாசனையைக் கொண்டிருக்கிறது) பரிட்சையினுல் அது உண்மை, உண்மையில்லை என்று தெரியவருகிறது.

## படிக்கவும் படிப்பிக்கவும் வேண்டிய முறை.

(1) பாணினி யுடைய "சிட்சை" சூத்திரங்கள். பெற்ருேர்களும் ஆசிரியரும் எல்லா எழுத்துக்களினுடைய உச்சரிப்புக்களைச் சரிவர எதனுல் எப்படி உச்சரிக்கவேண்டுமோ, அதை அப்படியே கற்பிக்க வேண்டும். உதாரணமாக 'ப' என்னும் சப்தத்தை எடுத்துக்கொள்வோம். உச்சரிக்கும் இடம் உதடு. இரண்டு உதடுகளையும் பூரணமாய்த்திறந்து உச்சரிப்பது முயற்சி. உச்சரிப்பின் கருவி நாக்கு.

(2) பின்பு இலக்கணம். மகாபாஷ்யத்தைப் படிப்பிக்கவேண்டும். புத்தியுள்ளவன், புருஷார்தத்தை இச்சிப்பவன், சுறுசுறுப்புள்ளவன், கபடமில்லாதவன், வித்யாபி விருத்தியைக் கோறுகிறவன், இவர்கள் தினந்தோறும் படித்தும் படிப்பிக்கும் பட்சத்தில் அஷ்டாத்தியாயியை ஒன்றறை வருடத்திலும், மகாபாஷ்யத்தை ஒன்றறை வருடத்திலும் கற்றுப்பூர்ண, வியாகரண பண்டிதன் ஆகிருன். அவர்கள் வைதீக லௌகிக சப்தங்களை வியாகரணசக்தியினுல் அறிந்துகொள்ளுகிருர்கள். மேலும் இதரசம்ஸ்கிருத புஸ்தகங்களைச்சீக்கிரமாகவும் சுலபமாகவும்படித்தும் படிப்பிக்கவும்செய்கிருர்கள். வியாகரணங்கற்பதற்கு வேண்டிய பெருமுயற்சி வேறு எப்புஸ்தக்தைப்படிப்பதற்கும் வேண்டியதில்லை. மூன்று வருஷத்தில் இப்புஸ்தகங்களைப்படிப்பதினுல் எவ்வளவு ஞானமுண்டாகிறதோ அவ்வளவு ஞானம் கெட்ட கிரந்தங்களாகிய "சாரஸ்வதம்" "சந்திரிகை" "கௌமுதி, மனேரமா" ஆகிய புஸ்தகங்களை ஐம்பது வருஷங்கள் படித்தபோதிலும் உண்டாகிற தில்லை. ஏனென்ருல் பெரியோரான மகரிஷிகள் மிக்வும் சுலபத்துடன் அரும் பெரும் விஷயங்களை அவர்களுடைய நூல்களில் வெளிப்படுத்தியிருக்கிருர்கள். அப்படி அரியவிஷயங்களை குறுகிய மனிதர்கள் எப்படி வெளியிடக்கூடும். மகரிஷிகளினுல் காட்டப்பட்ட வழிகள், விஷயங்கள் எல்லாவற்றையும் அறிந்து சீக்கிரமாயும் சுலபமாயும் தெரிந்து கொள்ள உதவியாயிருக்கிறது. குறுகியமனதுள்ளவர்கள் (விசாலபுத்தியில்லாதவர்கள்) எவ்வளவு கடினமான பாஷையில் எழுதவேண்மோ அவ்வளவு கடினமான பாஷையில் எழுதுவார்கள்.

(3) பிறகு யாஸ்கர முனியால் எழுதப்பட்ட **நிகண்டு, நிருக்தம்,** (வேதங்களுடைய அகராதி, சப்தவியுத்பத்தி சாஸ்திரம்) அவர்களின் புஸ்தகத்தைப் படித்துக் தெரிந்து கொள்வது மலையைக் கிளிஞ்சலை எடுப்பதுகல்லிபோலிருக்கின்றது. மகாவித்வான்களுடைய நூல்களைப்படிப்பது ஓர் முழுகு முழுகி கை நிறைய உயர்ந்த முத்துக்களை எடுத்துக்கொண்டு வருவதுபோல் இருக்கின்றது. வியாகரணத்தை முடித்த பிறகு ஆறு அல்லது எட்டு மாதங்களில் அர்த்தத்துடன் படிக்கவும் படிப்பிக்கவும் வேண்டும். நாஸ்திகர்களால் எழுதப்பட்ட **'அமரகோஷம்'** முதலானவைகளைப் படிப்பதில் அநேக வருஷங்களை மனிதர்கள் வீணாக்கலாகாது.

(4) அதற்குப் பிறகு **பிங்கள** முனியால் எழுதப்பட்ட **சந்தஸ்யாய்** இலக்கணம் கிரந்தத்தை படிக்கவும் படிப்பிக்கவும் வேண்டும். இதைப்படிப்பதினால் வைதீகலௌகிக சம்ஸ்கிருத பாக்கள்செய்யும் முறை தெரியவரும். அதுவுமன்னியில் எவ்வளவு சிறந்த சுலோகங்கள் செய்யவேண்டுமோ அவைகளை அதிலிருந்து அறியலாம். நவீன சுலோகங்கள் செய்யுமுறைகளையும் இப்புஸ்தகத்தையும் இன்னும் பிற்கால மேற்பட்ட முறைகளையும் நான்கு மாதத்தில் கற்றுவிடலாம். சாதாரண படிப்புள்ள அற்ப மனிதர்களால் கற்பிக்கப்பட்ட சந்தஸ் புஸ்தகங்களையும் **விருத்திரத்னுகரத்தையும்** படிப்பதில் அநேகவருஷங்கள் வீணாக்கலாகாது.

(5) அதற்குப் பிறகு மனுஸ்மிருதி வால்மீகிராமாயணம், விதுரநீதி, இன்னும் மகா பாரதத்திலிருந்துத் தெரிந்தெடுத்த பாகங்களை துஷ்டச் செயல்கள் முதலியவைகளை மனதிலிருந்து நீக்கி நற்செயல்களை கற்றுக்கொடுக்கும்படியான நற்பாகங்களை மாத்திரம் செய்யுளைக் கற்பிப்பதுபோலவே, ஆசான் பதவுரை, பொழிப்புரை கருத்துரை முதலானவைகளுடன் கற்பிக்கவேண்டும். கவனத்துடன் சீடன் படிக்கவேண்டும். இதை ஒரு வருஷத்திற்குள் முடிக்க வேண்டும்.

(6) பிறகு பூர்வ மீமாம்சம், வைசேஷிகம், நியாயம், யோகம், சாங்கியை வேதாந்தங்களை எடுத்துக்கொள்ள வேண்டும். இவ்வாறு சாஸ்திரங்களை எவ்வளவுதூரம் இயலுமோ, அவ்வளவு தூரம் ரிஷிகளாலெழுதப்பட்ட உரையுடனும் அல்லது அவைகள் கிடைக்காவிடில் தக்க வித்வான்களாலெழுதப்பட்ட உண்மை உரையுடன் படிக்கவும் படிப்பக்கவும் வேண்டும். வேதாந்த சூத்திரங்களைப் படிப்பதற்கு முன்னால் பத்து உபநிஷதங்களை அதாவது ஈச, கேன, கத, பிரசின, முண்டக, மாண்டுக்கிய ஐத்ரேய, தைத்திரேய. சாந்தோக்கிய, பிருஹதாரண்யக இவைகளைப் படித்து ஆறுபாஷ்யங்களையும் பாஷ்ய விருத்தியுடைய இரண்டுவருஷத்திற்குள் படிக்கவும் படிப்பக்கவும் வேண்டும்.

(7) பிறகு ஆறு வருஷத்திற்குள் நான்கு பிராமணம் அதாவது ஐத்ரேயம், சதபதம், சாமப், கோபதபிராமணம் இவைகளோடு நான்கு வேதங்களை ஸ்வரம், சப்தம் அர்த்தம், சம்மந்தம் கிரியையோடு படிப்பதே தகுதியானது. இதற்குப் பிரமாணம்.

स्थाणुरयं भारहारः किलाभूदधीत्य वेदं न विजानाति योऽर्थम् योऽर्थज्ञ इत्सकलं भद्रमश्नुते नाकमेति ज्ञानविधूतपाप्मा ॥ நிருக்த. I. 18.

வேதங்களை ஸ்வரத்தோடு மாத்திரம் படித்து, அர்த்தந் தெரியாதவன், கிளை, இலை, புஷ்பங்கள் முதலியவைகளுடைய பாரத்தைச் சுமக்கும் மரத்தைப் போலவும், தானியங்கள் முதலியவைகளைச் சுமக்கும் விலங்கைப்போலவு மாகின்றுன். ஆனால் வேதத்தைப்படித்து அவைகளினுடைய உண்மையான அர்த்தத்தைத் தெரிந்து கொள்ளுகிறவன் தேகத்தினுடைய முடிவுக்குப் பிறகும் பாபங்களை விட்டு, பரிசுத்த தர்ம ஆசரணைகளுடைய கீர்த்தியினால் சர்வ ஆனந்தத்தை யடைகிறுன்.

उत त्वः पश्यन्न ददर्श वाचमुत त्वः शृण्वन्न शृणोत्येनाम् । उतो त्वस्मै तन्वं१ विसस्रे जायेव पत्य उशती सुवासाः ॥ ரு. 10. 71. 4.

அவித்வான்கள் காதிருந்தும் கேட்கிறுர்களில்லை. கண்களிருந்தும் பார்க்கிறுர்களில்லை. வாயில் நாக்கிருந்தும் பேசுகிறுர்களில்லை. அதாவது வித்வானகள் அல்லாதவர்கள் இந்த ஞானத்தினுடைய பரம ரகசியத்தை அறிகிறதில்லை. வித்தையானது தன்னுடைய சுவரூபத்தின் பிரகாசத்தை வித்வான்களுக்கு காண்பிக்கிறது அல்லாதவர்களுக்கு காண்பிக்கிறதில்லை. சப்தம், அர்த்தம் இவைகளுடன் படித்து தெரிந்து கொள்ளும் வித்வான்களுக்கு வித்தையானது புருஷனைக்காண அவாகொண்ட பெண்ணானவள், சிறந்த உடைகளையும் ஆபரணங்களையும் தரித்து அவர் முன்னிலையிலிருப்பதுபோல், பிரகாசஞ்செய்கிறது. அவித்துவான் களுக்கவ்விதமில்லை.

ऋचो अक्षरे परमे व्योमन् यस्मिन्देवा अधिविश्वे निषेदुः । यस्तन्न वेद किमृचा करिष्यति य इत्तद्विदुस्त इमे समासते ॥ ரு. 1. 164. 39.

பரவியும் நாசமில்லாதவராயும் எல்லா வற்றையும்விடச் சிறந்த வராயிருக்கிற எப்பரமேச்வரனில் எல்லாவித்வான்களும், பூமி சூரியாதி சர்வலோகங்களும் ஸ்திரமாயிருக்கின்றதோ, எவனிடத்தில் வேதங்களின் முக்கிய தாத்பர்யங்களிருக்கின்றதோ அந்த பிரம்மத்தைத் தெரியாதவன் ருக்வேதாதிகளினுல் கொஞ்சமாவது இன்பத்தை யடையக்கூடுமோ? எவ்விதத்திலும் அடையமுடியாது? ஆனால் வேதங்களைப் படித்து தர்மாத்மா வாயும், யோகிமாகத் தேர்ந்து அந்தப் பிரம்மத்தை யறிகிறவனே பரமேச்வரனில் ஸ்திரமடைந்து முக்திரூபமானப் பரமானந்தத்தை யடைகிறுன். ஆகையால் எல்லா வற்றையும் அர்த்த ஞான சகிதமாய் படிக்கவும் படிப்பிக்கவும் வேண்டும். இவ்விதம் எல்லா வேதங்களையும் படித்து பிறகு ..............

(8) ஆயுர்வேதம் அதாவது: சரகம், சுசுருதம், இன்னும் ரிஷிமுனிகளால் எழுதப்பட்ட வைத்திய சாஸ்திரங்களையும், அவைகளினுடைய அர்த்தம் கிரியை, சஸ்திரம் (ரணவித்தை) சேதனம் (சரீரக்கூறுபாடு) பேதனம்

(வேறுபடுத்துகிறது) லேபம் (தேய்க்கிறது) சிகிச்சை, நிதானம் (ரோகவிக்ஞானம்) ஔஷதம், சரீரம், தேசம் காலம், வஸ்துக்களுடைய குணம் இவைகளை ஞானபூர்வமாய் நான்கு வருஷத்திற்குள் படிக்கவும் படிப்பிக்கவும் வேண்டும்.

(9) **தனுர்வேதம்:**—(அரசாங்க நூல்) இது இருவகைப்படும்—ஜனசமூகத்தைபொருத்தது ஒன்று. ராணுவத்தைபொருத்தது மற்றொன்று. ஜன சமூகத்தையொட்டினது—ஜனங்களை ஆளுதல், அவர்களுடைய உயிர்களையும் பொருள்களையும் காப்பாற்றுதல்; நாட்டின் நீர்வளம் நிலவளம் இவைகளை விருத்தி செய்யதல், நல்லோர்களைக் காப்பாற்றியும், தீயர்களைத்தண்டித்தும் இன்னும் இதுபோன்ற நியாயமுறை பிறழாத வழிகளில் ஜனங்களைச் சந்தோஷமுள்ளவர்களாகவும் செல்வமுள்ளவர்களாகவும் செய்தல்; இவைகளை யொட்டினவையே ஜன சமூகத்தை யொத்தாரும். **ராணுவத்தையோட்டினது:**—சைனியங்களின் அமைப்பு, வெடிமருந்தின் உபயோகம், தேகப்பயிற்சி, படைகளை நடத்தும் வித்தை, படையணி வகுக்கும் வித்தை, முதலாவைகளைச் சேர்ந்தவைகளே ராணுவத்தை யொட்டினதாம். இதை இரண்டு வருஷம் படிக்கவேண்டும்.

(10) **காந்தர்வவேதம்:**—(சங்கீத சாஸ்திரம்) சங்கீதத்தை, அதனுடைய பாகங்களான சாரீரம், இராகம், இசை, தாளம் தாளபேதம், பொருத்தம், பல்லவி, அனுபல்லவி முதலானவைகளுடன் கற்கவேண்டும். பாடுதல், ஆடுதல், நடனஞ் செய்தல் முதலானவைகளையும் ஏற்றவாறு கற்கவேண்டும். ஆனால் சிறப்பாய் சாமவேத மந்திரங்களை சங்கீதவாத்தியங்களோடு வாசித்துப் பாடவேண்டும். நடனப் பெண்களைப்போல், காமநடைகளைப் பாடக்கூடாது. காமாதுரமான பாக்களைப் பாடி கழுதைக்களைப்போல் கனைக்கவுங்கூடாது. **நாரதசம்ஹிதை** முதலானவை போன்ற ரிஷிகளால் எழுதப்பட்ட **நூல்கள்** இவ்விஷயங்களைச் சொல்லுகின்றன.

(11) **அர்த்தவேதம்** (கைத்தொழில்கள்) இதை சிற்பவித்தையென்றும் சொல்லுவார்கள். மாதிரி வஸ்துக்களுடைய குணங்கள் கைத்திறம், தேர்ச்சி, பலவிதப்பொருள்களைச் செய்தல்,—பூமியிலும், வானத்திலும் உபயோகமாகிற—எல்லாவற்றையும் சரிவர இரண்டுவருஷங்களில் படிக்கவேண்டும். இதினாலேயே நாட்டினுடைய வளம் விருத்தியாகிறது.

(12) **சூர்யசித்தாந்தம்**—சோதிடசாத்திரம் வான சாஸ்திரம், பீஜகணிதம், கணிதசாத்திரம், பூகோள சாஸ்திரம், பூமி சாஸ்திரம் முதலானவைகளைச் சரிவரப் படிக்கவேண்டும். யந்திரங்களைக் கையாளவும், அவைகளுடைய சூத்திரங்களை நன்றாய் அறியவும், செவ்வனே அவைகளை உபயோகிக்கவும் வேண்டிக் கைத்தொழிலைக் கற்கவேண்டும், ஆனால் அவர்கள் சோதிடம், சோதிடம் என்று கூறி, மானிட வாழ்க்கையில் கிரஹங்களின் போக்கை பொருத்தி, வாழ்க்கை நிகழ்ச்சிகளைக் கூறுவதாக, சொல்லிப் பொருள் சம்பாதித்ததில் தக்கதல்ல. அதை மோசமெனத் தள்ளிவிடவேண்டும். சோதிடம் கணிக்கவும், கூறவும், கற்கவுங்கூடாது, கற்பிக்கவும் கூடாது. கற்

போர்களும் கற்பிப்போர்களும் சகலவித்தைகளையும் கலைகளையும்,இருபது அல்லது இருபத்தோறுவருடங்களில் கற்று அறிந்து, அதன் பலனைக வாழ்க்கையை சிறப்பித்து இன்பவாழ்க்கை வாழ்வார்களாக.

மேற்சொன்ன விதம் செய்வதால் இருபது அல்லது இருபத்தோறு வருடங்களில் கிடைக்கூடிய கல்வி ஞானத்தையும் வேறுவழிகளில் நூறுவருடங்கள் முயன்ருலும் பெறுதல் முடியாத காரியமாகும் ரிஷிகளால் இயற்றப்பட்ட நூல்களை மாத்திரம் நாம் குறித்திருக்கும் காரணம் யாதெனில், அவர்கள் பெரும் மேதைகள், சகலசாத்திரங்களையும் அறிந்தவர்கள், தர்மாத்மாக்கள், குறுகிய புத்தியுடையவர் (அனரிஷிகள்) களால் எழுதப்பட்ட புத்தரிங்களை கண்டனம் செய்ததிற்குக் காரணம் யாதெனில் அவர்களுடைய ஆத்மாவும் பக்ஷபாதமானது. இவ்விதமிருக்க அப்புத்தகங்கள், அதைச் செய்தவர்களுடைய பிழைகளிலிருந்து எப்படி நீங்கி யிருக்கும்?

படிப்பதற்கு ஏற்ற நூல்களாவன:—

1. ஜைமினிபூர்வமீமாம்ஸம். (வியாசர்விளக்கத்துடன்)
2. கனத வைசேஷிகம் (கௌதுமவிளக்கத்துடன்)
3. கௌதமநியாயசூத்திரம்(வாத்யாயனரால்செயயப்பட்ட உரையுடன்)
4. பதஞ்சலியோகம். (வியாஸ உரையுடன்)
5. கபில சாங்கியம் (பாகுரிமுனியின் உரையுடன்)
6. வியாசமுனியால் செய்யப்பட்ட வேதாந்த சூத்திரம் வாத்தியாயன முனியால் செய்யப்பட்ட உரை அல்லது போதானமுனியால் செய்யப்பட்ட உரையுடனும், விரியுரையுடனும், படிக்கவும் படிப்பிக்கவும் வேண்டும் இந் நூல்கள் கல்பங்களுனுடன் சேர்க்கப்பட்டிருக்கிறது.

எப்படி ரிக், யஜிஸ், சாமம், அத்ர்வம் என்கிற நான்கு வேதங்கள் ஈசுவரனல் உண்டாயிருக்கிறதோ அப்படியே ஐத்ரேயம், சதபதம், சர்மம் கோபதம். நான்கு பிராமணங்கள். சிட்சை, கல்பம், வியாகரணம், சந்தஸ், சோதிஷம்—வேதங்களுடைய ஆறு அங்கங்கள், மிமாம்சம் முதலிய கிரந்தங்கள், ஆறு உபாங்கங்கள், ஆயுர்வேதம், தனுர்வேதம், காந்தர்வவேதம், அர்த்தவேதம் இந்த வேதங்களுடை உபவேதங்கள், முதலான ரிஷிமுனிகளால் எழுதப்பட்ட கிரந்தங்கள் இதில் எதெது வேதவிரோதமாயிருக்கின்றதோ அதை விட்டுவிடவேண்டும். ஏனென்ருல் வேதங்கள் ஈசுவரனல் உண்டாயிருக்கிறபடியினலே யாதொரு விதமான வழுவன்னியில் தனக்குதானே பிரமாணமாயிருக்கின்றது. பிராமண முதலான சகலகிரந்தகளு பிரமாணம் மற்றவைகளை ஆதரவாகக்கொண்டிருக்கிறது. அதாவது அவைகளுக்கு பிரமாணம் வேதமே. வேதத்திர்க்கு விசேஷவியாக்கியானம் ரிக்வேத பாஷ்யபூமிகையிலிருக்கிறது. இப்புஸ்தகத்தில் மறுபடியும் எழுதுவோம்.

### படிக்கத்தகாத புத்தகங்கள்.

கற்பத்திற்குத்தகாத புத்தகளைக் கீழேக்குறிக்கிருேம். அவைகள், போலிக் கிரந்தங்களாகையினல் தள்ளத்தக்கனவைகளாகும்.

1. வியாகரணத்தில், காதந்திரம், சாரஸ்வதம். சந்திரிகை, முக்தபோதம் கௌமுதி, மனோரமா, முதலான புஸ்தகங்கள். 2. கோசம், அகராதியில் அமர கோசாதிம் முதலானவைகள். 3. சந்தசகிரந்த்த்தில் விருத்தரத்னகரம் முதலியவைகள். 4. சிட்சையில் "அதசிட்சா" முதலியவைகள். 5. சோதிடத்தில் சீக்கிரபோதம், முகூர்த்த சிந்தாமணி, முதலியவைகள். 6, செய்யுளில் நாயகாபேதம். குவலயாநந்தம், ரகுவம்சம், மாகம், கிராதார்சுனீயம் முதலியவைகள். 7. மீமாம்சத்தில தர்மசிந்து, விருதர்க்கம், முதலியவைகள். 8. வைசேஷிகத்தில், தர்க்கசங்கிரஹம் முதலானவைகள். 9. நியாயத்தில் ஜாகதீசி முதலியவைகள். 10. யோகத்தில் ஹடபிரதிபிகை முதலியவைகள். 11. சாங்கியத்தில், சாங்கியதத்தும், கௌமுதி முதலானவைகள் 12. வேதாந்தத்தில் யோகம், வாசிஷ்டம், பஞ்சதசம் முதலியவைவள். 13. வைத்தியத்தில், சாரங்கர் முதலியவைகள். 14. ஸ்மிருதியில், மனுஸ்மிருதி தவிர இடையில் சேர்த்திருக்கும் சுலோகங்களை மாத்திரம் நீக்கி எல்லா ஸ்மிருதிகள், 15. எல்லா தந்திரங்களும். 16. எல்லா புராணங்கள். 17. உப புராணங்கள். 18. துளசிதாசர் செய்த ராமாயணம். 19. ருக்மிணீமங்களம். முதலான ஹிந்தி புஸ்தகங்கள் இவைகளெல்லாம் வீண்தோற்றமான பொய்க்கிரந்தங்கள்.

வினா:—இக்கிரந்தங்களில் கொஞ்சமேனும் உண்மையென்பது இல்லையா?

விடை:—சிறிதளவு உண்மை இங்கும் அங்கும் இருப்பது சரிதான். ஆனால் இவைகளோடு அதிகப் பொய்கள் நிறைந்திருக்கின்றன. **विषसम्पृक्तान्नवत् त्याज्याः** அறுசுவையுடன்கூடின அன்னததோடு விஷம் கலந்திருக்கிறபடியினாலே அது எறிந்துவிடவே யோக்கியமாயிருக்கிறது. அப்படியே அக்கிரந்தங்களும்.

வினா—இதிகாசபுராணங்களையும் நீங்கள் நம்புகிறதில்லையா?

விடை:—ஆம் நம்புகிறோம். ஆனால் சத்தியங்களை நம்பி பொய்களை நம்புகிறதில்லை.

வினா:—எது சத்தியக்கிரந்தங்கள்? எது பொய்க்கிரந்தங்கள்?

**ब्राह्मणानीतिहासान् पुराणानि कल्पान् गाथा नाराशंसीरिति ॥**

விடை:—சூத்திரத்தினுடைய மேற்கோள். இதற்குமுன்னால் சொன்ன சதபதம், பிராமண முதலியவைகளை சரித்திரத்தினுடைய இவ்வைந்துபேர்களாலும் அழைக்கப்படுகிறது. (1) இதிகாசம். (2) புராணம். (3) கல்பம். (4) காதம் கர்ணபரம்பரை (5) நாரசம்ஸி ஒருவனுடைய ஜீவிய சரித்திரம்)— ஸ்ரீமத்பாகவதாதிகளுக்கும் புராணமென்ற பெயரில்லை.

வினா: – தள்ளப்பட்ட கிரந்தங்களில் உண்மையிருந்தால் ஏன் கிரகித்துக் கொள்ளக்கூடாது?

விடை:—எவ்விதமானஉண்மைகள் அவைகளில் காணப்படுகிறதோ அவைகள் வேதம் முதலான சத்தியசாஸ்திரங்களினுடையது. அவைகளிலிருக்கும்

பொய்களெல்லாம் அவர்களால்கற்பிக்கப்பட்டது. வேதம்முதலானசத்தியசாஸ்திரங்களை ஏற்றுக்கொள்வதினால் எல்லா சத்தியமும் உண்மையும் கிரகிக்கப்படுகிறது. எவன் இந்தப் பொய்கிரந்தங்களிலிருந்து சத்தியத்தைக்கிரகிக்க ஆசைப்படுகிறானோ, அவன் பொய்களைத் தள்ளமுடியாமல் முழுவதையும் விழுங்க நேரிடுகிறது. ஆகையினால் **असत्यमिश्रं सत्यं दूरतस्त्याज्यमिति** அசத்தியத்தினால் சம்பந்தப்பட்ட சத்தியத்தையும், விஷத்தினால் கலந்த அன்னத்தைப் போல் விட்டுவிடவேண்டும்.

**வினா:**—உங்களுடைய மதம் யாது?

**விடை:**—நாங்கள் வேதத்தில் நம்புகிறோம். அதாவது அதில் சொல்லியிருக்கும் கட்டளைகளைக் காப்பாற்றி, விடச்சொன்னவைகளை விட்டும் விடுகிறோம். நாங்கள் வேதத்தை நம்புகிறபடியினால் எங்களுடைய மதம் வேதமே. எல்லாமனிதர்களும் முக்கியமாய் ஆரியர்களும் இதை அபிமானித்து ஐக்கியத்தை அடையவேண்டி ஏற்றுக் கொள்ளவேண்டும்.

**வினா:**—ரிஷிகளால் எழுதப்பட்ட சாஸ்திரங்களிலும், உண்மையானது பொய்யுடன்கலந்து மற்ற புத்தகங்களைப்போல் பரஸ்பரம் விரோதமாயும் இருக்கிறது. உதாரணமாக சிருஷ்டி விஷயத்தை எடுத்துக் கொள்வோம். இதில் ஆறுசாஸ்திரங்களும் ஒன்றுக்கொன்று விரோதமாய் இருக்கின்றனவே. மீமாம்சத்தில் சிருஷ்டியினுடைய உற்பத்திக்கு "கர்மாவே" காரணமென்றும். வைசேஷிகத்தில் "காலம்" என்றும் நியாயத்தில் "பரம அணு" என்றும் "யோகத்தில்" "புருஷார்த்தம்" (முயற்சி) என்றும், சாங்கியத்தில் "பிரகிருதி" என்றும், வேதாந்தத்தில் "பிர்மம்" என்றும்முறையே சொல்லப்படுகின்றனவே?

**விடை:**—சாங்கியம் வேதாந்தம் இவைகளில் தவிர, மீதி நாலு சாஸ்திரங்களில் சிருஷ்டியினுடைய உற்பத்தி வெளிப்படையாக எழுதப்படவில்லை. இவைகளில் விரோதமாயும் இல்லை. இசைவு பொருத்தங்களுடைய ஞானம் உனக்கில்லையென்று தெரிகிறது. முரண்பாடாப் எந்த இடத்தில் இருக்கிறது என்று கேழ்க்கிறேன்? அது ஒரு விஷயத்திலுண்டாகிறதா அல்லது வித்தியாசமான விஷயங்களிலா?

**வினா:**—ஒரு விஷயத்தைப்பற்றி பலவேறான அபிப்பிராயங்கள் ஏற்படின் அது முறண் அல்லவா? சிருஷ்டி என்பது ஒரு விஷயமல்லா? அதைப்பற்றி முரணான அபிப்பிராயங்கள் எழுதுவதற்குக் காரணமென்ன?

**விடை:**—வித்தை ஒன்றா இரண்டா? (அதாவது வித்தையில் ஐக்கியமிருக்கிறதா?).

**வினா:**—ஒன்றுதான்

**விடை:**—ஒன்றாயிருக்கும் பட்சத்தில் வியாகரணம், வைத்தியம், சோதிடம் அல்லது வானசாஸ்திரம் என்கிற விஷயங்கள் ஒன்றுக்கொன்று வித்தியாசமாய் ஏனிருக்கவேண்டும்? ஒருவித்தையில் அல்லது ஒரு சாஸ்திரத்தில் அதனுடைய பற்பல பிரிவுகள் தனியாய் சொல்லப்பட்டிருப்பதுபோல் சிருஷ்டி வித்தையில் ஆறுவிதமான பிரிவுகள் தனிமையாய ஆறுசாஸ்திரங்களுக்கேற்ற

வாறு பிரிக்கப்பட்டிருக்கிறது. இதை விரோதமென்று ஒரு நாளும் சொல்ல முடியாது. உதாரணமாக மண்பாண்டம் செய்வதற்கு அடியிற்கண்ட பல வேறான ஆறு காரணங்கள் அடிப்படையாயிருக்கின்றன. கர்மம், சமயம், களிமண், விசாரம் (யோசனை) சம்யோகம் (சேர்க்கை) பிரித்தல் என்கிற ஞானம், மண்களின்குணம், குயவன். அப்படியேசிருஷ்டிவித்தையில் ஆறுவிதமானசாஸ்திரங்களும் ஆறுவிதமானகாரணங்களை விவாதஞ் செய்கின்றன. இதில்கொஞ்சமேனும் விரோதமில்லை. உதாரணமாக சிருஷ்டிக்கு எந்தக் கர்மம் காரணமாக சொல்லப்படுகின்றதோ அதனுடைய விளக்கம் அதிலிருக்கின்றன. **மீமாம்சத்தில்**, சமயத்தினுடையவும், (காலம்) காரணம் **வைசேஷிகத்திலும்**, பரம அணு அல்லது உபாதானகாரணத்தினுடைய விளக்கம் **நியாயத்திலும்**, புருஷார்த்தத்தினுடைய விளக்கம் **யோகத்திலும்**, பிரகிருதி அல்லது தத்துவங்களினுடைய அனுக்கிரகங்கங்களாலே எண்ணப்படுகிற காரணம் **சாங்கியத்திலும்**, பிரம்மம் அல்லது நிமித்த காரணமாயிருக்கும் பரமேச்வரனைக்குறிக்கும் விளக்கங்கள் **வேதாந்தசாஸ்திரத்திலும்** முறையே சொல்லப்படுகிறன. இதில் கொஞ்சமேனும் விரோதமில்லை.

உதாரணமாக வைத்திய சாஸ்திரத்தில் நிதானம் (வியாதியைக்கூறும் சாஸ்திரம்) தேகத்தின் அமைப்பு. சிகிச்சை (மருந்து பதார்த்தகுண நூல்) ஔஷதம் (மருந்து வகைராக்கள்) தானம் (சுசாதார விஷயங்கள்) பத்தியமுதலிய விஷயங்கள் தனித்தனியாய் சொல்லப்பட்டிருந்தபோதிலும் எல்லாவற்றினுடைய கருத்து, பிணியை அல்லது வியாதியை நிவர்த்தி செய்வதற்கேயாம். அப்படியே சிருஷ்டிக்கு ஆறுவிதகாரணங்கள் இருக்கின்றன. ஒவ்வொரு சாஸ்திரத்திலும் ஒவ்வொன்று விவகரிக்கப்படுகின்றது. ஆகையினால் கொஞ்சமேனும் விரோதமில்லை. இதற்குச் சிறந்த உரைகளைச்சிருஷ்டியின் "ஆக்குதல், அளித்தல், அழித்தல்" என்னும் இந்நூலின் அத்தியாயத்தில் எழுதுவோம்.

வித்தைகளைப் படிப்பதிலும் படிக்கச் செய்வதிலும் உண்டாகும் தடங்கல்களை எல்லாம் ஒழித்துத்தள்ளிவிடவேண்டும். உதாரணமாக துன்மார்க்கர்களுடைய சேர்க்கை, மதுபானம், மாம்சாகாரம், வேசிகளிடத்தில் போகுதல், சிறுவயதில் கலியாணம், (அதாவது 25 வயதுக்குள் புருஷர்களுக்கும், 16 வயதுக்குள் ஸ்திரீகளுக்கும் விவாகஞ்செய்தல்) பூர்ண பிரமசர்யத்தைக்கொள்ளாதிருத்தல். வேதாதிசத்தியசாஸ்திரங்களைப்பரவச்செய்வதில் ஆசையில்லாதிருக்கிற (அரசன், வித்வான், தந்தை, தாய்) அதிகம் உண்ணுதல், அதிகம் விழித்தல், படிப்பதிலும், படிக்கச் செய்வதிலும், சோம்பல், முதலியவைகளை கொள்ளல், வித்தை மிகப்பெரியது, எல்லாவற்றையும்விட லாபந்தாக்கூடியதென்று எண்ணுதிருத்தல், பிரம்மசர்யத்தினால் பலம், புத்தி, பராக்கிரமம், ஆரோக்கியம், ராஜீயம், ஐசுவர்யத்தின் விருத்தி இவைகள் உண்டாகிறதென்று நம்பாமலிருத்தல், உண்மையான ஈச்வரனின் ஞானத்தை விட்டு கல் முதலான உயிரில்லாத மூர்த்திபூஜையில் காலத்தை வீணுகக்கழிப்பது, மாதா, பிதா, அதிதி ஆசாரியர், வித்வான் இவர்களை உண்மைமூர்த்திகளாக வணங்காமலிருத்தல்,

அவர்களுடைய சேவை செய்யாமலிருத்தல், வர்ணாசிரமத்தை விட்டு திருநீறு, திருநாமம், திருபுண்ட்ரம், திலகம் இட்டு உருத்திராக்ஷம் கழுத்திலணிந்து கொள்வது, ஏகாதசி, திரயோதசி முதலிய விரதங்களை அனுஷ்டிப்பது, காசி முதலான தீர்த்தங்களில் ஸ்நாநம்செய்வது, ராம, கிருஷ்ண, நாராயண, சிவ, பகவதி, கணேச முதலியவர்களை ஸ்மரிப்பதினுல் பாபங்கள்விலகிவிடுமென்று நம்புவது, கள்ளங்கபடமுள்ளவர்களுடைய உபதேசத்தால் வித்தைகளை படிப்பதில் சிரத்தை இல்லாதிருத்தல், வித்யா, தர்மம், பரமேச்வரனுடைய உபாசனை, இவைகளில்லாமல் பொய்புராணங்களாகிற பாகவதம் முதலியவைகளினுடையக்கதைகளைகேட்பதினுலேயே முத்தி என்றுநம்புவது, லோபித்தனத்தால் தனம் முதலியவைகளிலேயே ஆசைவைத்து வித்தைகளில் ஆசை இல்லாமலிருப்பது, இங்கு மங்கும் திரிந்து பொய்யான விவகாரங்கள் முதலியவைகளுடையவலைகளில் அகப்பட்டு பிரம்மசர்யத்திலிருந்து விலகி மூர்க்கனாயும் ரோகியாயும் ஆவது, முதலியவற்றை விடவேண்டும். தற்காலத்திய சமய பேதங்களை யனுஷ்டிப்பவர்கள், சுயநலங்கூறும் பிராமணர் முதலானவர்கள், மற்றவர்களை வித்தையிலிருந்தும் நல்ல சங்கத்திலிருந்தும் நீக்கி தங்களுடைய வலைகளில் அகப்படச் செய்து அவர்களுடைய தேகம், மனம், ஐசுவர்யம், முதலியவைகளை நஷ்டஞ் செய்கிருர்கள். க்ஷத்திரியர் முதலானவர்கள் படித்து வித்வான்களாகும் பட்சத்தில் சுயநலங்கருதுபவர்களுடைய வலைகளிலிருந்து நீங்கி அவர்களுடைய போக்கிரித்தன முதலியவைகளை தெரிந்து அவமான முதலியவைகளைச் செய்வார்கள் என்று எண்ணி அவர்களைக்கல்விப்பயிற்சி இல்லாது வைத்திருக்க இச்சிக்கிருர்கள். இம்மாதிரி இடையூறுகளை இராஜாவும் பிரஜைகளும் நீக்கிவிடவேண்டும். அவர்களுடைய பிள்ளை பெண்கள் வித்வான்களாக வேண்டி தேகம், மனம் ஐஸ்வர்ய முதலியவைகளால் பிரயத்தினஞ் செய்யவேண்டும்.

### யாதர்கள் வேதத்தை ஓதலாம்.

வினு:—ஸ்திரீகளும் சூத்திரர்களும் வேதம்படிக்கலாமா? அவர்கள் படிக்கும்பட்சத்தில் நாங்கள் என்னசெய்கிறது? அவர்கள் படிப்பதற்குப் பிரமாணமுமில்லையே. வேதத்திலேயே அது மறுக்கப்பட்டிருக்கிறதே-பாருங்கள்.

**स्त्रीशूद्रौ नाधीयातामिति श्रुतेः**

ஸ்திரீகளும் சூத்திரர்களும் வேதம்படிக்ககூடாதென்பதே இதன் கருத்து.

விடை:—எல்லாஸ்திரீகளுக்கும் புருஷர்களுக்கும் வேதம்படிக்க ஆதாரமிருக்கின்றது. நீ நாசமாய்ப்போ!! சுருதிஎன்று சொல்லுகிருயே. அது உன்னுடைய கற்பனையேயாம். அது எந்த பிரமாண கிரந்தத்திலுமில்லை. எல்லா மனிதர்களுக்கும் வேதாதிசாஸ்திரங்களைப் படிக்கிறதற்கும் படிப்பிக்கவும் அதிகாரமுண்டு. அதற்கு அடியிற்கண்ட பிரமாணம் யஜுர்வேதம் 26-வது அத்தியாயம் இரண்டாவது மந்திரத்திலிருக்கின்றது.

**यथेमां वाचं कल्याणीमावदानि जनेभ्यः । ब्रह्मराजन्याभ्याग्ं शूद्राय चार्याय च स्वाय चारणाय ॥**

ஈசுவரன் சொல்லுகிறார்:—"இக்கல்யாணம் அதாவது இகவாழ்க்கை முக்தி இவைகளின் சுகத்தையளிக்கிற இவ்வார்த்தைகளை அதாவது நான்கு வேதங்களை எப்படி நான் சகலமனிதர்களின் (ஜனேப்ய: என்னும் பதத்திற்கு நாம் சகல மனிதர்கள் என்று மொழி கூறியிருப்பதைக் கொள்ளாமல் ஸ்மிருதிகளில் சொல்லும் வண்ணம் அந்தணர்களைக் கொள்ளவேண்டும் என்றும் அவர்களே வேதங்களைப் படிக்கவேண்டும், ஸ்திரீகளும் சூத்திரர்களும் படிக்கக் கூடாது என்றும் எவரேனும் கூறும்பக்ஷத்தில் இச்சுலோகத்தின் பிற்பகுதியே அதற்குத்தக்கப் பதிலாகும்.) பிராம்மணர்கள், க்ஷத்திரியர்கள், வைசியர்கள் ஸ்திரீகள், தொழிலாளர்கள் கீழானவர்களிலும் கீழானவர்கள் பொருட்டு உபதேசஞ்செய்கிறேனே அதேமாதிரி நீங்கள் செய்யவேண்டும். அதாவது எல்லா மனிதர்களும் வேதங்களைப் படித்தும், படிக்கசெய்தும், கேட்டும் கேட்கச்செய்தும் ஆநந்தத்தை யடையட்டும்.

எவருடைய வார்த்தையை நம்புவது? உன்னுடையதிலா? பரமேச்வரனுடையதிலா? பரமேச்வரனுடைய வார்த்தை கட்டாயமாய் நம்பத்தகுந்தது. இது இப்படி யிருக்கிறபடியினால் பரமேச்வரனை நம்பாதவர் நாஸ்திகர்கள் என்று சொல்லவேண்டும் ஏனென்றால்:—

வேதங்களை நம்பாதவர்களும், நிந்தனை செய்பவர்களும் நாஸ்திகா என்று சொல்லப்படுகின்றார்கள்,? சூத்திரர்களுக்குநன்மையைசெய்யபரமேச்வரனுக்கு இஷ்டமில்லையா?வேதங்களைப்படிப்பதற்கும்கேட்பதற்கும்துவிஜர்களுக்கென்று விதித்து சூத்திரர்களுக்கு விதிக்காமலிருக்க ஈச்வரன் என்ன பக்ஷபாதமுள்ளவரா? சூத்திரர்களுக்குப்படிப்பதற்கும் படிக்கப்படா திருப்பதற்கும் ஈச்வரனுக்கு இஷ்டமில்லாதிருக்கும் பட்சத்தில் அவர்களுடைய சரீரத்தில் வாக்கையும் காதுகளையும், இந்திரியங்களையும் ஏன் உண்டாக்கினார்? பரமாத்மானவர் எப்படி பூமி, ஜலம் அக்னி, வாயு, சூர்யன் சந்திரன் அன்னம் முதலான பதார்த்தங்களை எல்லோரின் பொருட்டு உண்டு பண்ணியிருக்கிறாரோ, அப்படியே வேதத்தையும் எல்லோரின் பொருட்டும் பிரகாசஞ்செய்திருக்கிறார். தடுக்கப்பட்டிருப்பதின் தாத்பர்யம் யாதெனில், எவனுக்குப்படிப்பதினாலும் படிப்பிக்கப்படுகிறதினாலும் ஒன்றும் வராமலும் பிரயோஜன மன்னியிலுமிருக்கின்றானோ எவன் புத்தியில்லாமல் மடத்தனமாயிருக்கிறானோ அவனுக்குச் சூத்திரன் என்று பெயர். அவனுக்குப் படிப்பதினாலும் படிப்பிப்பதினாலும் பிரயோஜனம் ஒன்றுமில்லை. மாதர்கள் படிப்பதற்கு எவன் நிஷேதங்கூறுகிறானோ அவன் தன்னுடைய மடத்தனம் சுயநலம் புத்தியில்லாத்தன்மை முதலானவைகளையே வெளியிடுகிறான்.

**ब्रह्मचर्य्येण कन्या युवानं विन्दते पतिम् ॥** அதர். 11. 16. 3. 18.

எப்படிப்பிள்ளைகள், பிர்மசர்யவிரதத்தைக் கொண்டதினால் பூர்ணமான பயிற்சி முதலியவைகளை அடைந்து மங்கையாயும் படித்தவளாயும் தன்னுடைய அனுகூலத்திற்கும் பிரியத்திற்கும் சரியாயுமிருக்கும் பெண்களோடு கல்யாணஞ்செய்துகொள்ளுகிறார்களோ அப்படியே (கன்யா) மங்கையானவள் (பிர்மம்

சர்யேண) பிரமசர்யத்தை அனுஷ்டிப்பதினுல் வேதம் முதலான சாஸ்திரங்க ளைப்படித்து பூர்ணவித்தை சிறந்த கல்வி இவைகளை யடைந்து கன்னிகைப்பரு வத்தில் தனக்குச் சரியாயிருக்கும் பூர்ணவித்வான்களாய் யௌவனபருவத்து டன் கூடின புருஷனை (விந்ததே) அடையவேண்டும். இதனுல் ஸ்திரீகளும் பிரமசரியம், வித்தை முதலானவைகளைக்கிரஹிப்பது அவசியமாகிறது.

**வினு:—** ஸ்திரீகளும் வேதங்களைப்படிக்கவேண்டுமா?

**விடை:—** அவசியமாய் படிக்கவேண்டும் பாருங்கள் ஸ்ரௌதசூத்திராதியில் **इमं मन्त्रं पत्नी पठेत्** அதாவது ஸ்திரீ யக்ஞத்தில் இம்மந்திரத்தை ஓதவே ண்டும். வேதம் முதலான சாஸ்திரங்களைப் படிக்காதிருந்தால் யக்ஞத்தில் ஸ்வரத்தோடு மந்திரங்களையும் உச்சரணைகளுடன் கூடின சம்பாஷணைக ளையும் எங்ஙனம் செய்யக்கூடும்.

பாரத நாட்டு மாதர்களில் திலகம்போல் விளங்குகிற "கார்கி" முதலியவர் கள்வேதாதி சாஸ்திரங்களைப் படித்து பூரணபண்டிதைகளாயிருந்தார்கள். இது சதபத பிராமணத்தில் தெளிவாக எழுதப்பட்டிருக்கிறது. புருஷன் வித்வானு யும் மனைவி வித்தையில்லாதவளாயும் அல்லது மனைவி வித்வானுயும் புருஷன் வித்தையில்லாதவனுயும் இருந்தால் தினந்தோறும் வீட்டில் தேவாசுர யுத்தம் நடைபெறும். அப்படி நடைபெற்றுல் சுகம் எங்கிருந்துண்டாகும்? ஸ்திரீகள்படி காவிட்டால் கன்யாலயங்களில் எப்படி உபாத்தியாயனியா யிருக்கக்கூடும்? படி ப்பில்லாமல் இல்லற தர்மங்களை ஸ்திரீ சரியாய் செய்ய முடியாது. வீட்டை யாளுகிறதும், நியாயமாய் எல்லாரிடத்திலும் இருப்பதும், கிரஹாச்ரமதர்மங் களையும், ஸ்திரீ புருஷர் பரஸ்பரம் திருப்தியாய் சந்தோஷத்துடனிருக்கவே ண்டிய தன்மை, வீட்டின் எல்லா வேலைகளையும் தன்கைங்கீழ் வைத்துக்கொள் வது இவைகளெல்லாம் ஸ்திரீகளுக்குப்படிப்பில்லாவிட்டால் ஒருநாளும் சரிவர நடைபெருது. பாருங்கள்! ஆர்யவர்த்த தேசத்தின் ஆதி இராஜ புருஷர்களின் ஸ்திரீகள் தனுர் வேதம்—அதாவது யுத்தவித்தைகளை நன்றுய் அறிந்திருந் தார்கள். அவர்களுக்குத் தெரியாதிருந்திருக்கும் பட்சத்தில், கைகேயி முதலி யவர்கள்தசரதனுடன் எப்படியுத்தத்திற்குப்போயிருந்திருக்கக்கூடும்? யுத்தம் எப் படி செய்திருக்கக்கூடும். பிராமண க்ஷத்திரிய ஸ்திரீகளுக்கு எல்லா வித்தை களும் வைசிய ஸ்திரிகளுக்கு பாகாதி (சமையல்) வித்தைகளும் அவசியம்வே ண்டும். எப்படி புருஷர்களுக்கு வியாகரணம் தர்மம் வியவஹாரங்களுடைய வித்தை (தொழில்) கொஞ்சமாவது படிக்கவேண்டுமோ, அப்படியே ஸ்திரீ களுக்கும், வியாகரணம் தர்மம், வைத்தியம், கணிதம், சிற்பவித்தை முதலிய வைகளை அவசியமாய் கற்றுங் கொடுக்கவேண்டும். ஏனென்றுல் குணங்களைக் கற்றுக்கொண்டாலொழிய சத்யா சத்தியத்தை நிர்ணயிப்பது, புருஷனிடத் தில் அனுகூலமாயிருந்து கொள்வது, யோக்கியதைக்குத் தகுந்த வண்ணம் சந்தானங்களை உற்பத்திசெய்து கொள்வது, அவர்களைப் பாதுகாத்து நற்சிட் சைகளை கொடுப்பது, வீட்டில் எல்லா வேலைகளை எப்படிச்செய்யவேண்டுமோ

அப்படி செய்வது அன்னபான முதலியவைகளை வைத்திய சாஸ்திரத்தின் பிரகாரம் பக்குவஞ் செய்வது இவைகளெல்லாம் செய்யமுடியாது. இப்படிச் செய்யும் பட்சத்தில் அவர்களுடைய கிரகத்தில் பிணி, எப்பொழுதுந்தீண்டாமல் அவர்களை ஆநந்தத்தில் வைக்கிறது. சிற்பவித்தைதெரிந்தாலொழிய வீடு முதலியவைகளைக் கட்டச்செய்வதும் வஸ்திர ஆபரணமுதலியவைகளை செய்யச்செய்வதும், கணித வித்தை தெரிந்தாலொழிய எல்லா கணக்குகளைத் தெரிந்து கொள்வதும் தெரியச் செய்வதும், வேதாதி சாஸ்திரங்கள் தெரிந்தாலொழிய தர்மத்தை யொரு நாளுமறியாமல் அதர்மத்திலிருந்து ஒருநாளும் தப்பிக்கவும் முறையே முடியாது. ஆகையால் தங்களுடைய சந்தானங்களுக்கு பிரம்ம சர்யத்தினாலும் சிறந்த பயிற்சியினாலும் வித்தைகளினாலும் சரீரத்தையும், ஆன்மாவையும் பூர்ணபலமாக விருத்திசெய்பவர்களே பூஜிக்கத்தகுந்தவர்கள். அவர்களே தங்களுடைய கடமைகளைசெய்தவர்கள். ஏனென்றால் வயது வந்தவுடன் யோக்கியதைக்குத் தகுந்தவண்ணம் தர்மத்துடன் அடியில் கண்டவர்களுடன் எப்படி நடந்துகொள்ளவேண்டுமோ அப்படி நடந்து கொள்ளுகிறார்கள். தாயார், தகப்பனார் புருஷன், மாமியார் மாமனார் இராஜா, பிரஜை சமீபத்திலிருப்பவர் இஷ்டமித்திரன், குழந்தை இன்னுமுதலிய உறவினவர்கள். வித்தை எப்பொழுதும் குறையாதவும், அழியாதவுமான பொக்கிஷம். இது எவ்வளவுக்கெவ்வளவு சிலவு இடப்படுகிறதோ அவ்வளவுக்கவ்வளவு விருத்தியை யடைகிறது.

இதர பொக்கிஷங்கள், சிலவு செய்வதினால், குறைந்து அழிவையடைகிறது உரிமைக்காரர்களும் தங்களுடைய பாகத்தை எடுத்துக்கொள்கிறார்கள். ஆனால் வித்தையாகிய பொக்கிஷத்தைத் திருடர்கள் திருடவும் முடியாது ஆகையால் இவைகளை ரக்ஷித்து விருத்தி செய்வது இராஜர்களுடையவும் பிரஜைகளுடையவும் கடமையாகும்.

**कन्यानां सम्प्रदानं च कुमाराणां च रक्षणम् ॥**

கன்னிகை குமாரர்கள் எல்லோரையும் தக்க சமயம் வரையில் பிரம்ம சரியத்தில் வைத்து வித்வான்களாகச் செய்வது இராஜர்களுக்கு யோக்கியமான கார்யமாயிருக்கிறது—எட்டுவயதுக்குப் பிறகு பிள்ளைகளையாவது பெண்களையாவது வீட்டில்வைத்துக்கொள்ளாமல் ஆசார்ய இல்லத்திற்கு அனுப்பவேண்டுமென்று இராஜாவானவன் ஏற்படுத்த வேண்டும். இந்தநியமங்களின் பிரகாரம் நடக்காமலிருப்பவர்களுக்கு இராஜதண்டனை அளிக்கவேண்டும். சமாவர்த்தன சமயம் வரும் வரையில் அல்லது ஆசார்யகுலத்திலிருக்கும் வரை கல்யாணஞ் செய்யக்கூடாது.

**सर्वेषामेव दानानां ब्रह्मदानं विशिष्यते ।**
**वार्यन्नगोमहीवासस्तिलकाञ्चनसर्पिषाम् ॥** மனு 4.233.

உலகத்தில் எல்லாவிதமான தானங்களில் அதாவது ஜலம், அன்னம், பசு, பூமி, வஸ்திரம், எள்ளு, சுவர்ணம், நெய், இவ்வெட்டு விதமான தானங்களைக்காட்டிலும் வேதவித்தையை தானஞ்செய்வது சாலசிறந்தது. ஆகையினால்

வித்யாதானம் எவ்வளவு செய்யமுடியுமோ அவ்வளவு முயற்சியுடன் தேகம், மனம், பணம் முதலியவைகளால் எப்பொழுதுஞ் செய்யவேண்டும். எந்த தேசத்தில் யோக்கியதைக்குச் சரியாய் பிர்ம்மசரியம், வித்தை தர்மம் இவை கள் பிரகாசமுண்டாகின்றதோ அந்த தேசத்தில் எல்லாவித பாக்கியமும் உண்டாகின்றது.

இதில் பிரமசர்யத்தினுடைய முறையைப் பற்றிச் சுருக்கமாய் எழுதினேம். இதன்பின் நான்காவது அத்தியாயத்தில் குருகுலத்தை விட்டு தன் ஆச்ரமத்திற்கு (கிரகஸ்தாச்ரமம்) மீளல் என்னும் விஷயத்தைப்பற்றி எழுதுவோம்.

மூன்ருவது அத்தியாயம்
முற்றிற்று.



## காவது அத்தியாயம்.

### கிரஹஸ்தாச்ரம தர்மம்.

**वेदानधीत्य वेदौ वा वेदं वापि यथाक्रमम् ।**
**अविप्लुतब्रह्मचर्यो गृहस्थाश्रममाविशेत् ॥** மனு 3. 2.

புருஷர்களும், ஸ்திரீகளும், சரிவர பிரம்மசார்யாச்ரமத்தில் ஆசாரியர்களுடைய பணங்கோணாமலிருந்து, சாங்கோபாங்கமாய், அங்கங்களுடனும், உபாங்கங்களுடனும் நான்கு வேதங்களையாவது, அல்லது அவற்றுள் மூன்றையாவது, அவையுமில்லாவிடில் ஒன்றையாவது படித்தப்பிறகே கிரகஸ்தாசிரமத்தில் பிரவேசிக்கவேண்டும்.

**तं प्रतीतं स्वधर्मेण ब्रह्मदायहरं पितुः ।**
**स्रग्विणं तल्प आसीनमर्हयेत्प्रथमं गवा ॥** மனு 3. 3.

குருவிடத்தில் சிஷ்யனுகவிருந்து தன்னுடைய கடமைகளைச் சரிவர நடத்திய பிறகு, பெற்றோர்களிடமிருந்தோ, குருவினிடமிருந்தோ வேதத்தினுடைய அர்த்தத்தைக்கிரகித்து, மாலையைத்தரித்து, மணையிலமர்ந்தப்பின்னர், மாணுக்கனுக்குத் தன் தகப்பனார் கோதானத்தினலே சத்காரஞ்செய்யவேண்டும். அதேமாதிரி பெண்ணின் தகப்பனாரும் செய்யவேண்டும்.

**गुरुणानुमत स्नात्वा समावृत्तो यथाविधि ।**
**उद्वहेत द्विजो भार्यां सवर्णां सक्षणान्विताम् ॥** மனு 3. 4.

பிராமணர்களும், க்ஷத்திரியர்களும் வைசியர்களும் குருவினுடைய ஆக்ஞையைப்பெற்று, ஸ்நாநஞ்செய்து. குருகுலவாசத்தை முறையே செய்து திரும்பித் தங்கள் தங்கள் வருணத்திலேயே சகல செளந்தர்யலக்ஷணங்களுடன் கூடின பெண்ணை விவாகஞ் செய்து கொள்ள வேண்டும்.

**असपिण्डा च या मातुरसगोत्रा च या पितुः ।**
**सा प्रशस्ता द्विजातीनां दारकर्मणि मैथुने ॥** மனு 3. 5.

தாயாருடைய குலத்திலிருந்து ஆறுதலைமுறைகளுக்குட்படாதவளாயும், தகப்பனுருடைய குலத்தைச் சேராமலுமிருக்கிறவளாகிய கன்னிகையே விவாகத்திற்கு உசிதமானவள் இப்படிச் செய்வதின் கருத்து என்னவெனில்?

**परोक्षप्रिया इव हि देवा प्रत्यक्षद्विषः ॥**
**दुहिता तुर्हिता दूरेहिता दोग्धेर्वा ॥** சதபதபிரா.

பரோக்ஷ (பார்க்காமலிருக்கும்) வஸ்துக்களில் இச்சை அதிகமாக உண்டாவதுபோல் ப்ரத்யக்ஷமான பதார்த்தங்களிலுண்டாகிறதில்லை. எப்படி என்

ுல் உருசிபார்க்காமல் குணங்களைமாத்திரம் சேட்டிருக்கும் மதுரமான பதார்த்தங்களிலேயே மனிதர்களுடைய மனது செல்லுகின்றது. மெச்சத்தகுந்த குணங்களையுடைய கண்ணுக்குத் தெரியாத வஸ்து ஒன்றை, ஒருவன் கேட்ட மாத்திரத்திலேயே எவ்விதம் விரும்புகிறானோ அவ்விதமே தாயார் பக்கத்திலேயும், தகப்பனார் பக்கத்திலேயும் சமீபசம்பந்தமற்ற பெண்ணை விவாகத்திற்குத் தேடவேண்டும்.

## தூரவிவாகத்தினுடைய குணங்கள்.

(1) சிறுவயதிலிருந்தே ஒன்றுசேர்ந்து ஆடியும், பாடியும், ஒருவருக்கொருவர் நிர்வாணமாய்க்கண்டும், பரஸ்பரகோபதாபங்களையும், குணதோஷங்களையும், விபரீதாசாரங்களையும் அறிந்திருக்கிற இருவர்களுடைய விவாக சம்பந்தம் ஒரு பொழுதும் பரஸ்பர இல்லற நேசத்தை விளைவிக்கின்றதில்லை. (2) ஜலத்துடன் ஜலம் சேர்ந்தால் எப்படி இலக்ஷணமாக (புதியதாக) ஒன்றும் ஏற்படுகிறதில்லையோ, அப்படியே தகப்பனாரைச்சார்ந்த கோத்திரத்திலேயோ அல்லது தாயாரது குலத்திலேயோ விவாகஞ்செய்து கொள்ளுவதினால் தாதுபுஷ்டியுண்டாவதில்லை. (3) பாலுடன் சர்க்கரையாவது அல்லது சுக்கு முதலான ஔஷத பதார்த்தங்களாவது சேருகின்றதினால் உத்தம குண மேற்படுவதுபோல் தாய் தந்தை குலத்திலிருந்து பிளவுபட்ட வேறு கோத்ரங்களில் ஸ்திரீ புருஷர்களுக்கு விவாகமாவதினால் உத்தமமான சந்தானோத்பத்தியுண்டாகும். (4) ஒரு தேசத்தில் தீராப்பிணியையுடைவர், மற்றொரு தேசத்தினுடைய, காற்று அன்னபானம்முதலானவைகளினால்சௌக்கியமடைகிறார். ஆகையினால் தூரதேச விவாகம் உத்தமமானது. (5) சமீபசம்பந்தத்தினால் இருபக்கத்தினர்களுடைய குடும்பங்களிலேயும் சச்சரவுகள் ஏற்பட்டுச் சண்டை உண்டாகக்கூடும். தூரதேசத்தில் சம்பந்தமுண்டானால் இத்தகைய சச்சரவுகளுக்குக் காரணமில்லை. இப்படிச் செய்வதினால் விருத்தியே சம்பவிக்கும். சமீபசம்பந்தத்தினால் அவ்வாறு உண்டாவதில்லை. (6) தூரதேச சேர்க்கையினால் அந்தத்தேசத்தினுடைய பதார்த்தங்களை அடையலாம். தூர சம்பந்தத்தினால் நன்மைகளே ஏற்படுகின்றன. சமீப விவாகத்தினால் அவ்வண்ணம் ஏற்படுகிறதில்லை. ஆகையினால்,

**दुहिता दुर्हिता दूरेहिता दोग्धेर्वा ॥** நிருக். 3. 4.

கன்னிகையினுடைய பெயர் **துஹிதை.** இந்தக் காரணத்தைக்கொண்டு தூரதேச விவாகமாகிறபடியினால் நன்மையைச் செய்கிறவளாகிறாள். சமீப விவாகத்தினாலில்லை. (7) சமீபச்சேர்க்கையினால் பெண்ணினுடைய தகப்பனார் ஏழ்மைத்தனத்தையடைய காரணமிருக்கிறது. எப்படி யென்றால், பெண்ணானவள் ஒவ்வொருதடவையும் தம்மை பார்க்க வரும்போதெல்லாம் அவளுக்கு அவர்கள் ஏதாவது கொடுக்கவேண்டும். (8) சமீபசேர்க்கையினால் இருபக்கத்தினரும் அவரவர்களுடைய உதவியைப் பெரிதும் கருதி கர்வத்துடன் நாடி வருவார்கள். ஸ்திரீகளுடைய புத்தி மிகவும் கூர்மையானபடியினால், சமீப சேர்க்கையினால் கெட்ட பெயரும் விரோதமுமே சம்பவிக்கும். கொஞ்சம் மனஸ்தாபம் ஏற்படுமே யானால் உடனே ஸ்திரீ தன் தகப்பனார் அகத்திற்கு நடந்து விடுவாள். இவைகளும், இன்னும் இவைகளைப்போன்ற அநேக கார

ணங்களும், ஒரே வம்சத்தைச்சார்ந்த இருவர்களுக்கோ அல்லது தகப்பனுர் பக்கத்தைச்சேர்ந்த ஆறு வம்சங்களினுல் பிரிக்கபடாத பெண்ணைக் கல்யாணஞ் செய்து கொள்பவர்களுக்கோ ஏற்படகூடிய தீமைகளாகும்.

महान्त्यपि समृद्धानि गोऽजाविधनधान्यतः ।
स्त्रीसम्बन्धे दशैतानि कुलानि परिवर्जयेत् ॥ மனு. 3 6.

தனம், தான்யம், ஆடு, மாடு, யானை, குதிரை, நிலம் முதலான சகல சம்பத்துகளால் எவ்வளவு தூரம் ஒரு குடும்பம் நிறைந்திருந்த போதிலும், விவாகவிஷயங்களில் கீழ்க்கண்ட பத்துகுடும்பங்களுடன் சம்பந்தம் செய்தல் கூடாது.

हीनक्रियं निष्पुरुषं निश्छन्दो रोमशार्शसम् ।
क्षय्यामयाव्यपस्मारिश्वित्रिकुष्ठिकुलानि च ॥ மனு. 3. 7.

எக்குடும்பத்தில், சத்கிரியை ஒன்றும் செய்கிறவர்களில்லையோ, சத்புருஷர்கள்யாருமில்லையோ, வேதாத்யயனத்தை அலக்ஷியம் செய்கிறுர்களோ, நீண்டு அல்லது பருத்துக்கனத்த ரோமங்களை உடைய உடம்புள்ளவர்கள் இருக்கிறுர்களோ, க்ஷயம், உப்பஸம், கோழை, இருமல், மேகம், வெள்ளைக்குஷ்டம், யானைக்கால், முதலான ரோகங்களால் பீடித்து வருந்துகிறவர்கள் இருக்கிறுர்களோ, அந்தக்குடும்பங்களிலிருந்து பெண்ணையாவது, பிள்ளையையாவது ஏற்றுக்கொள்ளவேகூடாது. ஏனென்றுல், இம்மாதிரி வியாதிகள், கலியாணஞ் செய்துகொள்ளுவதினுல் ஒரு குடும்பத்திலிருந்து மற்ற குடும்பத்திற்குப் பரவும். ஆகையினுல் உத்தமகுலங்களிலிருந்தே பெண்களுக்கும், பிள்ளைகளுக்கும் விவாகம் செய்யவேண்டும்.

नोद्वहेत्कपिलां कन्यां नाऽधिकाङ्गीं न रोगिणीम् ।
नालोमिकां नातिलोमां न वाचाटान्न पिङ्गलाम् ॥ மனு. 3. 8.

ஒருவன், மஞ்சள் நிறத்தையுடையவளையாவது, தன்னைவிடப் பெரியவளையாவது, பருத்தவளையாவது, பலமுள்ளவளையாவது, வியாதியால் வருந்துகிறவளையாவது, அடர்ந்தகுழல் அல்லது குழலின்றியிருப்பவளையாவது, பூனையைப்போன்ற கண்களையுடையவளையாவது, கலியாணம் செய்துக் கொள்ளக் கூடாது.

नर्क्षवृक्षनदीनाम्नीं नान्त्यपर्वतनामिकाम् ।
न पक्ष्यहिप्रेष्यनाम्नीं न च भीषणनामिकाम् ॥ மனு. 3. 9.

அசுவனி, பரணி, ரோகிணிதேவி, ரேவதிதேவி, சித்திரை முதலான நக்ஷத்திரங்களுடைய நாமங்களையும், துளசி, ரோஜா, சம்பா முதலான விருக்ஷங்களுடைய பெயர்களையும், கங்கா, யமுனு, முதலான நதிகளுடைய நாமங்களையும், சாண்டாளி முதலான தாழ்ந்த நாமங்களையும், விந்தியை, ஹிமாலயம், முதலான பர்வதங்களின் நாமங்களையும், மாதோதாஸி, மீருதாஸி என்கிற இழிவான நாமங்களையும் உடைய கன்னிகையை விவா

கம் செய்துகொள்ளக்கூடாது; ஏனென்ருல், இம்மாதிரிபெயர்களெல்லாம் மனோரம்ய மற்றனவாயும் அன்னியபதார்த்தங்களுடைய நாமங்களாயுமிருக்கின்றன.

**अव्यङ्गाङ्गीं सौम्यनाम्नीं हंसवारणगामिनीम् ।**
**तनुलोमकेशदशनां मृद्वङ्गीमुद्वहेत्स्त्रियम् ॥** மனு. 3. 10.

சமமான பரிமாணத்தை யுடையவளாயும், அங்கஈன மற்றவளாயு **யசோதை சுக்தை** என்கிற சுந்தரமான நாமங்களையுடையவளாயும் அன்னத்தினது அல்லது யானையினதுநடையை உடையவளாயும், மிகவும் சன்னமானரோமத்துடனும், நல்ல பற்களுடனும், அழகான சரீரத்துடனுங் கூடின பெண்ணை கலியாணம் செய்து கொள்ளவேண்டும்.

**வினு:**—விவாகத்திற்கு எந்த காலம் நல்லது?

**விடை:**—பெண்களுக்குக் கலியாணம் செய்யவேண்டிய காலம் 16வயது விருந்து 24வயது வரையிலும், பிள்ளைகளுக்கு 25 முதல் 48 வரையிலும் உத்தமகாலமாம். 16வயது பெண்ணுக்கும் 25 வயது பிள்ளைக்கும் கலியாணம் செய்வதானது அதமம். 18 அல்லது 20 வயது பெண்ணிற்கும், 30, 35 அல்லது 40 வயது புருஷனுக்கும் நடக்கும் கல்யாணம் மத்திமம். இருபத்து நான்கு வயதுடைய கன்னிகையுடன், நாற்பத்திஎட்டு வயதுடைய புருஷனுக்கு நடக்கும் விவாகமே உத்தமமானது. எந்த தேசத்தில் இவ்விதம் சரிவர பிரமசரியத்தை அனுசரித்து வித்தையைக் கிரகித்துக்கலியாணம் செய்யப்பட்டு வருகிறதோ அந்தத் தேசமே க்ஷேமத்தைப்பெற்றுச் சுகமாயிருக்கும். எந்ததேசத்தில், பிரமசர்யத்தை விட்டு, ஜனங்கள் சிறு பிராயத்திலேயே யோக்யதையில்லாமல் கலியாணத்தைச்செய்து கொள்ளுகிருர்களோ அத்தேசம் துக்கசாகரத்தில் மூழ்கிவிடும். பிரமசர்யத்தைச் சரிவர நடத்தி வித்தையைக்கிரகித்து விவாகம் செய்து கொள்ளுகிற ஊரிலேயே சகலமும் சரிவர நடைபெறும். அது தப்பிப்போகும் பக்ஷத்தில் எல்லாம் கெட்டுப்போய் விடும்.

**வினு:**—பின்வரும் வாக்கியங்கள் பராசர்ர் ஸ்மிருதியிலேயும் **சீக்ரபோதத்**திலேயும் கூறப்பட்டிருக்கின்றன.

**अष्टवर्षा भवेद् गौरी नववर्षा च रोहिणी ।**
**दशवर्षा भवेत्कन्या तत ऊर्ध्वं रजस्वला ॥**
**माता चैव पिता तस्या ज्येष्ठो भ्राता तथैव च ।**
**त्रयस्ते नरकं यान्ति दृष्ट्वा कन्यां रजस्वलाम् ॥**

இவைகளின் அர்த்தமென்ன வென்ருல், எட்டாவது வயதில் "கௌரி" என்றும் ஒன்பதாவது வயதில "ரோகிணி" என்றும் பத்தாவது வயதில் "கன்னிகை" என்றும், அதற்கப்புறம் "ரஜஸ்வலை" என்றும் பெண்ணானவள் அழைக்கப்படுகிருள். அவளுடைய பத்தாவது வயதில் விவாகம் செய்து

கொடாமல், ரஜஸ்வலையான பெண்ணைப்பார்க்கிற தாயாரும், தகப்பனும், சகோதரர்களும், நரகத்தை யடைவார்கள்!

**விடை:**—"பிரம்மா உவாசா" பிரம்மா சொல்லுகிறார்.

**एकक्षणा भवेद् गौरी द्विक्षणेयन्तु रोहिणी ।**
**त्रिक्षणा सा भवेत्कन्या ह्यत ऊर्ध्वं रजस्वला ॥**
**माता पिता तथा भ्राता मातुलो भगिनी स्वका ।**
**सर्वे ते नरकं यान्ति दृष्ट्वा कन्यां रजस्वलाम् ॥** பிரம்ம புராணம்.

ஒரு பெண் பிறந்த முதல் க்ஷணத்தில் அவளுக்குச் "கௌரி" என்றும் இரண்டாவதில் "ரோகிணி" என்றும்,மூன்றாவதில் "கன்னிகை" என்றும்,நான்காவதில் "ரஜஸ்வலை" என்றும் பெயராம். ரஜஸ்வலையில் கல்யாணமாகாமல் அந்தப்பெண்ணைப்பார்க்கிற அவள் தாயாரும், தகப்பனும், சகோதரர்களும், மாமர்களும், சகோதரிகளும் நரகத்தை அடைகிறார்கள்.

**வினா:**—இந்தச் சுலோகம் ஒரு பிரமாண மாகாது.

**விடை:**—ஏன்? பிரம்மவாக்குப் பிரமாண மாகாது என்றால் உங்களுடைய வாக்கும் பிரமாண மாகாதே.

**வினா:**—நீங்கள் பராசரப்பிராமணத்தையும், காசிநாதருடைய பிரமாணத்தையும் ஒப்புக்கொள்ள மாட்டீர்களா?

**விடை:**—நீங்கள் பிரம்ம வாக்கை ஒப்புக்கொள்ளமாட்டீர்களா? காசிநாதரையும், பாராசாரையும் விடப் பிரம்மாபெரியவரில்லையா? நீங்கள்பிரம்மவாக்கை நம்பாவிடில் நாங்கள் காசிநாதருடைய வாக்கையும், பராசரருடைய வாக்கையும் நம்பமாட்டோம்.

**வினா:**—உங்களுடைய சுலோகங்கள் அசம்பவமாயும, கூடாதனவாயும் இருக்கிறபடியினால், நம்புவதற்கு முடியாது. ஏனெனில் ஜனன சமயத்திலேயே நூறு க்ஷணங்கள் நடந்தேறிவிடுகின்றன. இதுவுமன்றி அந்தச்சமயத்தில் விவாகம் செய்வதினால் கொஞ்சமேனும் பிரயோஜனம் உண்டாகாது.

**விடை:**—எங்களுடைய சுலோகங்கள் அசம்பவமாயிக்கும் பக்ஷத்தில் உங்களுடைய சுலோகங்களும் அப்படியே. ஏனென்றால், எட்டு, ஒன்பது வயதில் கல்யாணஞ் செய்வது பிரயோஜனமற்றதே. எப்படியென்றால், கர்ப்பாசயம் முதிர்ந்து, காயபலத்துடன் கூடி பதினாறு முதல் இருபத்திநான்கு வயதுள்ள ஸ்திரீக்கும், பரிபக்குவமான வீர்யத்தையும் திடமான சரீரத்தையும் இருபத்து நான்கு முதல் நாற்பத்தெட்டு வயதுள்ள புருஷனுக்கும் பிறக்கும் குழந்தைகளே உத்தம குழந்தைகளாம்* எவ்விதம் எட்டுவயது கன்னிகையிடத்தில் சங்

---

*** ऊनषोडशवर्षायामप्राप्तः पञ्चविंशतिम् ॥**
**यद्याधत्ते पुमान् गर्भं कुक्षिस्थः स विपद्यते ॥**
**जातो वा न चिरञ्जीवेज्जीवेद्वा दुर्बलेन्द्रियः ॥**
**तस्मादत्यन्तबालायां गर्भाधानं न कारयेत् ॥**

சுஸ்ருத சரீரஸ்தானே 10. 47. 48.

நாரோத்பத்தி அசம்பவமோ அவ்விதமே "கௌரீ" "ரோகிணி" என்றழைப்பதும் அசம்பவமாம். "கௌரி" வார்த்தையின் அர்த்த பிரகாரம் பெண் அழகின்றி கறுப்பாயிருக்கும் பக்ஷத்தில், அவளை "கௌரி" அல்லது "அழகுள்ளவள்" என்றழைப்பது அசம்பவமாகும். அதுவுமன்றி "கௌரி" மகாதேவனின் பத்னியாகவும் "ரோகினி" பலதேவனின் பத்னியாகவும் இருக்கிறார்கள். அவர்கள், புராணங்களை நம்புகிற உங்களால் தாய்களாக அபிமானிக்கப் படுகிறார்கள். தேவியாகிற கௌரியைப்போல் கௌரவிக்கிற ஒருபெண்ணை, நீங்கள், கலியாணம் செய்து கொள்வது எப்படித்தகும்? எப்படி அது நியாயமாகும்?எப்படி ஏற்றதாகும்? ஆகையினால், உங்களுடையதும் எங்களுடையதும் இரண்டும் அசம்பவமும், நம்பக்கூடாதனவுமாம். எவ்விதம் பிரம்மாவின்மீது பழியைச்சுமத்தி நாம் "பிரம்மா சொன்னார்" என்கிறோமோ அவ்விதமே பராசரரின் மீதும் பழியைச்சுமத்தி ஜனங்கள் கட்டுக்கட்டிவிட்டார்கள். ஆகையினால் பிரமாணம் போலிருக்கும் இப்போலிப்பிரமாணங்களை ஒதுக்கி எல்லாவற்றிற்கும் மூலாதாரமாயிருக்கும் வேதங்களைக்கவனிப்போமாக.

**त्रीणि वर्षाण्युदीक्षेत कुमार्यृतुमती सती ।**
**ऊर्ध्वं तु कालादेतस्माद्विन्देत सदृशं पतिम् ॥** மனு. 6. 60.

மாதத்திட்டு மூன்று வருஷத்திற்குப் பிறகு தனக்கிசைந்த புருஷனைப்பெண் தேடிக்கொள்ளட்டும். பிரதி மாதம் ரஜோதர்சன காண்கிறபடியினால் மூன்று வருஷத்திற்கு முப்பத்தாறு ஆகிறது. அதற்கப்புறம் மணம்புரிந்து கொள்வது ஏற்றதாம். அதற்கு முன்னால் மணஞ்செய்து கொள்வது பிரயோஜனமற்றதே.

**काममामरणात्तिष्ठेद् गृहे कन्यर्तुमत्यपि ।**
**न चैवैनां प्रयच्छेत्तु गुणहीनाय कर्हिचित् ॥** மனு. 6. 86.

சமமான குணம், கர்மம், ஸ்வபாவம் இவைகளில்லாதவர்கள் அதாவது பரஸ்பரவிரோதமான குணகர்மஸ்வபாவமுள்ளவர்கள் கலியாணம் செய்து கொள்வதைவிட மரணபரியந்தம் கலியாணமில்லாமலிருப்பதே மேலாகும். இதிலிருந்து என்ன தெளிவாகிறதென்றால் முன் கூறின சமயத்திற்குக் குறை

---

நஸ்ருதகர்த்தாவும், வைத்திய நிபுணருமான தன்வந்திரி, முதிர்ந்தவயதையடையாத ஸ்திரீ, புருஷர்களின் கர்ப்பாதானத்தைக் கீழ்கண்ட சுலோகங்களினால் கண்டிக்கிறார்.

பதினாறுவயதிற்குட்பட்டபெண்ணுடன் 25வயதிற்குட்ட ஒருபுருஷன் கர்ப்பாதானம் செய்வதினால் கெடுதல்கள் அநேகம் விளைகின்றன.

அக்கர்ப்பத்தினால் குழந்தை ஒன்று உண்டாகுமேயானால் அது வெகுநாள் ஜீவிக்காது. அப்படி ஜீவித்தபோதிலும் மிகவும் பலவீனமாயிருக்கும். ஆகையினால் அதிபால்யஸ்திரீயுடன் கர்ப்பாதானஞ்செய்யலாகாது.

இம்மாதிரியான சாஸ்திரத்தினால் கூறபட்ட நியாயங்களையும், சிருஷ்டி கர்மவிதிகளையும் யோசித்து நோக்குங்கால் என்ன ஏற்படுகிறதென்றால் 16வயதிற்கு குறைந்த ஸ்திரீயும், 25 வயதிற்குக்குறைந்த புருஷனும் கர்ப்பாதானத்திற்கு அருகரல்லர். இந்த நியாயத்தை யார் மீறி நடக்கிறார்களோ அவர்கள் துக்கத்திற்கு ஆளாகிறார்கள்.

ந்தாவது, சரியில்லாத குணங்களோடு இல்லாதவர்களாவது மணம் புரிந்துகொள்வது தகுதியாகாது.

**வினு:**—கல்யாணத்தைத் தாய் தகப்பன்களே ஏற்பாடு செய்யவேண்டியதா அல்லது பிள்ளைகளே செய்துகொள்ளவேண்டியதா?

**விடை:**—கல்யாணம் செய்துகொள்ளுகிறவர்களுடைய ஆதீனத்திலேயே இருந்தால் மிகவும் நல்லது. பெற்றோர்களே ஏற்றுக் கொள்ளுவார்களேயானுலும் அதைப்பெண் பிள்ளைகளின் யோசனையன்னியில் செய்யக்கூடாது. ஏனென்றால் பரஸ்பர நேசத்துடன்சேர்க்கை ஏற்படுமேயானுல் அது சீக்கிரம் விட்டுப்போகாது. அதுவுமன்னியில் அப்படிச்செய்வதினுல் நல்லபயன்களேற்படும். பரஸ்பர நேசத்துடன்நடவாத கலியாணங்களெல்லாம் கஷ்டத்தில் முடிகிறது. கல்யாணத்தில் முக்கியமானவர்கள்பெண்ணும் பிள்ளையுமே தவிற தாயார் தகப்பனுர்களில்லை. அவர்கள் ஒருவருக்கொருவர் திருப்தியடைந்தால் சுகமாய் வாழ்வார்கள். திருப்தியடையை விட்டால் கஷ்டத்தை அனுபவிப்பார்கள். மேலும்.

**सन्तुष्टो भार्यया भर्त्ता भार्य्या तथैव च ।**
**यस्मिन्नेव कुले नित्यं कल्याणं तत्र वै ध्रुवम् ॥** மனு. 3. 60.

எந்தக் குடும்பத்தில் ஸ்திரீயுடன் புருஷனும், புருஷனுடன் ஸ்திரீயும் பரஸ்பர விச்வாசத்துடன் நன்குநேசித்துவாழ்கிறுர்களோ, அந்தக் குடும்பத்திலேயே ஆனந்தமும், சம்பத்தும், கீர்த்தியும் வாசஞ்செய்யும். எந்தக்குடும்பத்தில் விரோதமும், கலகமும் இருக்கிறதோ அங்கே துக்கமும் தரித்திரத்தனமும் நிந்தையும் வாசஞ்செய்யும். ஆகையினுல் ஆர்யவர்த்தத்தில் பழக்கத்திலிருந்துவந்த "ஸ்வயம்வர" விவாகமேசிறந்தது. இருவருக்குக் கலியாணமாவதற்கு முன் அவர்களுடைய வித்தை வினயம், நடவடிக்கை, ரூபம் ஆயுசு, பலம், குலம், சரீரம், முதலியன வெல்லாம் சரியாயிருக்கிறதாவென்று பார்க்கவேண்டும். இவைகளினுல் ஒற்றுவராத கலியாணத்தில் சுகம் கொஞ்சங்கூட ஏற்படாது. சிறுவயதில் கல்யாணம் செய்வதினுலும் சுகமுண்டாகாது.

**युवा सुवासाः परिवीत आगात्स उ श्रेयान्भवति जायमानः ।**
**तं धीरासःकवय उन्नयन्ति स्वाध्यो३ मनसा देवयन्तः ॥** ரிக். 38. 4.

எக்ஞோபவீதம் தரித்து, எல்லாவிதத்திலேயும் சிறந்த பயிற்சி வித்தை, இவைகளைக்கற்றுணர்ந்து, சுந்தரவஸ்திரங்களைத் தரித்து பூர்ணயௌவனத்துடன் கூடின புருஷன் ஒருவனே கிரகஸ்தாச்ரமத்தில் வருகிறுன். வித்யா விருத்தியில் பிரேமையுள்ளவனும், தைரயத்துடனும் கூடின வித்வான்கள் அப்புருஷனுடைய உன்னத குணத்தைக்கண்டு மெச்சுகிறுர்கள். மேலும் பிரம்மசர்யாச்ரமத்தில் உத்தம வித்தையினுடைய சிக்ஷையைக்கிரகிக்காமல், சிறுவயதிலேயே கலியாணத்தைச்செய்து கொண்டு வருகிறவர்கள் வித்வான்களால் மதிக்கப்படாமல் போகிறுர்கள்.

आधेनवो धुनयन्तामशिश्वीः शबर्दुघाः शशया अप्रदुग्धाः ।
नव्यानव्या युवतयो भवन्तीर्महद्देवानामसुरत्वमेकम् ॥ ரிக். 3. 55. 16.

எவருலும் கறக்கப்படாத பசுவைப்போலிருக்கிறவர்களாயும், இளம் வயதுடன் கூடினவர்களாயும், சகலவிதமான உத்தமவியவகாரங்களைப் பூர்த்தி செய்தவர்களாயும், குழந்தைப்பருவத்தைத் தாண்டினவர்களாயும், உத்தம பயிற்சி நடவடிக்கை இவைகளினுல் நிறைந்தவர்களாயும் பூர்ண யௌவன பர்வத்திலிருக்கிறவர்களாயும், பிரம்மசர்யம் முதலான நன்நடவடிக்கைகளினுல், சிரேஷ்டமான வித்வான்களாலும் பெரிய புத்திமான்களாலும் எழுதப்பட்ட நூல்களிலிருந்தும், சொல்லப்பட்ட உபதேசங்களிலிருந்தும், தன்னுடைய நடவடிக்கைகளைக்கற்றுணர்ந்த ஸ்திரீகள் யௌவன புருஷர்களை அடைந்து கர்ப்பாதானத்தின் ஜவாப்தாரித்தனத்தை ஏற்றுக் கொள்ளட்டும்.

ஒருக்காலும் இளம்வயதில், புருஷர்களை மனதினுல் கூட பெண்கள் நினைக்கக்கூடாது. ஏனென்ருல் கெடாத அவர்களுடைய நடவடிக்கைகளானது இவ்வுலகில் மாத்திரமன்னியில் பரலோகத்திலேயும் சந்தோஷத்தை உண்டுப்பண்ணும். இளம்வயதில் கல்யாணம் செய்வதினுல் புருஷர்களை விட பெண்களுடைய சரீரம் நாசத்தை அடைகிறது.

உத்தம வித்தை பயிற்சி முதலியவைகளை அடைந்து, பூர்ணஞானத்தை கிரகித்து சந்தானங்களை அடையயோக்கியம் என்று எண்ணி தனக்குச் சமானமாயுள்ள யௌவனஸ்திரீயைமணக்க விரும்பி நூறுவயதுவரையில் பேரன் பேத்திகளோடு இருக்க எப்படி ஒருவன் விரும்புகிருனே அப்படியே ஒவ்வொரு புருஷனும் ஸ்திரீயும் செய்தல் வேண்டும். பரஸ்பரம் அடியிற் கண்டவாறு சொல்லிக்கொள்ளவேண்டும்.

पूर्वीरहं शरदः शश्रमाणा दोषावस्तोरुषसो जरयन्तीः । मिनाति श्रियं
जरिमा तनूनामप्यूनु पत्नीर्वृषणो जगम्युः ॥ ரிக். 1. 178. 1.

காலையும் மாலையும், இரவும் பகலும், மனிதர்களின் அழகைக்குறைத்து கிழத்தனத்தை உண்டு பண்ணுகிறபடியால் பூர்ண பிரமசர்யத்தை ஆசரயித்து, பலத்தை விருத்திசெய்து குணத்தை மேன்மைப்படுத்தி மலர்ந்த யௌவன பருவத்தை அடைந்த பின்னரே கலியாணம் செய்வேன்? விவாகங்களுக்கு விரோதமாயுள்ள சித்தாந்தங்களை அனுசரிப்பவர்கள் வேதவிரோதிகள். அவர்களுக்குச் சந்தோஷ மென்பதில்லை.

எதுவரையில் அரசர்களும், மகாராஜாக்களும், பிரமசர்யத்தில் வித்தையைக் கற்றுணர்ந்து, ஸ்வயம்வரவிவாகத்தை அனுசரித்து வந்தார்களோ அதுவரையில் இவ்வார்யவர்த்ததேசம்மிகவும் உன்னதஸ்திதியை யடைந்திருந்தது. எப்பொழுதிலிருந்து பிரமசர்யாசிரமத்தில் வித்தையைக்கற்காமல், சிறுவயதிலேயே கலியாணம்செய்து கொள்ளுவதானது பராதீனமாய் அதாவது பெற்ருேர்கள்செய்து வைப்பதாய்விட்டதோ அப்பொழுதிலிருந்தேகிரமமாய் ஆர்ய

வர்த்தத்திற்குக் கேடுவர ஆரம்பித்து விட்டது. ஆகையினால் இந்தத் துன்மார்க்கத்தை விட்டு, புத்திமான்கள் யாவரும் மேற்சொன்ன ஸ்வயம்வரவிவாகத்தை அநுசரிக்கவேண்டும். இவ்விவாகம் வர்ணாநுக்ரமபிரகாரம் நடக்கவேண்டும். வர்ணவியவகாரங்களைக்கூட குணகர்ம ஸ்வபாவமாய் பார்த்துப்பிரிக்க வேண்டும்.

வினா:—என்ன! தாய் தகப்பன் பிராமணர்களாயிருந்தால் தான் பிள்ளையும்பிராம்மணனா? தாய் தகப்பன் வேறுவர்ணத்தைச்சார்ந்தவர்களாயிருந்தால் அவருக்குப் பிறந்தவர்கள் பிராம்மணர்களில்லையா?

விடை.—ஆமாம் பலர் இருந்திருக்கிறார்கள். இருக்கவும் போகிறார்கள். உதாரணம் ஒன்று எடுத்துக்கொள்ளுவோமானால், சாந்தோக்ய உபநிஷத்தில் அறியமுடியாத பிறப்பையுடைய **சத்திய காமஜபாலா** பிராமணனர். மகாபாரதத்தில் க்ஷத்திரிய வம்சத்து **விச்வாமித்திரர்** பிராம்மணனானர். சண்டாளி வயிற்றில் பிறந்த **மாதங்கரிஷி** பிராம்மணனாயிருக்கிறார்.

இப்பொழுதும் எவர் ஸ்வபாவத்தினால் உத்தம வித்தைகளைக் கற்றுணர்ந்தவராயிருக்கிறாரோ அவர் பிராம்மணன் என்று அழைக்கத் தகுந்தவர். மூர்க்கனவன் சூத்திரன் என்று அழைக்க தகுந்தவன் இவ்விதமான இயற்கைப்பிரிவு எப்பொழுதும் சரியாயிருக்கும்.

வினா.—சுரோணித சுக்கிலங்கலந்து கர்ப்பந்தரிக்கிறதினால் உண்டான சரீரம் இதர வர்ணத்திற்கு யோக்யமாய் எப்படியாகும்.

விடை.—பிராம்மண சரீரம்ரஜோவீர்யத்தினால் உண்டாகிறதில்லை.

**स्वाध्यायेन जपैर्होमैस्त्रैविद्येनेज्यया सुतैः ।**
**महायज्ञैश्च यज्ञैश्च ब्राह्मीयं क्रियते तनुः ॥** மனு. 2. 128.

இதனுடைய அர்த்தம் முந்தியே கூறப்பட்டிருக்கிறது. இங்கேயும் சொல்லுவோம். கற்றல் கற்றுக்கொடுத்தல் விசாரணை செய்தல் செய்யச் செய்தல் நானாவித ஹோமங்களைச்செய்தல் அர்த்தம் சம்பந்தம் ஸ்வரோச்சாரணம் இவைகளுடன் கூடிப்படித்தல், படிக்கச்செய்தல், மேற்சொன்ன விதிப்பிரகாரம் பௌர்ணமை முதலான நாட்களில் ஹோமம் செய்தல், நியாயவழியிற் சந்தானோத்பத்திசெய்தல், பிரம்ம யக்ஞம், தேவயக்ஞம், வைஸ்வதேவயக்ஞம், அதிதியக்ஞம் முதலியவைகளையும், அக்னிஷ்டோ மாதியக்ஞம், வித்வான்களுடைய சங்கம், சத்காரியம், பரோபகாரம் இவைகளைச்செய்தல் கைத்தொழில்களில் பரிபூர்ணவித்வத்தும், கெட்டாசாரங்களை ஒழித்தல், சிரேஷ்ட ஆசாரத்தைக் கைக்கைக்கொள்ளல், இவைகளெல்லாம் பிராம்மணனைக்குறிக்கிறது.

வினா.—என்ன நீங்கள் இந்தச் சுலோகத்தை நம்பவில்லை போலும்.

விடை:—ஆமாம் நம்புகிறோம்.

வினா.—நீங்கள் எப்படி ரஜோவீர்யத்தினால் வர்ணவ்யவஸ்தையை நம்புகிறீர்கள்.

**விடை.**—நான் ஒருவனே அவ்விதம் நம்பவில்லை. அநேகர் பரம்பரையாய் அப்படியே நம்பி வந்திருக்கிறார்கள்.

**வினு.**—நீங்கள் பரம்பரையாய் வருவதைக்கூட கண்டிக்கிறீர்களா ?

**விடை.**—இல்லை. நீங்கள் சொல்லுவதில் தவறுயிருப்பதை ஒத்துக் கொள்ளாமல் கண்டிக்கிறோம்.

**வினு**—எங்களது முடிவு தவறு என்றும் உங்களுடையது சரியானதென்றும் கூறுவதற்குப் பிரமாணம் யாது ?

விடை:—ஐந்தாறு தலை முறையாக அனுசரித்து வரும் வழக்கங்களை நீங்கள்புராதனமாக நம்புகிறீர்கள். ஆனல் நாங்களோ உலக சிருஷ்டியிலிருந்து வரும் வேதத்தையே புராதனமாக நம்புகிறோம். இதுவே ஒரு பிரமாணம். பாருங்கள் தகப்பன் சிஷ்டனுயிருந்தால் குமாரன் துஷ்டனுயிருக்கிருன். தகப்பன் துஷ்டனுயிருந்தால் குமாரன் சிஷ்டனுயிருக்கிருன். அதே போல் சில விடங்களில் இரண்டு பெயர்களும் துஷ்டர்களாகவோ சிஷ்டர்களாகவோயிருக்கிருர்கள். ஆகையினல் நீங்கள் பிரமையில் ஆழ்ந்திருக்கிறீர்கள்.

**येनास्य पितरो याता येन याताः पितामहाः ।**
**तेन यायात्सतां मार्गं तेन गच्छन्न रिष्यते ॥** மனு 4. 178.

எந்த வழியைத்தன் தகப்பனும், முன்னோர்களும் தொடர்ந்தார்களோ, அதே வழியைப் பிள்ளைகளும் தொடரவேண்டும். ஆனல் நல்ல வழியாயிருந்தால் மாத்திரம் அதைக் கைக்கொள்ளவேண்டுமே யல்லாது, கெட்டவழியைக் கொள்ளக்கூடாது. ஏனென்ருல் தர்மாத்மாக்களான புருஷர்களுடைய வழியில் செல்லுவதினல் ஒருபொழுதும் துக்கமேற்படாது. நீங்கள் இதை நம்புகிறீர்களா, இல்லையா?

வினு.—ஆமாம்; நம்புகிறோம்.

**விடை.**—பரமேச்வரனல் வெளியிடப்பட்ட வேதத்தில் சொல்லப்பட்டிருக்கிறதெல்லாம் அழிவில்லாதது. அதற்கு விரோதமாக இருக்கிறதெல்லாம் ஒருபொழுதும் நித்தியமாகாது. எல்லோரும் அவ்விதம் நம்பவேண்டாமா?

(வினு) அவசியமாய் நம்பவேண்டும்.

விடை.—அவ்விதம் நம்பாதவர்களைத், தகப்பன் பணமில்லாதவனுயும் மகன்பணமுள்ளவனுயுமிருந்தால் அவன் தன்தகப்பனிடமிருக்கும் அபிமானத்தினல்தன்பணங்களை எல்லாம் ஒழித்துவிடுகிறதாவென்றும், தகப்பன்குருடனுயிருந்தால், குமாரனும் தன்கண்களைக் கெடுத்துக்கொள்ளுகிறதாவென்றும், தகப்பன் அயோக்யனுயிருந்தால் பிள்ளையும் அயோக்யமான கார்யங்களையே செய்ய வேண்டியதுதான வென்றும், கேட்க்க வேண்டியது.

**வினு:**—இல்லை, இல்லை. ஆகையினல்கெட்டகாரியங்களை விட்டு நற்கார்யங்களையே செய்வது ஒவ்வொரு புருஷனுடைய அத்யாவச்யமான வேலையாகும்.

**விடை:**—குண கர்மயோகத்தினுல் அல்லது பிறப்பைக்கொண்டு வர்ணுச்ரமத்தை அநுசரிக்கிறவர்கள் தன்வர்ணத்தை விட்டு, நீசனுகவோ மகம்மதியனுகவோ, கிருஸ்துவனுகவோ திரும்புகிற பிராமணனை ஏன் பிராமணனென மதிக்கிறதில்லை என்று கேட்கவேண்டும். அதற்கு, அவன் பிராம்மண ஸ்வபாவங்களேயும், கர்மங்களேயும், விட்டு விட்டபடியினுல், தன்னை பிராமணனுகத் தீர்மானிக்கிறதில்லை என்பான். இதினுல், பிராமணுதி உத்த மகர்மங்களைச் செய்கிறவன்பிராமணனென்றும், நீசனெருவன் உத்தமகுண கர்மஸ்வபாவங்களை உடையவனுயிருக்கும் பக்ஷத்தில் அவனை உத்தமவர் ணத்தைச் சார்ந்தவனென்றும், உத்தமவர்ணத்தைச் சேர்ந்தவனெருவன், நீச வர்ணத்திற்கேற்ற காரியங்களைச்செய்வானேயானுல் அவனை நீசனுகவேதீர் மானிக்க வேண்டுமென்றும் விளங்குகிறது.

**வினு:**— இது யஜுர் வேதத்தினுடைய 30-வது அத்தியாயத்தில்11-வது மந்திரம்.

**ब्राह्मणोऽस्य मुखमासीद्बाहू राजन्यः कृतः ।**
**ऊरू तदस्य मद्वैश्यः पद्भ्याᳪशूद्रो अजायत ॥** யஜு 30. 11.

ஈஸ்வரனுடைய முகத்திலிருந்து பிராமணர்களும், புஜங்களிலிருந்து க்ஷத்திரியர்களும், துடைகளிலிருந்து வைசியர்களும், பாதங்களிலிருந்து சூத் திரர்களும், முறையே உண்டானுர்களென்பது இதன் கருத்து. எவ்விதம் முகம் கைகளாகவும், கைகள் பாதங்களாகவும், பாதங்கள் துடைகளாகவும் மாறமுடி யாதோ அவ்விதமே பிராமணன் சூத்திரனுகவும், சூத்திரன் வைசியனுகவும், மாறமுடியாது.

**விடை:**—இந்த மந்திரத்திற்கு நீங்கள் கூறினது சரியான பொருள் அல்ல. இவ்விடத்தில் " புருஷ " என்னும் வார்த்தைக்கு " ரூபமற்றவரென்றும் சர்வ வியாபி " என்றும் முன்மந்திரத்தினுல் ஏற்படுகிறது. எப்பொழுது ஈசுவரன் ரூபமின்றியிருக்கிருரோ, அப்பொழுது அவருக்கு முகமாவது அல்லது சரீ ரத்தினுடைய வேறு அங்கங்களாவது எங்கிருந்துவரும்? முகமாவது அல்லதுவேறு அங்கங்களாவது அவருக்கு இருந்தால் அவர் சர்வவியாபி என்பது எங்ஙனம் ஆகும்? வியாபகமன்னியிலிருக்கிறவர், சர்வசக்தியினனுயும், சிருஷ்டி கர்த்தாவாயும், ஜீவன்களுடைய பாபபுண்ணியங்களை நிர்ணயிக்கிற வராயும் சர்வக்ஞராயும், ஜன்மமின்றியிருக்கிறவராயும் இறப்பு முதலான விசேஷ ரூபங்களை உடையவராயுமிருக்கமுடியாது? ஆகையினுல் இதனு டைய அர்த்த மென்னவென்ருல் (அஸ்ய) மானிட சரீரத்தில் முகம் எப்படி முக்கியமாயிருக்கிறதோ அப்படியே சர்வ வியாபியாயிருக்கிற பரமாத்மாவின் இச்சிருஷ்டியில் (பிராமண:) எல்லோருக்கும் தலைவனுயும்முக்கியமாயுமிருக்கிற படியினுல் பிராமணன் முக்கியமாகிருன். (பாஹு:) பாஹுர்வை பலம்பாஹுர் வை வீர்யம்" (சதபாத பிராம்மணம்) பல வீர்யங்களுக்கு "பாஹு" என்று பெயர். அது எவனிடத்திலதிகமாயிருக்கிறதோ அவன் (ராஜன்ய) க்ஷத்தி ரியன். இடுப்புக்குக் கீழ் பட்டும் துடைகளுக்குமேலேயுமிருக்கிற பாகத்திற்கு

"ஊரு" என்று பெயர். எவனொருவன் "ஊரு" வினுடைய பலத்தினால் சகல தேசங்களுக்கும் சென்று வருகிறானோ அவன் (வைஸ்ய.) வைசியன். (பதப்யாம்) பாதங்களென்றால் நீச அங்கங்களைப்போல் மூர்க்கத்தனம் முதலான குணங்களுடன் கூடினவன் சூத்திரன்.

**சத பதத்தில்,** வேதிடத்தில் இந்த சுலோகத்திற்கு இதேமாதிரி அர்த்தம் சொல்லப்பட்டிருக்கிறது.

**यस्मादेते मुख्यास्तस्मान्मुखतो ह्यसृज्यान्त इत्यादि ।** சதபதபிரா.

முக்கியமாகிறபடியினால், முகத்திலிருந்து உண்டாகிறதென்பது **"சம்கதம்"** அதாவது அங்கங்கள் எல்லாவற்றிலும் முகம் சிரேஷ்டமாயிருப்பதைப்போல், பூர்ணவித்தையினாலும், உத்தமகுணகர்மஸ்பாவத்தினாலும், மனிதஜாதியில் உத்தமனாயிருப்பவனுக்கு பிராம்மணனென்று பெயர். பரமேசுவரன் ரூபமற்றவராயிருக்கிறபடியினாலும, முகத்தைப்போன்ற அங்கங்களில்லாதவராயிருக்கிறபடியினாலும் முகத்திலிருந்து உண்டானார்களென்பது மலடி மக்கள் கல்யாணத்தைப்போல அசம்பவமாகிறது. இதுவுமன்றியில் முகம்முதலான அங்கங்களிலிருந்து பிராம்மணர் முதலானவர்கள் உண்டாயிருக்கும் பக்ஷத்தில் அந்தந்த அங்கங்களின் உருவங்களையே அவர்கள் அடையவேண்டும். பிராமணர்களுடைய உருவம், முகத்தைப்போல் வட்டமாயிருக்க வேண்டும். க்ஷத்திரியர்கள் கைகளைப்போலவும், வைசியர்கள் தொடைகளைப்போலவும், சூத்திரர் பாதங்களைப்போலவும் முறையே இருக்கவேண்டு மல்லவா?. அங்ஙனம் இல்லை. முகம் முதலான அங்கங்களிலிருந்து உண்டாகிறபடியினால், பிராம்மணர் முதலானவர்களை அவ்விதமே அழைக்கவேண்டுமென்று சொல்லுவாய். ஆனால் எல்லோரையும்போல் நீயும் ஒரு ஸ்திரீயுடைய கர்பதானத்திலிருந்து உண்டானபடியினால், அப்படி அழைத்துக்கொள்வது சரியல்ல. முகம் முதலான அங்கங்களிலிருந்து நீங்கள் உண்டாகாமலிருந்துகொண்டு பிராம்மணனென்றழைத்துக் கொள்ளப் பிரியப்படுகிறீர்கள். ஆகையினால் உங்களுடைய அர்த்தம் வியர்த்தமானது. நாங்களுரைத்த அர்த்தத்தையே சரியானதென்று உரைக்கவேண்டும். இவ்விஷயத்தில் மனுமுதலானவர்களும் அவ்வண்ணமே சொல்லுகிறார்கள்.

**शूद्रो ब्राह्मणतामेति ब्राह्मणश्चैति शूद्रताम् ।**
**क्षत्रियाज्जातमेवन्तु विद्याद्वैश्यात्तथैव च ॥** மனு 10. 65.

சூத்திர குலத்திலுதித்தபோதிலும், பிரம்ம, க்ஷத்திரிய, வைசியர்களுடைய குணம், கர்மம், ஸ்பாவம் இவைகளை உடைத்தாயிருந்தால், அவன் பிராம்மணனாகவோ, க்ஷத்திரியனாகவோ, வைசியனாகவோ முறையே ஆகிறான். சூத்தரனைப்போல் குணகர்மஸ்வபாவங்களைக்கொண்டிருந்தால் அவன் சூத்திரனாகிறான். அவ்வண்ணமே க்ஷத்திரியகுலத்திலாவது, வைசியகுலத்திலாவது உதித்துப் பிராமமணனைப்போலாவது சூத்திரனைப்போலாவது நடந்தால் அவன் சூத்திரனாகவாவது, பிராம்மணனாகவாவது ஆகிறான்.

ஆகையினால் நான்கு குலத்திலேயும் எங்கெந்தக் குலத்திற்குச்சமான மான ஸ்திரீ புருஷர்களிவிருக்கிறார்களோ, அவர்களை அந்தந்தக்குலத்திலேயே சேர்க்கவேண்டும்.

**धर्मचर्य्यया जघन्यो वर्णः पूर्वं पूर्वं वर्णमापद्यते जातिपरिवृत्तौ ॥**

**अधर्मचर्य्यया पूर्वो वर्णो जघन्यं जघन्यं वर्णमापद्यते जातिपरिवृत्तौ ॥**

இது ஆபஸ்தம்ப சூத்திரத்திலிருக்கிறது. ஈனமாய்த் தள்ளப்பட்டவர்கள் தர்மத்தினுடைய ஆசரணத்தினால் உத்தமகுலத்திற் கேற்றவராகிறார்கள். எந்தக்குலத்திற்கு ஒருவன் யோக்கியனோ அவனை அதே குலத்தில் ஏற் படுத்த வேண்டும். அதேமாதிரி அதர்மங்களினுடைய ஆசரணத்தினால் ஒருவன் நீசவர்ணத்தை யடைகிறான். அவனை அந்த நீசவர்ணத்தைச்சார்ந்த வனாகவே பாவிக்கவேண்டும். எவ்விதம் அதர்மங்களுடைய ஆசரணத்தினால் புருஷர்கள் நீசவர்ணத்தையடைகிறார்களோ அவ்விதமே ஸ்திரீகளும். இதனால் என்ன ஏற்படுகிறதென்றால், சகல வர்ணத்தைச்சேர்ந்தவர்களும் அவரவர்க ளுடையகுணகர்மஸ்வபாவத்துடன் கூடினவர்களாய், பரிசுத்தமாகஆகிறார்கள். அதாவது பிராம்மணகுலத்தில் வைசியன், க்ஷத்திரியன் சூத்திரனிருக்கக் கூடாது. க்ஷத்திரியர்களும், வைசியர்களும், சூத்திரர்களும், சுத்தமாயி ருக்கக்கூடும். இதினால் எந்தவர்ணத்திற்காவது நிந்தையும், கெட்டப்பெயரு மேற்படாது.

வினா.—ஒரு குடும்பத்திலுள்ள ஒரே பிள்ளை அல்லது பெண்ணாவது, வேறு வகுப்பில் சேரின், அக்குடும்பத்தாரை ரக்ஷிக்க யார் உதவு வார்கள். குடும்பமும் இத்துடன் நசித்துவிடாதா?

விடை.—இதனால் ஒருவனுடைய சேவைக்குப்பங்கமாவது வம்சநாசமா வது உண்டாகாது. ஏனென்றால் தன்பெண்ணினுடைய ஸ்தானத்திற்கோ பிள்ளையினுடைய ஸ்தானத்திற்கோ, வர்ணத்திற்கேற்ற வேறு குழந்தைகளை *இராஜசபையோ, ஜனசபையோ, கொடுக்கும். ஆகையினால் சமூ கஹீனம் ஒன்றும் ஏற்படாது. இம்மாதிரி குணம், கர்மம், ஸ்வபாவம் இவைகளினால் வர்ணவியவகாரத்தை ஸ்திரீகளுக்குப் பதினாறுவயதி லேயும், புருஷர்களுக்கு இருபத்தைந்துவயதிலேயும் ஏற்படுத்த வேண்டும். இவ்விதமே பிராம்மணன் பிராமண ஸ்திரீயையும், க்ஷத்திரியன் க்ஷத் திரியையும், வைசியன் வைசிய ஸ்திரீயையும் மணம்புரிந்துகொள்ளவேண்டும். அப்பொழுதுதான் அவரவர்கள் தங்கள் தங்களுடைய வர்ண தர்மங்களைச் சரிவர நடத்திப் பரஸ்பரபிரேமையுடன் வாழக்கூடும்.

## நான்கு ஆசிரமங்களினுடைய விதிகள்.

கீழ்க்கண்டவைகள் நான்கு ஆசிரமங்களினுடைய குணகர்மங்களாகும்.

### பிராம்மணர்களுடைய கடமை.

**अध्यापनमध्ययनं यजनं याजनं तथा ।**

**दानं प्रतिग्रहश्चैव ब्राह्मणानामकल्पयत् ॥** மனு 1. 88.

* இச்சபைநிர்மாணத்தைப்பற்றிய விபரங்களுக்கு ஆறாவது அத்தியாயத்தைப்பார்க்கவும்.

படிப்பது, படிக்கச்செய்வது, யாகம் செய்வது, செய்விப்பது, தானங் கொடுப்பது, வாங்கிக்கொள்வது. இவ்வாறும் பிராமணன் ஒருவனின் கடமை. ஆனால் மனுநீதிப்படி " ப்ரதிக்ருக. ப்ரத்தியவா." அதாவது தானம்வாங்கிக் கொள்ளுவது இழிவான காரியம்.

**शमो दमस्तपः शौचं क्षान्तिरार्जवमेव च ।**
**ज्ञानं विज्ञानमास्तिक्यं ब्रह्मकर्म स्वभावजम् ॥** பகவத்கீதை 18. 42.

(சம.) மனதினாலேயும் கெட்ட காரியங்களை நினைக்கக்கூடாது. அதாவது அதர்மமான காரியங்களுக்கு மனதில் ஒருபொழுதும் இடங்கொடுக்க கூடாது. (தம) காது, கண் முதலான இந்திரியங்களை அநியாய காரியங்களிலிருந்து விலக்கி தர்மத்திலேயே பிரவேசிக்கச்செய்கிறது (தப.) எப்பொழுதும் பிரம சர்யத்தினால் இந்திரியங்களை அடக்கி தர்மத்தை அனுஷ்டித்தல். (சௌசம்).

**आद्भिर्गात्राणि शुध्यान्तिमनः सत्येन शुध्यति ।**
**विद्यातपोभ्यां भूतात्मा बुद्धिर्ज्ञानेन शुध्यति ॥** மனு 5. 109.

ஜலத்தினால் வெளி அங்கங்களும், உண்மையான மொழியினால் மனதும் வித்தையினாலும் தர்மானுஷ்டத்தினாலும் ஜீவாத்மாவும், ஞானத்தினால் புத்தியும் முறையே பரிசுத்தமாகின்றன. அதாவது உள்ளே பகைமைகளைப்போன்ற கெடுதல்களைவிட்டுவிட்டு வெளியில் சத்தியம் அசத்தியம் இவைகளை அறிவின் மூலமாக தெரிந்து அசத்தியத்தை ஒழித்து சத்தியத்தைக்கொள்வதினாலே நிச்சயமாய் பரிசுத்தனாகலாம். (க்ஷாந்தி) நிந்தை, ஸ்துதி, சுகதுக்கம், சீதோஷ்ணம், பசி, தாகம், கேடு, லாபம், மானம், அவமானம், முதலான சுக துக்கங்களை விட்டுவிட்டு தர்மத்திலேயே திருடசித்தையுடனிருப்பது (ஆர்ஜவம்). அபிமான மன்னியிலிருப்பது, திரும்பக்கூடிய ஸ்வபாவத்தை உடைத்தாயிருப்பது, குருட்டு எண்ணம் முதலானவைகளை விட்டுவிடுவது (ஞானம்). சகலவேதாதி சாஸ்திரங்களை அடி முதல் கடைவரையில் படிக்கிறது, படிக்கச்செயகிறது, விவேகத்துடன் சத்தியாசத்தியத்தை ஏற்படுத்துகிறதும் எந்தப்பொருள் எப்படியிருக்கிறதோ அதை அப்படியே அதாவது ஜடபதார்த்தங்களை ஜடபதார்த்தங்களாக அறிகிறதும் அவ்விதமே ஏற்றுக் கொள்ளுகிறதும் (விக்ஞானம்). அணு முதற்கொண்டு பரமேச்வரன் பரியந்தமுள்ள சகல பொருள்களினுடையவிசேஷங்களைச் சரியாய் அறிந்தும் அவைகளை நேரான விதிப்படி உபயோகித்தலும் (ஆஸ்திக்யம்) ஒருபொழுதும், வேதம், ஈச்வரன் முக்தி, பூர்வஜன்மம் அபரஜன்மம், தர்மம், வித்தை சத்சங்கம், தாயார், தகப்பனார், குரு, அதிதி இவர்களுக்குச் சேவைப்புரிவதை விடாமலும், எக்காலும் நிந்திக் காமலும் இருத்தலேயாம். இந்த பதினைந்து குணகர்மங்களை பிராமணகுலத்தினர்கள் அவசியம் அனுஷ்டிக்க வேண்டும்.

க்ஷத்திரியர்களின் கடமைகள்.

**प्रजानां रक्षणं दानमिज्याध्ययनमेव च**
**विषयेष्वप्रसक्तिश्च क्षत्रियस्य समासतः ॥** மனு 1. 89.

शौर्यं तेजो धृतिर्दाक्ष्यं युद्धे चाप्यपलायनम्।
दानमीश्वरभावश्च क्षात्रं कर्म स्वभावजम् ॥ பகவத்கீதை 18. 43.

இந்தப் பதினொன்றும் க்ஷத்திரிய குலத்தினுடைய குணகர்மங்கள். (1) (ரிக்ஷணம்) நியாயமாய் குடிகளைக்காப்பாற்றுகிறது. அதாவது வஞ்சனையின்றி சிஷ்டர்களை ஆதரித்து துஷ்டர்களை தண்டித்துச் சகலவிதத்திலேயும் எல்லோரையும் காப்பாற்றுதல் (2) (தானம்) வித்தியா தர்மங்களைப் பரவச் செய்தல் நன்னடையிற் சிறந்தோர்களுக்குச் சேவைச்செய்தல், தனம் முதலான பொருள்களைச்செலவுசெய்தல் (3) (இஜ்யா) அக்னிஹோத்திரமுதலான யாகங்களைச்செய்தல் (4) (அத்யயன) வேத சாஸ்திரங்களைப்படித்தல் (5). (விஷயேஷீ) விஷயசுகங்களில் பிரவேசிக்காமல் இந்திரியங்களை அடக்கி, எப்பொழுதும் சரீரத்தையும், ஆத்மாவையும் பலமாய்வைத்துக்கொள்ளல்.(மனு) (6) (சௌர்யம்) ஆயிரக் கணக்கான சைனியங்களுடன் தனியாகப்போர் செய்யப்பயமின்றியிருத்தல் 7 (தேஜ) எப்பொழுதும் தேஜஸ்வியாய் அதாவது அற்பவிஷயங்களை எல்லாம் விட்டு பெருந்தன்மையைக்கைப் பிடித்தவனுயிருத்தல் (8) (திருதி:) தைரியவானுயிருப்பது (தாக்ஷ்யம்) அரசன், குடிகள் இவர்களைச்சார்ந்த சகல வியவகாரங்களிலும், சகல சாஸ்திரங்களிலும், வெகு நிபுணனுயிருத்தல் (10) (யுத்தே) போர்களத்தில் திறமையாயும் சந்தேகமன்றியும் இருந்துகொண்டு ஒருபொழுதும் தளர்வுறுமல் எதிர்த்தல்; அதாவது, நிச்சயமாகத்தன் பக்கத்திற்கே வெற்றி வரும்படியாகச் சண்டைசெய்து தன் பிராணனைக் காப்பாற்றிக் கொள்ளல் அதாவது சமயம் வாய்த்தபோது சத்ருக்கள் முன்னுலேயிருந்து பதுங்குவதுபோல் பதுங்கி ஜாடைகாட்டிக் கபடத்தனமாய் வெற்றி யடைதல் (11) (தானம்) தானசீலனுயிருத்தல் (ஈச்வாபாவ) பக்ஷபாதமன்னியில் எல்லோரோடும் சரியாய்ப் பழகுதல் வாக்கை ஒருநாளும் கெடுக்காமல் பூர்த்திசெய்தல்; இவை பதினொன்றும் க்ஷத்திரிய குலத்தினுடைய குணங்களும் கர்மங்களுமாகின்றன.

## வைசியர்களின் கடமைகள்.

पशूनां रक्षणं दानमिज्याध्ययनमेव च ।
वाणिक्पथं कुसीदं वैश्यस्य कृषिमेव च ॥ மனு 1. 90.

(பசுரக்ஷா) பசுமுதலான கால்நடைகளை காப்பாற்றிவளர்த்தல் (தான) வித்தை, மதம் முதலியவைகளைப் பரவச்செய்வதிலேயே, தனம் முதலானவைகளைச் செலவழித்தல் (இஜ்யா) அக்னிஹோத்ராதி யாகங்களைச்செய்தல் (அத்யயனம்) வேதாதி சாஸ்திரங்களைப் படித்தல் (வணிகப்த) சரியாய் வியாபாரம் செய்தல் (குசித) வருஷத்திற்கு நான்கு ஐந்து, ஆறு, எட்டு, பன்னிரண்டு, இருபது அணுக்களைவிட அதிகமாய் வட்டிவாங்கிக்கொள்ளாமல் முதலுக்கு இரண்டு மடங்கிற்குமேல் அதிகமாய் அதாவது 100 வருஷமான போதிலும் ஒருரூபாய்க்கு இரண்டு ரூபாய்க்குமேல் வட்டிவாங்கிக்கொள்ளவும் கூடாது. கொடுக்கவுங்கூடாது (க்ருஷி) உழுதல், இவைகள் எல்லாம் வைசியர்களுடைய குணகர்மங்களாம்.

சூத்திரர்களுடைய குணகர்மங்கள்.

**एकमेव तु शूद्रस्य प्रभुः कर्म समादिशत् ।**
**एतेषामेव वर्णानां शुश्रूषामनसूयया ॥** மனு 1. 91

குறைகூறுதல், கோபித்தல், கர்வங்கொள்ளுதல், முதலான கெட்ட நடவடிக்கைகளைவிட்டு பிராம்மணன் க்ஷத்திரியன் வைசியன் ஆக இவர்களுக்குச் சேவை செய்வது. அதனால் தான் ஜீவனம் செய்வதுமே சூத்திரனின் குணகர்மமாகும்.

இவ்விதமாகச் சுருக்கமாய்க் குலங்களினுடைய குணங்கள், கர்மங்கள் எழுதப்பட்டுள்ளது- எவரெவரிடத்தில் எந்தெந்தக்குலத்தினுடைய குணகர்மங்களிருக்கிறதோ அவர்களை அந்தந்தக்குலத்திலேயே ஸ்தாபிக்கவேண்டும். இக்காரணத்தினால் மானிடர்கள் யாவரும் உன்னதஸ்திதியை அடைவார்கள். எப்படியென்றால், தங்களுடைய மக்கள் மூர்க்கத்தனம் முதலான கெடுதல்களுடன் கூடினவர்களாய் சூத்திரர்களாய் போவார்களென்னும் அச்சத்தினால் நல்ல குலத்தையே தேடுவார்கள். அப்படியே சந்ததிகளும் எங்கே தாங்கள் படிக்காமற் போய்விட்டால் சூத்திரர்களாய்ப்போய்விடுவோமோ என்னும் அச்சத்தினால் மேலான குலத்திலேயே இருக்கப் பிரயத்னப்படுவார்கள். இதுவுமன்றி தாழ்ந்த குலத்தவர்கள் உயர்ந்த குலத்தையடைய பிரியப்பட்டு முயற்சிப்பார்கள்.

பிராமணர்கள் கற்றுணர்ந்த வித்வசிரேஷடர்களாயும், தருமசிந்தையுயைவர்களாயு மிருக்கிறபடியினால், அவர்களையே வித்தையையும, தர்மத்தையும் பரவச்செய்வதற்கு நியமிக்கவேண்டும். க்ஷத்திரியர்களுக்கு இராஜயத்தினுடைய அதிகாரத்தைக் கொடுப்பதினால் எப்பொழுதும் இராஜ்யத்திற்குக் கேடு நேரிடாது. ஜீவன்களைக் காப்பாற்றுகிற வேலையைவைசியர்களிடம் ஒப்பிவிக்கவேண்டும். ஏனென்றால் இக்காரியம் அவர்களாலேயே நன்றாய் முடியும். சூத்திரர்கள் வித்தையற்றவர்களாயும், மூர்க்கர்களாயுமிருக்கிறபடியினால் மேற்கூறியமூவர்களுக்குஞ் சேவைச்செய்யும் வேலையையே கொடுக்கவேண்டும். மேலும் காயபலத்தினால் செய்யகூடிய காரியங்களையும் அவர்களுக்கே அளிக்கவேண்டும். இம்மாதிரி அந்தந்த குலத்தினுடைய அதிகாரங்களை அரசன் முதற்கொண்டு குடிகள் வரையில் நடத்திவர வேண்டியது.

எண் வகை மணம்

**ब्राह्मो दैवस्तथैवार्षः प्राजापत्यस्तथाऽसुरः ।**
**गान्धर्वो राक्षसश्चैव पैशाचश्चाष्टमोऽधमः ॥** மனு 3. 21

விவாகங்கள் எட்டு விதங்களாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. அவைகளாவன:— (1) பிரம்மா (2) தெய்வ (3) ஆர்ஷம் (4) பிரஜாபத்யம் (5) ஆசுரம் (6) காந்தர்வம் (7) இராக்ஷசம் (8) பைசாசம். இவைகளின் விவரங்களாவன:—

(1) பெண், பிள்ளை, இருவர்களும் சரிவர பிரம்ம சர்யாச்ரமத்தில் பூர்ண மான வித்தையைக்கற்று தர்மிஷ்டர்களாயிருந்து, இருவருக்கும் பரஸ்பரப் பிரேமையுடன் நடக்கும் கலியாணத்திற்கே "பிரம்ம" என்றும் பெயர். (2) பெரிய யாகமொன்றில் பிள்ளை, யாக கர்த்தாவாயிருக்கும்பொழுது பெண்ணை அலங்கரித்து அவரிடம் கொடுப்பதற்கே "தெய்வ" என்று பெயர். (3) மண மகனிடமிருந்து ஏதாவதுபெற்றுக்கொண்டுகலியாணம்செய்வதற்கே "ஆர்ஷம்" என்று பெயர். (4) தருமத்தை முன்னிட்டு (மதத்தை) அதன் அபிவிருத்திக் காக செய்யும் விவாகத்திற்கு "ப்ராஜாபத்யம்" என்றுபெயர் (5) மணமகனிட மிருந்தாவது மணமகளிடமிருந்தாவது ஏதாவது வரும் என்கிற எண்ணத் துடன் செய்யும் விவாகமே "ஆசுர" மாகும் (6) காலம் சமயம் இவை இரண்டு மன்னியில் இருவர்களுமிஷ்டப்பட்டு எதுவோ ஒரு காரணத்தைக்கொண்டு நடக்கும் கல்யாணத்திற்கே "காந்தர்வம்" என்று பெயர். (7) சண்டைச்செய்து பலாத்காரமாய் அதாவது அச்சங்காட்டியாவது அல்லது கபடத்தினாலாவது ஒருபெண்ணை அபகரித்துக் கலியாணம் செய்து கொள்வதற்கு "ராக்ஷசம்" என்றுபெயர். (8) தூக்கத்திலிருக்கிற அல்லது குடி முதலான வெறி மயக்கத் தில் இருக்கிற அல்லது அறிவிழந்திருக்கிற ஒருபெண்ணை பலாத்காரமாய்ச் சேருவதற்கு "பைசாச" மென்று பெயர். இவ்விதமான சகலவிவாகங்களுக் குள் "பிரம்ம" விவாகம் மிகவும் மேலானது. தேய்வமும் பிராஜாபத்யமும் நடுத்தரமானது. "ஆசுரம்" "ஆர்ஷம்" "காந்தர்வம்" இவைகள் மூன்றும் கெட்டது "இராக்ஷசம்" இழிவானது "பைசாசம்" மிகவும் இழிவானது.

பெண்ணும், பிள்ளையும் தனியாய் விவாகத்திற்கு முன்னமே சந்திக்க கூடாதெனறும், அப்படிச்சந்திப்பதினால் இளமை கெட்டுப்போய் விடு கிறதென்பதும் இதனால் விளங்குகிறது. பெண்ணுக்காவது, பிள்ளைக்காவது விவாக சமயத்திற்கு முன்னாலே அதாவது பிரம்மசர்யாச்ரமத்தி னுடைய படிப்பு முதலானவைகள் முடிவதற்கு ஒருவருஷத்திற்கோ, ஆறுமா சத்திற்கோ முன்னாலே பிள்ளையினுடைய பிரதி பிம்பத்தை(போடோகிராபை) வித்தியாலயத்தினுடைய தலைவிக்கும், பெண்ணினுடைய பிரதிபிம்பத் தை, பிள்ளைகள்கலாசாலை தலைவனுக்கும் அனுப்புதல்வேண்டும். எவரெவர்களு டைய ரூபங்கள் சேருகிறதோ அவரவர்களைத்தேர்ந்தெடுத்துப்பிறகு அவரவர் களுடைய குணகர்மம் ஸ்பாவம் இவைகளை அறிய அவர்கள் பிறப்பிலி ருந்து அன்றைத் தேதிவரையிலுமுள்ள ஜீவிய சரித்திரத்தைப் பார்க்க வேண்டும். அவர்களுடைய குணகர்மங்கள் ஒன்று சேர்ந்து ஒத்திருக்குமானால் அப்பொழுது அந்தஇருவர்களுடைய பிரதிபிம்பம் ஒவ்வொன்றைஇருவருக்கும் அனுப்புதல் அவசியம். அவ்விருவருக்கும் இசைந்து விட்டால் அப்பொழுது தங்கள் எண்ணங்களைத்தங்கள் தங்கள் தலைமை உபாத்தியாயர்களுக்கு அவர் கள் தெரிவிக்கவேண்டும். அவர்கள் இருவரும் பரஸ்பரம் விவாகம் செய்து கொள்ள இசைந்துவிட்டால், இருவரும அதேசமயத்தில் படிப்பை முடித்துக் கொண்டு விட்டிற்குத்திருப்பவேண்டும். அல்லது அவர்களிருவரும் தங்கள் விவாகத்தைக் குருவின்முன்னாலேயே முடிக்கவேண்டும், என்று பிரியப்பட்

டால் அவ்விதமும் செய்யலாம். அவ்விதமில்லாவிடில் மணமகளினுடையவீட்டி லேயேவிவாகத்தை நடத்துவது நலம். மணமகனும், மணமகளும், நேருக்கு நேராயிருக்கும்பொழுது உபாத்தியாயர்களாவது அல்லது மணமகளின் பெற்றோர்களாவது அவர்களிருவரையும், ஜனங்களின் முன்னிலையில் பேசும் படியோ, வாதஞ்செய்யும்படியோ செய்யவேண்டும். இரகஸ்ய சமாசாரமாயிருக்கும் பக்ஷத்தில் நல்ல ஜனங்களின் முன்னிலையில் காகிதத்திலெழுதச் சொல்லி இருவர்களிடமும் கொடுத்து ஈவேண்டுமானல் கேள்வி கேழ்க்கச் சொல்லவும். கலியாணத்தினல் அவர்களிருவருக்கும் இணைவிடா விசுவாசம் ஏற்படும்பொழுது அவர்களுடைய பெரியோர்கள் பிரமசர்யாச்ரமத்தினுடைய படிப்பின் கஷ்டத்தினல் மெலிந்து இளைத்திருக்கும் அவர்கள் சரீரத்தை வளர்பிறை சந்திரன்போல் கொஞ்சநாளில் விருத்திசெய்ய நல்ல ஆகாரங்களைக்கொடுக்கவேண்டும். பிறகு பெண் ரஜஸ்வலையாய், (பருவம்) சுத்தமான பிறகு, மண்டபம் ஒன்று ஏற்படுத்தி அதில் நல்லவாசனைகளையுடைய மூலிகைகளினலும், நெய்யினலும் ஹோமஞ்செய்து, கற்றுணர்ந்த புருஷர்களையும் பெண்களையுமழைத்துத்தக்க மரியாதையுடன் ஏற்கவேண்டும். பிறகு சமஸ்காரவிதியில் சொல்லியபிரகாரம் நடு இரவிலாவது, அல்லது இரவு பத்துநாழிகையிலாவது எல்லாக் கர்மங்களையும் செய்தபிற்பாடு எல்லாருடைய முன்னிலையில் பாணிக்கிரஹணம் செய்து தனிமையாய் ஓர் இடத்தில் ஏகாந்தமாயிருக்கச்செய்யவேண்டும். புருஷர்கள் வீர்யஸ்தாபனத்தையும், ஸ்திரீகள் வீர்யா கிருஷ்ணத்தையும் விதிப்பிரகாரம் அனுசரித்தல் வேண்டும். எவ்வளவு தூரம் முடியுமோ அவ்வளவு காலம்வரையில் வீர்யத்தைக்காப்பாற்றல் வேண்டும். இவ்வளவு தூரம்காப்பாற்றி பிறந்தகுழந்தையே சால சிறந்தகுணமுள்ளவனகிறன். வீர்யம் கர்ப்பத்தில் பிரவேசிக்குந்தருவாயில் ஸ்திரீ புருஷர்கள் அசைவற்றிருந்துகொண்டு மூக்கில்மூக்கையும் கண்ணில் கண்ணையும், அமர்த்தி எல்லா அவயவங்களை கோணலில்லாமல் வைத்து சந்தோஷத்துடன் இருத்தல் வேண்டும்.* அவயவங்களை அசைத்தல்கூடாது. வீர்யத்தைகிரகிக்கும்போது அபானவாயுவை மேல் இழுத்தல் வேண்டும். பிறகு அதை கர்ப்பாசயத்தில் இறுத்த யோனி சங்கோசம்செய்ய வேண்டும். பரிசுத்தஜலத்தில் ஸ்நானஞ்செய்தல் வேண்டும். படித்தஸ்திரீ அப்பொழுதே கருத்தரித்ததை உணர்ந்துவிடுகிறள். மாதத்தீட்டு காணுததிலிருந்து மற்றவர்களும் தெரிந்து கொள்ளுகிறர்கள்.

## கர்ப்பகால ஒழுக்கம்.

ஸ்நானம் செய்த பிறகு சுக்கு, கஸ்தூரி, கிராம்பு, சாலாமிசிரி இவைகளைக்கலந்து காய்ச்சின பாலைத்திருப்தியாக இருவரும் அருந்தி, தனித்தனியாகப் படுத்துக்கொள்ளவேண்டும். எக்காலங்களில் கர்பாதானம் செய்ய இஷ்டமிருக்கிறதோ அக்காலங்களில் இம்மாதிரி செய்யவேண்டியது. எப்பொழுது ஒரு மாசத்திற்கப்புரம் மாதவிடா நின்றுவிட்டதோ, கர்ப்பதானத்தை அது குறிக்கிறபடியினல், புருஷனும் மனைவியும் ஒருவருட பர்யந்தம்

* இது இரகசியமானபடியினல் அதிகம் எழுதுவது உசிதம் இல்லை.

ஒன்று சேரக்கூடாது. ஏனென்றால் அப்படிச்சேராமலிருப்பதனால் பிறக்கும் பிள்ளை நன்றாயிருக்கும். அதுவுமன்னியில் இரண்டாந்தடவை பிறக்கும் குழந்தையும் முதல் குழந்தையைப்போல் நன்றாயிருக்கும். அப்படிச்செய்யாவிடில் வீர்யம் பிரயோஜனமில்லாததாகி இருவர்களுடைய ஆயுளுங்குறைந்து ரோகங்களுக்கு இடங்கொடுக்கிறது. ஆனால் இரண்டுபெயர்களும் நேசத்துடன் வசிக்கவேண்டும். புருஷன் தன்னுடைய கனவிலும்கூட வீர்யத்தை நஷ்டம் செய்துக் கொள்ளக்கூடாது. சர்வசாதாரணமாய், கர்ப்ப காலத்திலிருக்கும் குழந்தை அதி ரூபலாவண்யத்துடன் புஷ்டியுடனும், பலத்துடனும், பராக்கிரமத்துடனும், பத்துமாசத்திற்கப்பிறகு சுக ஜனனமாகும்படி செய்யவேண்டும். கர்ப்பயாதங்களில் நான்காவதையும், பத்தாவதையும் வெகுகவனத்துடன் காப்பாற்றவேண்டும்.

### கர்ப்பகால உணவு.

ஒருபொழுதும் கர்ப்பஸ்திரீ ஒருவள் காரமானபதார்த்தங்களையாவது, மயக்கத்தைக்கொடுக்கக் கூடியபதார்த்தங்களையாவது, பலத்தையோ, புத்தியையோ நாசஞ் செய்கிற பதார்த்தங்களையாவது உட் கொள்ளக்கூடாது. ஆனால் நெய், பால், நல்ல கோதுமை, பழம், உளுந்து,பயிறு முதலான அன்னபானுதி வஸ்துக்களை உட்கொள்ளலாம்.

### ஜாதகர்மம்.

கர்பசமயத்தில் இரண்டு சம்ஸ்காரங்களுண்டு.

நான்காவது மாசத்தில் **பும்சவனமேன்று** பெயர். மற்றொன்று எட்டாவது மாசத்தில் **சீமந்தகல்யாணம்**. இவைகளை விமரிசையாய் நடத்தவேண்டும். எப்பொழுது குழந்தை பிறக்கிறதோ அப்பொழுதிலிருந்தே தாய் குழந்தை இருவர்களுடையசுகத்தையும் ஜாக்கிறதையாய்க்கவனிக்கவேண்டும். அதாவது பிரசவத்திற்கு முன்னால் "சுண் டீபாகம்" என்னும் சுக்குகஷாயமோ அல்லது "சௌபாக்கிய சுண்டீபாகம்" என்னும் சுக்கினால்செய்யப்பட்டவைகளையோ தயாராயிருக்கவேண்டும். பிரசவமான பிறகு நல்ல வாசனையுடன்கூடி ஆரின வெந்நீரில் தாயாரையும் குழந்தையையும் ஸ்நானம் செய்துவைக்கவேண்டும். அதற்குப் பிறகு தொப்புளை அறுக்கவேண்டும் அதாவது நான்கு விரல்களிலும் சன்னமானகயிறு ஒன்றைக்கட்டிக் கொண்டு தொப்புளினுடைய அடியிலிருந்து, ஒரு துளி உதிரமேனும் கீழே விழாமல் அறுக்கவேண்டும். அப்புறம் பிரசவித்த அரையை நன்றாய்ப்பெருக்கி சுத்தம் செய்து, நல்ல வாசனைகளுடன் கூடின நெய் முதலானவைகளுடன் அங்கு ஹோமம் செய்யவேண்டும். அதன் பிறகு அக்குழந்தையினுடைய காதில் அதன் தகப்பனர் "**வேதோஸி** (உன்பெயர் வேதம்) என்றுச் சொல்லி, தங்கக்கம்பியின் நுனியினால் பரமாத்மாவின் நாமமாகிய "ஓம்" என்னும் மொழியை, நெய்யும் தேனும் கலந்ததில் தோய்த்து அதை அதனுடைய நாக்கிலெழுதி, குழந்தையை நக்கவிட வேண்டும். பிறகு குழந்தை யைத் தாதி வசம் விடுதல் முறையாகும். இஷ்டப்பட்டால்

குழந்தைக்குப்பால் கொடுக்கலாம். அப்படி குழந்தையுடைய தாயாருக்குப் பாலில்லாவிடில், பரிக்ஷை செய்த தாதி ஒருவளை ஏற்பாடு செய்துகொள்ளலாம். பிறகு காற்றோட்டமுள்ள வேறு நல்ல அரையில் தாயையும், குழந்தையையும் கடத்தித்தினந்தோறும் காலை, மாலை, இருபொழுதும் ஹோமம் செய்யவேண்டும். முதல் ஆறுநாளைக்கு குழந்தைக்குத் தாயாரே பால் கொடுக்கவேண்டும். மேலும் தாயாரும் தன்னுடைய சரீர புஷ்டிக்குத்தகுந்த பலவித மேன்மையான போஜனங்களையே உட்கொள்ளவேண்டும். யோனியை ஆற்றி கர்ப்பாசயத்தை முன்னிருந்தநிலைமைக்கு கொண்டுவரவேண்டும். ஆறுவதுநாளில் தன்னுடைய இருப்பிடத்தைவிட்டு தயார் வெளியே வரவேண்டும். வெளியில் தன்குழந்தைக்குப்பால் கொடுக்க பாலுள்ள தாதி ஒருவளை அமர்த்திக்கொள்ளவேண்டும். அவளை நன்றாய் போஷிக்கவேண்டும்.

ஆனால் தாயார் குழந்தையின் பேரிலேயே கண்ணுங்கருத்துமாயிருக்கவேண்டும். எவ்விதமான கெட்ட ஸ்வபாவங்களையும் குழந்தையைப்போஷிக்கிற விஷயத்தில் காட்டக்கூடாது. மூலைக்காம்பில் கொஞ்சம் மருந்து சாமான்களைப் போட்டு பாலைக்கட்டிக்கொஞ்சங்கொஞ்சமாய் சுரக்க ஏற்பாடுச்செய்ய வேண்டும். இதேமாதிரி தன்னுடைய சாப்பாட்டு விவகாரங்களையும் மட்டுக்கட்ட வேண்டும். பிறகு நாமகர்ணம் முதலான சடங்குகளைச் “ சமஸ்காரவிதி ” என்னும் நூலில் கூறியிருக்கும் பிரகாரம் நடத்தவேண்டும். ஸ்திரீ மறுபடியும் ரஜஸ்வலையாய் சுத்தமான பிறகு அதே மார்கத்தை அநுசரித்து ருதுதானத்தைச்செய்யவேண்டும்.

ऋतुकालाभिगामी स्यात्स्वदारनिरतः सदा ।
पर्ववर्जं व्रजेच्चैनां तद्व्रयो रतिकाम्यया ॥ மனு 3. 45.

निन्द्यास्वष्टासु चान्यासु स्त्रियो रात्रिषु वर्जयन् ।
ब्रह्मचार्य्येव भवति यत्र तत्राश्रमे वसन् ॥ மனு 3. 50.

எப்புருஷன் தன் ஸ்திரீயுடன் சந்தோஷமாய், தடுக்கப்பட்ட இரவுகளில் தேகசம்பந்தம் செய்யாமல் தூரமாயிருந்து, ருதுகாமியிருக்கிறானோ, அப்புருஷன் கிரகஸ்தனாயிருந்தபோதினும் பிரமசாரிக்குச்சமானமானவன்.

இல்லறநேசம்.

सन्तुष्टो भार्यया भर्त्ता भर्त्रा भार्या तथैव च ।
यस्मिन्नेव कुले नित्य कल्याणं तत्र वै ध्रुवम् ॥ மனு 3. 60.

எவ்விட்டில் பெண்சாதியுடன் புருஷனும், புருஷனுடன் பத்னியும் நல்ல நேசத்துடன் வாழ்கிறார்களோ அவ்விட்டில் சௌபாக்கியமும், ஐசுவரியமும், கட்டாயமிருக்கும். எங்கே கலகமிருக்கிறதோ அங்கே தௌர்பாக்கியமும் தரித்திரத்தனமும் குடி கொண்டு இருக்கும்.

यदि हि स्त्री न रोचेत पुमांसन्न प्रमोदयेत् ॥
अप्रमोदात्पुनः पुंसः प्रजनं न प्रवर्त्तते मனு 3. 61.

ஸ்திரீ ஒருவள் தன் புருஷனுடன் கூட நேசமன்னியிலும், சந்தோஷ மன்னியிலும் இருக்கும்பக்ஷத்தில் புருஷனுக்கும் சந்தோஷமேற்படாமல் காரியம் நடவாமல் கெட்டுப்போய் விடுகிறது.

स्त्रियां तु रोचमानायां सर्वं तद्रोचते कुलम् ।
तस्यां त्वरोचमानायां सर्वमेव न रोचते ॥ மனு 3. 62.

ஒரு குடும்பத்தினுடைய சந்தோஷம் அந்தஸ்திரீயினுடைய சந்தோஷத்திலேயே இருக்கிறபடியினால், அவள் சந்தோஷ மன்னியிலிருப்பதினால் குடும்பத்தினுடைய சந்தோஷம் குறைந்து துக்கம் ஏற்படுகிறது.

ஸ்திரீகளைநடத்தல்,

पितृभिर्भ्रातृभिश्चैताः पतिभिर्देवरैस्तथा ।
पूज्या भूषयितव्याश्च बहुकल्याणमीप्सुभिः ॥ மனு 3. 55.

தகப்பனாரும், சகோதரர்களும், புருஷனும், க்ஷேமத்தைக் கோரிமேன்மையை விரும்புவார்களேயானால், முறையே தங்கள் தங்களுடைய ஸ்திரீயை விதிப்பிரகாரம் ஆபரணங்களினால் அலங்கரிக்கவேண்டும்.

यत्र नार्यस्तु पूज्यन्ते रमन्ते तत्र देवताः ।
यत्रैतास्तु न पूज्यन्ते सर्वास्तत्राऽफलाः क्रियः ॥ மனு 3. 56.

கற்றுணர்ந்தவர்களாகிய ஸ்திரீகள் எவ்விடத்திலிருக்கிறார்களோ, அந்த வீட்டுப்புருஷர்கள் சுகமாய வாழ்வது மன்னியில் தெய்வத்தைப் போலவும் எண்ணப்படுகிறார்கள். ஸ்திரீகளை மரியாதைசெய்யாத குடும்பத்தினுடைய மதகாரியங்கள் யாவும் பலமுள்ளதாகாது.

शोचन्ति जामयो यत्र विनश्यत्याशु तत्कुलम् ।
न शोचन्ति तु यत्रैता वर्द्धते तद्धि सर्वदा ॥ மனு 3. 57.

எக்குலத்தினுடைய வீட்டில் ஸ்திரீகள் துக்கத்துடனும் கஷ்டத்துடனுமிருக்கிறார்களோ, அந்தவீடு சின்னபின்னமாய் நாசத்தையடைகிறது. எந்த வீட்டில், ஸ்திரீகள் ஆனந்தத்துடனும், உற்சாகத்துடனும், சந்தோஷத்துடனும் இருக்கிறார்களோ, அந்த வீட்டில் எப்பொழுதும் மேன்மையையும், சந்தோஷமும் பெருகிறது.

तस्मादेताः सदा पूज्या भूषणाच्छादनाशनैः ।
भूतिकामैर्नरैर्नित्यं सत्कारेषूत्सवेषु च ॥ மனு 3. 59.

ஐசுவர்யங்களைச்சம்பாதித்து சேர்க்கவிரும்புகிற ஒவ்வொரு மனிதனும் கற்றுணர்ந்த ஸ்திரீகளை உச்சவகாலங்களில் ஆபரணங்களினாலும், வஸ்திரங்களினாலும், அன்னபானாதிகளினாலும், திருப்திசெய்து மரியாதை செய்ய வேண்டுமென்று இதனால் விளங்குகிறது. பூஜை என்னும் வார்த்தைக்கு எப்பொழுதும் மரியாதை என்று அர்த்தம் செய்துகொள்ளவும். மேலும் பகலி

லாவது, இரவிலாவது, எப்பொழுது மூதற்தடவையாக ஒருவருக்கொருவர் சந்திக்கிறார்களோ அப்பொழுது "நமஸ்தே" என்று பிரேமையுடன்உரைக்க வேண்டும்.

सदा प्रहृष्टया भाव्यं गृहकार्येषु दक्षया ।
सुसंस्कृतोपस्करया व्यये चामुक्तहस्तया ॥ மனு 5. 150.

எப்பொழுதும் பிரசன்னமாயும், வீட்டுக்காரியங்களில் மிகவும் துரிதமாயும், சாமான்களைவெகு அக்கரையுடனும், மிகவும் அதிகமாய்ச்செலவு செய்யாமலும், வீட்டைச்சுத்தமாய் வைத்துக்கொள்ளவேண்டும். உடலையும், மனதையும் பிணியணுகாமல் காப்பாற்றும்படி, மருந்தைப்போல்யாவற்றையும், சுத்தமாய்ச் சமயல்செய்து வைப்பதே ஸ்திரீகளின் கடமையாகும். செலவுகளைச் கணக்குவைத்துக்கொண்டு, புருஷன் முதலானோர்களுக்குத் தெரிவிக்க வேண்டும். வேலைக்காரர்களை, வீட்டுவேலைகள் கெடாமல் சரியாய்செய்யச்சொல்ல வேண்டும்.

स्त्रियो रत्नान्यथो विद्या सत्यं शौचं सुभाषियम् ।
विविधानि च शिल्पानि समादेयानि सर्वतः ॥ மனு 2. 240.

ஸ்திரீகள் பலவித இரத்தினப்பரிக்ஷை, படிப்பு, உண்மை, பரிசுத்தம் நல்ல பேச்சு சகலவிதமான சிற்பவேலைகள், இவைகள் எல்லாவற்றையும் எல்லா தேசங்களிலிருந்தும் மனிதர்களிடமிருந்தும் கற்றுக்கொள்ளவேண்டும்.

சத்தியமுறைத்தல்.

सत्यं ब्रूयात् प्रियं ब्रूयान्न ब्रूयात् सत्यमप्रियम् ।
प्रियं च नानृतं ब्रूयादेष धर्मः सनातनः ॥ மனு 4. 138.

भद्रं भद्रमिति ब्रूयाद्भद्रमित्येव वा वदेत् ।
शुष्कवैरं विवादं च न कुर्यात्केनचित्सह ॥ மனு 4. 139.

எப்பொழுதும் விரும்பத்தகாத உண்மையைப் பேசாதே நலத்தைப் பேசுதலே முறையாகும். மனதுக்குப்பிடிக்காத சத்தியத்தை அதாவது, குருடனைக் குருடனென்று சொல்லலாகாது. ஏனென்றால் உண்மையாய்ப் பேசகூடாது. அப்படிச் சொல்லுவதினால் குருடனுடைய மனம் கஷ்டப்படுகிறதே தவிர இலாபம் எதுவுமில்லை. ஆகையினால் அத்தகைய சத்தியத்தை பேசக்கூடாது. (2) பிறர்களை திருப்திசெய்யவாவது பொய் பேசாதே. எப்பொழுதும் உண்மையையே அதாவது எல்லோருக்கும் ஹிதத்தையே செய்கிறவார்த்தைகளையேபேசு. காரணமன்னியிற் சண்டையாவது, அதிகபேச்சாவது, ஒருவருடனும்கூடாது. எல்லோருக்கும் ஹிதமாயிருந்து, அவர்களுக்குக் கெடுதலாயிருந்த போதிலும் அதையே சொல்லவேண்டும்.

पुरुषा बहवो राजन् सततं प्रियवादिनः ।
अप्रियस्य तु पथ्यस्य वक्ता श्रोता च दुर्लभः ॥ உத்தியோகபர்வம் விதுரநீதி.

ஓ திருதராஷ்டிரா ! இவ்வுலகில் பிறர்களுக்குத் திருப்திகரமானவார்த்தைகளை மொழியும் முகஸ்துதிக்காரர்கள் பலரிருக்கிறார்கள். கேழ்ப்பதிற்குப் பிரயோஜனமற்றதாய்த் தோன்றினபோதிலும், காரியத்தினால் பிரயோஜனமுள்ளவையாயிருக்கிறதைப் பேசுகிறவர்கள் சிலரே உளர். ஏனென்றால் ஒருவனுடைய கெடுதல்களை அவன் முன்னரே எடுத்துரைப்பது, தன்னுடைய குற்றங்களை ஒப்புக்கொள்வது, ஆளில்லாத சமயத்தில் அவர்களுடைய குணத்தைப்புகழுவது, இவைகளெல்லாம் நல்லோர்களுடைய ஸ்பாவம். முகத்திற்கு முன்னால் ஒருவனுடைய நல்ல குணங்களைபுகழ்ந்துவிட்டு, அவனுக்குப் பின்னால் அவனுடையகெடுதல்களை உரைப்பது துஷ்டர்களுடைய ஸ்வபாவம். தன்னுடைய குறைகளைச்சொல்லாமல் ஒருக்காலும் ஒருவன் தன்னுடைய கெடுதல்களை ஒழித்து நல்லதை எடுத்துகொள்ள முடியாது. ஒருவரைப் பற்றி ஒருக்காலும் நிந்தை மொழிசொல்லக்கூடாது.

गुणेषु दोहारोपणमसूया । दोषेषुगुणरोपणमप्यसूया । गुणेषु दुणरोपणं
दोषेषु दोषारोपणं च स्तुतिः ॥

பிறர்களுடைய நல்ல குணங்களைக் கெட்டவைகளாகக் காட்டுவதற்கே நிந்தை என்றுபெயர். நல்லகுணங்களை உள்ளவிறே காட்டுவதற்கு ஸ்துதி என்று பெயர், இன்னும் விரிவாகச் சொல்லுவோமேயானால் பொய் பேசுவதற்கு நிந்தை என்றும் உண்மைக்கு ஸ்துதி என்றும் பெயர்.

बुद्धिवृद्धिकराण्याशु धन्यानि च हितानि च ।
नित्यं शास्त्राण्यवेक्षेत निगमांश्चैव वैदिकन् ॥ மனு 4. 19.

यथा यथा हि पुरुषः शास्त्रं समधिगच्छति ।
तथा तथा वियानाति विज्ञानं चास्य रोचते ॥ மனு 4. 20.

புத்தி, தனம், சுகம், இவைகளை விருத்திசெய்கிற வேதம் முதலான சாஸ்திரங்களைப்படித்துச் சொல்லவேண்டியது. ஸ்திரீ, புருஷன் ஒவ்வொருவரும் தாங்கள் தாங்கள் பிரம்மசர்யத்தில் படித்தவைகளைப் பார்த்து யோசனைச் செய்து கற்பிக்கவேண்டியது. ஏனென்றால் அவ்வண்ணம் செய்வதினால் ஒருவருடைய புத்தி, விசாலமகிறது. படிப்பதிலேயும் கூட ஆசை ஏற்படுகிறது.

பஞ்சமகாயாகங்கள்.

ऋषियज्ञं देवयज्ञं भूतयज्ञं च सर्वदा ।
नृयज्ञं पितृयज्ञं च यथाशक्ति न हापयेत् ॥ மனு 4. 21.

இந்த ஐந்துயக்ஞங்களுக்குள் இரண்டு பிரமசரியாசிரமத்தைக் குறிக்கப்பட்டிருக்குமிடத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. வேதம் முதலான சாஸ்திரங்களைப்படிக்கிறது, படிக்கச்செய்கிறது, சந்தியாவந்தனம் யோகாப்பியாசம், இவைகளைச்செய்வது, இதற்கு ரிஷியக்ஞம் என்று பெயர்.

अध्यापनं ब्रह्मयज्ञः पितृयज्ञश्च तर्पणम् ।
होमो दैवो बलिर्भौतो नृयज्ञोऽतिथिपूजनम् ॥ மனு 3. 70.

स्वाध्यायेनार्चयेदृषीन् होमैर्देवान् यथाविधि ।
पितॄन् श्राद्धैश्चनॄनन्नैर्भूतानि बालिकर्मणा ॥ மனு 3. 81.

வித்வான்களுடைய சங்கம், அவர்களுடைய சேவை, பரிசுத்த சிறந்த குணங்களைக்கிரகித்தல், தாராளத்தனம், வித்தையைக்கைக்கொள்ளல், இவைகளுக்கெல்லாம் தேவயக்ஞமென்று பெயர். இவ்விரண்டு கடமைகளை முறையே காலை, மாலை இருபொழுதும் செய்யவேண்டும்.

सायंसायं गृहपतिर्नो अग्निः प्रातःप्रातः सौमनसस्य दाता ॥ प्रायः प्रातर्गृहपतिर्नो अग्निः सायं सायं सौमनसस्य दाता ॥

அதர்வ. 19. அனு. 7. சா. 3. 4.

மாலையில் ஹோமஞ்செய்யப்பட்ட வஸ்துக்கள் மறுநாள் காலைவரையில் ஆகாசத்தைச் சுத்தமாக்கிப் பிரயோஜன முள்ளதாய்ச் செய்கின்றன. காலையில் ஹோமஞ்செய்யப்பட்டவஸ்துக்கள் மாலைவரையில் ஆகாசத்தைத் சுத்தமாக்கிவைத்துக்கொள்வதில் பிரயோஜனமுள்ளதா யிருக்கின்றன.

तस्मादहोरात्रस्य संयोगे ब्राह्मणः सन्ध्यामुपासीत ।
उद्यन्तमस्तं यान्तमादित्यमभिध्यायन् ॥ பிராம்மண, 4. 5.

ஆகையினால் பகலும் இரவும் சேருகிற சமயத்தில் அதாவது சூர்யோதைய சமயத்தலும், சூரியாஸ்தமன சமயத்திலும் பரமேசுவரனை தியானஞ்செய்து அக்கினிஹோத்ரத்தை அவசியமாய்ச் செய்யவேண்டும்.

न तिष्ठति तु यः पूर्वां नोपास्ते यस्तु पशिचमाम् ।
स शूद्रवद्बहिष्कार्यः सर्वस्माद् द्विजकर्मणः ॥ மனு 2. 103.

இவ்விரண்டு காரியங்களையும், காலையிலும், மாலையிலும் யார் செய்யவில்லையோ அவர்களை, புத்திமான்கள் பிராமணர்களுடைய வர்ணத்திலிருந்து ஒதுக்கிச் சூத்திரனைப்போல் நடத்தவேண்டும்.

வினா:— மூன்றுகாலங்களிலும் ஏன் சந்தியாவந்தனம் செய்யக்கூடாது?

விடை:—மூன்றுகாலங்களிலே சந்தி ஏற்படுகிறதில்லை.

இருளும் வெளிச்சமும் சந்திக்கும்வேளையாகிய காலை, மாலை, இவ்விரு வேளைகளில் தவிர வேறு எப்பொழுதும் ஏற்படுகிறதில்லை. இதைக்கவனியாமல் நடுப்பகலில் சந்தியாவந்தனஞ்செய்கிறவன் நடுநிசியிலேயும் செய்யவேண்டும். நடுநிசியில் சந்தியோபாசனை செய்கிறவன், நடுப்பகலில் எவ்வளவு சந்தியிருக்கிறதோ, அவ்வளவு சந்தி (சேர்ப்பு) இருக்கும்படியான ஒவ்வொரு பிரஹரத்திலேயும், கடியிலேயும், விநாடியிலேயும், க்ஷணத்திலேயும், ஏன் செய்யக்கூடாது? ஒவ்வொருவிநாடியிலேயும் சந்தியாவந்தனம் செய்ய முடியாது. இதுவுமன்னியில் நடுப்பகலில் இப்பிரகாரம் செய்வதற்குச் சாஸ்திர

சம்பந்தமான பிரமாணமொன்று மில்லை. ஆகையினால், இருவேளை தான், ஒருநாளில் சந்தியோபாசனை, அக்னிஹோத்திரம் செய்வது உசிதம். மூன்று வேளைக்கிடையாது. இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம், என்று காலக் கிரமத்திற்காக மூன்றுவிதமாகப் பிரிக்கப்பட்டிருக்கிறதே தவிர சந்தியாவந்தனம் பூஜை முதலானவைகளுக்காக அவ்வாறு பிரிக்கப்படவில்லை.

**பித்ருயக்ஞம்:**—வித்வான்களையும் முனிகளையும் படிக்கிறவர்களையும், குருவையும், தகப்பனாரையும், தாயாரையும், இன்னும் சகலபெரியோர்களையும், பரமயோகிகளையும் தொழுது சேவைசெய்வதற்கே பித்ருயக்ஞமென்று பெயர். இந்த யக்ஞத்தில் சிராத்தமென்றும், தர்ப்பணமென்றும் இரண்டு பிரிவுகள் உண்டு.

உண்மைக்கு இன்னொருவார்த்தையான "ஸ்ரத்" என்னும் பதத்திலிருந்து உண்டானது "ஸ்ரார்தம்.

"श्रत्सत्यं दधाति यया क्रियया सा श्रद्धा श्रद्धया यत् क्रियते तच्छ्राद्धम्"

எந்தச்செய்கையினால் சத்தியத்தைக்கிரகிக்கிறோமோ. அதற்கு சிராத்தம் என்று பெயர்.

"तृप्यन्ति तर्पयन्ति येन पितॄन् तत्तर्पणम्"

எந்தச்செய்கையினால் நம்முடைய பெற்றோர்களையும் (ஜீவித்து வசித்து கொண்டிருக்கும்) பெரியோர்களையும் திருப்தி செய்விக்கிறோமோ அந்தச் செய்கைக்குத்தர்ப்பணம் என்று பெயர். இச்செய்கைகள் பிழைத்திருக்கிறவர்களுக்கேசெய்வதேயன்றி மரித்தவர்களுக்கல்ல.

ரிஷி தர்ப்பணம்.

**ओं ब्रह्मादयो देवास्तृप्यन्ताम् । ब्रह्मादिदेवपत्न्यस्तृप्यन्ताम् ब्रह्मादिदेवसुतास्तृप्यन्ताम् । ब्रह्मादिदेवगणास्तृप्यन्ताम् । इति देवतर्पणम् ॥**

"வித்வான் ஸோஹிதேவா" என்று சதபதபிராம்மணம் சொல்லுகிறது. "யார் வித்வானோ அவனே தேவன். ஆதியோடந்தமாய் நான்கு வேதங்களையும் கற்றுணர்ந்தவர்களுக்கே "பிரம்மா" என்று பெயர். அவர்களைக் காட்டிலும் கொஞ்சம் குறைவாயிருக்கிறவர்களுக்கே தேவர்கள் என்று பெயர். ஆகையினால் தேவர்களென்றால் கற்றுணர்ந்தவித்வான்கள் அவர்களுக்குச்சமானமான அவர்களுடைய பத்தினிகள்தான் தேவதைகள் என்றும் பிராம்மணன் என்றும் அழைக்கப்படுகிறார்கள். அவர்களுக்குச் சமானமான தங்கள் குழந்தைகளும், சிடர்களும், சேவகர்களுமே அவர்களுடன் கருதப்படுகிறார்கள். இவர்கள் எல்லோருக்கும் சேவை செய்வதற்கே சிரார்த்தமென்றும் தர்ப்பணமென்றும் பெயர்.

**ओं मरीच्यादय ऋषयस्तृप्यन्ताम् । मरीच्याद्यृषिपत्न्यस्तृप्यन्ताम् । मरीच्याद्यृषिसुतास्तृप्यन्ताम् । मरीच्याद्यृषिगणास्तृप्यन्ताम् । इति ऋषितर्प्पणम् ॥**

பிரம்மாவினுடைய பௌத்திரனான மரீசி முனியைப்போல் வித்வானயிருக்கும் கற்றுணர்ந்தவர்களுக்கும், அவர்களுக்குச்சமானமான வித்தையுடன் கூடின பெண்களுக்குக்கற்பிக்கும் ஸ்திரீகளுக்கும் அவர்களுக்குச் சமானமாய்ப் படித்திருக்கும் உறவினர்களுக்கும், சிஷ்யர்களுக்கும், செய்யும் உபசாரத்திற்கே ரிஷி தர்ப்பணமென்று பெயர்.

**(1) ओं सोमसदः पितरस्तृप्यन्ताम् । (2) अग्निष्वात्ताः पितरस्तृप्यन्ताम् । (3) बर्हिषदः पितरस्तृप्यन्ताम् । (4) सोमपाः पितरस्तृप्यन्ताम् । (5) हविर्भुजः पितरस्तृप्यन्ताम् । (6) आज्यपाः पितरस्तृप्यन्ताम् । (7) सुकालिनः पितरस्तृप्यन्ताम् । (8) यमादिभ्यो नमः यमादींस्तर्पयामि । (9) पित्रे स्वधा नमः पितरं तर्पयामि । (10) पितामहाय स्वधा नमः पितामहं तर्पयामि । (1 ) प्रपितामहाय स्वधा नमः प्रपितामहं तर्पयामि (12) मात्रे स्वधा नमो मातरं तर्पयामि । (13) पितामह्यै स्वधा नमः पितामहीं तर्पयामि । (14) प्रपितामह्यै स्वधा नमः प्रपितामहीं तर्पयामि । (15) स्वपत्न्यै स्वधा नमः स्वपत्नीं तर्पयामि । (16) सम्बन्धिभ्यः स्वधा नमः सम्बन्धिनस्तर्पयामि । (17) सगोत्रेभ्यः स्वधा नमः सगोत्रांस्तर्पयामि ॥**

இயற்கை சாஸ்திரத்திலேயும் பரமாத்மாவினுடைய ஞானத்திலேயும் யார் வித்வான்களாயிருக்கிறார்களோ அவர்களுக்குச் "**சோமசத்**" என்று பெயர். (2) அக்கினி, காந்தம் முதலான இயற்கை சாஸ்திரங்களில் வித்வானயிருக்கிறவர்களுக்கே "**அக்னிஷ்வாத்**" என்று பெயர். (3) புத்திசாலிதனத்துடன் கூடினவர்களாய், விருத்திக்கு ஏற்ற வழிகளைச் செய்கிறவர்களுக்கே "**பர்ஹிஷத்**" என்று பெயர். (4) ஐசுவர்யங்களைக் காப்பாற்றுகிறவர்களாயும், ஔஷதங்களுடைய இரசத்தை அருந்தி நோய்களிலிருந்து நீங்கினவர்களாயும், இதரர்களுடைய சொத்துக்களை இரக்ஷிக்கிறவர்களாயும், மருந்தினல் இதரர்களுடைய ரோகங்களை தீர்க்கிறவர்களாயு மிருக்கிறவர்களுக்கே "**சோமபா**" என்று பெயர். (5) மயக்கத்தை உண்டுபண்ணுவதற்குக்காரணமானதும் ஜீவஹிம்சைக்கும் ஆதாரமான ஆகாரத்தைச் சாப்பிடுகிறவர்களுக்கே "**ஹவிர்புஜ**" என்று பெயர். (6) அறிவதற்கு யோக்கியமான வஸ்துக்களை காப்பாற்றுகிறவர்களுக்கும் நெய், பால், தயிர் முதலான வஸ்துக்களை உட்கொள்ளுகிறவர்களுக்கும் "**ஆஜ்யபா**" என்று பெயர். (7) தங்களுடைய வாழ்நாட்களைச் சத்தியத்திற்காகவும், தர்மத்திற்காகவும் உபயோகிக்கிறவர்களுக்கே "**சுகாலின்**" என்று பெயர். (8) துஷ்டர்களை வென்று, சிஷ்டர்களைக்காப்பாற்றி, நியாயமறிந்தவர்களுக்கே "**எமன்**" என்று பெயர். (9) குழந்தைகளைப்பெற்று அன்னபானதி வஸ்துக்களை அளித்துக்காப்பாற்றுகிறவர்களுக்கே "**பிதா**" என்று பெயர். (10) தகப்பனருடைய தகப்பனருக்கு

"**பிதாமகா**" என்றும் (11) பிதாமகாவினுடைய தகப்பனுருக்கு "**பிரபிதாமகா**" என்றும் பெயர். (12) குழந்தைக்கு அன்னபானதிவஸ்திரங்களை அளித்து வளர்க்கிறவளுக்கே "**மாதா**" என்று பெயர். (13) தகப்பனுடைய தாய்க்கு "**பிதாமகி**" என்றும், (14) பிதாமகியினுடைய தாய்க்கு "**பிரபிதாமகி**" என்றும் பெயர். தன்னுடைய (15) மனைவி (16) சகோதரி முதலான பந்துக்கள் (17) **கோத்திரத்தைச்** சேர்ந்தவர்கள், வேறு நல்ல புருஷர்கள், பெரியோர்கள், முதலானவர்களுக்கு வெகு மரியாதையுடன் அன்ன வஸ்திரமளித்து நல்லவண்டியைக் கொடுத்து திருப்தி செய்வதற்கே, அதாவது, அவர்களுடைய ஆத்மாவைத் திருப்தியடையச்செய்து சரீரம் சுகமாயிருக்கும்படிச் செய்வதற்கே **சிராத்த**மென்றும் **தர்ப்பண** மென்றும்பெயர்.

"**வைசுதேவம்:**— போஜனம் தயாரானவுடன் சர்க்கரை தயிர் இவைகளால் கலக்கப்பட்ட ஆகாரத்தைக் (உப்பு, புளிப்பு இவைகளுடன் கூடியிருப்பவைகளை நீக்கி) கொஞ்சமெடுத்து அக்னியில் மனு சொல்லியிருக்கும் பிரகாரம் ஹோமம் செய்வதற்கே **வைசுதேவ**மென்று பெயர்.

**वैश्वदेवस्य सिद्धस्य गृह्येऽग्नौ विधिपूर्वकम् ।**
**आभ्यः कुर्य्याद्देवताभ्यो ब्राह्मणो होममन्वहम् ॥** மனு 3 84.

எந்தெந்த பதார்த்தங்கள் போஜனத்திற்காகச் சமையலறையில் பக்குவஞ் செய்யப்படுகின்றனவோ அவைகளில் ஏதாவது கொஞ்சம் எடுத்து விதிப் பிரகாரம் கீழ்க்கண்டவேத மந்திரங்களுடன், அக்கினியில் ஹோமஞ் செய்து ஆகாசத்தை சுத்தஞ்செய்யவேண்டும்.

ஹோம மந்திரம்.

**ओं अग्नये स्वाहा । सोमाय स्वाहा । अग्नीषोमाभ्यां स्वाहा । विश्वेभ्यो देवेभ्यः स्वाहा । धन्वन्तरये स्वाहा । कुह्वै स्वाहा । अनुमत्यै स्वाहा । प्रजापतये स्वाहा । सहद्यावापृथिवीभ्यां स्वाहा । स्विष्टकृते स्वाहा ॥**

பிரதி மந்திரங்களுடனும், எரிந்துகொண்டிருக்கும் அக்னியில், ஒவ்வொருதடவையும் ஹோமம் செய்ய வேண்டும். பிறகு பூமி, இலை அல்லது தட்டின் பேரிலாவது கீழ்க்கண்ட வேதமந்திரத்துடன் தென்திசையிலிருந்து வரிசைக்கிரமமாகப்பாகம் செய்த ஆகாரத்தைக்கொஞ்சம் வைக்கவேண்டும்.

**ओं सानुगायेन्द्राय नमः । सानुगाय यमाय नमः । सानुगाय वरुणाय नमः । सानुगाय सोमाय नमः । मरुद्भ्यो नमः । अद्भ्यो नमः । वनस्पतिभ्यो नमः । श्रियै नमः । भद्रकाल्यै नमः । ब्रह्मपतये नमः । वास्तुपतये नमः । विश्वेभ्यो देवेभ्यो नमः । दिवाचरेभ्यो भूतेभ्यो नमः । नक्तञ्चारिभ्यो भूतेभ्यो नमः । सर्वात्मभूतये नमः ॥**

இப்பாகங்களைக் கொண்டு, அதிதியாராவதிருந்தால் அவருக்குச் சாப்பிட கொடுக்கலாம். அதிதியைக்காணவிடில் அதனை அக்கினியில் ஹோமஞ்செய்து

விடலாம். பிறகு உப்புப்பதார்த்தங்களை அதாவது பருப்பு, அன்னம் பக்குவஞ் செய்யப்பட்ட காய்கறிகள், ரொட்டி முதலானவைகளை எடுத்துக்கொண்டு ஆறுபாகங்களாகப்பிரித்து கீழே பூமியின் பேரில் வைக்கவேண்டும்.

शुनां च पतितानां च श्वपचां पापरोगिणाम् ।
वायसानां कृमीणां च शनकैर्निर्वपेद्भुवि ॥ மனு 3. 92.

வைத்தபிறகு இம்மாதிரி "ஸ்வேப்யோ நம: பதிதப்யோ நம: ஸ்வ பக்பயோ நம: பாபரோகிப்யோ நம: வாயஸோப்யோ நம: கிருமிப்யோ நம: கூப்பிட்டு விட்டு, துக்கமுள்ளவர்களுக்காவது, பசியினால் வருந்துகிறவர்களுக் காவது, நாயிக்காவது காகத்துக்காவது அல்லது வேறெந்த பிராணிகளுக்கா வது கொடுத்துவிடவேண்டியது. இவ்விடத்தில் "நம" என்னும் வார்த்தைக்கு அன்னம் என்று அர்த்தம். இந்த அன்னத்தை நாயிக்கு, பாபிக்கு, சண்டாள னுக்கு, பாபரோகிக்கு, பெருவியாதிக்காரனுக்கு, காக்கைக்கு, புழுவுக்கு, இன்னும் முதலானவைகளுக்கு அளிக்கவேண்டியது. இஃது மனுஸ்ம்ருதியி லுள்ளது.

**அதிதிசேவை:**—நமக்குத் தெரியாது திடீரென்று நமது வீடுதிக்கு வருப வருக்கே வடமொழியில் "அதிதி" என்று பெயர். தர்மாத்மாவும், சத்தியத்தை உபதேசிக்கிறவரும், எல்லோருக்கும் உபகாரமுள்ளவரும், எங்கேயும் சஞ்சா ரம் செய்கிறவரும், பூர்ணவித்வானும், பரமயோகியுமான சந்நியாசி ஒருவர், கிரகஸ்தன் வீட்டிற்கு வருவாரேயானால் அப்பொழுது கிரகஸ்தன் அவரு டைய பாதங்களைக்கழுவி ஆசனமளித்து இருக்கச்செய்து அன்னபானுதிக ளுக்கு உத்தமமான பதார்த்தங்களைக் கொடுத்துப் பணிவிடைச் செய்யவேண் டும். பிறகு சிநேகஞ்செய்து, தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம், இவைகளை அறியச் சாதனமாயிருக்கும் விக்ஞானம் (லௌகிக ஞானம்) வைதீக ஞானம் முதலானவைகளைப்பெற வேண்டியது. உண்மையை அறிந்து அதன் பிரகாரம் ஒவ்வொருவரும் நடக்கவேண்டும். சமயம் வாய்க்குமேயானால் கிரகஸ்தர்கள் அரசன் முதலானவர்களைக்கூட அதிதியைப் போல் மரியாதைச் செய்வதற்கு ஏற்றவர்களாவார்கள்.

கள்ள பக்தி யுள்ளவர்கள்.

पाषण्डिनो विकर्मस्थान् बैडालवृत्तिकान् शठान् ।
हैतुकान् बकवृत्तीश्च वाङ्मात्रेणापि नार्चयेत् ॥ மனு 4. 30.

வேததூஷகர்களேயும், வேதத்திற்கு விரோதமான காரியங்களைச்செய் கிறவர்களையும், எவ்விதம் பூனை பதுங்கியிருந்து கண்ணுற்றுக்கவனித்துசமயம் வாய்த்தபொழுது எலியின் மேலே பாய்ந்து அதனைத்தின்றுவிடுகிறதோ அவ் விதமே, கபடத்தனமாய் வஞ்சகம் பேசிப்பொய்ச்சொல்லித்திரிகிறவர்களையும், ஊடம் செய்கிறவர்களையும், வீண்பிடிவாதமுள்ளவர்களையும், மூடர்களையும், கெட்ட அர்த்தஞ் செய்கிறவர்களையும், "நான்தான் பிரம்மம் ஜகமெல்லாம்

மாயை" என்று தற்கால வேதாந்திகளைப்போல வீணைப்பேசிக்காலங்கழிக்கிற வர்களையும், கொக்கு ஒரேகாலின் பேரில், தியானஞ் செய்வதுபோல் நின்று, சமயம் வாய்த்தவுடன குளத்திலிருந்து வெளியில் வரும் பிராணிகளுடைய ஜீவனை வதைத்துத் தின்றுவிடுவதுபோல், தன்காரியத்திலேயே கண்ணுங்கருத் துமாய் இருந்து நிறைவேற்றிக் கொள்ளுகிறவர்களையும், இச்சுபாவத்தை உடைய தற்காலவைராகிகளையும், கெட்ட எண்ணத்தை உடையவர்களையும் நம்முடைய வார்த்தைகளினுலுங்கூட மரியாதைசெய்யக்கூடாது. ஏனென் ருல் மரியாதை செய்வதினுல் இவர்கள் அதிகரித்து ஜனங்களை அதர்மமான வழிகளில் நடத்துகிருர்கள். அவர்களே அநீதியான வழியிற் செல்லுவது மன்றி அவர்களுடன் கூட இருக்கிறவர்களையும் அஞ்ஞான சமுத்திரத்தில் அழுத்தி விடுகிருர்கள்.

இவ்வைந்து எக்ஞங்களினுடைய பலன்களாவன:—

**பிரம்மயக்ஞம்** செய்வதனுல் ஞானம், நல்லொழுக்கம், தேர்ச்சி, நீதி நட வடிக்கை முதலிய நல்ல குணங்கள் ஏற்படுகின்றன.

**அக்னிஹோத்திரத்தி**னுல் வாயு, மழை, ஜலம், இவைகள் சுத்தமாகி உலக நன்மை உண்டாகிறது. அதாவது சுவாசத்திற்குச் சுத்தமான காற்றை யும், அன்னபானதிகளையும், ஆரோக்கியத்தையும் அளித்து காயத்தை விருத் தியாக்கி, தர்மார்த்த காமமோக்ஷ பெறுதலை இலகுவாக்குகிறது. வாயு முதலான பதார்த்தங்கள் சுத்தமாகிறபடியினுல் அதற்கு "**தேவயக்ஞம்**" என்றும் பெயர்.

பித்ருயக்ஞத்தினுல் தாயார், தகப்பனர் ஞானி, மகாத்மா, இவர்களு டைய சேவைகிடைக்கிறது. இத்தகையசேவையினுல் ஞானம் விருத்தியாகி சத்தியாசத்தியத்தை தெளிவாய் அறியச் செய்கிறது. சத்தியத்தைக் கைப் பற்றிக்கொள்வதினுலும், அசத்தியத்தை விட்டு விடுவதினுலும் சுகமேற்படு கிறது. (2) இளம்பருவத்தில் தன்னைக்காப்பாற்றின பெற்ருேர்களுக்கும் வித்தைக்காகக்கஷ்டபட்ட குருவுக்கும் தன்னுடைய நன்றியை திருப்பிக் காட்ட இந்த யக்ஞம் ஒரு காரணமாயிருக்கிறது.

பலி வைசுதேவ யக்ஞங்களுடைய பலனைப்பற்றி முன்னமே கூறி விட்டோம்.

**அதிதியக்ஞம்:**—உத்தம அதிதிகளில்லாத வரையில் ஒருதேசமானது சீக் கிரத்தில் முன்னேற்ற மடையாது. அவர்கள் சகல தேசங்களிலும் சஞ்சரித் துக் கொண்டுதிரிகிறபடியினுல் மோசம் அதிகரிக்காது. மேலும் தங்கள் தங்கள் இருப்பிடங்களிலிருந்தே சத்தியத்தைக் கிரகஸ்தர்கள் அறியலாம். உலக முழுவதும் ஒரே தர்மம் ஸ்திரமாக ஏற்படும். அதிதிகளில்லாதவரையில் சந் தேகங்களை நீக்கிக்கொள்ளமுடியாது. சந்தேகங்களை நீக்கிக்கொள்ளாவிட் டால் நம்பிக்கை யுண்டாகாது. நிச்சய நம்பிக்கை யன்னியில் சுகம் எங்கிருந்து வரும்?

ब्राह्मे मुहूर्ते बुध्येत धर्मार्थौ चानुचिन्तयेत् ।
कायक्लेशांश्च तन्मूलान् वेदतत्त्वार्थमेव च ॥ மனு 4. 92.

இராத்திரி நான்காவது ஜாமத்தில் படுக்கையை விட்டு ஒருவர் எழுந்திருந்து, கை கால் முகம் முதலானவைகளைக் கழுவிக்கொண்டு அறம் பொருள் இல்லம் இவைகளைப்பற்றியும், தேகத்தினுடைய பிணிபோக்குதலைப்பற்றியும், பரமாத்மாவைப் பற்றியும், தியானஞ் செய்யவேண்டும். ஒரு பொழுதும் ஒழுக்கமற்ற காரியங்களைச்செய்யலாகாது.

नाधर्मश्चरितो लोके सद्यः फलति गौरिव ।
शनैरावर्त्तमानस्तु कर्त्तुर्मूलानि कृन्तति ॥ மனு 4. 172.

ஒழுக்கமற்ற காரியம் ஏதாவது செய்தால் அது கெடுதியான பலனைத் தருகிறதுமில்லை, அல்லது பயன் உடனேயும் ஏற்படுகிறதில்லை. இக்காரணத்தினாலேயே அஞ்ஞானிகள் ஒருபொழுதும் அநியாயம்செய்யப் பயப்படுகிறதில்லை. அநீதியான காரியங்களைச் செய்வதினால் தன்னுடைய சுகங்களைக் கொஞ்சம் கொஞ்சமாக ஒருவன் குறைத்துக்கொள்ளுகிறான் என்பதைக் கவனிக்க வேண்டும்.

अधर्मेणैधते तावत्ततो भद्राणि पश्यति ।
ततः सपत्नाञ्जयति समूलस्तु विनश्यति ॥ மனு 4. 174.

நீர்நிலைகளிலுள்ள ஜலமானது அதிகரித்தால், அதன் கரைகளை உடைத்துக்கொண்டு நாலாபக்கமும் பெருகுவதுபோல் நிதானமான நீதிகளினுடைய எல்லையை மீறி, அநீதிவான் ஒருவன், பொய் சொல்லியும், வஞ்சகம் பேசியும், ஏமாற்றியும் அதாவது சத்தியத்தை நிலை நிறுத்துகிற வேதங்களைக்கண்டித்தும் விசுவாசமோசஞ்செய்தும், பிறர்களுடைய பணங்களை அபகரித்தும், தனவானாகிறான். பிறகு பணம் முதலான ஐசுவர்யங்களினால், அன்னபானம், உடை, ஆபரணம், வண்டி, நிலைமை, மானம், செல்வாக்கு முதலியவைகளைப்பெற்று எதிரிகளையும் அநியாயமாய் ஜயிக்கிறான் கடைசியில் வேர் அறுக்கப்பட்ட மரத்தைப்போல், நாசத்தை யடைகிறான்.

सत्यधर्मार्यवृत्तेषु शौचे चैवारमेत्सदा ।
शिष्यांश्च शिष्याद्धर्मेण वाग्बाहूदरसंयतः ॥ மனு 4. 175.

கற்றுணர்ந்தவர் வேதத்தில் கூறியிருக்கும் வண்ணம் பக்ஷபாத மன்னியில் சத்தியத்தையும் நியாயத்தையும் கைப்பிடித்து அசத்தியத்தை விட்டுவிட்டு தர்மத்தைத்தழுவிக்கொண்டு தன் சிஷ்யர்களுக்குப் போதிக்கட்டும்.

ऋत्विक्पुरोहिताचार्यैर्मातुलातिथिसंश्रितैः ।
बालवृद्धातुरैर्वैद्यैर्ज्ञातिसम्बन्धिबान्धवैः ॥
मातापितृभ्यां यामीभिर्भ्रात्रा पुत्रेण भार्यया ।
दुहित्रा दासवर्गेण विवादं न समाचरेत् ॥ மனு 4. 179. 180.

யாகஞ்செய்கிறவர்கள், கல்விகற்பிப்பிப்பவர்கள், மாமன், (அதிதி) தன்னை அடுத்திருப்பவர்கள் சம்ஸ்ருதி குழந்தைகள், கிழவர்கள், பிணியினால் பிடிக்கப் பட்டவர்கள், ஆயுர்வேத மறிந்தவர்கள் தன்குலம் கோத்திரம் இவைகளைச் சேர்ந்தவர்கள், மாமனார், சிநேகிதாகள், தாய், தகப்பன், சகோதரர்கள், பெண் சாதி, பெண், வேலைக்காரர்கள் இவர்களுடன் ஒருபொழுதும் விவாதஞ் செய்யக்கூடாது. விரோதமும் செய்துகொள்ளக்கூடாது.

**अतपास्त्वनधीयानः प्रतिग्रहरुचिर्द्विजः ।**
**अम्भस्यश्मप्लवेनेव सह तेनैव मज्जति ॥** மனு 4. 190.

(ஆதபாஹ்) பிரமசர்யவிரதம் அநுஷ்டிக்காதவர்கள், உண்மை முதலான நற்செய்கைகளில்லாதவர்கள். (2) படிப்பற்றவர்கள் (3) தர்மத்தின் பேரைக் கொண்டு வாங்கிக்கொள்ளுகிறவர்கள் இம்மூவர்களும், கல்லினால் நிறைத்து தண்ணீரில் விடப்பட்ட படகைப்போல், தங்களுடைய கெட்ட காரியங்களினால் துன்பசாகரத்தில் மூழ்குகிறார்கள். அவர்கள் முழுகிப்போவது மன்னியில் அவர்களுடன் கூடினவர்களையும் மூழ்கடிக்கிறார்கள்.

**त्रिष्वप्येतेषु दत्तं हि विधिनाप्यार्जितं धनम् ।**
**दातुर्भवत्यनर्थाय परत्रादातुरेव च ॥** மனு 4. 193.

ஏனென்றால், தர்ம வழியில் சம்பாதித்த பொருளாயினும், மேற்சொன்ன மூவர்களுக்குக் கொடுப்பதினால், ஈவோனை இப்பிறப்பிலும் பெறுவோனை மறு பிறப்பிலும் நாசஞ்செய்கிறது.

**यथा प्लवेनौपलेन निमज्जत्युदके तरन् ।**
**तथा निमज्जतोऽधस्तादज्ञौ दातृप्रतीच्छकौ ॥** மனு 4. 194.

கல்லினால் நிறைந்த படகிலேறி நீரைக்கடக்க பிரயத்னப்படுகிற ஒருவன் ஆழத்தில் அழுந்துகிறதைப்போல் கொடுக்கும் அஞ்ஞானிகளும், பெற்றுகொள்ளும் அஞ்ஞானிகளும் துக்கத்தில் மூழ்குகிறார்கள்.

பாசாங்குக்காரர்களுடைய லக்ஷணம்.

**धर्मध्वजी सदालुब्धश्छाद्मिको लोकदम्भकः ।**
**बैडालव्रतिको ज्ञेयो हिंस्रः सर्वाभिसन्धकः ॥**
**अधोदृष्टिर्नैष्कृतिकः स्वार्थसाधनतत्परः ।**
**शठो मिथ्याविनीतश्च बकव्रतचरो द्विजः ॥** மனு 4. 195. 196.

(தர்மத்வஜீ) தர்மமொன்றும் செய்யாமல், அதன் பெயரைக்கொண்டு ஜனங்களை ஏமாற்றுகிறவர்கள். (சதாலுப்த:) எப்பொழுதும் துராசையுள்ளவர்கள் (சாத்மிக) வஞ்சகர்கள், (லோகதம்பக) பிறர்முன்னிலையில் தன்னைப்புகழ்ந்துபேசிக்கொள்ளுகிறவர்கள்(ஹிம்ஸர:) உயிர்வதை செய்கிறவர்கள், ஜனங்களை

விரோதிக்கிறவர்கள், (ஸர்வாபிசந்தக) தியர், நல்லோர் இவர்களுடன் கூடியிருப்பவர்கள், இவர்களை கேவலம் பூனையைப் போலவும், மோசக்காரர்களாகவும், கருதவேண்டும். (அதோதிருஷ்டி)கீர்த்திக்கு இஷ்டமுள்ளவர்களாய், கீழ்ப்பார்வையுள்ளவர்கள் (நைஷ்கிருதிக:) தனக்கு ஒருவன் அற்பமான குற்றம்செய்திருந்த போதிலும் அதற்குச் சகியாமல் அவனுடைய பிராணனைப்பழிக்குப்பழி வாங்க சித்தமாயிருக்கிறவர்கள் (ஸ்வார்தசாதனதத்பர:) வஞ்சகம், மோசம், துரோகம் முதலான விதத்திலாவது தன்னுடைய காரியத்தை முடித்துக் கொள்ளுவதிலேயே கண்ணும் கருத்துமாயிருப்பவர்கள் (சட:) தப்பென்று அறிந்திருந்தபோதிலும் அதை விடாமலிருக்கும் வீண்பிடிவாதக்காரர்கள் (மித்யாவினீத:) மரியாதை, மனவமைதி, தெய்வபக்தி இவைகளை கெடுக்கிறவர்கள், இவர்கள் முதலானவர்களைக்கள்ளபக்தியுள்ளவர்களாக அறிந்து (பகவிருத) அண்டங்காக்கையை விட இழிவாக எண்ணவேண்டும். ஒருபொழுதும் இவர்களை நம்பவுங்கூடாது. சகவாசஞ் செய்யவுங் கூடாது.

धर्मं शनैः सञ्चिनुयाद् वल्मीकमिव पुत्तिकाः ।
परलोकसहायार्थं सर्वभूतान्यपीडयन् ॥ மனு 4. 238.

கரையான் தன்னுடைய புத்தைச் சரிவர கட்டிக்கொள்வது போல் ஆடவர்களும் பெண்டீர்களும், மறுமையின்சுகத்தை அடைவதற்கு, ஜீவராசிகளொன்றையும் துன்புறுத்தாமல் சரிவர தர்மத்தை அநுசரித்து விருத்திசெய்ய வேண்டும், ஏனென்றால்,

नामुत्र हि सहायार्थं पिता माता च तिष्ठतः ।
न पुत्रदारं न ज्ञातिर्धर्मस्तिष्ठति केवलः ॥ மனு 4. 239.

மறு உலகத்தில், தாய், தகப்பன், புத்திரன், உறவினர் இவர்களால் உதவிசெய்யமுடியாது. அவர்களுடைய தர்மமே அவர்களுக்குச் சகாயமாகவும் துணையாகவுமிருக்கும்.

एकः प्रजायते जन्तुरेक एव प्रलीयते ।
एकोऽनुभुङ्क्ते सुकृतमेक एव च दुष्कृतम् ॥ மனு 4. 240.

ஒவ்வொரு ஜீவனும் தனியாகவே ஜென்மமெடுக்கிறது, மரணத்தை அடைகிறது, தர்மத்தினுடைய பலனாகிய சுகத்தையும், அதர்மத்தினுடைய பலனாகிய துக்கத்தையும் அனுபவிக்கிறது.

एकः पापानि कुरुते फलं भुङ्क्ते महाजनः ।
भोक्तारो विप्रमुच्यन्ते कर्त्ता दोषेण लिप्यते ॥ மஹாபாரதம், உத்யோகபர்வ.

ஒருகுடும்பத்தில் ஒருவன் பாபம் செய்தால் அதனால் உண்டாகும் பயன்யாவரையும் சேருகிறது. ஆனால் அதனுடைய கெட்டபலன்களை அவன் ஒருவன் அடைகிறானே தவிர குடும்பமுழுவதுமல்லவென்று அறியவேண்டும்.

मृतं शरीरमुत्सृज्य काष्ठलोष्ठसमं क्षितौ ।
विमुखा बान्धवा यान्ति धर्मस्तमनुगच्छति ॥ ५ ॥ மனு 5. 241.

இறந்த ஒருவனுடைய பிணத்தை, ஒருபிடி மண்ணைப்போல் அவனுடைய உறவினர்கள், கீழே விட்டு விட்டுத்திரும்பிவிடுகிறார்கள், இறந்தவருடன்கூட எவருமே போகிறதில்லை. தர்மம் ஒன்றே செல்லுகிறது.

तस्माद्धर्मं सहायार्थं नित्यं सञ्चिनुयाच्छनैः ।
धर्मेण हि सहायेन तमस्तरति दुस्तरम् ॥ மனு 4 242.

இக்காரணத்தினால், மறு உலகசுகத்திற்குச்சகாயமாயிருக்கும் நித்திய தர்மங்களையே ஒருவர் விருத்திசெய்யவேண்டும். ஏனென்றால் தர்மத்தினுடைய சகாயத்தினாலேதான், கஷ்டமான துக்கசாகரத்தைத்தாண்ட முடியும்.

धर्मप्रधानं पुरुषं तपसा हतकिल्बिषम् ।
परलोकं नयत्याशु भास्वन्तं खशरीरिणम् ॥ மனு 4. 243.

தருமத்தையே பெரிதுங்கருதி அநுஷ்டித்து, அப்படி அநுஷ்டிப்பதினால் பாபங்கள் நீங்கி அதனால் பாதிக்கப்படாதவனாய் எவனிருக்கிறானோ அவனே, தன் தர்மத்தினுடைய மகிமையினால், வெளிச்சத்தை உருவமாகவும், ஆகாசத்தைச் சரீரமாகவும் கொண்ட பரமாத்மாவை அடைகிறான்.

दृढकारी मृदुर्दान्तः क्रूराचारैरसंवसन् ।
अहिंस्रो दमदानाभ्यां जयेत्स्वर्गं तथाव्रतः ॥
वाच्यर्था नियताः सर्वे वाङ्मूला वाग्विनिःसृताः ।
तांस्तु यः स्तेनयेद्वाचं स सर्वस्तेयकृन्नरः ॥
आचाराल्लभते ह्यायुराचारादीप्सिताः प्रजाः ।
आचाराद्धनमक्षय्यमाचारो हन्त्यलक्षणम् ॥ மனு 4. 246. 156.

எப்பொழுது முயற்சியுள்ளவனாயும், இளக்கம், அடக்கப்பட்ட இந்திரியம் இவைகளை உடையவனாயும், தீச்செயல், துராசாரம் உடையவர்களிலிருந்து தனியாயும் நீதிவானாயுமிருக்கிற ஒருவன் வித்தை முதலிய தானங்களை செய்கிறதினாலே, சுகத்தை அடைகிறான். சகல விவகாரங்களையும் நிச்சயஞ்செய்து, எல்லாவர்றிற்கும் ஆதிகாரணமாயும், சகல செய்கைகளினுடைய சித்திக்கு ஹேதுவாயுமிருக்கிற நல்லவாக்கை அடக்கி, எவன் பொய்சொல்லுகிறானோ அவனைத் திருடுகளவு முதலான பாபங்களைச் செய்கிறவனாகக் கருதவேண்டும். ஆகையினால் பொய் சொல்லுகிறது முதலான தீமைகளை விட்டு, பிர்மசர்யத்தைச் சரிவரநடத்தி ஐம்புலன்களை அடக்கி இவைகளினால் பூர்ணமான ஆயுசையும், தர்மாசாரத்தினால் சிறந்தமக்கட்பேறு, அழியாச் செல்வம் இவைகளையும் அடையவேண்டும்.

दुराचारो हि पुरुषो लोके भवति निन्दितः ।
दुःखभागी च सततं व्याधितोऽल्पायुरेव च ॥ மனு 4. 157.

தீய ஆசாரங்களை அநுசரிக்கிற ஒருவன் சம்சாரத்தில் நல்ல ஜனங்களுடைய நிந்தைக்கு ஆளாகித் துக்கத்தை அடைந்து எப்பொழுதும் வியாதியுடன் கூடினவனாய் அல்பாயுசுக்கு இரையாகிறான்.

சுகதுக்கம்.

यद्यत्परवशं कर्म तत्तद्यत्नेन वर्जयेत् ।
यद्यदात्मवशं तु स्यात्तत्तत्सेवेत यत्नतः ॥
सर्वं परवशं दुःखं सर्वमात्मवशं सुखम् ।
एतद्विद्यात्समासेन लक्षणं सुखदुःखयोः ॥ மனு 4. 159. 160.

பிறர் ஆதாரணையிலிருக்கும் கார்யங்களைக் குறித்துக் கவனிக்காமல் தன்னுடைய காரியங்களை ஊக்கத்துடன் ஒருவன் செய்யவேண்டியது. ஏனென்றால் (2) பராதீனத்திலிருக்கிற யாவும் துக்கத்தையும் தன்னுடைய ஆதீனத்திலிருக்கிறவைகளெல்லாம் சுகத்தையும் கொடுக்கும். சுருங்கச்சொல்லின் இவைகளே சுகதுக்கங்களினுடைய குறிகளாம்.

ஆனால் பராதீனத்திலிருக்கும் கார்யம் ஒவ்வொன்றும் அவரவர்களுடைய ஒத்துமையின்பேரில் நடந்தேறவேண்டியது. உதாரணமாக, ஒரு குடும்பத்தினுடைய காரியங்களை மனைவி, புருஷன் இருவரும் ஒத்து நடத்தவேண்டியது. உள்ளன்புடன் புருஷன் மனைவியுடனும், மனைவி புருஷனுடனும் கலந்து நடத்தவேண்டும். புருஷனுக்குக் கீழ்ப்படிந்து மனைவி குடும்பக் காரியங்களை நடத்தவேண்டும். குடும்பத்தின் வெளிக்காரியங்களைப் புருஷன் பார்த்துக் கொள்ளவேண்டும். ஒருவருக்கொருவர் தீய வழிகளில் இறங்குவதிலிருந்து காப்பாற்றிக்கொள்ளவேண்டும். கலியாணமானதிலிருந்து புருஷன், மனைவி, ஒருவருக்கொருவர் கட்டுப்பட்டவர்களாகப் பாவிக்கவேண்டும். அதாவது புருஷனுடைய நடை, உடை, பாவனை முதலியவைகள் மனைவியையும், ஸ்திரீயுடையது புருஷனையும் சேர்ந்தது. இருவருக்குந்தெரியாமல் ஒரு காரியமாவது நடக்கக்கூடாது. வேசித்தனம், போன்றசெயல்கள் அவர்களுடைய இல்லறசுகத்தைகெடுக்கக்கூடியவைகளாகும். இவைகளைப்பற்றிய எண்ணம் அவர்களுடைய மனதில் கொஞ்சமேனும் குடிகொள்ளக்கூடாது. எப்பொழுதும் ஸ்திரீயுடன் புருஷனும் புருஷனுடன் ஸ்திரீயும் திருப்தியடைந்தவர்களாக இருக்கவேண்டும். அவர்கள் பிராமணனாயிருக்கும் பக்ஷத்தில், புருஷன் பிள்ளைகளுக்கும், ஸ்திரீ பெண்களுக்கும் வித்தையைக் கற்பிக்க வேண்டும். தங்களுடைய போதனை விளக்கத்தினால் மாணாக்கர்களுக்கு நல்ல அறிவைக் கற்பிக்கவேண்டும். ஸ்திரீயினால் புருஷனும், புருஷனால்ஸ்திரீயும் பூஜிக்கத்தகுந்தவர்களே. அவர்கள் கல்விச்சாலையிலிருக்கும் வரையில் தங்களுடையகுருவைப் பெற்றோர்களைப்போல் கருதவேண்டும். முறையே குருவும் சீடர்களைத் தங்கள் குழந்தைகளாகக் கருதவேண்டும்,

உபாத்தியாயர், உபாத்தியாயினிகளுடைய ஒழுக்கங்களை மகாபாரதம் உத்தியோகபர்வம், விதுர நீதி 32-வது அத்தியாயத்தினுடைய சுலோகங்களா லறியவும்.

आत्मज्ञानं समारम्भस्तितिक्षा धर्मनित्यता ।
यमर्था नापकर्षन्ति स वै पण्डित उच्यते ॥

சோம்பேரித்தனமாயிருப்பது, வீண் காலங்கழிப்பது, சுகம், துக்கம் கேடு, லாபம், துதி, நிந்தை, மரியாதை, அவமரியாதை இவைகளை மதியாமல், தர்மத்திலேயே உறுதியான சிந்தையையும், விஷயசுகங்களினால் கவரப்படாம லிருக்கிற மனதையும், கொண்டவனும் ஆத்மஞானத்தை யுடையவனுமே பண்டிதன்.

निषेवते प्रशस्तानि निन्दितानि न सेवते ।
अनास्तिकः श्रद्धान एतत्पण्डितलक्षणम् ॥

எக்காலமும் தர்மகாரியத்தைச் செய்வதிலேயே கவனமுள்ளவனையும், தருமமன்னியிலிருக்கும் காரியங்களை விட்டு விடுகிறவனையும், ஈசுவரன், வேதம் சத்தியம், இவைகளிலிருந்து கவனத்தைவிடாமல் ஈசுவரனிலேயும், தர்மத்தி லேயும் உறுதியான நம்பிக்கையை உடையவனை ஒருவன் பண்டிதன் ஆவான்.

क्षिप्रं विजानाति चिरं शृणोति, विज्ञाय चार्थं भजते न कामात् ।
नासम्पृष्टो ह्युपयुङ्क्ते परार्थे, तत्प्रज्ञानं प्रथमं पण्डितस्य ॥

கடினமான விஷயங்களைக்கூட சீக்கிரம் அறிந்து கொள்ளுதலும், வெகு காலம் சாஸ்திரங்களைப்படித்து, கேட்டு, யோசனைசெய்தலும், தான் அறிந்த கொஞ்சத்தையும் பரோபகாரார்த்தமாக உபயோகித்தலும், சுயநலத்தைக் கருதி கார்யம் ஒன்றும் செய்யாமலிருப்பதும், சமயமறியாமலும் கோராமலும் யோஜனை பிறர்களுக்குச் சொல்லாமலுமிருப்பதும் பண்டிதன் ஒருவனுடைய முதல் அடையாளமாகும். அடைவதற்குத்தகாத பொருளைக் கோராமலும் கஷ்டமேதாவதேற்படுமேயானால் அதைப்பற்றிக் கவலைப்படாமலும் ஆபத்துக் காலத்திலும் தன் தைரியத்தைக்கைவிடாமலிருக்கிறவனே பண்டிதன்.

नाप्राप्यमभिवाञ्छन्ति नष्टं नेच्छन्ति शोचितुम् ।
आपत्सु च न मुह्यन्ति नराः पण्डितबुद्धयः ॥

கேள்விகேட்பது முதலான பல வித்தைகளில் நிபுணனையும், சாஸ்திரங் களை எடுத்துரைப்பதில் சாமார்த்தியமுள்ளவனையும், தர்க்கம், ஸ்மிருதி இவைகளை அறிந்துகொண்டு கொஞ்சகாலத்தில் தெளிவாக உரைக்கக்கூடிய சக்தியையும் உடையவன் எவனோ அவனே பண்டிதன்.

प्रवृत्तवाक् चित्रकथ ऊहवान् प्रतिभानवान् ।
आशु ग्रन्थस्य वक्ता च यः स पण्डित उच्यते ॥

சத்தியத்திற்கு ஏற்றவாறு காரியங்களை அறிகிறவராயும் மனச்சாக்ஷிக்கு ஏற்க காரியங்களைச்செய்கிறவராயும் ஆரியர்களுடைய அதாவது தர்மபுருஷர் களுடைய மரியாதையை மீராமலும் இருக்கிறவர்களையே பண்டிதன் அல்லது புத்திமான் என்றழைக்க வேண்டும்.

**श्रुतं प्रज्ञानुगं यस्य प्रज्ञा चैव श्रुतानुगा ।**
**असंभिन्नार्यमर्यादः पण्डिताख्यां लभते सः ॥**

எங்கெங்கு இடங்களில் இவ்விதமான கற்றுணர்ந்த ஸ்திரீகளும் புருஷர் களுமிருக்கிறார்களோ அங்கே சிறந்த ஒழுக்கங்கள் பெருகி பிரதிதினமும் ஆனந்தமதிகரிக்கும்.

மூடர்களுடைய லக்ஷணங்கள்.

**अश्रुतश्च समुन्नद्धो दरिद्रश्च महामनाः ।**
**अर्थांश्चाऽकर्मणा प्रेप्सुर्मूढ इत्युच्यते बुधैः ॥**
**अनाहूतः प्रविशति ह्यपृष्टो बहु भाषते ।**
**अविश्वस्ते विश्वसिति मूढचेता नराधमः ॥**

மகாபாரதம் உத்யோகபர்வம் விதுர நீதி அத் 32.

சாஸ்திரங்களைப்படிக்காமலும், கேழ்க்காமலும், கர்வத்துடன், இருப்பவர் களும், தரித்திரராயிருந்தும் வீணாய்மனப்பால் குடிக்கிறவர்களும், முயற்சி செய்யாமல் காரியங்களை முடிக்க சிரமப்படுகிறவர்களும், புத்திமான்களால் மூடர்களென அழைக்கப்படுகிறார்கள் (2) அழைக்காமல் சமையலறையையா வது வீட்டையாவதடைகிறவனும், தன் யோக்கியதைக்கு அதிகமான ஸ்தா னத்தை அடையவிரும்புகிறவனும், கோராமல் சபையின் மத்தியில் பேச விரும்புகிறவனும், விரும்பத்தகாதபொருள், மனிதன் இவைகளை நம்புகிறவனும் மூடனாகிறான். எல்லோரும் அவனை நீசன் என்றும் அழைக்கிறார்கள். எவ் விடத்தில் இம்மாதிரிபுருஷர்கள் உபாத்தியாயர்களாகவும், உபதேசகர்களாகவும் குருக்களாகவும், பெரியோர்களாகவும் இருக்கிறார்களோ அவ்விடத்தில் அவித் தையும், அதர்மமும், கலகமும், விரோதமும், ஏற்பட்டு அந்த இடம் துக்கத் தில் முழுகியிருக்கும்.

மாணாக்கர்களுடைய லக்ஷணங்கள்.

**आलस्यं मदमोहौ च चापलं गोष्ठिरेव च ।**
**स्तब्धता चाभिमानित्वं तथाऽत्यागित्वमेव च ।**
**एते वै सप्त दोषाः स्युः सदा विद्यार्थिनां मताः ॥**

சோம்பல், குடிவெறி, லாகிரி வஸ்துக்களின் உபயோகம், நிலையற்றமனம், வாயாடித்தனம், அதாவது பிரயோஜனமற்ற வார்த்தைகளைப்பேசல், படிப்பில் கீழ்ப்படியாத்தனம் கர்வம், பேராசை, இவைகளெல்லாம் மாணாக்கனுடைய குற்றங்களாகும். இவ்விதமானவர்களுக்குப் படிப்புவராது.

सुखार्थिनः कुतो विद्या कुतो विद्यार्थिनः सुखम् ।
सुखार्थी वा त्यजेद्विद्यां विद्यार्थी वा त्यजेत्सुखम् ॥

சுகங்களை கோருகிறவனுக்கு வித்தை எங்கிருந்து வரும்? வித்தையில் ஆசை உள்ளவனுக்கு சுகமேது? ஆகையினால் விஷய சுகத்தைக்கோருகிறவர்கள் வித்தையையும், வித்தையைக் கோருகிறவர்கள் விஷயசுகங்களையும் விட்டுவிடவேண்டும். வித்தையைக்கற்றுக்கொள்ள வேறுவழிகிடையாது.

सत्ये रतानां सततं दान्तानामूर्ध्वरेतसाम् ।
ब्रह्मचर्यं दहेद्राजन् सर्वपापान्युपासीतम् ॥

எக்காலமும் சத்தியாசாரத்தைக்கொண்டவர்களும் அடக்கப்பட்ட ஐம்புலன்களை அதாவது நாசஞ்செய்யாமலிருக்கும் வீர்யத்தைஉடையவர்களுமே பிரமசாரிகளாகவும், வித்வான்களாகவும் ஆகிறார்கள். ஆகையினால் உபாத்தியாயர்களும் உபாத்தியாயினிகளும் சுபலக்ஷணங்களுடன் கூடின உயர்ந்த குணங்களை யுடையவர்களாயிருக்க வேண்டும். தங்களுடைய சிஷ்யர்களை சத்தியத்தைத் தொடரும்படியாகவும், மரியாதையுடன் கூடினவனாகவும், அடக்கப்பட்ட இந்திரியங்களை உடையவனாகவும் விநயமுள்ளவனாகவும், இன்னும் பலவித நற்குணங்களுடன் கூடினவனாகவும், நல்லகாயபலம், ஆத்மபலம், இவைகளுடன் கூடினவனாகவும், வேதம் முதலானசாஸ்திரங்களில் வித்வானாகவும் செய்வதற்கே கஷ்டப்படவேண்டும். தீயகுணங்களிலிருந்து நல்லவழியில் திருப்பி உற்சாகத்தையும், புத்தியையும் அவர்களுக்குப் போதிக்கவேண்டும். மாணாக்கர்களும் எப்பொழுதும் அடக்கப்பட்ட இந்திரியங்களை உடையவர்களாகவும், சாந்தகுணமுள்ளவர்களாகவும் சிநேகிதர்களோடும் உபாத்தியாயர்களோடும் அன்புடன் கூடினவர்களாயும், யோசனை உள்ளவர்களாயும், கருத்துள்ளவர்களாயும், வித்தை, நிறைந்த ஆயுசு, தர்மம், இவைகளை உடையவர்களாயுமிருக்கவேண்டும். இதுவே பிராமணர்களுடைய தர்மமாகும்.

### க்ஷத்திரியர்களுடைய தர்மம்.

க்ஷத்திரியர்களுடைய கடமை, இராஜதர்மத்தை குறிக்கும் அடுத்த அத்தியாயத்தில் சொல்லப்படும்.

### வைசியர்களுடைய தர்மம்.

பல தேசங்களுடைய பாஷைகளையும், வியாபாரநோக்கம், உபாயம் இவைகளைக்கற்றுக் கொள்ளுகிறதும், வெளிதேசங்களுக்குச் சென்று வருகிறதும் லாபத்தைகொடுக்கும் காரியங்களை ஆரம்பம்செய்கிறதும், மிருகங்களைக்காப்பாற்றுகிறதும், வேளாண்மையையும் கைத்தொழில்வேலையும் விருத்திசெய்கிறதும், தேசத்தினுடைய பொருளைப்பெருகச்செய்கிறதும், சகலசெய்கைகளிலும், சரியாகவும், நம்பிக்கையாகவும் உண்மையாகவுமிருக்கிறதும், வித்தை, தர்மம், இவைகளுடைய மேன்மையில் பணத்தைச்செலவழிக்கிறதும் சாமான்கள் நஷ்டமாகாமலிருக்கும்படி காரியங்களைச்செய்வதுமேயாம்.

### சூத்திரர்களுடைய கடமை.

சேவைசெய்யவேண்டிய காரியங்களில் சாமர்த்தியமுள்ளவர்களாகவும் பாகசம்பந்தமான பலவிஷயங்களில் நிபுணர்களாகவும், மிக்க ஆவலுடன் பிராமணர்களிடம் பணிவுசெய்து அவர்களிடத்திலிருந்து தன்ஜீவனம் செய்வதும் சூத்திரர்களுடைய கடமை. பிராமணர்களும் இவர்களுக்கு அன்னபானாதிகளை அளித்து வஸ்திரங்களைக்கொடுத்து விவாகஞ்செய்து வைத்து அதற்கு வேண்டியதையாவது அல்லது காதச்சம்பளமாவது அளிக்கவேண்டும்.

நான்கு குலங்களும், பரஸ்பர அன்புடனும் பிரேமையுடனும் உபகாரத்தினுடனும் இருந்துகொண்டு தங்கள் தங்களுடைய சுகம், துக்கம், லாபம், கேடு, இவைகளைப் பொதுவாக பாவித்து ஜனங்களினுடைய மேன்மையை முன்னிட்டு தங்களுடைய உடல், பொருள் ஆவி இவைகளைப் பிரயோசனப் படுத்தவேண்டும்.

### ஸதிரீபுருர்ஷர்களுடைய குற்றங்கள்.

புருஷனும் மனைவியும் ஒருக்காலமும் விட்டுப் பிரிந்திருக்ககூடாது. ஏனென்றால்

**पानं दुर्जनसंसर्गः पत्या च विरहोऽटनम् ।**
**स्वप्नोऽन्यगेहवासश्च नारीसन्दूषणानि षट् ॥** மனு 9. 13.

கள்ளு, சாராயம் முதலான லாகிரிவஸ்துக்களை அருந்துதல், துஷ்டர்களுடன் சகவாசஞ்செய்தல், புருஷனை விட்டு விடுதல், கள்ளங்கபடத்துடன்கூடின சந்நியாசிகளைச் சேவைசெய்யுங் காரணத்தைக்கொண்டு இங்குமங்கும் அலைதல், பிறருடைய அகத்தில் வசித்தல், தூங்குதல், இத்தகையகாரியங்கள் ஸ்திரீகளுக்கு அபவாதத்தை உண்டுபண்ணும். புருஷர்களுக்கு மப்படியே.

ஸ்திரீபுருஷர்கள் பிரிந்திருக்க இரு காரணங்களுண்டு. கார்யத்தின் மீது தேச சஞ்சாரஞ் செய்வதினால் பிரிக்கப்படுகிறது. காலனால் அதாவது மரணத்தினால் பிரிக்கப்படுகிறது. அயல்தேசயாத்திரைச் செய்யும்பொழுது மனைவியையுங்கூட அழைத்துப்போவதினாலேயே முதற்பிரிவினையின் காரணத்தைத் தடுக்கலாம். இவ்விதம் செய்வதினால் வெகுகாலம் பிரியாதிருக்கலாம்.

### மறுவிவாகம்.

வினா—ஸ்திரீபுருஷர்கள் பல தடவை விவாகஞ்செய்து கொள்ளலாமா? கூடாதா?

விடை:—இருவரும் உயிரோடிருக்கும் பொழுது கூடாது.

வினா:—ஒருவர் இறந்துவிட்டால் மற்றவர் மறுவிவாகஞ் செய்துகொள்ளலாமா?

விடை:—ஆமாம் மனு இதைக்குறித்துச்சொல்லுகிறதாவது.

**सा चेदक्षतयोनिः स्याद्गतप्रत्यागतापि वा ।**
**पौनर्भवेन भर्त्रा सा पुनः संस्कारमर्हति ॥** மனு 9. 179.

ஸதிரீபுருஷருக்கு பேருக்கு மாத்திரம் கலியாணமாய், தேகசம்பந்தம் ஆகாமலிருக்கும் பக்ஷத்தில் புனர்விவாகம் செய்துகொள்ளலாம். பிரம க்ஷத்திரிய வைசியர்கள் கலியாணஞ் செய்துகொண்டு தேகசம்பந்தமான பிறகு மனைவி இறந்துபோனபோதிலுங்கூட புனர்விவாகம்செய்துகொள்ளக்கூடாது.

**வினா:**—(அவ்விதம் செய்து கொள்ளுகிறவர்களுடைய) புனர்விவாகத்தினால் என்ன கெடுதல்கள் ஏற்படும்.

**விடை:**—கீழ்க்கண்டவைகள் முக்கியமான கெடுதல்கள் (1) அவர்களிருவருக்கும் அதிக நேசமிருக்காது. ஏனென்றால் புருஷன் இஷ்டம் வைத்தபொழுது மனைவியையும், மனைவிக்கு இஷ்டம் வாய்த்தபொழுது புருஷனையும் விட்டு விட்டு, வேறு யாருடனாவது கூடுவதற்கு எத்தனிப்பார்கள். (2) புருஷனாவது மனைவியாவது இறந்து விட்ட பிறகு வேறு கலியாணஞ்செய்துகொண்டால், இறந்தவர்களுடை ஐசுவர்யங்களை, புதிதாய்க்கலியாணஞ் செய்து கொண்டவர்கள் எடுத்து கொண்டு குடும்பத்திற்குள்ளே கலகம் அதிக மேற்படுவதற்குக் காரணமாயிருப்பார்கள். (3) அரிய பெரிய குடும்பங்கள் பல அழிந்து மறைந்து அவர்கள் பெயரன்னியில் அவர்களுடைய ஐசுவர்யங்கள் தூசியாய்ப்பறந்துவிடும் (4) ஸ்திரீ புருஷர்களுடைய கற்பு கெட்டுப்போய் விடும். இன்னும் இதைப் போலத்தகெடுதல்களும் புனர்விவாகத்தினால் ஏற்படுகிறது. ஆகையினால் முதல் மூன்று குலங்களும் இதையனுசரிக்கக் கூடாது.

**வினா:**— வம்ச பரம்பரை இல்லாது இறந்துவிட்டால் குடும்பம் நாசமாய்ப்போய்விடும். ஸ்திரீ புருஷர்கள் துஷ்டகர்மங்களை, புனர்விவாகஞ் செய்துக்கொள்ளாவிடில், செய்யத்துணிந்து வியபசாரித்தனத்தைக் கைக்கொள்வார்கள். ஆகையினால் புனர்விவாகம் செய்துக்கொள்ளவேண்டும்.

**விடை:**— இல்லை. சரிவர பிரமசரியத்தை அனுசரித்திருப்பார்களேயானால் கெடுதல்களொன்றுமே ஏற்படாது. சந்தான மற்றுபோய், வம்சபரம்பரைச் சரிவர இருக்கவேண்டுமென்றிருந்தால் அப்பொழுது, சுயஜாதிக் குழந்தையாரையாவது ஸ்விகாரஞ்செய்து கொள்ளலாம். இப்படிச்செய்யும் விஷயத்தில் வியபசாரித்தன மொன்றுமேற்படாது. அல்லது கற்பழிந்து போம் என்னும்பயமிருந்தால் அப்பொழுது "நியோக" கலியாணஞ்செய்துக் கொண்டு குழந்தைகளைப்பெறலாம்.

## நியோக விவாகம்.

**வினா:**— புனர்விவாகத்திற்கும், "நியோக" த்திற்கும் வித்தியாசங்களென்ன ?

**விடை:**— (1) கலியாணமானவுடன் மணப்பெண் ஒருவள் தன் தகப்பனகத்தைவிட்டு மணவாளனுடைய வீட்டில் வசிக்கிறாள். பிதாவினுடைய சம்பந்தமும் குறைந்துபோகிறது. ஆனால் (நியோக விஷயத்தில்) விதவை இறந்த, தன் புருஷனுடைய வீட்டில்வசிக்கிறாள். (2) கலியாணத்தினால் பிறந்த குழந்தைகள், தன்தாபின் புருஷனுடைய பொருள்களை அடைகின்றனர்.

நியோகத்தால் உண்டான விதவைகளின் சந்தானம் ஜனிக்கச்செய்கின்றவனுடையதாக கருதப்படுகிறதில்லை. ஆகையினால் அவனுடைய வம்சத்தையுஞ் சேர்ந்தவர்கள் ஆகிறதில்லை. இறந்த தன்தாயின் புருஷனுடைய மக்களாகக்கொள்ளப்பட்டு அவருடைய கோத்திரத்தைச் சேர்ந்தவர்களாகவும், அவ்வருடைய சொத்துக்களுக்கு உரிமைக்காரர்களாகவும் கருதப்பட்டு அவ்வருடைய வீட்டிலேயே வசிக்கிறார்கள். (3) விவாகத்தினால் ஸ்திரீ புருஷர்கள் இருவரும் பரஸ்பர சேவைக்கு பாத்திரமாகிறார்கள். நியோகத்தினால் இக்கட்டுப்பாடு முறிந்துபோய் விடுகிறது. அதாவது (ஒப்பந்தகாலம் கழிந்த பிறகு) நியோக உறவுகளை உதறிவிடலாம். (4) கல்யாணமான தம்பதிகளுடைய, சம்பந்தம் மரண பரியந்தம் நிலைத்திருக்கின்றது. ஆனால் "நியோக" த்தினுடைய சம்மந்தம் மக்கட் பேருண்டாகும் வரையில்தான். (5) கலியாணமான தம்பதிகள் ஒன்றுசேர்ந்து குடும்பத்தினுடைய நன்மைக்காகவே உழைக்கிறார்கள். நியோக தம்பதிகள் அவரவர்களுடைய சொந்த குடும்ப நன்மைக்காக முறையே உழைக்கிறார்கள்.

**வினா:—** நியோகத்தினுடையவும், விவாகத்தினுடையவும் நியமங்கள் ஒன்றா ? அல்லது வெவ்வேறா ?

**விடை:—**கொஞ்சவித்தியாச முண்டு. சிலவித்தியாசங்களை முன்னமேயேகூறியாய்விட்டது. மீதியான சிலவற்றை இங்கே சொல்லுவோம். (1) கலியாணத்தினால் சேர்க்கப்பட்ட இருவர்கள் பத்து குழந்தைகள் வரையில் பெற்றெடுக்கலாம். நியோகத்தினால் சேர்க்கப்பட்டவர்கள் இரண்டு அல்லது நான்கு குழந்தைகளுக்குமேல் பெற்றெடுக்ககூடாது (2) குமாரனுக்கும், குமாரிக்கும் கல்யாணமாவது போல், விதவைக்கும், மனைவி இழந்தவனுக்கும் நியோகமாகிறதே தவிர ஒருபொழுதும் குமாரனுக்கும் குமாரிக்குமல்ல (3) கலியாணத்தினால் சேர்க்கப்பட்டதம்பதிகள் ஒன்றாய் எப்பொழுதும் வசிப்பது போல் நியோகத்தினால் சேர்க்கப்பட்டவர்கள் வசிப்பதில்லை. ருதுசமயம் தவிர வேறுசந்தர்ப்பங்களில் அவர்கள் சேருகிறதில்லை. விதவையுடையவோ அல்லது மனைவி குழந்தையினுடையவோ, யாருடைய நன்மைக்காவது சரி, இரண்டாவது சேர்க்கையுடன் பிரிந்துவிட வேண்டும். இரண்டு மூன்றுவருடம் வரையில் விதவை குழந்தையைப் போஷித்துவிட்டு பிறகு புருஷனிடம் கொடுத்துவிடவேண்டியது. இவ்விதமாக, கைம்பெண் ஒருவள் தனக்காக இரண்டு குழந்தைகளையும், தன் நியோக புருஷர்கள் நால்வர்களில் ஒவ்வொருவருக்காக இரண்டு குழந்தைகளையும் ஜனனஞ்செய்யலாம். இம்மாதிரியே, மனைவி இழந்தவனும் தனக்காக இரண்டு குழந்தைகளையும், தன்னுடைய நான்கு விதவைகளுக்காக ஒவ்வொருக்கும் இரண்டு குழந்தைகளை பெற்றுக்கொள்ளலாம். ஆகையினால் ஒவ்வொருதம்பதியும் பத்துகுழந்தைகளைப் பெறலாம் இதையேதான் வேதமும் ஊர்ஜிதப்படுத்துகிறது.

इमां त्वमिन्द्रमीढ्वः सुपुत्रां सुभगां कृणु ।
दशास्यां पुत्राना धेहि पतिमेकादशं कृधि ॥ ரிக். 10. 85. 48.

பலவானும், மக்கட்பேரை ஆக்க சக்தியுமுள்ள ஓ மனிதனே! விவாகமான எந்த ஸ்திரீயையாவது, விதவையையாவது சந்தோஷமுள்ளவளாகச் செய்து நல்லகுழந்தைகளை அடை! கலியாணஞ்செய்த இவளிடமிருந்து பத்து பிள்ளைகளைப்பெற்று பிறகு இவளை குடும்பத்தைச்சேர்ந்த பதினொன்றாகக்கருது. ஸ்திரீயே! நீயும் கலியாணஞ்செய்த இந்தமனிதனுடனாவது அல்லது "நியோக"த்தினால் இணைக்கப்பட்டப் புருஷர்களுடனாவது பத்துபிள்ளைகளைப்பெற்று பிறகு அந்த புருஷனை பதினொன்றாவதாகக் (குடும்பத்தை சேர்ந்த) கருது. வேதப்பிரகாரம் பிரம க்ஷத்திரிய சூத்ர குலத்தைச்சேர்ந்த இருவர்கள் எக்காரணத்தினாலும் பத்து குழந்தைகளுக்கு மேல்பெறக்கூடாது. ஏனென்றால் அதிகக்குழந்தைகள் பிறப்பதினால் சந்தானங்கள் நிர்பலமாயும் நிர்புத்தியாயும், அற்ப ஆயுசுடன் கூடினதாயும் ஆகின்றன. இப்படிப்பட்ட பெற்றோர்களும் அற்பாயுசை அடைந்து வியாதிகளுக்காளாய், கடைசிநாள்களில் மிக்க துன்பத்தையும் துக்கத்தையும் அனுபவிக்கிறார்கள்.

வினா:—ஆனால் "நியோகம்" வியபசாரித்தனத்தைப்போல் காண்றதே?

விடை: —கலியாணமாகாத இருவர்களுடைய சேர்க்கையே வியபசாரித்தனமெனப்படும். அது போலவே, நியோகமாகாத மனைவி இழந்தவன், விதவை, இவ்விருவர்களுடைய சேர்க்கையும். சாஸ்திர ப்ரகாரம் செய்யப்பட்ட கலியாணத்தினால் எவ்விதம் வியபசாரித்தனமேற்படாதோ அவ்விதமே வேதம் முதலான சாஸ்திரபிரகாரம் செய்யப்பட்ட "நியோக" த்தினால் வியபசாரித்தனம் ஏற்படாது.

வினா.— அதுண்மையே யானால் வேசித்தனம்போல் காணப்படுகிறதே?

விடை.—இல்லை. வேசி ஒருவள் ஒருமனிதனையே அண்டுகிறதில்லை. அவளுடைய சேர்க்கைக்கு நியாயகட்டுப்பாடு ஒன்றும் கிடையாது. ஆனால் நியோகத்திற்குக்கட்டிருக்கிறது. தன் பெண்ணைக் கலியாணஞ் செய்துக் கொடுக்க ஒருவன் வெட்கப்படுகிறதில்லைபோலவே, நியோகத்திலும் வெட்கப்படுகிறதில்லை வியபசாரத்திற்குப்பழகின ஜனங்கள் கலியாணமான போதிலுங்கூட இந்தகெட்ட வழக்கத்தை விடுகிறதில்லை.

வினா.—"நியோகம்" பாபமான கார்யமாக எங்களுக்குப் புலப்படுகிறது.

விடை.—நியோகத்தைப் பாபமாகக்கருதுவீர்களேயானால், நீங்கள் ஏன் கலியாணத்தையும் அவ்வண்ணமே, கருதலாகாது? நியோகத்தை தடுப்பதினாலேயே பாபம் ஏற்படுகிறது. எவ்விதமென்றால் சிருஷ்டியின் பிரகாரம், உலகத்தை வெறுத்துவிட்ட வித்வான், யோகி, இவர்களுடைய விஷயத்தில் தவிர இவ்வுலகில் மற்ற ஸ்திரீ புருஷர்களுடைய ஸ்வபாவகவர்ச்சியைத் தடுப்பது முடியாதகாரியம். விதவைகளுடையவும் மனைவி இழந்தவர்களுடையவும் கர்ப்பதானத்தை நாசஞ்செய்து (நியோகஞ்செய்யாமல் தடுத்து

மனதைப்புண்படுத்துவதை நீங்கள் பாபமாகக் கருதவில்லையா? ஏனென்றால் சிறுவயதில் யாவரும், குழந்தைகளைப்பெற்று விஷயசுகங்களை அனுபவிக்க விரும்புவார்கள். இந்த அவா அதிகமாயிருக்கிறபடியினால், இராஜ்யவியவகாரம் ஜாதிக்கட்டு,நீதிக்கட்டு,இவைகளினால் தடுக்கப்பட்டால் அவர்கள் இரகசியமாகக் கெட்டவழிகளைதேடுவார்கள். இந்திரியங்களை அடக்க சக்தியுள்ளவர்களுக்கு நியோகமாவது, கலியாணமாவது செய்யாமல், இக்கேட்டை நிறுத்தலாம். அப்படி முடியாதவர்களுக்கு கலியாணம் அல்லது நியோகஞ்செய்யவேண்டும். அவ்வண்ணம் செய்வதினால் வியபசாரித்தனங்குறைந்து, மானிட வர்க்கம் விருத்தியாகும். அதுவுமன்னியில் கர்ப்பத்தை அழிப்பது அடியோடு மறைந்து விடும். நீசகுல ஸ்திரீயுடன் உயர்குலப்புருஷன் ஆசைகொள்வது, வியபசாரிகளுடைய வேசித்தனம், உத்தமகுலங்களினுடைய அபவாதம், வம்சநாசம் ஸ்திரீ புருஷர்களுடைய துக்கங்கள் இன்னும் வேறான பாபங்கள், கெடுதல்கள், கலியாணத்தையும், நியோகத்தையும், அநுசரிப்பதினால் நின்று போய்விடும். இக்காரணங்களுக்காகவே நியோகத்தை ஆதரிக்கவேண்டும்.

வினா.— நியோகத்தில் எந்தெந்தவிதிகளை அநுசரித்தல் அவசியம்?

விடை.— கலியாணத்திற்கு நல்ல ஜனங்களினுடைய அனுமதியும், இரு பக்கங்களினுடைய பரஸ்பர ஒற்றுமையும்,எவ்விதம் அவசியமோ, அவ்விதமே நியோகத்திற்கும் அவைகள் அவசியம். நியோகஞ்செய்து கொள்ளவேண்டுமென்கிற இச்சையுள்ள ஸ்திரீ புருஷர்கள், தங்கள் தங்களுடைய குடும்ப நபர்களுக்கு முன்னிலையில் தான் நியோகக் கலியாணஞ்செய்து கொள்ளப்போவதாகவும், சந்தானமுண்டானவுடன் விட்டுப்பிரிந்து விடுவதாகவும், வெளிப்படுத்த வேண்டும். அவ்விதம் வெளிப்படுத்தின பிரகாரம் நடக்காவிடில் அவர்கள் பாபிகளாய், இராஜ்யத்திலும், சமூகத்தினாலும் தண்டனைக்காளாகிறார்கள். மாதமொருமுறை கர்ப்பாதானத்தின் கார்யத்தைச்செய்ய வேண்டும். கர்ப்பமானபிறகு ஒரு வருஷகாலம் தனித்தனியே வசிக்கவேண்டும்.

வினா.—நியோகம் அவரவர்களுடைய குலத்திலேயே நடக்கவேண்டுமா? அல்லது வேறுகுலத்தில் நடக்கவேண்டுமா?

விடை.—தன்னுடைய குலத்திலாவது அல்லது அதைவிட உயர்ந்த குலத்திலாவது ஸ்திரீகள் நியோகம் செய்துகொள்ளவேண்டும். உதாரணமாக வைசிய ஸ்திரீ ஒருவள் பிராம்மணனுடனாவது அல்லது தன் வைசியகுலத்தவனையேயாவது அல்லது க்ஷத்திரிய ஸ்திரீ ஒருவள் க்ஷத்திரிய அல்லது பிராமணனையாவதும் பிராமண ஸ்திரீ பிராமண புருஷனையுமே அடைய வேண்டும். ஏனென்றால் வீர்யம் அதே வீர்யத்துடனாவது அல்லது உயர்ந்த வீர்யத்துடனாவது சேரவேண்டும். ஒருபொழுதும் தாழ்ந்த வீர்யத்துடன் சேரக்கூடாது. வேதோக்தமாய் கலியாணமாவது நியோகமாவது செய்துக் கொண்டு சந்ததிகளை உண்டுபண்ணுவதே மனிதர்களின் கடமையாகும்.

வினா.—புனர் விவாகம் செய்துகொள்ளாது ஒருவன் நியோகத்தை அனுசரிப்பானேன்?

விடை.—வேதம் முதலான சாஸ்திரப்பிரகாரம், பிராமண ஜாதியார் ஒரு தடவையே கலியாணஞ்செய்து கொள்ளவேண்டுமேயல்லாது இரண்டு தடவை செய்துக்கொள்ளக் கூடாதென்று சொன்னேம். பெண்பிள்ளைகளினுடைய கலியாணம் நியாயத்தின்பேரில் ஏற்பட்டிருக்கிறபடியினுல், விதவை ஒருவளுடன் குமாரனுடைய கலியாணமும், மனைவி இழந்தவனுடன் பெண் ஒருவள் கலியாணமும் நியாயமாகாது. மனிதன் விதவையை கலியாணம் செய்துக்கொள்ள விரும்பாமல் இருப்பதுபோல், பெண்ணும் மனைவி இழந்த புருஷனை கலியாணஞ் செய்துக்கொள்ள விரும்பமாட்டாள். பெண் ஒருத்தி மனைவி இழந்தவனையும், புருஷன் ஒருவன் விதவையையும் மணம்புரியாமலிருக்கும்பொழுது நியோகத்தினுடைய அவசியம் ஏற்படுகிறது. சேருகிறதற்கு, சேருகிறதையே விவாகவிஷயங்களிற்சேர்க்கவேண்டும்.

வினு.—வேதாதிசாஸ்திரங்களில் விவாகத்திற்குப் பிரமாண மிருப்பது போல், நியோகத்திற்குமிருக்கிறதா ?

### வேதமும் நியோகமும்.

விடை.—பல பிரமாணங்களிலிருக்கின்றன. அவைகளில் சிலவற்றை இங்கு சொல்வோம்.

कुहस्विद्दोषा कुह वस्तोरश्विना कुहाभिपित्वं करतः कुहोषतुः ।
को वां शयुत्रा विधवेव देवरं मर्यं न योषा कृणुते सधस्थ आ ॥ ரிக் 10. 4. 2.
उदीर्ष्व नार्यभिजीवलोकं गतासुमेतमुप शेष एहि ।
हस्तग्राभस्य दिधिषोस्तवेदं पत्युर्जनित्वमभि सं बभूथ ॥ ரிக். 18. 8.

(அச்வினு) ஓ, ஸ்திரிபுருஷர்களே ! (தேவரம் விதவேவ) விதவையானவள் தன்னுடைய இரண்டாவது புருஷனுடனும் (யோஷா) கலியாணமான ஸ்திரீ ஒருவள் (மார்யன்) தன்புருஷனுடனும் (சதஸ்தே) முறையே படுக்கையில் படுத்துக்கொண்டு (ஆ, கிருனுடே) குழந்தைகளைப்பெறுவதுபோல், நீங்களும் செய்யவேண்டியது. (குஹாபிபிதவம்) எங்கிருந்து பதார்த்தங்களை அடைந்தீர்கள்? எப்படி ? (குஹோஷத:) நீங்கள் எங்கு வசிக்கிறீர்கள் ? (கோவாம்சயுத்ரா) நீங்கள் தூங்குமிடமெங்கே ? நீங்கள் யார் ? உங்களுடைய ஊர் யாது ? தன்தேசத்திலிருந்தபோதிலும், அன்னிய நாடுகளிலிருந்தபோதிலும் புருஷனும் மனைவியும் ஒன்று சேர்ந்திருக்கவேண்டுமென்றும் தன்னுடைய புருஷனிடம்போல், நியோகத்தினுல் விதவை ஒருவள், ஒருவனிடம் சேர்ந்து சந்ததிகளை அடையலாம் என்று இதனுல் ஏற்படுகிறது.

வினு:—ஒருமனிதனுக்கு இளைய சகோதரனில்லாவிடில் விதவையானவள் யாருடன் நியோகஞ் செய்யலாம்.

விடை.—தேவர் என்றழைக்கப்படும் தன்னுடைய இரண்டாவது புருஷனுடன் ? தேவா என்னும் வார்த்தைக்கு நிருக்த பிரகாரம் அர்த்தம் யாதெனில்;

**देवरः कस्माद् द्वितीयो वर उच्यते ॥** நிருக். 3. 15.

தன்புருஷன், புருஷனுடைய மூத்தசகோதரர், இளைய சகோதரர் அதே குலத்தைச் சேர்ந்தவர், யாராயிருந்தபோதிலும் சரி, ஒரு விதவையுடைய இரண்டாம் புருஷனுக்கு "தேவர்" என்று பெயர்.

(நாரி) ஓ, விதவையே! (ஏதம் கதாஸும்) இறந்த இப்புருஷனுடைய ஆசையைவிட்டு ஒழித்து (சேஷே) பாக்கியிருக்கிற புருஷர்களில் (அபிஜீவலோகம்) பிழைத்திருக்கிற இரண்டாவது புருஷனை (உபைஹி) அடைந்து (உதீர்ஷ்வ) கீழ்க்கண்டதை யோசனைச்செய்து கவனத்தில் வைத்துக்கொண்டு நடக்கவும்.

புனர்விவாகம் செய்கிறவனுடைய நலத்திற்காக உண்டாகும் இக்குழந்தைப் பதிக்குச்சேரும். உன்னுடைய நன்மைக்காக நியோகமேற்பட்டால், பிறக்கும் குழந்தை உன்னுடையது. அப்படியே உனக்கு ஏற்பட்டபுருஷனும் நடக்க வேண்டும்.

**अदेवृघ्न्यपतिघ्नी हैधि शिवा पशुभ्यः सुयमाः सुवर्चाः ॥**
**प्रजावती वीरसूर्देवृकामा स्योनेममग्निं गार्हपत्यं सपर्य ॥** அதர். 14. 218.

(அபதிகனயதேவிருத்தி) புருஷனுக்கும் தேவருக்கும் துக்கங்கொடுக்காமலிருக்கும் ஸ்திரீயாகிய நீயே (இஹ) இந்தகிரகாச்ரமத்தில் (பசுப்ய:) பிராணிகளின் பொருட்டு (சிவா) அன்புள்ளவராயிருக்கிறவரும் (சுயமா:)தர்மமாகவும் நியாயமாகவுமிருக்கப்பட்ட வழிகளில் நடக்கிறவரும் (சுவாசா) எல்லா சாஸ்திர வித்தையோடுகூடினவராயிருக்கிறவரும் (பிரஜாவதி) புத்திர பௌத்திரர்களோடு (வீரசு:) வீரதீரசூரபுத்திரர்களை ஜனிக்கும் (தேவ்ருகமா) இரண்டாவது புருஷனை இச்சிக்கும் நீ (ஸ்யோனு) எல்லாரிலும் சுகத்தைக் கொடுக்கும் நாயகனையாவது தேவரையாவது (ஏதி) அடைந்து (இமம்) இந்த (கார்ஹபத்யம்) கிரகஸ்த சம்பந்தமான 'அக்னிம்' அக்னிஹோத்திரத்தை (சபர்ய) ச்செய்யவேண்டும்.

**तामनेन विधानेन निजो विन्देत देवरः ॥** மனு. 9. 69.

சுன்ற ஒரு விதவை இறந்த தன்புருஷனுடைய சிறிய அல்லது பெரிய சகோதரர்களைக்கலியாணம் செய்துக்கொள்ளலாம்.

**வின.**—ஒரு புருஷனாவது, ஸ்திரீயாவது எவ்வளவு தடவை நியோகம் செய்துகொள்ளலாம்? அப்படி விவாகஞ்செய்துகொண்ட புருஷர்களுக்கு என்ன பெயர்.

**सोमः प्रथमो विविदे गन्धर्वो विविद उत्तरः ।**
**तृतीयो अग्निष्टे पतिस्तुरीयस्ते मनुष्यजाः ॥** ரிக். 10. 85.

**விடை.**— ஓ ஸ்திரீயே, கலியாணத்தினால்இணைக்கப்பட்ட உன்னுடைய புருஷன் (கலியாணத்திற்குமுந்தி) பரிசுத்தமானகுணம் முதலானவைகளுடன்

கூடியிருந்தபடியினல் **சோம** வென்றும், நியோகத்தினல் இணைக்கப்பட்ட இரண்டாவது புருஷன் வேறே ஒரு ஸ்திரீயுடன் (கலியாணஞ் செய்துக் கொண்டு) வசித்தபடியினல் **காந்தர்வன்** என்றும், நியோகத்தினல் இணைக்கப்பட்ட உன்னுடைய மூன்ருவது புருஷன் அதிக ஆவல் உள்ளவனு யிருப்பதினல் **அக்னி** என்று முறையே அறியப்படுவார்கள். மீதி புருஷர் களெல்லாம் நாலிலிருந்து பதினென்றுவரையில் மனிதர்கள் என்று அறி யப்படுகிருர்கள்.

கீழ்கண்ட வேதமந்திரப் பிரகாரம், ஸ்திரீ ஒருவள் ஒவ்வொருவனைக பதி னென்றுபுருஷர்களை நியோகத்தினல் அடைகிறதுபோல், புருஷர்களும் பதி னென்ருஸ்திரீகளை அடையலாம்.

**इमां त्वमिन्द्रं..........पतिमेकादशंकृधि ॥** ரிக். 10. 85. 45.

"...............பதினென்ருவது புருஷனை நியோகத்தினல் அடை"

**வி௵.—** ஏகாதச வார்த்தையினல், பத்து பிள்ளைகளாகவும், பதி னென்றைப்புருஷனுக்கவும் ஏன் அறியக்கூடாது?

விடை.—உங்களுடைய அர்த்தப் பிரகாரம் பார்த்தால் வேதப்பிரமாணங்க ளுள் வித்தியாசமான அர்த்தம் ஏற்படும். உங்களுடைய அர்த்தப்பிரகாரம் இரண்டாவது புருஷனைக்கூட ஒருஸ்திரீ அடையக்கூடாது.

**देवराद्वा सपिण्डाद्वा स्त्रिया सम्यङ् नियुक्तया ।**
**प्रजेप्सिताऽधिगन्तव्या सन्तानस्य परिक्षये ॥**
**ज्येष्ठो यवायसो भार्यां यवीयान्वाग्रजस्त्रियम् ।**
**पतितौ भवतो गत्वा नियुक्ताऽप्यनापदि ॥**
**औरसः क्षेत्रजश्चैव ॥** மனு. 9. 59. 58.

சந்ததி உண்டாகாமல் புருஷன் இறந்து விடுவானேயானல் அவனுடைய விதவை இறந்த தன் புருஷனுடைய ஆருவது வம்சத்திற்குள் உள்ள மனை வியை இழந்த சகோதரர்கள் (இளையவனனலும் சரி, மூத்தவனனலும் சரி) சுய ஜாதிக்காரன், அல்லது உத்தம ஜாதிக்காரன் யார் ஆனலும் சரி இரண்டு பேரும் சந்ததியை உண்டுபண்ணவிரும்பும் விஷயத்தில் நியோகஞ்செய்து கொள்ளலாம்.

சந்ததியை உண்டுசெய்ய வேண்டும் என்கிற எண்ணமன்னியில் மோகத்தி னல், ஒரு மூத்தசகோதரன் தன் இளையவனுடைய மனைவியையும், இளைய சகோதரன் மூத்தசகோதரன் மனைவியையும் நியோகபாவனைக்காட்டி அடை வார்களானல் அவர்களை இழிவாகக் கருதவேண்டும். இரண்டாவது கர்ப்பத் துடன் நியோககாலம் முடிந்துவிடுகிறது. அதற்கப்புறம் அவர்கள் காமக்குறி யான சந்திப்புகள் செய்யக்கூடாது. இருவர்களுடைய நன்மையை முன்

னிட்டு நியோகமேற்படுமானால் அது நான்காவது கர்ப்பத்துடன் முடியவேண்டும். மேற்சொன்ன மாதிரி பத்து குழந்தைகளைப் பெறலாம். அதற்கப்புறம் சேருகிறவர்களைக் காமாதுரர்களாகவே கருதவேண்டும். அவர்களை மானங்கெட்டவர்களாக எண்ணவேண்டும். பத்து கர்ப்பங்களைவிட அதிகமாக தேகசம்பந்தம் செய்வார்களானால் அவர்கள் காமிகளாகவும், நிந்திக்கத்தகுந்தவர்களாகவுமாகிறார்கள். ஏனென்றால் கலியாணமும், நியோகமும் சந்தானோற்பத்திக்காகவே ஏற்பட்டது. விலங்குகளைப்போல் காமகிரீடைக்காக இல்லை.

வினா.—நியோகம் என்பது இறந்த பிறகா, அல்லது புருஷன் பிழைத்திருக்கும் பொழுதேயா?

விடை.—புருஷன் (அல்லது மனைவி) பிழைத்திருக்கும் பொழுதே நியோகஞ் செய்துக்கொள்ளலாம். இதோ, இதற்கு வேதப்பிரமாணம்.

**अन्यमिच्छस्व सुभगे पतिं मत् ॥** ரிக். 10. 10.

எப்பொழுது புருஷன் சந்தானோற்பத்தி செய்வதற்குச் சக்தியற்றவனாக ஆகிறானோ அப்பொழுது தன் மனைவியைப்பார்த்து "ஓ! சௌபாக்கியமுள்ளவளே! நீ என்னைவிட வேறு ஒருவனை விரும்புவாய், ஏனென்றால் என்னிடத்திலிருந்து சந்ததியை அடைய உன்னால் முடியாது" என்றுசொல்லவேண்டும். நியோகத்தைக்கோருகிற ஸ்திரீயானவள் கலியாணம்செய்துகொண்ட தன் புருஷனைப்பணிய வேண்டும். அம்மாதிரியே காலசம்பந்தமான பிணிகளிலிருந்து வருந்திக்கொண்டு சந்ததியை உண்டுபண்ணயோக்கியமற்ற ஸ்திரீயும் தன் புருஷனை நோக்கி "ஓ! எஜமானனே! என்னிடத்திலிருந்து சந்ததியை உண்டு செய்யவேண்டுமென்கிற ஆசையை விட்டு விதவை ஒருவளுடன் நியோகம் செய்துக்கொள்ளுங்கள்" என்று சொல்லவேண்டும்.

இதற்குச் சரித்திர சம்பந்தமான பிரமாணங்களில் சிலவற்றைச்சொல்லுவோம்.

பாண்டுவின் மனைவிகளான **குந்தியும், மாத்ரியும்,** நியோகத்தை கைக்கொண்டார்கள். தன் சகோதரர்களாகிய **விசித்ரவீரியனும், சித்ராங்கனும்,** இறந்த பிறகு **வியாசரானவர்** அவர்களுடைய மனைவிகளுடன் நியோகஞ்செய்துக்கொண்டு, அம்பிகையினிடமிருந்து **திருதராஷ்டிரனையும், அம்பாலிகை**யினிடமிருந்து **பாண்டுவையும்,** சூத்திரஸ்திரீ ஒருவளிடமிருந்து **விதுரனையும்** பெற்றார்.

**प्रोषितो धर्मकार्यार्थं प्रतीक्ष्योऽष्टौ नरः समाः ।**
**विद्यार्थं षड् यशोऽर्थं वा कामार्थं त्रींस्तु वत्सरान् ॥** மனு. 9. 76.

புருஷன் ஒருவன் வெளிநாட்டிற்கு வித்தையைக் கற்றுக்கொள்வதற்காகப்போயிருந்தால் எட்டு வருடகாலமும், கீர்த்திக்காகச் சென்றிருந்தால் ஆறுவருஷகாலமும், பொருள் முதலானவைகளைச் சேர்க்கச்சென்றிருந்தால்

மூன்றுவருஷகாலமும் தன்புருஷனுக்காகக் கலியாணமான ஸ்திரீ காத்திருந்து பார்க்கவேண்டும். குறிப்பிட்ட காலத்திற்குள் தன் புருஷன் திரும்பிவிடுவானுனல் நியோகம் உபயோகமற்றதாய்விடும்.

बन्ध्याष्टमेऽधिवेद्याब्दे दशमे तु मृतप्रजा ।
एकादशे स्त्रीजननी सद्यस्त्वप्रियवादिनी ॥ மனு. 9. 81.

இம்மாதிரியே புருஷர்களுக்கும் நியாயமிருக்கிறது. விவாகமாய் மனைவி மலடியாயிருந்து கர்ப்பமாகாமலிருந்தால் எட்டுவருஷமும், பெண்குழந்தைகளே பிறந்துகொண்டிருந்தால் பதினொன்றுவருஷமும் பிரிய மன்னியில் சண்டைக்காரியாயிருந்தால் ஒரு நிமிஷமும் தாமதிக்காமல் உடனே வேறு ஒருவனுடன் நியோகத்தினல் சேர்ந்து குழந்தைகளைப் பெறவேண்டும். அப்படியே புருஷனும் சண்டைக்காரனு யிருப்பானுனல் மனைவி அவனை விட்டு, வேறு ஒருவனுடன் நியோகஞ் செய்து குழந்தையைப்பெற்று கலியாணமான புருஷனுடைய சொத்துக்களைத் தன்குழந்தைக்குச் சேர்க்கட்டும். குலத்தை விருத்தி செய்வதற்கான சுயம்வர கலியாணத்திற்கும் நியோக கல்யாணத்திற்கும் இவ்வளவு அத்தாக்ஷிகள் இருக்கின்றன.

எவ்வண்ணம் ஔஸர்—விவாகமானபுருஷனல் உண்டாகிற **புத்திரன்**-தன்பிதாவினுடைய சொத்துக்களுக்கு உரிமையுள்ளவனுக ஆகிறுனே அவ்வண்ணமே க்ஷேத்ரக்ஞ—நியோகத்தினல் உண்டாகிற புத்ரர்களும்.—

ஸ்திரீகளும் புருஷர்களும் வீர்யத்தையும், ரஜத்தையும் விலைமதிக்கக் கூடாததாகக்கருதவேண்டும். இந்த ஒப்பற்றபதார்த்தத்தை பரஸ்திரீகளுடனுவது, வேசிகளுடனுவது, துஷ்டர்களுடனுவது, கூடி, யார் நாசஞ்செய்கிறுர்களோ அவர்களை மதியீனர்களாக்கருத வேண்டும். ஏனென்றுல் தோட்டக்காரன் மூடனுயினும் தன் தோட்டத்தைவிட்டு வேறு தோட்டத்தில் தன் வித்துக்களைப்பயிர்செய்ய மாட்டான். சாதாரணவித்தை ஒன்று மறியா மூர்க்கன் இவ்விதம்செய்யும் பொழுது சர்வோத்தமமான மனிதபீஜத்தை தான் அநுபவிக்கமுடியாத வயலில் போடுகிறவன் முழுமூடனே. பிராமண கிரந்தத்திலும் தகப்பனுடைய சரீரத்தில் புத்திரன் ஒருபாகமென்றுசொல்லுகிறது.

अङ्गादङ्गात्सम्भवसि हृदयादधिजायसे ।
आत्मा वै पुत्रनामासि स जीव शरदः शतम् ॥ நிரு. 3. 4.

" ஓ குழந்தாய் ! சரீரத்திலிருந்தும் ஹிருதயத்திலிருந்தும் உண்டாகிற வீர்யத்திலிருந்து நீ உண்டானபடியினல் நீ என்னுடைய ஆத்மாவாகிறுய் நீ எனக்கு முன்னல் மரிக்காமலிருப்பாயாக. நூறுவருஷகாலம் பிழைத்திருப்பாயாக. எதிலிருந்து மகாத்மாக்களினுடையவும், சாதுக்களினுடையவும் சரீரமுண்டாகிறதோ, அதைவேசி முதலான கெட்டவயல்களில் உபயோகிப்பதும், கெட்டவிதைகளை நல்லவயல்களில் உபயோகிப்பதும், பெரும்பாபமான காரியமாம்.

வினா.—நாம் ஏன் விவாகம் செய்துகொள்ளவேண்டும்? அப்படி செய்வதினால் இருவர்களுக்குள்ளேயும் கட்டுப்பாடு ஏற்பட்டு கஷ்டம் உண்டாகிறது. ஆகையினால் பரஸ்பரசேயம் இருக்கும் வரையிலேயே புருஷன் பெண்சாதியாக இருந்துவிட்டு, அவ்விசுவாசம் விட்டுப்போகும்போது பிரிந்துவிடுவது நலமன்றோ?

விடை —இவ்விதம் விலங்கு பறவைகள் செய்யுமேயொழிய மானிடர்கள் செய்யமாட்டார்கள். விவாகத்தினுடைய நியமங்கள் தப்பிப்போய் விடுமேயானால் (1) கிரகஸ்தாசிரமத்தினுடைய நற்குணங்கள் நாசமாகி ஒருவருக்கொருவர் பணிவிடை செய்யமாட்டார்கள். (2) விபசாரித்தனம் அதிகரித்து வியாதி, பலஈனம், ஆயுள், இவைகள் குறைந்து எல்லோரும் சீக்கிரம் இறந்து போய் விடுவார்கள். (3) ஒருவருக்கொருவர் மரியாதையற்று இலக்ஷியஞ் செய்ய மாட்டார்கள். (4) பெரியோர்களையாரும் மரியாதைச் செய்யார்கள். (5) வியாதி, பலஹீனம், இவைகளினுடைய விருத்தியினால் குடும்பங்கள் நாசமடைந்து விடும். (6) சொந்தக்காரர்களற்றுப்போய் சொத்துக்களை இழந்துவிடுவார்கள். (7) நீண்ட கார்யங்களைச் செய்ய யாருக்குமதிகாரமிராது. இவைகளையும், இவைகளைப்போலொத்த பாபங்களையும் ஒழிக்கவே விவாகம் எப்பொழுதும் நல்லது.

வினா.—ஒரே கலியாணம் செய்துக்கொள்ள வேண்டுமென்றிருக்கிற படியினால் (அதாவது ஒரு புருஷனுக்கு ஒரேமனைவியும், ஒரு மனைவிக்கு ஒரே புருஷனும்) நாள்பட்டவியாதிகளிலிருந்து மனைவி வருந்திக்கொண்டிருந்தால் புருஷனும், புருஷன் தீராவியாதிக்காரனாயிருந்தால் மனைவியும் என்னச்செய்வார்கள்? ஏனென்றால் இருவரும் இளம்பருவத்திலிருக்கிறபடியினால் அவர்களை அவர்கள் அடக்கிக்கொள்ளமுடியாது.

விடை.—இதற்குப்பதில் நியோக கலியாணத்தில் சொல்லியாய்விட்டது. மனைவி கர்பவதியாயிருக்கும்பொழுது ஒரு வருஷம் வரையில் புருஷன் சம்போகத்தை நிறுத்தச் சக்தியற்றவனாய் இருந்தால், அப்பொழுது (ஒரு விதவையுடன்) நியோகஞ்செய்து குழந்தைகளைப் பெறலாம். ஆனால் ஒருக்காலமும் வேசிகளுடன் சேரவாவது, விபசாரித்தனமாவதுசெய்யக்கூடாது. கூடுமானவரையில் அடைய முடியாததை அடையவும், அடைந்ததைக்காப்பாற்றவும், காப்பாற்றினதை விருத்திசெய்யவும் விருத்திசெய்ததை உலக க்ஷேமத்திற்காகச்செலவழிக்கவும் ஒருவன் பிரயத்தனப்படவேண்டும். மேற்சொன்னபிரகாரம் அவரவர்களுடைய குலதர்மங்களை உற்சாகத்துடன் சரிவரச் செய்து தர்மமான காரியங்களைச்செய்வதினாலேயே தன்னுடைய உடல் ஆவிகளைச்செலுத்திப் பொருளையும் செலவிடவேண்டும். தன் தாய்தகப்பன் மாமன் மாமி இவர்களை வணங்கி சிநேகிதன் அயலார் அரசன் வித்வான், வைத்தியன், சத்புருஷன் இவர்களை நேசித்து, துஷ்டர்களையும் அதர்மம் செய்கிறவர்களையும் அலக்ஷியஞ்செய்து அதாவது வெறுத்து அவர்களை முன்னுக்க்குகொண்டு வருவதிலேயுமே ஒருவன் பாடுபடவேண்டும். தன்னுடைய

சந்ததிகளுக்கு கற்பிக்கிறதிலேயும், நல்ல பயிற்சியைக் கொடுக்கிறதிலேயுமே பணங்களையும் பதார்த்தங்களையும் செலவிட்டு பூர்ணவித்வானுக்க ஒருவன் முயலவேண்டும். பரமானந்தத்தைக் கொடுக்கிற மோக்ஷத்தை அடைய வேண்டிய காரியங்களையே செய்யவேண்டும்.

இவ்விதமான சுலோகங்களை எப்பொழுதும் பிரமாணமாகக்கருதக் கூடாது.

पतितोऽपि द्विजः श्रेष्ठो न च शूद्रो जितेन्द्रियः ।
निर्दुग्धा चापि गौः पूज्या न च दुग्धवती खरी ॥

"எவ்விதம் பால்கொடுக்கும் கழுதையைவிட பால் கொடாமலிருக்கும் பசுவே மேலானதோ, அவ்விதமே நல்லகர்மங்களைச்செய்கிற சூத்திரனைவிட கெட்டகர்மங்களைச்செய்யும் பிராமணன் மேல்"

अश्वालम्भं गवालम्भं संन्यासं पलपैतृकम् ।
देवराच्च सुतोत्पत्तिं कलौ पञ्च विवर्जयेत् ॥

கீழ்க்கண்டவைகளை இக்கலியுகத்தில் செய்யக்கூடாது. (1) அஸ்வமேத யாகம். (2) கோமேதம். (3) சந்நியாசத்தை கைக்கொள்ளல். (4) பிதுர்களுக்கு மாமிசபிண்டம் தருதல் (5) நியோகம்.

नष्टे मृते प्रव्रजिते क्लीवे च पतिते पतौ ।
पञ्चस्वापत्सु नारीणां पतिरन्यो विधीयते ॥

கீழ்க்கண்ட ஐந்து ஆபத்து சந்தர்ப்பங்களில் ஒரு விதவை இரண்டாவது புருஷனை அடையலாம். (1) புருஷன் எங்கேயாவது போய், போனவிடம் தெரியாமலிருந்தால் (2) இறந்துபோய்விட்டால் (3) சந்நியாசியாய் விட்டால் (4) புருஷத்தனமில்லாமலிருந்தால் (5) ஜாதிப்பிரஷ்டம் செய்துவிட்டால்.

மேற்சொன்ன கற்பிதமான சுலோகங்களைப் பராசரஸ்மிருதியில் காணலாம். துஷ்டகர்மங்களைச்செய்கிற பிராமணன், நல்லகர்மங்களைச்செய்கிற சூத்திரனை விட மேலென்று சொல்லுவதைக்காட்டிலும் அநியாயமானவும், அதர்மமானவும், பக்ஷபாதமுமான வார்த்தை வேறு ஏதாவதுண்டா? இடையர்களால் பசுக்கள் காப்பாற்றப்படுகிறதுபோல் வண்ணான்களால் கழுதைக் காப்பாற்றப் படுகிறதில்லையா? அதுவுமன்னியில் இந்த உதாரணம் சரியானதல்ல. பிராமணனும், சூத்திரனும் மனிதப் பிறப்பாயிருக்க, கழுதையும், பசுவும் வேறு பிறப்பாயிருக்கிறது. தாரதம்யம் ஒன்றுக்கொன்று ஏற்காதபடியினால் இது வித்வான்களால் எவ்விதம் உண்மையானதாகக் கருதப்படும். குதிரையாகமும், பசு யாகமும், வேதவிருத்தமாயிருக்கிறபடியினால், கலியுகத்தில் தடுக்கப்பட்டு ஏன் வேத விரோதமாயிருக்கக்கூடாது. இக்கலியுகத்தில் இவைகள் நீச காரியமாக தள்ளிவைக்கப்பட்டிருக்கும்பொழுது, மீதியான மூன்றுயுகங்களிலேயும் அது செய்யப்பட்டு வந்திருக்கவேண்டும். ஆனால் தர்மமே நியாயமாக இருந்த

அந்நாட்களில் இக்கெட்டகாரியங்கள் பழக்கத்திலிருந்து வந்ததென்பது முடியாதகார்யம். இன்னும் சந்நியாசாசிரமம் வேதாதி சாஸ்திரானுகூலமாயிருக்கிறபடியினால் அதைக் கண்டிப்பது காரணமற்றது. மாம்சம் தள்ளப்பட்டு எப்பொழுதிருந்ததோ அது எக்காலமும் நிஷேதனந்தான். தேவரத்தினல் (நியோகம்) புத்திரோத்பத்திசெய்வது வேதம் முதலானவைகளுக்குச் சரியாயிருக்கும்பொழுது இந்தச்சுலோகம் செய்தவர் எனிப்படி வீணுகக் கத்துகிறார். புருஷன் தேசசஞ்சாரங்களுக்குச் சென்றிருக்குங்காலத்தில், மனைவி வேறுபுருஷனுடன் நியோகம் செய்துகொண்டால், தன் கலியாணமான புருஷன் திரும்பிவந்தவுடன் அவள் யாருடைய மனைவியாகிருள்? அவள் முதல் புருஷனுடைய மனைவி என்று சொல்லப்படுமேயானல் அதை நாங்கள் நம்புவோம். ஆனல் பராசரஸ்ம்ருதியில் அதற்கு ஆதாரம் ஒன்றுமில்லையே. ஸ்திரீ ஒருவளுக்கு ஆபத்காலங்கள் ஐந்துதானு? ஐந்துக்குமேலிருக்கிறதே. அவைகளில் கொஞ்சமாவன:—

(1) புருஷனுடைய தீராவியாதி.

(2) இருவருக்கும் ஏற்படும் மனஸ்தாபம் முதலானவைகள். இம்மாதிரி சுலோகங்களை எவ்விதம் நம்புதலாகும்?

**வினு** — நல்லது பராசர் சொல்லுவதில் உங்களுக்கு நம்பிக்கையில்லையா.

**விடை:**—எவ்வளவு பெரியவராயிருக்கப்பட்டவர் சொன்னபோதிலும் வேதவிரோதமாயிருக்கிறவைகள் நம்பத் தகுந்ததல்ல. மேலும் இவைகள் பராசரர் சொன்னதல்ல, இது **பிரம்மோ** வாசா (சொன்னர்) வசிஷ்ட உவாசா ராமோ உவாசா, சிவஉவாச, விஷ்ணுஉவாச, என்பவைகளைப்போலிருக்கின்றன. இம்மாதிரி உலகமறிந்தவர்களுடைய பெயரை (பிரம்மா, விஷ்ணு, வசிஷ்டர், ராமர், சிவன், தேவி முதலானவர்கள்) வைத்துப் புஸ்தங்கள் எழுதுவதின் தாத்பர்யம் என்னவென்றால், எல்லோரும் இதை வாங்கிப்படித்து, எழுதினவருக்கும் பணம் அதிகமாக கிடைக்கும் என்பதே யாகும். ஆகையினல் இப்புத்தகங்களிலிருப்பவைகளெல்லாம், ஒன்று சேராத அனர்த்தங்களால் நிறைந்திருக்கின்றன. ஸ்ம்ருதிகளுக்குள் மனு ஒன்றே, இடையிலெழுதப்பட்டுள்ள சுலோகங்களைத் தவிர, வேதானுகூலமாயிருக்கிறது. பொய்க் கிரந்தங்கள் யாவற்றையும் இம்மாதிரியாகவே எண்ண வேண்டியது.

**வினு:**—கிரகஸ்தாசிரமம் எல்லாவற்றையும்விட உயர்ந்ததா? தாழ்ந்ததா?

**விடை:**—அவர்கள் செய்யும் கர்மங்களைப்போல், எல்லாம் பெரியதாகிறது.

**यथा नदीनदाः सर्वे सागरे यान्ति संस्थितिम् ।**
**तथैवाश्रमिणः सर्वे गृहस्थे यान्ति संस्थितिम् ॥** மனு 6. 90.

பெரியநதி சிறியநதி எல்லாம் எவ்விதம் சமுத்திரத்தில் போய்ச் சேர்ந்து ஸ்திரமடைகிறவரையில் நிறிந்தலைகிறதோ, அவ்விதமே, கிரகஸ்தாசிரமத்

தில் ஸ்திரத்தை அடைகிறார்கள். கிரகஸ்தாசிரம மன்னியில் எந்த ஆசிரமங்களும் சரிவர நடக்கிறதில்லை

**यथा वायुं समाश्रित्य वर्त्तन्ते सर्वजन्तवः ।**
**तथा गृहस्थमाश्रित्य वर्त्तन्ते सर्व आश्रमाः ॥** மனு 3. 77.

வாயுவினால் சகல ஜீவப்பிராணிகளும் வசிப்பதுபோல் கிரகஸ்தாசிரமத்தினால் சகல ஆசிரமங்களுமிருக்கிறது. ஏனென்றால் மீதி மூன்று ஆசிரமங்களுக்கும் தினம் அன்னமளித்துக்காப்பற்றுகிறது கிரகஸ்தாச்ரமமே.

**यस्मात्त्रयोप्याश्रमिणो दानेनान्नेन चान्वहम् ।**
**गृहस्थेनैव धार्यन्ते तस्माज्ज्येष्ठाश्रमो गृही ॥** மனு 3. 78.

சிலசமயங்களில் இதை ஜயேஷ்டர் என்று அழைப்பதுண்டு. சகல வியவகாரங்களுக்கும் இது ஆதாரமாயிருக்கிறது.

**स संधार्यः प्रयत्नेन स्वर्गमक्षयमिच्छता ।**
**सुखं चेहेच्छता नित्यं योऽधार्यो दुर्बलेन्द्रियैः ॥** மனு 3. 79.

ஆகையினால் மோக்ஷத்தையும், உலகசுகத்தையும் விரும்புகிற யாவரும் கிரகாசிரமவிதிகளை அநுசரிக்கவேண்டும். பலஹீனமற்ற இந்திரியங்களை உடையவர்களும், பயந்தவர்களும், இந்த ஆசிரமத்தை நடத்த யோக்யமானவர்களல்ல.

இவ்வுலகில் சம்பந்தப்பட்ட யாவையும் இவ்வாசிரமத்திலிருந்தே உண்டாகிறது. இவ்வாசிரமம் இல்லாவிடில் சந்ததிகள் எங்கிருந்து வரும்? சந்ததிகளில்லாவிடில், மீதிமூன்று ஆசிரமங்கள் (பிரமசர்யம், வானப்பிரஸ்தம், சந்நியாசம்) எங்கிருந்து வரும்? எவன் கிரகஸ்தாசிரமத்தைத் தூஷிக்கிறானோ அவன் தூஷிக்கத்தகுந்தவன். எவன் ஸ்துதிக்கிறானோ அவன் ஸ்துதிக்கத்தகுந்தவன் மனைவி புருஷன் இருவரும் பரஸ்பரப்பிரேமையுடன் கூடினவர்களாயும், கற்றுணர்ந்தவர்களாயும், புருஷார்த்திகளாயும், சம்சாரவிஷயங்கள் யாவற்றையும் அறிந்தவர்களாயும் இருந்தால் ஒழிய ஆனந்த மேற்படாது. இதினால் நாம் முன்னமேயே சொன்ன பிரமசர்யமும், ஸ்வயம்வரமும் இந்தக் கிரகஸ்தாசிரம சுகங்களுக்கு முக்கியகாரணங்களாகும்.

இவ்வத்தியாயத்தில், வீட்டிற்குத்திரும்புதல், கலியாணம்செய்துகொள்ளல் முதலானவைகளைப்பற்றி சொன்னோம். அடுத்ததில் வானப்பிரஸ்தம், சந்நியாசம் இவைகளைப்பற்றிச் சொல்லுவோம்.

நான்காவது அத்தியாயம்
முற்றிற்று.



## ஐந்தாவது அத்தியாயம்.

### வானப்பிரஸ்த சந்நியாச ஆசிரம விதிகள்.

**ब्रह्मचर्याश्रमं समाप्य गृही भवेत् गृही भूत्वा**
**वनी भवेद्वनी भूत्वा प्रव्रजेत् ॥** சதபத. 14.

பிரமசரியாசிரமத்தைக் கைக்கொண்டு நடந்தபின்னர் கிரகஸ்தாசிரமம், வானப்பிரஸ்தாசிரமம், சன்னியாச ஆசிரமம் இவைகளை முறையே கொள்ளுதல் மனிதர்களுக்கு ஏற்ற விதியாகும்.

**एवं गृहाश्रमे स्थित्वा विधिवत्स्नातको द्विजः ।**
**वने वसेत्तु नियतो यथावद्विजितेन्द्रियः ॥** மனு. 6. 1.

பிரமசரியாசிரமத்தைக்கடந்து கிரகஸ்தாசிரமத்தை முறையுடன் நடத்துபவர்களே, பிராமண க்ஷத்திரிய வைசியர்களாகிய **துவிஜர்கள்** ஆவார்கள். பின்னர் உறுதியுடனும் மனத்தூய்மையுடனும் வானப்பிரஸ்தாசிரமத்தை சரியே நடத்த வேண்டும். அதாவது, ஐம்புலன்களை அடக்கியாளப் பழகுதலேயாம்.

**गृहस्थस्तु यदा पश्येद्वलीपलितमात्मनः ।**
**अपत्यस्यैव चापत्यं तदाऽरण्यं समाश्रयेत् ॥** மனு. 6. 2.

தன்தலைமயிர் நரைப்பதையும், தோல் தளர்வதையும் பிள்ளைக்குக் குழந்தைகள் பிறப்பதையும் பார்த்தபின்னரே வனம் புகவேண்டும்.

**संत्यज्य ग्राम्यमाहारं सर्वं चैव परिच्छदम् ।**
**पुत्रेषु भार्यां निक्षिप्य वनं गच्छेत्सहैव वा ॥** மனு. 6. 3.

சுவையுள்ள ஆகாராதிகளையும் அழகான உடைகளையும் நகரபோகங்களையும் விட்டு, பத்தினியைப்பிள்ளையிடம் ஒப்புவித்து விட்டோ அல்லது கூடவே அழைத்துக்கொண்டோ வனம் செல்லவேண்டும்.

**अग्निहोत्रं समादाय गृह्यं चाग्निपरिच्छदम् ।**
**ग्रामादरण्यं निःसृत्य निवसेन्नियतेन्द्रियः ॥** மனு. 6. 4.

அக்கினிஹோத்திரத்திற்கு வேண்டிய சாமான் முதலானவைகளை ஒன்று விடாமல் எடுத்துக்கொண்டு நகரத்தைவிட்டகன்று ஐம்புலன்களையடக்கும் சக்தியையுடையவனாய், ஆரணியத்தை அடையவேண்டும்.

**मुन्यन्नैर्विविधैर्मेध्यैः शाकमूलफलेन वा ।**
**एतानेव महायज्ञान्निर्वपेद्विधिपूर्वकम् ॥** மனு. 6. 5.

பலவித தான்யம், அன்னம், காய்கறி, கந்தமூலபதாதிகள், பூமியிலுண்டாகும் இவைகளைக்கொண்டு *பஞ்சமகாயாகங்களைச்செய்து அதிதிகளை வரவேற்றுக் கொண்டு, தானும் அதைக்கொண்டே ஜீவிக்கவேண்டும்.

**स्वाध्याये नित्ययुक्तः स्याद्दान्तो मैत्रः समाहितः ।**
**दाता नित्यमना दाता सर्वभूतानुकम्पकः ॥** மனு. 6. 8.

படிக்கிறது, படிக்கச்செய்கிறதிலேயே மனதை ஊன்றினவனும், ஜயிக்கப்பட்ட ஆத்மாவை உடையவனும், எல்லோருக்கும் நண்பனும், ஐம்புலன்களை அடக்குகினவனும் வித்தையாகிற தானத்தைச் செய்கிறவனும், எல்லோரிடத்திலும் தயையுள்ளவனும், ஒருவனிடத்திலிருந்து ஒன்றையும் பெற்றுக்கொள்ளாதவனும் இருந்துகொண்டு காலத்தைக் கழிக்க வேண்டும்.

**अप्रयत्नः सुखार्थेषु ब्रह्मचारी धराशयः ।**
**शरणेष्वममश्चैव वृक्षमूलनिकेतनः** மனு. 6. 26.

தன் சரீரத்திற்கு அதிக பாடுபடாமலும், பிரமசாரியாய் அதாவது மாதர்களுடன் பேசாமலும் பழகாமலும், தனக்குப் பிரியமான பொருள்களிலோ, அல்லது தனது சொந்த மனிதர்களிடத்திலோ, மனதை செலுத்தாதவனும், மரத்தடியில் வசிக்கவேண்டும்.

**तपःश्रद्धे ये ह्युपवसन्त्यरण्ये शान्ता विद्वांसो भैक्षचर्यां चरन्तः । सूर्य-**
**द्वारेण ते विरजाः प्रयान्ति यत्रामृतः स पुरुषो ह्यव्ययात्मा ॥** முண் 1. 2. 11.

வனத்தில் தவம் தருமம், முதலியவைகளை அனுஷ்டித்துக்கொண்டும், சத்தியத்தைச்சாதனஞ்செய்து கொண்டும், பிச்சை எடுத்துக் காலத்தைக் கழிக்கும் சாந்த புருஷர்களான வித்வான்கள், பாவங்களினின்றும் நீங்கினவனும், நிர்மலமாயும் பிராணாதாரமாயும், பிறப்பு இறப்புகளிலிருந்து நீங்கினவனும் இருக்கும் பரமாத்மாவை அடைந்து நித்திய சுகத்தை அனுபவிக்கிறார்கள்.

**अभ्यादधामि समिधमग्ने व्रतपते त्वयि ।**
**व्रतञ्च श्रद्धां चोपैमीन्धे त्वा दीक्षितो अहम् ॥** யஜுர். 20. 24.

வானப்பிரஸ்தனுக்குரிய விதிகளாவன:— "நான் அக்கினியில் ஹோமம் செய்து தீக்ஷையைப்பெற்று சத்தியாசரணம், சிரத்தை முதலியவைகளை அடைவேன், என்றும் உருதிப்பாட்டைவைத்துக்கொண்டு வானப்பிரஸ்தானவன் பற்பல தபசின் ஆசனங்கள், சற்சங்கம், யோகப்பியாசம், நற்யோசனையினால் ஞானம், பரிசுத்தம், முதலியவைகளை அடையவேண்டும். பிறகு சந்நியாச ஆசிரமத்தை விரும்பினால் தன் பத்தினியைப் பிள்ளையிடம் ஒப்புவித்து விட்டு சந்நியாசத்தை அடையவேண்டும். இவையே வானப்பிரஸ்தாசிரம விதிகளாகும்.

*முன் அத்தியாயத்தில் கூறியுள்ளபடி.

சந்நியாச ஆசிரமம்.

**वनेषु च विहृत्यैवं तृतीयं भागमायुषः ।**

**चतुर्थमायुषो भागं त्यक्त्वा सङ्गान् परिव्रजेत् ॥** மனு 6. 33.

வாழ்நாட்களில் மூன்றாவது பாகத்தில் அதாவது ஐம்பதாவது வயது முதல் எழுபத்தி ஐந்தாவது வரையில் வானப்பிரஸ்தனுயிருந்த பின்னர் நான்காவது பாகத்தில் இவ்வுலகைத் துறந்து சந்நியாசியாகவேண்டும்.

வினு:—கிரகஸ்தாசிரமம், வானப்பிரதாசிரமம், இவ்விரண்டையும் விட்டு சந்நியாசாசிரமத்தை அடைகிறவனுக்குப்பாபமுண்டா? இல்லையா?

விடை.—இருந்தாலும் இருக்கலாம். இல்லாமலும் போகலாம்.

வினு.—இருவிதமாயும் எவ்விதம் இருக்கக்கூடும்?

விடை.—பிரமசர்யாசிரமத்தினின்று சந்நியாச ஆசிரமத்தைக் கொள்பவன், பின்னர் விலைமாதர் வலையில் சிக்குவானேயானல் பெரும் பாபியாவான். உறுதியுடன் மாதர் வலையில் சிக்காதிருப்பவன் மாகானுவான்.

**यदहरेव विरजेत्तदहरेव प्रव्रजेद्वनाद्वा गृहाद्वा ब्रह्मचर्यादेव प्रव्रजेत् ॥** பிராமண.

எத்தினத்தில் வைராக்கியமுண்டாகிறதோ அத்தினத்திலேயே வீட்டிலிருந்தாவது கானகத்திலிருந்தாவது சந்நியாசத்தை எடுத்துக்கொள்ள வேண்டும்.

ஆகவே சந்நியாசாசிரமத்தை அடைவதற்கு மூன்று மார்க்கங்கள் உண்டு. முதலாவது மேற்சொன்னபடி எடுத்துக்கொள்வது (அதாவது மூன்று ஆசிரமத்தையும் முறையே கடந்தபிறகு) இரண்டாவது கிரகஸ்தனுயிருந்து சந்நியாசத்தைப் பெறுவதே. மூன்றாவது பிரமசரியத்திலிருந்து நேராகச் சந்நியாசத்தை அடைவதே. இம்மார்க்கத்தில் ஐம்புலன்களையும் மனதையும், சுவாதீனம் செய்துகொண்டு, சகல சிற்றின்ப ஆசைகளிலிருந்தும் நீங்கினவனுய் பரோபகாரம் செய்வதிலேயே கண்ணும் கருத்துமாய் இருக்கும் பூர்ண ஞானியே நேராகப்பிரவேசிக்கலாம்.

இம்மாதிரியான வழியையே வேதமும் ஆதரிக்கிறது.

**नाविरतो दुश्चरितान्नाशान्तो नासमाहितः ।**

**नाशान्तमानसो वापि प्रज्ञानेनैनमाप्नुयात् ॥** கடோபநி. 2. 23.

சந்நியாசியாகவிருந்தபோதிலும், ஒழுக்கமற்றவனும், சிற்றின்பப்பற்றுக் கொண்டவனும், யோகநிலைபெருதவனும், மனவமைதி இல்லாதவனும் இறைவனை யறிபவும் அடையவும் மாட்டான்.

**यच्छेद्वाङ्मनसी प्राज्ञस्तद्यच्छेद् ज्ञान आत्मनि ।**

**ज्ञानमात्मनि महति नियच्छेत्तद्यच्छेच्छान्त आत्मनि ॥** கடோபநி. 3. 13.

சந்நியாசாசிரமத்தை நடத்திவரும் சந்நியாசி அகர்மச் செயல்களில் மனேவாக்கால் சம்பந்தபடாதிருந்து, மனதையும் வாக்கையும் ஆத்மஞான வளர்ச்சியில் செலுத்தட்டும். இறைவனிடத்து தன்னுடைய ஞானமயமான ஆத்மாவை உபயோகித்து அவரோடு ஒன்றுகட்டும்.

परीक्ष्य लोकान् कर्मचितान् ब्राह्मणो निर्वेदमायान्नास्त्यकृतः कृतेन ।
तद्विज्ञानार्थं स गुरुमेवाभिगच्छेत् समित्पाणिः श्रोत्रियं ब्रह्मनिष्ठम् ॥
முண். 2. 12.

எல்லாவிதமான உலகபோகங்களும் நம் கர்மங்களினுலேயே ஏற்படுகிறதென் பதைக்கண்டு சந்நியாசியாயுள்ள பிராமணன் வைராக்கியத்தை அடையவேண் டும். ஆக்கப்படாதவரான பரமாத்மாவை அற்பகர்மத்தினுல் அடையமுடி யாது. ஆகையினுல் பொருளுடன் வேதத்தை அறிந்தவனும் பரமேசுவ ரனை அறிகிறவனுயிருக்கும் குருவை அடைந்து எல்லாச்சந்தேகங்களையும் ஒருவன் தீர்த்துக்கொள்ளவேண்டும். ஆனல் அடியிற்கண்டவர்களை அடைய லாகாது.

अविद्यायामन्तरे वर्त्तमानाः स्वयं धीराः पण्डितम्मन्यमानाः । जङ्घन्यमा-
नाः परियन्ति मूढा अन्धेनैव नीयमाना यथान्धाः ॥ अविद्यायां बहुधा
वर्त्तमाना वयं कृतार्था इत्यभिमन्यन्ति बालाः । यत्कर्मिणो न प्रवेदयन्ति
रागात् तेनातुराः क्षीणलोकाश्च्यवन्ते ॥ மண். 2. 8. 9.

அஞ்ஞானத்தில் ஆழ்ந்துத்தன்னைத்தானே பண்டிதனென்றும் புத்தி மான் என்றும் நினைத்திருக்கிறவனிடம் போகக்கூடாது. மூடத்தன்மையையும் அற்ப எண்ணங்களையும் கொண்டுள்ள குருடர்களுக்கு குருட்டுதலைவர்களாக அவர்கள் துக்கக்கிணற்றில் விழுகிருர்கள். அநேக அவித்தைகளில் உழன்று கொண்டு, சந்தோஷமாயும் திருப்தியாயும் இருக்கிறோம் என்று நினைத்துத் தெரிந்தவர்கள் போல் பாவனைசெய்து கொண்டு அகங்காரத்துடன் கூடின பால்யபுத்தியுள்ள இவர்கள் கடவுளை அறிகிருர்களில்லை. மற்றவர்களுக்குக் கடவுளுடைய ஞானத்தை இவர்கள் எங்ஙனம் எடுத்துக் காட்டுவார்கள்? சஞ்சல முள்ளவர்களாகையினுல் பிறப்பு இறப்பு துன்பங்களில் விழுந்துக் கொண்டே இருக்கிருர்கள்.

वेदान्तविज्ञानसुनिश्चितार्थाः संन्यासयोगाद्यतयः शुद्धसत्वाः । ते ब्रह्मलो-
केषु परान्तकाले परामृताः परिमुच्यन्ति सर्वे ॥ மண். 2. 6.

ஆகையினுல் வேதாந்தம் அல்லது வேதமந்திரங்களுடைய ஞானம் முதலியவைகளை பொருளுடன் தெரிந்து படித்து சத்தியத்தை அறிந்தும், ஆசாரத்தை உணர்ந்தவனுயும் சந்நியாசயோகத்தினுலும், காட்சியாலும் பரி சுத்தமடைந்த அந்தரணங்களுடன் கூடின சந்நியாசியானவன் பரமே சுவரனது மோக்ஷ இன்பத்தை அடைகிருன். முக்தி இன்பம் நிறைந்த வுடன் இவ்வுலகத்திற்குத்திரும்புகிருன். முக்தியன்னியில் துக்கம் நாசமடை யாது, ஏனென்ருல்.

न वै सशरीरस्य सतः प्रियाप्रिययोरपहतिरस्त्यशरीरं वावसन्तं न प्रियाप्रिये
स्पृशतः ॥ சாந். 8. 12.

தேகத்தை ஆடையாகக் கொண்டிருப்பதிலேயே ஆத்மாசுகதுக்கங்களிலிருந்து விலகியிருக்கமுடியாது. தேகபந்தத்தை ஒழித்து ஆத்மாமுக்தியின் ஸ்வரூபமாகிறது. இறைவனுடன் கலக்கிறது, எனவே உலக இன்பதுன்பங்கள் ஆத்மாவை பாதிக்கிறதில்லை.

**पुत्रैषणायाश्च वित्तैषणायाश्च लोकैषणायाश्च व्युत्थायाथ भिक्षाचर्यं चरन्ति ॥**

சதபத 14. 5. 2. 1.

உலகாசைகளான, கீர்த்தி, செல்வம், கௌரவம் புத்திரவாஞ்சை இவைகளை வெறுத்து சந்நியாசிகள் பிச்சை எடுத்து உண்டு இரவும் பகலும் மோக்ஷ சாதனத்திலேயே காலத்தைக்கழிக்கவேண்டும்.

**प्राजापत्यां निरूप्येष्टिं तस्यां सर्ववेदसं हुत्वा ब्राह्मणः प्रव्रजेत् ॥** சதபதபிராம.

**प्राजापत्यां निरूप्येष्टिं सर्ववेदसदाक्षिणाम् ।**

**आत्मन्यग्नीन्समारोप्य ब्राह्मणः प्रव्रजेद् गृहात् ॥** மனு. 6. 38.

பிரஜாபதி அதாவது பரமேசுவரனை அடைவதற்காக **இஷ்டி** அதாவது யாகம்செய்து, அதில் **யக்ஞோபவீதம் தலைமுடி** முதலியசின்னங்களை அறுத்து எறிந்துவிட்டு, ஐந்து அக்னிகளுக்காகவே ***பஞ்சப்பிராணங்களை (பிராணன், அபானன், வியானன், உதானன், சமானன்)** ஆரோபணம்செய்து (மாற்றிக் கொண்டு) பிராமணன் வீட்டை விட்டு வெளியாகி சந்நியாசியாக வேண்டும்.

**यो दत्वा सर्वभूतेभ्यः प्रव्रजत्यभयं गृहात् ।**

**तस्य तेजोमया लोका भवन्ति ब्रह्मवादिनः ॥** மனு. 6. 39.

பூதப்பிராணி எல்லாவற்றிற்கும் அபயதானங் கொடுக்கிறவனே வீட்டை விட்டு வெளிப்பட்ட சந்நியாசியாகிறான். பரமேசுவரனால் ஆக்கப்பட்ட வேதத்தின் தர்மத்தைப்பரவச்செய்து பிரகாசம்செய்கிறான். இப்படிவேத தர்மவித்தைகளை உபதேசம் செய்யும் சந்நியாசி ஒளிமயமான முக்திஸ்வரூபத்தை அடைகிறான்.

**வினா:**—சந்நியாசிகளுடைய தர்மம் (மதம்) யாது ?

**விடை:**—தர்மப்பிரகாரம் பக்ஷபாத மின்றி நியாயத்தை அனுசரிப்பது; சத்தியத்தைக்கிரகிப்பது; அசத்தியத்தை விடுவது; வேதத்திலுள்ளபடி ஈசுவரனுடைய ஆக்ஞைக்குக் கீழ்ப்படிவது; பரோபகாரம், உண்மை பேசுதல். எல்லா ஆசிரமத்தவர்களுக்கும் மனிதர்களுக்கும், மேற்கண்டவைகள் ஒரே மாதிரியான தர்மமாகும். ஆனால் அடியிற்கண்ட தர்மங்கள் சந்நியாசிகளுக்குச் சிறந்தவைகளாம்.

**दृष्टिपूतं न्यसेत्पादं वस्त्रपूतं जलं पिबेत् ।**

**सत्यपूतां वदेद्वाचं मनःपूतं समाचरेत् ॥** மனு. 6. 46.

---

* இவைகளின் விளக்கத்திற்கு ஒன்பதாவது அத்தியாயத்தைப் பார்க்கவும்.

சந்நியாசிகளுடைய சிறந்த தர்மங்கள்.

வழியிற் செல்லும்போது இங்குமங்கும் திரும்பிப்பார்க்காமல் கீழே பூமியின் பேரில் கவனத்தைச்செலுத்திக் கொண்டே போகவேண்டும். ஜலத்தைப்பானஞ்செய்வதற்கு முன்னால் வடிகட்டவேண்டும். எப்பொழுதும் உண்மையே பேசவேண்டும். காரியங்களைச் செய்யுமுன்னால் யோசனைச்செய்யவேண்டும். இப்படி உண்மையைக் கைப்பற்றவேண்டும்.

क्रुद्ध्यन्तं न प्रतिक्रुध्येदाक्रुष्टः कुशलं वदेत् ।
सप्तद्वारावकीर्णां च न वाचमनृतां वदेत् । மனு. 6. 48.

உபதேசஞ்செய்யும் பொழுதாவது அல்லது விவாதஞ்செய்யும் பொழுதாவது யாவரேனும் கோபித்தால் சந்நியாசி பதிலுக்குப் பதில்கோபித்துக் கொள்ளக்கூடாது. தான் தூஷிக்கப்பட்ட போதிலும் அவனுக்கு வேண்டிய நன்மைகளைச் சொல்லவேண்டும்.

ஏழு துவாரங்களின் வழியே பரவும் *வார்த்தைகளை ஒருநாளும் பொய்யாக்கக்கூடாது.

अध्यात्मरतिरासीनो निरपेक्षो निरामिषः ।
आत्मनैव सहायेन सुखार्थी विचरेदिह ॥ மனு. 6. 49.

தன்னுடைய ஆத்மாவிலும் பரமாத்மாவிலும் ஸ்திரமான நம்பிக்கை வைத்து மதுபானம் மாம்சாகாரங்களை விட்டு இன்பதுன்பங்களில் கலவாது விலகிநின்று ஆத்மஞான வளர்ச்சியுடன், உலகில் தர்மம், ஞானம் இவைகளைப் பரவச்செய்வதே கடமை எனக்கொள்ளல்வேண்டும்.

क्लृप्तकेशनखश्मश्रुः पात्री दण्डी कुसुम्भवान् ।
विचरेन्नियतो नित्यं सर्वभूतान्यपीडयन् ॥ மனு. 6. 52.

கேசம், தாடி, நகம், மீசை, இவைகளை வெட்டி காஷாயம், தகுந்த பாத்திரம், தண்டம், இவைகளைத் தாங்கி, ஆத்மவளர்ச்சியுடையவனாய் ஜீவராசிகளுக்கு இம்சை செய்யாமல் எங்கும் சஞ்சாரஞ் செய்யவேண்டும்.

इन्द्रियाणां निरोधेन रागद्वेषक्षयेण च ।
अहिंसया च भूतानाममृतत्वाय कल्पते ॥ மனு. 6. 60.

ஐம்புலன்களின் பிரவிருத்தியை தடுத்து ராகத்துவேஷங்களைவிடுத்து எப்பிராணிகளிடத்தும் பகையில்லாதவனாய் மோக்ஷத்தைப்பெற முயலவேண்டும்.

दूषितोऽपि चरेद्धर्मं यत्र तत्राश्रमे रतः ।
समः सर्वेषु भूतेषु न लिङ्गं धर्मकारणम् ॥ மனு. 6. 66.

*வாய் ஒன்று, மூக்கு துவாரங்கள் இரண்டு, இருகண்கள், இருகாதுகள், ஆக இவ்வேழு துவாரங்களின் வழியாகவே விஷயசம்பந்தமான வைகள் மனதில் ஊன்றுகின்றன இதனாலேயே மேற்கண்ட வாயில்களில் வார்த்தைகள் பரவியிருக்கிறது என்று பெயர்.

தூஷணை, பூஷணைகளால் பாதிக்கப்படாமலும் ஜீவராசிகளிடத்தில் பக்ஷபாதம் காட்டாமலும் மனிதஜாதியிடம் தர்மமும், ஞானமும், அறிவும் வளரச் செய்யும் வழியைக் கைப்பற்றவேண்டும். தண்டம், கமண்டலம், காஷாயம் முதலான அடையாளங்களைக் கொள்வதினாலே தான் தர்மத்தை நிறைவேற்றுவதாக எண்ணக்கூடாது. மனிதன் முதலான பிராணிகள் அனைவற்றிற்கும், தர்மோபதேசம் செய்தலே மதமாகக் கொள்ளவேண்டும்.

फलं कतकवृक्षस्य यद्यप्यम्बुप्रसादकम् ।
न नामग्रहणादेव तस्यवारि प्रसीदति मனு. 6. 67.

கலங்கலான ஜலம், தேத்தாங் கொட்டையின் சேர்க்கையால் தெளிந்து பரிசுத்தமாகிறதே யல்லாது தேத்தாங்கொட்டையைச் சேர்க்கவேண்டும் என்ற வார்த்தையால் பரிசுத்தமாகிறதில்லை. எனவே அடுத்துச்செய்யும் அப்பியாசமும் ஒருவனைப்பரிசுத்தப்படுத்துமே யல்லாது, வெறும்பேச்சால் எதுவும் நடவாது.

प्राणायामा ब्राह्मणस्य त्रयोपि विधिवत्कृताः ।
व्याहृतिप्रणवैर्युक्ता विज्ञेयं परमन्तपः ॥ மனு. 6. 70.

பிர்மவித்தான சந்நியாசி ஓங்கார பூர்வமாய் வியாகிருதிகளினால் விதிப்பிரகாரம் கூடுமானவரையில் பிராணாயாமஞ் செய்யவேண்டும். ஆனால் ஒருபொழுதும் மூன்றுக்குக் குறைய லாகாது. சந்நியாசிகளுடைய முக்கியமான தபசு இதுவேயாகும்.

दह्यन्ते ध्मायमानानां धातूनां हि यथा मलाः ।
तथेन्द्रियाणां दह्यन्ते दोषाः प्राणस्य निग्रहात् ॥ மனு 6. 71.

எவ்விதம் காய்ச்சுவதினாலும், உருக்குவதினாலும் உலோகங்களின்களிம்பு விட்டுப் போய் விடுகிறதோ அவ்விதமே, மூச்சு விடுதலினுடைய நிர்ணயத்தினால் மனது முதலிய இந்திரியங்களின் தோஷங்கள் நாசமாகிவிடுகிறது.

प्राणायामैर्दहेद्दोषान् धारणाभिश्च किल्बिषम् ।
प्रत्याहारेण संसर्गान् ध्यानेनानीश्वरान् गुणान् ॥ மனு. 6. 72.

ஆகையினால் சன்னியாசிகள் பிராணாயாமத்தினால், ஆத்மா, அந்தக்கரணம், இந்திரியங்களின் தோஷங்களையும், தாரணத்தினால் (பரமாத்மாவின்தியானம்) பாபங்களையும், பிரத்யாஹாரத்தினால் ஐம்புலன்களுடைய தோஷங்களையும், தியானத்தினால் அனீசுவர குணங்களை (சுகதுக்கங்கள்) அதாவது வித்தையின்மையில் ஏற்படும் பாபங்களையும் முறையே நாசஞ்செய்யவேண்டும்.

उच्चावचेषु भूतेषु दुर्ज्ञेयामकृतात्माभिः ।
ध्यानयोगेन संपश्येद् गतिमस्यान्तरात्मनः ॥ மனு. 6. 73.

யோகாப்பியாசத்தினால், எல்லாவற்றிலும் பரவியிருக்கும் பரமாத்மாவினுடையசெயல்களைப்பார்க்கட்டும். அப்படியே தன் ஆத்மாவையும் பார்க்கட்டும். இவைகளை யோகியாயில்லாதவர்களும் வித்தையில்லாதவர்களும் பார்ப்பது மிகவும் கஷ்டம்.

अहिंसयेन्द्रियासङ्गैर्वैदिकैश्चैव कर्मभिः ।
तपसश्चरणैश्चोग्रैस्साधयन्तीह तत्पदम् ॥ மனு. 6. 75.

எல்லா பூதப் பிராணிகளிடத்திலும் விரோதமில்லாமல், இந்திரியவிஷயங்களைவிட்டு வேதோக்த கர்மத்தினாலும், அதிக உக்கிரமான தபசை ஆசிரயப்பதினாலும் இவ்வுலகில் மோட்சபதவியை முன் சொன்ன சந்நியாசிகளைத் தவிர வேறு யாரும் அடையமுடியாது. அடையச்செய்யவும் முடியாது.

यदा भावेन भवति सर्वभावेषु निस्पृहः ।
तदा सुखमवाप्नोति प्रेत्य चेह च शाश्वतम् ॥
चतुर्भिरपि चैवैतैर्नित्यमाश्रमिभिर्द्विजैः ।
दशलक्षणको धर्मः सेवितव्यः प्रयत्नतः ॥ மனு. 6. 80. 81.

உலக ஆசையை விட்டும் கருமத்துக்குறியவும், பொருளுக்குறியவுமான பதார்த்தங்களில் பரிசுத்தமான எண்ணங்களையும் எல்லாவஸ்துக்களிலும் அனுதாபத்தை உடைத்தாயிருக்கும் சந்நியாசி இறந்த பிறகும் நிலைநிற்கிற உண்மையான ஆனந்தத்தை அடைகிறான். இதனாலேயே, பிரமசாரி, கிரகஸ்தன், வானப்பிரஸ்தன், சந்நியாசிகளுக்கு ஏற்றது யாதெனில் பிரயத்னத்துடன் அடியிற்கண்ட பத்து லட்சணங்களோடு கூடிய தர்மத்தைத் தொடரவேண்டும்.

धृतिः क्षमा दमोऽस्तेयं शौचमिन्द्रियनिग्रहः ।
धीर्विद्या सत्यमक्रोधो दशकं धर्मलक्षणम् ॥ மனு 6. 91.

1 திருதி:—எப்பொழுதும் தைரியவானயிருப்பது.

2 க்ஷமா:—நிந்தை ஸ்திதி மரியாதை, அவமரியாதை, ஹானி, லாபம் முதலான துக்கங்களைச் சகிக்கும் தன்மையுடனிருப்பது.

3 தமா:—மனதை அதர்மத்திலிருந்து விலக்கி தர்மமயமாக்குவதே. அதர்மமான எண்ணத்தை எள்ளளவும் நினைப்பதும் கூடாது.

4 அஸ்தேயம்:—பராதீனமான சொத்துக்களைக் கபட மோசத்தினாலோ வேதங்களுக்கும், நடவடிக்கைகளுக்கும் விரோதமான வேறு எந்த வழிகளினாலோ அபகரித்தல்.

5 சௌசம்:—ராகத்துவேஷம் முதலானவைகளை விடுத்து அகசுத்ததினும், ஸ்நானபானதிகளால் புறச் சுத்தத்துடனும் இருத்தல்.

6. இந்திரிய நிக்கிரகம் :—அதர்மமான காரியங்களிலிருந்து இந்திரியங்களை அடக்கி தர்மத்திலேயே செலுத்துவது.

7. தீ:—மயக்கத்தை உண்டுபண்ணுகிறதும், புத்தியை நாசஞ்செய்கிறதுமான ஆகாராதிகளைவிட்டுப் பரிசுத்தமான பதார்த்தங்களைக் கொண்டு சத்புருஷர்களுடன் சேர்ந்து யோகாப்பியாசத்தின் மூலம் புத்தியை விருத்தி செய்து கொள்ளுதல்.

8. வித்தை:— அணுவிலிருந்து, பரமேசுவரன் வரையிலுள்ள பதார்த்தங்களினுடைய ஞானத்தையும், அதைச்சரியாய் உபயோகிப்பதும், அதாவது உள்ளதை உள்ளவாறு அறிகிறது, மனதாலெப்படியோ அப்படியே வாக்காலும், வாக்காலெப்படியோ அப்படியே காரியத்தினுலும் செய்வதே வித்தை. இதற்கு மாறானது அவித்தை,

9. சத்திய:— உள்ளதை உள்ளவாறே அறிவதும், அதை அப்படியே சொல்லுவதும், செய்வதும்.

10. அக்ரோதம்— கோபம் முதலான கெடுதல்களைவிட்டு, சத்தியம் முதலான குணங்களைக் கைப்பற்றிக்கொள்வது.

பக்ஷபாதமன்னியில் நியாயத்துடன் இப்பத்து நியமங்களையும் எல்லோரும் நடத்தவேண்டும். வேதப்பிரகாரம் இவைகளை நடத்தி, பிறருக்கு அறிவித்து அவர்களையும் இவ்வாறு நடக்கச்செய்வது சந்நியாசிகளுடைய முதல் தர்மமாகும்.

**अनेन विधिना सर्वांस्त्यक्त्वा संगाञ्शनैः शनैः ।**
**सर्वद्वन्द्वविनिर्मुक्तो ब्रह्मण्येवावतिष्ठते ॥** மனு. 6. 92.

சந்தோஷம், கோபம், படிப்படியாய் பிறவிக்கெடுதல்கள், சோம்பல் முதலானவைகளை விட்டுச் சந்நியாசி ஒருவர் பிரம்மத்தை அடைகிறார். எல்லா ஆசிரமத்திலிருக்கிறவர்களுக்கு நன்னடவடிக்கைகளையுடைய சத்தியத்தை நிச்சயஞ்செய்து அதர்ம நடவடிக்கைகளைத் தொலைக்க வற்புறுத்திச் சகலசந்தேகங்களையும் தீர்ப்பதுமே சந்நியாசிகளுடைய முதல் தர்மமாகும்.

வினு.—பிராமணர்கள் மாத்திரம் சந்நியாசத்தைப் பெறலாமா? அல்லது க்ஷத்திரியர்களும் பெறலாமா ?

விடை.—பிராமணர்களே அடையலாம். பூர்ணவித்வானும் தார்மீகர்களாயும், பரோபகார சிந்தை உடையவர்களாயும் இருப்பவர்களே பிராமணர்கள். பூர்ணவித்தையன்னியிலும், தர்மமன்னியிலும் இருக்கிற மனிதர்களுடைய சந்நியாசத்தினுல் உலகத்திற்கு உபகாரம் ஒன்று மேற்படாது. ஆகையினுல் பிராமணர்களுக்கே சந்நியாசத்திற்கதிகாரமிருக்கிறது. வேறுயாருக்குமில்லையென்கிற பழமொழியும் உண்மையாகிறது. மனுகூட என்ன சொல்லுகிறாரென்றால்.

एष वोऽभिहितो धर्मो ब्राह्मणस्य चतुर्विधः ।
पुण्योऽक्षयफलः प्रेत्य राजधर्मान् निबोधत ॥ மனு. 6. 97.

ஓ ரிஷிகளே ! பிரமசர்யம், வானப்பிரஸ்தம், கிரகஸ்தம், சந்நியாசமுமாகிற நான்கு ஆசிரமங்களை அடைவதே பிராமணர்களுடைய கடமை. சந்நியாசத்தினுல் இவ்வுலகில் புண்ய ஸ்வரூபத்தையும், மறித்தபிறகு அழிவில்லா ஆனந்தத்தையும் அடைகிறுர்கள். இதற்குப்பிறகு க்ஷத்திரியர்களுடைய கடமையை என்னிடமிருந்து அறியுங்கள்.

சந்நியாசத்தை அடைய பிராமணர்களுக்கே முக்கியமாய் அதிகாரமிருக்கிறதென்று இதிலிருந்து ஏற்படுகிறது.

வினு:—சந்நியாசி ஆசிரமம் எதற்கு ?

விடை:— அவயவங்களில் தலை எவ்விதம் முக்கியமோ அப்படியே ஆசிரமங்களில் சந்நியாசம். ஏனென்றுல், இதன்னியில் வித்தை தர்மம் இவைகளை விருத்தி செய்யமுடியாது. இதர ஆசிரமத்திலிருக்கிறவர்களுக்கு வித்தையை கற்றுக்கொள்வதினுலும் குடும்ப காரியங்களினுலும் தற்காரியத்தை ஆசிரயிக்கிறதினுலும், இதில் பிரவேசிக்ககாலமிராது. பக்ஷபாதங்களை ஒழித்து நடப்பது இதர ஆசிரமங்களினுல் செய்யமுடியாத காரியம். முக்தியில் கவனஞ்சென்றவர்களாய் உலகத்திற்கு உபகாரம் சந்நியாசியால் செய்யமுடிவதைப்போல் இதர ஆசிரமத்திலிருக்கிறவர்களால் செய்யமுடியாது. ஞானத்தினுல், அதை விருத்தி செய்யச் சந்நியாசிக்கு அவகாசமிருப்பதுபோல் வேறு ஆசிரமத்திலிருக்கிறவர்களுக்கு அவகாசமில்லை. பிரமசர்யத்திலிருந்து நேராகச்சந்நியாசத்தை அடைந்தவர்கள் உண்மையான ஞானத்தைப்பெற்றுப்பரவச்செய்து உலகத்தைமேம்படச்செய்வதுபோல் கிரகஸ்தம், வானப்பிரஸ்தம், இவைகளிலிருந்து சந்நியாசத்தை அடைந்தவர்கள் செய்யமுடியாது.

வினு:—மானிடவர்க்கத்தை விருத்திசெய்வதே கடவுளினுடைய இஷ்டமாகையினுல் அதைச்செய்யாமல் சந்நியாசத்தை எடுத்துக்கொள்வது ஈசுவராக்ஞைக்கு விரோதமானது. கிரகஸ்தாசிரமம் எடுத்துக் கொள்ளாமற்போனுல் சந்ததிகளை உற்பத்திசெய்யமுடியாது. சந்நியாச ஆசிரமம் முக்கியமானபடியினுல் எல்லோரும் அதையே விரும்புவார்களேயானுல் மானிடவர்க்கம் நசித்துப்போய் விடுமே ?

விடை:—விவாகம் செய்து கொண்ட போதினும், பலபேர்களுக்குப் மக்கட்பேறு உண்டாகிறதில்லை. அப்படி உண்டானபோதிலும் இறந்துபோய் விடுகிறது. இவை ஈசுவராக்ஞைக்கு விரோதமானதல்லவா ? ஆனுல் ஒருவர் சொல்லுகிறபடி **यत्ने कृते यदि न सिध्यति कोऽत्र दोषः** முயற்சி செய்து காரியம் கைக்கூடாமற்போய் விட்டால் தோஷம் எங்கிருந்தேற்படும் ? என்று நீங்கள் கூறுவீர்களேயானுல் கிரகஸ்தாசிரமத்தில் எவ்வளவோபேர்கள் சண்டையிட்டு

ட்டாண்டு விடுகிறார்கள். இதனால் சமூகத்திற்கு எவ்வளவு நஷ்டமேற்படுமென்று தாங்கள் வினவுகிறோம்? அபிப்பிராயபேதங்களினால் ஏற்படும் கெடுதல்கள் அநேகம். சந்நியாசிகள் வேதோக்தமாய் தன்னுடைய உபதேசத்தினால், அபிப்பிராய பேதத்தால் பிளக்கப்பட்ட மனிதர்களையும், தேசங்களையும் தார்மிஷ்டர்களாகச் செய்துசேர்த்துவைத்து லக்ஷக்கணக்கான மானிடர்களைக் காப்பாற்றுகிறார்கள். அப்பொழுது அவர்கள் ஆயிரக்கணக்கான கிரகஸ்தர்களுக்குச் சரியாய் மானிடவர்க்கத்தை விருத்திசெய்வோர்களாகிறார்கள். மேலும் எல்லோரும் சந்நியாசத்தை அடையமுடியாது. ஏனென்றால் எல்லோராலும் சிற்றின்பங்களை மீறமுடியாது. சந்நியாசிகளுடைய உபதேசத்தினால் தார்மிகர்களாகிற மனிதர்கள் அவர்களுடைய புத்திரர்களாகக்கொள்ளத் தகுந்தவர்கள்.

வினா:—தாங்கள் செய்யவேண்டிய கடமைகள் ஒன்றுமில்லை என்று சந்நியாசிகள் சொல்லுகிறார்கள்? உலகமாயையில் கஷ்டப்படுவானேன்? அன்ன வஸ்திரங்களை உடுத்திக்கொண்டு ஆனந்தத்திலிருப்பானேன்? அவித்தியாரூபமான சம்சாரத்தில் அவஸ்தைப்படுவானேன்? தங்களைத்தாங்களே பிரம்மாவாக நினைத்துக்கொண்டு அவர்கள் சந்தோஷமாயிருக்கிறார்கள். யாராவது அவர்களைக்கேழ்ப்பார்களேயானால் அவர்களையும் அவ்வண்ணமே சொல்லுகிறார்கள். அதாவது நீயும் பிரம்மம். உன்னை பாபம், புண்ணியம் இவைகள் பாதிக்காது. ஏனென்றால் சீதளம் உஷ்ணம்போன்ற சரீரத்தினுடையவும் பசி, தாகம்போன்ற பிராணனுடையவும் சுகதுக்கம்போன்ற மனிதனுடையவும் குணங்களேயாகும், இவைகள். உலகம் மாயை. உலகத்திலிருக்கப்பட்ட கார்யங்கள் எல்லாம் படைப்பினுடையது. ஆகையினால் அவைகளில் சிக்கிக்கொள்வது புத்திஹீனமான காரியமாகும். கொஞ்சகொஞ்சமாய் ஏற்படும் பாபபுண்ணியங்கள் தேகத்தினுடையவும் இந்திரியத்தினுடையவுமேயல்லாது ஆத்மாவினுடையதில்லை. அவர்களிம்மாதிரி உபதேசஞ்செய்கிறார்கள். நீங்களோ சந்நியாசிதர்மங்களைக்குறித்து வேறு விதமாகச் சொல்லுகிறீர்கள். இதில் நம்பக்கூடிய உண்மை எது?

விடை:— நல்லகாரியங்களைச்செய்வது அவர்கள் கடமையில்லையா? மனு என்னசொல்லுகிறார் "வைதிகஸ்வகர்மபி" வேதாநுகூலமான தர்மங்களைச்செய்வதினால் சந்நியாசிகள் அழியாச்சுகத்தை அனுபவிக்கிறார்கள். ஆகையினால் சந்நியாசிகளுக்கும் வைதீககாரியங்கள் அவசியமென்று ஏற்படுகிறது. அன்னபானாதி வஸ்திரங்களன்னியில் அவர்கள் காலந்தள்ளமுடியுமா? முடியாவிடில், அவர்கள் நல்லவேலைகளைவிட்டு விடுவதினால் ஏற்படும் பாபத்திற்காளாகமாட்டார்களா? கிரகஸ்தர்களிடமிருந்து அன்ன பானாதிகளைப் பெற்றுக் கொண்டு அவர்களுக்குத் திரும்ப ஒன்றும் செய்யாமலிருந்தால் சந்நியாசிகள் பாபத்திற்காளாகமாட்டார்களா? கண்ணும் காதுமிருந்தும் பார்க்காமலும் கேழ்க்காமலுமிருப்பது எப்படி பிரயோசனமற்றதோ, அப்படியே வேதம் முதலான சத்திய சாஸ்திரங்களை நன்கறியாதும், சத்யோபதேசம் செய்யாதும் இருக்கும் சந்நியாசிகள் பிரயோஜனமற்றவர்கள். மேலும் அவர்கள் இவ்வுலகத்திற்கு வீண்பாரமாயிருக்கிறார்கள். இவ்வுலகம் மாயை அவித்

யாரூபமான இந்தச்சம்சாரத்தில் ஏன்வீண் அவஸ்தைப்பட வேண்டும் என்று சொல்லுகிறவர்களே பாபமும் பொய்யும் ரூபமெடுத்துவந்த மனிதர்களா கிறார்கள். பாபவளர்ச்சிக்கு அவர்களே காரணர்களாகையினால் அவர்கள் பெரும்பாபியாகிறார்கள். சரீரம் முதலான அவயவங்களினால் செய்யப்படு எல்லாகாரியங்களிலும் ஆத்மாவினாலேயே நடக்கிறதினால் ஆத்மாவே அதன் பலாபலன்களை அடைகிறது. தங்களுடைய ஜீவனைப் பிரம்மாவென்று கருது கிறவர்கள் அவித்தையாகிய நித்திரையில் தூங்குகிறார்கள். ஏனென்றால் எல்லையுள்ளதும், ஞானத்திலும் குறைந்தது ஜீவன். பிரம்மவோ சர்வவியாபி எல்லாமறிந்தவர், அழிவற்றவர், சுத்தமானவர். முக்தமானவர், இயற்கையினால் வேறானவர். ஜீவனோ சில சமயங்களில் கட்டுப்பட்டதாய், சில சம யங்களில் தன்னுடைய காரியங்களுக்குள்ளானது. சர்வவியாபியாயும் சர்வக் ஞராயும் பிரம்மா இருக்கிறபடியினால் அவர் பயத்திற்கும் சந்தேகத்திற்கும் உள்ளாகமாட்டார். ஜீவனோ சில சமயங்களில் மூடத்தனமாயும் சிலசமயங் களில் புத்திசாலித்தனமாயுமிருக்கிறது. பிரம்மா ஜனனமரணத்திலிருந்து அவஸ்தைப்படுகிறதில்லை. ஜீவனே அவஸ்தைபடுகிறது. ஆகையினால் அவர் களுடைய உபதேசம் பொய்யானது.

வினா.—சகல காரியங்களையும் ஒழித்துவிட்டபடியினால் சந்நியாசிகள் அக்கினியையும் உலோகங்களையும் தொடக்கூடாது. இது உண்மையா? பொய்யா?

விடை.—பொய்யே. பிரம்மத்தை அறிந்தும், அப்பரிசுத்த சுபா வத்தையடைந்தும் **सम्यङ् नित्यमास्ते यस्मिन् यद्वा सम्यङ् न्यस्यन्ति दुःखानि कर्माणि येन स सन्यासः स प्रशस्तो विद्यते यस्य स संन्यासी** அதனால் கெட்டகாரியங்களை விட்டு சிறந்தகாரியங்களை உடையவர்களாக எவர் இருக் கிறார்களோ அவர்களே சந்நியாசிகள். நற்கிரியைகளைச்செய்து கெட்டகாரியங் களை நாசம் செய்கிறவர்களே சந்நியாசிகள்.

வினா.— கற்பிக்கிறதும், உபதேசிக்கிறதும் கிரகஸ்தனுடையவேலையான படியினால் சந்நியாசிகள் எதற்காக?

விடை.—சத்தியோபதேசம் எல்லா ஆசிரமத்திலிருக்கிறவர்களும் செய்ய லாம். பக்ஷாபாதமன்னியில் சந்நியாசிகளுக்குச்செய்ய அவகாசமிருப்பது போல் கிரகஸ்தர்களுக்குக்கிடையாது. பிராமணர்களுடைய கடமை கற்பிக் கிறதும் உபதேசிக்கிறதும் என்பது உண்மையே (ஸ்திரீகளுக்கு ஸ்திரீகளும். புருஷர்களுக்கு புருஷர்களும் உபதேசிக்கவேண்டும்)யாத்திரைசெய்யசந்நியாசி களுக்கு அவகாசமிருப்பதுபோல் ஒருக்காலும் கிரகஸ்தர்களுக்குக்கிடையாது. பிராமணன் வேதவிரோதமான காரியங்களைச் செய்வானேயானால் சந்நியாசி களே அவனைக்கண்டிக்கக்கூடும். இக்காரணத்தினாலேயே சந்நியாசி ஆசிரமம் அவசியமாகிறது.

**வினா:**—"ஏக ராத்திரிம் வசேத் கிராமே" என்றபடி ஒரு இரவுக்குமேல் சந்நியாசி ஒரு இடத்தில் வசிக்கக்கூடாது? இது உண்மையா?

**விடை:**—ஒருவிதத்தில் இது உண்மை. ஏனென்றால் ஒரே இடத்தில் அதிக நாள் வசிப்பதினால் சந்நியாசி உலகத்திற்கு அதிக உபகாரஞ் செய்யமுடியாது. அந்தவிடத்தினுடைய (வஸ்துக்களிலும் ஜனங்களிடத்திலும்) ஆசையும், வெறுப்பும் அதிகமாய் அந்த ஸ்தலத்தை விரும்பக்கூடும். ஒரே இடத்திலிருந்துகொண்டு அதிகம்செய்யவேண்டும் என்றிருந்தால் ஆதிகாலத்திய பஞ்சசிக சந்நியாசிகள், ஜனகமகாராஜாவினுடன் மாதக்கணக்காயும் வருஷக்கணக்காயும் இருந்ததுபோல் இருக்கட்டும். மேலும் "ஏகத்ரநரஹண" என்பதும் தற்போதைய வேஷதாரியான மதாசாரியார்களால் ஏற்படுத்தபட்டவை. ஏனென்றால் அதிக நாள் சந்நியாசி ஒரே இடத்தில் வசித்தால் அவர் வஞ்சகங்கள், சந்நியாசிகளால் வெளியாகிவிடும் என்கிறபயம் இவர்களுக்கு இருந்து வருகிறது.

**यतीनां काञ्चनं दद्यात्ताम्बूलं ब्रह्मचारिणाम् ।**
**चौराणामभयं दद्यात्स नरो नरकं व्रजेत् ॥**

**வினா:**—"சந்நியாசிகளுக்கு சுவர்ணதானஞ் செய்கிறவன் நரகத்தை அடைவான்" என்பது இதன் தாத்பர்யம். இது உண்மையா?

**விடை:**—இதுகூட வர்ணாசிரமவிரோதிகளாலும், சம்பிரதாயத்தை அனுஷ்டிக்கிறவர்களாலும், மதவெறிப்பிடித்தவர்களாலும், பௌராணிகர்களாலும் கட்டப்பட்டவையாகும். ஏனென்றால் சந்நியாசிகளுக்குப்பணம்வந்தால் அவர்களுடைய பொய்யெல்லாம் வெளிவந்து விடுமென்று இவர்களுக்குத்தெரியும். அப்படி வருவதினால் தாங்கள் நஷ்டமடைந்து ஜனங்களைத்தன் பக்கம் சேரச்செய்து கொள்ளமுடியாது. அதுவுமன்னியில் சந்நியாசிகள் இவர்களுடைய ஆதினத்தில் இருக்கிறார்கள். பிக்ஷைமுதலானவைகள் இவர்களுடைய ஆதீனத்திலிருந்தால் சந்நியாசிகள் இவர்களுக்கும் பயப்படுவார்கள். மூர்க்கர்களுக்கும், சுயநலப்பிரியர்களுக்கும் தானங்கொடுப்பது மேன்மையாகக்கருதப் படும்பொழுது சந்நியாசிகளுக்குக்கொடுப்பதினால் கெடுதல் என்ன?

**विविधानि च रत्नानि विविक्तेपूपपादयेत् ॥**

என்று மனுசொல்லுகிறார். விலையுயர்ந்த பல உலோகங்களையும் சுவர்ணங்களையும் சந்நியாசிகளுக்குக்கொடுக்கவேண்டும். மேலும் உங்களால் மேற்சொல்லப்பட்ட சுலோகம் புதிதல்ல. ஏனென்றால சுவர்ணதானஞ்செய்வதினால் ஒருவன் நரகத்தை யடைவானேயானால், வெள்ளி, இரத்தினம், முத்து முதலான பண்டங்களைத் தானஞ் செய்வதினால் சுவர்கத்தை அடைவான்.

**வினா:**—அந்தச்சுலோகம் ஏதோ தப்பினால் மாற்றிச் சொல்லப்பட்டது "யதிஹஸ்தே தனம் தத்யாத்" சந்நியாசியினுடைய கையில் பொருளைக்கொடுப்பவன் நரகத்தை அடைகிறான் என்று சொல்லியிருக்கவேண்டும்.

விடை:—இச்சுலோகமும் அறிவீனத்தால் கற்பனைசெய்து எழுதப்பட்டது. ஏனென்றால் கையில் பணம் கொடுப்பதினால் நரகத்தை அடைவானே யானால் மூட்டை கட்டியாவது, அல்லது பாதத்திலாவது அளித்து சுவர்க்கம் அடையவேண்டாமா? இம்மாதிரிகற்பனைகளை நம்புவது உசிதமல்ல. தன்செலவுக்கு வேண்டிய பணத்திற்குமேல் சந்நியாசி வைத்திருந்தால் அதைத் திருடர்களும் கள்ளர்களும் திருடிவிடுவார்கள் என்கிற பயத்தினால் உலகாசையிலிறங்கி விடுவார். வித்வானாயிருக்கிற ஒருவன் தன் ஆசிரமத்திற்குத்தகாத காரியங்களைச்செய்யமாட்டான். ஏனென்றால் தன் கிரகஸ்தாசிரமத்திலாவது, பிரமசர்யத்திலாவது எல்லாவற்றையும் அனுபவித்துப்பார்த்திருப்பான். பிரமசரியத்திலிருந்து சந்நியாசத்தை அடைகிறவர்களும் வைராக்யத்தினால் மாரமாட்டார்கள்.

வினா:—சிராத்தத்தில் அழைத்தாவது அழைக்காமலாவதுவந்து சந்நியாசி புசித்தால் பிதுருக்கள் நரகத்தில் விழுவார்கள் என்பது உண்மையா?

விடை:—பிதுருக்கள் வருகிறார்களென்பதும், சிராத்தத்தில் செய்யப்படுகிற யாவையும் இறந்தமுன்னோர்களைசேருகிறதென்பதும் வேதத்திற்கும் அறிவிற்கும் விரோதமாயிருக்கிறபடியினால், அது ஆகாதகாரியம். பொய்யான காரியம். சிராத்தத்திற்கு அவர்கள் வராமலிருக்கும்பொழுது யார் விழக்கூடும். அடுத்து அவரவர்களுடைய பாபபுண்ணியப்பிரகாரம் ஜீவன்கள் புனர் ஜென்மமெடுக்கிறபடியினால், அவைகள் எவ்விதம் திரும்பிவரக்கூடும்? ஆகையினால் புராணிகர்களினாலும், பைராகிகளினாலும் இந்த இணையற்ற பொய்க்கற்பனை செய்யப்பட்டது. இறந்தவர்களுக்குச் சிராத்தம் செய்வது வேதம் முதலான சாஸ்திரங்களுக்கு விரோதமானபடியினால், தாங்கள் செல்லுகிறவிடமெல்லாம் சந்நியாசிகள் அதைக்கண்டித்து நிறுத்துவார்களென்பது உண்மை.

வினா.—இந்திரியங்களை அடக்குவது முடியாத காரியமானபடியினால் பிரமசரியத்திலிருந்து சந்நியாசத்தை அடைகிறவர்கள் கஷ்டப்படுவார்கள். ஆகையினால் கிரகஸ்தாசிரமம், வானப்பிரதாசிரமம் இவைகளை அடைந்து கிழவனான பிறகே சந்நியாசத்தைப் பெறுவதுநலமாகும்.

விடை.—இந்திரியங்களை அடக்கமுடியாதவர்கள் பிரமசரியத்திலிருந்து சந்நியாசத்தை எடுத்துக்கொள்ளவேண்டியதில்லை. அவ்விதம் அடக்கக்கூடியவர்கள் ஏன் எடுத்துக்கொள்ளக்கூடாது? விஷயங்களினுடைய கெடுதல்களையும், வீரியரக்ஷணையினால் உண்டாகும் சுகங்களையும் அறிகிறவன் விஷயசுகங்களில் ஒரு நாளும் இச்சை கொள்ளான். அறிவாகிற அனலுக்கு அவனுடைய வீர்யம் விறகாக உபயோகப்படுகிறது. ஆரோக்கியமாயிருக்கிறவன் வைத்தியர்களையும், மருந்துகளையும் விட்டுவிடுவது போல், சத்தியதர்மத்தையும் ஞானத்தையும் பரவச்செய்வதிலேயும், உலக உபகாரத்திலேயுமே சிந்தையுள்ள ஸ்திரீகளும் புருஷர்களும் ஆதிகாலத்திய பஞ்சசிகை கார்கி முதலானவர்களைப்போல் கலியாணத்தை விட்டுவிடுகிறார்கள்.

ஆகையினால் இவ்வுயர்பதவியை அதற்குத்தகுதியானவர்களே அடைய வேண்டும். தகுதியற்றவர்கள் சந்நியாசத்தினால் தன்னைத்தானே கெடுத்துக் கொள்வதுடன் மற்றவர்களையும் கெடுக்கிறார்கள்.

சாம்ராட் (அரசன்) பூலோகாதி பதியாயிருக்கிறது போல் (சந்நியாசிகள்) பரிவ்ராட் பூலோக குருவாய் அதாவது மானிடவர்க்கத்திற்கே குருவாயிருக்கிறார்கள். ஆனால் அரசனொருவன் தன் தேசத்திலும் பந்துக்களிடத்திலுமே மரியாதையைப் பெறுகிறான். சந்நியாசிகளுக்குச்சென்ற விடமெல்லாம் சிறப்பு.

**विद्वत्त्वं च नृपत्वं च नैव तुल्यं कदाचन ।**
**स्वदेशे पूज्यते राजा विद्वान् सर्वत्र पूज्यते ॥**

நான்கு ஆசிரமங்களினுடைய கடமைகளைச்சுருங்கத் திரும்பவுங் கூறுமிடத்து.

வித்தையை கற்றுக்கொள்ளவும், நல்ல பயிற்சியை அடையவும் பலவானுவதற்குமே பிரமசரியமும்,

நல்லவழியில் ஒழுக்கத்தைக் கைகொள்வதற்கு கிரகஸ்தாசிரமமும்.

போஜனசக்தியை விருத்தி செய்வதற்கும், மனச்சிந்தனைக்கும் ஞானவிருத்திக்கும், தபசுக்குமே வானப்பிரஸ்தமும்,

வேதம் முதலான சத்திய சாஸ்திரங்களைப் பரவச்செய்து தர்மச்செய்கைகளைக் கிரகித்துக்கெட்ட செய்கைகளை விட்டு சத்தியோபதேசஞ் செய்வதற்கும், சகலருடைய சந்தேகங்களைத் தீர்ப்பதற்குமே சந்நியாசி ஆசிரமமேயாம். சத்தியதர்மங்களை விருத்தி செய்வதற்கென வைத்திருக்கும் சந்நியாச ஆசிரமத்தினுடைய கடமைகளைச் சரிவர நடத்தாதவர்கள் கெட்டு நரகத்தை அடைகிறார்கள். ஆகையினால் சத்தியோபதேசஞ் செய்வதும், சந்தேகங்களைத்தீர்ப்பதும், வேதம் முதலான சத்திய சாஸ்திரங்களை கற்பிப்பதும், வேதப்பிரகாரம் தர்மத்தை விருத்திசெய்யப் பிரயத்தனஞ்செய்வதும் உலகநன்மைக்காப்பாடுபட்டு வருவதுமே சந்நியாசிகளுக்கு ஏற்ற கடமைகளாகும்.

வினா:—பைராகி, கேஸாவி முதலானவர்களைச் சந்நியாசிகளுடன் சேர்க்கலாமா? கூடாதா?

விடை:—கூடாது. ஏனென்றால் அவர்களிடத்தில் சந்நியாசி ஆசிரமதர்மங்கள் ஒன்றுமே கிடையாது. அவர்கள் வேதவிரோதமான வழிகளில் பிரவேசித்து, தங்கள் மதாச்சாரியர்களுடைய வசனங்களை வேதத்தைக்காட்டிலும் பெரிதுங்கருதுகிறார்கள். தங்கள் மதக்கொள்கைகளைப் பெரிதும் பாராட்டு

கிறார்கள். பொய்யுலகில் மூழ்குகிறார்கள். உலக நன்மைசெய்வதற்குப்பதிலாக பிற்போக்கானவழிகளில் ஜனங்களைப்போகச்செய்து சுயகாரியங்களைத் திருப்தி செய்து கொள்ளுகிறார்கள். இக்காரணங்களினால் அவர்களைச் சந்நியாசி ஆசிர மத்தைச்சேர்ந்தவர்களாகக் கருதக்கூடாது. அவர்களைச் சுயநலக்காரர்க ளென்று அழைத்தலே தகும். இதில் கொஞ்சமும் சந்தேகமில்லை.

வினா:—எவர்கள் தாளே நல்லதர்மத்தைப்பயின்று மற்றவர்களையுமப்படி யே செய்யச்சொல்லி, இஜ்ஜென்மத்திலும், மறு ஜென்மத்திலும் சுகத்தை அனுபவிக்கசெய்கிறார்களோ, அவர்களே தர்மாத்மாக்கள்

சந்நியாசி ஆசிரமத்தினுடைய தர்மத்தைப் பற்றி இதுவரை சுருங்கச் சொன்னோம். அடுத்த அத்தியாயத்தில் இராஜதர்மங்களைப்பற்றி பேசுவோம்.

ஐந்தாவது அத்தியாயம்

முற்றிற்று.





# ஆருவது அத்தியாயம்.

இராஜ தர்மம்

१ राजधर्मान् प्रवक्ष्यामि यथावृत्तो भवेन्नृपः ।
संभवश्च यथा तस्य सिद्धिश्च परमा तथा ॥ மனு. 7. 1.

२ ब्राह्मं प्राप्तेनसंस्कारं क्षत्रियेण यथाविधि ।
सर्वस्यास्य यथान्यायं कर्त्तव्यं परिरक्षणम् ॥ மனு. 7. 2.

முனிவர்கள் மனுவை வினவிய பொழுது அவர் சொல்லுகிருர் "நான்கு வர்ணங்களினுடையதும் நான்கு ஆச்ரமங்களினுடையதுமான கடமைகளைச் சொன்ன பிறகு (1) 'ராஜ தருமத்தை' அல்லது அரசர்களுடைய கடமை முதலானவைகளைச் சொல்லுவோம். அதாவது அரசனுயிருக்கத் தகுந்தவர் யாவர்? அவரை எவ்விதம் தெரிந்தெடுப்பது? அவர் எப்படி 'பரமசித்தியை' அடையலாம்? என்பதேயாகும் (2) புத்தி, ஞானம் தெய்வபக்தி இவைகளினுல் பிராம்மணர்களைப்போல் பரிசுத்தமான க்ஷத்திரியர்கள், நியாயப்பிரகாரம் ராஜ்யத்தை இரக்ஷிக்கட்டும் "எவ்விதமென்றல்;

त्रीणि राजाना विदथे पुरूणि परि विश्वानि भूषथः सदांसि ॥

ரிக். மண் 3. சூக் 38- மந் 6.

(ஈச்வரன் உபதேசஞ் செய்கிருர்) ஆளுகிறவர்களுடையவும், ஆளப்படுகிறவர்களுடையவும், நன்மைக்காக, கல்விச் சபை, தர்ம (சமயம்) சபை, ராஜ சபை என்ற மூன்று சபைகளிருக்கட்டும். அததற்குரிய காரியங்களை விசாரித்து, நிச்சயித்து, எல்லோரையும், வித்தை, சுதந்திரம், தர்மம், நல்ல பயிற்சி, தனம் முதலானவைகளினுல் அலங்கரிக்கட்டும்.

तं सभा च समितिश्च सेना च ॥ அ. கா 15. அனு 2. வ 9. ம 2.

सभ्य सभां मे पाहि ये च सभ्याः सभासदः ॥

அத. கா 19. அனு 7. வ 55. மந் 6.

மூன்று சபைகளும், ராணுவ சபைகளும், சைனியமும் எல்லாம் ஒத்து, தேசத்தின் ஆட்சியை நடத்தட்டும். சபையோர்களைப் பார்த்து அரசன் சொல்ல வேண்டியதாவது ; நியாயப்பிரகாரஞ் செய்யப்பட்ட அந்தந்தச் சபைகளினுடைய நியாயங்களைச் சபா பதிகளும் சபையோர்களும் அடுத்திருக்கட்டும். அதாவது, ஒருவருக்கும் சுயேச்சாதிகாரம் கொடுக்கக் கூடாது. சபா பதியாகிய அரசரும் அதன் அங்கத்தினர்களும் ஒருவருக்

## ஆறாவது அத்தியாயம்.

### இராஜ தர்மம்

१ राजधर्मान् प्रवक्ष्यामि यथावृत्तो भवेन्नृपः ।
संभवश्च यथा तस्य सिद्धिश्च परमा तथा ॥ மனு. 7. 1.

२ ब्राह्मं प्राप्तेनसंस्कारं क्षत्रियेण यथाविधि ।
सर्वस्यास्य यथान्यायं कर्त्तव्यं परिरक्षणम् ॥ மனு. 7. 2.

முனிவர்கள் மனுவை வினவிய பொழுது அவர் சொல்லுகிறார் "நான்கு வர்ணங்களினுடையதும் நான்கு ஆச்ரமங்களினுடையதுமான கடமைகளைச் சொன்ன பிறகு (1) 'ராஜ தருமத்தை' அல்லது அரசர்களுடைய கடமை முதலானவைகளைச் சொல்லுவோம். அதாவது அரசனாயிருக்கத் தகுந்தவர் யாவர்? அவரை எவ்விதம் தெரிந்தெடுப்பது? அவர் எப்படி 'பரமசித்தியை' அடையலாம்? என்பதேயாகும் (2) புத்தி, ஞானம் தெய்வபக்தி இவைகளினால் பிராம்மணர்களைப்போல் பரிசுத்தமான க்ஷத்திரியர்கள், நியாயப்பிரகாரம் ராஜ்யத்தை இரக்ஷிக்கட்டும்" எவ்விதமென்றால்;

त्रीणि राजाना विदथे पुरूणि परि विश्वानि भूषथः सदांसि ॥

ரிக். மண் 3. சூக் 38- மந் 6.

(ஈச்வரன் உபதேசஞ் செய்கிறார்) ஆளுகிறவர்களுடையவும், ஆளப்படுகிறவர்களுடையவும், நன்மைக்காக, கல்விச் சபை, தர்ம (சமயம்) சபை, ராஜ சபை என்ற மூன்று சபைகளிருக்கட்டும். அததற்குரிய காரியங்களை விசாரித்து, நிச்சயித்து, எல்லோரையும், வித்தை, சுதந்திரம், தர்மம், நல்ல பயிற்சி, தனம் முதலானவைகளினால் அலங்கரிக்கட்டும்.

तं सभा च समितिश्च सेना च ॥ அ. கா 15. அனு 2. வ 9. ம 2.

सभ्य सभां मे पाहि ये च सभ्याः सभासदः ॥

அத. கா 19. அனு 7. வ 55. மந் 6.

மூன்று சபைகளும், ராணுவ சபைகளும், சைனியமும் எல்லாம் ஒத்து, தேசத்தின் ஆட்சியை நடத்தட்டும். சபையோர்களைப் பார்த்து அரசன் சொல்ல வேண்டியதாவது; நியாயப்பிரகாரஞ் செய்யப்பட்ட அந்தந்தச் சபைகளினுடைய நியாயங்களைச் சபா பதிகளும் சபையோர்களும் அடுத்திருக்கட்டும். அதாவது, ஒருவருக்கும் சுயேச்சாதிகாரம் கொடுக்கக் கூடாது. சபா பதியாகிய அரசரும் அதன் அங்கத்தினர்களும் ஒருவருக்

கொருவருடைய ஆதீனத்திலிருக்க வேண்டும். இவ்விருதிறத்தினரும் ஜனங்களினுடைய ஆதீனத்திலிருக்க வேண்டும். ஜனங்களும் இவர்களால் இரக்ஷிக்கப்படவேண்டும். இவ்விதமில்லாமற் போகுமேயானால் :

राष्टमेव विश्याहन्ति तस्माद्राष्ट्री विशं घातुकः । विशमेव राष्ट्रायाद्यां करोति तस्माद्राष्ट्री विशमत्ति न पुष्टं पशुं मन्यत इति ॥

சத. காண் 12. பிர 2. பிரா 3. க 7. 8.

பிரஜைகளினுடைய ஆதீனமன்னியில் ஆளுகிறவன் சுயேச்சையாயிருப்பானேயானால், பிரஜைகளை நாசஞ் செய்து விடுவான். தன்னிடம் சர்வாதிகாரமு மிருக்கிறபடியினால், ஜனங்களை அழுத்திக் கொழுத்த மிருகங்களைச் சிங்கம் முதலான மாம்ச பக்ஷணிகள் அடித்து விழுங்குவது போல் விழுங்கியும் விடுவான். அத்தகைய அரசன், வளரும் அதிகாரத்தின் துணையைக் கொண்டு, ஜனங்களைக் கொள்ளையடித்தும், அநீதியான தண்டனைகளை விதித்தும், ஐசுவர்யங்களை அபகரித்தும் வருவான். ஆகையினால் ஒருவரிடமே சுயேச்சாதிகாரம் இருத்தல் கூடாது.

इन्द्रो जयाति न परा जयाता अधिराजो राजसु राजयातै । चर्कृत्य ईड्यो वन्द्यश्चोतसद्यो नमस्यो भव हे

அதர் .கண் 6. அனு 10. வ. 18. ம 1.

ஓ மனிதர்களே! (இஹ) இம்மனித சமுத்திரத்தில் (இந்த்ர:) பரம ஐசுவர்யங்களை உண்டாக்குகிறவராயும், சத்துருக்களை (ஜயாதி) ஜயிக்கக் கூடியவராயும், (ந பராஜயதே) அவர்களால் வெல்ல முடியாதவராயும், (ராஜஸு) அரசர்களில், (அதிராஜ:) சர்வாதிகாரியாய் (ராஜயாதை) விளங்குகிறவராயும், (சக்ருதய:) சபா பதி ஸ்தானத்திற்குத் தகுந்த யோக்ய முள்ளவராயும், (இட்ய:) துதிக்கத்தக்க குணம், கர்மம், ஸ்வபாவம் இவைகளுடன் கூடினவராயும், (வந்தய:) வணங்குவதற்கும், (சோபஸத்ய:) நேசிப்பதற்கும் மரியாதையைப்பெற்றுகொள்ளுவதற்கும் யோக்யமுள்ளவராயும், (நமஸ்ய:) எல்லோராலும் மதிக்கத் தகுந்தவராயும் இருக்கிறவரையே அரசராகவோ அல்லது சபாநாயகராகவோ, நியமிக்க வேண்டும்.

इमन्दे वा असपत्न सुवध्वं महते क्षत्राय महते ज्यैष्ठ्याय महते जानराज्यायेन्द्रस्येन्द्रियाय ॥

யஜுர் அ 9 ம 40

கற்றுணர்ந்த ஓ மனிதர்களே! நியாயத்துடன் கூடினவனும் பக்ஷபாத மன்னியிலும், தேர்ந்த வித்வானும், தேற்சிபடைந்தவனும், சர்வஜன சிநேகிதனும் இருக்கிறவனையே உங்களுடைய அரசனாகவும், ராஜ்யத்தின் தலைவனாகவும், சபா பதியாகவும், ஒரே தொனியுடன் அங்கிகரியுங்கள். இம்மாதிரி செய்வதினாலேயே சர்வாதிகாரம் பெற்று,

எல்லோரையும்விட மேன்மையை அடைந்து ராஜ்யபாரத்தை நடத்தி மேலான சுவையயும் பரம ஐசுவர்யங்களையும் அடைந்து உலகத்தைச் சத்துருக்களிடமிருந்து நீக்கினதாகச் செய்விர்கள்.

स्थिरा वः सन्त्वायुधा पराणुदे वीळू उत प्रतिष्कभे । युष्माकमस्तु
तविषी पनीयसी मा मर्त्यस्यमायिनः ரிக் ம 1. சூத் 39, ம 2.

ஈச்வரன் என்ன உபதேசஞ் செய்கிறுரென்றால் :— சண்டைக் கருவிகளும் (துப்பாக்கிகள், முறுக்குக்குழல்கள், வில் அம்பு, முதலானவைகள்) வெடிமருந்து முதலான சண்டைச் சாமான்களும், உங்களுடைய சத்துருக்களை எதிர்த்து வெல்லும் படியான சக்தியை உடையதாகவும், பலமுள்ளதாகவுமிருக்கட்டும். உங்களுடைய சைனியமும் புகழத்தகுந்ததாயும், எக்காலமும் சத்துருக்களை ஜயிக்கக் கூடியதாயு மிருக்கட்டும். ஆனல், மேற் சொன்னவைகள் இழிவானவர்களினுலும், அநியாயஞ் செய்கிறவர்களினுலும் அடைய முடியாது. அதாவது மனிதர்கள் தர்மவான்களாய் இருக்கும் வரையிலேயே அவர்கள் ராஜாங்க விஷயங்களில் பெரியவராயிருப்பார்கள். கெட்ட கர்மங்களை அனுசரித்து அநியாய கார்யங்களைச் செய்கிறவர்கள் அடியோடு நசித்துப் போய்விடுவார்கள். ஆகையினுல் "மகா வித்வான்களை" வித்வசபை அங்கத்தினர்களாகவும், தர்மிக வித்வான்களை தர்மசபை அங்கத்தினர்களாகவும் பூஜிக்கத்தக்க தரும புருஷர்களை ராஜசபை அங்கத்தினர்களாகவும் தேசமானது தேர்ந்தெடுக்கட்டும். இவைகளெல்லாவற்றிலும் சர்வோத்தமமான குணம் கர்மம் ஸ்வபாவம் இவைகளுடன் கூடின மகான்களான புருஷர்களையே ராஜசபையின் தலைவராகச் செய்யட்டும். இம்மூன்று சபைகளும் நல்ல சட்டங்களை ஏற்படுத்த, அப்பிரகாரமே எல்லோரும் நடக்கட்டும். சர்வஜன சௌகர்யங்களைக் கோருகிற நியாயங்களுக்கு எல்லோரும் கீழ்ப்படிந்தும், தன் சௌகர்யங்களைக் கோருகிற நியாயங்களில் சுயேச்சையுடனுமிருக்க வேண்டும்.

சபைத்தலைவர்

इन्द्राऽनिलयमार्काणामग्नेश्च वरुणस्य च ।
चन्द्रवित्तेशयोश्चैव मात्रा निहृत्य शाश्वतीः ॥ மனு 7-4.

மின்சாரத்தைப்போல் சக்தியுள்ளவராயும், பிராணனைப்போல் தன் பிரஜைகளிடத்தில் பிரியமுள்ளவராயும், பிரர்களுடைய மனதை அறியக்கூடியவராயும், "நியாயாதிபதியைப்போல்" பக்ஷபாதமற்று நியாயமாயிருக்கிறவராயும், சூர்யனைப்போல் நியாயம், தர்மம், வித்தை இவைகளை விளக்கி ஜனங்களுடைய அஞ்ஞானத்தைப் போக்கிப் பிரகாசிக்கச்செய்கிற

வராயும், அக்னியைப் போல் துஷ்டர்களை நாசஞ்செய்கிறவராயும், சிறைச் சாலாதிபதியைப் போல் மோசக்காரர்களையும் துஷ்டர்களையும் அடக்குகிற வராயும், சந்திரனைப் போல் சிரேஷ்ட புருஷர்களை சந்தோஷிக்கச் செய்கிற வராயும், பொக்கிஷக்காரனைப் போல் தன் பொக்கிஷத்தை பூர்ணமாய் வைத்துக் கொண்டிருக்கிற வராயும்:

तपत्यादित्यवच्चैष चक्षूंषि च मनांसि च ।
न चैनं भुवि शक्नोति कश्चिदप्यभिवीक्षितुम ॥ மனு 7. 6.

அச்சத்தில் சூரியன் ஜனங்களை வைத்திருப் பதுபோல் சக்தியுள்ளவரா யும், கம்பீரமானவராயும், தன்னை எதிர் நோக்கும் படியான சக்தியை உடைய, யாவரும் இல்லாமலிருக்கிறவராயும் சபா பதி இருத்தல்வேண்டும்.

सोऽग्निर्भवति वायुश्च सोऽर्कः सोमः स धर्मराट् ।
स कुवेरः स वरूणः स महेन्द्रः प्रभावतः ॥ மனு 7. 7.

அக்னி, வாயு, சூரியன், சந்திரன் நியாயாதிபதி, பொக்கிஷாதி பதி, இவர்களைப் போலவும், சிறைச்சாலாதிபதியைப் போல் துஷ்டர்களை அடக்குகிறவரும், சக்தியில் மின்சாரத்தைப் போலிருக்கிறவருமே சபா பதியாய் விற்றிருக்க யோக்யமுள்ளவர்.

அரசன்.

स राजा पुरुषो दण्डःस नेता शासिता च सः ।
चतुर्णामाश्रमाणां च धर्मस्य प्रतिभूः स्मृतः ॥ மனு 7. 17.

சட்டமே (தண்டனை) உண்மையான அரசன், நியாயாதிகாரி, தருமஞ்செலுத்துபவன். சட்டமே நான்கு வருணத்திற்கும் நான்கு ஆச்ரமத்திற்கும் ஜாமீன். சட்டமே பிரஜைகளுக்கு நியாயமேற்படுத்தி ஆளுகிறது.

दण्डः शास्ति प्रजाः सर्वा दण्ड एवाभिरक्षति ।
दण्डः सुप्तेषु जागर्ति दण्डं धर्मं विदुर्बुधाः ॥ மனு 7. 18.

சட்டமே அவரவர்களுடைய இரக்ஷகன். சகல பிரஜைகளும் தூங்கும் பொழுது சட்டமே விழித்துக் கொண்டிருக்கிறது. ஆகையினாலேயே புத்திமான்கள் சட்டத்தைத் தர்மமாகப் பாவிக்கிறார்கள்.

समीक्ष्य स धृतः सम्यक सर्वा रञ्जयति प्रजाः ।
असमीक्ष्य प्रणीतस्तु विनाशयति सर्वतः ॥ மனு 7. 19.

சரியாகச் செலுத்துங்கால் "சட்டமே" எல்லோரையும் சந்தோஷ முள்ளதாகச் செய்கிறது. தப்பாய், அதாவது நியாயம் தப்பி நடத்தினால் அது அரசனையும் நாசஞ்செய்கிறது.

दुष्येयुः सर्ववर्णाश्च भिद्येरन्सर्वसेतवः ।
सर्वलोकप्रकोपश्च भवेद्दण्डस्य विभ्रमात् ॥ மனு 7. 24.

சட்டத்தைச் சரிவர நடத்தாவிட்டால் அனைவராலும் தூஷிக்கப் பட்டு, ஒழுங்கீனம் சமுகத்தில் ஏற்படுகிறது.

यत्र श्यामो लोहिताक्षो दण्डश्चरति पापहा ।
प्रजास्तत्र न मुह्यन्ति नेता चेत्साधु पश्यति ॥ மனு 7. 25.

எவ்விடத்தில், கறுப்பு வர்ணத்துடனும், சிவந்த கண்களுடனும் கூடின பயங்கரமான புருஷனைப்போல் பாபங்களை விசாரித்து (சட்டமானது) நாசஞ்செய்கிறதோ, எவ்விடத்தில் சட்டத்தைச் செலுத்துகிறவர்கள் பக்ஷபாதமன்னியில் வித்வானுயிருக்கிறார்களோ, அவ்விடத்தில் பிரஜைகள் மோகத்தில் சிக்கிக் கொள்ளாமல் ஆனந்தத்துடனிருக்கிறார்கள்.

तस्याहुः संप्रणेतारं राजानं सत्यवादिनम् ।
समीक्ष्यकारिणं प्राज्ञं धर्मकामार्थकोविदम् ॥ மனு 7. 26.

சத்தியத்தையே பேசியும், யோசித்தும், புத்திமானுயும், தர்மம் அர்த்தம், காமம் இவைகளை அடைவதிலே நிபுணராயிருக்கிறவரையே சட்டத்தை நடத்த யோக்ய முள்ளவர்களாக வித்வான்கள் கருதுகிறார்கள்.

तं राजा प्रणयन्सम्यक् त्रिवर्गेणाभिवर्द्धते ।
कामात्मा विषमः क्षुद्रो दण्डेनैव निहन्यते ॥ மனு 7. 27.

சட்டத்தைச் சரிவர நடத்துகிற அரசன் தர்மார்த்தகாமத்தினுடைய சித்தியை சீக்கிரம் அடையச்செய்கிறார். அதே சட்டம் விஷயசக்தி யுள்ளவனும், உடம்பு வணங்காதவனும், சூதானவனும், தீயகுண முள்ளவனும், அற்பத்தனமானவனும், நீச புத்தி யுள்ளவனுமான அரசனால் செலுத்தப் படுமேயானல், அது அவனையே நாசஞ் செய்துவிடும்.

दण्डो हि सुमहत्तेजो दुर्धरश्चाकृतात्मभिः ।
धर्माद्विचलितं हन्ति नृपमेव सबान्धवम् ॥ மனு 7.28.

சட்டத்தினுடைய மேன்மையும் வலுவும் சிறப்பானபடியினால் அதை அவித்வான்களினாலும் அதர்மாத்மாக்களினாலும் செலுத்த முடியாது. தர்மத்திலிருந்து வேறாக நடக்கிற அரசனை நாசஞ்செய்ய அது காரணமாயிருக்கிறது.

सोऽसहायेन मूढेन लुब्धेनाकृतबुद्धिना ।
न शक्यो न्यायतो नेतुं सक्तेन विषयेषु च ॥ மனு 7. 30.

வித்தை, நல்ல பயிற்சி, யோசனைக்கு நற்புருஷர்கள், இவைகளற்றவனும், விஷயசுகங்களில் அழுந்தியிருக்கிறவனுமான அரசனால் "சட்டத்தை" நீதியுடன் செலுத்த முடியாது.

शुचिना सत्यसन्धेन यथा शास्त्रानुसारिणा ।
प्रणेतुं शक्यते दण्डः सुसहायेन धीमता ॥ மனு 7. 31.

நியாயத்திற்கு வேறு பெயரான சட்டத்தைப், பரிசுத்த ஆத்மா, சத்தியாசாரம், சத்புருஷசங்கம், நீதி சாஸ்திர பிரகாரம் தன் கடமைகளை நடத்த புத்திமான்களுடைய சகாயம், இவைகளுடன் கூடினவர்களே செலுத்த யோக்கியமானவர்.

முக்கிய அதிகாரிகள்.

सैनापत्यं च राज्यं च दण्डनेतृत्वमेव च ।
सर्वलोकाधिपत्यं च वेदशास्त्रविदर्हति ॥ மனு 12. 100.

நான்கு முக்கிய உத்தியோகங்களாவன:—முக்கிய சேனாதிபதி, முக்கிய விசாரணைத்தலைவர், முக்கிய நீதிபதி, சகலருக்கும் சர்வாதிகாரி, அதாவது அரசர். வேதம், முதலான சத்திய சாஸ்திரங்களில் ஞானம், பூர்ண வித்தை, தர்மாத்மா அடக்கப்பட்ட இந்திரியம் நல்லகுணம் இவைகளுடன் கூடினவர்களைக் கொண்டே நடத்தவேண்டும்.

ஆலோசனை சபைகள்.

दशावरा वा परिषद्यं धर्मं परिकल्पयेत् ॥
त्र्यवरा वापि वृत्तस्था तं धर्मं न विचालयेत् ॥ மனு 12. 110.

பத்து வித்வான்களாலோ, புத்திமான்களாலோ அல்லது மூன்று பெயர்களாலோ மனமொருமித்துச் செய்யப்பட்ட நியாயத்தை எவரும் மீறி நடக்கக் கூடாது.

त्रैविद्यो हैतुकस्तर्की नैरुक्तो धर्मपाठकः ।
त्रयश्चाश्रमिणः पूर्वे परिषत्स्याद्दशावरा ॥ மனு 12. 111.

சபையின் அங்கத்தினர்கள், நான்கு வேதம், நியாயசாஸ்திரம், நிருக்தம், தர்மசாஸ்திரம், முதலானவைகளில் நிபுணர்களாயும் முதல் மூன்று ஆசிரமங்களாகிய பிரமசரியம், கிரகஸ்தம், வானப்ரஸ்தம் இவைகளில் ஒன்றைச் சேர்ந்தவர்களாயுமிருக்கவேண்டும்.

ऋग्वेदविद्यजुर्विच्च सामवेदविदेव च ।
त्र्यवरा परिषज्ज्ञेया धर्मसंशयनिर्णये ॥ மனு 12. 112.

ரிக் வேதம், யஜுர் வேதம், சாம வேதம் இவைகளை அறிந்த மூன்று பேர் சேர்ந்து சபை கூடிச் செய்யப்பட்ட சட்டங்களை எவரேனும் மீறக் கூடாது.

एकोपि वेदविद्धर्मं यं व्यवस्येद् द्विजोत्तमः ।
स विज्ञेयः परो धर्मो नाज्ञानामुदितोऽयुतैः मனு 112, 113.

நான்கு வேதங்களையுமறிந்த சந்நியாசியுடையை ஏற்பாடானது பல வேதியர்களால் செய்யப் பட்டதைவிட மேலானதாகும். இலக்ஷக்கணக்கான அக்ஞானிகளினல் செய்யப்பட்ட விதிகளுக்கு யாரும் இணங்க வேண்டியதில்லை.

अव्रतानाममन्त्राणां जातिमात्रोपजीविनाम् ।
सहस्रशः समेतानां परिषत्त्वं न विद्यते ॥ மனு 12, 114.

பிரம்மசரியத்தை அனுஷ்டிக்காமலும், சத்திய வாக்கு, வேத வித்தை விசாரணை இவைகளில்லாமலும் பிறப்பினல் மாத்திரம் பிராம்மணனுயிருந்து செய்கைகளினல் சூத்ரனுயிருக்கிற ஆயிரம் பெயர்கள் கூடினலும் அது சபையாகாது.

यं वदन्ति तमोभूता मूर्खा धर्ममतद्विदः ।
तत्पापं शतधा भूत्वा तद्वक्तॄननुगच्छति ॥ மனு 12. 115.

அவித்வான்களினலும் வேதஞானமற்றவர்களினலும் செய்யப்பட்ட நியாயங்களை ஒரு நாளும் ஏற்றுக்கொள்ளக் கூடாது. ஏனென்றல், மூர்க்கர்களால் செய்யப்பட்ட தர்மத்தை அனுஸரிப்பதினல் நூற்றுக் கணக்கான பாபங்கள் சம்பவிக்கும். ஆகையினல் மேற்சொன்ன மூன்று சபைகளில், வித்வசபை, தர்மசபை, ராஜசபை, ஒரு நாளும் மூர்க்கர்களை அங்கத்தினர்களாகச் சேர்க்கக்கூடாது. எப்பொழுதும் வித்வான்களையும், தர்மிகர்களையுமே ஏற்படுத்தவேண்டும்.

சபைகளின் அங்கத்தினர்கள்.

त्रैविद्येभ्यस्त्रयीं विद्यां दण्डनीतिं च शाश्वतीम् ।
आन्वीक्षिकीं चात्मविद्यां वार्त्तारम्भांश्च लोकतः ॥ மனு 7. 43.

மூன்றுவித வித்தைகளையும் நற்செய்கைகளையும் உணர்ந்தும், அப்பியாசித்தும் தண்ட நீதி, நியாயவித்தை, ஆத்ம வித்தை அதாவது: பரமாத்மாவினுடைய குணம், கர்மம், ஸ்வபாவம் இவைகளை அறிந்துமிருக்கிறவர்களே இராஜாவாகவும், இராஜ சபையின் அங்கத்தினர்களாகவும் இருப்பது நலம்.

इन्द्रियाणां जये योगं समातिष्ठेद्दिवानिशम् ।
जितेन्द्रियो हि शक्नोति वशे स्थापयितुं प्रजाः ॥ மனு 7. 44.

சபையின் சகல அங்கத்தினர்களும், சபா பதியும் நியாய மார்க்கத்தில் சென்று இந்திரியங்களை அடக்கி பாபங்களிலிருந்து வேறுயிருக்க

வேண்டும். எப்பொழுதும் அவர்கள் யோகாப்பியாசஞ் செய்து காலை மாலை இருபொழுதும் தியானஞ்செய்ய வேண்டும். ஏனென்றால் தன்னுடைய இந்திரியங்களையும் மனதையும் அடக்கமுடியாதவர்கள் ஜனங்களை அடக்கி யாள முடியாது.

दश कामसमुत्थानि तथाष्टौ क्रोधजानि च ॥
व्यसनानि दुरन्तानि प्रयत्नेन विवर्जयेत् ॥ மனு 7. 45.

ஆகையினால், திடச்சிந்தையுடன் கூடினவர்களாய், மனிதர்களால் சுலபத்தில் தடுக்க முடியாத காமத்தினால் விளையும் பத்து கஷ்டங்களையும், கோபத்தினாலுண்டாகும் எட்டு கஷ்டங்களையும் ஒழித்து பிறர்களையும் ஒழிக்க ஒருவர் செய்யட்டும்.

कामजेषु प्रसक्तो हि व्यसनेषु महीपतिः ।
वियुज्यतेऽर्थधर्माभ्यां क्रोधजुष्वात्मनैव तु ॥ மனு 7. 46.

காமத்தினால் விளையும் பத்து கஷ்டங்களையும் பழக்கத்தில் வைத்துக் கொண்டிருக்கிற அரசன் தன்னுடைய இராஜ்யத்தையும், தனத்தையும், சக்தியையும் இழக்கிறான். தன் குணத்தையுங்கூட இழக்கிறான். கோபத்தினாலேற்படும் கஷ்டங்களை அனுசரிக்கிறவர்கள் தங்கள் ஜீவனையு மிழக்குகிறார்கள்.

मृगयाक्षो दिवास्वप्नः परीवादः स्त्रियो मदः ॥
तौर्यत्रिकं वृथाट्या च कामजो दशको गणः ॥ மனு 7. 47.

காமத்தினாலுண்டாகும் பத்து கஷ்டங்களாவன. (1) மிருகவேட்டையாடுகிறது (2) விளையாடுகிறது--சூதாட்டம் முதலானவைகள். (3) பகல் வேளைகளில் தூங்குகிறது (4) விஷயசுகங்களைப்பற்றின சமாசாரங்களைக் கேழ்க்கிறது ; அதைக் குறித்துப் பேசுகிறது (5) ஸ்திரீகளுடன் அதிக சங்கம் செய்கிறது. (6) கஞ்சா, அபினி, முதலான மயக்க வஸ்துக்களை உபயோகிக்கிறது (7) பாடுகிறது (8) சங்கீத வாத்தியங்களை உபயோகிக்கிறது (9) ஆட்டம் இவைகளைக் கவனிக்கிறது (10) அங்குமிங்கும் திரிகிறது.

पैशुन्यं साहसं द्रोह ईर्ष्यासूयार्थदूषणम् ।
वाग्दण्डजं च पारुष्यं क्रोधजोऽपि गणोऽष्टकः ॥ மனு 7. 48.

கோபத்தினாலுண்டாகும் எட்டு கஷ்டங்களாவன (1) புறங் கூறுகிறது (2) அடாத காரியங்களைச்செய்கிறது அதாவது: இதரர்களுடைய ஸ்திரீயை பங்கப்படுத்துகிறது முதலானவைகள் (3) பகை (4) அசூயை அதாவது: இதரர்களுடைய மேன்மையையோ, ஜயத்தையோ கண்டு அசூயைப் படுகிறது. (5) தப்புக்கண்டு பிடிக்கிறது நன்மையை கெடுதியா

கவும் கெடுதியை நன்மையாகவும் காட்டுகிறது. (6) வீண் செலவு செய்கிறது. (7) குரூரமாய்ப் பேசுகிறது. (8) காரணமன்னியில் வைகிறது அல்லது தண்டிக்கிறது.

द्वयोरप्येतयोर्मूलं यं सर्वे कवयो विदुः ।
तं यत्नेन जयेल्लोभं तज्जावेतावुभौ गणौ ॥ மனு 7. 49.

காமம், கோபம் இவைகளினல் உண்டாகி, மனிதர்களை நாசஞ் செய்கிறது என்று வித்வான்கள் அபிப்பிராயப்படும் "தன்னுசையை" அவர் விட்டுவிடவேண்டியது. தன்னுசையினுலேயே ஒருவன் இக்கெடுதல்களை அடைகிறுன்.

पानमक्षाः स्त्रियश्चैव मृगया च यथाक्रमम् ।
एतन्नष्टतमं विद्याच्चतुष्कं कामजे गणे ॥ மனு 7. 50.

மயக்க வஸ்துக்களை உபயோகிக்கிறது, சூதாடுவது, அதிகஸ்திரீ சங்கம், வேட்டையாடுவது, இவைகளெல்லாம் காமத்தினுலேற்படுகிறவும், நாசத்தை உண்டாக்குகிறதுமான கெடுதல்கள்.

दण्डस्य पातनं चैव वाक्पारुष्यार्थदूषणे ।
क्रोधजेऽपि गणे विद्यात्कष्टमेतत्त्रिकं सदा ॥ மனு 7. 51.

காரணமன்னியில் தண்டித்தல், அவதூறுன வார்த்தைகளைப் பேசுதல், அநியாயவழிகளில் பணத்தைச் செலவழித்தல், இம்மூன்றும் கெடுங் கேட்டைக் கொண்டுவரும் கோபத்தினுலுண்டாகிறகெடுதல்களாம்.

सप्तकस्यास्य वर्गस्य सर्वत्रैवानुषङ्गिणः ।
पूर्वं पूर्वं गुरुतरं विद्याद्व्यसनमात्मवान् ॥ மனு 7. 52.

காமத்தினுலும் கோபத்தினுலும் ஏற்படும் ஏழு தீமைகளில், பின் சொன்னவற்றைவிட முன்சொன்னவைகள் மிகக்கொடியன. அதாவது வீண் பணச்செலவைவிட அவதூறுன வார்த்தைகள் பேசுவது கொடியது. அவதூறு பேசுவதைவிட குற்றமற்றவர்களைத் தண்டிப்பதும் குற்றமற்றவர்களைத் தண்டிப்பதைவிட வேட்டையாடுவதும் வேட்டையாடுவதை விட ஸ்திரீசங்கமும், இவைகளை விட மயக்கவஸ்துக்களை உபயோகித்தலும் கெடுதலாம்.

व्यसनस्य च मृत्योश्च व्यसनं कष्टमुच्यते ।
व्यसन्यधोऽधो व्रजति स्वर्यात्यव्यसनी मृतः ॥ மனு 7. 53.

கெட்ட காரியங்களை அனுசரிப்பதை விட இறப்பது மேல். ஏனென்றுல் கெட்டவர்கள் வெகுகாலம் வசிப்பார்களேயானுல் அவர்கள் கெட்டகாரியங்

களையே செய்து இழிவடைந்து கஷ்டத்தை அனுபவிப்பார்கள். கெட்டகர்மங்களிலிருந்து வேறுயிருக்கிறவர்கள் இறந்தபோதிலும் சுகத்தையே அனுபவிப்பார்கள்.

மந்திரிகள்.

मौलाञ्छास्त्रविदः शूराँल्लब्धलक्षान कुलोद्गतान् ।
सचिवान्सप्त चाष्टौ वा प्रकुर्वीत परीक्षितान् ॥ மனு 7. 54.

தன் தேசத்திலும் இராஜ்யத்திலும் உண்டானவர்களாயும், வேதாதிசாஸ்திரங்களை அறிகிறவர்களாயும், வீரசூரர்களாயும், நிஷ்பலமாகாத எண்ணங்களை உடையவர்களாயும், நற்குலத்திலுதித்தவர்களாயும், நன்கு பழக்கப்பட்டவர்களாயுமிருக்கிற ஏழு அல்லது எட்டு பெயர்களை அரசன் மந்திரிகளாக நியமிக்க வேண்டும்.

अपि यत्सुकरं कर्म तदप्येकेन दुष्करम् ।
विशेषतोऽसहायेन किन्तु राज्यं महोदयम् ॥ மனு 7. 55.

சுலபமாயிருக்கும் ஒரு காரியத்தையுங்கூட ஒருவர் சகாயமன்னியில் தனியாய்ச் செய்வதென்றால் கஷ்டமாகிறது. இவ்விதம் இருக்கும்பொழுது மகத்தான இராஜ்யகாரியங்களை ஒருவரால் எவ்விதம் தனியாகச் செய்யமுடியும்? ஆகையினால் இராஜ்யகாரியங்களை ஒரே புத்தியின்பேரிலாவது, இராஜாவின்பேரிலாவது சுமத்துவது முடியாத காரியமாம்.

तैः सार्द्धं चिन्तयेन्नित्यं सामान्यं सन्धिविग्रहम् ।
स्थानं समुदयं गुप्तिं लब्धप्रशमनानि च ॥ மனு 7. 56.

இராஜ்யத்தின் தலைமையை வகிக்கிறவர்கள், கீழ்க்கண்டவைகளைப் போன்ற தன் ராஜ்யவிஷயங்களில் கற்றுணர்ந்த வித்வான்களாகிய மந்திரிகளுடன் யோசனை செய்யவேண்டும். (i) சமாதானம் (ii) சண்டை (iii) காப்பு—வெளி எதிர்ப்பிலிருந்து தான் ராஜ்யத்தைக் காப்பாற்றிக்கொண்டு, சமயத்தை எதிர்பார்த்தல் (iv) வாழ்வு. அதாவது தனக்குக் காலம் சரியாயிருக்கும்பொழுது சத்துருக்களை எதிர்த்தல் (v) அரசிறை, கஜானா, சைனியம் முதலான ஸ்வதேச சம்பந்தமான காரியங்களைச் சரிவர நடத்தல் (vi) எல்லா கஷ்டங்களையும் நீக்கிப் புதிதாய் வென்ற தேசங்களைச் சாந்தமாகச்செய்தல். இவ்வாறையுங்குறித்து அவர் தினந்தோறும் ஆலோசனைசெய்யட்டும்.

तेषां स्वं स्वमभिप्रायमुपलभ्य पृथक् पृथक् ।
समस्तानांच कार्य्येषु विदध्याद्धितमात्मनः ॥ மனு 7. 57.

மந்திரிகள், சபையின் அங்கத்தினர்கள் இவர்களுடைய தனித்தனி அபிப்பிராயங்களை அறிந்துகொண்டு, பெரும்பான்மையோர் அபிப்பிராயப்பிரகாரம் நடந்து தனக்கும் பிரஜைகளுக்கும் நன்மைகளைச் செய்யட்டும்.

अन्यानपि प्रकुर्वीत शुचीन् प्राज्ञानवस्थितान् ।
सम्यगर्थसमाहर्तॄ नमात्यान्सुपरीक्षितान् ॥ மனு 7.60.

அம்மாதிரியே, பரிசுத்தம், புத்திமான், நிச்சய புத்தி, ஏற்பாடுசெய்யுஞ் சக்தி, அதிக அநுபவம் இவைகளுடன் கூடின வேறு மந்திரிகளையும் நியமிக்க வேண்டும்.

निर्वर्त्ततास्य यावद्भिरितिकर्तव्यता नृभिः ।
तावतोऽतन्द्रितान् दक्षान् प्रकुर्वीत विचक्षणान् ॥ மனு 7. 61.

இராஜ்ய கார்யங்களை நடத்துவதற்காக தீவிர புத்தி, சாமர்த்தியம் சுறுசுறுப்பு பலம் இவைகளுடன் கூடினவர்களை வேண்டியவரையில் நியமிக்கட்டும்.

तेषामर्थे नियुञ्जीत शूरान् दक्षान् कुलोद्गतान् ।
शुचिनाकरकर्मान्ते भीरूनन्तर्निवेशने ॥ மனு 7. 62.

இவர்களுடைய ஆதீனத்தில் சூரவீரனையும் பரிசுத்தமாயும் பலவானையும், நற்குலத்தினுதித்தவனையும் இருக்கிற பல சேவகர்களைப் பெரிய ஜவாப்தாரித்தனங்களுக்கேற்படுத்திக் கூச்சமுள்ளவும் திருட்டு சிந்தையுமில்லாதவர்களை ராஜ்யத்தினுடைய உள் இலாகாவுக்கு நியமிக்கட்டும்.

दूतं चैव प्रकुर्वीत सर्वशास्त्रविशारदम् ।
इङ्गिताकारचेष्टज्ञं शुचिं दक्षं कुलोद्गतम् ॥ மனு 7. 64.

நற்குலத்தினுதித்தவராயும், பரிசுத்தமாயும், யோக்கியமாயும், மனதிலிருப்பதை அறியக்கூடியவராயும், முகவாட்டம் முதலானவைகளிலிருந்து முன் வருவதை சொல்லுகிறவராயும், சகல சாஸ்திரங்களை அறிந்தவராயும் இருக்கிறவரை தூதராக நியமிக்க வேண்டும்.

अनुरक्तः शुचिर्दक्षः स्मृतिमान् देशकालवित् ।
वपुष्मान्वीतभीर्वाग्मी दूतो राज्ञः प्रशस्यते ॥

இராஜ்ய காரியங்களைச் செய்வதில் வெகு பிரியமுள்ளவராயும், ஸ்வதேசத்தில்ஆசையுடனும், நிஷ்களங்கமாயும், மனோசுத்தம், தீவிரபுத்தி, நல்ல ஞாபக சக்தி, தேசம் காலம் இவைகளை அநுசரிக்கிறவராயும், நல்ல ரூபம், நிர்பயம், வாசாலத்தனம், இவைகளுடன் கூடினவராயும், தூதர் இருக்க வேண்டும்.

மந்திரிகள் முதலானவர்களுடைய கடமைகள்.

अमात्ये दण्ड आयात्तो दण्डे वैनायिकी क्रिया ।
नृपतौ कोषराष्ट्रे च दूते सन्धिविपर्ययौ ॥ மனு 7. 65.

தண்டனை செய்வதில் நியாயத்தைச்செலுத்தி, அநியாயமான தண்டனைகள் செய்யாமல் பார்த்துக் கொள்ளுவது மந்திரிகளுடையவும், கஜானு

முதலான ராஜகாரியங்கள் அரசனுடையவும், சண்டை சமாதானம் முதலான்வைகள் தூதருடையவும், சகல கடமைகள் சபைகளினுடையவும் காரியங்களாகும். சத்துருக்களுடன் சமாதானத்தையும் சிநேகிதர்களுடன் சண்டையும் தூதரே செய்யக்கூடும்.

दूत एव हि सन्धत्ते भिनत्त्येव च संहतान् ।
दूतस्तत्कुरुते कर्म भिद्यन्ते येन वान वा ॥ மனு 7. 66.

சத்துருக்களைக் கலைப்பதற்கே அவர் கஷ்டப்படவேண்டும்.

बुद्ध्वा च सर्वन्तत्वेन परराजचिकीर्षितम् ।
तथा प्रयत्नमातिष्ठेद्यथात्मानं न पीडयेत् ॥ மனு 68.

விரோதி அவருடைய அபிப்பிராயம் இவைகளை அறிந்துகொண்டு தனக்குக்கேடு வராமலிருக்கும் வழியை தூதன், அரசன், சபைத்தலைவன், சபையினுடைய சகல அங்கத்தினர்களும் தேடவேண்டும்.

धनुर्दुर्गं महीदुर्गमब्दुर्गं वार्क्षमेव वा ।
नृदुर्गं गिरिदुर्गं वा समाश्रित्य वसेत्पुरम् ॥ மனு 7. 70.

அடர்ந்த மலைப்பிரதேசத்தில் பூமிசெழித்திருக்கும் ஸ்தலத்தில நீரினாலோ அடர்ந்தமரங்களினாலோ, கவசம் பூண்டவர்களினாலோ, மலையினாலோ, சூழப்பட்ட ஒரு பட்டணத்தைத் தன்னுடைய வாசஸ்தானமாக ஏற்படுத்திக்கொள்ளட்டும்.

एकः शतं योधयति प्राकारस्थो धनुर्धरः ।
शतं दशसहस्राणि तस्माद्दुर्गं विधीयते ॥ மனு 7. 74.

மதலுக்குள்ளேயிருக்கும் ஒருவன் வெளியிலிருக்கும் நூறு பெயர்களுக்கும், நூறு பெயர் ஆயிரம் பெயர்களுக்கும் முறையே இணையாகிறார்களாகையினால் தன் நகரத்தைச் சுற்றி ஒரு மதிலைக் கட்டிக்கொள்ளட்டும். ஆகையினால் கோட்டை ஒன்று மிகவும் அவசியமாகிறது.

तत्स्यादायुधसम्पन्नं धनधान्येन वाहनैः ।
ब्राह्मणैः शिल्पिभिर्यन्त्रैर्यवसेनोदकेन च ॥ மனு 7. 75.

அஸ்திரசஸ்திரங்களினாலும், தனதான்யங்களினாலும், ஆடு மாடுகளினாலும், போதகாசிரியர்களினாலும், உபதேசகர்களினாலும், கைத்தொழிலாளர்களினாலும், மிருகங்களுக்கு ஆகாரமாகிற புல் பூண்டு, ஜலம் இவைகளினாலும் கோட்டையை நன்கு நிறைக்கவேண்டும்.

तस्य मध्ये सुपर्याप्तं कारयेद्गृहमात्मनः ।
गुप्तं सर्वर्तुकं शुभ्रं जलवृक्षसमन्वितम् ॥ மனு 7. 76.

அநநகரின் மத்தியில் ஜலம், விருக்ஷம், புஷ்பம், காற்று இவைகளி ஞல் நிரம்பப்பெற்ற ஒரு இல்லத்தைத் தனக்கு அமைத்துக் கொள்ளவேண்டும். அது எல்லா காலங்களுக்கேற்றதாயும் ராஜ்யபாரங்களை நடத்தத்தகுந்த வளவு பெரியதாயுமிருக்கவேண்டும்.

तदध्यास्योद्वहेद्भार्यां सवर्णां लक्षणान्विताम् ।
कुले महति सम्भूतां हृद्यां रूपगुणान्विताम् ॥ மனு 7. 77.

இவ்வளவு செய்துவிட்டு அதாவது பிரம்மசரிய வித்தைகளைப் படித்து விட்டு இராஜகாரியங்களை முடித்துக்கொண்டு தன் க்ஷத்திரிய வகுப்பிலிருந்தே உத்தமகுலத்தினுதித்தவும், சகல சௌந்தரிய லக்ஷணங்களுடனும் சௌபாக் யங்களுடனும் கூடின மனதிற்கேற்ற ஒரு பெண்ணைத் தன் சகவாசியாகத் தேடிக்கொள்ளட்டும். ஒரு மனைவியை அடைந்து மீதி சகல ஸ்திரீகளையும் அடையக்கூடாதவளாக நினைத்து வேறுயாரையும் நிமிர்ந்து கூடப்பார்க்கக் கூடாது.

पुरोहितं प्रकुर्वीत वृणुयादेव चर्त्विजम् ।
तेऽस्य गृह्याणि कर्माणि कुर्युर्वैतानिकानि च ॥ மனு 7. 78.

காலகிரமப்பிரகாரம் ஹோமம், எக்ஞம், இன்னும் முதலான தருமங் களைச் செய்யத் தன் அரண்மனையில் புரோஹிதரையும் ரித்விக்கையும் வைத் துக்கொள்ளட்டும். அல்லும் பகலும் ராஜ கார்யங்களிலிருந்து மீறுமல் அதைச் செய்வதே அரசனுடைய முதற்கடமை.

அரசிறை.

सांवत्सरिकमाप्तैश्च राष्ट्रादाहारयेद्बलिम् ।
स्याच्चाम्नायपरो लोके वर्त्तेत पितृवन्नृषु ॥ மனு 7. 80.

தன்னுடைய வருமான வருஷவரவை அரசன் தான் அறிந்த இஷ்ட புருஷர்களைக்கொண்டு சேகரிக்கட்டும். சபாபதிரூபமான அரசன், மந்திரிகள், இன்னும் முதலானவர்கள் வேதானுகூலப்பிரகாரம் பிரஜைகளுடைய தகப்ப னைப்போல் நடக்கட்டும்.

अध्यक्षान् विविधान् कुर्यात् तत्र तत्र विपश्चितः ।
तेऽस्य सर्वाण्यवेक्षेरन्नृणां कार्याणि कुर्वताम् ॥ மனு 7. 81.

நியமப்பிரகாரம் அவரவர்களுடைய கடமைகளைச்சரிவர நடத்துகிருர் களாவென்று பார்க்க அந்தந்த இலாகாக்களுக்குத் தனித்தனியாக பலவித உத்தியோகஸ்தர்களை சபைகள் நியமிக்கட்டும். அவ்விதம் சரியாய்ச் செய் கிறவர்களை மரியாதை செய்து, அப்படிச் செய்யாதவர்களைத் தண்டிக்கவும் வேண்டும்.

आवृत्तानां गुरुकुलाद्विप्राणां पूजको भवेत् ।
नृपाणामक्षयो ह्येष निधिर्ब्राह्मो विधीयते ॥ மனு 7. 82.

அரசர்களுடைய அழிவில்லாத பொக்கிஷம் என்று அறியப்படும் வேதத்தினுடைய ஞானத்தைப் பரவச்செய்வதற்காக அரசனும் சபைகளும் வேதசாஸ்திரங்களைப் படித்து குருகுலத்திலிருந்து வெளிவரும் பிரம்மசாரிகளையும் அவர்களுடைய ஆசிரியர்களையும் ஏற்றவாறு மரியாதை செய்யட்டும். இவ்விதம் செய்வதினால் ஞானம் விருத்தியாகித் தேசம் க்ஷேமத்தை அடைகிறது.

समोत्तमाधमै राजा त्वाहूतः पालयन् प्रजाः ।
न निवर्त्तेत संग्रामात् क्षात्रं धर्ममनुस्मरन् ॥ மனு 7. 87.

தன் பிரஜைகளினுடைய க்ஷேமத்தைக் கோருகிற அரசன் தனக்குச் சமானமான பலத்தையாவது, அல்லது அதிகமான பலத்தையாவது உடைய மற்றொருவன் எதிர்த்தானேயானால் அப்பொழுது தன் க்ஷத்திரிய தர்மத்தை நினைத்துக்கொண்டு யுத்தத்திற்குப் போவதிலிருந்து பின் வாங்கக்கூடாது. தனக்கு ஜயம் ஏற்படக்கூடிய சாமர்த்தியத்துடன் சண்டை செய்யவேண்டும்.

आहवेषु मिथोऽन्योन्यं जिघांसन्तो महीक्षितः ।
युध्यमानाः परं शक्त्या स्वर्गं यान्त्यपराङ्मुखाः ॥ மனு 7. 89.

சத்துருக்களை வெல்லவேண்டுமென்ற எண்ணத்துடன் பயமன்னியில் போர்க்களத்திலிருந்து பின் வாங்காமல் சண்டை செய்யும் அரசர்கள் சுகத்தையடைவார்கள். இதனால் ஒரு பொழுதும் பின் வாங்கக்கூடாது. ஆனால் ஜபமடைய சிலசமயங்களில் சத்துருக்களிடமிருந்து பதுங்கவேண்டியதவசியமாகும். தனக்கு ஜயம் வரும்படி சகலவிதமான உபாயங்களை கைக்கொள்ள வேண்டும். ஆனால் கோபம் வருங்காலத்தில் புலி அக்னியிடம் வந்து விழுந்து மரிப்பது போல் மூடத்தனமாய் நாசமாய் போகவேண்டியதில்லை.

ஆண்மையுடைமை.

न च हन्यात्स्थलारूढं न क्लीबं कृताञ्जलिम् ।
न मुक्तकेशं नासीनं न तवास्मीतिवादिनम् ॥ மனு 7. 91.
न सुप्तं न विसन्नाहं न नग्नं न निरायुधम् ।
नायुध्यमानं पश्यन्तं न परेण समागतम् ॥ மனு 7. 92.
नायुधव्यसनं प्राप्तं नार्त्तं नातिपरिक्षतम् ।
न भीतं न परावृत्त सतां धर्ममनुस्मरन् ॥ மனு 7. 93.

வீரத்தன்மையுடைய மேன்மையைக் கருதி யுத்தத்தில் போர்வீரர்கள் சமீபத்தில் ஆயுதமன்னியிலிருக்கிறவர்களை அடிக்கக்கூடாது. நபுஞ்சகர்கள் கூப்பின கைகளுடன் சமாதானத்திற்கு வேண்டுகிறவர்கள், அலங்கோலமான (கண்களில் தொங்கும்) மயிரைப் பெற்றவர்கள், உட்கார்ந்திருக்கிறவர்கள், "உனக்கே சரணம்" என்று சொல்லுகிறவர்கள், ஸ்மரணையன்னியிலோ அல்லது மயக்கத்திலோ இருக்கிறவர்கள், ஆயுதமன்னியிலிருக்கிறவர்கள்

நிர்வாணமாயிருக்கிறவர்கள், யுத்தத்தைப் பார்க்கிறவர்கள், கூடாரங்களுடன் தொடருகிறவர்கள், வியாதி புண் இவைகளிலிருந்து வருந்துகிறவர்கள், அசக்தமானவர்கள், பலத்த காயமடைந்தவர்கள், பயந்தவர்கள், திரும்பி போர்க்களத்திலிருந்து ஓடுகிறவர்கள், இவர்கள் எல்லோரையும் அடிக்கக் கூடாது.

இவர்களைக் கைதியாக்கி அன்னபானுதிகளை அளிக்கவேண்டும். புண்பட்டவர்களை வைத்தியர்களைக் கொண்டுக் கவனிக்கவேண்டும். அவர்களை எவ்விதத்திலும் தொந்தரவு செய்யக்கூடாது. வருத்தப்படச் செய்யக்கூடாது. அவரவர்களுக்குத் தகுந்த காரியங்களைக் கொடுக்கவேண்டும். ஸ்திரீகள், குழந்தைகள், வயோதிகர்கள், காயமடைந்தவர்கள், வியாதிக்காரர்கள் துக்கத்திலிருந்து வருந்துகிறவர்கள் இவர்கள் எல்லோரையும் யாரும் கஷ்டமடையாதபடி முக்கியமாய் அரசன் பார்த்துக்கொள்ளவேண்டும். குழந்தைகளைத் தன் குழந்தைகளைப்போலக் காப்பாற்றவேண்டும். ஸ்திரீகளையும் தன் ஸ்திரீகளைப்போல எண்ண வேண்டும். தன் தமக்கை அல்லது பெண்களைப்போல் கவனிக்கவேண்டும். காமக்கண்களினுல் அவர்களைப் பார்க்கவேகூடாது. தேயமுழுவதும் அமைதியான பிறகு மறுபடியும் படையெடுக்க முடியாதவர்களை அவரவர்கள் ஸ்தலத்திற்குத் திருப்பி யனுப்பவேண்டும். படையெடுத்து வரக்கூடும் என்று சந்தேகப்படுகிறவர்களை அரசன் சிறைப்படுத்தவேண்டும்.

यस्तु भीतः परावृत्तः संग्रामे हन्यते परैः ।
भर्तुर्यद्दुष्कृतं किञ्चित्तत्सर्वं प्रतिपद्यते ॥ மனு 7. 94.

கோழத்தனமாய் சபையோரிடமிருந்து திரும்பி நம்பிக்கை துரோகஞ் செய்கிற போர்வீரனை ராஜ்யத்திற்கு விரோதமாக நடந்த குற்றத்திற்காக தண்டிக்கவேண்டும்.

यच्चास्य सुकृतं किंचिदमुत्रार्थमुपार्जितम् ।
भर्त्ता तत्सर्वमादत्ते परावृत्तहतस्य तु ॥ மனு 7. 95.

இந்தஜன்மத்திலும் மறுஜன்மத்திலும் அவன் அடையவேண்டியசுகத்தை அவனுடைய எஜமானனடைகிறுன். போர்க்களத்திலிருந்து திரும்பியோடும்பொழுது கொல்லப்படுகிறபோர்வீரன் ஒரு பொழுதும் சுகத்தையடையான். இப்பயங்காளித்தனமான செய்கைகளினுல் அவனுடைய நல்ல காரியங்களெல்லாம் வியர்த்தமாய்ப்போகிறது. நன்றியுடன் யுத்தஞ்செய்கிறவனே மறியாதையை அடைகிறுன்.

रथाश्वं हस्तिनं छत्रं धनं धान्यं पशून् स्त्रियः ।
सर्वद्रव्याणि कुप्यं च यो यज्जयति तस्य तत् ॥ மனு 7. 96.

யுத்தத்தில் போர்வீரர்களோ அதிகாரிகளோ அடையும் வண்டி, யானை குதிரை, கூடாரம், தானியம், பொன், வெள்ளி, பசு முதலான பிராணிகள்,

ஸ்திரீகள், எண்ணெய், வெண்ணெய் முதலானவைகளை அரசன் அடையக் கூடாதென்கிற சட்டத்தை மீறக்கூடாது.

राज्ञश्च दद्युरुद्धारमित्येषा वैदिकी श्रुतिः ।
राज्ञा च सर्व्वयोधेभ्यो दातव्यमपृथग्जितम् ॥ மனு 7. 97.

ஆனால் சைனியத்திலிருக்கிறவர்கள் தாங்களடைந்ததில் பதினாறிலொரு பங்கு அரசனுக்களித்துவிடவேண்டும். அரசனும் அவர்களிடமிருந்து தானடைந்த மொத்தத்தில் பதினாறிலொருபங்கு அவர்களுக்கு அளித்துவிட வேண்டும்.

சண்டையிலிறந்தவருடைய பாகத்தை மனைவியும், மக்களும் அடைய வேண்டும். அவருடைய அநாதையான மனைவி மக்களைச் சரிவரப் பாதுகாத்து குழந்தைகள் பெரியவர்களானபிறகு அரசன் தன்னுடைய வேலையிலமர்த்திக் கொள்ளவேண்டும். இராஜ க்ஷேமத்தைக் கோருகிறவர்களும் கீர்த்தி, சுகம் இவைகளை விரும்புகிறவர்களும் இதை மீறிநடக்கக்கூடாது.

அதிகாரிகளுடைய கடமைகள்.

अलब्धं चैव लिप्सेत लब्धं रक्षेत्प्रयत्नतः ।
रक्षितं वर्द्धयेच्चैव वृद्धं पात्रेषु निः क्षिपेत् ॥ மனு 7. 99.

அரசனும், சபைகளும், இல்லாததை அடைந்தும், அடைந்ததை அக்கரையுடன் காப்பாற்றியும், காப்பாற்றியதை விருத்திசெய்தும், விருத்தி செய்த தனத்தைக் கொண்டு வேதஞானம், வேதமார்கம், இவைகளைப் பரவச்செய்வதிலேயும், வேதோத்தமவித்தியார்த்திகள், உபதேசகர்கள் இவர்களுக்கு உதவுவதிலேயும், அசமர்த்தர்கள் அநாதைகள் இவர்களை முன்னுக்குக் கொண்டுவருவதிலேயும் செலவிட வேண்டும்.

நடவடிக்கைகளினுடைய நான்கு உபாயங்களை அறிந்துகொண்டு சோம்பலை விட்டு, சுறு சுறுப்பாயிருக்க வேண்டும்.

अलब्धमिच्छेद्दण्डेन लब्धं रक्षेदवेक्षया ।
रक्षितं वर्द्धयेद् वृद्धया वृद्धं दानेन निःक्षिपेत् ॥ மனு 7. 101.

நியாயத்தினால் அடையமுடியாததை அடைய விரும்பவும், அடைந்ததை ஜாக்கிரதையாய்க் காப்பாற்றவும், காப்பாற்றியதை நல்ல வழியில் விருத்தி செய்யவும், விருத்தி செய்ததை மேற்சொன்ன நல்ல வழியில் செலவிடவும் பிரயத்தனப்படட்டும்.

अमाययैव वर्त्तेत न कथंचन मायया ।
बुध्येतारिप्रयुक्तां च मायान्नित्यं स्वसंवृतः ॥ மனு 7. 104.

எப்பொழுதும் வஞ்சக மன்னியில் உண்மையாய் நடக்கட்டும். தான் ஜாக்கிரதையாயிருந்து கொண்டு சத்துருக்களுடைய கெடுதல்களை அறிந்து கொண்டு காப்பாற்றிக் கொள்ளட்டும்.

नास्य छिद्रं परो विद्याच्छिद्रं विद्यात्परस्य तु ।
गूहेत्कूर्म इवाङ्गानि रक्षेद्विवरमात्मनः ॥ மனு 7.105.

தனக்குப் பலமில்லாததை எதிரிகளுக்குக் காட்டாமல் எதிரிகளினுடைய பலத்தைத் தானறிந்திருக்கவேண்டும். ஆமை தன்னுடைய அவயவங்களை மறைத்து ஒட்டின் கீழ் வைத்திருப்பதைப்போல் எதிரியால் தாக்கக்கூடிய வைகளை மறைத்து வைத்திருக்கவேண்டும்.

बकवच्चिन्तयेदर्थान् सिंहवच्च पराक्रमेत् ।
वृकवच्चावलुम्पेत शशवच्च विनिष्पतेत् ॥ மனு 7. 106.

மீன் பிடிப்பதற்கு ஆயத்தமாய் நாரையானது யோசனையிலிருப்பது போல் தனத்தைச்சேகரிப்பதிலேயே கவனமாயிருக்கவேண்டும். வேண்டிய வைகளைச் சேர்த்துக்கொண்டு தன்னதிகாரத்தை விருத்தி செய்துகொண்ட பிறகு சிங்கத்தைப்போல் பலமாய்த் தன் சத்துருவைத் தொலைக்கட்டும். புலியைப்போல் மெதுவாகப் பதுங்கித் தன் வைரியைக் கைக்கொள்ளட்டும். சத்துரு சமீபத்தில் வந்து விட்டால் முயலைப்போல் ஓடிப் பிறகு யுக்தியானல் அவர்களை மீறட்டும்.

एवं विजयमानस्य येऽस्य स्युः परिपन्थिनः ।
तानानयेद्वशं सर्वान् सामादिभिरुपक्रमैः ॥ மனு 7. 107.

க்ஷேமத்தை விரும்புகிற அரசன் சகல வழிபரிக் கொள்ளைக்காரர் களையும், திருடர்களையும் இன்னும் முதலானவர்களையும் மன்னித்தோ, வெகு மதியளித்தோ, அல்லது பரஸ்பர விரோதம் செய்து வைத்தோ அடக்க வேண்டும். இவ்வழிகளினுல் முடியாமல் போனுல் தண்டனை செய்து அடக்க வேண்டும்.

यथोद्धरति निर्दाता कक्षं धान्यं च रक्षति ।
तथा रक्षेन्नृपो राष्ट्रं हन्याच्च परिपन्थिनः ॥ மனு 7. 110.

தானியங்களுக்குக் கேடன்னியில் குடியானவன் உமியைப் பிரிப்பது போல், அரசன் வழிபரிக்கொள்ளைக்காரர்களையும், கன்னக்களவுக்காரர்களையும் அழித்துப் பிரஜைகளைக் காப்பாற்றட்டும்.

मोहाद्राजा स्वराष्ट्रं यः कर्षयत्यनवेक्षया ।
सोऽचिराद् भ्रश्यते राज्याज्जीविताच्च सबान्धवः ॥ மனு 7. 111.

மோகத்தினுலும் "விசாரணை" அன்னியினுலும் நன்ருய் ஆளாத இராஜ்யத்தையுடைய அரசன் தன் இராஜ்யத்தை இழந்து மரிப்பதற்கு முந்தி பந்து சகிதமாய்த் தான் நாசமடைகிருன்.

शरीरकर्षणात्प्राणाः क्षीयन्ते प्राणिनां यथा ।
तथा राज्ञामपि प्राणाः क्षीयन्ते राष्ट्रकर्षणात् ॥ மனு 7. 112.

சரீரம் மெலிந்து போவதினுல் ஜீவன்களுடைய பிராணன் க்ஷீணமடைகிருப்போல் பிரஜைகளை நெறுக்கியாளுகிற அரசனுடைய அதிகாரம் அவன் பந்து சகிதமாய் நசித்துப்போகிறது.

राष्ट्रस्य संग्रहे नित्यं विधानमिदमाचरेत् ।
सुसंगृहीतराष्ट्रो हि पार्थिवः सुखमेधते ॥ மனு 7. 113.

ஆகையினுல், அரசனும் இராஜசபைகளும், இராஜ்ய காரியங்களைச் சரிவர நடக்கும் வழியில் பாடுபடவேண்டும். இராஜ்யத்தைக் காப்பாற்றுவதிலேயே கவனமுள்ள அரசன் சுகத்தை அடைகிருன்.

द्वयोस्त्रयाणां पञ्चानां मध्ये गुल्ममधिष्ठितम् ।
तथा ग्रामशतानां च कुर्य्याद्राष्ट्रस्य संग्रहम् ॥ மனு 7. 114.

ஆகையினுல், இரண்டு, மூன்று, ஐந்து, நூறு கிராமங்களின் மத்தியில் முறையே அதிகாரி ஆபீஸ் ஒன்றை ஏற்படுத்தி அங்கு துரைத்தன வேலைகளை நடத்துவதற்கு வேண்டிய உத்தியோகஸ்தர்களையும் நியமிக்கட்டும்.

ग्रामस्याधिपतिं कुर्याद्दशग्रामपतिं तथा ।
विंशतीशं शतेशं च सहस्रपतिमेव च ॥ மனு 7. 115.

ஒரு கிராமத்திற்கு ஒரு முக்கியஸ்தரையும், பத்துக்கு இவரையும் அதுபோன்ற இருபதிற்கு மூவரையும், நூறுக்கு ஐந்துபேரையும் நியமிக்க வேண்டும் அதாவது ஒரு கிராமத்திற்கு ஒரு படவாரியும் (விசாரணகர்த்தா) அல்லது ஒவ்வொரு கிராமங்களுக்கு ஒரு சிறிய தாணுவும், இரண்டு சிறிய "தாணுவிற்கு" ஒரு பெரிய "தாணு"வும், பத்து தாணுவிற்கு ஒரு "தஹஸில்"லும், பத்து தஹஸிலுக்கு ஒரு ஜில்லாவும் ஆக முறையே நியமித்திருக்கும் தற்போதைய மார்க்கமானது நம்முடைய மனு முதலான தர்ம சாஸ்திரங்களைத் தழுவினது.

ग्रामदोषान्समुत्पन्नान् ग्रामिकः शनकैः स्वयम् ।
शंसेद् ग्रामदशेशाय दशेशो शतीशिविंनम् ॥ மனு 7. 116.

இம்மாதிரி ஆளுகைக்கு ஏற்பாடு செய்துவிட்டு ஒரு கிராமத்தினுடைய அதிபதி பத்து கிராமங்களினுடைய அதிபதிக்கு தன் எல்லையில் நடந்த குற்றங்களைத் தினந்தோரும் அறிவிக்கவேண்டும். அம்மாதிரியே பத்து கிராமங்களுடைய அதிகாரி இருபதினுடைய அதிபதிக்குத் தெரிவிக்க வேண்டும்.

विंशतीशस्तु तत्सर्वं शतेशाय निवेदयेत् ।
शंसेद् ग्रामशतेशस्तु सहस्रपतये स्वयम् ॥ மனு 7. 117.

இருபதினுடைய அதிபதி பிரதிதினம் சஹஸ்ராதிபதிக்கு, அச்சமாசாரங்களைத் தெரியப்படுத்தவேண்டும். சஹஸ்ராதிபதிக்கு ஆயிரத்தினுடைய அதிபதிக்கு அதாவது ஐந்து "இருபதாதிபதிகள்" ஒரு சஹஸ்ராதிபதிக்கும், பத்து சஹஸ்ராதிபதிகள் ஒரு லக்ஷாதிபதிக்கும், லக்ஷாதிபதிகள் கோடி கிராமங்களை ஆளும் இராஜசபைக்கும், ராஜசபைகளெல்லாம் சர்வதேச சபை ஒன்றுக்குஞ் அறிவிக்கவேண்டும்.

तेषां ग्राम्याणि कार्याणि पृथक्कार्याणि चैव हि ।
राज्ञोऽन्यः सचिवः स्निग्धस्तानि पश्येदतन्द्रितः ॥ மனு 7. 120.

பத்தாயிரம் கிராமங்கள் ஒவ்வொன்றின் பேரில் இரண்டு சபாதிபதிகளை உத்தியோகஸ்தர்களாக நியமிக்கவேண்டும். அவர்களிலொருவர் ராஜசபைக்குச் சபாநாயகராயிருக்கட்டும். மற்றொருவர் ஊக்கத்துடன் ஊர்முழுவதும் சுற்றி நியாயதிகாரிகள் காரியத்தைச் சரிவரசெய்கிறார்களாவென்று பார்க்கட்டும்.

नगरे नगरे चैकं कुर्यात्सर्वार्थचिन्तकम् ।
उच्चैः स्थानं घोररूपं नक्षत्राणामिव ग्रहम् । மனு 7. 121.

நகரவிசாரணைக்காக ஒவ்வொரு பெரிய பட்டணங்களிலும் "நகர சபை மண்டபம்" ஒன்றைக் கட்டவேண்டும். அது உயரமாயும், விசாலமாயும் சந்திரனைப்போல் ரம்மியமாயுமிருக்கவேண்டும். வித்தியா விருத்தர்களான அங்கர் சபையினர்கள், நகரசமாசாரங்களை அங்கே விசாரணைசெய்து பொதுஜன நன்மையை விருத்திசெய்கிறவும், புத்தி, ஞானம் இவைகளைப் பரவச்செய்கிறது மானநியாயங்களை ஏற்படுத்தவேண்டும்.

स तानुनुपरिक्रामेत्सर्वानेव सदा स्वयम् ।
तेषां वृत्त परिणयेत्सम्यग्राष्ट्रेषु तच्चरैः ॥ மனு 7. 122.

தன்கீழ்—க்ஷத்திரியர்களிலிருந்தும் வேறு இதர வகுப்புக்களிலிருந்தும்—துப்பு அறிகிறவர்களை வைத்துக்கொண்டு அவர்களிடமிருந்து — நல்லதோ, கெட்டதோ,—ராஜ்யபரிபாலனசேவகர்கள், ஜனங்கள் இவர்களுடைய குணங்களைப் பரிபூரணமாய் அறியட்டும். கடமைகளை நிறைவேற்றத் தவறுகிறவர்களைத் தண்டித்து, மெச்சத்தகுந்தவர்களைக் கௌரவப்படுத்தட்டும்.

राज्ञो हि रक्षाधिकृताः परस्वादायिनः शठाः ।
भृत्या भवन्ति प्रायेण तेभ्यो रक्षेदिमाः प्रजाः ॥ மனு 7. 123.

தார்மிகர்கள், அனுபவமுள்ளவர்கள் வித்துவான்கள், நற்குலத்துதித்தவர்கள் இவர்களையே அரசன் பிரஜைகளைக் காப்பாற்றுகிற விஷயத்தில் ஏற்படுத்தவேண்டும். இம்மாதிரி கற்றுணர்ந்த வித்துவான்களுடைய ஆதீனத்தில் மோசக்காரர்கள், கள்ளர்கள் அதாவது மற்றவர்களுடைய சொத்தை அபகரிக்கிறவர்கள் முதலானவர்களை வைக்கவேண்டும். இவ்விதம் செய்வதினால் அவர்களுடைய துன்மார்க்கவழியையும் குறைத்து பிரஜைகளையும் காப்பாற்றுவதாகும்.

ये कार्यिकेभ्योऽर्थमेव गृह्णीयुः पापचेतसः ।
तेषां सर्वस्वमादाय राजा कुर्यात्प्रवासनम् ॥ மனு 7. 124.

வாதியிடமிருந்தோ, பிரதிவாதியிடமிருந்தோ, அநீதியாய் லஞ்சம் வாங்கிக்கொண்டு பக்ஷபாதத்துடன் தீர்ப்பு செய்கிற "இராஜபுருஷர்களை" அரசன் அவர்களுடைய ஆதீனத்தில் இருக்கிறவைகளைப்பறிமுதல் செய்து திரும்பிவராமலிருக்கும்படி தேசபிரஷ்டஞ் செய்வதினால் தண்டிக்கவேண்டும். அவ்விதம் தண்டிக்காவிடில் மற்றவர்களும் அம்மாதிரி செய்ய அது ஒரு உதாரணமாகும். அவர்களைத் தண்டிப்பதினால் அக்கெட்ட நடவடிக்கைகள் நின்றுபோய்விடும். ஆனால் அவர்கள் சுகமாய் வாழ்ந்து தனவானாகும்படிக்கு, அவர்களுக்கு வருஷாவருஷமோ, மாதாமாதமோ, நிலத்தினாலோ, பணத்தினாலோ, சன்மானிக்கவேண்டும். வயோதிக உத்தியோகஸ்தர்களுக்கு, அவர்களுடைய சேவகத்தைக் கணக்கிலெடுத்துக்கொண்டு சம்பளத்தில் பாதி உபகாரச்சம்பளமளிக்கவேண்டும். இவ்வுபகாரச்சம்பளம் அவர்களிருக்கும் வரையிலேயல்லாது இறந்தபிறகுகிடையாது. அவர்களுடைய மக்கள் மரியாதைசெய்யப்பட்டு அவர்களுடைய சக்திக்கேற்றவாறு ராஜாங்க உத்தியோகங்கள் கொடுக்கப்படவேண்டும். அவருடைய மனைவி மக்களுடைய நிர்வாகத்திற்கு ஏதாவது அளிக்கவேண்டும். இந் நீதியை அரசன் எப்பொழுதும் கைக்கொண்டு நடக்கட்டும்.

தீர்வை

यथा फलेन युज्येत राजा कर्त्ता च कर्मणाम् ।
तथावेक्ष्य नृपो राष्ट्रे कल्पयेत्सततं करान् ॥ மனு 7. 128.

பிரஜைகளுடைய சுகத்தையும், தன்னுடைய சுகத்தையும், பாதுகாக்கும் வண்ணம் அரசன் தன் சபையுடன் தீர விளங்க யோசனை செய்து, வரி விதிக்கட்டும்.

यथाल्पाल्पमदन्त्याऽऽद्यं वार्य्योकोवत्सषट्पदा ।
तथाऽल्पाल्पो ग्रहीतव्यो राष्ट्राद्राज्ञाब्दिकः करः ॥ மனு 7. 129.

அட்டை, கன்றுக்குட்டி, வண்டு, இவைகள் தங்கள் ஆகாரத்தைக் கொஞ்சம் கொஞ்சமாக உட்கொள்ளுவது போல் தன்னுடைய வருஷவரியை

அரசன் கொஞ்சங் கொஞ்சமாக ஜனங்களிடமிருந்து பெற்றுக்கொள்ளட்டும்.

नोच्छिन्द्यादात्मनो मूलं परेषां चातितृष्णया ।
उच्छिन्दन्ह्यात्मनो मूलमात्मानं तांश्च पीडयेत् ॥ மனு 7. 139.

பெரும் பேராசையினல் அவர் தன்னுடைய சுகத்தையும், பிறருடைய சுகத்தையும் அடியோடு நாசஞ்செய்யக் கூடாது. ஏனென்றல் சுகத்தினுடைய வேரை, களைபவர் தனக்கும் பிறருக்கும் கேட்டை விளைவித்துக்கொள்ளுகிறர்களே யல்லாமல் வேறு ஒன்றுமில்லை.

तीक्ष्णश्चैव मृदुश्च स्यात्कार्यं वीक्ष्य महीपतिः ।
तीक्ष्णश्चैव मृदुश्चैव राजा भवति सम्मतः ॥ மனு 7. 140.

சமயத்திற்கேற்றவாறு இளகியதும் கடினமுமான மனதை உடைய அரசன் நல்லவர்களிடத்தில் அன்பாயும், தீயர்களிடத்தில் கண்டிப்பாயுமிருக்கிறபடியினல் வெகு மரியாதையுடன் கருதப்படுகிறர்.

एवं सर्वं विधायेदमितिकर्त्तव्यमात्मनः ।
युक्तश्चैवाप्रमत्तश्च परिरक्षेदिमाः प्रजाः ॥ மனு 7. 142.

இம்மாதிரியாகத் தன் பிரஜைகளைக் காப்பாற்றவேண்டும். அலக்ஷியமன்னியில் தன் காரியத்திலேயே கண்ணுயிருந்துகொண்டு அரசன் பிரஜைகளைக் காப்பாற்றவேண்டும்.

विक्रोशन्त्यो यस्य राष्ट्राद्ध्रियन्ते दस्युभिः प्रजाः ।
सम्पश्यतः सभृत्यस्य मृतः स न तु जीवति ॥ மனு. 7. 143.

எந்த அரசன், மந்திரி இவர்களுடைய எதிரிலேயே, ஜீவனும், பணமும் துஷ்டர்களால் அபகரிக்கப்பட்டு ஜனங்கள் உதவிக்குப்பரிதவிக்கிறர்களோ, அந்த அரசன் மந்திரிகளை மரித்தவர்களாக அறி. பிழைத்திருக்கிறவர்களாகஇல்லை. அப்பேர்ப்பட்டவர் பெருந்துக்கத்தை அநுபவிப்பார்.

क्षत्रियस्य परो धर्मः प्रजानामेव पालनम् ।
निर्दिष्टफलभोक्ता हि राजा धर्मेण युज्यते ॥ மனு 7. 144.

பிரஜைகளைப் பாலனஞ் செய்வதே அரசனுடைய முதற்கடமையாகும். மனுஸ்மிருதி ஏழாவது அத்தியாயத்தில் கூறியிருக்கும் வண்ணம் சபைகளினுடைய உதவியினல் வரிகளைப்பெற்று ஆளுகிற அரசன் சுகத்தை அநுபவிக்கிறன். அவ்விதம் செய்யாதவர்கள் கடுந்துக்கத்தை அனுபவிப்பார்கள்.

தினசரி வேலை

उत्थाय पश्चिमे यामे कृतशौचः समाहितः ।
हुताग्निर्ब्राह्मणांश्चार्च्य प्रविशेत्स शुभां सभाम् ॥ மனு 7. 145.

ராத்திரி கடைசிஜாமத்திலெழுந்திருந்து, முகத்தைக் கழுவிக்கொண்டு, பரமேஸ்வரதியானம், அக்னிஹோத்திரம், தார்மிக வித்வான்களுடைய சேவை இவைகளைச் செய்துகொண்டு, போஜனத்தை முடித்துக்கொண்டு சபையினுள்ளே பிரவேசிக்கட்டும்.

तत्र स्थितः प्रजाः सर्वाः प्रतिनन्द्य विसर्जयेत् ।
विसृज्य च प्रजाः सर्वा मन्त्रयेत्सह मन्त्रिभिः ॥ மனு 7. 146.

அங்கே நின்றுகொண்டு வந்திருக்கிறவர்களுக்கு மரியாதை செய்யவேண்டும். பிறகு அன்புடன் அவர்களைக் கலைத்துவிட்டுத் தன் முக்கிய மந்திரியுடன் இராஜ சமாசாரங்களை யோசனை செய்யவேண்டும்.

गिरिपृष्ठं समारुह्य प्रसादं वा रहोतः ।
अरण्ये निःशलाके वा मन्त्रयेदविभावितः ॥ மனு 7. 147.

பிறகு அவருடன் திரிவதற்காக வெளியில் சென்று மலை உசியையாவது, சிறிய புல் கூட இல்லாத (மறைப்பதற்கு) தனிவீட்டையாவது அடைந்து (இராஜ்ய சமாசாரங்களை) தன் மந்திரியுடன் வெகு சாவதானமாய் யோசனை செய்யவேண்டும்.

यस्य मन्त्रं न जानन्ति समागम्य पृथग्जनाः ।
स कृत्स्नां पृथिवीं भुङ्क्ते कोशहीनोऽपि पार्थिवः ॥ மனு 7. 148.

எவ்வரசனுடைய ஆலோசனை அன்னியர்கள் ஒன்று கூடின போதிலும் அறியக் கூடாததாயிருக்கிறதோ அதாவது ஆழ்ந்த யோசனையுள்ளதாயும், சுத்தமாயும், பரோபகாரார்த்தமாயும், இரகஸ்யமாயும் இருக்கிறதோ அந்த அரசன் ஏழையாயிருந்தபோதிலும் உலகமுழுவதும் ஆளுகிறான்.

आसनं चैव यानं च संधिं विग्रहमेव च ।
कार्यं वीक्ष्य प्रयुञ्जीत द्वैधं संश्रयमेव च ॥ மனு 7. 161.

அரசன் முதலான இராஜபுருஷர்கள் தீரயோசனைசெய்தபிறகு கீழ்க்கண்ட ஆறிலொரு கடமை, காலத்திற்கேற்றவாறு பெறவேண்டும். எதிர்க்காமலிருத்தல், எதிர்த்தல், சத்துருக்களுடன் சமாதானம் செய்துகொள்ளல், துஷ்ட சண்டை செய்தல், அவருடை சைனியங்களைப் பிரித்துவிட்டு ஜயம்பெறல் தான் நிர்பலமாயிருந்தால் மற்றொரு அரசனை ஆசிரித்தல்.

संधिं तु द्विविधं विद्याद्राजा विग्रहमेव च ।
उभे यानासने चैव द्विविधः संश्रयः स्मृतः ॥ மனு 7. 162.

சமாதானம், சண்டை, எதிர்த்தல், அமைதியாயிருத்தல், பலங்களுடைய அமைப்பு, நேசம், இவைகள் ஒவ்வொன்றினுடைய இருவகையான குணவேற்றுமைகளை அரசன் அறிந்துகொள்ளட்டும்.

समानयानकर्मा च विपरीतस्तथैव च ।
तथा त्वायतिसंयुक्तः संधिर्ज्ञेयो द्विलक्षणः मனு 7. 163.

சத்துருக்களுடன் சமாதானம் இருவிதமாகும். சமாதானம் செய்து கொள்ளுதல் ஒன்று. அவனை எதிர்க்க வேறொருவனுடன் சேர்ந்துகொள்ளுதல் இரண்டு, ஆனால் அரசன் நடக்க வேண்டியதையும் நடக்கப் போக வேண்டிதையும் யோசனை செய்த நடக்கட்டும்.

स्वयंकृतश्च कार्यार्थमकाले काल एव वा ।
मित्रस्य चैवापकृते द्विविधो विग्रहः स्मृतः ॥ மனு 7. 164.

சண்டை இருவிதம். தன்காரியசித்திக்காகச்செய்தல் ஒன்று, சமயாசமயமன்னியில் தன் நேசதேசத்திற்கு அபராதம் செய்த குற்றத்திற்காக எதிரியுடன் சண்டைசெய்தல் இரண்டு.

एकाकिनश्चात्ययिके कार्ये प्राप्ते यदृच्छया ।
संहतस्य च मित्रेण द्विविधं यानमुच्यते ॥ மனு 7. 165.

முன்னறியாத காலங்களில் உதவியுடனே உதவியற்றோ துரிதமாய்ச் சத்துருக்களின் பேரில் படையெடுத்தலே இருவிதமான எதிர்ப்பு.

क्षीणस्य चैव क्रमशो दैवात्पूर्वकृतेन वा ।
मित्रस्य चानुरोधेन द्विविधं स्मृतमासनम् ॥ மனு 7. 166.

எக்காரணத்திலாவது தான் சலித்தபொழுது அமைதியாயிருப்பது ஒன்று. சிநேகிதர்களுடைய யோசனையின் பேரில் அமைதியாயிருப்பது இரண்டு.

बलस्य स्वामिनश्चैव स्थितिः कार्यार्थसिद्धये ।
द्विविधं कीर्त्यते द्वैधं षाड्गुण्यगुणवेदिभिः ॥ மனு 7. 167.

காரியசித்திக்காக சேனாதிபதி, சேனை என்று இருவிதமாகப் பிரிப்பதையே பலங்களினுடைய பிரிவு, என்றழைக்கிறார்கள்.

अर्थसंपादनार्थं च पीड्यमानस्य शत्रुभिः ।
साधुषु व्यपदेशार्थं द्विविधः संश्रयः स्मृतः ॥ மனு 7. 168.

சத்துருவுக்குப் பயந்தாவது, தன்னுடைய எண்ணம் சித்தியாகுவதற்காவது தன்னைவிடப் பெரிய அரசனையாவது அல்லது மகானையாவது சரணமடைவதுதான் இரண்டு விதமான நேசமாம்.

यदावगच्छेदायत्यामाधिक्यं ध्रुवमात्मनः ।
तदात्वे चाल्पिकां पीडां तदा सन्धिं समाश्रयेत् ॥ மனு 7. 169.

தற்சமயம் சண்டைக்குச்சென்றால் தான் கஷ்டப்படுவாரென்றும், சில காலம் காத்திருந்த பிறகு சென்றால் தன் சத்துருவை நாசஞ்செய்து, ஜயம் பெறலாம் என்றும் அறிகிற அரசன் சத்துருவுடன் சமாதானம் செய்து கொண்டு தனக்கு நல்லகாலம் வரும்வரையில் காத்திருக்கட்டும்.

यदा प्रहृष्टा मन्येत सर्वास्तु प्रकृतीर्भृशम् ।
अत्युच्छ्रितं तथात्मानं तदा कुर्वीत विग्रहम् ॥ மனு 7. 170.

எப்பொழுது தன் பிரஜைகள் யாவரும், சேனையும் மிகவும் உன்னதமாயும் பிரசன்னமாயு மிருக்கிறவர்களாக அரசன் அறிகிறானோ அப்பொழுது தன் சத்துருவோடு யுத்தம் செய்யட்டும்.

यदा मन्येत भावेन हृष्टं पुष्टं बलं स्वकम् ।
परस्य विपरीतं च तदा यायाद्रिपुं प्रति ॥ மனு 7. 171.

எப்பொழுது, தன்னுடைய பலம் அதாவது சேனை சந்தோஷமாயும், பிரசன்னமாயும், சரியாயும், நன்கு பரிபாலிக்கப்பட்டும், போஷிக்கப்பட்டும், உடுத்தப்பட்டும் இருக்க எதிரிகளுடையது அதற்கு விரோதமாக இருக்கிறதோ அப்பொழுது அவர் சத்துருவுடன் யுத்தஞ்செய்யத் தொடாட்டும்.

यदा तु स्यात्परिक्षीणो वाहनेन बलेन च ।
तदासीत प्रयत्नेन शनैः सांत्वयन्नरीन् ॥ மனு 7. 172.

எப்பொழுது சேனையானது பலத்திலும், பெயரிலும் குறைந்து போகிறதோ அப்பொழுது அவர் சத்துருவை மெதுவாகச் சாந்தம் செய்து தன்னிடத்திலேயே வைத்திருக்கட்டும்.

मन्येतारिं यदा राजा सर्वथा बलवत्तरम् ।
तदा द्विधा बलं कृत्वा साधयेत्कार्यमात्मनः ॥ மனு 7. 173.

தன்னைவிட அதிக பலவானகச் சத்துருவை அறியும் அரசன் தன் பலத்தை இருமடங்காக்கியோ அல்லது இரண்டாகப் பிரித்தோ தன் காரியத்தைக் கைக்கூட்டிக்கொள்ளட்டும்.

यदा परबलानां तु गमनीयतमो भवेत् ।
तदा तु संश्रयेत् क्षिप्रं धार्मिकं बलिनं नृपम् ॥ மனு 7. 174.

தன்மேல் சத்துரு உடனே எதிர்ப்பான் என்று தெரிந்தவுடன் அவ்வரசன் நியாயமானவும் பலமுமுள்ள வேறு அரசனுடன் நேசஞ்செய்து கொள்ளட்டும்.

निग्रहं प्रकृतीनां च कुर्याद्योरिबलस्य च ।
उपसेवेत तं नित्यं सर्वयत्नैर्गुरुं यथा ॥ மனு 7. 175.

சத்துருக்களை நாசஞ் செய்வதிலேயோ, அமைதியை உண்டுபண்ணு வதிலேயோ, தன் சைனியங்களை அடக்குவதிலேயோ தனக்கு உபகாரம் செய்கிறவர்களை அரசன் தன் குருவைப்போல் எப்பொழுதும் கருதவேண்டும்.

यदि तत्रापि संपश्येद्दोषं संश्रयकारितम् ।
सुयुद्धमेव तत्राऽपि निर्विशंकः समाचरेत् ॥ மனு 7. 176.

தன்னைச் சேருகிறவர்களிடமாவது, நேசர்களிடமாவது தோஷத்தை காண்கிற அரசன் அவர்களுக்கு வெற்றி தராது சண்டைச் செய்யட்டும் தருமவானாயிருக்கிற அரசனுடன் ஒருபொழுதும் விரோதம்செய்துகொள்ளக் கூடாது. அவனுடன் எப்பொழுதும் சிநேகமாகவே இருக்கவேண்டும். பிரபல மாயிருக்கிற துஷ்டர்களை அடக்குவதற்கு மேற்சொன்னவைகளை யெல்லாம் கைக்கொள்ளட்டும்.

सर्वोपायैस्तथा कुर्यान्नीतिज्ञः पृथिवीपतिः ।
यथास्याभ्यधिका न स्युर्मित्रोदासीनशत्रवः ॥ மனு 7. 177.

நிபுணனை அரசன், அவனுடைய சிநேகிதன் மத்தியஸ்தன், சத்துரு இவர்கள் தன்னைவிட பலமடையாமலிருக்கும்படியான வழிகளை எடுத்துக் கொள்ளட்டும்.

आयतिं सर्वकार्याणां तदात्वं च विचारयेत् ।
अतीतानां चसर्वेषां गुणदोषौ च तत्त्वतः ॥ மனு 7. 178.

செய்யும் காரியங்கள், செய்யப்போகும் காரியங்கள், இவைகளினுடைய பலாபலன்களைச் சரிவர பரிசீலனைச் செய்யட்டும். பிறகு கெடுதல்களை விலக்கி நல்ல குணங் களை விருத்தி செய்யட்டும்.

आयत्यां च गुणदोषज्ञस्तदात्वे क्षिप्रनिश्चयः ।
अतीते कार्य्यशेषज्ञः शत्रुभिर्नाभिभूयते ॥ மனு 7. 179.

செய்யப்போகிற காரியங்களினுடைய குணதோஷங்களை அறிந்தும், திட மாய்க் காரியங்களைச்செய்தும் செய்தகாரியங்களின் பிழைகளைத் தெரிந்து மிருக்கிற அரசனை ஒரு பொழுதும் சத்துருக்கள் ஜயிக்க மாட்டார்கள்.

यथैनं नाभिसंदध्युर्मित्रोदासीनशत्रवः ।
तथा सर्वं संविदध्यादेष सामासिको नयः ॥ மனு 7. 180.

அரசன், அதாவது சபாபதி எப்பொழுதும், எவ்விதத்திலும் நேச இராஜ்யங்களினுடைய பலத்தையும், மத்தியஸ்த இராஜ்யங்களையும், சத்துருக் களையும் தன்வசத்தில் வைத்துக்கொள்ளவேண்டிய வழிகளைத்தேடட்டும். இதைஒரு பொழுதும் அலக்ஷியஞ் செய்யக்கூடாது. இதுவே, சுருங்கச்சொல் லில், உண்மையான இராஜ தந்திரமாகும்.

कृत्वा विधानं मूले तु यात्रिकं च यथाविधि ।
उपगृह्यास्पदं चैव चारान् सम्यग्विधाय च ॥ மனு 7. 184.

அரசன் சத்துருவுடன் யுத்தத்திற்குச் செல்லுமுன் தன் இராஜ்யத்தினுடைய க்ஷமத்தைத் தேடட்டும். போர்முனைக்குச் செல்லுங்கால் வேண்டிய பொருள்கள் யாவற்றையும் தயாரிக்கட்டும். சகல சேனைகள், வண்டிகள், வாகனங்கள், சஸ்திரங்கள் அஸ்திரங்கள் முதலானவைகளை எடுத்துக்கொள்ளட்டும். எங்கும் தூதர்களை அதாவது நாலாபக்கங்களிலிருந்தும் சமாசாரத்தைக் கொண்டுவர ஒற்றர்களை அனுப்பட்டும்.

संशोध्य त्रिविधं मार्गं षड्विधं च बलं स्वकम् ।
सांपरायिककल्पेन यायादरिपुरं शनैः ॥ மனு 7. 185.

மூவ்விதமார்க்கங்களும்- நில வழி, ஜலவழி ஆகாயவழி-சரியாயிருக்கின்றனவா என்று பார்த்துவிட்டு, நிலவழிகளில் ரதம், குதிரை, யானை, இவைகளின் பேரிலும், நடந்தும், நீர்வழிகளில் படகுகளின் பேரிலும், ஆகாயவழிகளில் விமானம் முதலானவைகளின்பேரிலும்செல்லட்டும். மேலும் வேண்டிய காலாட்படை, குதிரைப்படை, யானை, வாகனம், யுத்ததளவாடங்கள், அன்னபானாதிகள் முதலான பலங்களுடன் எக்காரணத்தையாவது உரைத்து சத்துருவினுடைய நகரசமீபத்திற்குச் செல்லட்டும்.

शत्रुसेविनि मित्रे च गूढे युक्ततरो भवेत् ।
गतप्रत्यागते चैव स हि कष्टतरो रिपुः ॥ மனு 7. 186.

உள்ளுக்குச் சத்துருவுடன் சேர்ந்து கொண்டு, சமாசாரத்தைக் கொடுத்து, வெளியில் தன்னுடன் சிநேகிதமாயிருக்கிறவருடன் வெகு எச்சரிக்கையாய்ப் பேசவேண்டும். ஏனென்றால் அந்தரங்க சத்துருவாயும் வெளியில் மித்திரனாயு மிருக்கிறவர்களைப் பெரிய சத்துருவாகக் கருதவேண்டும். சகல உத்தியோகஸ்தர்களும் யுத்தஞ் செய்யும் வித்தையைக் கற்றுக்கொண்டிருக்கிறார்களாவென்று அரசன் பார்க்கவேண்டும். தானும் தன் பிரஜைகளுமப்படியே. ஏனென்றால் நன்கு யுத்தஞ்செய்யக் கற்று கொண்டிருக்கிறவர்களே நன்றாய்ச் சண்டைச் செய்வார்கள்.

दण्डव्यूहेन तन्मार्गं यायात्तु शकटेन वा ।
वराहमकराभ्यां वा सूच्या वा गरुडेन वा ॥ மனு 7. 187.

கீழ்க்கண்ட ஒழுங்குகளில் அவர்கள் செவ்வையாய்ப் பழக்கப்படுத்தப்பட்டிருக்கட்டும்(i)வரிசையாய் சைனியங்களைச்செல்லச் செய்தல்(ii)வகுப்பு வாரியாய்ச் செல்லுதல் (iii) சதுரமாய்ச் செல்லுதல் (ஒன்றன்பின் ஒன்றாய்ச்சென்று அப்புறம் ஒன்று சேருதல்) (iv) இருசாரியாய்ச் செல்லுதல் (மீன்கள் நீரில் நீந்துவதுபோல்) (v) முன்பாகம்கூர்மையாயும் அடிபாகம் பருத்தும்இருக்கிற ஊசியைப்போல் செல்லுதல்(vi)சண்டைச் செய்யும் வண்ணம் முன்செல்லுதல்.

यतश्च भयमाशंकेत्ततो विस्तारयेद्बलम् ।
पद्मेन चैव व्यूहेन निविशेत सदा स्वयम् ॥ மனு 7. 188.

அபாயம் வரும் என்று ஊகிக்கும் பக்கத்தில் "பத்மவ்யூக" த்தைப்போல் (மத்தியில் தானும், சுற்றி சைனியங்களும் தாமரைப்பூவைப்போல்) தன். சைனியத்தை வைக்கட்டும்.

सेनापतिबलाध्यक्षौ सर्वदिक्षु निवेशयेत् ।
यतश्च भयमाशङ्केत् प्राचीं तां कल्पयेद्दिशम् ॥ மனு 7. 189

நாலாபக்கங்களிலும் சேனாதிபதிகளுடன் சைனியத்தை நிறுத்திவிட்டு மத்தியில் தானிருக்கட்டும். எண் மூலைகளிலும் தங்களுடைய வீரர்களுடன் நடத்தும் உத்தியோகஸ்தர்களை வைக்கவேண்டும். போர்முகத்தை நோக்கித் தானும் எல்லோரும் நிற்கட்டும். முன்னும் பின்னும் நன்றாய்க் காப்பாற்றிக் கொள்ளவேண்டும். ஏனென்றால் அப்பக்கங்களிலிருந்து சத்துரு தாக்கக்கூடும்.

गुल्मांश्च स्थापयेदाप्तान् कृतसंज्ञान समन्ततः ।
स्थाने युद्धे च कुशलानभीरूनविकारिणः ॥ மனு 7. 190.

யுத்தவித்தைகள் நன்றாய்க் கற்பிக்கப்பட்டவர்களாயும், தர்மிகர்களாயும், தாக்குவதிலும், தாக்கப்படுவதைத் தடுப்பதிலும் நிபுணர்களாயும், பயமற்ற வர்களாயும், நம்பிக்கை யுள்ளவர்களாயுமுள்ளவர்களையே நாலாபக்கமும் வைக்கவேண்டும்.

संहतान् योधयेदल्पान् कामं विस्तारयेद्बहून् ।
सूच्या वज्रेण चैवैतान् व्यूहेन व्यूह्य योधयेत् ॥ மனு 7. 191.

தன்னைவிட பலமுள்ள சத்துருக்களுடன் சண்டைச் செய்ய நேரிட்டால் அப்பொழுது தன் சைனியங்களை ஒன்று சேர்க்கட்டும். அல்லது சமயத்திற் கேற்றவாறு பரவச்செய்யட்டும். நகரத்திலாவது கோட்டையிலாவது சத் துருவினுடைய சேனையிலாவது நுழைந்து யுத்தஞ்செய்ய வேண்டியிருந்தால் அப்பொழுது (சூசிவியூகம்) அல்லது (வஜ்ரவியூகம்) இரண்டுபக்கமும் வெட்டு கிற இருதலைவாளினுடைய உருவத்தைப்போல் சைனியத்தை ஏற்படுத்தி சண்டைச்செய்து முன்செல்லட்டும். (சதத்வனி) துப்பாக்கி வெடிகளைத் தடுக்க வேண்டியிருக்கும்பொழுது (ஸர்பவ்யூகம்) சர்ப்பத்தைப்போல் நகர்ந்து துப் பாக்கிகளை அடைந்து அதைச் சுடுவோர்களைப் பிடித்தாவது, வெடிவைத்தா வது அத்துப்பாக்கிகளை எதிரிகள் பக்கம் திருப்பவேண்டும். அல்லது விருத்த யுத்தவீரர்களைத் துப்பாக்கிகளின் முன்னால் குதிரைகளின் பேரில் சவாரி செய்யச்செய்து பலமுள்ளவர்களைப் பக்கத்தில் வைத்துக்கொண்டு சத் துருக்களைத் தாக்கவேண்டும். சத்துருக்களைச் சுட்டு அவர்களுடைய பலங் களைச்சின்னபின்னமாக்கிப் பிடிக்கட்டும்.

स्यन्दनाश्वैः समे युध्येदनूपे नौद्विपैस्तथा ।
वृक्षगुल्मावृते चापैरसिचर्मायुधैः स्थले ॥ மனு 7. 192.

சமபூமிகளில் ரதம் குதிரை பாதம் இவைகளின் பேரிலும், சமுத்திரங்களில் கப்பல்களிலும், ஆழமற்ற ஜலங்களில் யானைகளின்பேரிலும், விருக்ஷம், காடு இவைகளில் வாகனங்களிலும், மணல் வெளிகளில் கத்தி கேடயங்களினலும் யுத்தஞ் செய்யவேண்டும்.

प्रहर्षयेद्बलं व्यूह्य तांश्च सम्यक् परीक्षयेत् ।
चेष्टाश्चैव विजानीयादरीन् योधयतामपि ॥ மனு 7. 194.

படைகள் சண்டைச் செய்யும் பொழுது அவர்களைச் சந்தோஷப்படுத்தி உத்ஸாஹப் படுத்தவேண்டும். யுத்தம் முடிந்த பிறகு சௌரியத்துடன் யுத்தஞ் செய்தவர்களை நல்லவார்த்தைகளினலும், அவர்களுக்கு வேண்டியவைகளைக் கொடுப்பதினலும் அவரவர்களுடைய சௌகரியங்களைக்கவனித்துச் சகலவிதங்களிலும் அவர்களுக்கு உதவி புரிவதினல் சந்தோஷப்படச்செய்யட்டும். சைனியங்களை வேண்டிய வ்யூகங்களாகப் பிரித்துக்கொள்ளாமல் ஒரு நாளும் சண்டைக்குச் செல்லக்கூடாது. சைனியங்களினுடைய நடவடிக்கைகளைக் கவனித்து அவர்கள் நன்ருய் யுத்தஞ் செய்கிருர்களா? கபடமாய்ச் செய்கிருர்களா? என்று கவனிக்க வேண்டும்.

उपरुध्यारिमासीत राष्ट्रं चास्योपपीडयेत् ।
दूषयेच्चास्य सततं यवसान्नोदकेन्धनम् ॥ மனு 7. 195.

சமயம் வாய்க்கும் பொழுது சத்துருக்களை வளைத்துக்கொண்டு, அவர்களைத் தாமசப்படுத்தி அவர்களுடைய தேசத்தைத் தளரச்செய்து, புல், நீர், ஆகாரம் கட்டை முதலானவைகளை அனுப்பாமல் நிறுத்தவேண்டும்.

भिन्द्याच्चैव तडागानि प्राकारपरिखास्तथा ।
समवस्कन्दयेच्चैनं रात्रौ वित्रासयेत्तथा ॥ மனு 7. 196.

சத்துருக்களினுடைய நகரமதில்களையும், நீர்நிலைகளையும், அகழ்களையும், நாசஞ்செய்து இரவுகாலங்களிற் பயமுறுத்தி அவர்களை நாசஞ்செய்ய வேண்டிய உபாயங்களைத் தேடட்டும்.

प्रमाणानि च कुर्वीत तेषां धर्म्यान्यथोदितान् ।
रत्नैश्च पूजयेदेनं प्रधानपुरुषैः सह ॥ மனு 7. 203.

சத்துருக்களை ஜயித்த பிறகு அவர்களிடமிருந்து பிரமாணம், அதாவது, பிரதிக்ஞை ஒன்று எழுதி வாங்கிக் கொள்ளட்டும். அல்லது சமயமேற்பட்டால் வேறு தரும புருஷனை அந்த வம்சத்திலிருந்தே அரசனாக ஏற்படுத்தி அவர்களுடைய ஆக்ஞைப்பிரகாரம் அதாவது தர்மயுக்தமாய் ராஜநீதி பிரகாரம் நடந்து நியாயமாய்ப்பிரஜைகளைக் காப்பாற்றுவதாக எழுதிவாங்கிக்கொள்ளட்

டும். இம்மாதிரி புத்தி சொல்லி மறபடியும் உபத்திரவம் ஏற்படாமலிருக்கும் படியான புருஷர்களை அவர்களிடம் வைக்கவேண்டும். ஜயிக்கப்பட்ட தன் சத்துருவை இரத்னம் முதலான உத்தம பதார்த்தங்களினல் மரியாதை செய்யட்டும். அவர்களுடைய வாழ்க்கைக்கு வேண்டியதைக்கூட அழித்து அவ்வளவு அற்பமாக நடத்த வேண்டாம். கைதியாய்ச்செய்திருந்த போதிலும் அவர்களுடைய தோல்வியைக்கூட நினையாமல் சந்தோஷமா யிருக்கும்படி அவர்களை நிலைக்கு ஏற்றவாறு நடத்தட்டும்.

आदानमप्रियकरं दानञ्च प्रियकारकम् ।
अभीप्सितानामर्थानां काले युक्तं प्रशस्यते ॥ மனு 7 204.

ஏனென்றால் இவ்வுலகில் பிறர்களுடைய பொருளைக் கொள்ளுவது வெறுக்கத்தக்கதும் கொடுப்பது விரும்பத்தக்கதுமான காரியம். அவருக்கு வேண்டியதை வேண்டியகாலத்திற் செய்வது மிகவும் உத்தமமான காரியம். ஜயிக்கப்பட்ட சத்துருக்களுக்கு வேண்டியதைக் கொடுப்பது மிகவும் உத்தமமான காரியம்.

சிநேகத்திற்கு உரியவர்கள்

हिरण्यभूमिसंप्राप्त्या पार्थिवो न तथैधते ।
यथा मित्रं ध्रुवं लब्ध्वा कृशमप्यायतिक्षमम् ॥ மனு 7. 208.

உறுதியும், உண்மையும் நிகழ்கால அறிவுமுள்ள சிநேகிதனை பெறுவதினல் ஏற்படும் பலன், ஸ்வர்ணத்தாலும், பூமி முதலானவைகளாலும் அரசனுக்கு ஏற்படாது. தன்னுடைய காரியசித்திக்கு அவர் பிரயோஜனமுள்ளவராயிருந்தபோதிலும் சரி, இல்லாவிட்டாலும் சரி, துர்பலமுள்ளவராயிருந்தாலும் சரி, அத்தகைய நேசன் மிகவும் பிரயோஜனமுள்ளவன்.

धर्मज्ञं च कृतज्ञं च तुष्टप्रकृतिमेव च ।
अनुरक्तं स्थिरारम्भं लघुमित्रं प्रशस्यते ॥ மனு 7. 209.

தருமங்களை அறிகிறவனும், செய்நன்றி மறவாதவனும், பிரசன்ன ஸ்வபாவ முள்ளவனுயுமிருக்கிற சிநேகிதனை (சிறியவனுயிருந்தபோதிலும்) அடைகிற அரசன் புகழத்தகுந்தவன்.

प्राज्ञं कुलीनं शूरं च दक्षं दातारमेव च ।
कृतज्ञं धृतिमन्तञ्च कष्टमाहुररिं बुधाः ॥ மனு 7. 210.

புத்திமான், நற்குலத்திலுதித்தவன், சூரன், வீரன், உறுதியானவன், பொறுமையுள்ளவன் இத்தகையஸ்வபாவங்களை உடைய ஒரு நேசனைப் பகைத்துக்கொள்ளக் கூடாது. அப்பேர்ப்பட்டவனை வெறுத்துக்கொள்ளுகிறவன் துக்கத்தையடைகிறான்.

आर्य्यता पुरुषज्ञानं शौर्यं करुणवेदिता ।
स्थौललक्ष्यं च सततमुदासीनगुणोदयः ॥ மனு 7. 211

அன்பார்ந்த சிநேகனையும், பிராப்பகைவனையும் தன்னைக் காட்டிக் கொள்ளாமலும், சூரத்வம், வீரத்வம், கருணை இவைகளை உடையவனையும், மனோரகஸ்யத்தை வெளியிடாதவனையு மிருப்பவன் மத்திஸ்யஸ்தன் என்றழைக்கப்வான்.

एवं सर्वमिदं राजा सह संमन्त्र्य मन्त्रिभिः ।
व्यायाम्याप्लुत्य मध्याह्ने भोक्तुमन्तःपुरं विशेत् ॥ மனு 7. 216.

முன்சொன்னமாதிரி அரசன் காலையிலெழுந்திருந்து சௌச்சம், சந்தியோபாசனை, அக்கினிஹோத்திரம் முதலானவைகளை முடித்து அல்லது முடிக்கச் செய்து சகலமந்திரிகளுடன் யோசனை செய்து தன் சேனை, சேவகர்கள் இவர்களைப்பார்த்து நல்வரவு கூறி, குதிரை, யானை, பசு முதலானவைகளினுடைய லாயங்களையும், அஸ்திர சஸ்திர சாலைகளையும், கஜானைவையும் தானே பார்த்துக் குறைகளைச் சொல்லட்டும். மல்லகச்சாலைக்குச் சென்று தேக பயிற்சி செய்து மத்தியான சமயத்தில் அந்த புரத்தில் தன் பத்தினி முதலானவர்களுடன் உண்ணச் செல்லட்டும். நன்றாய்ப் பரிக்ஷிக்கப்பட்டு, புத்திபலம், பராக்ரமம், இவைகளை விருத்தி செய்கிறதாய் அது இருக்கவேண்டும். அவருடைய போஜனம் பலவித, பதார்த்தங்கள், பானம், மதுரம் இவைகளுடன் கூடினதாயும், சுகந்தம் உள்ளதாயும், ரோகங்களை நாசஞ் செய்யக்கூடிய சுத்தமாயும் பக்குவமாயும் இருக்கவேண்டும்.

இம்மாதிரி தன் இராஜ்யங்களினுடைய க்ஷேமத்தை விருத்தி செய்ய வேண்டும்.

पञ्चाशद्भाग आदेयो राज्ञा पशुहिरण्ययोः ।
धान्यानामष्टमो भागः षष्ठो द्वादश एव वा ॥ மனு 7. 130.

வியாபாரம் செய்கிறவர்களிடமிருந்து அவர்களுடைய ஸ்வர்ணம் வெள்ளி, லாபங்களில் ஐம்பதில் ஒருபாகமும், அரிசி முதலான தானியங்களில் ஆறிலொருபாகமும் எட்டிலொருபாகமும் முறையே வரியாக அரசன் பெற்றுக் கொள்ளவேண்டும்.

இனவாரியாகப் பெற்றுக்கொள்ளாமல் ரொக்கமாகப் பெற்றுகொள்ளும் பொழுது குடியானவர்கள் முதலானவர்கள் அன்ன பானாதிகளிலிருந்து வருந்தாமலிருக்கும் படியாகப் பெற்றுக்கொள்ளட்டும். ஏனென்றால் பிரஜைகளினுடைய க்ஷேமத்திலேயே அரசனுடைய க்ஷேமம். ஆகையினால் பிரஜைகளைத் தன் மக்களைப்போல் சந்தோஷமுள்ளவர்களாகச் செய்யட்டும். பிரஜைகளும் அரசன் முதலானவர்களைப் பாலகர்களாக பாவிக்கட்டும். பிரஜாபலத்திற்கு அவர்களே காரணமாயிருக்கிறார்கள். அரசனே அவர்களுடைய பால

கன். பிரஜைகளன்னியில் அரசன் எங்கிருந்து வரக்கூடும். அரசனன்னியில் யாருடைய பிரஜைகளென்று அவர்களழைத்துக் கொள்ளக்கூடும்? இருவர்களும்—ஆளுகிறவர்கள், ஆளப்படுகிறவர்கள்—தங்கள் தங்களுடைய காரியங்களில் தனியாகவும், கலந்து ஒத்துழைக்கவேண்டிய காரியங்களில் சேர்ந்தும் நடக்கட்டும். பிரஜைகளினுடைய சம்மதத்திற்கு விரோதமாய் அரசனும், அரசனுடைய சம்மதத்திற்கு விரோதமாய் மந்திரிகளும் பிரஜைகளும் செல்ல வேண்டியதில்லை.

அரசனுடைய அரசியல் காரியங்களைப்பற்றி இவ்விதம் சுருங்கச் சொன்னோம். இதைக்குறித்து அறிந்து தெரிந்துகொள்ள விரும்புவோர்கள் நான்கு வேதம் மனுஸ்மிருதி, சுக்ரநீதி, மகாபாரதம் முதலானவைகளைப் பார்க்கட்டும். நியாயத்தைச் செலுத்துகிற விஷயங்களை மனுஸ்ம்ருதி எட்டாவது, ஒன்பதாவது அத்தியாயங்களிலிருந்து அறிந்து கொள்ளலாம். ஆனல் அவைகள் கீழேசுருக்கமாய் விவரிக்கப்பட்டிருக்கின்றன—

प्रत्यहं देशदृष्टैश्च शास्त्रदृष्टै हेतुभिः ।
अष्टादशसु मार्गेषु निविद्धानि पृथक् पृथक् ॥ மனு 8. 3.

சபைகள், அரசன், அதிகாரிகள் முதலானவர்கள் தேசாசாரம், சாஸ்திர வியவகாரம் இவைகளில் கூறியபடி கீழ்க்கண்ட பதினெட்டு வகைகளாகப் பிரிக்கப்பட்டிருக்கும் விவாதங்களை "விவாதயுக்த கர்மங்களினுல்" பிரதிதினமும் தீர்ப்புச்செய்யட்டும். புதுசட்டங்கள் ஏற்படுத்த வேண்டியிருந்தால்—சாஸ்திர வியவகாரங்களில் சொல்லப்படாத விஷயங்களுக்கு—அரசனுடையவும், பிரஜைகளுடையவும் மேன்மையை விருத்திசெய்கிறதான நியாயங்களை ஏற்படுத்தட்டும்.

तेषामाद्यमृणादानं निक्षेपोऽस्वामिविक्रयः ।
संभूय च समुत्थानं दत्तस्यानपकर्म च ॥
वेतनस्यैव चादानं संविदश्च व्यतिक्रमः ।
क्रयविक्रयानुशयो विवादः स्वामिपालयोः ॥
सीमाविवादधर्मश्च पारुष्ये दण्डवाचिके ।
स्तेयं च साहसं चैव स्त्रीसङ्ग्रहमणमेव च ॥
स्त्रीपुंधर्मो विभागश्च द्यूतमाह्वय एव च ।
पदान्यष्टादशैतानि व्यवहारस्थिताविह ॥ மனு 8. 4-7.

(1) கடன் வாங்கிக்கொடுக்காமலிருப்பது (2) "வைப்பு" ஒருவரிடம் சாமான்களை வைத்துவிட்டு அவர் அதைத் திருப்பிக்கொடாததிலிருந்து ஏற்படும் விவாதம் (3) பிறருடைய பொருளை ஒருவன் விற்பது (4) ஒருவன் மேல் குற்றஞ் சுமத்துவதற்காகப் பலர்சேருவது (5) கொடுத்த பொருளைத்

தா மறுப்பது (6) ஒருவருடைய கூலிகளைக் குறைத்துக் கொடுப்பது அல்லது கொடுக்காமலிருப்பது (7) ஒப்பந்தத்திற்கு விரோதமாய் நடப்பது (8) விற்பனைகளிலிருந்தும் வாங்கிக்கொள்வதிலிருந்தும் ஏற்படும் விவாதம் (9) பிராணிகளின் சொந்தக்காரனுக்கும் அதைபாதுகாத்து வருகிறவனுக்கும் ஏற்படும் சச்சரவு (10) எல்லைச்சண்டை (11) அடிதடி சண்டை (12) அபவாதம் (13) களவு, கன்னம், கொள்ளை (14) காரியங்களைப்பலாத்காரமாய்ச் செய்தல் (15) வியபசாரித்தனம் (16) இல்லறகடமைகளை மீறுதல் (17) தாயாதிச் சண்டை (18) சூதாடல்—ஜடபதார்த்தங்களுடனும் சேதனங்களுடனும். இவைகள் பரஸ்பர விவாதங்களினுடைய பதினெட்டுகாரணங்களாகும்.

एषु स्थानेषु भूयिष्ठं विवादं चरतां नृणाम् ।
धर्मं शाश्वतमाश्रित्य कुर्यात्कार्यविनिर्णयम् ॥ மனு 8. 8.

ஸநாதன தர்மத்தை ஆசிரயித்து நியாயத்துடன் பக்ஷபாத மன்னியில் நியாயாதிபதி இவ்வியவகாரங்களைத் தீர்க்கட்டும்.

धर्मो विद्धस्त्वधर्मेण सभां यत्रोपतिष्ठते ।
शल्यं चास्य न कृन्तन्ति विद्धास्तत्र सभासदः ॥ மனு 8. 12.

அதர்மத்தால் புண்படுத்தப்பட்ட தர்மம், நியாயசபையை அடைந்தும் நியாயம் பெறுவிடில், அச்சபையினர் அனைவரும் அதர்மிகர் எனவே அழைக்கப்படுவார்கள்.

सभां वा न प्रवेष्टव्या वक्तव्यं वासमंजसम् ।
अब्रुवन्विब्रुवन्वापि नरो भवति किल्बिषी ॥ மனு 8. 113.

தர்மாத்மாக்கள் ஒருக்காலும் சபையில் (நியாயஸ்தலத்தில்) பிரவேசிக்கக் கூடாது. பிரவேசித்தால் உண்மையே பேசவேண்டும். நேரில் அநியாயம் நடப்பதைப் பார்த்துக்கொண்டு மௌனமாயிருக்கிற சத்தியவாதியும் அல்லது சத்திய நியாயத்திற்கு விரோதமாய்ச்சொல்லுகிறவர்களும் மகாபாபிகளாவார்கள்.

यत्र धर्मो ह्यधर्मेण सत्यं यत्रानृतेन च ।
हन्यते प्रेक्षमाणानां हतास्तत्र सभासदः ॥ மனு 8. 114.

எச்சபையில் அதர்மத்தினால் தர்மமும் அசத்தியத்தினால் சத்தியமும் சபையோர்களின் முன்னரே நாசமடைகிறதோ, அச்சபையினோர் யாவரும் இறந்தவர்களே. உயிருடையோர் என எவரையும் அழைத்தல்பொருந்தாது.

धर्म एव हतोहन्ति धर्मोरक्षति रक्षितः ।
तस्माद्धर्मो न हन्तव्यो मा नो धर्मो हतोऽवधीत् ॥ மனு 8. 115.

தர்மம் நாசஞ் செய்யப்படின் அந்நாசத்திற்குக் காரணமாயிருப்பவனை அது நாசஞ்செய்கிறது. காப்பாற்றபடும் தருமம் காப்பாற்றுகிறவனைக் காப்பாற்றுகிறது. ஆதலால் தருமத்தை யாரும் மீறுதல் முறையாகாது.

वृषो हि भगवान् धर्मस्तस्य यः कुरुते ह्यलम् ।
वृषलं तं विदुर्देवास्तस्माद्धर्मं न लोपयेत् ॥ மனு 8. 116.

சகலஐசுவர்யங்களைக் கொடுத்தும் சுகங்களை அளித்தும் வருகிற தருமத்தை மீறுகிறவர்களை வித்வான்கள் நீசனிலும் நீசனாகக் கருதுகிறார்கள். ஆகையினால் தருமத்தை யாரும் மீறுதல் கூடாது.

एक एव सुहृद्धर्मो निधनेप्यनुयाति यः ।
शरीरेण समं नाशं सर्वमन्यद्धि गच्छति ॥ மனு 8. 117.

இவ்வுலகில் தர்மம் ஒன்றே சிநேகிதன். அதுவே இறந்த பிறகும் மனிதனைத் தொடருகிறது. மற்றவை சரீர நாசத்துடன் நாசமடைகிறது. தருமம் ஒருநாளும் மனிதனைக் கைவிடுகிறதில்லை.

पादोऽधर्मस्य कर्त्तारं पादः साक्षिणमृच्छति ।
पादः सभासदः सर्वान् पादो राजानमृच्छति ॥ மனு. 8. 118.

(எந்தியாஸ்தலத்தில்) எச்சபையில் பக்ஷபாதத்துடன் அநியாயம் செய்யப்படுகிறதோ அங்கே அதர்மம் நான்கு சரிபாகங்களாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. முதல் பாகம் கர்த்தாவையும், இரண்டாவது சாக்ஷியையும், மூன்றுவது சபையோர்களையும், நான்காவது சபாபதியாயிருக்கும் நியாயாதிபதியையும் அல்லது சபாபதியையும்முறையே அடைகின்றன.

राजा भवत्यनेनास्तु मुच्यन्ते च सभासदः ।
एनो गच्छति कर्त्तारं निन्दार्हो यत्र निन्द्यते ॥ மனு 8. 119.

எச்சபையில் நிந்தைக்கு யோக்கியமானவர்கள் நிந்திக்கப்படுகிறார்களோ, ஸ்துதிக்கு யோக்கியமானவர்கள் ஸ்துதிக்கப்படுகிறார்களோ, தண்டனைக்கு யோக்கியமானவர்கள் தண்டிக்கப்படுகிறார்களோ,மரியாதைக்கு யோக்கியமானவர்கள் மரியாதைசெய்யப்படுகிறார்களோ அங்கே அரசன், சபையோர்கள் எல்லோரும் பாபத்திலிருந்து நீங்கிப் பரிசுத்தமாகிறார்கள். பாபிகளே பாதிக்கப்படுகிறார்கள்.

சாக்ஷிகள்

आप्ताः सर्वेषु वर्णेषु कार्य्याः कार्येषु साक्षिणः ।
सर्वधर्मविदोऽलुब्धा विपरीतांस्तु वर्जयेत् ॥ மனு 8. 63.

வித்வான்கள், கபடமற்றவர்கள். நன்றாய்த் தருமத்தை அறிந்தவர்கள், பேராசையற்றவர்கள், சத்தியவாதிகள், இவர்களே சகலவகுப்புகளிலிருந்தும் சாக்ஷிக்கு யோக்கியமுள்ளவர்கள். மேற்கூறிய குணங்களைப் பெறுதவர்கள் சாக்ஷிக்கு யோக்கியமானவர்கள் அல்ல.

स्त्रीणां साक्ष्यं स्त्रियः कुर्युर्द्विजानां सदृशा द्विजाः ।
शूद्राश्च सन्तः शूद्राणामन्त्यानामन्त्ययोनयः ॥ மனு 8. 72.

ஸ்திரீகளுக்கு ஸ்திரீகளும், துவிஜர்களுக்கு துவிஜர்களும், சூத்திரர்களுக்கு சூத்திரர்களும், தீண்டாதவர்களுக்குத் தீண்டாதவர்களுமே முறையே சாக்ஷியாக இருக்கவேண்டும்.

साहसेषु च सर्वेषु स्तेयसङ्ग्रहणेषु च ।
वाग्दण्डयोश्च पारुष्ये न परीक्षेत साक्षिणः ॥ மனு 8. 75.

திருட்டு, வியபசாரம், அடித்தல் முதலிய தீச்செயல்கள். இவ்விவாதங்களில் மிகவும் நுட்பமாய் சாட்சியங்களை விசாரிப்பது மிகவும் அவசியமென்று நியாயாதிகாரி நினைக்கவேண்டியதில்லை. ஏனென்றால் இவைகள் இரகசியமாய் செய்யப்படும் காரியங்களாம். ஆகையினால் சுலபத்தில் சாட்சிகள் கிடைப்பது அரிது.

बहुत्वं परिगृह्णीयात्साक्षिद्वैधे नराधिपः ।
समेषु तु गुणोत्कृष्टान् गुणिद्वैधे द्विजोत्तमान् ॥ மனு 8. 78.

பொருத்தமற்ற சாட்சியங்கள் ஏற்படும் காலத்து பெரும்பான்மையோரின் அபிப்பிராயங்களைத் தழுவியும், அல்லாத விடத்து, உத்தமர், அறிஞர், முனீந்திரர்கள், மஹரிஷிகள் இவர்களுடைய வாய்பொருப்பைத் தழுவியும் தீர்ப்புத் தரல் வேண்டும்.

समक्षदर्शनात्साक्ष्यं श्रवणाच्चैव सिध्यति ।
तत्र सत्यं ब्रुवन्साक्षी धर्मार्थाभ्यां न हीयते ॥ மனு 8. 79.

சாக்ஷிகளில் இருவிதமுண்டு. ஒன்று கண்ணால் பார்ப்பது, இரண்டு கேட்பது. நியாயஸ்தலத்தில் உண்மையைப் பேசுகிறவர்கள் தர்மஹீனர்களாகவோ, தண்டனைக்குப் பாத்திரங்களாகவோ ஆகிறதில்லை. பொய் சொல்லுகிற சாக்ஷிகள் தக்கவாறு தண்டிக்கத் தகுந்தவர்களாகிறார்கள்.

साक्षी दृष्टश्रुतादन्यद्विब्रुवन्नार्य्यसंसदि ।
अवाङ्नरकमभ्येति प्रेत्य स्वर्गाच्च हीयते ॥ மனு 8. 80.

நியாயஸ்தலத்திலாவது அல்லதுபெரியோர்களினுடைய சபையிலாவது பார்த்ததிற்கும் கேட்டதற்கும் விரோதமாய்ச் சொல்லுகிற சாக்ஷிகளுடைய நாக்குத் தண்டிக்கத்தகுந்தது. அதன் பலனாக துக்கரூபமான நரகத்தை யடைந்து சுகவாழ்வு அற்றவர்களாகிறார்கள்.

स्वभावेनैव यद् ब्रूयुस्तद् ग्राह्यं व्यावहारिकम् ।
अतो यदन्यद्विब्रूयुर्धर्मार्थं तदपार्थकम् ॥ மனு 8. 81.

வியவகாரசம்பந்தத்தில் சுவபாவமாய்ச் சொல்லுகிறதை ருஜுவாக எடுத்துக்கொண்டு கற்பிக்கப்பட்டு பாடம்போல் சொல்லுகிறவைகளை பிரயோஜன மற்ற சாட்சியமாக நியாயாதிகாரி எடுத்துக் கொள்ளட்டும்.

सभान्तः साक्षिणः प्राप्तानर्थिप्रत्यर्थिसन्निधौ ।
प्राड्विवाकोऽनुयुञ्जीत विधिनाऽनेन सान्त्वयन् ॥ மனு 8. 83.

வாதி, பிரதிவாதி இவர்களுடைய முன்னே நியாயஸ்தலத்திற்கு வந்திருக்கும் சாக்ஷிகளைப் பார்த்து நியாயாதிபதியும், நியாயவாதியும் இவ்விதம் சொல்லட்டும்.

यद् द्वयोरनयोर्वेत्थ कार्येऽस्मिन् चेष्टितं मिथः ।
तद् ब्रूत सर्वं सत्येन युष्माकं ह्यत्र साक्षिता । மனு 8. 84.

ஓ சாக்ஷிகளே ! இக்காரியத்தில் இவ்விருவர்களுடைய பரஸ்பர காரியங்களில் உங்களுக்குத் தெரிந்தவரை உண்மையாகச் சொல்லுங்கள். ஏனென்றால் இவ்விஷயத்தில் உங்களுடைய சாக்ஷியம் வேண்டியதாயிருக்கிறது.

सत्यं साक्ष्ये ब्रुवन्साक्षी लोकानाप्नोति पुष्कलान् ।
इह चानुत्तमां कीर्त्तिं वागेषा ब्रह्मपूजिता ॥ மனு 8. 96.

உண்மையைப் பேசுகிறசாக்ஷி ஜன்மாந்திரங்களிலும், லோகாந்திரங்களிலும் உத்தம ஜன்மத்தை அடைந்து சுகத்தை அடைகிறான். இஜ்ஜன்மத்திலும், பரஜன்மத்திலும் கீர்த்தியை அடைகிறான். ஏனென்றால் "வாணி" யே (வாக்கே) வேதங்களில் மரியாதைக்கும் அவமானத்திற்கும் காரணமெனப்படுகிறது.

सत्येन पूयते साक्षी धर्मः सत्येन वर्द्धते ।
तस्मात्सत्यं हि वक्तव्यं सर्ववर्णेषु साक्षिभिः ॥ மனு 8. 91.

உண்மையைப் பேசுகிறவர்கள் மரியாதை செய்யப்படும், பொய் பேசுகிறவர்கள் நிந்திக்கவும் படுகிறார்கள். ஆகையினால் பரிசுத்தமாக்குகிற சத்தியத்தையே சகல வர்ணங்களினுடைய சாக்ஷிகள் யாவரும் சொல்ல வேண்டும். உண்மையை உரைப்பதினால் தர்மம் விருத்தியாகிறது.

आत्मैव ह्यात्मनः साक्षी गतिरात्मा तथात्मनः ।
मावमंस्थः स्वमात्मानं नृणां साक्षिणमुत्तमम् ॥

ஆத்மாவிற்கு சாக்ஷி ஆத்மாவே. ஆத்மாவினுடைய கதி ஆத்மாவே. ஆகையினால் ஓ மனிதர்களே நீங்கள் சகல மானிடர்களுக்கும் உத்தம சாக்ஷியாகிறபடியினால் உங்களுடைய ஆத்மாவை அவமானம் செய்யாதேயுங்கள். அதாவது உங்களுடைய ஆத்மாவும் அதிலிருப்பதும் உண்மை, அதற்கு விரோதமானது பொய்.

यस्य विद्वान् हि वदतः क्षेत्रज्ञो नाभिशङ्कते ।
तस्मान्न देवाः श्रेयांसं लोकेन्यं पुरुषं विदुः ॥

சந்தேகமன்னியில் தான் சாக்ஷி கூறும்பொழுது தன் அந்தரங்க எண்ணங்களை அறிகிற ஒருவரையாவது வித்வான்கள் உத்தமர்களாக நினைப்பதில்லை.

एकोऽहमस्मीत्यात्मानं यत्वं कल्याण मन्यसे ।
नित्यं स्थितस्ते हृद्येष पुण्यपापेक्षिता मुनिः ॥

ஓ மனிதனே! பொய்சொல்லி நீ சௌபாக்கியங்களை அடைய விரும்புவாயேயானால் அது பிழையாகும். ஏனென்றால் உன் ஹிருதயத்தில் அந்தர்யாமியாயிருக்கிற பரமேசுவரர் பாப புண்ணியங்களைப் பார்த்துக்கொண்டேயிருக்கிறார். ஆகையினால் அப்பரமாத்மாவுக்குப் பயந்து எக்காலமும் உண்மையையேப்பேசுங்கள்.

लोभान्मोहाद्भयान्मैत्रात्कामात् क्रोधात्तथैव च ।
अज्ञानाद्बालभावाच्च साक्ष्यं वितथमुच्यते ॥ மனு 8. 118

வாக்கு மூலங்கள்.

லோபம், மோகம், பயம், சிநேகம், காமம், குரோதம், அஞ்ஞானம், சிறுபிள்ளைத்தனம் இவைகளை முன்னிட்டுக் கொடுக்கும் வாக்கு மூலங்களை ருஜுவாக ஏற்றுக்கொள்ளக் கூடாது.

एषामन्यतमे स्थाने यः साक्ष्यमनृतं वदेत् ।
तस्य दण्डविशेषांस्तु प्रवक्ष्याम्यनुपूर्वशः ॥ மனு 8. 119.

இவைகளில் எக்காரணத்தையாவது கொண்டு பொய் சொல்லுகிற சாக்ஷிகளைப் பலவிதமாகத் தண்டிக்க வேண்டும்.

लोभात्सहस्रंदण्ड्यस्तु मोहात्पूर्वन्तुसाहसम् ।
भयाद् द्वौ मध्यमौ दण्ड्यौ मैत्रात्पूर्वं चतुर्गुणम् ॥
कामाद्दशगुणं पूर्वं क्रोधात्तु त्रिगुणं परम् ।
अज्ञानाद् द्वे शते पूर्णे बालिश्याच्छतमेव तु ॥ மனு 120-121.

தண்டனைகள்.

லோபத்தினால் பொய் சாக்ஷியம் கூறுகிறவர்களுக்கு 1000 "பணம்" ரூ. 15-12-0ம், மோகத்தினால் சொல்லுகிறவர்களுக்கு 250 பணமும் ரூ3-2-0ம், பயத்தினால் சொல்லுகிறவர்களுக்கு ரூ 6-4-0ம், சிநேகத்தினால் சொல்லுகிறவர்களுக்கு ரூ12-8-0ம், காமத்தினால் சொல்லுகிறவர்களுக்கு ரூ 25ம், குரோதத்தினால் சொல்லுகிறவர்களுக்கு ரூ 46-14-0ம், அஞ்ஞானத்தி

ளுல் சொல்லுகிறவர்களுக்கு ரூ 6ம், சிறு பிள்ளைத்தனமாய்க் கூறுகிறவர்களுக்கு ரூ 1-9-0ம், ஆக முறையே அபாரதம் விதித்தல் முறை.

उपस्थमुदरं जिह्वा हस्तौ पादौ च पञ्चमम् ।
चक्षुर्नासा च कर्णौ च धनं देहस्तथैव च ॥ மனு 8. 125.

தண்டனையை ஜனன இந்திரியங்கள், வயிறு, நாக்கு, கை, கால்கள், கண்கள், மூக்கு, காதுகள், சொத்து, சரீரம் இவைகள் மூலமாய் செலுத்தவேண்டும்.

अनुबन्धं परिज्ञाय देशकालौ च तत्त्वतः ।
साराऽपराधौ चालोक्य दण्डं दण्ड्येषु पातयेत् ॥ மனு 8. 126.

மேற்சொன்னதும், இனி சொல்லப்போகிறதுமான பலவித தண்டனைகளைத் தேசம், காலம், குற்றவாளியுடைய ஸ்திதி இவைகளைத் தழுவி விதிக்கவேண்டும். எவ்விதமென்றால் மிகவும் ஏழையாயிருந்தால் கொஞ்ச அபதாரமும், தனவானாயிருந்தால் அதைப்போல் இருமடங்கோ, அல்லது மும்மடங்கோ அதிகமாக இருக்கட்டும்.

अधर्मदण्डनं लोके यशोघ्नं कीर्त्तिनाशनम् ।
अस्वर्ग्यञ्च परत्रापि तस्मात्तत्परिवर्जयेत् ॥ மனு 8 127.

இவ்வுலகில் யார் அதர்மமான தண்டனையை விதிக்கிறார்களோ அவர் இருந்த, இருக்கிற, இருக்கப்போகிறதும் எங்கும் ஏற்படுகிறதுமான கீர்த்தியை நாசஞ் செய்துகொண்டு துக்கத்தை அடைகிறார்கள். ஆகையினால் அதர்மமான தண்டனையை ஒருக்காலும் விதிக்கக்கூடாது.

अदण्ड्यान्दण्डयन् राजा दण्ड्यांश्चैवाप्यदण्डयन् ।
अयशो महदाप्नोति नरकं चैव गच्छति ॥ மனு 8. 128.

தண்டிக்க வேண்டியவர்களைத் தண்டிக்காமலும், தண்டனைக்கு அருகரில்லாதவர்களைத் தண்டிப்பவனான அரசன் பெரிய துக்கத்தை அடைந்து இறந்த பிறகும் துக்கத்தை அனுபவிக்கிறான். ஆகையினால் தண்டிக்க வேண்டியவர்களைத் தண்டித்தும், அல்லாதவர்களை தண்டியாமலும் இருக்கவேண்டும்.

वाग्दण्डं प्रथमं कुर्याद्धिग्दण्डं तदनन्तरम् ।
तृतीयं धनदण्डं तु वधदण्डमतः परम् ॥ மனு 8 .129.

தண்டனை முறை

முதல் குற்றத்திற்கு எச்சரிக்கையுடன் விடுத்தும், இரண்டாமுறை கடுஞ்சொற் சொல்லியும், மூன்றும் முறை அபராதம் விதித்தும், நான்காம் முறை சவுக்கடி, பிரம்படி, சிறையிலிடுதல், சிரச்சேதம் செய்தல் முதலான சரீர சம்பந்தமானவைகளை விதித்தும் தண்டிக்கவேண்டும்.

येन येन यथाङ्गेन स्तेनो नृषु विचेष्टते ।
तत्तदेव हरेदस्य प्रत्यादेशाय पार्थिवः ॥ மனு 8. 334.

எந்தெந்த அங்கங்கள் குற்றஞ் செய்கிறதோ அந்தந்த அங்கங்களைக்கூட, அதே குற்றஞ் செய்வதைத் தடுக்கவும் பிறருக்கு உதாரணமாகவும், அரசன் நாசம் செய்துவிட வேண்டும்.

पिताचार्य्यः सुहृन्माता भार्य्या पुत्रः पुरोहितः ।
नादण्ड्यो नाम राज्ञोऽस्ति यः स्वधर्मे न तिष्ठति ॥ மனு 8. 335.

யாராயிருந்தாலும் சரி—தாய், தகப்பன், குரு, மித்திரன், மனைவி, மக்கள், புரோஹிதன்—சுவதர்மங்களைச் செய்யாமலிருக்கிறவர்கள் தண்டனைக்குள்ளாகுகிறார்கள். அதாவது நியாயஸ்தலத்தில் அமர்ந்து தீர்ப்புசெய்யும்பொழுது பக்ஷபாதமன்னியில் தண்டிக்கவேண்டும்.

कार्षापणं भवेद्दण्ड्यो यत्रान्यः प्राकृतो जनः ।
तत्र राजा भवेद्दण्ड्यः सहस्रमिति धारणा ॥ மனு 8. 336.

சாதாரண மனிதனுக்கு ஒரு பைசா தண்டனை விதித்தால் அரசனுக்கு 1000 பைசா விதிக்கவேண்டும். அதாவது சாதாரணமனிதனைக் காட்டிலும் அரனுக்கு ஆயிரம் தடவை அதிமாயிருக்கவேண்டும். அரசனுடைய திவானுக்கு எண்ணூறு தடவை அதிகம். அவரைவிடக் குறைந்த உத்தியோகஸ்தர்களுக்கு எழுநூறு. அவரைவிட இன்னும் குறைந்தவர்களுக்கு அறுநூறு தடவை. இம்மாதிரியே இன்னும் சேவகனைப் போன்ற ஒரு சிறிய உத்தியோக்ஸ்தன் எண்மடங்கு அதிகமாய் சாதாரண பிரஜைகளைக் காட்டிலும் தண்டிக்கப்படவேண்டும். ஏனென்றால் துரைத்தனச் சேவகர்களுக்குச் சாதாரண ஜனங்களைவிட அதிக தண்டனை விதிக்காமலிருந்தால் அவர்கள் ஜனங்களை நாசம் செய்யஆரம்பிப்பார்கள். ஆட்டைக் காட்டிலும் சிங்கத்தை வசமாக்க அதிக தண்டனைவேண்டியிருப்பதுபோல் அதிகாரி வர்க்கத்தினர்களுக்கு அரசன் முதற்கொண்டு சேவகன் வரையிலும் சாதாரண ஜனங்களைவிட தண்டனை அதிகமாயிருக்கவேண்டும்.

अष्टापाद्यन्तु शूद्रस्य स्तेये भवति किल्बिषम् ।
षोडशैव तु वैश्यस्य द्वात्रिंशत् क्षत्रियस्य च ॥
ब्राह्मणस्य चतुःषष्ठिः पूर्णं वापि शतं भवेत् ।
द्विगुणा वा चतुः षष्ठिस्तद्दोषगुणविद्धि सः ॥ மனு 8. 337, 338.

அம்மாதிரியே கொஞ்சம் விவேகியாயிருந்து அவன் திருடினல் எண்மடங்கு அதிகமாய் திருட்டைவிட தண்டனை இருக்கட்டும். சூத்திரனாயிருந்தால் பதினாறுமடங்கும், வைசியனாயிருந்தால் முப்பத்திரண்டு மடங்கு க்ஷத்திரியனாயிருந்தால் அறுபத்திரெண்டு தடவையும், பிராமணனாயிருந்

தால் அறுபத்திநான்கு அல்லது நூறு அல்லது நூத்தியிருபத்தியெட்டுத் தடவையும் அதிகமாயிருக்கட்டும். அதாவது, எவ்வளவுக்கெவ்வளவு ஞானம், செல்வாக்கு, அதிகாரம் இவைகள் அதிகமாயிருக்கிறதோ அவ்வளவுக் கவ்வளவு தண்டனை அதிகமாயிருக்கவேண்டும்.

ऐन्द्रं स्थानमभिप्रेप्सुर्यशश्चाक्षयमव्ययम् ।
नोपेक्षेत क्षणमपि राजा साहसिकं नरम् ॥ மனு 8. 344

தர்மத்தையும், ஐசுவர்யத்தையும் விரும்புகிற அரசனும், உத்தியோகஸ்தர்களும் ராஜபுருஷர்களும் ஒரு க்ஷணங்கூட கன்னம் களவு, வழிபறிக் கொள்ளை முதலான ஒவ்வாத காரியங்கள் செய்கிறர்வகளைத் தண்டிக்காமல் வைத்திருக்கவேண்டியதில்லை.

वाग्दुष्टात्तस्कराच्चैव दण्डेनैव च हिंसतः ।
साहसस्य नरः कर्त्ता विज्ञेयः पापकृत्तमः ॥ மனு 8. 345.

சாகஸ புருஷர்களுடைய லக்ஷணம்.

அபவாதம் பேசுகிறவர், திருடுகிறவர், அபராதமன்னியில் தண்டனை செய்கிறவர், இவர்களைவிட பலாத்காரமாய் (ஒவ்வாத) காரியஞ் செய்கிறவர்கள் கொடும்பாவிகள். பரமதுஷ்டர்கள்.

साहसे वर्त्तमानन्तु यो मर्षयति पार्थिवः ।
स विनाशं व्रजत्याशु विद्वेषं चाधिगच्छति ॥ மனு 8. 346.

அம்மாதிரி சாகஸகாரியங்கள் செய்கிறவர்களைத் தண்டிக்காமல் விடுகிற அரசன் சிக்கிரம் நாசமாய் சமூகத்தால் வெறுக்கப்படுகிறான்.

न मित्रकारणाद्राजा विपुलाद्वा धनागमात् ।
समुत्सृजेत् साहसिकान्सर्वभूतभयावहान् ॥ மனு 8. 347.

சிநேகத்தினாலும் சரி, அளவற்ற பண ஆசையினாலானாலுஞ்சரி, அடாத காரியங்கள் செய்கிறவர்களை அரசன் தண்டனை செய்யாமல் விடக்கூடாது.

गुरुं वा बालवृद्धौ वा ब्राह्मणं वा बहुश्रुतम् ।
आततायिनमायान्तं हन्यादेवाविचारयन् ॥ மனு 8. 350.

குரு, பிள்ளை, பெண், பிதா, விருத்தன், பிராமணன், பல சாஸ்திரங்களைக் கேட்டிருக்கிறவன் இவர்களில் யாராயிருந்தாலும் சரி, தர்மத்தை விட்டு அதர்மத்தில் பிரவேசித்து பிறர்களை கொலை புரிகிறவர்களை அரசன் உடனே கொலை செய்யவேண்டும். அதாவது பிறகே யோசனை செய்யவேண்டும்.

नाततायिवधे दोषो हन्तुर्भवति कश्चन ।
प्रकाशं वाऽप्रकाशं वा मन्युस्तन्मन्युमृच्छति ॥ மனு 8. 351.

கொலைபுரிதல் முதலான கொடுங்குற்றம் செய்கிறவர்களைக் கொலைசெய் வதினால் பாபமொன்றும் அவரை அணுகாது. பகிரங்கமாய்ச் செய்தாலும் இரகசியமாய்ச் செய்தாலும் சரி, கோபத்தைக் கோபத்தினாலேயே தடுத்தல் வேண்டும்.

यस्य स्तेनः पुरे नास्ति नान्यस्त्रीगो न दुष्टवाक् ।
न साहसिकदण्डघ्नौ स राजा शक्रलोकभाक् ॥ மனு 8 386.

திருடர்கள், பரஸ்திரீகமனம் செய்பவர்கள், கெட்ட வார்த்தைப் பேசுகிறவர்கள் சாகஸிகள் வழிபறிக் கொள்ளைக்காரர்கள் சட்டத்தை மீறுகிறவர்கள் இவர்களில்லாத அரசனுடைய இராஜ்யமே மிகச் சிரேஷ்டமானது.

भर्त्तारं लंघयेद्या स्त्री स्वज्ञातिगुणदर्पिता ।
तां श्वभिः खादयेद्राजा संस्थाने बहुसंस्थिते ॥ மனு 8. 371.

மனைவி ஒருவள் தன் குடும்ப கர்வத்தினால் புருஷனைவிட்டு வியபசாரித்தனம் செய்தால் அவளை அரசன் சகல ஸ்திரீபுருஷர்களுக்கு முன்னால் நாயைக் கொண்டு கடிக்கச் செய்து கொல்லட்டும்.

पुमांसं दाहयेत्पापं शयने तप्त आयसे ।
अभ्यादध्युश्च काष्ठानि तत्र दह्येत पापकृत् ॥ மனு 8. 372.

அம்மாதிரியே தன் மனைவியை விட்டு பரஸ்திரீ அல்லது வேசியை அடைகிறவனை பகிரங்கமாய் அரசன் அக்னியில் தள்ள வேண்டும்.

வினா:—அரசனாவது அரசியாவது, நியாயாதிபதியாவது அவருடைய மனைவியாவது வியபசாரித்தனம் செய்தால் அவர்களை யார் தண்டிக்கிறது?

விடை:—சபைகள் (அல்லது நியாயஸ்தலம்) சாதாரண ஜனங்களை விட அவர்களை கடினமாய்த் தண்டித்தல் வேண்டும்.

வினா:—அரசன் முதலானவர்கள் ஏன் அதைப் பெற்றுக் கொள்ள வேண்டும்?

விடை:—அரசனும் பொருளும் அதிகாரமும் சிறந்த குணங்களையுடைய மனிதனே யாவான். அரசனும் மற்றுமுள்ள பெரியோரும் நியாயமாய் விதிக்கப்பட்டும் எங்ஙனம் மீறல் கூடும்? அங்ஙனம் மீறுவார்களேயானால் பிரஜைகளும் மற்றுமுள்ளோரும் தண்டனையை ஏற்றுக்கொள்ள மறுக்கமாட்டார்களா? பிரஜைகளும், சபைகளும், அரசாங்க அதிகாரிகளும் சேர்ந்து விதிக்கும் தர்ம தண்டனையைக் கீழ்ப்படியாது எங்ஙனம் மறுக்க முடியும்? அதிகாரம், செல்வாக்கு, பொருள் இவைகள் காரணமாக சிலர் தண்டனைக்கு

க்கீழ்ப்படியாது நடப்பார்களேயானுல் நியாயமும் தர்மமும் ஒரு நாட்டில் மழுங்கும். பிரஜைகள் நாசமடைவார்கள். எங்கும் ஒழுங்கீனமேற்படும். ஆகையினுல் வேதங்கள் மொழியும் வண்ணம் நியாயமாய் விதிக்கப்படும் தண்டனையை வாழ்க்கையின் தர்மமென அரசன் முதலிய எல்லோரும் ஏற்றுக்கொள்ள வேண்டும். தண்டனை ஏற்றுக்கொள்ள மறுப்பவர்களைவிட நீசர்கள் யாவர்?

வினு.—அங்கங்களை உண்டுபண்ணவாவது இறந்தவனைப் பிழைப்பிக்கச் செய்யவாவது மனிதனுக்கு சக்தியில்லை யாகையினுல் அவ்வளவுகடுந்தண்டனைகளை மனிதனுல் எவ்விதம் விதிக்கமுடியும்?

விடை.—"கடுந்தண்டனை" என்று இதை அழைக்கிறவர்கள் "ராஜநீதி" தெரியாதவர்கள். ஒருவருக்கு இம்மாதிரி தண்டனையை விதிப்பதினுல் மற்றவர்கள் இம்மாதிரி கெட்டகாரியங்களைச் செய்யமாட்டார்கள். தர்மமார்க்கத்திலேயே உறுதியாய் நடப்பார்கள். ஆயிரம் பேருக்கு ஒரு கடுகினுலேற்படும் சுமையைவிட அதிகமாய் "கடுந்தண்டனை"யினுலேற்படாது. இலேசான தண்டனையானது குற்றங்களை அடக்காதபடியினுல் முன் சொன்னதைவிட ஆயிரமடங்கதிகமானது. ஏனென்ருல் அது பெருகப்பெருகக்குற்றங்களதிகமாகிறது. உதாரணமாக ஆயிரம் பேருள்ள ஜன சமூகம் ஒன்றை எடுத்துக்கொள்வோம். ஒவ்வொருவருக்கும்ஒருராத்தலாகத்தண்டனைவிதிக்கப்பட்டால் அது ஆயிரம்ராத்தலாகிறது. ஆனுல் அவ்வாயிரத்தில் ஒருவருக்கே நூறுராத்தலைத் தண்டித்து மற்றக்குற்றங்களை அடக்கினுல் அது ஆயிரத்தைவிட பதின்மடங்கு குறைவான நூறுராத்தலுக்கு மேலாகாது. ஆகையினுல் பார்வைக்கு இலேசாயிருக்கிறது. கடைசியில் கடுந்தண்டனையாகிறது.

**दीर्घाध्वनि यथादेशे यथाकालङ्करो भवेत् ।**
**नदीतीरेषु तद्विद्यात्समुद्रे नास्ति लक्षणम् ॥** மனு 8. 406.

சமுத்திரத்தின் வாய்க்கால்களிலும், நதிகளிலும் போய்வருகிற சகல கப்பல்களிலிருந்தும், அவைகள் எவ்வளவு தூரம் செல்லுகிறதோ அதற்கேற்றவாறு வரியைவிதிக்கட்டும். மகாசமுத்திரங்களில் வரிவிதிக்கமுடியாதகாலத்து சமயத்திற்கேற்றவாறு ஏற்பாடு செய்யட்டும். இம்மாதிரி விஷயங்களில் அரசனுக்கும் சமுத்திரத்தில் செல்லும் மாலுமிகளுக்கும் லாபமேற்படுகிறவழியில் நியாய ஏற்பாடுகளைச்செய்யட்டும்.

தேச தேசாந்திரங்களுக்கும், த்வீபத்வீபாந்திரங்களுக்கும் கப்பலில் செல்லுகிற தனது பிரஜைகளை எப்பொழுதும் காப்பாற்றட்டும். அவர்களுக்கு எவ்விதத்திலும் துக்கமேற்படாது பார்த்துக்கொள்ளட்டும்.

**अहन्यहन्यवेक्षेत कर्मान्तान्वाहनानि च ।**
**आयव्ययौ च नियतावाकरान्कोषमेव च ॥**

**एवं सर्वानिमान्राजा व्यवहारान्समापयन् ।**
**व्यपोह्य किल्बिषं सर्वं प्राप्नोति परमां गतिम् ॥** மனு 419. 420.

பிரதிதினமும் அரசன் கருமங்களை முடித்துக்கொண்டு யானை குதிரை முதலான வாகனங்களையும் பார்த்து வரவு செலவு திட்டங்களையும் கவனித்து கஜானைவையும் பரிசோதித்து (ராஜ்ய நன்மைக்காகச்செய்யப்படும்) பலகாரிகளினுடைய பலனையும் கவனித்து வரட்டும். இவ்விதம் சகல வியவகாரங்களையும், கவனித்துவரும் அரசனுடைய பாவங்கள் நீங்கி, அவன் மோக்ஷ இன்பத்தையடைகிறான்.

வின. —சம்ஸ்கிருதத்தில் ராஜநீதி பூர்ணமாயிருக்கிறதா? அரை குறையாயிருக்கிறதா?

விடை.— பூர்ணமாய். ஏனென்றால் பூலோகத்திலிருக்கிற சகல இராஜநீதிகளும், இனி ஏற்படும் நீதிமுறைகளும் சம்ஸ்கிருதவித்தையிலிருந்தே. அதற்கத்தாக்ஷியாக

**प्रत्यहं लोकदृष्टैश्च शास्त्रदृष्टैश्च हेतुभिः ॥** மனு 8. 3.

சிறந்த வித்வான்கள் திட்டஞ்செய்திருக்கும் நியாயாலோசனை சபையானது அரசனுக்கும் ஜனங்களுக்கும் சுகத்தையும் நியாயத்தையும் ஏற்படுத்தட்டும்.

பால்யவிவாகத்தையாவது அல்லது சம்மதமற்ற வளர்ந்தவர்களுடைய கலியாணத்தையாவது நடத்தக்கூடாதென்பதை அரசனும் சபையோர்களும் ஞாபகத்தில் வைக்கவேண்டும். பிரமசரியத்தை அரசன் விருத்திசெய்யட்டும் வியபசாரித்தனத்தையும் ஒருவன் பலரை மணந்துகொள்வதையும் நிறுத்தட்டும். அதனால் சரீரமும், ஆத்மாவும், பூர்ணபலத்துடன் இருக்கும். ஏனென்றால் கேவலம வித்தியா ஞானமிருந்து சரீரபலமில்லாமல் போனால் அப்பொழுது பலவானான ஒரு புருஷன் நூறுவித்வான்களை ஜயிக்கலாம், சரீரபலமாத்திரமிருந்து ஆத்மபலமில்லாமல் போனால் ஞானமன்னியில் இராஜ்யபரிபாலனம் செய்யமுடியாது. சரியான இராஜ்ய பரிபாலனமன்னியில் ஜனங்கள் பிளக்கப்பட்டு விரோதம் யுத்தம் சண்டை இவைகள் விருத்தியாகி நாசமடைகிறார்கள். ஆகையினால் சரீரமும் ஆத்மாவும் விருத்தியாகவேண்டியது. சரீரபலத்தையும் ஆத்மபலத்தையும் நாசஞ்செய்ய விஷயசுகங்களினுடைய இச்சையைப்போல் வேறு ஒன்றுமில்லை. முக்கியமாய் க்ஷத்திரியர்கள் வலுவான அங்கங்களுடனும் பலவான்ளாயுமிருக்கவேண்டும். ஏனென்றால் அவர்கள் விஷயசுகங்களிலிறங்கிவிட்டால் இராஜ்யதர்மம் கெட்டுப்போய்விடும். "அரசனைப்போல் பிரஜைகளும்" என்று மூதாதையர் மொழிந்திருப்பதை மனதில் வைக்கவேண்டும்,

ஆகையினால் துஷ்டாசாரங்களைச்செய்யாமலிருப்பது இராஜனுக்கும், இராஜபுருஷர்களுக்கும் உத்தமமானது. அவர்கள் தினந்தோறும்நியாயத்திலிறங்கி எல்லோருக்கும் நல்ல மார்க்கத்தைக்காண்பிக்கட்டும்.

இம்மாதிரியாக இராஜதர்மங்களைப்பற்றி சுருக்கமாய்ச் சொன்னோம். விவரமாய்ப்படிக்க விரும்புகிறவாகள் வேதங்களையும், மனுஸ்மிருதி,

ஏழு, எட்டு, ஒன்பதாம் அத்தியாயங்களேயும், **சுக்கிரநீதி**, **விதுரப்ரஜாகரம்**, மகாபாரதம் **சாந்திபருவத்தில்** இராஜதர்மம் **ஆபத்தர்மம்** முதலானவைகளைப் படிக்கவேண்டும். படித்து பூர்ணராஜ நீதிகளை அறிந்துகொண்டு மண்டலாதிபதிகளாவது, சார்வபௌமசக்கிரவர்த்திகளாவது, ஆளட்டும்.

எல்லோரும் "வயம் ப்ரஜாபதே: ப்ரஜா அபூமா"(யஜுர்வேதவாக்கியம்) பரமாத்மா நம்முடைய அரசன். நாம் அவருடைய அடியார்கள். அவர்கிருபை செய்தால் அவருடைய சிருஷ்டியில் நம்மையும் இராஜ்யாதிகாரியாகசெய்வார். நம்மால் அவருடைய சத்திய நியாயம் பரவி விருத்திசெய்யப்படட்டும்" என்று அறியட்டும்.

அடுத்த அத்தியாயத்தில் ஈசுவரன் வேதம் இவைகளைக் குறித்துச்சொல்லுவோம்.

ஆருவது அத்தியாயம்
முற்றிற்று.



## ஏழாவது அத்தியாயம்.

### கடவுளும் வேதமும்.

**ऋचो अक्षरे परमे व्योमन्यस्मिन् देवा अधि विश्वे निषेदुः ।**
**यस्तन्न वेद किमृचा करिष्यति य इत्तद्विदुस्त इमे समासते ॥**

இம்மந்திரத்தின் விளக்கம் பிரமசரியாசிரமத்தைப்பற்றின அத்தியாயத்தில் கூறியுள்ளோம். எவரில் எல்லாவிதமான சிறந்த குணகர்ம சுபாவங்கள் எல்லாவித வித்தைகள் அடங்கின்றனவோ, எவரால் சூரியன் முதலான லோகங்கள் தாங்கப்படுகின்றதோ, எவர் ஆகாசத்திற்குச் சமானமாய், பரவியிருக்கிறாரோ அவரே சகல தேவர்களுக்குத் தேவராகிய **பரமேசுவரன்.** அவரை நம்பாமலும் அறியாமலும் தியானஞ் செய்யாமலும் இருப்பவர்கள் நாஸ்திகர்களாயும் அறிவீனர்களாயும் எப்பொழுதும் துக்க சமுத்திரத்தில் அமிழ்ந்திருக்கிறார்கள். வித்தையிலும் தியானத்திலும் அவரை அறிகிறவர்களே எப்பொழுதும் சுகமுள்ளவர்களாயிருக்கிறார்கள்.

**வினு:**—வேதத்தில் ஒன்றிற்கதிகமாய் பல "ஈசுவரன்" இருக்கின்றனவென்று சொல்லப்பட்டிருக்கின்றதே? இதை நீங்கள் நம்புகிறீர்களா? இல்லையா?

**விடை:**—இல்லை நாங்கள் ஏன் நம்புகிறதில்லை என்றால் ஒன்றிற்கதிகமாய் பல "ஈசுவரன்" இருப்பதைக் காட்டுவதற்கு நான்கு வேதங்களில் எந்தவிடத்திலும் ஆதாரமில்லை. ஆனால் அநேக இடங்களில் ஈசுவரன் ஒருவர் என்றே காண்பிக்கப்பட்டிருக்கிறது.

**வினு:**—வேதங்களில், அநேக தேவதைகள் இருப்பதாகக் குறிக்கப்பட்டிருக்கின்றதே, அவைகளின் கருத்தென்ன ?

**விடை:**—சிறந்த குணங்களுடன் கூடின எந்த பொருளுக்கும் **தேவதை** என்று பெயர். உதாரணமாக பூமி. அது கடவுளென்றும் பூஜிக்கத்தகுந்ததென்றும் எங்கும் குறிக்கப்படவில்லை. மேற்கண்ட மந்திரத்திலும் என்ன சொல்லப்பட்டிருக்கிறதென்றால் எவரால் சகல தேவதைகளும் தாங்கப்படுகிறதோ, அவரே உபாசனைக்கும் அறிகிறதற்கும், யோக்கியதை யுள்ள ஈசுவரன் ஆவர். தேவதைச்சப்தத்தை ஈசுவரன் என்று அர்த்தம்கொள்பவர்கள் பெரும் பிழை இழைக்கிறவர்களாகிறார்கள். தேவதைகளுக் கெல்லாம் தேவதை என்று ஈசுவரனுக்குப் பெயர். ஏனென்றால் இப்பிரபஞ்சத்தின் ஆக்குதல் அளித்தல் அழித்தல் முதலியவைகளைச் செய்பவர் அவரே. நீதிபதி, எல்லாருக்கும் ஈசுவரன் என்று **திரிபத்திரி சந்திரி** என்றும் வேதவாக்கியத்தால் பிரமாணமாகிறது. இதனுடைய விளக்கம் **சதபதப்பிராமணம்** அத்தியாயம் பதினான்கில் கூறப்பட்டிருக்கிறது. முப்பத்தி மூன்று தேவதைகளாவன:—

பூமி, ஜலம், அக்னி, வாயு, ஆகாசம், சந்திரன், சூரியன், நக்ஷத்திரம், சிருஷ்டியின் இருப்பிடமாகையினால் இவைகளுக்கு அஷடவசுக்களேன்று சிறப்புப்பெயர்.

**பிராணன்** (உட்கொள்ளும் சுவாசம்) **அபானன்** (வெளிவிடும் சுவாசம்)**வியானன்**(சலனசக்தி) **உதானன்.** (உட்கொள்ளும்சக்தி)**சமானன்**(ஒடிப்பரவும்சக்தி) **நாகன்கூர்மம்**(கொட்டுதல்)**கிருகலன்**(தாகம்)**தேவதத்தன்**(ஆசை) **தனஞ்சயன்** (பூதசக்தி) **ஜீவாத்மா** இப்பதினொன்றுக்கும் ஏகாதசருத்திரமென்று பெயர். இவைகள்விலகுங்கால், தேகம் அழிந்து அதன்பயனாக உற்றார் உறவினர்களுடையதுக்கத்திற்குக் காரணமாகிறது. வருஷத்தின் பன்னிரண்டு மாதங்கள் மனிதர்களின் வயதைக் கிரகிக்கிறபடியினாலே பன்னிரண்டு **ஆதித்தியர்**களென்று பெயர். எங்கும் நிறைந்திருக்கிறபடியினாலும் அதிகசக்தியையும் ஐசுவர்யத்தையும் கொண்டிருக்கிறபடியினாலும் மின்சாரசக்திக்கு **இந்திரன்** என்றும் பெயர்.

எக்ஞத்திற்குப் **பிரஜாபதி** என்று அடியிற்கண்ட காரணத்தினால் பெயருண்டு. இதினால் வாயு மழை ஜலம், ஔஷதம், முதலியவைகள் பரிசுத்தமடைந்து பலவித சிற்பவித்தைகளைப் பெருக்குவதில் உதவியாகிறது. வித்வான்களுக்கு மரியாதையும், குடிமக்களுடைய பரிபாலனமும் இதனால் உண்டாகிறது. ஆக தேவதைகள் முப்பத்திமூன்று. ஏனெனில் குணவிசேஷங்களுடன் அவைகள் கூடியிருக்கின்றன.

எல்லாவற்றிற்கும் ஈசனாயும், எல்லாவற்றையும்விட பெரியவனாயுமிருக்கிறபடியினால், **பரமாத்மா** முப்பத்தினான்காவது தேவதை. அவரே உபாசிக்கத்தகுந்தவர். இதுவேமற்றசாஸ்திரங்களிலும் சொல்லப்பட்டிருக்கிறது. ஜனங்கள் இந்நூல்களைப் பார்த்திருப்பார்களேயானால் இந்தப் பிரம்மஜாலங்களைப் பழக மாட்டார்கள் ? பரமேசுவரன் ஒருவரே.

ईशा वास्यमिदं सर्वं यत्किञ्च जगत्यां जगत् ।
तेन त्यक्तेन भुञ्जीथा मा गृधः कस्य स्विद्धनम् ॥ யஜு॰ 40. 1.

अहम्भुवं वसुनः पूर्व्यस्पतिरहं धनानि संजयामि शश्वतः ।
मां हवन्ते पितरं न जन्तवोऽहं दाशुषे विभजामि भोजनम् ॥
अहमिन्द्रो न परा जिग्य इद्धनं न मृत्यवेऽवतस्थे कदाचन ।
सोममिन्मा सुन्वन्तो याचता वसु न मे पूरवः सख्ये रिषाथन ॥

ரிக். 10. 48. 1. 5.

இப்பிரபஞ்சமானது ஆக்ஞாபிக்கிற ஒருவரால் வியாபிக்கப்பட்டிருக்கிறது. இதிலிருக்கும் ஒவ்வொரு உலகமும் அப்படியே. அவர் சத்தியமான ஈசுவரன். அவருக்குப் பயந்து எனையப்பிராணிகளின் ஐசுவரியத்தில் அநியாயமாய் பேராசைகொள்ளாதே. நியாயமன்னியில் இருப்பவைகளை விட்டு விடு. நியாயவழியில் உன் ஆத்மாவைச் செலுத்தி ஆனந்தத்தை அனுபவி.

ஓ மனிதர்களே ! இப்பொழுது பிரபஞ்சத்திற்கு முந்தியும் நான் இருந்தேன். நான் எல்லா வற்றிற்கும் பதி அல்லது தலைவன். எல்லா உலகத்திற்கும் சனாதனகாரணம் நானே. எல்லா ஐசுவர்யத்தைக்கொடுப்பவன் நான். அதற்கு இருப்பிடமும் நான். பெற்றோர்களைக் குழந்தைகள் பார்ப்பது போல எல்லாமனிதர்களும் என்னைப்பார்க்கட்டும். என்னுடைய ஜீவன்கள் காப்பாற்றப்பட்டு ஆனந்தத்திலிருக்கும் நிமித்தமும், சுகத்திலிருக்கும் நிமித்தமும் பற்பல அன்னபானாதிகளை ஏற்பாடு செய்திருக்கிறேன். நான் பரமேசுவரன். சூரியனுக்குச்சமானமாய் ஒளியை உலகமெங்கும் பிரகாசிப்பவன். தோல்வியும் மரணமும் ஒரு நாளும் என்னையண்டாது. உலக ரூபமாயிருக்கும் தனத்தை நிர்மாணஞ்செய்கிறவன் நான். நான்தான் இப்பிரபஞ்சத்திற்கதிகாரி. உலகெல்லாம் உற்பத்திசெய்பவன் என்று என்னை யறி ஓஜீவனே ! ஐஸ்வர்யத்தையடையும் பொருட்டு பிரயத்னஞ் செய்யும் நீ, வித்தையாகிற தனத்தை என்னிடமிருந்து கேள். என்னுடைய சினேகிதத்திலிருந்து ஒரு நாளும் தனிமையாய்ப் போகாதே! ஓ மனிதர்களே ! சத்தியபாஷண ஸ்வரூபத்தை ஸ்துதி செய்கிறவனுக்கும், தொடருகிறவனுக்கும் சனாதன ஞான ஆதி தனத்தை என்னுடைய உண்மையான ஸ்வபாவத்தைக்காண்பிக்கும் வேதத்தை வெளிப்படுத்தியவன் நான். அவ்வேதத்தின் மூலமாகவே எல்லாவற்றின் ஞானத்தைப் பிரகாசஞ்செயது விருத்தி செய்கிறேன். சற்புருஷர்களுக்குத் தூண்டுகோலாயுமிருக்கிறேன். விச்வத்திற்கு, அல்லதுமானிட பிரகிருதி சமூகத்திற்கு, உழைப்பவர்களுக்கு நான் வெகுமதி செய்கிறேன். உலகத்தில் இருக்கும் எல்லாவற்றிற்கும் காரணம் நான்தான். ஆகையால் என்னிடமிருந்து திரும்பாதேயுங்கள். என்னுடைய ஸ்தானத்தில் மற்றொரு தெய்வத்தை ஒப்புக்கொள்ளாதேயுங்கள்.

ஈசுவர நிரூபணம்.

हिरण्यगर्भः समवर्त्तताग्रे भूतस्य जातः पतिरेक आसीत् ।
स दाधार पृथिवीं द्यामुतेमां कस्मै देवाय हविषा विधेम॥ யஜு 13. 4.

ஓ மனிதர்களே! கடவுள் சிருஷ்டியின் ஆதியிலும் இருந்தார். சூரியாதி தேஜசுடன் கூடினலோகங்களை ஆக்கியவரும் அளிக்கிறவரும், தாங்குகிறவரும் கடந்த சிருஷ்டிக்கும் ஈசுவரன் அவர்தான். நிகழ்பவைகளுக்கும் அவரே. உற்பத்தியாகுபவைகளுக்கும் அவரே. பூமியிலிருந்து சூரியரூபம் வரையிலிருக்கும் சிருஷ்டிகளைப்படைத்துத்தாங்குகிறவர் அவரே. அவர் நித்திய சுகஸ்வரூபர், அப்பரமாத்மாவை நாம் பக்தியுடன் போற்றுகிற வண்ணம் நீங்களும் போற்றுவீர்களாக.

வினா.—கடவுள் ! கடவுள்! என்றுசொல்லுகிறீர்களே அவர் இருக்கிறாரா இருப்பின் அதை நிரூபணம் செய்வீர்களா ?

விடை:—பிரத்தியக்ஷாதி பிராமணங்களால் நிரூபணம் செய்வோம்.

வினா:—ஈசுவரவிஷயம் பிரத்தியக்ஷாதி பிரமாணத்தினால் ஒருபொழுதும் ருஜுவாகாது.

इन्द्रियार्थसन्निकर्षोत्पन्नं ज्ञानमव्यपदेश्यमव्यभिचारिव्यवसायात्मकं प्रत्यक्षम् ॥

நியாய I. 4.

விடை:— பஞ்சேந்திரியங்களும் முறையே அவைகளுக்கேற்ற பொருள்களோடும் (கண்கள் வெளிச்சத்துடனும், காதுகள் சப்தத்துடனும் தோல் ஸ்பரிசத்துடனும், நாக்கு சுவையுடனும், மூக்கு முகருந்தன்மையுடனும்) மனம் (கவனத்தையளிக்கும் உருபு) இந்திரியங்களுடனும் ஆத்மாமனதோடும் சேருவதினால் உண்டாகும் உணர்ச்சியின் அறிவே பிரத்தியக்ஷமெனப்படும். இஞ்ஞானம், சந்தேகம், குற்றம் இவைகளிலிருந்து விலகியுள்ளது. பஞ்சேந்திரியங்களின் மூலம ஒரு பொருளின்குணம் வெளியாகிறது. இந்திரியங்கள் மனதுடனும், மனது ஆத்மாவுடனும் சேருங்கால், ஒரு குணத்தைப்படைத்தப் பொருள் புலனாகிறது. இவ்விதமே சிருஷ்டியிலிருக்கும் அமைப்புமுதலிய ஞானாதிகுணங்களினால், ஈசவரன் இருக்கிறாரென்பது பிரத்தியக்ஷமாகிறது. ஆத்மாவும் மனமும் இந்திரியாதி குணங்களில் எப்பொழுது பிரவேசிக்கிறதோ அப்பொழுது இது நல்லது இதுகெட்டது என்னும் ஞானம் ஏற்படுகிறது. அதாவது கொலைகளவு முதலிய தீயச்செயல்களைச்செய்யுங்கால் அவன்மனதில் பயம் வெட்கம் சந்தேகம் என்னும் உணர்ச்சிகள் ஏற்படுகின்றன. அவன் செய்யும் காரியம் நற்காரியமாயின் பயமின்மை தைரியம் சந்தோஷம் மனவமைதி, இவைபோன்ற நல்லுணர்ச்சிகள் அவன் மனதில் உதிக்கின்றன. இத்தகைய உணர்ச்சிக்குக்கார்ணம் பரமாத்மாவே. ஜீவாத்மா காரணமாகாது. ஆத்மா, தூய்மைபெறின் அது யோகம் தியானம் முதலிய நற்பயிற்சிகளினால், ஈசுவரனை அடைய முயலுகிறது. அங்ஙனம்முயலும் ஆத்மாவிற்கு ஜீவாத்மாவும் பரமாத்மாவும் விள்ளுகிறது. கடவுளிருப்பதைப் பிரத்தியக்ஷமாகஅறிந்துகொள்ளவழியிருக்கும்பொழுது, அவர் இருக்கிறாரா என்று அனுமானிக்கத்தேவையில்லை. கார்யத்தைப் பார்த்துவிட்டபிறகு அதன் காரணத்தை ஏன் அனுமானிக்கவேண்டும்?

வினா,—ஈசுவரன் எங்கும் வியாபித்திருக்கிறாரா? அல்லது ஒரு குறிப்பிட்ட இடத்திலேயே இருக்கிறாரா?

விடை.— அவர் சர்வவியாபி. அவர் குறிப்பிட்ட ஒரு இடத்திலேயே இருக்கும் பக்ஷத்தில், ஒரு பொழுதும் சர்வாந்தர்யாமி சர்வஞ்ஞர், சர்வநியந்தா அல்லது எல்லாவற்றையும் நியமிப்பவராகவும், எல்லாவற்றினுடைய ஆக்குதல் அளித்தல் அழித்தல் முதலானவைகளுடைய கர்த்தாவாகவும் இருக்கமுடியாது.

வினா.—கடவுள் தயாளுவாயும், பக்ஷபாதமில்லாதவராயும் இருக்கிறாரா?

விடை.—ஆம். இருவகையாயும் இருக்கிறார்.

வினா.—ஏனென்றால் நியாயமிருக்குமிடம் தயையும், தயை இருக்கும் இடம் நியாயமும் இருத்தல் முடியாது. கர்மத்திற்கேற்றவாறு சுகதுக்கங்களைக்கொடுப்பதே நியாயம். ஆனால் தயையோ, அபாரதஞ் செய்கிறவனைத் தண்டியாமல் விட்டுவிடுவதே. ஒரே சமயத்தில எப்படி தயைகாட்டவும் நியாயமும் செய்யமுடியும்?

**விடை:**—நியாயமும், தயையும் கேவலம் நாமத்தினலே வித்தியாசமாயிருந்த போதிலும், தயையால் என்ன பிரயோஜன முண்டாகிறதோ, அதுவே நியாயஞ் செய்வதினலும் உண்டாகிறது. தண்டனை யளிப்பதின் கருத்து யாதெனில் பாபகர்மங்களைச் செய்யாதிருக்கச்செய்வதே. பாபகர்மங்களைச் செய்யாதிருப்பின் ஜனங்கள் துக்கம் முதலியவைகளினல் பாதிக்கப்படுகிறதில்லை. ஜனங்களைத் துக்கத்திலிருந்து காப்பாற்றுவதின் பொருள் என்ன? தயையே அல்லவா? ஒருவன் செய்யும் குற்றத்திற்கு ஏற்றவாறு ஒருவனைத் தண்டிக்காது விட்டால் தயை பொருளற்ற வார்த்தையாகும். உலகில் ஒழுங்கீனம் அதிகரிக்கும். திருடர்களைப்போலுள்ள பாபிகளைத் தண்டியாது விட்டால் ஆயிரக்கணக்கான சிறந்த ஒழுக்கத்தினரான மேலோர்களுக்குத் துக்கம் அதிகம் விளையும். ஒருவனைத்தண்டியாமல் விட்டு விட்டு ஆயிரக்கணக்கான ஜனங்களைத்துக்கசாகரத்தில் வைப்பது நியாயமாகுமா? நன் நடத்தையினரை வருந்துமாறு செய்வதுதான் ஒழுங்கோ? அவனைச் சிறைக்கனுப்பி, பின்னரும் அங்ஙனம் பிழைசெய்யாதவாறு தடுப்பதே திருடன்மேல் காண்பிக்கும் தயையாகும். கொலைபாதகனைக் கொல்லுவதும் திருடனை அடக்குவதுமே ஆயிரக்கணக்கான ஜனங்களின்மேல் காண்பிக்கும் தயையாகும்.

**வினு:**— பிறகு தயை என்றும் நியாயம் என்றும் இரண்டு தனித்தனிச் சொற்கள் எதற்காக? ஒரே அர்த்தமாயிருந்தால் இருபதங்களினல் பிரயோசனமொன்று மில்லையே. ஒரே பதமாயிருந்தால் மேன்மையாக இருக்காதா? இதனல் இருசப்தத்திற்கும் ஒரே பொருள் என்பது புலனகவில்லையா?

**விடை:**—ஒரு பொருளைக்குறிக்க பலபதங்களும் பலபதங்களுக்கு ஒரு பொருளும் இல்லையா?

**வினு:**—ஆமாம் இருக்கிறது.

**விடை:**—பின்னர் உங்களுக்கு ஏன் இச் சந்தேகம்?

**வினு:**—உலகத்தில் அடிக்கடி இத்தகைய சந்தேகத்திற்குக் காரணமான பதங்கள் இருப்பதினலேயே.

**விடை:**—ஆழ்ந்த யோசனையில்லாததே இதற்குக்காரணம். ஆனல் தீர்க்காலோசனை செய்து சத்தியா சத்தியங்களை பகுத்தறிவது நம்முடைய கடமையாகும். எல்லாருடைய நன்மைக்காக இவ்வுலகத்திலிருக்கும் சகலவஸ்துக்களையும் படைத்து அவைகளுக்குச்சுய இச்சையைக் கொடுத்திருக்கும் ஈசுவரனுடைய தயையே தயை. இதைக்காட்டிலும் உயர்ந்த தயை ஏதேனுமுண்டோ? மனிதர்களின் தாரதம்மிய ஸ்திதியானது, சிலர் துக்கத்திலும் சிலர் சந்தோஷத்திலிருப்பது, பரமேசுவரனுடைய நியாயத்தைக்காட்டுகிறது. பகவான் தயாளு என்பதற்கு அவன் சிருஷ்டியும், நியாயத்தின் ரூபம் என்பதற்கு ஜனங்களிடம் காணப்படும் சுகதுக்கவேற்றுமையும் முறையே போதிய சான்று அல்லவா? தயையுக்கும் நியாயத்திற்குமுள்ள சிறிய பேதம் யாதெனில்:—எல்லாருடையதுக்கத்தை நீக்கி சுகத்தைகொடுக்க இச்சையுள்ளவனுய் அதற்குத் தகுந்த காரியங்களைச் செய்வது தயை. ஆனல் அபராதம் அல்லது

குற்றத்திற்குத்தகுந்த தண்டனைவிதிப்பது நியாயம். பாபம், பாபத்தினால் உண்டாகும் துக்கமுதலியவைகளிலிருந்து விடுவித்துக்கொள்வதே தயை, நியாயம் இவைகளுடைய பிரயோஜனம்.

வினா:—ஈசுவரன் உருவம் உள்ளவரா? உருவமில்லாதவரா?

விடை:—அவர் உருவமில்லாதவர். ஏனென்றால்உருவமுள்ளவராயிருந்தால் அவரிடத்தில் வியாபகம் இருக்கமுடியாது. வியாபகமில்லாமற்போனால் சர்வஞ்ஞாநாதிகுணங்கள் அவரிடத்திலிராது. அப்பொழுது எல்லைக்குள் அடங்கின குணகர்மஸ்வபாவங்களே அவரிடத்தில் இருக்கும். அதுவுமன்றி சீதோஷ்ணம், உஷ்ணம், சீதளம், பசி தாகம், ரோகம், குறைதோஷம் கெடுதி முதலியவைகளிலிருந்து நீங்கினவராயிருக்க இயலாது. இதனால் ஈசுவரன் நிராகாரர் என்று நிச்சயமாகிறது. அவருக்குச் சரீரமிருந்தால் அவருடைய சரீரத்தின் அவயவங்களாகிற கண் காது முதலியவைகளை உண்டாக்குவதற்கு கர்த்தா ஒருவன் தேவை. சம்யோகத்தினால் உற்பத்தியாகிறவைகளைச் சேர்த்துவைக்க நிராகாரனாயிருக்கும் சேதன (ஞான) ஸ்வரூபர் ஒருவர் அவசியமாய்வேண்டும். இஷ்டத்தினால் கடவுளானவர் தன்னைத்தானே சிருஷ்டித்துக் கொண்டார் என்று சொல்லப்படுமேயானால் தன் தேகத்தைச் சிருஷ்டி செய்யுமுன் நிராகாரமாயிருந்ததாக அதிலிருந்தே ருஜுவாகிறது. இதனால் பரமாத்மா எப்பொழுதும் சரீரமெடுக்கிறதில்லை. ஏனென்றால் அவர் உருவமற்றவர். சூட்சமகாரணங்களிலிருந்து ஸ்தூலமாயிருக்கும் உலகத்தைச்செய்யச் சக்தியுள்ளவராயிருக்கிறார்.

## சர்வசக்தியுள்ளவர்.

வினா.—ஈசுவரன் சர்வசக்தியுள்ளவரா? இல்லையா?

விடை.—ஆம். உள்ளவர்தான். நீங்கள் சர்வசக்தி என்னும் பதத்திற்கு எப்படி பொருள் தெரிந்துகொள்ளுகிறீர்களோ அப்படி இல்லை. ஈசுவரன் தன் வேலைகளாகிற, உற்பத்தி, பாலனம், பிரளயம், எல்லா ஜீவன்களுக்கும் பாப புண்ணியத்திற்குத் தகுந்தவாறு அவைகளுக்குத்தகுந்த வியவஸ்தையில் வைப்பதையும் ஒருவருடைய சகாயத்தை வேண்டாமல் தன்னுடைய அனந்த சாமர்த்தியத்தினால் பூர்ணமாய் செய்துகொள்ளுகிறார். இவைகளையே சர்வ சக்திமான் என்கிற பதத்திற்குப் பொருள், என்று அறியவேண்டும்.

வினா.—ஈசுவரன் தான்விரும்புவதைச் செய்துகொள்வாரென்று நான் கருதுகிறேன். அவருக்குமேல் ஒருவருமில்லையே?

விடை.—அவர்விரும்புகிறதையும், இன்னும் எல்லாவற்றையும் செய்யக் கூடுமென்றுசொல்வீரானால் அவரையே அவர்கொலைசெய்துகொள்வாரா? அல்லது தன்னைப்போல் அநேக ஈசுவரர்களைப் படைத்துவிட்டு தன்னை அனீசுவரனாயும் செய்துகொண்டு திருடு, வியபசாரம் முதலிய பாபங்களைச்செய்து துக்கத்துடனுமிருப்பாரா? என்று நாங்கள் கேட்கிறோம் இக்காரியங்கள் ஈசுவரனுடைய குணகர்மஸ்வபாவத்திற்கு எப்படி விருத்தமாயிருக்கிறதோ அப்படியே

நீசொல்லுவதும். ஆகையால்ஈசுவரன் எல்லாம்செய்பவர் என்கிற உங்களுடை சித்தாந்தம் நிலை நிற்கிறதில்லை, சர்வசக்திமான் என்னும் பதத்திற்கு நாங்கள் தரும் பொருளே சரியானது.

### ஈசுவரன் அநாதி.

வினா.—பரமேசுவரன் என்ன * அநாதியா அல்லது ஆதியுள்ளவரா?

விடை.—அவர் அநாதி அதாவது காரணமும் ஆரம்பமும் இல்லாதவர்.

வினா.—பரமேசுவரன் எதை விரும்புகிறார் ?

விடை.—சகலருடைய நன்மையையும் இன்பத்தையும் விரும்புகிறார். பாபமன்னியில் பரமேசுவரன் தன் சுயப்போக்கைக் கொண்டே ஒருவரை மற்றொருவருக்குக் கீழ்ப்படியச் செய்கிறதில்லை.

### துதி உபாசனை.

வினா.—துதி, பிரார்த்தனை, உபாசனைகளைப் பரமேசுவரனுக்குத் தான் அளிக்கவேண்டுமா ?

விடை:—வேண்டும்.

வினா.—துதிமுதலியவைகளைச் செப்வதினால் ஈசுவரன் தன்னுடைய நியமத்தை விட்டுத் துதிப்போனின் பாபத்தைவிலகச்செய்கிறார்?

விடை:—இல்லை.

வினா.—அதை (துதி பிரார்த்தனை) ஏன் செய்யவேண்டும் ?

விடை:—வேறு பிரயோஜனமுமிருக்கின்றது.

வினா.—அதென்ன.

விடை:—ஸ்துதியானால் அவருடைய அன்புண்டாய் ஈசுவரனின் குண கர்மஸ்வபாவத்திற்குத் தகுந்தவண்ணம் தன்னைத் திருத்திக்கொள்வதற்குச் சாதகமாயிருக்கிறது. பிரார்த்தனையினால் மனத்தூய்மை, தைரியம், தெய்வ ச ாயம், முதலியவை யுண்டாகிறது. உபாசனையினால் பரப்பிரம்மத்தோடு கலந்து அவருடைய சாட்சாத்காரமுண்டாகிறது.

வினா.—விளக்கிக்காட்டுங்கள்.

स पर्य्यगाच्छुक्रमकायमव्रणमस्नाविरꣳ शुद्धमपापविद्धम् ।
कविर्मनीषी परिभूः स्वयम्भूर्याथातथ्यतोऽर्थान् व्यदधाच्छाश्वतीभ्यः समाभ्यः ॥

யஜு. 40. 8.

ஸ்துதியில் இரண்டுவிதம் உண்டு. சகுணம் ஒன்று, நிர்குணம் மற்றது. அவருக்கு எந்த குணங்களுண்டோ அக்குணங்களுடன் அவரைத்துதிப்பது சகுணோபாசனை. அதாவது அவர் எல்லாவற்றிலும் வியாபகமாயிருக்கிறார். தீவிரமனதையுடையவர். ஆவியாயுள்ளவர். அனந்தபலவான் பரிசுத்தமுள்ளவர். சர்வஞ்ஞர். அந்தர்யாமி. எல்லாவற்றிலும் வீற்றிருப்பவர்.

---

* இதன் விளக்கவிவரம் முதல் அத்தியாயத்தில் கூறியுள்ளோம்,

சனாதனர். ஸ்வயம் சித்தர். தன்னுடைய ஜீவஸ்வரூபசனாதன அனாதி பிரஜைகளுக்குத் தன்னுடைய சனாதன வித்தையினால் கிரமப்பிரகாரம், பொருள்களின் ஞானத்தை வேதத்தின்வழியாய் போதித்துக் கொண்டிருக்கிறார். அவருக்கு எந்தெந்த அனீச்வர குணங்கள் இல்லையோ அவைகள் இல்லாதவரென்று துதிப்பது நிர்குணோபாசனையாகும். அவர் எப்பொழுதும் சரீரத்தைத்தரிப்பதில்லை. ஜன்மம் எடுப்பதில்லை. அவருக்குப்பந்தம் ஒன்றும் உண்டாகிறதில்லை. பாபங்களை ஆசிரயிக்கிறதில்லை. அவருக்குக் கிலேசம் அஞ்ஞானம், துக்கமென்பது கிடையாது. இப்படி ராகத்துவேஷாதி விவகாரங்களிலிருந்து விலக்கிப் பரமேசுவரனை உபாசனைசெய்வது நிர்குணோபாசனையாகும்.

பரமேசுவரனின் குணகர்மஸ்வபாவங்கள் எப்படி இருக்கின்றதோ அதே மாதிரி தன்னுடைய குணகர்மஸ்வபாவங்களைத்திருத்திக்கொள்வதற்கு உபகாரமாகிறது. இதுவே இதனுடைய தாத்பரியமாகும். உதாரணமாக அவர் நியாயகாரியானால், நாமும் நியாயமாயிருப்பதற்கே முயலவேண்டும். கள்ள ஆசாரம் செய்பவனுக்குச்சமானமாய் பரமேசுவரனுடைய குணங்களைக்கீர்த்தனை செய்துக் கொண்டு தன்னைத் திருத்திக்கொள்ளாமலிருப்பவனுடைய ஸ்துதி வியர்த்தமானதாகும்.

यां मेधां देवगणाः पितरश्चोपासते ।
तया मामद्य मेधयाऽग्ने मेधाविनं कुरु स्वाहा ॥ யஜு 32. 14.

तेजोऽसि तेजो मयि धेहि । वीर्यमसि वीर्यं मयि धेहि । बलमसि बलं
मयि धेहि । ओजोऽस्योजो मयि धेहि । मन्युरसि मन्युं मयि धेहि
सहोऽसि सहो मयि धेहि ॥ யஜு 20. 9.

ஓ! அக்னியே (அதாவது ஒளிரூபியான ஈசுவரனே) என் பால் உனது கருணையைச்செலுத்துவாய். உனது பேரொளியைத் தந்து என்னைப்பிரகாசிக்கச்செய்வாய். நீஎல்லையற்றசக்தியையுடையாய்! எனக்கு அச்சக்தியைத் தந்தருள்வாய். நீ பெரும்வலிமையையுடைய தோளினை யுடையாய். எனது பலமற்ற தோளினை, உனது பலத்தால் அலங்கரிப்பாய். நீ எல்லாம் வல்ல பரம்பொருள். உனது வல்லமையை எனக்கு அளிப்பாய். தூய்மை அற்றவையைக்காணுங்கால் கோபவெறிகொள்வாய். எனக்கும் அவ்வெறியைத் தந்திடுவாய். புகழிலும், நிந்தையிலும் நீ கலவாதவன். என்னை அங்ஙனம் இருக்கச் செய்வாய். உன்னை மறப்போனையும், நிந்திப்போனையும், பொருத்தருளும் பெருந்தகையான் நீ. அப்பெருங்குணத்தையான் பெறும்வழியை எனக்களிப்பாய்.

यज्जाग्रतो दूरमुदैति दैवन्तदु सुप्तस्य तथैवैति ।
दूरंगमं ज्योतिषां ज्योतिरेकन्तन्मे मनः शिवसङ्कल्पमस्तु ॥ யஜு 34. 1.

ஓ கருணைக்கடலே! உனதருளைப்பெற்ற எனக்கு என்ன குறை? உனது கருணையில் நான் கலந்திருக்குங்கால், விழிப்பிலும் தூக்கத்திலும் சரியே

என் மனம் காற்றைப்போல் காணுமிடந்தோறும் சென்று உனது கல்யாண குணத்தைப் பெருகிறது. உன்கருணையினால் எனது ஆத்மாவினுடைய நலத்தையும் உலகத்தினிடம் வாழும் ஜீவராசிகளின் நலத்தையும் தவிர, வேறு ஒன்றையும் என்மனம், நாடுகிறதில்லை. உன் வயப்பட்ட என் மனம் துன்பம் விளைத்தல் என்னும் எண்ணத்தை எங்ஙனம் பெறல் கூடும் ?

येन कर्माण्यपसो मनीषिणो यज्ञे कृण्वन्ति विदथेषु धीराः ।
यदपूर्वं यक्षमन्तः प्रजानां तन्मे मनः शिवसङ्कल्पमस्तु ॥ யஜு 34. 2.

எங்கும் வியாபித்துள்ளோனே! சலன சக்தியின் பீடமாயுள்ள என்மனம், கல்விப்பயிற்சியும் தர்மப்பயிற்சியுமுள்ளோருக்கு, யக்ஞபூமியிலும்போர்முனையிலும், நற்காரியத்தைச் செய்ய போதிய திடத்தையும், பெருங்குணத்தையும் தரக்கூடியது, தீமையை யொழிக்கவும் நற்கருமத்தைச்செய்யவும் தூண்டுகோலாகட்டும்.

यत्प्रज्ञानमुत चेतो धृतिश्च यज्ज्योतिरन्तरमृतं प्रजासु ।
यस्मान्न ऋते किंचन कर्म क्रियते तन्मे मनः शिवसङ्कल्पमस्तु ॥ யஜு 34. 3.

என் கோவே ! பேரறிவிற்குக்களஞ்சியமாயும், பகுத்தறியும் தன்மைக்கு இருப்பிடமாயும், இந்திரியாதி குணங்களின் ஒளியாயும், அழிவற்றதாயும், மனிதன்செய்யும் ஒவ்வொரு காரியத்திற்கும் மூல வஸ்துவாயும், இருக்கும் எனது மனம் தூய்மைப்பெறட்டும். தூய்மையற்றதை விலக்கட்டும்.

येनेदं भूतं भुवनं भविष्यत्परिगृहीतममृतेन सर्वम् ।
येन यज्ञस्तायते सप्त होता तन्मे मनः शिवसङ्कल्पमस्तु॥ யஜு 34. 4

ஏ. பரஞ்சோதியே! முக்கால நிகழ்ச்சியை யோகிகள் அறிவதற்குக்காரணமாயும், ஜீவாத்மா, பரமாத்மாவிடம் தன்னை இழந்து விடுவதற்கு மூலவஸ்துவாயும், ஞானக்கிரியைகளைச்செய்ய இந்திரியாதிகளுக்குத் தூண்டுகோலாயும், யோகநிலைப் பெறுவதற்கு வழிகாட்டியாயும், இருக்கும் எனது மனதிற்கு, உனது உண்மை அறிவைத்தந்து, துன்பம், அறிவின்மையாகிய இருளின் வயப்பட்டு இருக்கும் அதை வெளியேறச்செய்வாய்.

यस्मिन्नृचः साम यजूँषि यस्मिन्प्रतिष्ठिता रथनाभाविवाराः ।
यस्मिँश्चित्तँ सर्वमोतं प्रजानां तन्मे मनः शिवसङ्कल्पमस्तु ॥
सुषारथिरश्वानिव यन्मनुष्यान्नेनीयतेऽभीशुभिर्वाजिनइव ।
हृत्प्रतिष्ठं यदजिरं जविष्ठं तन्मे मनः शिवसङ्कल्पमस्तु ॥ யஜு 34. 6.

ஞானிக்குஞ்ஞானியான ஏ பரம்பொருளே! வண்டிக்குச் சக்கிரம் போல், ரிக், யஜுர், சாம, அதர்வண வேதங்களுக்கு மூலாதாரமாயும் எங்கும் பரவியுள்ள உன்னை அறிவதற்குப் பாத்திரமாயும் இருக்கும் உனது அருளைப்பெற்ற எனது மனம், உண்மை அறிவால் அலங்கரிக்கப்படட்டும். ஏ! லோகநாயகா! திக்குகள்தோறும் ரதத்தை நடத்தும் வல்லமையுள்ள சாரதி, குதிரையை

ஆட்டிவைப்பதுபோல் என்னை ஆட்டிவைக்கும் மனதைத் தீயபாதையினின்றும் விலக்கி நல்லவழியை அதற்குக்காட்டுவாய். இறைவனே! எனது இப்பிரார்த்தனையைப் பூர்த்திசெய்வாய்.

**अग्ने नय सुपथा राये अस्मान् विश्वानि देव वयुनानि विद्वान् ।**
**युयोध्यस्मज्जुहुराणमेनो भूयिष्ठां ते नम उक्तिं विधेम॥** யஜு 1. 46.

சுகத்தைகொடுப்பவனே! சுயம்பிரகாசஸ்வரூபனே, எல்லாவற்றையும் அறிகிறவனுயிருக்கும் பரமாத்மாவே, நீ என்னைச் சிறந்தவழியில் நடத்தி சம்பூர்ண ஞானத்தைப்பெறச்செய்வாய்.

எங்களைப் பொய்யாயும் பாபமாயுமிருக்கும் ஆசாரணைகளிலிருந்தும் அவ்வழிகளிலிருந்தும் தனிமையாய்வைப்பாய். இதற்கு நாங்கள் மிகவும் வணக்கத்துடன் உன்னைத்துதிக்கிறோம். எங்களைப் பரிசுத்தமாகச்செய்யவும்.

**मा नो महान्तमुत मा नो अर्भकं मा न उक्षन्तमुत मा न उक्षितम् ।**
**मा नो वधीः पितरं मोत मातरं प्रिया मा नस्तन्वो रुद्र रीरिषः ॥**

யஜு 16. 15.

ஓ உருத்திரனே (துஷ்டர்களுடைய பாபத்திற்குத் தகுந்தவண்ணம் பலனைக்கொடுத்து விசனிக்கச்செய்யும் பரமேசுவரனே) எங்களில் சிறியவர்களையும், பெரியவர்களையும், தாய்மார்களையும் எங்களுக்குப் பிரியமானவர்களையும் பந்துக்களையும் எங்களுடைய சரீரங்களையும் நாசஞ்செய்யாமலிருக்கவும். உனது நியாயந்தவராது நடக்கவும் வேண்டிய வழியைக் காட்டவும்.

**असतो मा सद् गमय तमसो मा ज्योतिर्गमय मृत्योर्माऽमृतं गमयेति ॥**

சத 14. 3. 1. 30.

பரமகுருவே! அசத்தியங்களிலிருந்து நீக்கி சத்திய வழியை அடையச் செய்வாய். எனது அகத்திருளை நீக்கி அறிவாகிய ஒளியைப் பெறச்செய்வாய். தேகசம்பந்தமான பிணி முதலிய நோய்களினின்று நீக்கி மோக்ஷமென்னும் அம்ருதத்தை எனக்கு அளிப்பாய்.

ஈசுவரனது கல்யாணகுணங்களைச் சொல்லி ஜபஞ்செய்வது சகுணோபாசனையாகும். குணசம்பந்தங்களிலிருந்து விலக்கி, அவரைப்பஜனை செய்வது நிர்குணோபாசனையாகும். ஒருவன் ஞானம் வேண்டுமென்று ஈசுவரனை வழிபடுவானேயானல், அவன் துதியுடன் நிறுத்தாது ஞானத்தை அடைய முயலவேண்டும். நாம் எந்தெந்த உத்தேசத்தைக்கொண்டு, பகவத்தியானம் செய்கின்றோமோ அவைகள் நிறைவேறுமாறு நம்மால் இயன்றவரை அவ்வழியில் பாடுபடவேண்டும். பின்வருமாறு இறைவனைத்துதிப்பதினுல் பலன் ஒன்றும் விளையாது.

இறைவனே! எனது விரோதியை நாசஞ்செய். என்னை எல்லோரினும் சிறந்தோனுகச்செய். எல்லோரும் என்னை வணங்கட்டும். பிறர் எனக்கு அடிமையாக வேண்டும். இத்தகையப்பிரார்த்தனைகளைக் கடவுள் ஏற்கிறதில்லை. ஒவ்வொருவரும் மற்றவர் நாசம் அடைய வேண்டும் என வேண்டுவார்களேயானல் கடவுள் அவர்களது இச்சையை எங்ஙனம் பூர்த்தி செய்வார்? இரு

வரில் ஒவ்வொருவனும், மற்றவன் நாசமடைய வேண்டுமென்று பகவானை வேண்டினால், தன்னிடம் அதிக பக்தி கொண்டு இருப்பானது பிரார்த்தனைக்குக் கடவுள் இறங்குவாரேயானால், கடவுள் மேல் பக்திகொண்டிருக்கும் மற்றவன் நாசமடைய வேண்டுமல்லவா? இங்ஙனம் கடவுள் பாரபக்ஷத்துடன் காரியம் செய்வாரேயானால் பின்னர் ஜனங்கள் பின் வருமாறு பிரார்த்தனை செய்யத்துடங்கி விடுவார்கள்:—

"இறைவனே, எனக்குச் சமையல் வேலைசெய். எனக்குச் சாப்பாட்டைப்போடு. என் வீட்டைச்சுத்தஞ்செய். எனது நிலத்தைச் செழிக்கச்செய். இவைபோன்ற பிரார்த்தனைகள் உலகத்தில் வலுத்துவிடும். ஜனங்களிடத்தில் சோம்பல் அதிகம் ஏற்படும். மூர்க்கத்தனம் உலகில் அதிகம் பரவும் கடவுள்விரும்புவது மனிதன் பிரயத்தினம் செய்யவேண்டுமென்பதே. அதுவே அவரது ஆக்ஞையுமாகும். ஈசுவரபக்தியுடன் தனது கார்யத்தை செய்து முடிக்க பிரயத்தனப்படாதவன், ஒரு நாளும் சுகத்தைப்பெறுன்?

कुर्वन्नेवेह कर्माणि जिजीविषेच्छतं समाः॥ யஜு॰ 40. 2.

சோம்பலை ஒழி. எப்பொழுதும் வேலைசெய். நூறுவருடம் வேலைசெய். உன்வாழ்நாளை வேலையிலேயேசெலவழி. உலகத்தில்உயிருள்ளதும்உயிரில்லாததுமான ஜீவகோடிகள் அததன் வேலையை ஒழுங்கே செய்து வரவில்லையா? எரும்பைப்பார். எப்பொழுதும் வேலைசெய்து கொண்டே இருக்கிறது. சந்திரன் சூரியன் இதர நக்ஷத்திரங்கள் அவவைகளுக்கான வேலையைச்செய்து கொண்டே வருகின்றன. மரங்கள் வளருகின்றன. இவைகள் மனிதனுக்குப் போதியபாடமாகாதா? தன்னலத்தைத் தேடாதவனுக்குக்கடவுள் நலந்தருவதில்லை. வேலையில் சோம்பலில்லாது தன்வேலையை சரியேசெய்யும் எஜமானனுக்குத்தான் வேலைக்காரனும் அவனது வேலையை சரியேசெய்கிறுன். கண்ணிருந்தால் மாத்திரம் போதாது. பார்க்கவேண்டுமென்ற அவா உள்ளவன் தான் பார்க்கிறுன். தான் பெறவேணடுமென்று நினைக்கும் ஒன்றைப் பெற, போதிய முயற்சி எடுக்காதவனது துதிக்குக் கடவுள் செவிசாய்க்கிறுரில்லை. சர்க்கரை தித்திக்கும். சர்க்கரை தித்திக்கும் என்று சொல்லுவதினால் மாத்திரம் என்ன பயன்? மந்திரத்தில் மாங்காய் விழாது. குறிவைத்து கல்லெறிந்தால் தான் ஒருக்கால் மாங்காய் விழும். என்பதே கடவுளது கட்டளை.

உபாசனை.

समाधिनिर्धूतमलस्य चेतसो निवेशितस्याऽत्मनि यत्सुखं भवेत ॥
न शक्यते वर्णयितुं गिरा तदा स्वयन्तदन्तःकरणेन गृह्यते ॥ யோக 30.

யோக சமாதியினால் எவன் உயர்வடைந் திருக்கிறுனே, எங்கும் செல்லாமல் எவனது மனம் ஆத்மநிலையிலிருக்கின்றதோ, பரமாத்மாவினிடம் எவனுடைய சித்தம் லயித்து இருக்கின்றதோ, அத்தகையோனுக்குப் பரமாத்மாவினுடைய இன்பசுகம் உண்டாகின்றது. அதை வாக்கால் வர்ணிக்க இயலாது. அவ்வானந்தத்தை ஜீவாத்மாவனது தன்னுடைய அந்தக்கரணத்தினால் அனுபவிக்

கிறது. உபாசனை என்னும் பதத்திற்குப்பொருள் சமீபத்தில் போகிறது என்பது. அஷ்டாங்கயோகத்தினால் அவருடைய சமீபத்தில் போகிறதிற்கும் அவருடைய சர்வவியாபி சர்வாந்தர்யாமி ரூபத்தை பிரத்தியக்ஷமாக்கிக் கொள்ளுவதற்கும் என்னென்ன செய்யவேண்டுமோ அவையெல்லாம் செய்யவேண்டும், அதாவது.

**तत्राहिंसासत्यास्तेयब्रह्मचर्यापरिग्रहा यमाः ॥** யோக 30.

உபாசனை செய்யவிரும்புகிறவன் அடியிற்கண்ட விதம் துவக்கவேண்டும். எந்த ஜீவனிடத்திலும் பகையில்லாது எப்பொழுதும் எல்லாரிடத்திலும் அன்புடனிருக்கவேண்டும். உண்மையே பேசவேண்டும். பொய் ஒரு பொழுதும் பேசல் கூடாது. சத்தியமான விவகாரங்களையே செய்யவேண்டும். ஆசையில்லாமல் சிந்தையை அடக்க அப்பியாசஞ்செய்ய வேண்டும் பஞ்ச இந்திரியங்களை ஜெயிக்கவேண்டும். எப்பொழுதும் வினயமாயும் வினெண்ணம் கொள்ளாமலுமிருக்கவேண்டும். இவ்வைந்தும் உபாசனையாகிற யோகத்தின்முதல் அங்கமாகிறது. இவைகளுக்கு எமங்களென்று பெயர்.

**शौचसन्तोषतपःस्वाध्यायेश्वरप्राणिधानानि नियमाः ॥** யோக 32.

**பிறகு நியமங்கள்.** அவைகளும் ஐந்தாக இருக்கின்றன. ராகதுவேஷ முதலியவைகளைவிடுவதினால் உள்ளத்தை அல்லது அந்தரங்கத்தையும், ஜல முதலியவைகளினால் புறத்தையும் அல்லது வெளியையும் சுத்தமாய்வைத்துக் கொள்ள வேண்டும். தர்மமாய் வேலைசெய்யவேண்டும். லாபம் வந்தால் ஆனந்தம்வேண்டாம். நஷ்டம்வந்தால் துக்கமும் வேண்டாம். ஆலசியம், சோம்பேரித்தனம் இவைகளை விட்டுவிட்டு எப்பொழுதும் சுறுசுறுப்பாயும் பிரசன்னமாயும் இருக்கவேண்டும். சுகதுக்கம் இரண்டுமிருந்தால் மனதை நடு நிலையில்வைத்துகொண்டு கலக்கமன்னியில் தர்மத்தின் அனுஷ்டானத்தைச் செய்துகொண்டிருக்கவேண்டும். அதர்மத்தை விட்டு விட வேண்டும். எப்பொழுதும் சத்திய சாஸ்திரத்தைப்படிக்கவும் படிப்பிக்கவும் வேண்டும். பெரியோர்களுடையசகவாசத்தைத்தேடு. ஓம். பரமாத்மாவின் இந்தஒருநாமத்தை அர்த்த விசாரத்துடன் தியானஞ்செய்து கடவுளுடைய ஆக்ஞைக்கு உன்னுடைய ஆத்மாவை சமர்ப்பித்து விடு. இந்த ஐந்தும் உபாசனயோகத்தின் இரண்டாவது அங்கமாகிறது. மீதியான ஆறு அங்கங்களை யோகசூத்திரத்திலிருந்தாவது அல்லது என்னுடைய **வேதபாஷ்யபூமிகையிலிருந்தாவது** பார்த்து தெரிந்துகொள்ளவும்.

உபாசனைசெய்ய இச்சிப்போர் பரிசுத்தமாயிருக்கும் தனி இடத்தில் அமரவேண்டும். இந்திரியங்களை அடக்கி மனதைப் பிறவிஷயங்களில் பிரவேசிக்காது தடுத்து அதை நாபிப்பிரதேசத்திலாவது ஹிருதயம் கழுத்து, கண், முதுகெலும்பு முதலிய ஏதாவது ஒரு இடத்தில் நிறுத்தி பிராணயாமம் செய்யவேண்டும். பின்னர் ஆத்மாவையும் பரமாத்மாவையும்தனியே அறிந்து சிந்தனைசெய்து தன்னை மறக்கவேண்டும். இங்ஙனம் யோகசாதன சித்தி பெறுபவனது ஆத்மாவும் அந்தக்கரணமும் சுத்தமடைந்து சத்தியத்தினால்

அலங்கரிக்கப்படுகின்றது. அவன் மோக்ஷத்தையடையும் வரையில் அவனது அறிவும் ஞானமும் நாளுக்கு நாள் வளர்ந்து கொண்டேபோகிறது. அறுபது நாழிகையில் சிலநாழிகையாவது தினந்தோறும் ஒருவன் இங்ஙனம் யோகசாதனம் செய்வானேயானால் ஆத்ம ஞானத்தை அடையலாம்.

ஈசுவரனுக்குக் குணங்களைக்கற்பித்து அக்குணங்களுடன் அவரைத் தியானித்தல் சகுண உபாசனையாகும். ரூபரஸ கந்த ஸ்பர்ஸாதி குணங்களிலிருந்து அவரை விலக்கி சூக்ஷமமாய் உள்ளும் வெளியும் வியாபித்திருக்கும் பரமேசுவரனைத்தியானிப்பது நிர்குணோபாசனையாகும். இங்ஙனம் ஈசுவரனை நெருங்கும் ஒருவன் இன்பதுன்பங்களிலிருந்து விலகி, கடவுளைப்போல் பரிசுத்தமடைகிறான். எவ்வாறு நடுக்கலுற்றவனின் குளிர் தீயினிடம் அணுகின் விலகுகிறதோ அவ்வாறே ஈசுவரனையடைந்தவுடன் குளிர்போன்ற உலகாதி சுகதுக்கங்கள், ஆத்மாவை விட்டு விலகுகின்றன. ஆதலால் ஈசுவரனைப்பஜிப்பது, அவனில் தன்னை இழப்பது மனிதஜாதியின் கடமையாகும். உபாசனையால் ஒருவன் பெறும் பயன் சிறிதளவாயிருந்தாலும், சுகதுக்கங்கள் அவனைப்பற்றுவதில்லை. நிறைந்த மனச்சாந்தி ஏற்டுகிறது. இவைகள் அற்பமானவைகளா ? பரமேச்வரனைப்பக்தி பண்ணாதவன் நன்றி மறப்பவனாவான். அப்பரமாத்மா ஜீவராசிகளின் சுகத்திற்காகப் பலபொருள்களைப் படைத்திருக்கிறார். அவர் அங்ஙனம் நமது நலத்தை நாடுங்கால், அவரை மறப்பதும்; அவரில்லை என்று கருதுவதும் மூடத்தனமாகாதா ?

வினா.—பரமேச்வரனுக்கு கண் முதலிய இந்திரியங்கள் இல்லையானால் அவர் இந்திரியங்களுடைய காரியங்களை எப்படி செய்யக்கூடும் ?

**अपाणिपादो जवनो ग्रहीता पश्यत्यचक्षुः स श‍ृणोत्यकर्णः ।**
**स वेत्ति वेद्यं न च तस्यास्ति वेत्ता तमाहुरग्र्यं पुरुषं महान्तम् ॥** சுவேதாசுவே 3. 19.

விடை.—பரமேசுவரனுக்குக் கைகளில்லை. ஆனால்தனது சக்திரூபமான கைகளினால் எல்லாவற்றையும் படைப்பதையும் கிரகிக்கிறதையும் நாம்பார்க்கிறோம். கால்களில்லை. ஆனால் வியாபகமாயிருக்கிறார். கண்கள் இல்லை. ஆனால் எல்லாவற்றையுங் கேட்கிறார். அந்தக்கரணமில்லை ஆனால் எல்லா ஜகத்தையும் அதிலிருப்பதையுமறிகிறார். அவருடைய எல்லையை அறிபவனில்லை, அவர்சனாதனர். எல்லோரையும்விடச்சிரேஷ்டர். எல்லாவற்றிலும்நிறைந்திருக்கிறபடியால் புருஷனென்று சொல்லப்படுகிறார். இந்திரியங்கள் அந்தக்கரணங்கள் இல்லாதிருந்தபோதிலும் தன்னுடைய எல்லாவேலைகளையும் தன் சாமர்த்தியத்தால் செய்துவிடுகிறார்.

வினா:—அவரை அநேகர் சலனமற்றவர் நிர்குணர், என்று சொல்லுகிறார்களே ! உண்மைதானா ?

**न तस्य कार्यं करणं च विद्यते न तत्समश्चाभ्यधिकश्च दृश्यते ।**
**परास्य शक्तिर्विविधैव श्रूयते स्वाभाविकी ज्ञानबलक्रिया च ।** சுவேதாசுவே 6. 8.

**விடை:**—அவர் ஒரு விதமான மாறுதலையும் அடைகிறதில்லை. அவருக்கு வேலைகளைச் செய்வதற்கு சாதனமும் வேண்டியதில்லை. அவருக்குச் சமானமாயும் உயர்ந்ததாயும் எதுவும் இல்லை. அவர் சர்வ உத்தமமான சக்தியைக் கொண்டவர். அதாவது அவரில் அளவில்லாத ஞானம், அளவில்லாத சக்தி, அனந்தகிரியைகள், அடங்கி இருக்கின்றன. பரமேசுவரன் சலனசக்தியற்றவராயிருந்தால் உலகத்தின் ஆக்குதல் அளித்தல் அழித்தலை, அவரால்செய்ய இயலாது. இதனால் அவர் (விபு)எங்கும் நிறைந்தவர், எல்லாவற்றையுமறிந்தவர். சேதனமாயிருக்கிறபடியால் அவரில் கிரியையுமிருக்கின்றன.

**வி:**—கிரியையைச் செய்பவராயிருந்தால், அவருடைய கிரியைகள் எல்லையுடன் கூடியதா? அல்லது அனந்தமா?

**விடை:**—தேசகாலங்களுக்குள் எவ்வளவு கிரியை செய்ய வேண்டுமென்று விரும்புகிறாரோ அத்தேசகாலத்திற்குள் கிரியைகளைச் செய்கிறார். அதிகமாகவாவது, குறைவாகவாவது செய்கிறதில்லை. ஏனென்றால் அவர் பெரும் ஞானி.

**வி:**—தன்னுடைய பலத்தையறிகிறாரா? இல்லையா?

**விடை:**—பரமாத்மா பூர்ணமான ஞானி. எதெதைத்தெரிந்து கொள்ள வேண்டுமோ அதாவது பதார்த்தங்கள் எப்படி எப்படிஇருக்கின்றதோ, அததை அப்படியப்படியே தெரிந்து கொள்வது ஞானமென்று பெயர். பரமேசுவரன் அனந்தன். அவருடைய அனந்தத்தை அறிந்து கொள்வது ஞானம். அதற்கு விரோதமாயிருப்பது அஞ்ஞானம். எல்லையில்லாமலிருப்பதை எல்லையுடன் இருப்பதாகக் கருதுவதும், எல்லையுடன் இருப்பதை அனந்தமாகக்கருதுவதும் அஞ்ஞானம்.

எதற்கு எப்படி குணகர்மஸ்வபாவமிருக்கிறதோ அப்படியே அதை உணர்ந்து கருதுவது ஞானம். அதற்கு விரோதமாயிருப்பது அஞ்ஞானம். இதனாலேயே.

ஈசுவரநிரூபணம்.

**क्लेशकर्मविपाकाशयैरपरामृष्टः पुरुषविशेष ईश्वरः ॥**

இச்சை, துக்கம், பலன்களைத் தரும் கர்மங்கள், இவைகளிலிருந்து விலகித் தனிமையாய் ஆனால் எல்லாவற்றிலும் வியாபித்தும் எல்லாவற்றையும் விட உயர்ந்தும் இருப்பவர் ஈசுவரன்.

**ईश्वरासिद्धेः ॥ प्रमाणाभावान्न तत्सिद्धिः ॥ सम्बन्धाभावान्नानुमानम् ॥**

**வி:**—பிரத்தியக்ஷ நிரூபணத்தால் ஈசுவரன் இருக்கிறார் என்பதைச் சித்தஞ்செய்யமுடியாது. அவர் இருக்கிறார் என்று நிரூபிப்பதற்குப்பிரத்தியக்ஷப்பிரமாணங்கள் இல்லாதபொழுது அனுமானாதி பிரமாணங்களினாலும் முடியாது. பிரத்தியக்ஷயனுமான பிரமாணங்களில்லாதபடியால் சப்தம் முதலிய பிரமாணங்களினாலும் சித்தமாகாது. இக்காரணங்களினால் ஈசுவரனை நிர்மானிக்க முடியாது.

விடை:— இல்லை. மேற்கண்ட சூத்திரத்தின் உண்மையான பொருள் யாதெனில் கடவுள் இருக்கிறார் என்பதை நிரூபணஞ் செய்வதற்குப் பிரத்திய க்ஷாதி பிரமாணங்கள் இல்லை என்று சொல்லவில்லை. இப்பிரபஞ்சத்தின் **உபாதானகாரணத்தைக்** கண்டுபிடிப்பதற்கு வேண்டிய பிரத்தியக்ஷாதிபிரமா ணங்கள் இல்லையென்றே சொல்லுகிறது.

**प्रधानशक्तियोगाच्चेत्सङ्गापत्तिः॥ सत्तामात्राच्चेत्सर्वैश्वर्यम् ॥ श्रुतिरपि प्रधान-कार्यत्वस्य ॥**

பரமாத்மா பிரபஞ்சத்தின் உபாதானகாரணம். பிரதான சக்தியாயிருந் தால் அவரும் பற்பல பதார்த்தங்களுடன் சேர்ந்து மாறுதலையடைந்திருப் பார். எப்படிப் பிரகிருதியான அல்லது அதிநுட்பமான பரமஅணுக்களுடன் அதி சூட்சமமான வஸ்துக்கள் கலந்து,ஸ்தூலமும்,ஸ்பர்சிக்கக்கூடுமான வஸ்து வாக உருமாற்றப்படுகிறதோ அப்படியே பரமேசுவரனும் ஸ்தூலமாக மாறி விடுவார். ஆகையினால் பரமேசுவரன் இவ்வுலகத்திற்கு உபாதானகாரண மில்லை. நிமித்தகாரணமாக இருக்கிறார். பிரகிருதி பதார்த்தமே இஜ்ஜெகத் திற்கு நிமித்தகாரணமென்று உபநிஷத்தும் விளக்குகின்றது.

**अजामेकां लोहितशुक्लकृष्णां बह्वीः प्रजाः सृजमानां स्वरूपाः ॥**

ஜனனமில்லாமல் சத்வ, ரஜ, தமோகுண ரூபமாயிருக்கும் பிரகிருதியே தன்னுடைய ஸ்வரூபாகாரத்தினால் பலபிரஜா ரூபங்களாகமாறுகிறது. மாறும் ஸ்வபாவத்தைப் பிரகிருதியுடைத்தாயிருக்கிறபடியால் மாறுதலையடைகிறதா யிருக்கிறது. ஆனால் எங்கும் வியாபித்திருக்கும் பரமாத்மா மாறுதலையடை யாதவராகையால் எந்த ரூபமாகவாவது உருவாகவாவது வேற்றுமையடைகிற தில்லை. அவர்மாறுதலயடையாதவர். எப்பொழுதும் ஹிருதயத்தினுள் வாசஞ் செய்கிறவர். ஆகையால் மேற்கண்ட சூத்திரத்திற்குக் கர்த்தாவாயிருக்கும் கபிலரை நாஸ்திகவாதி என்று சொல்லுபவனே நாஸ்திகனாவான். இப்படியே இன்னும்வேறு பலசாஸ்திரகர்த்தாக்களும் சொல்லியிருக்கிறார்கள். உதார ணமாக மீமாம்சம் நாஸ்திகசம்பந்தமான நூல் அல்ல. அது தர்மம் (குணம்) தர்மி (பதார்த்தம்) இவைகளைக்குறிக்கின்றது. வைசேஷிகத்தில் ஈசுவரனைக் குறித்து விளக்கப்பட்டிருக்கிறது. நியாயசாஸ்திரம் பரமாத்மாவை ஆத்மா வாக அழைக்கிறது. ஏனென்றால் சர்வஞ்ஞாதி தர்மயுக்தராயும் **अतति सर्वत्र व्याप्नोतीत्यात्मा** எல்லாவிடத்தில் வியாபகமாயும் எல்லாவற்றையு மறிந்தவ ராயும் தர்மயுக்தகுணங்களோடு கூடினவராயும் எல்லா ஜீவன்களுக்கும் ஆத் மாவாயும் இருக்கின்றாரோ அவரை மீமாம்சம் வைசேஷிகம் நியாயம் இவைகள் ஈசுவரனைக் கருதுகின்றன.

வினா:—ஈசுவரன் அவதாரம் எடுக்கிறாரா ? இல்லையா ?

விடை:—இல்லை. ஏனென்றால் **अज एकपात् - सपर्यगाच्छुक्रमकायम्** அவர் எங்கேயும் வியாபித்திருக்கிறார். அவர் பரிசுத்தர். எப்பொழுதும் பிறக்கி றதில்லை. மானிடசரீரத்தைத் தரிக்கிறதுமில்லை, என்று யஜுர்வேதம் சொல்லு கின்றது. இதிலிருந்து ஈசுவரனுக்குப் பிறப்பில்லை யென்று நிரூபணமாகின்றது.

**यदा यदा हि धर्मस्य ग्लानिर्भवति भारत ।**
**अभ्युत्थानमधर्मस्य तदाऽऽत्मानं सृजाम्यहम् ॥**

**வி:**—உலகத்தில் தர்மம் குன்றி அதர்மம் செழிக்குங்கால், அதர்மத்தைக்களைய நான் அவதரிக்கின்றேன் எனக் கண்ணன் கீதையில் கூறியுள்ளார். இதற்குத்தங்களது பதிலென்ன?

**விடை:**—வேதத்திற்கு முரண்பாடாய் இருக்கும் இதைப்பிரமாணமாய் எடுத்துக்கொள்ளக்கூடாது. கண்ணன் தர்மத்தின் உருவாய் தர்மத்தைவளர்ப்பதற்கும் அதர்மத்தைக்களைவதற்கும் விரும்பி தர்மபரிபாலனஞ் செய்ய உலகத்தில் பிறக்கவேண்டுமென்று எண்ணியிருக்கலாம். ஏனென்றால்,

**परोपकाराय सतां विभूतयः ॥**

பரோபகாரத்தின் பொருட்டு சத்புருஷர்கள் தேகம் மனம் பொருள் முதலியவைகளை அர்ப்பணம் செய்துவிடுகிறார்கள். எனினும் கடவுள் அல்லர்

**வி:**—இங்ஙனமிருக்கக் கடவுளின் அவதாரங்களில் ஏன் நம்பிக்கை வைக்க வேண்டும் ?

**விடை:**—அவதாரங்களின் உட்பொருள் தெரியாமையாலும் கல்வி கேள்விகள் போதியவாறு இல்லாமையாலும், அஞ்ஞானத்தில் அமிழ்ந்து கிடப்பதினாலும் இத்தகைய பொய்களை ஜனங்கள் நம்புவது ஆச்சரியமாகாது.

**வி:**—கடவுள் அவதரிக்காது இருந்தால் இராவணன், கம்சன் போலுள்ள துஷ்டர்கள் எவ்வாறு நாசமடைவார்கள்.

**விடை:**—பிறந்தவன் இறப்பது நிச்சயம். பிறப்பும் இறப்பும் வாழ்க்கையின் முடிவு. ஈசுவ்ரன் சரீரம் தரிக்கிறார் இல்லை. படைப்பதும் படைத்ததை இரக்ஷிப்பதும், முடிவில் அழிப்பதும், ஈசுவரன்சரீரத்தைத்தரியாமலே செய்கிறார். எனவே இராவணாதி முதலிய துஷ்டர்கள் ஈசுவரனுக்கு முன் புழுக்கள் போலாவார்கள். அவர் சர்வ வியாபி எனவே இராவணன் கம்சன் முதலிய சரீரங்களிலேயும் பரிபூர்ணமாய் வியாபித்திருக்கிறார். எச்சமயத்திலும் அத்துஷ்டர்களை அவர் நாசஞ்செய்தல் கூடும். அனந்தகுண ஸ்பாவமுள்ள பகவான் ஒரு அற்பஜீவனைக்கொல்லும் நிமித்தம் ஜனனமரண சம்பவத்திற்குள்ளாகிறார் என்பது விந்தையே. இங்ஙனம் ஈசுவரனைப்பிறப்பு இறப்புக்குள்ளாக்கும் மாக்களை மூர்க்கர்களென்றும் அறிவிலிகளென்றும் அழைப்பதைத் தவிர வேறு என்ன செய்வது. பக்தர்களின் நிமித்தம் ஈசுவரன் ஜன்மத்தை எடுக்கிறார் என்று சொல்லும் பக்ஷத்தில் அது சத்தியமாகாது. ஈசுவரசங்கல்பத்திற்கு அடங்கி நடக்கும் பக்தர்களை இரக்ஷிப்பதற்கு ஈசுவரனிடத்தில் சகல சக்தியுமிருக்கிறது. சூரியன் சந்திரன் பூமி முதலிய கிரகங்களை உலகில் படைத்துப் பிரளயம் முதலிய கர்மங்களைத் தாங்கிவரும் கடவுளுக்கு இராவணனை வதைப்பதும், கம்சனைத் தொலைப்பதும் கோவர்த்தனத்தைத் தூக்குவதும் பெரியவேலையா ? இதற்குச்சரீரம் தேவையா ? சிருஷ்டியினிடத்து

ஒருவன் தனது மனதைச் செலுத்தி ஊன்றிப் பார்ப்பானேயானால் அடியிற் கண்டமுடிவு ஏற்படும். ஈசுவரன் நிகரற்றவர். அவருக்கு நிகருளான் எவனுமில்லே. யுக்தி அல்லது வேறு எக்காரணத் தினுலேனும் அவருடைய ஜன்மம் கிருபணம் ஆகிறதில்லே. ஒருவர் கர்ப்பத்தில் பிரவேசித்தார் ஒருவர் கையிலகப்பட்டுக்கொண்டார் என்று எங்கும் வியாபகமாயுள்ள ஈசுவரனைச்சொல்லுவது சத்தியமாகாது. என்றும் எல்லாப்பொருளினும் வியாபகமாயிருக்கும் ஈசுவரனைச் சரீத்துடன் வரச்செய்வதும்பின்னர் போகச்செய்வதும் பொருளில்லாப்பேச்சாகும். ஆதலால் இயேசு முதலியவர்கள் ஈசுவரனின் அவதாரமாகமாட்டார்கள். இராகத்துவேஷம், பசிதாகம், சுகதுக்கம் ஜனனமரணம் இவைகளில் உழலுபவர்களே மனிதர்கள், ஆவார்கள்,

## பாபமன்னிப்பு.

வினு:—ஈசுவரன் ஒருவர் செய்யும் பாபத்தை மன்னித்து விடுகிறாரா ?

விடை:—இல்லே. ஏனெனின் பாபமன்னிப்பு நியாயநஷ்டத்தைத் தரும். மன்னிப்பு என்பதை ஒருவன் மனதில் தாங்கித் துஷ்டத்துறைகளில் இறங்கி விடுவான். பின்னர் மனிதஜாதிகளிடத்து பாபம் அதிகரிக்கும். அரசன் மன்னித்துவிடுவான் என்ற நம்பிக்கை ஒருவனிடத்திலிருக்குமேயானுல், அரசனது மன்னிப்பைபெறலாமென்றெண்ணி செல்வாக்கு உள்ள ஒருவன் அஞ்சாது பாபகாமங்களில் பிரவேசிக்கிறுன். எனவே கர்மங்களுக்கேற்றவாறு பயன்களைக் கொடுப்பது என்பதே ஈசுவ்ரனுடைய வேலேயாகும்.

ஈசுவரன் தர்ம ஹானிக்குக் காரணராய் ஒரு நாளுமிருக்கமாட்டார்.

வினு:—ஜீவன் சுதந்திரமுடையதா அலலது சுதந்திரமற்றதா ?

விடை:—கர்மங்களைச்செய்வதில் அது சுதந்திரமுள்ளது. ஆனுல் பலன்களை அனுபவிப்பதில் சுதந்திரமற்றது. ஒரு கர்மத்தின் பயனைப்பற்றிய விஷயத்தில் ஜீவன் ஈசுவராக்ஞைக்குட் பட்டதாயிருக்கிறது. சுதந்தரத்துடன் காரியம் செய்பவனே **கர்த்தா.**

வினு:—**சுதந்திர**மென்ருல் என்ன ?

விடை:—எவனுடைய ஆதினத்தில் சரீரம் பிராணன் இந்திரியங்கள் அந்தக்கரணுதிகளிருக்கிறதோ அவன் சுதந்திரன். ஸ்வதந்திரனுயில்லாவிட்டால் கர்மங்களுடைய பாபபுண்ணியபலன்களை ஒரு நாளும் அனுபவிக்கமுடியாது. சேனுதிபதியின் உத்திரவு பிரகாரம் யுத்தகளத்தில் போர்வீரர்கள் கொன்றபோதிலும் அபராதிகளாக எப்படி அவர்கள் ஆகிறதில்லேயோ, அப்படியே பரமேசுவரனுடைய ஆக்ஞையினுல், அவருடைய ஆதீனத்தில் ஜீவனுடைய காரியம் சித்தமாகிறபடியால் ஜீவன்களின் பாபபுண்ணியத்தை, நரக ஸ்வர்க்கத்தை, சுகதுக்கத்தை, பரமேசுவரன்தான் அனுபவிக்கவேண்டும். சரமொன்ருல் ஒருவன் கொல்லப்பட்டால் ஆயுதம் தரித்து பிரயோகித்தவன் பிடிக்கப்படுவான். அவனுடைய ஆயுதத்தைப் பிடிக்கமாட்டாகள். அப்படியே பராதீன ஜீவன் தான் செய்த பாபபுண்ணிய பலன்களை யனுபவிககச் செய்பமுடியாது. ஆகையால் சாமர்த்தியானுகூல கர்மஞ்செயவ்தில் ஜீவன்

சுதந்திரமுள்ளதாயிருக்கிறது. ஒருதரம் பாபம் செய்யுமேயானல் ஈசுவரன் ஆக்ஞையில் பராதீனமடைந்து பாபத்தின் பலத்தை யனுபவிக்கிறது காரியத்தைச் செய்வதில் ஜீவன் சுதந்திரமாயும் பாபங்களுக்கு துக்கஸ்வரூபமான பலன்களையனுபவிப்பதில் பரதந்திரமாயிருக்கிறது.

வினு:—ஈசுவரன் ஜீவனையுண்டுபண்ணுமல் அதற்குச்சக்தியும் கொடுக்காது இருந்தாரேயானல் ஜீவனல் ஒன்றும் செய்ய இயலாது. ஆகையால் பரமேசுவரனுடைய ஆக்ஞையினல் ஜீவன் எல்லாக்காரியங்களையும் செய்கிறது என்று ஆகாதா?

விடை:—ஜீவன் ஒரு நாளும் உற்பத்தியாகவில்லை. அது ஈசுவரனைப்போலவும் உலகத்தின் உபாதான காரணத்தைப்போலவும் அநாதியாயுள்ளது. ஜீவனின் சரீரம், இந்திரிய முதலியவைகள் கடவுளால் செய்யப்பட்டது. ஆனல் அவைகளெல்லாம் ஜீவனுடைய ஆதீனத்தில் இருக்கிறது. மனகர்மவசனங்களினல் யார்பாபபுண்ணியஞ்செய்கிறார்களோ அவர்களே அதன் பலனை யனுபவிக்கிறார்கள். கடவுள் யனுபவிக்கிறர் இல்லை. உதாரணமாக, ஒருவன் சுரங்கத்திலிருந்து இரும்பை எடுத்தான். அதை ஒரு வியாபாரி வாங்கினன். அதைக்கருமான் வாங்கிக் கத்தியொன்று செய்தான். அதைக்கொண்டு சிப்பாய் ஒருவன் மற்றொருவனை அடித்துக்கொன்றான். சுரங்கத்திலிருந்து எடுத்தவனே அல்லது இரும்புவியாபாரியோ, அல்லது கத்தியோ, அக்குற்றத்திற்காக அரசனல் தண்டிக்கப்படுகிறதில்லை. எவன்கத்தியை பிரயோகஞ்செய்தானே அவனே தண்டனைக்குள்ளாகிறன். அப்படியே சரீராதிகளை உற்பத்திசெய்த பரமேசுவரன் அவைகளினுடைய பலன்களை அனுபவிக்கிறர் இல்லை. ஜீவனையனுபவிக்கச் செய்கிறவராயிருக்கிறர். பரமேசுவரன் கர்மஞ்செய்கிறவராயிருந்தால் ஒரு ஜீவனும் பாபம் செய்யாது. ஏனென்றால் பரமேசுவரன் பரிசுத்தராயும் தார்மிகராயும் இருக்கிறபடியால் எந்த ஜீவனுக்கும் பாபஞ்செய்ய ஆக்ஞாபிக்கிறதில்லை. ஆகையால் ஜீவன் தன் வேலையைச்செய்வதில் சுதந்திரன். ஜீவன் தன்னுடைய வேலையைச்செய்வதில் எப்படிச் சுதந்திரமாயிருக்கிறதோ அப்படியே பரமேசுரனும் தன்னுடைய வேலையைச் செய்வதில் சுதந்திரமா இருக்கிறர்.

வினு:—ஜீவன், ஈசுவரன் இவைகளின் குணகர்மஸ்வபாவங்கள் யாது?

விடை:—இரண்டும் சேதன ஸ்வரூபம். சுவபாவத்தில் இரண்டும் பரிசுத்தமாயும் அழிவில்லாமலும் தர்மசுவபாவமுள்ளதாகவுமிருக்கின்றன. ஆனல் சிருஷ்டி ஸ்திதி பிரளயம், எல்லாவற்றையும் நியமங்களில் வைப்பது, ஜீவன்களுடைய பாபபுண்ணியங்களுக்குத் தகுந்தவண்ணம் பலன்களைக் கொடுப்பது போன்றகர்மசம்பந்தமான காரியங்களைச்செய்வது, இவைகளெல்லாம் பரமேசுவரனுடைய காரியம். சந்தானேற்பத்தி, அவைகளை பரிபாலனஞ் செய்வது சிற்ப வித்தியாதிகளை பரவச்செய்வது ஜீவன்களுடைய காரியமாகும். அவைகள் நல்லதாயும் இருக்கலாம் அல்லது கெட்டதாயுமிருக்கலாம். நித்திய ஞானம் நித்தியானந்தம், எல்லையற்றபராக்கிரமம் (பலம்) முதலியவை ஈசுவரனுடைய குணங்களாகும். ஆனல் ஜீவன்களுடைய குணம்யாதெனில்,

इच्छाद्वेषप्रयत्नसुखदुःखज्ञानान्यात्मनो लिङ्गमिति ॥

प्राणापाननिमेषोन्मेषमनोगतीन्द्रियान्तरविकाराः सुखदुःखेच्छाद्वेषौ प्रयत्नाश्चात्मनो लिङ्गानि ॥

பொருள்களைப் பெறுவதில் ஆசை, வெறுப்பு, ஊக்கம் இன்பதுன்பங்களின் உணர்ச்சி, துக்கம், சந்தோஷமின்மை, ஞானம் *மூச்சை உள்ளிழுத்தல், மூச்சுவிடுதல், கண்களைக்கொட்டுதல், கண்களைத்திறத்தல் நிச்சயமான ஸ்மரணையைக் கொண்டிருத்தல், விவேகம், ஞாபகம், வியக்தித்துவம், பசிதாகம், சுகதுக்கம் இவைகளைப்போன்ற அகமாறுதல்களையும், வேற்றுமைகளையும், இந்திரியங்களைச் சரிப்படுத்தல். இவைகளே ஜீவாத்மாவைப்பரமாத்மாவிலிருந்து மாறுபடுத்துகிறது. இக்குணங்களினுலேயே ஜீவாத்மாவும் வெளியாகிறது. அது ஸ்தூலபதார்த்தமாகாது. எதுவரையில் ஆத்மா தேகத்திலிருக்கின்றதோ அதுவரையில் பிரகாசித்துக் கொண்டிருக்கின்றது. சரீரத்தை விட்டகன்றவுடன் அவைபிரகாசமாகிறதில்லை. ஒரு பதார்த்தமிருக்கும் பொழுதே அதனுடைய குணங்கள் பிரகாசமடைந்து, பதார்த்தங்களில்லாதபொழுது பிரகாசிக்கிறதில்லை. ஆனுல் அப்பதார்த்தங்களையே அது சேர்ந்ததாயிருக்கின்றன. உதாரணமாக சூர்யனுடையவும் விளக்குனுடையவும் குணம் வெளிச்சம். சூர்யனும் விளக்கு மிருந்தால் பிரகாசமிருக்கின்றன. அவைகளில் லாவிட்டால் இல்லை. அவ்வாறே ஜீவாத்மாவும், பரமாத்மாவும் முறையே குணங்களால் அறியப்படுகின்றன.

வினு:—பரமேசுவரன் முக்காலஞானி எனவே எதிர் கால, நிகழ்ச்சியை அறியக்கூடியவர். அவர் எப்படி நிச்சயம் செய்கிருரோ, அப்படியே ஜீவன் நடக்கும். இதனுல் ஜீவனுக்குச் சுதந்திரமில்லை. ஆகையினுல் அவனுக்குத் தண்டனையளிக்க நியாயமில்லை. ஏனென்ருல் ஈசுவரன் முதலில் எப்படி நிச்சயஞ் செய்கிருனே அப்படியே தான் ஜீவன் நடிக்கின்றன.

விடை:—ஈசுவரனை முக்கால ஞானி எனல் மூடத்தனமாகும். இருப்பதின் அழிவே இறந்தகாலமாகும். இனி நிகழுவதே வருங்காலமாகும். கடவுளுக்குக் கடந்தவிஷயம் என்றும் தற்காலம் அவரிடம் இல்லாது இனி வரப்போகும் ஞானம் என்பதும் கிடையாது. கடவுளின் அறிவு அகண்டமானது. அழிவற்றது என்றும், இருப்பது கடந்தது என்பதும், இனிநிகழப்போவதென்பதும் ஆத்மசம்பந்தத்துடன் நிற்பதே தவிற கடவுளைபற்றினதல்ல. அவர் எப்பொழுதும் நிகழ்கால அறிவில் வாழ்பவரே. ஆத்மசம்பந்தமாய்ப் பேசுங்கால், கடவுளை முக்கால ஞானி என்று சொல்லலாம். ஆனுல் ஆத்மசம்பந்தத்திலிருந்து விலக்கி அவரைச் சுயமாய் எடுத்துக்கொள்ளுங்கால் இறந்தகாலம், நிகழ்காலம் எதிர்காலம் என்பது பொருளற்ற சொல்லாகும். ஏனெனின், கடவுள் கால வேற்றுமையற்றவர். சுதந்திரமாய் ஜீவன் எப்படி செய்கிறதோ அதை ஈசுவரன் தன்னுடைய சர்வஞ்ஞ சக்தியால் அறிகிருர். ஈச்வரன் அறிகிறபடி ஜீவன்

* இவ்வாறும் வைசேஷிகத்திற்கும் நியாயத்திற்கும் சமானமானவை.

காரியத்தைச் செய்கிறது. ஆனால் இறந்தகால, நிகழ்கால, எதிர்கால, ஞானத்தின்பலன்களைக்கொடுப்பதில் ஈசுவரன் சுதந்திரர். நிகழ்காலத்தில் கொஞ்ச ஞானத்தை உடைத்தாயிருப்பதில், காரியஞ்செய்வதிலும் ஜீவன் ஸ்வதந்திரமாயுள்ளது. ஜீவன்களின் கர்மங்களில் ஈச்வரனின் ஞானம் எப்படி அநாதியாயிருக்கின்றதோ, அப்படியே தண்டனைசெய்வதிலும் அநாதி. அப்படியே கர்மஞ்செய்வதிலும். இரண்டுவிதமான ஞானமும் அவருக்குச்சத்தியம். கர்மத்தின் அல்லது கார்யத்தின் ஞானம் சத்தியமாயிருந்துகொண்டு தண்டனை அல்லது நியாய விசாரணையின் ஞானம் பொய்யாயிருக்கக்கூடுமா ? இதனால் யாதொரு தோஷமும் ஏற்படுகிறதில்லை.

வினா:—அநேக சரீரங்களில் அல்லது தேகங்களில் ஒரே ஆத்மா பரவிக்கொண்டிருக்கிறதா? அல்லது தனித்தனி சரீரத்திற்கும் தனித்தனி ஆத்மாவா?

விடை:—தனித்தனியாய் இருக்கின்றன. ஒரே ஆத்மாபரவிக்கொண்டிருக்குமேயானால் **ஜாக்கிரதாவஸ்தை** (விழித்திருக்கும்போதுள்ள ஸ்திதி) **ஸ்வப்னம் ஆழ்ந்தநித்திரை, மரணம், ஜன்மம், சம்யோகம், வியோகம்** வருதல் இவைகள் போதல் ஒருநாளுமுடியாது. ஜீவனுடைய ஸ்வரூபமானது அற்பஞானமுடையது, எல்லையுள்ளது, சூட்சமமாயுள்ளது. பரமேசுவரனே அதிசூட்மத்திற்கும் சூட்சமமாயுள்ளவர், அனந்தர், சர்வஞ்ஞர், சர்வவியாபகஸ்வரூபர் இதனால் ஜீவனுக்கும் பரமேச்வரனுக்குமுள்ள சம்பந்தம் **வியாப்பியத்துக்கும்** (பரவப்பட்டது) **வியாபகத்துக்குமுள்ள** சம்பந்தந்தான்.

வினா:—ஒரு இடத்தில் ஒருவஸ்து இருந்தால் அதே இடத்தில் அதேசமயத்தில் மற்றொரு வஸ்து இருக்கமுடியாது. இதனால் ஜீவனும், ஈசுவரனும் சமீபசம்யோக சம்பந்தத்திலிருக்கக்கூடும். வியாப்பிய வியாபக சம்பந்தத்திலிருக்க இயலாது.

விடை:— ஒரே விதமான ஆகிருதிகளைக்கொண்ட பதார்த்தங்களுக்கு நீங்கள் சொன்ன நியாயம் சரியானது. சமானமில்லாத ஆகிருதி வஸ்துக்களுக்குச் சரியாகாது. உதாரணமாக இரும்பு ஸ்தூலமானபதார்த்தம், அக்கினி மின்சாரம் சூட்சமமானது. காந்தமானது இரும்பு முழுவதும் பரவி அதே இடத்தில் அதுவுமிருக்கின்றது. பரமேச்வரனைக்காட்டிலும் ஜீவன் ஸ்தூலமானது. பரமேச்வரன் ஜீவனைவிடச் சூட்சமமாயிருக்கிறபடியால் பரமேச்வரன் வியாபகராயும், ஜீவன்வியாப்பியமாயுமிருக்கின்றது. எப்படி இந்த வியாப்பிய வியாபகசம்பந்தம் ஜீவனுக்கும் ஈசுவரனுக்குமிருக்கின்றதோ அப்படியே யஜமானன் வேலைக்காரன், அரசன் குடிகள், தகப்பன், மகன், முதலிய சம்பந்தங்கள்.

## வேதாந்தம்,

வினா.—ஜீவாத்மாவும் ஈசுவரனும் தனித்தனியா இருந்தால் அடியிற்கண்ட வேதவாக்கியங்களை எப்படிக் கொள்வது ? நான் ஈசுவரன் ! நீ கடவுள் இஜ்ஜீவாத்மா கடவுள்,

**प्रज्ञानं ब्रह्म ॥ अहं ब्रह्मास्मि ॥ तत्त्वमसि ॥ अयमात्मा ब्रह्म ॥**

விடை:—இவை வேதவாக்கியமல்ல. பிராமண கிரந்தவசனங்களேயாகும். சத்திய சாஸ்திரங்கள் இவைகளை மகாவாக்கியங்களாக எடுத்துக்கொள்ள வில்லை. அகம் நான் பிரமம் பிரம்மத்தில் அல்லது ஈச்வரினிலிருக்கிறேன். இது தாத்ஸ்யோபாதி எனப்படும். ஒரு பதார்த்தத்தினிடத்துள் அடங்கியிருக்கும் ஒருபொருளைக்குறிக்க அப்பதார்த்தத்தையே உபயோகிப்பது. உதாரணமாக ஊர்க்காவலின்கூவல். காவலுக்குக்கூக்குரலிடும் சாமார்த்திய மில்லை. ஆனல் காவலிலிருக்கும் மனிதர்கள்தான் கூவுகிறார்கள். எனவேஊர்க்காவலின் கூக்குரல் என்பதற்கு ஊர்க்காவல் செய்யும் காவலர்களின் கூக்குரல் என்பது பொருள். அங்ஙனமே மேற்சொல்லிய மேற்கோளின் பொருளை இங்குநாமறிய வேண்டும், சிலர் பிரமம்! ஈசுவரன் எல்லாபதார்த்தத்திலுமிருக்கிற தென்கிறார்கள். அப்படியிருக்க ஜீவாத்மாமாத்திரம் ஈசுவரனிடத்தில் இருப்பது என்பதில் குறிக்கப்படும்விசேஷம் என்ன? எல்லாவஸ்துக்களும் ஈசுவரனிடத்திலிருக்கிறதஎன்று சொன்னபோதிலும், ஜீவனைப்போல் ஈசுவரனுக்கு அருகிலுள்ள வஸ்துவேறே எதுவுமில்லை. ஒரே விதமானகுணத்தையுடையபடியினல், ஜீவன்கள்மாத்திரம் ஈசுவரனை அறிய முடியும். மோக்ஷ நிலையில் ஈசுவரனுடைய முன்னிலையினும் இருக்கமுடியும். எனவே ஜீவனுக்கும் பிரம்மத்துக்கும் உள்ள சம்பந்தம் யாதெனில், தனக்கும், தன்னுள் அடங்கியிருக்கும் வஸ்துவுக்கும் உள்ள சம்பந்தமே. ஒன்றிற்கு மற்றொன்று தோழன் போன்ற சம்பந்தமுடையது. ஜீவனும் கடவுளும் ஒன்றாகாது மேலும் மேலும்பெருகும் அன்பு நிகழ்ச்சியினல்ஒருவன் அவனும் நானும் ஒன்றே, என்பான். அதேபோல் ஜீவாத்மா ஈசுவரனிடத்தில் கொண்டுள்ள, அன்பு வெள்ளத்தின்பயனல்தன்னை மறந்து தன்னை அவனில் இழந்து சமாதி நிலையடையுங்கால் நானும் ஈசுவரனும் ஒன்று என்கிறான்.

ஈசுவரனுக்குண்டான குணங்களைப்பெற்ற ஆத்மாவொன்றே கடவுள் வயப்படுவதினல் நானும் கடவுளும் ஒன்று எனச் சொல்லலாம்.

வினா.—ஏஜீவனே (தத்) பிரமமாவாக (த்வம்) நீ (அஸி) ஆகிறாய். அதாவது நீயே பிரம்மா இதற்குப்பொருளென்ன?

விடை.— "தத்" என்கிற பதத்திற்கு என்ன பொருள் கொள்ளுகிறாய்?

வினா:—பிரம்மம்

விடை:—(தத்) பிரம்மத்தைக்குறிக்கிறது என்பதை எவ்வாறு கொண்டாய்?

**सदेव सोम्येदमग्र आसीदेकमेवाद्वितीयं ब्रह्म ॥**

வினா:—அதனது பூர்வ வாக்கியத்திலிருந்து.

விடை:— நீ சாந்தோக்ய உபநிஷத்தைப்பார்த்ததில்லை எனத்தெரிகிறது. பார்த்திருந்தால் பிரம்ம சப்தம் அதிலில்லை என்று அறிந்திருப்பாய். இவ்வாறு தவறான பொருளையும் கூறமாட்டாய். சாந்தோக்ய உபநிஷத்தில்.

सदेव सोम्येदमग्र आसीदेकमेवाद्वितीयम् ॥

வினா:— தத் சப்தத்தின் பொருளென்ன?

से य एषोणिमा ॥ एतदात्म्यमिदं सर्वं तत्सत्यं स आत्मा तत्त्वमसि श्वेतकेतो इति ॥ சாந்தோ 6. 7 8. 6. 7.

விடை:— அப்பரமாத்மாவே அறிய யோக்கியமுள்ளவர். அவர் அதி நுட்பமானவர். சகல ஜகத்திற்கும் ஜீவனுக்கும் ஆத்மா அவரே. சத்தியஸ்வரூபர். தனக்குத்தானே ஆத்மா. ஹே சுவேதகேதோ குழந்தாய்

तदात्मकस्तदन्तर्यामी त्वमसि ॥

அந்தர்யாமியாயிருக்கும் அப்பரமாத்மா உன்னிலும் விளங்குகிறார். இதுவே உபநிஷத்துகளுக்கு விரோதமன்னியிலிருக்கிறது. பிரகதாரண்யக உபநிஷத்தில் யாக்ஞவல்கியர் தன் பத்தினிக்குச் சொல்லுவதாவது.

य आत्मनि तिष्ठन्नात्मनोन्तरोयमात्मा न वेद यस्यात्मा शरीरम् ।
आत्मनोन्तरोयमयति स त आत्मान्तर्याम्यमृतः ॥

ஓமைத்திரேயி. அழிவில்லாதவரும் சர்வவல்லமையுள்ளவருமான ஈசுவரன் உன்னுடைய ஆத்மாவில் வசிக்கிறார். அவரை, அறிவற்ற ஜீவாத்மா தெரிந்துகொள்ளுகிறதில்லை. எப்படி ஜீவாத்மா சரீரத்தில் வசிக்கிறதோ அப்படியே ஜீவாத்மாவினிடத்துப் பரமேசுவரன் வசிக்கிறார். அவர் ஜீவாத்மாவிலிருந்தாலும், ஜீவாத்மாவை விட்டு விலகியிருந்து கொண்டும், அதனுடைய பாபபுண்ணியங்களுக்குச்சாக்ஷியாயிருந்து கொண்டும், கர்மத்திற்குத்தக்கவாறு பலன்களை அளித்துக்கொண்டும் விளங்குகிறார். அப்பரமாத்மாவை அறிவாய். மேற்சொல்லிய செய்யுள் வேறுபொருளைத்தான் கொடுக்குமோ?

अयमात्मा ब्रह्म

அதாவது சமாதிநிலையில் யோகிகளுக்குப் பரமேசுவரன் பிரத்தியட்சமாயிருக்கும்போது அவன் என்ன சொல்லுகிறான் என்றால் என்னிடத்தில் வியாபகமாயுள்ள அந்தபிரம்மம் எவ்விடத்திலும் வியாபகமாயிருக்கிறது. இதனாலேயேஜீவனைப் பிரம்மம் என்று சொல்லும் வேதாந்திகள் வேதாந்தசாஸ்திரத்தையறிகிறார்கள் இல்லை.

अनेन जीवेनात्मनानुप्रविश्य नामरूपे व्याकरवाणीति ॥ சாந்தோ 6. 3. 2.

तत्सृष्ट्वा तदेवानुप्राविशत् ॥ தைத்ரே பிரம்மா 2. 6.

வினா:— சாந்தோக்ய உபநிஷத்தில் கடவுள் சொல்லுகிறது என்னவென்றால்:—பிரபஞ்சத்தையும் அதிலிருக்கும் சரீரங்களையும்சிருஷ்டிசெய்து சரீரத்தில் ஆத்மாவாக நுழைந்து, பற்பல ரூபத்தாலும்பெயர்களாலும் தோன்றுகின்றேன்? மறுபடியும் தைத்திரேய உபநிஷத்தில் சொல்லுவதாவது, ஜகத்தையும் அதிலிருக்கும் சரீரங்களையும் சிருஷ்டி செய்து கடவுளே அதனுள்பிரவேசிக்கிறார். இவ்வாக்கியங்களுக்கு நீ வேறு அர்த்தம் எப்படிக்கூறுவாய்.

விடை:—பதம், பதப்பொருள், கருத்துரை இவைகளையறிந்திருந்தால் இப்படி அனர்த்தம் எப்பொழுதும் செய்யமாட்டாய். பிரவேசம், அனுப்பிரவேசம் என்று இரண்டு பாவங்களுண்டு. அனுப்பிரவேசமென்றால் ஒன்றன்பின் பிரவேசிப்பது. ஜீவன் சரீரத்தில் நுழைந்தபிறகு ஈசுவரன் அவனில் பிரவேசிக்கிறபடியால் அனுப்பிரவேசி போல் ஆகிறான். வேதத்தின் வழியாய் எல்லா நாம ரூப முதலிய வித்தைகளை வெளிப்படுத்தி சரீரத்தில் ஜீவனைப் பிரவேசிக்கச் செய்து தான் ஜீவனில் பிரவேசிக்கிறார். (அனு) என்னும் பதத்திற்கு அர்த்தம் தெரிந்தால் நீ இப்படிப்பொருள்வழங்கமாட்டாய்.

வினா:—காசியில் கோடை காலத்தில் பார்த்த தேவதத்தனை மழைக் காலத்தில் மதுரையில்பார்த்தேன் என்று ஒருவன் சொல்லுகிறான். தேச கால சிதோஷ்ணத்தை விட்டு சரீரத்தை மாத்திரம் கணக்கில் எடுத்தால் தேவதத்தனது வாழ்க்கை நிச்சயமாகிறது. பாகத்தியாக *லட்சண நியாயத்தின்பிரகாரம் பரோட்சம் (பார்க்காமலிருப்பது) தேசம் காலம், மாயை, உபாதி இவைகளை ஈசுவரவிஷயத்திலும், தேசகாலம், அவித்தை அற்பஞானம் முதலிய உபாதிகளை ஜீவன் விஷயத்திலும் விட்டு விட்டு இரண்டிற்கும் பொதுவாயிருக்கும் சேதன சுவபாவத்தை மாத்திரம் எடுத்துக்கொண்டால் இரண்டிலும் பிரம்மம் இருப்பது நிரூபணமாகின்றது. ஈசுவரனுடைய சர்வஞ்ஞாதி குணங்களையும் ஆத்மாவினுடைய அற்பஞாதி குணங்களையும் விட்டு விட்டு இரண்டிற்கும் பொதுவாயிருக்கும் சேதன குணங்களை மாத்திரம் எடுத்துக்கொள்ளுங்கால், ஈசுவரனும் ஆத்மாவும் ஒன்றே என்பது புலனாகிறது. இவ்வாட்சேபனைக்குப்பதில் என்ன ?

விடை:—ஜீவனையும், ஈச்வரனையும் எங்ஙனம் கருதுகிறாய்? நித்தியமாகவா அல்லது அநித்தியமாகவா ?

வினா:—இரண்டும் உபாதியிலிருந்து உற்பத்தியானபடியால் அநித்தியமென்று கருதுகிறேன்.

விடை:—உபாதி நித்தியமா? அல்லது அநித்தியமா ?

வினா:—

जीवेशौ च विशुद्धाचिद्विभेदस्तु तयोर्द्वयोः ।
अविद्या तच्चितोर्योगः षडस्माकमनादयः ॥
कार्योपाधिरयं जीवः कारणोपाधिरीश्वरः ।
कार्यकारणतां हित्वा पूर्णबोधोऽवशिष्यते ॥

எங்களுடைய மதம் பின்வருமாறு.வேதாந்திகளாகிற நாங்கள் அடியிற்கண்ட ஆறு காரிகை அல்லது பதார்த்தங்களை அநாதியாக கருதுகிறோம். (1) ஜீவன் (2) (ஈசுவரன் (சேஷ்டை யுள்ளவன்) (3) பிரம்மம் (சேஷ்டையில்லாதது) (4) ஈசுவரனுக்கும் ஜீவனுக்குமுள்ள விசேஷபேதம் (5) அவித்தை அஞ்

* பொருள்களின் பொதுவான குணங்களை அங்கீகரித்து வேற்றுமையான குணங்களைத்தள்ளுவது.

ஞானம். (6) சேதனபதார்த்தத்தோடு அவித்தையின் ஐக்கியம். இந்த ஆறில் பிர்ம்மமே ஆதியும் அந்தமும் இல்லாதது. மீதி ஐந்தும் ஆதியில்லா திருப்பினும் *அபாவத்தைப்போல தற்போதிருந்தாலும் எதிர் காலத்திலில்லை. எதுவரையில் அஞ்ஞான மிருக்கின்றதோ அதுவரையில் இந்த ஐந்தும் இருக்கின்றது. இந்த ஐந்தினுடைய ஆரம்பம் தெரிகிறதில்லை. அதனால் அநாதி என்று பெயர். ஞானமடைந்தபிறகு நஷ்டத்தையடைகிறபடியினால், இவைகள் நாசத்தைமடையது.

விடை.—உன்னுடைய இரண்டு சுலோகமும்சரியானவையல்ல. ஏனென்றால் அவித்தையினுடைய யோகமன்னியில் ஜீவனும் மாயையுடைய யோகமன்னியில ஈசுவரனும் உன்னுடையமதத்தில் இருக்கிறதில்லை.

**तच्चितोर्योगः**

ஆறுவது பதார்த்தம் என்று ஒன்றை எண்ணினுயே அது இல்லை. ஏனென்றால் அவித்தை மாயை இவ்விரண்டும் ஜீவன் ஈசுவரனில் முறையே கலந்துவிடுகிறது. பிரம்மம் அப்படியே மாயை வித்தையினுடைய யோகமன்னியில் ஈசுவரன் உண்டாகிறதில்லை. அப்பொழுது ஈசுவரனை அவித்தை பிர்ம்மம், இவைகளிலிருந்து தனிமையாய் எண்ணுவது வியர்த்தமாகிறது. அதனுடைய பாகமும் தொகுதியுமாக ஆகின்றது. இந்தகாரணத்தினலேயே ஈச்வரன் ஜீவனை பிர்ம்மத்திலிருந்து அநாதியாயுள்ள பதார்த்தமென்று கருதுவது பிரயோசனமற்றது. இதனல் இரண்டுபதார்த்தங்களே, பிரம்மம் அவித்தை, உன்னுடைய மதத்தால் சித்தமாகின்றது. ஆறுவது பதார்த்தமில்லை. முதலில் கார்யோபாதி காரணோபாதியிலிருந்து ஜீவனையும், ஈசுவரனையும் எப்பொழுது சித்தஞ்செய்ய முடியுமென்றால்:—அனந்த நித்திய சுத்தபுத்த முக்த ஸ்வபாவ சர்வவியாபக பிர்ம்மத்தில், அவித்தை எப்பொழுதுசித்தமாகின்றதோ அப்பொழுதேமுடியும். ஒரேஇடத்தில் (ஸ்வ ஆசிரயம், ஸ்வவிஷயம்) அஞ்ஞானம் அநாதி எல்லாவற்றையும்பிர்ம்மத்தில் இருக்கென்று கருதினல் அப்பொழுதுபிர்ம்மம் பரிசுத்தமானதாகமாட்டாது. ஒரு இடத்தில் பிரம்மத்திற்கு அஞ்ஞானம் இருக்கிறதென்று ஒப்புக்கொண்டால் அது இங்குமங்கும் அலைகிறபடியால் இங்குமங்கும் போய்க்கொண்டே இருக்கும். எங்கெங்குபோகின்றதோ அங்கெங்கு பிரம்மம் அஞ்ஞானியாயும் எந்தெந்ததேசத்தை விட்டுப்போகிறதோ அந்தந்த இடத்தில் ஞானியாயும் மாறிக்கொண்டே யிருக்கும். இப்படி இருக்கிறதினல் ஒரு பாகத்தையாவது நித்திய பரிசுத்த அநாதி ஞானயுக்தரென்று சொல்லமுடியாது. அஞ்ஞானத்தின் எல்லைக்குள்ளிருக்கும் பிர்ம்மத்தின் பாகம் அஞ்ஞானத்தையே உணர்ந்து கொண்டிருக்கும். உள்ளும் புறமும் இருக்கப்பட்ட பிரம்மா அஞ்ஞானத்துடன் " கூடியிருப்பது, கூடாதிருப்பது" என இருவகைப்படும். இவ்விதம் பிரிக்கப்படுவதால் அவருக்கு ஹானி ஒன்றும் இல்லை, என்று சொல்லுவீர்களேயானல் அவர் பிரிக்கப்படாமல் இருக்கிறூர். அவர் அஞ்ஞானத்துடன் கூடினவரல்லர். ஞானம் அஞ்ஞானம் என்பது கற்பிக்கப்படும் குணமே

* மூன்றுவது அத்தியாயம் பார்க்கவும்

யாதலால் அவரைச்சார்ந்திருக்கும் ஒரு வஸ்துவின் குணங்களேயாகும். எனவே அக்குணங்கள் பிரம்மத்தினிடம் நித்தியமாயிருக்கமுடியாது. தேகத்தின் ஒரு பாகத்தில் புண் ஒன்று இருந்தால் முழுதேகத்திற்கும் எப்படி வலியையுண்டுபண்ணுகிறதோ, அப்படியே அஞ்ஞானம் சுகம் துக்கம், கிலேசம், ஒரு பாகத்திலிருந்தால் அது முழு பிரம்மத்தையும்பாதிக்கும்.

அந்தக்கரணத்தின் மூலம் பிர்ம்மமானது ஆத்மாவாகிறது என்பதை நீ நம்பினால் பிர்ம்மாவை சர்வவியாபியெனக் கொள்ளுகிறாயா? கட்டுப்பட்டவர் எனக் கொள்ளுகிறாயா? சர்வவியாபியே என்று நீ ஒத்துக்கொள்வாயேயானால் அந்தக்கரணம் கட்டுப்பட்டதாகிறது. அதாவது ஒவ்வொருவனிடத்திலும் அது தனிமையாயிருக்கிறது. பின்னர் அது சலன சேஷ்டையுடையதா? அல்லவா?

விடை:— ஆம். அது. சலனசேஷ்டையுடையது.

வினா:— அந்தக்கரணத்தோடு பிரம்மமும் அலைகிறதா? இல்லையா?

விடை:— ஸ்திரமாகயிருக்கிறது.

வினா:— பிரம்மத்தின் ஒருபாகத்தைஅந்தக்கரணம் விடும்பட்சத்தில் அது அஞ்ஞானத்திலிருந்து விடுதலையாகிறது. பிரம்மத்தின் எப்பரிசுத்த பாகம் அத்னுடன் சேருகிறதோ. அது அஞ்ஞானமாகத்திரும்புகின்றது. பிரம்மமானது க்ஷணந்தோறும் அஞ்ஞானியாயும் ஞானியாயுமிருக்கின்றது. இப்படி இருப்பதனால் மோட்சமும் பந்தமும் க்ஷணபங்குரம் அல்லது நிலையில்லாமலிருக்கின்றது. ஒரு காலத்தில் ஒருவன் பார்த்ததும் கேட்டதும் வேறொருவனுக்கு எப்படி ஞாபகமில்லையோ அப்படியே அப் பிர்ம்மத்துக்கும், குறிப்பிட்ட ஒருகாலத்தில் பார்த்தும் கேட்டதும் ஞாபகமிருக்காது. ஏனென்றால் பார்த்ததும் கேட்டதும் ஒருகாலத்தையும், ஞாபகமூட்டிக்கொள்வது வேறொரு காலத்தையும் ஒட்டினதாகும். பிரம்மம் ஒன்றே என்று சொல்லும் பட்சத்தில் சர்வஞ்ஞராய் ஏனில்லை? அந்தக்கரணம் தனித்தனியாய் பின்னமாயிருக்கிறது, என்கிற பட்சத்தில் அப்படியே பிர்ம்மமும் தனித்தனியாய்ப் பின்னமாயிருக்கிறது. அது ஜடமாயிருப்பதனால் அதில் ஞானமில்லை. பிரம்மம் அல்லது அந்தக்கிரணத்திற்குச் சேதனம் அல்லது ஞானமில்லை என்றும் அந்தககரணத்திலிருக்கும் சிதாபாசமே சேதனத்தை அடைந்து ஞானத்திற்குக் காரணமாகிறதென்று சொல்லும்பட்சத்தில் அச் சேதன பதார்த்த ஞானம் அந்தக்கரணத்தின் வழியாக தெரிந்துக்கொள்ளப் படுகிறது. இதனால் காரணோபாதி கார்யோபாதியோகத்தினால் பிரம்மா, ஜீவன், ஈச்வரன் இவைகளை நிரூபித்தல்முடியாது. பிர்மத்துக்கு ஈச்வரன் என்று பெயர். பிர்ம்மத்திலிருந்து தனிமையாயும் அநாதியாயும் அமிர்தஸ்வரூபமாயுமிருக்கும் ஜீவனின்பெயர் ஜீவனே. சிதாபாசத்துக்குஜ் ஜீவன் என்றபெயர் சொல்லும் பட்சத்தில் அது க்ஷணபங்குரமாயும் அநித்தியமாயு மிருக்கிறபடியால் நஷ்டமடையும். அப்பொழுது மோட்சத்தையார் அனுபவிப்பார்? இதனால் பிர்ம்மம் ஜீவனாகவும் ஜீவன் பிரம்மமாகவும் ஆகிறதில்லை. ஆனதுமில்லை. ஆகப்போகிறதுமில்லை.

**सदेव सोम्येदमग्र आसीदेकमेवाद्वितीयम्**

வி௵:—அப்பொழுது **அத்வைதம்** எப்படி சித்தியாகும்? என்னருமைப் புதல்வனே. ஆரம்பத்தில் கடவுள் ஒன்றே. எங்கள் மதத்தின் நம்பிக்கைப்பிரகாரம் பிரம்மத்தை தவிர-சஜாதியாகவோ, விஜாதியாகவோ, அதிலிருந்துபிரிக்கப்பட்ட அவயவங்களாகவோ வேறொன்றும் இல்லாமையினால் பிர்ம்மம் ஒன்றென ஸ்தாபிதமாகிறது. ஜீவன் தனிமையாக இருந்தால் அத்வைதசித்தம் எப்படி நிரூபணமாகும்?

விடை:—இப்பிரமையில் விழுந்து ஏன் பயப்படுகிறாய்? விசேஷண விசேஷ்ய வித்தையின் ஞானத்தை அறிந்துகொள். விசேஷணத்தின் பிரயோசனம் என்ன?

வி௵:—பேதங்களை உண்டுபண்ணுபவைகளாயிருக்கின்றன.

**விடை:**—அப்படி அவைகளைப் பிரகாசஞ்செய்பவைகள் என்று எடுத்துக் கொள்ளும்பட்சத்தில், குணகுணங்களை காட்டுகிறது என்பதையும் நீங்கள் ஏன் ஒத்துக்கொள்ளக்கூடாது? இச்சந்தர்ப்பத்தில் **அத்வைதம்** என்னும் பதம் பிர்ம்மம் என்னும் பதத்திற்கு விசேஷணமாயிருக்கிறது. அதனின் குணம் யாதெனில், எல்லாமூல வஸ்துக்களிலிருந்தும், ஜீவன்களிலிருந்தும் பிர்ம்மாவைத் தனிமையாகப்பிரித்து பிரகாசஞ்செய்வதே. "தனவந்தர்களில் பெரியவன் தேவதத்தனே வேறு ஒருவனுமில்லை" "சைனியத்தில் பலமுள்ளவன் விக்கிரமசிங்கன் ஒருவனே வேறு ஒருவனுமில்லை." என்னுங்கால் தேவதத்தன் விக்கிரம சிங்கன் இவர்களைவிட பொருளிலும் வலியிலும் சிறிது குறைவான பலர் இருக்கின்றனரென்பதை இது மறுப்பதாகாது. ஆரம்பத்தில் கடவுள் ஒருவரேயாவர் என்பது, கடவுளுக்குச் சமானமானவர் எவருமிலர் என்பதைக்குறிக்கிறதே தவிர ஆத்மா முதலிய கடவுளுககுச் சிறிது தாழ்ந்த பிரகிருதி சம்பந்தமுள்ள பல வஸ்துக்களிருப்பதென்பதை மறுதளிப்பது ஆகாது. இதிலிருந்து சித்தமாகிறது என்னவென்றால் பிர்ம்மம் எப்பொழுதும் ஒன்றே. ஜீவன்களும் பிரகிருதி சம்மந்தப்பட்ட வஸ்துக்களும் பல. அதிலிருந்து பேதப்படுத்தி பிர்ம்மத்தை ஏகத்துவமாக சித்தஞ்செய்வது அத்வைதம் அல்லது அத்வைதவிசேஷணமாகும். இதனால் ஜீவன், பிரகிருதி, கார்ய ரூபமான உலகத்திற்கு அபாவமும் நிஷேதமும் ஏற்படுகிறதில்லை. இவைகளெல்லாம் இருக்கின்றன என்பது உண்மை. ஆனால் பிரம்மத்திற்குச் சமானமாயில்லை. அத்வைத சித்திக்காவது, துவைத சித்திக்காவது ஹானியையுண்டு பண்ணுகிறதுமில்லை. கலங்கிக் குழப்பமடையாதே. தீர்க்காலோசனை செய்து தெரிந்துகொள்.

வி௵:— பிர்ம்மத்துக்கு சத்சித் ஆனந்தமும், ஆத்மாவுக்கு அதேமாதிரி இருப்பு, சேதனம், பிரியம் முதலியவைகளும் தனியாயும் பொதுவாயுமிருக்கிறபடியால் அவைகள் ஒன்றே என்பதை ஏன் கண்டனஞ்செய்கிறாய்?

விடை:—பொது குணங்கள் சில இருக்கிறதனாலேயே ஒன்றாக ஆய்விடாது. உதாரணமாக பூமி ஜடபதார்த்தம். பார்க்கத்தகுந்ததுமானது. அப்

படியே ஜலமும் அக்கினியும் சடபதார்த்தமாயும் பார்க்கத்தகுந்ததாயுமிருக்கின்றன. இப்படி இருந்தும் இவைகளெல்லாம் ஒரு பதாத்தமாகாது. இவைகளிலிருக்கும் வேற்றுமைகள் பிரித்துவிடுகின்றன. கடினத்வம் ரூபம் முதலியவைகள் பூமியிலும், திரவத்வம் நீர்த்தன்மை ரசத்தன்மை ஜலத்திலும், உஷ்ணம் வெளிச்சம் நெருப்பிலும், முறையே இருக்கின்றபடியால் ஒன்றுக்கொன்று பரஸ்பரம் பிரித்து எல்லாவற்றையும் ஒன்றாயிருப்பதைத் தடுத்துவிடுகின்றன. மற்றொரு உதாரணத்தை எடுத்துக்கொள்வோம். மனிதர்களும், எறும்புகளும். இவ்விரண்டும் கண்களால் பார்க்கின்றன, வாயால் உண்ணுகின்றன. கால்களினால் நடக்கின்றன. அப்படியிருந்தும் அவைகள் ஒன்றாகாது. அவைகளின் அவயவங்களில் மாறுபாடுகள் பல இருக்கின்றன. மனிதனுக்கு இரண்டு கால்களும் எறும்புக்குப் பல கால்களும் இருக்கின்றன. இவ்விதபேதங்களிருப்பதால் ஒன்றாகமாட்டாது. பரமேச்வரனின் அனந்த ஞானம் அனந்தபலம், காரியம், பிழையன்னியிலிருப்பது, வியாபகம், ஜீவனிலிருந்து வேறாயிருப்பது, அப்படியே ஜீவனின் குணங்களாகிற அற்பஞானம் அற்பபலம், அற்பசுவரூபம் பிழைசெய்யும் சுபாவம் எல்லையுடன் கூடினதாயுள்ள குணங்கள் இவைகளினால் பிரம்மத்திலிருந்து வேறுபாடாயிருக்கிறது. அப்படி மாறுபாடாயிருக்கிற படியினால் பரமேசுவரனும் ஜீவனும் ஒன்றாகமாட்டாது. ஏனின் ஆத்மாவைவிட கடவுள் மிகவும் நுட்பமானவர்.

**अथोदरमन्तरं कुरुते । अथ तस्य भयं भवति द्वितीयाद्वैभयं भवति ॥**

எவன் ஜீவனுக்கும் பிரம்மாவிற்கும் சிறிது பேதங்களை ஏற்படுத்துகிறானோ அவன் பயத்தை அடைகிறான், ஏனென்றால் பயம் மற்றொருவனாலேயே உண்டாகிறது, (இதனால் பிரம்மத்திற்கும் ஜீவனுக்கும் ஐக்கியமுண்டென்பது வெளியாகவில்லையா ?)

விடை:—இதனுடைய அர்த்தம் இதுவாகாது. எந்த ஜீவன்பரமேச்வரனுடைய குணகர்ம சுவபாவத்திற்கு விரோதமாய்ப்போகிறதோ அல்லது எச்ஜீவன் மற்றொரு மனிதனிடம் சத்துருத்தனத்தை உடைத்தாயிருக்கிறதோ அதுவே பயத்தை அடைகிறது என்பது இதன் பொருளாகும். "ஈச்வரனுக்கும் எனக்கும் கொஞ்சங்கூட சம்பந்த மில்லை" மற்றொருமனிதனிடத்தில் நான் "ஏன் உன்னை இலக்ஷியம் செய்யவேண்டும் ? எனக்கு விரோதமாய் நீ என்ன செய்வாய்? மற்றவர்கள் என்ன செய்யக்கூடும்" என்று சொல்பவனே கடவுளிடத்தில் பயப்படுவன். எல்லாவிதமான விஷயங்களிலும் பரஸ்பரம் ஒற்றுமையுடன் இருப்பவைகளுக்கு உலகத்தில் ஒன்றானதேஎன்றுசொல்லப்படுகிறது. தேவதத்தன், யக்ஞ தத்தன் விஷ்ணுதத்தன் எல்லாரும் ஒன்றுதான் என்று சொன்னால் அவர்களெல்லாரும் ஒரே மனதை உடையவர்களேயாம். ஒற்றுமையினால் சுகமும் ஒற்றுமையின்மையால் துக்கமும் உண்டாகின்றது.

வினா:—பிரம்மமும் ஜீவனும் பரஸ்பரம் தனிமையாக எப்பொழுதும் இருக்கின்றதா ? அல்லது எச்சமயத்திலாவது இரண்டும் ஒன்றாகின்றதா?

விடை:—இதற்கு ஒருவாறுபதில் மொழிந்துள்ளோம். ஆனால் சாதர்ம்மிய அன்வயபாவத்தில் இரண்டும் ஒன்றே (நெருங்கிய சம்பந்தம்). உதாரணமாக ஜட பதார்த்தமும், ஆகாசமும், உயிர் இல்லாத்தன்மையிலும், சாச்வத சம்பந்தத்திலும், ஒன்றாக இருக்கின்றது. ஆனால் அடியிற்கண்ட வைதர்ம்மியங்களுள் அவைகள் தனிமையாக இருக்கின்றன. ஆகாசத்தில் எங்கும்வியாபிக்கும் தன்மை, சூட்சத்தன்மை ரூபமில்லாமை அனந்தம் முதலிய குணங்களிருக்கின்றன. ஆனால் ஜட அல்லது கனபதார்த்தமொன்றுக்கு எல்லையும் பரிமாணமுள்ள தன்மை இருக்கின்றன. குணங்களினால் ஆகாசத்திலிருந்து தனிமையாக இருக்கின்றது. ஆனால் ஜட பதார்த்தமானது ஆகாசத்திலிருந்து பிரிந்து தனிமையாக இருக்கமுடியாது. ஏனெனறால் அஜ்ஜடபதார்த்தம் இருக்க ஆகாசம் வேண்டியிருக்கிறது. ஆனால் வைதர்மிய குணங்களினால் அதுவேராசவும் இது வேராகவும் தனிமையாகவு மிருக்கின்றன. இப்படியே ஜீவனும் பூமி முதலிய திரவியங்களும், பிர்மம் சர்வவியாபியானபடியால், அதிலிருந்து தனிமையாக இருக்க்முடியாது. ஆனால் அவரோடு ஒன்றாகவும் இருக்க இயலாது. ஏனென்றால் ஸ்வரூபத்தில் அவரைக்காட்டிலும் இவைகள் வேராக இருக்கின்றது. வீடுகட்டுகிறதற்கு முன்னால் மண் ஜலம் இரும்பு இன்னும் முதலிய கட்டட சாமான்கள் தனித்தனியாக ஆகாசத்திலேயே இருக்கின்றன. வீடுகட்டிய பிறகும் அவைகள் ஆகாசத்திலேயே இருக்கின்றன. வீடுஇடிந்துசாமான்கள் நான்குபக்கமும் பரவப்பட்டிருந்தபோதிலும் அச்சாமான்கள் ஆகாசத்திலேயே இருக்கின்றன. அதாவது சுருங்கச் சொல்லின வீட்டைக்கட்டும் சாமான்கள் ஆகாசத்திலிருந்துதனிமையாயிற்க முடியாது. வைதர்ம்மிய குணங்களினால் ஒன்றாக இருக்கவும் முடியாது. இது முக்கால உண்மை. இப்படியே ஜீவனும் இன்னும் உலகத்திலிருக்கும் பதார்த்தங்களும் பரமேச்வரனால் வியாபிக்கப்பட்டிருக்கிறபடியால் தனிமையாய் ஒரு காலும் இருந்ததுமில்லை, இருக்கிறதுமில்லை. இருக்கப்போகிறதுமில்லை. அவருடன் ஒன்றாக இருந்தது இல்லை. இருககிறதுமில்லை இருக்கப்போகிறதுமில்லை. ஒத்தைக்கண்ணன் தான்போகும் தெருவின் ஒரு பாகத்தையே எப்படிகவனிக்கிறானோ அப்படியே தற்கால வேதாந்திகள் பரமேசுவரனுக்கும் ஜீவனுக்கு முள்ள சம்பந்தத்தைக் கவனிக்கிறார்களேயொழிய வேற்றுமையை கவனிக்கிறார்களில்லை. இவ்வுலகில் **சகுணம் அன்வயம்** (நெருங்கின சம்பந்தம்) **விபரீதம், சாதர்மியம்** (பொது குணம்) **வைதர்ம்மியம்** (வித்தியாசம்) இவைகளிலிருந்து நீங்கின பதார்த்தமொன்று இல்லை.

வினா:—பரமேசுவரன் சகுணத்தை அடைந்தவரா ? அல்லது நிர்குணத்தை அடைந்தவரா ?

விடை:—இரண்டு முள்ளவர்.

வினா:—இரண்டு கத்திகள் ஒரே உறையில் எப்படி இருக்கும். ஓரேவஸ்து சகுணமாயும் நிர்குணமாயும் எப்படி இருக்கமுடியும் ?

**यद्गुणैस्सह वर्त्तमान तत्सगुणम्**

குணத்தோடுகூடியிருப்பதற்குச் சகுணமென்றும், குணரஹிதமாயிருப்ப தற்கு நிர்குணமென்றும் பெயர். ஸ்வபாவ குணங்களோடு சேர்ந்து விரோத குணங்களிலிருந்து ரஹிதமாயிருக்கிறபடியால்பதார்த்தங்களுக்குச்சகுணமென் றும் நிர்குணமென்றும் பெயர். ஒரு பதார்த்தத்தில் கேவலம் சகுணமாத்தி ரம் இருக்கின்றதில்லை. நிர்குணமாத்திரமும் இருக்கின்றதில்லை. ஒன்றிலே யே சகுணமும் நிர்குணமும் எப்பொழுதும் நிறைந்திருக்கின்றன. இப்படியே பரமேச்வரனுக்கு அனந்தஞானபலாதிகுணங்கள் இருப்பதால் சகுணமென் றும், ஜடஸ்வபாவமாகிற ரூபாதிகுணங்களிலிருந்தும் துவேஷாதி குணங்களி லிருந்து தனிமையாய் அல்லது ரஹிதமாயிருக்கிறபடியால் நிர்குணமென்றும் சொல்லப்படுகிறது.

வினா:—உலகத்தில் உருவமுள்ளதைச் சகுணமென்றும், அற்றதை நிர்குண மென்றும் சொல்லுகிறார்கள். அதாவது பரமேச்வரன் ஜன்மம் எடுக்காதிருந் தால் நிர்குணமென்றும் அவதாரமெடுத்தால் சகுணமென்றும் சொல்லுகிறார் களே?

விடை:—இந்தக்கற்பனை அஞ்ஞானிகளுடையதும் அவித்வான்களு டையதுமே. படிப்பில்லாதவன் விலங்குகளைப்போல் சத்தமிடுகிறான்; சன்னி பாத ஜ்வரத்திலிருப்பவன் பிதற்றுவதுபோல் கத்துகிறான்.

வினா:—ராகத்தோடு கூடியவரா அல்லது விரக்தரா?

விடை:—இரண்டுமில்லை. தனக்கு வெளியிலிருக்கும் பதார்த்தத் தில் ஆசைவைக்கிறான். அவ்வாசைக்கே ராகம் என்று பெயர். பரமேச்வர னுக்கு அவரைவிட தனிமையாகவோ அல்லது அவருக்கு வெளியிலோ வேறு பதார்த்தமில்லை. இதனால் அவரில் 'ராக' குணமிருப்பது முடியாதது. அடை யக் கூடியதை விட்டுவிடுகிறதே விரக்தி எனப்படும். பரமேச்வரன் எங்கும் பரவியிருக்கிறபடியால் அவர் எதையும் விட்டுவிட முடியாது. அவர் விரக்தரு மில்லை.

வினா:—ஈசுவரனில் இச்சையுண்டா இல்லையா?

விடை:— இல்லை. ஈச்வரன் மனிதரைப்போன்றவரல்லர். தனக்கு இன் பத்தைத்தரும் ஒரு பொருளின்மேல் ஏற்படும் பற்றுதலால் நிகழும் ஆசையே மனிதன் கொள்ளும் இச்சையாகும். ஆனால் கடவுளுக்கு மேலானதும், அவ ருக்கு இன்பத்தைதரக்கூடியது மென்பது ஒன்றுமேகிடையாது. மனிதன் மேலும் மேலும் விருத்தியாகும் இன்பத்தின்மேல் ஆசைப்படுகிறான். கடவுள் இன்பசுவரூபியான படியால் அவர் ஆசைப்படக்கூடியதும், அவருக்கு இன்பங் கொடுப்பதும் உலகிலில்லை. எனவே கடவுளுக்கு இச்சை யென்பது இல்லை. ஆனால் அவரிடத்தில் எல்லாவித்தையையும் அறியுந்தன்மை எல்லா சிருஷ்டி யையும் உண்டுபண்ணுந்தன்மை இருக்கின்றன.

அறிஞர்களுக்கு இது போதுமானது. இனி வேதத்தைப்பற்றிபேசு வோம்.

**यस्मादृचो अपातक्षन् यजुर्यस्मादपाकषन् । सामानि यस्य लोमान्यथर्वाङ्गिरसो मुखम् । स्कम्भन्तं ब्रूहि कतमः स्विदेव सः ॥**

அதர்வ 10. 23. 4. 20.

எந்தபரமாத்மாவினால் ரிக்வேதம் யஜுர்வேதம், சாமவேதம் அதர்வவேதம் பிரகாசஞ்செய்யப்பட்டதோ அந்த தேவர் யார்?

**स्वयम्भूर्याथातथ्यतोऽर्थान् व्यदधाच्छाश्वतीभ्यः समाभ्यः ॥** யஜுர் 40. 8.

விடை:—எவர் எல்லாவற்றையும் உற்பத்தி செய்து தரித்துக்கொண்டிருக்கிறாரோ அவரே அந்தபரமாத்மா. கடவுள். அவரே சர்வவியாபகர், சுசித்தர் சனாதனர். நிராகாரர். பரமேசுவரன் தன்னுடைய சனாதன ஜீவரூபமானபிரஜைகளின் நிமித்தம் ஒழுங்காய் வேதத்தின் வழியாய் எல்லா வித்தைகளையும உபதேசஞ்செய்கிறார்.

வினா:—பரமேச்வரனை நிராகாரராகக் கருதுகிறீரா?

விடை:—ரூபமற்றவராகக் கருதுகிறோம்,

வினா:—நிராகாரராயிருந்தால் வேதவித்தைகளை வாயினால் உச்சரித்து எப்படி கற்பிக்கக்கூடும்? ஏனென்றால் எழுத்துகளை உச்சரிப்பதற்கு மேல் வாயும், நாக்கும் அவசியமாய் வேண்டுமே?

விடை:—பரமேசுவரன் சர்வசக்திமானாயும் சர்வவியாபியாயுமிருக்கிறபடியால் ஜீவன்களுக்குத் தன்னுடைய வியாப்தியினால் வேத வித்தைகளை உபதேசஞ்செய்வதற்கு முகம் வாய் முதலியவைகள் தேவையில்லை, ஏனென்றால் தன்னைவிட மற்றொருவனுக்குத் தெரிவிப்பதற்கே வாயினாலும் நாக்கினாலும் உச்சரிக்கவேண்டும். தனக்குத்தானே தெரிந்துகொள்வதற்கு அவசியமில்லை. வாய் நாக்கு இவைகளின் உதவியில்லாமல் மனதில் அநேக வியவகாரங்களும் யோசனைகளும் நடக்கின்றன. காதுகளைச்சற்று விரல்களினால அடைத்துக் கொண்டோர், வாய் நாக்கு உதடு இவைகளினுடைய ஒத்தாசை, சேர்க்கையன்னியில் எவ்வளவு விதமான சப்தங்கள் ஏற்படுகின்றன. அப்படியே ஜீவன்களுக்கு அந்தர்யாமி ரூபமாய் உபதேசஞ்செய்தார். மற்றவர்கள்தெரிந்து கொள்வதற்காகவே உச்சரிப்பு அவசியமாயிருக்கின்றது பரமேசுவரன் நிராகாரர். சர்வவியாபியாயிருக்கிறபடியால் அகிலமான வேத வித்தையைத்தான் ஜீவனுள் அந்தர்யாமியாயிருக்கிறபடியால் பிரகாசஞ்செய்கிறார். பிறகு அம்மனிதன் தன்வாயின் உச்சரணையினால் மற்றொருவனைக் கேட்கச் செய்கிறான்.

வினா:—எந்த ஆத்மாவில் எப்பொழுது வேதங்களை உபதேசஞ்செய்தார்?

**अग्नेर्ऋग्वेदो वायोर्यजुर्वेदः सूर्यात्सामवेदः ॥** சதபத 11. 4. 2. 3.

விடை:—சிருஷ்டியின்முதலில் பரமாத்மா அக்கினி வாயு ஆதித்தியன் அங்கிரா இப்புருஷர்களுடைய ஆத்மாவில் பிரகாசஞ்செய்தார்.

**यो ब्रह्माणं विदधाति पूर्वं यो वै वेदांश्च प्रहिणोति तस्मै ॥** சுவேதசே 6. 18.

வினு:—மேற்கண்ட வாக்கியத்தின் பிரகாரம் பிரம்மாவுக்கு உபதேசஞ் செய்ததாக இருக்கிறதே; அக்கினிமுதலியவர்கள் என்று ஏன் சொல்லுகிறீர் கள் ?

விடை,—பிரம்மாவின் ஆத்மாவில் அக்கினிமுதலிய ரிஷிகளின் மூலமாக ஸ்தாபித்தார்.

**अग्निवायुरविभ्यस्तु त्रयं ब्रह्म सनातनम् ।**
**दुदोह यज्ञसिद्ध्यर्थमृग्यजुःसामलक्षणम् ॥** மனு I. 23.

சிருஷ்டிமுதலில் பரமேசுவரன் மனிதர்களை யுண்டுபண்ணி அக்கினிமுதலிய நான்கு ரிஷிகளின்மூலமாகப் பிரம்மாவை அடையச்செய்து அப்பிரம்மாவான வர் அக்கினி, வாயு, ஆதித்யன் அங்கிராவினிடமிருந்து ரிக், யஜு, சாம, அதர்வ வேதத்தை முறையே கிரகித்தார்.

வினு:—மற்றவர்களுக்கு இல்லாமல் இந்நான்கு ரிஷிகளுக்கே பிரகாசஞ் செய்ததால் அவர் பட்சபாதி யாகிறார் அல்லவா ?

விடை:—இந்நால்வர்கள் ஜீவன்களுள் அதிகப்பரிசுத்தமாயிருந்தார்கள். இவர்களுக்குச் சமானமாய் மற்றவர்கள் இருந்தார்களில்லை. ஆதலால் இவர்க ளுக்கே பிரகாசஞ்செய்தார்.

வினு:—தேசபாஷையில் எதிலாவது வேதத்தைப் பிரகாசஞ்செய்யாமல் சம்ஸ்கிருதபாஷையில் ஏன் செய்தார் ?

விடை:—வேறு எந்தபாஷையிலாவது பிரகாசஞ்செய்திருந்தால் பட்சபா தியாயிருந்திருப்பார். ஏனென்றால் எவர்களுடைய தேசபாஷையில் பிரகாசஞ் செய்திருக்கிறதோ அவர்களுக்குப் படிப்பிதலும், படிப்பிப்பதிலும் வெகு சுலபமாயிருக்கும். விதேசிகளுக்கு, (மற்றவர்களுக்கு) கடினமாயிருந்திருக் கும். இதனாலேயே சமஸ்கிருதத்தில் பிரகாசஞ்செய்தார். இது எந்த தேசத்தினுடையபாஷையுமில்லை. வேதபாஷையே எல்லா பாஷைகளுக் கும் காரணமாகும். இது தாயைப்போலிருக்கிறது. இதனாலேயே அந்தப் பாஷையில் கொடுக்கப்பட்டது. எப்படி ஈசுவரனுடைய சிருஷ்டியான பூமி முதலியவைகள் எல்லா தேசங்களுக்கும் தேச ஜனங்களுக்கும் ஒன்றாக இருக் கிறதோ எல்லாவிதமான சிற்பவித்தைகளுக்குக் காரணமாயிருக்கின்றதோ, அப்படியே பரமேசுவரனின் வித்தைகளின் பாஷையானது ஒன்றாகத்தானி ருக்கவேண்டும். அப்பொழுதுதான் சிறிதளவு பிரயாசையில் எல்லாதேசத்தவர் களும் படிக்கவும், படிப்பிக்கவும் முடியும். எனவே ஈசுவரன் பட்சபாதமுடை யவர் அல்லர்.

வினு:—வேதம் ஈசுவரனால் செய்யப்பட்டதா? அல்லது அந்நியர்களால் செய்யப்பட்டதா? இதற்குப் பிரமாணம் யாது ?

விடை:—எப்படி ஈசுவரன் பரிசுத்தமுள்ளவனும் சர்வ வித்தைகளைத் தன்னிடம் கொண்டவனும் சுத்த குணகர்ம ஸ்வபாவங்களை யுடையவனும் நியாயத்தைச் செய்கிறவனும் தயாளுவாயும் இருக்கிறானோ அப்படியே எப்

புஸ்தகத்தில் ஈசுவரனுடைய குணகர்ம ஸ்வபாவத்திற்கு அனுகூலமான விஷயங்கள் இருக்கின்றதோ அது ஈசுவரனால் செய்யப்பட்டதாகும்.

2. சிருஷ்டிக்கிரமம், பிரத்தியக்ஷாதி பிரமாணங்கள் ஆப்தம் பவித்ர ஆத்மாக்களினுடைய விவகாரங்கள் முதலியவைகளுக்கு விரோதமன்னியிலிருக்கும் அதுவே ஈசுவரசம்பந்தமானது.

3. ஈசுவரனுக்குப் பிழையில்லாத ஞானம் எப்படி யிருக்கின்றதோ அப்படியே எப்புத்தகம் அவைகளன்னியிலிருக்கிறதோ அது ஈசுவரனால் செய்யப்பட்டது.

4. பரமேசுவரன் எப்படி இருக்கிறாரோ, சிருஷ்டிக்கிரம் எப்படி இருக்கின்றதோ அப்படியே ஈசுவரன், சிருஷ்டிகார்யம், காரணம், ஜீவன்களை உள்ளது உள்ள வண்ணமாயும்கூறும் புஸ்தகம் ஈசுவரனால் அருளப்பட்டதாகும்.

5. பிரத்தியக்ஷாதி பிரமாண விஷயங்களுக்கு விரோதமன்னியிலும், சுத்தாத்மா, ஸ்வபாவம் இவைகளுக்கு விரோதமில்லாமலும் வேதம் இருக்கின்றது. அப்படி பைபில் குர்ஆன் முதலிய புஸ்தகங்கள் இல்லை. இதனுடைய விளக்கம் பைபில் குர்ஆன் இவைகளைப்பற்றிய அத்தியாயத்தில் எழுதப்பட்டிருக்கின்றன.

வினா:—ஈசுவரனிடத்திலிருந்து வேதம் உற்பத்தியாக கொஞ்சமேனும் அவசியமில்லையே. ஏனென்றால் மனிதர்கள் கிரமத்தில் ஞானத்தை விருத்தி செய்துகொண்டு பிறகு புஸ்தகத்தைச் செய்யக்கூடுமே ?

விடை:—அப்படி ஒருநாளும் அவர்களால்செய்ய இயலாது. காரணம் இருந்தாலொழிய காரியம் உற்பத்தியாவது எப்பொழுதும் அசம்பவமாகும். சிருஷ்டியைக் கவனித்துக் காட்டு மனிதர்கள் ஒருநாளும் வித்வான்கள் ஆகிறதில்லை. அவர்களுக்கு உபாத்தியாயர் இருக்கும்பட்சத்தில் வித்வானாக ஆகலாம். இப்பொழுதும் ஒருவன் மற்றொருவனால் படிக்கப்பட்டாலொழிய வித்வானாக ஆகிறதில்லை. இப்பிரகாரமே பரமாத்மாவானவர் ஆதி சிருஷ்டியில் வேத வித்தையைப்படிப்பிக்காமலிருந்தால் அல்லது அந்த ரிஷிகளும் மற்றவர்களும் படிப்பிக்கப்படாதிருந்தால் எல்லோரும் அவித்வான்களாகவே இருந்திருப்பார்கள். உதாரணமாக ஒரு சிசுவை சிறுபொழுதிலிருந்து ஏகாந்தமான இடத்தில், அவித்வான் அல்லது விலங்குகளுடைய கூட்டத்தில் வைத்து வளர்த்தால் அப்பாலகனும் அவர்கள் அல்லது அவைகள் மாதிரியே மாறிவிடுவான். இதற்குத்திருஷ்டாந்தம் காட்டில் வசிக்கும் காட்டுமனிதன் பில், தோடர் முதலியவர்களே. ஆர்யவர்த்த தேசத்திலிருந்து போகும்வரையில் மிசர (ஈஜிப்டு) யூனான் (கிரீஸ்) ஐரோப்பா முதலிய தேசங்களில் கொஞ்சமாவது வித்தையென்பது கிடையாது. அமெரிகர்கள் மூர்க்கர்களாயும் வித்யாஹீனர்களாயும் நூறு, ஆயிரம், லட்சக்கோடிக்கணக்கான வருஷமிருந்தார்கள். கோலம்பஸ் போனபிறகே அமெரிகர் மறுபடியும் மேன்மையை அடைந்து வித்வான்களாக ஆனார்கள். இப்படியே மனிதர்கள் பரமாத்மாவினருளினால் முதலில் வித்தை

களைக் கிரகித்தார்கள். அதுமுதலிலிருந்து பற்பல காலங்களில் அநேக வித்வான்கள் இருந்திருக்கிறார்கள். தஞ்சலி தன்னுடைய யோகசூத்திரத்தில் சொல்லுகிறார்.

**स पूर्वेषामपि गुरुः कालेनानवच्छेदात् ॥** யோக சமாதி 26.

உபாத்தியாயர்களால் கற்பிக்கப்பட்டு வித்வான்களாகவும் தெரிந்தவர்களாகவும் இப்பொழுது எப்படி ஆகிறோமோ அப்படியே சிருஷ்டி முதலில் கடவுள் அக்கினி முதலியவர்களுக்குப் பரமகுருவாக இருந்தார்.

ஏனென்றால் ஜீவன் ஸுஷுப்தியிலும் பிரளயத்திலும் ஞான ரஹிதமாகிறமாதிரி பரமேசுவரன் ஆகிறதில்லை. அவருடைய ஞானம், நித்தியமானது. காரணமன்னியில் காரியம் உண்டாகாதென்பதை நிச்சமாய் அறிந்துகொள்ள வேண்டும்.

வினா:— வேதம் சமஸ்கிருதபாஷையில் பிரகாசிக்கப்பட்டது. அக்கினி முதலிய ரிஷிகள் அப்பாஷையை அறியவில்லையாதலால் வேதத்தின் அர்த்தத்தை எப்படி அறிந்தார்கள்?

விடை:—பரமேசுவரன் அவ்வேதத்தை அறியும்படிசெய்தார். தர்மாத்மா, யோகி, மகரிஷி இவர்கள் எதனுடைய அர்த்தத்தை யறியவேண்டுமென்று தியான ஸ்திதியில் பரமேசுவரனின் ஸ்வரூபத்தில் சமாதியை யடைகிறார்களோ அப்பொழுது பரமாத்மாவானவர் அபீஷ்டமான மந்திரத்தின் அர்த்தத்தை அறியச்செய்கிறார். அப்படி அநேகயோகிகளுடையவும் ரிஷிகளுடையவும் மனதில் வேத அர்த்தம் பிரகாசமடைந்து அந்தந்த ரிஷி முனிகள் இதிஹாச பூர்வமாய் கிரந்தங்களைச் செய்தார்கள். அதுவே பிராம்மணம் அல்லது பிரம்மமாகும். அதாவது எந்த வேதத்திற்கு வியாக்யானஞ் செய்யப்பட்டிருக்கிறதோ அதற்கேப் பிராமண மென்று பெயர்.

**ऋषयो (मन्त्रदृष्टयः)…………मन्त्रान्सम्प्रादुः ॥** நிருக்தம் 1. 20.

வேத அர்த்தம் யாரால் கண்டுபிடிக்கப்பட்டு தெரிந்து கொள்ளப்பட்டதோ அவருடைய பெயரும் அதில் ஞாபகத்திற்காகக் கொடுக்கப்பட்டிருக்கின்றது. அதுவரையில் அர்த்தஞ்செய்ததில்லை. ஆகையால் படிப்பிக்கப்படவுமில்லை. அந்த ரிஷிகளை வேதமந்திரகர்த்தா வென்று சொல்லுகிறவர்கள் பொய்யுரைப்பவர்கள். அவர்கள் வேதமந்திரங்களின் அர்த்தம் பகருபவர்களே.

வினா:—எக்கிரந்தத்திற்கு வேத மென்றுபெயர்.

விடை:—ரிக், யஜுர், சாம, ஆதர்வ, மந்திர சம்ஹிதைகளுக்கு வேத மென்று பெயர். மற்றவைகளுக்கு இல்லை.

வினா:—

**मन्त्रब्राह्मणयोर्वेदनामधेयम्॥** (மந்திரங்களும், பிராம்மணங்களும் வேதமே.)

காத்யாயனரால் செய்யப்பட்ட பிரதிக்ஞை முதலிய சூத்திரங்களுக்கு அர்த்தம் என்னசெய்வாய்—

விடை:—ஒவ்வொருமந்திரசம்ஹிதையின் ஆரம்பத்திலும், அத்தியாயங்களின் கடைசியிலும் சனாதன காலந்தொட்டு, வேதமென்னும் சப்தம் எழுதப்பட்டு வந்திருக்கும் பழக்கத்தைக் கவனித்துப்பார். பிராம்மண கிரந்தத்தின் ஆரம்பத்திலாவது கடைசியிலாவது அது எழுதப்படவில்லை. நிருக்தத்தில்

इत्यपि निगमो भवति इति ब्राह्मणम् ॥ நிருக்தம் 5. 3. 4.

छन्दोब्राह्मणानि च तद्विषयाणि ॥ அஷ்டாத்யாயி 4. 2. 66.

இதிலிருந்து வேதம் மந்திரபாகமென்பதும் பிராம்மணம் வியாக்கியானபாகமென்பதும் தெளிவாகப் புலப்படுகிறது. இவ்விஷயத்தைக்குறித்து விசேஷமாகப்பார்க்க விரும்பினால் நம்முடைய வேதபாஷ்ய பூமிகையைப் பார்க்கலாம், அதில் என்ன காண்பித்திருக்கிறது என்றால்

அநேக பிரமாணங்களுக்கு விரோதமாகிறபடியால் காத்யாயன வசனமாயிருக்கமுடியாது:—அப்படி சித்தமாகுமேயானால் வேதம் சனாதனமாகாது. ஏனென்றால் பிராம்மண பாகத்தில் அநேக ரிஷி, மகரிஷி அரசர்களுடைய சரித்திரமிருக்கிறது. பிறந்ததற்குப் பிற்பாடு சரித்திரம், எழுதுகிறபடியால் அதை உடைத்தாயிருக்குங் கிரந்தம் பிறந்தபிறகே எழுதியிருக்க வேண்டும். வேதத்தில் எவருடைய சரித்திரமும் இல்லை. எந்த எந்த சப்தத்தினால் வித்தையினுடைய ஞானம் ஏற்படுகிறதோ அவைகளே பிரயோகிக்கப் பட்டிருக்கின்றன. அதில் யாருடைய பெயருமில்லை. எந்த விசேஷக் கதையினுடைய வித்தையுமில்லை.

வினா:—வேதத்தில் எத்தனை சாகைகளிருக்கின்றன.

விடை:—இருபத்தேழு.

வினா:—சாகைகள் என்றால் என்ன!

விடை:—வியாக்கியானத்திற்குச் சாகைகள் என்று பெயர்.

வினா:—உலகத்தில் வித்வான்கள் வேதத்தின் பாகங்களைச் சாகைகளாகக் கருதுகிறார்கள்.

விடை:—கொஞ்சம் சிந்தனைசெய்தால் உண்மை விளங்கும். ஏனென்றால் எத்தனை சாகைகள் இருக்கின்றனவோ அவைகளெல்லாம் ஆசுவலாயனர் முதலிய ரிஷிகளின் பெயரால் இருக்கின்றன. மந்திர சம்ஹிதை பரமேசுவரின் பெயரில் இருக்கிறது. நான்கு வேதங்களை எப்படி பரமேச்வரன் செய்தாரென்று கருதுகிறோமோ அப்படியே ஆசுவலாயன முதலிய சாகைகளை அந்த ரிஷிகள் செய்ததாக கருதுகிறோம். எல்லா சாகைகளும் தங்களுடைய விளக்கத்தில் வேத மந்திரத்தை ஆதியாக உடைத்தாயிருக்கின்றன. உதாரணமாக தைதிரிய சாகையில் 'இஷேத்வா' என்று ஆரம்பித்திருக்கிற மந்திரம் ஒரு விதத் தலையங்கத்துடனும் கூட ஆரம்பிக்கப்படவில்லை. பரமேசுவரனலருளப்பட்ட நான்கு வேதங்களும் விருட்சமூலங்கள்போல் இருக்கின்றன. ஆச்வலாயன ஆதி சாகைகள், ரிஷிகளால்

செயயப்பட்டவைகள், மரத்தின்கிளைகளாகும். பரமேசுவரனல் செயயப்பட வில்லை. இதைப்பற்றி விசேஷமாய் நம்முடைய ரிக்வேத பாஷ்ய பூமிகை யைப் பார்க்கவும். பெற்ருேர்கள் தங்கள் சந்தானத்தின்பேரில் கிருபைவைத்து எப்படி அவர்களுடையமேன்மையைவிரும்புகிருர்களோ அப்படியேபரமாத்மா எல்லா மனிதர்கள்பேரிலும் கிருபைசெய்து மனிதர்கள் அவித்தை அந்தகாரம், பிரமஜாலம், பொய்த்தோற்றம் இவைகளை விட்டுவிட்டு வித்தையாகிற விஞ் ஞான ரூப ஒளியையும் அனந்தத்தையும் அடைந்து வித்தை சுகம் முதலிய வைகளை விருத்திசெய்து கொண்டிருக்க வேண்டி வேதத்தைப் பிரகாசஞ் செய்தார்.

வினு:—வேதம் நித்தியமா, அநித்தியமா.

விடை:—நித்தியம். பரமேசுவரன் நித்தியமாகிறபடியால் அவருடைய ஞானுதிகுணங்களும் நித்தியம். நித்திய பதார்த்தமா யிருப்பவைகளுக்கு அவைகளுடைய குணகர்மஸ்வபாவங்களும் நித்தியமாகும், அநித்திய திரவ்யங் களுக்கு அநித்திய குணகர்ம ஸ்வபாவங்களே.

வினு:—என்ன ! இப்புஸ்தகமும் நித்தியமா.

விடை:—இல்லை. புஸ்தகம் காகிதத்தினுலும் மையினுலும் செய்யப் பட்டவை. அப்படியிருக்கும்போது எப்படி நித்தியமாயிருக்கும். ஆனல் அதனின் சப்த அர்த்த சம்பந்தங்கள் நித்தியம்.

வினு:—ஈசுவரன் அந்த ரிஷிகளுக்கு ஞானத்தைக் கொடுத்திருக்கலாம். அந்த ஞானத்தை அவர்கள் வேதமாய் செய்திருக்கலாம்.

விடை:—ஞேயமில்லாமல் (அறியும் பதார்த்தம்) ஞானமில்லை. சந்தஸ் உதாத்தம் அனுதாத்தம் ஸ்வரம் ஞானம், இவைகளால் ததும்பியிருக்கும் காயத்திரி முதலியவைகளைச்செய்ய சர்வஞ்ஞரைவிட யாருக்கும் சாமர்த்திய மில்லை. இப்படி சர்வஞ்ஞான சாஸ்திரத்தை யாராவது செய்யமுடியுமா ? விஷயங்கள் விளங்கவேண்டி, ரிஷிகள் இலக்கணம், பாஷைநடை, இசை, காவ்யம் முதலியவைகளைக்குறித்து வேதத்தைப் படித்தபிறகு நூல்கள் செய்தார்கள். பரமாத்மா வேதத்தைச் செய்யாமலிருந்தால் ஒருவரும் ஒன்றும் செய்திருக்கமுடியாது. இதனுல் வேதம் ஈசுவரனல் செய்யப்பட் டதாகும். நீ எந்தமதமென்ருல், நான் வேதமதம் அதாவதுவேதத்தில் என்ன சொல்லியிருக்கிறதோ அதைக்கருதுகிறேன் என்று பதிலுரைக்கவேண்டும். அதாவது வேதத்தில் சொல்லியிருக்கும் வண்ணம் நடந்துவருகிறேன் என்பதாம்.

வேதத்தின் கர்த்தாவான ஈசுவரனையும் வேதத்தையும்பற்றிச் சுருக்க மாய்க்கூறினேம். இனி அடுத்த அத்தியாயத்தில் சிருஷ்டியைப் பற்றிப்பேசு வோம்.

ஏழாவது அத்தியாயம்

முற்றிற்று.

## எட்டாவது அத்தியாயம்

### உலகத்தினுடைய ஆக்குதல் அளித்தல் அழித்தல் இவைகளைக்குறித்தது.

इयं विसृष्टिर्यत आ बभूव यदि वा दधे यदि वा न ।
यो अस्याध्यक्षः परमे व्योमन्त्सो अङ्ग वेद यदि वा न वेद ॥

ரிக். 10. 126. 8.

ஏ! மானிடனே! எவன் சிருஷ்டியின் கர்த்தாவோ, ஆக்கல், அளித்தல், அழித்தல் இம்முத்தொழிலையும் தனதாகக்கொண்ட நாயகன் எவனோ அவனே பரமாத்மா! அவனையே நீ அறி! வேறு யாரையும் சிருஷ்டிகர்த்தாவாகக்கருதாதே.

तम आसीत्तमसा गूढमग्रे प्रकेतं सलिलं सर्वमा इदम् ।
तुच्छ्येनाभ्वपिहितं यदासीत्तपसस्तन्महिना जायतैकम् ॥ ரிக். 10. 129. 3.

சிருஷ்டிக்குமுன் சகலமும் அந்தகாரத்தினால் சூழப்பட்டு இருளைப்போல் அறிவதற்கு முடியாததாயும், ஆகாசரூபமாயுமிருந்தது. அகில ஜகமும் பரமேசுவரனுடைய அனந்த ரூபத்தின் கண் அற்பமாயிருந்தது. பிறகு அவர் தன்னுடைய சர்வவல்லமையினால் காரணரூபத்திலிருந்து காரிய ரூபமாகச் செய்தார்.

हिरण्यगर्भः समवर्त्तताग्रे भूतस्य जातः पतिरेक आसीत् ।
स दाधार पृथिवीं द्यामुतेमां कस्मै देवाय हविषा विधेम ॥ ரிக் 10. 120. 1.

ஓ மானிடர்களே! சூரியன் முதலான தேஜஸையுடைய சகல பதார்த்தங்களுக்காதாரமாயும், இருக்கிறதும் உண்டாகப்போகிறதுமான பிரபஞ்சத்தினுடைய நிகரற்ற எஜமானனாயும், ஜகத்தினுடைய உற்பத்திக்கு முன்னேயிருந்து விளங்குகிறவனாயும், பூமிமுதல் சூரியன் (ஆகாசம்) பரியந்தமுள்ள உலகங்களை உண்டுபண்ணினவனாயுமிருக்கிற அப்பரமாத்மாவையே பிரேமையுடன் வணங்குங்கள்.

पुरुष एवेदꣳ सर्वं यद्भूतं यच्च भव्यम् ।
उतामृतत्वस्येशानो यदन्नेनातिरोहति ॥

யஜுர் 31. 2.

ஓ மனிதர்களே! சகலத்திலும் பூர்ணமாயிருக்கிற அவரே ஜீவனுக்கும் நாசமற்ற காரணங்களுக்கும் நாதன். ஆனால் பிருதுவி முதலான ஜடம், ஜீவன்களிலிருந்து வேறாயிருக்கிற அவரே-இருந்த, இருக்கிற, இருக்கப்போகிற-ஜகத்தினுடைய சிருஷ்டிகர்த்தா.

यतो वा इमानि भूतानि जायन्ते येन जातानि जीवन्ति ।
यत्प्रयन्त्यभिसंविशन्ति तद्विजिज्ञासस्व तद्ब्रह्म ॥ தைத்ரேய. பிருகு. 1.

எப்பரமாத்மாவிலிருந்து பிருதிவி முதலான சகல பூதங்களும் உண்டாச்சுதோ, இவைகள் வாழ்வதும் அழிவை அடைவதும் எவனுலோ அவனே பிரம்மா. அவனேயே அறிவதற்கு முயலவேண்டும்.

**जन्माद्यस्य यतः ॥** சரீரக I. I. 2.

இஜ்ஜெகத்தினுடைய சிருஷ்டிக்கும், ஸ்திதிக்கும்(பரிபாலனத்திற்கும்)பிரளயத்திற்கும் காரணமாயிருக்கிறவரே பிரம்மா. அவரே அறிவதற்கு யோக்கியமுள்ளவர்.

வினு:—இப்பிரபஞ்சம் பரமேசுவரனிடத்திலிருந்து உண்டாச்சுதா? அல்லது வேறுயாரிடமிருந்தாவதா ?

விடை:—இப்பிரபஞ்சத்திற்குப்பரமாத்மாவே நிமித்த(காரியசாதகமான) காரணம். ஆனுல் இதனுடைய உபாதான காரணம் பிரகிருதியேயாகும்.

வினு:—பிரகிருதி பரமேசுவரனிடமிருந்துண்டாகவில்லையா ?

விடை:— இல்லே. அது அநாதி (ஆதியற்றது)

வினு:—அநாதி என்று யாரை, எவைகளை அழைப்பது ?

விடை:—ஈசுவரன், ஜீவன், பிரபஞ்சத்திற்குக்காரணம், இம்மூன்றும் அநாதிகள்.

வினு:—இதற்குப் பிரமாணங்கள் யாவை ?

**द्वा सुपर्णा सयुजा सखाया समानं वृक्षं परिषस्वजाते ।**
**तयोरन्यः पिप्पलं स्वाद्वत्त्यनश्नन्नन्यो अभि चाकशीति ॥** ரிக் I. 164. 20.
**शाश्वतीभ्यः समाभ्यः ॥** யஜுர் 40. 8.

விடை:—பிரமமா, ஜீவன் இரண்டும் அநாதி. சேதனம் முதலான குணங்களினுல் அவைகள் சமமாயிருக்கிறது. அவைகள், பிரம்மா ஜீவனில் பரவி யிருக்கிறபடியினுல், ஒன்று சேர்க்கப்பட்டிருக்கின்றன. பரஸ்பர சிநேகிதர்கள். பிரளயகாலத்தில் சிதறிப்போகிற இப்பிரபஞ்சமாகிற கிளைகளினுடைய அடிமரமாகிறபிரகிருதியும் அநாதியே. இம்மூன்றினுடையகுணம் கர்மம ஸ்வபாவம் இவைகளும் அநாதி. இவ்விரண்டிலும்—பரமாத்மா ஜீவன்—பின் சொல்லப்பட்டதே, விருக்ஷரூபமான சம்சாரத்தினுடைய பலாபலன்களை நல்லதோ, கெட்டதோ, அநுபவிக்கிறது. முன்சொல்லப்பட்ட பரமாத்மா அனுபவிக்கிறதில்லே. உள்ளேயும் வெளியிலேயும் எங்கும் பிரகாசிக்கிற அவரே சர்வசீர்த்திமான், ஸ்வரூபத்தினுல் மாறுபடுகிறபடியினுல் ஜீவன், ஈசுவரன், பிரகிருதி, இம்மூன்றும் வெவ்வேறுனது. ஆனுல் இவைகளெல்லாம் அநாதி.

பரமாத்மா வேதமூலமாக ஆதியில்லாததும், சாசுவதமாயுமிருக்கிற சகல வித்தைகளை ஜீவரூபமான பிரஜைகளுக்குவெளிப்படுத்தியுள்ளார்.

**अजामेकां लोहितशुक्लकृष्णां बह्वीः प्रजाः सृजमानां स्वरूपाः ।**
**अजो ह्येको जुषमाणोऽनुशेते जहात्येनां भुक्तभोगामजोऽन्यः ॥**
சுவேதாசுவே 4. 5.

பிரகிருதி ஜீவன், பரமாத்மா, இவைகளுக்கு ஒரு நாளும் ஜன்மம கிடையாது. இவைகளும் ஜன்மமெடுத்துக்கொள்வதில்லை. அதாவது இம்மூன்றுமே அகில பிரபஞ்சத்திற்குங் காரணம். இவைகளுக்குக் காரணமொன்றுங் கிடையாது. எக்காலமுமிருந்துகொண்டே வருகிறது. அநாதியான ஜீவன் அநாதியை அநுபவித்து அதில் மூழ்கி இருக்கிறது. பரமாத்மாவோ அதில் மூழ்கியுமில்லை. அனுபவிக்கிறதுமில்லை.

கடந்த அத்தியாயத்தில் ஈசுவரனுடைய லக்ஷணங்களையும், ஜீவனுடைய லக்ஷணங்களையும் கூறிவிட்டோம். இவ்விடத்தில் பிரகிருதியுடையஇலக்ஷணங்களைக் கூறுவோம்.

**सत्वरजस्तमसां साम्यावस्था प्रकृतिः प्रकृतेर्महान् महतोऽहङ्कारोऽहङ्कारात् पञ्चतन्मात्राण्युभयमिन्द्रियं पञ्चतन्मात्रेभ्यः स्थूलभूतानि पुरुष इति पञ्चविंशतिर्गणः ॥**

(சத்வ) சுத்தம், (ரஜ) மந்தம், (தம:) ஜடத்தன்மை இவைகள் மூன்றும் எங்கு ஒன்று கூடிசேர்ந்திருக்கிறதோ அதற்குப் பிரகிருதியென்றுபெயர். இதிலிருந்து மகாதத்வபுத்தியும், அதிலிருந்து அகங்காரமும், அதிலிருந்து பஞ்சதன்மாத்ராக்களும் (ஐந்து சத்துக்களும்) பத்து இந்திரியங்களும் (உணர்ச்சிகளும் செய்கைகளும்) மனமும் (மனோ எண்ணங்களும்) எழுந்தன. பஞ்சதன்மாத்ராக்களிலிருந்து பிருதிவிமுதலான பஞ்சபூதங்களுண்டாச்சுது. இவ்விருபத்தினன்கும் “புருஷனும்” சேர்ந்து இருபத்தி ஐந்து (ஆதாரபூதங்கள்) ஆகிறது. இவ்விருபத்தினன்கில் பிரகிருதி சிருஷ்டிக்கப்படாதது. மஹாதத்வம், அகங்காரம், பஞ்ச சூக்ஷம், இவைகளெல்லாம் பிருகிருதியினுடைய பலன்கள். இவைகளெல்லாம் இந்திரியம், மனம், ஸ்தூலபூதம், இவைகளுக்குக் காரணமாயிருக்கின்றன. “புருஷன்” ஒருபொழுதும் காரணமாகவாவது அல்லது ஒன்றின் காரியமாகவாவது ஆகாது.

**सदेव सोम्येदमग्र आसीत् ॥** சாந் 6. 2.

**असद्वा इदमग्र आसीत् ॥** தைத் பிரம். 8.

**आत्मैवेदमग्र आसीत् ॥** பிரக 1. 4. 1.

**ब्रह्म वा इदमग्र आसीत् ॥** சத 11. 1. 11. 1.

**तदैक्षत बहुः स्यां प्रजायेयेति । सोऽकामयत बहुः स्यां प्रजायेयेति ॥** தைத் பிர. 6.

**सर्वं खल्विदं ब्रह्म नेह नानास्ति किञ्चन ॥**

வின:—ஆனல் சாந்தோக்ய உபநிஷத்தில் “சிருஷ்டிக்கு முன்னல் இப்பிரபஞ்சம் இருந்தது” என்று இருக்கிறது. தைத்திரேயமோ “அது இல்லாமலோ அல்லது ஒன்றுமில்லாமலோ இருந்தது” என்கிறது. பிரஹதாரண்யக உபநிஷத் “சகலமும் ஆத்மஸ்வரூபமாய்” இருந்ததென்கிறது. சதபதபிராமணமோ “இருக்கும் இவ்வுலகில் பிரபஞ்சமும் பிரம்மாவே” என்கிறது. மேலும் “பரமாத்மா தன்னிஷ்டபிரகாரம் பலரூபங்களாக ஆயிருக்கிறார்”

எல்லாம் பிரம்மரூபம் என்று கூறுகிறது. மற்றொரு உபநிஷத் "இதில் இரண்டாவதானவேறு பதார்த்தங்களொன்றுங்கிடையாது "ஸர்வம் கலு".......... சகலமும் பிரம்மாவே" என்று சொல்லுகிறது.

விடை:—இவைகளை ஏன் நீங்கள் தப்பர்த்தம்செய்யவேண்டும். ஏனென்றால் அதே உபநிஷத்துக்கள் கூறுவதாவது.

**एकमेव खलु सोम्यान्नेन शुङ्गेनापो मूलमन्विच्छद्भिस्सोम्य शुङ्गेन तेजो-मूलमन्विच्छ तेजसा सोम्य शुङ्गेन सन्मूलमन्विच्छ सन्मूलाः सोम्येमाः सर्वाः प्रजाः सदायतनाः सत्प्रतिष्ठाः ॥**

ஹே! சுவேதகேது! காரியங்களிலிருந்து காரணத்தை அறி. அன்னரூபமான பிருதிவிகார்யங்களுக்கு ஜல ரூபம் மூலகாரணமென்று அறி. அதாவது திடபதார்த்தத்திற்குத் திரவபதார்த்தம் மூலகாரணம். கார்யரூபமாயிருக்கிற, ஜலங்களுக்கு (பதார்த்தங்களுக்கு) தேஜோ ரூபம் மூலகாரணமென்று அறி. தேஜோ ரூபமான காரியத்திற்கு நித்திய பிரகிருதியே காரணமென்று அறி. இப்பிரகிருதியேசகல (பிரபஞ்சத்திற்கும்) ஜகத்திற்கும் உற்பத்தியாயும் இருப்பிடமாயும், ஆதரவாயுமிருக்கிறது. இப்பிரபஞ்சம் இல்லாமலிருந்ததென்று நீங்கள் அர்த்தஞ்செய்வதற்கு இவ்வுலகம் தற்போது புலப்படும்படியான ஸ்தூலஸ்திதியில்லையென்பதாகும். ஆனால் அது நித்திய பிரகிருதியில் லயப்பட்டிருந்தது. ஒன்றுமில்லாமல் அது இருக்கவில்லை. ஜீவாத்வாவும், பரமாத்மாவும் இருந்தது, "ஸர்வம் கலு............" என்று சொல்லுவதானது இங்கிருந்து ஒரு பாரையையும் அங்கிருந்து ஒருகல்லையும் எடுத்துஜாலவித்தைக்காரர்கள் வீடுகட்டுவது என்கிற பழமொழியைப் போலாகிறது. ஏனென்றால்,

**सर्वं खल्विदं ब्रह्म तज्जलानिति शान्त उपासीत ॥** சாந்தோ 3. 14. 11.

**नेह नानास्ति किंचन ॥** கடோப 2. 4. 11.

வெவ்வேறாய் இரு உபநிஷத்துகளிலிருந்து இரண்டு வாக்கியங்களை எடுத்துச்சேர்த்து ஒன்றாகச் செய்திருக்கிறீர்கள் "சர்வம்கலு..........." சாந்தோக்ய உபநிஷத்திலிருந்தும், "நேஹநாநாஸ்திகிஞ்சன" என்பதும் கடோபநிஷத்திலிருந்தும், முறையே எடுக்கப்பட்டிருக்கின்றன. எவ்விதம் அவயவங்கள் சரீரத்துடன் சேர்ந்திருக்கும் வரையில் காரியத்திற்குபயோகப்படும், பிரிக்கப்பட்டு வேறாகச்செய்தவுடன் உபயோகமற்றதாகவும் போகிறதோ அவ்விதமே சந்தர்ப்பம் மாறி இடம் விட்டு இடந்தப்பினல் அர்த்தமற்றுப்போகிறது. சந்தர்ப்பத்திற்கேற்றவாறு முன்னும் பின்னும் சேர்த்து படிப்பதினாலேயே பொருள் விளங்கும். இப்பொழுது இதனுடைய அர்த்தத்தைச் சரியாய் கவனியுங்கள். ஒ ஜீவனே! இப்பிரபஞ்ச சிருஷ்டிக்கும் காப்பாற்றுவதற்கும், பிரளயத்திற்கும் காரணமாயிருக்கும் பிரம்மத்தையே உபாசனை செய். அவருடைய வல்லமையினாலேயே இப்பிரபஞ்சம் விளங்கி நிற்கிறது. அவருடனேயே இப்பிரபஞ்சமுமிருக்கிறது. அவரைத்தவிர வேறு இரண்டாவதானயாரையும் உபாசித்தல் கூடாது. அவர் பிரிக்கமுடியாதவர், அசைக்கமுடி

யாதவர், பிரம்மரூபி. பலவஸ்துக்களினுடையசேர்க்கை அவரிடம்கிடையாது. ஆனால் இவைகளெல்லாம் வேறானசுவரூபத்துடன் பரமேசுவரனுடைய ஆதாரத்திலிருக்கின்றன.

வினா:—பிரபஞ்சத்திற்குக் காரணமெவ்வளவிருக்கின்றன?

விடை:—மூன்று. ஒன்று நிமித்தம். இரண்டு உபாதானம், மூன்று சாதாரணம். எதனுடைய செய்கையினால் ஒரு காரியம் நடக்கிறதோ, எதனுடைய செய்கையில்லாததினால் ஒரு காரியம் நடக்கிறதில்லையோ அதுவே நிமித்த காரணம். அது தானாகவே மாறுகிறதில்லை. ஆனால் மற்றவைகளை மாறசெய்கிறது. எது இல்லாது ஒரு காரியமும் செய்யமுடியாதோ. அது தான் உபாதான காரணம். அது ரூபத்தில் மாறுகிறது. நாசத்தையடைறது. காரியத்தைச் செய்வதில் சாதகமாயும், பலகாரியங்களுக்குச் சரியாயுமிருக்கிறதற்கே சாதாரண காரண மென்று பெயர். நிமித்தகாரணத்தில் இருவிதமுண்டு. முதல் நிமித்தகாரணம், சகல சிருஷ்டிக்குக் காரணமாயும் பரிபாலனத்திற்கும் பிரளயத்திற்கும் காரணமாயுமிருக்கிறது, பரமாத்மவோ.

இரண்டாவது நிமித்தகாரணம் ஜீவன். பரமேசுவரனுடைய சிருஷ்டியிலிருந்து பதார்த்தங்களை எடுத்துக்கொண்டு பலவிதகாரியங்களைச் செய்கிறது ஜீவன்.

இப்பிரபஞ்ச சிருஷ்டியில் உபயோகப் படுத்தப்பட்ட பிரகிருதியே உபாதான காரணம். அது ஜடமானபடியினால் தன்னைத்தானே ஏற்படுத்திக்கொள்ளவோ நாசஞ்செய்துக்கொள்ளவோ முடியாது. சிலசமயங்களில் ஜடத்துடன் ஜடம் சேர்ந்து உருமாறினாலும், மற்றொன்றினுடைய செய்கையினால் அது ஏற்படுகிறது. நாசத்தினால் நாசத்தையடைகிறது.

உதாரணமாகப் பரமேசுவரனால் செய்யப்பட்ட வித்தானது பூமியில் விழுந்து நீர் நிலம் இவைகளையடைந்தால் விருக்ஷமாகிறது. ஆனால் அக்கினி முதலான ஜட பதார்த்தங்களில் விழுந்தால் நாசத்தையடைகிறது. சகல வஸ்துக்கள் செய்யப்படுகிறதும் நாசத்தையடைகிறதும் பரமேசுவரனுடைய ஆதீனத்திலியே, இருக்கிறது.

ஒரு வஸ்துவைச் செய்வதற்கு வேண்டிய, ஞானம், பலம், கை முதலான சாதகங்களே அதனுடைய சாதாரணகாரணம். உதாரணமாகப் பானை ஒன்றை எடுக்கொள்ளுவோம். அதில் குயவன் நியமித்தகாரணமாகவும் மண் உபாதான காரணமாகவும் மூங்கில் சக்கிரம் முதலான கருவிகளும் காலம், தேசம், வெளிச்சம், கண்கள், கைகள் (குயவனுடைய) ஞானம், வேண்டியவேலை இவைகளெல்லாம் அதனுடைய சாதாரனகாரணமாகவும் முறையே ஆகின்றன. இம்மூன்று மன்னியில் ஒன்றையும் உண்டாக்கமுடியாது. நாசஞ்செய்யவும் முடியாது.

தற்போதைய வேதாந்திகள் பரமேசுவரனைப் பிரபஞ்சத்தினுடைய நிமித்தகாரணமாகவும் உபாதான காரணமாகவும் நம்புகிறார்கள்.

வினு:—

**यथोर्णनाभिः सृजते गृह्णते च ॥** முண்டகோ உப. I. I. 7.

சிலந்தி வெளியிலிருந்து ஒன்றையும் எடுத்துக்கொள்ளாமல் தன் சரீரத்தி லிருந்தே (நூலே) எடுத்துக்கொண்டு கூட்டைக்கட்டி விளையாடுகிறமாதிரியே பிரம்மம் தன்னிடமிருந்தே பிரபஞ்சத்தை விரித்து அதில் வேற்றுருவாகி அநுபவிக்கிறது. ஆகையினுல பிரம்மாதான் வேற்றுருவாகவேண்டு மென்று விரும்பினுர். விரும்பின மாத்திரத்திலேயே ஜகத்ரூபமாகிவிட்டார்.

**आदावन्ते च यन्नास्ति वर्त्तमानेऽपि तत्तथा ॥** கௌடபாதிய 31.

மண்டூக உபநிஷத் வியாக்கியானத்தில் சொல்லுகிறதாவது முதலில்லாத தும் கடைசியில் இருக்கக்கூடாததுமானது தற்போதும் இராது. சிருஷ்டியின் ஆதியில் பிரபஞ்சமில்லை, ஆனுல் பிரம்மாவிருந்தார். பிரளயத்தின் பிறகு பிரபஞ்சமே யிராது, பிரம்மாவோ யிருப்பார். ஆகையினுல் தற்போதும் உலக மில்லை. சகலமும் பிரம்மமே? ஆகையினுல் இப்பிரபஞ்சம் ஏன் பிரம்மமா காது?

விடை:—நீங்கள் கூறும் வண்ணம் பிரபஞ்சத்தின் உபாதானகாரணமாக பிரம்மா விருந்தால் அவர் மாறக்கூடியவருயும், நாசத்திற்குக் காரணமாகவும் ஆகிறுர். ஏனென்றுல் உபாதான காரணத்தினுடைய குணம் கர்மம் சுவபா வம் முதலானவைகள், காரியத்தில தெரிகிறது. வைசேஷிகதர்மம் சொல் லுகிறதாவது.

**कारणगुणपूर्वकः कार्यगुणो दृष्टः ॥** வைசேஷி. 2. I. 14.

(உபாதான) காரணத்தில் முன்னிருந்ததையே முடிவு (காரணம்) வெளிப்படுகிறது. இவ்விதமிருக்கும் பொழுது பிரம்மாவையும் பிரபஞ்சத் தையும் எவ்விதம் (உபாதான) காரணகாரியமாகப்புணைக்கலாம்? குணம் கர் மம் சுவபாவம் இவைகளில் இரண்டும் அவ்வளவு வித்தியாசப்பட்டி ருக்கிறது. பிரம்மா சச்சிதானந்தசுவரூபர். பிரபஞ்சமோ க்ஷண பங்குரமா னது. அசேதனமானது. பேரின்பமற்றது. பிரம்மாவோ சிருஷ்டிக்கப்படாதவர் பார்க்கமுடியாதவர் பிரபஞ்சமோ சிருஷ்டிக்கப்பட்டது. பிரிக்கக் கூடியது பார்க்கக்கூடியது. பிரிதிவிமுதலான ஜடகுணங்கள் பிரம்மாவிடமிருந்துண் டானுல் அவரும் அஜ்ஜடபதார்த்தங்களினுடைய குணங்களை உடையவரா யிருக்கவேண்டும். பிருதுவி முதலானவைகளைப்போல் அவரும் ஜடமாயிருக்க வேண்டும் அல்லது பிரம்மாவைப்போல் பிருதிவ்யாதி காரியங்கள் சேதனமா யிருக்கவேண்டும். மேலும் சிலந்தியுடைய உதாரணம் தங்களுடைய சித்தாந் தத்தைத்தாங்கவில்லை. அதை நிராகரிக்கவும் நிராகரிக்கிறது. ஏனென்றுல் ஜட ரூபமாகிறசரீர அவயவங்கள் உபாதான காரணமாகவும், ஜீவாத்மா நிமித்தகார ணமாகவுமாகிறது. இம்மாதிரி சர்வவியாபகமான பிரம்மா, தன்னுள்பரவியிருக் கும் பிரகிருதியிலிருந்து ஸ்தூல ஜகத்தை சிருஷ்டித்து அதில் தான் வியாபக

மாய் சாக்ஷிபூதமாயிருந்து கொண்டு ஆனந்தமயத்திலிருக்கிறார். பிரம்மாதான் வேற்றுருவாகவேண்டுமென்று விரும்பினார் என்று நீங்கள் சொல்லுவதற்குப் "பலவிதமான இப்பிரபஞ்சத்தைச் சிருஷ்டித்துப் பிரசித்தனாகட்டும்" என்று பார்த்து யோசனைசெய்து விரும்பினதாக ஆகிறது. ஏனென்றால் பிரபஞ்சத்தைச் சிருஷ்டித்தப்பிறகே பரமேசுவரன் சகல ஸ்தூலபதார்த்தங்களிலும் இருந்து, ஜீவன்களுடைய விசாரணை ஞானம் தியானம் உபதேசம் கேட்டல் முதலானவைகளில் வெளிப்படுகிறார். பிரளயகாலத்தில் பரமேசுவரனை முக்தி ஜீவன் இவை இரண்டும்தவிர வேறுயாரும்றிகிறதில்லை. நீங்கள் கூறின சூத்திரம் தவறானது. ஏனென்றால் சிருஷ்டிக்கு முந்தி பிரபஞ்சம் இம்மாதிரி வெளிப்படையாய் இல்லாமலிருந்தபோதிலும் அது சூக்ஷ்மமாயிருந்தது. பிரளயத்திற்கப்புறமும் அது அவ்விதமேயிருக்கும். ரிக்வேதம் என்ன முறையிடுகிறதென்றால்.

तम आसीत्तमसा गूढमग्रे ॥ ரிக். 10. 126. 3.

ஆதியில் சகலமும் இருட்டாயிருந்தது. முழுப்பிரபஞ்சமும் இருட்டினால் சூழப்பட்டிருந்தது.

आसीदिदं तमोभूतमप्रज्ञातमलक्षणम् ।
अप्रतर्क्यमविज्ञेयं प्रसुप्तमिव सर्वतः ॥ மனு 1. 5.

ஆரம்பத்தில் இச்சகல பிரபஞ்சமும் இருட்டிலமுழ்ந்தியிருந்தது. அது அறிய முடியாததாயும் அறிவிற்கெட்டாததாயுமிருந்தது. இந்திரியங்களினாலும் அறிவதற்கு முடியாததாயிருந்தது. பிரளயத்திற்கு முந்தியாவது அல்லது பிரளய காலத்திலாவது அது இராது. ஆனால் தற்சமயத்தில் அது அறியக்கூடியதாயும் பிரசித்த சின்னங்களுடன் கூடினதாயும் ஆகவே புத்தியினால் அறியக்கூடியதாயுமிருக்கிறது. அவ்விதமிருந்தும் அவ்வுரை ஆசிரியர் உலகம் இல்லை என்கிறார். இது எப்பொழுதும் பிரமாணமற்றது, ஏனென்றால் நேராக அறிவுமுதலானவைகளினால் ஒருவருக்குத்தெரியாதது. ஒன்றுமில்லாததாக விருக்காது.

வினா:—பிரபஞ்சத்தைச் சிருஷ்டி செய்வதில் பரமேசுவரனுடைய எண்ணம் யாது ?

விடை:—சிருஷ்டிசெய்யாமலிருப்பதில அவருடைய பிரயோஜனம்(எண்ணம்) யாது ?

வினா:—சிருஷ்டி செய்யாமலிருக்கும் பக்ஷத்தில் ஆனந்தத்தில் அவர் இருக்கலாம். ஜீவன்களும் சுகம் துக்கம் முதலானவைகளையடையாது.

விடை:—இது சோம்பேரிகளுடையவும் தரித்திரர்களுடையவும் யோசனையாகும். ஊக்கமுள்ளவர்களுடையதும் சுறுசுறுப்புள்ளவர்களுடையதுமல்ல. பிரளயகாலத்தில்ஜீவன்களுக்கு என்னசுகதுக்கங்களிருக்கிறது? சிருஷ்டியுடைய சுகதுக்கங்களை நோக்குங்கால் துக்கத்தைவிட சுகம் பன்மடங்கதிகமாக இருக்கிறதை அறியக்கூடும். முக்தியைச்சாதனஞ் செய்கிற பரிசுத்த

மான பல ஜீவன்கள் கடைசியில் மோக்ஷத்தினுடைய ஆனந்தத்தையடை கின்றன. பிரளயகாலத்திலோ ஆழ்ந்த நித்திரையில் போல் மந்தமாயிருக்கிறது. சிருஷ்டிசெய்யாவிடில் ஜீவன்களுக்கு ஏற்றவாறு எவ்விதம்தீர்மானிக்கக்கூடும்? முன் சிருஷ்டியில் செய்யப்பட்ட பாபபுண்யங்களினுடைய கர்மங்களை எவ்வி தம் அனுபவிக்கக்கூடும்? கண்களினால் யாது பிரயோஜனமென்று உங்களை யாருவது வினவினால் நீங்கள் ஐயமன்னியில் பார்ப்பதற்கென்பீர்கள். அவ்வித மே ஈச்வரனிடத்திலிருக்கும் படியான விஞ்ஞானம், பலம் சிருஷ்டிசக்தி, இவைகளினால் சிருஷ்டிசெய்வதைவிட வேறுயாது பிரயோசனம்? நியாயத் தைக்காப்பாற்றுதல், தயை, உலகபரிபாலன சக்தி முதலான ஈசுவரனுடைய குணங்கள் பிரபஞ்சத்தைச் சிருஷ்டிசெயவதினாலேயே விளங்கும். சிருஷ்டி, பரிபாலனம் பிரளயம் முதலானவைகளைச்செய்வதிலேயே அவருடைய அள வற்ற சக்தியானது சபலமாகிறது. எவவிதம் பார்வை கண்களினுடைய சுவ பாவகுணமோ அவ்விதமே பிரபஞ்சத்தைச் சிருஷ்டிக்கிறது, சகலஜீவன்களுக் கும் ஏற்ற பதார்த்தங்களையளித்து பரோபகாரஞ்செய்கிறது இவைகளெல்லம் பரமேசுவரனுடைய ஸ்வபாவகுணம்.

வினா.—முதலில் வித்து செய்யப்பட்டதா அல்லது மரமா ?

விடை.—வித்துதான். ஏனென்றால் வித்தே நிதான நிமித்த (துவக்க) ஹேது (காரணம்). எல்லாம் ஏகார்த்த பதமாகும். காரணம் வித்தே யானபடி யினால் காரியத்திற்கு அதுவே முந்தவேண்டும்.

வினா.—பரமேசுவரன் சர்வ சக்திமான் ஆனபடியினால். பிரகிருதியையும் (முதல்துவக்கும்பதார்த்தம்) ஜீவனையும்சிருஷ்டிக்கலாம். அவ்விதம் செய்யாவி டில் சர்வசக்திமான் என்று அழைப்பதற்கு அவர் எவ்விதம் யோக்கியர் ஆவார்.

விடை.—சர்வசக்திமான் என்னும் வார்த்தைக்குப் பொருள் முன்ன மேயே கூறியாய்விட்டது. சர்வசக்திமான் என்றால் அசம்பவமான காரியங் களைக்கூடச்செய்வதாகுமோ? காரணமன்னியில் காரியம்செய்கிறது முதலான அசம்பவகாரியங்களைப்புரிய முடியுமானால் அவர் இரண்டாவது ஈசுவரனை உற்பத்திசெய்து தான்மரணததையடைந்து துக்கத்தை யநுபவிக்கலாம். அநி யாயஞ்செய்கிறவனாயும் அபவித்ரனாயும் கெட்டகாரியங்களைப் புரிகிறவ னாயும் ஆகலாம். ஸ்வபாவ அதாவது அக்கினியையுடைய உஷ்ணம் ஜலத்தினுடைய சீதளம், பிருதிவி முதலானவைகளினுடைய ஜடத்தன்மை முதலான காரியங்களை மாற்றமுடியாது. ஈசுவரனுடைய நியமங்கள் சத்திய மானதும் நிறைவானதாயு மிருக்கிற படியினால் அதை மாற்றமுடியாது. ஆகை யினால் உதவியன்னியில் தன்னுடைய சகல காரியங்களையும் நிறைவேற்ற அவ ருக்குச் சக்தியிருக்கிறபடியினால் சர்வ சக்திமானென்று பெயர்.

வினா:— ஈசுவரன் ஆகாரத்துடன் (உருவத்துடன்) கூடினவரா? அல் லது ஆகாரமற்றவரா? ஆகாரமற்றவராயிருந்தால் கைமுதலான சாதகங்களன்ன னியில் அவரெப்படிப் பிரபஞ்சத்தைச் சிருஷ்டிக்கமுடியும்? உருவத்துடனிருந் தால் இச்சந்தேகமேற்படாது?

விடை:—அவர் உருவமற்றவர். யார் சரீரத்துடன் கூடினவராயிருக்கிறா ரோ அவர் ஈசுவரனாக மாட்டார். ஏனென்றால் அப்பொழுது அவர் எல்லை யுள்ள சக்திகளை உடையவராவர். தேசம் காலம் இவைகளினால் பாதிக்கப்பட்டு அவர் பசி, தாகம், உஷ்ணம், பனி, காயம், புண் வலி, நோய்இவைகளுக்காளாவர். அப்பேர்ப்பட்டவனித்தில் ஜீவனுடைய குணங்களிருக்குமே தவிர ஈசுவரகுணம் ஒரு நாளுமேற்படாது. நீங்களும், நாங்களும் சரீரத்துடன் கூடினவர்களாயிரு ந்து கொண்டு அணு, பரமாணு, பிரகிருதி இவைகளை வசமாக்கிக் கொள்ள முடியாது. அம்மாதிரியே தூலதேகத்துடன் கூடின பரமேசுவரன் கூட தன் சூக்ஷ்ம பதார்த்தங்களால் தூல ஜகத்தைச் செய்யமுடியாது. பரமேசு வரனுக்கு ஜ்ஜடமான சரீரமாவது அவயவங்களாவது கிடையாது. ஆனால் அவருக்கு அனந்தமான (எல்லையற்ற) சக்தி, பலம், பராக்கிரமம் உண்டு. அத னால் ஜீவன் பிரகிருதி இவைகளினால் ஒரு நாளும் செய்யமுடியாத சகலகாரி யங்களையுஞ் செய்கிறார். பிரகிருதி, ஜீவன் இவைகளைவிட சூக்ஷ்மமாயும் இவைகளில் பரவியும் அவரிருக்கிறபடியினால் இவைகளை அடக்கி உருவான ஜகமாக மாற்றுகிறார்.

வினா:—மானிடப் பெற்றோர்களுடைய குழந்தைகள் தங்கள் தாய் தகப்பன் உருவச்சாயலாக விருப்பதுபோல், பரமேசுவரன் உருவற்றவராயிருந் தால் அவரால்சிருஷ்டிக்கப்பட்ட இவ்வுலகமும் உருவற்றதாயிருக்கவேண்டுமே?

விடை:—என்ன குழந்தைத் தனமானகேள்வி!! நாம் முன்னமேயே பர மேசுவரன் இஜ்ஜகத்தின் உபாதான காரணமில்லை யென்றும் நிமித்தகாரண மென்றும் கூறினோம். பரமேசுவரனைவிட சூக்ஷ்மக்குறைவான பிரகுருதியும் பரமாணுவுமே இஜ்ஜகத்தின் உபாதானகாரணம். அவைகளெல்லாம் உருவ மற்றதல்ல ஆனால் பரமேசுவரனைவிட ஸ்தூலமாயும், இதர காரியங்களைவிட சூக்ஷ்மமான உருவத்தை உடையதாயு மிருக்கின்றன.

### காரணமன்னியில் ஒன்றுங்கிடையாது

வினா:—பரமேசுவரனால் காரணமன்னியில் காரியம் ஒன்றும் செய்ய முடியாதா?

விடை:—முடியாது, எதனுடைய இருப்பு (எவ்வுருவத்திலாவது) இல்லை யோ அதை இருக்கிறதாக அழைக்க முடியாது. அது கொஞ்சங்கூட முடி யாதகாரியம். வீண்ஜம்பம் பேசிநிச்சியம் என்கிற கதையைப்போல் கீழ்க்கண்ட வாறு காரணமன்னியில் காரிய முண்டாவது முடியாத காரியம். மலடி வயற்று மக்களுடைய விவாகமொன்றைக் கண்டேன். அவர்களுக்கு மனி தக்கொம்பினால் செய்யப்பட்டவும் சுகந்தபுஷ்ப்ப மாலைகளையும் உடைய குழந் தைகளுண்டாச்சுது. அவர்கள் மரீசிகை ஜலத்தில் ஸ்நானஞ் செய்து மேகமன் னியில் மழை பொழிகிறவும், சாகுபடியன்னியில் சகல உணவுப்பொருள்களும் உற்பத்தியுமாகிற கந்தர்வ நகரத்தில் விளையாடிக் கொண்டிருந்தார்கள். ஒரு வன் சொல்லுவான்.

தாய் தகப்பனில்லை ஆனால் நான் பிறந்தேன். வாயில் நாக்கில்லை ஆனால் பேசுவேன். புத்தில் பாம்பே இல்லை. ஆனால் ஒன்று வெளியில் வந்தது. நான் எங்குமில்லை இவர்களும் எங்குமில்லை. ஆனால் நாங்களெல்லோரும் இங்கிருந்தோம். இம்மாதிரி வார்த்தைகள் பைத்தியக்காரர்களுக்கே தகும்.

காரணத்திற்குக் காரணங்கிடையாது.

வினா :—காரணமன்னியில் காரிய மில்லாமல் போகுமே யானால் முதல் காரணத்திற்குக் காரணம் யாது ?

விடை:—காரண ரூபமாயிருக்கிறதெல்லாம் ஒருபொழுதும் ஒன்றின் காரியமாகாது. ஒன்றின் காரணமாகவும் மற்றொன்றின் காரியமாகவுமிருப்பதற்கே "அடுத்த" காரணமென்று பெயர். உதாரணமாக சாங்கிய தர்சனம் சொல்லுகிறதாவது.

मूले मूलाभावादमूलं मूलम् ॥ சாங்கி 1. 67.

வேருக்கு வேர்கிடையாது! எனவே காரணங்களுக்குக் காரணங் கிடையாது. ஆகையினால் எல்லாகாரியங்களினுடைய காரணமே காரணமற்றது. ஒவ்வொரு காரியத்தினுடைய ஆரம்பத்திற்கும் அவசியமாய் மூன்று காரணங்களுண்டு. உதாரணமாக ஒருதுணி செய்வதற்குச் சேணியன், நூல், இயந்திரம் இம் மூன்றும் அவசியம். அம் மாதிரியே ஜகத்தினுடைய உற்பத்திற்குப் பரமேசுவரன் பிரகிருதி காலம் அப்படியே ஆகாசம், ஜீவன், முதலான சிருஷ்டிக்கப்படாதவும், நிரந்தர முமானவைகளினால் ஆச்சுது. இதில் ஒன்றாவது இராமல் போனால் உலகமே இராது.

நாஸ்திகர்களுடைய சந்தேகங்களுக்குப் பதில்

வினா:—

अत्र नास्तिका आहुः—शून्यं तत्त्वं भावो विनश्यति वस्तुधर्मत्वाद्विनाशस्य ॥ சாங். 1. 44.

अभावाद्भावोत्पत्तिर्नानुपमृद्य प्रादुर्भावात् ॥ ईश्वरः कारणं पुरुषकर्माफल्यदर्शनात् ॥ अनिमित्ततो भावोत्पत्तिः कण्टकतैक्ष्ण्यादिदर्शनात् ॥ सर्वमनित्यमुत्पत्तिविनाशधर्मकत्वात् ॥ सर्वं नित्यं पञ्चभूतनित्यत्वात् ॥ सर्वं पृथग् भावलक्षणपृथक्त्वात् ॥ सर्वमभावो भावेष्वितरेतराभावसिद्धेः॥

நியாய 4. 1.

1வது வினா:—சூன்யம் (ஒன்றுமில்லாத்தன்மை) என்பதும் ஒரு பதார்த்தம். சிருஷ்டிக்குமுந்தி சூன்யமிருந்ததே தவிர வேறொன்று மில்லை. அப்புறமும் சூன்யமே இருக்கும். ஏனென்றால் இப்பொழுதிருக்கும் பதார்த்தங்களெல்லாம் பாவ (இரும்பு) மற்றதாய் சூன்யமாய்ப்போய்விடும்.

விடை:—ஆகாசம் (பிரகிருதியைப்போல்) காணமுடியாத பதார்த்தம். அவகாசம், பிந்து (துளி) எல்லாம் சூன்யமே. சூன்யம் ஜடபதார்த்தம்.

ஆனல் சகலபதார்த்தங்களிலும் புலப்படாததாய் இருக்கிறது. வரிகள் புள்ளிகளால் செய்யப்பட்டிருக்கின்றன. சதுரங்களும் சக்கிரங்களும் வரிகளால் செய்யப்பட்டிருக்கின்றன. அம்மாதிரி ஈசுவரன் தன்னுடை சிருஷ்டி சக்தியினல் மலை, பூமி முதலான உருவங்களை ஒரு புள்ளியிலிருந்து விரித்திருக்கிருர். மேலும் சூன்யத்தை அறிகிறவன் சூன்யனு யிருக்க முடியாது.

2வது வின:—அபாவத்திலிருந்து (இல்லாமலிருப்பதிலிருந்து) பாவம் உற்பத்தியாகக்கூடும். எப்படியென்ருல் அது பிளவுபடுகிற வரையில் வித்தானது அரும்பு விட்டுத் துளிர்க்கிறதில்லை. ஆனல் அதை உடைத்துப் பார்த்தால் அரும்பு ஒன்றும் காணப்படுகிறதில்லை. ஆகையினல் அபாவமில்லாமலிருப்பதிலிருந்தே உற்பத்தி ஏற்படுகிறது.

விடை:—எது வித்தைத் துளிர்க்கச்செய்கிறதோ அது முன்னமேயே அதிலிருந்திருக்க வேண்டும். அல்லது வித்தைப் பிளக்கச் செய்கிறது எது? அல்லது உள்ளே இல்லாமலிருந்தால் அது வெளியில் வராது.

3வது வின:—செய்கிற அளவு அனுபவிப்பாய் என்பது உண்மையில்லையா? சில காரியங்களில் இது உண்மையாயிருப்பதில்லை. ஆகையினல் ஒரு மனிதனை அவன் கர்மங்களினுடைய பலன் பிரகாரம் அநுமானிப்பது ஈசுவரனுடைய ஆதீனத்திற்குட்பட்டிருக்கிறது. அவருடைய இஷ்டத்திலிருக்கிறது அது.

விடை:—அவ்விதமிருக்குமேயானல் கர்மங்களன்னியில் பலனை ஏன் ஈசுவரன் அளிக்கக்கூடாது? ஆகையினல் மனிதன் எவ்விதகர்மம்செய்கிருனே அவ்விதபலனையே ஈசுவரன் அளிக்கிருரென்று ஏற்படுகிறது. தன் மனம் போன பிரகாரம் ஈசுவரன் பலாபலன்களை அளிக்கிறதில்லை. ஒருவன் செய்த கர்மங்களினுடைய பலனையே அவர் அளிக்கிருர்.

4-வது வின:—காரணமன்னியில் காரியம் ஏற்படும். எவ்விதமென்ருல் கூர்மையற்றதும் மிருதுவானதும் மழமழப்பானதுமான கருவேலி கிளைகளிலிருந்து கூர்மையான முள்ளுகள் உண்டாகின்றதுபோல சிருஷ்டியுடன் சகல ஜடபதார்த்தங்களும் பிராணிகளுடைய சரீரங்களும் (காரணமன்னியில்) ஏற்பட்டிருக்கிறதென்று தெரிய வருகிறது.

விடை:—எதிலிருந்து ஒரு பதார்த்த முண்டாகிறதோ அது அதனுடைய நிமித்த காரணம். ஒன்றுமில்லாததிலிருந்து முள்ளுகள் உண்டாவதில்லை. முள்ளுமரத்திலிருந்து அவைகளுண்டாகிறபடியினல் மரமே அவைகளுக்குக் காரணம். ஆகையினல் காரணமன்னியில் உலகம் சிருஷ்டிருக்கப்படவில்லை.

5-வது வின:—சகல பதார்த்தங்களும் உற்பத்தி செய்யப்பட்டது. நாசத்திற்குறியது. ஆகையினல் சகலமும் அநித்தியம். ஒரு நூல் கூறுவதாவது.

श्लोकार्धेन प्रवक्ष्यामि यदुक्तं ग्रन्थकोटिभिः ।
ब्रह्म सत्यं जगन्मिथ्या जीवो ब्रह्मैव नापरः ॥

நவீன (தற்காலத்திய) வேதாந்திகளும் இவ்விதசந்தேகத்தையே கேழ்கிறார்கள். ஏனென்றால் அவர்கள், கோடிக்கணக்கான கிரந்தங்கள், பிரம்மாவே சத்தியமென்றும் ஜகம் பொய் யென்றும், பிரம்மத்திலிருந்து ஜீவன் வேறுபட்டில்லை என்றும் கூறுவதாகச் சொல்லுகிறார்கள். மீதி எல்லாம் பொய் என்றார்கள்.

விடை:—எல்லாம் அநித்தியமாயிருப்பது உண்மையாயிருந்தால் அது அநித்தியம் (பொய்).

விடை:—அவைகள் நித்தியமாயிருப்பதுகூட அநித்தியமே. எப்படியென்றால் அக்னி கட்டைகளை நாசஞ்செய்து அதுவும் நாசமாய் விடுகிறது.

விடை:—அறிவினால் அறியக்கூடியவைகள் பொய்யாகவாவது ஒன்றுமில்லாததாகவாவது ஆகாது. பரம சூக்ஷம காரணமும் அநித்தியமாகாது. வேதாந்திகள் ஜகத்தினுடைய உற்பத்திக்குப் பிரம்மாவே காரணமென்றுகருதுகிறார்கள். பிரம்மா சத்தியமானபடியினால் அவருடைய காரியங்கள் ஒருபொழுதும் அசத்தியமாகாது. கனவைப்போலவும், இருட்டில் கயற்றைக் கண்டு பாம்பாக நினைப்பதைப்போலவும், இவவுலகத்தை கல்பனையாக மனோபாவனை செய்வது உண்மையாகாது. ஏனென்றால் மனோபாவனைகளெல்லாம்ஒருகுணமே. வஸ்துக்களிலிருந்து குணம்வேறாக இருக்கமுடியாது. குணத்திலிருந்து வஸ்துவும் வேறாகவிருக்கமுடியாது. கற்பனை (மனோபாவனை) செய்கிறவர் நித்தியமாயிருந்தால் அவருடைய கற்பனையும் நித்தியமாயிருக்கவெண்டும். இல்லாவிடில் ஜீவனும் அநித்தியமானதே. நீ விழித்திருக்கும் பொழுது பிரத்தியக்ஷமாக வஸ்துக்களைப்பார்த்துக்கேட்டிராவிடில் உனக்குக் கனவு உண்டாகாது. அதாவது இவ்வுலகிலிருக்கும் படியான பல பதார்த்தங்களும் நம்முடைய அறிவுடன் பிரகாசமாகிறபடியினால் அவைகள் நம்முடைய ஞாபகங்களில் சில அறிகுறிகளை அழுத்துகிறது. இவ்வறிகுறிகளைத் திரும்பி யோஜிக்குங்கால் கனவில்உயிருடனிருப்பதாகக் காணப்படுகிறது. தன்னுடைய மனதில் அறிகுறியிலாத விஷயங்களைக்குறித்து கனவுகாண முடியுமேயானால் குருடனாய் பிறந்த ஒருவன் வெளிச்சம், தோற்றம் முதலானவைகளைக் கனவு காணவேண்டும். ஆனால் காண்கிறதில்லை. ஆகையினால் வெளி உலகினுடைய பரபதார்த்தங்களின் அறிகுறிகள்மனதில் பதிவாகின்றன வென்று ஏற்படுகின்றன. வெளிபதார்த்தங்களினுடைய ஞாபகத்தை மறந்தபோதிலும்—ஆழ்ந்த நித்திரையிலிருப்பது போல்—அது இருந்து கொண்டே வருகிறது. அவ்விதமே பிரகிருதியும்—இப்பிரபஞ்சத்தின் உபாதான காரணம்—பிரளயத்திற்கப்புரங்கூட இருந்துகொண்டே வருகிறது.

வினா:—சற்றியிருக்கும் பதார்த்தங்களும், கனவுகளும் எப்படி ஆழ்ந்த நித்திரையில் அநித்தியமாகின்றனவோ (மறைகிறதோ) அவவாறே பார்க்கும் சகலபதார்த்தங்களையும் கனவு மாதிரி கருதவேண்டும்.

விடை:—இம்மாதிரி எப்பொழுதும் கருதக்கூடாது. ஏனென்றால் உறக்கம், ஆழ்ந்த நித்திரை இவ்விரண்டிலேயும் வெளிபதார்த்தங்கள் அஞ்ஞானமா

கிறது (கவனத்தைவிட்டுகளுகிறது.) நம்பின்னேயிருக்கும் சகலபதார்த்தங்களும் அதிருசியமான (பார்க்கமுடியாமல்) போதிலும், அபாவமாகப் (நிலைமையற்றதாக) போகவில்லை. அம்மாதிரியே இவைகளும் அபாவமாக ஆகிறதில்லை, ஆகையினால் நாம் முன்சொன்ன பிரகாரம் பிரம்மா, ஜீவன், பிரகிருதி—உபாதான காரணம்—இம்மூன்றும் அநாதியானது. நித்தியமானது. இவைகளே உண்மை.

## புத்தர்களும் ஜயினர்களும்.

6வது வினு:—பஞ்சபூதங்களும் நித்தியமானபடியினுல் உலகம் சகலமும் நித்தியமே ?

விடை:—இது உண்மையாகாது. ஏனென்றால் எப்பதார்த்தங்களினுடைய உற்பத்தி நாசம் முதலானவைகள் தினந்தோரும் புலப்படுகிறதோ, அவைகள் நித்தியமாயிருந்தால் சகல தூலஜக்மும் அதனுடன்கூடின மானிட சரீரம் வீடு, சாமான்கள் முதலானவைகளும் நித்தியமாகும். இது முட்டாள்த்தனம் ஆகையினுல் காரியம் ஒரு பொழுதும் நித்தியமாகாது.

7வது வினு:—சகலமும் வெவ்வேருயிருக்கின்றன. அவைகளுள் ஒற்றுமை கிடையாது. நாம் பார்க்கிரவைகளெல்லாம் மற்றொன்றை நிஷேதிக்கிறது.

விடை:—மொத்தம் அவவகளினுடைய பாகங்களிலிருக்கின்றன. காலம், ஆகாசம், பரமாத்மா, வர்க்கம், வகுப்பு எல்லாம் இனவாரியாய்ப் பிரிந்த போதிலும் ஒன்றே. ஒன்றன்னியில் ஒன்றுந்தனியாயிராது. ஆகையினுல் வேற்றுமையில் ஒற்றுமையிருக்கிறது.

8வது வினு:—பசு எவ்விதம் குதிரையாகாதோ, குதிரை எவவிதம் பசுவாகாதோ அவ்விதமே சகல வஸ்துக்களும் அபாவம்—ஒன்றை யொன்று விலக்குகிறகுணம்—. ஆகையினுல்பசுகுதிரை இரண்டும் அபாவம். அப்படியே சகலவஸ்துக்களும் அபாவமானது.

விடை:—ஒன்றையொன்று விலக்குகிறகுணம் சகல வஸ்துக்களிடமிருக்கிறது என்பது உண்மையாயிருந்தபோதிலும் தன்னைத்தானே ஒரு வஸ்து விலக்கிக்கொள்ளுகிறதில்லை. உதாரணமாகப் பசு குதிரையாகாது குதிரை பசுவாகாது. ஆனல் பசு பசுவாகவும் குதிரை குதிரையாகவும் இருந்துவருகின்றன. பதார்த்தங்களுக்குப் பாவமற்றுபோனபோதிலும், **இதரேதரபாவம்** அன்யோன்ய உறவைக்குறித்து நீங்கள் எப்படி சொல்லக்கூடும்.

9வது வினு:—சுவபாவத்தினுல்ஜகம் உண்டாகிறது. எவ்விதம் ஆகாரமும் ஜலமும்சேர்ந்தால் கிருமிகள் விளைகிறதோ, நல்ல நிலத்துடன் விதை வானம் முதலானவைகள் சேர்ந்தால் எப்படி விருக்ஷம் உண்டாகிறதோ, சமுத்திரத்துடன் வாயுசேர்ந்தால் எப்படி பொங்குகிறதோ, பொங்குகிறதுடன் சுண்ணம்பு மஞ்சள், எலுமிச்சை சேர்ந்து (ஆாரத்தி) உண்டாகிறதோ அம்மாதிரியே சகலதத்வங்களினுடைய சுவபாவகுணங்களினுல் இப்பிரபஞ்சமுண்டாகிறது. சிருஷ்டிகர்த்தாயாருமே கிடையாது.

விடை:—சுவபாவத்தினல் உலகமுண்டாயிருந்தால் அது நாசமேயடையாது. நாசத்தையே பதார்த்தங்களினுடைய சுவபாவகுணமென்று நீங்கள் சொல்லுவீர்களேயானல் அப்பொழுது சேர்க்கையே உண்டாகாது. ஆனல் விநாசம், சேர்க்கை, இரண்டையும் பதார்த்தங்களினுடைய ஸ்வபாவமென்று நீங்கள் சொல்லுவீர்களேயானல் அப்பொழுது விநாசமுமிராது சேர்க்கையுமிராது. சிருஷ்டியும் பிரளயமும் நிமித்தகாரணத்தினலேயேஉண்டாச்சுதென்று நீங்கள் சொன்னல் அப்பொழுது விநாசத்திலிருந்தும் சேர்க்கையிலிருந்தும் தூரமாயும் வேருயுமிருக்கிறதாகவே இருக்கவேண்டும். விநாசமும் உற்பத்தியும ஸ்வபாவமாய் உண்டாகிறதாயிருந்தால், எப்பொழுதும் உண்டாகும். சிருஷ்டி கர்த்தா இல்லாமல் இப்பிரபஞ்சம் சுவபாவமாய் உண்டாயிருந்தால் இதைவிட வேறு உலகங்களான சூரியன் சந்திரன் ஏன் நம்பூமியின் சமீபமாக வரக்கூடாது? மேலும் இப்பொழுது உண்டாகிறது முன்னுக்கு வருகிறது, இவைகளெல்லாம் ஈசுவரனல் சிருஷ்டிக்கப்பட்ட பலபதார்த்தங்களினுடைய சேர்க்கையினலாகிறது. எவ்வண்ணம் பூமி, வித்து, வானம், இவைகள் சரியாய் சேர்ந்தால் விருக்ஷம் உண்டாகிறதோ, வேறுவிதமானலில்லையோ அவ்வண்ணமே, அதனுடைய பிரிக்கப்பட்ட பலபாகங்கள்—மஞ்சள், சுண்ணம்பு, எலுமிச்சை—சேருகிறபடியினலேயே ஊரத்தி (மஞ்சநீர்) உண்டாகிறது. ஆனல் அவைகள் தானகவே சேருகிறதில்லை. ஏதோ ஒன்ருல் சேர்க்கப்படுகிறது. மேலும் தக்கவாறு சேர்க்கப்படாவிட்டால் சரியாயுண்கிறதில்லை. அவ்விதமே பிரகிருதி, பரமாணு, இவைகளை ஞானம் யுக்திஇவைகளுடன் பரமேசுவரன் சேர்க்காவிடில் சிருஷ்டியுண்டாகாது. ஆகையினல் உலகம் தானகவே உண்டாகவில்லை. அதாவது சுவபாவத்தினல் உண்டாகவில்லை. பரமேசுவரனல் சிருஷ்டிக்கப்பட்டதென்று ஏற்படுகிறது.

வின:—இஜ்ஜகத்தைச்செய்த கர்த்தா இல்லை. இருக்கவும் போகிறதில்லை. அநாதி காலத்திலிருந்து இருந்து வருகிறது. அது சிருஷடிக்கப்படவுமில்லை. நாசத்தையுமடையாது.

விடை:—காரியம்—மற்ருெரு காரியத்தினுடைய பயன் — ஒன்றும் கர்த்தா இல்லாது, சித்தியாகாது, பிருதிவி முதலான சகல பதார்த்தங்களும் சம்யோக விசேஷத்தினுடைய பலன். அவைகள் ஒருபொழுதும் நித்தியமாகாது. ஏனென்ருல் சோக்கை சம்பந்தத்தினலுண்டான ஒரு வஸ்து அதைப்பிடித்துக்கொண்டிருக்கிற பல பிரிவுகள் சிதறிப்போய்விட்டால் நிலைநிற்காது. இதை நீ நம்பாவிடில், அதி கடின கல்லையாவது, இரத்தினத்தையாவது, அல்லது எஃகையாவது எடுத்து துண்டுதுண்டாக்கி உருக்கியாவது அல்லது காய்ச்சியாவது பார்ப்பாயேயானல அது வெவ்வேருன பரமாணுக்களால் சோக்கப்பட்டிருக்கிறதென்று தெரியவரும். எப்பொழுது சேர்ந்திருக்கிறதோ அப்பொழுது அவைகள் தனித்தனியாய்ப் பிரியவேண்டிய காலம் அவசியம் வரவேண்டும்.

வினு:—அநாதியான ஈசுவரன் யாருமில்லை. யோகாப்பியாசத்தினல் அணிமாதி ஐசுவரியங்களையடைந்து சர்வஞ்ஞம் முதலானவைகளுடன் கூடின கேவலம் ஞானி ஒருவனே. அந்தஜ் ஜீவனைப்பரமேசுவரன் என்று சொல்லுகிறார்கள்.

வின:—அநாதியான ஈசுவரன் இவ்வுலகைச் சிருஷ்டிக்காவிடில், சாதனத்தினல் சித்தியையடைந்து ஜீவன்களுக்காதாரமான சரீரம் இந்திரியம் இவைகளை யாரால் செய்யமுடியும்? இவர் இல்லாது ஜீவசாதனஞ் செய்யமுடியாது. சாதானமில்லாமல் போனல் சித்தி எங்கிருந்து ஏற்படும்? எவ்வளவு சாதனஞ் செய்தபோதிலும் சித்தியை அடைந்தபோதிலும் கூட, ஈசுவரனுக்கு இருக்கும் சுயம் சநாதானம், அநாதி சித்தி, அனந்தசித்தி இவைகளுக்குச் சமானமானவராக வேறெந்த ஜீவனுலும் முடியாது. ஏனென்றால் ஜீவன் கற்று முயன்ற போதிலும், அளவுள்ள ஞானத்தை அடைந்து சாமார்த்தியத்தை்யை பெறலாம். ஞானம் ஒருக்காலும் அனந்தமாகாது. கவனியுங்கள். இது வரையிலும் ஒருயோகியாலும் ஈசுவரனல்செய்யப்பட்டசிருஷ்டிக்கிரமத்தைத் திருப்பமுடியவில்லை. திருப்பவும் முடியாது. ஆதியற்ற சித்தமான பரமேச்வரன் பார்வைக்குக் கண்களையும், கேழ்பதற்குக் காதுகளையும் கொடுத்திருக்கிறார். இதை எந்தயோகியும் மாற்றமுடியாது. ஜீவன் ஒருக்காலும் ஈசுவரனாக முடியாது.

வினு:—முன்செய்தமாதிரியே இப்பொழுதும் சிருஷ்டிக்கிறாரா? அல்லது மாற்றி அமைக்கிறாரா?

விடை:— இப்பொழுது எவ்விதமிருக்கிறதோ அவ்விதமே முன்னேயிருந்தது. இனிமேலுமிருக்கும். வேதம் கோஷிக்கிறதாவது.

सूर्याचन्द्रमसौ धाता यथापूर्वमकल्पयत् ।
दिवं च पृथिवीं चान्तरिक्षमथो स्वः ॥ ரிக். 10. 160. 3.

பரமேசுவரன் எவ்வண்ணம் முன்கல்பத்தில் சூரியன் சந்திரன் மின்னல் பூமி, அந்தரீக்ஷம் (ஆகாசம்) முதலானவைகளைச் சிருஷ்டித்தாரோ அவவண்ணமே இப்பொழுதும் சிருஷ்டித்திருக்கிறார். அம்மாதிரியே இனியும் சிருஷ்டிப்பார். ஆகையினல் பரமேசுவரனுடைய காரியங்கள் தப்புதவறன்னியிருக்கிறபடியினல் எப்பொழுதும் ஒரேமாதிரியாகவிருக்கும். யார் அல்பஞ்ஞரோ, யாருடைய ஞானம் நாசத்திற்கும், குறைவிற்கும் காரணமாயிருக்கிறதோ அவருடைய காரியங்கள் தப்புள்ளதாகவும் குறைவுள்ளதாகவும் ஆகும். ஈசுவரனுடைய காரியங்களோவென்றால் அவ்வாறாகாது.

வினு:—சிருஷ்டி விஷயத்தில் வேதாதி சாஸ்திரங்கள் மாறுகிறதா? அல்லது சரியாய் இருக்கிறதா?

விடை:—சரியாயிருக்கிறது.

வினு:—அவைகள் சரியாயிருந்தால் தைத்திரேய உபநிஷத்தில் இம்மாதிரிசொல்லுவானேன்?"

**तस्माद्वा एतस्मादात्मन आकाशः सम्भूतः । आकाशाद्वायुः । वायोरग्निः । अग्नेरापः । अद्भ्यः पृथिवी । पृथिव्या ओषधयः । ओषधिभ्योऽन्नम् । अन्नाद्रेतः । रेतसः पुरुषः स वा एष पुरुषोऽन्नरसमयः ॥** தைத்ரே பிரம். 1.

காரணரூபத்திலிருந்து எங்கும்வீசின ஜடபதார்த்தங்களினுடைய ஸமூச்சினால் உண்டான ஆகாசம் அல்லது அவகாசம் பரமேசுவரனிடமிருந்தும் பிரகிருதியிடமிருந்தும் உண்டாச்சுது. உண்மையில் ஆகாசத்திற்கு உற்பத்தி கிடையாது. ஏனென்றால் ஆகாசமன்னியில் **பிரகிருதியும் பரமாணுவும்** எங்கு தங்கும்? ஆகாசத்திற்கப்புரம் வாயு, வாயுவுக்குப்புரம் அக்கினி, அக்கினிக்கப்புரம் ஜலம், ஜலத்திற்கப்புரம் பிருதிவி, பிருதிவியிலிருந்து ஔஷதிகள், ஔஷதிகளிலிருந்து அன்னம், அன்னத்திலிருந்து வீரியம், வீர்யத்திலிருந்து புருஷன் அதாவது சரீரம்முறையேஉண்டாகின்றன. **சாந்தோக்ய**உபநிஷத்தில்சிருஷ்டிக் கிரமம் அக்கினியிலிருந்தாரம்பிக்கிறதென்றும் சொல்லப்பட்டிருக்கின்றன. வேதத்திலேயே சிலவிடங்களில் புருஷன் என்றும் வேறுசிலவிடங்களில் **ஹிரண்யகர்பன்** சிருஷ்டிக்கிரமமென்றும் கூறப்பட்டிருக்கிறது. **மீமாம்சத்தில் கர்மம், வைசேஷிக**த்தில் காலம், **நியாயத்தில் பரமாணு,** யோகத்தில் **புருஷார்த்தம் சாங்கியப்** பிரகிருதியிலும் வேதாந்தத்திலும் பிரம்மா, இக்கிரந்தங்களில் முறையேஇவைகளிருந்தே சிருஷ்டியுடைய உற்பத்தி உண்டானதென சொல்லப்படுகின்றன. இதில் தப்புயாவை? உண்மை யாவை?

விடை:—எல்லாம்சரி ஒன்றாவது தப்பில்லை. அவைகளை அறியாதவனே தப்பிலிருக்கிறான். ஜகத்திற்குப் **பரமேசுரன் நிமித்த** காரணம்; பிரகிருதி **உபாதான** காரணம். **மகாப்பிரளயத்திற்கப்புரம்** ஆகாசத்திலிருந்து சிருஷ்டியாரம்பமாகிறது. பிரளயத்தில் ஆகாசத்தையும் வாயுவையும் எட்டாமல் அக்கினியையே அடைகிறபடியினால் அதற்கப்புரம் அக்கினியிலிருந்தே சிருஷ்டியாரம்பமாகிறது. பிரளயத்திற்குப்பிறகு அக்னிகூட நாசமாகாதபடியினால் அடுத்த சிருஷ்டி ஜலத்திலிருந்துஆரம்பமாகிறது.அதாவதுமுன்பிரளயம் எங்குமுடிகிறதோ அங்கிருந்து சிருஷ்டியாரம்பமாகிறது. நாம் முதல் அத்தியாயத்தில் **கூறியவண்ணம், புருஷ ஹிரண்யகர்ப்பம்** என்பது பரமேசுவரனுடைய திருநாமங்கள். ஒரே விஷயத்தைக்குறித்து பலவேறாகப் பலசந்தர்ப்பங்களுக்கு ஏற்றபடிசொல்லுவது விரோதமாகாது. ஆறு சாஸ்திரங்களும் எப்படி சரியாயிருக்கிறதென்று கவனியுங்கள். **மீமாம்ச**த்தில் "கர்மசேஷடையன்னியில் (சரியான ஊக்கம்) ஒரு காரியமும் இவ்வுலகில் செய்யமுடியாது" என்றும், **வைசேஷகத்தில்** "காலச்செலவன்னியில் ஒன்றும் செய்யமுடியாது" என்றும் **நியாயத்தில்** "உபாதானகாரணமன்னியில் கொஞ்சம் கூட ஒன்றும் செய்யமுடியாது" என்றும் **யோகத்தில்** "வேண்டிய வித்தை ஞானம், விசாரணையன்னியில் ஒன்றும் முடியாது" என்றும் **சாங்கியத்தில்** "தத்வங்களுடைய சேர்க்கையன்னியில் ஒன்றும் செய்ய முடியாது" என்றும் **வேதாந்**தத்தில் "செய்கிறவனன்னியில் ஒருபதார்த்தையும் உண்டுபண்ண முடியாது"

என்றும் முறையே கூறப்பட்டிருக்கின்றன. தனித்தனியாய் ஒவ்வொரு சாஸ்திரத்திலும் சொல்லப்பட்டிருக்கிறவாறு இச்சிருஷ்டிக்கு ஆறு தனிக்காரணங்கள வசியம் ஆகின்றன. ஆகையினால் விரோதம் ஒன்றுமில்லை. ஒரே வீட்டின் கூரையை மூடைய ஆறுமனிதர்களவசியமாவதுபோல் ஆறுசாஸ்திரங்களும் சிருஷ்டிக்கார்யத்தை வியாக்கியானஞ் செய்ய ஒன்று சேருகிறது. இது குருடர்களுடைய யானைக்கதையைப்போலிருக்கிறது.

ஒருவன் அறுவோன்ரை—குருடர் ஐவர். மந்தமான திருஷ்டியையுடையவன் ஒருவன்—இவர்களை அழைத்துக்கொண்டு யானை ஒன்றின்பல அவயவங்களைத் தனி தனியாகக் காண்பித்து அது எம்மாதிரி இருக்கிறதென்று வினவ முதல் மனிதன் தூணைப்போல் என்றும் இரண்டாவதவன் விசிரியைப் போல் என்றும், மற்றவன் பெரிய உலக்கையைப்போல என்றும், மற்றொருவன் துடப்பத்தைப்போல் என்றும், ஐந்தாவதானவன் தட்டையாயிருக்கிற தென்றும், எருமையின் சரீரத்தைத் தாங்கிக் கொண்டிருக்கும் பெருந்தூண்கள் என்றும் முறையே மொழிந்தனர். இம்மாதிரி முனிகளால் வரையப்பட்ட கிரந்தங்களை ஒதாமல், கற்பனைசெய்யப்பட்ட தற்போதைய புன்கவிகளால் எழுதப் பட்ட நூல்களைப்படிப்பவர் பிறரை தூஷிப்பதிலேயும் அற்பத்தைப் பெரிதாக கருதுவதிலேயுமே கவனத்தைச் செலுத்துகிறார்கள். அவர்களுடைய உபதேசங்களைப் புத்திமான்கள் ஏற்கக் கூடாது, ஏனென்றால் குருடனை முன்சென்று போகிற குருடர்கள் துக்க சாகரத்திலேயே முழுகி ஏன் அவஸ்தைபடமாட்டார்கள்? அற்பவித்தை சுயகலப்பிரியம், இந்திரியங்களில் ஆசை, இக்குணமுடையவர்கள் பிழைத்திருப்பதினால் உலகத்திற்கு நாசமே ஏற்படும்.

வினா:—காரணமன்னியில் காரியமில்லாமல்போனால் காரணத்திற்கு ஏன் காரணங்கிடையாது?

விடை:—ஒன்றுமறியாதவனே! உன்னுடைய புத்தியை ஏன் கொஞ்சம் உபயோகிக்கக்கூடாது? கவனி! உலகத்தில் காரணம், காரியம் என்று இரண்டு பதார்த்தங்களே உண்டு. எது காரணமோ அது காரியமாகாது. எது காரியமோ அது அதே சமயத்தில் காரணமாகாது. எதுவரையில் மனிதன் சிருஷ்டியை ஏற்றவிதமாய் அறியாமலிருக்கிறானோ அவனுக்குச்சரியான ஞானம் உண்டாகாது.

சிருஷ்டி என்பதேன்ன?

**नित्याया: सत्वरजस्तमसां साम्यावस्थाया: प्रकृतेरुत्पन्नानां परमसूक्ष्माणां पृथक् पृथग्वर्त्तमानानां तत्त्वपरमाणूनां प्रथम: संयोगारम्भ: संयोगविशेषादवस्थान्तरस्य स्थूलाकारप्राप्ति: सृष्टिरुच्यते ॥**

சத்வ குணம் ரஜோகுணம், தமோ குணம், இவைகள் எங்கு ஒருங்கே சமயாய்ச்சேர்ந்திருங்கிறதோ அதுவே அநாதியான நித்தியஸ்வரூபமான தமான பிரகிருதி. பிரகிருதியிலிருந்துண்டான பரம சூக்ஷ்மமாயும், வேறாயுமிருக்கிற பர

மானுஷ்ய சேர்க்கையே முதலாரம்பம் (சிருஷ்டி). பரமாணுக்களினுடைய பலவிதமான—பலவிதங்களிலேயும், பிரமாணங்களிலேயும்—சேர்க்கையானது சூக்ஷ்ம ஸ்தூல—சிருஷ்டி என்று சொல்லும்படியான விசித்திர ரூபஸ்திதியை அடையும் வரையில் செல்லுகிறது.

முதல் சம்யோகத்தில் சேர்ந்து அதை முடித்து, சம்யோகத்திற்கு முந்தியும் வியோகத்திற்கு (அதைச்சேர்க்கும் பலபாகங்களை கழித்தல்) பிந்தியும் மீதியாயிருப்பது காரணம். சம்யோகத்திற்கப்புரம் எது நிற்கிறதோ, வியோகத்திற்கப்புரம் எது மீதியில்லையோ, அதுவே காரியம். எவன் காரணத்தின் காரணத்தையும், காரியத்தின் காரியத்தையும், கர்த்தாவின் கர்த்தாவையும், சாதனத்தின் சாதனத்தையும், செய்கையின் செய்கையையும் அறியவிரும்புறானே அவன் பார்த்தபோதிலும் குருடன், கேட்டபோதிலும் செவிடன், படித்திருந்தபோதிலும் மூடன். தீபத்திற்குத் தீபமும், கண்ணுக்குக் கண்ணும், சூரியனுக்குச் சூரியனும் எங்கேயாவதுஉண்டா? எது எதினாலுண்டாகிறதோ அதுகாரணம். உண்டானது காரியம். காரியத்தைச் செய்கிறவனே கர்த்தா.

கீதை என்ன சொல்லுகிறதென்று கவனியுங்கள்.

**नासतो विद्यते भावो नाभावो विद्यते सतः ।**
**उभयोरपि दृष्टोन्तस्त्वनयोस्तत्त्वदर्शिभिः ॥** ப. கீதை 2. 16.

அசத்திலிருந்து (ஒன்றுமில்லாததிலிருந்து) பாவமும், சத்திலிருந்து அபாவமும் உண்டாகாது. இவ்விரண்டினுடைய நிர்ணயத்தையும் தத்வதரிசிகள் அறிந்திருந்தார்கள். பக்ஷபாதமுள்ளவன், அவித்வான், இவர்களால்இதை எவ்விதம் சகஜமாய் அறியமுடியும்? ஏனென்றால் சத்சங்கமற்று தீர விளங்கயோசனை செய்யாதவர்கள் எப்பொழுதும் அஞ்ஞானத்திலும் சந்தேகத்திலும் மூழ்கியிருக்கிறார்கள். சகல சித்தாந்தங்களையும், வித்தைகளையும் அறிந்தும், அறிவதற்குப் பாடுபட்டும் அறிந்துகொண்டு கபடமன்னியில் பிறருக்குப்போதிக்கிறவர்களே மேலோர். ஆகையினால் காரணமொன்றுமன்னியில் சிருஷ்டியைச் செய்ததாகக் கூறுகிறவர்கள் ஒன்றுமறியாத சிற்றறிவுடையோர்.

சிருஷ்டிகாலம் வரும்பொழுது பரமாத்மா பரமசூக்ஷ்மமான பதார்த்தங்களைச்சேகரிக்கிறார். அதனுடைய முதல் அவஸ்தையில் பரமசூக்ஷ்மபிருகிருதிரூப காரணத்திலிருந்து உண்டாகிற கொஞ்சம் ஸ்தூலத்திற்கு மகாதத்வமென்று பெயர். அதிலிருந்து ஏற்படும் கொஞ்சம் தூலத்திற்கு அகங்காரமென்று பெயர். அகங்காரத்திலிருந்து பிளவுப்பட்டு ஐந்துசூக்ஷ்ம பூதம் ஐந்து ஞானேந்திரியங்கள் ஐந்துகர்மேந்திரியங்கள், பதினொன்று மனம் இவைகள் கொஞ்சஸ்தூலமடைகிறது. பஞ்ச தன்மாத்ரங்களும் அநேகஸ்தூலவஸ்துக்களையடைந்து கிரமமாகப் பஞ்சஸ்தூலமாகிறது. அதிலிருந்து நானாப்பிரகாரமான ஓஷதங்களும் விருக்ஷம் முதலானவைகளும், அதிலிருந்து வீரியமும் வீரியத்திலிருந்து சரீரமும் உண்டாகின்றன ஆனால் ஆதி சிருஷ்டியில் மைதனங்

கிடையாது. ஏனென்றால் ஸ்திரீபுருஷர்களைப் பரமாத்மா உண்டு செய்து அவர்களில் ஜீவன்களைச் சம்யோகஞ் செய்த பிறகே மைதுனத்தினால் சிருஷ்டியாரம்பமாகிறது. சரீரத்தின் ஞான பூர்வகமான சிருஷ்டியைப் பாருங்கள். அதைக் கண்டு வித்வான்கள் ஆச்சரியமடைகிறார்கள். முதலில் எலும்பினுடைய கட்டு வேலை, நாடி, நரம்பு முதலானவைகளான வலைப்பின்னல்களால் இணைக்கப்பட்டு, மாம்சத்தினால் நிரைக்கப்பட்டு, நகம் ரோமம் முதலான அநுபந்தங்களுடன் கூடின தோலினால் மூடப்பட்டிருக்கிறது. பிறகு எவ்வளவு அழகாய் ஹிருதயம், கல்லீரல், மண்ணீரல், நுரையீரல் முதலான இந்திரியங்களமைக்கப் பட்டிருக்கின்றன. மூளையின் அமைப்பு, அக்ஷகத்துடன் (கண்ணினுள்ள வலைபோன்ற ஜவ்வு) கண் நிரம்பினுடைய பின்னல் வலைபோன்ற சேர்க்கை, இந்திரிய மார்க்கங்களினுடைய பிரகாசம், ஜீவனுடையஜாக்கிரதை, கனவு, உரக்கம், தூக்கம், முதலானவைகளை அனுபவிப்பதற்கேற்றதான விசேஷஸ்தானங்களினுடைய ஏற்பாடு, சகலதாதுக்களினுடைய அமைப்பு, இன்னும் சரீரத்திலிருக்கும் படியான ஸ்தானங்களினுடைய அற்புத சிருஷ்டி இவைகளெல்லாம் பரமேசுவரனன்னியில் வேருயாரால் செய்யமுடியும்? இதன்னியில் பலவிதமான இரத்தினம், முதலானவைகளினால் அலங்கரிக்கப்பட்ட பூமி, அநேகவிதமான மரங்களினுடைய விதைகள், அநந்தமான வர்ணம் சாயை, இவைகளையுடைய இலைகள், இதழ்கள், புஷ்பங்கள், பழங்கள், வேருகள் பலவிதமான வாசனைகள் பரிமளங்கள், இவைகளுடன்கூடின தானியங்கள் இவைகளெல்லாம் பரமேசுவரனன்னியில் வேறுயாரால் செய்யமுடியும்? பரமேசுவரனைத்தவிர வேறுயாராலும் அளவற்ற பூமி, சூரியன், சந்திரன், முதலான கிரகங்களைச் சிருஷ்டித்துப் பரிபாலித்து நடத்த முடியாது.

ஏதாவது பொருளைப்பார்க்கும்பொழுது நமக்கு இருவித எண்ணங்கள் உண்டாகின்றன. (1) பதார்த்தம் எவ்விதமிருக்கிறது (2) அதனுடைய கர்த்தா யார்? உதாரணமாக வனத்தில் அழகான ஆபரணம் ஒன்றை ஒருவன் கண்டான் என்று வைத்துக்கொள்வோம். அதைப்பார்த்ததும் தங்கத்தினால் செய்ததென்றும் கைதேர்ந்த தட்டானால் செய்யப்பட்டதென்றும் தெரியவந்தது. அம்மாதிரியே இக்கானுவிதமான சிருஷ்டியினுடைய ஆச்சரியங்கள், இவைகளுக்கு மூலகாரணமாகிற பரமேசுவரனை ஸ்தாபிக்கிறது அல்லவா?

## ஆதி சிருஷ்டி.

வினா:—மனிதன், பூமி. முதலில் எது சிருஷ்டிக்கப்பட்டது?

விடை:—பூமி முதலானவைகளே! ஏனென்றால் அவைகளன்னியில் மனிதன் எங்கு தங்கி தன்னைக்காப்பாற்றிக்கொள்ளக்கூடும்?

வினா:—முதலில் ஒரே மனிதன் சிருஷ்டிக்கப்பட்டானா? அல்லது அநேகம் பெயர்கள் சிருஷ்டிக்கப்பட்டார்களா?

விடை:—ஒருவனுக்குமேல்; ஏனென்றால் தங்களுடைய கர்மத்தினால் பிறக்க உரிமையுள்ள ஜீவன்கள், சிருஷ்டியுற்பத்தியுடன் பிறந்தார்கள். வேதம் முறையிடுகிறதாவது.

**मनुष्या ऋषयश्च ये । ततो मनुष्या अजायन्त**

(ஆதியில்) அநேகமனிதர்களும் முனிகளும் பிறந்தார்கள். அவர்களே மானிடர்களின் மூதாதைகள். இவ்வேதவாக்கியத்தின் பிரமாணப் பிரகாரம் சிருஷ்டியுடன் ஆயிரக்கணக்கான மனிதர்கள் உண்டாயிருந்தார்களென்று ஏற்படுகின்றன. சிருஷ்டியைக்காணும்பொழுதும் அநேகம் மாதா பிதாக்களினுடைய சந்ததிகள் என்று ஏற்படுகிறது.

வினு:—சிருஷ்டியில் மனிதன் முதலானவர்கள் குழந்தைகளாகவா, யௌனர்களாகவா, அல்லது விருத்தர்களாகவா அல்லது இம்மூன்றுவிதத்திலேயுமா சிருஷ்டிக்கப்பட்டார்கள் ?

விடை:— யௌவனமாகவே சிருஷ்டித்தார். ஏனென்றல் குழந்தைகளாய்ப் பிறப்பித்தால் அவர்களைக்காப்பாற்ற மனிதர்கள் வேண்டும், விருத்தர்களாலோ, மானிடவர்க்கத்தை விருத்தி செய்ய முடியாது. ஆகையினுல் யௌவனர்களாகவே சிருஷ்டித்தார்.

வினு:—சிருஷ்டிக்கு எப்பொழுதாவது ஆரம்பம் உண்டா ? இல்லையா ?

விடை:—கிடையாது; இரவுபகலைத்தொடருகிறதுபோலவும், பகல்இரவைத்தொடருகிறது போலவும், இரவு பகலை முந்துகிறதுபோலவும், பகலை இரவு முந்துகிறதுபோலவும், பிரளயத்தைச் சிருஷ்டித்தொடருகிறது. பிரளயம் சிருஷ்டியைத்தொடருகிறது. சிருஷ்டி பிரளயத்தை முந்துகிறது பிரளயம் சிருஷ்டியை முந்துகிறது. இம்மாதிரி ஆரம்பமன்னியில் நடக்கிறது. அதற்கு ஆதியுமில்லை அந்தமுமில்லை. ஆனல் பகலினுடைய ஆதியையும் அந்தத்தையும் இரவினுடையதையும் நாம் காணுவதுபோலவே, சிருஷ்டிக்கும் பிரளயத்திற்கும் ஆதியந்தமுண்டு. **பரமாத்மா ஜீவன் பிரகிருதி.**—இம்மூன்றும் ஸ்வரூபத்தினுல் அநாதியானது, உற்பத்தி, ஸ்திதி இவைகள் பிரவாகத்தினுல்—காலம் முழுவதும் சரியாக ஓடாத நதியைப்போல்—அநாதியானது. அது கோடைகாலத்தில் உலர்ந்து காய்ந்து போகிறது. மாரிகாலத்தில் திரும்பியும் காண்கிறது. எவ்வண்ணம் பரமேசுவரனுடைய குணம் கர்மம் ஸ்வபாவம் இவைகள் அநாதியோ (ஆதியந்தமில்லாததோ) அவ்வண்ணமே அவரால் செய்யப்படும் காரியங்களும் ஆதியந்தமற்றது.

வினு:—சில ஜீவன்களுக்கு மனித ஜென்மத்தையும், சிலவைகளுக்குச் சிங்கம் முதலான குரூரஜென்மத்தையும், சிலவைகளுக்கு விருக்ஷம், புழு, பறவை முதலானவைகளுடைய ஜென்மத்தையும் அளித்திருக்கிறுர். இதனுல் பரமாத்மா பக்ஷபாதமுள்ளவரென்று ஏற்படவில்லையா ?

விடை:—இல்லை. பக்ஷபாதமொன்றையும் அது காண்பிக்கவில்லை. முன் ஜன்மத்தில் செய்த கர்மாநுசாரப் பிரகாரமே பிறப்பை அளிக்கிறுர். இவ்விதமன்னியில் ஜன்மமளித்தல் அவர் பக்ஷாபாதமுள்ளவர்தான்.

வினு:—முதல் மனிதசிருஷ்டி எவ்விடத்தில் உண்டானது.

விடை:—திபேத் எனப்படும்படியான திருவிஷ்டாபில்,

வினா:—சிருஷ்டிகாலத்தில் ஒரே ஜாதியிருந்ததா ? அல்லது அநேகமா ?

விடை:—ஒரே மனிதஜாதிதான் இருந்தது. பிறகு தீயோர்கள், நல்லோர்கள் என்று இரண்டாச்சுது. கெட்டவர்கள் தஸ்யு என்றும் நல்லவர்கள் ஆரியர் என்றும் அழைக்கப்பட்டார்கள். ரிக்வேதம் கோஷிக்கிறதாவது.

**विजानीह्यार्यान्ये च दस्यवः**

சிரேஷ்டர்களுடைய பெயர் ஆரியர் வித்வான் தேவன். துஷ்டர்களுடைய பெயர் தஸ்யு. வித்வான்கள் நல்லவர்கள் தேவர்களென்றும், வழிபறிக்கொள்ளைக்காரர்கள், மூடர்கள், கெட்டவர்கள், இவர்கள் அசுரர்களேன்றும் அழைக்கப்பட்டார்கள். பிரம க்ஷத்திரிய வைசிய சூத்திரர்களென்று ஆரியர்கள் நான்கு வகுப்புகளாகப் பிரிக்கப்பட்டிருக்கிறார்கள். அதன் மூன்று வகுப்பைச்சார்ந்தவர்களும் வித்வான்கள். இவர்களுக்குத் துவிஜர்களேன்றும் பெயர் நான்காவது வகுப்பினர்கள் மூடர்களும் அவித்வான்களுமானபடியினால் அவ்விதமழைக்கப்பட்டார்கள். அவர்களுக்கு அநாரியர்கள்— ஆரியர்களில்லாதவர்கள் என்றும் பெயர். இம்மாதிரி பிரிவு அதர்வவேதத்திலும் " சிலர் ஆரியர்கள் மற்றவர்கள் அநாரியர்கள் " என்று சொல்லப்பட்டிருக்கிறது.

ஆரியர்களின் முன்னேற்றம்.

வினா:—பிறகு அவர்கள் எவ்விதம் வந்தார்கள் ?

விடை:— ஆரியர்களுக்கும், தஸ்யுக்களுக்கும் அதாவது வித்வான்களான தேவர்களுக்கும், அவித்வான்களான அசுரர்களுக்கும் இருந்த சினேகிதம் சதா சண்டையாகமாறி மிகுந்த உபத்திரவமுண்டான பொழுது ஆரியர்கள் சகல பூகோளத்திலும், இந்நாட்டை உத்தம பூமியென அறிந்து இங்குவந்து வசிக்க வாரம்பித்தார்கள். ஆகையினாலேயே இதற்கு ஆரியவர்த்தம் என்று பெயர்

வினா:—ஆரியவர்த்தத்தினுடைய எல்லைகள் யாது ?

**आसमुद्रात्तु वै पूर्वादासमुद्रात्तु पश्चिमात् ।**
**तयोरेवान्तरं गिर्योरार्यावर्त्तं विदुर्बुधाः ॥**
**सरस्वतीदृषद्वत्योर्देवनद्योर्यदन्तरम् ।**
**तं देवनिर्मितं देशमार्यावर्त्तं प्रचक्षते ॥** மனு. 2. 22, 27.

விடை:—வடக்கில்ஹிமாலயபர்வதத்தினுவும், தெற்கில் விந்தியாசலபர்வதத்தினுலும், கிழக்கு, மேற்கு இத்திக்குகளில் சமுத்திரங்களினுலும் சூழப்பட்டிருக்கிறது. மேற்கில் சரஸ்வதிநதியும், அடக்நதியும், கிழக்கில், நேப்பாளத்தின் கிழக்குபாகங்களிலிருக்கும் மலைகளில் உற்பத்தியாகி வங்களத்தின் மேற்கேயும் ஆசாம் பர்மா இவைகளுக்குக்கிழக்கேயுமாகப் பாய்ந்து தெற்கு சமுத்திரத்திலே (இது மகா சமுத்திரம்) வங்காளவிரிகுடாவில் கலக்கும் திருஷ்டபதி என்கிற பிரம்மபுத்திராவினுலும் சூழப்பட்டிருக்கின்றன. வடக்கே ஹிமாலயத்திலிருந்து தெற்கே விந்தியாசலம், ராமேஸ்வரம்வரையில் அகப்பட்டிருக்கும் நாட்டிற்கே ஆரியர்வர்த்தம் என்றுபெயர். ஏனென்றால் தேவர்களாலும் (வித்வான்களாலும்) ஆரியர்களாலும் (சிறந்த) குடியேரப்பட்டு வாசஸ்தானமாக்கிக்கொள்ளப்பட்டது.

வினா:—இத்தேசத்திற்கு அதற்கு முன்னிருந்த பெயரென்ன? இதில்யார் இருந்தார்கள்?

விடை:—இதற்கு முந்திபெயரேகிடையாது. ஏனென்றால் ஆரியர்களுக்கு முந்தி இதில்யாரும் வசிக்கவில்லே. ஏனென்றால் சிருஷ்டி முதலிலிருந்து கொஞ்சகாலத்திற்குப்பிறகு திபேத்திலிருந்து நேராகவந்து இத்தேசத்தில் தான் வசித்தார்கள்.

வினா:—சிலர், அவர்கள் இரானிலிருந்து (பெர்ஷியா) வந்ததாகவும், அதினாலேயே அவர்களுக்கு ஆரியர்களென்றும் பெயர் என்கிறார்கள். ஆரியர்களுக்குமுந்தி இது காட்டாளர்களால் வசிக்கப்பட்டுக்கொண்டிருந்தது. ஆரியர்கள் அவர்களே அசுரர்களென்றும் இராக்ஷஸர்களென்றுமழைத்துத் தங்களைத் தேவர்கள் என்றும் அழைத்துக்கொண்டிருந்தார்கள். இவர்களிருவருக்கும் உண்டானசங்கிராமத்திற்கே (யுத்தத்திற்கே) தேவாசுரசங்கிரகம் என்றுபெயர். இது உண்மையா?

விடை:—இது முழுப்பொய். ஏனென்றால் நாம் சொன்னதையே வேதங்கள் தாங்குகிறது.

**विजानीह्यार्यान्ये च दस्यवो बर्हिष्मते रन्धया शासदव्रतान् ॥** ரிக். 1. 5. 8.

தார்மீகர்கள், வித்வான்கள், சத்புருஷர்கள் இவர்களுக்கு ஆரியர் என்று பெயர். இவர்களுக்கு விரோதமான ஜனங்களுக்குத் தஸ்யு என்று பெயர். அதாவது திருடர்கள் துஷ்டர்கள். மேலும்

**उत शूद्रे उतार्ये ॥** அதர்வ. 19. 62.

துவிஜர்கள்—பிரம்ம க்ஷத்திரியவைசியர்கள்—ஆரியர்களென்றும், சூத்திரர்கள் அநாரியர்களென்றும் அழைக்கப்படுகிறார்கள். இவ்வித வேதப்பிராமணங்களிருக்க எவ்விதம் விதேசியர்கள் (அந்நிய நாட்டவர்கள்) சொல்லும் கல்பனேயைப் புத்திமான்கள் நம்புவார்கள். தேவாசுரயுத்தங்களில் ஆரியவர்த்தத்தைச்சார்ந்த அர்ஜுனன் தசரதன் இன்னும் இத்தகையார் அசுரர்களேவெல்ல ஆரியர்களுடைய உதவிக்குச்சென்றிருக்கிறார்கள். ஆகையினால் ஆரியவர்த்தத்திக்கப்புறமிருக்கிறவர்கள் மிலேச்சர்களென்றும் தஸ்யுக்களென்றும் ஏற்படுகிறது. ஏனென்றால் ஹிமாலயத்திலிருக்கும் ஆரியர்களே எதிர்த்தால் ஆரியவர்த்தத்தின் அரசர்களும், இராஜர்களும் வடக்கிலிருக்கும் ஆரியர்களினுடைய உதவிக்குச் சென்றார்கள். ஸ்ரீராமருக்கும் ராவணனுக்கும் தெற்கேநடந்த யுத்தத்தின் பெயர் தேவாசுரசங்கிராமமல்ல. ராமராவணயுத்தமென்று பெயர் அல்லது ஆரியர்களுக்கும் இராக்ஷசர்களுக்கும் நடந்த சங்கிராமமென்றுபெயர். ஒரு சமஸ்கிருதகிரந்தத்திலாவது இதிகாசத்திலாவது ஆரியர்கள் இரானிலிருந்து வந்தார்கள், வந்துகாட்டாளர்களேயடித்து ஜயம்பெற்று இத்தேசமன்னர்களானார்கள் என்றுசொல்லப்படவில்லே. அதுவுமன்னியில் விதேசியர்கள் எழுதுவதை நாம் எப்படி நம்புவது?

म्लेच्छवाचश्चार्यवाचः सर्वेते दस्यवः स्मृताः ॥ மனு 10. 45.

म्लेच्छदेशस्त्वतः परः ॥ மனு. 2. 23.

"ஆரியவர்த்தத்தைத்தவிர மற்றதேசங்களெல்லாம் மிலேச்ச தேசம் தஸ்யு தேசம். ஆரியவர்த்தத்தின் ஈசானியம், உத்திரம், வாயவியம், பஸ்சிமம், இத்திக்குகளிலிருக்கிறவர்கள் தஸ்யுக்கள், அசுரர்கள், மிலேச்சர்கள். தக்ஷிணம், ஆக்னேயம் முதலான திக்குகளில் வசிக்கிறவர்கள் இராக்ஷசர்கள். இவ்விதமாக முறையே அறியப்படுகிறார்கள். இன்றைக்கும் இராக்ஷசர்களுடைய வர்ணனைத் தற்காலத்திய நீக்ரோக்களினுடைய பயங்கரமான உருவத்திற்குச் சரியாயிருப்பதாகத் தெரிந்துகொள்ளவும். ஆரியவர்த்தத்தின் மறுபக்கத்தில் வசிக்கிறவர்களுக்கு நாக வென்றும் பெயர். அவர்களுடைய ஊர் பாதாளம் ஏனென்றால் ஆரியவர்த்தமனிதர்களுடைய பாதத்தின் கீழேயிருக்கிறபடியினால் அவர்களுடைய அரசன் நாகவம்சத்தைச்சேர்ந்தவன்—நாகவென்னும் ஆதி அரசனிடமிருந்து.— அவருக்குப்பிறந்த உலோபியையே அர்ஜுனனுக்கு மணஞ்செய்து கொடுத்தார்கள். இக்ஷுவாகு முதற்கொண்டு கௌரவ பாண்டவர்கள் வரையில் முழுபூகோளத்திலேயும் ஆரியர்களுடையஇராஜ்யம் ஓங்கி வேதம் ஆரியவர்த்தமற்ற நாடுகளில்கூட கற்பிக்கப்பட்டு கௌரவிக்கப்பட்டு வந்தது.

அறிஞர்களில் பிரம்மாவே முதல். அவருடைய புத்திரன் விராட். விராட்டினுடையபிள்ளை மனு. மனுவிற்கு மரீசி முதலான நூறுகுமாரர்கள்இருந்தார்கள். இவருக்கு ஸ்வாயம்பவ முதலான ஏழுமன்னர்கள் உண்டானார்கள். இவர்களுடையசந்தானமே இக்ஷுவாகுமுதலான மன்னர்கள். இவ்விக்ஷுவாகர்களே ஆரியவர்த்தத்தில்குடியேறி இராஜ்யத்தைஸ்தாபித்தார்கள் இப்பொழுது துரதிருஷ்டத்தினாலும் ஆரியர்களினுடைய ஆலசியம், அலக்ஷியம், பரஸ்பரவிரோதம், இவைகளினால் சுதந்திரம், சுயாதீனம், நிர்பயம், இராஜ்யம் இவைகள் தங்களுடைய ஊரிலேயே இல்லாமல் போய்விட்டது. கொஞ்சமுள்ளதும் விதேசிகளினுடைய பாதத்தினால் நசுக்கப்பட்டுப்போகிறது. சில இராஜ்யங்களே சுதந்திரத்துடனிருக்கிறது. கெட்டகாலம் வரும்பொழுது தேசவாசிகள் அநேகவிதமான துக்கங்களை அநுபவிக்கிறார்கள். யார் எவ்வளவு செய்தபோதிலும் சுதேச ராஜ்யமே எல்லாவற்றையும் விட உத்தமமானது. மதவிஷயங்களில் தலையிடாமல் வேறாயும், சகலரிடத்திலும்—சுதேசத்தவர்கள், விதேசத்தவர்கள்—பக்ஷபாதமற்றுப்பிரியமாயும், பிரஜைகளிடத்தில் பெற்றோர்களைப்போல் அன்புடனுமிருந்தபோதிலும் விதேசிகளுடைய இராஜ்யம் (அரசாட்சி) பூர்ண சுகத்தையளிக்காது. பாஷை, மதம், வித்தை, பழக்க வழக்கங்கள் இவைகளினுடைய வித்தியாசங்களையொழிப்பது மகா கடினமான காரியம். ஆனால் இவைகளை யொழிக்காவிடில் பரஸ்பரம் பூர்ணமான அபிப்ராயங்களை வெளிப்படுத்திக்கொள்ளவும், உபகாரங்களைப்புரிவதும் முடியாத காரியம். ஆகையினால் வேதாதி சாஸ்திரங்களிலும் இதிகாசங்களிலும் கூறியிருப்பதைப் போற்றிவருவது நல்ல புருஷர்களுடைய கடமை.

வின:—பிரபஞ்ச உற்பத்திக்கப்புரம் எவ்வளவு காலங்கழிந்தாய்விட்டது.

விடை:—ஆயிரத்துத் தொளாயிரத்து அறுபதுகோடியே சில்லறை வருஷங்கள் பிரபஞ்ச சிருஷ்டியாயும் வேதங்கள் வெளியாயுமாகின்றன். இதற்கு இன்னும் விரிவான வியாக்கியானம் வேண்டியவர்கள் நம்முடைய ரிக்வேதாதி பாஷ்யபூமிகா என்ற நூலைப் பார்க்கட்டும். மிகவும் நுட்பமாயும் அதற்குமேல் பிரிக்கமுடியாததுமான துளிக்குப் பரமாணு வென்று பெயர்.

60 பரமாணுக்கள் கொண்டது ஒரு அணு

2 அணு கொண்டது ஸ்தூலவாயுவாகிற ஒரு துவியுனக்

3 துவியுனக்குக்கள் கொண்டது அக்கினி

4 துவியுனக்குக்கள் சேர்ந்தது ஜலம் (திரவபதார்த்தம்).

5 துவியுனக்குக்கள்சேர்ந்தது பிருதுவி. (திருடபதார்த்தம்) அதாவது மூன்று துவியுனக்குகள் கொண்டது ஒரு தரசரேணு.இவைகளினுடைய இரட்டையினாலேயே பிருதிவி முதலான தென்படக்கூடிய பதார்த்தங்களாகின்றன இவ்விதம் கிரமமாகச்சேர்த்து — அதாவது பரமாணுக்களையும் அணுக்களையும் புலப்படக்கூடிய பதார்த்தங்களாகிறவரையில் சேர்த்துக்கொண்டேபோகிறது—பிரபஞ்சம் முதலான கிரகங்களைச் சிருஷ்டித்தார்.

## பூமியின் ஆதாரம் எது?

வின:—ஆயிரம்முடிதாங்கிய ஆதிசேஷன்என்பார் ஒருசிலர். காளைமாட்டின் கொம்பின்கண் என்பார் வேறு சிலர், இன்னுஞ்சிலர் ஆதாரமற்றது என்றுகூறுகின்றனர். வாயுவின் துணையினால் என்றும் சூரியனின் ஆகர்ஷணசக்தியினால் என்றும் வேறு சிலசார்பார் கூறுகின்றனர். இம்முரண்பாடான மொழிகளில் எதை நம்புவது? எதை விடுவது? உண்மை எது?

விடை:—சேஷசர்ப்பத்தின் பேரிலும் காளையின் கொம்பின் நுனியிலும் பூமி நிற்கிறதெனக் கூறுபவர்களை சர்ப்பத்தினுடையவும் காளையினுடையவும் சிறுவயதில் பூமி எதின்பேரிலிருந்ததென்றும், அவர்களையார்தாங்கினார்களென்றும் வினவவேண்டும். அப்பொழுது காளையின்கொம்புகள் என்கிறவர்களுடைய(முகம்மதியர்களுடைய)வாய்மூடிவிடும். சேஷசர்ப்பம்என்கிறவர்கள் சர்ப்பம் கூர்மத்தின் பேரிலிருக்கிறதென்றும் கூர்மம் ஜலத்திலிருக்கிற தென்றும் ஜலம் அக்கினியின்பேரிலும்,அக்னி வாயுவின் பேரிலும் வாயு ஆகாசத்தின்பேரிலுமிருப்பதாகச் சொல்லுவார்கள். எல்லாம் எதின்பேரில் நிற்கிரதென்று அவர்களைக்கேழ்க்கவேண்டும்? அப்பொழுது கட்டாயமாய் அவர்கள் பரமேசுவரன்பேரிலென்பார்கள். சேஷனும் காளையும் யாருடைய குமாரர்கள் என்று வினவுங்கால் காளை ஒரு பசுவினுடைய தென்றும், சேஷன் கூர்மத்தினுடையதென்றும், கூர்மம்ரிசியுடயவும், மனுவிராட்டி னுடையவும் விராட் பிரம்மாவுடைய குமாரர்களென்றும் சொல்லுவார்கள். பிரம்மா ஆதிசிருஷ்டியிலிருந்தவர். சேஷனுடைய ஜென்மத்திற்குமுந்தி அதுவரையில் பூமியை தரித்துவந்த ஆறுதலைமுரைகள் முடிந்ததென்பார்கள். காசியபருடைய (கூர்மத்தினுடைய) ஜன்மசமயத்தில் பூமி எதன்பேரிலிருந்ததென்றால் "நீயும்

கப்சுப் நானும் கப்சுப்" சண்டை செய்யவாரம்பிப்பார்கள். இதனுடைய உண்மையான அர்த்தம் யாதெனில் எது பாக்கியிருக்கிறதோ அதற்குச் சேஷன் என்று பெயர். யரோ ஒரு கவி "சேஷதாரா பிருத்வித் யுக்தம்" (சேஷனுடைய ஆதாரத்தில் பூமி இருக்கிறது) என்றார். இதரர்கள் அவருடைய அபிப்பிராயத்தை அறியாமல் சர்ப்பக்கதையைக்கட்டி விட்டார்கள். ஆனால் எதனுல் பரமேசுவரன் உற்பத்தி, பிரளயம் இவைகளி லிருந்து பாக்கியாய் (மீதியாய்) அதாவது தனியாய் இருக்கிறாரோ அதினாலே யே அவருக்குச் சேஷன் என்று பெயர். அவருடைய ஆதாரத்திலேயே பூமி நிற்கிறது.

सत्येनोत्तभिता भूमिः ॥ அதர். 14. 1. 1.

காலத்தினுல் நாசம் ஒரு பொழுதுமடையாமலிருக்கிற பரமேசுவரனே பூமி ஆதித்தியன் முதலான சர்வலோகங்களையும் தரிக்கிறார்.

இதுரிக்வேதவாக்கு. அர்த்தம் யாதெனில் "உக்ஷா சந்திரன் சூரியனை ஆதரிக்கிறார்." உக்ஷா வார்த்தையைக்கண்டு சிலர் காளை தரிக்கிறதென்கிற கதையைக் கட்டிவிட்டார்கள். ஏனென்றால் காளைக்கு உக்ஷாவென்னும் பெய ருண்டு. இப்பிரமாண்டஜகத்தைத்தரிப்பதற்கு சாமர்த்தியம் காளைக்குண் டாவென்று அவருக்குத்தோன்றவில்லை. மழையின் மூலமாக இப்பூமியை நனைக்கிறபடியினுல் உக்ஷாவென்றால் இவ்விடம் சூரியனென்று அர்த்தம். அவ ருடைய ஆகர்ஷண சக்தியினுல் பூமியைத்தரிக்கிறார். ஆனால் அவரைத் தரிக்கிறவர் பரமேசுவரனைத்தவிர வேறுயாருமில்லை.

வின:—சூரியன், பூமி இவ்வளவு பெரிய இரண்டு கிரகங்களைப் பரமேசு வரனுல் எவ்விதம் தரிக்கமுடியும்?

விடை:—எவ்விதம் அனந்தத்தின் (முடிவற்றதின்) கண் (அவைகளிலிருக் கிற) பெரியகிரகங்கள் ஒன்றுமில்லையோ—சமுத்திரத்தில் ஒருதுளிஜலம் பெரி தாயிருப்பதைப்போலக் கூடவில்லை—அவ்விதமே அனந்தமான பரமேசுவரன் முன் கணக்கற்ற இப்பேர்ப்பட்ட கிரகங்கள் ஒரு பரமாணுவிற்குக்கூடச் சமான மாகாது. அவர்வெளியிலும் உள்ளேயுமிருக்கிறார். யஜுர்வேதம் "விபு பிர ஜாஸு" என்று கூறுகிறது. அர்த்தமென்னவென்றால் அப்பரமாத்மா சகல பிரஜைகளிலும் வியாபகமாய்த் தரித்துக்கொண்டிருக்கிறார். அவர் சர்வவியா பகமான விபுவாய் இல்லாவிடில், மகம்மதியர்கள், கிருஸ்துவர்கள், புராணிகர் கள் சொல்லும் வண்ணம், இச்சகல சிருஷ்டிகளையும் ஒரு பொழுதும் தரிக்க முடியாது. ஏனென்றால் தான் ஒருவிடத்திலன்னியில் ஒரு வஸ்துவைத்தன் னுல் காப்பாற்றமுடியாது. "சகலமும் பரஸ்பர ஆகர்ஷணசக்தியினுல் நிற் கிறது" ஆகையினுல் பரமேசுவரன் தரிப்பதற்கு அவசியம் எங்கிருந்தேற்படு கிறது" என்று எவனுவது சொல்லுவானேயானுல் அவனை இச்சிருஷ்டி அனந்தமானதா, முடிவுள்ளதா என்று வினவவேண்டும். அவன் அனந்த மென்றால் அதுசரியகாது. ஏனென்றால் உருவத்துடன் கூடின வஸ்து ஒரு பொழுதும் அனந்தமாகாது. முடிவுள்ளதென்றால் அவ்வெல்லையை மீறியோ

அப்புரமோ அதை யார்தாங்குகிறதென்று கேழ்க்கவேண்டும். மொத்தமாய் பேசும் பொழுது ‘சமஷ்டி’ என்றும் தனித்தனியாய் பேசும்பொழுது வ்யஷ்டி என்றுங் கூறுகிறார்கள். ஒவ்வொரு மரமாக எண்ணினால் வ்யஷ்டி என்றும் மொத்தமாக எண்ணினால சமஷ்டி எனறும் சொல்லுகிறார்கள். இம்மாதிரியே சகல உலகங்களையும் சமஷ்டியாக ஜகமென்றழைத்தால் அதைத்தரித்து ஆகர்ஷணத்தைச் செய்கிறவர் பரமேசுவரனைவிட வேறு யாருமில்லை. ஆகையினால் சகல ஜகத்தையும் யார்காப்பாற்றுகிறாரோ அவரே.

स दाधार पृथिवीं द्यामुतमाम् ॥ யஜு. 13. 4.

பிருதிவி முதலான பிரகாசமற்றலோக லோகாந்தரங்களையும் பதார்த்தங்களையும், சூரியன் முதலான பிரகாசமுள்ள லோகங்களையும் பதார்த்தங்களையும் சிருஷ்டித்துத்தரிக்கிற பரமாத்மா. எவர்சகலத்திலும் வியாபகமாயிருகிறாரோ அவரே சகல ஜகத்தைச் செய்கிறவர் தரிக்கிறவர்.

வினா:— பூமி முதலானவைகள் சுற்றுகிறதா ? அல்லது ஸ்திரமாயிருக்கிறதா ?

விடை:—சுற்றுகிறது.

வினா:—சிலர் சூரியன் சுற்றுகிறதென்கிறார்கள் பூமியில்லை என்கிறார்கள் வேறு சிலர் இதற்கு விரோதமாகச்சொல்லுகிறார்கள். இதில் எதை உண்மையாகக் கருதுவது ?

விடை:—இரண்டும்பாதி உண்மை. ஏனென்றால் வேதங்கள் அவ்வாரே கோஷிக்கின்றன.

आयं गौः पृश्निरक्रमीदसदन्मातरं पुरः । पितरं च प्रयन्त्स्वः ॥ யஜு. 3. 6.

இப்பூலோகம் ஜலத்துடன் கூடிக்கொண்டு சூரியனை நாலாபக்கமும் சுற்றுகிறது. மறுபடியும் வேதங்கள் முறையிடுகிறதாவது.

आकृष्णेन रजसा वर्त्तमानो निवेशयन्नमृतं मर्त्यं च । हिरण्ययेन सविता रथेना देवो याति भुवनानि पश्यन् ॥ யஜு. 33. 43.

மழைமுதலானவைகளைச்செய்கிறவனும், பிரகாசஸ்வரூபனும் சகலபிராணிகளுக்கும் அப்பிராணிகளுக்கும் அம்ருதரூபமான மழை, ஒளி முதலானவைகளைக்கொடுக்கிற வனுமான சூரியன் தன்னுடைய ரேகையிலேயே சுற்றுகிறான். வேறுகிரகங்களைச் சுற்றிவருகிறதில்லை. ஒவ்வொரு பிரம்மாண்டத்திலேயும் ஒரு சூரியனிருக்கிறான். இருந்துபிரகாசத்தையளிக்கிறான். வேறு உலகங்களிலேயும் பிரகாசிக்கிறான்.

दिवि सोमो अधि श्रितः ॥

சந்திரலோகம சூரியனால் பிரகாசிப்பதுபோல் பிருதிவி முதலான உலகங்களும் சூரியனால் பிரகாசிக்கிறது. பகலும் இரவும் எப்பொழுதும் இருந்துகொண்டேவருகிறது. பிருதிவியாதி உலகங்கள் திரியும்பொழுது எப்

பாகம் சூரியன் முன்வருகிறதோ அங்கே பகலாகும். எப்பாகம் பின்னே வருகிறதோ அங்கே இரவாகும். அதாவது உதயம், அஸ்தமனம், மத்தியானம் நடுநிசி, முதலானவைகள் தேசதேசாந்திரங்களில் சதா இருந்து கொண்டே வருகிறது. அதாவது ஆரியவர்த்தத்தில்(இந்தியாவில்)சூரியோதயமாயிருக்கும் பொழுது பாதாளதேசத்தில் அதாவது அமெரிக்காவில் அஸ்தமனமாகிறது ஆரியவர்த்தத்தில் எப்பொழுது மாலைப்பொழுதோ அப்பொழுது பாதாளத்தில் காலைப்பொழுது. எப்பொழுது (இந்தியாவில்) ஆரியவர்த்தத்தில் நடுப்பகலோ அல்லது நடுநிசியோ அப்பொழுது பாதாளதேசத்தில (அமெரிக்காவில்) நடுநிசி அல்லது மத்தியானம். சூரியன் சுற்றுகிறது, பூமிசுற்றுகிறதில்லை என்பவர்களெல்லாம் அஞ்ஞானிகள். ஏனென்றால் அப்படியிருந்தால் ஒரு பக்கம் இரவே ஆயிரம் வருஷகாலமுமிருக்கும். சூரியன் "பிரதன" என்றழைக்கப் படுகிறபடியினால் பூமியைவிட லக்ஷமடங்கு அதிகப் பெரியது. மேலும் லக்ஷக்கணக்கான மைல்கள் பூமியிலிருந்து தூரமாயிருக்கிறது. ஆகையினால் பூமி சூரியனைச்சுற்றிபோவதைக்காட்டிலும் சூரியன் பூமியைச் சுற்றிப்போகக் காலதாமதமாகும். கடுகு மலையைச்சுற்றிப்போவதைக்காட்டிலும் மலை நடுகைச்சுற்றிப்போகக்காலதாமதமாகும். சூரியன் ஸ்திரமாயிருக்கிறதென்கிறவர்கள் வானசாஸ்திரமறிந்தவர்களல்ல. ஏனென்றால்அவ்விதமிருக்குமேயானால் ஒரு இராசிஸ்தானத்திலிருந்து மற்றொரு ஸ்தானத்திற்கு எவ்விதம் செல்லமுடியும்? மேலும் சூரியனைப்போல கனமான பதார்த்தம் திரியாமல் ஆகாசத்தில் ஸ்திரமாயிருக்கமுடியாது. ஜெயினர்கள் பூமிசுற்றுகிறதில்லையென்றும், கீழே போகிறதென்றும், கேவலம் ஜம்பூதுவீபத்திலேயே இரண்டு சூரியனும் இரண்டு சந்திரனுமிருக்கிறதென்கிறார்கள். அவர்கள் பங்கி (அபினி) யுடைய மயக்கத்தில் மூழ்கியிருக்கிறார்கள். பூமி கீழேசென்று கொண்டேயிருந்தால் காற்றன்னியில் சின்னபின்னமாய் விடுமே. வாயுவின் நிலமை ஏறத்தாழ விருக்கிறபடியினால் கீழே யிருக்கிறவர்களை விடமேலேயிருக்கிறவர்களுக்கதிகம் வேண்டும். இரண்டு சந்திரன்களும் இரண்டு சூரியன்களுமிருந்தால் இரவும்கிருஷ்ணபக்ஷமும்இரவேயிராது. ஆகையினால் ஒரு பூமிக்கு ஒரே சந்திரனும் பலபூமிகளுக்கு ஒரே சூரியனுந்தானிருக்கின்றன.

வினா:—சூரியன், சந்திரன், நக்ஷத்திரங்கள், இவைகளென்ன? இவைகளில் மனிதன் முதலான சிருஷ்டிகளுண்டா? இல்லையா?

விடை:—மனிதன் முதலானவர்கள் வசிக்கும் லோகங்களது. சதபத பிராமணங் கூறுகிறதாவது.

**एतेषु हीदगं सर्वं वसु हितमेते हीदगं सर्वं वासयन्ते तद्यदिदगं सर्वं वासयन्ते तस्माद्वसव इति ॥** சதபத. 14. 6. 7. 4.

பிருதுவி, ஜலம், அக்கினி, வாயு, ஆகாசம், சந்திரன், நக்ஷத்திரம், சூரியன் இவைகளுக்கு வசு என்று பெயர். ஏனென்றால் இதில் சகல பதார்த்த

தங்களும், பிரஜைகளும் வசிக்கின்றன. வசிப்பதற்கு எது வீடோ அதற்கு வசு என்று பெயர். சூரியன் சந்திரன், முதலான கிரகங்கள் நம்முடைய பூமியைப்போல வசுவானபடியினால் அதில் இம்மாதிரி பிரஜைகளிருப்பதைக் குறித்து எவ்விதம் சந்தேகமேற்படும். பரமேசுவரனுடைய இச்சிறிய உலகமே மனிதன் முதலான சிருஷ்டிகளால் நிறைந்திருக்கும் பொழுது மீதி உலகங்களெல்லாம் எவ்விதம் சூன்யமாயிருக்கும். பரமேசுவரனுடைய காரியம் ஒன்றுகூட நிஷ்பிரயோஜனமானதல்ல. இவ்வளவு கணக்கற்ற உலகங்களில் மனிதன் முதலான சிருஷ்டிகளுண்டு.

வினா:—இவ்வுலகில் மனிதன் முதலானவர்களுக்கு ஆகிருதி அவயவமிருப்பது போல் அந்நிய உலகங்களிலும் உண்டா? அல்லது வேறாயிருக்கிறதா ?

விடை:—ஆகிருதியில் கொஞ்சம் வித்தியாசமிருக்கக்கூடும். இவ்வுலகில் சீனன், ஆரியவர்த்தத்தினன், ஐரோப்பியன், இவர்களில் அவயவம், அங்க அமைப்பு இவைகளில் கொஞ்சம் வித்தியாசமிருப்பதுபோலவே, லோக லோகாந்திரங்களிலுங்கூட பேதமுண்டு. ஆனால் எஜ்ஜாதியுடைய சிருஷ்டி இத்தேசத்திலெவ்விதமிருக்கிறதோ அவ்விதமே அஜ்ஜாதினுடைய சிருஷ்டி அன்னியலோகங்களிலேயும் இருக்கும். அப்படியே இப்பிரதேசத்திலே சரீரத்தில் கண் முதலான அங்கங்கள் எங்கே யிருக்கிறதோ அங்கேயே இதரபிரதேசங்களிலும் உண்டு. வேதங்களிலுங்கூறுகிறதாவது.

सूर्याचन्द्रमसौ धाता यथापूर्वमकल्पयत् ।
दिवं च पृथिवीं चान्तरिक्षमथो स्वः ॥ ரிக். 10. 190.

பரமாத்மா, சூரியன் சந்திரன் ஆகாசம் பூமி முதலான கிரகங்கள் பதார்த்தங்கள் இவைகளைப் பூர்வகல்பத்தில் எவ்விதம் செய்தாரோ அவ்விதமே இக்கல்பத்திலும் அதாவது இச்சிருஷ்டியிலும் செய்திருக்கிறார். வித்தியாசமான மாறுதல்கள் ஒன்றும் அவர் செய்கிறதில்லை.

வினா:—இவ்வுலகத்தில்போலவே மீதி உலகங்களிலும் வேதம் முதலியவை வெளிப்படுத்தப்பட்டிருக்கிறதா ?

விடை:—ஆமாம். தன்னுடைய சகல தேசத்திலும் ஒரு ராஜனுடைய ஆளுகை ஒன்றாகவே யிருப்பதுபோல், இராஜராஜனாகிய பரமாத்மாவினுடைய வேதோக்த நீதி அவருடைய சிருஷ்டி ரூபங்களாகிய சகல இராஜ்யங்களிலும் சரியாகவே இருக்கின்றன.

வினா:—ஜீவனும் பிரகிருதியும் அநாதியானபடியினாலும் ஈசுவரனால் சிருஷ்டிக்கப்படாததினாலும் ஈசுவரனுடைய அதிகாரம் இவர்களின்பேரிலிருப்பதற்கு அவசியமில்லை? ஏனென்றால் இவைகள் சுதந்திரமுள்ளது.

விடை:—அரசனும் பிரஜைகளும் சமகாலவாசியாயிருந்தும் பிரஜைகள் அரசனுடைய ஆளுகைக்குள்ளாகிறார்கள், அவ்விதமே பரமேசுவரனுடைய

ஆதீனத்திற்குஜ் ஜீவனும் ஜடபதார்த்தமும், கீழ்பட்டிருக்கின்றன. பரமேசுவரன் சகல சிருஷ்டிகளை உண்டாக்கும்பொழுதும அனந்தபலவானயிருக்கும் பொழுதும் அல்பசாமார்த்தியவானை ஜீவனும் ஜடபதார்த்தமும் அவருடைய ஆதீனத்தில் ஏன் வரக்கூடாது? ஆகையினல் காரியங்களைச்செய்வதில் சுதந்திரமுள்ளவன் ஆனல் கர்மங்களினுடைய பலனை அநுபவிப்பதில் ஈசுவர வியவஸ்தைக்குட்பட்டவன். அவரோசர்வசக்திமான். சகல விசுவத்யையும் ஆக்கி அளித்து அழிக்கிறவர்.

அடுத்த அத்தியாயத்தில் வித்தை, அவித்தை, பந்தம், (கட்டு) மோக்ஷம் இவ்விஷயங்களைக் குறித்துச் சொல்லுவோம்.

எட்டாவது அத்தியாயம்

முற்றிற்று.



## ஒன்பதாவது அத்தியாயம்.

### வித்தை, அவித்தை, பந்தம், மோக்ஷம் இவைகளைப்பற்றினது.

**विद्यां चाऽविद्यां च यस्तद्वेदोभयंसह ।**
**अविद्यया मृत्यु तीर्त्वा विद्ययाऽमृतमश्नुते ॥** யஜு. 40.

எவன் வித்தை, அவித்தை, இவைகளினுடைய ஸ்வரூபத்தை முறையே அறிகிறானோ, அவன் **அவித்தை** அதாவது கர்மோபாசனையினால் காலனையும் **வித்தை** அதாவது உண்மையான ஞானத்தினால் மோக்ஷத்தையும் அடைகிறான். அவித்தையின் இலக்ஷணங்களாவன:—

**अनित्याशुचिदुःखानात्मसु नित्यशुचिसुखात्मख्यातिरविद्या ॥** யோக. சாதன.

(1) அநித்தியமான உலகம் அழியும் தேகம் அதாவது பார்க்கக் கூடியதாயும் கேழ்க்கக்கூடியதாயுமிருக்கிற காரியமான உலகம் இவைகள் எப்பொழுதும் இருக்குமென்றும், இருந்திருக்கிறதென்றும், யோகபலத்தினால் தேவர்களினுடைய இச்சரீரம் எப்பொழுதும் இருக்குமென்றும் இன்னும் இவைகளைப் போன்ற விபரீதமான புத்தியை அடைவது அவித்தையின் முதல்பாகம். (2) அசுசி அதாவது மலமயமானவும் காமாதுரமான ஸ்திரீ, பொய்ப்பேச்சு, களவு முதலிய பரிசுத்தமில்லாப்பொருள்களைப் பரிசுத்தமாக நினைப்பது இரண்டாவதுபாகம். (3) துக்கத்தை விளைவிக்கிற சிற்றின்பசுகங்களை நல்லதை உண்டுபண்ணக்கூடியதென்று நம்புவது மூன்றாவதாகும். (4) ஆத்மா இல்லாததில் ஆத்மா இருக்கிறதென்று கருதுவது நான்காவது பாகமாகும். இந்நான்கு விபரீத ஞானத்திற்கு அவித்தை என்று பெயர். இதற்கு விரோதமாய் அநித்தியத்தில் அநித்தியத்தையும், நித்தியத்தில் நித்தியத்தையும், பரிசுத்தமற்றதில் பரிசுத்தமில்லாததையும், துக்கத்தில் துககத்தையும், சுகத்தில் சுகத்தையும், அநாத்மாவில் அநாத்மாவையும், ஆத்மாவில் ஆத்மஞானத்தையும் முறையே அறிவது வித்தையாகும். எதனால் பதார்த்தங்களின் உண்மையான ஸ்வரூபஞானம் விளங்குகிறதோ அதுவே வித்தை. எதனால் பதார்த்தங்களின் உண்மையான ஞானம் விளங்காமல் அதற்குமாறான தோற்றங்களுண்டாகிறதோ அதுவே அவித்தை.

**சுத்தகர்மமும் பரமேசுவரனுடைய** உபாசனையுமிருந்தாலொழிய இறப்பு துக்கங்களிலிருந்து ஒரு நாளும் மீளமுடியாது. பரிசுத்தகர்மம் பரிசுத்த உபாசனை பரிசுத்த ஞானம் இவைகளால் முக்தியும் பரிசுத்தமற்ற பொய்ப்பேசுதல் முதலான கர்மங்கள், விலங்கு, கல்முதலான விக்கிரக பூஜை, பொய்ஞ்ஞானம் முதலியவைகளினால் பந்தமும் உண்டாகின்றன. ஒரு க்ஷணமாவது மனிதன், கர்மம் உபாசனை ஞானம் முதலியவைகளிலிருந்து

வேறாயிருக்கமுடியாது. இதனாலேயே தர்மோசிதமான உண்மை உரைத்தல் முதலான நற்கிரியைகளைச் செய்து பொய்ப்பேசுதல் முதலான தீமைகளை விட்டுவிடுவதே முக்திக்குச் சாதகமானவழி.

வினா:—முக்தி எவருக்குக்கிடையாது ?

விடை:—பந்தம் அல்லது பந்தத்திலிருக்கப்பட்டவருக்கு.

வினா:—பந்தத்திலிருப்பவர் யார் ?

விடை:—அதர்ம அஞ்ஞான சமுத்திரத்தில் முழுகிக்கிடக்கும் ஜீவன்.

வினா:—பந்தமும் மோக்ஷமும் இயல்பாவகவே விளையக்கூடியதா அல்லது செயலினால் (நிமித்தம்) அடையப்படுகிறதா ?

விடை:—செய்கையினால் அடையப்படுகிறதே. இயல்பா யிருந்தால் அவைகள் எப்பொழுதும் காயமாயிருக்கும்.

**न निरोधो न चोत्पत्तिर्न बद्धो न च साधकः ।**
**न मुमुक्षुर्न वै मुक्त इत्येषा परमार्थता ॥** கோடபாதீயகாரிகா. 2. 32.

மேற்கண்டசுலோகம் மண்டுகோபநிஷத்திலிருக்கிறது. ஜீவன் பிரம்மத்திலிருக்கிறபடியினால் எப்பொழுதும் அவித்தையினால் மறைந்ததாயில்லையில்லை. அதுபந்தத்திலுமில்லை. அல்லது அதன் முக்திக்காக அதற்குச்சாதனங்களும் வேண்டியதில்லை. முக்தியையடைய இஷ்டமுமில்லை அதற்கு எக்காலமும் முக்தியுமில்லை. பந்தமில்லாமலிருக்குங்கால் அதற்கு முக்தி ஏது ?

விடை:—நவீனவேதாந்திகள் சொல்லும் மேற்கண்டவைகள் உண்மையாகாது. ஜீவனின் சுரூபம் அற்பமாயிருக்கிறதினாலே இருளினால் மூடப்பட்டிருக்கிறது. சரீரத்துடன் சேர்ந்து வெளிப்படுவதினால் பிறப்பை யடைகிறது. பாபரூபமான கர்மங்களின் பலனால் போகரூபமானபந்தத்தில் அகப்படுகிறது. அதிலிருந்து நீங்கவேண்டி சாதகங்களைத்தேடி துக்கத்திலிருந்து வெளிவர விரும்புகின்றது. துக்கத்திலிருந்து நீங்கி பரமானந்தமான பரமேசுவரனை அடைந்து முக்தியை அநுபவிக்கிறது.

வினா:—இத்தர்மங்களெல்லாம் தேகத்திற்கும்அந்தக்கரணத்திற்கு மேயுள்ளது. ஜீவனுக்கில்லை. ஏனெனில் ஜீவன் பாப புண்ணியங்களிலிருந்து நீங்கினதாயிருக்கின்றது. தேகமும் அந்தக்கரணமும் செய்யும் கர்மங்களுக்கு அது சாட்சியாயிருக்கிறது. சீதோஷ்ணம் முதலானவைகள் சரீரத்தின் குணங்கள். ஆத்மா பரிசுத்தமாயும் களங்கமன்னியிலுமிருக்கின்றது.

விடை:—தேகமும் அந்தக்கரணமும் சடபதார்த்தங்கள். அது சீதோஷ்ணங்களை உணருகிறதுமில்லை. அனுபவிக்கிறதுமில்லை. உணர்ச்சியுடன் கூடின மனிதன் முதலான பிராணிகளே சுவாசத்தையடையும் பக்ஷத்தில் சீதோஷ்ணங்களையடைந்து போகத்தையடைகிறது. பிராணனும் சடப்பொருளே. அதிற்குப் பசிதாகங்கிடையாது. ஆனால் பிராணனுடனுங்கூடின ஜீவனுக்கே பசியும் தாகமும் உண்டாகிறது. அப்படியே மனமும் சடப்பொருள்

அதற்குத் துக்கமும் சந்தோஷமும்கிடையாது. ஆனல்மனதின் வழியாக ஜீவன் சுகத்தையாவது துக்கத்தையாவது ஆனந்தத்தையாவது அல்லது உபத்திரவத்தையாவது அனுபவிக்கிறது. காது முதலான உணரும்படியான இந்திரியங்களின் வழியாய் நல்ல அல்லது கெட்ட விஷயங்களைக்கிரகித்து ஜீவன் சுகதுக்கத்தையடைகிறது. அப்படியே அந்தக்கரணமும் அதாவது மனம் புத்தி சித்தம் அகங்காரம் இவைகளின் மூலமாய் ஆத்மாவானது சங்கல்பம் விகல்பம் நிச்சயம், ஸ்மரணை, அவமானம் இவைகளையடைகிறது. ஆகையினல் ஆத்மாவே சந்தோஷத்தையாவது துக்கத்தையாவது அடைகிறது. கத்தியினல் குத்தினவன் எவ்விதம் தண்டனைக்குள்ளாகிருனே—கத்தியை எப்படி தண்டிக்கிறதில்லையோ—அப்படியே தேக இந்திரியங்கள் அந்தக்கரணம் பிராணரூப சாதனங்களினலே நல்ல கெட்ட கருமங்களைச் செய்யும் கர்த்தாவாகிய ஜீவனே சுகதுக்கங்களை யனுபவிக்கிறது. ஜீவன் கர்மங்களுக்குச் சாட்சியாகாது. கர்த்தாவாயும் அனுபவிக்கிறதாயுமிருக்கிறது. கர்மங்களுக்குச் சாட்சியாயிருப்பது இரண்டற்ற பரமாத்மாவே. ஜீவன் கர்மங்களினல் முழுவதும் கவரப்பட்டிக்கிறது, ஜீவன் கடவுளாகாது. ஆகையினல் அது சாட்சி பூதமுமல்ல.

வினு:—ஜீவன் பிரம்மத்தின் பிரதிபிம்பம். கண்ணுடி உடைந்து துண்டு துண்டானபோது பிரதி பிம்பம் மறைந்தபோதிலும் உண்மையான பிம்பம் அல்லது உருவம் எவ்விதமான கெடுதலையுமடையாமலிருப்பது போல் அந்தக்கரணத்தில் பிரம்மத்தின் பிரதிபிம்பமாகிய ஜீவன், அது இருக்கும் வரையிலிருந்து அந்தக்கரணம் நாசமானவுடன் ஜீவனும் முக்தியை யடைகிறது. இது உண்மையா இல்லையா ?

விடை:—இது குழந்தைப் பேச்சு. ஏனெனில் பிரதி பிம்பம் ஒலிக்கு முன்னல், இரண்டு உருவங்களுடன் கூடின பொருள்கள் — பிம்பமொன்று பிரதிபிம்ப முண்டாக உருவுள்ள வஸ்து இரண்டு—வேண்டும். உதாரணமாக முகத்தின் பிரதிபிம்பம் ஒலிக்க முகமும் கண்ணுடியும் அவசியமாகிறது. இரண்டும் உருவமுடையவைகள். தனித்தனியாய் இருப்பவைகள். அவைகள் வேருக இல்லாமல் போனல் பிரதிபிம்பம் ஒலிக்காது. பிரம்மா உருவற்றவருயும் சர்வவியாபகராயு மிருக்கிறபடியினல் அவருக்குப்பிரதிபிம்பம் உண்டாகாது.

வினு:—ஆழமாயும் பரிசுத்தமாயுள்ள ஜலத்தில் உருவற்றதாயும் சர்வ வியாபகமாயுமுள்ள ஆகாசத்தின் பிரதிபிம்பந்தெரியவில்லையா? இப்பிரகாரமே நிர்மலமாயும் பரிசுத்தமாயுமுள்ள அந்தக்கரணத்தில் பரமாத்மாவின் உருவம் அல்லது ஆகாசம் தென்படும். இதனலேயே இதற்குச் சிதாபாஸம் என்று சொல்லப்படுகிறது.

விடை:—சிறுபிள்ளையின் பிதற்றல் இது. ஆகாசம் பார்க்க முடியாமலிருக்குமேயானல் கண்களுக்குப்புலப்படுவானேன்.

வினு:—மேலே நீலநிறத்துடனும் தூசியுடனும் கூடினதாய் காணப்படுகிறது ஆகாசமில்லையா ?

விடை:—இல்லை.

வினா:—இல்லையெனின் அது வேறென்ன ?

விடை:—அக்கினி, பூமி, ஜலம், இவைகளின் நுண்ணியமான வெவ்வேறான அணுக்கள். மழையாகக்கீழேவிழும் ஜலத்தின் அணுக்களே நீலநிறமாயிருப்பது. புழுதியடைந்திருக்குந்தோற்றம் பூமியிலிருந்து உயரவெழும்பிக்காற்றில் மிதக்கும் புழுதி அல்லது தூசி. இவைகள்தான் கண்களுக்குத்தென்படுகின்றன. அவைகளே ஜலத்திலும் கண்ணாடியிலும் பிரதிபிம்பமாகத்தெரிகின்றன. அது ஆகாசமாகாது.

வினா:—கடாகாசம்—பானையிலடங்கியிருக்கும் ஆகாசம், மடாகாசம்—வீட்டிலடங்கியிருக்கும் ஆகாசம்—மேகாகாசம்—மேகத்தினால்சுற்றப்பட்டிருக்கிற ஆகாசம். இன்னும் இதையொத்தக்குறிப்பட்ட வெவ்வேறான ஆகாசங்களைக் காண்பிப்பதற்கு மேற்கண்டபெயர்கள் எப்படியிருக்கின்றனவோ—பானை முதலியவைகள் உடைந்துபோனால் பின்னமான ஆகாசங்களின் நிலையானது அழிந்து பெரிய ஆகாசம் கடைசியில் எப்படி தங்குகின்றதோ அப்படியே பிரம்மமானது ஈசுவரனெனவும் அல்லது ஜீவனெனவும் உபாதி பிரம்மாண்டம் அந்தக்கரணபேதங்களினால் அழைக்கப்படுகின்றன.

விடை:—இது அவித்வான்களின்பேச்சு. ஆகாசம் (கடத்திலுள்ளது வீட்டிலுள்ளது முதலியவைகள்) ஒருபொழுதும் அழிகிறதில்லை. சின்னபின்னமாயும் துண்டு துண்டாயும் ஆகிறதில்லை. வீடு, பானை முதலியவைகள் அழிந்து துண்டு துண்டாகின்றன. 'கடாகாசத்தை' க்கொண்டுவா என்று எவரும் சொல்லுகிறதில்லை. பழக்கத்தில் 'கடத்தைக்கொண்டுவா' என்று சொல்லக் கேட்க்கிறோம். ஆகையினால் உன்னுடையவாதம் சரியானதில்லை.

வினா:—சமுத்திரநடுவில் மீன்முதலியபிராணிகள் எப்படி நீந்துகின்றனவோ ஆகாயமத்தியில் பக்ஷிமுதலியவைகள் எப்படி பறக்கின்றனவோ அப்படியே சகல அந்தக்கரணங்களும் 'சிதாகாச' (சேதனமாய் ஆகாயம் போல பரவியுள்ள) பிரம்மத்தில் நடமாடுகின்றது. இயல்பாகவே அவைகள் சடப்பொருள்கள். ஆனால் சர்வவியாபகமான பரமாத்மாவினுடைய சேர்க்கையினால், அக்கினி சம்மந்தப்பட்ட இரும்பு சூட்டை அடைகிற மாதிரி, சேதனத்தையடைகின்றது. ஆனால் பிரம்மமோ ஆகாயத்தைப் போல் சலன மன்னியிலிருக்கிறார். ஆகையினால் ஜீவனைப்பிரம்மாவாகக் கருதுவதில்யாதொரு விதமான குற்றமுமில்லை.

விடை:—உன்னுடைய இவ்வுதாரணமும் உண்மையானதில்லை. ஏனெனில் சர்வவியாபியான பிரம்மா அந்தக்கரணத்தில் பிரகாசித்து ஜீவனாயிருக்குமேயானால் சர்வஞ்ஞம் முதலான குணங்கள் அதிலுண்டாகவில்லையா ? கட்டுப்படுவதினால் சர்வஞ்ஞம் உண்டாகிறதில்லையென்றால் பிரம்மா கட்டுப்பட்டு எல்லைக்குட்பட்டவரா அல்லது வெளிப்பட்டவரா ? அவர்வெளிப்படாதவரென்றால் திரை ஒன்றும் அவரை வேறுபடுத்தாது. அப்பொழுது ஏன் சர்வஞ்ஞம் ஆகாது. தன் ஸ்வரூபத்தை மறைத்துக்கொண்டு அந்தக்கரணத்துடனிருக்கிறதென்றால், அந்தக்கரணத்துடனிருக்கும்படியான பிரம்மமானது சந்தே

கம், அவநம்பிக்கை அஞ்ஞானம் இவைகளுக்கு ஆளாகி மிருதியிருக்கும்படியான பிரம்மமானது ஞானத்தையும் பரிசுத்தத்தையும் முக்தியையும் அடையும். இப்பிரகாரம் சிருஷ்டி முழுவது மிருக்கும்படியான பிரமத்தை அந்தக்கரணம் தடுக்கின்றது, தடுத்து பந்தமும் முக்தியும் அற்பாயுசுள்ளதாய் விடுகிறது. உங்களுடைய பிரமாணம் உண்மையுள்ளதாயிருக்குமேயானால் ஜீவனுக்கு முன்சொன்னதும் கேட்டதும் ஞாபகமிராது. ஏனென்றால் கேட்டதும் பார்த்ததுமான பிரம்மம் இருக்கிறதில்லை. ஆகையினால் ஜீவன் பிரம்மாவாகவும் பிரம்மா ஜீவனாகவும் இருக்கவில்லை. இரண்டும் வெவ்வேறாகவேயிருக்கின்றன.

வினா:— இவைகளெல்லாம் அத்தியா ரோபமே? அதாவது வஸ்துவில் இல்லாத குணங்களை உண்டாக்குவதற்கே அத்தியா ரோபம் என்று பெயர். பிரம்மத்தில் உலகத்தையும் அதிலிருக்கும் சகல வஸ்துக்களையும் அத்தியாரோபஞ் செய்வதினாலே சத்தியத்தை அறிவோர்க்குச் சமாச்சாரத்தை நன்கறியச்செய்வதேயாகும். உண்மையில் எல்லாம் பிரம்மமே.

விடை:— அத்தியாரோபம் செய்கிறவர் யார் ?

வினா:— ஜீவன்.

விடை:— ஜீவன் என்று எதற்குச்சொல்லுவது ?

வினா:— அந்தக்கரணத்திலுள்ள தனது அறிவின் உண்மைக்கு ?

விடை:— அது பிரம்மமா அல்லது வேறானதா ?

வினா:— அதேபிரம்மாவே.

விடை:— பிரம்மாவே உலகத்தைப்பற்றி தன்னில் தப்பெண்ணங் கொண்டாரா ?

வினா:— ஆமாம். இதினால் பிரம்மாவிற்கு என்ன கெடுதல்?

விடை:— விஷயங்களைப்பற்றி தப்பெண்ணங்கொள்ளுபவர் ஏன் பொய்யனாகமாட்டார் ?

வினா:— இல்லை மனதினாலும் பேச்சினாலும் எண்ணிச் சொல்வதெல்லாம் பொய்யே.

விடை:— மனதிலும் பேச்சிலும் கற்பனைசெய்து பொய்ப்பேசுகிற பிரம்மா பொய்யனும் தப்பிப்போகக் கூடியவனுமாகிறாரே ?

வினா:— அது எங்களுடைய கருத்தை நிரூபணஞ்செய்கிறது.

விடை:— ஆஹா ! பொய் வேதாந்திகளே ! சத்திய ஸ்வரூபம், சத்தியகாரியம், சத்திய நோக்கம் இவைகளையுடைய பரமாத்மாவைப் பொய்யனாகச்செய்கிறீர்கள் ? இதுவே உங்களுடைய கஷ்டகாலத்திற்குக் காரணமில்லையா ? பரமேசுவரன் பொய் எண்ணம் பொய்நோக்கமுடையவரென்று எந்த உபநிஷத்து சூத்திரத்தில் அல்லது எவ்வேதத்தில் கூறப்பட்டிருக்கிறது ? இது

उलटि चोर कोतवाल को दण्डे

திருடன் கொத்தவாலைத் (அதிகாரியை) தண்டித்தான் என்னும் பழமொழியை உண்மையாக்குகின்றது. சாதாரணமாகக் கொத்தவால் திருடனைத் தண்டிக்க வேண்டும். திருடன் கொத்தவாலைத்தண்டிக்கிறான் என்பது சகல அனுபவ சித்தாந்தங்களுக்கும் விரோதமாயிருக்கிறது. நீங்கள் தப்பெண்ணங் கொண்டவர்களும் பொய்பேசுகிறவர்களுமானபடியினால் அதை வீணுகப் பரமேசுவரனின்பேரில் சுமத்துகிறீர்கள். பிரம்மத்தின் எப்பாகமாவது பொய்யால் சூழப்பட்டிருந்தால், பிரம்மமே பொய்யாகும். ஏனெனில் ஓரிடத்திலிருப்பது போலவே அவர் எங்குமிருக்கிறார். சத்தியஸ்வரூபமாயும் சத்தியத்தைக் கௌரவிக்கிறவராயும் சத்தியவானாயும் அவர் இருக்கிறார். மேற்கண்ட கெடுதல்களெல்லாம் உங்களுடையதே ஒழிய பிரம்மாவினுடையதாகாது. நீங்கள் வித்தை என்பது அவித்தையே. உங்களுடைய அத்தியாரோபமும் பொய்யே. ஏனெனில் பிரம்மாவாயில்லாத உங்களைப்பிரம்மமாகவும் பிரம்மாவைஜ் ஜீவனாகவும் கருதுவது பொய்யில்லாமல் போனால் வேறென்ன? எவர் சர்வ வியாபியாயிருக்கிறாரோ அவர் எல்லைக்குட்பட்டு அஞ்ஞானமான பந்தத்தில் ஒரு பொழுதும் விழுகிறதில்லை. ஏனெனில்ஜீவன் எப்பொழுதும் கட்டுப்பட்டது, ஒரே விடத்திலுள்ளது. அற்பமானது, கொஞ்சம் ஞானமுள்ளது. பிரம்மாவோ அவ்விதமில்லை.

முக்தியும் பந்தமும்.

வின:—முக்தி என்றால் என்ன?

**मुञ्चन्ति पृथग्भवन्ति जनायस्यां सा मुक्तिः**

விடை:—எதில் சுதந்திரமிருக்கிறதோ அதுவே முக்தி.

வின:—எதிலிருந்து சுதந்திரமுண்டாகிறது?

விடை:—எதிலிருந்து மீளவேண்டுமென்று சகல ஜீவன்களும் விரும்புகின்றதோ?

வின:—எதிலிருந்து மீளவேண்டுமென்று விரும்புகிறது?

விடை:—மீளவேண்டுமென்று விரும்புகிறதிலிருந்து?

வின:—எதிலிருந்து மீளுகிறது?

விடை.—துக்கத்திலிருந்து.

வின.—மீறி எதையடைந்து எங்குவசிக்கிறது?

விடை.—சுகத்தையடைந்து பிரம்மத்தில் வசிக்கிறது.

வின.—முக்தியும் பந்தமும் உண்டாகக் காரணங்களென்ன?

விடை.— பரமேசுவரனின் கட்டளைகளைக் காப்பாற்றுதல், அதர்மம், அவித்தை, கெட்டசேர்க்கை, தீய ஒழுக்கம் தீய ஆசாரம் இவைகளிலிருந்து வேறாக இருத்தல், சத்தியபாஷணை பரோபகாரம், பக்ஷபாதமின்மை வித்தை தர்மம் நியாயம் இவைகளை விருத்திசெய்தல், மேற்சொன்னபிரகாரம் பரமேசுவரனைத்துதித்துப்பிரார்த்தனைசெய்து உபாசனைசெய்தல் வித்தையை ஓதுதல் ஓதுவித்தல், புருஷபிரயத்தனஞ்செய்து ஞானத்தை விருத்திசெய்தல், சகலரையும் விட உத்தமவழிகளைக்கைப்பிடித்தல், செய்கிற சிலவற்றை

யும் பக்ஷபாதமன்னியில் நியாயதர்மப்பிரகாரம்செய்தல் இவைகளைக்கொள்வதினால் முக்தியையும் இவைகளுக்கு எதிரிடையாய் ஈசுவர ஆக்ஞைக்குக் கெடுதலானக் காரியங்களைச் செய்வதினால் பந்தத்தையும் பெறலாம்.

வின.—முக்தியில் ஜீவன் ஒன்றாக விருக்கின்றதா ? அல்லது தனியாகப் பிரகாசிக்கின்றதா ?

விடை.—தனியாகவே பிரகாசிக்கின்றது,

வின.—அது எங்கே வசிக்கிறது ?

விடை.—பிரம்மத்தில்.

வின.—பிரம்மம் எங்கிருக்கிறது ? அங்கு முக்தியையடைந்த ஜீவன் ஒரேவிடத்திலிருக்கிறதா அல்லது சுயேச்சாதிகாரமாய் எங்கும் திரிகின்றதா ?

விடை.—எங்கும் பூர்ணமாயிருக்கிற பிரம்மத்தில் முக்தியடைந்த ஜீவன் அதைத்தடுப்போரன்னியில் ஞானத்தை யடைந்து ஆனந்தத்துடன் சுயேச்சையாய் திரிகின்றது.

வின.—முக்தியடைந்த ஜீவனுக்குத்தூல சரீரம் உண்டா ? இல்லையா ?

விடை.—இல்லை.

வின.—அப்படியானால் இன்பத்தையும் ஆனந்தத்தையும் எப்படி அநுபவிக்கும் ?

விடை.—உண்மை நோக்கம் முதலான இயற்கைக் குணங்கள் அதற்குண்டு. ஆனால் சடசம்பந்தங்கிடையாது.

**शृण्वन् श्रोत्रं भवति, स्पर्शयन् त्वग्भवति, पश्यन् चक्षुर्भवति, रसयन् रसना भवति, जिघ्रन् घ्राणं भवति, मन्वानो मनो भवति, बोधयन् बुद्धिर्भवति, चेतयंश्चित्तम्भवत्यहङ्कुर्वाणोऽहङ्कारो भवति ॥**

சதபத பிராம்மணம் காண்டம் 14.

மோக்ஷத்தில் பௌதிக சரீரமாவது இந்திரியங்களாவது ஜீவனைப் பின்தொடருகிறதில்லை. ஆனால் அதனுடைய இயல்பான சுத்தகுணங்கள் கூடவே இருக்கின்றன. கேழ்க்கவேண்டும் என்று விரும்பும்பொழுது காதையும் ஸ்பரிசிக்கத் தோலையும் பார்க்கக் கண்களையும் உருசிக்கு நாக்கையும் முகர மூக்கையும் ஆசைக்கும் யோசனைக்கும் எண்ணத்தையும் புத்திக்குச்சித்தத்தையும் ஞாபகசக்தியையும் ஜீவன்தன்னுடைய சுயசக்தியைகொண்டு அடைகின்றது. சங்கல்பமாத்திரத்தினால் சரீரத்தையுமடைகிறது. சரீர ஆதாரத்துடன் இந்திரியங்களைக்கொண்டு தன் காரியங்களை உலகில் செய்துகொள்வது போலவே தன்னுடைய சக்தியைக்கொண்டு முக்தியிலும் சகல இன்பங்களையும் அனுபவிக்கிறது.

வின.—எவ்வளவு சக்தியிருக்கிறது ? அது எவ்விதமானது ?

விடை.—ஒரேவிதமான சக்தியுள்ளது ஆனால் அதை விவரித்தால் 24வகைகளாகின்றன. 1. பலம் 2. பராக்கிரமம் 3. ஆகர்ஷண சக்தி 2. முயற்சி 5. நடத்

தை 6. பயம் 7. பகுத்தறிவு 8. செய்கை 9. உத்சாகம் 10. ஸ்மரணை 11. நிச்சயம் 12. இச்சை 13. ஆசை 14. துவேஷம் 15. சேர்க்கை 16. பிரிவு 17. கூடுதல் 18. பிரிதல் 19. கவனம் 20. ஸ்பரிசித்தல் 21. பார்வை 22. உருசி 23. கந்தம் 24. அறிவு இவைகளேயாம். இதைக்கொண்டே முக்தியில் கூட ஆனந்தத்தையடைந்து அனுபவிக்கிறது. முக்தியில் ஜீவன் ஒன்ருய் விட்டால் முக்தியினுடைய சுகங்களை யார் அனுபவிக்கிருர்கள். ஜீவனுடைய நாசத்தில் முக்தியை அறிகிறவர்கள் பெரும் அறிவீனர்கள். ஏனெனில் முக்தியென்பது துக்கங்களிலிருந்து மீறி ஆனந்தஸ்வரூபனும் சர்வ வியாபகனும் ஆனந்தனுமிருக்கிற பரமேசுவரனிடத்தில் ஜீவன் ஆனந்தத்திலிருப்பதேயாகும்.

வேதாந்த சாரீரிக சூத்திரம் சொல்லுவதாவது.

**अभावं बादरिराह ह्येवम् ॥** வேதாந்தம். 4. 4. 10.

வியாசருடைய பிதாவாகிய வாதரி முக்தியினுல் ஜீவனுடையவும் அதனுடைய மனுவெண்ணத்தையும் நம்புகிருர். அதாவது ஜீவன் மனது இவைகளினுடைய லயத்தை வாதரியான பராசார் நம்பவில்லை.

**भावं जैमिनिर्विकल्पामननात् ॥** வேதாந்தம் 4. 4. 11.

ஆசாரியர் ஜெய்முனி முக்தியடைந்த புருஷனில் மனதுக்குச் சரியான சூக்ஷ்ம சரீரம் இந்திரியம் பிராணன் முதலானவைகள் விளங்குவதாக நம்புகிருர். அபாவத்தில நம்பவில்லை.

**द्वादशाहवदुभयविधं बादरायणोऽत ः॥** வேதாந்தம் 4. 4. 12.

வியாசர் முக்தியில் பாவம் அபாவம் இவ்விரண்டையும் நம்புகிருர். அதாவது சுத்தசாமார்த்தியத்துடன் கூடின ஜீவன் முக்தியிலிருப்பதாகவும் பரிசுத்தமின்மை பாபகாரியம் செய்தல் துக்கம் அஞ்ஞானம் முதலானவைகளை அபாவமாகவுங்கருதுகிருர்.

**यदा पञ्चावतिष्ठन्ते ज्ञानानि मनसा सह ।**
**बुद्धिश्च न विचेष्टेत तामाहुः परमां गतिम् ॥** கடோபநிஷத். 2. 6. 10.

சுத்தமனதுடன் ஐந்து ஞானேந்திரியங்களைக்கொண்டு வசித்து புத்தியும் நிச்சியமாய் ஸ்திரமானஜீவனுக்குப் பரமகதி அதாவது மோக்ஷமென்று பெயர்.

**य आत्मा अपहतपाप्मा विजरो विमृत्युर्विशोकोऽविजिघत्सोऽपिपासः सत्यकामः सत्यसङ्कल्पः सोऽन्वेष्टव्यः स विजिज्ञासितव्यः सर्वांश्च लोकानाप्नोति सर्वांश्च कामान् यस्तमात्मानमनुविद्य विजानातीति ॥** சாந். 8. 7. 1.

லாபம், மூப்பு, மரணம், சோகம், பசி, தாகம், இவைகளின்றியினும் சத்தியவேலை சத்திய சங்கல்பத்துடனிருக்கிறவரை அறிய ஆசைப்படு. பரமாத்மாவினுடைய சேர்க்கையினுலேயே முக்தியடைந்த ஜீவன் சகல உல

கங்களேயும் சகல எண்ணங்களேயும் அடைகிறது. அப்பரமாத்மாவை அறிவதினலேயே மோக்ஷசாதனங்களேயும் சுய சக்தியையும் அடைகிறது

स वा एष एतेन दैवेन चक्षुषा मनसैतान् कामान् पश्यन् रमते ॥ य एते ब्रह्मलोके तं वा एतं देवा आत्मानमुपासते तस्मात्तेषाँ सर्वे च लोका आत्ताः सर्वे च कामाः स सर्वाँश्च लोकानाप्नोति सर्वाँश्च कामान्यस्तमात्मानमनुविद्य विजानातीति ॥ சாந்தோ. 8. 125. 6.

முக்தியையடைந்த ஜீவன் சுத்தமான கண்களினலும் சுத்தமனதினலும் காரியங்களேப்பார்த்து அடைந்து அனுபவிக்கிறது. பிரம்மலோகம் அதாவது தரிசிக்கத்தகுந்த பரமாத்வாவிருந்துகொண்டு மோக்ஷசுகத்தை அனுபவிக்கிறது. அந்தர்யாமியாயும் ஆத்மாவாயுமிருக்கிற இப்பரமாத்மாவினுடைய முக்தியை யடைந்த வித்வானகள் பூஜையைச்செய்கிருர்கள். அதாவது எச்சங்கல்பங்கள் செய்யப்படுகிறதோ அதையடைகிருர்கள். முக்தியடைந்த ஜீவன் ஸ்தூலசரீரத்தைவிட்டு எண்ணத்தினல் செய்யப்பட்ட தெய்விகச்சரீரத்துடன் ஆகாயத்தில் பரமேசுவரனுடன் வசிக்கிறது. ஏனெனில் சரீரத்துடன் கூடினவர்கள் சம்சாரதுக்கங்களிலிருந்து மீறமுடியாதவர்கள்.

मघवन्मर्त्यं वा इदग्ं शरीरमात्तं मृत्युना तदस्याऽमृतस्याशरीरस्यात्मनोधिष्ठानमात्तो वै स शरीरः प्रियाप्रियाभ्यां न वै सशरीरस्य सतः प्रियाप्रिययोरपहतिरस्त्यशरीरं वाव सन्तं न प्रियाप्रिये स्पृशतः ॥ சாந். 8. 12. 1.

இந்திரன் பிரஜாபதியுடன் சொன்னதுபோல் பூஜிக்கத்தக்கச் செல்வத்துடன் கூடின மனிதனே? இச்சரீரம் சிங்கத்தின் வாயிலுள்ள ஆட்டைப்போல் மரணத்தின் வாயில் இருக்கிறது. இச்சரீரம் மரணம் உருவம் இவைகளற்ற ஜீவாத்மாவிற்கு இருப்பிடமாயிருக்கிறது. ஆகையினல் எப்பொழுதும் சுகதுக்கங்களினல் மூடப்படுகிறது. ஏனெனில் சரீரத்துடன் கூடின ஜீவன் உலகசுகங்களே இம்மாதிரி யடைகிறது. ஆனல் சரீரமில்லாத முக்தியை யடைந்த ஜீவாத்மா பிரம்மத்தில் வசிக்கிறது. அதை உலகத்தின் சுகதுக்கங்கள் பாதிக்கிறதில்லே. எப்பொழுதும் இன்பத்திலேயே வசிக்கிறது.

வின:—ஜீவன் முக்தியையடைந்த பிறகு ஜனனமரண துக்கத்தில் வருகிறதா இல்லேயா? இவைகள் கூறுவதுபோல் மறுபடியும் திரும்பி உலகத்தில் வாராமலிருப்பதினலேயே முக்தியுண்டாகின்றது.

न च पुनरावर्त्तते न च पुनरावर्त्तते इति ॥ சாந்தோ. 8. 15.

अनावृत्तिः शब्दादनावृत्तिः शब्दात् ॥ சாரீரிக. 4. 4. 33.

यद् गत्वा न निवर्तन्ते तद्धाम परमं मम ॥ பகவத்கீதை.

விடை:—இது உண்மையானதில்லே. வேதங்கள் இவைகளேத்தள்ளுகின்றன.

कस्य॑ नूनं कत॒मस्या॒मृता॑नां मना॑महे॒ चारु॑ दे॒वस्य॒ नाम॑ ।
को नो॑ म॒ह्या अदि॑तये॒ पुन॑र्दात् पि॒तरं॑ च दृ॒शेयं॑ मा॒तरं॑ च ॥
अ॒ग्नेर्व॒यं प्र॑थ॒मस्या॒मृता॑नां मना॑महे॒ चारु॑ दे॒वस्य॒ नाम॑ ।
स नो॑ म॒ह्या अदि॑तये॒ पुन॑र्दात् पि॒तरं॑ च दृ॒शेयं॑ मा॒तरं॑ च ॥ ரிக். 1. 24. 2.

इदानीमिव सर्वत्र नात्यन्तोच्छेदः ॥ சாங்கிய சூத்திரம் 1. 159.

நாங்கள் எதை பவித்திரமென்று அறிவது என்பது கேழ்வியாகும். எத்தேவன் அழிவுள்ளபொருள்களின் நடுவில் அழியாமலிருந்துகொண்டு பிரகாசஸ்வரூபனாய் நமக்கு முக்தியின் சுகத்தை யளித்து மறுபடியும் இவ்வுலகில் பிறப்பைக்கொடுத்து தாய்தகப்பனார்களைப்பார்க்கச்செய்கிறான்? சுயம்பிரகாசஸ்வரூபமாய் அநாதியாயும் எக்காலமும் முக்தியை யடைந்திருக்கும் பரமாத்மாவையே பவித்திரன் என்று அறி. எவர் நமக்கு முக்தியில ஆனந்தத்தை யளித்து பூமியில் மறுபடியும் மாதாபிதாவினுடைய சேர்க்கையில் பிறப்பையளித்து அவர்களைக்காணச் செய்துவைக்கிறாரோ அப்பரமாத்மாவையே பூஜித்தல்வேண்டும். அவரே முக்தியைக்கொடுக்கிறார். சகலருக்கும் அவரே கடவுள்

தற்சமயத்தில் பந்தமுக்த ஜீவன்களெப்படியோ அப்படியே எப்பொழுதுமிருக்கிறது. பந்தமும் முக்தியும் எக்காலமுமிருப்பதல்ல.

तदत्यन्तविमोक्षोऽपवर्गः । दुःखजन्मप्रवृत्तिदोषमिथ्याज्ञानानामुत्तरोत्तरापाये तदनन्तरापायादपवर्गः ॥ நியாயசூத்திரம் 1. 22. 2.

வினு:—துன்பத்திலிருந்து (அத்யந்த) எக்காலும் விலகியுள்ள சுயேச்சைக்கு முக்தி என்று சொல்லப்படுகிறது. ஏனெனில் பொய்ஞ்ஞானம் அவித்தை அவா விஷயசுகம் தீய ஒழுக்கம் பிறப்பு இறப்பு இவைகளிலிருந்து சுயேச்சையை யடைவதே எக்காலுமுள்ளதாகும்.

விடை:—“அத்யந்த” வார்த்தைக்கு எக்காலும் என்று அர்த்தம் ஆகவேண்டாம். உதாரணமாக (அத்யந்தசுகம் அத்யந்ததுக்கம்) என்பதில் “மிகவும் சுகம் மிகவும் கஷ்டம்” என்று ஆவதுபோல் “அத்யந்த” வார்த்தைக்கு அர்த்தங்கொள்ளவேண்டும்.

வினு:—முக்தியிலிருந்து ஜீவன் திரும்பிவிடுமேயானால் அது எவ்வளவு காலம் முக்தியிலிருக்கும்?

ते ब्रह्मलोकेषु परान्तकाले परामृताः परिमुच्यन्ति सर्वे ॥ முண்டகோ. 3. 2. 6.

முக்தி பெற்ற ஜீவன் முக்தியையடைந்து மகாகல்பம வரையிலும் பிரம்மத்தில் ஆனந்தத்தையனுபவிக்கிறது. மறுபடியும் மகாகல்பத்திற்குப் பிறகு முக்தி சுகத்தைவிட்டு உலகத்திற்கு திரும்பிவருகிறது. கணக்கு விவரம் இதுவேயாம்.

காலம் நாலுயுகங்களாகபிரிக்கப்பட்டிருக்கின்றன.

| | | |
|---|---|---|
| விடை—சத்தியயுகம் | 17,28,000 | வருடங்கள் |
| துவாபரயுகம் | 12,96,000 | ,, |
| திரேதாயுகம் | 864000 | ,, |
| கலியுகம் | 432000 | ,, |
| மொத்தம். | 4320000 | ,, |

ஆக சதுர்யுகம் ஒன்றுக்கு வருஷங்கள் 43,20.000.

2000 சதுர்யுகம் (6640000000 வருஷங்கள்) ஒரு **அகோராத்திரம்**

30 அகோராத்திரம் = ஒரு மாசம்

12 மாசங்கள் = ஒரு வருஷம்

100 வருஷங்கள் = ஒரு **பரந்தகாலம்** (மகாகல்பம்)

ஆகவே மொத்த வருஷங்கள் = 100 × 12 × 30 × 2000 × 43, 20, 000 = 3, 11, 040, 000, 000, 000 வருஷங்கள்

வினா:—எதிலிருந்து மறுபடியும் பிறப்பு இறப்பு கிடையாதோ அதையே முக்தியென்று உலகமும் கிரந்தகர்த்தாக்களும் நம்புகிறார்கள்.

விடை:—இது உண்மையாகாது? முதலாவதாக ஜீவனுடைய சாமர்த்தியம் சரீரம் முதலான பொருள் ள் எல்லையுள்ளதென்றால் அதனுடைய பயன்கள் எவ்விதம் அனந்தமாயிருக்கக் கூடும்? இரண்டாவதாக அனந்த ஆனந்தத்தை யனுபவிக்க ஜீவனுக்கு, கட்டுக்குட்படாத சக்தி, வழி சுறுசுறுப்பு இவைகள் இல்லாமையினால் அனந்த சுகத்தை யனுபவிக்க முடியாது. சாதனங்கள் அநித்தியமாயிருக்குங்கால் அதனுடையபலன்கள் ஒருபொழுதும் நித்தியமாகாது. மூன்றாவதாக முக்தியிதிலிருந்து எஜ்ஜீவனும் திரும்பி வராமல் போனால் உலகம் அவைகளற்றதாய்விடும்.

வினா:—எவ்வளவு ஜீவன் முக்தியை யடைகிறதோ அவ்வளவு புதியவைகளை உண்டுபண்ணி ஈசுவரன் உலகத்தில் வைக்கிறபடியினால் ஜீவன்களுடைய வறட்சி உண்டாகாதே?

விடை:—**முதலாவதாக** அவ்விதமிருக்குமேயானால் ஜீவன் அநித்தியமாகும். ஏனென்றால் எதற்கு உற்பத்தியுண்டோ அதற்கு அழிவு நிச்சயம். உங்களனுஷ்டானப்பிரகாரமே முக்தியை யடைந்து அழிவையுமடைந்தால் முக்தி அநித்தியமாகிறது. **இரண்டாவதாக** முக்தியை அனுபவிக்கும் இடத்தில் சத்தமும், கலகமும், கும்பலும், அதிகமாகும். ஏனெனில் வெளிப்போகும் ஜீவனங்களன்னியில் எல்லோரும் உள்ளேயேபோவார்கள். **மூன்றாவதாக** நாம் ஒன்றையே ருசிபார்த்துக்கொண்டிருந்தால் துக்கத்தினுடைய அனுபவமும் இராது. உதாரணமாக இனிப்பிலிருந்து கைப்பும் கைப்பிலிருந்து இனிப்பையும் அறியகூடியாது மாறுதலான ருசிகளையுடைய வஸ்துக்களைப் பார்ப்பதினாலேயே இரண்டினுடைய குணங்களும் தெரிகிறது. பலவிதரசங்களைச்சாப்பிடுகிறவன் அறிகிறமாதிரி ஒரே இனிமையே சாப்பிட்டுக் கொண்டிருக்கிறவன்

அறியான் நான்காவதாக முடிவையுடைய காரியங்களுக்கு அனந்த பலனைக் கொடுப்பதினால் ஈசுவரனுடைய நியாயம் கெட்டுப்போகும். சுமக்கக்கூடிய வரையிலே சுமையைவைப்பது புத்திமான்களுடையவேலை. ஒருமணங்கு தூக்கக்கூடிய தலையில் பத்து மணங்குவைக்கிறவன் நிந்தனைக்கு ஆளாகிறான். இப்படியே அல்ப்பஞ்ஞானத்தையும சாமர்த்தியத்தையுமுடைய ஜீவன் பேரில் அனந்தசுகங்களின் சுமையை வைப்பது ஈசுவரனுக்குச்சரியல்ல. ஐந்தாவதாக பரமேசுவரன் புது ஜீவன்களை உற்பத்திபண்ணிக்கொண்டேயிருந்தால், எதைக்கொண்டு உற்பத்தி பண்ணுகிறானோ அது முடிந்துபோய்விடும். ஏனென்றால் எவ்வளவு பணம்நிறைந்த பொக்கிஷமாயிருந்த போதிலும் வரவு அன்னியில் செலவுமாத்திரம் இருக்குமேயானால் அது குறைந்துகொண்டே போய்விடும் ஆகையினால் முக்தியடைவதும் அதிலிருந்து திரும்பிவருவதுமே சரியானவழி. சிலகால சிறைவாசத்தைவிட தீவாந்திர சிட்சையைபாரும் கோரமாட்டார்கள் முக்தியிலிருந்து திரும்பிவருவது இல்லாமல்போனால்தீவாந்திர சிட்சையேயாகும். வேலையில்லாமலிருப்பதே அதற்கும் இதற்கு முள்ள வித்தியாசமாகும். பிரம்மத்துடன் கலப்பதாக முக்தியை நினைப்பது சமுத்திரத்தில் முழுகுவது போலாகும்.

வினா:—பரமேசுவரன் நித்திய முக்தனும் பூர்ணமாயும் இருக்கிற மாதிரி அவன் கூட நித்திய முக்தனையும் சுகமுள்ளவனையுமிருந்தால் கெடுதல் ஒன்றும் உண்டாகாதே?

விடை:—பரமேசுவரன் குணம் கர்மம் ஸ்வபாவத்தினால் அநந்தமாயும் சாமார்த்தியமுள்ளவனுமிருக்கிறான். ஆகையினால் அவர் ஒருபொழுதும் பந்தம் அவித்தை துக்கங்களில் விழமாட்டார் அவன் முக்தியையடைந்தும் கூட அற்பஞ்ஞனும் கட்டுக்குட்பட்ட குணகர்ம சுவபாவமுள்ளவனுமிருக்கிறார். பரவேச்வரனுக்குச்சரியாய் அது ஒருபொழுதும் ஆகாது.

வினா:—இம்மாதிரியானால் முக்தியும் பிறப்பு, இறப்பிற்குச்சரியாகிறது. ஆகையினால் அதை அடைய கஷ்டப்படுவது வீணே?

விடை:—முக்தி பிறப்பு இறப்பிறகுச்சரியாகாது. 36,000 தடவைகளிலுள்ள, உற்பத்தி பிரளய வருஷங்களில் பூராவும் ஜீவன் முக்தியில் ஆனந்தத்தை யடைந்து துக்கமன்னியில் இருப்பது சிறியகாரியமில்லை. பசிக்குமென்றும் தெரிந்திருந்து இன்றைக்கு ஏன் புசித்து அருந்துகிறீர்கள்? பசி தாகம் பணஞ்சேர்த்தல் கீர்த்தி ஸ்திரி, சந்தானம் இவைகளுக்காகக் கஷ்டப்படுவது அவசியமானால் முக்திக்காக எதுதான் செய்யக்கூடாது. இறப்பது அவசியமாயிருக்க ஜீவனோபாயம் ஏன் செய்கிறீர்கள்? இம்மாதிரியே முக்தியிலிருந்து திரும்பி ஜன்மத்தை யடைந்தபோதிலும் அதற்காக வழிதேடுவது மிகவும் அவசியமானது.

வினா:—முக்தியை அடைய என்னென்ன வழிகளுண்டு?

விடை.—சிலவழிகள் முன்னாலேயே சொல்லப்பட்டிருக்கின்றன. முக்கியமானவழிகளிவைகளாகும்.

I. முக்தியை விரும்புகிறவர்கள் ஜீவன் முக்தர்களாய், அதாவது பொய் பேசுதல், பாபகர்மம் இவைகளுடைய பலன் பெருந்துக்கம் இவைகளை விட்டு சுசுரூபமாக இருக்கிறபயனைக் கொடுக்கிற மெய் உரைத்தல் தர்மத்தை ஆச்ரியத்தல், முதலானவைகளை அவசியமாகசெய்யட்டும். துக்கத்தைவிட்டுச் சுகத்தையடைய விரும்பினால் அதர்மத்தைவிட்டு தர்மத்தைக் அவசியம் செய்யவேண்டும். ஏனெனில் துக்கத்திற்குப் பாபகாரியங்களும் தர்ம காரியங்களுக்குச்சுகமும் மூலகாரணங்களாயிருக்கின்றன.

II. சத்புருஷர்களுடைய சங்கத்தின் சேர்க்கையினால் அதாவது சத்யம், அசத்யம், தர்மம், அதர்மம், செய்யக்கூடாது, செய்யக்கூடாதது இவைகளை அறியட்டும்.

III. பஞ்சகோசங்களினுடைய சாரத்தையும் ஞானத்தையும் அறியட்டும்.

(i) அன்னமயகோசம்:—எலும்பிலிருந்து தோல்வரையிலுள்ள தசை நரம்பு முதலானவைகள் பிருதிவி மயம்.

(ii) பிராணமயகோசம்:—

(1) பிராண, அதாவது வெளியிலிருந்து மூச்சை உள்ளே இழுத்துக்கொள்ளுவது.

(2) அபானம். அதாவது உள்ளேயிருந்துவெளியில் விடுவது.

(3) சமானம். தொப்புளிலிருந்து சரீரம் முழுவதும் ரசத்தை—அன்னரசம்—ஓடச்செய்வது.

(4) உதானம். கழுத்திலிருந்து அன்னபாணங்களை வயிற்றில் வாங்கிக்கொண்டு பலம் பராக்கிரமத்தைக்கொடுப்பது.

(5) வியானம்:— சரீரத்தில் அசைதல் முதலான எக்கர்மங்களைஞ் ஜீவன் செய்கிறதோ

(iii) மனோமயகோசம்:— மனதுடன்கூட அகங்காரம் எண்ணம், ஞாபகசக்தி, பஞ்சேந்திரியம் இவைகளடங்கி யுள்ளது.

(iv) விஞ்ஞானமயகோசம் :—புத்தி, சித்தம், கேழ்த்தல், சுவையறிதல், கண் காக்கு மூக்கு. இவ்வைந்து ஞானேந்திரிகள் அடங்கியுள்ளது. இவைகளைக்கொண்டே ஜீவன் ஞானம் முதலான காரியங்களை அடைகிறது.

(v) ஆனந்தமயகோசம் :—ஆசை, களித்தல், (அதிகமாயிருத்தல்—குறைவாயிருத்தல்) சந்தோஷித்தல் இவைகள் அடங்கியுள்ளது.

மேற்சொன்ன கோசங்களாகிற ஐந்தினாலேயே ஜீவன் பலவித கர்மம் உபாசனை, ஞானம் முதலானவைகளைச் செய்கிறது.

IV. அவஸ்தைகள் மூன்று விதமாகும்,

(1) ஜாக்கிரதம்—விழித்திருத்தல்

(2) சுவப்னம்—கனவு காணுதல்

(3) சுஷுப்தி—இளைப்பாறுதல்—சிறுதுயில்

V. சரீரங்கள் மூன்றுவிதமாகும்

(1) தூலசரீரம்:—காண்கிறது.

(2) சூக்ஷ்மசரீரம்:—ஐந்து பிராணன், ஐந்து ஞானேந்திரியம், ஐந்து சூக்ஷ்மபூதம், மனது, புத்தி, இப்பதினேழு தத்துவங்களினுடைய கூட்டம். பிறப்பு இறப்பிலுங்கூட அது ஜீவனுடனிருக்கிறது. அது இருவகைப்படும்.

(i) பௌதிகம்:—சூக்ஷ்ம பூதங்களுடைய அம்சங்களிலிருந்து செய்யப்பட்டது.

(ii) சுவபாவிகம்—ஜீவனுடைய இயற்கை குண ரூபங்கள்

இவ்விரண்டும் முக்திநிலையிலும் கூடவேயிருப்பதால் ஜீவன், அந்நிலையிலும் இன்பத்தை அனுபவிக்கிறான்,

(3) காரணசரீரம்:—பிரகிருதி அடங்கியுள்ளது, அது எங்கும் பரவியுள்ளது. ஆகவே சகலஜீவன்களிலும் சமமாகவே இருக்கிறது. இதைக்கொண்டே ஜீவன் சுஷுப்தி எனப்படும் அயர்ந்த நித்திரையை அடைகிறது.

(4) துரிய சரீரம்:—சமாதியினால் பரமாத்மாவினுடைய ஆனந்த ஸ்வரூபத்தில் அமிழ்ந்து ஜீவனிருக்கிறது. இச்சமாதி சம்ஸ்காரத்தினால் உண்டாகிற சுத்த சரீரத்தின் பராக்கிரமம், முக்திநிலையில்கூட உபயோகமாகிறது.

கோசம், அவஸ்தை, சரீரம் முதலான இவைகளெல்லாவற்றிலுமிருந்து ஜீவன் தனியாயிருக்கிறது. ஒருவன் இறந்தவுடன் சாதாரணமாய்ஜனங்கள், "ஜீவன் போய்விட்டது" என்று சொல்லுவதிலிருந்தே இவ்வுண்மை தெளிவாகிறது. ஜீவனே எல்லாவற்றையும் ஏவுகிறவன். சகலத்தையும் உடையவன். சாக்ஷிசெய்கிறவன். அனுபவிக்கிறவன். ஜீவன் கர்த்தா. அனுபவிக்கிறவன் இல்லையென்று சொல்லுகிறவர்களை அவிவேகி என்றும் அஞ்ஞானி யென்றும் தெரிந்துகொள். ஏனெனில் ஜீவனன்னியில் இவைகளெல்லாம் சடப்பொருள்களே. இவைகளுக்குச் சுக துக்கங்களை யனுபவிக்கவும் பாபபுண்ணியங்களைச் செய்யவும் ஒரு பொழுதும் முடியாது. இவைகளுடைய சேர்க்கையினாலே ஜீவன் பாப புண்ணியங்களைச்செய்து சுகதுக்கங்களை அனுபவிக்கிறது. இந்திரியங்கள் வெளி விஷயங்களுடனும், மனது இந்திரியங்களுடனும் ஆத்மா மனதுடனும் சேர்ந்தால் பிராணனை யுண்டு பண்ணி (நல்லது கெட்டது) காரியங்களிலிழுக்கிறது. அப்பொழுது அது பகிர்முகம் (வெளியிலிருந்து ஏவப்படுகிறது) ஆகிறது. அச்சமயத்தில் உள்ளிருந்து ஆனந்தம் உற்சாகம், பயமின்மையும், கெட்டகாரியமாயிருந்தால் பயம், சந்தேகம், வெட்கம் இவ்வுணர்ச்சிகள் உண்டாகின்றன. அந்தர்யாமியாயிருக்கிற பரமாத்மாவினுடைய சிக்ஷையே அது. எவன் இச்சிக்ஷைக்கு அனுகூலமாய் நடக்கிறானோ அவன் முக்திநிலையின் இன்பத்தை யடைகிறான். எவன் எதிரிடையாகச் செய்கிறானோ அவன் பந்த துக்கங்களை யனுபவிக்கிறான். இதுவே முதல் சாதனமாகும்.

(2) **வைராக்யம்** அதாவது விவேகத்தினல் சத்தியாசத்தியத்தை யறிந்து அதிலிருந்து சத்தியகாரியங்களைக் கடைப் பிடித்து அசத்தியகாரியங்களை விடுவது. பூமிமுதல் பரமேசுவரன் பரியந்தம் உள்ள பொருள்களின் குணம் கர்மம் சுவபாவம் இவைகளை யறிந்து அவைகளினுடைய ஏவல்களைக்காப்பாற்றி உபாசனையில் அவைகளிலிருந்து வேறுகப் போகாமல் சிருஷ்டிப் பிரகாரம் நடப்பதிற்கு விவேகம் என்று பெயர.

(3) **ஷடக்சம்பத்தி:**—அதாவது ஆறுவிதமான கர்மங்களைச்செய்வது.

(i) சம:— தன்னுடைய ஆத்மாவையும் அந்தக்கரணத்தையும் அதர்மகாரியத்திலிருந்து விலக்கி தர்மத்தில் எப்பொழுதும் செலுத்துவது.

(ii) தம:—ஐம்புலன்களையும் சரீரத்தையும் வியபசாரம் முதலிய தீயகாரியங்களிலிருந்து விலக்கி அடக்கப்பட்ட ஐம்புலன்களை உடையவனுய் நல்ல ஒழுக்கங்களைக்கைக்கொண்டிருப்பது.

(iii) உபாதி:—தீயோர்களிடமிருந்து தூரமாயிருப்பது.

(iv) திதிக்ஷா:—நிந்தை, துதி, லாபநஷ்டம் சுகதுக்கம் இவைகளால் பாதிக்கப்படாமல் முக்திக்குவேண்டியசாதகங்களைப்பழகுவது.

(v) சிரத்தா:—வேதம் முதலான சத்தியசாஸ்திரங்களுடைய ஞானத்தினல் பூரணமாயிருக்கும் கற்றுணர்ந்த பெரியோர்களுடைய சத்தியோபதேசத்தில் நம்பிக்கை வைப்பது.

(vi) சமாதானம்:— ஒரே சித்தத்துடனிருப்பது.

இவ்வாறையும் மூன்ருவது சாதனமென்று கூறுவார்கள்.

4. **முமுக்ஷுத்துவம்:**—பசியால் களைத்திருப்பவன், ஆகாரத்தையும் தண்ணீரையும் தவிர வேறென்றையும் எண்ணுமலிருப்பதுபோலவே முக்தி இன்பத்தைப்பெறுவதிலேயே கண்ணுங்கருத்துமாயிருப்பது. மற்ற எதிலேயும் கவனமில்லாதிருப்பது. ஆக முக்தியைப்பெற சாதனங்கள் நான்கு. இதற்குப் பிறகு அனுபந்தங்கள் (துணைகள்) நான்கிருக்கின்றன.

அனுபந்தங்கள் நான்காவன.

(i) அதிகாரி:—மோக்ஷத்தையடையத்தகுதியுடனிருப்பது.

(ii) சம்பந்தம்:—பிரம்மத்தையடையவேண்டிய ரூபமான முக்தியை அடைந்து வேதம் முதலான சாஸ்திரங்களைச்சரிவர அறிந்து அனுபவிப்பது.

(iii) விஷயீ:—சகலசாஸ்திரங்களும் கூறும் விஷயமாகிற பிரம்மத்தை அறிந்து அடையவேண்டியவைகளைக்கைக்கொள்வது.

(iv) பிரயோஜன:—இன்பதுன்பம் எல்லாவற்றிலிருந்தும் மீறி, பிரம்மானந்தத்தைப்பெற்று முக்தியின்பத்தையடைவது.

அநுபந்தத்திற்கப்புறம் சரவணசதுஷ்டயமு உண்டு. இதிலேயும் நான்கு வகையுண்டு. (i) சிரவண:—மனவமதியுடனும் கவனத்துடனும் மேதைக

ளுடைய உபதேசத்தைக்கேழ்த்தல். பிரம்மவித்தையைக்கேழ்ப்பதில் ஆழ்ந்த கவனத்துடனிருத்தல் வேண்டும். ஏனென்றால் சகலவித்தைகளிலும் சூக்ஷ்ம மானது இது. (ii) மனனம்:—கேட்ட பிறகு தனிவிடத்தில் உட்கார்ந்து கேட்டவைகளையோசிப்பது. சந்தேகமிருந்தால் மறுபடியும் கேட்பது. சபை யோர்களுக்கும், உபந்நியாசகருக்கும் சரி என்று தோன்றினால் சந்தேகங்களை அவ்வப்போதே கேட்டுத் தெரிந்து கொள்ளலாம். (iii) நிதித்தியாசனம்:— கேழ்க்கும் பொழுதும் யோசிக்கும்பொழுதும் சந்தேகமன்னியிலிருந்து பிறகு சமாதி நிலையை அடைந்து யோகத்தின் உதவியால் அவைகள் சரியாய் இருக் கிறதா இல்லையாவென்று அறிவது. (iv) சாக்ஷாத்காரம்:—எவ்விதம் பொருள்க ளுடைய குணம், கர்மம், சுவபாவம இருக்கிறதோ அதை அவ்விதமே அறி வது. கோபம், சுத்தக்குறைவு, ஆலசியம், மடமை முதலானவைகளை விளைக்கும் **தமோ** குணத்தையும், பொறாமை ஆர்வம், அகந்தை, துராசை, முதலானவைகளை விளைக்கும் **ரஜோ** குணத்தையும் முறையே களைந்துவிட்டு, மனவமைதி, சாந்தம், பரிசுத்தம், அறிவு, ஊக்கம், இவைகளைத்தரும் **சத்வ** குணத்தை அவன் (முக்தியை கோருகிறவன்) கைக்கொள்ளட்டும்.

சந்தோஷ முள்ளவர்களுடன் நேசபாவத்துடனும் துன்பங்களிலிருந்து பரிதவிக்கிறவர்களுடன் தயையுடனும், தீயோர்களுடன் நேசமன்னியிலும் விரோதமன்னியிலும் அவன் இருக்கட்டும். பிரதிதினமும்,குறைந்தது இரண்டு மணிநேரமாவது தியானஞ்செய்து அகத்திலுள்ள மனம் முதலான பொருள் களைப் பார்க்கட்டும். நமக்குச் சேதனஸ்வரூபமிருக்கிறது. இதனாலேயே ஞான ரூபம் மனதுக்குச் சாக்ஷியாயிருக்கிறது. ஏனெனில் எப்பொழுது மனது அமைதியில்லாதது ஆனந்தம், விஷயசுகங்களை அனுபவித்தல் இவைகளினால் பாதிக்கப்படுகின்றதோ அப்பொழுது உள்ளவாரேயறிகின்றது. இப்படியே இந்திரியம் பிராணன், முதலானவை ளினுடைய காரியங்களை அறிகிறோம். முன்கண்டவைகளை ஞாபகம் வைத்துக்கொள்ளுகிறோம். ஒரே சமயத்தில் பலபொருள்களின் அறிவை யடைகிறோம். இழுத்து மற்றவர்களைத்தரித்து வேறாகவுமிருக்கிறோம். தனியாயில்லாமல் போனால் சுதந்திர எஜமானன் இதைத்தூண்டுவோனும் தாங்குவோனுயு மிருக்கமுடியாது.

**अविद्याऽस्मितारागद्वेषाभिनिवेशाः पञ्च क्लेशाः॥** யோகசாஸ். 2. 3.

இவ்வுலகில் ஐந்து விதமான கிலேசங்கள் (துக்கம்.) (i) அவித்தை:— அத்தியாய வாரம்பத்திலேயே இதைக்குறித்துப் பேசிவிட்டோம். (ii) அஸ் மிதை:—புத்தியை ஆத்மாவிலிருந்து விலகினதாக நினைப்பது. (iii) ராகம்:— சுகத்தில் ஆசை. (iv) துவேஷம்:—துக்கத்தில் வெறுப்பு. (v) அபிநிவே சம்:—மரணத்திற்குப் பயம். ஜீவித்திருக்கும் மனிதர்கள் எல்லோரும் எக்கா லமும் பிழைத்தும் எப்பொழுதும் இறக்காமலுமிருக்கப் பிரியப்படுகிறார்கள். யோகாப்பியாச உதவியைக்கொண்டு இவ்வைந்து கிலேசங்களையும் ஒழித்துப் பிரம்மத்தை யடைந்து முக்தியின்பத்தை அனுபவிக்க வேண்டும்.

வின:—உலகத்திலிருந்து வேறுவிதமாக நீங்கள் முக்தியை நினைக்கிறீர்களே? சமணர்கள் சிவபுரத்தையடைந்து மோட்ச நிலையில் அமைதியுடனிருப்பதென்றும், கிருஸ்தவர்கள் விவாகம் சண்டை செய்துகொண்டு நான்காவது உப்பரிகையையடைந்து ஆடுவது பாடுவது நல்லதுணிகளைக் கட்டிக்கொள்ளுவது ஆனந்தத்தை அனுபவிப்பது என்றும், முகம்மதியர்கள் ஏழாவது உப்பரிகைக்குச் செல்வதென்றும் வாமார்க்கத்தைச்சேர்ந்தவர்கள் ஸ்ரீ புரம் சைவம், கைலாயர்கள் வைணவர்கள் வைகுண்டம், கோகுலத்தையும் கோசாவிகள் கோலோகத்தையும் யடைந்து நல்லபெண், அன்னபானம், வஸ்திரம் இடம் முதலானவைகளைப்பெற்று ஆனந்தத்திலிருப்பதையே முக்தியென்று முறையே எண்ணுகிறார்கள். (சாலோக்யம்) ஈசுவரனுடைய உலகத்தில் வசிப்பது (சானுஞ்யம்) தம்பிக்குச்சரியாய் ஈசுவரனுடன் இருப்பது (சாரூப்பியம்) உபாசனதேவதையினுடைய உருவத்தைத் தானும் அடைவது (சாமீப்பியம்) சேவகனுக்குச்சமானமாய் ஈசுவரசமீபத்தில் வசிப்பது. (சாயுஞ்யம்) ஈசுவரனுடன் ஒன்று சேருவது என்றுபுராணிகர்கள் (புராணம் முதலானவைகளை நம்புகிறவர்கள்) நம்புகிறார்கள். பிரம்மத்துடன் கலப்பதையே வேதாந்திகள் முக்தியென்று நம்புகிறாகள்.

விடை:—சமணர்கள், துருக்கர்கள், கிருஸ்துவர்கள் இவர்களுடையமுக்தி முதலான விஷயங்களைக்குறித்துப் பன்னிரண்டாவது, பதிமூன்றுவது, பதிநான்காவது அத்தியாயங்களில் விவரிப்போம். வாமமார்க்கத்தவர்கள் ஸ்ரீபுரத்தைச்சேர்ந்து லக்ஷிமிக்குச்சரியான பெண்களுடன்கூடி மாம்சம் கள்ளு சாராயங்களைச்சாப்பிட்டு காமபோகங்களை அனுபவிப்பது இவ்வுலகிலிருப்பதைவிட ஒரு அற்புதமாகாது. புருஷர்களை மகாதேவன் விஷ்ணு ஆகியவர்களுக்குச்சமானமாயும் ஸ்திரீகளை லக்ஷ்மி பார்வதிஆகியவர்களுக்குச் சரியானவர்களாயும் எண்ணி ஆனந்தத்தில் ஒருவருக்கொருவர் சம்யோகஞ்செய்கிறார்கள். அங்கேபிணிகள் பீடிக்காதென்றும் எப்பொழுதும் சிறுவயதுடனேயேயிருக்கலாமென்றும் சொல்லி தனவந்தர்களும் அரசர்களும் செய்வதைவிட மிகையாகாது. இம்மாதிரி சொல்லுவது பொய் வார்த்தைகளேயாகும். ஏனெனில் எங்குபோகமிருக்கிறதோ அங்கேரோகமும் ரோகமாயிருக்குமிடத்தில் கிழத்தனமும் கட்டாயமாக இருந்தே வருகின்றது. தன்முயற்சியன்னியிலேயே மிருகம் புழு பூச்சிகளுக்குக்கூட அவர்களுடைய ஜவித முக்தி உண்டு என்று புராணிகர்களிடம் சொல்லவேண்டும். உதாரணமாக அவர்களுடைய முதல் விதத்தை எடுத்துக்கொள்வோம். (1) எவ்வளவு உலகங்களிருக்கின்றதோ அவைகள் யாவும் ஈசுவரனுடையதே. இவைகளிலேயே சகலமும் வசிக்கின்றன. ஆகையினால் சாலோக்கியத்தை பிரயத்தினமன்னிலேயே அடையக்கூடும். (2) ஈசுவரன் எங்கும் பரவியிருக்கிறபடியினால் எல்லோரும் அவருக்குச் சமீபத்திலேயே இருக்கிறார்கள். ஆகையினால் சாமீப்ய சித்தி தானாகவே உண்டாகும். (3) ஜீவன் ஈசுவரனில் பலவிதமாய் சிறியதாயும் சேதனமாயுமிருக்கிறபடியினால் சொந்தபந்துக்களைப் போலாகிறான். இதனால் சாயுஜிய முக்தியும் பிரயத்தன மன்னிலேயே கிடைக்கின்றன. (4) சகல ஜீவனும் சர்வ

வியாபகமான பரமாத்மாவில் பரவியிருக்கிறபடியினுல் சேர்ந்திருக்கிறன. ஆகையினுல் சாயுஜ்ய முக்தியும் தானுகவே உண்டாகக்கூடியது. வேறு சாதாரண நாஸ்திகர்கள் இறப்பதினுல் தத்துவங்களுடன் தத்துவங்கள் சேருவதை முக்தியென்று நினைக்கிருர்கள். அதை நாய் கழுதை முதலானவைகள்கூட அடைகின்றன. இவைகள் முக்தியாகாது. இதெல்லாம் ஒரு விதமான பந்தங்களேயாகின்றன. சிவபுரி, மோக்ஷசிலை, நான்காவது உப்பரிகை, ஏழாவது உப்பரிகை, ஸ்ரீபுரம், கைலாசம், வைகுண்டம் கோலோகம் இவைகளை இவர்கள் நாட்டைச்சேர்ந்த ஒரு முக்கிய ஸ்தலமாகவே கருதுகிருர்கள். இவ்விடங்களிலிருந்து வந்துவிட்டால் முக்திபிரிந்து ஓடிவிடும். இருட்டறைகளிலடைப்பட்டு வெளியில் போகமுடியாமல் இருக்கும் கைதிகளைப்போல் கட்டுப்பட்டிருக்கிருர்கள். தங்குதடையன்னியில் நினைத்தவிடங்களுக்குச்செல்லகூடியதும் பயம் சந்தேகம் துக்கம் இவைகளன்னியிலிருப்பதுமே முக்தி. ஜன்மத்திற்கு உற்பத்தியென்றும் இறப்பிற்குப் பிரளயம் என்றும் சொல்லப்படுகின்றன.

வினு:—ஜன்மம் ஒன்ரு அல்லது அநேகமா?

விடை:—அநேகம்.

வினு:—அப்பொழுது பிறப்பு இறப்பினுடைய முன்பின் ஞானமும் ஏன் கிடையாது?

விடை:—ஜீவன் அல்பஞ்ஞன். திரிகாலதரிசியில்லை. இதனுலேயே ஞாபகம் இருக்கிறதில்லை. ஒரேசமயத்தில் இரண்டு தோற்றங்களினுடைய ஞானங்கிடையாது. முன் ஜன்மவார்த்தையையே விட்டு விடுவோம். இச் ஜன்மத்திலேயே கர்ப்பந்தரித்ததிலிருந்து ஐந்துவயதுவரையில் நடந்திருக்கும்படியான சம்பவங்களின் ஞாபகம் ஏன் இல்லை? விழித்திருக்குங்காலத்திலும் கனவிலும் பலகாரியங்களை நாம் நேரிட்டுச்செய்தும் ஆழ்ந்த தூக்கத்தில் அவைகளினுடைய ஞாபகம் ஏன் உண்டாகிறதில்லை? எவருவது உன் பதின்மூன்ருவது வயதின் பதினைந்தாவது மாசம் ஒன்பதாவது நாள் பத்தாவது மணியில் என்னசெய்துகொண்டிருந்தாய்? மனதில் என்ன யோசனை நிகழ்ந்தன? உன்முகம், கை, காது, கண் சரீரம் இவைகள் என்ன ஸ்திதியை அடைந்து எப்பக்கத்தைப் பார்த்துக்கொண்டிருந்தது எனக் கேட்டால் பதில் கூறமுடியுமா? முடியாது. இப்பிறப்பின் சம்பவங்களிலேயே இம்மாதிரியானுல் முன்பிறப்பின் காரியங்களினுடைய ஞாபகத்தைச்செய்வதென்பது கேவலம் குழந்தைப்பேச்சேயாகும். ஞாபகமில்லாமலிருப்பதினுலேயே ஜீவன் சுகமாயிருக்கிருன். இல்லையேல் பல ஜன்ம துக்கங்களை நினைத்து வியாகூலமடைந்து மரணமடைவான். பிறப்பின் முன்பின் சம்பவங்களை அறிய விரும்பினுல் கூட அதுமுடியாதகாரியமே யாகும். ஏனென்ருல் ஜீவனுடைய ஞாபகமும் ஸ்வரூபமும் அற்பமானதே. இவைகளை ஈசுவரன் ஒருவனே அறியத்தகுந்தவன், ஜீவனல்ல.

வினு:—பூர்வஞ்ஞானமில்லாவிடில் ஜீவனுக்குத் தன்னை மேம்படுத்திக் கொள்ள முடியாது. ஏனெனில் நம்முடைய தப்பு காரியங்களுக்கு ஈசுவரன்

இன்னென்ன தண்டனைகளை யளித்தார் என்று அறிந்தாலொழிய பாபகாரியங்களிலிருந்து தப்பமுடியாது?

விடை:—ஞானத்தை எவ்வளவு விதமாக நம்புகிறீர்கள்.

வினா:—பிரத்தியக்ஷம் முதலான பிரமாணங்களான எட்டுவிதங்கள்.

விடை:—பிறப்பு முதல் மரணம் வரையிலுள்ள பலவித அதிகாரம், பணம், வித்தை, புத்தி, ஏழ்மைத்தனம், புத்தியின்மை, மடமை முதலான சுகதுக்கங்களை உலகில் கண்டு முன்ஜென்மஞானத்தை ஏன் ஊகிக்கக்கூடாது. வைத்தியன் ஒருவனுக்கும் வேறே ஒருவனுக்கும் வியாதி காணுமேயானால் வைத்தியன் அதன் காரணங்களை அறிவான். சாதாரணமனிதனே வைத்தியப் பயிற்சியில்லாததினால் அவைகளை யறியமாட்டான். ஆனால் நோய்க்குக்காரணம் பத்தியப்பிழையான ஆகாரம் என்று சாதாரண மனிதன் கூறுகிறான். அம்மாதிரியே பூமியிலிருக்கும்படியானவியக்கத்தகுந்த சுகதுக்கங்களைக் கண்டு பூர்வஜன்மத்தை நீங்கள் ஏன் ஊகிக்கக்கூடாது. பூர்வஜன்மத்தை நீங்கள் நம்பாதுபோனால் பரமேச்வரன் பட்சபாத முள்ளவராகிறார். பாபமன்னியில் தரித்திரம் முதலான துக்கங்களையும் பூர்வஜன்மபுண்ணியமன்னியில் பணம் செல்வாக்கு புத்தி முதலானவைகளையும் ஏன் அளிக்கவேண்டும். முன் ஜன்ம பாபபுண்ணியங்களுக்கேற்றவாறு சுகதுக்கங்களை அளிப்பதினால் பரமேசுவரன் நியாயவானும் சரியானவனுமாகிறார்.

வினா:—ஒரே ஜன்மம் இருப்பதினாலேயே பரமேசுவரன் நியாயமுள்ளவனாகின்றான். ஏனெனில் எல்லாம் வல்ல அரசன் செய்வதெல்லாம் நியாயமே? பாருங்கள்! தோட்டக்காரன் இஷ்டப்பிரகாரம் தன்தோட்டத்தில் சின்னமரம் பெரியமரம் ஆகியவைகளைப் பயிர்செய்து சிலவைகளைக்களைந்து மற்றுஞ் சிலவற்றை வெட்டுகிறான். வேறுசிலதை வளர்த்து மற்றவைகளைக் காப்பாற்றுகிறான். தன் சொந்தவஸ்துவில் ஒருவன் தன்னிஷ்டப் பிரகாரம்செய்து கொள்ளக்கூடும். அவருக்கு மேல் நியாயஞ் சொல்லுகிறவன் எவனுங்கிடையாது. அவரைத்தண்டிக்கிறவரும்யாருமில்லை. ஈசுவரன்யாருக்கும் பயப்படவும் வேண்டியதில்லை.

விடை:—பரமாத்மா எப்பொழுதும் நியாயத்தையேகோரி அதையே செய்கிறார். அநியாயத்தை ஒரு பொழுதும் செய்கிறதில்லை. ஆகையினாலேயே அவர் பூஜிக்கத்தகுந்தவர். தலைவர் நியாயவிரோதமாய் நடந்தால் அவர் ஈசுவரனாகமாட்டார். தோட்டக்காரன் யோசனையன்னியில் வழியிலாவது அல்லது வேறு யிடங்களிலாவது செடிகளை வைத்து, வெட்டவேண்டாததை வெட்டி வேண்டியதை விருத்திசெய்யாமல் வேண்டாததை விருத்திசெய்வானேயானால் தூஷிக்கத்தகுந்தவனாகிறான். இம்மாதிரி காரணமன்னியில் காரியங்களைச்செய்தால் பரமேசுவரன் தூஷணைக்குள்ளாகிறார். நியாயத்துடன் கூடின காரியங்களைச் செய்வதே பரமேசுவரனுக்கு முக்கியம். ஏனெனில் அவர் இயற்கையாகவே பரிசுத்தமானவர். காரியத்தைச் செய்கிறவர். பைத்தியக்காரனைப்போல் காரியஞ்செய்வாரேயானால் பூமியிலுள்ள நல்லநியா

யாதிபதியைவிட குறைந்து மதிக்கப்படாதவருகிருர். கெட்டகாரியஞ் செய்தவனுக்குத் தண்டனையை யளித்து யோக்கியதையற்றவனுக்கு நல்லதைச்செய்கிறவன் இவ்வுலகில் நிந்தனைக்காளாகி மரியாதை இழக்க வில்லையா? அநியாயம் ஒன்றும் செய்யாததினுலேயே அவர் யாருக்கும் பயப்படுகிறதில்லை.

வினு:—முதலிலிருந்தே எவ்வளவு கொடுக்க எண்ணினுரோ அவ்வளவை பரமாத்மா அளித்து எவ்வளவு காரியஞ்செய்யவேண்டுமோ அவ்வளவைச் செய்கிருர்.

விடை:—அவருடைய நோக்கங்களெல்லாம் ஜீவனுடைய கர்மாநுசாரப் பிரகாரம் இருக்கின்றன. அதுவேறு விதமாயிருந்தால் அவர் தப்பு செய்கிறவருயும் அநியாய வாதியாயுமாகிருர்.

வினு:—சிறியது. பெரியது. ஒரே விதமான இரண்டு சுகதுக்கங்களுக்காளாகின்றன. பெரியோர்களுக்குப் பெரும் விசாரமும் சிறியோர்களுக்குக் கொஞ்சகவலையுமேயாம். ஒரு சாவகாரிக்கு நியாயஸ்தலத்தில் ஒரு லக்ஷம் ரூபாயிற்குக் கேஸ் இருப்பதாக எடுத்துக்கொள்ளுவோம். அவன் வீட்டிலிருந்து வெயிற்காலத்தில் பல்லக்கிலுட்கார்ந்து கச்சேரிக்குப் போகின்ருன். கடைத்தெருவின் வழியாய் போகும் பொழுது பார்த்து ஞானமற்ற ஜனங்கள் சொல்லுவார்கள் "புண்ய பாப பலனைப் பாருங்கள். ஒருவன் ஆனந்தமாய் பல்லக்கில் உட்கார்ந்துகொண்டிருக்கிருன். மற்றவர்களோ காலுக்குச்செருப்பும் வெப்பத்தைத் தடுக்கத்தலைக்குக் குடையும் இல்லாமல் வெய்யிலில் பாதையில் பல்லக்கைத் தூக்கிக்கொண்டு போகிருர்கள்" ஆனல் புத்திமான்கள் சச்சேரி சமீபிக்கவே சாவகாரிக்குச் சோகமும் சந்தேகமும் அதிகரித்து தூக்குகிறவர்களுக்கு ஆனந்தம் அதிகரிக்கும் என்பதை அதில் அறிவார்கள். கச்சேரியை அடைந்தவுடன் எஜமானன் இங்குமங்கும் போகயாசனை செய்து வக்கீலிடம் செல்லுவதும் சிரஸ்ததாரைக்கண்டு தன் கக்ஷி ஜயிக்குமா, ஜயிக்காதா என்பதுமாகக்கேட்டு மனக்கவலையிலிருக்கிருர். பல்லக்கைத் தூக்கிவந்தவர்களோ சுருட்டுபிடித்துக்கொண்டு ஒருவருக்கொருவர் சல்லாபித்துக்கொண்டும் பிரசன்னமடைந்து ஆனந்தத்தில் தூங்குகிருர்கள். கேஸ் ஜயித்தால் கொஞ்சம் சந்தோஷத்தை அடைகிருர். ஜயிக்காவிடில் எஜமானனவர் துக்கக்கடலில் முழுகுகின்ருர். பல்லக்குத் தூக்குகிறவர்களோ இருந்தவண்ணமே இருக்கிருர்கள். இதேமாதிரி இன்னுமொன்று எடுத்துக்கொள்ளுவோம். மிருதுவாயும் அழகாயும் உள்ள படுக்கையில் படுத்துக்கொண்டும் அரசனுக்குச் சீக்கிரம் தூக்கம் பிடிக்கிறதில்லை, ஆனல் கற்களிலேயும் மண்களிலேயும கடினமான தரைகளிலேயும் படுத்துக்கொள்ளும் வேலையாட்களுக்கு உடனே தூக்கம் வந்துவிடுகிறது. எங்கும் இவ்விதமே என்று தெரிந்துக்கொள்ளுங்கள்.

விடை:—இது அஞ்ஞானிகளினுடைய வாதமாகும். பல்லக்குத்தூக்குகிறவனைச் சாவகாரியாகவும் சாவகாரியைப் பல்லக்குத்தூக்கியாகவும் திரும்பச் சொன்னல் சாவகாரியால் தூக்குகிறவனுக முடியாது. அதற்குச் சம்மதமும் படான். தூக்குகிறவனே சாவகாரி ஆவான். இஷ்டமும் படுவான். சுகதுக்கங்

கள் சரியாயிருக்குமேயானால் தன் ஸ்திதியை விட்டு நல்லதிற்கும் கெடுதலுக்கும் இருவரும் மாற்றிக்கொள்ளவிரும்பமாட்டார்கள். வித்வான், புண்ணியாத்மா, சீமான், அரசன் இவர்களினுடைய ராணியின் கர்ப்பத்தில் ஒரு ஜீவன் கூடுகிறது. மற்றொன்றோ சாதாரணமான பில் அறுக்கிறவனுடைய மனைவி கர்ப்பத்தில் கூடுகின்றது. கர்ப்பத்திலிருந்தே ஒன்றுக்குச் சுகமும் மற்றொன்றுக்குத் துக்கமும் உண்டாகின்றன. ஒன்றுக்குப் பிறப்பின்பொழுது வாசனையுடன் கலந்த நல்ல ஜலத்தில் ஸ்நானம் செய்வித்து தொப்பூழ் நாடிகளை யுக்தியுடன் அறுக்கப்படுகின்றன. அதற்குத்தாகமுண்டாகும் பொழுதெல்லாம் கற்கண்டுகளுடன் கலந்தபால் வேண்டிய வரையில் அளிக்கப்படுகின்றன. அதைச் சந்தோஷமாய் வைத்துக்கொள்ள தாதி, சவாரிசெய்ய வண்டி, நல்ல இடங்களுக்கு அழைத்துச்செல்ல வேலைக்காரன், முதலானவர்கள் அமைக்கப்படுகிறார்கள். அதுவும் ஆனந்தத்துடனிருக்கிறது. மற்றொன்றோ காட்டில் பிறக்கிறது. அதற்குக் குளிக்கத்தண்ணீருங் கிடையாது. பால் வேண்டும் என்று கேழ்க்கும்பொழுது அதற்குப் பதிலாகத் தாடையில் அடிக்கப்பட்டு அழுகிறது. இம்மாதிரி உபத்திரவங்களை யடைகிறது. ஏனென்று வினவுவோருங் கிடையாது. இம்மாதிரி ஜீவன்களினுடைய புண்ணிய பாபங்களன்னியில் சுகதுக்கங்களைக் கொடுப்பதினால் பரமேசுவரன் மேல் குற்றம் ஏற்படும். (2) கர்மங்களொன்றுஞ் செய்யாமல் சுகதுக்கங்கள் விளையுமேயானால் நரகம், சுவர்க்கம், இவைகள் வேண்டியதே இல்லை. இச்சமயத்தில் கர்மங்களன்னியில் பரமேசுவரன் சுகதுக்கங்களை யளிக்கின்றபடியினால் இறந்த பிறகும் அவரிஷ்டப்பிரகாரமே வேண்டியவர்களைச் சுவர்க்கத்திற்கும் நரகத்திற்கும் அனுப்பிவிக்கலாம். சகல ஜீவன்களும் அதர்மத்துடன் கூடினவர்களாய் தர்மத்தை ஏன் செய்வார்கள். ஏனெனில் தர்மத்தினுடைய பலன் கிடைப்பது சந்தேகமாய்விடும். அது பரமேச்வரனுடைய வசத்திலிருக்கிறது. அவருடைய இஷ்டப்பிரகாரம் செய்வார். பாபகர்மங்களினுடைய பயமன்னியில் உலகில் பாபிகளுடைய விருத்தியும் தர்மஞ்செய்கிறவர்களுடைய குறைவும் ஏற்பட்டுவிடும். ஆகையினால் முன்ஜன்ம புண்ணிய பாபப் பிரகாரம் இஜ்ஜன்மத்திலும் இஜ்ஜன்மம் முன் ஜன்மம் இவைகளின் பிரகாரம் வரும் ஜன்மத்திலும் அனுபவிக்கிறான்.

வினா:—மானிட சரீரத்திலும் விலங்குகளினுடைய சரீரத்திலுமுள்ள ஜீவன்கள் ஒரே இனத்தைச் சேர்ந்ததா அல்லது வெவ்வேறானதா?

விடை:—ஜீவன் ஒன்றுதான். ஆனால் பாப புண்ணியங்களினுடைய சேர்க்கையினால் கெடுதலாயும் நல்லதாயுமாகின்றன.

வினா:—மானிட ஜீவன் விலங்குகளிலும் விலங்குகளினுடைய ஜீவன் மானிடசரீரத்திலும் ஸ்திரீகளுடையது புருஷர்களுடையதிலும் புருஷனுடையது ஸ்த்ரீகளிடத்திலும் போய் வருகிறதுண்டா?

விடை:—உண்டு. போய் வந்து கொண்டிருக்கிறது. ஏனெனில் பாபம் அதிகரித்தால் புண்ணியம் குறையும். அப்பொழுது மானிட ஜீவன் விலங்கு

முதலான குறைவான சரீரத்தையும் தர்மம் அதிகரித்து அதர்மம் குறையும் பொழுது தேவ அதாவது வித்வான்களுடைய சரீரத்தையும் அடைகின்றன. புண்ணியம் பாபம் இரண்டும் சரியாகுங்கால் சாதாரண மனிதப் பிறப்பு கிடைக்கின்றன. இதிலேயும் பாபம் புண்ணியம் சிரேஷ்டமானது, சரியானது, குறைவானது என்பது போலவே மனிதன் முதலானவர்களும் மூன்று விதமான சரீரசாமக்கிரியைகளுள்ளவர்களாகிறார்கள். அதிகபாபத்தினுடைய பலனாக விலங்குகளினுடைய சரீரத்தலனுபவிக்கிறது. மறுபடியும் பாபம் புண்ணியம் சரியாக விருப்பதினாலே மனித சரீரத்தில் வந்து புண்ணியத்தினுடைய பலத்தை யனுபவித்துவிட்டு பிறகு கடுத்தன்மையான மனித சரீரத்தில் வருகிறது. சரீரத்தை விட்டு வெளியே செல்வதற்கு மிருத்யு வென்றும் சரீரத்துடன் கூட சேருவதற்கு ஜன்மென்றும் பெயர். சரீரத்தை விட்டு *எமாலயம் அதாவது ஆகாசத்திலுள்ள வாயுவில் வசிக்கின்றது. "யமேன வாயுனா" என்று வேதங்கள் கூறுகின்றது போல வாயுவிற்கு எமன் என்ற பெயருண்டு. கருடபுராணத்திலுள்ள எமன் அல்ல.

பிறகு பரமேச்வரன் அச்சீவனுடைய பாபபுண்ணியப் பிரகாரம் பிறப்பை யளிக்கிறார். அது வாயு, அன்னம், ஜலம், அல்லது சரீரத்துவாரம் வழியாய் ஈச்வரனுடைய பிரேரணையினால் செல்லுகின்றது. சென்று கிரமமாய் வீரியத்துடன் கலந்து கர்ப்பத்தில் சரீரத்தை எடுத்து வெளியில் வருகிறது. ஸ்திரீ சரீரத்தையடைய தகுதியானால் அப்பொழுது ஸ்திரீயாகவும் புருஷசரீரத்தையடையத் தகுதியானால் புருஷசரீரத்தையும் அடைகின்றன. கர்ப்பசமயத்தில் ஸ்திரீ புருஷர்களினுடைய சரீர சம்பந்தகாலத்தில் ரஜவீரியம் சரியாயிருந்தால் பேடியாகப்பிறக்கிறது. இம்மாதிரி பலவாறாக ஜனன மரணத்தை ஜீவன் அடைகிறது. உத்தம கர்மோபாசனையின் ஞான மன்னியில் முக்தியை அடைகிறதில்லை. ஏனெனில் உத்தம கர்மங்களைச் செய்வதினால் மனிதர்களுக்கும் உத்தம ஜன்மம் கிடைக்கிறது. மகாகல்ப பரியந்தம் ஜனன மரண துக்கமன்னியில் ஆனந்தத்திலிருக்கிறது.

வினா :—முக்தி ஒரே பிறப்பிலுண்டாகின்றதா அல்லது அநேக ஜன்மங்களிலா ?

விடை :— அநேக ஜன்மங்களில். ஏனெனில்

**भिद्यन्ते हृदयग्रन्थिश्छिद्यन्ते सर्वसंशयाः ।**
**क्षीयन्ते चास्य कर्माणि तस्मिन् दृष्टे पराऽवरे ॥** முண்டகோ. 2. 8.

இச்சீவனின் மனதினுடைய அவித்தை குன்றி அஞ்ஞானம் அறுபட்டு போகும் பொழுது சகல சந்தேகங்களும் மறைகின்றன. கர்மங்களும் நாசமடைகின்றன. அப்பொழுது ஆத்மாவின் உள்ளேயும் வெளியிலேயும் பரமாத்மா பரவுகிறார். அதிலேயே ஜீவன் வசிக்கின்றது.

வினா :—முக்தியில் பரமேச்வரனுடன் ஜீவன் கலக்குகின்றதா அல்லது வேறாகவே யிருக்கின்றதா ?

* இதைக்குறித்து பதினொன்றாவது அத்தியாயத்தில் விளக்கிக் கூறுவோம்.

விடை :—தனியாகவே இருக்கின்றது. ஏனெனில் கலந்து ஒன்று சேர்ந்தால் முக்தியின் சுகத்தை யார் அனுபவிப்பார்கள்? முக்திக்கு வேண்டிய சாதனங்களெல்லாம் பிரயோசன மற்றதாய் விடும், அது முக்தியாகாது. ஜீவனுடைய பிரளயமேயாகும். பரமேச்வரனுடைய ஆக்ஞையைக் காப்பாற்றி உத்தம கர்மம், சற்சங்கம், யோகாப்பியாசம் முதலான முன் சொன்ன வழிகளைக் கைக்கொள்ளும் பொழுதே முக்தியை அடைகிறது.

**सत्यं ज्ञानमनन्तं ब्रह्म यो वेद निहितं गुहायां परमे व्योमन् ।**
**सौऽश्नुते सर्वान् कामान् सह ब्रह्मणा विपश्चितेति॥** தைத்ரே. ஆனந்த.

ஜீவாத்மா தன்னுடை புத்தி ஆத்மா இவைகளிலிருக்கும் சத்தியம், ஞானம், அனந்தஸ்வரூபம் இவைகளுடன் கூடின பரமாத்வை அறிகிறபொழுதே வியாபக ரூபமான பிரம்மத்தில் நின்று அந்த "விபஸ்சித்" அனந்த வித்தையுடன்கூடின பிரம்மாவுடன் சகலகாரியங்களையும் அடைகிறான். இதையே முக்தி என்கிறார்கள்

வினா :—ஆத்மாவிற்கு உலகானந்தத்தை அனுபவிக்க எங்ஙனம் தேகம் தேவையோ அங்ஙனமே முக்தி இன்பத்தை நுகர தேகத்தின் துணை வேண்டுமல்லவா?

விடை :—இதற்குச் சமாதானம் முன்னரே கூறியுள்ளோம். என்றாலும் மீண்டும் சந்தேக நிவர்த்தி செய்வோம். உலக இன்பத்தை ஆத்மா தேகமூலம் நுகருகிறது உண்மையே. முக்தி யின்பத்தை ஆத்மா கடவுளின் மூலம் நுகருகிறது. ஜீவன் முக்தி பெற்ற ஆத்மா எங்கும் பரவியிருக்கும் பரமாத்மாவுடன் அலைகிறது. எனவே முக்தி பெற்ற ஆத்மா இயற்கையின் தர்மத்தில் அதாவது கடவுளின் தர்மத்தில் கலந்து எங்கும் இறைவனைக் காண்கிறது. தோற்றத்திலுள்ள உலகத்தையும், தோற்றத்தை விட்டு மறைந்த உலகத்தையும், முக்தி வயப்பட்ட பிற ஆத்மாக்களையும் சுருங்கச் சொல்லின் சிருஷ்டியின் தத்துவத்தையும் கண்டு களிப்பை எய்துகிறது. இதுதான் சுவர்க்கநிலை. உலகத்தில் உழன்று வாழ்க்கையின் இன்பதுன்பங்களை நுகர்வதே நரகம். சுவர்க்கம் என்பதின் பொருள் ஆனந்தமென்பதே. ஒருவன் உலக வாழ்க்கையினின்று மீளாது, கடவுளது தர்மத்தைப் பெறாது, சுகத்துக்கம் என்கிற பாப நிலைகளிலிருந்து விலக முடியாது. பாபத்தைக் கடந்தோனே இன்பநிலை பெறுகிறான். அதாவது முக்தி பெறுகிறான்.

**छिन्ने मूले वृक्षो नश्यति तथा पापे क्षीणे दुःखं नश्यति ॥**

வேரை வெட்டுவதினால் மரம் நாசமடைவதுபோல் பாபங்களை விடுவதினால் துக்கங்கள் நாசமடைகின்றன. மனுஸ்மிருதியில் பாபபுண்ணியத்தின் பலனைப்பலவாறாக சொல்லப்பட்டிருக்கின்றன.

**मानसं मनसैवायमुपभुङ्क्ते शुभाऽशुभम् ।**
**वाचा वाचा कृतं कर्म कायेनैव च कायिकम् ॥** மனு. 12. 8

உத்தமம், மத்திமம் அதமம் இச்சுபாவங்களை மனிதன் அறிந்து கொண்டு உத்தம சுபாவத்தைக் கைப்பற்றி மத்திமமானதையும் அதமமானது, அதாவது தள்ளப்பட்டதையும் விடட்டும். ஜீவன் மனது, வாக்கு, சரீரம் இவைகளினால் செய்யப்பட்ட சுகதுக்கங்களின் பலனை முறையே இவைகள் அனுபவிக்கிறதென்று அறியட்டும்.

शरीरजैः कर्मदोषैर्याति स्थावरतां नरः ।
वाचिकैः पक्षिमृगतां मानसैरन्त्यजातिताम् ॥ மனு. 12. 9.

மனிதசரீரத்தினால் செய்யப்படும் திருடுதல் பரஸ்திரீயை அடைதல் சிரேஷ்டமானவர்களைக் கொல்லுதல், முதலான துஷ்டகர்மங்களினால் மரம் செடிமுதலான ஸ்தாவரவர்க்கங்களின் பிறப்பையும், வாக்கினால் செய்யப்படும் பாபகர்மங்களினால் பக்ஷிகள் விலங்குகள் முதலானவைகளின் பிறப்பையும், மனதினால் செய்யப்படும், துஷ்டகர்மங்களினால் சண்டாளன் முதலியவர்களுடைய சரீரத்தையுமடைகிறான்.

यो यदैषां गुणो देहे साकल्येनातिरिच्यते ।
स तदा तद्गुणप्रायं तं करोति शरीरिणम् ॥ மனு. 12. 25.

எக்குணங்கள் இச்சீவன்களுடைய சரீரத்தில் அதிகமாகக்காணப்படுகிறதோ அக்குணங்கள் ஜீவனிலேயும் சரியாய் காணப்படுகின்றன.

सत्त्वं ज्ञानं तमोऽज्ञानं रागद्वेषौ रजः स्मृतम् ।
एतद् व्याप्तिमदेतेषां सर्वभूताश्रितं वपुः ॥ மனு. 12. 26.

ஆத்மாவில் ஞானமிருக்கும்பொழுது சத்வகுணம், அஞ்ஞானம் இருக்கும் பொழுது தமோகுணம் ராகதுவேஷங்களிருக்கும் பொழுது ரஜோகுணம் ஆகியமூன்று குணங்களையும் அறியவேண்டியது. இம்மூன்று பிரகிருதி குணங்களும் உலகிலிருக்கிற சகல பொருள்களிலும் பரவியிருக்கின்றன.

तत्र यत्प्रीतिसंयुक्तं किञ्चिदात्मनि लक्षयेत् ।
प्रशान्तमिव शुद्धाभं सत्त्वं तदुपधारयेत् ॥ மனு. 12. 27.

ஆத்மா மகிழ்ச்சியுள்ளதாயும் மனது நிலையுள்ளதாயும் சந்துஷ்டியாயும் சுத்தமாயுமிருக்கும் பொழுது சத்வகுணம் மேலிட்டும் ரஜோகுணம் தமோகுணம் கீழ்ப்படிந்தும் இருக்கிறதென்று அறியவேண்டியது.

यत्तु दुःखसमायुक्तमप्रीतिकरमात्मनः ।
तद्रजोऽप्रतिपं विद्यात्सततं हारि देहिनाम् ॥ மனு. 12. 28.

ஆத்மாவும் மனதும் துக்கத்துடன் சந்தோஷமற்று விஷயசுகங்களில் ஈடுபட்டு இங்குமங்கும் அலைந்து கொண்டிருக்கும்பொழுது ரஜோகுணம் மேலிட்டு தமோகுணம் சத்வகுணம் பின்னுக்குத் தள்ளப்பட்டிருப்பதாக அறியவும்

यत्तु स्यान्मोहसंयुक्तमव्यक्तं विषयात्मकम् ।
अप्रतर्क्यमविज्ञेयं तमस्तदुपधारयेत् ॥ மனு. 12. 29

மோகம் அதாவது உலகப்பொருள்களில் ஆத்மாவும் மனதும் ஈடுப்பட்டு விவேகமன்னியில் விஷயசுகங்களில் அமிழ்ந்தும், தர்க்கம் குதர்க்கம் இவைகளை அறியவும் முடியாமலிருக்கும்பொழுது தமோகுணம் பிரதானமாயும் சத்வகுணம் ரஜோகுணம் பின்னுலேயுமிருக்கிறது.

त्रयाणामपि चैतेषां गुणानां यः फलोदयः ।
अग्र्यो मध्यो जघन्यश्च तं प्रवक्ष्याम्यशेषतः ॥ மனு. 12. 30.

இப்பொழுது இம்மூன்றுகுணங்களின் உத்தம, மத்திம, அதம பலனை விவரமாகச் சொல்வோம்.

वेदाभ्यासस्तपो ज्ञानं शौचमिन्द्रियनिग्रहः ।
धर्मक्रियात्मचिन्ता च सात्त्विकं गुणलक्षणम् ॥ மனு. 12. 31.

வேதாப்பியாசம், தர்மானுஷ்டானம், ஞானவிருத்தி, பரிசுத்தத்தில் ஆசை, இந்திரியங்களின் அடக்கம், தர்மக்கிரியை, ஆத்மசிந்தனை ஆகியவைகளெல்லாம் சத்வகுணத்தினுடைய இலக்ஷணங்களாகும்.

आरम्भरुचिताऽधैर्यमसत्कार्यपरिग्रहः ।
विषयोपसेवा चाजस्रं राजसं गुणलक्षणम् ॥ மனு. 12. 32.

ரஜோகுணம் தோன்றி சத்வதமோகுணங்கள் மறைந்திருக்கும்பொழுது ஆரம்பத்தில் ஆசை தைரியத்தைக் கைவிடுதல் தப்புகாரியங்களை ஒத்துக்கொள்ளுதல் எப்பொழுதும் விஷயசுகங்களை அநுபவிப்பதில் ஆசை,இவைகளெல்லாம் மனிதனிடத்தில் வெளியாகின்றன.

लोभः स्वप्नो धृतिः क्रौर्यं नास्तिक्यं भिन्नवृत्तिता ।
याचिष्णुता प्रमादश्च तामसं गुणलक्षणम् ॥ மனு. 12. 33.
यत्कर्म कृत्वा कुर्वंश्च करिष्यंश्चैव लज्जति ।
तज्ज्ञेयं विदुषा सर्वं तामसं गुणलक्षणम् ॥ மனு. 12. 35.

தமோகுணம் தோன்றி இதர இரண்டுகுணங்களும் மறைந்திருக்கும்பொழுது அதிகப்பேராசை அதாவது சகலபாபத்தின் மூலகாரணம், அதிகச்சோம்பு, துக்கம், தைரியநாசம், குரூரத்தன்மை, நாஸ்திகவாதம், அதாவது வேதங்களிலும் ஈசுவரனிடத்திலும் நம்பிக்கையற்றிருத்தல், பிளவுப்பட்ட அந்தக்கரணங்களில் ஈடுபடுதல், கவனக்குறைவு உணர்ச்சியினுல் ஏற்படும் விஷயசுகங்களுக்கு இடங்கொடுத்தல், இவைகளெல்லாம் காணப்படுகின்றன. இன்னும் தன்னுடைய ஆத்மாசெய்துகொண்டிருந்தவும் செய்கிறதற்கும் இச்சையுள்ள காரியங்களில் வெட்கம் சந்தேகம் பயமடைதல் இதெல்லாம் தமோகுணத்தினுடைய இலக்ஷணங்களாகும்.

येनास्मिन्कर्मणा लोके ख्यातिमिच्छति पुष्कलाम् ।
न च शोचत्यसम्पत्तौ तद्विज्ञेयं तु राजसम् ॥ மனு. 12. 36.

எக்காரியங்களிலிருந்து இவ்வுலகில் ஜீவாத்மா கீர்த்தியைக் கோருகிறதோ ஏழ்மைத்தனத்தில் கூட வம்சாவளிக்காரன், புலவன், முதலானவர்களுக்குத்

தானங்கொடுப்பதை நிறுத்துகிறதில்லையோ, அப்பொழுது ரஜோகுணம் அதிகரித்து இருப்பதாக அறியவும்.

यत्सर्वेणेच्छति ज्ञातुं यन्न लज्जति चाचरन् ।
येन तुष्यति चात्मास्य तत्सत्त्वगुणलक्षणम् ॥ மனு. 12. 37.

மனிதனுடைய யாவற்றையும் அறிய இஷ்டப்படுகிறதோ, குணங்களைக் கைப்பற்றி நல்லகாரியங்களில் வெட்கமடைகிறதில்லையோ, எக்காரியங்களிலிருந்து ஆத்மா சந்தோஷத்தை யடையுமோ அதாவது தர்மத்தின் ஆசரணையிலேயே ஈடுபட்டு இருக்கிறதோ அப்பொழுது சத்வகுணம் முன்னிருப்பதாக அறியுங்கள்.

तमसो लक्षणं कामो रजसस्त्वर्थ उच्यते ।
सत्त्वस्य लक्षणं धर्मः श्रैष्ठ्यमेषां यथोत्तरम् ॥ மனு. 12. 38.

தமோகுணத்திற்குக் காமமும், ரஜோகுணத்திற்குப் பணஞ்சேர்க்க வாசையும், சத்வகுணத்திற்குத் தர்மசேவையுமே இலக்ஷணங்களாகும். தமோகுணத்தைவிட ரஜோகுணமும் ரஜோகுணத்தைவிட சத்வகுணமும் சிரேஷ்டமானது.

எக்குணங்களினால் எக்கதியை ஜீவன் அடைகிறதென்று மேலே சொல்லுவோம்.

देवत्वं सात्त्विका यान्ति मनुष्यत्वञ्च राजसाः ।
तिर्यक्त्वं तामसा नित्यमित्येषा त्रिविधा गतिः ॥ மனு. 12. 40.

சாத்விகமனிதன் வித்வானாகவும். ரஜோகுணத்தை யுடையவன் சாமானிய மனிதனாகவும் தமோகுணத்தை யுடையவன் தாழ்ந்தவனாகவும் முறையே ஆகிறான்.

स्थावराः कृमिकीटाश्च मत्स्याः सर्पाश्च कच्छपाः ।
पशवश्च मृगाश्चैव जघन्या तामसी गतिः ॥ மனு. 12. 42.

அதிகமாகத் தமோகுணத்தை யுடையவர்கள் மரம், பூச்சி, புழு மீன், பாம்பு, ஆமை, ஆடுமாடுகள், மிருகம், முதலானவைகளினுடையகதியை அடைகிறார்கள்.

हस्तिनश्च तुरङ्गाश्च शूद्रा म्लेच्छाश्च गर्हिताः ।
सिंहा व्याघ्रा वराहाश्च मध्यमा तामसी गतिः ॥ மனு. 12. 43.

மத்தியம தமோகுணத்தை யுடையவர்கள் யானை, குதிரை, சூத்திரன் மிலேச்சன், நிந்தனைக்குட்பட்ட கர்மங்களைச் செய்கிறவன். சிங்கம், புலி, பன்றி முதலானவைகளாகப் பிறக்கிறார்கள்.

चारणाश्च सुपर्णाश्च पुरुषाश्चैव दाम्भिकाः ।
रक्षांसि च पिशाचाश्च तामसीषूत्तमा गतिः ॥ மனு. 12. 44

உத்தம தமோகுணத்தை யுடையவர்கள் கவிஞர், (ஸ்துதிக்காகப்பாக்கள் செய்கிறவர்கள்) அழகான பக்ஷி, தன்சுகத்தைநாடித் தன்னைத்தானே தூற்றிக் கொள்ளுகிறவன் பிசாசு "அநாசாரி" அதாவது மாமிசம் முதலான ஆகாரஞ் செய்கிறவர்களாயும் ஆகிறார்கள்.

मुल्ला मल्ला नटाश्चैव पुरुषाः शस्त्रवृत्तयः ।
द्यूतपानप्रसक्ताश्च जघन्या राजसी गतिः ॥ மனு. 12. 45.

உத்தம ரஜோகுணம் உடையவர்கள் கத்தி வேலைக்காரன், மாலுமி, நடிகர், ஆயுதம்பூண்ட சேவகர் குடிகாரர்களாகவும் பிறக்கிறார்கள்.

राजानः क्षत्रियाश्चैव राज्ञां चैव पुरोहिताः ।
वादयुद्धप्रधानाश्च मध्यमा राजसी गतिः ॥ மனு. 12. 46.

மத்தியம ரஜோகுணத்தை யுடையவர்கள் அரசன், க்ஷத்திரிய குல அரசர்களின் புரோகிதன் வாதவிவாதஞ்செய்கிறவன், வக்கீல், நியாயவாதி, தூதன், சைனியாதிகாரிகளாக ஆகிறார்கள்.

गन्धर्वा गुह्यका यक्षा विबुधानुचराश्च ये ।
तथैवाप्सरसः सर्वा राजसीषूत्तमा गतिः ॥ மனு. 12. 47.

உத்தம ரஜோகுணத்தை யுடையவர்கள் கந்தர்வ (பாடகன்) குஹ்யக (சுரவாத்தியக்காரன்) யக்ஷ (பணமுள்ளவன்) வித்வான்களினுடைய சேவகன் அப்ஸரன் அதாவது உத்தமமான அழகையுடையவர்களாவும் ஆகிறார்கள்.

तापसा यतयो विप्रा ये च वैमानिका गणाः ।
नक्षत्राणि च दैत्याश्च प्रथमा सात्त्विकी गतिः ॥ மனு. 12. 48.

தபஸ்விகள், யதிகள், சந்நியாசிகள், வேதம் ஓதினவர்கள், விமானத்தை விடுவோர்கள், ஜோசியர்கள், தைத்யர்கள், அதாவது சரீரத்தை ப்போஷித்துக் கொள்ளுகிறவாகள், இவைகளல்லாம் சத்வகுணத்தினுடைய பலன் என்று அறியுங்கள்.

यज्वान ऋषयो देवा वेदा ज्योतींषि वत्सराः ।
पितरश्चैव साध्याश्च द्वितीया सात्त्विकी गतिः ॥ மனு. 12. 49.

மத்தியம சத்வகுணத்துடன் காரியத்தைச் செய்கிறவன் உயிர்யாகஞ் செய்கிறவன், வேதார்தத்தையறிந்தவன், வித்வான் வேதம் காந்தம் காலநிருபணம் இவைகளை யறிந்தவன், காப்பாற்றுகிறவன், ஞானி, பெரியகாரியங்களைச் செய்யவல்ல ஆசிரியன், ஆகியவர்களினுடைய பிறப்பை யடைகிறான்.

ब्रह्मा विश्वसृजो धर्मो महानव्यक्तमेव च ।
उत्तमां सात्त्विकीमेतां गतिमाहुर्मनीषिणः ॥ மனு. 12. 50.

உத்தம சத்வகுணத்துடன் காரியஞ்செய்கிறவர்கள் பிரம்மா, சகல வேதங்களை யறிகிறவர் சிருஷ்டியினுடை வழியை யறிந்து பல விமானம் முதலான

இயந்திரங்களைச் செய்கிறவர், தார்மிகர், சர்வோத்தமமான புத்தியையுடையவர் கட்டுக்காரர் முதலானவர்களாகப் பிறக்கிறார்கள்.

इन्द्रियाणां प्रसङ्गेन धर्मस्यासेवनेन च।
पापान्संयान्ति संसारानविद्वांसो नराधमाः ॥ மனு. 12. 52.

இந்திரியங்களின் வசமாய் விஷயசுகங்களிலிருந்து விட்டு அதர்மத்தைச் செய்கிறவர்கள் நீச ஜன்மத்தைவிடத்தாழ்ந்த துக்கரூபமான பிறப்பை யடைகிறார்கள். சத்வ ரஜ தமோகுணங்களை உடையமனிதர்கள் எம்மாதிரி கர்மங்களைச் செய்கிறார்களோ அதற்கேற்ற பலனை முறையே அடைகிறார்கள். முக்தியை யடைந்தவன் குணாதீதன் அதாவது சகல குணங்களினுடைய சுவபாவங்களிலிருந்தும் மீறினவன். ஏனெனில்

योगश्चित्तवृत्तिनिरोधः ॥
तदा द्रष्टुः स्वरूपेऽवस्थानम् ॥ யோக 1. 3.

இது யோக சாஸ்திரபாதஞ்சலி சூத்திரத்திலிருக்கிறது.

ரஜ தமோ குணங்களிலிருந்து மனதைக்கட்டி சுத்தசத்வ கர்மங்களிலிருந்தும் கட்டி சுத்தசத்வகுணத்தை யுடையவனாய்ப் பிறகு அதிலிருந்து நிரோதஞ் செய்து அதாவது மீறி ஒரே பரமாத்மாவையும் தர்மத்துடன் கூடின கர்மத்தையும் தன்முன்னால் வைத்துக்கொண்டுமனதை எதிலும் செல்லாது கட்டுபடுத்தவேண்டும். எப்பொழுது அது ஒரு மனப்பட்டு ஈசனிடம் தன்னை இழந்திருக்கிறதோ அப்பொழுது ஈசனது சுயரூபத்துடன் ஜீவாத்மா கலக்கிறது.

अथ त्रिविधदुःखात्यन्तनिवृत्तिरत्यन्तपुरुषार्थः ॥ சாங்கிய I. I.

அத்யாதமிகம் அதாவது சரீரத்தைச் சார்ந்த உபத்திரவங்கள் ஆதிபௌதிகம் பிறரால் ஏற்படும் உபத்திரவங்கள், ஆதிதைவிகம் அதிகமழை அதிக வெயில் அதிகக்குளிர் மனது இந்திரியங்களுடைய சஞ்சலம் இவைகளால் உண்டாகும் உபத்திரவங்கள் இம்மூன்று வகையான துக்கங்களிலிருந்தும் மீறி முக்தியையடைவது பெரும் புருஷப் பிரயத்தனமாகும்.

அடுத்த அத்தியாயத்தில் ஆகாரம் விரும்பத்தகுந்தது தகாதது. ஆசாரம் வேண்டியது விலக்கப்படவேண்டியது இவைகளைப்பற்றி எழுதுவோம்.

ஒன்பதாவது அத்தியாயம்.

முற்றிற்று.

## பத்தாவது அத்தியாயம்

ஆசாரம்—விரும்பத்தகுந்தது—தகாதது.

ஆகாரம்—வேண்டியது—விலக்கப்பட வேண்டியது.

இவைகளைப்பற்றினது.

தர்மகாரியங்களைச்செய்தல், நன்னடத்தை வணக்கம் நல்லோர்களுடைய சேர்க்கை, நல்ல வித்தையை அறிவதிலாசை, இவைகளுக்கெல்லாம் ஆசாரமென்றும், இவைகளிலிருந்து மாறுபட்டவைகளுக்கு அநாசாரம் எனறும் பெயர்.

**विद्वद्भिः सेवितः सद्भिर्नित्यमद्वेषरागिभिः ।**
**हृदयेनाभ्यनुज्ञातो यो धर्मस्तन्निबोधत ॥** மனு 2. 1.

ஆசை, விருப்பு, வெறுப்பு, இவைகளைக்கடந்த ஞானிகள் செய்யும் கர்மங்களும் உலகவாழ்க்கையில் நிகழும் கர்மங்களும், மனச்சாட்சி என்னும் தெய்விகக்கருவி உண்மை என்று காட்டும் கர்மங்களும் நற்கர்மங்களாகும். அக்கர்மங்களையே மனிதன் உண்மை என்று கொண்டு அவ்வழி நடக்க வேண்டும்.

**कामात्मता न प्रशस्ता न चैवेहास्त्यकामता ।**
**काम्यो हि वेदाधिगमः कर्मयोगश्च वैदिकः ॥** மனு 2. 2.

மனிதவாழ்க்கையில் பேராசையுங்கூடாது. ஆசையற்று இருத்தலும் முறையல்ல. ஏனென்றால் பேராசையுள்ளவன் வேத வரம்புகடந்த துஷ்கர்மங்களைச்செய்யவேண்டியவனாவான். ஆசையற்றவன் வேதமார்க்கத்தையும், வேதவரம்பிற்கேற்பட்ட தர்மங்களையும் அறியமுடியாதவனாவான்.

**सङ्कल्पमूलः कामो वै यज्ञाः सङ्कल्पसम्भवाः ।**
**व्रतानि यमधर्माश्च सर्वे सङ्कल्पजाः स्मृताः ॥** மனு 2. 3.

ஒருவன் ஆசையற்றவனாய் இருத்தல் முடியாதகாரியமாகும். பிறருக்குப் பணிசெய்தல், கொடுத்தல், யமம், நியமம் முதலிய நற்கர்மங்களைச் செய்வதற்கு ஆசையே தூண்டுகோல். ஆதலால் நியாயமானதும், தர்மவழி பிறழாததுமான ஆசை தேவையானதே.

**अकामस्य क्रिया काचिद् दृश्यते नेह कर्हिचित् ।**
**यद्यद्धि कुरुते किञ्चित् तत्तत्कामस्य चेष्टितम् ॥** மனு 2. 4.

ஒருவன் நடப்பதும், பேசுவதும், பார்ப்பதும், நடக்கவேண்டும், பேசவேண்டும், பார்க்கவேண்டும் என்பதும் ஆசையினாலேதான். ஆசையற்றவிடத்தில் சொல் இல்லை.

वेदोऽखिलो धर्ममूलं स्मृतिशीले च तद्विदाम् ।
आचारश्चैव साधूनामात्मनस्तुष्टिरेव च ॥ மனு 2. 6.

வேதாதி நூற்களைத் தழுவியும், மனுஸ்மிருதியில் கூறியுள்ள தர்மத்தையும் மகரிஷிகளால் செய்யப்பட்ட சத்திய நூல்களின் வழியும், பெரியோர்களால் கையாளப்பட்ட அறவழியை அனுசரித்தும், தனது உள்ளத்தில் செறியற்ற தனத் தள்ளப்படும் கர்மங்களை விலக்கியும் ஒருவன் தனது வாழ்க்கை நடத்தல் வேண்டும். அச்சத்தையும் வெட்கத்தையும் தரும் காரியங்களை ஒருவன் எப்பொழுதும் செய்யலாகாது. களவாடல், பொய் மொழிதல், பிறரை வஞ்சித்தல் முதலியகர்மங்கள், அச்சத்தையும் அவமானத்தையும் தருகின்றன. அத்தகைய காரியங்களை ஒருவன் விலக்க வேண்டும். வேதாதி நூல்களும் இதைத்தான் கூறுகின்றன.

सर्वन्तु समवेक्ष्येदं निखिलं ज्ञानचक्षुषा ।
श्रुतिप्रामाण्यतो विद्वान् स्वधर्मे निविशेत वै ॥ மனு 2. 7.

வேதம் ஸ்மிருதி, சுருதி முதலிய நூல்களிலிருந்து ஒருவன் கொள்ள வேண்டிய தர்மங்களையும் தள்ளவேண்டிய துஷ்கிருத்தியங்களையும் அறிதல் வேண்டும்.

श्रुतिस्मृत्युदितं धर्ममनुतिष्ठम् हि मानवः ।
इह कीर्त्तिमवाप्नोति प्रेत्य चानुत्तम सुखम् ॥ மனு 2. 9.

வேதம், அவைகளுக்கு அனுகூலமான ஸ்மிருதி இவைகள் போதிக்கும் அறவழிபிரகாரம் நடப்போன் இம்மையில் அழியாக் கீர்த்தியைப்பெறுகிறான். மறுமையிலும் நித்திய இன்பத்தைப்பெறுகிறான். எனவே சத்திய வாழ்க்கையை நடத்த விரும்பும் ஒருவன், வேதாதி நூற்களாலும் மனுவந்தாதிகளாலும் ரிஷிகளாலும் ஞானிகளாலும் வகுக்கப்பட்ட நீதி நூற்களின் ஆணைக்கு அடங்கியும், தனது மனது வாக்கு காயம் இவைகளின் ஆதரிப்பைப்பெறும் காரியங்களைத் தழுவியும் வாழ்க்கையை நடத்தட்டும்.

योऽवमन्येत ते मूले हेतुशास्त्राश्रयाद् द्विजः ।
स साधुभिर्बहिष्कार्यो नास्तिको वेदनिन्दकः ॥ மனு 2. 11.

சுருதி, வேதம், ஸ்மிருதி, தர்ம சாஸ்திரங்களின் உதவி, ஆகியவைகளைக் கொண்டு செய்ய வேண்டியவைகளையும் வேண்டாதவைகளையும் நிர்ணயஞ் செய்துகொள்ளவேண்டும். வேதங்களையும் அதற்கு அநுகூலமான கிரந்தங்களையும் அவமதிக்கிறவனை ப்பெரியோர்கள் ஜாதிப்பிரஷ்டஞ்செய்தல் அவசியம். வேதங்களைத் தூஷிக்கிறவன் நாஸ்திகனாகிறான்.

वेदः स्मृतिः सदाचारः स्वस्य च प्रियमात्मनः ।
एतच्चतुर्विधं प्राहुः साक्षाद्धर्मस्य लक्षणम् ॥ மனு 2. 12.

ஆகையினால் வேதம் ஸ்மிருதி, சத்புருஷர்களை ஆசரிப்பதில், ஆத்மஞான வளர்ச்சியால் நல்லது கெட்டது என்பதை அறிதல், இவையே தர்

யத்தை அறியும் வழிகள். மேற்கூறிய வழிகளின் மூலமே தர்மம் வெளியாகிறது.

अर्थकामेष्वसक्तानां धर्मज्ञानं विधीयते ।

धर्मं जिज्ञासमानानां प्रमाणं परमं श्रुतिः मனு 2. 13.

சுகங்களிலாசை இல்லாதவருக்கே, தர்மத்தின் ஞானமுண்டாகும். தர்மத்தினுடைய ஞானத்தை அடைய விரும்புகிறவர்களுக்கு வேதங்களே முக்கிய ப்பிரமாணங்கள்.

वैदिकैः कर्मभिः पुण्यैर्निषेकादिर्द्विजन्मनाम् ।

कार्य्यः शरीरसंस्कारः पावनः प्रेत्य चेह च ॥ மனு 2. 16.

வேதத்தில் கூறப்பட்ட புண்ணியபாபரூபமான கர்மங்களினாலே பிராம்மண க்ஷத்திரிய வைசியர்கள் தங்களுடைய பிள்ளைகளுக்கு இஜ்ஜன்மத்திலும் மறுஜன்மத்திலும் சுகத்தையளிக்கிற நிஷேகம் முதலிய சம்ஸ்காரங்களைச் செய்ய வேண்டியது உசிதமானது.

केशान्तः षोडशे वर्षे ब्राह्मणस्य विधीयते ।

राजन्यबन्धोर्द्वाविंशे वैश्यस्य द्व्यधिके ततः ॥ மனு 2. 65.

பிராமணனுக்குப்பதினாறுவயதிலேயும், க்ஷத்திரியனுக்கு இருபத்திரண்டு வயதிலேயும், வைசியனுக்கு இருபத்திநான்கிலேயும் கேசாந்த கலியாணம் அதாவது குடுமிவைக்கவேண்டும். இவைகளுக்குப்பிறகு கேவலம் தலையில் குடுமியைமாத்திரம் வைத்துக்கொண்டு தாடிமீசை தலையோடுஇவைகளை க்ஷவரம் செய்து கொள்ளவேண்டும். மறுபடியும் வைத்துக் கொள்ளவே கூடாது. குளிர்பிரதேசங்களில் உள்ளவர்கள் தங்கள் சௌகரியப்பிரகாரம் குடுமிவைத்துக்கொள்ளலாம். மிகவும் உஷ்ணப் பிரதேசங்களில் சிகையையுங்கூட வெட்டிவிடுவதுநலம். ஏனென்றால் சிரசில் முடிவைத்துக் கொள்வதினால் சரீரவெப்பத்தை அதிகமாக்குகிறது. அதனால் புத்தியும் குறைகிறது. தாடிமீசை வைத்துங்கொள்வதினால் அன்னபானங்கள் சரியாக உட்செல்வதற்கில்லை, தள்ளுபடியானவைகளும் வெளியிலேயேதங்குகின்றன.

इन्द्रियाणां विचरतां विषयेष्वपहारिषु ।

संयमे यत्नमातिष्ठेद्विद्वान् यन्तेव वाजिनात् । மனு 2. 88.

எவ்விந்திரியங்கள் புத்தியை மயக்கி விஷயசுகங்களில் பிரவேசிக்கச் செய்கின்றனவோ அவ்விந்திரியங்களை அடக்கவேண்டும். குதிரைசவாரிசெய்வோன் குதிரையை யடக்கிச் சரியான வழியில் செல்லச்செய்வதுபோல் மனிதன், அவைகளைத்தன் வசமாக்கிக்கொண்டு அதர்ம வழிகளில் செலுத்தாமல் தர்மவழிகளிலேயே எப்பொழுதும் போகச் செய்யவேண்டும். இதுவே மனிதனுடைய முதல் தர்மமாகும்.

इन्द्रियाणां प्रसङ्गेन दोषमृच्छत्यसंशयम् ।

सन्नियम्य तु तान्येव ततः सिद्धिं नियच्छति ॥ மனு 2. 93

ஏனெனில் விஷயசுகங்களிலும் அதர்மங்களிலும் செல்வதினால் மனிதன் குற்றங்களுக்கு ஆளாகிறான். இவைகளை ஜயித்து தர்மத்தில் திருப்புவதினால் அபீஷ்டசித்தியைப் பெறுகிறான்.

न जातु कामः कामानामुपभोगेन शाम्यति ।
हविषा कृष्णवर्त्मेव भूय एवाभिवर्द्धते ॥ மனு 2. 94.

கட்டையும் நெருப்பும் சேருவதினால் அக்கினிஜ்வாலை அதிகரிப்பது போலவே, அனுபவிப்பதினால் சிற்றின்ப போகங்கள் குறைவடைகிறதில்லை. விருத்தியேயாகின்றன. ஆகவே சிற்றின்ப சுகங்களுக்கு மனிதன் ஆளாகக் கூடாது.

वेदास्त्यागश्च यज्ञाश्च नियमाश्च तपांसि च ।
न विप्रदुष्टभावस्य सिद्धिं गच्छन्ति कर्हिचित् ॥ மனு 2. 97.

அடக்கப்படாத ஐம்புலன்களை உடையவனுக்கு வேத ஞானம் தியாகம், யாகம், நியமம், தர்மாசரணை இவைளுடைய சித்தி உண்டாகிறதில்லை. இவைகளெல்லாம் அடக்கப்பட்ட ஐம்புலன்களை உடையவர்களுக்குப்பலனைத் தருகின்றன.

वशे कृत्वेन्द्रियग्रामं संयम्य च मनस्तथा ।
सर्वान् संसाधयेदर्थानाक्षिण्वन् योगतस्तनुम् ॥ மனு 2. 100.

ஆகையினால் ஐந்து கர்மேந்திரியங்கள் ஐந்து ஞானேந்திரியங்கள், பதினொன்றாவதாகிய மனம் இவைகளைத் தன்வசமாக்கிக்கொண்டு சரியான ஆகாரம் தூக்கம் யோகம் இவைகளினால் சரீரத்தைக்காப்பாற்றிக் கொண்டு இருக்கிறவர்கள் காரியசித்தியை அடைகிறார்கள்.

श्रुत्वा स्पृष्ट्वा च दृष्ट्वा च भुक्त्वा घ्रात्वा च यो नरः ।
न हृष्यति ग्लायति वा स विज्ञेयो जितेन्द्रियः ॥ மனு 2. 98,

தன்னுடைய ஸ்துதியில் சந்தோஷம், நிந்தனையில் துக்கம், நல்லதிசையில் ஆனந்தம், துர் திசையில் சோகம், சுந்தமானவைகளைக் காணுங்கால் மனக்களிப்பு, கெட்டரூபத்தைக்காணுங்கால்அருவருப்பு இவைகளன்னியிலும் நல்ல சாப்பாட்டில் ஆனந்தம் கெட்ட ஆகாரத்தில் துக்கம், சுகந்தத்தில் ஆசை துர்க்ந்தத்தில் வெறுப்பு இவைகளும் அன்னியிலிருப்பவருக்கே அடக்கப்பட்ட இந்திரியத்தையுடையவர் என்று பெயர்.

नापृष्टः कस्यचिद् ब्रूयान्न चान्यायेन पृच्छतः ।
जानन्नपि हि मेधावी जडवल्लोक आचरेत् ॥ மனு 2. 110.

கேழ்க்காமலும், கபடமாய் கேட்டாலும் பதிலளிக்கிறதில்லை என்றும் புத்திமான்கள் நிச்சயஞ்செய்துகொண்டு சட்டத்திற்குச் சமானமாயிருக்க வேண்டும். வஞ்சனையன்னியில் ஆசையுடன் கேழ்க்கிறவர்களுக்கு க்கோராமலே உபதேசஞ் செய்யவேண்டும்.

वित्तं बन्धुर्वयः कर्म विद्या भवति पञ्चमी ।
एतानि मान्यस्थानानि गरियो यद्यदुत्तरम् ॥ மனு 2. 136.

ஐசுவரியம், சுற்றத்தார்கள், குடும்பம் குலம், காலம் சிறந்த செய்கை சிறந்தகல்வி, இவைவைந்தும் மரியாதைக்குக்காரணமாகின்றன. ஐசுவரியத்தை விட உறவினர்களும் உறவினர்களைவிட க்காலமும், காலத்தை விடச்செய்கையும் சிறந்தவைகள். கர்மத்தைவிட பரிசுத்த வித்தையையுடையவர்கள் சாலச்சிறந்தவர்கள்.

आज्ञो भवति वै बालः पिता भवति मन्त्रदः ।
अज्ञं हि बालमित्याहुः पितेत्येव तु मन्त्रदम् ॥ மனு 2. 153.

நூறுவருடம் ஆனபோதிலும் வித்தையும் விஞ்ஞானமும் இல்லாதவர்கள் குழந்தையே. வித்தையும் விஞ்ஞானத்தையும் அளிக்கிறவனைக் குழந்தை யாயிருந்தபோதிலும் பெரியவனாகவே எண்ணவேண்டியது. ஏனென்றால் சகலசாஸ்திரங்களினுடைய ஞானம் இல்லாதவனைக் குழந்தையென்றும் ஞானமுள்ளவனைத் (பிதா) தகப்பனென்றும் சொல்லுகின்றது.

न हायनैर्न पलितैर्न वित्तेन न बन्धुभिः ।
ऋषयश्चक्रिरे धर्मं योऽनूचानः स नो महान् ॥ மனு 2. 154

மிகவயதாகியும் தலை நரைத்தும் அதிகப் பொருளிருந்தும் பெரியகுடும்பத்தானயிருந்தும் ஒரு மனிதன் விருத்தனாகிறதில்லை. நம்முடையகலை வித்தைகளிலும் விஞ்ஞானத்திலும் எவன் பெரியவனோ அவனையே பெரியவிருத்த புருஷனென்று ரிஷிகளும் மகாத்மாக்களும் சொல்லுகிறார்கள்.

विप्राणां ज्ञानतो ज्येष्ठ्यं क्षत्रियाणान्तु वीर्यतः ।
वैश्यानां धान्यधनतः शूद्राणामेव जन्मतः ॥ மனு 2. 155

பிராமணன் ஞானத்தினாலும் க்ஷத்திரியன் பலத்தினாலும் வைசியன் தனதான்யத்தினாலும் சூத்திரன் ஜன்மம் அதாவது வயதினாலும் முறையே விருத்தர்களாகின்றனர்.

न तेन वृद्धो भवति येनास्य पलितं शिरः ।
यो वै युवाप्यधीयानस्तं देवाः स्थविरं विदुः ॥ மனு 2. 157.

தலைமயிர் நிறைப்பதினாலே ஒருவன் பெரிவன் ஆகமாட்டான். கற்றிருக்கிறவனைச் சிறுவனாயிருந்த போதிலும் வித்வான்கள் பெரியவனாகக்கருதுகிறார்கள்,

यथा काष्ठमयो हस्ती यथा चर्ममयो मृगः ।
यश्च विप्रोऽनधीयानस्त्रयस्ते नाम बिभ्रति ॥ மனு 2. 159.

வித்தையைக் கற்காதவர்கள் மரயானையைப்போலவும் தோல் மிருகங்களைப்போலவும் ஆகிறார்கள். அதுபோலவே அறிவு ஒளிபெறாத மனிதர்கள் உலகில் பேருக்குமாத்திரம் மனிதன் என்று அழைக்கப்படுகிறார்கள்.

अहिंसयैव भूतानां कार्यं श्रेयोऽनुशासनम् ।
वाक् चैव मधुरा श्लक्ष्णा प्रयोज्या धर्ममिच्छता ॥ மனு 2. 159.

ஆகையினால் வித்தையைக்கற்று தர்மாத்மாக்களாய் விரோதமன்னியில் சகல ஜீவன்களுக்கும் நல்ல உபதேசம் செய்யட்டும். இனிமையான வார்த்தை பேச்சு, இவைகளினால் உபதேசம்செய்ய வேண்டும். சத்தியோபதேசத்தினால் தர்மத்தினுடைய விருத்தியையும் அதர்மநாசத்தையும் செய்கிறவர்களே மேலோர்கள். பிரதிதினம் ஸ்நானம்செய்து வஸ்திரம் அன்னபானம் இடங்களை சுத்தமாய் வைத்துக்கொள்ளட்டும். ஏனெனில் இவைகள் சுத்தமாய் இருப்பதினாலேயே சித்தசுத்தியும் ஆரோக்கியமும் விருத்தியடைந்து புருஷப் பிரயத்தனமும் அதிகமாகிறது. மல மூத்திர நாற்றங்கள் போகவேண்டிய தூரம் சுத்தம் செய்யவேண்டியது.

आचारः प्रथमो धर्मः श्रुत्युक्तः स्मार्त्त एव च ॥ மனு 1. 180.

உண்மைபேசுதல் முதலான கர்ட்ங்களை ஆசரியப்பதே வேதம் சுருதிகளால் கோஷிக்கப்படும் ஆசாரம்.

मा नो वधीः पितरं मोत मातरम् ॥ யஜு 16. 15
आचार्य्यो ब्रह्मचर्य्येण ब्रह्मचारिणमिच्छते ॥ அதர்வ. 11. 15
मातृदेवो भव । पितृदेवो भव ।आचार्य्यदेवो भव । अतिथि देवो भव ॥ தை 7. 11.

மாதா, பிதா, ஆசாரியன், அதிதி, இவர்களுடைய சேவையே தேவ பூஜை என்று அறியப்படுகிறது. எக்காரியங்களினால் உலகிற்கு உபகாரம் உண்டாகுமோ, அந்தகாரியத்தைச் செய்யவேண்டும். கெடுதியை விளைவிக்கக்கூடியதைவிட்டுவிடுவதே மனிதர்கள் முக்கியமாய் செய்யவேண்டிய காரியமாகும். நாஸ்திகன், மோசக்காரன, விசுவாசமோசஞ்செய்கிறவன் தன்னலத்தைக் கோருகிறவன், வஞ்சகன் இன்னும் முதலான துஷ்டர்களுடைய சேர்க்கைக் கூடாது. சத்தியவாதி, தர்மாத்மா, பரோபகாரப்பிரியன் இவர்களுடைய சேர்க்கை செய்வதற்கே சிரேஷ்டாசாரம் என்று பெயர்.

வினா:— ஆரியவர்த்தத்தேசத்தவர்கள் வெளிநாடுகளுக்குப் போவதினால் ஆசாரம்குன்றி விடுகின்றதா இல்லையா?

விடை:—இல்லை இது பொய்யே. உள்ளும் புறமும் சுத்தமாயிருந்து எங்கு போனபொழுதிலும் ஒருவன் நல்லவனாயிருக்கலாம். இவைகளை எங்கு செய்தபோதிலும் தர்மப்பிரஷ்டனாக ஒருபொழுதுமாகமாட்டான். இந்தியாவிலேயே இருந்து துராசாரங்களைச் செய்கிறவன் தர்மப்பிரஷ்டனாயும் ஆசாரபிரஷ்டனாயுமாகிறான்.

मेरोर्हरेश्च द्वे वर्षे वर्षं हैमवतं ततः ।
क्रमेणैव व्यतिक्रम्य भारतं वर्षमासदत् ॥
स देशान् विविधान् पश्यंश्चीनहूणनिषेवितान् ॥

இச்சுலோகம் மகாபாரதம் சாந்திபர்வம் மோட்சதர்மத்தில் வியாசசுக ருடைய சம்வாதத்திலிருக்கிறது:—ஒரு காலத்தில் வியாசர் தன்னுடைய புத்திரனும் சிஷ்யனுமான சுகனுடன் இப்பொழுது அமெரிக்கா என்றும் சொல்லப்படும்படியான பாதாளத்தில் தங்கியிருந்தார். ஆத்மவித்தை இவ்வளவுதானு அல்லது இன்னும் அதிகம் உண்டாவென்று சுக்கிராசாரியர் ஒருகேள்வி கேட்டார். வியாசர் அதற்குப்பதில் என்றும் சொல்லவில்லை. ஏனெனில் அதற்குப்பதில்முன்னமேயே சொல்லிவிட்டார். வேறு பிரமாணங் கொடுப்பதற்காகத் தன் பிள்ளையுடன் நீ மிதிலாபுரிக்குச்சென்று ஜனகராஜனுடன் இக்கேள்வியைக் கேட்டால் சரியான விடையளிப்பார் என்று சொன்னார். தகப்பனார் வார்த்தயைக்கேட்டு பாதாளத்தைவிட்டு மிதிலாபுரிபக்கமாய்ச்சென்றார். முதலில் ஹிமாலயத்திற்கு வடக்கேயும் வடமேற்கிலேயுமுள்ள ஹரிவர்ஷத்திற்கு-ஹரி என்றால் குரங்கு. குரங்கிற்குச்சரியானமனிதர்களுள்ள அதாவது இரத்தமுகத்தையும் பச்சைக் கண்களையுமுடைய மனிதர்களுள்ள தேசங்கள். இப்பொழுது ஐரோப்பா என்று பெயர்.— தேசங்களுக்குச் சென்றார். இத்தேசங்களைப் பார்த்துக் கெண்டு யூதர்களினுடைய தேயமாகிய 'ஹூண' தேசத்தையும் (சிறிய ஆசியா முதலானது) கண்டு, சீனதேசத்திற்கும் சீனவிலிருந்து இமாலயத்திற்கும் இமாலயத்திலிருந்து மிதிலாபுரிக்கும் வந்தார். கிருஷ்ணனும் அர்ச்சுனனும் அசுவதரி (காந்தத்தினால் தள்ளப்பட்டது. அதாபுகைக்கப்பலில்) யில் உட்கார்ந்துகொண்டு அமெரிக்காவெனப்படும் பாதாளத்திற்குச்சென்று யுதிஷ்டிர சக்கரவர்த்தியின் இராஜசூய யாகத்திற்கு உத்தாளக ரிஷியைத்திரும்பவும் கொண்டுவந்தார்கள். மேலும் காண்டஹார் எனப்படும்படியான காந்தாரதேயத்து ராஜபுத்திரிக்கே திருதராஷ்டிரனுடைய விவாகம் நடந்தது. பாண்டுமனைவியான மாத்ரி ஈரான் தேச (பாரசீக)த்து ராஜப்பெண். பாதாளராஜபுத்திரியான உலோபியையே அர்ச்சுனன் விவாகம் செய்துகொண்டான். அயல் நாடுகளுக்கும் தீவுகளுக்கும் போகாமல் இவ்வார்த்தைகளெல்லாம் எவ்விதம் வந்திருக்கக்கூடும். இந்தியதுறைமுகங்களை விட்டுப்போகும் கப்பல்களின்மேல் வாங்கினவரியின் விவரமொன்று மனுஸ்மிருதியில் சொல்லப்பட்டிருக்கிறது. மகாராஜ யுதிஷ்டிரருடைய ராஜசூய யாகத்திற்குச் சகல பூலோக அரசர்களுக்கும் அழைப்புக்கடிதம் கொடுக்க பீமன் அர்ச்சுனன் நகுலன் சகாதேவன் ஆகியவர்கள் நான்கு திசைக்கும் சென்றார்கள். அயல் நாட்டு யாத்திரையையும், தீண்டுதலையும் தோஷமாகக் கருதியிருந்தால் அவர்கள் சென்று இருப்பார்களா?

ஆரியர்கள் ஆதியிலிருந்தே வியாபாரம் அரசியல், யாத்திரை முதலிய வைகளைக்கடைப்பிடித்துள்ளார். சகல உலகத்தையும் சுற்றிவந்துளார். அயல் நாட்டுயாத்திரையினால் தர்மம் நாசமடையும் என்கிற எண்ணமானது மூடர்களினுடைய உபதேசத்தினாலும் அஞ்ஞான விருத்தியினாலுமே பரவிற்று. பலதேசங்களுக்கும் தீவுகளுக்கும் போய் வருவதில் தயங்காதவர்கள் பலர்களினுடைய ஒழுக்கவழக்கங்களுடன் பழகி தன்னுடைய இராஜ்யத்தையும் வியாபாரத்தையும் விருத்திக்குக் கோண்டுவருவதில் வல்லவர்களாகிறார்கள். கற்

பழக்கங்களைக்கைப்பற்றி கெட்டவைகளை விடுவதில் கண்ணுங்கருத்துமாயிருக்கிறவர்கள் நிறைந்த செல்வத்தைப்பெறுகிறார்கள். கேவலம் தாழ்ந்தவர்களாகவும் மிலேச்ச குலத்தும் உதித்த விலைமாதர் முதலானவர்களுடன் கூடுவதைத் தீண்டக்கூடாததாக நினைக்காமலிருப்பது விந்தையே! பல தேசங்களிலுள்ள சிரேஷ்ட மனிதர்களுடன் சேருவதைத் தீண்டலாகவும் தோஷமாகவும் நினைப்பது ஆச்சரியமே!! இவைமடத்தனமில்லாவிடில்வேறுயாது? மாம்சாகாரம் மதுபானம் செய்கிறவர்களினுடைய சரீரம் வீரியம் முதலியவைகள் துர்நாற்றத்துடன் கூடினதாகின்றதென்பது உண்மையே. ஆகையினால் அவர்களுடன் சேருவது ஆரியர்களையும்கெடுத்துவிடும். ஆனால் அவர்களிடமிருந்து விஷயங்களையும் குணங்களையும் தெரிந்துகொள்வதினால் கொஞ்சமேனும் கெடுதலாவது பாபமாவது கிடையாது. அவர்களினுடைய மதுபானம் முதலான கெடுதல்களை விட்டு விட்டு குணங்களைக்கிரகித்துக் கொள்வதினால் தீங்கு ஒன்றும் உண்டாகாது. அவர்களைத் தொடுவதினாலும் பார்ப்பதினாலும் பாபம் உண்டாகிறதென்று நம்பும் இம்மூடர்கள் அவர்களுடன் சண்டை செய்யவும் முடியாது. ஏனென்றால் யுத்தத்தில் அவர்களைப் பார்ப்பதும் தொடுவதும் அவசியமாகும். பட்சபாதம், துவேஷம், அநியாயம், பொய் பேசுதல் முதலான குற்றங்களைவிட்டு வீம்பு வைராக்கியமும் இல்லாது பரோபகார சிந்தனை அடைவது உத்தமமான ஆசாரம் என்று நல்லவர்கள் அறியட்டும். ஆத்மாவையும் கடமையுமே நம்முடைய தர்மம் என்றும் அறியட்டும். நற்காரியங்களைச்செய்து வெறு தேயங்களுக்கும் தீவுகளுக்கும் போவதினால் நமக்குக் கெடுதல் ஒன்றுமே இல்லை. பாபம் செய்வதினாலேயே தீங்குவிளைகிறது. வேதோக்த தர்மத்தை நிச்சயஞ்செய்யத்தெரிந்துகொள்ளவும் பொய்மதங்களால் வேறெவ்வரும் நம்மை ஏமாற்றாமல் இருக்கும் வண்ணம் கண்டனஞ்செய்யவும் தெரியவேண்டும். பல நாடுகளிலும் தீவுகளிலும் வியாபாரஞ்செய்யாமல் சுதேசத்தினுடைய உயர்வு ஒருபொழுதும் உண்டாகாது. உள்ளூர் வியாபாரம் செய்துகொண்டிருக்க பர தேசத்தவர்கள் வர்த்தகத்தை அடக்கி ஆண்டு கொண்டிருந்தால் தரித்திரம் துக்கத்தைத் தவிரவேறென்ன ஏற்படும். வேஷதாரிகள் இவர்களுக்கு வித்தையையளித்து அயல்நாடுகளுக்குச்செல்ல அனுமதியளித்தால் அவர்கள் புத்திமான்களாகி தங்களுடைய ஒப்பாசாரங்களில் விழமாட்டார்களென நன்கறிவார்கள். அப்பொழுது அவர்களுடைய பிழைப்பும் போய் மரியாதையும் இழக்க நேரிடுமே. இதைக்கொண்டேதான் உண்பதிலும் உட்கொள்ளுவதிலும் இவ்வளவு அட்டகாசஞ்செய்கிறார்கள். வெளிநாடுகளுக்குப்போகாமல் தடுப்பதே அவர்களினுடைய எண்ணம். பிசகினால்கூட மாம்சாகாரம் மதுபானஞ் செய்யக்கூடாது யுத்தகாலத்தில் கூட * சௌகா பிரகாரம் பாகஞ்செய்து சாப்பிடுவதினாலேயே இராஜ புருஷர் தோல்வியை யடைந்திருக்கிறார்களென்று புத்திமான்

* சௌகா என்றால் மண்ணையும் பசுஞ்சாணத்தையும் கலந்து மெழுகி, உயர்குலப்பிராம்மணரைக்கொண்டு பாகஞ்செய்யச்சொல்லி அவர்களைக்கொண்டேகுறிப்பிட்ட இடத்திற்குள் பரிமாறச்சொல்லுவது முதலானவைகள்.

கள் அறியவில்லையா? யுத்தத்தில்யானை குதிரை ரதம் இவைகளின் மேலிருந்து கொண்டே ஒருகையினால் ரொட்டியைச் சாப்பிட்டுக்கொண்டும் தண்ணீரைக்குடித்துக்கொண்டும் மற்றொருகையினால் சத்துருவை ஜெயிப்பதுமே ஆசாரமாகும். தன்னைச்ஜயிக்கவிடுகிறவது துராசாரமேயாம். இம்மாதிரி மூடத்தன்மையான சௌகாவை உண்ணுவதிலும் உட்கொள்ளுவதிலும் கைகொண்டு, இவர்கள் சகல சுயேச்சை, ஆனந்தம், திரவியம், ராஜ்யம் வித்தை புருஷபிரயத்தனம் முதலானவைகளை இழந்தார்கள். இப்பொழுதுகையோடு கையைக்கட்டிக்கொண்டு உட்கார்ந்து, கஷ்டத்திலிருந்து காப்பாற்ற உதவி எவரேனும் செய்வார்களாவென்றும் நினைத்து கிடைக்கும் கொஞ்சம் பொருள்களைக்கொண்டு பாகஞ்செய்து சாப்பிட்டுகொண்டிருக்கிறார்கள். உதவிசெய்ய எவரும் இல்லாமையினால் ஆரியவர்த்த நாட்டை நாசம்பண்ணிவிட்டார்கள். சமயலறையை நன்றாய்ப்பெருக்கி கழுவி சுத்தமாகவைத்துக்கொள்ளுதல் அவசியம். மகம்மதியர் கிறுஸ்துவர் களுடையதைப்போல் அழுக்கான பாகசாலைகளை வைத்துக்கொள்ளுதல் கூடாது.

வினா:—சகரி-நிகரி என்றாலென்ன?

விடை:—ஜலம் முதலானவைகளில் செய்யும் சமையலுக்குச் சகரியென்றும் நெய் பால் முதலானவைகளில் பாகம் செய்பவைகளுக்கு நிகரி என்றும் பெயர். ஒப்பாசாரபாதகர்களால் செய்யப்பட்டவைகளில் இதுவும் ஒன்று. நெய்யும் பாலும் அதிகமாயிருப்பதினால் அதைச் சாப்பிடுவதில் உருசியிருப்பதினாலும், வயிற்றிற்கு அதிக பதார்த்தங்கள் செல்வதினாலும் இப்பொய்யைக்கட்டினார்கள். அங்கினியில் பாகம் செய்யப்பட்டு காலத்தில் பக்குவமடைந்ததிற்கு "பக்கா" வென்றும் (பழுத்தது-நிகரியின் மற்றொரு பெயர்) பக்குவமடையாததிற்குக் கச்சா (சகரியின் மற்றொரு பெயர்) என்றும் பெயர் உளுண்டு பக்கா சாப்பிடக்கூடியது. கச்சா சாப்பிடக்கூடாதது இதுவும் எல்லா சமயங்களிலும் உண்மையாகாது. ஏனெனில் கொள்ளு முதலானவைகள் கச்சைகளான பொழுதிலுங் கூட சாப்பிடப்படுகிறது.

வினா:—துவிஜன் தன் கைகளினாலேயே சமையல்செய்து சாப்பிட வேண்டுமா அல்லது சூத்திரனால் செய்யப்பட்டதைச் சாப்பிடலாமா?

விடை:—சூத்திரன் கையினால் செய்ததைச் சாப்பிடலாம். ஏனெனில் துவிஜர்கள்—பிராமணர்கள், க்ஷத்திரியர்கள், வைசியர்கள்— (ஸ்திரீ புருஷர்கள் இருவரும்) வித்தையை ஓதுவிப்பதிலேயும் இராஜ்யபாலனத்திலும் மிருகபாலனத்திலும் வியாபாரத்திலும் முறையே இருக்கவேண்டியது. (சமையல் செய்தல் முதலானவைகளில் கால நாசஞ் செய்யக்கூடாது) ஆனால் சூத்திரனுடைய பாத்திரத்திலிருந்தும் அவன் வீட்டில் பாகம் செய்யப்பட்டதிலிருந்தும் ஆபத்துக்காலங்களில் தவிர சாப்பிடக்கூடாது. இப்பிரமாணத்தைப் பாருங்கள்.

**आर्याधिष्ठितः वा शूद्राः संस्कर्त्तारः स्युः ॥** ஆபஸ்த. 22. 2. 4.

ஆரியர்களினுடைய வீட்டில் சூத்திரன் அதாவது படிப்பில்லாத ஸ்திரீ புருஷர்கள் சமையல் முதலான வேலைகளைச் செய்யட்டும். ஆனால் அவர்கள்

தங்களுடைய சரீரம்வஸ்திரம் முதலியவைகளைச் சுத்தமாக வைத்துக்கொள்ள வேண்டும். ஆரியர்களுடைய வீட்டில் பாகஞ் செய்யும் சமயங்களில் வாயிலிருந்து எச்சிலும் மூச்சுக் காற்றும் கலவாதபடி (துணியைக் கொண்டு) வாயை மூடிக்கொள்ளவேண்டும். வாரம் ஒரு முறை கை நகத்தைச் சீவிக்கொள்ள வேண்டும். சமையலுக்கு முந்தி ஸ்நாநஞ் செய்யவேண்டும். ஆரியர்களுக்குப் பிறகு சாப்பிடவேண்டும்.

வினா:—சூத்திரனால் தொடப்பட்ட ஆகாரத்தைச் சாப்பிடுவது குற்றமானால் அவனால் பாகஞ் செய்யப்பட்டதைச் சாப்பிடுவது எவ்விதம் கூடும்?

விடை:—இது வெறுங்கட்டுரையே. ஏனெனில் சர்க்கரை (வெள்ளை—பழுப்பு) நெய், பால், தயிர், காய் கறிகள் பழம் கிழங்குகளெல்லாம் அவர்களாலேயே செய்யப்பட்டு சாப்பிடுகிறோம். உதாரணமாக வயலில் கருப்பங்கழிகளை வெட்டிப் பிழிந்து ரசம் எடுக்கும்படியான சூத்திரன், செக்கிலியன், பெருக்குகிறவன், மகம்மதியன், கிருஸ்துவன் இவர்களை எடுத்துக் கொள்வோம். கருப்புங் கழிகளைக் கொண்டுபோய் இவர்களே ஆலையிலிடுகிறார்கள், சாதாரணமாய்ப்பாதியைக் கடித்து மிகுதி பாதியை ஆலையிலிடுகிறார்கள். சாரைக்காய்ச்சுங் காலத்தில் தங்கள் சமையலையும் அதிலேயே செய்து கொள்ளுகிறார்கள். மலம் மூத்திரம் சேர் மண் இவைகளினால் பூசப் பட்டிருக்கும்படியான உள்ளடிகளையுடைய பழைய செருப்பு முதலியவைகளினால் அதைக்கலக்குகிறார்கள். தங்கள் வீடுகளில் தயிருக்கு உபயோகப் படும்படியான அழுக்குப் பானைகளிலிருந்து ஜலமெடுத்து பாலுடன் சிலர் கலக்குகிறார்கள். மாவரைத்த பிறகு அழுக்கு கைகளினால் அதைக் கூட்டுகிறார்கள். இவ்விதமே வேறுசாமான்கள் செய்வதிலேயும் அசுத்தங்கள் சேருகின்றன. கந்தமூலபழங்களிலுமிப்படியே. இம்மாதிரி சாமான்களை உட்கொள்வது அவர்களுடைய கையிலிருந்தே சாப்பிடுவதுபோலாகும்.

வினா:—கண் மறைவில் கந்தமூல பழங்களையும் ரசம் முதலியவைகளையும் சாப்பிடுவது குற்றமாகாதே?

விடை:—மகம்மதியர்களாலும் பெருக்குகிறவர்களாலும் தனியாகச் செய்யப்பட்டவைகளை நீ சாப்பிடுவாயா? இல்லை என்பாயானால் கண் மறைவில் செய்யப்பட்டதும் சாப்பிடச் சந்தேகமுள்ளதாகின்றது. மகம்மதியர்கள் கிருஸ்துவர்கள் முதலானவர்கள் மதுபானம் மாம்சாகாரம் செய்வதினால் அவர்களிடம் சாப்பிடுவதினால் ஆரியர்களும் மாம் சாகாரம் மதுபானம் முதலான தீயக்குணங்களுக்கு ஆளாவார்கள். ஆரியர்களுக்குள்ளேயே ஒருவருக்கொருவர் சாப்பிடுவதில் தீமை ஒன்று மில்லை. மதம் சுகதுக்கம் இவைகளில் ஒத்துமையன்னியில் முன்னேற்ற மடைவது மிகவும் கஷ்டமானது. சாப்பிட்டுக் குடிப்பதினால் மாத்திரம் முன்னேற்றம் உண்டாய் விடாது. தீயவழக்கங்களை விட்டு நல்லவைகளைக் கைக்கொண்டாலொழிய முன்னேற்றம் கிடைக்காது. கெடுதல்களும் விளையும். விதேசிகளினுடைய இராஜ்யம் ஆரியவர்த்தத்திலிருப்பதற்குக் காரணம்:—உள் ஒற்றுமையில்லாமை, மதபேதம், பிரம்மசரிய சேவையற்றிருப்

பது, வித்தையை ஓதுதலும் ஓதுவிக்காமலுமிருப்பது, சிறு வயதில் இஷ்டமில்லாத விவாகம், விஷய சுகங்கள், பொய் சொல்லுதல் முதலான கெடுதல்கள். வேதவித்தையினுடைய பிரசார மன்னியிலிருப்பது ஆகிய தீயவழக்கங்களே. சகோதரர்களே சண்டை செய்து கொண்டால் மூன்றாவது விதேசத்தவர் வந்து பஞ்சாயத்தாக அமருகிறார். ஐயாயிரம் வருடங்களுக்கு முந்தி நடந்த மகாபாரத யுத்த சம்பவங்களை மறந்து விட்டீர்கள் போலும். பாருங்கள் மகாபாரத யுத்தத்தில் சகல ஜனங்களும் சவாரி செய்து கொண்டே அன்னபானம் செய்தார்கள். தமக்குள் சண்டையினாலே கௌரவ பாண்டவ யாதவர்களினுடைய நாசமேற்பட்டது. போனதுபோகட்டுமென்றாலும் அவ்வியாதி இன்னும் இருந்துகொண்டேவருகிறது. இக்கோரராக்ஷசன் எப்பொழுதாவதுவிடுமா அல்லது ஆரியர்களுடைய சகல சுகங்களையும் போக்கடித்து துக்கச்சமுத்திரத்தில் மூழ்கடித்து மரணத்தை விளைவிக்குமா? உறவினர்களைக் கொன்று சுதேச நாசத்தைவிளைவித்த துரியோதனனுடைய நீசமான வழிகளையே இன்னும் ஆரியர்கள் கைப்பற்றிக்கொண்டு துக்கத்தை யடைகிறார்கள். இவ்ராஜரோகம் ஆரியர்களில் நாசமாய் விடும்படி ஓ பரமேச்வரனே! நீர் கிருபை கூர்தல் வேண்டும்.

## ஆகாரம்

வேண்டியது விலக்கப்படவேண்டியது என்று ஆகாரங்கள் இருவகைப் படும். முதலாவது தர்மசாஸ்திரத்தினால் கூறப்பட்டது. இரண்டாவது வைத்தியசாஸ்திரத்தினால் கூறப்பட்டது.

**अभक्ष्याणि द्विजातीनाममेध्यप्रभवाणि ॥** மனு. 5. 5.

**वैजेयन्मधुमांसं च ॥** மனு, I. 177.

திவிஜன் அதாவது பிராமணன் க்ஷத்திரியன் வைசியன் இவர்கள் மலம் மூத்திரம் முதலானவைகளினுடைய சேர்க்கையினாலுண்டாகும் கிழங்கு வேர் பழங்களைச் சாப்பிடக்கூடாது

**बुद्धिं लुम्पति यद् द्रव्यं मदकारी तदुच्यते ॥** சாரங்கதர. 4. 21.

புத்தியை மழுக்கி நாசஞ் செய்யும் படியான பலவித மாம்சம் கஞ்சா அபினி முதலானவைகளை உபயோகப்படுத்தக் கூடாது. நாறுகிறதும் கெட்டுப் போனதும் அறுவருப்பானதும் நன்றாய் பக்குவஞ் செய்யப்படாததுமான ஆகாரத்தை உட்கொள்ளுதல் கூடாது. மது மாமிசம் முதலானவைகளினுடைய அணுக்களினால் நிறைந்திருக்கும்சரீரத்தையுடைய மதுபானம் மாமிசாகாரம் செய்கிறவர்களிடமிருந்தும் மிலேச்சர்களிடமிருந்தும் சாப்பிடக்கூடாது.

பிரயோசனமுள்ள மிருகங்களைக் கொலைசெய்யவும் செய்யப்படுவதுங் கூடாது. உதாரணமாக ஒருபசுவானது பால் நெய் தயிர் கன்றுக்குட்டி முதலியவைகளினால் (ஆண், பெண் இரண்டும்) தன்னுடைய ஒரே தலை முறையில் 475, 600 நபர்களைக் காப்பாற்றவல்லது. பிரதி தினம் சிலபசுக்கள் 20 அல்லது

40 சேரும், வேறு சிலவைகள் 2 அல்லது 4 சேரும் பால், முதலானவைகள் கொடுக்கின்றன. ஆகையினால் ஒரு பசு ஒரே சமயத்தில் சராசரியாகப் பதினொன்று சேர் கொடுக்கிறது. சில பசுக்கள் 18 மாசமும் வேறு சிலவைகள் 6 மாசமும் கறக்கின்றன. சராசரி 12 மாசத்திற்குக் கொடுக்கும். ஆகையினால் ஒரே தடவையில் 241 960 நபர்களுக்குப் பாலை தன்னுடைய வாழ்நாளில் ஒரு பசு கொடுக்கிறது. அதற்கு ஆறு கடாரிகளும் ஆறு கன்றுக்குட்டிகளுமுண்டாகும். அவைகளில் இரண்டுஇறந்தாலுங்கூட பத்துமீதியிருக்கும். ஆகையினால் ஐந்து பசுங்குட்டிகளினுடைய பால் ஒரே தடவையில் 124, 800 பெயர்களைக்காப்பாற்றும். ஒவ்வொருவரும் சராசரியாகப்பிரதிதினம் முக்கால் சேர் அல்லது ஒன்றே கால் சேர் சாப்பிட்டாலும் ஒரே தடவையில் 25000 பெயர்கள் சாப்பிடக்கூடிய 5000 மணங்கு தானியங்களை 5 காளைகளும் உண்டுபண்ணும். ஆகையினால் காளையினாலும் பசுவினாலும் கொடுக்கப்பட்ட பாலையும் தானியத்தையும் சேர்த்தால் 374, 800 பெயர்களுக்குவேண்டிய அளவு ஆகின்றது. எனவே அதே காலத்தில் 475, 600 நபர்களை ஒரு பசு தன் வாழ் நாளில் காப்பாற்றும். இவைகளை விருத்தி செய்து காப்பாற்றிக் கொண்டே வந்தால் கணக்கற்ற மனிதர்களைக் காப்பாற்றும். நிலங்களை உழுவதுடன் கூட காளைகள் வண்டிகளிழுப்பதினாலும் பாரங்களைச் சுமப்பதினாலும் மனிதனுக்கு உபகாரமாகின்றன. பால் கொடுப்பதினால் பசு மிகவும் உபயோகமாகின்றது. எருதுகளும் அப்படியே உபயோகமாகின்றன. எருமைகளின் பாலைவிட பசுவின் பால் புத்தியை விருத்தி பண்ணும். இதனாலேயே ஆரியர்கள் அதிக உபகாரமுள்ளதாக ப்பசுவை எண்ணினார்கள். இதர வித்வான்களும் இதையே கருதினார்கள். தன்வாழ்வில் ஒரு ஆட்டின் பால் 25, 920 ஜனங்களுக்கு உபயோகமாகும். இம்மாதிரியே யானை குதிரை ஒட்டகை ஆடு கழுதை முதலியவைகள் மனிதனுக்கு உபயோகமாகின்றன. இவைகளைக் கொலை செய்கிறவர்கள் சகலத்தையும் வதைத்த கொலைபாதகர்களாக வாகிறார்கள். ஆரியர்களுடைய இராஜ்யத்தில் இவைகளெல்லாம் கொலை செய்யப்படவில்லை. ஆரியவாதத்திலேயும் இதர பூகோள தேசத்திலேயும் அப்பொழுது ஜனங்கள் ரொம்ப சந்தோஷத்துடனிருந்தார்கள். ஏனெனில் பால் நெய் நிறைய விருந்து காளைமுதலானவைகள் அதிகமாயிருந்தபடியினால் சகலருடைய சுகத்திற்கு வேண்டிய தானியம் முதலானவைகளிருந்தன. மாம்சாகாரக்காரர்கள் வந்து பசு முதலானவைகளை அடிக்கிறவர்களும் மதுபானஞ் செய்கிறவர்களும் இராச்சியாதிகாரியாக வந்த பிறகு ஆரியர்களுடைய துக்கங்கள் கிரமமாக விருத்தியாய்க் கொண்டே வருகிறது.

नष्टे मूले नैव फलं न पुष्पम् ॥ சாணக்ய. 10. 13.

மரங்களினுடைய வேர் வெட்டுண்டுபோய் விட்டால் பழங்களும் புஷ்பங்களும் எங்கிருந்துவரும்?

வின:—எக்காலமும் அஹிம்சையுள்ளவர்களாய் விட்டால் புலிமுதலிய காட்டு மிருகங்கள் விருத்தியாகிப் பசுமுதலானவைகளை அடித்து உங்களுடைய பிரயத்தனங்களையும் பிரயோசனமன்னியில் செய்துவிடுமே?

விடை:—கெடுதல் விளைவிக்கும் மிருகங்களைத் தண்டனை செய்வது அதிகாரிகளுடைய கடமை. வேண்டுமானால் அவைகளினுடைய பிராணனையும் போக்கடிக்கவேண்டும்.

வினா:—அவைகளினுடைய மாமிசத்தை எறிந்துவிட வேண்டியதுதானா?

விடை:—எறிந்துவிட்டாலும் எறியலாம் அல்லது மாம்சாகாரம் செய்யும் மிருகங்களுக்கு அளிக்கலாம். அல்லது தீயிட்டு விடலாம். மாம்சாகாரிகள் சாப்பிடுவதினால் உலகிற்குக்கெடுதல் ஒன்றும் விளையாது. ஆனால் அதைச் சாப்பிடுகிறவன் மாம்சாகாரியாய உபத்திரவத்தைச் செய்கிறவனாகிறான். நம்பிக்கை மோசம், வஞ்சகம், கபடம், திருட்டுத்தனம் முதலானவழிகளினால் கிடைக்கும் பதார்த்தங்களைச் சாப்பிடக்கூடாது. அஹிம்சை தர்மகாரியம் இவைகளினால் கிடைக்கும் ஆகாரத்தையே சாப்பிடவேண்டும். எப்பதார்த்தங்களினால் சுகம், அடைந்து வியாதி நசித்து புத்திபலம் பராக்கிரமம் ஆயுசு ஆகியவைகள் விருத்தி யடைகிறதோ அவ்வரிசி, கோதுமை, பழம், கிழங்கு, பால், நெய்சர்க்கரை, முதலானவைகளைச்சரிவரப்பாகஞ்செய்து சமயத்திற் கேற்றவாறுகாலாகாலங்களில் மித ஆகாரம் செய்யவேண்டும். தன்னுடைய பிரகிருதிக்கு விரோதஞ் செய்வதைவிட்டு எது ஒத்துவருகிறதோ அதைச் சாப்பிடுவதே வேண்டிய ஆகாரமாகும்.

வினா:—ஒரேதட்டிலிருந்து சாப்பிடுவதினால்கெடுதலுண்டா ?இல்லையா?

விடை:—ஆமாம். கெடுதலுண்டு. ஒருவனுடைய குணம் பிரகிருதியைப் போல் மற்றொருவனுடையது இருக்கிறதில்லை. குஷ்டரோகி முதலானவர்களுடன்சாப்பிடுவதினால் நல்லமனிதர்களுக்குக்கூட இரத்தங்கெட்டுபோகிறது. கலந்து சாப்பிடுவதினால் தீமைவிளைகிறதே தவிர நன்மை கிடையாது. இதனாலேதான் மனுவும்

**नोच्छिष्टं कस्यचिद्दद्यान्नाद्याच्चैव तथान्तरा ।**
**न चैवात्यशनं कुर्यान्नचोच्छिष्टः क्वचिद्व्रजेत् ॥** மனு. 2. 50.

சொல்லுவதாவது. சாப்பிட்டு மீறின பதார்த்தங்களை எவருக்குங்கொடுக்கக் கூடாது. ஒரேதட்டிலிருந்து ஒருவர் மற்றொருவருடன் போஜனஞ் செய்யக்கூடாது. அதிகமாகவும் சாப்பிடக்கூடாது. சாப்பிட்டவுடன் கையையும் முகத்தையும் கழுவாமல் இருக்ககூடாது.

வினா:— **गुरोच्छिष्टभोजनम्** இதன் பொருள் என்ன?

விடை:—குரு சாப்பிட்டபிறகு தனியாயும் சுத்தமாயுமிருக்கிறதைச் சாப்பிடவேண்டும் அதாவது குருமுதலில் சாப்பிட பிறகு சீடன் சாப்பிட வேண்டும்.

வினா:—மீதியிருப்பது தள்ளுபடியானால் வண்டுகளினால் மீதிவைக்கப்பட்ட ஆகாரமான தேன்: கன்றுகுட்டிகள் குடித்து மீதிவைத்த பால், ஒரு கவளம் சாப்பிட்டு மீதியிருக்கும்படியான அன்னம் இவைகளைச் சாப்பிடக் கூடாதா ?

விடை:—பெயருக்கு மாத்திரம் தேன் மீதியிருக்கிறதே தவிர பல வேர்களினுடையஇரசமாதலால்அதைச்சாப்பிடலாம். வெளியில்வரும் பாலை மாத்திரம் கன்றுக்குட்டிக்குடிக்கிறதே தவிர,உள்ளேயிருப்பதைக்குடிப்பதில்லை ஆகையினால் மீதியிருப்பதாக ஆகாது. ஆனால் கன்றுக்குட்டிகுடித்தான பிறகு தண்ணீரைக்கொண்டுத் தாயின் முலைகளைக்கழுவி சுத்தமான பாத்திரத்தில் கறக்கவேண்டும். தன்னால் மீதிவைக்கப்பட்டது தனக்கேனப்பொழுதும் கெடுதலை உண்டுபண்ணாது. இதரர்களினுடைய தள்ளுபடியையும் மீதியையும் சாப்பிடுவதும் தொடுவதும் ஆகாதகாரியம். தன்னுடைய முகம் காது மூக்கு கண் உபஸ்த இந்திரியங்கள் இரகசிய இந்திரியங்கள் மலம் மூத்திரம் முதலானவைகளைத்தொடுவதில் ஒருவனுக்கு அருவறுப்பு உண்டாகிறது இல்லை. ஆனால் வேறு ஒருவனுடையதைத் தொடுவதில் அஞ்சுகிறான். இதிலிருந்து இக்குணம் சிருஷ்டிக்கிரமத்திற்கு விரோதமானதென்று ஏற்படவில்லை. இதரர்களினுடைய சாப்பாட்டுத்தள்ளுபடியை ஒருபொழுதும் உட்கொள்ளக் கூடாது.

வினா:—புருஷன் மனைவிகளினுடைய மீதியை ஒருவருக் கொருவர் உண்ணுதல் வேண்டாமா?

விடை:—கூடாது. ஏனெனில் அவர்களினுடைய சரீர சுபாவங்களும் வேறானது.

வினா:—மனிதர்களினால் செய்யப்பட்டதைச் சாப்பிடுவதில் என்ன தீங்கு இருக்கிறது பிராமணன் முதல சண்டாளன் வரையில் சரீரம், எலும்பு, சதை, தோல், முதலானவைகளெல்லாம் ஒன்றே. பிராம்மாண சரீரத்தில் ரத்தம் எப்படி ஓடுகின்றதோ அப்படியே சண்டாளனுடைய சரீரத்திலும் ஓடுகின்றது. இரத்தமும் அதுவே. ஆகையினால் மனிதவர்க்கம் எல்லோராலும் செய்யப்பட்டதைச்சாப்பிடுவதில் என்னகெடுதலுண்டாகிறது.

விடை:—தோஷமிருக்கிறது. உத்தம பதார்த்தங்களைச்சாப்பிட்டு அருந்துவதினால் பிராமணன் பிராமணத்தி சரீரத்திதுள்ள துர்க்கந்தம் தோஷம் இவைகளில்லாத ரஜவீரியத்தைப்போல் சண்டாளன் சண்டாளத்தி சரீரத்தில்லை. ஏனெனில் சண்டாளனுடைய சரீரம் துர்க்கந்தமுள்ளபரம அணுக்களினால் நிறைந்திருக்கின்றது. அம்மாதிரி பிராமணன் முதலானவைகளில்லை. இதனாலேயே பிராமணன் முதலான உத்தமவர்ணங்களிலிருந்து சாப்பிடலாம். நீசன் செக்கிலியன் முதலானவர்களிடமிருந்து சாப்பிடக்கூடாது. நல்லது! உன்தாய் தமக்கை பெண் நாட்டுப்பெண் மாமியார் முதலானவர்களினுடைய சரீரத்தின் தோல் உன்மனைவியுடையது போலிருப்பதினால் அவர்களிடம் நீ உன் மனைவியிடம் போலிருப்பாயா என்று கேட்டால் வெட்கமடைந்து தலையைக்குனிந்து பேசாமலிருப்பாய். எப்படி கைவாயினால் உத்தம அன்னத்தைச் சாப்பிடுகிறாயோ அப்படியே துர்க்கந்தத்தையும் சாப்பிட முடியுமானால்மலத்தையும் ஏன் சாப்பிடக் கூடாது ? இம்மாதிரி இழிவானவர்களுமுண்டோ ?

வினா:—சாப்பாட்டு இடத்தை பசுஞ்சாணிகொண்டு மெழுகுவதுபோல் உன்மலத்தைக்கொண்டுஏன்செய்கிறதில்லை? பசுஞ்சாணி சமயலறையிலிருப்பதினால் அது ஏன் சுத்தமாகிறதில்லை?

விடை:—பசுஞ்சாணி மனிதர்களுடைய மலத்தைப்போல் நாற்றமெடுக்கிறதில்லை. கோமயத்தின வாசனை சீக்கிரமாக மறைகிறதில்லை. துணியைக் கெடுப்பதுமில்லை. அதில் படுகிறதுமில்லை, மண்ணைப்போல் நாசஞ் செய்வதுமில்லை. மண், சாணம் இவைகளினல் மெழுகப்பட்டவிடம் பார்வைக்கு வெகு அழகாயிருக்கிறது. சமைக்கிறவிடத்தில் சாப்பிடுதல் முதலானவைகளைச் செய்வதினல் நெய் வெண்ணெய் மீதியானவைகள் கீழே விழுகின்றன. ஆகையினல் எரும்பு பூச்சி புழுக்கள் வந்து அவைகளிடத்தில் சேருகின்றன. தினந்தோறும் இடத்தைமெழுகிப்பெருக்கிச்சுத்தஞ்செய்யாவிடில் கக்கூசைப் போல் காணும். ஆகையினல் பிரதிதினமும் சமையலரையை மண்சாணங் கொண்டு மெழுகிப்பெருக்கி சுத்தஞ் செய்யவேண்டும். பக்காவீடானல் ஜலத்தினல் கழுவினல் போதுமானது. இவைகளினல் முன்சொன்ன கெடுதல்கள் நிவர்த்தியாகும். மகம்மதியருடைய சமைலரையில் சரியன்னியில் நாலாப்பக்கமும் சாம்பல், சுள்ளி, உடைந்தபானையோடுகள் எலும்புகள் அவயவங்கள்ப் முதலானவைகள் சிதறிப்போய் அவைகளில் கூட்டமாக ஈக்கள் சேர்ந்திருபதைப் போலிருக்கக்கூடாது. உள்ளே உட்காரவேண்டுமென்று போகிறவர்கள் அங்கே வாந்தியெடுக்கும்படியான கெடுதல்களையும் அழுக்கையும் உடையதாயிருக்கிறது. பசுஞ்சாணியைக்கொண்டு மெழுகுவது கெடுதலென்றால் வரட்டியைக்கொண்டு எரிப்பதும் நெருப்பு சாம்பிலினல் பீடியைக் கொளுத்துவதும் அவைகளினல் மெழுகுவதும் தப்பாவென்று கேழ்க்கிறோம். இவைகளெல்லாம் சரியில்லை யென்பதில் கொஞ்சமேனும் தப்பில்லை.

வினா:—சாப்பாட்டு அரையிலேயேசாப்பிடுவதா நல்லது அல்லது வெளியிலா ?

விடை:—நன்றாயும் ரம்யமாயும் அழகாயும் இடம் எங்கே காணப்படுகிறதோ அங்கே போஜனம் செய்யவேண்டும். ஆனல் அவசரகாலங்களிலும் யுத்தசமயங்களிலும் யானை குதிரை முதலான வாகனங்களின்பேரிலும் உட்கார்ந்துகொண்டே அன்னபானம் செய்யலாம்.

வினா:—சொந்தக்கைகளினலே சமைத்துச்சாப்பிடவேண்டுமா ?

விடை:—சுத்தமாகப்பாகஞ்செய்தால் சகல ஆரியர்களும் ஒன்றுசேர்ந்து சாப்பிடுவதில் கொஞ்சமேனும் கெடுதலில்லை. பிரம்ம க்ஷத்திரிய வைசியர்கள் சமையல்செய்யும் தொந்திரவிலேயும் சமையலரையைப் பெருக்குவதிலேயும் சாமான்களைக்கழுவதிலேயுமிருந்தால் வித்தைமுதலான சுபகுணங்களினுடைய விருத்தி ஒருபொழுதும் உண்டாகாது. பாருங்கள்! மகாராஜாயுதிஷ்டிரரின் ராஜசூயயாகத்திற்கு வந்திருந்த பூகோளத்தரசர்கள், ரிஷிகள், மகரிஷிகள் எல்லோரும் ஒரே பாகசாலையில் சாப்பிட்டார்கள். கிருஸ்துவர்கள் மகம்மதியர்கள் முதலானபலஜாதியினர் வந்தபின்னர் உள் நாட்டுவிரோதம் உண்டாச்சுது. அவர்கள் மதுபானம் பசுமாம்சாகாரம் சாப்பிடவாரம்பித்தார்கள். அச்சமயத்திலிருந்து போஜனதிகளினுடைய துன்பம் ஏற்பட்டது. பாருங்கள்! காபூல் காண்டகார் பர்சியா அமேரிக்கா, ஜரோப்பா முதலான தேசத்திய

ராஜப்பெண்களான காந்தாரி மாத்ரி உலோபி முதலானவர்களை ஆரியதேசத்தரசர்கள் மணம்புரிந்து கொண்டார்கள். சகுனி முதலானவர்கள் கௌரவ பாண்டவர்களுடன் கூட அன்னபானஞ்செய்து கொண்டிருந்தார்கள். கொஞ்சமேனும் விரோதங்கிடையாது. ஏனெனில் அப்பொழுது பூகோளம்முழுவதும் ஒரு வேத மதமே பரவியிருந்தது, அதில் எல்லோரும் கவனமாயிருந்தார்கள் பிறருடையசுகதுக்கங்களைத்தன்னுடையது போலவே கருதிவந்தார்கள். அப்பொழுது உலகத்தில் சுகமிருந்தது. இப்பொழுது பலவேறுமதங்களினாலே துக்கமும் விரோதமும் விருத்தியாகின்றன. இதை நிவாரணஞ்செய்வது புத்திமான்களினுடைய வேலையாகும். பரமாத்மா எல்லோருடைய மனதிலும் சத்தியசமதத்தினுடைய சிறிய விதையை விதைக்கட்டும். எதனால் பொய்மதம் சீக்கிரம் மூழ்கிப் போகுமோ அதில் சகல புத்திமான்களும் கலந்து விரோத பாவத்தை விட்டு ஆனந்தத்தை விருத்திசெய்யட்டும்.

ஆசாரம்—விரும்பத்தகுந்தது தகாதது. ஆகாரம் வேண்டியது விலக்கப் படவேண்டியது இவைகளைப்பற்றி இவ்வளவோடு நிறுத்திக்கொள்வோம்.

இப்பத்தாவது அத்தியாயத்துடன் இந்நூலின் முதற்பாகம் முடிவைப் பெறுகிறது. இதுவரை நாம் பிறமதங்களையும், அவைகளின் பொய்யான கொள்கைகளையும் பற்றி விவகரிக்கவில்லை. ஏனென்றால் சத்திய சாத்திரங்களின் உட்பொருள்களைச்சரியே அறியாதவர்கள், பிறமத வாதங்களைப்பற்றின கண்டனங்களைப்போதியவாறு அறிந்து அனுபவிக்க முடியாதவர்களாவார்கள். எனவே இம் முதல்புத்தகத்தில் சத்திய சாத்திரங்களின் உண்மைகளை எடுத்து விரித்து வந்தோம். இம்முதல் புத்தகத்தைச் சரியே படித்து உட்கருத்தை அறிந்த பின்னரே இனி அடுத்த புத்தகத்தில் எடுத்துக்கொள்ளும் பிறமதவாதங்களை நன்கு அறியக்கூடும்.

இனி வெளியிடப்படும் இரண்டாவது புத்தகத்தில் இந்தியாவின் கண் உள்ள புத்தமதம், ஜயினமதம் இவைகளைப்பற்றியும், பிறகு இஸ்லாம் மதம் கிறுஸ்துவமதம் இவைகளைப்பற்றியும் எடுத்துக் கொண்டு பேசுவோம். கடைசி அத்தியாயத்தில் பொதுவுரையாகச் சில வார்த்தைகள் சொல்லப்படும். விருப்பு, வெறுப்பு என்னும் பேய்களின் வயப்படாது மனதை நிஷ்களங்கமாய் வைத்துக்கொண்டு ஒருவன் இப்புத்தகத்தைப் படித்து உண்மையை அறிய விரும்புவானேயானால் அவனது உள்ளத்தில் உண்மை ஒளிவீசத்துவக்கும். இல்லையேல் உண்மைப் புலனாகாது. ஒளியினிடத்தை இருளே கொள்ளும். உண்மைப்பொருளைத்தேடி அடைவதும், உண்மையற்றதை தள்ளுவதுமே பெரியோரின் கடமையாகும். உண்மைப்பொருள் அறிந்தோரே அமரநிலை பெறுகின்றனர். அவர்களது உள்ளத்தில் பரிபூரண இன்பம் மலருகிறது.

அவ்வின்பத்தை அடைதலே மனிதஜாதியின் கடமை. அக்கடமையை செலுத்துபவனே அறம், பொருள் இன்பம், வீடு என்னும் நான்கு பெறுதற்கரிய பொருள்களைப்பெற்று ஜென்மவிடுதலைப் பெறுகின்றான்.

பத்தாவது அத்தியாயம்

முற்றிற்று



முதற்பாகம் முற்றிற்று.

ஓ.

ஸ்ரீசுவாமி தயானந்த சரஸ்வதியாரின்

# சத்தியார்த்தப் பிரகாசம்.

(உண்மைப்பொருள் விளக்கம்)

347
152
154
16
669

இரண்டாம் பாகம்.

மொழிபெயர்ப்பு ஆசிரியர்

எம். ஆர். ஜம்புநாத ஐயர்.



ஆர். நடேச ஐயர், பி. ஏ.,

ஆரியபுத்தகாலயம்

14, பள்ளியப்பன் தெருவு, சௌகார்பேட்டை

சென்னை.

1926



[விலை ரூபா 2-8-0

# பொருளடக்கம்.

—:o:—



# குறிப்பு.

இவ்விரண்டாம் பாகத்துடன் சத்தியார்த்தப் பிரகாசம் முடிவைப் பெறுகிறது. நான் முன்னரே கூறியுள்ளதுபோல் ஆசிரியரது கருத்தையும் பொருளையும் தழுவியே மொழிபெயர்த்துள்ளேன். இது சிறப்பாகப் பதினுன்காவது அத்தியாயத்திற்கு ஏற்கும். முகம்மதியர்களால் தர்மநூலெனக் கருதப்படும் குர்-ஆன் ஷரீபுக்குத் தமிழ் மொழிபெயர்ப்பு இல்லாதது ஒரு குறையேயாகும். குர்-ஆனைப் பொருத்தவரையில் முக்கியமாக நான் கருத்தையும் பொருளையும் ஒட்டியே பதினுன்காவது அத்தியாயத்தில் எடுத்துக் காட்டாக ஆளப்பட்டுள்ள மேற்கோள்களை மொழிபெயர்த்துள்ளேன். எனவே வாசகப்பிழைகள் சொற்பிழைகள் இருத்தல் கூடும். ஆனால் பொருள் வேற்றுமை யிராதென்று கூறுவேன்.

எம். ஆர். ஜ.

பதினேருவது அத்தியாயத்தின்

# முகவுரை.

—:o:—

ஐயாயிர வருடங்களுக்கு முன்னர் உலகில் வேதமதந் தவிர வேறு எம்மதமும் இருந்ததில்லை என்பதை மறுப்பார் எவருமிலர். உண்மைக்கும், அறிவிற்கும், சிந்தனைக்கும் ஒத்து இருப்பது இவ்வேதமதமொன்றே. மகாபாரதத்திற்குப் பின்னர்தான் சமூகத்தில் புதிய மாறுதல்கள் துவக்கமாயின. தீமைகள் புகுந்தன. அஞ்ஞானம் என்பது மனித ஜாதியின் உள்ளத்தை இல்லமாகக் கொண்டது. சந்தேகம், அவநம்பிக்கை என்னும் பேய் மனித ஜாதியைப் பிடித்து ஆட்டிற்று. ஜனங்கள் அவரவர் மனோபாவங்களுக்கேற்றவாறு சமயங்களை வகுத்தனர். பின்னர் பல சமயங்கள் தோன்றலாயின. இச்சமயங்களை நான்கு பிரிவுகளாகப் பிரிக்கலாம். புராணி, ஜைனி, கிரானி, குரானி என்பவையாகும். இவைகளிலும் கொள்கை வேற்றுமையுண்டு. ஒவ்வொரு கொள்கையிலும் பல்வேறு பிரிவுகள். சண்டை, சச்சரவு முதலியவைகள் பின்னர் தொடர்ந்தன. இம்மதங்களைப்பற்றி நாம் ஆராய்ச்சி செய்து நன்மை, தீமைகளை வெளியிட்டுள்ளோம். அறிவாளி பட்சபாதமில்லாது படித்து அறிந்து சத்தியத்தை ஏற்று அசத்தியத்தை விட்டுவிடலாம்! இந்தியாவிலுள்ள புராணமதங்களைப்பற்றிய ஆராய்ச்சியை 11-வது அத்தியாயத்தில் கூறியுள்ளோம். எவரையும் புண்படுத்த வேண்டுமென்பது எமது நோக்கமல்ல. நல்லெண்ணத்துடனேயே செய்துள்ளோம். சத்திய வழியைக் கடைப்பிடிக்க வேண்டும். சத்தியாசத்தியத்தை நிர்ணயஞ் செய்து உலகில் சத்தியத்தை நிலவச் செய்வதும், அசத்தியத்தை அகற்றுவதுமே என் வாழ்நாளின் நோக்கம். அதற்கேற்க இதை ஆக்கியுள்ளேன். சத்தியத்திற்கும் நியாயத்திற்கும் முரண் இல்லாது வாழ்க்கை நடத்துவது மனிதன் கடனாகும். மதச் சச்சரவு, வீண் வாதம் இவைகளால் எவ்வளவு தீமை ஏற்பட்டிருக்கிறது என்பதை நோக்குங்கள். இக்கொள்கைச் சண்டை நிற்கும் வரையில் நம்மிடம் அமைதி ஏற்படாது என்பதை எல்லோரும் அறிவார்கள். அறிஞர் சத்தியாசத்தியங்களை அறிந்து, அவைகளுக்கு விரோதமானவைகளை விலக்கவேண்டும். மனிதன் சச்சரவை விடுத்து மனித ஜாதியின் நலத்தை நாடவேண்டும். அங்ஙனம் இருப்பின் சத்தியமாகிய ஒரேமதம் எங்கும் நிகழும். அதற்கேற்ற வழியைப்பற்றி இதன் முடிவில் சுருக்கமாய்க் கூறுவோம். எங்கும் சத்தியமும், நித்தியமுமாகிய ஒரேமதம் பரவுமாறும், எல்லோருடைய மனதிலும் சத்தியமத ஊக்கமும் உற்சாகமு மேற்படுமாறும் எல்லாம்வல்ல முழு முதற்கடவுள் அருள்புரிவாராக. கற்றோருக்கு ஒரு வார்த்தை போதுமானதல்லவா?

—

## வேத தத்வ விளக்கம்

# மும்மூர்த்தி உண்மை.

—— : ——

நவீன நூல்களைச் சனங்கள் மதிக்கமாட்டார்களென வெண்ணி அறிந்து, கிறிஸ்துவர்களும், முகம்மதியர்களும் துணிவுகொண்டு பைபிலையும் குர்.ஆனை யும் வேதமெனத் பகர முன்வந்து பகிரங்கஞ் செய்கிறார்கள். மனித வாழ்க்கைக்கு நங்கூரம் போலுள்ள வேதாதரவு பெற்றே எல்லாக் காரியங்களை உலகில் செய்ய இயலுமென்பதைக் காணும், நாம், அதன் உண்மைத் தத் தவத்தை யறிந்தாலொழிய தீய ஒழுக்கத்திலிருந்து திரும்போம்.

இக்குறையை நீக்க வேண்டி வேதாதரவைக் கொண்ட கிரந்தங்களைத் தமிழில் குறைந்த விலைக்குப் பிரசுரஞ் செய்ய ஏற்பாடு செய்திருக்கிறோம். முதன்முதலில் வேத உபநிடத ஆராய்ச்சிக்கொண்டு மும்மூர்த்திகளின் நிர்ணயம் அல்லது உண்மை என்னும் நூலை வெகு சீக்கிரத்தில் டிமிகிளேஸ் 100 பக்கத்தில் வெளியிடுவோம். முன்பணமனுப்பி தங்கள் பெயரை ரிஜிஸ்டர் செய்து கொள்ளுவோருக்கு விலை ரூபா ஒன்று. மற்றவர்களுக்கு ரூபா ஒன்றேகால்.

ஆர். நடேசன்
ஆரிய புத்தகாலயம்
14, பள்ளியப்பன் தெரு,
சௌகார்ப்பேட்டை, சென்னை.

நூலைப்பற்றின

# அபிப்பிராயங்கள்.

---

சேலம் டாக்டர் பி. வரதராஜலு நாயடு அவர்கள்—

இவ்வுயர்ந்த நூலைப் பிரசுரத்ததினால் தேசத்திற்குப் பெரிய ஊழியம் செய்தவராகிறீர்.

கோலாப்பூர் டாக்டர் பாலகிருஷ்ண அவர்கள்—

இம்மொழிபெயர்ப்பு வெளிவரவேண்டி தாங்கள் எடுத்துக் கொண்ட ஊழியத்தை நான் பெரிதும் பாராட்டுகிறேன்.

ராவ்பகதூர் ஆனந்த ஸ்வரூபர்—

பல இடையூறுக் கிடையில், தைரியத்துடன் நீங்கள் இம்மொழிபெயர்ப்பைத் தந்தது பாராட்டத் தக்கதே.

மாஜி நீதிபதி டி. வி. சேஷகிரி ஐயர்—

இச்சத்திய நூலை மொழிபெயர்த்துள்ளதற்கு ஸ்ரீமான் ஜம்புநாத ஐயரை நான் மிகவும் பாராட்டுகிறேன். சிற்றருவியின் மெல்லிய ஓட்டம்போன்ற அழகிய நற்றமிழே இம்மொழிபெயர்ப்பின் சிறப்பாகும். தமிழ்நாட்டாருக்கு இந்நூலை அளித்தது ஒரு பெரும் தேச சேவையே யாகும். இந்நூலைத் தமிழ் நாட்டிற்குத் தந்து ஸ்ரீமான் ஜம்புநாத ஐயர் தமிழ்நாட்டாரின் நன்றியறிதலைப் பெற்றுள்ளார்.

ஐக்கிய மகாண ஆரியப் பிரதிநிதி சபை 11-8-1925-ல் கூடி நிறைவேற்றின தீர்மானம்.

"சத்தியார்த்தப் பிரகாசத்தின் தமிழ் மொழிபெயர்ப்பை இனிது முடித்த ஸ்ரீ. எம். ஆர். ஜம்புநாதனைப் பாராட்டுகின்றோம்."

இந்தியன் சோஷியல் ரிபார்மர்—

"பத்து வருடங்களாக உழைத்துப் படித்து சத்தியார்த்தப் பிரகாசத்தை மொழிபெயர்த்திருக்கும் ஸ்ரீமான் எம். ஆர். ஜம்புநாத ஐயரைப் பாராட்டுகிறோம். இந்தியாவிலுள்ள மற்ற பாகங்களைவிட தென்னாட்டிற்கே இத்தகைய வேதங்களுடைய உரை அவசியமாகும். ஸ்ரீமான் ஜம்புநாதய்யர் இக்குறையைத் தீர்த்துவிட்டார் என்று, சொல்லுவது மிகையாகாது. ஆரிய சமாஜத்தை ஸ்தாபித்த தயாநந்த முனிவர் பிரான் ஹிந்து தர்ம புனருத்தாரணத்திற்கு என்ன செய்திருக்கிறாரென்பது இந்நூலில் நன்கு விளங்கும். தயாநந்தர் உரை தந்துள்ள வண்ணம் வைதிக சமயத்தின் உண்மைகளைத் தாங்கியிருக்கும் சத்தியார்த்தப் பிரகாசத்தைத் தென்னாட்டாருடைய உபயோகத்திற்காக ஐயர் அளித்திருக்கிறார். இம்மொழிபெயர்ப்பால் தமிழ்நாட்டிற்குத் தொண்டு செய்

துள்ளோம் என்ற எண்ணமே அன்னார் சிரமத்தின் வெகுமதி. இனிய தமிழில் சுலபமாக எழுதப்பட்டிருக்கிறது.

ஸ்வராஜ்யா—

வடநாட்டில் இந்நூலினால் பலர் பயனடைந்துள்ளார். தென்னாட்டாரும் இதை அறியவேண்டும் என்ற அவாக்கொண்டு இதை ஆக்க ஸ்ரீமான் ஜம்புநாத ஐயர் அவர்கள் முன்வந்துள்ளார் போலும். இத்தகைய வேத விஷயமான நூற்களை மொழிபெயர்த்தல் என்பது சுலபமான காரியமல்ல. மொழிபெயர்ப்பாசிரியர் செய்த இந்த அரும் வேலையை நாம் பாராட்டாமலிருக்க முடியாது. யாவரும் அறியும்வண்ணம் எளிய நடையில் எழுதப்பட்டுள்ளது என்பதைக் குறிக்க விரும்புகிறோம்.

சுதேசமித்திரன்—

இவ்வரிய நூல் இதுகாறும் தமிழில் மொழிபெயர்க்கப்படாமலே இருந்தது. ஸ்ரீமான் எம். ஆர். ஜம்புநாத ஐயர் இப்பொழுது சுருதி மேற்கோள்களுடனே இந்நூலைத் தமிழில் அழகாக மொழிபெயர்த்து வெளியிட்டு அக்குறையை நிவர்த்தித்து விட்டார். ஸ்ரீமான் ஐயர் இத்துறையில் எடுத்துக் கொண்ட முயற்சி பாராட்டத்தக்கது. இதனால் தமிழ் மக்கள் ரிஷி தயாநந்தரின் உபதேச மொழிகளை அறிந்து மனனஞ் செய்ய இடமேற்பட்டிருக்கிறது.

லோகோபகாரி—

இதில் இல்லாத விஷயம் இல்லையென்றே சொல்லிவிடலாம். இத்தகைய அரிய நூலை மொழிபெயர்த்த தமிழன்பர் ஸ்ரீமான் ஜம்புநாதய்யருக்குத் தமிழுலகம் நன்றி பாராட்டவேண்டும். அவர் அரியதோர் தொண்டு செய்திருக்கிறார். தயாநந்த முனிவர் பிரான் இயற்றிய இந்த அரிய நூலில் உள்ள உண்மைகளைத் தமிழகத்தார் அறிந்து இன்பமும் பயனும் அடைய வேண்டும் என்று பெரு நோக்கங்கொண்டே ஸ்ரீமான் ஐயர் இதனை மொழிபெயர்த்து வெளியிட்டிருக்கிறார். இந்நூலின் அருமையை நோக்கும்பொழுது இதற்கேற்பட்டுள்ள விலை குறைவென்று விளங்கும்.

ஊழியன்—

உயரிய கருத்துக்கொண்ட இவ்வருநூலைத் தமிழ் மொழியினர்க்குதவிய அன்பருக்குத் தமிழர் நன்றி செலுத்தக் கடமைப்பட்டிருக்கின்றனர்.

குடி அரசு—

இதனைத் தமிழ் நாட்டினருக்குப் பயன்படவேண்டி மொழிபெயர்த்த அன்பர் ஸ்ரீமான் எம். ஆர். ஜம்புநாதய்யர் அவர்களின் பெருந்தன்மையை யாம் பாராட்டுகின்றோம்.

பம்பாய் கிரானிகல்—

இப்பெரிய நூலை மொழிபெயர்த்து அளித்த பேருதவிக்காக ஸ்ரீமான் எம். ஆர். ஜம்புநாதய்யருக்குத் தமிழ் தேசம் பெரிதும் கடமைப்பட்டிருக்

கிறது. இதனை மொழிபெயர்க்கப் பொறுமையும், முயற்சியும், இரு மொழிகளில் நல்ல அறிவும் வேண்டும். மொழிபெயர்ப்பாசிரியரை நாம் பெரிதும் பாராட்டுகிறோம்.

நவசக்தி—

முதல் மூலத்தைத் தழுவி ஸ்ரீமான் எம். ஆர். ஜம்புநாத ஐயர் மொழிபெயர்த்திருக்கிறார். நீண்ட காலமாகச் சத்தியார்த்தப் பிரகாசத் தமிழ் மொழிபெயர்ப்பு எதிர்பார்க்கப்பட்டது. இவ்வுழைப்பில் தலைப்பட்ட ஸ்ரீமான் எம். ஆர். ஜம்புநாத ஐயருக்குத் தமிழுலகம் பெரிதும் கடமைப்படல் வேண்டும்.

தமிழ்நாடு—

சத்தியார்த்தப் பிரகாசம் ஹிந்துஸ்தானத்திலுள்ள அநேகமாக எல்லாப் பாஷைகளிலும் மொழிபெயர்க்கப்பட்டிருந்தபொழுதிலும் தமிழ்ப்பாஷையில் இதுவரை மொழிபெயர்க்கப்படவில்லை. இந்த புண்ணிய கைங்கரியத்தைச் செய்து தமிழ் நாட்டிற்கு உதவி புரிந்தவர் ஸ்ரீமான் எம். ஆர். ஜம்புநாத ஐயர் என்பவராகும். தமிழில் மொழிபெயர்த்து வெளியிட்ட ஸ்ரீமான் ஜம்புநாதய்யருக்கு நமது வந்தனத்தை தெரிவித்துக்கொள்கிறோம்.

ஸமரஸபோதினி—

ரிஷி தயானந்தரால் இயற்றப்பட்டதைத் தமிழ்படுத்துவது மிகவும் கடினமான காரியம். பெரும் பிரயாசை வேண்டும். பல வருடங்கள் பாடுபட்டிருக்கவேண்டும். தமிழில் மொழிபெயர்ப்பாசிரியர் செய்ய முன் வந்தது மிகவும் சிறப்பாகும். அவருக்கு மிகவும் தமிழுலகம் கடமைப்பட்டிருக்கிறது. இதனை மொழிபெயர்த்துத் தமிழுலகத்திற்கு அளித்த ஸ்ரீமான் எம். ஆர். ஜம்புநாதய்யருடைய ஊழியம் சாலச் சிறந்ததாகும்.

சுயராஜ்யா (இங்கிலீஷ்)—

இப்புத்தகம் வேதநூல் துணைகொண்டு தயாநந்தர் வகுத்த பெருநூலாகும். இதன் தமிழ் மொழிபெயர்ப்பை நாம் இந்நாள் ஆவலுடன் எதிர்பார்த்திருந்தோம். ஸ்ரீமான் ஜம்புநாதய்யர் மூதன் நூல் துணைக்கொண்டு தமிழில் ஆக்கியுள்ளார். [illegible] மதம், சமூகமுறை, இவைகளை நன்கு நூல் எடுத்துக் காட்டுகிறது. [illegible]ராஞேர் இதைப் படித்துப் பயனடைய வேண்டுமென்பதே [illegible]

ஹிந்து—

இப்புத்தகம் [illegible] தயாநந்தர் ஆக்கிய நூலின் மொழிபெயர்ப்பாகும். தம் மதத்திற்கு ஆள் சேர்க்கும்பொருட்டு பிற மதங்களைத் தூஷிக்கும் பாதிரியார் போலல்ல நமது சுவாமி. பிற மதங்களின் உண்மையை ஏற்றும் மாசை விளக்கியும் உவ்ளார். வேத மதத்தின் சிறப்பை எடுத்துரைத்தும் இடையில் புராண காலத்தில் பிறந்த மாசுகளைப் பலமாகக் கண்டித்தும் இருக்கிறார். இப்பெருநூலைத் தமிழில் மொழிபெயர்த்த நமது ஆசிரியர் தமிழ்நாட்டிற்குப் பேருதவி செய்துள்ளார்.

—



சச்சிதாநந்தேசுவராய நம:.

# சத்தியார்த்தப் பிரகாசம்.

## (இரண்டாம் பாகம்)

## பதினொன்றாவது அத்தியாயம்.

---

### ஆரியவர்த்தத்திலிருக்கிற (இந்தியா) பற்பல மதங்களினுடைய விசாரணை.

இப்பொழுது ஆரிய லோகத்தினுடைய அதாவது ஆரியவர்த்தத்தில் (இந்தியா) வசிக்கிறவர்களுடைய மதங்களைப் பற்றி விசாரிப்போம். இவ்வாரியவர்த்தத்திற்குச் சமானமான பூமி பூகோளத்தில் ஒன்றுமே கிடையாது. இதற்குச் சுவர்ண பூமி யென்றும் பெயருண்டு. ஏனெனில் சுவர்ணம் முதலான ரத்தினங்களை இது விளைவிக்கிறது. இக்காரணத்தை முன்னிட்டே சிருஷ்டியின் ஆரம்பத்தில் ஆரியர்கள் இங்கு வசிக்கவந்தார்கள். நாம் சிருஷ்டி விஷயங்களைப்பற்றி சொன்னவிடத்தில் உத்தம புருஷர்களுக்கு ஆரியர்களென்றும் அதிலிருந்து வேறுபட்டவர்களுக்குத் தஸ்யுக்களென்றும் பெயரிருப்பதாகச் சொன்னோம். உலகத்து மற்றைய தேசத்தவர்கள் யாவரும் இதைப் புகழ்ந்து* பரிசன வேதி கிடைக்கும்படியான நாடெனவும் நம்புகிறார்கள். பரிசனவேதிகிடைப்பது பொய்யானபோதிலும் சாமானிய உலோகத்தை—தரித்திர அயல் நாட்டார்களைப் பணமுள்ளவர்களாக—தங்கமாகச் செய்யும் சக்தி இதற்குள்ளது.

**एतद्देशप्रसूतस्य सकाशादग्रजन्मनः ।**
**स्वं स्वं चरित्रं शिक्षेरन् पृथिव्यां सर्वमानवाः ॥**

மனு. 2. 20.

ஐயாயிரம் வருடங்களுக்கு முந்தி சிருஷ்டியின் துவக்கத்தில் ஆரியர்களே சகலதேயத்து அதிபதிகளாயிருந்தார்கள். அதாவது பூலோகமுழுவதும் ஒரே இராஜ்யமாருந்தது. கௌரவ பாண்டவர்களினுடைய காலம் வரையிலும் இந்நாட்டின் அரசர்களைக் கீழ்ப்படிந்து அவர்களுடைய சட்டங்களைச் ஜனங்கங்கள் மேற்கொண்டுவந்தார்கள். இதற்குச்சிருஷ்டி முதற்கொண்டு பிரமாணமாயிருக்கும் மனுஸ்மிருதியே தக்க அத்தாக்ஷி. பூகோளத்திலிருக்கும்படியான

---

* தொட்ட தெல்லாவற்றையும் தங்கமாகச் செய்யுங்கல்.

சகல பிராம்மண க்ஷத்திரிய வைசிய சூத்திர, தஸ்யுமிலேச்ச ஜனங்கள் அவர்களுக் கேற்ற வித்தைகளையும் கலைகளையும் அத்தேசத்திலிருக்கும் படியான பிராம்மணர்களிடமிருந்தே அதாவது வித்வான்களிடமிருந்தே கற்றுக்கொண்டார்கள். கேளுங்கள்! மகாராஜ யுதிஷ்டிரருடைய ராஜசூயயாக பரியந்தமும் மகாபாரதயுத்த பரியந்தமும் இவர்களுடைய ஆதீனத்திலேயே சகல இராச்சியங்களும் இருந்தன. சினதேசத்துப் பகதத்தனும் அமெரிக்காவின் பப்ருவாகனனும், ஐரோப்பாதேயத்துப் பூனைக் கண்களை யொத்த பிடாலாக்ஷனும் கிரேக்க ராஜனும் பார்ஷியாவின் சல்ய ராஜனும் இன்னும் முதலானவர்களும் கட்டளை யிட்டபிரகாரம் இராஜசூய யாகத்திற்கும் மகாபாரத யுத்ததிற்கும் வந்திருந்தார்கள். இரகு மகாராஜன் அதிகாரத்தை இராவணனும் கீழ்ப்படிந்திருந்தான். ஸ்ரீராமச்சந்திரருடைய காலத்தில் அவன் விரோதமானவுடன் அவனைத்தண்டித்து இராஜ்யத்தை நஷ்டப்படுத்தி அவனுடைய தம்பி விபீஷணனுக்கு இராச்சியாபிஷேகஞ் செய்து வைத்தார். சுவாயம்பவ ராஜன் முதற்கொண்டு பாண்டவர்கள் பரியந்தம் ஆரியசக்கரவர்த்திகளே இராச்சியம் செய்துகொண்டிருந்தார்கள். அதற்குப் பிறகு பரஸ்பர விரோதத்தினால் நஷ்டம் ஏற்பட்டது. ஏனெனில் பரமாத்மாவினுடைய சிருஷ்டியில் கர்வம் பிடித்தவர்கள், அநியாய காரியஞ்செய்கிறவர்கள் அவித்வான்கள் இவர்களுடைய இராஜ்யம் வெகுநாள் நிலைநிற்காது. அதிகப்பணத்தினாலும் கணக்கற்ற உபயோகத்தினாலும் ஆலசியம் தைரியமின்மை, பொறாமை, துவேஷம் ஆர்வம் முதலானவைகள் உண்டாவது உலக இயல்பே எனத்தோன்றுகிறது. அப்பொழுது நாட்டில் நல்லஅறிவுகுன்றி துர்குணங்களும் துஷ்டகாரியங்களும் உண்டாகிறது. அதாவது மாம்சாகாரம் மதுபானம் பால்யவிவாகம் அடங்காமை இவைகள்விருத்தியாகின்றன.

எவராலும் எதிர்த்துநிற்கக்கூடாவண்ணம் ஜனங்களினுடைய இராணுவப்பயற்சியும் தளவாடங்களும் விருத்தியாகுங்கால் பட்சபாதம் அதிகரித்து அநியாயம் பெருகுகிறது. இவ்விரண்டுகெடுதல்களும் உண்டாகுங்கால் பரஸ்பர விரோதம் உண்டாகிறது. அல்லது அவர்களைவிடக் கீழ்குலத்துதித்த சாமர்த்தியமுள்ள வேறொருவன் சிவாஜியும் கோவிந்தசிங்கும் மொகலாய ராஜாங்கத்திற்கு விரோதமாகக் கிளம்பி அவர்களுடைய இராச்சியத்தைச் சின்னாபின்னம் செய்ததுபோல் சாமர்த்தியமுள்ளவனாகிறான்.

अथ किमेतैर्वा परेऽन्ये महाधनुर्धराश्चक्रवर्तिनः केचित् सुद्युम्नभूरिद्युम्नेन्द्रद्युम्नकुवलयाश्वयौवनाश्ववद्ध्र्यश्वाश्वपतिशशबिन्दुहरिश्चन्द्राऽम्बरीषननक्तुसर्यातिययात्यनरण्याक्षसेनादयः । अथ मरुत्तभरतप्रभृतयो राजानः ॥

மைத். உப. 1. 4.

சிருஷ்டி முதல் மகாபாரதயுத்தம்வரை சக்கரவர்த்திகளும் சார்வபௌமர்களும் ஆரிய குலத்திலிருந்தே உண்டானவர்கள் என்பது இதனால் நன்கு விளங்குகிறது. இவர்களுடைய சந்தானங்கள் துரதிருஷ்டவசத்தினால் ராஜப்

பிரஷ்டர்களாய் விதேசிகளினுடைய பாததூளிகளாய் விட்டார்கள். சுத்யும்னன், பூரித்யும்னன், இந்திரத்யும்னன், குவலயாசுவன், யௌவனாசுவன், வதூதிரஸ்வன், அசுவபதி, சசவிந்து, அரிச்சந்திரன், அம்பரீஷன், நாத்து சர்யாதி, யயாதி, அனரண்யன், மருத்த, பரதன் முதலான சகல பூமியிலேயும் பிரசித்தியான சார்வபௌம சக்கரவர்த்திகளினுடைய பெயர்கள் காணப்படுவது போலவே சுவாயம்பவ முதலான பெயரும் மனுஸ்மிருதி மகா பாரதம் முதலான கிரந்தங்களில் தெளிவாய் எழுதப்பட்டிருக்கிறது. அஞ்ஞானிகளும் பட்சபாதமுள்ளவர்களுமே இதைப்பொய் என்பார்கள்.

வினு :—ஆக்னேயாஸ்திரம் முதலானவைகளெல்லாம் எழுதப்பட்டிருக்கிறதே. அவைகள் உண்மையா பொய்யா? துப்பாக்கி முதலானவைகள் அச்சமயத்திலிருந்ததா இல்லையா?

விடை:—ஆமாம் அது உண்மையே. துப்பாக்கியும் வெடிமருந்தும் அக்காலத்தில் உபயோகத்திலிருந்தன. சாஸ்திரம் பயிற்சி இவைகளைக்கொண்டு செய்யலாம்.

வினு:— தேவதைகளினுடைய மந்திரபலத்தைக்கொண்டு இவைகளுண்டானவைகளா?

விடை :—இல்லை. ஆழ்ந்தவிசாரணையை (மந்திரம்)க்கொண்டு அஸ்திர சஸ்திரங்கள் செய்யக்கூடும். பலவார்த்தைகள் ஒன்றுசேர்ந்திருக்கும் படியான பதங்களைச் சபிப்பதினுலொன்றும் உண்டாகாது. மந்திரத்தினுல் அக்கினியை உண்டாக்கக்கூடும் என்கிறவர்களிடம் ஜபிக்கிறவர்களுடைய தொண்டையையும் நாக்கையும் ஏன் அது எரிக்கிறதில்லை யென்று கேழ்க்கவேண்டும். தன் சத்துருவின் மரணத்தைக்கோருங்கால் தானே இறந்து போவது என்னவிந்தை? மந்திரம் என்பதிற்கு விசாரணை என்று அர்த்தம். அதனுலேயே இராச்சியகாரியங்களை விசாரணை செய்கிறவனுக்கு **ராஜமந்திரி** என்றுபெயர்.

அம்மாதிரியே சிருஷ்டிப் பொருள்களினுடைய ஞானத்தை அறிந்து அதை உபயோகப்படுத்தி தொழில்களிலும் இயந்திரங்களிலும் பல விஷயங்களைப் பிரசுரஞ்செய்கிறுர்கள். உதாரணமாக் கொளித்தினவுடன் பாணமாகவோ வெடியுள்ளதாகவோ இருக்கும் இரும்புடன் தேவையுள்ள வஸ்துவைச்சேர்த்தால் அக்கினி சேர்க்கையால் வாயு மண்டலத்தில் பாய்ந்து ஆகாசத்துடனே அல்லது சூரியக்கிரணங்களுடனே சேருங்கால் நெருப்புப் பிடித்து ஆக்னேயாஸ்திரமாகிறது. தன்னுடைய புகைப்பட்டவுடன் மேகமாகும்படியான பொருளையுடைய **வருணஸ்திரத்தை** எதிர்க்கட்சித் தலைவன் போடுவானேயானுல் அப்பொழுது அது பலனற்றுப் போகிறது. அது ஆகாசத்துடன் கலந்தவுடன் மழையாகப் பெய்து நெருப்பை அணைக்கிறதினுல் வருணஸ்திரமாகிறது. இம்மாதிரியே—**நாகபாசமும்**—சத்துருவின் பேரில் பிரயோகிக்குங்கால் அவர்களுடைய அவயவங்களை முடக்கிவிடும். **மோகனாஸ்திரமும்**—பிரமையை உண்டு பண்ணும்படியான அதனுடைய புகை சத்துருக்களின் வீரர்களை மயக்கும். **பாசுபதாஸ்திரம்**—கம்பியிலிருந்தோ கண்ணுடியிலிருந்தோ உண்டு செய்த

காந்தத்தைக் கொண்டு சத்துருவைக் கொல்லக் கூடிய ஒரு விதமான ஆக்னே யாஸ்திரமாகும்.

தோப் (துப்பாக்கி) பந்தூக் (கைத்துப்பாக்கி) இவ்விரண்டும் அந்நிய பாஷையைச் சேர்ந்தது. சம்ஸ்கிருதத்தை யாவது அல்லது வேறு எந்த இந்திய சுதேசபாஷையையாவது சேர்ந்ததில்லை. 'தோப்'புக்கு சம்ஸ்கிருதத்தில் சதத்துவனி என்றும் 'பந்தூக்கு'க்குப் பூஷண்டி என்றும் பெயர். சம்ஸ்கிருதம் அறியாதவர்களும்,படிக்காதவர்களும் சொல்லுவதைப் புத்திமான்கள் உண்மையான தென்று கருதக்கூடாது. பூகோளத்தில் விளங்கும்படியான சகல வித்தைகளும் ஆரியவர்த்தத்திலுண்டானவைகளே. இங்கிருந்தே எகிப்திற்கும் அங்கிருந்து கிரீசுக்கும், அங்கிருந்து ஐரோப்பாமுழுவதும் ஐரோப்பாவிலிருந்து அமெரிக்கா முதலான தேசத்திற்கும் பரவிற்று. இப்பவும் ஆரியவர்த்த நாடே சம்ஸ்கிருத வித்தையில் முந்தினதாயிருக்கிறது. ஜர்மனி தேசத்தில் சம்ஸ்கிருதம் ஓங்கி வளர்ந்திருக்கிறதென்பதும் மாக்ஸ் மூலர் அறிந்த மாதிரி சம்ஸ்கிருதம் வேறு யாருக்கும் தெரியாதென்பதும்,"கோட்டையில்லாத ஊரில் ஆமணக்கெண்ணெய் செடியே மரம்" என்பது போலிருக்கிறது. சமஸ்கிருதப்பிரசாரமில்லாத ஐரோப்பிய நாட்டில் மாக்ஸ் மூலர் கொஞ்சம் படித்ததானது அந்நாட்டில் மேலே. ஆனால் இந்தியாவுடன் உற்றுநோக்குங்கால் அது ஒன்றுமாகாது. ஜர்மன் கலாசாலைத் தலைவர் ஒருவரிடமிருந்து அவ்விடத்தில் சம்ஸ்கிருத தபால் ஒன்றின் அர்த்தத்தை அறிகிறவர்கள் ரொம்பகுறைவே யென்று அறிந்தேன். மாக்ஸ் மூலருடைய சம்ஸ்கிருத இலக்கியங்களையும் அவருடைய வேதவியாக்கியானங்கள் கொஞ்சத்தையும் பார்த்தபிறகு அங்குமிங்கும் கிடைக்கும்படியான ஆரியவர்த்த ஜனங்களுடைய உரையை வைத்துக்கொண்டே அவர் செய்திருக்கிறார் என்று எனக்கு விளங்குகிறது. உதாரணமாக "யுஞ்சந்தி பக்னமருஷம் சரந்தம் பரிதஸ்துஷ: ரோ சந்தே ரோசனாதிவி" இவ்வாக்கியத்திலுள்ளவார்த்தைக்குக் குதிரையென்று அர்த்தம் பண்ணுகிறார். சாயனாச்சாரியர் அதைச் சூரியன் என்று பண்ணுவது கூட மேலாயிருக்கிறது. நான் என்னுடைய "ரிக்வேதாதி பாஷிய பூமிகை"யில் நன்கு விளக்கிக் காட்டியிருக்கும் வண்ணம் இதனுடைய உண்மையான பொருள் பரமாத்மாவே யாகும். இவைகளிலிருந்து ஜர்மனியிலும் மாக்ஸ் மூலருக்கும் சம்ஸ்கிருத வித்தையில் நிபுணத்துவம் எவ்வளவு உண்டென்று அறிந்துகொள்ளவும்.

பூலோகத்திலிருக்கும் படியான சகலமதங்களும் கலைகளும் ஆரியவர்த்த நாட்டிலிருந்தே உண்டானவைகள். பைபிள் இன் இந்தியா என்னும் புஸ்தகத்தில் ஜைகாலயட் என்னும் பிரஞ்சுக்காரர் சகல கலைக்கும் நல்ல ஸ்தாபனங்களுக்கும் களஞ்சியம் ஆரியவர்த்த நாடு என்கிறார். சகல சாஸ்திரங்களும் தத்துவங்களும் இத்தேசத்திலிருந்தே உண்டானதென்றும் சொல்லுகிறார். அவர் பரமேச்வரனை என்ன பிரார்த்தனை செய்கிறாரென்றால் "ஆதிகாலத்தில் ஆரியவர்த்த நாடு உன்னதஸ்திதியை அடைந்திருந்தது போல் என்னுடைய தேசத்தையும் செய்யவும் என்கிறார். டாராசிகோஹ் ராஜனும் சம்ஸ்கி

கிருத பாஷையில் வித்தையும் கலையும் பூராவாக விருப்பதுபோல் வேறு எந்த பாஷையினும் இல்லையெனவே அபிப்பிராயப்படுகிறார். நான் அரபி முதலான பாஷைகளைக் கற்றும் என்னுடைய சந்தேகங்கள் தீர்ந்து களிப்பை யடையவில்லை என்றும் சம்ஸ்கிருதத்தைப் பார்த்துக் கேட்டபிறகே சந்தேக மன்னியிலாய் மனங்களிப்படைந்தேன் என்கிறார்.

காசிமாநகரிலுள்ள ராசி சக்கரமானது சரியாகக் கவனிக்கப்படா விட்டாலும் வான சாஸ்திரத்தில் அது எவ்வளவு மேன்மையான விஷயங் களை விளக்குக்கிறதென்று கவனிக்கவும். ஜயபுரி அரசர்கள் அதைச் சரிவரப் பார்த்து வருவார்களேயானால் நன்றாயிருக்கும்.

நாயகமணியாய் விளங்கி மேன்மைப் பெற்றிருந்த இந்நாடானது மகா பாரத யுத்தத்தில் அடைந்த அதிர்ச்சியிலிருந்து மீறி இன்னும் பழையஸ்தி தியை அடையவில்லை. சகோதரர்களுக்குள் சண்டை ஏற்பட்டு அடித்துக் கொள்வார்களேயானால் நாசம் உண்டாகும் என்பதில் ஏதாவது சந்தேகமும் உண்டோ?

**विनाशकाले विपरीतबुद्धिः ॥**

நாசம் வருங்காலத்தில் புத்தியும் மயங்கி விபரீதமாகிறது. சொல்லும் படியான நல்லவார்த்தைகளெல்லாம் நம்பிக்கை யற்றதாயும், அப்பொழுது தீச்சொற்களெல்லாம் நன்மையுள்ளதாயும் மாறுகிறது. அக்குருக்ஷேத்திர ரணகளத்தில் வித்வான்கள், இராஜர்கள், இராஜராஜர்கள், ரிஷிகள் முதலான வர்கள் கொலை யுண்டு மாண்டு வித்தையும் வேதோக்த தர்மமும் குன்றிவிட் டது. பொறாமை பேராசை ஆர்வம் முதலானவைகள் ஜனங்களின் மனதைக் கவர்ந்தன. பலமுள்ளவர்கள் தேசத்தைக் கைப்பற்றி அரசர்களென்று அறிவித் துக் கொண்டார்கள். இம்மாதிரியாக இராஜாங்கம் பிளவுண்டிருக்குங் காலத்தில் வெளி தேசங்களை எவர்கள் அதிகாரத்தின்கீழ் வைத்துக் கொண்டிருக்கக் கூடும்?

பிராம்மணர்களே வித்தை யற்றவர்களாகும் பொழுது க்ஷத்திரியர்கள் வைசியர்கள் சூத்திரர்கள் அறிவற்றுப்போவதைப் பற்றிக்கேழ்ப்பானேன். தலை முறை தலைமுறையாய அர்த்தத்துடன் வேதம் முதலான சாஸ்திரங்களை ஓதி வந்ததும் மறைந்து விட்டது. கேவலம் ஜீவனோபாயத்திற்கு மாத்திரம் பிராம் மணர்கள் பாடஞ் செய்து வந்தார்கள். அதைக்கூட அவர்கள் க்ஷத்திரியர் களுக்கும் பிறர்களுக்கும் சொல்லிக் கொடுக்கவில்லை. அவித்வான்கள் ஜனங் களின் போதகர்களாகவே வஞ்சனை, கபடம், புரட்டு, அதர்மம் முதலானவை கள் விருத்தியாயிற்று. பிராம்மணர்கள் தங்கள் ஜீவனத்திற்கு ஏதாவது ஒரு வழிதேட வேண்டுமென்று யோசித்து நிச்சயஞ் செய்து கொண்டு க்ஷத்திரியர் முதலானவர்களுக்கு "நாங்கள்தான் உங்களுடைய பூஜ்ய தேவதைகள். எங்களை வணங்காமல் உங்களுக்கு முக்தி கிடையாது. எங்களைப் பூஜை செய்யா

மல் போனால் கஷ்டமான நரகத்தில் விழுவீர்கள்'' என்று உபதேசஞ் செய்தார்கள்.

வேதங்களிலும் ரிஷி முனிகளால் வரையப்பட்ட சாஸ்திரங்களிலும் பூர்ண வித்தையை உடையவர்களையும் தார்மிகர்களையும் பிராம்மணன் என்று சொல்லுவதுபோக இப்பொழுது மூர்க்கனும் தூர்த்தனும், காமியும் வஞ்சகனும், தர்மமற்றவனும் பிராம்மணன் என்று கூறிக்கொண்டு தன்னுடைய வழிப்பாட்டைத் தேடுகிறான். உண்மை வித்வான்களுடைய குறிகள் இவர்களிடம் எவ்விதமாய் விளங்கும்? க்ஷத்திரியர்கள் முதலானவர்கள் சம்ஸ்கிருதம் முழுவதும் அறியாமல் போகவே பிராம்மணர்கள் சொல்லும்படியான கட்டுக்கதைகளை யெல்லாம் உண்மையென நம்பினார்கள். பெயரினால் மாத்திரம் பிராம்மணர்களாயிருக்கும் இவர்கள் தைரியமாய் தங்களுடைய மாயவார்த்தைகளினால் அவர்களைக்கட்டி **ब्रह्मवाक्यं जनार्दनः ॥** என்பதைப் படித்துக்கொடுத்தார்கள், "பிராம்மணன் முகத்திலிருந்துவரும் வார்த்தைகளெல்லாம் நேராக பகவான் வாயிலிருந்தே'' வந்தது என்பதாம்.

வித்தையைவிட தனத்தை அதிகம் கொண்டிருந்த இக்க்ஷத்திரியர்கள் அவர்களினுடைய ஆட்டத்திற்கு ஆளானபிறகு பெயரினால் பிராம்மணர்களான இவர்களுக்கும் விஷயசுகங்களை அனுபவிக்கத்தக்கச்சமயம்வாய்த்தது. பூமியிலிருக்கும்படியான நல்லபதார்த்தங்கள் சகலமும் பிராம்மணர்களுக்கென்றே சொன்னார்கள். சுருங்கச்சொல்லுங்கால் குணம் கர்மம் சுபாவம் இவைகளினால் ஏற்படும் பிராம்மணன் முதலான வர்ணவியவகாரங்களை நாசப்படுத்தி பிறப்பினாலுண்டாகிறதென்றுவைத்தார்கள். இறந்தவர்களின்பேரில்கூட எஜமானர்களிடமிருந்து தானங்கள்வாங்கிக்கொள்ள வாரம்பித்தார்கள். இவர்கள் மனம் போன பிரகாரம் காரியம் செய்யவாரம்பித்தார்கள். "நாங்கள்தான் பூதேவர்கள்'' என்றும்" எங்களுடைய பணிவிடை யன்னியில் தெய்வலோகம் எவருக்கும் கிடையா'' தென்றும் சொன்னார்கள். புழு பூச்சி எரும்புமுதலியவைகளாக மாறி கோரநரகத்தைவிட இழிவான உலகத்தையடைய யோக்கியதையற்ற காரியத்தைச்செய்யும் அவர்களை "உங்களுக்கு எவ்வுலகம் கிடைக்குமோ'' என்றால் கடுஞ்சினங்கொண்டு அவர்கள் "பிரம்மதுரோகிவினஸ்யதி'' என்கிறபிரகாரம் நாங்கள் உங்களைச்சபித்தால் நாசமடைவீர்கள் என்றுசொல்லுவார்கள். பூர்ணவேதஞ்ஞானமிருந்து பரமாத்மாவை அறியும் படியானவும் தர்மாத்மாக்களானவுமான உலக உபகாரிகளை எவன் தூஷிக்கிறானோ அவன் அவசியம் நரகத்தை யடைவான். அவர்களைப் பிராம்மணர்களென்றுவது அவர்களை சேவை செய்யவாவது கூடாது.

வினா :—அவ்விதமாயின் நாங்கள் யார்?

விடை :—நீங்கள் போப்கள்.

வினா :—போப் என்பவர் யார்?

விடை :—போப் என்பதற்கு லத்தீன் பாஷையில் தகப்பன் பெரியவர் என்று அர்த்தம். ஆனால் இப்பொழுது எவன் வஞ்சகத்தினால் தன் எண்ணத்தைச் சாதித்துக் கொள்ளுகிறானோ அவனுக்குப் போப் என்று பெயர்.

வினு :—எங்கள் தாயும் தகப்பனும் பிராம்மணர்களான படியினுலும் நாங்கள் சாதுக்களின் சீடர்களான படியினுலும் **பிராம்மணர்களும் சாதுக்களு மாகிறோம்.**

விடை :—அது உண்மையே. தகப்பன் தாய் பிராம்மணன் பிராமணத்தி யானதினுலும் ஏதோ ஒரு சாதுவினுடைய சீடனுனதினுலுமே ஒருவன் பிராம் மணனும் சாதுவுமாகமாட்டான். குணகர்மம் சுபாவம் இவைகளினுலும் பரோ பகாரத்தினுலுமே பிராம்மணனுகவும் சாதுவாகவுமாகிறுன். ரோமாபுரியின் போப்கள் தங்களுடைய சீடர்களுக்கு இம்மாதிரி சொல்லுவது உண்டு "உங் களுடைய பாபங்களை என்முன் கூறிவிட்டால் நான் அதை மன்னித்து விடு வேன், எங்களுடைய பணிவிடையும் உத்திரவும் மன்னியில் யாரும் சுவர்க்கத் தையடைய முடியாது. உங்களுக்குச் சுவர்க்கத்திற்குப்போக இஷ்டமுண்டா னல் இங்கே என்னிடம் எவ்வளவு திரவியம் சேகரிக்கிறீர்களோ அங்கே அவ்வ ளவு இலாபங் கிடைக்கும்". இதைக்கேட்டவுடன் புத்தியன்னியில் பணம் அதி கமுள்ளவர்கள் சுவர்க்கத்திற்குப் போகவேண்டும் என்கிற அவா மிகுதியினுல் போப்பிற்கு வேண்டிய அளவு பணத்தை யளிக்கிறுர்கள். அப்பொழுது அவர் இயேசு மேரி இவர்களுடைய சிலுவையின் முன்னின்று ஹூண்டியல் எழுது வார் "ஏ. ஏசுநாதா! தங்களுடைய கணக்கில் ரூ 10,0000 சுவர்க்கத்திற்கு வரு வதற்காக இவ்விடத்தில் கட்டியிருக்கிறுன். அவன் சுவர்க்கத்திற்கு வந்தால் அப்பொழுது நீங்கள் தங்கள் தகப்பனுடைய இராஜ்யத்தில் ரூ 25,000க்கு வீடு தோட்டம் நந்தவனங்களும், ரூ 25000 க்குக் குதிரை, வண்டி, நாய், சேவகன் களும், ரூ 25,000க்கு அன்னம் ஆகாரம் துணிகளும் மீதி ரூ 25000க்கு ரொக்கமாய் அவனுடைய அண்ணன் தம்பி சிநேகிதன் முதலானவர்களுடைய செலவிற்கும் கொடுக்கவேண்டியது" பிறகு போப் தன்னுடைய கை நாட்டை வைத்து கெஞ்சு வோனுக்கு "உன்னை அடக்கம் செய்யுமுன் உன் தலையணி யின் கீழ் இதை வைக்கச் சொல்லு. அப்பொழுது வானத்திலிருந்து தேவ தூதர்கள் வந்து அழைத்துக் கொண்டு போய் உண்டியிலில் கண்டிருக்கும் வண்ணம் சகல வசதிகளும் செய்வார்கள்" என்று சொல்லிக்கொடுப்பார்கள்.

சுவர்க்கத்தின் ஒப்பந்தம் போப்பையே சேர்ந்ததென்று தோன்றுகிறது. ஐரோப்பாவில் மூடத்தனமிருந்தவரையில் போப்பினுடைய லீலைகள் நடந் தேரிவந்தது. படிப்பும் ஞானமும் விருத்தியாகவே இதுகுறைந்துகொண்டே வந்தது. ஆனுலும் அடியுடன்ஒழியவில்லை. ஆரியவர்த்தநாட்டிலும் போப்க்கள் லட்சக்கணக்கான உருவமெடுத்து அவர்களுடைய மாய வலையைப்பரப்பினுர் கள். அதாவது அரசனுக்கும்பிரஜைகளுக்கும் படிப்பில்லாமல் நல்லபுருஷர்களு டைய சங்கமும் அன்னியில் செய்துவிட்டார்கள். அல்லும் பகலும் தப்புவழி யைக்காட்டுவதிலேயே காலத்தைக்கழிகிறுர்களே ஒழிய வேறு வழிகளிலில்லை. கள்ளங்கபடத்தினுல்காரியங்கள் செய்கிறவர்களே போப்க்கள். அவர்களில் கூட தர்மசிந்தையுள்ள வித்வான்கள் பரோபகாரிகளிருக்கிறுர்கள். அவர்களைப் பிராம்மணர்களென்றே ஞாபகத்தில் வைக்கவேண்டும். ஆகையால் கபடமுள்

ளவர்கள் வேஷதாரிகள் சுய காரியப்பிரியமுள்ளவர்கள் இவர்களைப் போப்க்க ளென்றும் உத்தமபுருஷர்களைச் சாதுக்களென்றும் அறியவேண்டும். சமணர் கள் மகம்மதியர்கள் கிறிஸ்துவர்கள், இவர்களுடைய வலையினின்று தப்பி வேதம் முதலான சாஸ்திரத்தை இசையுடன்கூட ஓதி ஓதுவிக்கிற பிராம்மணர்களில் லாமலிருந்தால் எவர்களால் ஆரியர்களுடைய மனதில் வேத ஆசையையூன்றி சரியான வருணாச்சிரமதர்மத்தைக் காப்பாற்றமுடியும்? உண்மையான பிராம் மணர்களும் சாதுக்களுமே அதைச்செய்திருக்கிறார்கள்.

போப் லீலைகளிலிருந்தும் சமணம் முதலான நம்பிக்கைகளிலிருந்தும் தப்புவது விஷத்திலிருந்து அம்ருதத்தை எடுப்பதுபோலாம். சீடர்கள் வித்தை யற்ற பொழுதுகொஞ்சம் கற்றபோப்க்கள் அகந்தையுள்ளவர்களாய் ஒருவருக் கொருவர்சேர்ந்து நிச்சயஞ்செய்துக்கொண்டுராஜன் முதலானவர்கள் முன்னி லையில் பிராம்மணர்களும் சாதுக்களும் தண்டிக்கக்கூடாதவர்கள் என்று சொன் னார்கள்.

பிராம்மணர்கள் சாதுக்கள் விஷயத்தில் உபயோகிக்கவேண்டிய இவை களைத் தங்களுக்குத் தானென்றே சொல்லிவந்தார்கள். பொய் வார்த்தைகளையு டைய புஸ்தகங்களை யெழுதி தங்கள் அதிகாரத்தை நிலைநிறுத்த பெரிய ரிஷி கள் முனிகளின் பெயரால் அதை வெளியிட்டார்கள். பெரிய ரிஷிகளின் பெய ரைக்கொண்டு அதைஜனங்களுக்கு அறிவித்து நாட்டின் சட்டங்களினால் பாதிக்கப்படாதவர்களாய் தங்களிஷ்டப் பிரகாரம் உலாவி வந்தார்கள். அதா வது உறங்குதல் உண்ணுதல் விழித்தல் உட்காருதல் போவது முதலானவைக ளையும் தங்களுடைய சம்மதமன்னியில் செய்யக்கூடாதென்கிறார்கள். உண் மையில் போப்போன்ற இப்பிராமணர்களும் சாதுக்களும் தங்களிஷ்டப் பிரகா ரம் செய்யலாமென்றும் அவர்களைத் தண்டிக்கக் கூடாதென்றும் ராஜர்களு டைய மனதில் பதியப்பண்ணி விட்டார்கள். இவ்வளவு முட்டாள் களானவுடன் போப்க்கள் தங்கள் மனம் போனபிரகாரம் செய்யவாரம்பித்து இதரர்களை யும் செய்யச் சொன்னார்கள். இத்தீயக்குணங்கள் மகாபாரத யுத்தத்திற்கு முந்தியே வேரூன்றி ரிஷிகள் முனிகளிருந்த போதிலும் அலட்சியம் அசட் டை விரோதம் துவேஷம் இவைகளினுடைய முளை அப்பொழுதே கண்டு பெரிய மரமாகிவிட்டது. உண்மை உபதேசம் எப்பொழுது குலைந்ததோ அப் பொழுதே இந்தியாவில் அவித்தை பரவி பரஸ்பர விரோதம் உண்டாயிற்று. ஏனென்றால் சாங்கியத்தில் சொல்லியிருக்கும் வண்ணம்.

उपदेश्योपदेष्टृत्वात् तत्सिद्धिः । इतरथान्धपरम्परा ॥ சாங். 3. 76. 81.

உண்மை உபதேசம் ஓங்கியவருங் காலத்திலேயே தர்மார்த்தகாம மோட் சம் நன்கு சித்திக்கும். உத்தம உபதேசகர்களும் கேழ்க்கிறவர்களுமில்லாத காலத்தில் அடர்ந்த இருள் ஆழ்ந்து கொள்ளுகிறது. சத்புருஷர்கள் உண்மை யாய் சத்தியோபதேசஞ் செய்யுங்கால் அஞ்ஞான இருள் மறைந்து மெய்ஞ்ஞா னம் வெளியாகிப்பரவுகிறது.

பிறகுபோப்க்கள் தங்களையும் தங்களுடைய ஜனங்களையும் பூஜை செய் வதினாலேயே உங்களுக்கு க்ஷேமம் உண்டாகுமென்றனர். எல்லோரும் இவர்க ளுடைய வசமானபிறகு போப்க்கள் தங்கள் வேலைகளைமறந்து சிற்றின்பங்க ளில் அமிழ்ந்தார்கள். அவர்கள் இடையனைப்போலவும் இவர்கள் ஆடுகளைப் போலவும் மாதி வித்தை பலம் புத்தி பாராக்கிரமம் வீரத்தனம் முதலான நற் குணங்கள் நாசமாகி விட்டன. சிற்றின்பங்களிலிறங்கின வுடனே மாம்சம் சாப்பிடவும் சாராயம்குடிக்கவும் ஆரம்பித்தார்கள். இதிலிருந்தே

வாம மார்க்கிகள்

உதித்து சிவ உவாச, பார்வத்யேளவாச பைரவ உவாச, சிவன் சொன்னார், பார்வதி சொன்னாள், பைரவன் சொன்னார் என்று எழுதி தந்திரங் களென்ற பெயரையும் அளித்தார்கள்: அவைகளில் கீழ்க்கண்ட நூதன விஷய ங்கள் காணப்படுகின்றன.

मद्यं मांसं च मीनं च मुद्रा मैथुनमेव च ।
एते पञ्च मकाराः स्युर्मोक्षदा हि युगे युगे ॥ காளி தந்திரம்.

மதுபானம், மாம்சம், மீன், பணியாரம் மைதுனம் என்னும் 'ம'வில் ஆரம் பமாகும் இவ்வைந்தும் எப்பொழுதும் மோட்சத்தையளிக்கும்.

प्रवृत्ते भैरवीचक्रे सर्वे वर्णा द्विजातयः ।
निवृत्ते भैरवीचक्रे सर्वे वर्णाः पृथक् पृथक् ॥ குலார்ணவ தந்திரம்.

பைரவீசக்கரத்திலிருக்கும் வரையில் சகலவர்ணங்களும் பிராம்மணர் களே. அதிலிருந்து பிரிந்தால் அவரவர்கள் தங்கள் தங்களுடைய வர்ணத்தை யடைகிறார்கள்.

पीत्वा पीत्वा पुनः पीत्वा यावत्पतति भूतले ।
पुनरुत्थाय वै पीत्वा पुनर्जन्म न विद्यते ॥ மகாநிர்மாண தந்திரம்.

குடித்துக் குடித்துக் குடித்துக் கீழே விழுந்து திரும்பி எழுந்திருந்தும் எவன் குடிக்கிறானோ அவனுக்கே மறு பிறப்பு கிடையாது.

मातृयोनिं परित्यज्य विहरेत् सर्वयोनिषु ।
वेदशास्त्रपुराणानि सामान्यगणिका इव ॥
एकैव शाम्भवी मुद्रा गुप्ता कुलवधूरिव । ஞானசகங்லனி சூத்திரம்

தாயிடம் தவிர மற்றவர்களுடன் சம்யோகஞ் செய்யலாம். வேதங்களும் சாஸ்திரங்களும் சாதாரண விலைமாதர்களைப் போலவேயாம். சாம்பவீமுத்தி ரையோ நாணமுள்ள குடும்ப ஸ்திரீயைப் போலாகும்

இவர்களுடைய லீலையைப் பாருங்கள். வேத விரோதமாயும் அதர்மமாயுமிருக்கும்படியான காரியங்களை வாமமார்க்கிகள் சிலாக்கிய மென்று கருதுகின்றார்கள். மாம்சம், மதுபானம், மீன், பணியாரம் புணர்ச்சி இவைகளையெல்லாம் மோட்ச சாதனங்களாகக் கருதுகிறார்கள். நல்ல ஆடவர்களைச் சிவனாகவும் பெண்டீர்களைப் பார்வதியாகவும் கருதி,

**अहं भैरवस्त्वं भैरवी ह्यावयोरस्तु सङ्गमः ।**

"நான் தான் சிவன்" "நீதான் பார்வதி" சம்யோகம் செய்யலாம் என்று சொல்லி யாராயிருந்தபோதிலும் அவர்களுடன் ஒன்று கூடுகிறார்கள். அதில் கெடுதல் ஒன்றையும் அவர்கள் அறிகிறதில்லை. தொடக்கூடாத நீசஸ்திரீகளை அவர்கள் ரொம்ப சுத்தமுள்ளவர்களாகக் கருதுகிறார்கள். உதாரணமாக சாஸ்திரங்களால் தீண்டக்கூடாதெனப்பட்ட சூதகஸ்திரீகள் வாமமார்க்கிகளால் ரொம்ப சுத்தமுள்ளவளாகக் கருதப்படுகிறான்.

**रजस्वला पुष्कर तीर्थं चांडाली तु स्वयं काशी चर्मकारी प्रयागः स्याद्रजकी मथुरा मता । अयोध्या पुक्कसी प्रोक्ता ॥** உருத்திரயாமல தந்திரம்.

சூதகஸ்திரீயுடன் சம்யோகஞ் செய்வது புஷ்கரஸ்நாநத்திற்குச் சமானமென்றும், சண்டாளியுடன் சேருவது காசியாத்திரைக்குச் சரியானதென்றும், சக்கிலிச்சியுடன் சேருவது பிரயாகை ஸ்நாநத்திற்கு ஒப்பானதென்றும் வண்ணாத்தியுடன் கூடுவது மதுராபரியாத்திரைக்குச் சமானமென்றும், வேசியுடன் கூடுவது அயோத்தியாத்திரைக்குச் சரியான தென்றும் கருதுகிறார்கள். மதுவைப் புண்ணியதீர்த்தம் என்றும் மாம்சத்தைச் சுத்தமென்றும், புஷ்பமென்றும் மீனை மூன்றுவதென்றும் நீர்க்கரி என்றும், மைதுனத்தை நான்காவதென்றும் பணியாரத்தை ஐந்தாவதென்றும் யாரும் அறியாமலிருக்கப் பெயர் வைத்திருக்கிறார்கள். தங்களைத் தாமரையை யொத்தவர்கள், நல்ல மனதுடையவர்கள் வீரர்கள், தயை யுள்ளவர்கள் பலமுள்ளவர்கள் எனவும் வாமமார்க்கத்தைத் தழுவாதவர்களை முள்ளை யொத்தவர்களென்றும், புரட்டர்களென் மெலிந்தவர்களென்றும் பெயரிட்டு இருக்கிறார்கள்.

பைரவீ சக்கரத்திலிருக்கும் வரையில் பிராம்மணன் முதல் சண்டாளன் வரையில் துவிஜன் ஆகிறார்களென்றும் அதிலிருந்து கலைந்தவுடன் அவரவர்கள் தங்களுடைய பழைய வர்ணத்தை யடைகிறார்களென்றும் சொல்லுகிறார்கள். வாம மார்க்கிகள் பூமியின் பேரிலோ அல்லது பலகையின் மேலோ ஒரு முக்கோணத்தையோ அல்லது சதுரத்தையோ அல்லது சக்கரத்தையோ எழுதி அதின் பேரில் சாராய ஜாடியை வைத்துப் பூஜை செய்து

**ब्रह्म शापं विमोचय । हेमद्य ॥**

மதுபானமே! நீ பிரம்ம சாபத்திலிருந்தும் மீண்டவன் என்கிறார்கள். வாம மார்க்கத்தவர்களைத் தவிர வேறு யாரும் வரக்கூடாத விடத்தில் ஆடவர்களும்

பெண்டீர்களும் கூடி புருஷர்கள் ஸ்திரீகளை நிர்வாணமாகச் செய்து பூஜை செய்கிருர்கள். ஸ்திரீகளும் புருஷர்களை நிர்வாணமாகச் செய்து பூஜை செய்கிருர்கள். பிறகு, தன்னுடைய மனைவி, பெண், தாய் சகோதரி, நாட்டுப் பெண் எவர்களா யிருந்த பொழுதிலும், புருஷர்கள் எந்த ஸ்திரியையாவது மைதுனஞ் செய்யலாம்.

பிறகு பாத்திரம் ஒன்றில் சாராயம் நிறைத்து ஒரு தட்டு நிரம்ப மாம்சம், பணியாரம், இவைகளையும் வைக்கிருர்கள். அப்பொழுது அவர்களுடைய ஆசன் அவைகளைக் கையிலேந்தி **भैरवोऽहम् । शिवोऽहम् ॥**

நான்தான் பைரவன். நான்தான் சிவன். என்று சொல்லி அதைக்குடிக்கிருன். மிகுதியை மற்றவர்கள் குடிக்கிருர்கள். பிறகு எந்த ஸ்திரீயையாவது அல்லதுவேசியையாவது, அல்லது புருஷனையாவது நிர்வாணமாகச் செய்து கையில் கத்தியைக் கொடுத்து தேவி என்ருவது மகாதேவன் என்ருவது அழைத்து அவளுடையவோ அல்லது அவனுடையவோ மர்ம ஸ்தாணங்களைப் பூஜை செய்து அத்தேவியை மதுபானம் செய்யச் செய்து மீதியானவர்களும் அதிலிருந்தே குடிக்கிருர்கள். மயக்கம் வரும் வரையில் குடித்து சகோதரி, தாய், பெண், யாராயிருந்த போதிலும் அவர்களுடன் கூடி மைதுனஞ் செய்ய வெண்டியதே. மயக்கம் அதிகமாய் விட்டால் அவர்களுக்குள்ளேயே கைச்சண்டை, செருப்படி, தலைக்குத்தலை யிழுத்தல், ஒருவரையொருவர் அடித்தல் முதலானவைகள் ஏற்படுகிறது. யாராவது வாமிலெடுத்தால் அவர்களில் அகோரி அதாவது சர்வசித்தியை யடைந்திருக்கிறவர் கக்கினவைகளைச் சாப்பிடவும் சாப்பிடுகிருர்கள். கீழ்க்கண்டவர்களே சர்வசித்தியை யடைந்தவர்கள் :—

**हालां पिवति दीक्षितस्य मन्दिरे सुप्तो निशायां गणिकागृहेषु । विराजते कौलवचक्रवर्ती ॥**

புட்டிபுட்டியாகக்குடித்து கெட்டவழிகளிருப்பதற்காக விலைமாதர்கள் வீடுகளில் படுத்துறங்கிவெட்க மற்று பயமற்றுப் போகிறவனே வாமமார்க்கிகளுள் சிறந்த சக்கரவர்த்தியாக கருதப்படுகிருன். அதாவது அதிகக் கெடுதல்களைச் செய்கிறவனே அவர்களுள் பெரியவனகவும் நல்ல கிரியைச்செய்து கெட்டக் கார்யங்களைச் செய்ய நடுங்குகிறவன் சிறியவனகவும் எண்ணப்படுகிருன். ஏனென்ருல்

**पाशबद्धो भवेज्जीवः पाशमुक्तः सदा शिवः ॥**

ஞானசங்கலனி தந்திரம் சுலோகம். 43.

இத்தந்திரத்தில் கூறும் வண்ணம் உலக, மரியாதை சாஸ்திர மரியாதை, குல மரியாதை, தேசமரியாதை, இவைகளினல் கட்டுப்பட்டிருக்கிறவன் ஜீவனகிருன் (மனிதன்.) இவைகளன்னியில் கெட்டகாரியங்களைச் செய்கிறவன் சிவன் (தெய்வீகமானவன்).

உடீஸ் தந்திரத்தில் கிரயாங்கம் ஒன்று இம்மாதிரி சொல்லப்பட்டிருக்கிறது. வீட்டுச் சுவர்களின் ஒவ்வொரு மாடத்தின் பேரிலும் சாராயம் நிறைந்தக் குப்பிகள் வைக்கப்பட்டிருக்கவேண்டும். ஒருவன் முதல் மாடத்திலிருக்கும் படியான சாராயப்புட்டியைக் குடிக்கட்டும். பிறகு இரண்டாவதிற்குப் போய் அதையும் குடிக்கவேண்டும். நான்காவதிற்கும் போய் குடித்து கீழே மரத்துண்டைப்போல் விழும்வரையில் குடித்துக் கொண்டே போகவேண்டும். கொஞ்சம் ஞாபகம் வந்தவுடன் முன் மாதிரியே குடித்துக் குடித்து கீழே விழவேண்டும். நான்காம் தடவையும் இம்மாதிரி செய்து எழுந்திருப்பானேயானல் அவனுக்கு மறு பிறப்பே கிடையாது. உண்மையாதெனில் அவர்களுக்கு மானிட ஜன்மம் கிடைப்பதே அரிது. நீசகுலத்துதித்து வெகுகாலம் அதிலேயே யிருப்பார்கள். வாமமார்க்கிகளினுடைய தந்திரத்தில் சொல்லுவது யாதெனில் தாய் ஒருவளைத் தவிர மீதி எவருடனும், பெண் சகோதரி முதலானவர்களுடன், சம்யோகஞ் செய்யலாம். இவர்களுடைய பத்து மகாவித்தைகள் பெயர் பெற்றது. இதில் மாதங்கி வித்தையில் தேர்ச்சி பெற்றவன்

**''मातरमपि न त्यजेत्''** என்பான். தாயுடன் கூடசம்யோகஞ் செய்யலாம், அன்னரையும் விடக்கூடாது.

சம்யோக சமயத்தில் சித்தியடைவோம் என்கிற மந்திரத்தை ஜபஞ் செய்கிறார்கள். இத்தகைய புத்தியில்லாதவும் மூடர்களுமானவர்களும் பூகோளத்தில் வெகு கொஞ்சமே!! பொய்யைச் சரியென்கிறவர்கள் உண்மையை நிந்திக்க வேண்டும். வாமமார்க்கிகள் கூறுவதைக் கவனியுங்கள். வேதங்களும் சாஸ்திரங்களும் விலைமாதர்களுக்குச் சமானமானவைகள். ஆனல் சாம்பவீமுத்திரையோ மேன்மை வாய்ந்த குலஸ்திரீயை ஒத்தவள் என்கிறார்கள். வேத மதத்தை இவர்கள் கைப்பற்றினது அதிசயமல்ல. இவர்களுடைய மதம் பரவ ஆரம்பித்தவுடன் கபடமாய் வேதங்களினுடைய பெயரால் கீழ்க்கண்டவைகளைப் போன்ற சில கெடுதல்களைக் கலந்தார்கள்.

**सौत्रामण्यां सुरां पिबेत् । प्रोक्षितं भक्षयेन्मांसं वैदिकी हिंसा हिंसा न भवति ॥**
**न मांसभक्षणे दोषो न मद्ये न च मैथुने ।**
**प्रवृत्तिरेषा भूतानां निवृत्तिस्तु महाफला ॥** மனு. 5. 53

சௌத்ராசமணியாகத்தில் மதுபானஞ்செய்யட்டும், யாகத்தில் இறைச்சியை சாப்பிடட்டும். வைதிக யாகத்தில் செய்யப்பட்ட கொலை கொலையாகாது. மாம்சம்சாப்பிடுவதிலும் மதுபானத்திலும் மைதுனம் செய்வதிலும் தீமை ஏற்படாது. ஏனெனில் விருத்திபண்ண அதுவேவழி. ஆனல் செய்யாமலிருப்பதிலேயிருந்தும் பெரிய பயனேற்படும். ''சுரா'' என்பதற்குச் சோமரசம் என்றர்த்தம். அதாவது சோம இதழ்களினுடைய சாராகும். யாகத்தில்

மாம்சம் சாப்பிடுதல் முதலான கெடுதல்களை ஏற்படுத்தின வாமமார்க்கிகளை, வைதிக ஹிம்சை ஹிம்சையாகாது என்னும்பொழுது, அவர்களையும் அவர்கள் குடும்பத்தவர்களையும் ஹோமஞ் செய்வதினால் என்ன கெடுதலுண்டாகுமென்று கேழ்க்கவேண்டும். மாம்சாகாரம் மதுபானம் செய்தல் பரஸ்திரியிடம் போகுதல் முதலானவைகள் தோஷமில்லை யென்ருல் அது சிறுபிள்ளைத்தனமேயாகும். ஏனெனில் பிராணிகளைத் தொந்திரவு செய்யாமல் மாம்சம் கிடைக்காது. தப்பன்னியில் தொந்திரவு செய்யக்கூடாது. மதுபானம் எப்பொழுதும் தள்ளப்பட்டிருக்கிறது. ஏனெனில் வாமமார்க்கிகளின் கிரந்தங்களில் தவிர வேறு எதிலும் அதைச்சரியென்று சொல்லப்படவில்லை. எப்பொழுதும் அது தள்ளப்பட்டதே. இதைத் தோஷமில்லை என்கிறவனே தோஷமுள்ளவனுகிருன். ரிஷிகளுடைய கிரந்தங்களில் கையாடி முனிகளின் பெயரால் புஸ்தகங்களெழுதி கோமேதம் முதலானவைகள் சரியென்று இடையில் எழுதினுர்கள். இம்மிருகங்களையடித்து யாகஞ் செய்வதினுல், எஜமானனும் மிருகமும் சுவர்க்கத்தை யடைகிறது என்ருர்கள். பிராம்மணத்திலிருக்கும் அசுவமேதம் கோமேதம் நரமேதம் முதலான வார்த்தைகளைச் சரிவர அறியாததினுலேயே இத்தகைய பொய்ப் பொருள்கள் பண்ணினுர்கள். அவைகளைச் சரிவர அறிந்திருந்தால் இத்தகைய அசத்தியங்கள் நம்மிடை புகுந்திராது.

வினு :—அசுவமேதம் கோமேதம் நரமேதம் முதலானவைகளினுடைய உண்மைஅர்த்தம் என்ன?

राष्ट्रं वा अश्वमेधः । சதபதம் 13. 1. 6. 3.

अन्नग्ंहि गौ । சதபதம். 4. 3. 1. 15

अग्निर्वा अश्वः । आज्यं मेधः ॥ சதபதம்.

விடை:—குதிரை பசு முதலான மிருகங்கள், மனிதன் முதலானவைகளைக் கொலை செய்து ஹோமஞ்செய் என்று எழுதப்படவில்லை. இது கேவலம் வாமமார்க்கிகளினுடைய புஸ்தகங்களிலெழுதப்பட்ட தப்பர்த்தமாகும். இம்மாதிரி வார்த்தைகள் எங்கு வந்தபோதிலும் அது வாமமார்க்கிகளால் செய்யப்பட்டவையே என்று அறிந்துகொள்ள வேண்டியது. நியாய நெறிபிரகாரம் பிரஜைகளை எஜமானன் அரசன் பாலனஞ் செய்வதும் வித்தைகளை யளிப்பதும் அக்கினியில் நெய் முதலானவைகளை ஹோமம் செய்வதுமே அசுவமேதம். ஆகாரம் இந்திரியங்கள் சூரியக்கிரணங்கள் பூமி இவைகளைச் சுத்தமாகச் சரிவர காப்பாற்றுவது கோமேதமும் மனிதன் இறந்த பிறகு விதிப் பிரகாரம் அவன் சரீரத்தைத் தகனஞ் செய்வது நரமேதமும் ஆகும்.

வினு :—யாகம் புரிவதினுல் எஜமானன் மிருகம் இவ்விரண்டும் சுவர்க்கத்தையடைவது மன்னியில் ஹோமத்திற்குப் பிறகு மிருகங்கள் உயிர் பிழைக்கிறது, என்கிருர்களே, இது உண்மையா இல்லையா?

விடை :—உண்மையாகாது. சுவர்க்கத்தை யடையுமேயானல் அவ் விதம் சொல்லுகிறவர்களைக் கொன்று ஹோமம் செய்து சுவர்க்கத்தை யடையலாமே, அல்லது அவனுடைய தாய் தந்தையர்களையும் பெண்மக்களையும் கொன்று ஹோமம் செய்து அடையலாமே. திரும்பவும் உயிர்ப் பிழைத்தெழுந்து இருக்கலாமே?

வினு :—வேதத்தில் மந்திரங்களில்லாமல் போனல் வேறு எங்கிருந்து யாககாலத்தில் அவைகளைப் படிக்கிறார்கள்?

விடை :—வேத மந்திரங்களையாரும் படிக்காமலிருக்க முடியாது, ஏனென்றால் அவைகள் எல்லாம் ஒருசப்தமேயாகும். மிருகங்களைக் கொலை புரிந்து ஹோமம் செய்ய வேண்டும் என்பது அவைகளின் அர்த்தமல்ல. "அக்னியே ஸ்வாஹா" அக்கினியில் புஷ்டியைத்தரக் கூடிய வாசனைத் திரவியம் நெய் முதலான சிரேஷ்டமான பொருள்களை ஹோமம் செய்வதினல் ஆகாசம், மழை ஜலம், இவைகள் எல்லாம் சுத்தம் அடைந்து உலகத்திற்கு நன்மையைக் கொடுக்கிறது. இந்தசத்திய அர்த்தம் தன்னலத்தைக் கோரும்படியான அந்த மூடர்களுக்கு எட்டவில்லை. ஏனெனில் இதரர்களுடைய நன்மையைப்பாராமல் தன்னலத்தைகோருகிறவர்களே இவர்கள்.

போப்களினுடைய துராசாரங்கள் விருத்தியாகி, இறந்தவர்களுக்காகத் தர்ப்பணமும் சிராத்தமும் செய்ய வாரம் பித்தவுடன் மகாபயங்கரமானவும் வேதங்களை நிந்தனை செய்கிறதுமான பௌத்த மதம் சமண மதம் முதலானவைகள் வெளிவந்தன. கோரக்பூர் அரசன் ஒருவரிருந்தார். அவருடைய போப்கள் ஒருயாகஞ் செய்தார்கள். அவனுடைய பிரியமுள்ள ராணி குதிரையுடன் சம்யோகம் செய்ததினல் இறந்துபோகவே இராஜன் விரக்தியடைந்து தன் பிள்ளைக்குப் பட்டத்தை யளித்துவிட்டு சாதுவாய் போப்களினுடைய சூழ்ச்சிகளை வெளிப்படுத்தவாரம்பித்தார். **சாரவாகம் அபாணகம்** என்னும் இரண்டு பிரிவுகள் சமணமதத்திலும் பௌத்த மதத்திலும் உண்டு. அவர்கள் கீழ்க்கண்டமாதிரி சுலோகங்களை எழுதியிருக்கிறார்கள்.

**पशुश्चेन्निहितः स्वर्गं ज्योतिष्टोमे गमिष्यति ।**
**स्वपिता यजमानेन तत्र कस्मान्न हिंस्यते ॥**
**मृतानामिह जन्तूनां श्राद्धं चेत्तृप्तिकारणम् ।**
**गच्छतामिह जन्तूनां व्यर्थं पाथेयकल्पनम् ॥**

ஒரு விலங்கைக் கொன்று ஹோமம் செய்வதினல் அவைகள்சுவர்க்கத்தையடையுமேயானல் அந்த எஜமானன் ஏன் தன்தாய் தந்தையர்களைக் கொன்று சுவர்க்கத்திற்கு அனுப்புதல்கூடாது?

இறந்த மனிதர்களுடைய திருப்திக்காகச் சிராத்தம் தர்ப்பணம் ஆகுமேயானல் வெளிதேசம் போகிறஜனங்கள் வழிச்செலவிற்கும் சாப்பாட்டிற்கும்

பணம் கொண்டுபோவது பிரயோசன மில்லாதது. ஏனெனில் சிராத்தம் தர்ப் பணம் இவைகள் இறந்தவர்களுக்குச் சேரும்பொழுது, வெளிதேசம் போயிரு க்கிறவர்களுடைய வழிச்சாப்பாட்டிற்கு வீட்டிலேயே அவருக்கென்று பாகஞ் செய்து வைத்தால் ஏன் அவரைச்சேராது. தூரதேசத்திலே அல்லது பத்து அடி தூரத்திலே யிருக்கும்படியானவர்களுக்கே இவைகள் சேராமல் போகும் பொழுது இறந்தவர்களிடம் ஒருபொழுதும போய்சேரஇயலாது. இம்மாதிரி உபதேசங்கள் ஜனங்கள் மனதைக்கவரவே அவர்களுடைய மதம் பரவிற்று. அரசர்களும் இதைத் தழுவினவுடன் போப்க்களும் இதைத்தழுவ ஆரம்பித் தார்கள். ஏனென்றால் பணம் அதிகமாய் கிடைக்குமிடத்தில் இவர்கள் போவார்கள். சமணர்களிலும் பலவித லீலைகளிருக்கின்றன. அவைகள் பன் னிரண்டாவது அத்தியாயத்தில் விவரிக்கப்படும். அநேகம்பெயர் இதை ஒப்புக் கொண்டார்கள். ஆனால் மலைப்பிரதேசம் தக்ஷிணம், இவைகளிலுள்ளவர்கள் சமணமதத்தை அங்கீகரிக்கவில்லை சமணர்களுக்கு வேத அர்த்தம் தெரி யாமல், போப் லீலைகளைப்பார்த்து பிரமைகொண்டு வேதத்திலிருப்பதாக நம்பி வேதங்களையே தூஷிக்க வாரம்பித்தார்கள். அவைகளை ஓதுவிக்கிறது ஓதுவது, யக்ஞோபவீதம், பிரம்மச்சரியம், முதலான நியமங்களை நாசம் செய் தார்கள். கிடைத்தவரையில் வேதம் முதலான புஸ்தகங்களை நஷ்டம் செய் தார்கள். ஆரியர்களைத் துன்புறுத்தி துக்கத்திற்கு ஆளாக்கினார்கள். அவர்களு க்கு அதிகாரம் வந்து பயமன்னியிலானபோது தங்களுடைய மதத்தவர்களை யும் சாதுக்களையும் ஸ்தாபித்து வேத மார்க்கத்தவர்களையும் அவமதித்து பட்சபாதத்துடன் தண்டனையும் விதித்தார்கள். சுகமாகவும் சௌகர்யமாக வும் வாழ்ந்து கர்வம்மேலிட்டதினால் மரியாதையற்றும் ஆனார்கள். விருஷபதே வன் முதல் மகாவீரன் வரையிலுள்ள அவர்களுடைய தீர்த்தக்கார்களுக்குப் பெரிய பதுமைகளைச் செய்து பூஜை செய்யவாரம்பித்தார்கள். அதாவது அர்த் தமில்லாத மூர்த்தி பூஜை (கல்பாஷணம் முதலான விக்கிரக பூஜை) சமணர் களுடன் ஆரம்பமாயின. பரமேசுவரனைப்பற்றின ஞானங்குன்றின பிறகு வெறும் மூர்த்தி பூஜைகளாரம்பித்து சமணர்களினுடைய ஆதிக்கியம் 3000 வருஷங்களுக்கு மூர்திபிருக்கலாம். வேதார்த்த ஞானங் குன்றியும் 2500 வரு ஷம் இருக்கலாம். இந்தியாவில் சணமர்களுடைய ராஜ்யம் சுமார் 300 வருட காலம் இருந்தது.

## ஸ்ரீசங்கரா சாரியர்.

2300 வருடங்களுக்கு முன்னால் திராவிட தேசத்தில் உதித்த பிராம்மண பிரம்மசாரியான சங்கராசாரியர் இலக்கணம் முதலான சகல சத்திய சாஸ் திரங்களையும் கற்று சத்தியமான ஆஸ்திக வேதமதம் சீர்குலைந்து நாஸ்திக சம ணமதம் பரவிவிட்டதே, இதை எவ்விதத்திலாவது அடக்கவேண்டும் என்று யோசனைபண்ணினார். சங்கராசாரியர் சாஸ்திரங்களை மாத்திரம் கற்காமல் சம ணமத புஸ்தகங்களைக் கண்டும் அறிந்தும் இருந்தார், வாதஞ்செய்வதில்

அவர் மகாவல்லவர். அதைக் கொண்டே உபதேசங்களினாலும் சம்வாதங்களினாலும் உலகத்தைத்திருப்பலாம் என்பதாக வெண்ணி உஜ்ஜைனி நகரத்தையடைந்தார். அப்பொழுது சமண புத்தகங்களையும் கொஞ்சம் சம்ஸ்கிருதத்தையும் படித்திருந்த சுதன்வா என்னும் ராஜன் அங்கிருந்தார். அவ்விடத்தில் போய் உபதேசஞ் செய்யவாரம்பித்து இராஜனுடன் இம்மாதிரி சொன்னார். நீ சம்ஸ்கிருதம் சமண நூல்கள் இவைகளைப்படித்து சமணமதத்தையும் நம்புகிறாய். ஆகையினால் சமண பண்டிதர்களுடன் கூட என்னுடைய சம்வாதத்திற்குச் சபை ஒன்று கூட்டி ஜயித்தவர்களுடையமதத்தை ஒப்புக்கொண்டு நீயும் அதைத் தழுவவேண்டுமென்றார். சுதன்வா ராஜன் சமண மதவாதியாயிருந்தபோதிலும் சம்ஸ்கிருதநூற்களையும் படித்திருந்ததினால் அவனுடைய புத்தியில் கொஞ்சம் வெளிச்சம் பிரகாசமாகிக்கொண்டிருந்தது. இதனால் அவனுடையமனதில் அதிக மிருகத்தன்மை யில்லாமலிருந்தது. ஏனெனில்படித்த வித்வான்கள் சத்தியாசத்தியத்தை அறிந்து உண்மையைக் கைப்பிடித்து தப்பை விடுவார்கள். கற்றுணர்ந்த எவரும் கிடைக்காதவரையில் சுதன்வாராஜன் எது தப்பு எது உண்மைஎன்கிறது தெரியாமல் சந்தேகத்திலிருந்தான். ஸ்ரீசங்கராசாரியாருடைய வார்த்தைகளைக் கேட்டவுடன் பெருமகிழ்ச்சியடைந்து நான் சம்வாதம் ஒன்றுக்கு வேண்டிய வசதிகள் செய்வேன். சத்தியாசத்தியத்தைத்திட்டமாக நிர்ணயஞ் செய்யவேண்டும் என்றான். வெகு தூரத்திலிருந்து சமண பண்டிதர்களை வரவழைத்துச் சபை கூட்டினான். அதில் ஸ்ரீசங்கராசாரியர் வைதிக மதத்திற்கும் சமணர்கள் வேத விரோத மதத்திற்குமாக அமர்ந்தார்கள். அதாவது ஸ்ரீசங்கராசாரியர் கட்சி வைதிகமதத்தை ஸ்தாபிக்க வேண்டியது. சமணர்களைக்கண்டிக்கவேண்டியதுமே. சமணர்களின் கட்சியோ அவர்கள் மதத்தை நிலைநிறுத்தி வைதிகமதத்தைக் கண்டனஞ் செய்ய வேண்டியதே. பலநாள்கள் சபைகள்கூடிற்று. சிருஷ்டி கர்த்தா அநாதியான ஈச்வரன் யாரும்கிடையாது என்பதும் இச்சகம் ஜீவன் இவைகள் அநாதிஎன்பதும் இவை இரண்டிற்கும் உற்பத்தி நாசமேகிடையாது என்பதுமே சமணர்களுடைய வாதம். இதற்கு மாறாக சங்கராசாரியருடைய மதம் என்ன வெனில் அநாதியான ஈசுவரனே இவ்வுலகின் கர்த்தா. இவ்வுலகமும் ஜீவனும் பொய். ஏனென்றால் அப்பரமேசுவரன் தன்மாயையினால் இவ்வுலகத்தைச் சிருஷ்டித்திருக்கிறான். அவனே இதைக்காப்பாற்றி பிரயளத்தையும் கொண்டு வருகிறான். ஜீவனும் பிரபஞ்சமும் கனவைப்போல வே பரமேச்வரன் தானாகவே உலகரூபமெடுத்து லீலைகளைச்செய்கிறான். வெகு நாள்வரையில் வாதம் நடந்தது. கடைசியில் புத்தியினாலும் பிரமாணத்தினாலும் சமணமதம்கண்டனஞ் செய்யப்பட்டு சங்கரர் மதம் கண்டனஞ் செய்யபடாததாய்இருந்தது. அப்பொழுது சமணபண்டிதர்களும் சுதன்வா ராஜனும் வேதமதத்தை அங்கீகாரஞ்செய்து அதைத்தழுவினார்கள். சமணமதத்தையும் கைவிட்டார்கள்.

நாடு முழுவதூ அப்பொழுது ஒரு பெரிய எழுச்சி ஏற்பட்டது. தன்னுடைய இதர இஷ்ட சிநேகித அரசர்களுக்கு, சங்கராசாரியுடன் வாதஞ்

செய்யச் சபைகூட்டும் படி, சுதன்வாராஜன் எழுதினான். ஒரு விடத்தில் சமணவாதம் தோற்கப்பட்டுப் போகவே எங்கும் அவர்கள் தோல்வியையே அடைந்து வந்தார்கள். அக்காலந்தொட்டு இந்தியா முழுவதும் சுற்றுவதற்காகச் சுதன்வா முதலிய அரசர்கள் ஏற்பாடுகள் செய்து சங்கராச்சாரியருக்கு மெய்க்காவலர்களையும் கொடுத்து சேவகர்களையும் கூட அனுப்பினார்கள். அக்காலந்தொட்டு பூநூல் தரிக்க வாரம்பித்து ஜனங்கள் வேதங்களை ஒதவும் ஒதுவிக்கவும் ஆரம்பித்தார்கள். பத்துவருடம் இந்தியா முழுவதும் சுற்றிச் சமணர்களைக் கண்டனஞ் செய்து வேதங்களினுடைய கருத்தை வெளியிட்டு ஸ்தாபித்தார். இப்பொழுது பூமியிலிருந்து எடுக்கப்படும் படியான சிதருண்ட விக்கிரகனெல்லாம் சங்கரருடைய காலத்தில் உடைக்கப்பட்டவைகள். உடைபடாதவை சமணர்களால் பயந்து பூமியில் புதைக்கப்பட்டவைகள். அவருக்கு முன்னிருந்து வரும்படியான சைவசமயம் வாமமார்க்கம் இவைகளைச் சங்கராசாரியார் கண்டனஞ் செய்தார். அச்சமயத்தில் நாட்டில் பணமும் அதிகமாயிருந்து தேசபக்தியும் ஓங்கியிருந்தது. சமணவாலயங்கள் வேத பாடாசாலைகளுக்கென்றிருந்தபடியினால் சங்கரா சாரியரும் சுதன் வாவும் அவைகளைக் கவனிக்கவில்லை. வைதிகமதத்தை ஸ்தாபனஞ் செய்து அதைப் பரவச்செய்வதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்துவரும் பொழுது வெளிக்கு மாத்திரம் வைதிகமதத்தைப் பற்றி அந்தரங்கச் சமணர்களான இரண்டு வேஷதாரிகள் ஸ்ரீசங்கரா சாரியருடைய அன்புக்காளாகி அவருக்கு விஷத்தை அளித்து விட்டார்கள். ஸ்ரீசங்கராசாரியருக்கு அதன் பயனாய் சரீரத்தில் கொப்பளங்கள் வெடித்து ஆறுமாதத்திற்குள் இறந்துவிட்டார். அப்பொழுது எல்லோருக்கும் துக்கம் மேலிட்டு வித்தையைப் பிரசாரம் செய்யவேண்டும் என்கிற எண்ணமும் பிற்போக்கடைந்தது. அவருடைய சிடர்களோ அவருடைய சாரீரிக பாஷ்யத்தை (வேதாந்த சாஸ்திரம் சங்கரபாஷ்யம்) போதித்து வந்தார்கள். சமணர்களைக் கண்டனஞ் செய்வதற்காகப் பிர்ம்மம், சத்தியம் என்றும், உலகம் பொய்யென்றும் ஜீவனும் பிரம்மமும் ஒன்றென்றும் சொல்லிவந்ததைப் போதித்து வந்தார்கள். இதற்காகத் தெற்கே சிருங்கேரியிலும், மேற்கே பூகோவர்த்தனத்திலும் வடக்கே ஜோசி துவாரகையிலும் சாரதாபீடத்திலும் மடங்கள் ஸ்தாபனஞ் செய்தார்கள். ஸ்ரீசங்கராசாரியருடையசிடர்கள் இவைகளிலிருந்து கொண்டு பணத்தையும் அதிகாரத்தையும் அடைந்து ஆனந்தமாகவிருந்தார்கள். ஸ்ரீசங்கராச்சாரியாருக்குப் பிறகு அவர்களுடைய சிடர்கள் மிகவும் மரியாதை செய்யப் பட்டவர்களானார்கள்.

ஜீவனும் பிரம்மமும் ஒன்று என்பதும் உலகம் பொய் என்பதுமே ஸ்ரீசங்கரா சாரியருடைய உண்மையான மதமாவென்று கவனிக்க வேண்டும். சமணமதக் கண்டனத்திற்காக அவர் அதை எண்ணியிருந்தால் சரியே. அவருடைய சொந்த மதக்கொள்கையாய் அது இருந்திருக்குமேயானால் தப்பு என்றே சொல்ல வேண்டும். இதுவே நவீன வேதாந்திகளினுடைய தர்மமாகும்.

**வேதாந்தி** :—கயற்றில் பாம்பு, சூரிய வெளிச்சத்தில் கிளிஞ்சல், கானலில் ஜலம் கந்தர்வ நகரம் இந்திர ஜாலம் இவைகளைப் போலவே இவ்வுலகம் பொய்யானது. பிரம்மம் ஒன்றே உண்மையானது —(சித்தாந்தி) பொய் என்று நீங்கள் எதைச் சொல்லுகிறீர்கள்? (வேதாந்தி) இல்லாத பொருள் எது இருப்பதுபோல் காணப்படுகிறதோ (சித்) இல்லாத பொருள் எவ்வண்ணம் இருப்பது போல் காணப்படும்? (வேதா) அத்யாரோபத்தினல் (சித்) அத்யாரோபம் என்ருல் என்ன ? (வேதா).

**वस्तुन्यवस्त्वारोपणमध्यास । अध्यारोपापवादाभ्यां निष्प्रपंचं प्रपंच्यते**

உண்மையானதிலிருந்து மாருக நினைப்பது அத்யாரோபம் அல்லது அத்தியாசம். தப்பெண்ணங்களை நிராகரிப்பது அபவாதம். இவ்விரண்டையுங் கொண்டே பிரபஞ்ச ரகித (மாறுதலன்னியிலிருக்கும்) பிரம்மத்தில் பிரபஞ்ச ரூபத்தைக் காண்பிக்கிருர்கள் (சித்) கயற்றை வஸ்துவாகவும் சர்ப்பத்தை வஸ்து இல்லாததாகவும் நினைத்து இம்மாய வலையில நீங்கள் விழுந்து விட்டீர்கள். சர்ப்பம் மாத்திரம் வஸ்துவாகாதா என்ன? கயிற்றில் ஆகாதென்று நீங்கள் சொல்லுவீர்களானுல் வேறு எங்கேயாவது அல்லது அதனுடைய எண்ணம் நம்முடைய மனதிலாவது இல்லையா என்று கேழ்க்கிருேம்? அவ்வித மிருக்கும்படியான சர்ப்பம் வஸ்து இல்லாததாகவாகாது. இம்மாதிரியே கிளிஞ்சலை வெள்ளியாக நினைப்பதுவுங் கூட பொய்யென்று காண்பிக்கக்கூடும். ஆகையினுல் கனவில் காணும் வஸ்துக்கள் பாவத்தில் இருக்கவேண்டும். அவைகளினுடைய குணங்கள் நம்முடைய ஞாபகத்திலிருக்கின்றன. இதனுலே அவைகள் அத்தியாரோபத்தினுலிருக்கிறதென்று சொல்லுதல் முடியாது. (வேதா) காணுததும் கேழ்க்காததுங் கூட எவ்விதம் உண்மையாகும். உதாரணமாகத் தலை வெட்டுண்ட பிறகு எவ்விதம் அழக்கூடும் ? ஜலதாரை எப்படி மலையின் பேரில் போகக் கூடும்? (சித்) இதுவும் உங்களுடைய சித்தாந்தத்தை நிரூபிக்கவில்லை. பாராமலும் கேழ்க்காமலும் உருவம் மனதிலே உண்டாகாது. உருவம் அன்னியில் அனுபவமும் உண்டாகாது. ஒருவனுடைய தலையானது ரணகளத்தில் வெட்டப்பட்டதையும் அவனுடைய தாய் தந்தையர்கள் அழுததையும், ஜலதாரை ஊற்றிலிருந்து மேலே ஓடினதையும் பார்த்ததினுலேயே மனதில் எண்ணங்கள் உதிக்கின்றன. கனவு சமயத்தில், தான் முன்னுல் கண்டதையும் கேட்டதையும் மனதினுல் பார்க்கிருன். கனவில் தனக்குத்தானே பார்க்கிற படியினுல் தன் தலையை வெட்டுண்டதாகவும் தானே அழுவதாகவும் அருவிமேற் புறமாய் ஓடுவதாகவும் காண்கிருன். ஆகையினுல் இவைகளெல்லாம் தப்பெண்ணங்களினுடைய உதாரணமாகாது. குறிப்பெழுதுகிறவன் முதலில்தான் கண்டும் கேட்டும் இருக்கும் படியான எண்ணங்களைக் காகிதத்தில் குறித்துக் கொள்ளுவது போலவும், சித்திரக்காரன் பிம்பத்தைப்பார்த்து மனதில் உருவத்தைச் செய்து கொள்ளுவது போலவும் இருக்கின்றன. தன்னுடைய ஆசனைக் கனவில் காண்பது போல் கனவில் எண்ணங்களினுடைய ஞாபக மிருக்கின்றன. கொஞ்ச காட்களுக்கு முந்தி நடந்த விஷயங்களின் ஞாபகமும் எண்ணமும் மனிதனுக்கு மறந்து போகின்றன. முன்னடந்த அநு

பவத்தைப் பார்க்கவாவது கேழ்க்கவாவது மனிதனால் முடியவில்லை. விழிப்புக் காலத்திலுள்ள ஞாபகம் அவனுக்குக் கனவில் கிடையாது. ஆகையினால் அத்யாரோபம், அத்தியாசம் இவைகளுக்கு நீ சொல்லும் இலட்சணங்கள் சரியாகாது. விவர்த்தவாதம் அல்லது கயற்றில் பாம்பு முதலானவைகளைக் காணுவதும் சரியில்லாததே. பிரம்ம மாயையில் உலகமிருக்கிறது என்பதும் பொய்யே. (வேதா) அதிஷ்டான மன்னியில்-எது காப்பாற்றுகிறதோ—அத்யஸ்த-காப்பாற்றப்படுகிறது—வெளியாகிறதில்லை. மேற் சொன்ன திருஷ்டாந்தத்தில் கயறு அன்னியில் போனால் பாம்பினுடைய எண்ணம் மனதில் வந்திராது. கயிற்றில் பாம்பு கிடையாது. சிறு வெளிச்சத்தில் இருட்டுக்கலந்து இருப்பதினால் அகஸ்மாத்தாய் கயிற்றைக் கண்டு பாம்பு என பயமுறுகிறான். வெளிச்சத்தில் காணுங்கால் இத்தப்பெண்ணம் அவனைவிடுகிறது. இப்படியே பிரம்மத்தில் ஜகமிருக்கிறது என்கிற தப்பெண்ணம் பிரம்மத்தைப் பிரத்தியட்சமாய் அறிவதினால் வெளிச்சத்தில் பாம்பு பயம் போய்க் கயர் தானென்பது நிச்சியமாவது போல், மாறுகிறது. (சித்) பிரம்மத்தில் உலகமிருக்கிறதென்கிற தப்பான கொள்கையை யார் அனுபவிக்கிறான்? (வேதா) ஜீவன் (சித்) ஜீவன் எங்கிருந்து உடைடானவை?(வேதா) அஞ்ஞானத்திலிருந்து (சித்) அஞ்ஞானம் எங்கிருந்து உண்டாகி எங்கே யிருக்கிறது? (வேதா) அஞ்ஞானம் அநாதி. அது பிரம்மத்திலிருக்கிறது. (சித்) அவ்வஞ்ஞானம் அதற்குச் சொந்த மானதா அல்லது வேறானதா? யாருக்கு அஞ்ஞான உண்டாயிற்று? (சித்) சிதாபாசத்திற்கு. (சித்) சிதாபாசத்தினுடைய ஸ்வரூப மென்ன? (வேதா) பிரம்மம். பிரம்மத்திற்குப் பிரம்மத்தினுடைய அஞ்ஞானம் அதாவது ஸ்வரூபத்தையே மறந்திருக்கிறது (சித்) அதை மறப்பதின் காரண மென்ன ? (வே) அறிவின்மையே. (சித்) அறிவின்மை சர்வவியாபியான சர்வஞ்ஞனுடையகுணமா அல்லது அற்பஞ்ஞனுடையதா? (வே) அற்பஞ்ஞத்தினுடையது(சித்)அனந்த சர்வஞ்ஞ சேதனத்திலிருந்து இரண்டாவதான வேறு சேதனத்தில் நீங்கள் நம்புகிறீர்களா? அற்பஞ்ஞும் எங்கிருந்து வந்தது? அற்பஞ்ஞும் சேதன பிரம்மத்திலிருந்து வேறான தாயிருந்தால் சரிதான். பிரம்மம் தன் ஸ்வரூபத்தை யறியாமலிருந்தால் மனித சரீரத்தில் ஒரு பக்கம் கஷ்டம் உண்டானால் சர்ரம் முழுவதும் பாதிக்கப்படுவதுபோல் அது முழுவதும் பரவும். (வேதா) இவைகளெல்லாம் உபாதியினுடைய குணமாகும். பிரம்மத்தினுடையதாகாது. (சித்) உபாதி சடப் பொருளா? சேதனப் பொருளா? சத்தியமா அல்லது அசத்தியமா? (சித்) சேதன மென்றாவது சட மென்றாவது, சத்தியமென்றாவது அசத்திய மென்றாவது கூற முடியாதது. (வேதா) தங்கம் பித்தளை இரண்டையும் கலந்து செய்யப்பட்ட ஒன்றைப்பரிட்சித்துப்பார்க்கக் கொண்டுபோன விடத்தில் அது தங்கமும் இல்லை பித்தளையுமில்லை. இரண்டையுங் கொண்டு செய்தது என்பது போலிருக்கிறது (வேதா) கடாகாசம் (பானையிலிருக்கும் படியான ஆகாசம்) மடாகாசம் (வீட்டின் ஆகாசம்) மேகாகாசம் (மேகத்தின் ஆகாசம்) மகதாகாசம் (விசாலமன) பெரிய ஆகாசம்) இவைகள் வெவ்வேறாகக் காணப்பட்ட போதிலும் எல்லாம் ஒரே ஆகாசத்தின் தோற்றங்கள் தான். அவ்விதமே

மாயை அவித்தியா சமஷ்டி வியஷ்டி, அந்தக்கரணம் இவைகளெல்லாம் ஞானமில்லாதவர்களுக்கு வேருகத் தோன்றுகிறது. உண்மையில் ஒன்றேதானுண்டு.

**अग्निर्यथैको भुवनं प्रविष्टो रूपं रूपं प्रतिरूपो बभूव ।**
**एकस्तथा सर्वभूतान्तरात्मा रूपं रूपं प्रतिरूपो बहिश्च ॥** கடோபநிஷதம். 5.9.

நெருப்பானது பெரியது சிறியது வட்டவடிவமானது அகல மானது நீதலான வடிவங்களைத்தான் வியாபித்திருக்கும் படியான அந்தந்த வஸ்துக்களின் உருவங்களை அடைந்து அவைகளிலிருந்து தனியாக விருப்பது போல் சர்வவியாபியான பரமாத்மா அந்தக் கரணத்தில் வியாபித்து அதன் உருவத்தை யடைந்திருக்கிறுர். ஆனல் அதிலிருந்து வேருயு மிருக்கிறுர்.

(சித்) இம்மாதிரி நீங்கள்சொல்லுவதும் சரியாகாது. பானை, வீடு, மேகம் ஆகாசம் இவைகளை வேறுபட்டவைகளாகக் கருதுவது போலவே காரிய காரண ரூபமான உலகம், ஜீவன் இவைகளைப் பிரம்மத்திலிருந்தும் பிரம்மத்தை இவைகளிலிருந்தும் வேறுப்பட்டவைகளாக நினைக்கக் கூடாது?

(வேதா) நெருப்பு சகலமானவைகளிலும் சென்று பார்வைக்கு அந்தந்த உருவங்களை யடைவது போல் பரமாத்மா சடம், ஜீவன் இவைகளில் வியாபித்து அஞ்ஞானிகளுக்கு உருவங்களைக் கொண்ட வராகக் காணப்படுகிறுர். உண்மையில் ஜடமுமில்லை. ஜீவனுமில்லை. தண்ணீர் நிறைந்த நூறு பாண்டங்களில் சூரியன் நூறு விதமான பிரதி பிம்பங்களைக் கொண்டு ஜ்வலிக்கிறது. உண்மையில் சூரியன் ஒருவனே. பாண்டங்களிலிருந்து ஜலம் ஓடிப்போவதினல் சூரியன் இல்லாமல் போகவில்லை. அசையாமலும் போகவில்லை சுற்றுமலும் போகவில்லை. இம்மாதிரியே பிரம்ம அந்தக் கரணத்திலிருக்கிறுர். இதற்கே சிதாபாசம் என்றும் பெயர். அந்தக்கரணம் உள்ளவரையிலும் ஜீவனும் உண்டு. ஞானத்தினல் அந்தக் கரணம் நாசமடைந்த பின்பு ஜீவன் பிரம்மஸ்வரூபமாகின்றது. இச்சிதாபாசம் பிரம்ம சுவரூபத்தை யறிகிறதில்லை. அனுபவிக்கிறது சுகப்படுகிறது, துக்கப்படுகிறது, பாபம், புண்ணியம், ஜனன மரணம் இவைகளை யடைகிறது என்று நினைக்கிறது, பிரம்ம சுவரூபம் தன்னுடைய உண்மையானநிலைமை இவைகளை அறியாத வரையிலும் சம்சாரக்கட்டுக்கு விடுகிறதில்லை. (சித்) இவ்வுதாரணமும் வீணே! ஏனென்றுல் சூரியன் உருவமுள்ளவன். இம்மாதிரியே பாண்டங்களும் அதிலிருக்கும்படியான தண்ணீரும் ஜலபாத்திரத்திலிருந்து சூரியனும் வேருனது. சூரியனிலிருந்து ஜலபாத்திரம் வேருனது. இதனலேயே பிரதபிம்பம் ஒலிக்கிறது. உருவமற்றதாயிருந்தால் பிரதிபிம்பம் ஒலிக்கவே ஒலிக்காது. பரமேச்வரன் உருவமற்று எங்கும் ஆகாசத்தைப்போல் பரவியிருக்கிறபடியினலும் பிரம்மத்திலிருந்து பதார்த்தங்களாவது பதார்த்தங்களிலிருந்து பிரம்மமாவது வேருகயிருக்கமுடியாது. வியாப்ய — வியாபகசம்பந்தத்தினல் ஒன்றுகவு மிருக்க முடியாது. அதாவது

வியாப்ய வியாபகத்தை அன்வய வியதிரேக பாவத்தினாலே பார்ப்போமேயானால் அவைகள் சம்பந்தப்பட்டும் எப்பொழுதும் வேறாகவும் இருக்கிறது.

அவைகள் ஒன்றாயிருக்குமேயானால் வியாப்யவியாபக சம்பந்தம் பிருகதாரண்ய உபநிடதத்தில் அந்தர்யாமி பிராம்மணத்தில் திட்டமாய் எழுதப்பட்டிருக்கும் வண்ணம் உண்டாகாது. உருவம் இல்லாததற்குப் பிரதிபிம்பம் ஒலிக்காதாகையினால் பிரம்மத்திற்கும் பிரதிபிம்பம் கிடையாது. அந்தக்கரணோபாதையினால் பிரம்மத்தை நீங்கள் ஜீவனாகக் கருதுவது சிறுபிள்ளைத் தனமாகவிருக்கிறது. அந்தக்கரணம் சலன முள்ளது, அசைவையுடையது, வேறானது, பிரம்மமோ அசைவற்றது பூர்ணமானது. பிரம்மத்தையும் ஜீவனையும் நீங்கள் வேறாகநினைப்பீர்களே யானால் இதற்கு என்னபதிலளிப்பீர்கள்? அந்தக் கரணமிருக்கும் இடத்தில் பிரம்மத்தை அஞ்ஞானியாகவும் அதுவில்லாத விடத்தில் ஞானியாகவும் நம்புகிறீர்களா? அது இருக்கு மிடமெல்லாம் ஒரு குடையானது வெயிலை மறைத்து அது மூடப்பட்டவுடன் வெய்யிலை விடுவதுபோல் அந்தக்கரணமும், பிரம்மத்தை ஒரேகனத்தில் ஞானியாகவும் கட்டுள்ளவனாகவும் விடப்பட்டவனாகவும் செய்கிறது. பிரம்மம் சேதனமானபடியினால் முழுவதும் பரவும்படியான அந்தக்கரணம் ஒரேவிடத்திலிருக்குமேயானால் பிரம்மம் அஞ்ஞானியாகமாறுகிறது. மதுராவில் அந்தக்கரணத்தையுடைய பிரம்மம் என்னபார்த்ததோ அதையே காசியில் அந்தக்கரணத்தினால் ஞாபகம் வைத்துக் கொள்ளமுடியாது. ஏனென்றால் ஒருவன் பார்த்ததை மற்றொருவனால் ஞாபகம் வைத்துக்கொள்ளமுடியாது. மதுராபுரியில் பார்த்த சிதாகாசம் காசியிலிருக்கமுடியாது. மேலும் மதுராபுரியில் பிரகாசமாயிருக்கிற பிரம்மமானது காசியிலுள்ளது போலாகாது. பிரம்மம் ஜீவனாயிருக்குமேயானால் ஜீவன் சர்வஞ்ஞமாயிருக்க வேண்டியது. பிரம்மத்தினுடைய பிரதி பிம்பம் தனியானால் முன் கேட்டு பார்த்ததின் ஞானமுண்டாகாது. பிரம்மம் ஒன்றெனபதைக்கொண்டு ஞாபக மிருக்கிறது என்றால் ஒரு புறத்திலேற்படும்படியான அஞ்ஞானமோ அல்லது கஷ்டமோ பிரம்மம் முழுவதையும் பாதிக்கும். இம்மாதிரி உதாரணங்களினால் நித்திய சுத்த புத்த முக்த குணமுள்ள பிரம்மத்தை நீங்கள் அசுத்த அஞ்ஞானக்கட்டுப்பட்ட முதலான தோஷங்களையுடையதாகச் செய்கிறீர்கள்.

(வேதா) ஆகாசத்தினுடைய பிரதி பிம்பம் கண்ணாடி தண்ணீர் இவைகளில் ஒலிப்பது போலவே உருவமற்ற வஸ்துக்களுங்கூட பிரம்மத்தை ஒலிக்கச்செய்யும். ஆழமுள்ளதாயும் அகண்டமாயும் நீலமாயும் அது அங்கே காணப்படுகிறது. அம்மாதிரியே சகல அந்தக்கரணங்களிலும் பிரம்மத்தைக் காட்டுகின்றது.

(சித்) ஆகாசத்திற்கு உருவமில்லாவிடில் அதை யாரும் காணமுடியாது. பார்க்கமுடியாது. ஒரு வஸ்துவைக் கண்ணாடியிலும் தண்ணீரிலும் எவ்விதம் காணமுடியும். திட்டமான உருவத்தையுடையவைகளையே காணமுடியும். உருவமற்றவைகளை முடியாது.

(வேதா) மேலே நீல நிறமாகவும் கண்ணாடியில் காணப்படுவதும் வேறு என்ன (சித்) அவைகள் பூமியிலிருந்து ஆவியாக மாறின ஜலம் பூமி, அக்கினி இவைகளினுடைய துளிகள். ஜலமில்லாத விடத்திலிருந்து மழை எவ்விதம் வரக்கூடும்? ஆகையினால் தூரத்தில் கூடாரத்தைப் போல் காணப் படுவது ஒரு பெரிய தண்ணீரின் கோளம். நுரை, பனி, நீர்க்கோளம் கூடாரம் இவைகளைப்போல் ஆகாயத்தில் தண்ணீர் காணப்படுகிறது.

(வேதா) கயறு பாம்பு கனவு முதலான எங்களுடைய உதாரணங்கள் பொய்யா? (சித்) இல்லை. நான் முன்னேயே காண்பித்தமாதிரி நீங்கள் அதை அறிந்ததே தப்பு. முதலில் யார் இவ்வஞ்ஞானத்திலிருந்தார்களென்பதைச் சொல்லுங்கள். (வேதா) பிரம்மம்.

(சித்) பிரம்மம் அற்பஞ்ஞமா அல்லது சர்வஞ்ஞமா?

(வேதா) சர்வஞ்ஞனுமல்ல. அற்பஞ்ஞனுமல்ல. ஏனென்றால் இவையிரண்டும் உபாதியுடன் கலந்தது.

(சித்) உபாதியுடன் கூடி எது இருக்கிறது?

(வேதா) பிரம்மம்.

(சித்தா) பிரம்மம் சர்வஞ்ஞனும் அற்பஞ்ஞனுமிருந்தால் நீங்கள் அற்பஞ்ஞத்தையும் சர்வஞ்ஞத்தையும் கழிக்கவேண்டும். உபாதியை கற்பிதம் அதாவது பொய்யென்பார்களேயானால் கற்பிக்கப்பட்டவர்களும் யார்?

(வேதா) ஜீவன் பிரம்மமா அல்லது அதிலிருந்து வேறானதா?

(சித்) வேறானது. ஏனெனில் பொய்யாயுங்கற்பனையுள்ளதாயு மிருந்தால் அது பிரம்மமாயிருக்க முடியாது. எதனுடைய கற்பனைப் பொய்யாயிருக்கிறதோ அது சத்திய மாயிருத்தல் முடியாது.

(வேதா) நாங்கள் சத்தியத்தையும் அசத்தியத்தையும் பொய்யாகக் கருதுகிறோம். வாயினால் சொல்லுவது கூடப் பொய்யே.

(சித்) நீ பொய் சொல்லுகிறவனும் பொய்யை ஆதரிப்பவனுமிருந்தால் நீயே என் பொய்யாயிருக்கூடாது?

(வேதா) பொய்யும் மெய்யும் நம்முடைய கற்பிதமே. நாம் அவ்விரண்டினுடையவும் சாட்சிகள்.

(சித்) பொய்க்கும் மெய்க்கும் ஆதாரமாயிருந்தால் நீ தனவானும் திருடனும் இருப்பாய். இதனாலே நீ அத்தாட்சியாயிருக்க முடியாது. ஏனெனில் எப்பொழுதும் சத்தியத்தைக் கருதுகிறவர்கள் சத்தியத்தைப் பேசுகிறவர்கள் சத்தியத்தைச் செய்கிறவர்கள் பொய்யைக் கருதாதவர்கள் பேசாதவர்கள், செய்யாதவர்கள் இவர்களே பிரமாணிகர்கள். உங்களுடைய வார்த்தைகளேயே நீங்கள் பொய்யாக்குவீர்களானால் நீங்கள் பொய் சொல்லுகிறவர்களாகிறீர்கள்.

(வேதா) பிரம்மத்திலிருந்து அதிலேயே மறைகிற அநாதியான மாயையில் உங்களுக்கு நம்பிக்கையுண்டா?

(சித்) நம்பிக்கை கிடையாது. ஏனெனில் வஸ்து அன்னியில் பாவனை யிருப்பதாக நீங்கள் மாயையை நம்புகிறீர்கள். இல்லாத வஸ்துவைப் பாவனை யிலிருப்பதாக மனக்கண் குருடர்களே நம்புகிறார்கள். இல்லாத வஸ்துவை இருப்பதாக நினைப்பது இபலாதது. மலடிவயிற்றுப் பிள்ளையின் உருவப்படம் கிடையாது. सन्मूलाः सोम्येमाः प्रजाः ॥

இம்மாதிரியான சாந்தோக்ய உபநிடதத்தின் வார்த்தைகளுக்கு விரோதமாக விருக்கிறது.

(வேதா) வசிஷ்டர் சங்கராசாரியர் முதல நிஸ்சலதாஸர் வரை உள்ள பண்டிதர்களையும் அவர்கள் எழுதினவைகளையும் நீங்கள் கண்டனஞ் செய்கிறீர்களா? நாங்கள் அவர்களை நன்கு படித்தவர்களாகக் கருதுகிறோம்.

(சித்) நீ பண்டிதனா அல்லது பாமரனா?

(வேதா) நாங்கள் கற்று அறிந்தவர்கள்.

(சித்) வசிஷ்டர் சங்கராசாரியர் நிஸ்சலதாஸர் இவர்களுடைய கட்சியைத் தாங்கள் ஸ்தாபனம் பண்ணுங்கள். நாங்கள் அதைக் கண்டனஞ் செய்வோம். எக்கட்சி ஜயிக்கிறதோ அதுவே பெரியதாகும். உங்களுடையதும் அவர்களுடையதும் கண்டனஞ் செய்ய முடியாததாயிருக்குமேயானல் அதைக்கொண்டு ஏன் எங்களுடைய வார்த்தைகளை மறுக்ககூடாது? அப்பொழுது உங்களுடைய வார்த்தைகள் ஏற்றுக் கொள்ளத்தக்கது. சங்கராசாரியர் முதலானவர்கள் சமணர்களை வெல்ல வெண்ணி இவ்வார்த்தைகளைக் கையாடியிருக்கக்கூடும். ஏனெனில் தேசகாலத்திற்கேற்பத் தன்னுடைய கட்சி ஜெயிக்க சுயநலங்கருதும் சிலவித்வான்கள் தன்னுடை ஆத்மா ஞானத்திற்கு விரோதமாக வாதஞ் செய்வதுண்டு. ஜீவனும் ஈசுவரனும் ஒன்றென்றும் உலகம் பொய்யென்றும் ஜனங்களுடைய காரியம் மெய்யல்ல வென்றும் கருதுவது உண்மையாகாது நிஸ்சலதாஸ் நிபுணத்தைக்கவனியுங்கள். தன்னுடைய விருத்தி பிரபா கரத்தில் ஜீவனும் பிரம்மமும் ஒன்றென்பதற்கு இரண்டும் சேதன குணத்தைக் கொண்டிருக்கிறபடியினல் ஒன்றென்கிறார்.

जीवो ब्रह्माऽभिन्नश्चेतनत्वात् ॥

இதுமிகவும் குறுகிய புத்தியுடையவர்களுடைய பார்வையாகும். குணங்களில் ஒற்றிருக்கும்படியான பொருள்கள் ஒருபொழுதும் ஒன்றாகாது. சடமாயிருப்பதைக்கொண்டு பூமியும் ஜலமும் ஒன்றென்றுவைத்துக்கொள்வோம். पृथिवी जलाऽभिन्ना जडत्वात् ॥

இது பொய்யாவதுபோலவே நிஸ்சலதாசருடையதும். ஏனெனில் ஜீவன் கட்டுப்பட்டதினல் ஞானத்தை உடையது. தப்பக்கூடியது. பரப்பிரம்மமோ எங்குமிருக்கிறது சர்வஞ்ஞன், தப்பாதது ஆகையினல் ஜீவனும் பிரம்மமும் வேறானது. வாசனை உறுதி முதலான தன்மைகள் பூமியைச்சேர்ந்தது. இளகுந்தன்மை அசையுந்தன்மை முதலானவைத்,தண்ணீருடையது அவைகளுக்குமாறானது. இம்மாதிரியே பிரம்மம் ஜீவன் இவைகளினுடைய வெவ்வேறான

குணங்கள் இவைகளை ஒன்றுபடுத்தாது. அவைகள் எப்பொழுதும் சேர்ந்ததில்லை, சரியானதில்லை. ஒன்றாகவும் ஆகாது. சரியானதாகவும் ஆகாது.

## யோகவாசிஷ்டம்.

யோகவாசிஷ்டம் ஏதோ ஒருபுதியவேதாந்தியால் எழுதப்பட்டிருக்கவேண்டும். வால்மீகி வசிஷ்டர் ராமச்சந்திரர் முதலானவர்களால் எழுதபடவில்லை. ஏனென்றால் அவர்கள் வேதங்களைக் கைப்பற்றினவர்கள். அவர்கள் வேதவிரோதமாக எழுதவும் கேழ்க்கவும் பேசவும் மாட்டார்கள்.

வினு:—வியாசருடைய சாரீரிக சூத்திரத்தில் ஜீவனும் பிரம்மமும் ஒன்றென்று சொல்லப்பட்டில்லையா ? பாருங்கள்.

(1) सम्पाद्याऽऽविर्भावः स्वेन शब्दात् ॥ (2) ब्राह्मेण जैमिनिरुप-
न्यासादिभ्यः ॥ (3) चितिन्मात्रेण तदात्मकत्वादित्यौडुलोमिः ॥
(4) एवमप्युपन्यासात् पूर्वभावादविरोध वादरायणः ॥
(5) अत एव चानन्याधिपति ॥ வேதாந்தசூத்திரங்கள்.

(1) 'ஸ்வ' என்னும் வார்த்தையினால் பிரம்மஸ்வரூபமென்று அறியவேண்டுமாகையினால் பூர்வத்தில் பிரம்மரூபமாயிருந்த ஜீவன் தன்னுடைய ஈசுவரரூபத்தையடைந்து வெளிப்படுகிறது. (2) ஈசுவரத்தன்மையைஅடையும் வரையில் பிரம்மசுவரூபத்துடன் ஜீவனிருக்கிறதென்று ஜெய்முனி சொல்லுகிறார் (3) அவுட்டுலோமி ஆசாரியார் பிருகதாரண்யத்திலிருக்கும் வண்ணம் ஜீவனும் பிரம்மமும் ஒன்று என்பதைக்கொண்டு சைதன்ய உருவத்தில் ஜீவன்பிரம்மத்தையடைகிறது என்கிறார். (4)வியாசமுனிவர் முன்சொல்லப்பட்ட ஈசவரனையடையக்கூடிய உபன்னியாசம், முதலான ரூபங்களினுடைய காரணங்களினால் ஜீவன் பிரம்ம சுவரூபத்தையடை வதென்பதை விரோதமாக வெண்ணவில்லை (5) யோகி ஒருவன் ஈசவரனுடன் தன்னுடைய பிரம்ம ஸ்வரூபத்தை யடைந்து, வேறு அதிகாரங்களிலிருந்து மீறி தான் தானாகவே பரம்ம சுவரூபத்தினால் முக்தியிலிருக்கிறான்.

விடை:—இச்சூத்திரங்களின் சரியான பொருள் இவைகளல்ல. எதுவரையில் ஜீவன் தன்னுடைய சொந்தமான சுத்த சுவரூபத்தையடைந்து சகலகெடுதல்களையுங் களைந்து பரிசுத்தமாக வில்லையோ அதுவரையில் யோகத்தினால் ஈசவரத்தன்மையை அடைந்துமறைந்திருக்கும். தான் பிரம்மத்தை யறிந்து ஆனந்தத்திலிருக்க முடியாது.(2) இவ்விதமே பாபம் முதலியவைகளிலிருந்து மீறி ஈசுவரத்தன்மையுடன் யோகியாகிறவனே பிரம்மத்துடன் கூடி முக்தியின் ஆனந்தத்தை யனுபவிக்கிறான். இதுவே ஜெய்மினியின் கொள்கை. (3) அவித்தை முதலான தோஷங்களை விட்டு சுத்த சைதன்ய ஸ்வரூபத்துடன் கூடும் வரையில் பிரம்ம ஸ்வரூபத்திற்குச்சரியான சம்மந்தத்தை யடைகிறது. (4) பிரம்மத்துடன் கூட ஈசுவரத்தன்மை சுத்தவிஞ்ஞானம் இவைகளை ஜெயித்து ஜீவன் முக்த

னை பிறகு தன்னுடைய நிர்மலமான பூர்வஸ்வரூபத்தையடைந்து ஆனந்தத்தை அனுபவிக்கிறது. வியாசருடைய கொள்கையும் இதுவே. (5) யோகி பரிசுத்த நோக்கங்களுள்ளவனாகும் பொழுது தானாகவே பரமேச்வரனை யடைந்தவனாகி முக்தியின் சுகங்களை யனுபவிக்கிறான். அங்கே சுவாதீனத்துடனிருக்கிறான். உலகில் ஒன்று முக்கியம் மற்றொன்று முக்கியமில்லாதது என்பதுபோல் முக்தியில் கிடையாது. முக்தியடைந்தஜீவன்கள் யாவும் ஒன்றாகவே வசிக்கின்றன. இம்மாதிரி இல்லாமல் போகுமேயானால்.

नेतरोनुपपत्तेः — I. I. 16.
भेदव्यपदेशाच्च ॥ — I. I. 17.
विशेषणभेदव्यपदेशाभ्यां च नेतरौ ॥ — I. 2. 22.
अस्मिन्नस्य च तद्योगं शास्ति ॥ — I. I. 16.
अन्तस्तद्धर्मोपदेशात् ॥ — I. I. 20.
भेदव्यपदेशाच्चान्यः ॥ — I. I. 21.
गुहां प्रविष्टावात्मानौ हि तद्दर्शनात् ॥ — [illegible]
अनुपपत्तेस्तु न शारीरः ॥ — I. 2. 3.
अन्तर्याम्यधिदैवादिषु तद्धर्मव्यपदेशात् ॥ — I. 2. 18.
शारीरश्चोऽभयेऽपि हि भेदेनैनमधीयते ॥ — I. 2. 20.

வேதாந்த சூத்திரம்.



மேற்கண்ட சூத்திரங்களின் பிரகாரம் பிரம்மத்தைவிடவேறான ஜீவன் சிருஷ்டிகர்த்தாவாய் இருக்கமுடியாது. ஏனென்றால் ஜீவனுடைய எல்லைக்குட்பட்டுள்ள ஞானம், குணம், சக்தி இவைகள் பூலோகசிருஷ்டிக்குத் தகாதது. ஆகையினால் ஜீவன் பிரம்மாவாகாது.

रसं ह्येवायं लब्ध्वा नन्दी भवति

ஜீவனும் பிரம்மாவும் பிளவுப்பட்டது. ஆகையினாலேயே இவ்விரண்டினுடைய வித்தியாசங்களும் தெளிவாயிருக்கிறது. இம்மாதிரியில்லாமலிருக்குமேயானால் ரச அதாவது ஆனந்தஸ்வரூப பிரம்மத்தையடைந்து அது ஆனந்தஸ்வரூபமாகவிருக்கமுடியாது. அடையவேண்டிய விஷயம் பிரம்மமும் அடையக்கூடிய விஷயம் ஜீவனுமாகவிருக்கிறது. எனவே ஜீவனும் பிரம்மமும் ஒன்றாகாது.

दिव्यो ह्यमूर्त्तः पुरुषः स बाह्याभ्यन्तरो ह्यजः ।
अप्राणो ह्यमनाः शुभ्रो ह्यक्षरात्परतः परः ॥ — முண்டகோ. I. 2.

பிரம்மம் சுத்தமானது, உருவமில்லாதது, சகலத்திலும் நிறைந்தது, உள்ளும் புறமும் நிரந்தரமாயிருப்பது, பிறப்பு இறப்பற்றது, அவயவங்களில்லாதது, சுவாசம் வாங்குதல், சுவாசம் விடுதல், சரீரம், மனது இவைகளினுடைய சேர்க்கையிலிருந்து மாறினது, ஒளிமயமானது, இவைகளே பரமாத்மாவினு

டைய சிறப்புக்குணங்களாகும். நாசமற்றது பிரகிருதியிலிருந்தும் மேலானது அதைவிட சூக்ஷ்மமானது. இவைகளே ஜீவனுடைய விசேஷங்கள். பரமேச்வரன் அதைவிட சூக்ஷ்மமாயிருக்கிறார். அதாவது பிரம்மம் சூக்ஷ்மமானது. இப்பிரம்மத்தை அந்தர்யாமி என்கிற முதலான தர்மங்களைச் சொல்வதுமுண்டு.

ஜீவன் பரவியிருக்கிறபடியினால் வியாபித்திருக்கிற பிரம்மத்திலிருந்து வேறாயிருக்கிறது. ஏனென்றால் வியாப்யவியாபக சம்பந்தத்தில் கூடவித்தியாசங்கள் உண்டாகிறது. பரமாத்மா ஜீவனிலிருந்து வேறானவர் போலவே இந்திரியம் அந்தக்கரணம் பூமிமுதலானவைகள் திசைகள் வாயு சூரியன் தெய்விகத்தன்மையை கொண்டதினாலுண்டாகும் சந்தோஷம் இவைகளிலிருந்து பரமாத்மா வேறானவர். இம்மாதிரி உபநிடதங்களின் வாக்கியங்களிலிருந்தே ஜீவனும் பரமாத்மாவும் தனியானதெனத்தெரியும். இன்னும் பலவாக்கியங்கள் உபநிடதங்களிலிருக்கின்றன.

சரீரத்தையுடைய ஜீவன் பிரம்மமாகாது. ஏனென்றால் பிரம்மத்தினுடைய குணகர்மஸ்வபாவங்கள் ஜீவனிடத்தில் ஒலிக்காது.

(அதிதைவ) சகலசிரேஷ்டமான மனது முதலான இந்திரியாதி பொருள்களிலும் (அதிபூதம்) பிருதிவிமுதலான பூதங்களிலும் (அத்யாத்ம) சகல ஜீவன்களிலும் பரமாத்மா மறைவான ரூபமாயிருக்கிறார். ஏனென்றால் அப்பரமாத்மாவினுடைய பரவுங்குணம் உபநிடதங்களில் எங்கும் விவரிக்கப்பட்டிருக்கின்றன. சரீரத்தையுடைய ஜீவன் பிரம்மமாகாது. ஏனெனில் பிரம்மத்திலிருந்து ஜீவனுடைய வித்தியாசம் ஸ்வரூபத்தினாலேயே உண்டாகிறது.

சாரீரிக சூத்திரங்களிலுங்கூட ஸ்வரூபத்தினால் பிரம்மத்தினுடையவும் ஜீவனுடையவும் வித்தியாசம் வெளிப்படுகிறது. இம்மாதிரியே வேதாந்திகளினுடைய. "உபக்கிரம்" "உபசம்காரம்" செல்லாது. அவர்கள் ஆரம்பம் (உபக்கிரம்) பிரளயம் இவ்விரண்டையும் பிரம்மத்திலிருந்தென்றே நம்புகின்றார்கள். பிரம்மத்தைவிட வேறு ஒன்றையும் அவர்கள் நம்பாதபடியினால் உற்பத்தி பிரளயத்தைக்கூட பரமாத்மாவினுடைய தர்மம் என்றெண்ணுகிறார்கள். ஆனால் வேதம் முதலான சத்தியசாத்திரங்கள் உத்பத்தி நாசம் இவைகளிலிருந்து பிரம்மத்தை மீறினவனாகச்சொல்லுகிறது. வேற்றுமையற்றவர், பரிமாணமற்றவர், சுத்தம், சநாதனம், முதலிய விசேஷ குணங்களையுடைய பிரம்மத்தில் மாறுதல், உற்பத்தி, அஞ்ஞானம், முதலானவைகளைக் காட்டுவதற்கு வேதாந்திகளுடன் கோபங்கொள்வார். பிரளயத்தில் கூட பிரம்மா, பிரகிருதி, ஜீவன், இம்மூன்றும் இருந்துவருகிறது. ஆகையினால் உபக்கிரமும் உபசம்காரமும் வேதாந்திகளினுடைய பொய் கற்பனையே. இவர்களில் இம்மாதிரியே இன்னும் சாஸ்திரம் முதலான அனுபவப்பிரமாணத்திற்கு விரோதமான பல அழுக்குகள் இருந்துவருகின்றன.

இதற்குப் பிறகு சமணர்களையும் சங்கராசாரியையும் பின்பற்றினவர்கள் பரவி, இந்தியாவில் சபைகூட்டி வந்தார்கள். சங்கராசாரியருக்கு முந்நூறு வருடங்களுக்குப் பின்னால் உஜ்ஜைனி மகாராஜ விக்கிரமாதித்யன் கொஞ்

சம் பிரசித்தமானர். அவர் ராஜர்களின் உள்ச்சண்டையை விலக்கி சமதானத்தை நிலை நிறுத்தினர். பிறகு மகாராஜ பர்த்திருகரி காவ்யம் சாஸ்திரம் முதலானவைகளில் கொஞ்சம் வித்வானயிருந்து வைராக்கியத்தையடைந்து இராஜ்யத்தை விட்டுவிலகினர். விக்கிரமாதித்தியனுக்கு ஐந்நூறு வருடங்களுக்குப் பிறகு போஜராஜன் விளங்கினர். வியாகரணம், காவ்யம், அலங்காரம், முதலானவைகளைத் தன்னுடைய ராஜ்யத்தில் ஆட்டிடையன் காளிதாசனும் 'இரகுவம் சத்தை'ச்செய்யும் வண்ணம் பரவச்செய்தார். நல்ல பாக்கள் கட்டி கொண்டுவருவோர்களுக்குப்போஜராஜன் தக்கபரிசு அளித்து சன்மானித்து வந்தார். அவருக்குப் பிறகு அரசர்களும் சீமான்களும் படிப்பதை விட்டார்கள். சங்கராசாரியருக்கு முன்னிருந்தே வாமமார்க்கிகள் சைவசமயத்தவர்கள் முதலானவர்களிருந்த பொழுதிலும் பலமன்னியிலிருந்தார்கள். மகாராஜ விக்கிரமாதித்தியனுடைய காலந்தொட்டுதான் சைவர்களுடைய பலம் அதிகரித்தது. வாமமார்க்கிகளில் மகாவித்தை போன்ற பத்து பிரிவினைகளிருப்பதுபோல் சைவர்களிலும் பாசுபாதம் முதலான பிரிவுகளிருந்தன. சங்கராசாரியாரைச் சிவனுடைய அவதாரம் என்று எண்ணினர்கள். அவரைப் பின்பற்றினவர்களும் சந்நியாசிகளும் சைவர்களை யடைந்து சிவனுடைய பத்னியான தேவியைப் பூசித்து வாமமாரக்கத்தைச் சேர்ந்தார்கள். சைவர்கள் மகாதேவனைப் பூசித்தார்கள். இருவரும் உருத்திராக்ஷம் அணிந்து விபூதியைப் பூசிகொள்பவர்களே. ஆனல் வாமமார்க்கிகளைப்போல் சைவர்கள் வேத விரோதிகளல்ல.

சைவமதம்

धिक् धिक् कपालं भस्मरुद्राक्षविहीनम् ॥
रुद्राक्षान् कण्ठदेशे दशनपरिमितान्मस्तके विंशती द्वे,
षट् षट् कर्णप्रदेशे करयुगलगतान् द्वादशान्द्वादशैवं ।
बाह्वोरिन्दोः कलाभिः पृथगिति गदितमेकमेवं शिखायाम्,
वक्षस्यष्टाऽधिकंयः कलयति शतकं स स्वयं नीलकण्ठः ॥

இம்மாரி பாக்களை அவர்களுண்டுபெண்ணி சொல்ல வாரம்பித்ததாவது:— எவர்களுடைய தலையில் விபூதியும் கழுத்தில் உருத்திராக்ஷமும் இல்லையோ அவர்களைச் சண்டாளனுக்குச் சமானமானவர்களாய் தள்ளிவைக்கவேண்டும், (2) கழுத்தில் 32, தலையில், 10, ஒவ்வொருகரத்திலும் 6, மணிக்கட்டு ஒவ்வொன்றிலும் 12, கைகள் ஒவ்வொன்றிலும் 16, தலைமுடியில் 1, மார்பில் 108 உருத்திராட்ச மணிகளை அணிகிறவர்களே சிவஸ்வரூபம். இம்மாதிரியே சக்தி பூஜைக்காரர்களும் நம்புகிறார்கள். வாம மார்க்கிகளும், சைவர்களும் ஒன்றுசேர்ந்து லிங்கம், ஜலாதாரி என்று சொல்லப்பட்ட ஆண் பெண் குறிகளைப் பூஜை செய்து அதைப் பரவச்செய்யவும் கட்டுப்பட்டார்கள். அதைப் பூஜைசெய்வதில் அவர்களுக்கு நாணம் தோன்றவில்லை போலும். அது காட்டாளர்களுடைய செய்கை யென்றும் ஆகையினல் அது தகுதியல்ல வென்றும் அவர்களுடைய புத்திக்குப்படவில்லைபோலவும். கவி ஒருவர் கூறும்

வண்ணம் **स्वार्थी दोषं न पश्यति ।।** தன்னயக்காரர்கள் தங்களுடைய வேலையை முடித்துக் கொள்வதில் கெடுதல்களையும் குற்றங்களையும் கவனிக்கிறதில்லை. அவைகளைச் சுத்தமான தென்றும் நம்புகிறார்கள். கல்ச் சிலைகளையும், இனங்களின் குறிகளையும் பூசிப்பதினலேயே பலவிதமான தர்மார்த்த காம மோட்சங்களும் உண்டாகுமென்று நம்பினார்கள். போஜராஜனுக்குப் பிறகு சமணர்கள் விக்கிரகங்களைத் தாபித்து அதைப் பூஜை செய்ய வாரம்பித்தவுடன், இந்த பேரப்க்களுடைய சீடர்களும் சமணவாலயங்களுக்குப் போக வாரம்பித்தார்கள். மேல் நாடுகளில் புதுமதங்கள் ஆரம்பித்து கிரேக்கர்களும் முகம்மதியர்களும் இந்தியாவிற்கு வரவாரம்பித்தவுடன் போப்கள் இம்மாதிரியான

**न वदेद्यवनीं भाषां प्राणैः कण्ठगतैरपि ।**
**हस्तिना ताड्यमानोऽपि न गच्छेज्जैनमन्दिरम् ॥**

சுலோகங்களைக் கட்டவாரம்பித்தார்கள். "கஷ்டங்கள் எவ்வளவுண்டான பொழுதிலும் பிராணனுக்கே ஆபத்து அதாவது மரணமே வந்தபொழுதிலும் யாவனர்களுடைய அதாவது மிலேச்சர்களுடைய பாஷையை வாயினுல்கூட சொல்லக்கூடாது. மதம்பிடித்த யானை பின்டற்றின பொழுதிலும் உயிரைக் காப்பாற்றிக் கொள்ளவுங்கூட சமண ஆலயங்களுள் நுழையக்கூடாது. சமண ஆலயங்களில் நுழைந்து உயிரைக்காப்பாற்றிக் கொள்ளுவதைவிட யானையினுடைய காலடிமிதியினுல் இறப்பது மேலானது." இம்மாதிரி தங்களுடைய சீடர்களுக்கு உபதேசஞ் செய்தார்கள். உங்கள் மதத்திற்கு ஏதாவது பிரமாணப் புத்தகங்கள் உண்டாவென்று வினவினால் இருக்கிறது பாருங்கள் என்று மார்க்கண்டேய புராணத்திலிருந்து சில பாகங்களையும் துர்காபாடத்திலிருந்து தேவியுடைய வர்ணனையும் படித்துக் காண்பிப்பார்கள். போஜராஜனுடைய காலத்தில் வியாசருடைய பெயரால் மார்க்கண்டேய, சிவபுராணங்களை எவரோ ஒருவர் செய்து விட்டார். இது ராஜனுக்குத் தெரிந்தவுடன் அப் பண்டிதர்களின் கையை வெட்டி தண்டனையை அளித்து எவராவது காவியம் முதலான கிரந்தங்கள் செய்தால் அதைத் தன்னுடைய சொந்த பெயரிலேயே வெளியிடுதல் வேண்டும் என்றும் ரிஷி முனிகளினுடைய பெயரால் செய்யக் கூடாதென்றும் பறைசாற்றினன். இது போஜராஜனுல் செய்யப்பட்ட சஞ்சீவினி என்னும் நூலில் காணப்படும். இது குவாலியார் இராச்சியத்துப் பிண்ட என்னும் பட்டணத்தின் திவாரி பிராம்மணர்களிடமிருக்கிறது. இது லகுனராவ், சாகிபனுலும், அவருடைய குமாஸ்தா ராமதயால் சௌபேயினுலும் பார்க்கப்பட்டிருக்கிறது.

அதே புத்தகத்தில் வியாசர் 4400ம் அவருடைய சிடர்கள் 5600, சுலோகங்களையும் அதாவது 10,000 சுலோகங்கள் செய்யப்பட்டதாகக் கூறப்பட்டிருக்கிறது. ஆனல் விக்கிரமாதித்திய மகாராஜ காலத்தில் அது 20000 மாக பெருகிவிட்டது. தன் தகப்பனர் காலத்தில் 25,000 சுலோகங்களும் தன்னுடைய யௌவன காலத்தில் 30,000 மாயிருந்த தென்று போஜராஜன் சொல்லியிருக்கிறார். இம்மாதிரி பெருகிக்கொண்டு போகுமேயானல் மகாபாரத

புத்தகம் ஒட்டகச்சுமை ஒன்றைப் போலாய்விடும். ரிஷி முனிகளினுடைய பெயரால் புராணம் முதலிய கிரந்தங்கள் செய்யப்படுமே யானுல் இந்தியர்கள் மயங்கி உண்மையான வைதிக தர்மத்தை இழந்து நாசமடைவார்கள். வேதங்களிடத்தில் ராஜனுக்கிருந்த ஆசை இதிலே யிருந்தே விளங்குகிறது.

घट्यैकया क्रोशदशैकमश्वः सुकृत्रिमो गच्छति चारुगत्या ।
वायुं ददाति व्यजनं सुपुष्कलं विना मनुष्येण चलत्यजस्रम् ॥ போஜப்பிரபந்தம்

ராஜபோஜனுடைய இராஜ்யத்திலும் அதற்கடுத்த நாட்டிலும் ஒரு மணியில் $22\frac{1}{2}$ கோசம் அல்லது 45 மைல், 1 கெடி அல்லது 48 நிமிஷத்தில் 11 கோசம் $22\frac{1}{2}$ அல்லது 22 மைல் போகக்கூடிய சத்தியையுடைய குதிரையைப்போன்ற இயந்திரங்கள் செய்யக்கூடிய சிற்பவேலைக்காரர்களிருந்தார்கள். அது பூமியின்பேரிலும் ஆகாசத்திலும் போகக்கூடியது. மேலும் பங்கா ஒன்று செய்திருந்தார்கள். அது மனிதவுதவியன்னியில் தானுகவே சுற்றவும் சுற்றும். காற்றையுங் கொடுக்கும்.

இவ்விரண்டும் இக்காலம் வரையிலிருந்திருக்குமேயானுல் ஐரோப்பியர்களுக்கு இவ்வளவு அகம்பாவம் இராது.

போப்புக்கள் தங்கள் சிஷ்யர்களை சமணவாலயங்களுக்குப் போகாமல் தடுத்த போதிலும் அவர்கள் அதை பொறுக்கமுடியவில்லை. சமணர்களுடைய கதையைக் கேழ்ப்பதற்கும் அவர்களுடைய சட்டங்களை அறிவதற்கும் சென்றுர்கள். பிறகு சமணபோப்க்கள் புராணிகப் போப்புகளுடைய சீடர்களை இச்சகம் பேசி ஏய்க்க வாரம்பித்தார்கள். அப்பொழுது புராணிகர்கள் செய்த யோசனையாவது :— உபாயம் ஒன்று செய்யாவிடில் தங்களுடைய சீடர்கள் சமணர்கள் ஆய்விடுவார்கள் என்று அறிந்தார்கள். பிறகு சமணர்களுக்குச் சரியாக அவதார மூர்த்திகளின் ஆலயங்களைக் கட்டி புஸ்தகங்கள் எழுத வாரம்பித்தார்கள். 24 சமண தீர்த்தங்கரர்களுக்குச் சரியாக 24 அவதாரங்களையும் ஆலயங்களையும் மூர்த்திகளையும் செய்தார்கள். சமணர்களுடைய ஆதி, உத்திர, புராணங்களைப் போல் பதினெண் புராணங்களையும் செய்தார்கள்.

போஜ ராஜனுக்கு 150 வருஷங்களுக்குப் பிறகு வைணவமதம் ஆரம்பமானது. ஆரம்பத்தில் கஞ்சரவர்ணத்திலுதித்த **சடகோப**ரென்பவரால் பிரசாரம் செய்யப்பட்டது. பிறகு பெறுக்குகிறகுலத்துதித்த **முனிபாணன்** என்பவனுலும், பிறகு யவனவம்சத்திலுத்த **யாவனுசசாரியா**லும் பரவச்செய்யப்பட்டது. நான்காவதாகப் பிராம்மணகுலத்துதித்த **ராமனுஜரால்** இம்மதம் பெரியதாயிற்று. சைவர்கள் சிவபுராணத்தையும், சக்தி பூஜைக்காரர்கள் **தேவிபாகவதத்தையும்**,வைணவர்கள் **வைணவபுராணத்தையும்** முறையே செய்தார்கள். எவனும் பிரமாணங்களாக எடுத்துக்கொள்ளமாட்டானென்னும் எண்ணத்தினுல் தங்களுடையபெயரைக்காண்பிக்காமல் முனிகளின் பெயரால்புராணங்களைச்செய்தார்கள். இவைகளுக்கு உண்மையானபெயர் நவீனமே யாகும். புராண (அல்லது பழையது) என்பது கூடாது. ஆனுல் தரித்திரர்கள் தங்கள் பிள்ளைகளுக்கு மகாராஜாதிராஜன் என்றும் பெயர் வைக்கும் பொழுது

என்ன அதிசயமிருக்கிறது. இவர்களுக்குள்ளிருக்கும்படியான சகல சச்சரவுக ளெல்லாம் புராணங்களிலும் அப்படியே நிரம்பி ததும்பி யிருக்கின்றன.

தேவிபாகவதத்தில் ஸ்ரீ என்னும் ஸ்திரீ ஸ்ரீபுரத்தின் அதிகாரியாக விருந் வதாகச் சொல்லுகின்றது. அவள்தான் உலகம் சகலத்தையும் சிருஷ்டித்தாள். பிரம்மா விஷ்ணு மகாதேவனையும்கூட அவளே சிருஷ்டித்தாள். அத்தேவிக்கு இஷ்டம் வந்தபொழுது கையைத் தேய்த்துக்கொண்டிருந்ததாகவும் அப்பொ ழுது ஒரு கொப்புளம் உண்டானதாகவும் அதிலிருந்து பிரம்மா உண்டானதா கவும் சொல்லப்பட்டிருக்கிறது. அப்பொழுது நீ என்னை விவாகஞ் செய்துக் கொள் என்று சொன்னாள். நீ என்தாயானபடியினால் பிரம்மா உன்னுடன் மணம்புரிந்து கொள்ளமுடியாது என்றார். இதைக்கேட்டு கோபம் வந்து தாய் பிள்ளையை சாம்பலாகும்படி சபித்தாள். பிறகு முன்மாதிரி தேய்க்கவே இரண் டாவது பிள்ளை உண்டானான். அவருக்குப்பெயர் விஷ்ணு என்று வைத்து அவரிடத்திலும் கலியாணம் செய்துகொள்என்று வினவினாள். அவரும் அதை ஏற்காமல் போகவே அவரையும் சாம்பலாக்கிவிட்டாள். மறுபடியும் முன்செ ய்தபிரகாரமே மூன்றாவது பிள்ளையை உண்டுபண்ணி மகாதேவன் என்று பெயரிட்டாள். அவரிடத்திலும் விவாகம் செய்துக்கொள் எனவே நீ வேறு ஸ்திரீயின் சரீரத்தை எடுத்துக்கொள்ளவேண்டும் என்றார். அவ்விதமே தேவி செய்ய மகாதேவர் இதோ விழுந்திருக்கிற இரண்டு குவியல்களும் என்னவென வினவினார். தேவி இரண்டும் உன்சகோதரர்களென்றும் என்பேச்சைக்கேழ்க் காமல் போனதினாலேயே சாம்பலாகச் செய்தேன் என்றாள். அப்பொழுது மகா தேவன் என்னால் தனியாக ஒன்றும் செய்யமுடியாது என்றார். மூவர்களையும் மணந்துகொள்ளுமாறு இன்னும் இரண்டு ஸ்திரீகளையுண்டுபண்ணவேண்டும் என்றார். தேவி அம்மாதிரியேசெய்ய மூவர்களுடன் கூடவிவாகம் நடந்தே றியது.

தாயுடன் கலியாணஞ் செய்துகொள்ளாமல் சகோதரிகளுடன் செய்து கொண்டார்கள். இதைச்சரியென நம்பலாமா? பிறகு இந்திராதிகளை உண்டு பண்ணி பிரம்மா விஷ்ணு உருத்திரன் இந்திரன் இவர்களுடைய பல்லா க்குத்தூக்கிகளாகச் செய்தாள். இம்மாதிரி பாவனையுள்ளகட்டுக் கதைகள் எழு தப்பட்டிருக்கின்றன. இத்தேவியுடைய சரீரத்தையும் அவளுடைய ஸ்ரீபுரத் தையும் அவளுடைய தாய்தகப்பன் இவர்களையும்செய்தது யாரென்றும் போப் க்களைக் கேட்கவேண்டும். தேவி ஆரம்பமில்லாதவள் என்பார்களேயானால் அது சம்யோகத்தினால் உண்டாகிற ஜன்மமானபடியினால் அநாதியாய் ஒரு பொழுதும் இருக்கமாட்டாது. தாய் பிள்ளையுடன் விவாகஞ்செய்து கொள்வத ற்கு இஷ்டப்படாமல் பயந்தால் சகோதரியுடைய விவாகம் மாத்திரம் எவ்வி தம் நல்லதாகும்? தேவிபாகவதத்தில் மகாதேவர் விஷ்ணு பிரம்மாமுதலானவர் களை அற்பத்தனமாயும் கேவலமாயும் தேவியைப்பெரியதனமாயும் மேன்மை வாய்ந்தவளாயும் எழுதியிருப்பது போலவே சிவபுராணத்தில் தேவிமுதலானவர் களை மிகக்கேவலமாய் எழுதப்பட்டிருக்கிறது. அதாவது இவர்களையெல்லாம் மகாதேவனின் தாசனாகவும் மகாதேவனைச் சகலருடைய தாசனாகவும் செய்ய

ப்பட்டிருக்கிறது. உருத்திராட்ச மணிகளணிந்து விபூதி பூசிக்கொள்வதினால் முக்திகிடைக்குமேயானால் தினந்தோறும் புழுதியில் புரளும் கழுதை முதலான மிருகங்களுக்கும் பழம் கொட்டை சங்கு முதலானவைகளை அணியும் பீல் கஞ்சீரா முதலான மலைவாசிகளுக்கும் ஏன் சுவர்க்கம் கிடைக்காது ?

வினா:—காலாக்னி ருத்ரோப நிஷத்தில் விபூதி பூசிக்கொள்ளகட்டளை யிடப்பட்டிருக்கிறதே? அதென்னப்பொய்யா?"திராயுஷம்ஜமதக்னே" என்னும் யஜுர்வேதம் முதலான வேதமந்திரங்களில் சாம்பல் பூசிக்கொள்ள விதி யிருக்கிறதே. உருத்திரனுடைய கண்ணீர்களிருந்து உண்டான மரத்தையே புராணங்கள் உருத்திராக்ஷம் என்கின்றன. ஆகையினால் அவைகளை அணிந்து கொள்வதினால் புண்ணியம் கிடைக்கிறது. ஒரு உருத்திராக்ஷம் அணிந்தால் கூட சகலபாபங்களும் நீங்கி சுவர்க்கத்தையடைகிறோம். எமராஜனுக்கும் நரகத்திற்கும் பயப்படவேண்டியதில்லை.

விடை:—தன்சரீரம் முழுவதையும் சாம்பலினால்பூசிக்கொண்ட ஒருவனாலேயே காலாக்னிருத்திரம் எழுதப்பட்டது. ஏனென்றால் "யஸ்ய பிரதமா ரேகா ஸா பூர்லோக" என்பதைப்போன்ற அர்த்தமில்லாத வார்த்தைகள் அதிலிருக்கின்றன. "பிரதிதினம் கையினால் நெற்றியிலிழுக்கப்பட்ட கோடானது பூமியாகும்". இது எவ்விதம் உண்மையாகும்? இம்மாதிரி மந்திரங்களினால் சாம்பல் அல்லது திரிபுண்டரம் தரித்துக்கொள்ளுதல் என்று ஆகாது, ஆனால் "சக்ஷுர்வைஜமதக்னி" (சதபதம்.)

ஹே பரமேச்வர என் கண் பார்வையானது (திராயுஷம் திருணி) அதாவது முந்நூறு வருடபரியந்தம் இருக்கட்டும். கண்கெடாமலிருக்கும் படியான தர்மகாரியங்களையே செய்யட்டும்.

கண்ணீரிலிருந்து மரம் உண்டாகக்கூடுமென்பது என்ன புத்தியில்லாத்தனம்? பரமேச்வரனின் இயற்கை யமைப்பை எவராலேயாவது மாற்றமுடியுமா? பரமாத்மா எந்த மரத்திற்கென்று விரையை உண்டுபண்ணினானோ அந்த விதையிலிருந்தே அம்மரம் உண்டாகிறது.

எவ்வளவு உருத்திராக்ஷம் சாம்பல், துளசி, தாமரை, பத்திரம், சணல், சந்தனம், முதலானவைகளைக்கழுத்தில் அணிந்தாலும் எல்லாம் மிருகத்தன்மையையுடைய காட்டுமனிதனின் காரியமாகிறது. இவைகளை உபயோகிக்கிற வாமமார்க்கிகளும் சைவர்களும் பொய்வேஷக்காரர்களாயும், விரோதிகளாயும், செய்யவேண்டியகாரியங்களை விடுகிறவர்களாயு மிருக்கிறார்கள். இவர்களிலிருக்கிற கொஞ்சம் சிறந்தவர்கள் இவ்வார்த்தைகளில் நம்பால் நற்கரியைகளைச் செய்கிறார்கள். உருத்திராக்ஷம் பஸ்மம் அணிந்துகொள்வது எமராஜனுடைய தூதர்களைப் பயப்படச்செய்யுமேயானால் போலிஸ்சேவகர்களையாவது அது பயப்படச்செய்யவேண்டுமே? உருத்திராக்ஷம், சாம்பல் உபயோகிக்கிறவர்கள் நாய் சிங்கம், பாம்பு, தேள், ஈ, கொசு முதலானவைகளைப் பயப்படசெய்யாமல் போனால் பெரிய நீதிபதியினுடைய சேவகர்கள் ஏன் அதற்குப் பயப்படுவார்கள்.

வினா:—வாமமார்க்கிகளும் சைவர்களும் நல்லவர்களில்லாமல் போனால் **வைணவர்கள்** நல்லவர்களா?

விடை:—வேத விரோதிகளானபடியினால் இவர்களிடத்தும் வெகுகெடுதல்களிருக்கின்றன.

வினா:— **नमस्ते रुद्र मन्यवे, वैष्णवमसि, वामनाय च, गाणनां त्वा गणपतिँ हवामहे, भगवती भूयाः, सूर्य आत्मा जगतस्तस्थुषश्च,** இவ்வித வேதப்பிரமாணங்களிலிருந்து சைவம் முதலான மதங்கள் உண்டாகிறபடியினால் நீங்கள் ஏன் அதைக்கண்டிக்கவேண்டும்?

விடை:—இவ்வார்த்தைகளிலிருந்து சைவம் முதலிய சாம்பிரதாயங்கள் வெளியாகவில்லை. ஏனென்றால் பரமேச்வரன் பிராணன், வாயு, ஜீவன், அக்னிமுதலானவைகள் ருத்திரனுடைய பெயர்களாகும் 'ருரோதகர்த்தாருத்ர' அதாவது துஷ்டர்களைத் தண்டிக்கிற பரமாத்மாவிற்கு வந்தனம். பிராணனுக்கும் ஜீரணக்கருவிக்கும் அன்னமளித்துக் காப்பாற்றிக்கொள்வது என்பதே பொருளாகும். (நம இதி அன்னநாம—நிகண்டு. 2. 4.)

மங்களாகாரமாய் சகல உலகத்திற்கும் சுபத்தைசெய்கிற அப்பரமாத்மாவை வணங்கவேண்டியது. சிவனை (கருணைக்கடல்) பூஜிப்பவனே **சைவன்.** விஷ்ணு (எங்கும்பரவியுள்ளவர்) வைப்பூஜிப்பவனே **வைணவன்.** கணபதி (கணங்களின்தலைவர்) யைப்பூஜிப்பவனே **கணபதன்.** சராசரமான சகல உலக ஆத்மாவையும் எங்கும் பரவியுள்ள தெய்வத்தையும் பூஜிப்பவனே **சௌரசன்.** உருத்திரன், சிவன், விஷ்ணு, கணபதி, சூரியன், பகவதி, முதலான சகலமானவைகளும் சர்வேசுவரனின் பெயர்கள். இவைகளினுடைய உண்மையை அறியாமல் சண்டைய உண்டுபண்ணி விட்டார்கள். எப்படி யென்றால்:—

ஒரு **பைராகிக்கு** இரண்டு சீடர்களிருந்தார்கள். அவர்கள் பிரதிதினமும் குருவினுடைய பாதங்களைப் பிடித்துத் தேய்த்துக்கொண்டு வந்தார்கள். ஒருவன் வலது காலையும் மற்றவன் இடதுகாலையும் பிடித்து சிசுருஷைசெய்து வந்தான். ஒருநாள் ஒரு சீடன் கடைத்தெருவிற்குப்போயிருந்தான். மற்றொருவன் தனக்சென்று ஏற்பட்ட காலைப்பிடித்துகொண்டிருக்கும் பொழுது குரு சரீரத்தைத்திருப்பிக்கொடுக்கவே இரண்டாவது சீடன் பிடிக்கவேண்டிய கால் இந்தக்காலின் மேல்விழுந்தது. இதைக்கண்டதும் சீடன் ஒருதடியை எடுத்து மேலேவிழுந்த காலை அடிக்கவாரம்பித்தான். அப்பொழுது குருவானவர் ஏ! துஷ்டா!! என்ன காரியம்செய்தாய்? என்றார். அதற்குச்சீடன் நான்சிசுருஷை செய்யவேண்டிய காலில் ஏன்இந்தக்கால் வந்துவிழவேண்டும்? என்றான். இதற்குள் கடைதெருவிற்குப் போயிருந்த இரண்டாவது சீடனும் திரும்பிவந்து தான் சிசுருஷை செய்யவேண்டிய காலைப் பிடிக்க ஆரம்பித்தான். அது வீங்கியிருப்பதைப்பார்த்து குருவைக் காரணங்கேட்டான். அவர் நடந்தசங்கதிகளையெல்லாம் சொன்னார். சீடன் ஒன்றும் பதிலளிக்காமல் பெரியதடி ஒன்றைக்கைப்பற்றிக்கொண்டு குருவினுடைய இரண்டாவதுகாலை நையப்புடைத்தான்.

குரு உரக்கச்சத்தஞ் செய்தார். அப்பொழுது பெரும்புலம்பல் உண்டாகவே ஜனங்கள் திரளாக அங்குவந்து கூடினார்கள். சாதுவிற்கு விளைந்த ஆபத்தைக் கண்ணுற்று விசனமுற்றார்கள். அவர்களில் புத்திசாலியான ஒருவன் சீடர்களுடைய அடிகளிலிருந்து சாதுவை விடுவித்து மூர்க்க சிஷ்யர்களைப் பார்த்து இவ்விரண்டுகால்களும் உங்கள் குருவினுடையதே. இவைகளைச் சிசுருஷை செய்வதினால் அவருடைய சுகத்தையே தேடுகிறீர்கள். இதற்குத் துக்கங்கொடுப்பதினால் அவருக்குத் துக்கத்தைக்கொடுக்கிறீர்கள் என்று உபதேசஞ்செய்தான்.

ஒரேகுருவினுடைய சேவையில் சிஷ்யர்கள் எப்படிவிளையாடினார்களோ அப்படியே ஒரே அகண்ட சச்சிதானந்த ஸ்வரூப பரமாத்மாவிற்கு விஷ்ணு உருத்திரன் என்கிற முதலானபெயர்களையளித்து விளையாடுகிறார்கள். முதல் அத்தியாயத்தில் விளக்கியிருக்கும் வண்ணம் இதனுடைய உண்மையான அர்த்தத்தை அறியாமல் சைவம் சாக்தம் வைணவம் முதலான சாம்பிரதாயப்பெயர்களைக்கொண்டு ஜனங்கள் ஒருவருக்கொருவருடைய பெயரை நிந்தனைசெய்கிறார்கள். தங்களுடைய புத்தியைக்கொண்டு விஷ்ணு உருத்திரன் முதலான பெயர்கள் இரண்டற்ற ஒரே சர்வநியந்தாவாயும் சர்வாந்தர்யாமியுமான ஜகதீசனுடைய குணகர்மஸ்வபாவங்களுக்கேற்ற பலபெயர்கள் என்று அறிகிறதில்லை. இம்மாதிரி ஜனங்களின்பேரில் ஈச்வரனுக்குக் கோபம் வராதா?

**சக்கிராங்கித வைணவர்கள்.**

இவர்களுடைய அற்புத மாயையை இப்பொழுது கேட்போம்.

तापः पुण्ड्रं तथा नाम माला मन्त्रस्तथैव च ।
अमी हि पञ्च संस्काराः परमैकान्तहेतवः ॥
अतप्ततनूर्न तदामो अश्नुते । इति श्रुतेः ॥ ராமானுஜ படலபத்ததி.
दोहा—बाना बडा दयाल का, तिलक छाप और माल ।
यम डरपे काल्हू कहे, भय माने भूपाल ॥

(1) கையில் சூடு செய்து கொள்வது, நெற்றியில் சூலத்தைப்போல் எழுதிக்கொள்ளுவது, ('தாஸ்' என்பதில்முடிகிற) பெயரைவைத்துக்கொள்ளுவது, கழுத்தில் மாலையை அணிந்துகொள்ளுவது, மாயையின் ஞானத்தை அறிவது, இவ்வைந்தும் பரம ஏகாந்தத்தை யளிக்கின்றன. சங்கு, சக்கரம், கதை, பத்மம், இவைகளுடைய சூடுண்ட ஒரு இரும்பைக்கொண்டு கையில் முத்திரை யிட்டுக்கொண்டபின்னர் பாலுள்ள ஒரு பாத்திரத்தில் அதை நனைக்கிறார்கள். சிலர் அப்பாலைக்குடிப்பதும் உண்டு. அப்பாலைக்குடிப்பதினால் மனிதருடைய மாம்சத்தில் ஆசை ஒருவருக்கு உண்டாகிறதென்பது இதனால் வெளிச்சமாகிறது. இவ்விதகாரியங்களினால் பரமேச்வரனையடையலாம் என்றும் சங்கு சக்கராதிகளினால் சரீரத்தில் சூடுபோடாமல் ஜீவன் பரமேச்வரனையும் அடையாது என்கிறார்கள். எப்படி யென்றால் இராஜ்யத்தின் அதிகார முத்திரைக்கோலைக்கண்டு ஜனங்கள்பயப்படுவது போலவே விஷ்ணுவினுடைய

சங்கு சக்கரம் முதலான ஆயுதச் சின்னங்களைபார்த்து எமராஜனும் அவருடைய கூட்டத்தவர்களும் பயப்படுகிறார்களாம்.

நெற்றியிலும் கையிலும் அடையாளங்கள் வைத்துக்கொள்ளுவதும், மாலையை அணிந்துகொள்ளுவதும், பகவானுடைய சின்னங்களாம். திரிசூலத்திற்குச்சரியாய் நெற்றியில் எழுதிக்கொள்ளுவதும், நாராயணதாஸ் விஷ்ணுதாஸ் என்று "தாஸ்" சப்தமுடிவையுடைய பெயரைவைத்துக் கொள்ளுவதும், தாமரை மாலையை அணிந்து கொள்ளுவதும், (ஐந்தாவதாக) ஓம் நமோ நாராயணாய என்பதும் இவர்களுடைய அடையாளங்களாகும். இவ்விதமாகச் சாதாரண ஜனங்களுக்குச் சொல்வதும் இயல்பு.

ओं नमो नारायणाय ॥ श्रीमन्नारायणचरणं शरणं प्रपद्ये ॥ श्रीमते नारायणाय नमः श्रीमते रामानुजाय नमः ॥

இம்மாதிரி மந்திரங்களைத் தனவந்தர்களுக்கும் மரியாதை யுள்ளவர்களுக்குமென ஏற்படுத்தியிருக்கிறார்கள். கவனியுங்கள்! இதுவும் கடைவியாபாரமும் ஒன்றேயன்றோ? பார்வை எப்படியோ அப்படியே அவர்களுடைய மரியாதையும். இவ்வைந்து சம்ஸ்காரங்களும் சக்கிராங்கித முக்திக்குக் காரணங்களாகும்.

நாராயணனுக்கு வந்தனம்! லக்ஷ்மியுடன்கூடின நாராயணனுடைய பாத கமலங்களில் சரணமடைகிறோம். பிரகாசிக்கிற நாராயணனுக்கு நமஸ்காரத்தை அளிக்கிறோம். வாமமார்க்கிகள் ம வில் ஆரம்பமாகும் ஐந்தையும் நம்புவதுபோல் சக்கிராங்கிதர்கள் பஞ்ச சம்ஸ்காரத்தைப் போற்றுகிறார்கள். சூடுபோடும்பொழுது சொல்லப்படும்படியான இம்மந்திரத்தின் உண்மையான அர்த்தம் என்னவென்றால்.

पवित्रं ते विततं ब्रह्मणस्पते प्रभुर्गात्राणि पर्येषि विश्वतः ।
अतप्ततनूर्न तदामो अश्नुते शृतास इद्वहन्तस्तत्समाशत ॥
तपोष्पवित्रं विततं दिवस्पदे ॥ இருக். ௯. ௮௩. ௧. ௨.

(1) பிரம்மாண்டம் வேதம் முதலானவைகளைக் காப்பாற்றும்படியான ஓ புரபுவே! சர்வசாமர்த்தியவானும் சர்வசக்திமானுமிருக்கும் நீ வியாப்தியினால் உலகிலிருக்கிற சகல பொருள்களிலும் வஸ்துக்களிலும் பரவியிருக்கிறாய். உன்னுடைய அந்த பரவுதலானது பரிசுத்த ஸ்வரூபமாயிருக்கிறபடியினால் பிரம்மசரியம், உண்மை உரைத்தல், நறவரம், பொறுமை, யோகாப்பியாசம், அடக்கப்பட்ட ஐம்புலன்கள் சத்சங்கம், பரிபக்குவம் அடையாத ஆத்மா, அந்தக்கரணம் இவைகளில்லாதவர்கள் உன்னுடைய சுயரூபத்தை அடைகிறதில்லை. பூர்வோத்திர தபசினால் சுத்தமானவர்களே இதைஆசரியித்து உன்னுடைய சுத்தசுயரூபத்தை செவ்வனே அடைகிறார்கள்.

பிரகாசஸ்வரூபமான பரமேச்வரனுடைய சிருஷ்டியில் பரிசுத்த நடத்தையென்னும் தவத்தைப் புரிகிறவர்களே பரமாத்மாவை அடையத்தகுதியுள்ளவர்கள்.

இம்மந்திரத்திலிருந்து சூடிடுதல் என்று எங்ஙனம் அர்த்தங்கொள்ள முடியும்? அவர்கள் படித்தவர்களா அல்லது மூட்டாள்களா? அவர்கள்வித்வான்களாயிருந்தால் ஏன் இவ்விதமான ஒவ்வாத அர்த்தங்களைச் செய்யவேண்டும்? ஏனெனில் இதில் "அதப்ததனூ:" என்றிருக்கிறதே தவிர "அதப்தபுஜைகதேச" என்றில்லை. அதப்ததனு என்ருல் உள்ளங்கால்முதல் தலைமுனைவரையிலுள்ள சரீரம் என்று பொருள். இப்பிரமாணத்தைக்கொண்டு சரீரத்தைச் சுட்டுக்கொள்ளவேண்டுமென்று சக்கிராங்கிதர்கள் சொல்லுவார்களேயாளுல் அவர்களுடைய சரீரத்தை அக்கினி ஜ்வாலையில் எரித்துக் கொள்ளவேண்டியதே. அவ்விதம் செய்தபோதிலும் இம்மந்திர அர்த்தத்திற்கு விரோதமேயாகும். ஏனெனில் மந்திரத்தில் "தப" என்பதற்கு சத்தியம் பேசுதல் பரிசுத்தகர்மம் முதலானவைகளைச்செய்தல் ஆகியவைகளாம்.

**ऋतं तपः सत्यं तपः श्रुतं तपः शान्तं तपो दमस्तपः ॥** தைத்ரே. 10. 8.

மனச்சுத்தம் சத்தியத்தைப்போற்றல், சத்தியத்தைப்பேசுதல், சத்தியத்தைச்செய்தல், மனதை அதர்மத்தில் விடாமலிருத்தல், வெளி இந்திரயங்களை அநியாயகாரியங்களில் செல்லுவதிலிருந்துதிருப்புதல்; அதாவது சரீரம் இந்திரியம் மனது இவைகளினுல் சுபகாரியங்களைச்செய்தல்; வேதம்முதலான சத்தியவித்தையை ஓதுதல் ஓதுவித்தல்; வேதானுகூலமாய் காரியங்களைச் செய்தல், முதலான உத்தமதர்ம யுக்தமானகாரியங்களைச் செய்வதற்கே தப வென்றுபெயர். சூடுண்ட லோகங்களைக்கொண்டு புண்ணுக்கிக்கொள்ளுவது தப வாகாது. சக்கிராங்கிதர்கள் தங்களைப்பெரிய வைணவர்களாகக் கருதுகிருர்கள். தங்களுடைய தீயவழக்கங்களையும் காரியங்களையும் கவனிக்கிறதில்லை. இக்கம்பிக்கையின் முதல்போதகாசாரியர் **சடகோபர். நாபாவினுலியற்றப்பட்ட பக்திமாலை**சக்கிராங்கிதர்களுடைய நூலாகும். இவைகளின் பிரகாரம் டோம் (தாழ்ந்த) குலத்துதித்த யோகி சடகோபர்.

**विक्रीय शूर्पं विचचार यागी ॥**

ஜல்லடை செய்துவிற்று வந்தவருகச்சொல்லப்பட்டிருக்கிறது. அதாவது அவர் கஞ்சர (வேசிக்கு) ஜாதியில் பிறந்தவர். பிராம்மணர்களுடன் படிக்க வேண்டுமென்றும் அவர்கள் படிப்பதைக் கேழ்க்கவேண்டுமென்றபொழுதும் அவர்களால் தள்ளப்பட்டிருக்கவேண்டும். அவர் அப்பொழுது பிராம்மணர்களுக்கு எதிரிடையாய் திலகம்வைத்துக் கொள்ளுவது சூடிட்டுக்கொள்ளுவது முதலான சாஸ்திரவிரோதமான சாம்பிரதாயங்களைச் செய்திருக்கக்கூடும். அவருடைய சிடர் முனிவாகனர், சண்டாளவர்ணத்திலுதித்தவர். அவருடைய சிடர் யாவனுச்சாரியர். கிரேக்க அல்லது துருக்கக்குலத்திலுதித்தவர். தன்னுடைய பெயரை யமுனுச்சாரியார் என்று மாற்றிக்கொண்டார். அவருக்குப் பிறகு ராமானுஜர் பிராம்மண குலத்திலுதித்தவர். பிறகு சங்கிராங்கிதருனர். அவருக்குமுந்தி நூல்களெல்லாம் சுதேசபாஷையிலேயே எழுதப்பட்டுவந்தன. ராமானுஜர் கொஞ்சம் சம்ஸ்கிருதம் படித்து சம்ஸ்கிருதத்திலேயே சுலோகங்களையும் சாரிக சூத்திரங்களையும் உபநிடத உரைகளையும், சங்கராசாரிய

ருக்கு எதிராகச்செய்தார். அத்வைதம் அதாவது ஜீவனும் பிரம்மமும் ஒன்றென்றும் இரண்டாவதான வேறுவஸ்து உண்மையிலொன்றுமில்லை யென்றும், பிரபஞ்சம் பொய்யென்றும் மாயை யென்றும் அநித்தியமென்றும் சங்கராசாரியர் நம்பினர். இதற்குமாருக ராமானுஜர் ஜீவன், பிரம்மம், மாயை இம்மூன்றும் நித்தியமென்று நம்பினர். சங்கராசாரியர் பிரம்மத்திலிருந்து ஜீவனையும் காரணவஸ்துவையும் வேருக நம்பாதது சரியாகாது.

இந்த அம்சத்தில் ராமானுஜர் (விசிஷ்டாத்வைதம்) ஜீவன் அதாவது மாயையுடன் கூடின பரமேச்வரன் ஒன்றுதானென்று எண்ணி இம்மூன்றையும்போற்றி அத்வைதமென்று சொல்லுவதும் எப்பொழுதும் வீண்காரியமேயாகும். ஈச்வரனுடைய ஆதினத்தில் ஜீவனைப் பரதந்திரனுக வெண்ணுவது, மணி மாலைகளை உபயோகிப்பது, நெற்றியில் திலகமிடுவது, மாலையைத் தரிப்பது, மூர்த்தி பூஜை முதலான பொய் நம்பிக்கை, இவைகளே சுருங்கச் சொல்லில் சக்கிராங்கிதர்களுடைய கெடுதல்கள். சக்கிராங்கிதர் முதலானவர்கள் வேத விரோதமாயிருப்பது போல் சங்கராசாரியர் மதத்தவர்களில்லை.

## விக்கிரக ஆராதனை

வினு :—மூர்த்தி பூஜை எங்கிருந்து உண்டாச்சுது?

விடை :—சமணர்களிடமிருந்து

வினு :—சமணர்கள் ஏன் அதைத் துவக்கினர்கள்?

விடை :—அறியாமையினுல்.

வினு :—சாந்தத்துடன் தியான ஸ்திதியில் உட்கார்ந்திருக்கும் விக்கிரகத்தைப் பார்க்கையில் மனதும் அம்மாதிரியே மாறுகிறது.

விடை :—மனது சேதனமானது. விக்கிரகமோ சடமானது. விக்கிரகத்திற்குச் சரியாய் மனதும் சடமாகக் கூடுமா? விக்கிரக ஆராதனைப் பெறும் புரட்டே? சமணர்களால் கொண்டுவரப்பட்டது. ஆகையினுல் இதைப்பற்றி பன்னிரண்டாவது அத்தியாயத்தில் பேசுவோம்.

வினு:—சக்தி முதலான விக்கிரகங்கள், சமணர்களை அனுசரித்ததாயில்லை. எனவே சமணர்களிடமிருந்து பின்பற்றப்படவில்லை.

விடை :—சமணவிக்கிரகங்களைப் போல் சக்தி விக்கிரகங்களில்லையென்பது உண்மையே. சமணவிக்கிரகங்களைப் போல் இவர்களும் செய்திருப்பார்களேயானுல் அவைகளுடன் தடுமாற்றம் உண்டாயிருக்கும். ஆதலால் மாருகவே பண்ணினர்கள். சமணர்களுடன் விரோதஞ்செய்து கொள்ளுவது இவர்களுடைய வேலையாகவும் இவர்களுடன் விரோதஞ் செய்து கொள்ளுவது அவர்களுடைய முக்கிய நோக்கங்களாயுமிருந்தன. சமண விக்கிரகங்களை நிர்வாணமாயும் தியானாவஸ்தையிலிருப்பதாயும் வைராக்ய மடைந்தவர்களுக்குச் சரியாயும் செய்தார்கள். அதற்கு எதிரிடையாய் வைணவர்கள் மனம் போன வண்ணம் அலங்கரிக்கப்பட்ட ஸ்திரீகள் வர்ணங்கள், ராகங்கள், அநுபவங்கள், விஷய சுகங்கள் இவைகளுடன் கூடினதாயும் நிற்கிறமாதிரி உட்கார்ந்திருக்

கிற மாதிரியாகவும் செய்தார்கள். சமணர்கள் சங்கு, கிலுங்கு, மணிக்கிலுக்கு தோல்வாத்தியம், இவைகளைத் தங்களுடைய ஆராதனையில் உபயோகப்படுத்திக் கொள்வதில்லை. வைணவர்களோ பெருமுழக்கமிடுகிறார்கள். இம்மாதிரி லீலைகளினால், வைணவ சம்பிரதாயத்தைச் சேர்ந்த போப்புகளின் சீடர்கள் சமணர்களுடைய ஜாலத்தில் சிக்கிக்கொள்ளாமல் தங்களுடைய லீலையிலேயே அமிழ்ந்திருந்தார்கள். வியாசர் முதலிய மகரிஷிகளின் பெயரால் கற்பனையானதும் நடக்கக் கூடாததுமான பல கட்டுக்கதைகளை எழுதினார்கள். அவைகளைப் புராணம் என்றழைத்து ஜனங்களுக்கு அதிலிருந்து கதைகளையும் சொல்லவாரம்பித்தார்கள். பிறகு அதிசயமான புரட்டுகளைக் கையாள வாரம்பித்தார்கள். இதர போப்க்களும் தங்களுடைய ஜீவனத்தின் பொருட்டு இம்மாதிரி லீலைகளைக் கைக்கொண்டார்கள். பொய் விக்கிரகங்களைச் செய்து விட்டு ரகசியமான மலை காடுகளில் ஒளித்து அல்லது பூமியின் கீழேயாவது புதைத்து பிறகு தங்களுடைய சிடர்களுடன் எனக்கு இரவு கனவில் மகாதேவர், பார்வதி, இராதை, கிருஷ்ணன், சீதை, ராமர், லக்ஷிமி நாராயணர் ஹனுமார் முதலானவர்கள் தோன்றி அவ்விடத்திலிருப்பதாகச் சொன்னார்களென்று வெளிப்படுத்துவார்கள். நாம் அங்கிருந்து அதை எடுத்து கோயில் கட்டி ஸ்தாபனஞ் செய்து தன்னைப் பூசாரியாக வைத்தால் அவர்களுடைய மனோபீஷ்டம் நிறைவேறும் என்பார்கள். பணமுள்ள குருடர்கள் போப்க்களின் இக்கட்டுரையைக் கேட்டு உண்மையென நம்பி விக்கிரகம் எங்கிருக்கிறதென்று கேழ்ப்பார்கள். அப்பொது என்னுடன் வந்தால் அக்காட்டிலாவது மலையிலாவது காட்டுவேன் என்பார்கள். அக்குருடர்கள் அவர்களுடன் சென்று பார்த்து ஆச்சரிய மடைந்து போப்க்களின் கால்களில் விழுந்து சொல்லுவார்கள் "உங்களின் பேரில் தேவதைகளுக்கு வெகு பிரியமாயிருக்கிறது. நீங்கள் அதை எடுத்துப் பிரதிஷ்டை செய்து பூஜைபண்ணி எங்களுடைய மனோபீஷ்டங்களைப் பலிக்கச்செய்யுங்கள்." ஒரு போப் இவ்விதமான புரட்டுக்களில் ஜயிக்கிறதைக் கண்டு மற்ற போப்புகளும் தங்களுடைய ஜீவனத்தின் பொருட்டு இம்மாதிரியான லீலைகளைக் கைக்கொள்வார்கள்.

வினா:—பரமேச்வரன் உருவமற்றவர். அவரைத் தியானத்தினால் காண முடியாது. ஆகையினாலேயே அவருடைய ஆராதனைக்கு விக்கிரகம் அவசியமானது. விக்கிரத்துக்கு முன் நின்று தலையை வணங்கி கைகூப்பி வேறொன்றையும் எண்ணாமல் அவரைத்துதித்துப் பெயரைச்சொல்லுவதில் என்னகெடுதலிருக்கிறது?

விடை:—பரமேச்வரன் உருவமற்றவராயும் சர்வவியாபியாயுமிருக்கிறபடியினால் அவருடைய விக்கிரகத்தைச் செய்யமுடியாது. விக்கிரத்தைகண்ட மாத்திரத்தில் பரமேச்வரனுடைய ஞாபகம் வருமேயானால், ஈச்வரனுடைய அற்புதத்தை விளக்குகிறதாயும், மனிதர்கள் சிறிய மூர்த்திகள்செய்ய ஆதாரமாயுமுள்ள பரமேச்வரனால் ஆக்கப்பட்ட பூமி, ஜலம், அக்கினி, வாயு, செடி இவைகளைக்கண்டு ஏன் பரமேச்வரனை நினைக்கக்கூடாது? விக்கிரத்தைப்பார்த்தால் பரமேச்வரன் ஞாபகம் உண்டாவதென்று நீங்கள் சொல்லுவது வீண்பொய்யே.

எதிரில் விக்கிரகம் இல்லாமல் போனல் பரமேச்வரனுடைய எண்ணம் அற்றுபோய் தனியாய் திருட்டுத்தனம் வியபசாரித்தனம் முதலான கெட்டகாரியங்களைச் செய்யக்கூடும். ஏனெனில் அச்சமயத்தில் அவனையாரும் காணவில்லையென்று ஒருவன் அறிகிருன். ஆகவேகெடுதல்களைச் செய்வதிலிருந்து ஒருவன் அஞ்சுகிறதில்லை. விக்கிரக பூஜை செய்வதினல் இவ்வித தீவினைகள் விளைகின்றன. பாருங்கள்! விக்கிரகங்களைக் கவனியாமல் சர்வவியாபகமாயும், சர்வாந்தர்யாமியாயும் நீதிபதியாயும் பரமாத்மாவை எங்கும் இருக்கிறவராகவும் நினைத்து நம்புகிற மனிதன் பரமேச்வரனுக்கு விரோதமான காரியங்களைக் கெடுதல் என்றறிந்து ஒருகணநேரமாவது தன்னிடத்திலிருந்து வேறுனவருக அவரை எண்ணுமலிருக்கிருன். அப்பொழுது கெட்டக்காரியங்களைச்செய்யமாட்டான். ஏனெனில் மனது வாக்கு கர்மம் இவைகளைக்கொண்டு ஏதாவது ஒரு தீக்காரியஞ்செய்தால் அந்தர்யாமியாயிருப்பவரின் நியாயதண்டனையைத் தப்ப முடியாதென்று அறிவான். வெறும்பெயரை உச்சரிப்பதினல் மாத்திரம் பலன் ஒன்றும் உண்டாகாது. கற்கண்டு கற்கண்டு என்று சொல்லுவதினல் இனிப்பும் நீம் (வேப்பிலை) என்பதினல் கைப்பும் வாயில் உண்டாகிறதில்லை. அவைகளைச் சாப்பிடும் பொழுதே அவைகளினுடைய உருசி நமக்குத் தெரிகிறது.

வினு:—பெயர்களைச் சொல்லுவது குற்றமாகுமா? புராணங்கள் எல்லாம் அதைப்பெரியதாகப் போற்றுகிறதே?

விடை:—நீங்கள் பெயர்களைச் சொல்லும்விதமும் அதை ஸ்மரணைச் செய்யும் வழியும் தப்பானது.

வினு:—எங்களுடையவழி ஏன் தப்பானது?

விடை:—வேதவிரோதமானபடியினல்.

வினு:—வேதவழியைக் கூறுங்கள்.

விடை:—நியாயகாரி என்பது ஈச்வரனின் ஒருபெயர். பட்சபாதமற்று பரமாத்மா எல்லோருக்கும் சரிவர நியாயஞ்செய்வதுபோலவே அதைஅறிந்து எப்பொழுதும் காரியங்களையே செய்யவேண்டும். அநியாயம் ஒருபொழுதும் செய்யக்கூடாது. இம்மாதிரிசெய்தால் ஓரேபெயர் கூட மனிதனைக் கெடுதல்களிலிருந்து காப்பாற்றும்.

வினு:—பரமேச்வரன் உருவமற்றவரென்று நாங்களும்அறிவோம். ஆனல் அவர் சிவன், விஷ்ணு, கணேசன், சூரியன், முதலான தேவர்களின் சரீரத்தையெடுத்து கிருஷ்ணன் முதலான அவதாரங்களைக் கொண்டபடியினல் விக்கிரகங்களைச்செய்வது கூடவா பொய்யாகும்?

விடை:—அதுவும்பொய் "அஜஏகபாத்" "அகாயம்" பரமேச்வரனுக்குப் பிறப்பு இறப்பு சரீரத்தையடைதல் இவைகள்கிடையாது, என்று வேதங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. அறிவினல்கூட பரமேச்வரனுக்கு அவதாரம் கிடையாது என்றுதெரிகிறது. ஏனென்றால் எங்கும் ஆகாயத்தைப்போல் வியாபகமாயும், அனந்தமாயும், சுகதுக்கம் பார்வை முதலான குணங்களில்லாதவருயு

மிருக்கிறவர், வீரியத்துளியிலும் சரீரத்தின் கர்ப்பப்பையிலும் எவ்விதம் வரக் கூடும்? ஒரே தேசத்தில் வசிக்கிறவனே வந்து போகவுங்கூடும். அளவற்றவும் பார்க்கமுடியாதவும் ஒருசிறிய அணுவிலுங்கூட இருக்கிறவர் அவதாரம் யெடுக்கிறுரென்பது மலடிவயிற்றுப் பிள்ளைக்கு விவாகம்நடந்து அவர்களு டைய பேரப் பிள்ளையைப் பார்க்கிறப் பேச்சுப்போலிருக்கிறது.

வினு :—பரமேச்வரன் எங்கும் பரவியிருந்தால் விக்கிரகத்திலும் இருக்க வேண்டுமே? அப்பொழுது ஒருபொருளிலிருப்பதாக வெண்ணி அவரைப் பூசை செய்வது ஏன் நல்லதாகாது? சாணக்கியன் சொல்லும் வண்ணம்.

न काष्टे विद्यते देवो न पाषाणे न मृण्मये ।
भावे हि विद्यते देवस्तस्माद्भावो हि कारणम् ॥

பரமேச்வரன் கல், கட்டை, பூமி, மண்இவைகளிலில்லை. நம்முடைய எண் ணம் இருக்கிறவிடத்திலேயே அவர் சித்தமாகுகிறுர்.

விடை :—பரமேச்வரன் எங்கும் பரவியிருக்கிறபடியினுல் ஒருபொருளில் மாத்திரம் இருப்பதாகவும் மற்றபொருளில் இல்லாததாகவுங் கருதுவது அரச சக்கரவர்த்தி தன்னுடைய அரசாங்கம் பூராகவும் அதிகாரம் செலுத்துவதை விட்டு ஒருசிறிய குடிசைக்கு அவரை எஜமானுக நினைப்பதுபோலாகிறது. இது அவருக்குப் பெரிய மானக்குறைவு ஆகாதா? சர்வவியாபகர் என்று நினை த்தால் விக்கிரங்களுக்குப் பூஜைசெய்ய தோட்டங்களிலிருந்து பூக்கொய்வா னேன்? சந்தினத்தை நெற்றியில் வைப்பானேன்? தூபங்காட்டுவதேன்? மணி, கிளிங்கு, கைத்தாளம், மத்தளம், இவைகளினுல் கோஷம் செய்வதேன்? உன் கரங்களில் அவரிருக்க கைகளைச்கூட்டுவதேன்? அவர் உன்தலையிலிருக்க அதை விக்கிரகத்திற்கு முன்னின்றுவணங்குவதேன்? தண்ணீரில்அவர்இருக்க என் விக்கிரகத்தை அதில் மூழ்க்கவேண்டும். இறைவன் சகலபொருள்களிலும் இரு க்கிறபடியினுல் வியாபித்திருக்கிறவரை நீபூஜைசெய்கிறுயா? அல்லது வியாபத் திருக்கும் வஸ்துவைப்பூஜைசெய்கிறுயா? வியாபிக்கிறவரைவணங்கினுல் ஏன் வெறுங்கல்லிற்குப் புஷ்பம் சந்தனம் முதலானவைகளை அளிக்கவேண்டும்? வியாபித்திருக்கும் வஸ்துக்களை வணங்கினுல் பரமேச்வரனையா துதிக்கிறீர் கள்? இம்மாதிரிபொய் ஏன் சொல்லுகிறீர்கள்? நாங்கள் கல்விலுங்குமுதலான வைகளைப் பூஜைசெய்கிறோமென்று ஏன் உண்மையை உறைக்கக்கூடாது? உங்களுடைய நம்பிக்கை உண்மையானதா? பொய்யானதா? என்று சொல்லுங் கள். அதுஉண்மையானுல் உங்களுடைய நம்பிக்கையினுல் பாமேச்வரனைக் கட்டுப்படுத்துகிறீர்கள்?

உங்களுடைய நம்பிக்கையினுல் மண்ணைத் தங்கம் வெள்ளி முதலான உலோகங்களாகவும், ரத்தினம் வைடூரியம் முதலான விலையுயர்ந்த பதார்த்தங் களாகவும், கடல்நுரையை முத்தாகவும், தண்ணீரைத் தயிராகவும் மோராக வும் மண்ணைமாவாகவும் சர்க்கரையாகவும் ஏன் செய்யககூடாது? கஷ்டத் தை நீங்கள் நினைக்குங்கால் ஏன் அதை அடைகிறதில்லை? சுகத்தைநினைக்குங் கால் ஏன் அதை அநுபவிக்கிறதில்லை? குருடன் கண்ணிருப்பதாகநினைத்து

ஏன் பார்வையை அடைகிறதில்லை? இறப்பதின் எண்ணமில்லாமலிருந்தும் ஏன் மரணத்தை யடைகிறீர்கள்? ஆகையினால் உங்களுடைய எண்ணங்களும் நம்பிக்கைகளும் ஒருபொழுதும் உண்மையாகாது. இருப்பதையிருக்கும் வண்ணம் எண்ணுவதே சரியான நம்பிக்கை. உதாரணமாகநெருப்பை நெருப்பென்றும் நீரை நீர் என்றும் எண்ணுவது சரியானதாகும். தண்ணீரை நெருப்பென்றும் நெருப்பைத் தண்ணீரென்றும் எண்ணுவது தப்பெண்ணமாகும். இருக்கிறதை இருக்கும் வண்ணம் அறிவதே ஞானம். வேறுவிதமாக நினைப்பது அஞ்ஞானம்.

வினா :—வேதமந்திரங்களினால் பிரதிஷ்டை யாகாதவரையில் தேவதைகள் வருகிறதில்லை. பிரதிஷ்டை செய்தவுடன் வருகிறது. விசர்ஜனம் செய்வதினால் போய்விடுகிறது.

விடை :—மந்திரம் படித்து ஆவாகனஞ்செய்வதினால் தேவதைகள் வருவார்களேயானால் விக்கிரகங்கள் ஏன் உயிருள்ளதாக வாகிறதில்லை? விசர்சனம் செய்தவுடன் ஏன் அது விட்டுப்போகிறதில்லை. அது எங்கிருந்து வந்து எங்கே போகிறது? கேளும்! சகோதரனே!! முழுமுதற்கடவுள் வருகிறதுமில்லை போகிறதுமில்லை. மந்திரபலத்தைக்கொண்டு பரமேச்வரனைவரவழைக்கமுடியுமேயானால் அம்மந்திரத்தைக்கொண்டு இறந்துபோன உன்பிள்ளையினுடைய சரீரத்தில் ஏன்உயிரைவரவழைக்கக்கூடாது? ஜீவாத்மாவை விசர்சனம் செய்து உன்விரோதிகளை ஏன் வதைக்கக்கூடாது? ஏ! பாமரர்களே!! வஞ்சகம் பேசி உங்களைஇவர்களுடைய காரியத்திற்கு உபயோகஞ்செய்துக் கொள்ளுகிறார்கள். வேதங்களில் விக்கிரக ஆராதனைக்கும் பரமேச்வரனுடைய ஆவாகன விசர்ஜனத்திற்கும் ஒருஎழுத்துக்கூட ஆதாரமாகச்சொல்லப்படவில்லை.

प्राणा इहागच्छन्तु सुखं चिरं तिष्ठन्तु स्वाहा। आत्मेहागच्छतु सुखं चिरं तिष्ठतु स्वहा । इन्द्रियाणीहागच्छन्तु सुखं चिरं तिष्ठन्तु स्वाहा ॥

வினா:—இம்மாதிரி வேதமந்திரங்களிலிருக்கிறதே. ஏன் இல்லையென்கிறீர்கள்?

விடை :—அடே! புத்தியைக்கொஞ்சம் உபயோகஞ்செய். சகலமும் வைப்புக்கட்டப்பட்ட வாமமார்க்கிகளுடைய வேதவிரோதமான தந்திரங்களில் போப்க்களால் எழுதப்பட்டவைகள். வேதவார்த்தைகளிலில்லை.

வினா :—தந்திரங்கள் பொய்யா?

விடை:—அவைகள் முழுப்பொய்யே. ஆவாகனம், பிராணபிரதிஷ்டை, என்னும் விக்கிரக விஷயம் முதலியவைகளுக்கு ஒருமந்திரங்கூட வேதங்களிலில்லை. 'ஸ்நாநம் சமர்பயாமி' (செய்து வைக்கிறேன்) என்பதைப்போன்ற வசனங்கள்கூட கிடையாது."விலங்கு கல் முதலான விக்கிரகங்களைச்செய்து ஆலயங்களில் ஸ்தாபித்து சந்தனம் அக்ஷதைகளினால் பூஜைசெய்யுங்கள்" என்று ஒரு அணுமாத்திரங்கூட காணவில்லை.

வினா :—விக்கிரக ஆராதனைக்கு வேதங்களில் விதியில்லையென்றால் மறுப்புமில்லையே? கண்டனமிருந்தால் "பிராப்தௌ சத்யாம் நிஷேதஹ" மூர்த்திகள் உண்டாவதிலிருந்தே அதுவும் உண்டாகவேண்டும்,

விடை:—விதிகளில்லாமல் போனபோதிலும் பரமேச்வரனுக்குப்பதிலாக வேறு பிறபொருள்களைப் பூஜைக்கு எடுக்கக்கூடாதென்றும் எப்பொழுதும் தள்ளவேண்டும் என்றும் விதித்திருக்கிறது.

*अन्धन्तमः प्रविशान्ति येऽसम्भूतिमुपासते ।
ततो भूय इव ते तमो य उ सम्भूत्यागं् रताः ॥ யஜுர் 40. 9.

பிரம்மஸ்தானத்தில், உண்டாகாத அநாதிபிரகிருதி காரணங்களைப் பூசிக்கிறவன் அஞ்ஞானத்திலும் துக்கசமுத்திரத்திலும் முழுகுகிறான். வெளிப்படையாயிருக்கிற இயற்கையை அதாவது பூமி, கல், மரம், முதலான காரிய ரூபங்களையும் மனிதன்முதலான சரீரங்களையும் பிரம்மத்திற்குப் பதிலாக உபாசனைசெய்கிறவன் பெரு மதியீனனுப் வெகுகாலம் துக்க ரூபமான நரகத்தையடைந்து நீண்டகால உபத்திரவங்களை அனுபவிக்கிறான்.

न तस्य प्रतिमा अस्ति ॥ யஜுர் 32. 3.

சகல ஜகத்திலும் பரவியிருக்கிற உருவமில்லாத அப்பரமாத்மாவிற்குச் சரியான பரிமாணமாவது விக்கிரகமாவது கிடையாது.

यद्वाचानभ्युदितं येन वागभ्युद्यते ।
तदेव ब्रह्म त्वं विद्धि नेदं यदिदमुपासते ॥ கேனோபநிடதம்.

இதோ! ஜலம். எடுத்துக்கொள்!! என்றுஜலத்தை நோக்கி ஜனங்கள் சொல்லுவது போல் வார்த்தைகளினால் சொல்லமுடியாதவனைப் பிரம்மம் என்று அறிந்து உபாசனைசெய். அவனுடைய பார்வையினாலும் சக்தியினாலுமே நம்முடைய வார்த்தை ஏவப்படுகிறது. அதற்கு வேறுபட்டவைகளெல்லாம் உபாசனைக்குத்தகுந்ததில்லை.

यन्मनसा न मनुते येनाहुर्मनो मतम् ।
तदेव ब्रह्म त्वं विद्धि नेदं यदिदमुपासते ॥ கேனோபநிடதம்.

கருத்திற்கு இணங்காதவராயும் மனதை அறிகிறவராயுமிருக்கிறவரைப் பிரம்மன் என்று அறிந்து நீ உபாசனைசெய். அதிலிருந்து வேறானஜீவன் அந்தக்கரணம் உண்டு. அதைப் பிரம்மஸ்தானத்தில் வைத்து உபாசனை செய்யாதே.

यच्चक्षुषा पश्यति येन चक्षूंषि पश्यन्ति ।
तदेव ब्रह्म त्वं विद्धि नेदं यदितमुपासते ॥ கேனோபநிடதம்.

கண்களின் பார்வைக்கு அகப்படாமல் சகலத்தையும் கண்களைக் கொண்டு பார்க்கச்செய்கிற அவரையே பிரம்மன் என்று அறிந்து உபாசனைசெய். அதிலிருந்து தனியான சூரியன் மின்னல் அக்கினி முதலான சடப்பொருள்களை உபாசனை செய்யாதே.

यच्छ्रोत्रेण न शृणोति येन श्रात्रोमदगं् श्रुतम् ।
तदेव ब्रह्म त्वं विद्धि नेदं यदिदमुपासते ॥ கேனோபநிடதம்.

காதினல் கேழ்க்கமுடியாதவும் காதைக் கேழ்க்கச் செய்கிறவரையுமே பிரம்மன் என்று அறிந்து உபாசனே செய். அதிலிருந்து விலகின சப்தம் முதலானவைகளே உபாசனே செய்யக்கூடாது.

यत्प्राणेन न प्राणिति येन प्राणः प्रणीयते ।
तदेव ब्रह्म त्वं विद्धि नेदं यदिदमुपासते ॥ கேனேபநிடதம்.

பிராணனல் அசைக்கப்படாதவும் பிராணனை ஓடச்சைய்கிறவரையுமே பிரம்மமென அறிந்து உபாசி. அதிலிருந்து வேறான வாயுவை உபாசிக்காதே.

இம்மாதிரி இன்னும் தடைப்புக்கள் அநேகமிருக்கின்றன.

பிராப்தமாயும் அப்பிராப்தமாயுள்ளவைகளினுடைய பூஜை வேதங்களினல் தடுக்கப்பட்டுள்ளது. உட்கார்ந்திருக்கிறவனை அங்கிருந்து போகச்செய்வது பிராப்தமாகும். கிணற்றில் விழாதே; துஷ்ட சகவாசஞ் செய்யாதே; வித்தை யில்லாதவனுயிராதே; இவைகளெல்லாம் அப்பிராப்தத் தடுப்புக்களாகும். மனிதனுடைய ஞானத்தில் அப்பிராப்தமாகாத கடவுளே, பிராப்தமாகச் செய்வது கூடாது. ஆகவே கல், விலங்கு முதலானவைகளுடைய பூஜைகள் எப்பொழுதும் அறவே தடுக்கப்பட்டிருக்கிறது.

வின :—விக்கிரக ஆராதனேயில் புண்ணியமில்லாமல் போனலும் பாபங் கிடையாதே?

விடை :—கர்மங்கள் இருவகைப்படும். சத்தியம் பேசுதல் முதலானவைகளேப்போன்ற வேதங்களால்விதிக்கப்பட்டவை—விகிதம். பொய்ப்பேசுதல் முதலானவைகள் வேதங்களால் தடுக்கப்பட்டவை—நிஷித்தம். விகிதங்களேச் செய்வது தர்மமும், அதைவிட்டுவிடுவது அதர்மமுமாகும். இவ்விதமே நிஷித்த காரியங்களேச் செய்வது அதர்மமும், செய்யாமலிருப்பது தர்மமுமாகும். வேதநிஷித்தமான விக்கிரக பூஜை முதலானவைகளேச் செய்வதினல் நீங்கள் ஏன் பாபிகளாகமாட்டீர்கள்?

வின:—கவனியுங்கள்! வேதங்கள் அநாதி. எனவே விக்கிரகங்களுக்கு என்னவுபயோகமிருந்தது. ஏனென்றல் தேவதைகள் பிரத்தியட்சமாயிருந்தார்கள். இவ்வழக்கமோ தந்திரங்கள் புராணங்கள் இவைகளுடையபிற்காலத்திலிருந்து வந்தது. மனிதனுடைய ஞானமும் சக்தியும் குன்றினபிறகு பரமாத்மாவினுடைய தியானத்தில்கவனத்தைச் செலுத்தமுடியாமல் விக்கிரக பூஜையைக் கொண்டார்கள். ஆகையினல் அஞ்ஞானிகளுக்கே மூர்த்தி பூஜை ஏற்றதாகும். படிப்படியாக ஏறியே மேலே போகவேண்டும். முதல்படியை விட்டுவிட்டால் மேலே போகமுடியாது. மூர்த்தி பூஜை முதல்படியேயாகும் இவைகளேப் பூஜைசெய்து ஞானமடைந்து அந்தக்கரணம் சுத்தமானபிறகே பரமாத்மாவைத் தியானஞ் செய்யமுடியும். வில்வித்தைக்காரனும் சிறு துப்பாக்கிச் சேவகனும் முதலில் கண்களுக்குப் புலப்படும் வஸ்துக்களில் அம்பையும் குண்டையும் எய்து பழக்கிக்கொண்டு, பிறகு கண்ணிற்கெட்டாதவைகளில் குறிபார்த்துவைப்பது போலவே முதலில் ஸ்தூலவிக்கிரகத்

தைப் பூஜைசெய்து பின்னர் சூக்ஷ்ம பிரம்மத்தையடையவேண்டும். புருஷனை அடையு முன்னல் பெண்கள் சிறு விளையாட்டுக் கருவிகளுடன் ஆடுவது போலவுமேயாகும். ஆகையினுலேயே விக்கிரகஆராதனை கெடுதலாகாது?

விடை :—வேதத்திற்குச் சரியாயிருப்பது தர்மமும் அதற்கு எதிரிடையாகயிருப்பது அதர்மமுமானுல் நீங்கள் கூறுவதிலிருந்தே அதர்மம் என்று விளங்குகிறது. வேதவிரோதமான நூல்களைப் பிரமாணமாக கருதுவது நாஸ்திக வாதமாகும்.

नास्तिको वेदनिन्दकः ॥
या वेद बाह्याः स्मृतयो याश्च काश्च कुदृष्टयः । மனு. 2. 11.
सर्वास्ता निष्फलाः प्रेत्य तमोनिष्ठा हि स्मृताः ॥
उत्पद्यन्ते च्यवन्ते च यान्यतोन्यानि कानिचित् ।
तान्यर्वाकालिकतया निष्फलान्यनृतानि च । மனு. 12. 95. 96.

வேதங்களைப் பழிக்கிறவன், அவமதிக்கிறவன், மறுக்கிறவன், விரோதமாக விருக்கிறவன் இவர்களெல்லாம் நாஸ்திகர்கள். துன்மார்க்கர்களால் வேத விரோதமாய் எழுதப்பட்ட இப்புத்தகங்கள் உலகத்தைத் துக்க சாகரத்தில் அமிழ்த்துகிறது. அவைகளெல்லாம் பலனற்றது. சத்தியு மற்றது. இவ்வுலகிலேயும் பரலோகத்திலேயும் இருள் மயமான துக்கத்தையளிக்கிறது.

வேதவிரோதமாய் தற்காலத்தில் எழுதப்பட்ட இப்புத்தகங்கள் சீக்கிரம் பிரயோசனமற்றுப் போகிறது. அவைகளைப்போற்றுவதும்நிஷ்பலமாயும்பொய்யாயுமிருக்கிறது. ஆகையினல் பிரம்மா முதல் ஜைமினிமகரிஷிவரையிலுள்ளவர்களின் மதம் யாதெனில் வேதவிரோதங்களைப்பின்பற்றுதல் கூடாதென்பதே. வேதாநுகூலத்தை அனுசரிப்பதேதர்மம். ஏனெனில் அவைகள் மெய்ப்பொருளை விளக்குகிறது. அவைகளுக்கு எதிராய்ப்புராணங்கள் தந்திரங்கள் எவ்வளவு இருந்தபோதிலும் வேத விரோதமானபடியினுல் பொய்யே. வேதத்திலிருந்து மாறின புஸ்தகங்களில் கூறப்பட்டிருக்கும் விக்கிரக ஆராதனையும் அதர்மரூபமானது. சடபூஜைகளினுல் மனிதனுடைய ஞானம் விருத்தியடையாது. உள்ள அல்ப்பஞ்ஞானமும் குன்றிப்போய்விடும். ஞானிகளின் பணிவிடையினுலும் சங்கத்தினுலும் ஞானம்விருத்தியாகும். விலங்குகளினுலும் கற்களினுலும் ஆகாது. கல்முதலான மூர்த்திபூஜையினுல் பரமேச்வரனுடைய தியானம் எங்ஙனமாவது உண்டாகுமோ? உண்டாகாது. விக்கிரக ஆராதனையும் படியாகமாட்டாது. தவறினல் மனிதன்இலும்புகளை உடைக்கக்கூடிய ஒருபெரிய கணவாயேயாகும். எழுந்திருக்க முடியாமல் அதிலேயே மறிக்கிருன். பெரியமேதைகளான யோகிகளினுடைய சேர்க்கைகளினுல் விளையும் நல்ல பயிற்சி மெய்யறிவு முதலானவைகளே பரமேச்வரனை உப்பரிகைக்குச் செல்லப் படிகளைப்போலாகின்றன. விக்கிரக ஆராதனையினுல் யாரும் ஞானியானதில்லை. சகலவிக்கிர ஆராதனைக்காரர்களும் அஞ்ஞானியாயிருந்து மானிட

பிறப்பைவீணுக்கி இறந்திருக்கிறுர்கள். இறக்காமலிருக்கிறவர்களும் மானிடபிறப்பினுடைய தர்மார்த்தகாம மோக்ஷபலனையடையாமல் பிரயோசனமற்றுக் குலைந்துபோயிருக்கிறுர்கள். ஸ்தூலஸூக்ஷ்ம உறவைப்போல் விக்கிரக ஆராதனையும்பிரம்மமும் ஆகாது. விக்கிரக ஆராதனை விளையாட்டுக்கருவிகளுடன் ஆடுவது போலாகாது. அக்ஷராப்பியாசமும் நல்ல பயிற்சியுமே பிரம்மத்தையடையவேண்டிய சாதனத்தில் விளையாட்டுக்கருவிகளாகும். நல்ல பயிற்சியும் வித்தையும் அடைகிறவனே ஏற்றசமயத்தில் பரமாத்மாவை அடைவான்

வினு :—உருவமுள்ளதில் மனதை நிறுத்தமுடியும். உருவமில்லாததில் மனது நிலைநிற்கிறதில்லை. ஆகையினுலேயே விக்கிரக ஆராதனை அவசியமாகிறது.

விடை :—உருவமுள்ளதில் மனது ஒருபொழுதும் நிலைநிற்காது. ஏனென்றுல் அதைச் சிக்கிரமாக மனது இழுத்துக் கொண்டு விக்கிரகத்தினுடைய அவயவங்களிலிருந்து அவயவங்களுக்கு மனதுமாறுகிறது. உருவமில்லாத பரமாத்மாவைக்கிரகிப்பதில் எவ்வளவு சாமர்த்தியம் மனதிற்கு இருந்த பொழுதிலும் அதுமுடிவைக் காண்கிறதில்லை. அவயவங்களன்னியிலிருப்பதினுல் சஞ்சலமும் கிடையாது. குணம் கர்மம் ஸ்வபாவங்களைத்தேடி ஆனந்தத்தில் மூழ்கியிருக்கும். உருவமுள்ளதில் நிறுத்தமுடியுமேயானுல் உலகிலுள்ளோர்யாவரும் தங்களுடைய மனதைக் கட்டுப்படுத்தியிருப்பார்கள். உலகிலிருக்கும்படியான புருஷன் ஸ்திரீ பிள்ளை பணம் சிநேகிதன், முதலியவைகளில் மனது லயப்பட்டிருக்கிறது. அடக்கமும் அடைகிறதில்லை. உருவமில்லாததில் மனது செல்லுமேயானுல் அது அத்தன்மையினுல் அடக்கத்தையடைகிறது. ஆகையினுல் விக்கிரக ஆராதனை செய்வது அதர்மமானது. 2. கோடிக்கணக்காய் ஆலயங்களில் செலவுசெய்யப்படுவதினுல் அது ஏழ்மைத்தனத்தை விளைவிக்கிறது. ஆர்வத்தையும் கடமைகளில் அசிரத்தையையும் உண்டுபண்ணுகிறது. 3. ஸ்திரீபுருஷர்கள் ஆலயங்களில கூடுவதினுல் விபசாரம் அடிதடி சண்டை, வியாதி முதலானவைகள் உண்டாகின்றன. 4. தர்மார்த்தகாமமோட்சத்தையடைய அவைகளேயே சாதனங்களெனக்கருதி புருஷத்தன்மையற்று மானிடஜன்யம் வீணுகிறது. 5. பலவாறுன விரோத ஸ்வரூபங்களையும் பெயர்களையும் சரித்திரங்களையுமுடைய விக்கிரகங்களினுல் ஜனங்களுள் ஒத்துமைகுலைந்து அவர்கள் விரோத மதங்களிலிறங்க ஒருவருக்கொருவர் பிளவு ஏற்பட்டு நாட்டிற்கே நாசம் உண்டாகிறது. 6. மதங்களுடைய வெற்றியும் பிறர்களுடைய தோல்வியும் தன்நம்பிக் கையினுலேயே உண்டாகிறதென்று எண்ணி வீண்காலங்கழிக்கிறுர்கள். பிறர்கள் ஜய மடைந்துவிட்டால் இராஜ்யத்தின் சுதந்திரமும் செல்வச்சுகங்களும் எதிரிவசமாகிறது. இவர்களும் சத்துருக்களின் கைவசமாகி குயவனின் கழுதை போலவும் சத்திரக்காரனின் குதிரை போலவும் பலவிதத் துக்கங்களை யடைகிறுர்கள். 7. "உனக்குப் பதிலாக உன்பெயரையாவது பிரதிமையையாவது உபயோகப்படுத்துகிறுன்." என்றுல் ஒருவனுக்குக்கோபம்வந்து சொல்லுகிறவனை அடிக்கப்

போவதுபோல் பரமேசுவரனை உபாசனைசெய்யவேண்டிய விடத்திலாவது மனதிலாவது விலங்குகள், கற்கள் முதலியவைகளுடைய விக்கிரகங்களை வைத்து பூஜைசெய்தால் துர்புத்தியுடையவர்களுடைய சத்தியநாசத்திற்குப் பரமேச்வரன் என்னதான் செய்யமாட்டார். 8. மயக்கவெறியினுல் ஆலயங்களிலும் தேசதேசாந்திரங்களிலும் அலேந்து திரிந்து துக்கத்தையடைந்து தர்மம், சம்சாரம் பரமார்த்த முதலானவைகளினுடைய வேலையை நாசஞ் செய்து திருடன் முதலானவர்களால் பிடிக்கப்பட்டு வஞ்சகர்களால் ஏமாற்றவும் படுகிருர்கள். 9. துன்மார்க்க பூசாரிகளுக்குப் பணத்தையளிக்கிருர்கள். அவர்கள் அதை விலேமாதர்களேயடைதல் மீன் மாம்சாகாரம், அற்பவிஷயங்களில் சண்டை இவைகளில் செலவழித்து, ஈவோர்களுடைய நலத்தைக் கெடுத்து அவர்களுக்குத் துக்கத்தையும் உண்டுபண்ணுகிருர்கள். 10. பெற்ருேர்களேக் கௌரவிக்காமல் அவமானஞ்செய்து கல்விக்கிரகங்களேப் போற்றுவதினுல் செய்ந்நன்றி மறந்தவர்களாகிருர்கள். 11. விக்கிரகங்களே யாராவது உடைத்தோ அல்லது திருடனுவது திருடிக்கொண்டோபோய்விட்டால் மாரையடித்துக்கொண்டு அலறுகிருர்கள். 12. பூசாரிகள் பரஸ்திரீகள் சேர்க்கையினுலும் பூசாரிமனைவிகள் பரபுருஷர்களுடைய சேர்க்கையினுலும் மிகக்கெட்டுப்போய் புருஷன் பெண்சாதி என்கிற அந்நியோன்ய ஆசையையே இழக்கிருர்கள். 13. எஜமானன், வேலேக்காரன் என்கிறமுறை சரியாகவில்லாதபடியினுல் பரஸ்பரவிரோதத்தன்மை ஏற்பட்டு கெட்டு நாசத்தையும், அடைகிருர்கள். 14. சடத்தைத் தியானிக்கும் ஆத்மாவானது சடபுத்தியை உடையதாகவே ஆகிறது. ஏனென்றுல் ஜடத்தன்மை அந்தக்கரணத்தின் மூலமாய் ஆத்மாவில் பிரவேசிக்கிறது. 15. சுவாசனேயுடன் கூடின புஷ்பம் முதலியவைகளேக், காற்று ஜலம் முதலானவைகளுடைய துர்நாற்றத்தைப் போக்கவும் ஆரோக்கியத்திற்காகவும் பரமேச்வரன் உண்டுபண்ணியிருக்கிருர். பூசாரிகள் அதைக் கொய்யாமல் விட்டு விட்டால் வெகுநாள் வரையில் அதனுடைய சுகந்தம் ஆகாசத்தில் பரவி வாயு ஜலம் இவைகளேச் சுத்தஞ் செய்து கொண்டிருக்கும். நிறைந்த நருமணம் வீசுவதற்குள்ளேயே அதைக்கொய்து விடுகிருர்கள். அவைகள் கால்வாய்களில் எறியப்பட்டு அதிலுள்ள அழுக்கு ஜலத்துடன் கலந்து துர்நாற்றத்தை உண்டுபண்ணுகிறது. கல்லின் மேல் சமர்ப்பணஞ் செய்வதற்காகவா பரமாத்மா நருமணத்துடன் கூடின புஷ்பம் முதலானவைகளே உண்டுபண்ணினுர். 16. புஷப்பங்களின் மேலிருக்கும் சந்தனம் அரிசி முதலியவைகள் ஜலம் மண் முதலியவைகளினுடைய சேர்க்கையினுல், கீழே அழுகி மனிதர்களுடைய மலங்களிலிருந்துஉண்டாகும் துர்நாற்றத்தைப்போல் துர்கந்தத்தை யுண்டுபண்ணுகிறது. அதிலிருந்து ஆயிரக்கணக்கான கிருமிகளுண்டாகி இறக்கின்றன. பல கெடுதல்கள் விக்கிரக ஆராதனேயிலிருந்துண்டாகின்றன. நல்லவர்களெல்லோரும் அதைவிட்டு விடவேண்டியது. விக்கிரக ஆராதனே செய்கிறவர்களும் செய்வோர்களும் முன்சொன்ன கெடுதல்களிலிருந்து ஒருபொழுதும் மீறமாட்டார்கள்.

## பஞ்சதேவ பூஜை.

வினா —எவ்விதமான விக்கிரக ஆராதனையும் செய்யக்கூடாதா? ஆரிய வர்த்த நாட்டில் பஞ்சதேவ பூஜை என்னும் பெயர் ஆதிகாலந்தொட்டு பரம்பரையாயிருந்துவருகிறதே. சிவன், விஷ்ணு, அம்பிகை கணேசன் சூரியன் இவர்களுடைய விக்கிரகங்களைச் செய்து பூஜை செய்வது பஞ்சதேவ பூஜையில்லையா?

விடை:—எவ்விதமான விக்கிரக ஆராதனையுங்கூடாது. ஆனால் கீழே காணப்பட்டவைகளுக்குப் பூஜை அதாவது மரியாதை செய்ய வேண்டும். பஞ்சதேவபூஜை, பஞ்சாயதன பூஜை இவ்வார்த்தைகள் சிறந்த பொருளையுடையதாயிருக்கிறது. அறிவில்லாத மூடர்கள் அதனுடைய சிறந்த அர்த்தத்தை விட்டு தள்ளப்பட்டதைக் கொண்டார்கள். சிவன் முதலிய ஐந்து விக்கிரகங்களைச்செய்து தற்பொழுது பூஜை செய்வதைக் கண்டனம் செய்தாய்விட்டது. வேதானுகூலமானவும் வேதப்பிரகாரமுமான பஞ்சாயதன தேவபூஜையும் மூர்த்திபூஜையும் இவைகளேயாகும்.

मानो वधीः पितरं मोत मातरम् ॥ யஜுர். 16. 15.

आचार्य्यो ब्रह्मचर्येण ब्रह्मचारिणमिच्छते ॥ அதர்வ 11. 5. 17.

अतिथिर्गृहानागच्छेत् ॥ அதர்வ 15. 13. 6.

अर्चत प्रार्चत प्रियमेधासो अर्चत ॥ ரிக்வேத

त्वमेव प्रत्यक्षं ब्रह्मासि त्वामेव प्रत्यक्षं ब्रह्म वदिष्यामि ॥ தைத்ரேய 1. 1.

कतम एको देव इति स ब्रह्म त्यदित्याचक्षते ॥ சத. 14. 6. 7. 10.

मातृदेवो भव पितृदेवो भव आचार्यदेवो भव अतिथिदेवो भव ॥

पितृभिर्भ्रातृभिश्चैताः पतिभिर्देवरैस्तथा ।
पूज्या भूषयितव्याश्च बहुकल्याणमीप्सुभिः ॥ மனு. 3. 88.

उपचर्यः स्त्रिया साध्व्या सततं देववत्पतिः ॥ மனு

பூஜை செய்ய வேண்டிய வடிவமுள்ள முதல் விக்கிரகம் அன்னையே. மக்கள் உடல் பொருள் உயிர் மூன்றினுலும் பணிசெய்து தாயைத்திருப்தி செய்தல் வேண்டும். அவரை உபத்திரவஞ் செய்வதுகூடாது. இரண்டாவதாக மரியாதை செய்யவேண்டிய தேவன் தகப்பனே. தாயுக்குச் சரியாய் அவரையும் உபசரிக்கவேண்டும். மூன்றுவது. வித்தையை யளிக்கும் ஆசான். அவரையும், உடல் பொருள் உயிர்களினுல் சேவை செய்யவேண்டும். நான்காவது அதிதி. வித்வான் நியாயமானவர், கபடமற்றவர், சகலருடைய நன்மையைக் கோறுகிறவர், உலகத்தைச் சுற்றி சத்திய உபதேசத்தில் சகலருடைய சுகத்தைச் செய்கிறவர், அவரைப் பூஜை செய்தல் அவசியமாகும். ஐந்தாவது பெண்டிருக்கு ஆடவரும், ஆடவருக்குப் பெண்டிரும் பூஜிக்கத்தகுந்தவர்கள். இவ்வைந்து மூர்த்திகளே தேவர்களாகிறார்கள். இவர்களினுடைய சேர்க்கையினுலேயே

மானிட தேகத்தின் உற்பத்தி, காப்பு சத்தியப்பயிர்ச்சி வித்தை, சத்தியோபதேசம், இவைகளுண்டாகின்றன. இவைகளே பரமேச்வரனை அடையப்படிளாகும். இவர்களை ப்பணியாமல் விலங்கு முதலான மூர்த்திகளின் பூஜையைச் செய்கிறவர்கள் வேத விரோதிகளே ஆவார்கள்.

வினா :—மாதா பிதாக்களைப் பணிந்து மூர்த்தி பூஜையும் செய்வதினால் என்ன கெடுதல்களுண்டு?

விடை :—விலங்குகள் முதலிய மூர்த்தி பூஜையை எப்பொழுதும் கைவிட்டு அன்னை முதலான மூர்த்திகளைச் செய்வதிலேயே நன்மையுண்டாகும். நேரான சுகத்தை யளிக்கும்தாய் முதலிய தேவர்களை விட்டு விலங்கு, கல், முதலியவைகளில் தலையை உடைத்துக் கொள்ளுவது மிகவும் கெட்டகாரியம். தாய் தகப்பன் முன்னால் நைவேத்திய பதார்த்தங்களை வைத்தால் பூசாரிகளுக்கு மிகுதி வைக்கமாட்டார்கள் என்னும் பயத்தினாலேயே அவர்கள் விலங்கு, முதலிய மூர்த்திகளினுடைய பூஜையை கைக்கொண்டதாகத் தெரிகிறது. ஆகையினால் விலங்கு, கல், முதலிய விக்கிரகங்களைச் செய்து மணியடித்து சங்கு ஊதிப் பலவித சப்தங்கள் செய்து கையைக்காட்டி அதாவது அன்னபானாதிகளை நாங்கள் சாப்பிடும்பொழுது நீங்கள் ஏமார்ந்திருங்கள் எனத் தாங்களே சாப்பிடுகிறார்கள்.

'ஒருவனிடத்தில் கைவிரலைக் காட்டி என் பெருவிரலை எடுத்துக்கொள் என்றுகூறி அவன் முன்னிருக்கும் யாவற்றையும் தானே அபகரித்துக்கொள்வது போலாகிறது. அவர்பூசாரி. அதாவது பூஜையினுடைய "அரி" சத்துரு. டாம்பிகமாய் வஸ்திரங்கள் தரித்துக்கொண்டு அழகானவிக்கிரங்களுக்கு அலங்கரித்துப் புத்தியில்லாதபேதைகளை ஏமாற்றி இவர்கள் செல்வச்செருக்குடன் வாழுகிறார்கள். தர்மமுள்ள அரசன் ஒருவனிருந்தால் இவர்களைக் கற்குழிகளில் வேலை செய்யவும் வீடுகள் கட்டவும் அமர்த்திக்கொண்டு உயிருக்கு அத்தியாவசியமான அன்னபானாதிகளையளிப்பான்.

வினா :—பெண்களினுடைய சிலையைக் காணுங்கால் காமஎண்ணங்களுதிப்பதுபோல் தன்மறுப்பும் சாந்தமும் அடைந்த விக்கிரகத்தைக் காணுங்கால் வைராக்கியமும் சாந்தியும் ஏன் உண்டாகாது?

விடை :—ஒருபொழுதும் ஆகாது. ஏனென்றால் விக்கிரகத்தினுடைய சடத்தன்மை முதலானகுணங்கள் ஆத்மாவில் பிரவேசிப்பதினால் ஆராயும் சக்தியும் மந்தப்படுத்துகிறது. விவேகமன்னியில் விரக்தியும் விரக்தியன்னியில் விஞ்ஞானமும், விஞ்ஞானமன்னியில் அமைதியும் உண்டாகாது. உண்டாகிறகொஞ்சமும் பெரியார்களுடைய சேர்க்கை, உபதேசம் அவர்களுடையசரித்திரத்தைக் கேட்டுப்பார்த்தல் முதலானவைகளினாலேயே ஏற்படும். ஏனெனில் குறைதோஷங்களை யறியாமல் மூர்த்தியைக் காணுவதினால் மாத்திரம் விச்வாசம் உண்டாகாது. அன்புவுண்டாவதற்குக் காரணம் குணங்களை அறிதலேயாம். இம்மாதிரி மூர்த்திபூஜை முதலான தீச் செயல்களினாலேயே ஆரியவர்த்த நாட்டில் வேலையற்ற பூசாரிகள் பிச்சைக்காரர்களாகவும் சோம்

பேரிகளாகவும் புருஷப்பிரயத்தனமன்னியிலும் கோடிக்கணக்காக இருக்கிறார்கள். அவர்களே சகலஉலகத்திலேயும் அறிவீனத்தைப்பரவச்செய்திருக்கிகள். விக்கிரக ஆராதனையில் அதிகப்பொய்யும் வஞ்சகமுமிருக்கின்றன.

## அற்புதங்களும், க்ஷேத்திரங்களும்.

வினா :—காசிமாநகரில் ஔரங்கசீப்பிற்குக் காண்பித்த லோடபைரவ முதலான கணக்கற்ற அற்புதங்களைப் பாருங்கள். முகம்மதியர்கள் ஆலயநாசத்திற்காக தகர்த்தபொழுது பெரும்வண்டுகள் வெளிக்கிளம்பி சேவகர்கள் அனைவரையும் கலவரப்படுத்தி ஓடச்செய்தது.

விடை :—இது விக்கிரகத்தினால் செய்யப்பட்ட அற்புதமல்ல. அங்கே வண்டுகளின் கூண்டிருந்திருக்கவேண்டும். அவைகள் குரூரமான படியினால் எவராவது மதாந்திரவு செய்யுங்கால் அவர்களைக் கொட்டும். அங்கு காணப்பட்ட பால்தாரையின் அற்புதமானது பூசாரிகளால் கற்பிக்கப்பட்டது.

வினா :—மிலேச்சனுக்குத் தரிசனம் கொடுக்காமலிருக்க மகாதேவன் கிணற்றிலும் வேணிமாதவன் பிராம்மணன் வீட்டிலும் மறைந்து கொள்ளவில்லையா?

விடை :—கோடபான், காலபைரவன் லோடபைரவன் முதலான பூத பிரேத கருட கணங்களைக்கொண்டு ஏன் முகம்மதியர்களை அடித்து வென்றிருக்கக் கூடாது? மகாதேவ விஷ்ணு புராணங்களில் சொல்லியிருக்கும் வண்ணம் திருபுராசுரன் முதலிய பயங்கரமான துஷ்டர்களைச் சாம்பலாக்கினது போல் ஏன் துருக்கர்களைச் சாம்பலாக்கி யிருக்கக்கூடாது. இதிலிருந்து பாஷாணாதி விக்கிரகங்கள் முகம்மதியர்களுடன் சண்டைச் செய்யக்கூடியதல்லவென்று விளங்குகிறது. முகம்மதியர்கள் ஆலயங்களையும் விக்கிரகங்களையும் உடைத்துக் கொண்டுவரும்பொழுது காசிமாநகரைச் சேரவே பூசாரிகள் அப்பாஷாணலிங்கத்தைக் கிணற்றிலெறிந்து வேணிமாதவத்தை பிராம்மணன் வீட்டில் மறைத்து வைத்தார்கள்.

காசியில் காலபைரவன் பயத்தினால் எமதூதர்கள் வரவில்லையானால் பிரளயகாலத்திலும் காசிமாநகரம் அழிவையடையாததானால் மிலேச்சர்களுடைய தூதர்களுக்கு ஏன் பயந்து விட்டது? தங்களுடைய அரசாங்க ஆலயத்தை ஏன் அழிவிற்கு விட்டு விட்டார்கள்? இதெல்லாம் போப்க்களினுடைய மாயை.

வினா :—கயாவில் சிராத்தம் செய்வதினால் பித்ருக்களுடைய பாபம் விலகிப்போய் சிரார்த்தத்தினுடைய புண்யவிசேஷத்தினால் அங்கிருந்து பித்ருக்கள் சுவர்க்கத்தை யடைகிறார்கள். அங்கே பித்ருக்களே கையை நீட்டிப் பிண்டத்தை வாங்கிக் கொள்ளுகிறார்கள். இதுவுமா பொய்?

விடை :—இது முழுப்பொய்யே. பிண்டமளிப்பதின் விசேஷம் இதுவானால், பித்ருருக்களுடைய சுகத்திற்காகப் பிண்டத்திற்குச் செலவாகிற லக்ஷக்கணக்கான ரூபாயை வேசித்தனம் முதலான பாபங்களில் கயாவாசிகள்

செலவு செய்கிறார்களே. அப்பாபமும் அவர்களையணுகாதா? கை நீட்டுதல் கூட தற்காலம் காணப்படுகிறதில்லை. மழைக்காலங்களில் பூமியில்பள்ளத்தை வெட்டி அங்கு மனிதன் ஒருவன்கண்ணிற்படாது மறைந்திருக்கக்கூடும். பிறகு அவனைத் தர்ப்பைப் பில்களால் மூடி கையை நீட்டச்சொல்லிப் பிண்டத்தைக் கொடுத்திருப்பான். புத்தி தீட்சணை யற்ற எவனையாவது ஏமாற்றி அவர்கள் இம்மூட நம்பிக்கையைப் பரவச்செய்திருக்கலாம். இதில் அதிசயம் ஒன்றுமில்லை. பைஜ் நத்தை இராவணன் கொண்டு வந்தான் என்பதும் இதைப் போல் கட்டுக்கதையே.

வினா:—கல்கத்தாவில காளி காமாக்ஷி முதலான தேவிகளை இலட்சக் கணக்கான ஜனங்கள் மரியாதை செய்கிறார்கள். இதுவும் அற்புதமல்லவா?

விடை:—கொஞ்சங்கூட இல்லை. இக்குருட்டுஜனங்கள் ஒருவருக்குப்பின் ஒருவராய் ஆடுகள்போல் சென்று பள்ளத்தாக்குகளில் விழுகிறார்கள். விழுந்தும் குருட்டு வழியை விடுவதில்லை. ஒரு மடையனுக்குப் பின் மற்றவன் சென்று மூர்த்தி பூஜை ரூபமான அகழில் விழுந்து துக்கத்தை யடைகிறான்.

## புரி ஜகந்நாதம்

வினா:—ஜகந்நாதர் தனது சரீரத்தை மாற்றிக் கொள்ளுங்காலத்தில் சந்தனக்கட்டையொன்று சமுத்திரத்தில் மிதந்துவரக்காண்கிறது. (2) அடுப்பின் மேல் ஏழுகொப்பரை நிறையவைக்கப்பட்ட அரிசி முழுவதும் வெந்து விடுகிறது. (3) ஜகந்நாத சுவாமி பிரஸாதத்தை உண்ணாதவர்கள் குஷ்டரோகம் அடைகிறார்கள். (4) ஜகந்நாதருடைய இரதம் தானாகவேஓடுகிறது. (5) இந்திரதிம்னன் காலத்தில் தேவதைகளே ஆலயத்தைக்கட்டினார்கள் (6) பகவான் சரீரத்தைக் கழட்டுங் காலத்தில் அரசன் பூஜாரி தச்சன் முதலியவர்கள் இறந்து போகிறார்கள். இவ்வற்புதங்களைப் பொய்யென்று உங்களால் சொல்லமுடியாது.

விடை:—பன்னிரண்டு வருடகாலம் ஜகந்நாதத்தில் பூஜைசெய்து கொண்டிருந்த ஒருவர் மதுராபுரிக்கு வந்திருந்தார். அவர்என்னைக்கண்டபொழுது இவைகளைக்கேட்டேன். இதெல்லாம் உண்மையல்லவென்றார். (1) தன்னுடைய சரீரத்தைமாற்றிக் கொள்ளுங்காலத்தில் படகில் ஏறிச்சென்று சந்தனக் கட்டையைப் போட்டுவிட்டு வருவார்களென்று விளங்கவில்லையா? அலைகளில் மோதுண்டு அது கரையைச் சேருகிறது. அதை எடுத்துத் தச்சர்கள் விக்கிரகஞ் செய்கிறார்கள். (2) பாகஞ்செய்யுங் காலத்தில் சமயலறை கதவு மூடப்பட்டிருப்பதினால் சமையற்காரனைத் தவிர வேறுயாராலும் உள்ளே நடக்கும் விஷயத்தை அறிய முடியாது. பார்க்கவும் முடியாது. சுற்று வட்டமாக ஆறு அடுப்பு வெட்டி நடுவிலொன்றையும் வெட்டுகிறார்கள். அரிசியும் ஜலமுமுள்ள ஒவ்வொரு கொப்பரையின் அடியிலும் நெய் மண் சாம்பல் முதலியவைகளைப் பூசுகிறார்கள். ஆறு அடுப்புக்களின் பேரிலும் அவைகளை வைத்து அரிசி வெந்து பக்குவமானவுடன் கீழே எடுத்து அடிப்பாகத்தை நன்றாய்க் கழுவி விடுகிறார்கள். ஏழாவது கொப்பரையில் வேறே அரிசியும் தண்ணீரும் வைக்கிறார்கள். நடு அடுப்பில் ஒன்றின் பேரிலொன்றாக அடுக்கி ஏழாவது கொப்

பரையை நடுவில் வைக்கிறார்கள். பிறகு ஆறு அடுப்பையும் இருப்புப் பட்டைகளினால் மூடிவிடுகிறார்கள். பிறகே எல்லோரும் வந்து பார்க்கக் கதவைத் திறந்துவிடுகிறார்கள். அங்குள்ள தனவந்தர்களை யழைத்து மேல் கீழ் கொப்பரைகளிலுள்ள அரிசி பக்குவமாயிருப்பதையும் மத்தியிலுள்ளது ஆகாமலிருப்பதையும் காண்பிக்கிறார்கள். கொப்பரைக்குப் பணம் அளிக்கவேண்டு மென்கிறார்கள். மூளையைவிடப்பணமதிகமுள்ளவர்கள் தங்கம் வெள்ளி முதலியவைகளைக் காணிக்கையாக அளிக்கிறார்கள். பிரதி மாதமும் அளிப்பதாகச் சிலர் வாக்குங் கொடுக்கிறார்கள் (3) சூத்திரன் உள்பட நீசஜாதி ஜனங்கள் நைவேத்தியங் கொண்டு வருகிறார்கள். நைவேத்தியமானவுடன் கொஞ்சம் சாப்பிட்டுவிட்டு மிகுதியைக் கொப்பரையிலிடுகிறார்கள். அது ஈவோர்களுடைய வீட்டிற்கு அனுப்பப்படுகிறது. எல்லோரும்—ஏழை, கிரகஸ்தன், சாது, ஆண்டி முதல், சூத்திரன், ஒதுக்கப்பட்டவர்கள் வரை—ஒரே பந்தியிலுட்கார்ந்து சாப்பிடுகிறார்கள். ஒரு பந்தி சாப்பிட்டு, எழுந்த பிறகு மற்றொரு பந்தி அவ்விடத்திலேயே போடுகிறார்கள். இலைகளையும் எடுப்பதில்லை அதாவது அவர்களுடைய எச்சிலைச் சாப்பிடுகிறார்கள். இது துராசாரமல்லவா? அங்கு செல்லும் அதிகமான ஜனங்கள் சாதங்களைச் சாப்பிடாமல் தங்கள் கையினாலேயே சமைத்துச் சாப்பிட்டு வருகிறார்கள். ஒருவருக்கும் குஷ்ட ரோகம் வருவதைக் காணவில்லை. ஜகந்நாத நகரிலேயே அநேகம் குஷ்ட ரோகிகளிருக்கிறார்கள். பிரசாதத்தைச் சாப்பிட்டும் அவர்களுடைய வியாதி தீரவில்லையே. இது பைரவீசக்கரத்தில் வாமமார்க்கத்தவர்களால் உண்டு பண்ணப்பட்டது. இதற்கு உதாரணமாக் கிருஷ்ணனுக்கும் பலதேவருக்கும் சகோதரியான சுபத்திரை இரண்டு சகோதரர்களுக்கும் நடுவில் மனைவி ஸ்தானத்தில் விளங்குவதைச் சொல்லலாம். பைரவீ சக்கரம் இல்லாமல் போயிருந்தால் இது உண்டாயிராது. (4) இரதச்சக்கரத்தில் ஏதாவது ஒரு இயந்திரம் இருக்க வேண்டும். சரியாக நடத்தினால் இரதம் அசைகிறது. இல்லாத பட்சத்தில கும்பலின் நடுவில் நின்று விடுகிறது. அப்பொழுது பூசாரிகள் தானஞ்செய்யுங்கள்! புண்ணியம் பெறுங்கள்! ஜகந்நாதர் களிப்படைந்து தன்னுடைய இரதத்தைப் போகச் செய்து நம்முடைய தர்மத்தை நிலை நிறுத்தட்டும்!!! என்று கூவுகிறார்கள். பணம் சேரும் வரையில் இவ்விதமாகக் கூவி அது நின்றவுடன் விரஜ வாசியான ஒருவன் நல்ல உடை தரித்துக் கொண்டு சால்வைகளைப் போட்டுக் கொண்டு கைக்கூப்பி "ஏ ஜகந்நாத சுவாமி! கிருபைகூர்ந்து இரதத்தைப்போகச் செய்யுங்கள். எங்களுடைய தர்மத்தைக் காப்பாற்றுங்கள்" என்று துதி செய்கிறான். இம்மாதிரி சொல்லி சாஷ்டாங்க நமஸ்காரஞ்செய்து இரதத்தின் பேரில் ஏறுகிறான். அப்பொழுது இயந்திரம் சரியாக்கத்திருப்பப்பட்டு, ஆயிரக்கணக்கான ஜனங்களுடைய கரகோஷங்களின் இடையே அசைந்து போகிறது. ஜனங்களும் கயிற்றை இழுக்கிறார்கள். (5) ஆலயதரிசனத்திற்காகப் பல ஜனங்கள் செல்லுகின்றனர். கோடிக்கணக்கான ஜனங்கள் விக்கிரகத்தைக்காணச்செல்லுமிடத்தில்பகல்வேளையில்கூட விளக்குப்போட்டுப்பார்க்கவேண்டியவளவு இருளாயிருக்கிறது. மூர்த்தியின் இருபுரமும் திரைகளால் மறைக்கப்பட்டு அதை இழுத்தால் பூசாரிகள் உள்ளேயிருந்து, மூர்த்தி

யை உடனே மறைக்கிறார்கள். அங்கு குழுமியிருக்கிற ஜனங்களை நோக்கி பூசாரிகள் "ஆராதனை செய்யுங்கள். உங்களுடைய பாபம் விலகிப்போகும். அப்பொழுது தரிசனங் கிடைக்கும் சீக்கிரமாகச் செய்யுங்கள்" என்கிறார்கள் இவ்விதம் வஞ்சகர்கள் பாமரஜனங்களைக் கொள்ளை யடிக்கின்றனர். அப்பொழுது திரை ஒதுக்கப்பட்டு பக்தர்கள் பகவானைக் கண்டு ஜயகோஷம் செய்தானவுடன் மரியாதையன்னியில் வெளியே அனுப்பப்படுகின்றனர். இந்திரதமனுடைய வம்சக்காரர்கள் இன்னும் கல்கத்தாவிலிருக்கிறார்கள். அவன் தனவானாகவும் தேவி பூஜைக்காரனாகவுமிருந்தான். இலட்சம் ரூபாய்கள் செலவு செய்து ஆலயத்தைக் கட்டினான். ஆரியவர்த்த தேசத்தில் சமபந்தி போஜனம் செய்து வைக்க வேண்டுமென்று எண்ணினான். ஆனால் அம்மடையர்கள் அவர்களுடைய வழியை எவ்விதம் கை விடுவார்கள்? கோவிலைக் கட்டின சிற்பிகளையே தேவர்களென நம்பவேண்டும். அரசன், புரோகிதன், தச்சன் முதலானவர்கள் அச்சமயத்தில் இறப்பதில்லை. அம்மூவர்களும் அங்கு நன்றாகப் பிரசன்னமாயிருக்கிறார்கள். இவர்கள் தங்களை விடத்தாழ்ந்தவர்களுக்கு அதிக உபத்திரவம் கொடுத்ததினால் அவர்கள் இவர்களுக்குப் பாஷாணம் அளித்திருக்கக் கூடும். மூர்த்தியினுடைய நடுவில் ஒரு பொந்து இருக்கிறது. அதில் தங்க சம்படத்தில் ஒரு சாலிக்கிராமம் வைத்திருக்கிறார்கள். இதைப் பிரதி தினமும் கழுவின ஜலத்தைப் புண்ய நீராகக் கருதுகிறார்கள். இரவில் மூர்த்தியின்மேல் அவர்கள் விஷத்தின் சத்தைத் தடவுகிறார்கள். அதைக் கழுவின ஜலத்தை மூவரும் அருந்தின பின் உயிர் துறக்கிறார்கள். அப்பொழுது இப்பெருந்தீனிக்காரர்கள் ஜகந்நாதர் தன்னுடைய சரீரத்தைக் கழற்றுங் காலத்தில் மூன்று பக்தர்களையும் கூடவே இழுத்துக் கொண்டு விட்டார் என்ற கற்பனையை உண்டு பண்ணி விட்டார்கள். இவ்விதக் கட்டுரைகள் பணத்தை அபகரிப்பதற்காகவே செய்யப்பட்டுள்ளன.

## இராமேசுவரம்.

வினா:—இராமேசுவரத்தில் கங்கை ஜலம் அதின்பேரில் விழும்பொழுது லிங்கம் பெரியதாகின்றதே. அது பொய்யா என்ன?

விடை:—ஆமாம் அது பொய்யே. பகல்காலத்திலும் ஆலயத்தில் இருள் சூழ்ந்திருப்பதினால் இரவும் பகலும் விளக்கு ஏற்றிவைக்க வேண்டியதாயிருக்கிறது. ஜலதாரை விழும்பொழுது மின்னலையொத்த பிம்பம் தண்ணீரில் தெரிகிறது. இதைத்தவிர்த்து வேறு ஒன்றும் அங்கு கிடையாது. கல் பெரியதாகிறதில்லை. சிறிதும் ஆகிறதில்லை. அதிலிருக்கிறவண்ணமே தான் இருக்கிறது. இம்மாதிரியான மோசடிகளினால் புத்தியில்லாதவர்களை ஏமாற்றுகிறார்கள்.

வினா:—ராமேச்வரம் ராமச்சந்திரரால் கட்டப்பட்டதே. மூர்த்தி பூஜை வேதவிரோதமானால் ராமச்சந்திரர் ஏன் மூர்த்திஸ்தாபனஞ்செய்யவேண்டும்? வால்மீகி ஏன் அதை ராமாயணத்தில் கூறவேண்டும்?

விடை:—ராமசந்திரருடைய காலத்தில் லிங்கத்தினுடைய அடையாளங் கூட கிடையாது. தட்சிணதேசத்தில் ராமன் என்றபெயருள்ள அரசன்

லிங்கத்தின் பெயரால் ராமேச்வரம் என்று ஆலயத்தை அழைத்தான். சீதையை அழைத்துக்கொண்டு ஹனுமான் முதலானவர்களுடன் ராமர் ஆகாயமார்க்கமாய் கப்பலில் உட்கார்ந்துகொண்டு இலங்கையிலிருந்து அயோத்திக்குத் திரும்பி வருங்காலத்தில் சீதையினிடம் சொன்னதாவது.

अत्र पूर्वं महादेवः प्रसादमकरोद्विभुः ।
सेतुबन्ध इति ख्यतम् ॥ வால்மீகி. லங்காகாண்டம். ஸ. 128, சு. 20.

ஹே! சீதே!! உனது பிரிவாற்றாமையினால் நாங்கள் வியாகூலமடைந்து திரிந்துகொண்டிருந்தோம். அப்பொழுது இங்கு நான்கு மாதமிருந்தோம். எங்கும் பிரகாசமாய் தேவர்களுக்கெல்லாம் தேவராய் பரமாத்மாவாயிருக்கிற பரமேச்வரனைத்தியானித்தோம். அவருடைய கிருபையினால் எங்களுக்குத் தேவையான யுத்தசாமான்கள் யாவுங்கிடைத்தன. இச்சேதுவை நாங்களே கட்டி இலங்கைக்குவந்து ராவணனை யடித்து உன்னை எடுத்துவருகிறோம்'' இதைத்தவிர்த்து வேறொன்றும் வால்மீகி எழுதவில்லை.

## தட்சிணம்.

रङ्ग हैकालियाकन्त को। जिसने हुक्का पिलाया सन्त को ॥

வினா :—தட்சிணத்தில் **காலியாகாந்தம்** என்னும் விக்கிரகமிருக்கிறது. அது இன்றைக்கும் நெருப்புப்புகை விடுகிறது. விக்கிரக ஆராதனை பொய்யானால் இதுவும் பொய்யாகாதா?

விடை :—பொய்யே. இதெல்லாம் போப்லீலைகளே. விக்கிரகத்தின்வாய் ஆழமாயிருந்து அதிலிருந்து ஒருகுழாய் சுவரின்மார்க்கமாய் அடுத்தவீட்டிற்குள்ளே போகலாம். ஹுக்கா தயாரித்து, அதிலிருந்து குழாயை விக்கிரகத்தின் வாயில் வைத்தவுடன் திரையை இழுத்து மறைத்துவிட்டு வெளியே வருகிறான். உள்ளேயிருக்கிறவன் புகைக்குடிக்கிறான். சலசலசப்தம் ஹுக்காவிலுண்டாகிறது. விக்கிரகத்தின் வாய் மூக்கு இவைகளின் வாயிலாக பின்னால் பிணைத்திருக்கும் குழாய் மூலமாய் புகையும், ஆவியும் வெளிவருகிறது. அக்காலத்தில் சந்தேகமன்னியில் பலருடைய பணத்தை அபகரிப்பார்கள்

## துவாரகை.

வினா :—பாருங்கள்! **டாகோர் விக்கிரகம்** துவாரகையில் பக்தன் ஒருவனுடன் போகவில்லையா? விக்கிரகம் அதிகபாரமுள்ளதாகவிருந்தபொழுதிலும் இரண்டரை குண்டுமணித்தங்கத்திற்குச்சரியாக இடைஇருந்தது. இது அற்புதமல்லவா?

விடை :—இல்லை. பக்தன் விக்கிரத்தைத் திருடிக்கொண்டுபோயிருக்கவேண்டும். இரண்டரை துலாம் எடையுள்ள தங்கத்தாளிருக்கிறதென்ற கயற்றைக்கஞ்சா மயக்கத்திலுள்ளவர்கள் திரித்துவிட்டனர்.

## சோமநாதபுரம்.

வினு:—சோமநாதர் பூமிக்குமேல் காற்றில் நின்றுகொண்டிருந்தார். இது பெரும் அதிசயமல்லவா? பொய்யாகுமா!

விடை:—சந்தேகமா! பொய்யே!! விக்கிரகத்தின் மேலும்கீழும், மின்சார சக்தியுள்ள கற்கள் இருந்தன. அவைமேலுங் கீழுமிருந்தபடியினுல் விக்கிரகம் நடுநிலைவகித்திருந்தது. மாமூதுகஜினி ஆலயத்தின்பேரில் படைஎடுத்த காலத்தில்அதைபூமிக்குச்சமமாக்கி பூசாரிகளையும் பக்தர்களையும் கடுங்கஷ்டத்திற்கு ஆளாக்கினுன். 10,000 மனிதர்களைக்கொண்டு லட்சக்கணக்கானவர்களைத்தோற்கடித்தான். நல்லஅற்புதமே! போப் பூசாரிகள் கடவுளைப் பூஜித்து வணங்கி வேண்டிக்கொண்டுசொன்னதாவது "ஏ! மகாதேவனே!! இம்மிலேச்சனை நீர் அடித்து எங்களைக் காப்பாற்றுவீர்" சிடர்களான இராஜர்களுக்கு அவர்கள் "நீங்கள் கவலையற்று இருங்கள். மகாதேவன் பைரவரையாவது அல்லது வீரபத்திரரையாவது அனுப்பிக்கொடுப்பார். அவர்கள் சகல மிலேச்சர்களையும் அடித்து கண்களைக் குருடாக்கிவிடுவார்கள். இப்பொழுதே எங்களுக்குப் பிரசன்னமாகி ஹனுமான், துர்கா பைரவ முதலானவர்கள் கனவில் வேண்டிய சகலத்தையும் செய்வோம் என்று சொன்னதாகச் சொல்லுவார்கள். ஒன்றுமறியாத இராஜர்கள் போப்கள் சொல்லுவதைநம்பி படையெடுப்பவனை எதிர்க்காமலிருந்தார்கள். ஜோசியமறிந்த பலபோப்களில் ஒருவன் இப்பொழுது உங்களுடைய சண்டைக்கு நல்லகாலமில்லை என்றும், வேருெருவன் எட்டாம் மடத்தில் சந்திரன் என்றும், மற்றும் ஒருவன் யோகினி எதிரில் காணப்படுகிருள் என்றும், சொல்லுவான். இவ்விதபொய் வார்த்தைகளினுல் அவர்களைதப்பு வழிகளில் திருப்பினுர்கள். மிலேச்சர்களுடைய படையைமுற்றுகைசெய்த காலத்தில் கஷ்டத்திலிருந்து தப்பித்துக்கொள்ளமுயன்ருர்கள். நூற்றுக்கணக்கான பூசாரிகளும் அவருடைய சிடர்களும் அகப்பட்டுக்கொண்டார்கள். பூசாரிகள் அஞ்சலிபந்தம் செய்துகொண்டு ரூ 30,000,000, ஈடுகொடுப்பதாகவும் கோவிலையும் விக்கிரகத்தையும் விட்டுவிடும்படியாகவும் வேண்ட முகம்மதியர்களோ தாங்கள் விக்கிரக ஆராதனைக்காரர்களில்லை, விக்கிரகங்களை உடைக்கிறவர்களே என்று சொல்லி அதை ஒத்துக்கொள்ளாமல் ஆலயத்தை நாசம்செய்யவாரம்பித்தார்கள். இடிக்கப்பட்டு கூரை கீழேவிழுந்தவுடன் மின்சாரக் கல்லும் நழுவிக் கீழே விழவே விக்கிரகமும் விழுந்தது. அதை உடைத்துப் பார்த்தபொழுது ரூ 18,00,000,00 பெருமான இரத்தனங்களிருந்தது. போப் பூசாரிகளைக்கசையடித்தபொழுது அழுதார்கள். பொக்கிஷம் எங்கிருக்கிறதென்று கேட்க தண்டனைக்குப்பயந்து இருக்குமிடத்தைத் தெரிவித்தனர். அவைகளைக் கொள்ளையடித்து அவரையும் அவர்களுடைய பக்தர்களையும் அடிமைகளாக்கிக் கொண்டு தானியங்களை அறுக்கவும், புல்வெட்டவும், மலமூத்திரங்களைக் கழுவவும், உபயோகப்படுத்திக்கொண்டு, வருத்ததானியங்களைச் சாப்பிடவுங் கொடுத்தார்கள். அந்தோ!! கல் பூஜைசெய்தும் ஏன் அவர்கள் நாசமடையவேண்டும்? பரமேச்வரனுடைய பூஜையினுல் மிலேச்சர்களை ஓடச்செய்து நாசஞ் செய்திருக்கலாமே!! பல விக்கிரகங்களுக்குப் பதிலாக சூரவீரபுருஷர்களைப்

பூஜைசெய்திருந்தால் அவர்களிடமிருந்து எவ்வளவு உதவி கிடைத்திருக்கும்? ஆசாரிகள் கற்களை ஆணையுடன்பூஜைசெய்தும் ஒருகல்லாவது அவைகளிருந்த விடத்தைவிட்டு விலகி படைஎடுக்கிற ஒருவன் தலையில் விழுந்து உடைக்கா மலிருந்தது. விக்கிரகத்திற்குச் சரியாய் வீரபுருஷன் ஒருவனைப் பூஜைசெய்தி ருந்தால் அவன் தன்னுடைய வேலையாட்களைக் காப்பாற்றி சத்துருக்களை முறி யடித்திருப்பான்.

நர்ஸீயுடைய உண்டியல்.

வின :—துவாரகையிலுள்ள **ரஞ்சோட்** (ஸ்ரீகிருஷ்ணனின் மற்றொரு பெயர்) **நர்ஸீமேதா** விற்கு உண்டியல் பத்திரம் அளித்து கடன்களைத் திருப்பிக்கொடுக்கச்செய்தார். இவைகள் பொய்யா?

விடை :—யாராவது சாவகாரி ரூபாயைக் கொடுத்து கடனைத்தீர்த்திருக்க வேண்டும். வேறுயாராவது ஸ்ரீகிருஷ்ணன் உண்டியலைக்கொடுத்தான் என்று திருட்டுத்தனம செய்திருக்கவேண்டும். 1914 விக்கிரக சகாப்தத்தில் (1858ம் ஆண்டில்) ஆங்கிலேயர்கள் பீரங்கிப் படையைக்கொண்டு ஆலயத்தை விக்கிர கங்களுடன்கூட நாசஞ்செய்தார்களே. அப்பொழுது விக்கிரகம் எங்குசென்றி ருந்தது? பகேர்கள் அவர்களுக்குள்ள வீரத்தன்மையுடன்கூட சண்டைசெய் து சத்துருக்களையடித்தார்கள். விக்கிரகங்கள் ஏன் ஒருசாயின் காலைகூட உடைக்கவில்லை? ஸ்ரீகிஷ்ணனைப்போன்ற ஒருவனிருந்திருந்தால்கூட அவர்க ளைத் தோற்கடித்து ஓடச்செய்திருக்கலாம். தங்களைக் காப்பாற்றுகிறவர்களே அடிபடும்பொழுது இவர்களை ஏன் அடிக்கக்கூடாது?

ஜ்வாலாமுகி

வின —ஜ்வலாமுகி பிரத்தியட்சமான தெய்வமாச்சுதே. சகலரையும் சாப்பிடுகிறாள். நைவேத்தியம் அளித்தால் பாதியை உண்டு மிகுதியான பாதி யைத் தொடாமல் அப்படியே விட்டுவிடுகிறாள். முஸ்லீம் சக்கரவர்த்திகள் அதை அணைக்க அதன் பேரில் ஜலதாரையையும் அதை அடக்க இருப்புப் பட்டைகளையும் அடித்தார்கள். ஆயினும் ஜ்வாலை தணியவில்லை. ஹிங்கலாஜ் தேவியும் நடு நிசியில் குதிரையின்மேல் சவாரி செய்வது காணப்படுகிறது. உள்ளே கர்ச்சிப்பதும் கேழ்க்கிறது. சந்திர கூபம் (சந்திரனுக்கு வேண்டிய கிணறு) பேசுகிறது. யோனிதந்திரத்திலிருந்து வெளி வந்தவர்களுக்குப் மறு பிறப்பு கிடையாது. டூம்ரா அணிந்து கொள்ளுவதினால் பெரியவனா வான். ஹிங்கலாஜ் போகாதவன் பாதி பெரியவனே. இவைகளெல்லாம் நம்பக்கூடாததா?

விடை :—இல்லை. ஜ்வாலாமுகி என்று சொல்லும்படியான எரி மலையிலி ருந்து நெருப்பு வெளிவருகிறது. பூசாரிகளுடைய லீலை அங்கு வெகு விநோத மானது. உருகுகிறநெய்யுள்ள கரண்டியை தீயின்பேரில் கொண்டுபோனால் அதில் உடனே தீப்பிடிக்கிறது. தீயிலிருந்து தூரமாகக் கொண்டுபோய் விட்டால் அது அணைந்து விடுகிறது. கொஞ்சம் எரிந்து மீதியானது அப்படி

யே கரண்டியிலிருக்கிறது. இவ்விதமே ஜுவாலாமுகியிலும் நடக்கிறது. அக்னி ஜுவாலை சகலத்தையும் எரித்து விடுவது போலவும் காட்டுத்தீ வீட்டுத்தீ சகலத்தையும் எரித்து விடுவது போலவும் ஜுவாலாமுகியிலுள்ள நெருப்பு எல்லாவற்றையும் எரித்து விடுகிறது. இதில் அற்புதம் ஒன்று மில்லை. ஹிங்கலாஜில் சாவாரி செய்கிற தேவியொன்றையும் காணுவதற்கில்லை. வேறு ஒன்றுங்கிடையாது. ஆலயம் ஒன்று, ஜலாசயம் ஒன்று, இங்கு மங்கும் சில தண்ணீர் குழாய்கள் இவைகளே காணப்படுகின்றன. போப்க்களினுடைய பித்தலாட்டத்தைத் தவிரவேறொன்றும் அங்கு கிடையாது. அடியிலிருந்து கொப்பளம் வெளிக்கிளம்பி தண்ணீர் மட்டத்திற்கு மேல் வருகிற சேர் நிறைந்த குட்டை யொன்றிருக்கிறது. ஊற்றில்லை. அதையே சபல யாத்திரை என்கிறார்கள். யாத்திரிகர்களைக் கொள்ளை யடிப்பதற்கென்றே யோனிதந்திரத்தை உண்டுசெய்திருக்கிறார்கள். டம்ரா (ரட்சை) கட்டிக்கொண்டு ஒருவன் பெரியவனானால் தினந்தோறும் பொதி சுமக்கும் கழுதையும் பெருமையை அடைந்து விடுமே? ஒருவன் உயர, தர்ம காரியங்களைச் செய்யவேண்டும். ரட்சை உயிர்வைத்தராது.

### அமிர்தசரஸ்

வினா:—அமிர்தசரஸின் ஜலம் அமிர்தமே. மேருடியின் பாதிப்பழம் இனிமையாயிருக்கிறது. (குர்தாஸ் பூரில்) ஒரு மதில் இருக்கிறது. அதை (ஆட்டும் பொழுது) வளைந்து கொடுக்கிறது. ஆனால் உடைந்து போகிறதில்லை. ரேவால்சரத்தில் மலைகள் நீரில் மிதக்கின்றன. அமரநாதத்தில் லிங்கங்கள் தானாகவே உண்டாகின்றன. (அநேகம்) பிரஜைகள் ஹிமாயல மலையிலிருந்து வருவதும் அங்கிருந்து திரும்பிப்போவதும் தெரியவருகிறது. இவைகள் நம்ப கூடாதவைகளா?

விடை:—ஆம். யோக்கியதையற்றதே. பெயருக்கு மாத்திரம் அமிர்த சரஸ் (அமிர்த-அமிர்தம் சரஸ்-ஏரி), என்றுள்ளதே தவிர, உண்மை யானதல்ல. காடாக விருந்தகாலத்தில் அதனுடைய ஜலம் நன்றாக விருந்தது. ஆகையினாலேயே அதற்குப் பெயர் அமிர்தத் தண்ணீர் என்றிருந்தது. அது உண்மையான அமிர்தமாயிருந்தால் அங்கு எவரும் இறந்து போகக் கூடாதே. (அசைத்தால்) வளைந்து கீழே விழாமலிருக்கும் வண்ணம் (குர்தாஸ் பூர்) மதில்ச் சுவரைக் கட்டியிருக்க வேண்டும். மேருடி இனிமையாயிருப்பது தாமரைகளின் சேர்க்கையாலேயே யல்லவோ? அது பித்தலாட்டமாகவே யிருக்கவேண்டும். ரேவால் சரத்தில் மலைகள் மிதப்பதில் ஏதாவது இயந்திர சூழ்ச்சி யிருக்கவேண்டும். புறாக்கள் பழகினதாயிருந்து மலைக்குள் மறைந்திருந்து மனிதர்களால் விடப்படவேண்டும். இம்மாதிரி வழிகளினால் இப்பாதகர்கள் பாமரஜனங்களுடைய பணத்தைக் கொள்ளையடிக்கிறார்கள்.

### ஹரித்துவார்.

வினா:—ஹரித்துவாரம் மோட்சவாசலாகும். ஹரிபடிகளில் ஸ்நானம் செய்வதினால் பாபங்களிலிருந்து ஒருவன் மீட்கப்படுகிறான். தபோவனத்தில் வசிப்பதினால் தபஸ்வியாகிறான். கங்கோத்திரத்தில் கோமுகியும் உத்தரகாசியில்

குப்தகாசியும் திருயுகிநாராயணமும் காணப்படுகிறது. **பதரீநாராயணத்தில்** ஆறுமாதபூஜை தேவர்களாலும் ஆறுமாதபூஜை மனிதர்களாலும் செய்யப்படு கிறது. **பசுபதி** எனப்படும் மகாதேவனுடைய முகம் நேபாளத்திலும், குண்டி கேதார்நாதத்திலும், முழங்கால் ஜகந்நாதத்திலும், பாதங்கள் அமரநாதத்தி லும், முறையே இருக்கின்றன. இவைகளைத் தரிசித்து ஸ்நானம் செய்வதினால் முக்தி பெறக்கூடும். கேதாரம் பதிரி இவைகளிலிருந்து சுவர்க்கம் போக வேண்டுமென்றாலும் அப்படியே செய்யலாம். இவைகளைபபற்றி உங்களுடைய எண்ணமென்ன?

விடை :—வடக்கிலுள்ள பாதைவழியாய் போவதற்கு முதல் ஆரம்பம் ஹிரித்துவாரம். ஹர்கிபௌடி என்பது சமீபத்திலுள்ள ஸ்நானகுளத்தின் படிக ளின்பெயராகும். உண்மையைச் சொல்லுவோமேயானால் "ஹர்கிபௌடி" (எலு ம்புகளின் படிகளே) ஏனெனில் ஆரியவர்த்தத்திலுள்ள சகலபாகங்களிலிருந்தும் எலும்புகள் அங்கே எறியப்படுகின்றன. அவைகளிலிருந்து அவஸ்தைப்படும் வரையில் பாபம் போகாது. தபோவனம் அப்பொழுதிருக்கலாம். இப்பொழுது அது பிட்சுகவனம். (பிச்சைக்காரர்களுடைய வனமாயிருக்கிறது). தபோ வனத்தில் போயிருப்பதினாலே தபசு உண்டாகாது. தபசு புரிவதினாலேயே தான் தபோநிலையைப்பெறகூடும். பொய்சொல்லுகிற பலகடைக்காரர்கள் அங்கு இருக்கிறார்கள். மலைமேலிருந்து (கங்கோத்ரி) விழுகிற ஜலதாரை கங்கை நதியாகிறது. அயோக்கியர்கள் சிலர்யாராவது ஏழைஜனங்களை ஏமாற்றுவதற் காக அதைப்பசுமாட்டு முகத்தைப் போல் மாற்றியிருக்கவேண்டும். அதுவே போப்களினுடைய சுவர்க்கம். உத்திரகாசி முதலான விடங்கள் தியானத்திற்கு நல்லது. ஆனால் பொய்வஞ்சகர்கள் அங்கும் அவர்களுடைய கபடத்தைச் செய் கிறார்கள்.

**தேவப்பிரயாகை** புராணிகர்களுடைய லீலைகளே. அது வீண் பொய்யே, அலகநந்தாவும், கங்கையும் சேரும் இடம் அது. அங்கே தேவதைகள் வசிக் கிறார்கள் என்றவைகளைப் போன்ற நூல்களைப் புராணிகர்கள் நூற்காமல் போனால் யார் இவர்களுக்குப் பணமளிப்பார்கள்? **குப்தகாசி** என்பது கிடை யாது. அதெல்லாம் வெளிப்படையானதே. போப்க்களினுடைய பத்து அல் லது இருபது தலை முறை வரையிலிருக்கலாம். ஆனால் கடந்த மூன்று தலை முறைகளாக அது அங்கு இல்லை. **தப்தகுண்டம்** (சூடான நீர் குளத்தின்) ஜலம் சூடாயிருக்கிறது. ஏனெனில் அதிகமான இயற்கைச் சூடுடைய மலை யின் உள்ளே பாய்ந்து சூடுண்டுவருகிறது. அடுத்தாற் போலிருக்கிற இன்னு மொரு குளத்தின் நீர் குளிர்ச்சியாயிருக்கிறதென்றால் சூடில்லாத மலையின் பாகத்தின் மூலமாய் பாய்ந்து வருகிறது. **கேதர்நாதமிருக்கும்** படியான நாட் டின் வளம் செழித்திருக்கிற படியினால் போப்க்களும் அவர்களுடைய சிடர் களும் அங்கே கற்களின் மேல் ஆலயங்கட்டி விட்டார்கள். அங்கே மகந்து பூசாரி புரோகிதன் முதலானவர்கள் புத்தியைவிட பணம் அதிகமுள்ள குருட ர்களிடமிருந்து அடித்துப்பணம்வாங்கி விஷயசுகங்களினுடைய ஆனந்தங்களை அனுபவிக்கிறார்கள். **பதரி நாராயணத்திலும்** இவ்வித வழிப்பறிக் கொள்ளைக்

காரர்கள் பலபேர்களிருக்கிறார்கள். ராவல்ஜீ தான் அவர்களுடைய தலைவன். ஒருபெண்ணுடன் நில்லாது பல ஸ்திரீகளைப் பெண்டாடுதலைத் தர்மமாகக் கொண்டிருக்கிறான். ஆலயத்தைப் பசுபதி யென்றும் விக்கிரகத்தைப் பஞ்ச மூர்த்தி யென்றும் அழைக்கிறார்கள். இவர்கள் கண்டிக்கப் படாமலிருக்கும் வரையில் இக்கெடுதல்கள் பெருகிக்கொண்டே வரும். அங்கு வசிக்கும் உள்ளூர் ஜனங்கள் தீர்த்தவாசிகளைப்போல் பணத்தைக் கொள்ளையடிக்கிறவர்களில்லை. நாட்டின் இப்பாகமானது வெகு ரமணீயமாகவும் இன்பமாகவுமிருக்கிறது.

## விந்தியேசுவரி.

வினா :—விந்தியாசல மலைகளில் விந்தியேசுவரி, காளி, அஷ்டபுஜீ (எட்டு கரங்களைக் கொண்டவள்) இவைகள் பிரத்தியட்சமாகக் காணப்படுகின்றன. (2) விந்தியேசுவரி ஒரு நாளைக்கு மூன்று உருவங்களை எடுத்துக் கொள்ளுகிறாள். அவளுடைய இடத்தில் ஒரு ஈ கூட கிடையாது. (3) பிரயாகை க்ஷேத்திர ராஜன். அங்கு தலை க்ஷவரஞ் செய்து கொள்ளுகிறவர்கள் சித்தியை யடைகிறார்கள். கங்கை யமுனை சங்கமமாகுமிடத்தில் ஸ்நாகம் செய்வதினால் இஷ்ட சித்தியாகிறது. (4) இப்படியே அயோத்தியும் சகல ஜீவராசிகளுடன் கூட சுவர்க்கத்தை யடைந்துளது. (5) சகல தீர்த்தங்களிலும் பெரிது மதுராபுரி. (6) பிருந்தாவனம் கிருஷ்ண லீலைகளினால் புனிதமானது (7) கோவர்த்தன யாத்திரையும் விரஜயாத்திரையும் பெரும் பாக்கியவந்தர்ளுக்கே கிடைக்கும். (8) சூரிய கிரகணத்தில் குருக்ஷேத்திரத்தில் லக்ஷக்கணக்கான ஜனங்கள் கூடுகிறார்கள். இவைகளெல்லாம் பொய்யா?

விடை :—நேராகப் பார்வைக்குத் தெரிவது கல்லினால் செய்யப்பட்ட மூன்று விக்கிரகங்களே (2) பூசாரிகள் செய்யும் அலங்காரத்தினால் மூன்று வேளைகளில் மூன்று விதமாகத் தெரிகிறது. ஆயிரக் கணக்கான ஈக்கள் அங்கிருக்கின்றன. இதை நானே நேராகப் பார்த்திருக்கிறேன். (3) ஆதி காலத்தில் பிரயாகையில் அம்பட்டனிருந்திருக்க வேண்டும். அவன் போப்ர்களுக்குப் பணங் கொடுத்தாவது அல்லது தானாகவேயாவது க்ஷவரஞ் செய்து கொள்வதின் மகிமையின் சுலோகங்களை எழுதியிருக்கவேண்டும். பிரயாகையில் ஸ்நானஞ் செய்வதினால் சுவர்க்கத்தை யடைந்தால் வீட்டிற்கு யாரும் திரும்பி வரக் கூடாது. மூழ்கிப் போனவனுடைய ஜீவன் ஆகாசவாயுடன் கலந்து திரிந்து பிறப்பை யடைவதையும் எவரும் பார்க்கிறதில்லை. பணப்பேய் பிடித்தவர்களினாலேயே தீர்த்த ராஜன் என்றபெயரளிக்கப்பட்டது. ராஜனுக்கும் பிரஜைக்கும் உள்ளசம்பந்தத்தை சடத்தில் விளக்க முடியாதாகையினால் பிரயாகைக்குச் சொல்லுவது மடத்தனமாகும் (4) அயோத்தி நகரம் அதிலுள்ள நாய் கழுதை, தோட்டிகள், பெருக்குகிறவர்கள், கக்கூஸ் முதலியவைகளுடன் கூட மூன்று தடவை சுவர்க்கத்திற்குச் சென்றதென்பது நம்ப முடியாதது. அது ஒரு பொழுதும் சுவர்க்கத்திற்குப் போகவில்லை. அது சுவர்க்கத்திற்குச் சென்றது என்பதானது போப்களினுடைய கற்பனைக்கதையே. இப்பொய் கர்ணபாரம்பரையாய் வந்து விட்டது. நேமிஷாரண்யம் முதலானவைகளைப்

பற்றினதும் இவ்விதம் கற்பனை செய்யப்பட்டவையே. (5) மூன்று உலகங்களி லிருந்தும் மதுராவை நினைக்கக் கூடாது. அதிலுள்ள மூன்று பிராணி களிலிருந்து மீறி, பூமி ஜலம் ஆகாசம் இவைகளில் கூட இளைப்பாறுதல் முடியாது. ஒன்று மதுராவின் பூசாரி. யமுனாநதியில் எவன் ஸ்நானம் செய்யப்போனபொழுதிலும் தன்னுடைய சுங்கத்தை வாங்கிக்கொள்ளவும் அர்த்தமில்லாமல் "எஜமான்! எனக்கு கஞ்சா, மிளகு, லட்டு, முதலியவை களைச் சாப்பிட்டுக்குடித்து எஜமானனுடைய கீர்த்தியைத் துதிக்க பணங்கொ டுங்கள்" என்று உளரவும் செய்கிறார்கள். இரண்டாவது ஆமைகள். நீ என்ன செய்த போதிலும் உன்னைக் கடித்து விடும். ஸ்நானப் படித்துறையில் வெகு கஷ்டத்துடனே ஸ்நானஞ் செய்து அவைகளினுடைய கூட்டத்திலிருந்து தப்பி த்து வரவேண்டும். மூன்றாவது. மரத்தின் பேரிலிருக்கும் சிவந்தவாயை யுடைய குரங்குகள். தலைப்பாகை, தொப்பி, ஆபரணம் எதுவாயிருந்த பொழு திலும் கையிலிருந்து எடுத்துக் கொண்டு போய் மனிதனைக் கடித்து கீழே தள்ளி மறிக்கச்செய்து விடும். இவைகளெல்லாம் அவர்களுடை சீடர்களாலும் ஆராதனைக்குத் தகுதியானவைகளாகக் கருதப்படுகின்றன. மணங்குக் கணக் கான தானியங்கள் பல வகைகளும் சர்க்கரையும் ஆமைக்கும் குரங்கிற்கும் அளித்துபணமும் மிட்டாய்களும் போப்க்களுக்குக் கொடுக்கப்படுகிறது. பிருந்தாவனம் முன்காலத்திலப்படியே இருந்திருக்கும். ஆனலிப்பொழுது சிறுவர்களும் சிறுமிகளும் ஆண்டிகளும் அவர்களுடைய வேலைக்காரிகளும் தங்களுடைய தீய வழக்கங்களைச் செய்யும் படியான வேசிகளுடைய வனமாக வே யிருக்கிறது. இம்மாதிரியாகவே கோவர்த்தனத்தில் தீபாவளி சமயத்திலும் விரஜ யாத்திரைகளிலும் போப்க்கள் யாத்திரிகர்களிடமிருந்து பணம் பிடுங்கு வதிலேயே கைதேர்ந்தவர்களாயிருக்கிறார்கள். குருக்ஷேத்திரத்திலும் ஜீவனோ பாயம் இவ்விதமே நடக்கிறது. அவர்கள் நடுவிலுள்ள தார்மிகபுருஷர்கள் போப்லீலைகளிலிருந்து வேறாகவே யிருக்கிறார்கள்.

வினா:—விக்கிரக ஆராதனையும் தீர்த்த யாத்திரைகளும் தொன்று தொட்டு வருகிறதே. அது எப்படி பொய்யாகும்?

விடை:—தொன்று தொட்டது என்று எதைச்சொல்லுகிறீர்கள்? எப்பொழு தும்என்றால் வேதம் பிராம்மணம் ரிஷி முனிகளால் எழுதப்பட்ட நூல்களில் இவைகள் ஏன் காணப்படவில்லை? விக்கிரக ஆராதனை 2000 அல்லது 2500 வருடங்களுக்கு முன் வாமமார்க்கத்தவர்களிடமிருந்தும் சமணர்களிடமிருந் தும் ஆரம்பித்தது. ஆதியில் ஆரியவர்த்தம் இதைக்கொண்டிருக்கவில்லை. தீர்த்த யாத்திரையுங் கிடையாது சமணர்கள் கிர்நார், பாலிடானா, சிகரம், சத்ருஞ்ச யம், ஆபு முதலான க்ஷேத்திரங்களை உண்டு பண்ணினவுடன் அதற்குச் சரி யாக இவர்களும்ஏற்படுத்திக்கொண்டார்கள். இவைகளினுடைய ஆரம்பத்தைக் காணவிரும்புகிறவர்கள் 'பண்டாக்கள்' வைத்திருக்கும் படியான பழைய பதிவு புத்தகங்களையும் பித்தளை சாசனங்களையும் பரிட்சித்து பார்க்கவேண்டும். அப்பொழுது இவைகள் 500 அல்லது 1000 வருஷங்களுக்குள்ளேயே ஏற்ப் பட்டதென்பது தெளிவாகும். ஒரு பத்திரமாவது 1000 வருடங்களுக்கு

முந்தினதாக இராது. ஆகையினால் க்ஷேத்திரங்கள் ஆதிகாலம் தொட்டு இல்லை. தற்காலத்தியதே.

வினா :—ஸ்தலயாத்திரையும் நாமஸ் மரணையும் பொய்யானவையா?

விடை :—பாபங்கள் தீர்ந்து போகுமேயானால் ஏழைகள் தனவந்தர்களாயிருக்கவேண்டும். குருடர்கள் பார்வையை அடையவேண்டும்; குஷ்ட்டரோகிகளுக்கு ரோகம் தீரவேண்டும்; இராஜ்ஜிய மிழந்த மன்னர்கள் அதைத் திரும்பவும் பெறவேண்டும். இவைகள் நடக்கிறதில்லை. எனவே ஒருவருடைய பாபபுண்யங்கள் தீர்க்கக் கூடியதல்ல.

गङ्गागङ्गेति यो ब्रूयाद्योजनानां शतैरपि ।
मुच्यते सर्वपापेभ्यो विष्णुलोकं स गच्छति ॥
हरिर्हरति पापानि हरिरित्यक्षरद्वयम् ॥
प्रातःकाले शिवं दृष्ट्वा निशिपापं विनश्यति ।
आजन्मकृतं मध्याह्ने सायाह्ने सप्तजन्मनाम् ॥

இச்சுலோகங்கள் போப்புப் புராணங்களிலிருக்கின்றன. ஆயிரக்கணக்கான மைல் தூரத்திலிருந்த பொழுதிலும் கங்கை என்று சொல்லுகிறவர்களுடைய பாபம் நாசமாய் விஷ்ணு உலகமான வைகுண்டத்தை யடைகிறார்கள். (2) 'ஹரி' இவ்விரண்டு எழுத்துக்களின் உச்சரிப்பால் எல்லா பாபங்களும் விலகிப் போகிறது. ராம, கிருஷ்ண, சிவ, பகவதீ, என்று சொல்வதின் மகிமைகளும் அதுவே யாகும் (3) காலையில் சிவலிங்கத்தையாவது அதன் விக்கிரகத்தையாவது தரிசனஞ் செய்கிறதினால் ராத்திரியில் செய்த பாபங்களும், மத்தியான தரிசினத்தினால் வாழ் நாள் முழுவதும் செய்த பாபங்களும் சாயந்திர தரிசனத்தினால் முன் ஏழு பிறப்புப் பாபங்களும் நாசமடைகிறது. இது பொய்யா?

விடை :—பொய் என்பதில் சந்தேகமும் உண்டோ? கங்கா, ஹரி, ராம, கிருஷ்ண, சிவ, பகவதி, இந்நாமஸ்மரணையினால் பாபம் விலகிப்போகாது, விலகுமேயானால் எவரும் துக்கமுள்ளவராக யிருக்கமாட்டார்கள். பாபஞ் செய்வதிலிருந்தும் அஞ்சமாட்டார்கள். இக்காரணத்தினாலேயே போப் லீலைகளில் பாபம் அதிகரித்துக் கொண்டேபோகிறது. பாபம்செய்த பிறகு தீர்த்த யாத்திரையும் நாமஸ்மரணையும் செய்தால் அது நிவர்த்தியாகி விடுவதாக இம் மூடர்கள் நம்புகிறார்கள். இந்நம்பிக்கையினால்பாபத்தைச் செய்து இவ்வுலகிலேயும் பூலோகத்திலேயும் உண்மையான சுகங்களை யநுபவிக்கிறதில்லை. செய்த பாப கர்மங்களின் பலனை யனுபவித்தே, தீரவேண்டும்.

வினா :—ஆனால் சத்தியமான தீர்த்தமும் நாமஸ் மரணையும் எது?

விடை :—வேதம் முதலிய சத்திய சாத்திரங்களை ஓதுதல் ஓதுவித்தல், தர்ம வித்வான்களுடைய சேர்க்கை, பரோபகாரம், தர்மாசாரணை, யோகாப்பியாசம், ஒருவரை விரோதியாதிருத்தல் கபடமன்னியிலிருத்தல், சத்தியத்தைச் சொல்லல் சத்யத்தைக் ஏற்றல், பிரம்மசரியத்தை ஆதரித்தல் ஆசான் அதிதி மாதா பிதா இவர்களுடைய சேவை, பரமேச்வரனைத் துதித்து

உபாசனை செய்வது, சாந்தி, அடக்கப்பட்ட இந்திரியம், நற்குணம் தர்மத்துடன் கூடின புருஷபிரயத்னம், ஞானம் விஞ்ஞானம் முதலான சுபகுண கர்மங்களினால் துக்கங்களிலிருந்து மாறுவது இவைகளே தீர்த்தங்களாகும். ஜலமும் நிலமும் தீர்த்தங்களாகாது. ஏனெனில்:—

**जना यैस्तरन्ति तानि तीर्थानि ।**

எதைச் செய்து மனிதன் துக்கங்களிலிருந்து மீறுகிறானோ அதுவே தீர்த்தம். ஜலமும் நிலமும் தாண்டுவதற்கு உபயோகமாகாது, அவைகள் ஒருவனை மூழ்கச் செய்கின்றன. படகுகளும் கப்பல்களுமே தீர்த்தங்களாகும் ஏனெனில் அதைக் கொண்டே சமுத்திரம் முதலானவைகளைத் தாண்டுகிறோம்.

**समानतीर्थे वासी ॥** அத. 4. 4. 108.
**नमस्तीर्थ्याय च ॥** யஜுர். 16.

எப்பிரம்மசாரிகள் ஆசாரியரிடத்தில் ஒரே புஸ்தகத்தைப் படிக்கிறார்களோ அவர்களே சமான தீர்த்தவாசி. அதாவது ஒரே தீர்த்தத்தை வணங்குகிறவர்கள். வேதாதி சாத்திரம், சத்தியப்பேச்சு முதலான தர்மலக்ஷணங்களினால் சாதுவிற்கு அன்னம் முதலிய பதார்த்தங்களை யளித்து அவரிடமிருந்து வித்தையை அறியவேண்டும். இவைகளுக்கேத் தீர்த்தமென்று பெயர். நாமஸ்மரணைப் யென்றால், பரமேச்வரனை நினைப்பதே. பரமேச்வரா, ஈச்வரர், நியாயஞ் செய்கிறவர், தயாளு, சர்வசக்தி யுள்ளவர், முதலான பெயர்கள் பரமேச்வரனுடைய குணகர்மஸ்வபாவங்களுக்குத் தக்கவாறிருக்கின்றன. எல்லோரையும்விடப்பெரியவராயிருப்பதினால் பிரம்மாவென்றும், ஈச்வரனுக்கெல்லாம் ஈச்வரனயிருப்பதினால் பரமேச்வரன் சாமர்த்தியத்துடன் கூடினவராயும் நியாயஞ்செய்கிறவராயும் ஒரு பொழுதும் அநியாயம் செய்யாதவராயும் இருக்கிறபடியினால் ஈச்வரன் என்றும், சகலரிடத்திலும் தயை கிருபை இவைகளுடன் கூடினவராயிருப்பதினால் தயாளுவென்றும், தன் சக்தியினாலேயே சகல சராசர உலகசிருஷ்டி ஸ்திதி சம்காரம் செய்கிறபடியினாலும் வேறு யாருடைய உதவியு மில்லாதபடியினால் சர்வ சக்திமான், என்றும், பலவித ஜகத்தினுடைய பொருள்களைச் சிருஷ்டிப்பதினால் பிரம்மா வென்றும், சர்வத்திலும் வியாபித்துக் காப்பாற்றுவதினால் விஷ்ணு வென்றும் சகலருக்கும் தேவரான படியினால் மகாதேவரென்னும், பிரளயத்தைச்செய்வதினால் உருத்திரன் என்றும் நாமங்கள்வழங்கபட்டுள்ளன. ஆகையினால் அவரைப் போலவே மனிதன் இருக்க முயலவேண்டும். அதாவது பெரிய காரியங்களைச் செய்து பெரியவனாகட்டும். சாமர்த்திய முள்ளவைகளில் சாமர்த்தியமாயிருக்கட்டும். அதர்மத்தை ஒருபொழுதும் செய்யாதிருக்கட்டும். எல்லாவற்றிலும் தயையுள்ளவனாக இருக்கட்டும். சகல விதமான சாதனங்களையும் பழகட்டும். கைத்தொழில் வித்தைகளை விருத்தி செய்து பலவிதப் பொருள்களைச் செய்யட்டும். தன்னைப் போலவே மற்றவர்களிடத்தும் நடக்கட்

டும். சகலரையும் காப்பாற்றட்டும் வித்வான்களில் வித்வாணுயிருக்கட்டும். துஷ்டகர்மம செய்கிறவர்களைத் தண்டித்து நல்லவர்களை காப்பாற்றட்டும். இவ்விதம் பரமேச்வரனுடைய குணகர்மத்தின் பிரகாரம் தன்னுடைய குண கர்மஸ்பாவத்தை யறிந்து செய்துகொள்வதே பரமேச்வரனுடைய நாமஸ் மரணையாகும்.

गुरुर्ब्रह्मा गुरुर्विष्णुर्गुरुर्देवो महेश्वरः ।
गुरुरेव परं ब्रह्म तस्मै श्रीगुरवेनमः ॥

வினு:—இம்மாதிரியான குருபூஜைநல்லதா? குருவினுடைய பாதங்களைக் கழுவி அதைக்குடித்து அவருடைய கட்டளைப் பிரகாரம் நடந்து கொள்ளல். லோபியாயிருந்தால் வாமனனுக்குச் சமானமாயும், கோபமுள்ளவனுயிருந்தால் நரசிம்மனுக்குச் சமானமாயும், போகமுள்ளவனுயிருந்தால் ராமருக்குச்சமான மாயும் காமமுள்ளவரா யிருந்தால் கிருஷ்ணனுக்குச் சமானமாயும் குருவை முறையே நினைக்கவேண்டியது. குரு என்ன பாபம் செய்த பொழுதிலும் அதைக் கவனிக்ககூடாது. சத்குரு தரிசனத்தில் அசுவமேத பலன் உண்டென்று அறியவேண்டும். இவை சரியானதாகத் தோன்றவில்லையா?

விடை:—பிரம்மா, விஷ்ணு, மகேச்வரன், பரப்பிரம்மம் முதலானவை கள் பரமேச்வரனுடைய பெயர். குருமகாத்மியம் குருகீதை இவைகளெல்லாம் பெரிய போப் லீலைகள். தாய், தகப்பன் ஆசாரியன் அதிதி இவர்களே சரியான குரு. இவர்களைச் சேவைசெய்து இவர்களிடமிருந்து வித்தையைக்கற்று விருத்திசெய்யவேண்டியது சிஷ்யனின்கடமை. ஆனல் குரு; லோபியாயும் கோபமுள்ளவனுயும் இருந்தால் அவனை எப்பொழுதும் விட்டுவிட வேண்டியது. அரசன் சிஷ்யர்களைச் சிட்சிக்கவேண்டும். அதற்கும் வழிப்படா விட்டால் (அர்கியம் பாத்திரம்)பிராணனையும் பழிவாங்க வேண்டும். அதில்தோஷம் ஒன்றும் கிடையாது. குருத்தன்மை எளிதில் சுலபமாக ஏற்பட்டு விடாது. கழுத்தில்மாலை யணிந்து கொள்ளுவதும், நெற்றியில் திலகம் வைத்துக்கொள்ளுவதும் வேத விரோதமான மந்திரங்களை உபதேசஞ்செய் வதும் குருத்தன்மையை யளிக்காது. ஆட்டிடையனைப் போலாகிருன், இடையன் பால் முதலானதை உபயோகித்து வியாபாரஞ் செய்ய ஆடுகளை வைத்துக் கொண்டிருப்பது போல் இவர்கள் சீடர்களிடம் பணம் அபகரிப்பதற்காக வைத்துக் கொண்டிக்கிருர்கள்.

लोभी गुरू लालची चेला, दोनो खेलें दाव ।
भवसागर में डूबते, बटै पथर का नाव ॥

பேராசை பிடித்த குரு—ஆண் பெண்—சீடர்களிருவரும் தனக்குக் கொஞ்சம் கொடுக்கவேண்டுமென்று அறிகிருன். தன்னுடைய பொய் வார்த் தைகளிலிருந்து தப்புவித்து பாபங்களிலிருந்து காப்பாற்றுவார் என்று சீடன் அறிகிருன். வஞ்சகர்களிருவரும் உலகத்தினுடைய துக்க சமுத்திரத்தில் கல்லினல் செய்த படகில் உட்காருகிறவர்கள் முழுகிப்போவது போல்,

முழுகுகிறார்கள். இம்மாதிரி குரு சீடர்களுடைய முகத்திலேயும் விழிக்காதே யுங்கள். அவர்களுடன் எவனும் சேர விரும்பவுங் கூடாது. அவருடன் சேருகிற வர்கள் கஷ்ட சமுத்திரத்தில் மூழ்க்கப்படுகிறார்கள். பொய் நம்பிக்கைகளைப் பரவச் செய்யும், இந்த ஆட்டுபோப் குருவானவர்கள் பூசாரி புராணிகர்களைப் போலவே கபடகாரியங்களைக் கையாளுகிறார்கள். இதெல்லாம் சுயநலங்கோரு கிறவர்களுடைய செயலே. பிறநலம் கோருகிறவர்கள் தனக்குக் கஷ்ட்டம் வந்த பொழுதிலும் உலக உபகாரம் செய்வதிலிருந்து பின் வாங்க மாட்டார் கள். குரு மகான்மியம் குரு கீதை முதலிய இவைகளெல்லாம் கபட நாடகக் குருமார்களால் செய்யப்பட்டவையாகும்.

अष्टादशपुराणनां कर्त्ता सत्यवतीसुतः ॥

इतिहासपुराणाभ्यां वेदार्थमुपबृंहयेत् ॥ மகாபாரதம்.

पुराणान्यखिलानि च ॥ மனு.

इतिहासपुराणं पंचमं वेदानां वेदः ॥ சாந்தோ. 7. 1.

दशमेऽहनि किंचित्पुराणमाचक्षीत ॥

पुराणविद्या वेदः ॥

புராண ஆசிரியர்.

(1.) பதினெண் புராணங்களைச் செய்தவர் வியாசமுனிவர். வியாச ருடைய வார்த்தைகளை அவசியம் பிரமாணமாக எடுத்துக்கொள்ளவேண்டும். (2) இதிகாசம், மகாபாரதம், 18 புராணங்கள் இவைகளிலிருந்தே வேதார்த் தங்களை அறியவேண்டும். ஏனெனில் இதிகாசப்புராணங்கள் வேதத்தின் பொ ருளுக்கு ஒத்ததாயிருக்கிறது. (3) பித்ரு கர்மங்களில் புராணம் ஹரிவம்சம் முதலானவைகளுடைய கதையைக் கேழ்க்கவேண்டும். (4) இதிகாச புராணங் கள் ஐந்தாவது வேதங்களாகும். இவ்விதப் பிராமணங்களினால் புராணங்களு டைய பிரமாணமும் புராணங்களுடைய பிராமணத்தினால் விக்கிரக ஆராதனை, தீர்த்தயாத்திரை, இவைகளினுடைய பிரமாணமும் சித்தமாகிறது. ஏனெனில் புராணங்களிலேயே விக்கிர ஆராதனை தீர்த்தயாத்திரை இவைகளுக்கு ஆதா ரங்கள் இருக்கின்றன. (5) அசுவமேத யாகத்தின் முடிவான பத்து நாட்களில் புராணங்களினுடைய சில கதைகளையாவது கேழ்க்கவேண்டும். (6) புராண வித்தை வேதார்த்தங்களை விளக்குகிறதினால் வேதமே யாகும்.

விடை:—பதினெண் புராணங்களைச் செய்தவராக வியாசரிருந்தால் அவைகளில் இவ்வளவு பொய் கற்பனைகளிராது. ஏனெனில் சாரீரிக சூத்திரம், யோகசூத்திரம், பாஷியம் முதலிய வியாசரால் எழுதப்பட்ட நூற்களைக் காணு வதனால் வியாசர் பெரிய வித்வான் சத்தியவாதி, தார்மிகர், யோகியென்று தெளிவாகிறது. அவர் இவ்விதப்பொய் கட்டுரைகளை ஒரு பொழுதும் எழுதி யிருக்கமாட்டார். சாம்பிரதாய பரஸ்பர விரோதமானவர்களே பாகவதம் முத லான மதி கெட்ட மாறுபாடான புஸ்தகங்களை எழுதியிருத்தல் வேண்டும்.

அவைகளில் வியாசருடைய குணம் ஒரு துளியேனும் கிடையாது. வேதசாத்திர விரோதமாயும் அசத்தியவாதத்தையும் எழுதுவது வியாசருக்குச் சமானமான வித்வான்களுடைய வேலையாகாது. இவைகள் சண்டையை விரும்பும் தன்னலங்கோருகிறவர்களினுடையதே. இவை இதிகாசம் புராணமாகாது.

ब्राह्मणानीतिहासान् पुराणानि कल्पान् गाथानाराशंसीरिति ॥

இது பிராம்மணத்தினுடையவும் சூத்திரத்தினுடையவும் வசனம். **ஐத்ரேயம், சதபதம்**, சாம, கோபத பிராம்மண கிரந்தங்களுக்கு இதிகாசம் புராணம் கல்பம் காதா நாரசம்ஸி எனப்பெயர்கள் ஐந்து. (இதிகாச) ஜனக யாக்ஞயவல்கிய சம்வாதத்தைப் போன்றது. (புராணம்) ஜகத்துற்பத்தி முதலியவைகளுடைய வர்ணனை (கல்பம்), வேத விசேஷங்களுடைய அர்த்தத் நிருதைவணம்செய்வது. (காதா), திருஷ்டாந்தங்களைக் கொண்டு விஷயங்களைத் தெளிவாக்குவது. (நாரசம்ஸி), மனிதர்களுடைய—புகழத்தகுந்தது தகாதது--காரியத்தை விரித்துரைத்தல் இவைகளினலேயே வேதார்த்தம் வெளிச்சமாகிறது. ஞானிகளுடையப் புகழைக் கொஞ்சம் கேழ்ப்பதே பித்ருகர்மமாகும். அசுவமேத முடிவிலும் இதையே கேழ்க்கவேண்டும். வியாசரால் செய்யப்பட்ட கிரந்தங்களைக் கேழ்ப்பதும் கேழ்க்கச் செய்வதும் அவர் பிறப்பிற்குப் பின்னலேயே முடியும். முன்னலேமுடியாது. வியாசர் பிறப்பதற்கு முந்தியே வேதார்த்தங்களை ஓதியும் ஓதுவித்தும் கேட்டும் கேழ்க்கச்செய்துங் கொண்டிருந்தார்கள். ஆகையால் சகலத்தையும் விட 'பழைய பிராம்மணகிரதங்களே இத்தகுதிகளுக்குச் சரியாயிருக்கின்றன. வீண்தோற்றமுள்ள புதியதும் மதிகெட்ட மாறுபாடானவும் குறைவானவுமான பாகவதம்' சிவபுராணம் முதலிய பொய் தூஷணை செய்யும் புஸ்தகங்கள் இத்தகுதிகளுக்குச் சரியாகாது. வேதங்களை ஓதி வேதார்த்தங்களைப் பரவச் செய்ததினலேயே வேதவியாசர் என்றுபெயர்வந்தது. வட்டம் ஒன்றின் மத்திய ரேகையை வியாசர் என்பார்கள். அதாவது இருக்வேதம் முதல் அதர்வவேதம் வரையிலுள்ள நான்கு வேதங்களைப்படித்திருந்தார். சுகதேவர் ஜைமுனி, முதலானசிடர்களுக்கும் கற்றுக்கொடுத்தார். அவருடைய பிறப்புபெயர் கிருஷ்ணத்வைபாயனர். வியாசர் வேதங்களை ஒன்று கூட்டினரென்பது சரியானதல்ல. ஏனெனில் அவருடைய தகப்பன் தாதா, அவருடையபிதா முதலியவர்களான பராசரர், சக்தி, வசிஷ்ட்டர், பிரம்மா முதலான வர்கள் நான்கு வேதங்களையும் படித்திருந்தார்கள். அவர் வேத சங்கிரக்காரராயிருந்தால் இவைகள் எப்படி நடந்திருக்கக்கூடும்?

வின:—புராணங்களிலுள்ளவைகளெல்லாம் பொய்யா அல்லது கொஞ்சமேனும் உண்மையுண்டோ?

விடை —பொய் அதிக மிருக்கின்றன. தப்புக்களை மறைப்பதற்கானவைகளில் உண்மை யிருக்கின்றன. இருக்கிற உண்மை யெல்லாம் வேதம் முதலிய சத்தியசாத்திரங்களிலிருந்தும், பொய் எல்லாம் போப்க்களினுடைய யோசனையிலிருந்துமே. உதாரணமாக சிவபுராணத்தில் சைவர்கள் சிவனைப் பரமேச்வரனாக நினைத்து விஷ்ணு பிரம்மா இந்திரன் கணேசன் சூரியன் முதலானவர்

களை அவருடைய வேலையாட்களாகக் கருதுகிறார்கள். விஷ்ணு புராணத்தில் வைணவர்கள் விஷ்ணுவைப் பரமாத்மாவாக நினைத்து சிவன் முதலியவர்களை விஷ்ணுவின் தாசனாக எண்ணுகிறார்கள். தேவிபாகவதத்தில் தேவியைப் பரமேச்வரியாகவும் சிவன் விஷ்ணு முதலியவர்களை அவளுடைய கையாட்களாகவும் செய்திருக்கிறார்கள். ஜனங்களுடைய வைப்புக் கட்டுக்களில்லாமல் போனால் இவைகள் வேறென்னவாகக் கூடும். இவ்வாறான மாறுபாடுகள் ஒரே மனிதனால் செய்யப்பட்டிராது. அதிலேயும் வித்வான்களாலேயா செய்யப்பட்டிருக்கமுடியும்? ஒரு சார்பார் உண்மை யென்றால் மற்றொரு சார்பினர் பொய் யென்கிறார்கள். இரண்டாவது உண்மையானால் மூன்றாவது பொய்யே. இப்படியே முடிவுவரையிலும். ஒவ்வொரு புராணமும் முறையே போற்றும் கர்த்தாவை, மற்ற புராணங்களுடைய கர்த்தாக்களின், கர்த்தாவாகச் செய்கிறது விஷ்ணு புராணமோ விஷ்ணுவையும், தேவி புராணம் தேவியையும், கணேசகாண்டம் கணேசனையும், சூரிய புராணம் சூரியனையும், வாயு புராணம் வாயுவையும் முறையே சொல்லுகின்றன. சிருஷ்ட்டி கர்த்தா இரட்சகன் சம்காரன் இவைகளைச் செய்கிறவனே. எப்படி உற்பத்தி செய்யக்கூடுமென்றும், உற்பத்தி செய்கிறவன் சிருஷ்ட்டிக்குக் காரணமாக ஒரு பொழுதும் ஆகமுடியாதென்றும் கேட்டால் வாயடைத்துக் கொண்டுபதில்கூறாமலிருப்பார்கள். சிருஷ்டி செய்யப்பட்ட பொருள்கள் சிருஷ்டியிலிருந்து தனியாயும் சிருஷ்ட்டிக்குக் காரணமாயும், எப்படி இருக்கக்கூடும்?

சிவபுராணப் பிரகாரம் நான் சிருஷ்டிசெய்யவேண்டும் என்று சிவன் எண்ணினார். உடனே நாராயண என்று சமுத்திரத்தை உண்டுபண்ணினார். அதனுடைய நாபியிலிருந்து ஒரு தாமரைமலரும் அதிலிருந்து பிரம்மாவும் உண்டானார்கள். சமுத்திரத்திலிருந்து கை நிறையஜலமெடுத்து பார்த்துவிட்டு கீழே ஜலத்திலெறியவே நீர்க் குமிழியுண்டாச்சுது. அதிலிருந்து ஒருவர் உண்டானார். அவர் பிரம்மாவுடன் "ஏ பிள்ளாய்சிருஷ்டியை உண்டுபண்ணு" என்று சொன்னார். அதற்கு "நான் உன் பிள்ளையில்லை" யென்று பிரம்மா பதிலளித்தார். "நீதான் என் பிள்ளை" என்றார். இருவருக்கும் தர்க்கம் ஆரம்பமாய் 1000 தேவவருடங்கள் பரியந்தம் ஜலத்தில்சண்டை நடந்தது. அப்பொழுது மகாதேவன் தான் சிருஷ்டிக்கென்று அனுப்பின இருவர்களும் சண்டைசெய்து கொண்டிருப்பதை அறிந்தார். அப்பொழுது அவர்களிருவரிட மிருந்தும் லிங்கம் ஒன்று தோன்றி ஆகாசத்தை நோக்கிற்று. அதைக் காண இவருக்கும் ஆச்சரியமாய் அதனுடை திருமுடியையும் திருவடியையும் காண ஆவலுள்ளவர்களாய் இம்முடிவிற்கு வந்தார்கள். திருமுடியை சீக்கிரமாய் அறிந்துவருகிறவன் தகப்பன் என்றும் கடைசியாய் வருகிறவன் பிள்ளை யென்றும் நிச்சயஞ்செய்து கொண்டார்கள். விஷ்ணுகூர்மாவாதரமெடுத்து கீழேசென்றார். பிரம்மா அன்னபக்ஷி அவதாரமெடுத்து மேலேபறந்தார்.

இருவரும் மனோவேகமாய் சென்றார்கள். 100. தேவ வருடங்கள் சென்றும் திருவடியையும் திருமுடியையும் காணவில்லை. அப்பொழுது கீழே

யிருக்கும் விஷ்ணுவும், மேலேயிருக்கும் பிரம்மாவும் "முன்னால் தெரிந்து கொண்டு போனால் எனக்குப்பிள்ளையாவான்" என யோசித்தார்கள். பிரம்மா இவ்வித ஆழ்ந்த யோசனையிலிருக்குங்கால் ஒரு பசுவும் தாழம்பூவும் மேலேயிருந்து கீழே விழுந்துகொண்டிருந்தது. எங்கிருந்துவருகிறாய் என்று வினவ அவைகள் லிங்கத்தினுடைய திருமுடியிலிருந்து வருகிறோம், ஆயிரம் வருஷமாச்சுது என்றது. பிரம்மா லிங்கத்திற்கு ஆரம்பம் முடிவு உண்டா இல்லையா வென்று கேட்டார். அவைகள் முடிவற்றது என்றது. என் கூடவந்து லிங்கத்தினுடைய முடியில் பால் தாரை வர்ஷிக்கிறதென்றும் பூமாரிபொழிகிறதென்றும் சாட்சிசொன்னால், உங்களுக்கு இளைப்பாருதல் அளிப்போம்" என்றார். அதற்கு அவைகள் பொய்சாட்சிசொல்ல முடியாதென்றது. பிரம்மா உடனே சினங்கொண்டு "அடா சாட்சியங்கொடுக்காவிடில்இக்கணமே எரித்துச் சாம்பலாக்கி விடுவேன்" என்றார். அவைகளிரண்டும் பயந்து நீங்கள் விரும்புகிற விதமே கூறுவோம் "என்றது. பிறகு எல்லோரும் கீழேவந்தார்கள். விஷ்ணு முன்னமேயே வந்திருந்தார். பிரம்மாவும் வந்து திருவடியைக் கண்டீர்களா வென்று வினவ, நான் காணவில்லை என்றார் விஷ்ணு. உடனே பிரம்மா "நான் பார்த்துவந்திருக்கிறேன்" என்றார். சாட்சியார் என்று விஷ்ணு கேழ்க்கவே பசுவும் புஷ்பமும் நாங்கள் லிங்கத்தின் சிகரத்திலிருந்தோம் என்றது. அப்பொழுது லிங்கத்திலிருந்து ஒரு ஒலி தோன்றி நீ பொய் சொன்னதினால் உன்னுடைய மடலை என்னுடைய அல்லது வேறுதேவர்களுடைய பூஜையில் உலகத்தில் உபயோகிக்க மாட்டார்கள் என்றும், பூஜை செய்கிறவர்களுக்கும் நாசமேற்படும் என்றும்,சபித்தது. பொய்சொன்ன முகமானது மலமாயவிட்டதென்றும் அதனால் மலத்தைச் சாப்பிடவேண்டும் என்றும் *பசுவையும் சபித்தது. நீபொய் சொன்னதினால் உன்னுடைய பூஜையை உலகில் யாரும்செய்யமாட்டார்கள் என்று பிரம்மாவைச் சபித்தது. உண்மையை உரைத்ததினால் எங்கும் பூஜிக்கப்படுவாயென்று விஷ்ணுவைத் துதித்தது. அதன்பிறகு லிங்கத்தைப் பிரம்மாவும் விஷ்ணுவும் துதித்தார்கள். துதிக்கவே சடைமுடியுடன் கூடின ஒருவர் லிங்கத்திலிருந்து வெளிவந்து நான் சிருஷ்டி செய்ய அனுப்பினேன். ஏன் சண்டை செய்து கொண்டிருக்கிறீர்களென்றார் ? சாமான்களன்னியில் சிருஷ்டிசெய்ய முடியாதென்று பிரம்மாவும் விஷ்ணுவுங் குறைகூறினார்கள். அப்பொழுது மகாதேவர் தன்னுடைய சடைமுடியிலிருந்து சாம்பலை எடுத்து இதைக்கொண்டு சிருஷ்டி செய்யுங்கள் என்றார்.

சிருஷ்டிதத்துவமும் பஞ்ச பூதங்களும் இல்லாத காலத்தில் பிரம்மா விஷ்ணு மகாதேவனுடைய சரீரம், சமுத்திரம், தாமரை, லிங்கம், பசு, சாம்பல் முதலானவைகள், எங்கிருந்துஉண்டாச்சுதென்று புராணஞ் செய்தவர்களைக்கேழ்க்கவேண்டும்? அது அவர்களுடைய தாதா வீட்டிலிருந்து வந்ததா ?

பாகவதத்தில் சொல்லும்வண்ணம் விஷ்ணுவினுடைய நாபியிலிருந்து தாமரை, தாமரையிலிருந்து பிரம்மா, பிரம்மாவினுடைய கால்பெருவிரலிலிருந்து

* உன்முகத்தையாரும் வணங்கமாட்டார்கள் வாலையே வணங்குவார்கள்.

ஸ்வயம்புவர், இடதுகால் பெருவிரலிலிருந்து ராணிசத்தியரூபி, அவளுடைய நெற்றியிலிருந்து அத்திரி, மரீசி, முதலிய பத்துமக்கள், அவர்களிடமிருந்து பத்துபிரஜாபதிமுறையே உண்டாகி அவர்களுடைய பதின்மூன்றுபெண்களுக்கும் கலியாணம் காசியபருடன் நடந்தேறியது. அவர்களில் திதியிலிருந்து தைத்யனும், தனுவிலிருந்து தானவனும், அதிதியிலிந்து ஆதித்தியனும், விநிதியிலிருந்து பக்ஷிகளும், கத்ருவினால் சர்ப்பமும், ஸரமாவினால் நாய் நரி முதலானவைகளும் இன்னும் மிகுதியான பெண்களிலிருந்து யானை குதிரை, ஒட்டகம், கழுதை, எருமை, புல், முள், மரங்கள் முதலானவைகள் உண்டானதென்றும் சொல்லப்படுகின்றன. சபாஷ்! பாகவதத்தைச்செய்த நொண்டிவிளையாட்டுக்காரர்களே! உங்களிடம் என்னவென்று சொல்வது. இவ்விதப்பொய்வார்த்தைகளை எழுதுவதில் உங்களுக்கு நாணம் தோன்றாமல் போய்விட்டதே. ஸ்திரீ புருஷ ரஜவீரிய சேர்க்கையினாலேயே மானிடப் பிறப்புண்டாகும். பரமேச்வரனுடைய சிருஷ்டித்தன்மைக்கு எதிரான பசு பட்சி சர்ப்பம் முதலானவைகள் எக்காலமும் உண்டாகாது. யானை, ஒட்டகம் சிங்கம், நாய் கழுதை, மரம் செடி, முதலானவைகளைத் தரிக்க ஸ்திரீகளுடைய கர்ப்பத்திற்கு வலிவேது? சிங்கம் முதலியவைகளுண்டானவுடன் ஏன் தாய் தந்தைகளை அடித்து விழுங்கவில்லை? மானிடசரீரத்தினால் பசுபட்சி மரஞ்செடிகள் எவ்விதம் உண்டாகும்? அசம்பாவிதமான இல்லீலைகளினுடைய மாயையில் இது வரையில் ஜனங்கள் ஏமாந்திருந்ததே வருத்தத்திற்கு இடமாயிருக்கிறது. பெருங் குருடர்களான போப்களும் அகக்கண் புறக்கண் இவ்விரண்டும் குருடர்களான அவர்களுடைய சீடர்களும் இப்பொய்கட்டுரைகளை நம்புவதே விந்தை. அவர்கள் மனித பிறப்பா அல்லது வேறு ஏதாவதா? பாகவதம் முதலிய புராணங்களெழுதினவர்கள் கர்ப்பத்திலேயே அல்லது பிறந்தவுடனேயே ஏன் நாசமாயிருக்கக் கூடாது? ஏனெனில் இப்போப்க்கள் பிழைத்திராமலிருந்தால் ஆரியவர்த்தநாடு இருள், துக்கம் இவைகளில் லயப்பட்டிராது.

வினா:—இவைகள் மாறுபட்டதல்ல. எம்மணவாளனுக்குக் கலியாணமோ அம்மணவாளனையே புகழுகிறார்கள். விஷ்ணுவைத் துதிக்குங்கால் விஷ்ணுவையே பரமேச்வரனாகவும், மற்றவர்களைத் தாசனாகவும், சிவகுணங்களைச் சொல்லுங்கால் சிவனைப்பரமாத்மாவாகவும் மிகுதியானவர்களை வேலைக்காரனாகவும், அறிகிறார்கள். பரமேச்வரனுடைய மாயையினாலேயே எல்லாம் செய்யப்படுகிறது. மானிடப்பிறப்பை பரமேச்வரனால் செய்யமுடியும். பாருங்கள் காரணமன்னியில் தன்னுடைய மாயையைக்கொண்டே சகல சிருஷ்டியையும் செய்திருக்கிறார். அவரால் ஆகாதது ஒன்றுமில்லை. வேண்டுமென்று நினைப்பதைச் செய்கிறார்.

விடை:—ஓ! பேதை ஜனங்களே!! கலியாணத்தில் யாருடைய மேன்மையைப்புகழுகிறார்களோ அவனை எல்லோரையும் விட அதிகமாகவாவது அல்லது இதரர்களைவிட இழிவாகவாவது அல்லது தூஷணையாகவாவது அல்லது எல்லோருக்கும் தகப்பனாகவாவது செய்கிறதில்லை. ஏ போப்புகளே இச்சகம் பேசு

கிறவன் கோமாளி இவர்களைவிட அதிகமானது உங்களுடைய பெரும்புரட்டே. நீங்கள் பின்பற்றுகிறவனை எல்லோரையும் விட உயர்ந்தவனும் விரோதமானவனைத் தாழ்ந்தவனும் செய்வீர்களானால் சத்தியத்தினாலும் தர்மத்தினாலும் உங்களுக்குயாது பிரயோஜனம்? நீங்கள் சுய காரியப்புலிகளே! மனிதனிடத்திலே மாயை குடிக்கொண்டிருக்கிறது. வஞ்சகம், பேசுகிறவன் கபடமுள்ளவன், இவர்களையே மாயாவி என்பார்கள். பரமேச்வரனிடத்தில் பொய் வஞ்சகம், முதலான தோஷங்களில்லாதபடியினால் அவரை மாயாவி எனமுடியாது. ஆதி சிருஷ்டியில் காசியபரும் அவருடைய மனைவிக்கும் பசு பட்சி சர்ப்பம் மரஞ்செடி முதவியவைகள் உண்டானால் இக்காலத்திலும் அவ்விதப் பிறப்புகள் ஏன் உண்டாகிறதில்லை? சிருஷ்டி தன்மையைப்பற்றி முன்சொன்னதே (எட்டாவது அத்தியாயம்) சரியானது. அவைகளைத் தப்பர்த்தம் பண்ணினதினாலேயே போப்க்கள் மேற் கண்டபிதற்றலுக்கு ஆளானார்கள்.

**तस्मात् काश्यत्य इमाः प्रजाः ॥** சதபத. 7. 5. 1. 5

சதபதத்தில் சகல சிருஷ்ட்டியையும் காச்யபரே உண்டுபண்ணினாரென்றிருக்கிறது.

**कश्यपः कस्मात् पश्यको भवतीति ॥** நிருக்தம். 2.2.

சிருஷ்ட்டி கர்த்தாவாகிய பரமேச்வரனுக்குக் காசியபர் என்றபெயர் இக்காரணத்தினால் வந்தது.

**पश्यतीति पश्यः पश्य एव पश्यकः ।**

எவர் பிரளய மன்னியில் சராசர ஜகத்திலுள்ள சகல ஜீவராசிகள் இவைகளுடைய கர்மம் வித்தை முதலானவைகளை உள்ளவாரே பார்க்கிறாரோ அவரே, பஸ்யகர், பார்க்கிறவர். "அத்யாந்தவிபர்யஸ்சா" இம்மகாபாஷ்யத்தின் பிரகாரம் முதலெழுத்துகடைசியிலேயும் கடைசிஎழுத்துமுதலிலேயும் மாறிப்போவதினால். "பஸ்யக" என்பதைக் "கஸ்யப" என்று செய்தார்கள். இதனுடைய பொருளை அறியமாட்டாமல் கஞ்சா கஷாயத்தைக் குடித்து சிருஷ்ட்டித் தன்மைக்குத்தர்க்கம் பண்ணுவதிலேயே விணுக்கினார்கள்.

### மார்க்கண்டேய புராணமும் சிருஷ்டியும்.

மார்க்கண்டேய புராணத்தினுடைய துர்க்காபாடத்தில் கூறும் வண்ணம் தேவர்களுடைய சரீரத்திலிருந்து ஒரு ஒளி உண்டாய், அதிலிருந்து ஒரு தேவி உண்டானாள். அவளே மகிஷாசுரனை யடித்தாள். இரத்தபீஜனுடைய சரீரத்திலிருந்து ஒருதுளி ரத்தம் பூமியில் விழுந்ததினால் அவனுக்குச் சரியான இரத்தபீஜர்கள் உண்டானார்கள். அதிலிருந்து உலகம் முழுவதும் இரத்தபீஜர்கள்நிறைந்து விட்டார்கள். இரத்தநதியும் ஓடிற்று. இம்மாதிரியான நாய் பூனைக் கதைகளினால் இப்புத்தகம் நிறைந்திருக்கிறது. உலகமுழுவதும் ரத்தபீஜர்கள் நிறைந்துபோனால் தேவி, அவளுடையசிங்கம், சேனை, இவைகளெல்லாம்எங்கேயிருந்தது? தேவியிலிருந்து ரத்தபீஜன் தூரத்திலிருந்தானென்றால் சகல உலகம்முழுவதிலும்அவர்கள் நிறைந்திருக்க முடியாது? அப்படி நிறைந்திருக்குமே

யானல் பசு, பட்சி, மனிதன், மிருகம், முதலான அறிவுள்ளவைகளும் நிலம் முதலியவைகளெல்லாம் எங்கேயிருந்தது?

ஸ்ரீமத்பாகவதம் என்று சொல்லப்பட்டதினுடைய லீலையைக் கூறுவோம். கேளுங்கள் பிரம்மாவிற்கு நாராயணன் உபதேசித்ததாவது.

**ज्ञानं परमगुह्यं मे यद्विज्ञानसमन्वितम् ।**
**सरहस्यं तदङ्गञ्च गृहाण गदितं मया ॥** பாக. ஸ்க 2. அத் 60. சுலோ. 30.

ஏ"பிரம்மாவே! ரகசியமாக தர்மார்த்தகாமமோட்சத்தின்பாகமாகியமறைபொருளான ஞானம் விஞ்ஞானம் இவைகளை என்னிடமிருந்து அறி" ஞானத்தினுடைய குணத்தைச் சுட்டிக்காட்ட வேண்டியதவசியமில்லை. மறைபொருள் ஞானத்திற்கு மறுபடியும் இரகசியம் என்று சொல்லுவது கூறியது கூறுதலாகிறது. முதல் சுலோகமே அர்த்தமில்லாமல் கோணலாயிருக்கும் பொழுது மூற்றுங்கோணலாய் ஏனிருக்கக்கூடாது? நாராயணன் பிரம்மாவிற்கு வரம் அளித்ததாவது.

**भवान् कल्पविकल्पेषु न विमुह्यति कर्हिचित् ॥** பாக 2. 9. 36.

சிருஷ்ட்டி சக்கரத்திலும் பிரளயநாசத்திலும் ஏய்க்கப்படமாட்டாய் என்றார். இம்மாதிரி எழுதி மறுபடியும் பத்தாவது ஸ்கந்தத்தில் மோகத்திலகப்பட்டு செங்கன்றைத் திருடினார் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இவ்விரண்டிலும் ஒன்று உண்மையாகவும் மற்றொன்று பொய்யாகவும் இருக்கவேண்டும். வைகுண்டத்தில் ஆசை, பொறாமை, கோபம், பேராசை துக்கம்கிடையாது. இருந்தும் சனகசகோதரர்கள் வைகுண்டவாயிலில் கோபம் செய்துகொள்ளுவானேன்? கோபமுள்ளவிடமாக சுவர்க்கம் எப்படியிருக்கும்? ஜயவிஜயர்கள் வாயிற்காப்போர்களாயிருந்து எஜமானனுடைய கட்டளையைக் காப்பாற்ற வேண்டியவர்களானதினால் சனகசகோதரர்களைத்தடுத்தது எவ்விதம் தப்பாகும்? அவர்கள் குற்றமற்றவர்களானதினால் அவர்களைப் புகழவும்முடியாது. இகழவும் முடியாது. ஆனல்பூமியில் விழுந்துவிடு என்று சபித்தார்கள். அங்கு பூமியில்லாமல் ஆகாசம் வாயு, அக்கினி, ஜலம், இவைகளே இருந்ததென்று இவர்கள் விழுந்ததிலிருந்து வெளிச்சமாகிறது. நிலத்தினுடைய ஆதரவன்னியில் வாசற்படி நந்தவனம், முதலானவைகள் எப்படியிருந்தது? ஜயவிஜயர்கள் சனகசகோதரர்களை வேண்டிக்கொண்டதாவது. ஓ! பிரபுவே நாங்கள் திரும்பவும் வைகுண்டத்திற்கு எப்பொழுது வரக்கூடும். அதற்கு அவர்கள் நேசப்பான்மையுடன் நாராயணனுக்குப் பக்திபாராட்டினல் ஏழாவது பிறப்பிலும், விரோதப்பான்மையுடன் பக்திபாராட்டினல் மூன்றாவது பிறப்பிலும் வைகுண்டத்தையடைவீர்களென்றார். இதில் யோசனை செய்ய வேண்டியதன்னவெனில், ஜயவிஜயர்கள் நாராயணருடைய சேவகர்கள். அவர்களைக்காப்பாற்றி உதவிசெய்ய வேண்டியது நாராயணனுக்குஏற்பட்டவேலை. காரணமன்னியில் தன் சேவகர்களுக்குத்தண்டனையும் துக்கத்தையுங்கொடுக்குங்காலத்தில் எஜமானன் அவர்களைத்தண்டிக்காவிடில் அவ்வேலையாட்களை எல்லோரும் துன்புறுத்துவார்கள். ஜய

விஜயர்களை மரியாதைசெய்து சனக சகோதரர்களுக்கு தக்ஷிணை அளித்திருக்கவேண்டும். ஏனெனில் உள்ளே வர ஏன் பிடிவாதம்செய்யவேண்டும்? வேலையாட்களுடன் ஏன் வீண் சண்டை செய்து சாபத்தையளிக்கவேண்டும். அவர்களுக்குப்பதிலாக சாபத்தையளித்து சனகசகோதரர்களை பூமியில் தள்ளியிருக்கவேண்டும். நாராயணனுடைய வாசத்திலேயே இவ்வளவு ஊழல்களிருக்குமேயானால் அவருடைய சேவர்களென்று அழைத்துக்கொள்ளும் வைணவர்கள் கஷ்டப்படுவது கொஞ்சமேயாகும். பிறகு அவர்கள் ஹிரணியாக்ஷன் ஹிரணியகசிபன் என்பவர்களாகப் பிறந்தார்கள். அவர்களில் ஹிரண்யாட்சனை வராகாவதாரத்தில் கொன்றார். அக்கதையின் விவரமாவது.

பூலோகத்தைப் பாயாகச் சுற்றி தலையணிவைத்துக் கொண்டுத் தூங்கினான். விஷ்ணு வராகாவதாரமெடுத்து தன் கொம்புகளினால் அவன் தலையின் கீழிருந்து பூமியைத்தூக்கினார். அவன் விழித்தெழுந்ததும் இருவருக்கும் சண்டை உண்டாகி அதில்வராகம் ஹிரண்யாக்ஷனைக் கொன்று விட்டது. பூமி உருண்டை வடிவமானதா அல்லது பாயைப்போல் மட்டமானதா வென்று இவர்களை வினவவேண்டும். அவர்களால் பதில் சொல்லமுடியாது. ஏனெனில் புராணிகர்கள் பூகோள சாஸ்திரவிரோதிகள். பூமியைப் பாயாகச் சுற்றித்தலையில் எடுத்துக்கொண்டு போனகாலத்தில் அவன் எதின் பேரில் தூங்கினான்? வராகம் எதன்பேரில் காலடிகளைவைத்துக்கொண்டு வந்தது? தன்னுடைய முகத்தில் வராகம் பூமியைத் தாங்கிநின்றபொழுது எதன் பேரில் நின்றுகொண்டு இருவரும் சண்டை செய்தார்கள்? அவர்களுக்கு ஆதாரம் ஒன்றுமில்லையே. பாகவதபுராணத்தைச்செய்த போப்பினுடைய மார்பில் நின்று சண்டை செய்தார்களோ என்னமோ? அப்பொழுது போப் எதில் படுத்துத்தூங்கினர். இதுஒருபுரட்டன் வேறொரு புரட்டனிடம் வந்து, ' ஐயா பொய் சொல்லுகிறவரே', என்பதுபோலிருக்கிறது. பொய் பேசுகிறவர்களுடைய வீட்டிற்குப் புரட்டுச் செய்கிறவன் வந்தால் வீண் பொய்க்குக்குறைவு முண்டோ ?

ஹிரண்யகசிபுவிற்குப் பிரகலாதன் என்ற ஒருபிள்ளை யிருந்தான். பக்தனயிருந்தான். அவனைப்படிக்கத்தகப்பனர் பாடசாலைக்கனுப்பினர். உபாத்தியாயரை அப்பொழுது தன் பலகையில் நாராயணா நாராயணா வென்றுஎழுதிக்கொடுக்கச்சொன்னன். இதையறிந்த தகப்பன் என்சத்துருவின் பெயரை ஏன்சொல்லுகிறாய் என்றார்? பையனே அதைச்சொல்லுவதிலிருந்து தயங்கவில்லை. அப்பொழுது கைகால்களை இருக்கக்கட்டி மலைமேலிருந்து கீழேஉருட்டிவிட்டார்கள். கிணற்றில் தள்ளிவிட்டார்கள். ஆனல் பையனே பாதிக்கப்படவில்லை. இரும்புத்தூண் ஒன்றைப் பழுக்கக்காய்ச்சின பிறகு உன்னுடைய இஷ்டதேவதையான நாராயணன் உண்மையானல் இதைத்தொடுவதினால் உனக்குச்சூடுண்டாகாது என்றான். பிரகலாதன் அதைத்தொடப் போனான் உடனே தன்னைப்புண்படுத்திவிடுமோவென்றசந்தேகம் உதித்தது. நாராயணன் சிறிய எறும்புகளை அதில்புகவிட்டார். அதைக்காணவும் அவன் சந்தேகம்தீர்ந்

தது. அதைத்தொடபோனான். அப்பொழுது தூண் இரண்டாகவெடித்து, அதி லிருந்து பாதிமனிதன் பாதிசிங்கமுமான **நரசிம்மர்** வந்து தகப்பனைப் பிடித்து வயிற்றைக் கிழிக்கவே இறந்துவிட்டான். பிறகு பிரகலாதனைத் தடவிக்கொடுத்து வேண்டியதைக்கேள், என்றார். அவன் தன் தகப்பனாரின் நற்கதியை வேண்டினான். இருபத்தியொன்று தலைமுறையைச் சேர்ந்த உன் உறவினர்கள் நற்கதியை அடைவார்களென நரசிம்மர் வரமளித்தார். இப்பொழுது கவனியுங்கள். அதைப்போலவே இதுவும் ஆதாரமற்ற வெரும் புரட்டே. பாகவதம் படிக்கிறவர்களை யாவது மலைமேலிருந்து கீழே உருட்டவேண்டும். இக்கதை உண்மையானால் காயமன்னியில் அவன் கீழேவிழவேண்டும். உண்மையாக என்னவாகுமென்பது நமக்குத்தெரியும். எந்நாராயணனும் அவன் உதவிக்குவரமாட்டான். அவனும் துண்டுதுண்டாகச் சிதறிப்போய் விடுவான். பள்ளிக்கனுப்பினதில் தகப்பன் தப்பு ஒன்றும் செய்யவில்லை. தான் படிப்பதை விட்டு பைராகியாக வேண்டு மென்கிற பெரும் முட்டாளாயிருந்தான் பிரகலாதன். பழுக்கக்காய்ச்சின இரும்பில் எரும்புஓடி பிரகலாதன் அதைத்தொட்டும் எரிந்துபோகவில்லை யென்று நம்புகிறவர்களைப் பழுக்கக்காய்ந்த இரும்புத்தூணைக் கட்டிக்கொள்ளச்செய்ய வேண்டும். அவன் காயப்படாமலிருந்தால் பிரகலாதனும் கஷ்டப்படாமலிந்திருக்கலாமென்று நம்பலாம். மேலும் நரசிம்மனே ஏன் எரிந்துபோக வில்லை? அவர்களுடைய மூன்றாவது பிறப்பில் **சனக சகோதரர்கள்** வைகுண்டத்தையடைவார்கள் என்று கொடுத்த வரனை உன்னுடைய நாராயணன் மறந்து விட்டாரா? பாகவதத்தில் சொல்லும் வண்ணம்பிரம்மா, பிரஜாபதி, காச்யப, ஹிரண்யாக்ஷன், ஹிரண்ய கஸ்யனுமே. ஆகையினால் நான்காவது தலை முறையில்பிரகலாதனாக உண்டானான். இருபத்தி யொன்றாவது தலை முறையிலுண்டாக வில்லை. அவனுடைய 21 தலை முறைக்காரர்கள் நற்கதியை யடைந்தார்களென்பதுஎவ்வளவு முட்டாள்த் தனமாகும். அதே ஹிரண்யாக்ஷன் ஹிரண்யகச்யபன், ராவணன், கும்பகர்ணன், சிசுபாலன், தந்தவக்கிரன், முதலானவர்களாகப் பிறந்தார்கள். பிரகலாதனுக்கு நரசிம்மன் கொடுத்தவரம் என்ன வாச்சுது? அறிவீனர்களே அறிவில்லாத இவ்வார்த்தைகளை நம்புவார்கள் படித்து புத்தியுள்ளவர்கள் நம்பமாட்டார்.

## பூதனை.

**रथेन वायुवेगेन ॥** பாகவதம் 10. 39. 83.
**जगाम गोकुलं प्रति ॥**

கம்சனால் கோரப்படவே **அக்ரூரர்** வாயுவேகத்துடன் ஓடுகிற குதிரை கட்டின ரதத்திலுட்கார்ந்து சூரிய உதயத்திலிருந்து பிரயாணமாய் மத்துராவிலிருந்து நான்குமைல் தூரத்திலுள்ள கோகுலத்தைச் சாயந்திரம் அடைந்தார். பாகவதம் செய்தவரைச் சுற்றிச் சுற்றியே குதிரை வந்திருக்க வேண்டும் அல்லது வழி தப்பி பாகவதம் செய்தவருடைய வீட்டில் கம்சனுடன் தூங்கப் போயிருக்கவேண்டும். பூதனையுடைய சரீரம் 8 மைல் நீளமுள்ளதாகவு பலமைல்கள் அகலமுள்ளதாகவுமிருந்ததாக எழுதப்பட்டிருக்கிறது. அவளைக்

கொன்று சரீரத்தை மத்துராவிற்கும் கோகுலத்திற்கும் நடுவில் வைத்தார். இது உண்மையானால் இவ்விரு பட்டணங்களும் போப்க்களுடைய வீடும் (அவனுடைய சரீரத்தின்) கீழ் புதைந்து போயிருக்கும்.

அஜாமேல் கதை இவ்விதமிருக்கிறது. முழுப் பொய்யான இது இவ்விதம் எழுதப்பட்டதோ. நாரதர் சொன்னதின் பேரில் தன்பிள்ளைக்கு நாராயணன் என்று பெயர் வைத்தான். தான் இறக்குந்தருவாயில் பெயரைச் சொல்லி பிள்ளையை அழைத்தான். தன் பிள்ளைக்குப் பதிலாக நாராயணனே (திருமால்) வந்தார். பிள்ளையைக் கூப்பிடுகிறுன் தன்னை யல்லவென்று நாராயணனுக்கு அவனுடைய அந்தக்கரணபாவத்தை யறிய முடியாதா? நாமமகிமையே இவ்வளவு யிருக்கும் பொழுது இப்பொழுது நாராயண ஸ்மரணை செய்கிறவர்களுடைய துக்கங்களைத் தீர்ப்பதிற்கு ஏன் வருகிறதில்லை.

இப்படியே சுமேருமலையினுடைய சுற்றளவும் வான சாஸ்திரத்திற்கு விரோதமாயிருக்கிறது. பிரயலி[illegible] ராஜனுடைய ரதத்தின் அடிச்சுவடுகளினால் சமுத்திரம் உண்டாச்சுது. [illegible] கோடி யோஜனை தூரமிருக்கிறது பூமி. இவ்விதப் பொய்க் கதைகள் பாகவதத்திலிருக்கின்றன. அவைகளுக்கு எண்ணிக்கையில்லை.

### பாகவத ஆசிரியர்.

இப்பாகவதத்தைச் செய்தவர் போப (बोव) தேவர். அவருடைய சகோதரர் கீதகோவிந்தத்தை இயற்றிய ஜயதேவர். தன்னுடைய நூலான "ஹிமாத்ரியில்" தானே ஸ்ரீமத்பாகவதம் முதலானவைகளைச் செய்தவரென்று சுலோகஞ் செய்திருக்கிறுர். அது எழுதியிருந்த மூன்று ஏட்டுப் பிரதிகளிருந்தன. ஒன்று இழந்துபோய்விட்டது. இழந்து போனதிலுள்ளவாரே கருத்துள்ள கீழ்க்கண்ட இரண்டு சுலோகங்களைச் செய்திருக்கிறோம். இவைகளை நிச்சயம் செய்துகொள்ள விரும்புகிறவர்கள் ஹிமாத்ரியைப் பார்க்கவேண்டும்.

हिमाद्रेः सचिवस्यार्थे सूचना क्रियतेऽधुना ।
स्कन्धाऽध्यायकथानां च यत्प्रमाणं समासतः ॥
श्रीमद्भागवतं नाम पुराणं च मयेरितम् ।
विदुषा बोवदेवेन श्रीकृष्णस्य यशोन्वितम्

பிரதமமந்திரியான ஹிமாத்திரி,பண்டிதபோபதேவருடன் சென்னதாவது நீ செய்த ஸ்ரீமத் பாகவதத்தைப் படிக்கவும் கேழ்க்கவும் எனக்கு ஒழிவு நேரமில்லை. படித்துபாகவதத்தை அறிந்து கொள்ளுமாறு சுறுக்கமாய் சுலோகங்களெழுது என்றுர். இழந்துபோன ஏட்டில் பத்துசுலோகங்களிருந்தன. பதினொன்றிலிருந்து ஆரம்பமாகும் கீழ்க்கண்டவைகளெல்லாம் போபதேவராலேயே செய்யப்பட்டது.

बोधन्तीयि हि प्राहुः श्रीमद्भागवतं पुनः । पञ्च प्रश्नाः शौनकस्य सूतस्यात्रोत्तरं त्रिषु ॥
प्रश्नावतारयोश्चैव व्यासस्य निर्वृतिः कृतात् । नारदस्यात्र हेतूक्तिः प्रतीत्यर्थं स्वजन्म च॥

सुतघ्नं द्रौण्यभिभवस्तदस्त्रात्पाण्डवा वनम् । भीष्मस्य स्वपदप्राप्तिः कृष्णस्य द्वारिकागमः॥
श्रोतुः परीक्षितो जन्म धृतराष्ट्रस्य निर्गमः । कृष्णमर्त्यत्यागसूना ततः पार्थमहापथः ॥
इत्यष्टादशभिः पादैरध्यायार्थः क्रमात् स्मृतः । स्वपरप्रतिबन्धोनं स्फीतं राज्यं जहौ नृपः॥
इति वैराज्ञो दाढर्योक्तौ प्रोक्ता द्रौणिजयादयः ।

பன்னிரண்டு புத்தகங்களுடைய சுருக்கம் போபதேவரால் செய்யப்பட்டு பிரதமமந்திரி ஹிமாத்ரிக்குக் கொடுக்கப்பட்டது. இவைகளுடைய விவரம் அறியவிரும்புவோர்கள் ஹிமாத்ரிஎன்ற பெயருடைய நூலைப் பார்க்கவேண்டும்.

இவ்விதமான பாசாங்குகள் இதரபுராணங்களிலும் இருக்கின்றன.

மகாபாரதத்திலிருக்கிற ஸ்ரீகிருஷ்ணனுடைய ஜீவியசரித்திரம் மிகவும் சிலாகிக்கத் தகுந்ததாயிருக்கிறது. அவருடைய குணகர்ம சுவபாவங்களெல்லாம் ஆப்தர்களுடையதைப் போலிருக்கிறது. தன் வாழ்நாள்முழுவதிலும் தீச்செயல்ஒன்றையும்செய்ததாகக் காணப்படவில்லை. பாகவத ஆசிரியரோ எவ்வளவுகெடுதல்களையும் பாபங்களையும் சேர்க்கவேண்டுமோ அவ்வளவையும் சேர்த்திருக்கிறார். பால் தயிர் வெண்ணெய் முதலியவைகளைத் திருடினதாகவும் குப்ஜஎன்னும் தாசியுடன் சேர்ந்ததாகவும், பரத்தையருடன் ஜலக்கிரீடையும், புரலீலையும் செய்ததாகவும் முதலானபொய்களையும் தோஷங்களையும் சுமற்றியிருக்கிறது. இதைப்படித்தும்படிக்கக்கேட்டுமிருக்கிற பிறமதக்காரர்கள் நம்மைகுறைகூறுகிறார்கள். பாகவதமில்லாமலிருந்தால் கிருஷ்ணனைப் போன்ற மகாத்மாக்களுக்கு என்னவிதமாகப் பொய்தூஷணை உண்டாயிருக்கக் கூடும்?

சிவபுராணத்தில் பன்னிரண்டு ஜோதி லிங்கங்கள் உண்டு எனச் சொல்லப்படுகிறது. இந்தலிங்கங்களில் ஜோதியொன்றையுங்காணோம். இரவில் விளக்கு வெளிச்சமன்னியிலும் காணமுடியாது. இவைகளெல்லாம் போப்களுடைய சூழ்ச்சியே தவிர வேறு ஒன்றுமில்லை.

வினா :--வேதங்களை ஓதச்சக்தியில்லாத பொழுது ஸ்மிருதியும், ஸ்மிருதியைப் படிக்கச்சத்தியில்லாதபொழுது சாஸ்திரமும், சாஸ்திரம் படிக்கவலிவில்லாத பொழுது புராணங்களும், செய்யப்பட்டது. கேவலம் ஸ்திரீசூத்திரர்களுக்கே அது. ஏனெனில்வேதங்களை ஓதவும்கேழ்க்கவும் இவர்களுக்கதிகாரங் கிடையாது.

விடை :—இதுபொய்யே. ஏனெனில் படிக்கும்சக்தி படிக்கச்செய்வதினலேயேவரும். வேதங்களை ஓதவும்கேழ்க்கவும் சகலமானவர்களுக்கும் அதிகாரமுண்டு. பாருங்கள் சரித்திரமே அதற்குத்தக்க சாட்சியாகும். கார்கிமுதலான பெண்மணிகள் சாந்தோக்கிய உபநிஷத்தில் வேதங்களை ஓதினதாகவும் பிறப்பினுல் சூத்திரனை ஜானசுருதியும் கூட ரைக்யமுனியிடம் வேதம்படித்ததாகவும் இருக்கிறது. மேலும் யஜுர் வேதம் 26 அத்தியாயம் இரண்டாவது மந்திரத்திலே ஜாதிவேற்றுமை யன்னியில் ஓதலாம், கேழ்க்கலாம் என்றிருக்கிறது. இவ்விதப் பொய்க்கிரந்தங்களைச்செய்து ஜனங்களை

மெய்யானவைகளிலிருந்து திருப்பித்தன்னுடைய உபயோகத்திற்காகப் பிர யோஜனப்படுத்துக்கொள்ளுகிறவர்கள் ஏன்மகாபாபிகளாக மாட்டார்கள்?

வித்தையில்லாத புருஷர்களை விழுங்குகிற கிரகச்சக்கரம் எப்படியிருக் கிறதென்று பாருங்கள். (1) ஆகிருஷ்ணேன ரஜஸா, சூரிய மந்திரமாம் (2) இமம் தேவா அஸபத்வைசுவத்வம். சந்திரனுடையதாம் (3) அக்னிர்மூர்த்வா திவ: ககுத்பதி: செவ்வாயுடையது (4) உத்புத்ய ஸ்வாக்னே. புதனுடையது. (5) பிரகஸ்பதே அதிய தர்யே பிரகஸ்பதி யுடையது. (6) "சுக்ரமன்தஸ:" சுக்கிரனுடையது. (7) "சன்னோ தேவீ ரபீஷ்டயே" சனி (8) "கயா நஸ்சித்திர ஆபுவ. ராகு (9) கேதும் கிருண் உன்னகேதவே. கேதுவுடையது.

இவ்வார்த்தைகளெல்லாம் பொய்யே, எண்ணிக்கை (1) சூரியன் பூமி இவைகளுடைய இழுக்குந் தன்மையைக்கூறுகிறது. (2) நல்லராஜனுடைய குணத்தைச் சொல்லுகிறது (3) அக்கினி (யுடைய குணகுணங்களை) வருணிக் கிறது. (4) யாகம் செய்யும் எஜமானன் (5) வித்வான்கள், இவர்களுடைய (குணங் களையும் தகுதிகளையும்) சொல்லுகிறது (6) வீரியத்திற்கும் அன்னத்திற்கு முள்ள உறவு (7) ஜலம், பிராணன், பரமேச்வரன் (குணங்களையும் தன்மையயும்) சொல்லுகிறது. (8) (நல்ல) மித்திரனுடைய தகுதிகளைச் சொல்லுகிறது (9) ஞானத்தை அறிவதின் (முக்கியமும் அவசியமும்) மந்திரமாகும்.

இவைகள் கிரகங்களைப்பற்றினவையாகாது. பொருள் அறியாததினு லேயே பிரமை என்னும் வலையில்விழுந்து விட்டார்கள்.

வினு :—கிரகங்களுடைய பலன் உண்டா இல்லையா?

விடை :—போப்லீலைகளிலிருப்பது போலில்லை. சூரியன் சந்திரனுடைய வெப்பம் குளிர்ச்சி அல்லது காலம் முதலானவைகள் நமது பிரகிருதிக்கு அனுகூலமாகவும் பிரதிகூலமாகவுமாகிறது. போப்லீலைகளில் சொல்லுகிறதா வது: தாராளசிந்தையுள்ளவரே! எஜமானனே!! இன்றைக்கு எட்டாவது சந்தி ரன் சூரியன் முதலானவர்கள் கெட்டமடத்திலிருக்கிருர்கள். இரண்டரை வருடம் சனீசுவரன் உங்களுடைய காலைப்பிடித்திருக்கிறது. உங்களுக்குப்பெ ரும் ஆபத்துகள் விளையும். வீட்டைவிட்டு உங்களை அயல்நாடுகளில் அலையச் செய்யும். கிரகத்திற்கு ஜபம், பாடம், பூஜைசெய்யவேண்டும். கிரகத்தின் பெயரால் எங்களுக்கு தானஞ் செய்தால் துக்கங்களெல்லாம் நீங்கிப்போகும். உங்களுக்கும் கிரகத்திற்கும் யாது சம்பந்தம் உண்டென்று இவர்களைக் கேழக்கவேண்டும். கிரகம் என்பதென்ன? இதற்கு அவர்கள் பதிலளிப்பதாவது:

दैवाधीनं जगत्सर्वं मन्त्राधीनाश्च देवताः ।
ते मन्त्रा ब्राह्मणाधीनास्तस्माद् ब्राह्मणदैवतम् ॥

பிரமாணத்தைப் பாருங்கள். தேவதைகளுடைய ஆதீனத்தில் சகலஉலக மும், மந்திரத்தினுடைய ஆதீனத்தில் தேவதைகளும், பிராமணனுடைய ஆதீ னத்தில் மந்திரமும் இருக்கிறது. இதனாலேயே பிராமணனைத் தேவதை என் பார்கள். ஏனெனில் வேண்டிய தேவதையை மந்திரபலத்தினால் வரவழைத்

துப் பிரசன்னமாகச்செய்து காரியங்களை சித்திசெய்துக்கொள்ள எங்களுக்கே அதிகாரமுண்டு. அவ்வளவு மந்திரசக்தி எங்களுக்கில்லாமல் போனால் நாஸ்திகர்கள் எங்களை உலகிலிருக்க விடமாட்டார்கள்.

சத்தியவாதி:—திருடர்கள், கொள்ளைக்காரர்கள், கெட்ட காரியஞ்செய்கிறவர்கள் இவர்களின்பேரில் உங்களுடைய தேவதைக்கு அதிகாரமிருக்கவேண்டும். தேவதைகளே அவர்களைக் கெட்டகாரியஞ்செய்யச் சொல்லவேண்டும். இது சரியானால் உங்களுடைய தேவர்களுக்கும், ராக்ஷசர்களுக்கும் யாதொரு வித்தியாசமும் கிடையாது. உங்களுடைய அதிகாரத்தில் மந்திரமிருந்து அதைக்கொண்டு சகலத்தையும் சாதித்துக்கொள்ள முடியுமேயானால், அம்மந்திரங்களினால் தேவர்களை வசஞ்செய்துக்கொண்டு அரசர்களுடைய கஜானாவை எடுத்துவரச்சொல்லி வீட்டிலுட்கார்ந்து கொண்டு ஏன் ஆனந்தமாயிருக்கக்கூடாது? சனீச்வரன் முதலானவர்களுக்குக் கொடுக்கும் எண்ணெய் தானம் வாங்க ஏன் வீடுவீடாக ஏறிச்செல்லுகிறீர்கள்? குபேரனைக் கைவசஞ்செய்துக்கொண்டு வேண்டிய திரவியத்தை ஏன்வாங்கிக் கொள்ளக்கூடாது? பாடுபட்டுத்தேடிச் சம்பாதித்த ஏழைகளின் பணத்தை ஏன் அபகரிக்கிறீர்கள்? உங்களுக்கு தானம் அளிக்கிறதினால் கிரகங்கள் திருப்தியடைந்தும், அளிக்காததினால் திருப்தியடையாமலும் இருக்கும்பொழுது சூரியாதிகிரகங்களுடைய திருப்தி அதிருப்தி இவைகளை நேரில்கண்டுபிடிக்க முடியுமா? எட்டாம் மடத்து சந்திரன் அல்லது சூரியனுள்ள ஒருவன், மூன்றாவது மடத்திலுள்ள ஒருவன் இவ்விருவர்களையும் ஜியேஷ்ட (வைகாசி ஆனி) வெயிலில் கால் செருப்பன்னியில் வெறும் மைதானத்தில் நடக்கச்சொல்லுங்கள். பார்ப்போம்.

இவர்களுடன் கிரகம் சந்தோஷமாயிருந்தால் இவர்களுடைய சரீரமும் பாதங்களும் வறண்டுபோகாது. சந்தோஷமன்னியிலிருந்தால் வறண்டுபோய் விடும். புஷ்யமாதபௌர்ணமி ராத்திரியில் அவர்களிருவரையும் நிர்வாணமாக நிற்க வைக்கவேண்டும். ஒருவருக்குக்குளிர்ந்தும் மற்றொருவருக்குக்குளிராமலுமிருந்தால் கிரகங்கள் நன்மைசெய்கிறதென்றும் தீமைசெய்கிறதென்றும் ஆகிறது. கிரகங்கள் உங்களுக்கு உறவினர்களா? அவர்களுக்கும் உங்களுக்கும் தபால் தந்திபோக்குவரத்துண்டா? உங்களிடம் மந்திரசக்தி யிருந்தால் நீங்கள் ஏன் தனவானாகவும் ராஜனாகவும் ஆகக்கூடாது? சத்துருக்களை ஏன்உங்கள்வசம் செய்துக்கொள்ளக்கூடாது? வேதங்களுக்கும் ஈச்வரனுக்கும் விரோதமாய் போப்லீலைக்கொண்டவனே நாஸ்திகன். கிரகங்கள் ஒருவனுக்கு நன்மையைத் தருமாறு செய். உங்களுக்குத்தான் தானஞ்செய்யவேண்டுமா? நீங்கள் என்ன கிரகங்களிடமிருந்து ஒப்பந்தசீட்டுவாங்கிவந்து இருக்கிறீர்களா? உங்களிடமே அனுமதிப்பத்திரமிருந்தால் சூரியன்முதலானவர்களை வீட்டிற்கழைத்து நெருப்பில் இறக்கச்செய்யுங்கள். உண்மையென்னவென்றால் சூரியன் முதலானவர்கள் சடங்கள். அவைகளால் யாருக்கும் துக்கத்தையாவது சுகத்தையாவது அளிக்கமுடியாது. கிரகதானங்களில் வசிக்கிற நீங்கள் எல்லோருமே அவைகளினுடைய விக்கிரகங்கள். ஏனெனில் கிரகவார்த்தையுடைய அர்த்தமும் உங்களுக்கே தகுதியானதாயிருக்கிறது. "எவர்கள் வாங்கிக்கொள்ளுகிறார்களோ அவர்

களே கிரகங்கள்.'' நீங்களாகவே அரசன், பிரபு, சாவுகாரி, வியாபாரி, ஏழை இவர்களிடம் சென்று சொல்லாதவரையில் நவக்கிரகங்களுடைய ஞாபகம் அவர்களுக்குக் கிடையாது. சூரியன், சனீசுவரன் முதலானவைகளுடைய உருவெடுத்த நீங்களே ஒருவனைப்பிடித்தால் துன்புறுத்தாமல் விடுகிறதில்லை. உங்களிடம் வராதவனை நாஸ்திகன் என்று பழிகூறுகிறீர்கள்.

போப்:—நாங்கள் முன் சொல்லும் பிரகாரம் ஆகாசத்தில் சந்திரன் சூரியன் இவர்களுடன் ராகு கேதுவுடைய சேர்க்கையினால் பிரத்தியக்ஷமான கிரகணங்கள் உண்டாகிறது. இப்படியே கிரகத்தினுடைய பலனும், பணமுளவன், ஏழை, அரசன், பிச்சைக்காரன் சுகமுள்ளவன் துக்கமுள்ளவன் இக்குணங்களெல்லாம் கிரகத்தினாலேயே உண்டாகும் பலன்.

சத்தியவாதி:—கிரகண ரூபமான பிரத்தியக்ஷ அனுமானங்கள் வான சாஸ்திரத்தைச் சார்ந்தது. ஜோதிடத்தைச் சேர்ந்ததல்ல. வான சாத்திரமே உண்மையானது. மனிதசரீரத்தில் கிரகங்களுடைய குணங்களினால் விளையும் நன்மை தீமை உண்டாகும் வரையில் ஜோதிடமும் உண்மையே. ஒன்றுக்கொன்று நேராகச் சுற்றிக் கொண்டிருக்கும் படியான சூரியன் சந்திரனைக் கவனித்து வான சாஸ்திரத்தைக் கொண்டு எக்காலத்தில் சூரியனுடையவோ அல்லது சந்திரனுடையவோ முழு அல்லது பாதி கிரகணம் உண்டாகுமென்று சொல்லலாம்.

छादयत्यर्कमिन्दुर्विधुं भूमिभाः ॥ கிரகலாகவம்.

இவ்விதமே சித்தாந்த சிரோமணி, சூரியசித்தாந்தம் முதலானவைகளிலுமிருக்கின்றன. பூமிக்கும் சூரியனுக்கும் மத்தியில் சந்திரன் வரும்பொழுது சூரியக்கிரகணமும், சூரியன் சந்திரனுக்கு நடுவில் பூமிவரும் பொழுது சந்திரகிரகணமும் உண்டாகிறது. அதாவது சந்திரனுடைய நிழல் பூமியின் பேரிலும் பூமியின் நிழல் சந்திரன் பேரிலும் விழுகிறது. சூரியன் பிரகாச சுரூபமாகவேயிருப்பதினால் அதன் பேரில் எதனுடைய நிழலும் விழுகிறதில்லை. பிரகாசித்துக் கொண்டிருக்கிற சூரியன் அல்லது தீபம் இவைகளுடைய நிழல் திரும்பி விழுவதைப் போலவே கிரகணமும் ஆகிறதென்று அறியுங்கள். தன்னுடைய கர்மங்களினாலேயே மனிதர்கள் தனவான் ஏழை ராஜன் பிச்சைக்காரன் முதலானவர்களாக ஆகிறார்கள், கிரகங்களினால் இல்லை. பெரும்பாலான ஜோதிடர்கள் தங்களுடைய பெண் பிள்ளைகளின் விவாகத்தை கிரகங்களுடைய கணக்குப் பிரகாரமே செய்கிறார்கள். செய்தும் சண்டை சச்சரவுகளினால் இல்லறசுகம் இல்லாமல் போய் புருஷன் அல்லது மனைவியை இழந்தவர்களாக ஆகிறார்கள். ஏன் இவ்விதமாக வேண்டும். ஆகவே கர்மங்களுக்கேற்ற பயனையடைகிறோம். கிரகங்கள் சுகத்துக்கங்களுக்குக் காரணமாகாது. மனிதனுக்கும் அவனுடைய செய்கைகளுக்கும் சம்பந்தம் உண்டாக்ககூடாத அவ்வளவு தூர விடத்திலிருக்கிற கிரகங்கள் மானிடத்தீர்ப்பை எவ்விதம் மாற்றமுடியும்? செய்கைகளுடைய பலனைச்செய்வது ஜீவன். அதனை அநுபவிக்கச் செய்வது பரமாத்மா. நீ கிரகத்தினுடைய பலன் என்று நினைத்தால் இவ்வுலகில் அதே

(பிறக்குந்தருணத்தில் துருவ நக்ஷத்திர இருப்பைக்கொண்டு ஜாதகம் எழுதுகி றீர்கள்) ஒரு நபருக்கு மேல் பிறக்கவில்லையா? இல்லை யென்றால் நீங்கள் சொல்லுவது உண்மை யாகாது. உண்டு என்றால் ஒருவனைப்போல் மற்றொருவன் சக்கரவர்த்தியாகிறதில்லை. ஜீவனோபாயமாகவே இவைகள் செய்யப்பட்டவை யென்றால் நாங்கள் நம்புவோம்.

வினா:—கருட புராணமும் பொய்யா?

விடை:—ஆமாம் அசத்தியமே.

வினா:—இறந்த ஜீவனுடைய கதி என்னவாகிறது

விடை: ஊழ் வினைக்கேற்றவாறு.

வினா:—யமராஜன் சித்திரகுப்தன், மந்திரி ரொம்பபயங்கரமான மை மலையை யொத்த அவர்களுடையசேவகர்கள், ஜீவனைப்பிடித்துக்கொண்டுபோகிறார்கள். பாபபுண்ணிய பிரகாரம் நரகத்தையும் சுவர்க்கத்தையும் முறையே அளிக்கிறார்கள். அதற்காகவே தானம் சிராத்தம் தர்ப்பணம் வைதரணியைத்தாண்ட கோ தானம் முதலானவைகளைச் செய்கிறார்கள். இவைகளெல்லாம் எப்படி பொய் யாகக் கூடும்?

விடை:—எல்லாம் போப் லீலைகளுடைய வைப்புக் கட்டுகளே. எல்லா விடத்திலுமுள்ள ஜீவன்கள் அங்கு சென்று அவைகளுக்கு யம தர்மராஜன் சித்திரகுப்தன் முதலானவர்கள் நியாயம் அளிப்பார்களே யானால், யமலோகத்திலேயே ஜீவன் பாபம் செய்யும் பொழுது வேறு யமலோகமிருக்கவேண்டு மல்லவோ? அங்கு நியாயதிபதி அவைகளுக்கு நியாயமளிக்கவேண்டும். பர்வதம் போலுள்ள யமதூதர்களுடைய சரீரம் ஏன் கண்ணிற்குப் புலப்படுகிறதில்லை? இறந்துபோகிற மனிதனிருக்கிற அறையில் அவர்களுடைய ஒரு விரல் கூட நுழையமுடியாதே? பாதைகளினாலும் தெருக்களினாலும் ஏன் அவர்கள் தடுக்கப்படுகிறதில்லை. அவர்கள் சூக்ஷ்ம சரீரத்தை எடுத்துக் கொள்ள கூடியவர்களென்றால் மலையை யொத்த சரீரத்தின் எலும்புகளை அவர்கள் போப்களின் வீட்டிலன்னியில் வேறு எங்குவைக்கக்கூடும்? பெரிய காடு முதலானவைகளில் தீப்பிடிக்கும் பொழுது கோடிக்கணக்கான எறும்பு முதலானவைகள் உயிர் துறக்கின்றன. அவைகளையழைத்துச் செல்லகணக்கற்ற யமதூதர்கள் வரவேண்டும். அப்பொழுது வானம் இருள்சூழ்ந்திருக்கவேண்டும். ஜீவன்களைப் பிடிக்கும் சந்தடியில் அவர்களே ஒருவருக்கொருவர் மோதிக்கொள்வார்கள். பெருங்கற்பாறைகள் மலைமேலிருந்து கீழேவிழுவதுபோல் அவர்களுடைய சரீரத்தின் பெரும் பாகங்கள் கருடபுராணம்படித்துக் கேழ்க்கிறவர்களுடைய வீட்டினுள்விழும். அவர்களும் அதினால் அடிப்பட்டு இறந்து போவார்கள். அல்லது அவ்வீட்டு வாயிற்படி அல்லது தெரு அடைப்பட்டுபோய் அப்பொழுது வீட்டிலிருந்து வெளிவரவும் வழியில்நடக்கவும் முடியாமல் போய்விடும். அப்பொழுது என்ன செய்வார்கள்?

## சிராத்தம் தர்ப்பணம்.

சிராத்தம், பிண்டப்பிரதானம், தர்ப்பணம், முதலியவைகள் இறந்தஜீவனை யடைகிறதில்லை. இறந்தவர்களுடையபிரதிநிதியான போப்பினுடைய வீட்டை

யும், வயிற்றையும் அடைகிறது. வைதரணீநதியைத்தாண்டச்செய்யும் பசுவானது போப்க்களினுடைய வீட்டையாவது கசாப்புக்கடையை யாவது அடைகிறது. நைகள் இங்கேவதைக்கப்பட்டு அல்லது சுடப்பட்டு போகும்பொழுது அங்குவாலை எப்படி பிடித்துகொள்ளக் கூடும்? இதை விளக்க ஒரு சிறு கதையுண்டு.

குடியானவனின் பசு.

குடியானவன் ஒருவனிருந்தான். அவனுக்கு இரண்டுபடிபால் கறக்கக்கூடியதான பெரிய பசு ஒன்றிருந்தது. அதனுடைய பால் வெகு உருசியுள்ளதாயிருந்தது. அவனுடைய போப்பும் அதைக்குடித்ததுண்டு. இதை அவன் தகப்பன் மரணகாலத்தில் எப்படியாவது அடைந்துவிடவேண்டும் என்று நிச்சயஞ் செய்து கொண்டான். தெய்வ யோகத்தால் கொஞ்ச நாளைக்குள் அவன் தகப்பனுடைய மரண சமயம் நெருங்கியது. வாய்ப்பேச முடியாமற் போகவே கட்டிலுடன் கீழேகொண்டுவந்து விட்டார்கள். பிராணன் போகிற சமயமும் நெருங்கிவிட்டது. உற்றார் உறவினர் முதலானவர்கள் சுற்றியிருந்தார்கள். அச்சமயத்தில் போப் "எஜமானனே! உன்கையினால் இப்பொழுது **கோதானம்** செய் என்றான். குடியானவன பத்துரூபாயைத் தகப்பன்கையில்வைத்து சங்கற்பம் சொல்லுங்களென்றான். உடனே போப் "என்ன பசுவிற்குப்பதிலாகப் பணத்தை வைக்கிறாயே! உன்தகப்பன் ஒரு முறைக்குமேல் இறந்துபோகப்போகிறாரா? இச்சந்தர்ப்பத்தில் உயிருள்ளதாயும் நல்லதாயும் சிறந்தாயுமுள்ள பசுவைக்கொண்டுவா. இம்மாதிரியான பசுவையே தானஞ் செய்யவேண்டும்.

(குடி)எங்களிடம் பசுஒன்றே தானிருக்கிறது. அதன்னியில் எங்களுடைய மக்களின் சம்ரக்ஷணை நடைபெறாது. ஆகவே அதைக்கொடுக்க முடியாது. இருபது ரூபாய் வாங்கிக் கொண்டு சங்கற்பம் செய்யுங்கள். இந்தரூபாய்க்கு வேறு கறவைபசுவை வாங்கிக்கொள்ளலாம் என்றான்.

(போப்)நல்லது. நல்லது. உன்தகப்பனை விட பசுமேலாய் போய்விட்டதா? **வைதரணீ** நதியில் முழுகச்செய்து உன்தகப்பனுக்குத் துக்கங்கொடுக்க விரும்புகிறாயா? ஆகா! நீ உண்மையான பிள்ளையே! முன்னால் சந்தேகப்பட்டுத் தயங்கிகொண்டிருந்த குடும்பத்தைச் சேர்ந்த எல்லோரும் அவர்களுக்கு ஜாடைக்காட்டவே போப் வழிக்கு வந்துவிட்டார்கள். அவனும் சொன்னபிரகாரமேபசுவை போப்புக்குத் தானஞ் செய்து விட்டான். அவர்களெல்லோரும் சொன்னதைக் குடியானவனால் தடுக்க முடியவில்லை. தகப்பனும் இறந்துவிட்டார். போப்பும் குட்டியுடன் கூடின பசுவை ஓட்டிக்கொண்டு பால் பாத்திரத்தையும் எடுத்துக்கொண்டு வீடடைந்தான். அவைகளைக் கட்டிவிட்டு பாத்திரத்தை நம்பிக்கையுள்ள விடத்தில் வைத்துவிட்டுத் திரும்பவும் குடியானவன் வீட்டிற்குவந்தான். சுடலைக்குப் பாடையுடன் சென்றான். பிரேததகனஞ் செய்தான். அங்கேயும் **தசாகாத்திரம், சபண்டீகரணம்** முதலான சடங்குகளைச் செய்து முடிப்பதில் அவனைத் தொந்திரவு செய்து **மகாப்பிராம**

ணத்தில் பிச்சைக்காரர்களுக்கு அதிகபணம் வாங்கிக் கொடுத்தான். சடங்குகள் முடிவையடையும் வரையில் குடியானவன் அயல்வீட்டுக்காரர் உறவினர்களிடமிருந்து கெஞ்சி பிச்சையெடுத்துப் பிழைத்திருந்தான். தகப்பனிறந்த பதினான்காம்நாள் விடியற்காலையில் போப்பினுடைய வீட்டிற்குச் சென்றான். அவன் போகும்பொழுது பால்கறந்து செம்பில் நிறைத்துக்கொண்டிருந்த போப் எழுந்திருந்து சொன்னதாவது. எஜமானனே உட்காருங்கள்.

(குடி) நீங்களிங்கேவாருங்கள். (போப்) பால்ச்செம்பை வைத்துவிட்டு வருகிறேன். (குடி) இல்லையில்லை அதையும் இங்கே கொண்டுவாருங்கள். போப் யோசனை செய்து போயுட்கார்ந்து செம்பையும் முன்னால் வைத்தான். (குடி) நீபெரிய பொய்யன். (போப்) நான் என்ன பொய் சொன்னேன்? (குடி) தயவு செய்து என் பசுவை ஏன்வாங்கிக் கொண்டுவந்தீர்களென்று சொல்லுங்கள். (போப்) உன்தகப்பன் வைதரணீ நதியைத் தாண்டுவதற்கு. (குடி) அப்படியானால் பசு ஏன் வைதரணீ நதியை யடையவில்லை. நீங்கள் அதை செய்திருப்பீர்களென்று நம்பியிருந்தேன். உங்கள் வீட்டில் கொண்டுவந்து வைத்திருக்கிறீர்கள். வைதரணீ நதியைக் கடப்பதில் என் தகப்பன் யாதுயாது கஷ்டங்களை யனுபவித்தாரென்று எவருக்குத்தெரியும். (போப்) இல்லை. இங்கே இத்தானத்தினுடைய மகிமையினால் வேறொரு பசுவை அவருக்குக் கொடுத்திருப்பார்கள். (குடி) வைதரணீ இங்கிருந்து எவ்வளவு தூரத்திலுள்ளது? எத்திசையிலுள்ளது? (போப்) இவ்விடத்திலிருந்து 300,000,000 கோசதூர முள்ளது. ஏனெனில் பூமியின் மத்தியரேகை 490,000000 கோசமேயுள்ளது. தெற்கு மேற்கிலிருக்கிறது. (குடி) இங்கேயிருந்து தபாலோ தந்தியோ அனுப்பியிருக்கவேண்டும். அவ்விடத்தில் இன்னன்னாருடைய தகப்பனுக்கு வைதரணீயைத் தாண்டுவதற்குப் பசுகொடுத்தாச்சுதென்று பதில் சமாச்சாரம் கிடைத்திருந்தால் அதைக் காண்பியுங்கள். (போப்) தந்தியுமில்லை. தபாலுமில்லை. கருடபுராணம் பிரமாணமே. (குடி) கருடபுராணத்தை நாங்கள் எப்படி நம்ப முடியும்? (போப்) எல்லோரும் நம்புவது போலவே.

(குடி) இப்புத்தகம் உங்களுடைய வர்க்கத்தினர்களால் ஜீவனோபாயத்திற்காகச் செய்யப்பட்டது. ஏனெனில் பிள்ளைகளைவிடத் தகப்பனுக்குப் பிரியமுள்ளவர்கள் கிடையாது. என்தகப்பனார் எங்களுக்குப் பசு அனுப்பென்று தந்தி தபால் எதாவதனுப்பினால் அப்பொழுதுநான் அதைவைதரணீநதிக்கரைக்குக்கொடுத்தனுப்பி அதைக்கொண்டு கடந்தபிறகு அப்பசுவைமறுபடியும்வீட்டிற்கழைத்துவந்து பெண்பிள்ளைகளுக்குப் பாலைக்கொடுத்து நானும் குடிப்பேன். கொண்டுவாருங்கள் பால்நிறைந்த செப்பு,பசு,கன்றுகுட்டியையும்என்று சொல்லி அவைகளை யெல்லாம் பெற்றுக்கொண்டு வீட்டிற்குத் திரும்பினான்.

(போப்) கொடுத்த தானத்தைத் திரும்பவாங்கிக்கொண்டு போவதினால் நீங்கள் நாசமடைவீர்கள்.

(குடி) மூடுங்கள் வாயை. நாங்கள் பாலில்லாமல் கஷ்டப்பட்ட பதிமூன்று நாள் துன்பங்களுக்கும் பழிவாங்குவேன்.

அப்பொழுது போப் பேசாமலிருந்துவிட்டான். குடியானவனும் தன் பசு, கன்றுகுட்டி, செம்பு முதலானவைகளுடன் வீடுபோய்சேர்ந்தான்.

இக்குடியானவனைப் போன்றவர்களதிகமாகவிருந்தால் இவ்வுலகில் போப்பு லீலைகள் அவ்வளவதிகமாகச் செல்லாது. இவர்கள்மேலும் சொல்லுவதாவது. பித்ருக்களுடைய சரீரத்தின் பத்துபாகங்களுக்கும் பிண்டமளிப்பதினால் பத்துஅவயவங்களுண்டாய் சபண்டி செய்யும்பொழுது சரீரத்துடன் கூடஜீவன் சேர்ந்து (கைபெருவிரல் பரிமாணமேயுள்ளது) யமலோகத்திற்குப் போகிறது. இதுஉண்மையானால் தூதர்கள் வரவேண்டியது வீணேயாம். சரீரம்சேருமென்றால் தன்னுடையமனைவி பெண்பிள்ளை இஷ்ட்டமித்திரர் முதலானவர்களுடைய ஆசை மேலிட்டு ஏன் திரும்பிவரக்கூடாது?

வினா :—சுவர்க்கத்தில் கிடைப்பதொன்றுமில்லை? இவ்விடத்தில் கொடுக்கும்படியான தானமே அங்குசேருகின்றது. ஆகவேதானங்கள் சகலமும் செய்யவேண்டியது.

விடை:—சத்திரங்கள், தானஞ்செய்யும் ஜனங்கள், இஷ்டமித்திரர்களுடைய(விருந்து)கூட்டங்கள், நல்லஆடைகள், இவைகளுள்ள இவ்வுலகமே உங்களுடைய சுவர்க்கத்தை விடமேலானது. உங்களுடையப் பிராமணப்பிரகாரம் சுவர்க்கத்திலொன்றுமே கிடைக்கிறதில்லை. தயை பச்சாதாபம் இல்லாதவும் பஞ்சம் மேலிட்டதும் கெட்டுப்போனதுமான இவ்வித சுவர்க்கத்திற்குப் போப்க்களே போகட்டும். நல்லோர்களுக்கு அங்கு என்னவேலை?

வினா:—யமலோகமில்லையென்றால் இறந்தபிறகு ஜீவன் எங்குசெல்லுகிறது ? இதற்குத்தீர்ப்பு சொல்லுகிறவர்கள் யார்?

விடை :—உங்களுடைய கருடபுராணம் சொல்லுவது பிரமாணமல்ல. வேதங்களில் சொல்லப்பட்டது இதுவே

**यमेन वायुना सत्यराजन् ॥**

இவ்விதவேதவார்த்தைகளினால் யம வார்த்தைக்கு வாயு என்றிருக்கிறது. சரீரத்தைவிட்டு வாயுவுடன் கூட அந்தரிட்சத்ததில் ஜீவனிருக்கிறது. பட்சபாதமில்லாத பரமாத்மாவே தர்மராஜா. அவரே எல்லோருக்கும் நியாயஞ் செய்கிறவர்.

வினா :—நீங்கள் சொல்லுவதிலிருந்து பசுமுதலான தானங்கொடுக்கக் கூடாதென்றும் தானம் புண்ணியம் ஒன்றும் செய்யக்கூடாதென்றும் விளங்குகிறது.

விடை :—நீசொல்லுவது வீண்புரட்டே. நல்லபாத்திரமறிந்து பிச்சையிடவேண்டும். பொன் வெள்ளி பச்சை வைடூரியம் மரகதம் ஆடையுடை வீடு முதலானவைகளைக் கொடுக்கவேண்டும். தீயோர்களுக்கு ஒருபொழுதும் பிச்சையிடகூடாது.

வினா :—நல்லோர் தீயோர், என்று அறிவதெப்படி?

நல்லோர் தீயோர்.

விடை :—சூதுள்ளவன், கள்ளன், தன்னலங்கருதுகிறவன், காமி, காமக்ரோதலோப மோகத்துடன் கூடினவன், பிறர்களுக்குத் தீங்குசெய்கிறவன் பேராசையுள்ளவன், பொய்பேசுகிறவன், அறிவில்லாதவன், சோம்பலுள்ளவன், கொடுக்கிறவர்களிடமே மறுபடியும் பிடிவாதஞ் செய்கிறவன், வாசற்படியிலுட்கார்ந்து பிச்சைக்குத் தொந்திரவு செய்கிறவன், வழி மறிக்கிறவன், இல்லையென்றால் கவனியாமல் இரந்துகொண்டே யிருக்கிறவன் திருப்தியற்றவன், கொடாதவனை நிந்திக்கிறவன் ஏசுகிறவன் திட்டுகிறவன், ஒரு தடவைப்பிச்சைக் கொடாமல்போனால் முன்பலதடவைகள் கொடுத்திருந்த பொழுதிலும் பகைத்துக்கொள்ளுகிறவன், வெளிக்குச் சாதுவேடம் போடுகிறவன், இதரர்களுக்குத் தப்புவழிகாட்டி ஏமாற்றுகிறவன், நிறையவிருந்துண்டும் பஞ்சகோலமிடுகிறவன், முகமன் பேசிதுதிசெய்து தன்காரியத்தைச் சாதித்துக் கொள்ளுகிறவன், அல்லும் பகலும் பிச்சையெடுப்பதிலேயே கண்ணுங்கருத்துமாயிருப்பவன், பலமாக லாகிரிவஸ்துக்களையும் கஞ்சாவையும் பிடித்து விருந்துண்ணவழைத்தால் இதரர்களுடைய செலவில் அதிகமாகச் சாப்பிடுகிறவன், மயக்கத்தினால் வேலையை அசட்டைசெய்கிறவன், சத்தியமார்க்கத்தைப் பழித்து கெட்டவழிகளில் தன்காரியத்திற்காகச் செல்லுகிறவன், வேறு யோக்கியதையுள்ள புருஷனுடைய சேவைசெய்வதற்கன்னியில் தன் சீடருக்கு சுயசேவையின் அவசியத்தையே உபதேசிக்கிறவன், சத்தியவித்தை முதலானவைகளை விரோதிக்கிறவன், உலகவிரோதி அதாவது மனைவிபுருஷன் தாய் தகப்பன் பெண்பிள்ளைகள் அரசன் குடிமக்கள் இஷ்டமித்திரர்கள் முதலானவர்களைப் பகைத்துக்கொள்ளுகிறவன், இக்குணங்களெல்லாம் கெட்டபாத்திரத்தினுடைய இலட்சணங்களாகும்.

பிரம்மச்சாரி, அடக்கப்பட்ட இந்திரியங்களை யுடையவன், வேதவித்தைகளை ஓதுகிறவன், நற்குணமுள்ளவன், சத்தியவாதி, பரோபகாரப்பிரியன், புருஷப்பிரயத்னமுள்ளவன், உதாரகுணம் வித்தை தர்மம் இவைகளுடைய நிரந்தர மேன்மையைச் செய்கிறவன், தர்மாத்மா, சாந்தம் நிந்தை ஸ்துதிஇவைகளில் சந்தோஷம் துக்கமில்லாதவன், பயமற்றவன், பிரயத்தனமுள்ளவன், யோகி ஞானி சிருஷ்டித்தன்மை, வேதங்களினுடைய ஞானம் ஈச்வரனுடைய குணகர்மஸ்வபாவம் இவைகளின் பிரகாரம் நடக்கிறவன், நியாயவழிப் பிரகாரம் பக்ஷபாதமன்னியில் சத்தியோபதேசம் சத்தியசாத்திரங்களை ஓதுவித்து ஓதுவிக்கிறவன், முகஸ்துதி செய்யாமலிருக்கிறவன், உள்ளதை உள்ளவாரே புகழ்ந்துபேசுகிறவன், தன்னுடையதைப்போலவேஇதரர்களுடைய சுகதுக்கம் கஷ்டம், லாபம் முதலானவைகளை அறிகிறவன், அறிவின்மை சந்தோஷம், பிடிவாதம் பேராசை முதலியவைகளன்னியிலிருக்கிறவன், அம்ருதத்திற்குச் சரியாய் இகழையும், விஷத்திற்குச்சரியாய் புகழையும் கருதுகிறவன், சந்தோஷத்துடன் கொடுப்பதை திருப்தியுடன் பெற்றுக்கொள்ளுகிறவன் ஆபத்துக்காலத்திலும் கேட்டுக்கொடாதவர்களை நிந்திக்காமலும் கோபித்துக் கொள்ளாமலும் அங்கிருந்து திரும்பிவருகிறவன், சுகபுருஷர்களுடன் சினேகப்பான்மையுடனும்

துகக்கப்பட்டவர்களிடத்தில் கருணையுடனும் புண்யாத்மாத்மாக்களிடத்தில் ஆனந்தத்துடனும் பாபிகளிடத்தில் "உபேக்ஷா" அதாவது ராகத்துவேஷமன்னியிலும் இருக்கிறவன், சத்தியத்தை பெரிதுங் கருதுகிறவன், சத்தியவாதஞ் செய்கிறவன், கபடமில்லாதவன், பொறாமை துவேஷ மன்னியில் பெருநோக்கு உடையவன், சத்புருஷன், தர்மத்துடன் கூடினவன், துராசாரமில்லாதவன், தன்னுடல் பொருள் ஆவி மூன்றையுங்கொண்டு பரோபகாரம் செய்வதிலேயே சிந்தனை கொண்டு பிறர்களுடைய சுகத்திற்காக தன்னை அர்ப்பணஞ் செய்கிறவன், ஷை சுபலக்ஷணங்களுடன் கூடினவனே நல்லபாத்திரமாகிறான். ஆனால் பஞ்சகாலங்களிலும் ஆபத்துக்காலங்களிலும் அன்னபானவஸ்திரம் ஔடதம் முதலியவைகளுக்குச் சகலமனவர்களும் யோக்கியதையுள்ளவர்கள்.

வினா :—ஈகையாளர்கள் எத்தனைவகைப்படுவார்கள்?

விடை :—மூன்றுவகை. உத்தமன், மத்தியமன், நிகிருஷ்டன். தேச காலம் பாத்திரம் இவைகளையறிந்து, சத்தியவித்தை தர்மம், பரோபகாரம் இவைகளுடைய மேன்மைக்காகத் தானம்செய்கிறவனே உத்தமன். தன் புகழுக்காகவும் நலத்திற்காகவும் தானம்செய்கிறவன் மத்தியமன். தன்னுடையவும் இதரர்களுடையவும் நன்மைக்காக உபதேசஞ்செய்யாமல் விலைமாதர், முகமன்பேசுகிறவன், கோமாளி, முதலானவர்களுக்குக் கொடுக்கிறவன், கொடுக்குமுன் ஏளனம் அவமானம் செய்கிறவன், பாத்திரம்—நல்லது கெட்டது—அறியாமல், எல்லா சாமான்களையும் ஒரேவிலைக்கு விற்கிற கடைக்காரனைப்போல் கொடுக்கிறவன், தன்சுகத்திற்காகவும், நன்மைக்காகவும் தர்மாத்மாக்களைத் துன்புறுத்துகிறவன் இவர்களே நிகிருஷ்டமானவர்கள். அதாவது நன்குவிசாரித்து வித்வான் தர்மாத்மாக்களை மரியாதை செய்கிறவன் உத்தமனாகவும், விசாரணையொன்றுமன்னியில் தன்புகழுக்காகச் செய்கிறவன் மத்தியமனாகவும், குருட்டுத்தனமாய் பலனற்றதானத்தைச் செய்கிறவன் நிகிருஷ்டனாகவுமாகிறான்.

வினா :—தானத்தினுடைய பலன் இவ்வுலகிலேயே கிடைக்குமா? அல்லது பரலோகத்திலேயா ?

விடை :—எங்கும் கிடைக்கும்.

வினா :—தானாகவே உண்டாகுமா அல்லது பிறர்களாலுண்டாகுமா?

விடை :—பயனையளிக்கிறவர் ஈச்வரனே. திருடர்கள் முதலானவர்கள் சுயமாகவே சிறையை அடைய விரும்புகிறதில்லை. அரசனே அவர்களை வலுவிலனுப்புகிறான். தர்மாத்மாக்களுடைய சுகத்தைத்தேடி திருடன்முதலானவர்களிடமிருந்து காப்பாற்றி அவர்களுக்கு நல்லதை அவன் அளிக்கிறான். அவ்விதமே பரமாத்மா எல்லோருடைய பாபபுண்ணியத்திற்கேற்ற வண்ணம் சுகதுக்கரூபமான பலனை யளிக்கிறார்.

வினா :—கருடபுராணம் முதலானவைகளெல்லாம் வேதார்த்தத்தையாவது, வேதங்களையாவது, மேன்மைப்படுத்துகிறதா? இல்லையா?

விடை :—இல்லை. வேதங்களுக்கு விரோதமாய் மாறுபட்டவைகளைப் போதிக்கிறது. தந்திரங்களுமப்படியே. புராணங்களையும் தந்திரங்களையும் நம்புகிறவன் ஒருவனுடைய மித்திரனாகவும் உலகவிரோதியாகவுமாகிறான். ஏனெ

னில் ஒருவருக்கொருவர் விரோதஞ்செய்யுந்தன்மை யுடையதாயிருக்கிறது. வித்வான் என்றழைத்துக்கொள்ளும் எவனும் இதைநம்பக் கூடாது. நம்புவது அறிவின்மையின் அடையாளமாகும்

### உபவாச தினங்கள்.

சிவபுராணப் பிரகாரம் திரயோதசி சோமவாரம், ஆதித்திய புராணப்பிரகாசம் ஞாயிற்றுகிழமை, சந்திரகண்டப்ரகாரம் செவ்வாய், புதன், வியாழன் வெள்ளி, சனிக்கிழமை, விஷ்ணுபுராணப பிரகாரம் ஏகாதசி, வாமன பிரகாரம் துவாதசி; நிருசிம்மம் அனந்தப் பிரகாரம் சதுர்தசி, பௌர்ணமி; திக்பாலர்களுக்குத் தசமி; துர்கா தேவதைக்கு நவமி; வசுக்களுக்கு அஷ்டமி; முனிகளுக்குச் சப்தமி; ஸ்வாமி கார்த்திகைக்குச் சஷ்டி; நாகபஞ்சமி; கணேசருக்குச் சதுர்த்தி; கௌரிக்குத் திருதீயை; அச்வனிகுமாரருக்குத் துவிதீயை; அத்தியாதேவிக்குப் பிரதமை; பித்துருக்களுக்கு அமாவாசை; இத்தினங்களில் உபவாசம் இருக்கவேண்டும். இத்தினங்களில் எம்மனிதன் எங்கிருந்தபோதிலும் அன்னபானம் செய்வானேயானால் நரகத்தை யடைவான் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இந்நாட்களிலும் திதிகளிலும் போப்பும் அவருடைய சீடர்களும் சாப்பிடக்கூடாது. சாப்பிட்டால் நரகத்தை யடைந்தவர்களாவார்கள். வைத்தியகார்களாலெழுதப்பட்டிருக்கிறநிர்ணயசிந்து, தர்மசிந்து, விரதார்க்க முதலானவைகள் கூறுவண்ணம் சைவர்கள் ஏகாதசியன்று விரதமிருக்க, மற்றவர்கள் துவாதசிதினத்தன்றே ஏகாதசி விரதமிருக்கும்படியான அநியாயத்தைச் செய்துவிட்டது. விரதமிருப்பதிலுங்கூட சண்டை சச்சரவுகளை விளைத்திருக்கும்படியான போப்லீலைகளை என்னவென்பது? அவர்களுள் தயையென்பதே கிடையாது. ஏகாதசிவிரதம் தன் சுயநலத்திற்காகவே விதிக்கப்பட்டிருக்கிறது.

**एकादश्यामन्ने पापानि वसन्ति ।**

உள்ளபாபம் சகலமும் ஏகாதசி தினச்சாப்பாட்டிலிருக்கிறது. சாப்பாட்டில் யாருடைய பாபங்களிலிருக்கிறது? எனப்போப்களைக்கேட்கவேண்டும்? உன்னுடையதா? உங்கப்பனுடையதா? ஏகாதசிச்சாப்பாட்டில் சகலபாபங்களும் ஒருங்கே கூடியிருக்கிறதென்றால் அந்நாளில் ஒருவருக்கும் துக்கமும் கஷ்டமும் இருக்கவேகூடாது. ஆனால் கடும்பசி தாகம் துக்கம், எல்லாம் அன்றேதானிருக்கிறது!! பாபத்தினுடைய பயன் துக்கம். சாப்பிடாமல் விரதமிருப்பதுபாபம். இதை பெருமகிமையாகப் புகழ்ந்திருக்கிறார்கள். ஒன்றுமறியாத பேதைகள் இவ்விதக் கதைகேட்டு உண்மையென நம்புகிறார்கள்.

பிரம்ம லோகத்தில் வேசி ஒருவளிருந்தாள். அவள் தப்புசெய்துவிடவே பூமியில் விழுந்துவிடவேண்டியதென்று சாபமுண்டாச்சுது. துதித்து மறுபடியும் என்னசெய்து நான் சுவர்கத்தையடைய முடியுமென்றுவினவினாள். அதற்கு அவர் ஏகாதசிவிரதபலனை உனக்கு எவராவது அளித்தால் நீ சுவர்க்கத்திற்கு வரமுடியுமென்றார். ஆகாயவிமானத்துடன் பட்டணம் ஒன்றில் விழுந்தாள். அவ்வூர் அரசன் நீயார் என்று அவளைக்கேட்டான். நடந்த வர

லாற்றையெல்லாம் கூறிவிட்டு ஏகாதசி விரதபலனை யாராவது அர்ப்பணஞ் செய்துவிட்டால் நான்சுவர்க்கத்தைச் சேரமுடியுமென்றாள். அரசன் நகரமுழுதும் தேடிப்பார்த்தும் ஏகாதசிவிரதமிருந்தவர்கள் எவரும் கிடைக்கவில்லை. ஒருநாள் சூத்திரஸ்திரீ புருஷனிருவருக்கும் மனஸ்தாபம்உண்டாகி கோபத்தினால் மனைவியானவள் இரவும்பகலும் உண்ணாமலிருந்தாள். தெய்வ வசத்தால் அன்று ஏகாதசி தினமாயிருந்தது. இராஜசேவர்கள் கேட்டதின்பேரில் அவள் நான் ஏகாதசி என்று அறியாமலே எதேச்சையாய் சாப்பிடாமலிருந்தேன் என்றாள். இதை அவர்கள்கேட்டு அவளை அரசன் முன்கொண்டுவந்தார்கள். ஆகாயவிமானத்தைத்தொடு எனவே அவள்தொட்டாள். அதுவும் உடனே மேலே ஏறிப்பறந்தது. ஞாபகமன்னியிலிருந்த ஏகாதசிவிரதபலன் இவ்வளவிருக்கும்பொழுது தெரிந்து ஞாபகத்துடன் செய்தால் அளவில்லாப்பலன்கள் ஏன் உண்டாகாது?

ஐயோ! குருட்டு ஜனங்களே! நீங்கள் கூறுவது உண்மையானால் வெத்திலை பாக்கு பீடி, சுவர்க்கத்தில் இல்லாததினால் அவைகளையனுப்ப விரும்புகிறோம். ஏகாதசிவிரதமிருக்கிற சகலருடைய பயனும் நமக்குக்கிடைக்கட்டும். ஒருவெற்றிலை அங்குபோய் சேருமேயானால் லக்ஷக்கணக்கான இலைகளை அங்கு அனுப்புவோம். நாங்களும் உபவாசமிருப்போம். ஒருஇலையாவதுபோய்ச்சேராமற்போனால் உபவாசத்தினால் உண்டாகும் மரண ஆபத்திலிருந்து உங்களைக் காப்பாற்றுவோம். அவர்கள் ஏகாதசி இருப்பத்திநான்கிற்கும் தகுந்தபெயர் கொடுத்திருக்கிறார்கள். ஒன்றுக்கு **'தனதா'** (பொருளைக்கொடுப்பது) மற்றொன்றுக்கு **'காமதா'** (மனோபீஷ்டங்களைப் பூர்த்திசெய்வது) இன்னொன்றுக்கு **புத்திரதா** (மக்கட் பேரையளிப்பது) வேறொன்றுக்கு **நிர்ஜலா** (தண்ணீரில்லாதது) என்றுபெயரளித்திருக்கிறார்கள்.

ஏழைஜனங்கள் அநேகம்பெயர்கள், ஆசையுள்ளவர்கள், வம்சமில்லாதவர்கள், ஏகாதசிவிரதங்காத்ததினால் கிழவர்களாய் இறந்து போயிருக்கிறார்கள். பொருள், இஷ்டசித்தி, மக்கட்பேரு ஒன்றும் உண்டாகவில்லை. ஒருமணி நேரம் தண்ணீர் அருந்தாமல் போனால் சோர்வையடையும் படியான ஜியேஷ்ட்ட (வைகாசி - ஆனி) மாத சுக்லபக்ஷத்தில் விரதமிருப்பதினால் கடுந்துக்கத்தையும் கஷ்டத்தையும் அடைகிறார்கள். வங்காள தேசத்து விதவைகளே இவ்விரதத்தினால் பெருந்துக்கதிற்கு ஆளாகிறார்களாம். இறைச்சிக்காரனுக்கு- இதை புண்டுசெய்த- இதைஎழுதுங்கால் மனதில் கொஞ்சங்கூட இரக்கம் இல்லாமலிருந்ததே. இரக்ககுணமுள்ள நெஞ்சமாயிருக்குமேயானால் ஜலத்தை, ஜலமென்றும், பௌஷ்யமாத சுக்லபக்ஷ ஏகாதசியை நிர்ஜலமென்றும் அழைத்திருக்கும். அவ்விதம் செய்திருந்தால் கொஞ்சம் நலமாயிருக்கும். தயையினால் போப்களுக்குயாது ஆகவேண்டும்? "எவன்இருந்தாலும் இருக்கட்டும், இறந்தாலும் இறக்கட்டும். எவ்விதத்திலாயினும் போப்களுடைய வயிறு நிறையவேண்டும்!! என்றுபழமொழியைக்கைக்கொண்டதாகவிருக்கிறது. கர்ப்பஸ்திரீகள், கலியாணமான ஸ்திரீ புருஷர்கள், சிறுவர்கள், சிறுமிகள் உபாவாசம் மிருக்கவேகூடாது. விரதமிருக்கவேண்டுமென்றால் பசியில்லாத

தினத்திலும் அஜீர்ணமானதினத்திலுமே இருக்கவேண்டும். அச்சமயங்களில் பால்அல்லது சர்க்கரையுடன் கலந்தஜலத்தை குடிக்கவேண்டும். பசியிருக்குங் காலத்தில் சாப்பிடாமலும், பசியில்லாதகாலத்தில் சாப்பிட்டு மிருக்கிறவன் பலவித பிணிகளை யடைந்து துன்பங்களை அனுபவிப்பான். இப்பைத்தியக்காரர்கள் எழுதுவதை யாரும் பிரமாணமாக ஏற்றுக்கொள்ளுதல் கூடாது.

## மதப்பிரிவினைகள்.

குரு சிஷ்ய மந்திரோபதேசம், மதப்பிரிவினைகள் பலவகைளுடைய கொள்கைகள் இவைகளைப்பற்றி விவரிப்போம்.

வினா:—விக்கிரக ஆராதனைக்காரர்கள் முதலானவர்கள் சொல்லுகிறதாவது. வேதங்கள் அநித்தியமானது. இருக்வேதத்திற்கு 21 சாகைகளும், யஜுர் வேதத்திற்கு 101 சாகைகளும், சாமவேதத்திற்கு 1000 சாகைகளும், அதர்வ வேதத்திற்கு 9 சாகைகளும் முறையே உண்டு. இவைகளில் சிலசாகைகளே யிருக்கின்றன. மிகுதியானவைகளெல்லாம் இழந்துபோய் விட்டன. அவைகளிலேயே விக்கிரக ஆராதனைக்கும் தீர்த்த யாத்திரைக்கும் பிரமாணமிருக்கின்றன. இல்லாமற் போயிருந்தால் புராணங்களில் எங்கிருந்து வரும்? காரியங்களிலிருந்து காரணத்தை யறியமுடியும்பொழுது புராணங்களைப்பார்த்து விக்கிரக ஆராதனைக்குப் பிரமாண மிருக்கு மென்பதில் சந்தேக மென்ன?

விடை:—மரத்தைப் போலவே கிளைகளிருக்கும். அதற்கு மாறுபாடா யிராது. கிளைகள் பரிமாணத்தில் வித்தியாசப்பட்டிருந்த பொழுதிலும் விரோதப்பட்டதாயில்லை. கிடைக்கும்படியான சாகைகள் எல்லாவற்றிலும் விக்கிரக ஆராதனைக்கும் தீர்த்த யாத்திரைக்கும் பிரமாணங் கிடையாது. ஆகவே இழந்துபோன சாகைகளிலும் கிடையாது. வேதங்கள் நான்கும் கிடைக்கின்றன. அவைகளுக்கு மாறுபாடாய் சாகைகளிராது. விரோதமானதைச் சாகைகளால் சரியென்றும் கூறமுடியாது. ஆகவே புராணங்கள் வேதங்களுடைய சாகையாகாது. கட்சி பிரதிகட்சிக்காரர்களாலெழுதப் பட்டதும், ஒன்றுக் கொன்று வேறுபடுகிறதுமான புஸ்தகங்களாம். வேதங்கள் பரமேச்வரனால் செய்யப்பட்டதென்று நீங்கள் நம்பினால் முனிகளின் பெயரால் பிரசித்தமாயிருக்கும் ஆச்வலாயனம் முதலானவைகளை வேதங்களுக்குச் சரியாய் ஏன் நினைக்கக் கூடாது? கிளைகளையும் இலைகளையும் கண்டு அரசமரம், வடமரம், மாமரம், என்று மரங்களை தெரிந்து கொள்ளுவது போல் ரிஷிமுனிகளால் எழுதப்பட்ட வேதாங்கம், நான்கு பிராம்மணம், அங்கம், உபாங்கம், உபவேதம் முதலியவைகளைக் கண்டு வேதார்த்தத்தை அறிகிறோம். ஆகையினாலேயே இவைகளைச் சாகையென்று கருதுகிறார்கள். வேதங்களுக்கு விரோதமானவைகள் பிரமாணமாகவும் அவைகளுக்கு அநுகூலமானவைகள் அப்பிரமாணமாகவுமாகா. இழந்த சாகைகளைக் கொண்டு விக்கிரக ஆராதனை முதலானவைகளை ஸ்தாபிக்கப் பிரமாண முண்டென்றால் இப்பொழுது வழக்கத்திலிருக்கும் படியான வருணாச்ரம தர்ம விதிகள் இருக்கிற சாகைகளுக்கு விரோதமானதெனலாம். அதாவது சூத்திரனை அல்லது ஒதுக்கப்பட்டவனைப் பிராம்மணனென்றும், பிராம்மணனைச் சூத்திரன் அல்லது

ஒதுக்கப்பட்டவன் என்றும், அநியாயமாயிருப்பதை நியாயமென்றும், கடமையைக் கடமையல்லவென்றும் பொய்ப் பேசுதலைத் தர்மமாகவும் உண்மை உறைப்பதை அதர்மமாகவும் எழுதியிருத்தல் வேண்டும். வேறெவ்விதம் நீங்கள் பதிலளிப்பீர்கள்? இழந்து போனசாகைகள் வேதங்களுக்கு அநுகூலமாயும் இருக்கிற சாகைகளின் பிரகாரம், வருணுசிரம தர்மத்தையும் நாம் நம்பவேண்டியது அவசியமாகும். அதாவது பிராம்மணர்களுடைய பெயர் பிராம்மணன், சூத்திரர்களின் பெயர் சூத்திரன். அப்படியில்லாவிடில் வர்ணுச்ரமதர்மவிதி முதலானவைகள் மாறுபட்டுவிடும். ஜைமினி,வியாசர்,பதஞ்சலி முதலானவர்களுடைய காலம் வரையில் சகல சாகைகளும் இருந்ததென்று நம்புகிறீர்களா இல்லையா? நம்பினுல் விக்கிரக ஆராதனை முதலிய வழக்கங்களை ஏன் அவர்கள் குறிப்பிடவில்லை? நம்பவில்லை யென்ருல் இழந்துபோன சாகைகளிலிருந்த தென்பதற்கு ஆதாரம் என்ன? ஜைமினி மீமாம்சத்தில் சகல கர்ம காண்டத்தையும், பதஞ்சலி யோகசாத்திரத்தில் உபாசனகாண்டம் முழுவதையும், வியாசர் சாரீரிக சூத்திரத்தில் ஞானகாண்டம் சகலத்தையும், வேதாநுகூலமாய் எழுதியிருக்கிருர்கள். மண், கல், முதலிய விக்கிரக ஆராதனை, பிரயாகை முதலான தீர்த்த யாத்திரை இவைகளின் பெயர்கூட இந்நூல்களில்லை. இல்லாமலிருக்க எங்கிருந்து எழுதக்கூடும்? வேதங்களிலிருந்தால் அவர்கள் எழுதாமலிருந்திருக்க மாட்டார்கள். ஆகவே இழந்துபோன சாகைகளிலும் மூர்த்திபூஜை முதலியவைகளுக்குப் பிரமாணங் கிடையாது. இச்சாகைகளெல்லாம் ஈச்வரனுல் செய்யப்பட்ட வேதமாகாது. ஏனெனில் இவைகள் வேத மந்திரத்தின் சிலவற்றின் உரைகளாலும் ஸ்திரீ புருஷர்களுடைய ஜீவிய சரித்திரங்களினுலும் நிறைந்திருக்கிறது. இவைகளெல்லாம் வேதங்களாகாது. வேதங்களில் மனிதனுடைய ஜீவிய சரித்திரம் கிடையாது. அவைகளில் வித்தையின் உபதேசமே செய்யப்பட்டிருக்கிறது. மனிதன் ஒருவனுடைய பெயர் கூடக் கிடையாது. ஆகவே விக்கிரக ஆராதனை எப்பொழுதும் தள்ளப்பட்டதே. மூர்த்தி பூஜை ஸ்ரீராமச்சந்திரன் ஸ்ரீகிருஷ்ணன், நாராயணன் சிவன் முதலானவர்களை, பெரும் நிந்தைக்கும் ஏளனத்திற்கும் காரணமாக்கி விட்டது. அவர்கள் போற்றதக்க ராஜாதிராஜாக்களென்றும் அவர்களுடைய மனைவிகளான சீதா, ருக்மணி லக்ஷ்மி பார்வதி முதலானவர்கள் பெரும் மகாராணிகளென்றும் உலகம் அறிந்த விஷயமேயாகும். அவர்களுடைய விக்கிரகங்களை ஆலயங்களில் ஸ்தாபித்து பூசாரிகள் அவர்களுடைய பெயரால் பிச்சையெடுக்கிருர்கள். அவ்விதம் செய்வதினுல் அவர்களை ஆண்டிகளாகச் செய்துவிட்டார்கள். "மகாராஜ்! சேட்!! சாவுகாரி!!! பெரியோர்களே வாருங்கள், தரிசனஞ்செய்யுங்கள். சரணும்ருதத்தை யருந்துங்கள். கொஞ்சம் ஏதாவது கொடுங்கள். சீதாராம், கிருஷ்ண, ராதாகிருஷ்ண, லக்ஷிமீநாராயண, மகாதேவ பார்வதி இவர்களுக்கு மூன்று தினமாக அன்னபானங்கிடையாது.

இன்றைக்கும் இவர்களிடம் ஒன்றுமில்லை. சீதை முதலானவர்களுக்குப் புதிய மூக்குப் பொட்டு ஒன்று செய்து கொண்டு வாருங்கள். அம்மா! அவர்களுக்கு அளிக்க அன்னம் முதலியவைகளை யனுப்புங்கள். ராமகிரு

ஷ்ணர்கள் சாப்பிடட்டும். எல்லோருக்கும் ஆடை உடைகள் கிழிந்ததாயிருக் கிறது. கோவில் மண்டபத்தில் பழுது, எனவே ஒழுகுகிறது. விக்கிரகத்திற் கென்றிருந்த சிலவற்றையும் திருடர்கள் திருடிக்கொண்டு போய் விட்டார்கள். கொஞ்சம் எலிகளால் நாசஞ்செய்யப்பட்டுப் போய்விட்டது. கண் கூட்டிலிரு ந்து ஒரு நாள் விழியை எடுத்துக் கொண்டோடி விட்டது. எங்களால் வெள்ளிக் கண் திரும்பவைக்க முடியாதாகையினல் கிளிஞ்சலை வைத்திருக்கிறோம்." என்று கூவி பிச்சை யெடுக்கிறார்கள். ராமலீலையும், ரசக்கிரீடையும நடித்துக் காண்பிக்கிறார்கள். சீதாராம், ராமகிருஷ்ணனுடைய நாட்டியத்தை நடனஞ் செய்கிறார்கள். அச்சமயங்களில் அதிகாரிகள் ராஜா, மகந்து முதலானவர்கள் அதைக் கண்ணுற்றுப் பார்க்கிறார்கள். சீதையும் ராமரும் ஆலயத்தில் நின்று கொண்டிருக்கும் பொழுது பூஜாரி மகந்து இவர்கள் சுகமாய் பீடத்திலாவது அல்லது மஞ்சத்திலாவது தலையணையை ஆதாரமாக வைத்துக் கொண்டு சாய்ந்து உட்கார்ந்திருக்கிறார்கள். வெயில் காலத்திலுங் கூட தாழ்ப்பாளி ட்டு உள்ளடைத்து விட்டிருக்கிறார்கள். தாங்கள் நல்ல காற்றில் கட்டிலை விரித்துப் போட்டுக் கொண்டுத் தூங்குகிறார்கள். பூஜாரிகள் தங்களுடைய நாராயணனை டப்பியில் மூடிவைத்து துணியைக் கொண்டு வெளியில் சுற்றி, குரங்குகள் தங்கள் குட்டியை கழுத்தில் தொங்க விட்டுத் தூக்கிக் கொண்டு போவது போல் தொங்கவிட்டுக் கொண்டிருக்கிறார்கள். விக்கிரகத்தை எவரா வது உடைத்து விடுவார்களேயானல் அப்பொழுது அழுகுரலுடன் மாரை அடித்துக் கொண்டு "சீதாராமர், ராதாகிருஷ்ணர், சிவன் பார்வதிஇவர்களைத் துஷ்டர்கள் உடைத்து விட்டார்கள். வேறொரு விக்கிரகத்தை நல்ல ஆட்களைக் கொண்டு சலவைக் கல்லால் செய்து பூஜை செய்யவேண்டு மென்று" புலம்பு கிறார்கள். நாராயணனுக்கு நெய் யில்லாமல் ஆகாரம் அளிக்க முடியாது, "உன்னால் அதிகமாகக் கொடுக்க முடியாமற் போனாலும் கொஞ்சமாவது கொடுத்தனுப்ப வேண்டியது" என்கிறார்கள். ரசக்கிரீடை ராமலீலை, முதலா னவைகளுடைய முடிவில் சீதை, ராமன், கிருஷ்ணன் ராதை வேடந்தரித்துக் கொண்டிருக்குஞ் (சிறுவர்களை) அனுப்பி (பார்க்கிறவர்களிடமிருந்து) பிச்சை யெடுக்கச் சொல்லுகிறார்கள். உத்சவம் அல்லது சந்தை நாட்களில் பையன் ஒருவனை யழைத்து தலையில் மகுடத்தை வைத்து கிருஷ்ணனுக மாற்றி நடுத் தெருவில் நிற்கவைத்து பிச்சை யெடுக்கச் சொல்லுகிறார்கள். இது எவ்வளவு அவமானமான செய்கை யென்று இதைப் படிக்கிறவர்களே ஊகித்துக்கொள்ள ட்டும். சீதை ராமன் முதலானவர்கள் இவ்வளவு ஆண்டிகளாகவும் பிச்சைக்கார ர்களாகவுமா விருந்தார்கள்? இப்படிச்செய்து காண்பிப்பதினல் அவர்களுக்கு ஏன் அவமரியாதையும் ஏளனமும் உண்டாகாது? இதனலேயே மரியாதை யுள்ளவர்களுக்கு நிந்தை உண்டாகிறது. அவர்களிருந்த காலத்தில் சீதை உருக் மணி லக்ஷ்மி, பார்வதி முதலானவர்களை நடுத்தெருவில் கடைமேடையில் நிறு த்திவைத்து "வாருங்கள்! இவர்களைத் தரிசனஞ் செய்யுங்கள். நைவேத்தியம் ஏதாவது படையுங்கள்" என்று சொல்லி யிருந்தால் இவ்விதச் செயல்களைச்செ ய்ய விட்டிருக்கமாட்டார்கள். இகழ்ச்சிக்கும், கேலிக்கும், ஆளாக்கி யிருந்தால் அவர்களைத் தண்டனை யன்னியில் விட்டிருக்கமாட்டார்கள். தண்டனையையடை

யாத பூஜாரிகள் அதிகரித்து, மூர்த்தி விரோதிகளுடைய கை யப்புடைத்தலுக்கு ஆளாகி இன்னும் இருக்கிறார்கள். இத்துன்மார்க்கத்தை விடும் வரையில் இருந்தே வருவார்கள். ஆரியவர்த்த நாட்டிற்குப் பிரதி தினமும் பெருந்தீங்கு விக்கிரக ஆராதனைக் காரர்களுடைய ஒடுக்கத்தினாலேயும் அவர்களுடைய துர் செயல்களினாலேயேயும் விளைகிறது. ஏனெனில் பாபத்தினுடைய பலன் துக்கமாகும். விலங்குகள் முதலான விக்கிரகங்களுடைய நம்பிக்கையினால் வெகுஜனங்கள் தீங்கை யடைந்திருக்கிறார்கள். இத்திய வழக்கத்தை விடாமல் போனால் பெருகிக் கொண்டே போகும். இவர்களில் (விக்கிரக பூஜை செய்கிறவர்களில்) பெரும் பாதகர்கள், வாமமார்க்கத்தவர்களே. அவர்கள் சாதாரணமான ஒருவனைச் சிடனாக்கிக் கொண்டால் கீழ்க்கண்ட தந்திரங்களை உபதேசஞ் செய்கிறார்கள்.

**दं दुर्गायै नमः । भं भैरवाय नमः । ऐं ह्रीं क्लीं चामुण्डायै विच्चे ॥**

தம் துர்காயை நமஹ (துர்காதேவியை வணங்குகிறோம்). பம் பைரவாய நமஹ (பைரவனை வணங்குகிறோம்) ஏம் ஹ்ரீம் கிலீம் சாமுண்டாயை நமஹ. வங்காளத்தில் ஏகாக்ஷரமந்திரத்தையே பெரும்பாலும் உபதேசஞ் செய்கிறார்கள்.

**ह्रीं, श्रीं, क्लीं ॥**

ஹ்ரீம், ஸ்ரீம், கிலீம், சிடர்கள் தனவந்தர்களாயிருந்தால் மந்திரம் முழுவதையும் கற்பிக்கிறார்கள். பத்து மகாவித்தையின் மந்திரங்களாவன

**हां ह्रीं हुं बगलामुख्यै फट् स्वाहा ॥**

**हुं फट् स्वाहा ॥**

ஹ்ராம், ஹ்ரீம், ஹ்ரூம், பகலா முக்யைபட், ஸ்வாஹா,

ஹ்ரூம், பட் ஸ்வாஹா,

பிறர்களைக் கொல்லுவதற்கும் பெண்களின் கற்பை யழிப்பதற்கும், கணவர்களிடமிருந்து அவர்களைப் பிரிப்பதற்கும் தன் வசமாக்கிக் கொள்ளுவதற்கும் இன்னும் பலவற்றிற்கும் மந்திரங்களை உபயோகமாக்கிக் கொள்ளுகிறார்கள். இக்காரியங்களைச் சாதிக்க மந்திரனாத்தினலாகாது. ஒருவனைக் கொல்ல முற்படுங்காலத்தில் கொலை செய்ய வேண்டுமென்கிறவரிடமிருந்து, முன்கொண்டே பேசின தொகையைப் பெற்றுக்கொள்ளுகிறார்கள். கொலை செய்யவேண்டிய வனுடைய பிரதிமையொன்றை மாவினாலோ அல்லது மண்ணினாலோ செய்து அதனுடைய மார்பு, நாபி, கழுத்து, இவைகளில் கத்தியை நுழைக்கிறார்கள். கண், காது, கால்களில், ஆணியை அடிக்கிறார்கள் அதன் பேரில் பைரவன் அல்லது துர்காவினுடைய விக்கிரகம் ஒன்றைச் செதுக்குகிறார்கள். அதனுடைய ஒரு கையில் திரிசூலத்தைக் கொடுத்து ஹிருதயத்தில் குத்துகிறார்கள். பலிபீடம் ஒன்று செய்து மாம்சம் முதலானவைகளை ஹோமஞ் செய்துகொண்டு தூதர்களையனுப்பி விஷம் முதலானவை

களைக்கொடுத்து மரண உபாயத்தைத் தேடுகிறார்கள். இக்கிரியைகள் நடந்து கொண்டிருக்குங்கால் அவன் கொல்லப்பட்டு விட்டால் அவனை பைரவதேவருடைய சித்தன் என்று அழைத்துக் கொள்ளுகிறார்கள். "பைரவோ, பூத, நாதாஸ்ச" என்கிற பாடத்தையும் படிக்கிறார்கள்.

**मारय, उच्चाटय, विद्वेषय, छिन्धि, भिन्धि, वशीकुरु, खादय, भक्षय, त्रोटय, नाशय, मम शत्रून् वशीकुरु, हुं फट् स्वाहा ॥**

மாரய, உச்சாடய, வித்வேஷய, பிந்தி, வசீகுரு, காதய, பக்ஷய, த்ரோடய, நாசய, மமசத்ரூன் வசீகுரு, ஹூம் பட் ஸ்வாஹா, இம்மந்திரங்களை ஜபித்து மதுபானம் மாம்சாகாரம் இவைகளை மனங்கொண்ட வரையில் குடித்துக் கொண்டு இரண்டு புருவங்களுக்கும் நடுவில் செந்தூர திலகமணிந்து கொள்ளுகிறார்கள். சில சமயங்களில் ஆட்களைக் கொண்டு வந்து அடித்து ஹோமம் செய்து அவன் மாம்சத்தைக் காளி முதலானவைகளுக்குச் சமர்ப்பிக்கிறார்கள். பலி பீடத்திலிட்டு அதைச் சாப்பிடவும் சாப்பிடுகிறார்கள். பைரவீசக்கரத்தில் சேர்ந்து மாம்சாகாரம் மதுபானம் செய்ய மறுக்கிறவர்களைக் கொன்று அவனுடைய மாம்சத்தைப் பலி பீடத்திலிடுகிறார்கள். **அகோரிகள்** இறந்த சரீர மாம்சத்தையும் சாப்பிடுகிறார்கள். **அஜரீகளும் பஜரீகளும்** மலத்தைச் சாப்பிட்டு மூத்திரத்தையுங் குடிக்கிறார்கள். வாம மார்க்கத்தவர்களில் இருதிறத்தினர்களிருக்கிறார்கள். **சோளீமார்க்கி**—ரவிக்கை வழியைக் கைப் பற்றினவர்கள். பீஜமார்க்கி—விரை அல்லது பீஜமார்க்கத்தவர்கள்.

### சோளீமார்க்கி

சோளீமார்க்கிகள்—தங்கள் மனைவிகள், புருஷர்கள் பிள்ளைகள் பெண்கள், சகோதரர்கள், தாய்மார்கள் நாட்டுப் பெண்கள்—ஒன்றாக ஒரு விடத்தில் ரகசியமாகக் கூட்டங்கூடி மதுபானம் செய்கிறார்கள். ஸ்திரீ ஒருவளை நிர்வாணமாகச் செய்து அவளுடைய இரகசிய இந்திரியங்களைப் பூஜித்து **துர்காதேவி** என்றும் அழைக்கிறார்கள். மனிதனொருவனை நிர்வாணமாகச் செய்து அவனுடைய இரகசிய இந்திரியங்களுக்குப் பெண்களெல்லோரும் பூஜை செய்கிறார்கள். மதுபானஞ் செய்து மயக்கம் தெளிந்த பிறகு அங்கு குமிழி யிருக்கும் ஸ்திரீகள் எல்லோரின் ரவிக்கைகளை ஒன்றாகச்சேர்த்து குலுக்கி ஒரு மட் பாண்டத்தில் வைக்கிறார்கள். ஒவ்வொருவனும் தனித்தனியாக அங்கு போய் பாண்டத்தினுள்ளிருக்கும் ரவிக்கை யொன்றை எடுத்துக் கொள்ளுவான். ரவிக்கைக் குரியவள்—தன்னுடைய தாய் சகோதரி பெண் நாட்டுப் பெண்—யாராயினும் அந்தச் சமயம் அவனுடைய மனைவியாவாள். மயக்கவேகத்தினால் ஒருவருக்கொருவர் செருப்பு முதலானவைகளினால் அடித்து சண்டை செய்து கொள்ளுகிறார்கள். இரவை இவ்விதம் கழித்த பிறகு பொழுது புலராம லிருக்கும் பொழுதே வீடடைந்து தங்கள், தாய், சகோதரி, பெண்கள், நாட்டுப் பெண்கள், முதலானவர்களைச் சரியாக அறிந்து அப்படியே நடத்தியும் வருகிறார்கள்.

பீஜமார்க்கிகள் சம்யோக சமயத்தில் ஜலத்தில் வீரியத்தைக் கலந்து குடிக்கிறார்கள். இத்தகைய ஈனக் காரியங்கள் முத்தியை யளிக்குமென்று நம்புகிறார்கள். சாதாரணமாக அவர்கள் அறிவு, விசாரணை சகவாசம் இல்லாதவர்கள்.

## சைவம்.

வினா:—சைவர்கள் சரியானவர்களா?

விடை:—எப்படி சரியாகக் கூடும்? "பிரேத நாதனைப் போலவே பூத நாதனும்". வாமமார்க்கிகள் மந்திரோபதேசத்தினால் பணத்தை அபகரிப்பது போலவே, சைவர்களும் "ஓம் நமசிவாய:" என்பவைகளைப் போன்ற பஞ்சாக்ஷர மந்திரங்களை உபதேசஞ் செய்து உருத்திராக்ஷம், விபூதியணிந்து, மண், கல் முதலானவைகளினால் லிங்கத்தைச் செய்து பூஜை செய்கிறார்கள். "ஹர ஹர, பம்பம்" என்கிற சப்தத்தை ஆடு கனைப்பதுபோல் கனைக்கிறார்கள். கரகோஷஞ் செய்வதினாலும் பம்பம், என்று சொல்லுவதினாலும் பார்வதி திருப்தி யடைகிறாளென்றும், மகாதேவன் பஸ்மாசுரன் முன்னால் ஓடின காலத்தில் கேலிச்சிரிப்பும் பம்பம் சப்தமும் உண்டானபடியினால் அவர் திருப்தியடைகிறதில்லை என்று சொல்லுகிறார்கள். ஆட்டைப்போல் கனைப்பதினால் பரமேச்வரன் திருப்தியடைகிறாராம். பார்வதி திருப்தியடைகிறதில்லையாம். ஏனெனில் பார்வதியுடைய பிதா தக்ஷப்பிரஜாபதியுடைய தலைவெட்டுண்டு அக்னிகுண்டத்தில் எறியப்பட்டபொழுது, அவருடையசரீரத்தின் மேல்ஆட்டின் தலையைவைத்தார்கள். அப்பொழுது ஆட்டைப்போல்கனைத்தார். காற்று நிறைந்த கன்னங்களை மாறிமாறி அடிப்பதினால் இச்சப்தம் உணடாகும். சிவராத்திரி யன்றுகண்விழிப்பார்கள். இவைகளெல்லாம் முத்தியையளிக்குமென்று நம்பிக்கைகொண்டே வாமமார்க்கிகளைப்போலவே இவர்களும் வழிதப்பினவர்கள். துளைத்தகாதுடன்கூடின பக்கிரிகள், நாதர்கள், புரிகள், ஆரண்யர்கள், பர்வதர்கள், சாகரர்கள், கிரகஸ்தர்கள் இவர்களெல்லாம் சைவர்களே. சிலர் இரண்டு குதிரைகளிலும் சவாரி செய்வார்கள். அதாவது சைவம் வாமமார்க்கம் இரண்டையும் நம்புவார்கள். வைணவர்களாயுமிருக்கிறார்கள். தந்திரபுஸ்தகங்களிலொன்றில் கூறுவதென்ன வென்றால்.

**अन्तः शक्ता बहिश्शैवाः सभामध्ये च वैष्णवाः ।**
**नानारूपधराः कौला विचरन्ति महीतले ॥**

அகத்தில் வாமமார்க்கிகள். வெளியில்சைவர்கள். அதாவது உருத்திராக்ஷம் விபூதிதரிக்கிறவர்கள். சமூகத்தின் நடுவில் வைணவர்களென்பார்கள். இம்மாதிரி பலவித வேஷங்களைத் தரித்துக்கொண்டு வாமமார்க்கிகள் உலகில் திரிந்து வருகிறார்கள்"

## வைணவம்.

வினா:—வைணவர்கள் உண்மையானவர்களா?

விடை:—கொஞ்சங் கூட இல்லை.

அவர்களெப்படியோ இவர்களுமப்படியே. விஷ்ணுவின் தாசர்கள் என்கிறார்கள். ஸ்ரீவைணவர்களேன்னும் படியான சக்கராங்கிதர்கள் எல்லோரையும் விட உயர்ந்தவர்களென்கிறார்கள். இது வீண் பொய்யே.

வினா: —என்ன இது இல்லாததா? எல்லோரையும்விட உயர்ந்தவர்களே. நாராயணனுடைய சரணமகலங்களையொத்த திலகத்தையும் ஸ்ரீயுடைய மஞ்சள்கோட்டையும் அணிந்துகொள்ளுகிறோம். இதனாலேயே நாங்கள் ஸ்ரீவைணவர்களாகிறோம். நாராயணனைத்தவிர வேறுயாரையும் பணிகிறதில்லை. லிங்கத்தின் தரிசனங்கூடசெய்கிறதில்லை. தரிசனம்செய்தால் எங்கள்நெற்றியிலிருக்கிற ஸ்ரீவெட்கப்படுகிறாள். ஆல் மந்தரம் முதலான தோத்திரங்களைப்படிக்கிறோம். நராயாணனை மந்திரானுகூலமாய்ப் பூஜைசெய்கிறோம். மாம்சம் சாப்பிடுவதில்லை. மதுபானம் செய்வதில்லை. எனவே உயர்ந்தவர்கள்.

விடை :—உங்களுடைய நெற்றியிலுள்ள அடையாளத்தை நாராயணனுடைய பாதமாகவும் மஞ்சள்கோட்டை ஸ்ரீயாகவும் நினைப்பதுவீணே. ஏனெனில் இது உங்களாலேயே தரிக்கப்பட்டது. ஊர்வலயானைநெற்றியிலெழுதுவது போல் உங்களுடைய நெற்றியிலும் எழுதிக் கொள்கிறீர்கள். நெற்றியில் விஷ்ணு பாதங்களுடைய குறிகள் எங்கிருந்து வந்தது? வைகுண்டம்போய் பாதங்களுடைய முத்திரையை நெற்றியில் கொண்டுவந்தார்களா? ஸ்ரீ சடமா? சேதனமா?

விடை :—சேதனம்.

வினா :—இக்கோடு ஜடமான படியினால் ஸ்ரீயாகாது. ஸ்ரீ செய்யப்பட்டவளா படாதவளா, வென்றுகேழ்க்கிறோம்? செய்யப்படாதவளா யிருந்தால் இது ஸ்ரீயாகாது, ஏனெனில் தினந்தோரும் இதை நீங்களே தரிக்கிறீர்க்ள். ஸ்ரீநெற்றியில் வாசம்செய்யும் பொழுது எத்தனை வைணவர்களின் முகம் சோபை யன்னியிலிருக்கிறது. நெற்றியில் ஸ்ரீ யிருக்கும்பொழுது வீடுவீடாக ஏன் பிச்சையெடுத்து வயிறு வளர்க்கவேண்டும்? வெட்கமற்றவும் பிடிவாதமுள்ளவர்கள் நெற்றியில் ஸ்ரீயை வைத்துக்கொண்டு பெருந் தரித்திரர்களைப் போல் நடிப்பது போலவேயாம்.

பரிக்கால் என்ற பெரும் வைணவபக்தன் ஒருவனிருந்தான். மற்றவர்களைக் கொள்ளையடித்துத் திருடி மோசம் செய்து பாசாங்குபண்ணி பணத்தைப் பெற்று வைணவர்களுக்களிப்பதில் அவனுக்குப் பெருஞ் சந்தோஷம். ஒரு சமயத்தில் அவனுக்குத் திருடுவதற்கு ஒன்றுங் கிடைக்கவில்லை. மோசம் செய்வதற்கும் துணை கிடைக்க வில்லை. எனவே, மனோவியாகூல மடைந்து திரிந்து கொண்டிருக்கும் பொழுது நம்முடைய பக்தன் துக்கத்திலிருக்கிறான் என்று விஷ்ணு அறிந்துகொண்டார். அறியவே பெரிய சாவகாரியைப்போல் வேஷந்தரித்துக்கொண்டு மோதிரம் முதலானவைகள் அணிந்து ரதத்திலுட்கார்ந்து விஷ்ணு, அவன் எதிரே வந்தார். பரிக்கால் அவரிடம் சென்று "இருக்கிற பொருள்கள் எல்லாவற்றையும் கழற்றிவிடு. இல்லாவிடில் உதைத்துக் கொன்றுவிடுவேன்" என்று உரக்கக் கூவினான். கழற்றுவதற்கு நாராயணன்

கொஞ்சம் தயங்கின படியினால் பரிக்கால் அவர் கை விரலைவெட்டி மோதிரத்தை எடுத்துக் கொண்டான். நாராயணன் களிப்படைந்து சதுர்புஜ சரீரத்துடன் தரிசனங்கொடுத்து "நீ என்னுடைய ஆப்தமான பக்தன். திருடு, கொலை, மோசம் முதலானவைகளினால் பொருள்களை அபகரித்து வைணவர்களுக்களிக்கிறாய். இதனால் நீ புனிதனாகிறாய்" என்றருளினார். பரிக்கால் சென்று சகல பொருள்களையும் வைணவர்களுக்கு அளித்தான். கப்பல் வியாபாரி ஒருவரிடம் பரிக்கால் வேலைக்கு அமரவே அவரும் ஒரு சமயத்தில் கப்பலில் தூர தேசத்திற்கு அழைத்துச் சென்றார். திரும்பி வரும் பொழுது வியாபாரி கப்பல்நிறைய கொட்டைப்பாக்கை நிறைத்திருந்தான். பரிக்கால் கொட்டைப் பாக்கு ஒன்றை யெடுத்து இரண்டு சரி துண்டாக்கி ஒரு பாதியை கப்பலில் போட்டுவிட்டு "கப்பலில் பாதிப்பாக்குப்" பரிக்காலுடையது என்று வியாபாரியை எழுதச் சொன்னான். வியாபாரி அவ்விதம் எழுதவேண்டிய அவசியமில்லை, வேண்டுமானால் ஆயிரம் பாக்கு எடுத்துக்கொள் என்றார். அதற்குத் தான் மோசம்செய்கிறவனில்லை என்றும், பிறருடையதைத் தன்னுடையதென்று பொய் சொல்லுகிறவனில்லை யென்றும் தன்னுடைய பாதிப்பாக்கே தனக்கு வேண்டியதென்றும் சொன்னான். வியாபாரி ஒன்றுமறியாது எளிதில் மோசம் போனான். பரிக்கால் கோரினவண்ணம் எழுதிக்கொடுத்தார். கரைவந்தவுடன் கப்பற் சரக்குகளை இறக்குந்தருவாயில் பாக்கில் பாதியை பரிக்கால் கேட்க வியாபாரி கொடுத்தான். பரிக்கால் அதைப் பெற்றுக்கொள்ளாமல் கப்பலில் பாதி பாக்கு தன்னுடையதென்றும், அப்பங்கு தனக்குச் சேரவேண்டும் என்றும் சொன்னான். நியாயஸ்தலத்திற்கும் பிராது செய்து கொண்டான். நியாயாதிபதி வியாபாரிக்கு விரோதமாகவே தீர்ப்புத் தந்தார். பாக்கில் பாதிப் பங்கைபெற்றுக் கொண்டு வைணவர்களிடம் அவைகளைச் சமர்ப்பித்தான். இன்றும் பரிக்காலனின் விக்கிரகத்தை ஆலயங்களில் வைத்துப் பூஜை செய்கிறார்கள். இக்கதையைப் பக்தமாலையில் காணலாம். வைணவர்கள், அவர்களுடைய சிஷ்யர்கள், நாராயணன் இம்மூவர்களும் கொள்ளைக் கூட்டத்தைச் சார்ந்த பூசாரிகளா, வென்பதைப் புத்திமான்கள் யோசித்தல் அவசியம். இவைகளொன்றிலிருந்து கொண்டு நல்லவனாயிருக்கலாம். ஆனால் எல்லாவற்றிலுமிருந்து கொண்டு எப்பொழுதும் நல்லவனாயிருக்க முடியாது. திலகத்திலும் மாலையிலும் வித்தியாசப்பட்டு எவ்வளவு விதங்களாக பிரிக்கப்பட்டிருக்கிறார்களென்பதைக் கவனிக்க வேண்டியது. ராமனந்திகள் கோபிச்சந்தனமும் நடுவில் சிகப்புக் கோடுடன் திலகமும் வைத்துக் கொள்ளுகிறார்கள்; நிமாவதர்கள் இரண்டு குறுகிய கோடுகளின் மத்தியில் கருப்புப் பொட்டு ஒன்றையும், மாத்வர்கள் நடுவில் கருப்புக்கோடு ஒன்றையும் அணிந்துகொள்ளுகிறார்கள். கௌடவங்காளிகள் வாளையொற்ற குறி, ராமப்பிரசாதிகள் இருபக்கமும் அரைச் சந்திரபிம்பமும் நடுவில் வட்டமான வெள்ளைக் குறியும் கொள்கிறார்கள். அவைகளின் கருத்தும் வகுப்புக்கேற்ற வாறு மாறுகின்றன. ராமனந்திகள் சிகப்புக் கோட்டை நாராயணன் மார்பிலுள்ள லக்ஷ்மியெனவும் கோசாவிகள் கிருஷ்ணனுடைய மார்பிலுள்ள ராதை யெனவும் எண்ணுகிறார்கள்.

பக்தமாலையில் கீழ்க்கண்ட சிறிய கதை யொன்றுண்டு.

மர நிழலில் ஒரு மனிதன் படுத்துத் தூங்கிக்கொண்டிருந்தான். தூங்கிய வண்ணமே இறந்தும் போனான். மேலே யிருந்து காகம் ஒன்று எச்சமிட்டது. அவன் நெற்றியில் அது விழுந்து திலகமாக விளங்கிற்று. யமதூதர்கள் அவனை அழைத்துச் செல்லவந்தார்கள். அதே சமயத்தில் விஷ்ணு தூதர்களும் அங்கு வந்தார்கள். சரீரத்தை எடுத்துச் செல்லுவதில் சண்டையுண்டாச்சுது. சவத்தைத் தாங்கிச் செல்ல இருவர்களும் தங்கள் தங்கள் எஜமானனுடைய உத்திரவைக் காண்பித்தார்கள். விஷ்ணு தூதர்கள் "வைகுண்டத்திற்கு அழைத்துச் செல்ல எங்களுடைய எஜமானன் உத்திரவாயிருக்கிறது, பாருங்கள். நெற்றியில் வைணவதிலகம் இருக்கிறது, என்றார்கள். அப்பொழுது யமதூதர்கள் ஒன்றும் பேசாமல் ஒதுங்கினார்கள். விஷ்ணுவின் தூதர்கள் வைகுண்டத்திற்கு எடுத்துச் செல்ல நாராயணனும் அங்கு வந்தார். தானாகவே உண்டான திலகத்திற்கு இவ்வளவு மகிமை யுண்டானால் பிரேமையுடன் தன் கையினாலேயே தீட்டிக் கொண்டால் நரகத்திலிருந்து மீறி வைகுண்டத்திற்குச் செல்வார்களென்பதில் என்ன அதிசயமிருக்கிறது? நெற்றியில் சிறு திலகம் வைத்துக் கொள்ளுவதினால் வைகுண்டம் போனால், முகம் முழுவதையும் அல்லது சரீரம் முழுவதும் கருப்பாக்கிக் கொள்வதினாலும் பூசிக்கொள்வதினும் வைகுண்டத்திற்குப் போவார்களா? மாட்டார்களா? இவைகளெல்லாம் எனவே பொய்யென்று தோன்றவில்லையா?

வைணவர்களில் காகிகள் அநேகம்பேர்கள் இடுப்பைச்சுற்றித் துணியைக் கட்டிக் கொண்டு, அனல் முன் உட்கார்ந்து கொண்டு, சடையை வளரவிட்டு சித்தர்களுடைய வேடத்தைத் தரித்து பெருந்தியானத்திலிருப்பது போலிருக்கிறார்கள். கஞ்சா, அபினி, பங்கி, முதலியவைகளைக் குடித்து கண்களைச் சிவப்பு நிறமாகவும் கலங்கினதாவும் செய்து கொண்டு கைப்பிடிமாவு, தானியம், காசு, முதலானவைகளைப் பிச்சையெடுத்து கிரகஸ்தர்களுடைய மக்களை ஏமாற்றி தன் சீடர்களாக்கிக் கொள்கிறார்கள்.

இவர்கள் அனேகமானவர் தொழில் செய்யும் வகுப்பைச் சேர்ந்தவர்களே. அறிவையடைவதில் ஆசையுள்ளவர்களைக் கண்டால் அவர்களைப் படிக்கவும் விடாது, செய்யும் உபதேசமாவது.

சந்தர்கள் (தெய்விகத்தன்மை வாய்ந்தவர்கள்) படிப்பதினால் யாது பிரயோஜனம்? வித்தையை கற்கிறவர்கள் இறந்து போகிறார்கள். ஏன் படித்துப் பல்லை நாசமாக்கிக் கொள்ளவேண்டும்? சாதுக்கள் ஊரைச் சுற்றித் திரிந்து சந்தர்களுடைய பணிவிடை செய்து ராமருடைய பஜனையைச் செய்ய வேண்டும்.!!

மடத்தனம், அறிவின்மை இவைகளுடைய உருவத்தைக் கண்டறியாதவர்கள் காகியைத் தரிசிக்க வேண்டும். தன்னிடம் வரும் எல்லோரையும்—தன் பெற்றோர்களுடைய வயது ஆனவர்களான போதிலும்—குழந்தாய் என்றழைப்பான். காகிகளைப் போலவே ரூகட, கூம்கட, கோதர்யர்கள், ஜமாதவாலர்கள், சுத்ரேசரிகள், அகாலியர்கள், துளைத்த காதுகளையுடைய ஜோகிகளும்.

### காகியும் பண்டிதனும்.

காகியுடைய சீடன் ஒருவன் பாடஞ் செய்யும் பொருட்டு ஸ்ரீகணேசாயநம: என்று சொல்லிக் கொண்டேயிருந்தான். சொல்லிக் கொண்டே கிணற்றிலிருந்து நீர் இழுக்கப் போனான். கிணற்றண்டையிருந்த வடமொழிப் புலவர் ஒருவர் "ஸ்ரீகணேசாஜன்னம" என்று சொல்லுவதைக்கேட்டு "ஏ சாது பிழையுடன் கூறுகிறீர். ஸ்ரீகணேசாயநம: என்று சொல்லவேண்டும் என்றார். குடத்து நிறைய ஜலமிழுத்துக் கொண்டு குருவிடம் சென்று யாரோ 'பொம்மன்' (பிராம்மணன்) நான் பிழையுடன் ஜபிப்பதாகச் சொன்னான், என்றதைக் கேட்டதும் அவன் எழுந்திருந்து நேராகக் கிணற்றண்டை சென்று புலவரைப் பார்த்து" என்னுடைய சீடனைத் தப்பு வழியில் திருப்புகிறீர், சபிப்பேன். உனக்கு என்ன தெரியும். பார், உனக்கு ஒரே பாடந்தான் தெரியும். எனக்கோ மூன்று தெரியுமே 'ஸ்ரீகனேசாஜன்னமே; ஸ்ரீகனேசாயந்நமே ஸ்ரீகனேசாயாநயமே என்றான்.

புலவர்:—கேளும் சாது. வித்தையைப் பயிலுவது மிகவும் கஷ்டமானது. படிக்காமல் எதுவும் வராது.

காகி:—போ இங்கிருந்து. வடமொழிப் புலவர்கள் எல்லோரையும் உறிஞ்சியிருக்கிறோம். உரலும் உலக்கையுங் கொண்டு பொடியாக்கி கஞ்சா கஷாயத்தில் கலந்து அப்படியே குடித்திருக்கிறோம். சந்தர்களுடைய பலமே பெரியது. பிதற்றுகிறவனை உனக்கு என்ன தெரியும்?

புலவர்:—நீ வித்தை கற்றறிந்தவனாயிருந்தால் என்னிடம் பிழை கண்டிருக்கமாட்டாய். முறையாக நடந்துக்கொள்ள உனக்குத்தெரிந்திருக்கும். காகி "நீ என்னுடைய குருவாகவா விரும்புகிறாய்? உன்னுடைய உபதேசங்கள் எனக்கு வேண்டாம்" என்று பிதற்றினான்.

புலவர்:—கேழ்க்கிற புத்தி உனக்கு எங்கிருந்து வரும். உபதேசத்தைக் கேட்டுதெரிந்து கொள்ள அறிவு வேண்டுமே.

காகி:—சகல வேதம் சாஸ்திரங்களைப் படித்து சந்தர்களை சத்காரஞ் செய்யாதவர்கள் படித்தும் படிக்காதவர்களாகிறார்கள்.

புலவர்:—நான் சந்தர்களைக் கண்டு செவ்வனே பேணினவன். ஆனால் உன்னைப்போல ஒழுக்கநெறிகளில் தவறினவர்களைப் பணியேன். நல்லோர்கள் வித்வான்கள் தர்மமுள்ளவர்கள், பரோபகாரிகள் இவர்களே சந்தர்கள்.

காகி:—பாருங்கள். அல்லும் பகலும் நிர்வாணமாயிருக்கிறோம். எரிநெருப்பு முன்னால் எல்லாக் காலங்களிலும் உட்கார்ந்திருக்கிறோம். அதிகமாக கஞ்சா சாப்பிடுகிறோம்; மூன்றுசாடி பங்கி 24 மணிநேரத்திற்குள் குடிக்கிறோம். அபினி முதலிய லாகிரி வஸ்துக்களை நெய் சரி இவைகளைப்போல் சாப்பிடுகிறோம். விஷப் பாஷாணம் அபினி முதலானவைகளையும் சாப்பிடுகிறோம்; அல்லும் பகலும் குடிமயக்கத்திலிருக்கிறோம்; கவலை விசாரம் என்பது கிடையாது. எதற்கும் அஞ்சுகிறதில்லை (பிச்சையெடுத்து) வசிக்கிறோம்; பக்கத்தில்

படுத்துத் தூங்குகிறவர்களுக்குத் தூக்கம்வராவண்ணம் பார்ப்பதுகடமை என்பதை மறந்தோம். இத்தகைய அருங்குணங்களைப் படைத்தவர்களா யிருக்கிறோம். நீங்கள் ஏன் எங்களை தூஷிக்கவேண்டும்? பிதற்றுகிற சிறுவனே! ஞாபகத்தில் வைத்துக்கொள்!! என்னைமறுபடியும், தொந்திரவுசெய்தால் இக்கணமே பொடியாக்கி விடுவேன்''

புலவர்:—இந்த லக்ஷணங்களெல்லாம் சாதுவில்லாதவன், மூர்க்கன், எத்தன் இவர்களுடையதே. "சாத்னோதி பராணி தர்மகாரியாணி சாது:" சிறந்த தர்மகாரியங்களைச் செய்கிறவன் எப்பொழுதும் பரோபகாரச்சிந்தை யுள்ளவன் துர்குணமில்லாதவன், சத்யோபதேசத்தினால் சகலருடைய உபகாரத்தை யுஞ்செய்கிறவன், இக்குணமுடையவர்களையே சாது வென்கிறார்கள்.

காகி :—விலகிப்போ ? சாதுக்களுடைய கர்மங்களைப்பற்றி உனக்கு என்னதெரியும்? சந்தர்களுடைய பலம் பெரியது. அவர்களுடன் கைகலக்காதே. இரும்புக்குறடுகளைக் கொண்டு உன்தலையை உடைத்து விடுவார்கள்.

புலவர்:—நல்லது காகி. உங்கள் வீடுபோய்சேருங்கள். என்னுடன் கோபம் வேண்டாம். இப்பொழுது யாருடைய அரசாட்சி நடக்கிறதென்று அறியீர் போலும். நீங்கள் எவரையாவது அடித்தால் உங்களைக்கைதுசெய்து ஜெயிலுக்கனுப்புவார்கள். கசையடிப்பார்கள். அல்லது ஏற்றசிக்ஷையை யளிப்பார்கள். அப்பொழுது என்ன செய்வீர்கள். இதுவோசாதுக்களுடைய லக்ஷணங்கள்.

காகி :—கூட வா. என்சிட்டினை எந்தபெரும் பிசாசை என்னிடம் காண்பித்துக் கொடுத்தாய்?

புலவர் :—பெரியோர்களுடைய சேர்க்கை கிடையாது உனக்கு. இருந்திருந்தால் இவ்வளவு அடர்ந்த அஞ்ஞானத்திலிருக்கமாட்டாய்?

காகி :—நானே மகாத்மாவாச்சுதே. எனக்கு உபதேசம் சேர்க்கை எதற்கு?

புலவர் :—உன்னுடைய பாக்கியமும் புத்தியும் உடையவர்கள் பெரும் துரதிருஷ்ட்டக்காரர்கள்.

காகி தன்னிருப்பிடம் போய்சேர்ந்தான். புலவரும் வீட்டுப்பக்கமாகத்திரும்பி விட்டார். பொழுது சாய்ந்து.மாலைக்கால மாச்சுது. காகியைப் பெரியவனெனக்கருதிப் பல காகிகள் வந்து "உங்களுக்கு நமஸ்காரம் என்று சாஷ்டாங்கமாகப் பணிந்து உட்கார்ந்தார்கள். பிறகு இவன் ஒருவனைப் பார்த்து "நீ என்ன படித்தாய்—ராம்தாஸ்'' என்றான். 'பெரியாரே—நான் விஷ்ணு சஹஸ்ர நாமம் படித்தேன்'' என்றான். மற்றொருவனை நீ என்ன படித்தாய் எனறான். இன்னின்ன காகியுடன் ராம சத்வராஜ படித்தேன் என்றான் கோலாப்தாஸ் பிறகு ராம்தாஸ் குருவை நோக்கி "ஐயா நீங்களென்ன படித்திருக்கிறீர்கள்'' என்றான். காகி நாம் கீதையைப் படித்திருக்கிறோம் என்றார். ராம்தாஸ் யாரிடமிருந்து என்றான்.

காகி அதற்கு சிறுபிள்ளாய் தூர விலகிப்போ—நமக்கு குருயாருங்கிடையாது. நான் பிரயாகையிலிருந்தபொழுது ஒரு எழுத்துக்கூட தெரியாது. ஆடைகளை அதிகமாக அணிந்துகொண்ட ஒரு பண்டிதனைக்கண்டபொழுது கீதையை அவனிடம் எடுத்துக்கொண்டுபோய் எழுத்து ஒன்றைக் காண்பித்து முடியுடன் கூடின இவ்வெழுத்தின் பெயரென்ன வென்று கேட்டேன். இப்படியே கீதை அத்தியாயங்கள் பதினெட்டையும் படித்து முடித்தேன். குரு வென்று ஒருவரையும் ஏற்றுக்கொள்ள வில்லை.

அறியாமை இம்மாதிரியானவர்களை தன்னிருப்பிடமாகச் செய்து கொள்ளாமற்போனுல் வேறு யாரைத்தான் செய்துக்கொள்ளும். இவர்கள் உபகாரமானதை ஒன்றும் செய்கிறதில்லை. குடிக்கிறது; மயங்கிக்கிடக்கிறது; சண்டையிட்டுக் கொள்ளுகிறது; உண்கிறது; உறங்குகிறது; கைத்தாளத்தைக் கொட்டுகிறது; மணியடிக்கிறது; சங்கை ஊதுகிறது; கனிந்து கொண்டிருக்கும் நெருப்பின் முன்னுல் உட்கார்ந்திருப்பது; தேசத்தின் பல திசைகளிலும் வேலையற்று வீணே சுற்றித் திரிகிறது; இதுவே இவர்களுடைய வேலையாகும். வேருென்றுங் கிடையாது. காகிகளுக்கு அறிவைப் புகட்டுவதைவிட கற்களைக் கரைப்பது சுலபம். ஏனெனில் இதில் சேர்ந்த அனேகம் பேர்கள் வேலை யாட்கள்—தினசரிக்கூலிக்காரர்கள். தன் வேலையை விட்ட குடிகள் தண்ணீர் தூக்கிகளே யாவார்கள். உடம்பு முழுவதும் சாம்பலைப் பூசிக்கொண்ட வைராகிகள் அல்லது காகிகளே யாவார்கள். அவர்கள் அறிவு சத்சங்கம் இவைகளுடைய நன்மைகள் தெரியாதவர்கள். அன்றன்று வழங்கும் குறிப்புச் சொற்களான சில மந்திரங்களுண்டு. இவர்களில் நாதர்களுடைய மந்திரம் "நம: சிவாய" காகிகளுடையது நிருசிம்ஹாய நம:" ராமவதர்களுடையது ஸ்ரீராமச் சந்திராய நம: அல்லது "சீதாராமா ப்யாம் நம:" கிருஷ்ண உபாசனைக் காரர்களுடையது ஸ்ரீராதாகிருஷ்ணப்யாம் நம:" "நமோபகவதே வாசுதேவாய" வங்காளினுடையது கோவிந்தாய நம:" என்பவைகளாம். இவ்வித மந்திரங்களைக் காதில் சொல்லி சிடர்களைச் சேர்த்துக் கொண்டு இவைப் போன்றவை உபதேசஞ் செய்கிறுர்கள். சுரைக்காய் மந்திரத்தைக் கொள்ளுங்கள்.

**जल पवितर शथल पवितर और पवितर कुआ ।**
**शिव कहे सुन पार्वती तूंबा पवितर हुआ ॥**

ஜலம் பவித்திரமானது; நிலம்பவித்திரமானது; கிணறு பவித்திர மானது சிவன் பார்வதிக்குச் சொன்னதாவது.

ஓ பார்வதியே! நீர் சுரைக்காய், பவித்திரமானது. இம்மனிதர்கள் யோக்கியதையுள்ள சாதுக்களாகவும் வித்வான்களாகவும் உலகஉபகாரம் செய்கிறவர்களாகவும் ஆகமுடியுமோ?

காகிகள் இரவும் பகலும் கட்டைகளையும் முட்புதர்களையும் எரியவிடுகிறுர்கள். அதற்கு மாதம் அநேகரூபாய் செலவாகிறது. ஒரு மாதச் செலவில் நூறிலொரு பங்கைக் கொண்டாவது கம்பள ஆடைகளை வாங்கினுல் ரொம்ப சுகத்திலிருக்கப்பார்க்கலாம். ஆனுல் இதற்குப் புத்தி ஏது? நெருப்புகளில் உட்

கார்ந்திருப்பதினலேயே தபஸ்வி என்றழைத்துக் கொள்ளுகிருர்கள். இவ்வித மானல் காட்டில் வசிப்போர், இவர்களைவிட பெரும் தபஸ்விகளாகக் கூடும்? சடையை வளர்த்துக் கொள்வதும் சாம்பலைப் பூசிக்கொள்ளுவதும் நெற்றி யில் பொட்டுவைத்துக் கொள்ளுவதும் ஒருவனை தபஸ்வியாகச் செய்யுமே யானல் எவன் வேண்டுமானலும் அவ்விதமாகக் கூடும். பார்வைக்குத் தியாக மூர்த்திகளைப் போலிருக்கு மிவர்கள் பேராவலுள்ளவர்கள்.

## கபீர் பந்திகள்.

வினு :—கபீர்பந்திகள் சரியானவர்களா?

விடை :—இல்லை.

வினு :—ஏன் சரியானவர் களில்லை. கல் விலங்கு முதலானவைகளுடைய விக்கிரக பூஜையைக் கண்டனஞ் செய்கிருர்கள். புஷ்பங்களிலிருந்து கபீர் பிறந்து பிறகு புஷ்பத்துடனேயே சேர்ந்து விட்டார். பிரம்மா விஷ்ணு மகா தேவன் பிறப்பதற்கு முன்னமேயே கபீர் இருந்தார். கபீர் பெரும் சித்த புருஷர். வேத புராண ஆசிரியர்களுக்குத் தெரியாதது கூட கபீருக்குத் தெரியும். சத்தியநெறியை கபீர் காண்பித்திருக்கிருர். அவருடைய மந்திரம்"சத்திய நாமம் கபீரேயாகும்.''

விடை:—அவனைச் சேர்ந்தவர்கள் படுக்கை, மஞ்சம், மெத்தைத் தைத்தபீடங்கள், மரப்பாதரட்சைகள் விளக்குகள் இவைகளைப் பூஜை செய்கிருர்கள். விக்கிரக ஆராதனைக்கு இவைகள் எவ்விதத்திலும் குறைந்த தில்லை. கபீர் புஷபப் புழுவாஎன்ன? அதிலேயே பிறந்து இறந்தும் தும் பூவாதற்கு? கபீருடைய கதை உண்மையென்றே தோன்றுகிறது. அதாவது:—காசிமாநகரில் கைக்கோளன் ஒருவனிருந்தான். அவனுக்கு மக்கட்பேரு இல்லாமலிருந்தது. ஒருதடவை விடியற்காலையில் பாதைவழியாய் போய்க்கொண்டிருக்குங் காலத்தில் கூடையில் புஷ்பங்களின் நடுவில் குழந்தை யொன்று விழுந்துகிடைப்பதைக் கண்டான். கூடையிலிருந்து குழவியை எடுத்து வீட்டிற்குச் சென்று மனைவியிடம் கொடுத்தான். அதைநெசவுத் தொழிலைப் பயில வயது வரும்வரையிலும் வளர்த்தார்கள். பிறகு அவனை பண்டிதர் ஒருவரிடம் அனுப்பினர்கள். பண்டிதர்கைக்கோளருக்குச்சொல்லித்தரமுடியாதென்றுமறு தார். பண்டிதர்கள் அநேகம் பெயர்களிடம் சென்றும் எல்லோரும் முடியா தென்று மறுத்துவிட்டார்கள். அவன் பாஷை நடைக்குவிரோதமாகவும் தப்பாகவும் பாக்கள் கட்டி நெசவுக்காரர்கள் முதலான ஈனஜாதியார்களிடம் தம்பூருக்குச் சரியாய் பாடிக்கொண்டே யிருந்தான். பஜனையும் பண்ணிக் கொண்டிருந்தான். முக்கியமாக வேதம் சாஸ்திரம் பண்டிதர் இவர்களைத் தூஷித்துக் கொண்டிருந்தான். அவனுடைய மாயவலையில் சிலமூர்க்கர்கள் விழுந்தார்கள். இறந்தபிறகு அவனைப்பெரிய சித்தபுருஷனகச்செய்து விட்டார்கள். அவன் வாழ்நாளிற் செய்தபாக்களைப் பிறகுபாடிக்கொண்டிருந்தார்கள். காதைமூடிக் கொண்டால் கேழ்க்கும்சப்தத்தை அனந்த சப்தம் என்றுர்கள். மனோவிருத்தியை சுருதி என்கிருர்கள். அதைக்கொண்டு அனஹத சப்தத்தைக் கேழ்ப்ப

தையே பரமேச்வரத்தியானமென்றும் அவனுக்குத்தான் சந்தன் என்றும் பெய ரிட்டார்கள். கால் கையில் அகப்படாதது மதுவே. ஈட்டியைப்போல் நெற்றி யில் அடையாளம்வைத்து கழுத்தில் சந்தனமாலையும் அணிகிறார்கள். இந்நம் பிக்கைகளினால் என்ன உண்டாகக் கூடும்? குழந்தை விளையாட்டுப் போ லல்லவோ யிருக்கிறது இது.

நானக்.

வினா:—பஞ்சாபில் நானக் ஒரு மதத்தை உண்டு பண்ணினார். அவரும் விக்கிரக ஆராதனையைக் கண்டனஞ் செய்தார். மகம்மதியர்களாவதிலிருந்து காப்பாற்றினார். மேலும் அவர் சாதுவுமல்ல. கிரகஸ்தனாகவே யிருந்தார். இம் மந்திர உபதேசமும் செய்தார்.

**ओं सत्यनाम कर्त्ता पुरुष निर्भो निर्वैर अकालमूर्त अजोनि सहभंगुरु प्रसाद जप आदि सच जुगादि सच है भी सच नानक होसी भी सच॥**

ஜபஜீ பௌடீ.

எவருடைய பெயர் சத்தியமோ அவரே கர்த்தா. அவர் புருஷபயம் விரோ தம் இவைகளில்லாத அகால மூர்த்தி. அவர் காலம் அல்லது பிறப்பு இல்லாத வர். அவர் பிரகாசஸ்வரூபர். குருவின் கிருபையினால் அவருடைய பெயரை ஜபஞ் செய்யுங்கள். அப்பரமாத்மாவே ஆதியிலிருந்தார். இப்பொழுது மிருக் கிறார். இன்னமும் இருப்பார். இம்மந்திரத்திலிருந்து நானக்கினுடைய எண்ணம் சிரந்தது என்றே புலப்படுகிறது.

விடை:—நானக்கினுடைய எண்ணம் நல்லஎண்ணமே. ஆனால் அவருககு அறிவு முதிர்ச்சி கிடையாது. தான்பிறந்த கிராமத்தவர்களுடைய மொழி யையே அறிவார். வடமொழி, வேதாதிசாஸ்திரம் இவைகளை அறியார். தெரிந் திருந்தால் நிர்பயத்திற்கு நிர்போ, என்று எழுதுவானேன்? இதற்கு இன்னும் ஒரு திருஷ்டாந்தம், அவருடைய ஸ்தோத்திரங்களேயாகும். வடமொழியில் அறிவுள்ளவராக நடித்துக்கொண்டார். வடமொழியைப் பயிலாமல் அதன் அறிவு எங்கிருந்து வரக்கூடும்? வடமொழி பேசிக்கூடக் கேட்டிராத கிராம வாசிகளின் முன்னால் அவன் பெரும் புலவனாயிருந்திருக்கலாம். பொதுப்புகழ் மொழிகளில், ஆசையின்றி அதைச் செய்திருக்கமாட்டான். கீர்த்திக்காகவது கஷ்டப்பட்டிருக்க வேண்டும் அல்லது தானறிந்த பாஷையிலுபதேசஞ் செய்து வடமொழி தெரியாதென்றிருக்கவேண்டும். கொஞ்சம் செருக்குள் ளவனாகயிருந்தபடியினாலேயே தற்புகழை ஸ்தாபிக்க எண்ணி கொஞ்சம் டம்பமும் செய்திருக்கவேண்டும். இதனாலேயே அவருடைய கிரந்தம் என்னும் நூலில் சிலவிடங்களில் வேதங்களைப் புகழ்ந்தும் சிலவிடங்களில் இகழ்ந்து மிருக்கிறார். இவ்விதம் செய்திராமற் போனால் வேதமந்திரங்க ளுடைய அர்த்தத்தை யாராவது கேழ்க்கக் கூடும். பதில் கூறவிடில் மானம் போய்விடும். இதையறிந்தே சிற்சிலசமயங்களில் தன் சீடர்களுக்குமுன் வேதங்களுக்குப் பாதக மாகவும் சாதக மாகவும் பேசி யிருக்கிறார். சாதக மாகப் பேசாமலிருந் திருந்தால் உலகம் அவரை நாஸ்திகன் என்று அழைத் திருக்கும், உதாரணமாக கிரந்தத்தின் ஓரிடத்தில் கூறுவதாவது;—

वेद पढ़त ब्रह्मा मरे चारों वेद कहानि ।
साध कि महिमा वेद न जाने ॥ சுகமனி பௌடீ 7, சோ 8.
नानक ब्रह्मज्ञानी आप परमेश्वर ॥ சு. பௌ. 8, சோ. 6.

வேதங்களைப் படிக்கிற பிரம்மாவும் இறந்துவிட்டார். வேதங்கள் நான்கும் கட்டுக்கதையே. ஏ! நானக்!! சாதுக்களின் பெருமையை வேதம் அறியாது. பிரம்மஞானம் உள்ளவனே பரமேச்வரன்

**வினா :—பிரம்மாவைப்** போன்ற வேதவித்வான்களிறந்திருந்தால் நானக் முதலானவர்களும் இறக்கவில்லையா? தங்களைச் சிரஞ்சீவிகளென்று அவர்கள் நினைத்துக்கொண்டு விட்டார்களா? ஞானம் அறிவுஇவைகளின் களஞ்சியமல்லவோ வேதங்கள். நான்குவேதங்களையும் கட்டுக்கதை யென்னும் வார்த்தையே கட்டுக்கதை. மூடர்களுக்குச் சாதுக்களென்று பெயரிருக்க, விசாரித்து வேதங்களுடைய பெருமையையும் புகழையும் அவர்களெப்படி அறிய முடியும்? நான்கு வேதங்களை மாத்திரம் போற்றியிருந்தால் அவருடைய கட்சி தலைப்பட்டிராது? அவருக்கும் 'குருபதவி கிடைத்திராது. சம்ஸ்கிருதத்தை அவர் அறியாதபடியினால் இதரர்களுக்குப்படித்துக்காண்பித்து அவர்களை சிஷ்யர்களாகசெய்து கொண்டிருக்க முடியாது. அவர்காலத்தில் பஞ்சாபில் சம்ஸ்கிருத ஞானம் குலைந்து மகம்மதியர்களால் பீடிக்கப்பட்டிருந்த தென்பது உண்மையே. துருக்கர்களாவதிலிருந்து சிலரையும் காப்பாற்றினார். நானக் பிழைத்திருந்த காலத்தில் அவருடைய கொள்கைகள் தலையெடுக்கவில்லை. பின்பற்றினவர்களும் அநேகம் பெயர்களில்லை. இறந்த பிறகு தங்களுடைய குருவைச் சித்தபுருஷனாகச்செய்து, அவருக்குப் பேரையும் பெரும் புகழையுமளிப்பது அறிவில்லாதவர்களுடைய வழக்கமாகும். சாதாரண ஜனங்களும் அவரை ஈச்வரனுக்குச் சமமாக வெண்ணுவார்கள். நானக் தனவந்தருமல்ல; பிரபுக்கட்சியைச் சேர்ந்தவருமல்ல; இருந்தும் அவருடைய சிஷ்யர்கள் **நானக் சந்திரோதயம், ஜன்மசாகி**, என்னும் நூல்களில் அவர் பெரிய பணக்காரர் சித்தர் என்றும் எழுதியிருக்கிறார்கள். நானக் பிரம்மா முதலானவர்களைக் கண்டார்; பேச்சு வார்த்தைகளாடினார்; எல்லோரும் இவரைப் போற்றினார்கள்; நானக்கினுடைய விவாக சமயத்தில் மரகத மாணிக்க வைடூரியங்களால் அலங்காரம் செய்யப்பட்ட ரதகஜதுரகபதாதிகள் ஊர்வலம் வந்தது என்று எழுதப்பட்டிருக்கிறது. திரிக்கப்பட்ட வெறுங் கயரன்னியில் இவைகளெல்லாம் வேறென்ன? இதெல்லாம் அவரைப் பின்பற்றினவர்களுடைய குற்றமே தவிர நானக்கினுடையதில்லை.

அவரிறந்த பிறகு அவருடைய பிள்ளையுடன் **உதாசிகளும்** ராம்தாசுடன் நிர்மலர்களும் தோன்றினார்கள். நானக்கினுடைய சிம்மாசனத்திலேறின எவ்வளவோ பெயர்கள் "கிரந்தத்தைக்" கையாடி அதில் அநேகம் தானாகவே சேர்த்திருக்கிறார்கள். பத்தாவது குருவின் பெயரே **கோவிந்து சிங்**. அவர் காலத்திலிருந்து அதில் ஒன்றும் சேர்க்கப்படவில்லை. அதுவரையிலிருந்த சின்ன புஸ்தகங்களெல்லாம் ஒன்றாகத்திரட்டப்பட்டது.

நானக்கிற்குப் பின் வந்தவர்கள், நூல்கள் பல செய்தார்கள். புராணங்களையொத்தப் பொய்க்கதைகளையும் செய்தார்கள். பிரம்மஞ்ஞானமுள்ளவன் பரமேச்வரன் என்பதைக் கொண்டு தெய்விகத் தன்மைகளை மேற்கொண்டார்கள். தங்களுடைய கர்மோபாசனைகளைக் கைவிட்டு இச்சீடர்கள் தெய்வத்திற்குப் பதிலாக குருவிற்கு மரியாதை செய்யத்தலைப்பட்டார்கள். இவ்விதமாக பெருந்தீமைகளை உண்டு செய்து விட்டார்கள். நானக் சொல்லியுள்ளவாறு கொஞ்சமாவது ஈசுவரபக்தி காண்பித்திருந்தால் நலமாயிருந்திருக்கும். உதாசிகள் நாங்களே பெரியவர்கள் என்கிறார்கள். நிர்மலர் தாங்களும் அப்படியே என்று சொல்லிக் கொள்ளுகிறார்கள். அகாலியர்களும் சூத்ரேசாகிகளும் எல்லோரையும் விட நாங்களே உயர்ந்தவர்களென்கிறார்கள். நானக்கைப் பின்பற்றினவர்களுள் கோவிந்தசிங்கே சூரவீராயிருந்தார். இவருடைய ஆள்களைத் துருக்கர்கள் கொடுங்கோன்மையுடன் நடத்தி வந்தார்கள். அதற்குப் பழிவாங்க அவர் அதிகமாகவிரும்பியும், வேண்டிய சாமக்கிரியைகளில்லாமலிருந்தது. மகம்மதியர்களோ உன்னதஸ்திதியிலிருந்தார்கள். ஆகவே குறுக்குபாயம் ஒன்று செய்தார். "நீ மகம்மதியர்களுடன் சண்டைக்குப்போ. ஜெயம் பெருவாய்" என தேவி வாக்களித்து, வாளாயுதம், ஒன்றையும் அளித்திருப்பதாக வெளிப்படுத்தினார். ஜனங்கள் அநேகம் பெயர்கள் சேர்ந்தார்கள். வாமமார்க்கிகளுடைய ஐந்து ம' காரங்களும் சக்கராங்கதர்களுடைய ஐந்து சம்ஸ்காரங்களு மிருந்து வருவது போலவே க என்னும் எழுத்துக்களில் ஆரம்பமாகும் ஐந்து பொருள்களைத் தங்களுடைய சின்னங்களாச் செய்து கொண்டார்கள். இவ்வைந்தும் யுத்தத்தில் மிகவும் உபயோகமானவைகள். அவைகளாவன:—

(1) கேசம்:—க்ஷௌரஞ்செய்து கொள்ளாத தலைமயிர். சண்டையில் தடியடி கத்திகுத்து இவைகளிலிருந்து தலையைக்காக்கும்.

(2) கங்கண் :—அகாலியர்கள் தங்களுடைய தலைப்பாகையிலணிந்துகொள்ளும் பெரும் இரும்பு வளையங்கள்.

கடா:—மணிக்கட்டையும் மார்பையும் காப்பாற்ற மணிக்கட்டில் அணிந்துகொள்ளும் இரும்புக்காப்பு.

(3) காச்ச :—அரைக் கால் சட்டைகள். தாண்டுவதிலும் குதிப்பதிலும் மிகவும் உபயோகமாகும். மல்யுத்தக்காரர் களாலும் சிலம்புவேலைக்காரர்களாலும் உபயோகம் செய்யப்படுகிறது. சரீரத்தினுடைய மர்மஸ்தானங்களைக் காப்பாற்றி நடையைக் கஷ்டமன்னியில் சுலபமாச்செய்யும்.

(4) கர்தா :—கைச்சண்டையில் பிரயோஜனமுள்ள இருமுனையுள்ள கத்தி

(5) கங்கா :—தலைமயிரைச் சிவச்சிப்பு.

சமயம் புத்தி இவைகளுக்கேற்க இவ்வைந்தையும் கோவிந்தசிங் அணியச் செய்தார். அவரிருந்த வரையில் அவைகள் உபயோகமானதா யிருந்தது. இப்பொழுது அவைகளால் பிரயோஜனம் ஒன்றுமில்லை. யுத்தகாலத்தில் பிரயோஜனமாயிருந்த அவைகளை இப்பொழுதும் தன் மார்க்கத்துடன் சேர்த்துக் கொண்டிருப்பது விந்தையே. விக்கிரக ஆராதனையை அவர்கள் செய்வதில்லை

யென்பது உண்மையே. ஆனால் கிரந்தத்தை (அவர்களுடைய மத நூலை) விக்கிரகங்களைவிட அதிகமாய் வணங்குகிறார்கள். இதென்ன? விக்கிரக பூஜை யில்லையா? சடப்பொருள்களின் முன் வணங்குவதும் பூஜை செய்வதும் விக்கிரக ஆராதனையே. விக்கிரகக்காரர்கள் அதைக் கொண்டு வியாபாரஞ் செய்து பிழைப்பதுபோலவே இவர்களும் செய்கிறார்கள். பூசாரிகள் விக்கிர கங்களுடைய தரிசனத்தைக் காண்பித்துப்பணம் வாங்கிக்கொள்ளுவதுபோல் நானக்கைச் சேர்ந்தவர்களும் கிரந்தத்தைப் பூஜித்து பூஜிக்கவும் செய்து இனம் பெற்றுக் கொள்ளுகிறார்கள். விக்கிரக ஆராதனைக் காரர்களைப்போல் வேதத்தைப்போற்றுகிறதும்வணங்குகிறதுங்கிடையாது. வேதங்களை இவர்கள் கேட்டதும்கிடையாது; ஓதினது மில்லையே; அவர்கள் என்ன செய்ய கூடும். எனலாம்? கேட்க்கவும் ஓதவுங் கிடைத்தால் அவர்களில் அறிவுள்ளவர்களும் பட்சபாதமற்றவர்களும் வேதமதத்தைத் தழுவிவிடுவார்கள். சாப்பாட்டு வித் தியாசம்குடி முதலானவைகளிலுள்ள கட்டுக்களிலிருந்தும் இவர்கள் மீறினது இவர்களுக்கு நல்லதே. அப்படியே விஷய சுகம், இறுமாப்பு, சுகம், இவைகளி லிருந்தும் மீறி வேதமதத்தைப் பரவச்செய்தால் நலமாயிருக்கும்.

## தாது பந்திகள்.

**வினா :**—தாது பந்திகளுடைய சமயம் நல்லதா?

**விடை :**—வேத மார்க்கம் ஒன்றே நல்லது. முடியுமானால் அதையே பின் பற்றி நட. இல்லை யென்றால் எப்பொழுதும் துக்கத்திற்கும் கஷ்டத்திற்கும் ஆளாகி விடுவாய். இவர்கள் சொல்லும் விதம் தாது குஜராத்தில் பிறந்தார். ஜயபூருக்கருகாமையிலுள்ள ஆமோத்தில் வசித்து 'தைலி' (வாணியன்) வேலையைச்செய்து வந்தார். ஈச்வரனுடைய சிருஷ்ட்டி விசித்திரத்தின் லீலை யே லீலை. தாதுவையும் வணங்கவாரம்பித்தார்கள் வேதாதி சத்தியசாத்திரங் களுடைய வார்த்தைகளெல்லாவற்றையும் விட்டு 'தாதுராம்' என்று சொல்லு வதினாலேயே முத்தி கிடைக்கு மென்று கருதுகிறார்கள். சத்தியோபதேசகர் களில்லாதபொழுது இம்மாதிரி துர்நடத்தைகள் ஓங்கவாரம்பித்தன. கொஞ்ச நாள்கள் முந்தியே 'ராம் பக்தி' என்னும் மதத்தவர் ஷாபூரில் தோன்றினார்கள். சகல வேதோத்தமமான தர்மங்களையும் அவர்கள் விட்டு விட்டு ராமா, ராமா, என்று கத்துவதையே கைக்கொண்டார்கள். அதினாலேயே ஞானம் தியானம் முத்தியும் உண்டாகுமென்று நம்புகிறார்கள். பசி யெடுக்கும் பொழுது ராம நாமத்தைச்சொல்லிக்கொண்டிருப்பதினால் அன்ன ஆகாரம் கிடைக்கிறதில்லை. ஏனெனில் கிரகஸ்தர்களுடைய வீட்டிலிருந்தே அவைகள் கிடைக்கும். அவர்களும் விக்கிரக ஆராதனையைப் பற்றி குறைவாகப் பேசுகிறார்கள். பேசி யும் விக்கிரக ஆராதனையைச் செய்கிறார்கள். ஸ்திரீகளுடைய சேர்க்கையிலே யே வசிக்கிறார்கள். ஏனெனில் ராம்கீ (ராமசொல்லின் பெண்பால்) அன்னி யில் ராமனுக்கு ஆனந்தம் கிடைப்பது துர்லபம் என்கிறார்கள்.

## ராமசிநேகன்.

ராமசரன் என்று ஒரு சாதுவிருந்தான். ஷாபூரில் உதயபுரம் சமஸ்தான த்தில் ஒரு பிரிவினையை உண்டாக்கினான். அவர்கள் ராமநாமத்தையே முக்

கிய மந்திரமாகவும் சித்தாந்தரகசியமாகவும் கருதுகிறார்கள். சந்ததாஸ் முதலானவர்கள் சொன்னதாக அவர்களுடைய புஸ்தகம் ஒன்றில் எழுதப்பட்டிருப்பதாவது:—

भरम रोग तब ही मिट्या, रट्या निरञ्जन राइ ।
तब जम का कागज फट्या, कट्या करम तब जाइ ॥

பகவானுடைய பெயரை ஒருவன் சொன்னால் சந்தேக நிவாரணமாகி, வியாதிகளெல்லாம் விலகி, பாபகிருத்தியங்களும் பிற கர்மங்களும் மன்னிக்கப்படும். யமனும் அவர்களுடைய பத்திரத்தைக் கிழித்தெறிந்து விடுவான். ராம் என்று வெறும் வார்த்தையைச் சொல்லுவதினால் அஞ்ஞானம் என்னும் பிரமை எப்படி நீங்கிப் போய்விடும் என்று புத்திமான்கள் ஊகிக்கவேண்டும். பாப புண்ணியப் பிரகாரம் அளிக்கப்படும் தண்டனைகளும் நன்மைகளும் எப்படி பலனற்றுப் போகும்? இம்மாதிரி கொள்கைகள் பாபங்களிலழுத்தி வாணாளையும் வீணாக்குகிறது. அவர்களுடைய முதல் குருவாகிய ராமசரன் சொல்லுவதைக் கவனியுங்கள்.

महमा नांव प्रताप की, सुणो सरवण चित लाइ ।
रामचरण रसना रटौ, क्रम सकल भद्र जाइ ॥
जिन जिन सुमर्यां नांव कूं, सो सब उतर्या पार ।
रामचरण जो वीसर्या, सो ही जम के द्वार ॥

राम विना सब भूठ बतायो ॥

राम भजत छूट्या सब क्रम्मा । चंद अरु सूर देई परकम्पा ।
राम कहे तिन कूं भै नाहीं । तीन लोक में कीरति गाहीं ॥

राम रटत जम जोर न लाग ॥

राम नाम लिख पथर तराई । भगति हेति औतार ही धरही ॥
ऊंच नीच कुल भेद बिचारै । सो तो जनम आपणो हारै ॥
संवा कै कुल दीसै नांहीं । रांम रांम कह राम सम्हांहीं ॥
ऐसो कुण जो कीरति गावै । हरि हरि जन कौ पार न पावै ॥
रांम संतां का अन्त न आवै । आप आपकी बुद्धि सम गावै ॥

ராமசரன் முதலானவர்களுடைய நூல்களைப் படிப்பதினால் அவன் ஒன்றுமறியாத ஒரு கிராம வாசி என்றே தெரிகிறது. இல்லாமல் போனால் இக்கயிற்றை எப்படித் திரித்திருக்க முடியும்? வெறும் பேரைச் சொல்லுவதினால் பாபங்கள் விலகிவரும் என்று அவர்கள் உபதேசஞ் செய்வது முழுப்பொய்யே. தங்களுடைய வாணாளை மாத்திர மன்னியில் பிறருடைய வாணாளையும் இவ்விதப்பொய் உபதேசங்களினால் வீணாக்குகிறார்கள். போலீஸ் சேவகன், திருடன், கள்ளன், ஓநாய், பாம்பு, தேள், கொசு, இவைகளுடைய பயத்திலிருந்து

இரவும் பகலும் ராமன் பெயரைச் சொல்லியும் நீங்குகிறதில்லே. இதுவே இப்படியிருக்க யமராஜனைப் பற்றி என்ன சொல்ல விருக்கிறது. சர்க்கரை என்று சொல்லுவதினுல் இனிக்காது. உண்மை உரைத்தல் முதலிய காரியங்களே மரண பயத்திலிருந்து ஒருவனை நீக்கும். ராம் ராம் என்று ஒருதரம் சொல்லியும் ராமன் கேழ்க்காமல் போனுல் ஆயுள் பரியந்தமும் கேழ்க்க மாட்டான். இரண்டாந் தடவை சொல்லுவதும் வீணே. தங்களுடைய வயிற்றுப் பிழைப்புக்காகவும் பிறர் வாணுளை வீணுளாக்கவுமே இப்பொய்களே யுண்டு பண்ணி யிருக்கிருர்கள். விதவைகளின் சிநேகிதர்களாயிருந்து கொண்டு ராம சிநேகிதன் என்று பெயர் வைத்துக் கொண்டிருப்பதுதான் ஆச்சரியமாயிருக்கிறது. காணும் பொழுதெல்லாம் விதவைகளுடன் கூடவே யிருக்கிருர்கள். இவ்விதப்புரட்டுக்கள் இந்தியா விலில்லாமலிருந்திருந்தால் ஆரியவர்த்த நாட்டிற்குக் கஷ்டட்டதிசை எவ்வித முண்டாயிருக்கும்? தங்களுடைய சிடர்களுக்கும் தாங்கள் உண்ட மீதியைக் கொடுக்கிருர்கள். பெண்டீர்களுங் கூட காலில் விழுந்து நமஸ்காரம் செய்கிருர்கள். ஒன்று கூடியே சாதுக்களும் உட்கார்ந் திருக்கிருர்கள்.

மார் வார் தேசத்திலுள்ள கேடாபா என்னும் கிராமத்தில்இவர்களுடையதைப்போன்ற மற்ருெரு வகுப்பும் இருந்துவருகிறது. அதனுடைய சரித்திரம் என்னவென்ருல் *தேட்ஜாதியைச் சேர்ந்த ராம்தாஸ் என்ற ஒருவனிருந்தான் அவன் பெருந்தந்திரக்காரன். அவனுக்கு இரு மனைவிகளிருந்தார்கள். கொஞ்ச நாள் அகோரியாக யிருந்து நாய்களுடன் கூட தின்னுக் கொண்டிருந்தான். பிறகு வாமமார்க்கத்தவர்களில் பிரிவான 'குண்டா பந்தைச் சேர்ந்தான். 'காம்ரிய' னுைன். பிறகு தன் இரு மனைவி மார்களுடன் பாடிக்கொண்டு சுற்றிக்கொண்டிருக்குங் காலத்தில் ஜோத்பூர சமஸ்தானத்திலுள்ள சீதலத்தில் தேட்களுடைய குருவான ராமதாசைக் கண்டான். அங்கே ராம தேவருடைய வழியில் சேர்த்து தன் சிடனுக்கிக் கொண்டார். இந்த ராம்தாஸ் கேடா கிராமத்தில் அமர்ந்தார். இங்கு இவருடைய மதமும் சாபூரில் ராமசரணருடைய மதமும் இருந்து வந்தது.

ராமசரணர்.

ராம சரணருடைய வரலாறு என்ன வென்ருல்:—அவர் ஜயபூரில் வியாபாரம் செய்து வந்தவர். தந்திரஷ் கிராமத்தில் ஒரு சாதுவை அடைந்து அவரைத் தன் குருவாகச் செய்து கொண்டார். பிறகு ஷாபூருக்குச் சென்று அங்கு அமர்ந்தார். ஏமாற்றல் என்பது வெகு சீக்கிரம அறிவில்லாதவர்களிடத்தில் குடிகொள்ளுதல் இயல்பே அல்லவா? ராமசரணருடைய பேச்சைப் பிரமாணமாக வைத்து கொண்டு, உயர்ந்தவர் தாழ்ந்தவர் என்ற வித்தியாசம் ஒன்றும் செய்யாமல் பிராம்மணன் முதல் நீசன் வரையில் இவருடைய சிஷ்ஞர்கள். மண் குடங்களிலிருந்து சாப்பிடுகிற படியினுல் இப்பொழுதும் குண்டா பந்திகளைப் போலவே யிருக்கிருர்கள். சாதுக்களுடைய எச்சல் முத

*ஒதுக்கப்பட்டு தீண்டாதவர்களெனப்படுவோர்.

லானவைகளைச் சாப்பிடுகிறார்கள். வேதமார்க்கத்திலிருந்தும், மாதா பிதா உலகம் இவைகளிலிருந்தும், பிரித்து விடுகிறார்கள். ஜனங்களைச் 'சேல' (சீடர்) னாகச் செய்து கொண்டு ராமநாமத்தையே மகாமந்திரமாகக் கருதுகிறார்கள், சூக்ஷ்ம வேத மென்றும் சொல்லுகிறார்கள். 'ராம' என்று சொல்லுவதினால் மாத்திரமே அனந்த ஜன்மங்களுடைய பாபம் நசித்துப் போகுமென்று நினைக்கிறார்கள்.

மற்றும் முக்தி எவருக்கும் கிடைக்காது என்கிறார்கள். மூச்சு இழுத்துக் கொள்ளும் பொழுதும் விடும்பொழுதும் 'ராம' என்கிறவனையே சத்திய குரு என்கிறார்கள். அவ்வித சத்ய குருவைப் பரமேச்வரனை விட மேலாக நினைக்கிறார்கள். அவனை விக்கிரகமாக்கி தியானமும் செய்கிறார்கள். சாதுக்களின் கால்களைக் கழுவின ஜலத்தையுங் குடிக்கிறார்கள். குருவை விட்டுச் சேலன் (சிஷ்யன்) பிரிந்திருக்கும் பொழுது குருவினுடைய நைநகத்தையும், தாடி மயிரையும், தன் கூட வைத்துக்கொண்டு அதைக் கழுவி அந்த ஜலத்தை பிரதி தினமும் அருந்த வேண்டுமென்கிறார்கள். ராம்தாஸ் ஹர ராம்தாஸ், இவர்களுடைய நூல்களையே வேதங்களை விடப்பெரியதாகக் கருதுகிறார்கள். அதைச் சுற்றி வந்து எட்டு நமஸ்காரம் செய்கிறார்கள். ஸ்திரீ புருஷர்களும் ராம மந்திர உபதேசம் ஒன்றையே செய்கிறார்கள். ராமஸ்மரணை யொன்றிலேயே மங்களத்தை யறிகிறார்கள். மீதி புத்தகங்களைப் படிப்பது கூட பாபமென்றும் சொல்லுகிறார்கள். அவர்களுடைய நூல் ஒன்றில் சொல்லுவதாவது.

**पंडताइ पाने पड़ी, ओ पूरब लो पाप ।**

**राम २ सुमर्यां विना, रह्यो रीतो आप ॥**

**वेद पुराण पड़े पढ़ गीता, राम भजन विन रह गये रीता ॥**

படிப்பது பிரயோஜன மற்றது. கற்றுக் கொள்ளுவது பாபகாரியம். ராமருடைய பெயரைச் சொல்லாமல் வேறு என்ன செய்த போதிலும் பிரயோஜனமற்றதே. ராமஸ்மரணையில்லாதவிடத்து வேதங்கள், புராணங்கள், கீதை இவைகளுடைய படிப்பு பிரயோஜன மற்றது. புருஷனுக்கு மனைவி சிசுருஷை செய்வதுபாபம். குருவிற்கும் சாதுவிற்கும் செய்வதே தர்மம். வருணாச்சிரமம் சரியற்றதாம். ராம சிநேகிதனில்லாத பிராம்மணன் நீசனும் ராம சிநேகிதனாயிருக்கிற சண்டாளனும் உத்தமனும். ஈச்வரனுடைய அவதாரத்தில் நம்புகிறதில்லை. முன்னே சொன்ன ராமசரண வார்த்தைகளில் நம்புகிறார்கள் அதாவது.

**भणति हेति औतार ही धरही ॥**

பக்தர்களுடைய நன்மைக்காக அவதாரஞ் செய்கிறார். இவ்விதமான புரட்டுகளும் தந்திரங்களும் ஆரியவர்த்தத்திற்குக் கெடுதலை விளைவிக்கிறதாயிருக்கிறது. புத்திமான் களுக்கு ஒரே வார்த்தையே போதுமானது.

### கோசேனர்கள்.

வினா :—கோகுலத்தில் கோசேனர்களுடைய வழி மிகவும் மேலானது. எப்படி ஐசுவரியத்தை அனுபவிக்கிறார்களென்று பாருங்கள். ஈச்வர சக்தியன்னியில் இவைகளுண்டாகக் கூடுமோ?

விடை:—இவ் ஐச்வர்யங்கள் கிரகஸ்தர்களைச் சேர்ந்தது. கோசேனர்களுடைய தல்ல.

வினா:—மடத்தனம், கோசேனர்களுடைய பிரதாபத்தினாலேயே. ஏனெனில் இவ்வைச்வர்யங்கள் மற்றவர்களுக்குக் கிடைக்கிறதில்லை.

விடை:—மற்றவர்களும் கோசேனர்களைப் போல் வஞ்சகத்தையும் புரட்டையும் கையாண்டு வந்தால், சந்தேகமன்னியில் கிடைக்கும். ஆனால் பாதகம் இன்னும் அதிக மாகும்.

வினா:—அதிலென்ன பாதகமிருக்கிறது. எல்லாம் கோலோகத்தினுடைய லீலையே?

விடை:—கோலோகத்தினுடைய லீலை யில்லை. கோசேனர்களுடைய லீலையே. கோலோக லீலையானால் கோலோகமும் அப்படித் தானிருக்க வேண்டும். இம்மதம் தைலிங்கன தேசத்திலுண்டாச்சுது. லக்ஷ்மணபட்டன் என்ற தைலங்கப் பிராம்மணன் விவாகஞ் செய்து கொண்டு எக்காரணத்தினாலேயோ தாய் தகப்பன்மார்களை விட்டு விட்டுக் காசிக்குச் சென்று சந்நியாசம் வாங்கிக் கொண்டான். அங்கு எனக்குக் கலியாணமாகவில்லை யென்றுப் பொய் சொன்னான். அதிர்ஷ்ட்ட வசத்தால் அவனுடைய தாய் தகப்பன் மனைவி முதலானவர்கள் இவன் காசியில் சந்நியாசியா யிருப்பதை அறிந்து காசியை யடைந்து காஷாயம் அளித்தவர்களிடம் சென்று, ஏன் இவனுக்குக் காஷாயம் கொடுத்தீர்கள்; இவனுக்குமனைவி ஒருவளிருக்கிறாள் பாருங்கள் தன் புருஷனை அனுப்பமுடியாத பக்ஷத்தில் அவளும் காஷாயம் வாங்கிக் கொள்கிறேன் என்கிறாள் என்றார்கள். பிராம்மணனை அழைத்து நீ பெரும் பொய்யன் கிரகஸ்தாச்ரமத்தை எடுத்துக் கொள் என்றார்கள். பொய் சொல்லி சந்நியாசம் எடுத்துக் கொண்டதின் பேரில் அதை விட்டு அவனும் சொன்ன பிரகாரமே மனைவியுடன் வீடு திரும்பப் போனான். இம்மதத்திற்கு முதல் காரணம் பொய்யும் புரட்டுமே. தைலங்கத்திற்குத்திரும்பச் சென்றவுடன் ஜாதிச் சனங்களனைவரும், சேர்த்துக் கொள்ள மறுத்து விட்டார்ள். அங்கிருந்து அப்பொழுது வெளி யேறிக் காசிக் கருகாமையிலுள்ள சாணர்கட்டிற்கு அடுத்த சம்பாரண்யம் என்னும் காட்டை யடைந்து அங்கே ஒரு பையனை அவன் கண்டான். காட்டில் பையனை விட்டு விடக் கொஞ்ச தூரம் சென்று பெருந்தீயொன்றை எறிய விட்டிருந்தார்கள். பையனை காட்டு மிருகங்கள் அடிக்காமலிருக்கும் பொருட்டே அவ்விதம் செய்தார்கள். லக்ஷ்மணபட்டனும் மனைவியும் பிள்ளையை யெடுத்து தன்னுடைய தாகச் செய்துக் கொண்டார்கள். சிறு வயதில் காசியில் கொஞ்சம் படித்தான். விஷ்ணுசுவாமியுடைய ஆலயம் ஒன்றிற்குச் சென்றான். அங்கு தன்னுடைய சேவனாக்கிக் கொண்டார்கள். அங்கு முறண் பட்டுக்கொண்டு காசிக்குத் திரும்பவும் வந்தான். காஷாயமும் உடுத்திக் கொண்டான். தன்னைப் போலவே ஜாதியிலிருந்து தள்ளப்பட்ட பிராம்மணன் ஒருவனுடன் பிறகு சேர்ந்தான். அவனுக்கு பெண் ஒருவளிருந்தாள். சந்நியாசத்தை விடுத்துக் கலியாணம் செய்து கொள்ளும் படி பெண்ணின் தகப்பன் சொன்னான். தகப்பன்செய்த மாதிரியாகவே மகனும்செய்வதில் தடையென்ன?

கலியாணமான பிறகு விஷ்ணு சுவாமி கோவிலுக்குச் சென்றான். கல்யாண மாயிருந்த படியினால் அங்கிருந்து தள்ளப்பட்டான். அறியாமைக் கிருப்பிடமா யிருக்கும் விரஜ தேசத்திற்குச் சென்று தன்னுடைய பொய் மூட்டைகளைப் பல விதமாகப் பரவச் செய்து "ஸ்ரீ கிருஷ்ணன் தன்னைப்பார்த்தான். கோலோகத்திலிருந்து மரணலோகத்திற்கு வந்த ஜீவன்களை யெல்லாம் பிரம்மசம்மந்தத்தினால் சுத்தி செய்து கோலோகத்திற்கு அனுப்பச் சொன்னார்" என்று சொல்லித் திரிந்தான். அறிவில்லாதவர்களுக் கேற்ற வாறு பேசி 84 பெயர்களைத் தன் சிஷ்யனாக்கிக் கொண்டான். கீழ்க் கண்ட சுலோகங்களைச் செய்து பலவாறாகத் தன்னுடைய தென்றான்.

**श्रीकृष्णः शरणं मम । क्लीं कृष्णाय गोपीजनवल्लभाय स्वाहा ॥** கோபாலஸஹஸ்ரநாம

என்னடைக்கலம் ஸ்ரீகிருஷ்ணனே. கோக்களுடைய இஷ்டனான கிளீம் கிருஷ்ணனுக்கு இவ்விரண்டும் சாதாரண மந்திரங்கள். அடுத்த மந்திரம் பிரம்ம சங்கத்திற்கும் சமர்ப்பணத்திற்காகவும் செய்யப்பட்டிருக்கிறது.

**श्रीकृष्णः शरणं मम सहस्रपरिवत्सरमितकालजातकृष्णवियोगजनिततापक्लेशानन्त-तिरोभावोऽहं भगवते कृष्णाय देहेन्द्रिय प्राणान्तः करणतद्धर्मांश्च दारागारपुत्राप्तवित्तेह-पराणयात्मना सह समर्प्पयामि दासोऽहं कृष्ण तवास्मि ॥**

(ஸ்ரீ கிருஷ்ணனே என்னுடைய தஞ்சம். கணக்கில்லாத ஆயிரம் வருடங்கள் பிரிந்திருந்த வியோகத்தினால் கஷ்ட்டம் துக்கம் முதலான அடர்ந்த இருள் சூழப்பட்டு ஏ! கிருஷ்ண இருக்கிறோம். உனக்காக சரீரம் இந்திரியம், பிராணன், பெண், பிள்ளை, மனைவி, கௌரவம், தனம், உற்றார் உறவினர்கள் ஆத்மா முதலானவைகளை அர்ப்பணம் செய்கிறோம். நான் உன்னுடைய அடிமை) இரண்டு இனத்தையும் சேர்ந்த தன்னுடைய சீடர்களுக்கு இம்மந்திரத்தைச் சொல்லிக் கொடுக்கிறார்கள். இரண்டாவது மந்திரம் "க்ளீம்" என்று ஆரம்பமாகிறது. இது (வாமமார்க்கிகளுடைய) தந்திரங்களிலே யிருக்கிறது. இவ்வல்லபமதம் வாமமார்க்கிகளுடைய ஒரு பிரி வென்றே விளங்குகிறது. இதினாலேயே கோசேனர்கள் தங்கள் காலத்தை அதிகமாக ஸ்திரீகளுடைய சங்கத்தில் செலவு செய்கிறார்கள். மற்றவர் களுக்கில்லாமல் கோபிகளுக்கு மாத்திரமே கிருஷ்ணன் பிரிய முள்ளவர் மேலும். மாதர் போகங்களிலாசை யுள்ளவனே ஸ்திரீகளுடைய நேசனாகிறான். கிருஷ்ணன் இவ்விதம் இருந்தானா? "சகஸ்ர பரிவத்சரா" ஆயிரம் வருடம் என்பது வீணே. ஏனெனில் வல்லபரும் அவருடைய சீடர்களும் சர்வக்ஞ முள்ளவர்களல்லர். கிருஷ்ணன் வியோக மடைந்து ஆயிர வருடந்தானா ஆச்சுது ?

வல்லபரும். அவருடைய மதமும் பிறக்குமுன்னரே கோலோகத்திற்குச் ஜீவன்களைக் கைத்தூக்கி விட ஏன் யாரும் வரவில்லை?

தாபம், கிலேசம் என்ற வார்த்தை களிரண்டும் ஏகார்த்த முள்ளபதங்களே. ஒன்றை உபயோகஞ் செய்வதே போது மானது. அனந்த வார்த்தையை யாவது 'சஹஸ்ர' வார்த்தையை யாவது விட்டிருக்க வேண்டும். இரண்

டையும் உபயோகப் படுத்துவது வீண் காரியமே. அனந்த காலமும் கஷ்ட துக்கங்களிலிருந்து மனிதன் உபத்திரவப் படுவானே யானல் வல்லபருடைய உதவியால் ஒன்று மாகாது. ஏனெனில் ஆரம்பமுடிவில்லநதே அனந்தமாகும். மேலும் தேகம், இந்திரியம், பிராணன், அந்தக் கரணம், அவனுடைய தர்மம் மனைவி வீடு வாசல் மக்கள், திரவியம் இவைகள் யாவற்றையும் ஏன் கிருஷ்ண னுக்கு அர்ப்பணஞ் செய்யவேண்டும்? கிருஷ்ணன் பூர்ண காமத்துடன்—நினைத்ததைச் செய்து கொள்ளக் கூடியதன்மை—கூடியவராகையினல் பிறர் எண்ணம் தேகம் இவைகளுக்கு ஆசைப்படமாட்டார். தேகத் தையும் அர்ப்பணம் செய்ய முடியாது. பாதாதி கேசம் பரியந்த முள்ளவை களுக்கே சரீரமென்று பெயர். அதிலுள்ள கெட்ட வஸ்துக்களும் கூடவே சேர்ந்தது. மலம் மூத்திரம் இவைகளையும் அர்ப்பணஞ் செய்யவேண்டியது. அது எவ்விதம் முடியும்? பாப புண்ணிய ரூபமான கர்மங்களை அளிப்பதினல் அவைகளுக்கேற்ற பலாபலன்களை கிருஷ்ணனே அனுபவிக்கவேண்டியவரா கிருர். பெயரால் மாத்திரம் கிருஷ்ணனுக்கு என்கிருர்களே தவிர உண்மை யில் தங்களுக்காகவே சமர்ப்பணம் செய்து கொள்ளுகிருர்கள். சரீரத்திலுள்ள மலமூத்திரங்களைக் கோசேனர்கள் ஏன் சமர்ப்பணம் செய்பச் சொல்லுகிற தில்லை? "இனிப்பானவைகள் யாவற்றையும் விழுங்கி விட்டு கைப்பானதை உமிழ்ந்து விடு" என்று நடக்கிருர்கள் போலிருக்கிறது. கோசனர்களுக்குத் தவிர மறு சமயத்தவர்களுக்கு அர்ப்பணஞ் செய்யக் கூடாதென்று எழுதப் பட்டிருக்கிறது. பேராசையுடன் தன்னலத்தைக் கோறுவதாகாதா இது?

இதரர்களுடையதைப் பறிக்கவும் வேதோக்த தர்மத்தை நாசஞ் செய்வ தற்காகவுமே செய்யப்பட்ட சூழ்ச்சிகளாகும். சித்தாந்த இரகசியத்திலுள்ள கீழ்க்கண்ட சுலோகங்களிலிருந்து வல்லபருடைய கபடத்தை அறியலாம்.

श्रावणस्यामले यज्ञ एकादश्यां महानिशि ।
साक्षाद्भगवता प्रोक्तं तदक्षरश उच्यते ॥

ब्रह्मसम्बन्धकरणात्सर्वेषां देहजीवयोः ।
सर्वदोषनिवृत्तिर्हि दोषाः पञ्चविधाः स्मृताः ॥

सहजा देशकालोत्था लोकवेदनिरूपिताः ।
संयोगजाः स्पर्शजाश्च न मन्तव्याः कदाचन ॥

अन्यथा सर्वदोषाणां न निवृत्तिः कथञ्चन ।
असमर्पितवस्तूनां तस्माद्वर्ज्जनमाचरेत् ॥

निवेदिभिः समर्प्यैव सर्वं कुर्यादिति स्थितिः ।
न मतं देवदेवस्य स्वामिभुक्तिसमर्पणम् ॥

तस्मादादौ सर्वकार्ये सर्ववस्तुसमर्पणम् ।
दत्तापहारवचनं तथा च सकलं हरेः ॥

न ग्राह्यमिति वाक्यं हि भिन्नमार्गपरं मतम् ।
सेवकानां यथा लोके व्यवहारः प्रसिध्यति ॥
तथा कार्य्यं समर्प्यैव सर्वेषां ब्रह्मता ततः ।
गङ्गात्वे गुणदोषाणां गुणदोषादिवर्णनम् ॥

அவர்களின் கொள்கைகளுடைய மூலதத்துவ மிதுவேயாம். ஸ்ரீ கிருஷ்ணன் இறந்து குறைந்தது 5000 வருடங்களான பிறகு, சிராவணமாத நடுநிசியில் வல்லபரை எப்படிக் கண்டார் என்று கேழ்க்கவேண்டும்? கோசேனர்களுடைய 'சேல'ஞகி எவன் தன்னுடைய திரவியம் சகலத்தையும் அவர்களுக்கு அர்ப்பணம் செய்கிருனே அவனுடைய சரீரமும் ஜீவனும் சகலதோஷங்களாலும் பாதிக்கப்படாது. அறிவற்றவர்களை ஏமாற்றி தன் வழியில் வசீகரஞ் செய்ய இதுவே வல்லபருடைய மோக்ஷமாகும். கோசேனர்களுடைய மாணக்கர்களின் (ஆண், பெண் இருவர்களின்) தோஷங்கள் சகலமும் நிவர்த்தியாகும் பட்சத்தில் பிணி, ஏழ்மைத்தனம் முதலிய துக்கங்களால் ஏன் அவர்கள் வருந்தவேண்டும்? தோஷங்கள் ஐந்து வகை யாகும் (i) இயற்கை தோஷம். காமக் குரோதாதிகளினுல் உண்டாகிறவைகள். (ii) ஒரே யிடத்தில் ஒரே சமயத்தில் செய்யப்படும் பாபங்கள் (iii) தடுக்கப்பட்டதென ஜனங்களால் சொல்லப்பட்டவை, வேதங்களால் பொய் யென்று காண்பிக்கப்பட்டவை(iv) தீய சகவாசத்திஞலுண்டாகும் சமூகக் கெடுதல்கள் அதாவது:— திருடு, களவு, தாய் சகோதரி, மக்கள், நாட்டுப் பெண், குருபத்னி முதலானவர்களுடன் முறைகெட்ட புணர்ச்சி செய்வது (v) தொடக் கூடாதவைகளைத் தொடுவது. இவ்வைந்து பாபங்களையும் கோசேனர்கள் மதிக்கக்கூடாது. அதாவது இவ்விஷயங்களில் அவரவர்களிஷ்டப் பிரகாரம் நடந்து கொள்ளலாம். இப்பாபங்களைத்தடுத்துக் கொள்ளுவதற்குக் கோசேனர்களுடைய கொள்கைகளை நம்புவதை விட வேறு வழி கிடையாது. ஆகையினுல் கோசேனர்களின் சிடர்கள் யாதொன்றையும் கோசேனற்கு அளித்து சமர்ப்பணஞ் செய்யாமல் அநுபவிக்கக் கூடாது. இக்காரணத்தைக் கொண்டே சிடர்கள் தங்களுடைய மனைவி, மக்கள், நாட்டுப் பெண், பொருள் இவைகளைக் குருவிற்குச் சமர்ப்பணஞ் செய்கிருர்கள். அனுபவித்ததை அளிக்க முடியாதாம். தன்னுடைய சொந்த மனைவியைக் கோசேனர் குருவுடைய சரணங்களில் சமர்ப்பிக்காமல், ஒருவனும் தொடவுங் கூடாது, என்பதே அவர்களுடைய விதி. ஏனெனில் எல்லாகாரியங்களையும் பொருள்களையும் முதன் முதலாகக் கோசேனற்கு அளிக்கவேண்டும். கோசேனருக்கு முதலில் மனைவி முதலாஞேர்களைச் சமர்ப்பணம் செய்துவிட்ட பிறகேதான் புணரல் வேண்டும. கோசேனருடைய கொள்கை களிலிருந்து வேருன மார்க்கத்தையும் கொள்கைகளையும் அவருடைய மாணுக்கர்கள் கேழ்க்கக் கூடாது. அங்கீகாரமும் செய்து கொள்ளக் கூடாது. இக்கொள்கைகள் அவர்களுடைய சிடர்களுள் பெயர பெற்றது. சமர்ப்பணஞ் செய்த சகல பொருள்களையும் பிரம்மத்தைச் சேர்ந்ததாகக் கருதவேண்டியது. வெவ்வேருன நதிகள் கங்கையுடன் சங்கமமாகி கங்

கையுடைய பெயரையும் அடைவது போலவே, கோசேனர்களைச் சேருகிறவர்களுக்குத் தீயகுணங்களெல்லாம் விலகி நன்மையே ஒலிக்கும். ஆகவே தன் சமயக் கொள்கைகளை புகழுதல் அவசியம். தன் காரியத்தை முடித்துக் கொள்ளுவதில் கோசேனருடைய மதம் மற்றெல்லா மதங்களைக் காட்டிலும் தேர்ச்சி பெற்றதாகும்.

பிரம்மாவுடைய இலக்ஷணம் ஒன்றையுங் கூட அறியாத சிடர்கள் இனத்தவர்களுக்கும் நீ எவ்விதம் பிரம்ம வித்தையை அளிக்க முடியும் என்று இவனைக் கேட்கவேண்டும். நாங்கள் பிராம்மணன் எங்களுடன் சேருவதினால் பிரம்மா சேர்க்கை யுண்டாகிற தென்றால் பிரம்மத்தினுடைய குணம் கர்மம் சுபாவம் கொஞ்சங் கூட உங்களிடம் காணப்படவில்லையே?

கேவலம் போகங்களை அநுபவிக்க மாத்திரமே பிராம்மணன் போலும். உங்களுடைய சிடர்களுடைய (இரு இனத்தையும் சேர்ந்த) மனைவி மக்களைச் சமர்ப்பணம் செய்யச்சொல்லிச் சுத்தமாக்குகிறீர்கள். உங்கள் சொந்த மனைவி மக்கள் நாட்டுப் பெண் முதலானவர்களைச் சமர்ப்பணம் செய்யாத படியினால் அசுத்தமாக ஆகிறார்கள் இல்லையா? சமர்ப்பணஞ் செய்யாத பொருள்களை அசுத்தமாக நினைத்தால் அதிலிருந்து பிறந்த நீங்கள் ஏன் அசுத்தமாக மாட்டீர்கள். ஆகையாலே உங்களுடைய மனைவி மக்கள் நாட்டுப் பெண்கள் முதலானோர்களைப் பிறமதத்தவர்களுக்குச் சமர்ப்பணஞ் செய்யுங்கள். இல்லை முடியாது என்றால் பிறர் உங்களுக்கு மனைவி மக்களை அர்ப்பணஞ் செய்யும் வழக்கத்தை விட்டு விட்டு எல்லாம் வல்ல இறைவனால் சொல்லப்பட்டதும் வேத விகிதமான சன் மார்க்கத்தில் வந்து மனிதப்பிறப்பை பலனுள்ளதாகச் செய்து தர்மார்த்த காமமோட்சங்களை யடைந்து ஏன் ஆனந்தத்தை அனுபவிக்கக் கூடாது?

கோசேனர்கள் தங்களுடைய சம்பிரதாயக் காரர்களை "புஷ்டிமார்க்கத்தவர்" களென்கிறார்கள் உண்ணுவது, உறங்குவது, களித்திருப்பது மது பானம்செய்வது ஸ்திரீகளுடன்கூடி இஷ்டப்பிரகாரம் போகவிலாசஞ் செய்வதில் காலங்கழிக்கிறார்கள். பெருந்துக்கத்தை யளிக்கும் (புணர்ச்சி பெருக்கத்தால்) பலகொடிய மகாரோகங்களால் பீடிக்கப்பட்டு கஷ்டப்பட்டு எப்படி ஜனங்கள் இறக்கிறார் என்பது அவர்களுக்குத்தெரியும்? உண்மையாதெனில் அது புஷ்டிமார்க்கமில்லை. குஷ்ட்டி (குன்மரோகம்) மார்க்கமேயாகும். குஷ்டரோகக்காரர்களுடைய சரீர நரம்புகள், கழன்றுபோய் அழுகி ஒழுகுவதினால் அவஸ்தைப்பட்டுக் கடைசியில் இறந்துபோவது போலவே கோசேனர்கள் மிகவும் கஷ்டப்பட்டு மிகவருந்தி மரணமடைகிறார்கள். இதினாலேயே இதை நரகமார்க்கமெனலாம். ஏனெனில் துக்கத்திற்குப் பெயர் நரகம்; சுகத்திற்குப்பெயர்சுவர்க்கம். இக்கோசேனர்கள்தங்களுடையபொய்புரட்டுவலைகளை எங்கும் பரவும்படியாக வீசி எறிந்து மனிதர்களைப்பிடிக்கிறார்கள்." எவ்வளவு ஜீவன்கள் கோலோகத்திலிருந்து வந்திருக்கிறதோ அவ்வளவையும் கைதூக்கி விடவே அவதரித்தப்புருஷோத்தமர்களாக்கும் நாங்கள்" என்கிறார்கள். எங்களுடைய உபதேசத்தைப் பெறாமல் கோலோகங் கிடைப்பதில்லை" அங்கு

இருக்கும் புருஷன் ஸ்ரீ கிருஷ்ணன் ஒருவனே; மற்றவர்களெல்லோரும் மாதர்களே'' என்கிறார்கள். அடடே! எங்களுடைய சமயமே உண்மையான சமயம். கோசேனர் களுக்குள்ள சீடர்களெல்லாம் கோபிகளாக மாற்றப்படுவார்கள் இருமனைவியுள்ள ஒருவனுக்கு எவ்வளவு ஆபத்துக்கள் உண்டாகிறதென்று யோசிக்கவேண்டும். ஒரு புருஷனும் கோடிக்கணக்கான மனைவிகளும் உள்ளவனின் இருப்பையும் துக்கத்தையும் அளவிடமுடியுமோ? கிருஷ்ணன் பெருஞ் சக்தியுள்ளவர் அவர் எல்லோரையும் திருப்தி செய்யக் கூடியவரென்றால் 'ஸ்வாமினி' என்று சொல்லக்கூடிய அவருடைய மனைவிகளும் அவருக்குச் சரியான பலத்தை யுடையவர்களாயிருக்கவேண்டும். ஏனெனில் அவள் அவரில் பாதிபாகமுள்ளவள். காமபலம் ஸ்திரீக்கும் புருஷனுக்கும் சரியாயிருக்கிறது அல்லது புருஷனைவிட ஸ்திரீக்கு அதிகமாயிருக்கிறது. இதைப்போலவே என் கோலோகத்திலும் இராது? இதே மாதிரி வேறு ஸ்திரீகளுடன் கூட சுவாமினி ஸ்திரீகளுக்கு சண்டைசச்சரவுண்டாகும். ஏனெனில் சக்களத்திசண்டை மிகக்கொடியது. சுவர்க்கத்தினுடன் பார்க்குங்கால் கோலோகம் நரகத்தைப்போலவேயாகும். அதாவது இவ்விடத்தில் சம்யோகத்தினால் மூலக்கடுப்புமுதலான கெட்ட வியாதிகள் உண்டாவதுபோலவே கோலோகத்திலுமிருக்கும். சீ! சீ!! சீ!!! இப்பேதைமானிட உலகமே உங்களுடைய கோலோகத்தைவிட மேலானது. தன்னை ஸ்ரீ கிருஷ்ணன் என்று சொல்லிக் கொள்ளும் கோசேனன் பலமாதர்களுடன்கூடி லீலை செய்வதின் பலனாகக் கிரந்தி புண் பிரமேகம் முதலிய ரோகங்களினால் பிடிக்கப்பட்டு கஷ்டப்படுவது போலவே கோலோகத்தில் இவர்களுடைய ஸ்வாமியான ஸ்ரீ கிருஷ்ணனும் இவ்வியாதிகளிலிருந்து ஏன் பீடிக்கப்படமாட்டாரென்று சொல்லுங்கள்? இல்லையென்றால் அவருடைய சுரூபமான கோசேனர்கள் ஏன் பாதிக்கப்படுகிறார்கள்?

**வினா:**—இக்கிலவுலகில் அவதாரம் செய்வதனால் ரோகம் பாபம் இவைகள் உண்டாகின்றன. கோலோகத்தில் உண்டாகாது ஏனெனில் அங்குபிணியும் பாபமுங் கிடையாது.

**விடை:**—போகே ரோக பயம். பயமுள்ளவிடத்தில் பிணி நிச்சயமாகவிருக்கும். கிருஷ்ணனுடைய கோடிக்கான பல ஸ்திரீகளுக்குச் சந்தானமுண்டாகிறதா? இல்லையா? உண்டென்றால் அவைகள் ஆணா, பெண்ணா அல்லது இரண்டுமா? அவர்களெல்லாம் பெண்பிள்ளைகளென்றால் விவாகம் அவர்களுக்கெல்லாம் யாருடன் நடக்கிறது. ஏனெனில் ஸ்ரீ கிருஷ்ணனைத் தவிர வேறு மனிதனும் அங்கு கிடையாதே. கிருஷ்ணன் ஒருவனைத் தவிர வேறுமனிதர்கள் அங்கு இருக்கிறார்களென்றால் முன் சொன்னதிற்கு மாறுபாடாகும். அவர்கள் எல்லோரும் ஆண்பிள்ளைகளே யென்றால் முன் கேள்வியே மறுபடியும் சரியாகிறது. அதாவது யாரை விவாகம் செய்துகொள்ளுவார்கள்? கோலோகத்திலுள்ள ஸ்திரீகளுடன்கூடவே காரியத்தைச் சரிப்படுத்திக்கொள்ளுகிறார்கள் என்று நம்பலாமா? கோபிகளைத்தவிர்த்து வேறு ஸ்திரீகளிருக்கிறார்களென்றால் முன்சொன்னதிற்கு விரோதமாகிறது. குழந்தைகளே

கோலோகத்தில் பிறக்கிறதில்லையென்றால், கிருஷ்ணன் பேடனும் மாதர்கள் மலடிகளாயுமிருக்கவேண்டும். இது டில்லிபாதுஷாக்களின் விலைமாதர்களுடைய ஆந்தப்புரத்தைப்போலவேயாகும். இக்கோலோகம்.

கோசேனர்கள் தங்கள் சீடர்களின், ஆண் பெண், உடல்பொருள் ஆவிமூன்றையும் தனக்கு அர்ப்பணம் செய்யவேண்டும் என்கிறார்கள். இது சரியாகாது. ஏனெனில் விவாகசமயத்தில் ஸ்திரீ, புருஷனுக்குச்சமர்ப்பணம் செய்யப்படுகிறாள். மேலும் மனதுவேறாயிருக்க சமர்ப்பணம் செய்யமுடியாது. ஏனெனில் சரீரம் முழுதும் அர்ப்பணம் செய்யப்படும்பொழுது மனது மாத்திரம் தனியாகாது. மனதின் சம்மதமன்னியில் சரீரத்தை மாத்திரம் அளிப்பது விபசாரித்தனத்திற்குக் குறைந்ததாகாது. பொருள் விஷயத்திலுமப்படியே. மனது அன்னியில் எதையும் கொடுத்தளிக்கமுடியாது. சீடர்களை வேலை செய்யச்சொல்லி தாங்கள் சுகங்களையனுபவிப்பதே கோசேனர்களின் உண்மையான நோக்கம். பல ஜாதி கோசேனர்கள் தைலங்க வர்க்கத்தைச் சேர்ந்தவர்களில்லை. தப்பித்தவறி இவர்களுக்குப் பெண்ணைக் கலியாணத்தில் கொடுத்துவிட்டால் ஜாதிபிரஷ்டஞ் செய்யப்பட்டு தீண்டாதவர்களாக கருதப்படுகிறார்கள். ஏனெனில் கோசேனர்கள் சாதிபிரஷ்டர்கள். அறிவற்று அல்லும் பகலும் சோம்பேரியாகத் திரிந்து காலத்தைக்கழிக்கிறார்கள். அவருடைய நடவடிக்கைகளைக் கவனியுங்கள். யாராவது சீடர்களழைத்தால் கோசேனர் அங்கு போய் கீழுட்கார்ந்து வாய்திறவாமல் மரப்பொம்மையைப் போலிருப்பார். மூர்க்கர்களுடைய பலம் மௌனமாயிருப்பதிலேயே இருக்கிறது என்பது போலவே காணப்படும். பேசினால் அவனுடைய மடத்தன்மை வெளியாகிவிடும். இமைகொட்டாமல் மாதர்களை விழித்துப்பார்த்துக் கொண்டே உட்கார்ந்திருப்பான். அவனால் பார்க்கப்பட்டவள் தன்னை மிகவும் அதிர்ஷடமுள்ளவளாக நினைத்துக்கொள்ளுகிறாள். அவளுடைய தாய், தகப்பன், புருஷன், சகோதரன், முதலானோர்களும் சந்தோஷமடைகிறார்கள். நமஸ்காரம் செய்யும்பொழுது ஸ்திரீகளெல்லோரும் அவனுடைய பாதங்களைத் தொடுக்கிறார்கள். அவனுக்கு இஷ்டப்பட்ட மாதர்களின் கைவிரலை காலால் கொஞ்சம் பலமாக அழுத்துகிறான் அல்லது கண்பார்வையைச் செலுத்துகிறான். அந்த ஸ்திரீயின் புருஷன் முதலான உறவினர்கள் மிகவும் பாக்கியமுள்ளவர்களாக நினைத்துக்கொள்ளுகிறார்கள். அவளுடைய புருஷனும உறவினர் முதலானவர்களும் கோசேனருடைய பாதசேவையிலிரு என்கிறார்கள். இவ்வழி புருஷனுக்கும் மற்றும்முதலான உறவினர்களுக்கும் பிடிக்காவிடில் நடுமனிதனைக்கொண்டு காரியததை நடத்திக்கொள்ளுகிறார். கோசேனருடைய ஆலயத்தைச்சுற்றிலும் அக்காரியத்திற்குவேண்டிய ஆட்களும் இருக்கிறார்கள். அவர்கள் தக்ஷிணையைக் "கொண்டுவாருங்கள் அளியுங்கள், கோசேனன், மனைவி மக்கள் முக்கிய சேவகர்கள் காலாட்படைகள் சுவாமி முதலாவர்களுக்குக் கொடுங்கள், என்று முறையிட்டு வாங்கிக் கொள்ளுகிறார்கள். இம்மாதிரி பெயர்களைச்சொல்லி பணத்தைவாங்கிக் கொள்ளுகிறார்கள். சீடன், இறக்குந்தருவாயில் அவன் மாரில்காலைக்கோசேனர் வைத்துதைத்து

வேண்டிய திரவியத்தைப் பெற்றுக்கொள்ளுகிறுன். மகாபிராமணர்கள், குத்தகைக்காரன், சவம்சுமப்போன், கோவில்மணியக்காரன் முதலானவர்களுடையதைப்போல் இது காணப்படவில்லையா? சீடர்களுடைய கலியாணத்தில் கோசேனனைவரவழைத்து அவனைக்கொண்டே பெண்பிள்ளைகளுடைய பாணிக்கிரஹணத்தைச்செய்யச்சொல்லுகிறுர்கள்.

ஸ்நான சமயத்தில் ஸ்திரீ புருஷர்களிருவரும் முக்கியமாய் ஸ்திரீகளும் மஞ்சள், குங்குமப்பூ கலந்ததைக்கொண்டு கோசேனருடைய சரீரத்தில் தடவித்துடைக்கிறுர்கள். பெரிய பாத்திரத்தில் ஆசனப்பலகையிலமர்த்தி ஸ்நாநஞ் செய்ய உதவி புரிகிறுர்கள். பிறகு பீதாம்பரம் ஒன்று போர்த்திக்கொண்டுப் பாதரட்சைகள் அணிந்து வெளியே வருகிறுன். அவனிடுப்புத்துணி தொட்டியில் ஏறியப்படுகிறது. அத்தொட்டித் தண்ணீரில் ஆசமனம் செய்கிறுர்கள். சுகந்தவாசனைகளைக்கலந்து கோசேனருக்குத் தாம்பூலம் மடித்துக்கொடுக்கிறுர்கள். அதைக் கடித்துக்கொஞ்சம் சாரைவிழுங்கிவிட்டு, மீதியுள்ளதை பக்கத்தில் சீடர்கள் நின்று ஏந்திக்கொண்டிருக்கும் வெள்ளிக் கோப்பையில் உமிழ்கிறுன். அதைப் பிரசாதமாகக் கருதுகிறுர்கள். இவர்களா மனிதர்கள்? என்ன? இதற்கதிகமான மடத்தனமும் அநாசாரமும் உண்டோ? அநேகம் பெயர்கள் சமர்ப்பணையைவாங்கிக்கொள்ளுகிறுர்கள். அவர்களில சிலர் வைணவர்களுடைய கையிலிருந்தும் சாப்பிடுகிறுர்கள். வேறு சிலர் சாப்பிடுகிறதில்லை. அவர்களால் கொடுக்கப்பட்ட விறகுகளைக் கூட ஜலத்தைக்கொண்டு கழுவின பிறகே எடுத்துக்கொள்ளுகிறுர்கள். மாவு சர்க்கரை (வெள்ளை பழுப்பு) நெய் முதலானவைகளைக்கழுவாமல் உபயோகஞ் செய்வதினுல் அவைகள் தீண்டலுள்ளதாகவாகின்றன. சுத்தஞ்செய்தால் சாமான்களே நஷ்டமாய்விடும் அன்றோ? ஸ்ரீ கிருஷ்ணனுடைய சிற்றின்பங்களிலும் விஷய சுகங்களிலும் அதிகப்பணத்தைச் செலவிடுவதாகவும் சொல்லுகிறுர்கள் இவ்வனுபவங்களை யெல்லாம் அவர்களே பெருகிறுர்கள். உண்மையைச் சொல்லுமிடத்து கோசேனர்கள் மிகவும் மானக்கேடான காரியங்களைச் செய்கிறுர்கள். பீர்ச்சாங்குழல் நிறைய சாயநீரை இழுத்து, ஹோளி பண்டிகைக்கொண்டாட்டத்தில் மாதர்களுடையமர்மஸ்தானங்களிலும்இரகசியபாகங்களிலும் அதைப்பீச்சுகிறுர்கள். பிராமணர்களுக்குதவாத உணவுப்பொருள்களை விலைக்கு விற்கிறுர்கள்.

**வினு:**—கோசேனரே கடைவைத்துக்கொண்டு ரொட்டி பருப்பு அரிசி பதார்த்தங்கள் மரக்கறி முதலியவைகளை விற்கிறதில்லை. இச்சாமான்கள் நிறைந்த இலைகளையும் தட்டுக்களையும் சம்பளத்திற்கு, பதிலாக வேலைக்காரனிடம் கொடுக்கிறுர்கள். அவர்கள் விற்கிறதில்லை.

**விடை:**- மாதசம்பளத்தைப் பணமாகக் கொடுத்துவிட்டால் அவர்கள் ஏன் இதை ஒப்புக்கொள்ளுவார்கள்? கூலிக்குப்பதிலாக தங்களுடைய வேலையாட்களுக்கு அரிசி பருப்பு முதலிய உணவுப்பொருள்களை விற்கிறுர்கள். கோசேனனே இக்காரியத்தைச் செய்வானுனல் பிராமணன் முதலான அவனுடைய வேலையாட்கள் உணவுப்பொருள்களை விற்கிறபாபத்திற்குறியவனு

வான். முதல் இப்பாபத்தைத் தாங்களே செய்துவிட்டு இதரர்களையும் இத்துடன் இழுத்துக் கொள்ளுகிறார்கள். நாத்துவாரையைப்போன்ற சிலவிடங்களில் இவர்களே நேரிட விற்கிறார்கள். உணவு விற்பனை செய்வது நீசர்களுடைய தொழில். உத்தமர்களுடைய தல்ல. இவ்விதமானவர்களே ஆரியவர்த்தத்தைக்கீழ்நிலைக்குக் கொண்டுவந்துவிட்டார்கள்.

### சுவாமி நாராயணருடைய மதம்.

வினா:—ஸ்வாமி நாராயணருடைய மதமெப்படி ?

விடை:—சீதளாதேவியைப்போலவே, அவளுடைய வாகனமாகிய கழுதையும். இப்பழமொழி இதற்குத்தகுந்தது. பணம் முதலியவைகளை பறிப்பதில் கோசேனர்களுடைய விசித்திரலீலைகளைப்போலவே சுவாமி நாராயணருடையதும். சகஜானந்தா என்ற ஒருவன் அயோத்திக்குச் சமீபமுள்ள கிராமம் ஒன்றிலிருந்தான். பிரம்மச்சாரியாயிருக்கும் பொழுதே. குஜராத், கத்தியவார், கச், முதலான தேசங்களில் சுற்றிக்கொண்டிருந்தான். அப்பொழுது அவனவனுக்கு இஷ்டமானமார்க்கத்தில் சேர்த்துக்கொள்ளகூடிய அறிவற்றவும் கபடமற்றவும் சாதாரணமுமான உள்ளூர் வாசிகளைக்கண்டான். அங்கு தன் பொய்வஞ்சகவலையை வீசி நாலைந்து பேர்களைச் சீடனுக்கிக்கொண்டான் அவர்கள் ஒன்றுகூடி யோசனைசெய்து சகஜானந்தன் நாராயணவதாரம் என்றும், பெரிய சித்தனென்றும், பக்தர்களுக்கு நான்கு கைகளுடன் பிரத்யக்ஷமாகித் தரிசனமளித்து வேண்டிய வரங்களையளிப்பாரென்னும் வெளிப்படுத்தினர்கள். சீடன் ஒருவன் தாதா காகார் என்ற கத்தியவாரில் பெரிய நிலச்சுவான்தாரை "உங்களுக்குச் சதுர்புஜநாராயணனைக் காணவேண்டுமானல் சகஜானந்தரை பூஜைசெய்யுங்கள்" என்றான். அவரும் அப்படியே சரி நல்லதென்றார். அவர் ஒன்றுமறியாதவர். சகஜானந்தன் தலையில்மகுடந்தரித்து இருகரத்திலேயும் சங்கையும் சக்கரத்தையும் ஏந்தி மேலேதூக்கிக் கொண்டான், மற்றொருவன் தன் இரு கையினும் கதை தாமரையை ஏந்தி அவனுடைய அக்குள்கள் வழியாப் சேர்த்துக்கொண்டான். அப்பொழுது சதுர்புஜநாராயணர் பிரசன்னமாய்விட்டார். நாராயணனை ஒருமுறைபாரத்ததும் கண்களை மூடிக்கொள்ள வேண்டும். இல்லாவிடில் நாராயணன் சினங்கொள்வார் என்றும் சகஜானந்தனுடைய சிஷ்யர்கள் சொல்லிவைத்திருந்தார்கள். இவனுடைய பொய் வெளியாய்விடுமென்றும் அவர்கள் பயந்தார்கள் போலும். அசைவற்ற கற்சிலையைப்போல் பளபளப்பான ஆடைகளை அணிந்து சகஜானந்தன் நிற்கும் அறைக்கு அழைத்துச்சென்றார்கள். அங்கு அவன்பேரில் வெளிச்சத்தை வீசினர்கள். தாதாகாசர் சதுர்புஜநாராயண மூர்த்தியைக் கண்டவுடன் வெளிச்சத்தை மறைத்து விட்டார்கள். அவனுடையகாலில் எல்லோரும் விழுந்து நாராயணனை வணங்கிப்பணிந்து அவ்வறையிலிருந்து வெளிவந்தார்கள். தாதாகாசர்க்கும் நீ புனிதமாய் விட்டாய் இப்பொழுது நீ இப்பெரியாருடைய சீடனுக வேண்டுமெனச் சீடர்கள் சொன்னர்கள். அவரும் சீடனுக இசைந்தார். இவர்கள் அடுத்த அறைக்குள் போவதற்குள்ளாகச் சகஜானந்தன் தன் ஆடைகளை மாற்றி அங்கேயே மஞ்ச

மொன்றில் அமர்ந்தான். தாதாகாசர்க்குக்காண்பித்து பாருங்கள்! வேறு சுவ ரூபத்தை யெடுத்து இங்கு வீற்றிருக்கிறார்கள் என்றார்கள். அவர்களுடைய வலையில் அகப்பட்டுக்கொண்டு அப்பொழுதிலிருந்து சுவாமிநாராயணருடைய கொள்கைகளின் வேரு ஊன்றியது. ஏனெனில் தாதாகாசர் பெரிய ஜமீன் தாராயிருந்தார். அவ்வூரையும் சகஜானந்தன் தன்தலைமை ஸ்தானமாகச் செய்துக்கொண்டான். அங்கிருந்து பலவிடங்களுக்குச்சென்று உபதேசம் செய்துவந்தான். சாதுக்கள் அநேகம் பேரையும் சேர்த்துக் கொண்டான். சாதுக்கள் சிலரது கழுத்து நரம்புகளைக்கசக்கி நசுக்கிவிட்டு மூச்சுத்தெணரச் செய்துவிட்டு, இவரைச்சமாதியடையச் செய்துவிட்டேன் பார் என்பான். இவ் விதகுறும்புகாரியங்களனைத்தையும் அறியாத கத்தியாவார் பேதை ஜனங்களை இவ்வாறு மயக்கிக்கொண்டு வந்தான். அவனிறந்தபிறகு சீடர்கள் மிகவும் அடாதபொய்க்காரியங்களையும் வஞ்சகங்களையும் கையாண்டு வந்தார்கள். கீழ்க் கண்டகதையினால் இது நன்கு விளங்கும்.

திருட்டுக்காரியம் செய்துக்கொண்டிருக்கும் பொழுது கள்வன்பிடிக்கப் பட்டான். நியாதிபதி அவனுடைய மூக்கை நறுக்கிவிடவேண்டும் என்று தண் டனையை விதித்தார். மூக்கை நறுக்கினவுடனே அப்படுகள்ளன் ஆடிப்பாடி குதிக்கவாரம்பித்தான். ஏன் அம்மாதிரி செய்கிறான் என்று ஜனங்கள் வின வினார்கள். அது சொல்லக்கூடாதது என்று பதிலளித்தான். அப்படி சொல் லக்கூடாதது என்னவென்று அவர்கள் மறு படியும் வினவினார்கள். அவன் அதற்குமுன்னால் கேட்பதும் பார்க்காததும் என்றான். "வாருங்கள் வாருங் கள் என்ன விவரம் என்றுசொல்லுங்கள்" என்றார்கள். எனக்கு முன் பிரத் யக்ஷமாகச் சதுர்புஜ நாராயணன் நிற்கிறார் என்று சொல்லி ஆடிப்பாடி நான் புனிதமானேன் என்றான். அவர்கள் ஏன் நாராயணனைக் காணமுடிகிறதில்லை என்றுஜனங்கள் கேட்டார்கள். அவர்களுடைய மூக்கு பார்வையை மறைக்கிற தென்றும் அதை அகற்றியபிறகே காணமுடியும் என்றும் அதற்கு முன்னால் முடியாதென்றும் சொன்னான். அவர்களிலுள்ள சில முட்டாள் மூக்கையிழந் தபோதிலும் நாராயணனை காணவேண்டுமென்றார்கள். நாராயணனைக்காண மூக்கைவெட்டிக்கொள்ளுவதாகவும் சொன்னார்கள். பாதகன் மூக்கை அறுத்து விட்டு "நான் செய்கிறமாதிரியே நீயும் செய்யவேண்டும். இல்லையானால் ஏளனத்திற்கு ஆளாய் விடுவோம்" என்று காதில் இரகசியமாக்ச் சொன்னான். அதன்மேல் அம்மனிதனும் ஆடிப்பாடிக் களித்து சிரித்துத் தானும் நாராயண னைக் காணுவதாகச்சொன்னான். வரவர நாராயணனைக்காண வேண்டுமென்று மூக்கை நறுக்கிக்கொண்ட ஜனங்களின் தொகை ஆயிரத்திற்கு மேலாய்விட் டது. அப்பொழுது பெரிய கூக்குரல் உண்டாச்சுது. தங்களுடைய கட்சி யையும் 'நாராயணதரிசிகள்' நாராயணனைக்கண்டவர்கள் என்று அழைத்துக் கொண்டார்கள். அறிவில்லாத அரசனொருவன் இதைக்கேட்டு இவர்களை கூப் பிட்டு வரவழைத்தான். அங்கு சென்றவுடன் கூடிக்குலாவி ஆடிப்பாடிசிரித்து களித்தார்கள். நாராயணனை நேருக்குநேராகக் காணுவதாகச் சொன்னார்கள். அரசனுக்கு அது உண்மை யெனப்பட்டது, 'நாராயணதரிசிகள்' தன்னு

டைய மூக்கினல் பார்க்கமுடியாது என்றூர்கள். அரசன் இது சரியெனநம்பி ஜோசியனை வரவழைத்து மூக்கை நறுக்கிக் கொள்ளுவதற்குச்சரியான முகூர்த்தகாலம் ஒன்றைபார்க்கும்படி ஏவினன், அவர்கள் மாட்சிமை தங்கிய அரசனே! அன்னதாதாவே!. தசமி தினம் காலை எட்டுமணிக்கு மூக்கை நறுக்கிக் கொண்டு நாராயணனைக்காண ஏற்றமுகூர்த்தம் "என்றூர்கள். அடே போப் ஜனங்களே! மூக்கையுமா நறுக்கிக் கொள்ளுவதற்கு பஞ்சாங்கத்தில் முகூர்த்தம் வைக்கப்பட்டிருக்கிறது !! தன்னுடைய மூக்கை நறுக்கிக்கொள்ள அரசன் நிச்சயம் செய்துகொண்டவுடன் ஆயிரம் பெயர்களையும் இராஜாங்க செலவில் விருந்திற்கழைக்கும்படி உத்திரவிட்டார். இதைக்கண்டு அவர்கள் களிப்படைந்து ஆடிப்பாடித்திரிய வாரம்பித்தார்கள். திவானுக்கும் இன்னும் மற்ற புத்திவான்களுக்கும் இது பிடிக்கவில்லை. 90 வயதுள்ளகிழவர் (மாஜிதிவான்) ஒருவரிருந்தார். அச்சமயத்தில் திவானுயிருந்த அவருடைய பேரனின் பேரன் அவருக்கு எல்லாவற்றையும் தெரிவித்தான். அதன் பேரில் அவர் அம்மனிதன் கொடும்பாதகன் என்னை அரசனிடம் அழைத்துப்போ" என்று சொன்னபிரகாரமே செய்தான். அவர் ஆசனத்திலமர்ந்த பிறகு நாராய தரிசிகளைப்பற்றினவை யெல்லாவற்றையும் அரசன் சந்தோஷத்துடன் சொன்னன். வயது முதிர்ந்த திவான் அதாவது பழையமந்திரி, கேளும் மகாராஜனே அவசரப்படாதேயுங்கள், யோசனை செய்யாமல் செய்ததைபற்றி ஒருவன் பிறகு வருத்தப்படுகிறுன் என்றூர்.

அரசன்:—அந்த ஆயிரம் பெயர்களுமா பொய் சொல்லுவார்கள் ?

திவான்:—அவர்கள் பொய் சொல்லுகிறூர்கள் அல்லது மெய்சொல்லுகிறூர்கள் என்று சரிவரவிசாரித்துபார்க்காமல் நிச்சயம் செய்யமுடியாது.

அரசன்:—எவ்விதம் விசாரணைசெய்யமுடியும் ?

திவான்:—அறிவு, இயற்கையமைப்பு, நேர்பார்வை, முதலான பிரமாணங்களினல்.

அரசன்:—படிக்காதவனுயிருந்தால் எவ்விதம் விசாரணை செய்யமுடியும்?

திவான்:—அறிந்தவர்களுடைய சேர்க்கையினுலும் ஞானவிருத்தியினுலும் செய்யலாம்.

அரசன்:— அறிந்தவர்களில்லாமல்போனல்,

திவான்:—பிரயத்தனமுள்ளவனுக்காகாதது ஒன்றுமில்லை.

அரசன்:—இக்காரியத்தில் என்ன செய்யவேண்டுமென்று சொல்லுகிறீர்.

திவான்:—நான் கிழவன்; வீட்டிலேயே உட்கார்ந்திருப்பவன். இன்னும் கொஞ்சநாளே வாழ்வுண்டு. ஆகையினல் முதலில் பரிக்ஷைசெய்வேன். பிறகு சரியென்பதை நீங்கள் செய்யலாம்.

அரசன்:—அது நல்ல யோசனையே. திவானுடைய மூக்கை நறுக்க முகூர்த்தம் பார்க்கவும்.

ஜோசியன்:—மகாராஜாவினுடைய ஆக்ஞை. சுக்லபக்ஷம் பஞ்சமி திதி பத்து மணிக்கு முகூர்த்தம் நன்றுயிருக்கிறது. குறித்த தினத்தில் பஞ்சமி

என்று எட்டுமணிக்கு அரசன் முன் கிழ திவான் வந்தார். தன்னுடன் இராயிரம் படையாட்களை கூட்டிவரும்படியும் சொன்னர்.

அரசன்:—படைகளுக்கு அங்கு என்ன வேலை ?

திவான்:—ராஜதந்திரம் உங்களுக்கு அவ்வளவு தெரியாது. நான்சொன்ன பிரகாரம் செய்யுங்கள்.

அரசன்:—நல்லது சைனியத்தைத்தயாரியுங்கள்" 9-30 மணிக்கு எல்லோரையுமழைத்துக்கொண்டு அரசன் சென்ருன். இவர்களைப் பார்த்து நாராயணதரிசிகள் பாடி சிறித்து ஆடவாரம்பித்தார்கள். இச் சமயத்தைக் கண்டு பிடித்தவரும் முதன் முதலில மூக்கு வெட்டுண்டவரையும் வரவழைத்து அரசன் இன்றைக்கு முதலில் நம்முடைய திவானுக்கு நாராயண தரிசனம் செய்துவை என்ருர். பத்துமணியடித்தவுடன் கிழ திவானுடைய மூக்கின் கீழ் தட்டு ஒன்றை ஒருவன் பிடிக்க நாராயண தரிசிகளுடைய எஜமான் கூறிய கத்தி யொன்றைக்கொண்டு மூக்கை வெட்டி விட்டுத் தட்டில் வைத்தான். ரத்தவெள்ளம் மூக்கிலிருந்து பெருகி திவானுடைய முகம் வெளுத்துப்போய்விட்டது. அச்சண்டாளன் காதுடன் ரகசியமாய் "நீயும் சிரித்துக்கொண்டு எனக்கு நாராயணன் காணப்படுகிருர்" வெட்டுண்ட மூக்கு ஒன்ருகச்சேராது. நான் சொல்லுவதை செய்யாமல் போனுல் ஊர் நகைப்புக்கு ஆளாகி விடுவீர். என்ருன். இதைச் சொல்லி தூரவிலகி நின்ருன். கைக்குட்டையை எடுத்து வெட்டுண்ட மூக்கில் திவான் வைத்து அழுத்திக் கொண்டார், தயவுசெய்து நாராயணனைக்காண்கிறீர்களா வென்று தெரிவியுங்கள் என்ருன் அரசன். அரசனுடைய காதில் இரகசியமாய் "ஒன்றுமில்லை. வீணுக இவன் ஆயிரம் பேர்களை நாசம் செய்து விட்டான்" என்ருர். அவர்களை என்ன செய்யவேண்டுமென்று அரசன் கேட்டான். கைதிசெய்து கடுந்தண்டனையை அளிக்கவேண்டும். சிறையிலிட்டு உயிருள்ள வறையில் வைத்திருக்கவேண்டும். அவர்களை எல்லாம் பொய் மார்க்கத்தில் திருப்பின பாதகனை கழுதைமேலேற்றி அவமானப்படுத்திக் கொலைசெய்ய வேண்டும் என்ருர். அரசனும் திவானும் ஒருவருக்கொருவர் மெதுவாகப்பேசிக் கொள்வதிலிருந்து தெரிந்துகொண்டு நாராயணதரிசிகள் தப்பியோட பிரயத்தினம் பண்ணினர்கள். படைகள் நாலாபக்கமும் சூழ்ந்துகொள்ளவே தப்பியோட முடியவில்லை. எல்லோரையும்பிடித்துக்கைது செய்யப்பட்டது. அக்கொலை பாதககலகத்தலைவனின் முகம் கரும்புள்ளிகளால் மறைக்கப்பட்டும் கழுதை மேலேற்றி காதரந்த செருப்புமாலைகளைக்கழுத்தின் மேல் போட்டுப் பட்டண வீதிகளின் வழியாய் ஊர்வலம் வரட்டும். மண்ணுருண்டை, சாம்பல் முதலியவைகளைச்சிறுவாகள்மேலே எறியட்டும் என்று அரசன் உத்திரவிட்டார். ஜோடுகளால் அடிக்கட்டும் துண்டுதுண்டாக நாய்கள் செய்யட்டும் இப்போக்கிரியை தண்டனை செய்யாவிடில் மற்றவர்களும் இத்தியகாரியங்கள் செய்வதிலிருந்து விலகமாட்டார்கள் என்று அரசன் உத்திரவளித்துவிட்டான். இவ்விதமான மானபங்க முடிவை நாராயணதரிசிகளடைந்தார்கள். சகலவேத விரோதிகளையும் இதரர்களுடைய திரவியத்தை மோசஞ்செய்வதிலேயும் கண்ணும் கருத்து

மாயும் சமர்த்தர்களாயுமிருக்கிறார்கள். மதபேதக்காரர்களுடைய கெடுதல்களே இவை. சுவாமி நாராயணக்காரர்கள் இத்தகைய தீச்செயல்களின் துணைகொண்டு மற்றவர்களை கொள்ளையிடுகிறார்கள். சாவுக்கிடையில் சகஜானந்தர் வெள்ளைக்குதிரையின் மீதேறி தங்களை அழைத்துக்கொல்லவந்ததாகவும் அதே கோவிலுக்கு வாரமொருமுறை வருவதாகவும் அறிவில்லாதவர்களை ஏமாற்றுகிறதற்காகவே சொல்லுகிறார்கள். திருவிழாநாட்களில் ஆலயத்தினுள் பூசாரிகளிருக்கிறார்கள். கீழேகடை ஒன்றுமிருக்கிறது. அதையும் ஆலயத்தையும் குழாய் ஒன்று சேர்க்கிறது. ஆலயத்தில் பூஜையளிக்கப்படும் தேங்காய்களையெல்லாம் குழாயின் வழியாய் கீழேயனுப்பிவிடுகிறார்கள். அத்தேங்காய்களை மறுபடியும் விலைக்கு வாங்கி மற்ற ஆராதனைக்காரர்கள் பூஜைக்குக் கொடுக்கிறார்கள். இவ்விதமாக ஒரே தேங்காய் அதே நாளில் ஆயிரந்தடவை விற்கப்படுகிறது. மீதி சாமான்களுமப்படியே. இப்பிரிவினைக்காரர்களிடத்தில் வேறு தனி விசேஷம் ஒன்றுண்டு. அந்தந்தசாதிக்கிசைந்த காரியங்களை அந்தந்த சாதுக்கள் செய்யவேண்டும். உதாரணமாகஅம்பட்டசாது க்ஷவரவேலை செய்கிறான். குயவனான சாது சட்டிபானை செய்கிறான். பானியா (கடைவைத்திருக்கும்) சாது பானியா வேலையைச்செய்கிறான். சூத்திர சாது சூத்திரனே. தங்களுடைய சீடர்களின்மேல் ஒருவிதவரியைச் சுமத்தியிருக்கிறார்கள். வேஷங்காட்டி கோடிக்கணக்கானவர்களை சிஷ்யர்களாகச் செய்துகொண்டிருக்கிறார்கள். பிரதிதினமும் விருத்தியாய்க்கொண்டே இருக்கிறார்கள். சகஜானந்தனுடைய சிங்காசனத்தைப்பின்பற்றுகிறவர்கள் விவாகஞ் செய்துகொண்டு கிரகஸ்தர்களாகிறார்கள். நாணயங்களணிந்து கொள்ளுகிறார்கள். சீடர்களுடைய அழைப்புக்கிணங்கி அவர்களுடைய வீட்டிற்குப் போகும்பொழுது கோசேனரைப்போலவே தன்பெயராலும் தங்கள் மக்கள் பெயராலும் தானங்களைப்பெறுகிறார்கள். தங்களுடையதை சத் சங்கம் என்றும் பிறமதஸ்தர்களுடையதை குசங்கமென்றும் அழைக்கிறார்கள். மற்றவர்கள் எவ்வளவு உத்தமமானவர்களாயும் அறிந்தவர்களாயு மிருந்தபோதிலும் தங்களுடையதைத்தவிர வேறான தர்மத்தில் எப்பொழுதும் அவர்களை ஒருபொழுதும் சட்டைசெய்கிறதுமில்லை. பணிகிறதுமில்லை. பிறமதத்தவர்களை மதிப்பதையும் பாபமாகக் கருதுகிறார்கள். இச்சாதுக்கள் மாதர்களின் முகத்தைக்கூட கண்ணெடுத்துப் பார்க்கிறதில்லை. வெளிப்படையாக மறைவில் என்னகெடுதல்களிருக்கிறதென்று யாருக்குத் தெரியும்? இவைகளெல்லாம் இன்னும் வெளியாகவில்லை. சில மைதுனசம்பவங்களும் வெளியாயிருக்கின்றன. நல்லபதவியி லிருக்கிறவர்கள் இறக்குந்தருவாயில் அவர்களை கிணற்றில் தள்ளிவிட்டு இன்னின்னமனிதன் சரீரத்துடன் வைகுந்தத்தை யடைந்தான் என்று பிரசித்தஞ்செய்துவிடுகிறார்கள். "சகஜானந்தரே நேராக அழைத்துச் செல்ல வந்தார். மகானயிருந்தபடியினால் அவரை தாங்கள் எடுத்துக்கொண்டு போகக்கூடாதென்று சகஜானந்தருடன் மன்றாடியும் வேண்டியும் கேளாமல் வைகுண்டத்தில் இவர் அவசியம் வேண்டியவரென்று அழைத்துச்சென்றார். ஆகாயவிமானத்துடன் கூட சகஜானந்தரைக்கண்ணால் கண்டேன். அம்ம

காத்மாவை ஆகாய விமானத்திலேற்றிக்கொண்டு பூமாரி பொழிய சென்ருர்'' என்ருர்கள். ஏதாவது சாது ஒருவருக்கு உடம்பு சரியன்னியில் வியாதியுடனிருந்து பிழைக்கிற நம்பிக்கையில்லாமல் போய்விட்டால் நாளையிரவு வைகுண்டத்திற்குப் போவானென்று வெளிப்படுத்துகிருர்கள். இரவில் பிராணன் போகாமல் மூர்ச்சையடைந்து போனல் தான் சொன்ன வார்த்தைகள் பொய்யாகாமலிருக்கும் பொருட்டு கிணற்றில் தள்ளிவிடுகிருர்கள். இப்படியே ''கோலோக்யகோசேனன் இறக்கும்பொழுதும்சிராட்டிவிட்டார்''என்கிருர்கள்.

கோசேனர்களாலும் சுவாமி நாராயணப் புரோகிதர்களாலும் உபதேசம் செய்யப்படும் மந்திரம் இதுவேயாம். "ஸ்ரீ கிருஷ்ணன் என்சாணம்" என்று அவர்கள் சொல்வதற்கு ஸ்ரீ கிருஷ்ணனே என்னுடைய தஞ்சம் என்று அர்த்தம். "ஸ்ரீ கிருஷணன் என்னுடைய ஆதரவை சரணுகதியைத் தேடட்டும்'' என்றும் ஆகும். வியாகரணம் முதலியவைகளுக்குச் சரியில்லாததும் ஒவ்வாததுமான அமைப்புடன் இப்பிரிவினர்களெல்லோரும் மந்திரங்களைச் செய்கிருர்கள். அவர்களுடைய முன்னோர் கல்விப்பயிற்சி அற்றவர். எனவே தர்க்க வியாகரணசாஸ்த்ரங்களை அறியார்கள்.

## மத்வரீகள்.

வின:—மத்வ மதம் சரியானதா ?

விடை:—பீரமதத்தவர்களைப்போலவே மத்வமதத்வர்களும் சக்கிராங்கிதர்களே. இந்த வித்தியாசம் மாத்திரந்தான். ஆனல் ஒன்றுண்டு; ராமானுஜரை பின்பற்றுகிறவர்கள் ஆயுள்நாளில் ஒரே தடவைதான் சூடுபோட்டுக் கொள்ளுகிருர்கள். மத்வர்களோ வருடமொருமுறை சூட்டுமுத்திரையிட்டுக் கொள்ளுகிருர்கள். சக்கிராங்கிதர்கள் நெற்றியில் மஞ்சள்கோடு போட்டுக் கொள்ளுகிருர்கள். மத்வர்கள் கருப்புகோடுயிடுகிருர்கள். சக மத்வபண்டிதர் ஒருவருடன் மகாத்மா ஒருவருக்குக்கீழ்கண்ட வாக்குவாதம் நடந்தது.

மகாத்மா:—கருப்புக்கோட்டையும் சந்திரகலேயின் அடையாளத்தையும் ஏன் நெற்றியில் இழுக்கிறீர்கள்.

பண்டிதர்:—இதையிழுப்பதினுல் வைகுண்டம் பெறலாம். மேலும் ஸ்ரீ கிருஷ்ணன் சரீரமும் சியாமளவர்ணமானது. (மகா) கரப்பு நிறக்கோடு ஒன்றையும் அர்த்தச்சந்திர பிம்பத்தையும் இழுத்துக்கொள்வதினுல் வைகுண்டம் சேருவீர்களேயானுல் முழுமுகத்தையும் கருப்பாகச்செய்து கொண்டால் எதையடைவீர்கள் ? நீங்களும் ஸ்ரீ கிருஷ்ணனைப்போலவே யென்ருல் அவருடைய சரீரம் முழுவதும் கருப்பாயிருந்தமாதிரியே உங்களுடைய சரீரம் முழுவதையும் கருப்பாகச்செய்துகொள்ளவேண்டுமே ?

எனவே மத்வர்கள் மேலானவர்களல்லர் யென்பது வெளிப்படையாகிறது.

## லிங்காங்கிதர்கள்.

வின:—லிங்காங்கிதர்களுடைய மதம் எப்படி ?

விடை:—சக்கிராங்கிதர்களுடைய பிரிவினையைப்போலவே சக்கிராங்கிதர்கள் சக்கிரத்தைக்கொண்டு சூட்டிக்கொள்வதைப்போலவும், நாராய

ணனைத் தவிரவேறுயாரையும் நம்புவதில்லைபோலவும், லிங்காங்கிதர்கள் லிங்க உருவமுள்ள அகசைக்கொண்டு சூடுபோட்டுக்கொண்டு மகாதேவனைத் தவிர வேறுயாரையும் நம்புகிறதில்லை. தங்கம் அல்லது வெள்ளியினால் கட்டியுள்ள லிங்கங்கள் ஒன்றைக்கழுத்தில் கட்டித்தொங்கவிட்டுக்கொள்வதே லிங்கங்கிதர்களுடைய ஒரு முக்கியமான வித்தியாசம். நீர் அருந்தும் முன்னாலேகூட அதற்குங்காண்பித்தே குடிக்கிறார்கள், சைவர்களுடையதைப் போலவே லிங்காங்கிதர்களுடைய மந்திரோபதேசமும்.

## பிரம்மசமாஜம்.

வினா:—பிரம்மசமாஜம், பிரார்த்தனைசமாஜம் இவைகள் நல்லதா ?

விடை:—அவர்களுடைய நம்பிக்கைகளில் கொஞ்சம் நன்மைகளும் பல தீமைகளும் இருக்கின்றன.

வினா:—பிரம்மசமாஜமும் பிரார்த்தனசமாஜமும் எல்லாவற்றையும் விட மேலானதே. இவைகளுடையகட்டளைகளும்நன்மையுள்ளதாயிருக்கின்றனவே.

விடை:—கட்டளைகள் எல்லாம் நல்லதாகா. ஏனெனில் வேதவித்தையற்றவர்களுடைய கட்டளை எவ்விதம் எப்பொழுது சத்தியமாயிருக்கும் ?

(I) கிறிஸ்துவமதத்தைத்தழுவதிலிருந்து கொஞ்சம் விக்ரக ஆராதனை நின்று வருகிறது.

(II) பொய்ப்புத்தகங்களுடைய தடைகளிலிருந்து ஜனங்களைக்கொஞ்சம் இது வருவித்திருக்கிறது.

வெறுக்கத்தகுந்தவைகளாவன:—

(I) இவர்களில் சுதேச பக்தி மிகக் குலைந்து இருக்கிறது. பலதுறைகளில் கிறிஸ்துவர்களைப் பின்பற்றியிருக்கிறார்கள். உண்ணுதல் அருந்துதல், விவாகஞ்செய்துகொள்ளுதல் இவைகளுக்கான கட்டுப்பாடுகளையும் ஒழுக்கங்களையும் மாற்றியிருக்கிறார்கள்.

(II) தன் தேயப்புகழையும் மூதாதைகளுடைய பெருமையையும் பாராட்டாமலிருப்பது மன்னியில் தூஷிக்கவும் செய்கிறார்கள். கிருஸ்துவர்களையும் ஐரோப்பியர்களையும் தங்களுடையஉபந்நியாசங்களில் ஆகாயமளாவப் புகழுகிறார்கள். பிராம்மாவைப்போன்ற மகரிஷிகளின் பெயரைக்கூடசொல்வதில்லை. சிருஷ்டிமுதல் இதுவரையில ஐரோப்பியர்களைவிட மேலான வித்வான்கள் கிடையாது என்கிறார்கள். ஆரியவர்த்தநாடு எப்பொழுதும் அறிவின்மையாலேயே வருந்திவருகிறது என்கிறார்கள். இது ஒரு பொழுதும் மேன்மையடையாது என்று சொல்லுகிறார்கள்.

(III) வேதங்கள், சாஸ்திரங்கள் இவைகளைப் புகழாமலிருப்பது மன்னியில் நிந்தனையும் செய்கிறார்கள். பிரம்மசமாஜச்காரர்களுடைய நூல்களில் சாதுக்களுடைய எண்ணிக்கையில் இயேசு, மோசஸ், மகம்மது, நானக் சைதன்யர் முதலானோர்களின் பெயர்கள் குறிப்பிடப்பட்டிருக்கிறதே தவிர மகரிஷிகள் முனிகள் பெயர் ஒன்று கூடக்காணப்படவில்லை. சாதுக்களென்று அவர்களுடைய நூல்களில் காணப்பட்டவர்களால் உபதேசஞ் செய்யப்பட்ட

வைகளையே தழுவினவர்களென்று இதிலிருந்து ஒரு விதம் வெளியாகிறது. இவர்கள் ஆரியவர்த்தநாட்டில் பிறந்து இத்தேச அன்னபானுதிகளையே சாப்பிட்டும் குடித்தும் இப்பொழுதும் சாப்பிட்டுக்கொண்டும் குடித்துக்கொண்டும் இருந்து தன்னுடைய தாய் தகப்பன் தாதா முதலான மூதாதைகளின் சமயத்தைக்கைவிட்டு அந்நிய நாட்டுச்சமயங்களின் பேரில் அதிகப்பரிவு பேசி வித்தாயார்த்தி என அழைத்துக் கொள்ளுகிறார்கள். இத் தேசத்திலுண்டான வடமொழியை அறியாமல் ஆங்கிலபாஷையைப் படித்து அபிமானிகளாய் புதுச் சமயங்களை ஏற்படுத்த ஆவலுள்ளவர்களாக விருக்கிறார்கள். இவைகளெல்லாம் மானிடவர்க்கத்தின் அழியாநன்மைக்கும் அபிவிருத்திக்கும் ஏற்றவைகளாகுமா ?

(IV) கணக்கில்லாமல் சாப்பிட்டு அருந்துகிறார்கள். அதாவது துருக்கர்கள் ஐரோப்பியர்கள் ஒடுக்கப்பட்டவர்கள் முதலானவர்களுடன்கூடி அன்னபானம் செய்கிறார்கள். கலந்து அன்னபானம்செய்வது ஜாதிபேதத்தை விடுவது இவைகளினாலே நாமும் நம்தேசமும் சீர்திருத்தமடையும் என்று நம்பு வேண்டும். ஆனால் இவ்விதவார்த்தைகளினால் இல்லை. இந் நம்பிக்கைகளினால் இன்னும் கெடுதலே ஏற்படும் இதை அவர்களறியட்டும்.

வினா:—சாதிபேதம் ஈசுவரனால் ஏற்பட்டதா? அல்லது மனிதனால் செய்யப்பட்டதா ?

விடை:—ஈச்வரனாலும் மனிதனாலும் உண்டானதேயாம்.

வினா:—எவ்விதம் ஈச்வரனால் ஏற்படுத்தப்பட்டது; எவ்விதம் மனிதனால் செய்யப்பட்டது ?

விடை:—மனிதன், பக்ஷி, மிருகம், மரம், செடி, முதலியவைகள் ஈச்வரனால்ஏற்பட்டது. மிருகங்களில் பசு, குதிரை, யானை முதலானஜாதிகள்; மரங்களில் அசுவதமரம், வேப்பமரம், மாமரம் முதலானவைகள்; பக்ஷிகளில் அன்னம், காக்கை, நாரை முதலானவைகள்; ஜலஜந்துக்களில் மீன் முதலை முதலானவைகள் இச்சாதிகளெல்லாம் பரமேச்வரனால் ஏற்படுத்தப்பட்டவை. இவ்விதமே பிராம்மணன் க்ஷத்திரியன் வைசியன் சூத்திரன் முதலானவர்களும். (இதனால் அவர்கள் பிராம்மணன் க்ஷத்திரியன் முதலானவர்களாகவே பிறந்தார்களென்பதில்லை. பிரம்ம க்ஷத்திரிய வைசிய சூத்திர என்ற நால்வகையாக மனிதர்கள் பிரிக்கப்படுகிறார்கள்) பழவர்ணாசர்மதர்மவிதிகளில் கண்டிருப்பது போல் குணம் கர்மம் சுபாவம் இவைகளினாலேயே வர்ணவியவகாரத்தைக்காணவேண்டியது அவசியமாகும். இது மனிதர்களுடைய வேலை. ஆனபடியினால் வர்ணாச்ரம தர்ம வியவகாரம் மனிதனால் செய்யப்பட்டதாகும். குணகர்ம சுபாவப்பிரகாரம் மனிதர்களை பிராம்மண க்ஷத்திரிய வைசிய சூத்திரனாக வகுத்து பிரிப்பது வித்வான்கள் ராஜாக்கள், இவர்களுடைய வேலையாகும். போஜன பேதங்களும் ஈச்வரனாலும் மனிதனாலும் செய்யப்பட்டது. உதாரணமாக சிங்கம் மாம்சாகாரி. காண்டாமிருகம் உற்பிஜாசனி. அவைகளுடைய உணவில் ஏற்பட்ட இப்பேதங்கள் ஈச்வரனால் செய்யப்பட்டவை. தேசகாலத்திற்கேற்ற போஜன வித்தியாசங்கள் மனிதனால் செய்யப்பட்டவை.

வினா:—ஐரோப்பியர்களைப்பாருங்கள். ஜோடு, கால்சட்டை, சிறுசொக்காய், முதலியவைகளைத் தரித்துக்கொண்டே ஹோட்டல்களில் வசித்து எல்லோரிடத்திலிருந்தும் சாப்பிடுகிறார்கள். இதுவே அவருடைய முன்னேற்றத்திற்கு முதற்காரணமாகும்.

விடை,—இதுவீண் பிரமையே. ஏனெனில் மகமதியர்கள் நீசர்கள் முதலானவர்களும் எல்லோரிடத்திலுமிருந்து சாப்பிடுகிறார்கள். இருந்தும் ஏன் அவர்கள் முன்னேற்றமடையவில்லை? அவருடைய முன்னேற்றத்தின் காரணங்களாவன;—

(1) ஐரோப்பியர்களுள் பால்யவிவாகம் கிடையாது. (2) பெண் பிள்ளைகளுக்கு நல்ல சிட்சையும் வித்தையுமே கொடுக்கிறார்கள். (3) சுயவரம் விவாகமிருந்துவருகிறது. (4) கெட்டவர்களுடைய சகவாசம் செய்யப் பெண்பிள்ளைகளை விடுகிறதில்லை. நல்ல அறிவாளர்களானபடியினால் நேர் நெறியற்றவர்களுடைய மாயவலையில் அகப்பட்டுக்கொள்ளுகிறதில்லை. (5) அவர்கள் என்ன செய்தபொழுதிலும் தீரவிளங்க ஆலோசித்து கூட்டங்கூடி விசாரணை செய்தே நடக்கிறார்கள். (6) தங்களுடைய ஜாதியின் மேம் பாட்டிற்காகத்தங்களுடைய உடல்பொருள் ஆவியையும்செலவிடுகிறார்கள். (7) ஆலசியத்தை விட்டு உழைப்புள்ள வர்களாக விருக்கிறார்கள். (8) தங்கள் தேசத்தில் செய்யப்பட்டவைகளை அணிந்து கச்சேரிகளிலும் கார்யாலயங்களிலும் செல்ல அனுமதி கொடுக்கப்பட்டிருக்கிறது. இத்தேசச் செருப்புகளுக்கு மேல் தன் தேசச் செருப்புக்களை மதிப்பதுபோல் பிரதேச மனிதர்களை மதிப்பதில்லை யென்று இதிலிருந்து தெரிய வேண்டும். (9) நூறு வருடங்களுக்கு மேலாக இத்தேசத்திலிருந்தும் ஐரோப்பியகள் இன்றைக்கும் ஆடை உடைகளைத்தன்தேசத்திலிருந்தது போலவே தரிக்கிறார்கள். தன் தேச சாம்பிரதாயத்தை அவர்கள் மாற்றிக் கொள்ளவில்லை. உங்களி லநேகம் பேர்கள் அவர்களுடைய ஆடை உடைகளைக் கைப்பற்றியிருக்கிறீர்கள். இதிலிருந்து நீங்கள் அறிவில்லாதவர்களென்றும் அவர்கள் அறிந்த புத்திமான்களென்றும் விளங்கவில்லையா? புத்திமான் எவனும் குருட்டுத் தனமாய் ஒருவனைப் பின்பற்றமாட்டான். (10) செய்யவேண்டியவைகளை மிகவும் கவனத்துடன் செய்கிறார்கள். (11) ஆக்ஞைகளைக்கீழ்படிந்து நடக்கிறார்கள். (12) வியாபாரம் முதலியவைளில் தன் தேசத்தவர்களுக்கு உதவி புரிகிறார்கள். இப்பேர்பட்ட மாசற்ற குணங்கள் வழுவில்லாத முயற்சி முதலானவைகளே ஐரோப்பியருடைய முன்னேற்றத்திற்குக் காரணமாயிருக்கின்றன. சோடுசெருப்புகளை அணிந்துகொண்டு ஹோட்டல்களில் சாப்பிடுதல் முதலிய சாதாரணகாரியங்களினாலும் குணங்களினாலும் அவர்கள் பெரியவர்களாகவில்லை.

மேலும் அவர்களிலும் சாதிபேதமிருக்கிறது. ஐரோப்பியன் ஒருவன் என்னபதவி என்ன அதிகாரத்திலிருந்த போதிலும் பிறதேசத்து பெண்ணை மணம்புரிந்து கொண்டாலும் ஐரோப்பியபெண் பிரதேசக்காரன் ஒருவனை விவாகம் செய்து கொண்டாலும் அவர்களுடன் ஊடாடுவதைவிட்டு விடுகிறார்கள். அவனை அல்லது அவர்களைத்தள்ளிவைக்கிறார்கள். சமூகக்காரியங்க

ளுக்கு அவரையோ அல்லது அவளையோ அழைக்கிற தில்லை. அவர்களுடன் கூட உட்கார்ந்து சாப்பிடுகிறதுமில்லை. அவர்களுடைய பெண்பிள்ளைகளுடன்கல்யாணம் முதலிய சம்பந்தம் செய்து கொள்ளுகிறதில்லை. ஜாதிவித்தியாசமில்லாமல் போனால் இவைகளெல்லாம் வேறொன்னவாகும். அவர்களில் சாதிவித்தியாசமில்லை யென்று சொல்லி பேதை ஜனங்களை ஏமாற்றுகிறார்கள். அறிவின்குறைவால் அவர்கள்கூறுவதை நம்பும் மூடத்தன்மை யுள்ளவர்களாக யிருக்கிறீர்கள். ஆகவே தீரவிளங்கயோசனைசெய்து கூடிக்கலந்து பிறகு வருந்தாமலிருக்கும்படி செய்யுங்கள்.

மருந்தைத் தேடுபவன் நோயாளி. திடகாத்திரமான தேகத்தையுடையானுக்கு மருந்து தேவையில்லை கற்றறிந்த அறிஞன் நோயற்றவனைப்போன்றவன். அறிவின்மைதான் வியாதி. இந்நோயைப்போக்க சத்தியோபதேசமே ஏற்றமருந்து. அறிவீனர்கள் அன்னபானாதிகளை எடுத்துக்கொள்ளும் முறையில்தான் தர்மம் இருக்கிறதென்று கண்மூடித்தனமாக எண்ணுகிறார்கள். எல்லோராலும் ஏற்கப்பட்ட அன்னபானாதிகளை உட்கொள்ளும் முறையினின்று விலகுபவனை புன்தன்மையினர் தர்மப்பிரிஷ்டன் என்று ஒதுக்கிறார்கள். அறிவு உனது நன்மைக்கா? அல்லது பிறர் நன்மைக்கா? என்று அறியவிரும்புகிறேன். மேற்கூறிய அன்னபனாதிதர்மத்தால் அறிவீனர்கள் பலன் அடைந்துள்ளார்களா? என்று பார்த்தல் நலம். அவர்கள் எப்பலனையும் அடையாவிடில் நான் என்ன செய்வது என்று சொல்லிச்சும்மாயிருத்தல் முறையாகாது. சரியானமுறையில் நடந்து வந்திருந்தால், உன்னைபின்பற்றுபவர்களும் உன் வழிநடந்து பலனை அடைந்திருப்பார்கள். உனது சொந்த நலத்தைநாடி அவர்களைக் கெடுத்துவிட்டாய். எனவே அறிஞர் சாதாரண ஜனங்கள் துக்கத்தைக்கடக்க ஒரு படகுபோல் உதவவேண்டும். எக்கர்மத்தால், சுயநலமும் பர நலமும் ஏற்படுமோ அதையே செய்ய வேண்டும்.

வினா:—எல்லாப்புத்தகமும் ஈசனால் எழுதப்பட்டதென்று நாங்கள் நம்புகிறதில்லை. ஏனெனில் மனிதனுடைய புத்தி அளவுக்குள்பட்டது. இதினாலேயே அவனால் செய்யப்பட்ட நூல்களும் தவறுந்தன்மையுள்ளதே. ஆகவே எல்லாவற்றிலிருந்தும் சத்யத்தை ஏற்றுக்கொண்டு அசத்தியத்தை விடுத்து விடுகிறோம். சத்தியம் வேதத்திலிருந்தாலும்சரி, பைபிலிருந்தாலும்சரி வேறு எந்த நூலிலிருந்தாலும்சரி நாங்கள் எடுத்துக்கொள்கிறோம்.

விடை:—எவ்வார்த்தைகளினால் சத்தியத்தை இழுக்கிறவர்களாக இருக்கிறீர்களோ, அவ்வார்த்தைகளினாலேயே அசத்யத்தைக் கிரகிக்கிறவர்களாகவும் ஆகிறீர்கள். மனிதர்கள் எல்லோரும் தவறும் தன்மையுள்ளவர்களானபடியினால் நீங்களும் தவறுகிறவர்களே. ஆகையினால் நீங்கள் எழுதுபவை யெல்லாம் முழுமெய்யாகாது. ஆகவே உங்களை முழுவதும் நம்பக்கூடாது. உங்களுடைய நம்பிக்கைகள் விஷத்துடன் கலந்த ஆகாரத்தைப்போல் தள்ளிவிடத்தகுந்தது. எனவே உங்களுடைய நூலை வழுவற்றதாக ஒத்துக்கொள்ள முடியாது. வேறு மனிதர்கள் சர்வஞ்ஞமில்லாமலிருப்பது போலவே நீங்களும் இருக்கிறீர்கள். சில சமயங்களில் பிரமையினால் உண்மையைக்கைவிட்டு

அசத்தியத்தை தழுவுவீர்கள். ஆகையினல் சிலசமயங்களில் சர்வஞ்ஞான பரமாத்மாவுடைய வசனங்களை அல்பஞ்ஞர்களாகிய நாம் ஒத்துக்கொள்ள வேண்டும். இந்நூலின் ஏழாவது அத்தியாயத்திய வேத உரையில் நாம் எழுதி யிருப்பது போல் நீங்கள் கொள்ளவேண்டியது, நம்பவும் வேண்டியது. இல்லை யானல் 'ஒருபக்கத்திலிருந்ததுபோலவே மறுபக்கத்திலும்' என்கிறபழமொழி உங்களுக்கு ஏற்கும். சகல சத்தியமும் வேதத்தில் அடங்கியிருக்க அசத்திய மென்று சொல்வதினல் உனக்கும் மற்றவர்களுக்கும் பெரும்பாதகம் செய்கிற வனகிருய். ஆகையினலேயே ஆர்யவர்த்த தேச ஜனங்கள் உங்களை அவர்கள் சொந்தமாக நினைக்கிறதில்லை. தலைதலையாகபிச்சையெடுப்பதினல் நீங்கள் தே சத்தின் முன்னேற்றத்தில் பிரயோசனமில்லாமலிருக்கிறீர்கள். அதாவது சில கொள்கைகளை மகம்மதியர்களிடமிருந்தும், மற்றும் சிலவைகளைக் கிரிஸ்துவர் களிடமிருந்தும், வாங்கியிருக்கிறீர்கள். இவ்விதம் செய்வதினல் உங்களுக்கும் மற்றவர்களுக்கும் நன்மைஉண்டாகுமென்று நினைக்கிறீர்கள். அதுஉன்னல் முடி யாது. பெற்றோர்கள் உலகத்திலுள்ள குழந்தைகள் எல்லோரையும் போஷித்து வளர்க்கவெண்ணுவதுபோலவே உங்களுடையதும் உலகத்தைக்காக்கவெண்ணி த்தன்னுடையசொந்தபிள்ளையையே இழப்பார்கள். வேதம் முதலான சத்திய சாத்திரங்களைமானிக்காமல் உங்களுடைய வார்த்தைகளுண்மையாகாது. ஆன துமில்லை. ஆர்யவர்த்தநாட்டினுடைய முன்னேற்றத்தையும் செய்யமுடியாது. தேசத்திற்கு உண்டாயிருக்கும் நோய்க்குத்தக்கமருந்து எங்களிடம் கிடை யாது. ஐரோப்பியர்கள் உங்களை கவனிக்கிறதில்லை. சுதேசவாசிகளோ உங் களை வேறு மதத்திற்குச் சரியாக நினைக்கிருர்கள். இப்பொழுதாவது தப்பை அறிந்து வேதம்முதலியவைகளை உன்னி தேசமுன்னேற்றத்தைச்செய்யலாம். சகல சத்தியமும் பரமேச்வரனல் வெளியாக்கப்பட்டதென்று நம்பும்பொழுது ரிஷிகளின் ஆத்மாவில் வெளிச்சம் செய்திருக்கிற வேதசத்தியங்களை ஏன் மானிக்கக்கூடாது. வேதங்களை ஓதாமலும் ஓதுவதற்கு இஷ்ட மில்லாமலும் வேதஞானம் எவ்விதமுண்டாகும்?

6. உபாதானகாரணமன்னியில் உலகம் உற்பத்தியாச்சுதென்றும், கிறிஸ் துவர்கள் மகம்மதியர்கள் நம்புவதுபோல் ஜீவனுடைய உற்பத்தியிலும் நம்புகி றீர்கள். இவ்விஷயங்களைப்பற்றி ஏழு,எட்டாவது அத்தியாயங்களில் தர்க்கித்து சரியானதல்லவென்று காண்பித்திருக்கிறோம். காரணமன்னியில் காரியமுண் டாகமுடியாது.

7. பச்சாதாபம் பிரார்த்தனை இவைகளினல் பாபம் நிவாரணமாகும் என்று நம்புவது உங்களிடமிருக்கிற இன்னுமொரு தோஷமாகும். உலகத்தில் பாபம் விருத்தியாகி அதிகரிப்பதற்கு இவ்வெண்ணமும் ஒரு காரணமாகும். புராணிகர்கள் ஸ்தலயாத்திரை முதலியவைகளினலும் சமணர்கள் 'நவகார மந்திர ஜபம், ஸ்தலயாத்திரைகளினலும், கிறுஸ்துவர்கள் இயேசுவிடத்தில் நம்'பிக்கையினலும் மகம்மதியர்கள் 'நான் பச்சாதாபப்படுகிறேன்'என்று சொல் லுவதினலும், பாபம் நிவர்த்தி யாகிறதென்று முறையே நம்புகிருர்கள். இத னல் பாபகர்மங்கள் பயமில்லாமல் அதிகமாயிருக்கிறது. இவ்விஷயத்தில்

புராணிகர்களைப் போலவேயிருக்கிறீர்கள். வேதங்களை ஓதியிருப்பீர்களே யானால் அனுபவிக்காமல் பாபபுண்ணியங்கள் ஒழியாது என்று நன்கறிவீர்கள் இதற்குப்பயந்து பாபங்களுக்கு அஞ்சி தர்மம் செய்வீர்கள். அனுபவிக்காமல் பாபங்கள் ஒழிந்துபோகுமேயானால் ஈச்வரன் அநியாயம் செய்கிறவராவார்.

8. ஜீவனுடைய முன்னேற்றத்தை அனந்தமாக நம்புகிறீர்கள். இது கொஞ்சங்கூட சரியான நம்பிக்கையாகாது ஏனெனில் எல்லையற்ற ஜீவனுடைய குணகர்ம சுபாவத்தின் பலன் எல்லையற்றதாகவே யிருக்கும்.

வினா:—பரமேச்வரன் தயாளுவான படியினால் எல்லையை யுடைய கர்மங்களுக்கு எல்லையற்ற அனந்தமான பலனைக்கொடுக்கக்கூடும் ?

விடை:—இவ்விதம் செய்தால் பரமேச்வரனுடைய நீதி தவறிப் போய் விடும். சத்கர்மங்களுடைய மேன்மைக்காகவும் யாரும் பாடுபட மாட்டார்கள். ஏனெனில் கொஞ்சம் கஷ்டப்பட்டால் கூட சத்கர்மங்களுக்கு அனந்தமான பலனை பரமேச்வரன் கொடுத்து விடுவார். பச்சாதாபம், பிரார்த்தனை, இவைகளில் பாபங்கள் அநேகம் நாசமாய் விடுகிறதென்ற போதிலும் அவ்வார்த்தைகளினால் தர்மநாசமும் பாபவிருத்தியுமே பரவியிருக்கிறது.

வினா.—சுய உணர்ச்சியினால் தோன்றிய ஞானத்தையே, வேதத்தைவிட அதிகமாகக் கருதுகிறோம். சுயஉணர்ச்சியினால் தோன்றிய ஞானம் பரமேச்வரனால் கொடுக்கப் பட்டிராமற் போனால் வேதங்களை எப்படி ஓதமுடியும்? ஓதுவிக்கமுடியும் ? ஆகையினால் நாங்கள் சொல்லுவதே மிகவும் சரியானது.

விடை:—இதெல்லாம் பொருளற்ற பதங்களே. பிறரால் கொடுக்கப் பட்ட ஞானம் சுய உணர்ச்சியினால் தோன்றினதாக ஆகாது. சுய உணர்ச்சியினால் தோன்றினது சுயமானது. அது விருத்தியடைகிறதில்லை. குறைந்து போகிறது மில்லை. பிறரது முன்னேற்றத்தையும் நாடுகிறதில்லை. ஏனெனில் காட்டு மனிதர்களுக்கு இச் சுயஉணர்ச்சி, ஞானம், மிருந்தும் அவர்கள் எவ்வித முன்னேற்றத்தையும் தேடி விருத்தியடையவில்லை. கற்றறிந்த ஞானமே முன்னேற்றத்தின் காரணமாயிருக்கிறது. பாருங்கள் நம்முடைய சிறுவயதில் செய்யவேண்டியது, வேண்டாதது, தர்மம் அதர்மம், இவைகளுடைய உண்மையான குணங்களின் ஞானம் நமக்குக் கிடையாது. வித்வான்களுடன் படித்த பிறகே நல்லது, கெட்டது, தர்மம், அதர்மம் இவைகளைச் சரியாக அறியலானோம். ஆகையினால் சுய உணர்ச்சியினால் தோன்றிய ஞானம் எல்லாவற்றையும்விட மேலாக நினைப்பது சரியல்ல.

9. நீங்கள் புனர் ஜன்மத்தில் நம்புகிறதில்லை. இது கிருஸ்துவர்களுக்கும் மகம்மதியர்களுக்குமே யுள்ளது. இதற்குப்பதில் இந்நூலின் ஏழாவது அத்தியாயத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. ஜீவன் நித்தியமானது. அதனுடைய கர்மங்களும் பிரவாகத்தைப்போல் நித்தியமானதென்று அறியுங்கள். * செய்கிறவன் கர்மம் இவ்விரண்டிற்கும் நித்தியமான சம்பந்தமிருக்கிறது. (அதாவது செய்கைக்கும் செய்கிறவனுக்கும் உள்ள உறவு குறைக்க முடியாதது. இப்

* இதன் விளக்கத்திற்கு 9 வது அத்தியாயத்தைப் பார்க்கவும்.

பிறப்பிற்கு முந்தி ஜீவன் வேலையன்னி யிலிருந்ததா ? இறப்பிற்குப் பிந்தி உட்கார்ந்திருக்குமா ? உங்களுடைய எண்ணப்பிரகாரம் பரமேச்வரன் கூடவேலை (இச்சிருஷ்டிக்குப்பிறகு) யன்னியிலிருப்பார். ஆத்மாவின் முன்னிருந்த நிலையிலும் இறந்தபிறகு அதன் மறுபிறப்பிலும் நம்பாமல் போனால் பாபபுண்ணியங்களுக்கு ஏற்றபலாபலன்களைக்கொடுக்கத் தவறியதாகப்பரமேச்வரன் ஆகிறார். இறந்தபிறகு ஜீவனுக்கு மறுபிறப்பு இல்லாதுபோனால், இப்பிறப்பில் செய்தக்காரியங்களுக்கு பலன்கிடையாது. ஏனெனில் இந்தஜன்மத்தில்செய்த பாபபுண்ணியங்களின் பலாபலத்தை மறுபடியும் பிறந்தாலொழிய அனுபவிக்க முடியாது. பூர்வஜன்மத்தில் பாபபுண்ணியங்களில்லாமல் போனால் பரமேசுவரன் அநியாயம் செய்கிறவனும், காரணமன்னியில் கஷ்டத்தைக்கொடுக்கிறவனுகவும் ஆகிறார். இப்பிறப்பில்செய்த பாபபுண்ணியங்களுக்கு ஏற்ற பலாபலன்களன்னியில் போய்விடும். ஆகையினால் புனர்ஜன்மத்தில் நம்பாமலிருத்தல் முடியாதகாரியம்.

10. ஈச்வரன் அன்னியில் திவ்யகுணங்களை யுடையபொருள்களிலும், வித்வான்களிலும், தேவர்களிலும், நம்பிக்கை வைத்தல் என்பது வெறும்பேச்சாகும் (ஏனெனில்) பரமேசுவரன் மகாதேவன் தேவர்களில்லாமல் போனால் சகலதேவர்களுக்கும் சுவாமி என்று எப்படி சொல்லக்கூடும் என்பதை சிந்தித்தல் நலம்.

11. அக்கினி ஹோத்திரம், முதலான பரோபகாரமான காரியங்கள் செய்வதில் நம்பாமலிருப்பது நல்லதல்ல.

12. ரிஷி, மகரிஷி முதலானவர்களால் செய்யப்பட்ட உபகாரங்களை மதிக்காமல் இயேசு முதலானவர்களால் செய்யப்பட்டதை மானிப்பது நல்லதாகாது.

13. அறிவு ஞானம் வித்தை முதலான காரியங்கள், வேதங்களான காரணமன்னியில் வந்தது என்பது முடியாத காரியம்.

14. அறிவின் அடையாளங்களாகிய யக்ஞோபவீதம், சிகை இவைகளை விட்டு மகமதியர் கிறிஸ்தவர் இவர்களுக்குச்சமமாக ஆவது சரியல்ல. ஆங்கில ஆடை உடைகளைத்தரித்து யோக்கியதையுள்ளவர்களாகவும் படித்தவர்களாகவும் காண்பித்துக் கொண்டு பரிசு முதலானவைகளைத் தேடும் பொழுது யக்ஞோபவீதமும் சிகையுந்தானு கனமுள்ளதாக உனக்கு ஆய் விட்டது.

15. பிர்ம்மாவிற்குப் பிறகு ஆர்யவர்த்தத்தில் அநேக முனிகள் இருந்து விண்ணுற்றிருக்கிறார்கள். அவர்களைப் பெருமையாகக் கொண்டாடாமல் ஐரோப்பியர்களைக்கண்டு பெருமை அடைவதை, பட்சாபாதம் முகஸ்துதி என்று சொல்லாமல் வேறு என்ன வென்று சொல்லுவது ?

16. மண்ணுடன் விதை சேருவதிலிருந்து முளை வருவது போல், சடம் சேதனம், இவைகளுடைய சேர்க்கையினால் ஜீவனுடைய உற்பத்தியை நினைப்பது ஒன்றுக்கொன்று விரோதமாகிறது. உற்பத்திக்கு முந்தி ஜீவனுடைய தத்துவத்தை நினையாமலிருப்பதும் முன்னுக்குப் பின் விரோதமாயிருக்கிறது.

உற்பத்திக்கு முன்னால் சேதனமும் சடப்பொருளும் இல்லாமல் போனால் ஜீவன் எங்கேயிருந்து வந்தது. எதனுடன் சம்யோகமுண்டாச்சுது. இவ்விரண்டையும் சனாதனமாக நினைத்தால் நல்லதே. சிருஷ்டிக்குமுந்தி ஈச்வரனைத் தவிர வேறுயாரையும் நினைக்காத உங்களுடைய கட்சிக்கே விரோதமாகிறது.

ஆகையினால் முன்னேற்றத்தை விரும்பினால் ஆரியஸமாஜத்துடன் கூடிக் கலந்து அதனுடைய உத்தேசங்களை ஆச்ரயித்து அங்கீகாரஞ் செய்யுங்கள். இல்லையானால் உங்களுடைய (வாணாளை வீணாக்கி) ஒரு லாபத்தையுமடைய மாட்டீர்கள். இத்தேசத்தினுடைய பொருள்களே நம்முடைய சரீரத்தைச் செய்கிறது. இப்பொழுதும் காப்பாற்றுகிறது. காப்பாற்றவும் போகிறது. அதனுடையமேன்மைக்கு உடல் பொருள் உயிர் இவைகளைத்தந்து பாடுபட்டு எல்லோரும் ஒன்றுகூடிக்கலந்து ஆவலுடன் உதவவேண்டும். இதுவே உங்களுக்கும் நமக்கும் ஏற்பட்ட நியாயம். ஆரியவர்த்தத்தை முன்னேற்ற ஆரிய சமாஜத்தைப்போல் வேறொன்றுங்கிடையாது. நீங்கள் இந்தஸமாஜத்திற்குச் சகாயஞ்செய்தால் நல்லது. ஏனெனில் சமூகக்ஷேமத்திற்கு ஸமாஜத்தால் உழைக்க முடியுமே தவிர தனிப்பட்டவர்களால் முடியாது.

வினா:—நீங்கள் எல்லோரையும் கண்டனஞ்செய்தீர்கள். சமயங்கள் பலவும் நல்லதே. ஒன்றும் கண்டனத்திற்கு ஏற்றதல்ல. சொல்லுவதைவிட உங்களுடையது நல்லது என்கிறீர்கள். உங்களைவிட அதிகமாக மேம்பாடடைந்தவர்களும், உங்களுக்குச்சமரனமானவர்களுமே கிடையாதா? இவ்வளவு அகந்தையுடன் இருத்தல்கூடாது, பரமாத்வாவுடைய சிருஷ்டியில் அந்தஸ்து பலவுள்ளவர்களிருக்கிறார்கள். ஆகையினால் ஒருவருக்கும் அகந்தைவேண்டாம்.

விடை:—தர்மம் எல்லோருக்கும் ஒன்றா அல்லது பலவா? பல என்றால் மதங்கள் பலவும் ஒன்றுக்கொன்று வித்தியாசமானதா? இல்லையா? வித்தியாசமானதென்றால் உண்மை ஒன்றாகத்தானிருக்கமுடியும்? ஒன்றுக்கொன்று சரியாயிருக்கிறதென்றால் பெயர்கள் பல வைத்துக் கொண்டிருப்பது பிரயோசனமற்ற காரியமே. ஆகவே தர்மமும் அதர்மமும் எல்லோருக்கும் ஒன்றே என்று ஏற்படுகிறது. அநேகங்கிடையாது. அவர்களிலிருந்து நாங்கள் வேறாகச்சொல்லுவது இதுவே. பலமதங்களுடைய ஜாபிதாவை ஒருசக்ரவர்த்தி எடுப்பானேயானால் எண்ணிக்கையில் ஓராயிரத்திற்குக் குறைவில்லாமலிருக்கும். அவைகளில் முக்கியமானது நான்கே யாகும், அவைகளாவன **புராணிகன், கிறிஸ்துவன், சமணன்** (அல்லது பௌத்தன்) **மகம்மதியனு**மாம். இந்நான்கிலேயுமே மற்றவைகளெல்லாம் கூடியிருக்கின்றன. அரசன் ஒன்றுகூட்டி உண்மையை விசாரிப்பானேயாகில் முதலில் வாமமார்க்கியுடன் கேழக்க வேண்டும். "ஐயா இதுவரையில் எனக்கு குருயாருங்கிடையாது. எந்த மதத்தையும் தழுவுமில்லை, தயவுசெய்து சகல சமயங்களிலும் எது மேன்மையானதென்றும் நான் எதைத் தழுவலாமென்றும் சொல்லுங்கள்"

வாமமார்க்கி:—எங்களுடைய மதமே மேன்மை பெற்றது. ஆராய்ச்சிக்காரன்:—மீதி 999 மதங்களைப்பற்றி உங்களுடைய அபிப்பிராய மென்ன?

வா.—அவைகளெல்லாம் பொய்யானது. நரகத்தையடையச்சொல்லு கிறது. ஏனெனில் வாமமார்க்கத்தைவிட மேலான தர்மங்கிடையாது.

ஆ.ன்:— உங்களுடைய தர்மம்யாது ?

வா:—பகவதியை மதிப்பது; மது மாம்சாகாராதி முதலிய ஐந்து வஸ்த் துக்களை உபயோகிப்பது. 'உருத்தராயிமலா' முதலிய 64 தந்திரங்களை மரி யாதைசெய்வதும். இன்னும்; இவைகளைப் போன்றவைகளுமேயாம். முக்திக்கு ஆசை யுண்டானல் எங்களுடையதைத் தழுவி சிஷ்யனுகுங்கள்.

ஆ.ன்:—நல்லது. இன்னும் இதர மகாத்மாக்களைக் கண்டு கேட்டு அவர்க ளுடைய சமயங்களைப் பற்றி விசாரிப்போம். பிறகு எதில் ஊக்கமும் ஆவலும் உண்டாகிறதோ அதில் சேருவோம்.

வா-கி:—ஏன் பிரமையிலகப்பட்டுக்கொள்ளுகிறீர் ? ஜனங்கள் உங்களை ஏமாற்றி அவர்களுடைய வலையில் போட்டுக் கொள்வார்கள். பிற சமயத் தவர்கள் யாரிடமும் பேசாதேயுங்கள். எங்களைச் சரணுகதியடையுங்கள். அல்லது பிறகு வருந்துவீர்கள். கவனித்துக்கொள்ளுங்கள் எங்களுடைய சமயத்தில் போகம், மோக்ஷம் இரண்டுமிருக்கின்றன.

ஆ·ன்:—சரி (மற்றவர்களிடமும்) இக்கேள்விகளைக்கேழ்ப்பேன்.

பிறகு சைவன் ஒருவனிடம் சென்று வாமார்க்கியைக் கேட்ட மாதிரியே கேட்டான். அவன் கூறினது போலவே இவனும்கூறி மேலும் கூறியதா வது:—சிவனைத்துதியாமலும் உருத்திராக்ஷம் அணிந்துகொள்ளாமலும் விபூதி பூசிக்கொள்ளாமலும், லிங்கார்ச்சனை செய்யாமலும் முத்தி கிடைக்காது. என்றான். அவனைவிட்டுவிலகி நவீனவேதாந்தியிடம் சென்றான்.

ஆ·ன்:—ஐயா உங்களுடைய சமயத்தைப்பற்றிச் சொல்லுங்கள்,

வேதாந்தி:—சமயமும் கிடையாது, சமயமில்லாததுங் கிடையாது. நாங் களே நேரான பிரம்மம். எங்களைத்தர்மமும் அதர்மமும் பாதிக்காது. உலகம் மாயை. ஜனனபாதையைவிட்டு நித்தியமுத்தனக விரும்பினல் ஞானியாகி சுத்தசேதனமுள்ளவனுகவுமாகி தன்னையே பிரம்மமாகவும் நினைத்துக்கொள்ள வேண்டியதே.

ஆ-ன்.—நீ பிரம்ம நித்தியமுத்தனனல் பிரமத்தினுடைய குணகர்மசுபாவம் ஏன் உன்னிடம் காணப்படவில்லை ? ஏன் சரீரத்தினல் கட்டுப்பட்டிருக்கிறய்?

வேதா:—உங்களுக்குச்சரீரம் புலப்படுகிறதானல் நீங்கள் பிரமையில் முழுகியிருக்கிறீர்கள்? நாங்கள் பிரமத்தைத் தவிர்த்து வேறென்றையும் காண் கிறதில்லை.

ஆ-ன். பார்க்கிற நீயார்? யாரைப்பார்க்கிறய் ?

வேதா:—பார்க்கிறவன் பிரம்மா. பிரம்மம் பிரம்மத்தைப் பார்க்கிறது.

ஆ ன்:—பிரம்மம் இரண்டா ?

வேதா:—இல்லை தன்னைத்தானேபார்க்கிறது.

ஆ.ன்:—தன்னுடைய தோள்களின் பேரிலேயே ஒருவன் நிற்க முடியுமா? நீங்கள் சொல்லுவதில் பொருளில்லை. பித்தம் பிடித்தவனைப் போல் பேசுகி றீர்கள். பிறகு **சமணர்களிடம்** சென்று கேட்டான். அவர்களும் அப்படியே மறுமொழி தந்தார்கள். அத்துடன் நிற்காது மேலும் கூறியதாவது:— 'சமண சமயத்தை' த்தவிர மற்றவைகளெல்லாம் பொய்யானவைகளே. உலக கர்த்தாவாய் அநாதியான ஈசுவரன் யாருமில்லை. அநாதிகாலந்தொட்டு இருக்கும் வண்ணமே உலகமிருந்து வருகிறது. எங்கள் சமயத்தை ஏற்று எங்க ளது சீடராகுங்கள்!! ஏனெனில் நாங்கள் எல்லாவிதத்திலும் நல்லவர்கள், எங்களுடைய கொள்கைகளும் உண்மையானவைகள். சமணசமயத்திலிருந்து வேறானவைகளெல்லாம் பொய்யானதே.

பிறகு **கிறிஸ்துவன்** ஒருவனிடம்சென்று இக்கேள்விகளை முன்போல் கேட்டான். அவனும் வாமமார்க்கிகளைப்போலவே பதிலுரைத்து மீண்டும் கூறியதாவது:—மனிதர்கள் எல்லோரும் பாபிகள். சுய சிரமத்தினால் பாபங்கள் கழியாது. **இயேசுவின்** பேரில் நம்பி பரிசுத்தனாகாதவரையில் முத்தியை யடையமுடியாது. எல்லோருடைய பிரயாச்சித்தத்திற்கும் இயேசு தன் பிரா ணனைக் கொடுத்து தன் அன்பைக்காண்பித்தார். நீ கிறிஸ்துவனாகி விடு என்று கூறினான்.

இதையும் கேட்டுவிட்டு மௌல்வீ ஒருவரிடம் சென்று, அவன் சந்தே கத்தை அவருக்குந்தெரிவித்தான். எல்லோரும் சொன்னதைப் போலவே மௌல்வியும் சொல்லிவிட்டுக் கூறியதாவது:—

"இரண்டற்று ஒப்புயர்வற்று படைத்தவனையும் அவருடைய **நபியையும் குர்-ஆனையும்** நம்பாமல் தன்னைவெனும் காப்பாற்றிக் கொள்ளமுடியாது. இதை யார் மறுக்கிறார்களோ அவர்கள் நரகத்தையடைவார்கள். அவர்கள் **காப்பிரிகள்.**'' என்றான்.

பிறகு **வைணவன்** ஒருவனிடம் சென்று அவனையும் கேட்டான். அவன் இவைகளைவிட அதிகமாகச்சொன்னான். எங்களுடைய திலகம், சமாச்ரணக் குறி இவைகளைக்கண்டு எமனும் அஞ்சுவான் என்றான்.

ஆராய்ச்சிக்காரன் அப்பொழுது யோசனை செய்வான். கொசு, போலீஸ் சேவகன், கள்ளன், திருடன், சத்துரு, முதலானவர்களுக்கு இதைக்கண்டு பயமில்லாமல்போனால் எமதர்மராஜனுடைய தூதர்களா அஞ்ச போகின் றனர்? இன்னும் போகப்போக அந்தந்த சமயத்தவர்கள் தங்கள் தங்க ளுடையதே உண்மையானதென்றார்கள். சிலர் எங்களுடைய **கபீர்** நல்லவ ரென்றும் சிலர் **நானக்தாது**, சிலர் **வல்லபர்**, சிலர் **சகசானந்தர்**, சிலர் **மாத்வர்**, முதலானவர்களைப்பெரியவர்களென்றும் அவதாரபுருஷர்களென்றும் முறையே சொல்லு வதைக் கேட்டான். ஆயிரம் சமயத்தவர்களையும் கேட்டு விசாரித்து பரஸ்பரம் ஒருவருக்கொருவர் தூஷணை செய்வதையுங்கண்டு இதில் யாரையும் குருவாகச்செய்து கொள்ளத் தகுதியற்றவர்கள். ஏனெனில் ஒவ்வொருவனுக் கும் 999 பெயர்கள் விரோதமாகக் சுட்சி சொல்லுகிறார்கள் என்பதாக நிச்சயஞ்

செய்து கொண்டான். பொய்சொல்லும் வியாபாரிகள், விலைமாதர்கள், கோமாளிகள், இவர்கள் சர்க்கின்மேன்மை தங்களுடையே பெருமை இவைகளைப் பேசி மற்றவர்களை ஏளனஞ்செய்கிறவர்களைவிட இவர்கள் மேலானவர்களில்லை. பிறகு உபநிஷத்தில் சொல்லியிருப்பதை ஞாபகம் செய்துகொண்டான்.

**तद्विज्ञानार्थं स गुरुमेवाभिगच्छेत् । समित्पाणिः श्रोत्रियं ब्रह्मनिष्ठम् ॥**
**तस्मै स विद्वानुपसन्नाय सम्यक् प्रशान्तचित्ताय शमन्विताय ।**
**येनाक्षरं पुरुषं वेद सत्यं प्रोवाच तान्तत्त्वतो ब्रह्मविद्याम् ॥** முண்டகோபநிஷத்

சத்தியத்தையடைய விரும்புகிறவன் 'சுகத்யாணி' அதாவது கையில் தக்கபரிசுடன் ஆடினவனுய், வேதப்பிரகாரம் பிரம்ம நிஷ்டை, பரமாத்மா, இவைகளைக் கையாளுகிறகுருவினிடம் செல்லட்டும். அறிவாளர்கள் சர்ந்தசித்தம் அடைக்கப்பட்ட ஐம்புலன்கள் முதலியவைக்ளையுடைய ஆராச்சிக்காரனுக்கு பரமாத்மாவினுடைய குணக்ர்மசுபாவங்களை உபதேசம் செய்யட்டும். மேலும் எச்சாதனங்களினுல் அவன் தர்மார்த்த ராமமோக்ஷங்களைப் பெற்று பரமாத்மாவை அறியமுடியுமோ அவைகளை உபயோகப்படுத்தும் வெருங் குணங்களையுடைய பெரியோரிடஞ்சென்று "ஓ பெரியவரே இப்படி வேறு பரிவினையால் சச்சரவுகளினுல் என் மனது குழம்பியிருக்கிறது. இவர்களில் ஏதாவதொன்றைப் பின்பற்றுவோனேயானுல் மீதி 999 பெயர்களையும் என் சத்துருவாக்கிக்கொள்வேன். 999 சத்துருக்களும் 1 மித்ரனும் உள்ளவனுக்குபலன் ஒரு பொழுதுண்டாகாது. எதை நான் அங்கீகாரம் செய்ய வேண்டுமென்று உபதேசஞ்செய்யுங்கள்" என்று வேண்டினன்.

சத்குரு—அறியாமையின் பயன் அறிவின் சத்துருக்கள். பேதைகளைத் தப்புவழியில் திருப்பி தன்னுடைய ஜாலத்தினுல் மயக்கி சுயகாரியத்தைச்செய்துகொள்ளுகிறுர்கள். எவ்வர்த்தையில் 1000 பேர்களும் சேருகிறுர்களோ அதையே வேதமாகக்கருதி, எதில் பரஸ்பர விரோதமாயிருக்கிறதோ அதைத் தப்பு என்றும் பொய்யென்றும் பாபமானதென்றும் அங்கீகாரஞ்செய்யக் கூடாதென்றும் அறிவாயாக.

ஆ.ன்:—நீங்கள் கூறுவதைக் கண்டறிவதெப்படி ?

ச.கு:— போய் கீழ்க்கண்ட வார்த்தைகளைக் கேள். எல்லோரும் ஒரே பதிலுரைப்பார்கள். என்று சொல்லி அனுப்பினுர்.

இதன்பேரில் உண்மையை அறியவிரும்பும் ஆராய்ச்சிக்காரன் ஆயிரம்பேர்கள் குழுமியுள்ள கூட்டத்தில் சென்று கேட்டதாவது:—"எல்லோரும் கேளுங்கள். மெய்ப்பொருள் தர்மமாகுமா? பொய்ப்பொருள் தர்மமாகுமா? என்றுன். எல்லோரும் ஒரே குரலுடன் உண்மையைச்சொல்வதினுல் தர்மமும் பொய்யைச் சொல்வதினுல் அதர்மமும் உண்டாகிறதென்று மறுமொழி கூறினுர்கள் இவ்விதமே வித்தையை அறிவது, பிரம்மச்சரியத்தைக் கைக்கொள்வது, சரியான பிராயத்தில் கலியாணம்செய்து கொள்ளுவது, சத்சங்கல்பம், மானிடப் பிரயத்தனம், சத்தியம், நல்ல சகவாசம், முதலானவைகளில் தர்மமும்

அவித்தையை அங்கீகாரம் செய்தல்' பிரம்மச்சரியத்தைக் கைக்கொள்ளாம லிருத்தல், வியபசாரம் செய்தல், தீய சகவாசம், அசத்திய வியவகாரம், பொய், கபடம், பிறருக்குக் கேடுசெய்வது இவைகளில் அதர்மமுமிருக் கிற தென்று ஒன்றாகச் சொன்னார்கள். அப்பொழுது ஆராய்ச்சிக்காரன் இவ்விதமே ஒன்று சேர்ந்து சத்திய தர்மத்தைமேம்படுத்தி பொய்மார்க்க த்தை ஏன் நாசஞ்செய்யக்கூடாதென்று கேட்டான். அவ்விதம் செய் வோமேயானல் எங்களைப்பாராட்டுகிறவர்கள் யாரிருப்பார்கள்? எங்களுடைய சீடர்கள் எங்களைவிட்டு விலகி விடுவார்ாள்? நாங்கள் சொல்லுவதைக் கீழ்ப் படியமாட்டார்கள். எங்களுடைய ஜீவனம் போய்விடும். இப்பொழுது நாங் கள் ஆனந்தத்துடனிருக்கிறோம். இவ்வநுபவங்களையெல்லாம் இழந்து விடு வோம். ஆகவே உண்மையான சமயத்தை நாங்கள் அறிந்திருந்த பொழுதி லும் எங்களுடைய பொய்ப் பிரிவினையானப் மதங்களையே உபதேசித்து வருகி றோம். உங்களுடைய உபாயங்களினால் "உலகத்தை ஏமாற்றி ஆனந்தம் அனுபவியுங்கள்" என்ற முதுமொழிக்கேற்ப சத்தியநெறியைத் தழுவாமலிருக் கிறோம். உலகில் யோக்கியனுக்கு ஒன்றும் கொடுக்கிறதில்லை. பொய்சொல்லி வேஷம்போட்டுக் கொள்ளுகிறவர்களே நன்றாக வாழுகிறார்கள், அல்லவா? ஆராய்ச்சிக்காரன் இவ்விதமோசவழிகளினால் மற்றவர்களை ஏமாற்றுகிறதற்கு அரசன் ஏன் உங்களைத்தண்டிக்கிறதில்லை என்றான்.

அரசனையும் எங்களுடைய சீடனாகச் செய்துவிட்டோம். பாருங்கள்!! எங்களுடைய ஏற்பாடெல்லாம் சரியாயும் ஒழுங்காயுமிருக்கிறது. எவனும் எங்களைத் தப்பியோட முடியாது.

ஆ.ன்:—பாமரர்களை மோசவழிகளினால் கொள்ளையடித்து தின்றுபுறத்து கிறீர்களே. பரமேச்வரனுக்கு முன் என்னபதில் சொல்லுவீர்கள்? கோர நர கத்தில் விழுவீர்களே. இவ்வளவு பெரிய அபராதம் செய்கிறீர்கள். இதை ஏன் விட்டு விடக்கூடாது? மதக்காரர்கள்:—எந்த நரகத்தில் விழுவோமென்றும் பரமேச்வரன் என்ன தண்டனையை அளிப்பாரென்றும், அக்காலத்தில் யோசிப் போம். இப்பொழுது ஆனந்தமாகச் சுகத்திலிருக்கிறோம். நாங்களும் சந் தோஷப்படவேண்டி ஜனங்கள் சுயமாகவே திரவியத்தை யளிக்கிறார்கள். நாங்கள் பலாத்காரம் செய்யாமலிருக்கும்பொழுது அரசன் தண்டிக்கவேண் டிய அவசியமேது?

ஆ.ன்:—குழந்தைகளை ஏய்த்துத்திருடுகிறவனைப்போல் உங்களுக்குத் தண் டனையையளிக்கவேண்டும். ஏனெனில்.

**अज्ञो भवति वै बालः पिता भवति मन्त्रदः ॥** மனு.

அறிவில்லாதவன் குழந்தை, அறிவையளிக்கிறவன் பிதா, பெரியவன். அறி வாளர்களாயும் படித்தவர்களாயுமிருக்கிறவர்கள் உங்களுடையவலையில் விழு கிறதில்லை. அறிவில்லாதவர்கள் குழந்தையைப் போலிருக்கிறார்கள். அவர் களே உங்களுடைய பொய்க்கும் வஞ்சகத்திற்கும் ஆளாகிறார்கள். அவர்களை மோசஞ்செய்வதற்கே உங்களுக்கு ராஜதண்டனையை அளிக்கவேண்டும்,

17

ம:—அரசன் பிரஜைகள் எல்லோரும் எங்களுடைய மதத்திலிருக்கிறார்கள். ஆகையினால் எங்களுக்குத் தண்டனையை அளிக்கிறவன எவன்? தண்டனையை அளிக்கும் சந்தர்ப்பம் ஏற்பட்டால் இத்தொழிலை விட்டு மற்றொன்றைக் கைப்பற்றுவோம்.

ஆ:— வேலையற்று உட்கார்ந்து பிறர்களை எமாற்றுகிறீர்ாள். அறிவைக் கற்று கிரகஸ்தர்களுடைய மக்களைப் படிக்கச்செய்வது உங்களுடையவும் அவர்களுடையவும் நன்மைக்காகாதா ?

மத:—இளமைப்பருவம் முதல் இறக்கும் வரையில் சுகங்களைத் துறந்தும், பால்யாவஸ்தையிலிருந்து வயது காலம் வரையிலும் வித்தையைப் படித்தும், பிறகு படித்து கொடுப்பதிலேயும் உபதேசஞ் செய்வதிலேயும் வாழ்நாளைக்கழிப்பதினால் எங்களுக்கு என்ன பிரயோஜனம் ? என்ன லாபம் ? இப்படியே எங்களுக்கு லக்ஷரூபாய் ஒரு கஷ்டமுமன்னியில் கிடைக்கிறது. சுகமாகவும் சௌகரியமாகவும் வசிக்கிறோம். இவ்வாழ்வை விடுவானேன் ?

ஆ:—அபாரமான தீமைகளை இது விளைவிக்கும். தீராப்பிணிகளால் பிடிக்கப்பட்டு சிறுவயதிலேயே மரணத்தையடைகிறீர்கள். புத்திமான்கள் நிந்தித்தும் அதைப் பொருட்படுத்தாமலிருக்கிறீர்கள்.

**टका धर्मष्टका कर्म टका हि परमं पदम् ।**
**यस्य गृहे टका नास्ति हा! टका टकटकायते ॥**
**आना अंशकला प्रोक्ता रूप्योऽसौ भगवान् स्वयम् ।**
**अतस्तं सर्व इच्छन्ति रूप्यं हि गुणवत्तमम् ॥**

சகோதரனே!

நீ சிறு பிள்ளை! உலகம் இன்னதென்று இன்னும் நீ அறிய சக்தியற்றிருக்கிறாய்! பொருளன்னியில் தர்மமும், நல்ல காரியமும் பரமபதமும் கிடைக்காதாம். பணமிலலாதவன் பணத்தைப் பற்றியே அடிக்கடி பேசுவான் “ஐயோ என்னிடம் பணமில்லையே. இவை யெல்லாம் அனுபவிக்க பணம் அல்லவோ என்னிடமிருக்கவேண்டும். இரண்டற்ற இறைவனைகேட்டு சக்தியுடன் கூடின எல்லோரும் புகழுகிறார்கள். அவரைக்கண்ணால் கண்டவர் யாருங்கிடையாது? ரூபாயின் 16 அணுவே புலப்படுகிற பிரத்தியக்ஷதெய்வம். சகல காரியங்களும் ரூபாயினாலேயே சித்தியாகிறபடியினால் அதைத்தேடுவதிலேயே எல்லோருமிருக்கிறார்கள்.

ஆ:—உங்களுடைய எண்ணம் வெளியாய்விட்டது. உங்களுடைய உண்மையான நிறத்தைக்கண்டேன். சுயநலத்திற்காகவே நீங்கள் புரட்டுக்களையெல்லாம் கையாடுகிறீர்கள். அது உலகநாசத்தை விளைவிக்கிறது. சத்தியோபதேசம் உலக லாபத்தை உண்டுபண்ணுவது போலவே அசத்தியோபதேசமும் உலகநாசத்தை விளைவிக்கும். உங்களுக்கு வேண்டியது பணந்தானே ? ஏன் அதைவியாபாரம் செய்து சம்பாதிக்க கூடாது?

ம:—அப்பொழுது நாங்கள் கஷ்டப்படவேண்டும். நஷ்டத்தையுமடைய வேண்டும். இவ்வியாபாரத்திலே நஷ்டம் கிடையாது. எல்லாம் இலாபமே. கவனியுங்கள். துளசியிலையை செம்புத்தண்ணீரில்போட்டு சரணகமலங்களில் சமர்ப்பித்து ஒரு துளசி ஜலத்தைக் கொடுக்கிறோம். கழுத்தில்மாலையை அணியச்செய்கிறோம். எங்களுடைய சீடனாகச் செய்துக்கொள்ளுகிறோம். இவ்விதம் செய்துக்கொள்வதினால் சிஷயன் ஆயுள் பரியந்தமும் மிருகத்தைப் போல் உழைக்கின்றான். எங்களுக்கு இஷ்டமான வழிகளில் அவனைத் திருப்பலாம்.

ஆ:—இப்பணங்களெல்லாம் எதற்காக கொடுக்கிறார்கள்.

மத:—தர்மம் சுவர்க்கம் முத்தி இவைகளை யடைவதின்பொருட்டே.

ஆ:—நீங்களே முத்தர்களாகமாட்டீர்கள். முக்தி சுரூபத்தையாவது சாதனத்தையாவது அறியமாட்டீர்கள்: இப்படியிருக்க உங்களைப்பணிகிறவர்களுக்கு என்ன கிடைக்கும்? ம:—இறந்தபிறகு அடுத்த உலகத்திலேயே கிடைக்கும். இவர்கள் எங்களுக்கு எவ்வளவு கொடுத்துப் பணிவிடை செய்கிறார்களோ அவ்வளவே மறு உலகத்தில் கிடைக்கும்.

ஆ:—இவர்கள் கொடுக்குமளவு கிடைக்கிறதோ ?இல்லையோ! வாங்கிக் கொள்கிற உங்களுக்கு என்ன கிடைக்கும்? நரகமா அல்லது வேறு ஏதாவதா ம:—நாங்கள் துதிப்பதிலேயே காலத்தைக்கழிக்கிறோம். இதனுடையசுகமே எங்களுக்குக் கிடைக்கும்.

ஆ:—மரணத்திற்குப் பிறகு இங்கிருக்கிற திரவியத்திற்காகவே நீங்கள் துதிப்பதெல்லாம். மிக்கக்கவலையுடன் போஷித்துவரும்படியான சரீரமாம்சம் ஈற்றில் ஒருபிடி சாம்பலுக்குகூட உபயோகமாகாது. பரமேசுவரனை துதித்திருந்தால் உங்களுடைய ஆத்மா பரிசுத்தமாகும். ம:— நாங்கள் அசுத்தமானவர்களா ?

ஆ:—உங்களுடைய மனது ரொம்ப அழுக்குடன் கூடியதே.

ம:—உனக்கெப்படி தெரியும் ?

ஆ:—உங்களுடைய நடவடிக்கைகளிலிருந்து.

ம:—பெரியோர்களுடைய செய்கையும் நடவடிக்கையும் யானையுடைய பல்லுக்குச் சமானமானதாகும். காட்டுவதற்கு ஒரு வரிசைப்பல்லும், உண்பதற்கு வேறொருவரிசையும் இருப்பது போல் நாங்கள் அந்தரங்கமாகப் பரிசுத்தமானவர்கள். வெளிப்படையாக இக்கெட்டகாரியங்களைப் பொழுதுபோக்கியாகச்செய்கிறோம்.

ஆ:—அந்தரங்க சுத்தமிருந்தால் வெளிப்படையானக் காரியங்களும் சுத்தமாகவேயிருக்கும். ஆகையினாலே அந்தரங்கத்தில் அழுக்குடன் கூடினவர்கள். ம:—நாங்கள் எவ்விதமாவது இருக்கலாம், எங்களைப் பின்பற்றி நடப்பவர்கள் சரியானவர்கள்.

ஆ:—குருவைப்போலவே சிஷ்யர்களும். ம:—மனிதர்களுடைய குணம், கர்மம், சுபாவம் முதலானவைகள்வெவ்வேறாக விருப்பதினால் ஒரு பொழுதும் ஒரே சமயமுண்டாகாது.

சமயங்களின் சேர்க்கை.

ஆ:—சிறுபிராயத்திலேயே ஒரே விதமான பயிற்சியைப்பெற்று உண்மை யுரைத்தல், முதலான தர்மங்களைக் கிரகித்து பொய்ப்பேசுதல் முதலான அதர் மஙகளை விட்டுவிட்டால் கட்டாயம் ஒரே மாதமாகக்கூடும். தர்மாத்மா அதர்மாத்மா என இரண்டுவிதமான மனிதர்களிருந்தே தீருவர்ாகள். அதர்மாத் மாக்களை விட தர்மாத்மாக்களதிகமிருந்தால் உலகில் சுகம் பெருகிக்கொண்டே யிருக்கும். அதர்மாத்மாக்கள் அதிகமாகும்பொழுது துக்கம் பெருகும். கற்றறிந்தவர்கள் எல்லோரும் ஒரே விதமாக உபதேசம் செய்தால் சமயங் கள் ஒன்ருய்ச்சேருவதற்குவெகுகாலமாகாது.

ட:—இது கலியுகம். சத்தியயுக வார்த்தைகளை இப்பொழுது எதிர்பாராதே யுங்கள். ஆ:—கலியுகமென்பது ஒரு கால அளவின் பெயராகாது. காலம்செய் கையற்றது. தர்மாதர்மகாரியங்களைச் செய்வதில் அது ஒரு பொருளாகாது. கலியுகமூர்த்திகள் நீங்களே. மனிதனிடத்திலிருக்கிற நன்மைகளும் கெடுதல் களும் இயற்கையாகவே உண்டானதில்லை. சேர்க்கையுடைய குணதோஷங் களினுலேயே உண்டாகும சுவபாவங்கள்.

இவ்விதம்கூறிவிட்டு ஆப்த(உண்மையை அறிந்துள்ளகுரு)னிடம்சென்று "ஐயா! நீங்கள் என்னைக் காப்பாற்றினீர்கள். இல்லாவிடில் நான் இப்பிரிவுகள் ஒன்றின் வலையில் சிக்கிக்கொண்டு நாசத்தையடைந்திருப்பேன். இவ்வேஷக்காரர்களின் வஞ்சகத்தை இனி நான் வெளிப்படுத்தி வேதோக்த சத்திய சமயததையேப் பரவச்செய்வேன்" என்ருன்.

ஆப்தர்:—இது சாதாரணமாய் சகல மனிதர்களுடையவும், சிறப்பாய் துறவிகளுடையவும் அறிவாளர்களுடையவும் கடமையாகும். சகல மனிதர்க ளும் சத்தியத்தைத் தாங்கி அசத்தியத்தைகண்டித்து சத்தியோபதேசத்தி ஞல் உபகாரம் செய்து அதை உபதேசிக்கவும் வேண்டும்.

வினு:—(தற்காலத்திய) பிரம்மச்சாரிகளும் சந்நியாசிகளும் சரியானவர் களா?

விடை:—ஆசிரம விதிகள் சரியானதே. ஆனல் தற்காலத்தில் இவர்க ளிடத்தும் பலவித கபட வஞ்சகங்கள் இருந்துவருகின்றன. அவர்களில் அநேகம் பிரம்மச்சாரி என்றழைத்துக்கொண்டு சடைமுடியை வளர்த்துக் கொண்டு பெருங்காரியங்களைச்செய்ய வல்லவர்களொக்கருதுகிருர்கள். ஜபம் செய்வதிலேயும், சம்ஸ்காரங்கள் செய்வதிலேயுமே, மூழ்கிக்கிடக்கிருர்கள். படித்தவர்கள் என்கிற பெயரைக்கூட அடைகிறதில்லை. பிரம்மச்சாரி யென்றபெயரையளிக்கும் பிரம்ம அறிவாகிய வேதங்களைப்படிக்கிறதில்லை. இப்பிரம்மசாரிகளெல்லாம் ஆட்டின் கழுத்தின் கீழ் தொங்கும் கொழுப் பைப்போல பிரயோசனமற்றவர்கள். வித்தையில்லாமல் கமண்டலத்தை யும், சொரைக் குடுக்கையுமேந்தி செல்லும் சந்நியாசிகள் பலபேர்களிருக் கிருர்கள். வேதமார்க்கமுன்னேற்றத்தைக் கொஞ்சமேனும் செய்கிறதில்லை. சிறுவயதிலேயே சந்நியாசம் வாங்கிக்கொண்டு அலைகின்ருர்கள். வித்தியாப்

பியாசத்தையும் விட்டு விடுகிறார்கள். இவ்விதப்பிராம்மச்சாரிகளும் சந்நியாசிகளும் தலயாத்திரை செய்வதிலேயும் விக்கிரகங்களைத் தரிசிப்பதிலேயும் காலத்தைக் கழிக்கிறார்கள். வித்தையைப்பயிலாமல் மௌனஞ்சாதிக்கிறார்கள். ஏகாந்தமான விடங்களில் மனங்கொண்ட வரையில் அன்னபானஞ்செய்து படுத்து உறங்குகிறார்கள். பகை, பொறாமை பேராசைகளில் ஈடுப்பட்டு நிந்தை, தீயச்செயல, அடாதக்காரியங்கள் முதலானவைகளைச் செய்துவருகிறார்கள். காஷாயம்தரித்து தண்டம் சொரக்குடுக்கையை எடுத்துக்கொள்வதினுல் தங்களுடைய கடமை தீர்ந்து விட்டதென்றும் எண்ணுகிறார்கள். எல்லோரையும் விடமேலாக நினைத்து சிறந்தகாரியங்களைச் செய்கிற தில்லை. இவ்வித சந்நியாசிகள் உலகில் வீணுக்கே வசிக்கிறார்கள். உலக நன்மையைச்செய்கிறவர்களே அவர்களில் சரியானவர்கள்.

**வினு:—கிரி, புரி, பாரதி,** முதலான கோசேனர்கள் நல்லவர்களா? ஏனெனில் கூட்டம்கூட்டமாக இங்குமங்குமலைகிறார்கள். ஆயிரக்கணக்கானச் சாதுக்களுக்கு ஆனந்தத்தையளிக்கிறார்கள். அத்வைத உபதேசத்தையே எங்கும் போதிக்கிறார்கள். கொஞ்சம் ஓதி ஓதவும் செய்கிறார்கள். ஆகவே அவர்கள் நல்லவர்களாம்.

விடை:—கிரி, புரி, முதலான பத்து பெயர்களும் பிற்காலத்திலுண்டானவை. சனுதனமானதில்லை. அவர்களுடைய கூட்டம் கேவலம் சாப்பாட்டிற்காகவே. அநேகம் சாதுக்கள் போசனத்திற்காகவே கூட்டத்தில்கலந்துகொண்டிருக்கிறார்கள். அவர்களிலொருவனை மகாத்மாவாகச் செய்து அதிகாரத்தில் வைக்கிறார்கள். பிரதிமாலையினும் உயர்ந்த சிம்மாசனத்தில் அவன் அமருவான். சாதுக்கள், பிராம்மணன் எல்லோரும் புஷ்பத்தைக்கையிலேந்தி அவன் முன்னின்று இம்மாதிரி,

**नारायणं पद्मभवं वसिष्ठं शक्तिं च तत्पुत्रपराशरं च ।**
**व्यासं शुकं गौड़पदं महन्तम् ॥**

சுலோகங்களைபடித்து ஹர ஹர வென்று பூமாரிபொழிந்து சாஷ்டாங்க நமஸ்காரம் செய்வார்கள். இதையெல்லாம் செய்ய இஷ்டப்படாதவனுக்கு அவர்களுடன் வசிப்பது கூடகஷ்டமாகும். இவைகளை வேஷத்திற்காகவும், பார்வைக்காகவும், உலகத்திலமர்ந்து அனுபவிக்கவேண்டிய அளவு திரவியத்தையடையவேண்டியுமே செய்கிறார்கள், மடாதிபதிகளநேகம் பெயர்கள் கிரகஸ்தனுயிருந்தபொழுதினும் சந்நியாசியென்று சொல்லி அகங்கொள்ளுகிறார்கள். சந்நியாசிகளுக்கென ஏற்பட்ட (ஐந்தாவது அத்தியாயத்தைக்காண்க) கடமைகளொன்றையும் செய்யாமல் காலத்தை வீணுகவே கழிக்கிறார்கள். நல்ல உபதேசம் செய்கிறவர்கள் இவர்களுடைய விரோதியாகிறார்கள். இதிலநேகம் பேர்கள் விபூதியணிந்து ருத்திராக்ஷம் தரிக்கிறார்கள். சைவசம்பிரதாயத்தை அனுஷ்டிக்கிறார்களென்பதில் களிப்படைகிறார்கள். சமயவாதானுவாத சபைகளில் தங்களுடைய மதம் அதாவது சங்கராசாரியாரைத்தாங்கிச் சக்கராங்கிதர்களைக் கண்டிக்கிறார்கள். வேதமார்க்க உன்னதியைத்தாங்காமலும் பொய்மதங்களைக்

கண்டிக்காமலுமிருக்கிறார்கள். மகாத்மாக்களானபடியினுல் இச்சந்நியாசிகள் தாங்குவதிலும் தள்ளுவதிலும் நமக்கென்னவேலை என்கிறார்கள். இப்படிப்பட்டவர்கள் சமூகத்திற்கும் வெறும் பாரமேயாம். இம்மாதிரியினாலேயே வேதமார்க்க விரோதிகளான வாமமார்க்கி, முதலான பிரிவுக்காரர்கள் கிறிஸ்துவர்கள், மகம்மதியர்கள், சமணர்கள், முதலானவர்கள் அதிகரித்து இன்னும் பெருகிக்கொண்டே போகிறார்கள். அவர்களோ (வேதமார்க்கத்தைச் சேர்ந்தவர்கள்) க்ஷீணதிசையை யடைகிறார்கள். அதை யறியவுமில்லை கொஞ்சங்கூட பரோபகாரபுத்தியும், செய்யதேண்டியகாரியங்களில் உற்சாகமும், இல்லாமல் எவ்விதம் அதை அறியமுடியும்? அன்னபானம்செய்வதையே பெரியதாக மதிக்கிறார்கள். உலகநிந்தைக்கும் ரொம்ப பயப்படுகிறார்கள். பொன்னாசை, பெண்ணாசை, உறவினர்களிடம் ஆசை, பொதுப்புகழ் மொழிகளில் ஆசை இவைகளையெல்லாம் சந்நியாசிகள் துறக்கவேண்டியது. இந்த ஆசைகளிலிருந்து மீறாதவர்களைச் சந்நியாசியென்று எப்படி சொல்லக் கூடும்? பட்சபாதமன்னியில் வேதமார்க்க உபதேசத்தினுல் உலகத்திற்கு க்ஷேமத்தை விளைவிப்பதிலேயே அல்லும் பகலும் உழைப்பது சந்நியாசிகளுடைய சிறந்த கடமையாகும். தங்களுடைய ஆசிரம காரியங்களைச் செய்யாமலிருக்கிற வரையில் சந்நியாசி என்ற பெயர்களை வைத்துக்கொள்ளுவது வீணே. கிரகஸ்தர்கள் தங்களுடைய சொந்தகாரியத்திலே அக்கரை யுள்ளவர்களாயிருப்பதைக் காட்டிலும் சந்நியாசிகள் பரோபகாரத்தில் ஊக்கமுள்ளவர்களாயிருக்கும் பொழுதே ஆச்ரமங்களெல்லாம் ஓங்கி வளரும். உங்களுடைய கண்ணுக்கு முன்னாலேயே பொய் மதங்கள் பெருகிக்கொண்டே போகிறது. கிறிஸ்துவர்களாவும் மகமதியர்களாகவுமாகிறார்கள். தங்களுடைய இல்லத்தைச் செம்மையாகச் செய்து கொண்டுகாப்பாற்றி இதரர்களையும் சேர்த்துக்கொள்ள பிரயாசப்படுகிறதில்லை. மனமிருந்தால்தான் முடியும். நிகழ்காலத்திலும் வருங்காலத்திலும் முன்னேற்றமடைவதற்கு உத்தமசிலர்கள் வராதவரையில் இவ்வாரியவர்த்தநாட்டிலேயும் மற்றஇடங்களிலேயும் முன்னேற்றமதிகமுண்டாகாது. சத்தியசாத்திரங்களைப்படித்துப் படிக்கச்செய்வது, பிரம்மச்சரியாதி ஆச்சிரமங்களைச் சரிவர அனுஷ்டிப்பதிலேயுமே விருத்தி யுண்டாகும். தேச வளர்ச்சியும் உண்டாகும். சத்தியோபதேசமும் பரவும். நீங்களே அறியும்படி பல தீய குணங்களையுடையவும் பொய்யானதுமான பல வழக்கங்களிருந்து வருகிறதென்று ஞாபகத்தில் வையுங்கள். உதாரணமாக வியாபார புத்தியுள்ள சாது தன்னைச் சித்தன் என்று சொல்லிக் கொள்ளுகிறான். மலடிகளுக்குப்பிள்ளையை அளிக்கமுடியும் என்கிறான். இதைக்கேட்ட மாதர்கள் பலர் அவ்விடம் சென்று கைகூப்பி மக்கட்பேறு வேண்டுமென்று துதிக்கிறார்கள். சாதுவும் மக்கட்பேறு உண்டாகக் கடவது என்று ஆசீர்வாதஞ் செய்கிறான். மக்களைப் பெற்றவர்கள் சுவாமி உங்களுடைய வார்த்தையாலேயே உண்டாச்சுதென்கிறார்கள். பேதைப்பெண்களே!! கழுதை, நாய், கோழி முதலானவைகள் யாருடைய ஆசீர்வாதத்தினுல் பெறுகின்றன என்றுகேட்டால் என்ன சொல்லுவார்கள். மற்றும் சிலர் இறந்தவர்களைப்பிழைக்கச்செய்ய முடியுமென்கிறார்கள். அறி

வில்லாதவர்கள் அதை உண்மையென நம்புகிறார்கள், தனக்கிருக்கிற சக்தி அவர்களுக்கிருக்குமேயானால் அவர்களே ஏன் இறந்துபோகிறார்கள். வேறு சிலதிருடர்கள் பெரியபுத்திமான்களையும் ஏமாற்ற உபாயம் செய்கிறார்கள். உதாரணமாக **தனசாரி, தக்கு** என்ற கூட்டத்தார்களை எடுத்துக்கொள்ளுவோம்.

ஐந்து அல்லது ஏழுபேர்கள் ஒன்றாகச்சேர்ந்து தூரதேசங்களுக்குப் போகிறார்கள். அவர்களுள் நல்ல சரீரபலமுடையவனைத் தலைவனாகச்செய்துக் கொள்ளுகிறார்கள். அத்தலைவன் அப்பொழுது சித்தபுருஷனாகிறான். பணமுள்ளவர்களைக்கொண்ட நகரம், கிராமம் எதையாவது அடைந்து அதற்குச் சமீபத்திலுள்ள அடர்ந்தானதும் தனியானதுமான ஒரு விடத்தில் அச்சித்தனைச் சிம்மாசனமிட்டு உட்கார்த்திவைப்பார்கள். பிறகுபட்டணத்திற்குச்சென்றுவழியில் வருகிறவர்களை யெல்லாம் இன்னின்னமகாத்மாவைக்கண்டாயா? என்று வினவுவார்கள். யார் எந்த மகாத்மா என்று கேட்டால் அவர் பெரிய சித்தபுருஷர், உன் மனதிலிருக்கிறதை சொல்லககூடியவர், அவர் சொல்லுவதெல்லாம் நடந்தே தீரும், அவர் பெரியயோகி, அவரைத் தரிசனம் செய்வதற்காகவே எங்களுடைய வீடுவாசல்களைவிட்டுத் தேடிக் கொண்டிருக்கிறோம். அம்மகாத்மா இந்தப்பக்கம் வந்திருப்பதாகக் கேழவிப்பட்டோம்" என்பதாகச் சொல்லுவார்கள். கிரகஸ்தர்கள் இதைக்கேட்டு "அம்மகானைச் சந்தித்தால் எங்களுக்கும் தெரியப்படுத்துங்கள். தரிசனம் செய்வோம். மனதிலுள்ளவைகளை கேழ்ப்போம்" என்கிறார்கள். பகல் முழுவதும் இதேமாதிரி கண்ணில் கண்டவர்களை யெல்லாம் கேழ்ப்பார்கள். நகரத்தைச்சுற்றியும் வருவார்கள். இரவில் அவ்விடத்தில் எல்லோரும் போய் ஒன்றாகக் கூடி அன்னபானம் செய்து தூங்கிக்காலையில் எழுந்திருந்து, நம்சித்தருடைய துணையாளிகள் கிராமம் நகரம் முதலிய விடங்களுக்குச்சென்று முந்தினம் போலவே கேட்டுவிட்டுத் திரும்புவார்கள். இதேமாதிரி இரண்டு அல்லது மூன்று நாள் செய்த பிறகு பணமுள்ளவர்களிடம் சென்று மகாத்மா வந்துள்ளார், தரிசனம் செய்ய இஷ்டமுண்டானால் அழைத்துவரத் தயாராகவிருக்கிறோம் என்பார்கள். பின்பற்றிவரப்புறப்படும் பொழுது அவரை நீங்கள் என்ன கேட்கவிரும்புகிறீர்கள் என்று துணையாளிகள் வினவ புத்திரப்பேறுவேண்டுமென்றோ, நோய்தீரவேண்டுமென்றோ, திரவியம் வேண்டுமென்றோ, அல்லது சத்துருவை ஜெயிக்க வேண்டுமென்றோ சொல்லுவாாகள். அவரை அழைத்துக்கொண்டுபோய்ச் சித்தர் இருக்குமிடத்தில் (சித்தருக்கும், துணையாளிக்கும்) முன் தெரிவித்துக்கொள்ளப்பட்ட அடையாளப்பிரகாரம் உட்காரவைப்பார்கள். உதாரணமாகத் திரவியம் வேண்டு மென்கிறவர்களை சித்தருடைய வலதுபக்கத்திலேயும், மக்கட்பேறு வேண்டு மென்கிறவர்களை முன்னாலேயும், ரோகநிவாரணமாக வேண்டும் என்கிறவர்களை இடதுபக்கத்திலேயும், சத்துருவை ஜயிக்க வேண்டுமென்கிறவர்களைப் பின்புறமாகவும், உட்கார்த்திவைப்பார்கள். வந்தவர்கள் நமஸ்காரம் செய்தானவுடன் சித்தர் தன் சித்த சக்தியினால் உறத்தகுரலுடன் பிள்ளையை பெற்றுக்கொண்டு

போவதற்கு நான்இங்கே பிள்ளைகளைச் சேர்த்துவைத்துக் கொண்டிருக்கிறேனு? அல்லது திரவியம் சம்பாதித்துப்போகவேண்டுமென்கிற அவாவுடன் நீங்கள்வரு வதைஒட்டி பணமுடிகளை இங்கேவைத்திருக்கிறேனு? பக்கிரிகளிடத்தில் பணம் ஏது? நான் என்ன வைத்தியனு? ரோகநிவாரணம் செய்வதற்கு? வைத்தியரிடத் தில்போங்கள் "என்றுசொல்லுவான். வந்திருக்கிறவர்களுக்கும் நோயாளிகளும் உள்ள பந்து முறைமையைக்காண்பிக்க இந்தபேர்க்கிரிகளுள் சில குறிகளிருக் கின்றன. உதாரணமாகத் தகப்பனுயிருக்கும் பட்சத்தில் துணையாளிகளில் ஒரு வன் கைப் பெருவிரலைக் காண்பிப்பான், தாயாராயிருக்கும் பட்சத்தில் சிறு விரலையும் சகோதரனுயிருக்கும் பட்சத்தில் நடு விரலையும் மனைவியாயிருக்கும் பட்சத்தில் மோதிரவிரலையும், பெண்ணுயிருக் கும்பட்சத்தில் சுண்டுவிரலையும் முறையே காண்பிப்பார்கள். ஆகவே நம்முடைய சித்தர் உடனே தாய் தகப்பன் சகோதரி மனைவி அல்லது மக்கள் யார் நோயினுல் வருந்துகிருர்களென்று சொல்லுவான். வந்திருக்கிறவர் இப்படியெல்லாம் கேட்டு மதிமயங்கி விடு வார்கள். அப்படுகள்ளர்கள் நாங்கள் சொன்னது சரிதானு என்பார்கள். ஆமாம் நீங்கள் சொன்னதே. அதுவே சரியானது எனக்குப்பெரும் உபகாரத்தைச் செய்தீர்கள். நான் பெரும்பாக்கியத்தையடைந்தேன். தங்களைத் தரிசனம் செய்ததினுல் பெரும்புனிதர்களானேம் என்கிருர்கள். அப்பொழுது துணை யாளிகள் "கேளும் அண்ணே; மனதைகாட்டின மகாத்மா இவர். இவ்விடம் வெகுநாள் தங்கியிருக்கமாட்டார். அவருடைய ஆசியை விரும்பினுல் தங்களுடைய உடல் பொருள் ஆவி மூன்றினுலும் பணிவிடை செய்யுங்கள் ஏனென்ருல் பணிவிடையே பலனைக் கொடுக்கும். சித்தர்களுடையவழி அபார மானது என்பதுபோல் சந்தோஷம் வந்தவர்களிடத்தில் என்னதான் அளிக்க மாட்டார் "என்பார்கள். இனிமையானவு மிருதுவானதுமான வார்த்தைகளைக் கேட்டு பெரும் சந்தோஷமடைந்து கிரகஸ்தன் வீடுபோய்ச்சேருவான். இவர்க ளுடைய பொய்வார்த்தைகள்வெளியாகாமலிருக்கும் வண்ணம் இந்த மோசக் காரர்களும் கூடவே பின்தொடர்ந்து போவார்கள். வழியில் காணும் சிநே கிதன் முதலானவர்களிடம் சித்தரைப்பற்றி புகழ்ந்து பேசுவான். மெள்ள மெள்ள வார்த்தைகள் பரவி ஊர்முழுவதும் பெரிய சந்தடியும் உண்டாகும். ஒரு பெரிய சித்தர் வந்திருக்கிருர். இன்னின்னவிடத்தில் தங்கியிருக்கிருர். அவரைப்போய் காணுவோம் என்று ஊரில் எல்லோரும் சொல்லுவது காதில் விழும். ஜனங்கள் அங்கு சென்று கூட்டமாகக்கூடி கேழ்க்கும்பொழுது அமை தியின்மை ஏற்படுகிறபடியினுல் சித்தர் வாய்ப்பேசாமல் மௌனம் சாதிப்பார். என்னைத்தொந்திரவு செய்யாதீர்களென்றும் சொல்லுவார். துணையாளர்கள் எல்லோருமாக நீங்கள் அதிகம் தொந்திரவு செய்தால் அவர்போய் விடுவார் என்பார்கள். சில சமயங்களில் கூட்டத்திலிருக்கிற தனவான் ஒருவன் துணை யாளன் ஒருவனை ஒரு பக்கமாக அழைத்துச்சென்று எங்கள் மனதிலிருப்ப தைச்சொல்லச்சொல்லுங்கள் நாங்கள் அப்பொழுது உண்மையென்று நம்பு வோம் என்பார்கள். அப்பொழுதே எதைப்பற்றி வேண்டுகிருன் என்று மோ சக்காரன் தெரிந்து கொள்ளுகிருன். தனவானும் தன்னிஷ்டத்தைத் தெரிவிப்

பான். முன் கூறின ஏற்ப்பாட்டின் பிரகாரம் தனவானை உட்காரவைப்பான். சித்தர் உடனே மனேவெண்ணத்தைச் சொல்லுவார். எல்லோரும் இவருடைய பதிலைக் கேழ்ப்பார்கள். அப்பொழுது ஒருவருடன் ஒருவர் சித்தர் பெரியவரே என்று சொல்லுவார்கள். அவரவர்களுக்கேற்ற வண்ணம், மிட்டாய் திரவியம், வெள்ளி, தங்கம், ஆடை, உடை முதலியவைகளை கொண்டு வந்து கொடுப்பார்கள. பொருள் வந்து சேரும்வரையில் மோசக்காரர்கள் கொள்ளையடித்துக்கொண்டே யிருப்பார்கள். சிலசமயங்க்ளில் மூளையை விட பணம் அதிகமுள்ள இரண்டு மூன்று புருஷர்கள் நம்முடைய சித்தபுருஷரை அடைவார்கள். அவர்கள் 1000 அலலது அதற்கு அதிகமானதொகையைக் கொடுப்பார்கள். அதற்குப்பதிலாக ஆசீர்வாதஞ்செய்த வீபூதியை உன்வணக்கம் உண்மையானல்குழந்தைபிறக்கும் என்று சொல்லிக்கொடுப்பான். இவ்விதமாக மோசக்காரர்கள் பலபேர்களிருக்கிருர்கள். கற்று அறிந்தவர்களே இதை விசாரணை செய்யமுடியும். வேறு எவராலும் முடியாது. வேதாதி வித்தைகளைப் பயின்று நல்லசேர்க்கையினலேயே அவர்களுடைய மோசத்திலகப்படாமல் தப்பமுடியும். ஏனெனில் மனிதனுக்கு வித்தையே கண்ணுகும். வித்தையில்லாமல் ஞானமுண்டாகாது. சிறுவயதிலிருந்து சிறந்தபயிற்சி அடைகிற மனிதன் வித்வானுகிருன். எவனுக்குக்கெட்டசேர்க்கையிருக்கிறதோ அவன்பெரும் பாபியாகிருன். கடக்கமுடியாத துக்கத்தில் உழலுகிருன். இதனலேயே ஞானத்தைச்சிறப்பாகச் சொல்லியிருக்கிருர்கள். அறிகிறவனே நம்புகிருன்.

न वेत्ति यो यस्य गुणप्रकर्षं स तस्य निन्दां सततं करोति ।
यथा किराती करिकुम्भजाता मुक्ताः परित्यज्य बिभर्ति गुञ्जाः ॥ சாணக்.

பொருளுடைய குணத்தை யறியாதவர்கள் அதை தூஷணை செய்கிருர்கள். காட்டிலுள்ள பீல் வகுப்பினர் சுகந்தபரிமளத்துடன்கூடின குஞ்சா புஷ்பங்களை விட்டு கசமுகலத்தினுடைய மாலையைத்தரிப்பது போலேயாம். அறிஞன் ஞானி, தார்மீகன் சத்புருஷர்களுடைய சேர்க்கை இவைகளையுடையவனே யோகி. புருஷப்பிரயத்தனமுள்ளவன், அடக்கப்பட்ட இந்திரியங்கள், சுசீலே இவைகளுடன் கூடினவனே தர்மார்த்தகாம மோக்ஷத்தையடைந்து இப்பிறப்பில் மாத்திரமன்னியில் மறுபிறப்பிலும் எப்பொழுதும் ஆனந்தத்தி விருக்கிருன். ஆரியவர்த்தத்தில் வசிக்கிற ஜனங்களுடைய மதவிஷயத்தைச் சுருக்கமாக எழுதினேம். இதற்குப்பிறகு கொஞ்சம் இருக்கிற ஆரிய அரசர்களின் சரிதையை சகல ஜனங்களும் அறியும்பொருட்டு வெளிப்படுத்துகிறேம். ஆரியவர்த்ததேசராஜவம்சத்து மகாராஜயுதிஷ்டிரர் முதல் மகாராஜயசபாலன் வரையிலுள்ள சரித்திரத்தைச் சொல்லுகிறேம். மகாராஜசுவாயம்பவ மனு முதல் கொண்டு மகாராஜயுதிஷடிரர் பரியக்தமுள்ள விவரம் மகாபாரதம் முதலானவைகளில் காணப்படுகிறது. யுதிஷ்டிருக்குப்பிறகு ஆரிய அரசர்களின் சரித்திரம் கொஞ்சம் படிக்கிறவர்களுக்கு விளங்கும். ராஜபுதானத்தில் உதயபூர் சமஸ்தானத்தின் தலைநகரான சித்தூரில் ஸ்ரீ நாதத்துவாரத்திலிருந்து பக்ஷத்திற்கொருமுறை வெளிவந்துகொண்டிருந்த ஹரசந்திரகா,மோகன

சந்திரகா என்னும் பத்திரிகைகளில் வெளியானதின் மொழிபெயர்ப்பேயாகும் இது. சரித்திரம் முதலானவைகளை ஆராய்ச்சிசெய்து ஆரியஜனங்கள் வெளிப் படுத்தினால் தேசத்திற்குத் தக்கலாபமுண்டு. மேற்படி பத்திரிகையின் பத்திரா திபர் விக்கிரம் 1782 (1725 கிறிஸ்து) ல் எழுதின ஏட்டுப்பிரதி நூல் ஒன்றைத்தான் சிநேகிதர் ஒருவரிடமிருந்து கிடைக்கப்பெற்றோம். 1893 விக்கிரம் (1882 கிறிஸ்து) 19-20 எண்ணுள்ள சஞ்சிகைகளில் ஆரிய அரசர்களின் சுருக்கமான சங்கிரகத்தைப் பிரசுரித்தார். அதுக்கீழ்க்கண்டவாறு.

1770 வருஷம் 11 மாசம் 10 நாளைக்கு மொத்தமாக யுதிஷ்டிரவம்சத்தைச்சேர்ந்த 30 சக்கரவர்த்திகள் இந்திரபிரஸ்தத்தில் ஆண்டார்கள். அவர்க விவரமாவது.

### ஆரியவர்த்தத்தின் ஆரியசக்கரவர்த்திகளின் வம்சாவளி.

இந்திரபிரஸ்தத்தில் யுதிஷ்டிரசக்கரவர்த்தி முதற்கொண்டு யசபாலசக்கரவர்த்திவரையில் ஆரியர்களே ஆண்டார்கள். ஏறக்குறைய மொத்தத்தில் 124 பேர்களிருந்தார்கள். அவர்களாண்டகாலம் 4157 வருஷங்கள் 9 மாசங்கள் 14 நாள்களுமாம். விவரம் கீழ்க்கண்டவாறு.

| ஆரியராஜாக்கள். | வரு. | மா. | நா. | ஆரியராஜாக்கள். | வரு. | மா. | நா. |
|---|---|---|---|---|---|---|---|
| 1 யுதிஷ்டிரர் | 36 | 8 | 25 | 16 சுசரிதன் | 42 | 11 | 2 |
| 2 பரிக்ஷித்து | 60 | 0 | 0 | 17 சூரசேனன் | 58 | 10 | 8 |
| 3 ஜனமேஜய | 84 | 7 | 23 | இரண்டாவது | | | |
| 4 அஸ்வமேத | 82 | 8 | 22 | 18 பர்வதசேனன் | 55 | 8 | 10 |
| 5 இரண்டாவது ராமர் | 88 | 2 | 8 | 19 மேதாவி | 52 | 10 | 10 |
| | | | | 20 சோனசீரன் | 50 | 8 | 21 |
| 6 சத்ரமலன் | 81 | 11 | 27 | 21 பீமதேவன் | 47 | 9 | 20 |
| 7 சித்திராதன் | 75 | 3 | 18 | 22 கிருஹரிதேவன் | 45 | 11 | 23 |
| 8 துஷ்டசைல்யன் | 75 | 10 | 24 | 23 பூர்ணமலன் | 44 | 8 | 7 |
| 9 உக்ரசேனன் | 78 | 7 | 21 | 24 காதவீ | 44 | 10 | 8 |
| 10 சூரசேனன் | 78 | 7 | 21 | 25 அலம்மிகன் | 50 | 11 | 8 |
| 11 புவனபதி | 69 | 5 | 5 | 26 உதயபாலன் | 38 | 9 | 0 |
| 12 ரணஜிதன் | 65 | 10 | 4 | 27 துவனமலன் | 40 | 10 | 26 |
| 13 ரிக்ஷகன் | 64 | 7 | 4 | 28 தமதன் | 32 | 0 | 0 |
| 14 சுகதேவன் | 62 | 0 | 24 | 29 பீமபாலன் | 58 | 5 | 8 |
| 15 நாஹரிதேவன் | 51 | 10 | 2 | 30 க்ஷேமகன் | 48 | 11 | 21 |

ராஜாக்ஷேமகனை மந்திரி விக்கரவன் கொலைசெய்து விட்டு தானே ஆள வாரம்பித்தான. இவ்வம்சத்தைச்சேர்ந்த சக்கரவர்த்தி 14 பேர்கள் மொத்தமாக இந்திரபிரஸ்தத்தில் 500 வருஷம் 3 மாசம் 17 நாள் ஆண்டார்கள்.

| ஆரியராஜாக்கள். | வரு. | மா. | நா. | ஆரியராஜாக்கள். | வரு. | மா. | நா. |
|---|---|---|---|---|---|---|---|
| 1 விச்ரவான் | 17 | 3 | 29 | 8 கத்ருதன் | 42 | 9 | 24 |
| 2 புரசேனி. | 42 | 8 | 21 | 9 சஜ்ஜனன் | 32 | 2 | 14 |
| 3 வீரசேனி | 52 | 10 | 7 | 10 அமரருடன் | 27 | 3 | 16 |
| 4 அன்ங்கசாயி | 47 | 8 | 23 | 11 அமீபாவன் | 22 | 11 | 25 |
| 5 ஹரிஜித் | 35 | 9 | 17 | 12 தசரதன் | 25 | 4 | 12 |
| 6 பரமசேனி | 44 | 2 | 23 | 13 வீரசாலன் | 31 | 8 | 11 |
| 7 சுகபாதாளன் | 30 | 2 | 21 | 14 வீரசாலசேனன் | 47 | 0 | 14 |

வீரசாலசேனனை மந்திரி விரமகாக் கொன்று அவனுக்குப் பதிலாக ஆள வாரம்பித்தான். அவ்வம்சத்து 16 சக்ரவர்த்திகள் மொத்தம் 441 வருஷம் மாசம் 3 நாள் அரசுபுரிந்தார்கள்.

| ஆரியராஜாக்கள். | வரு. | மா. | நா. | ஆரியராஜாக்கள். | வரு. | மா. | நா. |
|---|---|---|---|---|---|---|---|
| 1 ராஜ வீரமகான் | 35 | 10 | 8 | 10 மாணிக்சந்து | 7 | 7 | 21 |
| 2 அஜாதசிம்ஹன் | 27 | 7 | 19 | 11 காமசேனி | 42 | 5 | 10 |
| 3 சர்வவத்தன் | 28 | 3 | 10 | 12 சத்துருமர்தனன் | 8 | 11 | 13 |
| 4 புவனபதி | 11 | 4 | 10 | 13 ஜீவன்லோசன் | 28 | 9 | 17 |
| 6 வீரசேனன் | 21 | 2 | 13 | 14 ஹரிராவ் | 26 | 10 | 29 |
| 6 மகிபாலன் | 40 | 8 | 7 | 11 இரண்டாவது வீர | | | |
| 7 சத்துருசாலன் | 26 | 4 | 3 | சேனன் | 35 | 2 | 20 |
| 8 சங்கராஜன் | 17 | 2 | 10 | 16 ஆதித்யகேது | 21 | 11 | 13 |
| 9 தேஜபாலன் | 28 | 11 | 10 | | | | |

ஆதித்யகேதுராஜனை பிரயாகையைச்சேர்ந்த **நந்தரன்** கொன்றுவிட்டு தானே அரசாண்டான், மொத்தம் ஒன்பதரசர்கள் 374 வருஷம் 11 மாதம் 26 நாள் ஆண்டார்கள்.

| ஆரியராஜாக்கள். | வரு. | மா. | நா. | ஆரியராஜாக்கள். | வரு. | வா. | நா. |
|---|---|---|---|---|---|---|---|
| 1 ராஜதந்தரன் | 42 | 7 | 24 | 6 ஜீவனராஜன் | 45 | 2 | 5 |
| 2 மகரிஷி | 42 | 2 | 29 | 7 உருத்ரசேனன் | 47 | 4 | 28 |
| 3 சனரஞ்சி | 50 | 10 | 19 | 8 உரீலன் | 52 | 10 | 8 |
| 4 மகாயுத்தன் | 30 | 3 | 8 | 9 ராஜபாலன் | 36 | 0 | 0 |
| 5 துரநாதன் | 28 | 5 | 25 | | | | |

சாமந்த மகாபாலன் ராஜ ராஜபாலனைக்கொன்றான். கொன்று 14 வருஷம் ஆண்டான். திகையின் அரசனன விக்கிரமாதித்யன் அவன்மேல் படையெடுத்து மகாபாலனைத்தோற்கடித்தார். அவர் 93 வருஷங்களாண்டார் சமுத்திரபாலயோகி பைடன் என்னப்பட்ட சாலிவாஹன அரசனுடைய மந்திரியினல் கொல்லப்பட்டார். விக்கிரமாதித்யன் காலத்தில் ஆளவாரம்

பித்தார். அவ்வம்சத்து 16 அரசர்கள் மொத்தமாக 372 வருஷங்கள் 4 மாதங்கள் 27 நாள்களாண்டார்கள்.

| ஆரியராஜாக்கள். | வரு. | மா. | நா. | ஆரியராஜாக்கள். | வரு. | மா. | நா. |
|---|---|---|---|---|---|---|---|
| 1 சமுத்ரபாலன் | 54 | 2 | 20 | 9 அம்ருதபாலன் | 36 | 10 | 13 |
| 2 சந்திரபாலன் | 36 | 5 | 4 | 10 பலீபாலன் | 12 | 5 | 27 |
| 3 சாகாயபாலன் | 11 | 4 | 11 | 11 மகீபாலன் | 13 | 8 | 4 |
| 4 தேவபாலன் | 27 | 1 | 8 | 12 ஹரீபாலன் | 14 | 8 | 4 |
| 5 நரசிம்மபாலன் | 18 | 0 | 20 | 13 சீசபாலன் | 11 | 10 | 13 |
| 6 சாமபாலன் | 27 | 1 | 17 | 14 மதனபாலன் | 17 | 10 | 19 |
| 7 ரகுபாலன் | 22 | 3 | 25 | 15 கர்மபாலன் | 16 | 2 | 2 |
| 8 கோவிந்தபாலன் | 27 | 1 | 17 | 16 விக்ரமபாலன் | 24 | 11 | 13 |

விக்கிரமபாலன் மேற்தேயத்து அரசனை மலுக்சந்த் போகராவின மீது படையெடுத்து மைதானத்தில் யுத்தஞ்செய்தான். மலுக்சந்த விக்ரமாதித்தியனைக் கொன்று இந்திரபிரஸ்தத்தில் அரசாண்டான். மொத்தம் அவன் வம்சத்தரசர்கள் 191 வருஷங்கள் 1 மாசம் 16 நாள்கள் ஆண்டார்கள்.

| ஆரியராஜாக்கள். | வரு. | மா. | நா. | ஆரியராஜாக்கள். | வரு. | மா. | நா. |
|---|---|---|---|---|---|---|---|
| 1 மலுக்சந்தர் | 54 | 2 | 10 | 6 கல்யாணசந்த் | 10 | 5 | 4 |
| 2 விக்ரமசந்த் | 12 | 7 | 12 | 7 பீமசந்த் | 16 | 2 | 9 |
| 3 அமீன்சந்த்* | 10 | 0 | 5 | 8 லோவசந்தர் | 26 | 3 | 22 |
| 4 ராமசந்த் | 13 | 11 | 8 | 9 கோவிந்த சந்த | 31 | 7 | 12 |
| 5 ஹரீசந்த் | 14 | 9 | 24 | 10 ராணிபத்மாவதி | 1 | 0 | 0 |

பத்மாவதி ராணி சந்தானமில்லாமல் இறந்துபோனாள். மந்திரிகளெல்லோரும் கூடிக்கலந்து ஹரிராம வைராகியைச் சிம்மாசனத்திலமர்த்தினார்கள். 50 வருஷங்கள் 2 நாள்கள் அவன் வம்சத்தரசர்கள் மொத்தமாக ஆண்டார்கள்.

| ஆரியராஜாக்கள். | வரு. | மா. | நா. | ஆரியராஜாக்கள். | வரு. | மா. | நா. |
|---|---|---|---|---|---|---|---|
| 1 ஹரீராம் | 7 | 5 | 16 | 3 கோபால்ராம் | 15 | 7 | 28 |
| 2 கோவிந்தராம் | 10 | 2 | 8 | 4 மகாபாகு | 6 | 8 | 29 |

ராஜ மகாபாகு சிம்மாசனத்தைவிட்டு விலகி காட்டிற்குத் தவம்புரியச் சென்றார். வங்கநாட்டு ஆதிசேனன் இதைக்கேட்டு இந்திரப்பிரஸ்தத்திற்குவந்து முக்கியபட்டணத்தைப் பிடித்துக்கொண்டு அரசாளவாரம்பித்தான். இந்திரபிரஸ்தத்தில் 151 வஷங்கள் 11 மாசங்கள் 2 நாள்கள் ஆண்டார்கள்.

* இவன்பெயரைச் சிலவைகள் மானக் சந்து என்கிறது.

| ஆரியராஜாக்கள். | வரு. | மா. | நா. | ஆரியராஜாக்கள். | வரு. | மா. | நா. |
|---|---|---|---|---|---|---|---|
| 1 ஆதீனசேனன் | 18 | 5 | 21 | 7 கலியாணசேனன் | 4 | 8 | 21 |
| 2 லீலாவசேனன் | 12 | 4 | 2 | 8 ஹரிசேனன் | 12 | 0 | 25 |
| 3 கேசவசேனன் | 15 | 7 | 12 | 9 க்ஷேமசேனன் | 8 | 11 | 15 |
| 4 மாதசேனன் | 12 | 4 | 2 | 10 நாராயணசேனன் | 2 | 2 | 29 |
| 5 மயூரசேனன் | 20 | 11 | 27 | 11 லக்ஷ்மீசேனன் | 36 | 10 | 0 |
| 6 பீமசேனன் | 5 | 10 | 9 | 12 தாமோதரசேனன் | 11 | 5 | 19 |

ராஜ தாமோதரசேனன், தன்னுடைய அதிகாரி ஜனங்களை மிகவும் துன் புறுத்தினன். தீபசிம்ஹன் என்பான் அவனுக்கு விரோதமாகி சைனியத்தை யும் கூட சேர்த்துக்கொண்டான். ராஜாவைக்கொன்றுவிட்டுத்தானே ஆள வாரம்பித்தான். இவ்வம்சத்தில் 6 அரசர்களிருந்தார்கள். மொத்தமாக 107 வருஷங்கள் 6 மாசங்கள் 22 நாளும் ஆண்டார்கள். விவரம் பின்வருமாறு.

| ஆரியராஜாக்கள். | வரு. | மா. | நா. | ஆரியராஜாக்கள். | வரு. | மா. | நா. |
|---|---|---|---|---|---|---|---|
| 1 தீபசிம்மஹன் | 17 | 1 | 26 | 4 நரசிம்ஹன் | 45 | 0 | 15 |
| 2 ராஜசிம்ஹன் | 14 | 5 | 0 | 5 ஹரிசிம்ஹன் | 13 | 2 | 29 |
| 3 ரணசிம்ஹன் | 9 | 8 | 11 | 6 ஜீவன் சிம்ஹன் | 8 | 0 | 1 |

ராஜா ஜீவன்சிம்ஹன் காரணமன்னியில் சைனியமெல்லாவற்றையும் வடக்குக்கு அனுப்பினன். இதைக்கேட்ட வைராட்டராஜனை பிருதிவி ராஜசௌஹன் அவனுக்கு எதிரிடையாகச்சென்று சண்டையில் கொன்று விட்டு தானே ஆளவாரம்பித்தான் *இவ்வமசத்தில் 5 அரசர்களிருந்தார்கள். மொத்தம் 56 வருஷங்களும் 20 நாள்களுமாண்டார்கள்.

| ஆரியராஜாக்கள். | வரு. | மா | நா. | ஆரியராஜாக்கள். | வரு. | மா. | நா. |
|---|---|---|---|---|---|---|---|
| 1 பிருதிவி ராஜன் | 12 | 2 | 19 | 4 உதயபாலன் | 11 | 7 | 3 |
| 2 அபயபாலன் | 14 | 5 | 17 | 5 யசபாலன் | 36 | 4 | 27 |
| 3 துர்சனபாலன் | 11 | 4 | 84 | | | | |

---

* சுல்தான் சஹபூதீன் கோரி பிருதிவி ராஜன்பேரில் படையெடுத்ததாகவும் பல தடவைகளில் தோல்வியடைந்து வீடுதிரும்பியதாகவும் சில சரித்திரபுத்தகங்களில் எழு தப்பட்டிருக்கிறது. முடிவில் 1249 விக்கிர சகாப்தத்தில் ராஜா பிருதிவிராஜனுடைய நேசர்களிலிருந்த பரஸ்பர விரோதத்தினல் பிருதிவிராஜனைச் சஹபுதீன் தோற்கடித்து விட்டான். கண்ணைக்குருடாக்கிவிட்டு தன்னுடன் அழைத்துச்சென்றான். இந்திரபிரஸ்த ராஜ்யபாரத்தைத்தானே ஏற்றுக்கொண்டான். மகம்மதியர்களுடைய ஆளுகை 61 வருஷங்கள் நடந்தேறியது மொத்தம் 45 அரசர்கள் ஆண்டார்கள்.

*அவ்வழியைச்சேர்ந்த சுல்தான் சஹாபுதீன் சோரி ராஜயசபாலருடைய ராஜ்யந்தான் அவர்பேரில்படைஎடுத்து (தோற்கடித்து) பிரயாகைகோட்டையில் 1219 விக்கிரமசகத்தில்(கிறிஸ்து 1306 ௵) கைதியாக்கி இந்திரபிரஸ்த ராஜ்ய பாரத்தைத் தன்கையிலெடுத்துககொண்டான்.மீதி 754 வருஷங்கள் 1 மாதம் 17 நாள்கள்ஆண்டமொத்தம் 53 ராஜாக்களின் பெயர் எல்லா சரித்திர நூல்களிலும் இருக்கிறபடியால் இங்கு அதை கூறவில்லை.

அடுத்த அத்தியாயத்தில் பௌத்த சமண சமயத்தைப் பற்றிச் சொல்லுவோம்.

பதினொன்றாவது அத்தியாயம்.

முற்றிற்று.





* இது தப்பேயாகும். ராஜயசபாலனை ஜயித்தது கஜனிமாமுது. சகபுதீன் அல்ல (மொ—ர்).

## பனிரண்டாவது அத்தியாயத்தின்

# முகவுரை.

---

மெய்ப் பொருள் எது, பொய்ப்பொருள் எதுவென உள்ளங்கை நெல்லிக் கனிபோல், விளங்குந் தன்மையதான தெய்வ நூலெனக் கொள்ளப்படும், வேதநூலை, ஆரியவர்த்த நாட்டினர் ஓதுதலை விடுத்தநாள் தொட்டு, நமதுநன் நாட்டில் அறியாமைப் பேரிருள் புகுந்தது. அதன் அடிச்சுவடு பற்றிப் பல வகுப்புகள், மதங்கள், தோன்றலாயின. சாஸ்திரத்திற்கும் ஆராய்ச்சிக்கும் பொருந்தாத சமண மதம் நமது நாட்டில் வேரூன்றிற்று. வால்மீகியார் ஆக்கிய ராமாயணத்திலும், சமணர்களைப்பற்றிய பேச்சு எதையும் காணமுடியவில்லை. மகாபாரதமும் இம்மதத்தை அறியாது. ஆனால் சமண நூலிலோ ராமசரிதையும் கிருஷ்ணசரிதையும் இருக்கக் காண்கிறோம்.

இதினின்று அறியற்பாலது என்னவென்றால், ராமாயண பாரதகாலத்திற்குப் பிறகு தான் இம்மதம் தோன்றியுள்ளது என்பதே. சமணர் கூறும் விதம் பண்டையமதமாயிருப்பின், சமணர்களைப்பற்றி ராமாயண பாரத நூற்களில் குறிக்கப்பட்டிருக்கவேண்டுமல்லவா? ராமாயண பாரதக்கதைகள் சமண நூற்களிலிருந்து எடுக்கப்பட்டவையெனின் அதற்கும் மேற்கூறிய இரு நூற்களிலும் அத்தாட்சியொன்றையும் காணோம். பிள்ளையொருவன் தகப்பன் மணத்தில் விஜயமாயிருத்தல் முடியாதகாரியமல்லவா?

பௌத்த சமண சமயங்கள், வாமமார்க்கம், சைவமார்க்கம் இவைகளுக்குப் பின்னர்தான் ஏற்பட்டிருக்கின்றன. இம்மத விஷயமாய் நமது அபிப்பிராயங்களைப் போதியமேற்கோள்களின் துணைகொண்டே கூறியிருக்கிறோம். நாம் சமணர்களின் மீதுகுறைகூற வேண்டுமென்னும் நோக்கங்கொண்டோமில்லை. உண்மையைவிளக்குவது, மெய்ப்பொருளை யெடுத்துக்காட்டுவது என்னும் நோக்கத்துடன் தான் ஆராய்ச்சிசெய்துள்ளோம். எனவே சமணர் நம் மீது கோபங்கொள்ளத் தேவையில்லை.

இவ்வத்தியாயம் சமணர்களிடம் ஓர் எழுச்சியைத்தரும். படிக்கவும் மதவிஷயத்தை ஆராயவும் அவகாசமும் தரும். குருட்டுத்தனமாய்க் கண்டித்தல் என்பதை நிறுத்தி அறிஞர்கள் நன்கு ஆராய்ச்சிசெய்து மெய்ப்பொருள் தேடவேண்டும். சமணர்கள் தங்கள் நூற்களைப் பிறர் வாசிக்குமாறும் விடுவதில்லை. எனவே இதன் மூலம் பிறமதஸ்தர்களும் சமணர் நூற்களைப் படித்தறிதல் கூடும். நானும் பம்பாய் ஆரிய சமாஜத்தின் காரியதரிசியான

ஸ்ரீ சேவகலால் கிருஷ்ணதாசரும் பெருமுயற்சி செய்து சமண நூற்களைப் பெற்றோம். மேலும் காசி, பிரபாகரஜியின அச்சுக்கூடத்தரால் பிரசுரிக்கப்பட்ட சில சமண நூற்களும், பம்பாயினின்றும் வெளியிடப்பட்ட பிரகரண இரத்தினகரம் என்னும் நூலும், இவ்வாராய்ச்சிக்கு உதவியாயிருந்தன. சமணர் தங்கள் நூற்களைப் பிறர் பார்த்தலாகாது என்று கூறுவது எவ்வளவு அழகாயிருக்கிறது பாருங்கள். அவர்கள் பிறர் எங்கே தங்கள் மதத்தைத் தாக்கப் போகிறார்கள் என் அஞ்சியே அங்ஙனம் செய்துள்ளார்கள் போலும். அவர்களுடைய கிரந்தங்கள் முன்னுக்குப்பின் முறணுடையதாயிருக்கும். பிறர் குற்றங் காணுதலே உலக வழக்கு. அவர்களுக்குத் தங்கள் மதத்தின் சிறுமைகள் புலனாவதில்லை. நாம் சமணசமயவராயச்சியை வாசகர்களுக்கு விடுத்தருக்கிறோம். பட்சாபர்தமில்லாதும், துவேஷமில்லாதும் படிப்போர் உண்மையை அறிவர் என்பதில் சந்தேகமில்லை.

இச்சிறு முகவுரையுடன் இவ்வத்தியாயத்தை அறிஞர்களின் பார்வைக்கு விடுக்கிறோம்.

## பனிரண்டாவது அத்தியாயம்.

### சாரவாகம், பௌத்தம், சமணம், முதலிய நாஸ்திகமத விசாரணை.

வேதம், ஈசுவரன், யக்ஞம் முதலான அறநெறிகளின் நன்மை இவைகளில் நம்பிக்கையில்லாத **பிரகஸ்பதி** என்பான் ஒருவன் மதம் இதுவேயாகும்;

**यावज्जीवं सुखं जीवेन्नास्ति मृत्योरगोचरः ।**
**भस्मीभूतस्य देहस्य पुनरागमनं कुतः ॥**

" எப்பிராணியும், மனிதன் உள்பட, சாவில்லாதன அல்ல. எல்லாம் இறப்பவைகளே. ஆகவே சரீரத்தில் உயிருள்ளளவும் மனிதன் சுகமாயிருக்கட்டும். தர்மவழியில் நடப்பதென்றால் கஷ்டமாகிறதென்றும், அவ்விதம்நடக்காவிடில் மறுபிறப்பில் துன்பம் உண்டாகிறதென்றும் சொன்னால், அதற்கு விடையாகச் சாரவாகன் சொல்வான்: இறந்தபிறகு சரீரம் சாம்பலாகிறது. ஆகவே உயிருள்ளவரையில் உண்டு களித்து கொண்டிருந்த மனிதன் இறந்தபிறகு மறுபடியும் உலகத்திற்குத் திரும்பிவருகிறதில்லை. ஆகவே அவன் மனங்கொண்டவரையில் அனுபவிக்கட்டும். காலத்திற்கேற்றவாறு நடந்து கொள்ளட்டும், திரவியத்தைச்சேமிக்கட்டும், அதை வேண்டியவரையில் சிற்றின்பசுகங்களில் செலவிடட்டும். நம்முடைய பற்றெல்லாம் இவ்வுலகத்தைச்சேர்ந்ததே. இதற்கப்புறமென்பதே கிடையாது" பிருதிவி, ஜலம், அக்னி, வாயு ஆகிய நான்கும் சரீரக் கலப்பில் சேர்ந்துள்ளது. இவைகளுடைய சேர்க்கையினாலேயே உணர்ச்சியுண்டாகிறது. லாகிரி வஸ்துக்களை உபயோகிப்பதனால் மயக்கம் உண்டாவது போலேயாம். ஜீவன், சரீரத்துடன் கூடவே உண்டாகி, சரீர நாசத்துடனேயே அதுவும் அழிந்து போகிறது. இவ்விதமிருக்கப் பாபபுண்ணியங்களுடைய பயனை அடைவதென்பது முடியாதகாரியமேயாகும்.

**तच्चैतन्यविशिष्टदेह एव आत्मा देहातिरिक्त आत्मनि प्रमाणाभावात् ॥**

இச்சரீரத்தில், நான்கு பூதங்களுடைய சேர்க்கையினாலேயே ஜீவாத்மா உண்டாகி, அவைகளுடைய வியோகத்துடன் கூடவே அதுவும் நாசத்தையடைகிறது. இறந்தபிறகும் ஜீவனிருக்கிறதைப் பிரத்யக்ஷமாகக் காட்டமுடியாது. நாங்கள் கண்களால் நேரிட்டுப்பார்க்கிற பிரத்தியட்சத்திலேயே நம்புகிறோம். பிரத்தியக்ஷமில்லாமல் அனுமானம் முதலானவைகள் சித்திக்காது. ஆகவே பிரத்தியக்ஷமே முக்கியமானயடியினால் மற்றவை யெல்லாம் பயனற்றவைகளே. ஏற்றுக்கொள்ளக்கூடியவைகளல்ல. அழகுவாய்ந்த மாதைக் கட்டிக்கொள்வதினால் உண்டாகும் ஆனந்தமே மனிதப்பிரயத்தனத்தின்பெரும் பலனாகும்.

வினா:—உன்னால் கூறப்பட்ட பிருதுவி முதலானவைகளெல்லாம் ஜடப்பொருள்களே. அவைகளுடையசேர்க்கையினால் சேதனமுண்டாகாது. மனைவி

புருஷனுடைய தேகசம்பந்தத்தினல் சரீர உற்பத்தி உண்டாவது போலவே ஆதி சிருஷ்டியில் கர்த்தாவாகிய பரமேச்வரனன்னியில், மனிதன் முதலான சரீரங்களுடைய உருவம் உண்டாகாது. மயக்கம் உண்டாவதுபோலவே உணர்ச்சி உண்டாகிறதென்பது சரியாகாது. ஏனெனில் உணர்ச்சியுள்ள பொருளுக்கே மயக்கம் உண்டாகும். சடப் பொருளுக்காகாது. சகல பொருள்களும் நாசத்தையடைகின்றன. அதாவது கண்பார்வையிலிருந்து மறைகின்றன. அழிந்துபோகிறதில்லை. ஆகவே, புலப்படாததினல் ஜீவனை இல்லாததாக நினைக்கக்கூடாது. சரீரத்துடன் கூடும்பொழுது ஜீவாத்மா வெளியாகிறது. அது விட்டகலும் பொழுது, சரீரம் அழிந்துபோகிறது. முன்னிருந்த சேதன சக்தியற்றும் போகிறது. இதைத்தான் பிரகதாரண்யக உபநிடதமும் கூறுகிறது. தன் பத்தினியைப் பார்த்து யாக்ஞவல்கியர் கூறுவதாவது:—

नाहं मोहं ब्रवीमि अनुच्छित्तिधर्मायमात्मेति ॥

“ மைத்ரேயீ ! நான் சொல்லுவது சித்தபிரமையினலல்ல. ஆத்மா அழிவற்றது. அதனுடைய கூடுதலினுலேயே சரீரத்திற்கு உணர்ச்சியுண்டாகிறது. ஜீவன் பிரியுங்கால் சரீரமும் உணர்ச்சி யற்றுப்போகிறது. சரீரத்திலிருந்து ஆத்மா தனியாக யில்லாவிடில், அதனுடைய சேர்க்கையினல் சேதனமும், வியோகத்தினல் ஜடத்தனமும், முறையே ஏன் உண்டாகவேண்டும் ? கண்கள் எல்லாவற்றையும் பார்த்தபொழுதினும், தன்னைத்தானே பார்த்துக்கொள்ளுகிறதில்லை. இவ்விதமே புலன்களால் உணரும் சக்தியை அளிக்கும் ஜீவன் அவ்வுணர்ச்சியின் பாத்திரமாயிருக்க முடியாது. கண்களின் உதவியைக் கொண்டு ‘குடம்’ ‘படம்’ போன்ற பொருள்களைக் காண்கிறோம். ஊகிப்பதனல் ஏற்படும் ஞானத்தினல் கண்கள் இருத்தலை அறிகிறது. பார்க்கிறவன் எக்காலமும் பார்க்கிறவனகவே யிருக்கிறன். பார்க்கிறதாக ஆகிறதில்லை. ஆதாரமில்லாமல் ஆதேயமும (தாங்கப்படும் பொருள்) காரணமில்லாமல் காரியமும், மொத்தமில்லாமல் பகுதிகளும், கர்த்தாவன்னியில் காரியமும், எப்படி இருக்கமுடியாதோ, அப்படியே கர்த்தாவன்னியில் பிரத்தியட்சமெங்ஙனம் உண்டாகும் ? அழகிய மாதைக்கட்டிக் கொள்வதினலுண்டாகும் ஆனந்தமே மனிதப்பிரயத்தினத்தின் சிறந்தநோக்கமென்பது ஏற்கக்கூடிய உண்மையல்ல. ஏனெனின் அது கனப்பொழுதிருப்பதேயாம். இச்செய்கையினல் * துன்பமும் உண்டாகிறது. புருஷபிரயத்தனத்தின் முடிவானநோக்கம் இதுதானென்றுளங்ஙனம் கூறல் கூடும். சிற்றின்பங்களினல், சுகமேற்படாதபடியினல், துன்பமும் துக்கமுமே விளைகின்றன. துன்பங்களைத்தாண்டி இன்பங்களை யடைவதே மனிதப் பிரயத்தினத்தின் பிரதான நோக்கமென்றல் அதுவும் பிரயோஜன மற்றதே. ஆதலால் சிற்றின்பசுகங்களே மானிடபிரயத்தனத்தின் முடிவாகாது.

சாரவாகன்:—துன்பத்துடன் கூடினதென்று (சிற்றின்ப) சுகங்களை ஒழிக்கிறவர்கள் பெரும் மடையராவார்கள். குடியானவன், பயிரை உண்டாக்கி

* வீரியம் குறைந்தால் காயபலக்குறைந்து பிணியும் மூப்பும் உண்டாகின்றன. துன்பங்களை விளைவிக்காத சிற்றின்பசுகமெதுவுங் கிடையாது.

தானியத்தைச்சேர்த்து உமியை எறிந்துவிடுவது போல், புத்திமான்கள் உலகத்தில் சுகத்தைக் கைப்பற்றி துக்கத்தை விட்டுவிடுவார்கள். இவ்வுலகில் கண்ணால் பார்க்கக்கூடியதும் அனுபவிக்கக்கூடியதுமான சுகங்களைத் தள்ளிவிட்டு காணாததும் கிடைக்குமென நிச்சியமில்லாததுமான சுவர்க்கலோக சுகங்களை விரும்பி, போக்கிரிகளாலெழுதப்பட்ட வேதானுகூலமான அக்கினி ஹோத்திரம், உபாசனை, நல்ல ஒழுக்கம், ஞானகாண்டத்தினுடைய அனுஷ்டானம், முதலானவைகளைச் செய்கிறவர்கள் பெரும் அஞ்ஞானிகளேயாவார்கள். இதற்குப்பின் ஒன்றுமில்லாமலிருக்கப் பரலோகத்திலாசைவைப்பது அறிவிலிகளின் வேலையேயாகும்.

अग्निहोत्रं त्रयो वेदास्त्रिदण्डं भस्मगुण्ठनम् ।
बुद्धिपौरुषहीनानां जीविकेति बृहस्पतिः ॥

சார்வாக சமயாசாரியனான பிரகஸ்பதி, சொல்லுவதாவது:— அக்கினி ஹோத்திரம் செய்வது,மூவ்வேதங்களை ஓதுவது, மூன்றுதண்டங்களைக் கொள்வது, திருபுண்டிரம் தரிப்பது, ஆகியவைகளெல்லாம் புருஷார்த்தமில்லாத மனிதர்களினால் ஜீவனோபாயத்திற்காகச் செய்யப்பட்டது. காதுகுத்துதல் போன்ற துன்பங்களினால் விளையும் தீங்கையே நாங்கள் நரகம் எனக்கருதுகிறோம். அரசனே பரமேசுவரன் அப்பதவியைப்பெறுதலே மோக்ஷம்.

விடை:—சிற்றின்பசுகங்களிவிருப்பதையும், அச்சுகத்தினாலுண்டாகும் துன்பத்தைத் தடுத்துக் கொள்வதையும் சுவர்க்கம் என்றும் மனித பிரயத்தனத்தின் முடிவென்றும் கருதுவது மதியீனமேயாகும். அக்கினஹோத்திரம் முதலான யக்ஞங்களினால் வாயு, மழை, ஜலம் ஆகியவைகள், சுத்தமடைந்து அதனால், ஆரோக்கியமுண்டாகி, தர்மார்த்த காமமோக்ஷம் அடைதலை இலகுவாக்குகிறது. இதையறியாமல், இறைவனையும் வேத தர்மத்தையும் தூஷிப்பது பாதகர்களுடைய வேலையாகும். திருபுண்டிரம் தரித்து திரிதண்டம் ஏந்துவதை மறுப்பது சரியானதே. முள்ளைக்கொண்டு குத்திக்கொள்வதினாலுண்டாகும் வலி நரகமாகுமேயானால் அதைவிட பெருஞ்சங்கடங்களையுண்டுபண்ணும் பிணிகள் ஏன் நரகமாகாது? பெருமையுடன் கூடி குடிமக்களைக் காப்பாற்றுகிற அரசனை அவ்விதம் நினைப்பது ஏற்றதேயாகும். ஆனால்அநியாயஞ்செய்யும் ராஜனைப்பரமேசுவரனாகநினைக்கும்உன்னை யொத்த மடையனும் உண்டோ? சரீரநாசமே சுவர்க்கமென்றால் கழுதை நாய்களாகிய விலங்குகளுக்கும் உனக்கும் உள்ளபேதம் என்ன?

अग्निरुष्णो जलं शीतं शीतस्पर्शस्तथाऽनिलः ।
केनेदं चित्रितं तस्मात्स्वभावात्तद्व्यवस्थितिः ॥

சாரவாகர்கள், அபாணகர்கள், பௌத்தர்கள், சமணர்கள் ஆகியவர்கள் உலக சிருஷ்டியை ஒரே விதமாகக் கருதுகிறார்கள். சிருஷ்டிகர்த்தா எவருங் கிடையாது. அவைகளிலுள்ள குணங்களின் சிறப்பினால் பொருள்களெல்லாம் ஒன்றாகச் சேருகிறது.

न स्वर्गो नाऽपवर्गो वा नैवात्मा पारलौकिकः ।
नैव वर्णाश्रमादीनां क्रियाश्च फलदायिकाः ॥

2. சுவர்க்கமுங்கிடையாது, நரகமுங்கிடையாது. இப்பிறப்பில் செய்யும் கர்மங்களுக்கேற்க பாபபுண்ணியங்களை அனுபவிக்க ஜீவன் என்று எதுவுமில்லை வருணாச்சிரமவிதிகளைச் செய்வதற்கேற்றபலன்கள் ஒன்றுங்கிடையாது.*

पशुश्चेन्निहतः स्वर्गं ज्योतिष्टोमे गमिष्यति ।
स्वपिता यजमानेन तत्र कस्मान्न हिंस्यते ॥

3. யாகத்தில் ஆகுதியாக அளிக்கப்பட்ட விலங்கு சுவர்க்கத்தை யடையும்பொழுது, எஜமானன் (கர்த்தா) ஏன் தன் பெற்றோர்களை ஆகுதி செய்து சுவர்க்கத்தை அடையச்செய்யலாகாது?

मृतानामपि जन्तूनां श्राद्धं चेत्तृप्तिकारणम् ।
गच्छतामिह जन्तूनां व्यर्थं पाथेयकल्पनम् ॥

4. சிராத்தமும், தர்ப்பணமும் இறந்தவர்களுக்குத் திருப்தியையளிக்கும் பொழுது, தூரதேசம் செல்லும் பிரயாணிகள், வழிக்குச் சாப்பாடு; முதலானவைகளை எடுத்துச் செல்வானேன்? இறந்துபோனவர்களின் பெயரினால் அர்ப்பணம் செய்யப்படும் பொருள்கள், அவர்களைச் சேருமேயானால், வீட்டிலிருக்கும் உற்றார் உறவினர்களால் அளிக்கப்படும், பொருள்கள் அயல் நாட்டிற்குச்சென்றிருக்கும் மனிதனை ஏன் அடையாது? அயல் நாட்டிற்கே இவ்விதம் ஒன்றையும் வழிப்பிரயாணியுடைய சௌகரியத்திற்காக, அனுப்பமுடியாமலிருக்கச் சுவர்க்கத்திற்கு அனுப்புவது எவ்வளவு கஷ்டமாகாது?

स्वर्गस्थिता यदा तृप्तिं गच्छेयुस्तत्र दानतः ।
प्रासादस्योपरिस्थानामत्र कस्मान्न दीयते ॥

5. இவ்வுலகில் தானஞ்செய்வதினால் சுவர்க்கத்திலிருப்பவன் திருப்தியடைவானேயானால் கீழேயிருந்து கொடுக்கும் அன்னபானாதிகளினால் வீட்டின் உப்பரிகையின் மேலிருக்கும் பசியுடன் கூடினவன் ஏன் திருப்தியடைகிறதில்லை?

यावज्जीवेत्सुखं जीवेदृणं कृत्वा घृतं पिबेत् ।
भस्मीभूतस्य देहस्य पुनरागमनं कुतः ॥

6. ஆதலால் உள்ளவரையில் சுகத்துடனிருக்க வேண்டும். பொருளில்லாமல்போனால் கடன்வாங்கிக்கொள்ளட்டும். கடனைத்திருப்பிக் கொடுக்க வேண்டிய அவசிய மில்லை. ஏனெனில் கடனைப்பெற்றுக்கொண்ட மனிதனுடைய அதே சரீரமும், ஜீவனும், சேர்ந்து மறுபடியும் இவ்வுலகில் வருகிறதில்லை. அப்பொழுது கடனைத்திருப்பி கேழ்ப்பவர் யார்? கொடுப்பவர் யார்?

* ஜீவாத்மாவிலும், மறு உலகத்திலும் சாரவாகர்களுக்கு நம்பிக்கை கிடையாது: புத்தர்களுக்கும் சமணர்களுக்கும் உண்டு. ஏறக்குறைய எல்லோருடைய கொள்கைகளும் ஒன்றானதே.

**यति गच्छेत्परं लोकं देहादेष विनिर्गतः ।**
**कस्माद्भूयो न चायाति बन्धुस्नेहसमाकुलः ॥**

7. இறந்தபிறகு சரீரத்தைவிட்டு ஜீவன் மறு உலகத்தை அடைகிறதென்பது பொய்யே. இவ்விதமாகுமேயானல் குடும்ப ஆசை மேலிட்டு ஏன் அது மறுபடியும் வீட்டிற்குத்திரும்பிவருகிறதில்லை ?

**ततश्च जीवनौ ब्रह्मणैर्विहितस्त्विह ।**
**मृतानां प्रेतकार्याणि न त्वन्यद्विद्यते कचित् ॥**

8. ஆகவே இதெல்லாம் அவர்களுடைய ஜீவனோபாயத்திற்காகப் பிராம்மணர்களால் கற்பிக்கப்பட்டவைகளாகும். இறந்த பத்தாம் தினத்தன்று கொடுக்கும் பிண்டங்களும், அதையொட்டின உத்தரகிரியைகளும், சுயநலத்திற்காகவே கண்டுபிடிக்கப்பட்டவை.

**त्रयो वेदस्य कर्त्तारो भण्डधूर्तनिशाचराः ।**
**जर्फरीतुर्फरीत्यादि पाण्डितानां वचः स्मृतम् ॥**

9. வேதங்களை ஆக்கியவர்கள் கோமாளிகளும், பாதகர்களும் இராக்ஷசர்களுமேயாவார்கள். ஜர்பரி துர்பரி போன்ற பதங்களை உபயோகித்தலே பண்டிதர்களுடைய பாதகக்கொள்கைகளின் அடையாளமாகாதா ?

**अश्वस्यात्र हि शिश्नन्तु पत्नीग्रह्यं प्रकीर्त्तितम् ।**
**भण्डैस्तद्वत्परं चैव ग्राह्यजातं प्रकीर्त्तितम् ॥**

கவனியுங்கள் போக்கிரிகள் சொல்வதாவது:—

10. சடங்குகளைச்செய்யும் எஜமானனின் மனைவி குதிரையுடன் சம்யோகம் செய்யவேண்டுமென்றும், மணவாட்டியிடம் சிற்றின்பப்பற்றுள்ளவனுயிருக்க வேண்டுமென்றும் போக்கிரிகளைத்தவிர வேறு யார் சொல்லுவார்கள்.

**मांसानां खादनं तद्वन्निशाचरलमीरितम् ॥**

11. மாம்சாகாரம் செய் என்று சொல்லுகிற வேதங்களின் பாகம் இராக்ஷசர்களால் செய்யப்பட்டது.

விடை:—1. சேதன பரமேஸ்வரனன்னியில், ஜடப்பொருள்கள் ஏற்றபடி தானகவே கலந்து வெளியாகாது. தன்னிடத்திலுள்ள சுயமான குண விசேஷத்தினல், இவ்வித மாகுமென்றல், சூரிய சந்திர நக்ஷத்திர முதலிய கிரகங்களுடையகூட்டம் வேறொன்று ஏன் தானகவெ உண்டாகவில்லை? இன்பத்தில் அனுபவிப்பது சுவர்க்கமும் துன்பத்தில் துயரப்படுவது நரகமு மாகும். சுகதுக்கங்களை அனுபவித்துக்கொண்டு இப்பொழுது ஜீவனிருப்பது போலவே மறு பிறப்பிலும் இருக்கும். சத்தியம்பேசுவதும் வர்ணச் சிரமதர்மத்திற்கேற்ப உபகாரம்செய்வதும் கூடவா பயனற்றுப் போய்விடும்?

3, 4, 5. விலங்குகளை வதைத்து யாகஞ்செய்வதற்கு வேதம், சாஸ்திரம் ஆகியவைகளில் ஆதாரங்கிடையாது. இறந்தவர்களுக்குச் சிராத்தம்

தர்ப்பணம் ஆகியவைகள் செய்யவேண்டுமென்பது புரோகிதர்களுடைய கட்டு ரையே. ஏனெனில் வேதங்கள் முதலான சத்திய சாத்திரங்களுக்கு இது மாறாகவும், பாகவதம் முதலானவைகளைப்போன்ற புராணங்களுக்கு ஏற்றதாக வுமே இருக்கின்றன. ஆகவே நீங்கள் இவைகளை மறுக்கிறவிஷயத்தில் சொல்லவேண்டியது ஒன்றுமில்லை.

6. இருப்பது இல்லாமல்போகாது. விளங்கும் ஜீவன் அபாவமாகாது. சரீரம் சாம்பலாகிறதே தவிர ஜீவன் ஆகிறதில்லை. அது வேறு சரீரத்தை அடைகிறது. ஆதலால் வாங்கின கடனைத்திருப்பிக்கொடுக்காதவன் பெரும் பாபியாகிறான். மறுபிறப்பில் துக்கரூபமான நரகத்தையும் அடைகிறான்.

7. சரீரத்தை விட்டகன்ற ஜீவன்வேறு இடத்தையடைந்து மறு சரீ ரத்தைப்பெறுகிறது. பூர்வஜன்மம், குடும்பம் ஆகிய இவைகளுடைய ஞானம் அற்றுப் போகிறது. ஆகவே பழைய குடும்பத்திலேயே வருகிறதென்பது ஆகாதகாரியம். 8. உத்தரகிரிவை முதலியவைகள் சுய ஜீவனத்திற்காகப் பிராம்மணர்களால் செய்யப்பட்டிருந்தும், இவைகள் வேத விரோதமானபடியி னால் மறுக்கத் தகுந்ததே. 9. சாரவாகர் முதலானவர்கள் வேதாதி சத்திய சாத்திரங்களைப்படித்தாவது படிக்கக்கேட்டாவது இருந்தால், கோமாளிகள், பாதகர்கள். இராக்ஷசர்கள் ஆகியவர்களால் அவைகளாக்கப்பட்டதென்று தூஷிக்கமாட்டார்கள். மகீதரரைப்போன்ற உரையாசிரியர்கள், கோமாளிகள், பாதகர்கள், இராக்ஷசர்களென்பதில் சந்தேகமில்லை. அவர்களுடைய போ க்கிரித்தனத்தினாலேயே வேதங்களின் பேரில் பழிசுமத்தப்பட்டது. வேதங் களைத் தக்க ஆசிரியர்களுடன் கூடி சாரவாகர்கள், அபாணகர்கள், பௌத்தர் கள், சமணர்கள் ஆகியவர்கள், படிக்காமலிருந்தது வருந்தத்தக்கதேயாகும். இதனாலேயே புத்திமழுங்கிப்போய் வேதங்களைப்பற்றி மதியீனமாகப் பேசத்த வாரம்பித்தார்கள். தீயவாமமார்க்கத்தவர்களால் எழுதப்பட்ட ஆதாரமில்லாத தும், முழுப்பொய்யாயும்கேட்டுமிருக்கிற உரைகளைப்படித்து அறிவில்லாத ஆழ்ந்த பள்ளத்தாக்கில் விழுகிறார்கள். 10. சடங்களுக்கு அதிகாரியான எஜமானனின் மனைவி, குதிரையுடன்புணர்ச்சி செய்யவேண்டும். அவனு டைய பெண்களுடன் அடாதவார்த்தைகளாட வேண்டும், என்றபழக்க வழக்கங்கள் வாமமார்க்கத்தவர்கள் தவிரவேறு எவரானும் ஏற்கப்படமாட்டா தென்பதை எச்சாதாரண மனிதனும்அறிவான். இழிவான வாமமார் க்கத்தவர்களைத்தவிர வேறுயார்தான், வேதார்த்தங்களுக்கு விரோதமானதும், அருவெறுப்பானதும் ஒவ்வாததுமான இவ்வுரைகளை ஏற்பார்கள்? சாரவகர் முதலானவர்கள், யோசனையற்ற வேதங்களுடைய பழிதூற்றுகைக்கு ஆளானது மிகவும் வருந்தத்தக்கதேயாம். கொஞ்சமாவது யோசனை செய்து பார்த்திருக்கவேண்டும். சத்தியாசத்தியத்தை விசாரித்து, சத்தியத்தைப் போற்றி அசத்தியத்தை கண்டிக்கப் போதியவித்தை அவர்களுக்கு இல்லாமல் போனதிற்காக அனுதாபப் படுகிறோம்.

11. மாம்சாகாரம் வேதானுகூலமானதல்ல. வேதவாக்கியங்களைத் திருப்பி தங்களுக்கு வேண்டிய ஆதாரவை அளிக்கதக்கவாறு அவைகளுக்கு உரை எழு

தின வாமமார்க்கி ஆசிரியர்களை இராக்ஷசர்களென்றே அழைக்கவேண்டும். வாமமார்க்கி உரையாசிரியர்களும், வேதங்களைத் தக்கவாறுபடித்தோ அல்லது படிக்கக்கேழ்க்காமலோ, இருக்கிறவர்கள். அவர்கள் செய்த பாபத்திற்காக அனு பவிப்பார்கள். வேதங்களை எதிர்த்தவர்கள், இப்பொழுதும் எதிர்க்கிறார்கள். இன்னமும் எதிர்ப்பார்கள். அஞ்ஞான இருளிலகப்பட்டுக்கொண்டு இன்பத்திற் குப்பதிலாக துன்பத்தை அனுபவிப்பார்களென்பது திண்ணம். ஆகவே மனி தர்களெல்லோரும் வேதானுகூலமாய் நடந்து கொள்ளவேண்டும். மதுபா னம், மாம்சாகாரம் பரஸ்திரீகமனம், ஆகிய தீயகாரியங்களைச் செய்வதற்கா கவே வேதங்களில் கைகலந்து வாமமார்க்கிகள் அதைத் தூஷிக்கவாரம்பித்தார் கள். வேதானுகூலமாய் நடக்கிறோம் எனப் பெயர்படைத்து, இவ்வளவு அடாதகாரியங்களைச்செய்கிறதைக்கண்ட சாரவாகன், பௌத்தன், சமணன், ஆகியவர்கள் வேதங்களைத் தூற்றவாரம்பித்தார்கள். அதிலிருந்து தனியான தும் வேதவிரோத மானதும், ஈசுவரனில்லை என்னும்படியானதுமான நாஸ் திக மதம் ஒன்றையும் பரவச்செய்தார்கள். சாரவகர்முதலாயினர் வேதங்க ளுடைய மூலாதாரங்களைபடித்திருந்தால் பொய்யுரைகளைநம்பி, சத்தியவேத சமயத்திலிருந்து விலகியிருக்கமாட்டார்கள். இது வருந்தத்தக்கதே. நாசம் வரும்பொழுது புத்தியும் மழுங்கும். சாரவாகம் முதலானவைகளுக்குள்ள கொள்கைகளின் வேற்றுமைகளைச்சொல்வோம்.

1. சரீரப்பிறப்புடன் ஜீவனுடைய உற்பத்தியையும் அதனுடைய அழிவு டன் ஜீவனுடைய அழிவையும் சாரவாகர்கள் நம்புகிறார்கள்.

2. மறுபிறப்பு, விண்ணுலகம் இவைகளில் நம்பிக்கை அற்றவர்கள்.

3. பிரத்தியக்ஷப் பிரமாணத்தைத்தவிர வேறு எதையும் தள்ளிவிடுகிறார் கள். வார்த்தையாடுவதிலேயும்,வாதாடுவதிலேயும் ஒருவன் ஆனந்தமுள்ளவன் என்பதே சார்வாக வார்த்தையின் பொருளாகும். பௌத்தர்களும், சமணர் களும், நாலுவித பிரத்தியக்ஷப்பிரமாணம் அநாதிஜீவன் மறுபிறப்பு,விண்ணுல கம், முக்தி ஆகியவைகளில் நம்புகிறார்கள். சாரவாகர்களுக்கும் சமணர் களுக்குமுள்ள வேற்றுமைகள் இதுவேயாகும்.

அவர்களுக்குள்ள ஒற்றுமைவிஷயங்களாவன.

(1) நாஸ்திக நம்பிக்கை (2) வேதம், இறைவன் இவைகளைத்தூற்றல் (3) பிறமதத் துவேஷம் (4) பின் கூறப்படும் ஆறுயதனங்களில் (கர்மங்களில்) நம்பிக்கை (5) ஆதிகாரணத்தில் அவநம்பிக்கை. இவ்வாறுசாரவகர்களுடைய வழியைச் சுருங்கச் சொன்னோம். இனி பௌத்தர்களுடையதைப்பற்றி சிறிது சொல்லுவோம்.

**कार्य्यकारणभावाद्वा स्वभावाद्वानियामकात् ।**
**अविनाभावनियमो दर्शनान्तरदर्शनात् ॥**

காரணத்திற்கும் காரியத்திற்கும் இணைவிடாத சம்பந்தமுண்டென்று பௌ த்தர்கள் நம்புகிறார்கள். அதாவது காரணம் காரியத்தையும் புகட்டுகிறதாம். இவ்விதப்பிரத்தியட்ச விளக்கத்தினால் அனுமானம் உண்டாகிறது. இவ்விதமன்

னியில் உலகவியவகாரம் சரிவர நடைபெருது'' ஆகையினல் பௌத்தம் அனுமானத்தையே பெரிதுங்கருதுகிறது. இதனலேயே சாரவாகத்திலிருந்து பிரிந்துமிருக்கிறது. பௌத்தர்களில் நான்கு பிரிவுகள் உண்டு.

(1) மாத்தியமிக (2) யோகசார.

(3) சௌதந்திரிகா (4) வைபாஷிகா.

புத்தியாகிற பகுத்தறிவைக்கொண்டே நடக்கிறவன், என்பதே பௌத்தவார்த்தையின் பொருளாகும். அதாவது புத்திக்கு ஏற்றதையே எடுத்துக்கொண்டு ஏற்காததைத் தள்ளிவிடுவது.

(1) மாத்தியமிக:—எல்லாம் சூன்யம். அதாவது சூன்யத்திலிருந்தேசகல பொருள்களும் உண்டாகின்றன. முடிவில் சூன்யமாகவும் போய்விடும். நாம் காண்கிறது கேழ்க்கிறதெல்லாம் நம்முடைய உணர்ச்சிக் கருவிகள் அறிகிற வரையிலுமே. அவைகள் அறியாமலிருக்கும் பொழுது உணரும்பொருளும் சூன்யமாகிறது. உதாரணமாகச் செய்யாததற்கு முன்னல் குடங்கிடையாது. உடைந்தபின்னரும் அது இல்லாமலும் போகிறது. நாம் உணருகிற வரையிலேயே அது விளங்குகிறது. ஒரு பொருளாகிறது. ஆனல்வேறு பொருள்களில் நம்முடைய கவனம் செலுத்தப்படும்பொழுது எல்லையை விட்டு (ஆகையினல் சூன்யமாகிறது) அகலுகிறது, ஆதலால் சூன்யம் ஒரே தத்துவமே.

2. யோகசார:—மனித உணர்ச்சியைமீறினது எதுவுமில்லை. அதாவது பொருள்களெல்லாம் எண்ணத்திலேயே இருக்கின்றன. உதாரணமாக பானை இருக்கிறதென்கிற ஞானம் ஆத்மாவிலியே இருக்கின்றன. ஆகையினலேயே ஒரு குறித்த பொருளைப் பானை என்று அழைக்கிருர்கள். எண்ணத்தில் தோற்றமில்லாமல் போனல் எப்படி வார்த்தையாலதைக்கூறமுடியும்?

3. சௌதந்திரிக:— உலகிலுள்ள சகல பொருள்களுடைய இருப்பும் அனுமானத்தினலேயே புலனுகின்றன. பிரத்யக்ஷமாய் சாங்கோபாங்கமாய் தெரியக்கூடியது ஒன்றுமில்லை? தனித்தனி அம்சங்கள் மாத்திரம் பிரத்யக்ஷத்தினல் விளங்கின பொழுதிலும், முழுப்பொருளும் அனுமானத்தினலேயே சித்தியாகின்றன. இதுவே இவர்களுடைய கொள்கையாகும்.

4. வைபாஷிக:—பிரத்தியக்ஷப்பிரமாணத்தினல் பொருளொன்று புலனுகுங்கால், மனதில அப் பொருளுடைய யர்தொரு ஞானமும் ஏற்படுகிறதில்லை. உதாரணமாக நீலக்குடம் ஒன்றிருக்கிறது என்று ஒருவன் சொல்லுங்கால் பானைரூபத்திலிருக்கிற நீலப்பொருளொன்று அவனுடைய புரத்திற்கு வெளியிலிருக்கிறதென்பதாகும். இவர்களுடைய ஆசாரிய புருஷர் ஒருவரேயான போதிலும் சிஷ்யர்களின் புத்தி வித்தியாசங்களினல் நான்கு பிளவுகளேற்பட்டது. உதாரணமாகச் சூரியாஸ்தமனத்துடன் பெருமடையன் விலைமாதர்களை அடைகிருன். கற்றுணர்ந்தவனே, சத்கர்மங்களைச் செய்யவாரம்பிக்கிருன். காலமும் சமயமும் ஒன்றே. ஆனல் தங்கள் தங்களுடைய புத்திக்கேற்றவாறு இருவரும் தங்கள் தங்களுடைய காரியங்களைச்செய்கிருர்கள்.

மத்தியமீக யாவற்றையும் கணப்பொழு திருப்பதாகவே நினைக்கிறது. அதாவது புத்தி க்ஷணபங்குரமானபடியினால் மூதற்கனத்தி லறிந்த மாதிரியே ஒரு பொருள் அடுத்த தருணத்திருப்ப தில்லை. ஆகவே எல்லாம் கணப்பொழு திருப்பவைகளே. யோகாசாரம் எல்லா அனுபவங்களும் துன்பத்தில் முடிகிறதென்று போதிக்கிறது. ஏனெனில் இஷ்டபோகங்களினால் திருப்தியுண்டாகிற தில்லை. ஒன்றை யடைந்த பின்னர் மற்றொன்றை யடைய வேண்டுமென்று ஆசையுண்டாகிறது. சகல பொருள்களும் அதனுடைய இலக்ஷணங்களினால் விளங்குகிறது. பசுவினுடைய சின்னங்களினால் பசுவையும் குதிரையுடையதினால் குதிரையையும் தெரிந்துகொள்ளு கிறோம். இதுவே சௌதந்திரிகா போதிப்பதாகும். வைபாஷிகம் சூன்யம் ஒன்றையே ஏக பொருளாகக் கருதுகிறது. இதில் மாத்தியமீகத்திற்கும் வைபாஷியத்திற்கும் ஒற்றுமையுண்டு. ஆகவே பௌத்தர்களுள்ளேயே கக்ஷிபேதங்கள் பல இருக்கின்றன. முக்கியமானவைகள் இன்னான்கே யாகும்.

விடை:—எல்லாம் சூன்யமானால் சூன்யத்தை அறிகிறவர் சூன்யமாகமாட்டார். சூன்யமாயிருந்தால் சூன்யத்தை (தான் சூன்யமானபடியினால்) அறியமாட்டார். ஆதலால் சூன்யத்தை அறிகிறவர், அறியப்படும் வஸ்து ஆகிய இரண்டு பொருள்களும் விளங்க வேண்டுவது அவசியம். ஆத்மஞ் ஞானந்தவிர மீதியெல்லாம் சூன்யமே என்று யோகாசாரர்கள் சொல்லும் வண்ணம், மலையைப் போன்ற பெரிய உருவங்கள் உள்ளே யிருக்கவேண்டுமே. ஆனால் இது முடியாதகாரியம். ஹிருதயத்தில் மலையையொத்த பெரும் உருவம் எங்கனம் இருத்தல் கூடும்? மலை வெளியில் விளங்குகிறது. அதன் ஞானம் உள்ளத்திலிருக்கிறது. பிரத்தியக்ஷமாக எதுவும் தெரியவருகிறதில்லை என்று சௌதந்திரிகா கூறுகிறது. அவ்விதமிருக்குமேயானால் அநும்பிக்கையை வெளிப்படுத்துவதும், படுத்துகிறவனும் அனுமானத்தினாலேயே விளங்க வேண்டும். பிரத்யக்ஷமில்லாமலிருந்தால் " இது ஒரு பானை " என்பது சரியாகாது, 'இது பானையின் ஒரு பாகம் " என வேண்டும். ஆனால் ஒரு பாகத்தை மாத்திரம் தனியாகப்பானை என அழைத்தல் பொருந்தாது. முழுப் பொருளுமே பானையாகும். "இது ஒரு பானை" என்பது பிரத்தியக்ஷமாகும். அனுமானமாகாது. ஏனெனில் அதனுடைய பகுதிகளில் மொத்தமும் பரவியிருக்கிறது. ஆகவே பிரத்தியக்ஷமாக் மொத்தத்தையும் அறிவதினால் அதன்பகுதிகளையும் அதேவிதமாக அறிந்ததாகச் சொல்லலாம். அதாவது பகுதிகள் ஒன்று சேர்ந்தே பானையாகிறது என அறிகிறோம். வெளிப்பொருள்களைப் பிரத்தியக்ஷமாகக்காணும்பொழுது அதனுடைய அறிவு உள்ளத்தில் உண்டாகிறதில்லை, யென்று வைபாஷிகர்கள் சொல்லுவது சரியாகாது. அறிகிறவருர், அறிவும் இருந்தாலொழிய பிரத்யக்ஷமாவது அசாத்தியம். பிரத்யக்ஷமாகும்பொருள் புறத்திலிருந்த பொழுதிலும் அகத்தறிவு இருந்தாலொழிய அதனுடைய உணர்ச்சி உண்டாகாது. மேற்சொன்னபௌத்தர்களுள் நான்கு பிரிவினர்களுடைய கொள்கைகளைச்சற்று கவனிப்போம்:—

(1)பொருளும் அதனுடைய அறிவும் க்ஷணபங்குரமானதாயிருந்தால், இறந்த

கால நிகழ்ச்சிகளுடைய அறிவு உண்டாகாது. ஆனால் நாம் பார்த்ததும் கேட்டதும் ஞாபகத்திலிருக்கின்றன. எனவே அறிவு க்ஷண பங்குரம் என்பது தப்பானது.

2. துக்கம் துன்பம் ஆகியவைகளைத் தவிர வேறொன்றும்இப்பிரபஞ்சத்தில்லை யென்பதும் கொஞ்சங்கூட இன்பங்கிடையாயென்பதும் சரியல்ல.இன்பத்திலிருந்து துன்பத்தை வேறாக எண்ணமுடியாது. இரவின்முறையிலேயே பகலையும் பகலின் முறையிலேயே இரவையும் அறிவதுபோலாம்.

3. பொருள்களில் இலக்ஷணங்கள் விளங்குகிறதென்பது தப்பு. சிலசமயங்களில் விளங்குகிறது. வேறுசிலசமயங்களில் விளங்குகிறதில்லை. உதாரணமாக, வெளிச்சம் எக்காலமும் கண்ணால் காணப்படுகின்றது. ஆகவேபின் சொன்னது முன்சொன்னதின் இலக்ஷணமும், வெளிச்சமும் இலக்ஷியமும் (லக்ஷத்தினால் அறியப்படும் பொருள்) ஆகும். இலக்ஷணமாகிற கண், இலக்ஷியமாகிறவெளிச்சத்திலிருந்துதனியானது. பானையின்நிறத்திற்கும் கண்களுக்குமுள்ள முறையைக் கொண்டே இதை விளக்கலாம். (இலக்ஷியங்களில் இலக்ஷணம் இருக்கலா மென்பதைக் காட்டுவோம். முகருதலாகிய உணர்ச்சியை எழுப்புவது பிருதிவியின் இலக்ஷணமாகும். அது பிருதுவி யுடனேயே இருக்கிறது. அதிலிருந்து வேறுக்கமுடியாது. எனவே இலக்ஷியங்களிலேயே இலக்ஷணங்களிருக்கத் தேவையில்லை.

4. சூன்யத்தையே ஒரு பொருளென்பதை முன்னரே பரிசோதனை செய்து தப்பென்று காண்பித்துள்ளோம்.

सर्वस्य संसारस्यं दुःखात्मजत्वं सर्वतीर्थंकरसंगतम् ॥

பௌத்தர்கள் எத்தீர்த்தங்கரர்களை மதிக்கிறார்களோ அவர்களையே சமணர்களும் மதிக்கிறார்கள். ஆகவே இவ்விரண்டும் ஏற்றசமயமாகும். மேற்சொன்ன நால்வித நம்பிக்கைகளினாலேயே சகல (உலக) ஆசைகளிலிருந்தும் மீண்டு சூன்யரூபமான நிர்வாணத்தை அடையலாமென உறுதிகொண்டிருக்கிறார்கள். இதுவே அவர்களுடைய முக்தியுமாகும். யோகாசார வழியைச் சீடர்களுக்குப்போதித்து, குருவார்த்தைகளைப்பிரமாணமாகக் கொள்ள வேண்டுமென்பார்கள், பூர்வம், ஆசை இவைகளினாய் அநாதியான புத்தி மூடப்பட்டு பல உருவங்களையடைவதாகக் காணப்படுகிறது.

அவைகளாவன:—

रूपविज्ञानवेदनासंज्ञासंस्कारसंज्ञकः ॥

(1) கண்முதலான இந்திரியங்களினால் வர்ணம் முதலான பொருள்களை அறிவது ரூபஸ்கந்தம். (2) மானஸீக விஷயங்களின் ஊக்கத்தினுடைய ஞானமே விஞ்ஞானஸ்கந்தம். (3) ரூபஸ்கந்தம், விஞ்ஞானஸ்கந்தம் ஆகியவைகளிலிருந்து விளையும் இன்பதுன்பங்களை உணருவதே வேதனாஸ்கந்தம். (4) சொற்களின் சேர்க்கையில் நம்பிக்கை அதாவது பசு என்றவுடன் அதை குறிக்கிறவையுடன் சேர்த்துக்கொள்வதே சஞ்ஞானஸ்கந்தம். (5) ராகத்

துவேஷம் முதலான கிலேசம், பசி தாகம், அதிக ஆசை, வெறுப்பு, வீண் பெருமை, நல்லகாரியம், தீயகாரியம், முதலிய உபக்கிலேசங்கள், இவைகளே சமஸ்காரஸ்கந்தங்களாம். பௌத்தர்கள் உலகமுழுவதையும் துக்கரூபமென்றும், அதற்கிருப்பிடமென்றும், சாதகமான விடமென்றும் அதிலிருந்து மீறக்கஷ்டப்படவேண்டுமென்றும் நம்புகிறார்கள். சாவகாரர்களுக்கு இதுவேபெரும் முக்தியாகும். பௌத்தர்கள் அனுமானத்தைத்தாங்கி ஜீவனைத் தள்ளுகிறார்கள்.

देशना लोकनाथानां सत्त्वाशयवशानुगाः ।
भिद्यन्ते बहुधा लोके उपायैर्बहुभिः किल ॥

பொருள்களின் தன்மைகளையறிந்து அவைகளுடைய பேதா பேதங்களை எடுத்து உபதேசஞ்செய்து வழியைக்காண்பித்துக் கொடுத்த, ஞானி, ஜீவன் முக்தன் முதலான தீர்த்தங்கார்களுடைய உபதேசங்களில் ஒவ்வொரு புத்தனும் நம்பவேண்டும்.

गम्भीरोत्तानभेदेन क्वचिच्चोभयलक्षणः ।
भिन्ना हि दशने भिन्न शून्यताद्वयलक्षणा ॥

ஆழ்ந்தகருத்து, அடங்கின பொருள், ஆகியவைகளுடன் கூடினதும், இதற்குமுன் வெளிப்படையாகவோ சிலேடையாகவோ பலகுருமார்களால் உபதேசஞ்செய்யப்பட்டதுமான சூன்யம் முதலான விஷயங்களையும் நம்பவேண்டும்

अर्थानुपार्ज्य बहुशो द्वादशायतनानि वै ।
परितः पूजनीयानि किन्यैरिह पूजितैः ॥

துவாதசயதன பூஜையொன்றே மோக்ஷத்தை யளிக்கும். இதற்காகத் திரவியம் முதலியவைகளைச் சேமித்துப் பன்னிரண்டு இடங்களையுண்டாக்கி ஏற்றவாறு பூஜைசெய்யவேண்டும். பிறவற்றை வணங்கி பூஜைசெய்வதில் பிரயோஜனங் கிடையாது. இதுவே பௌத்தர்களுடைய மதமாகும்.

ज्ञानेन्द्रियाणि पैचवं तथा कर्मेन्द्रियाणि च ।
मनो बुद्धिरिति प्रोक्तं द्वादशायतनं बुधैः ॥

காது, கண், மூக்கு, வாய் தோல் முதலிய பஞ்ச ஞான இந்திரியங்களையும், பேசுதல், ஊர்தல், இறத்தல், ஜனித்தல் முதலிய கர்ம இந்திரியங்களையும் புத்தி, மனது இவைகளையும பூஜைசெய்தல். அதாவது மேற்கூறிய இந்திரியங்களை ஆனந்தம் பெறும் வகையில் பிரயோஜனப் படுத்தலே. இதைத்தான் அச்சார்பார் துவாதசயதன பூஜையென்று கூறுகிறார்கள்.

விடை:—உலகம் துக்கரூபமானால் ஜீவப்பிராணி எதுவும் அதிலிருக்க விரும்பாதே. ஆனால் உலகவஸ்துக்களில் அவைகள் ஆசைப்படுவதை நாம் அனுபவத்தினால் அறிகிறோம். ஆகவே உலகத்தில் துக்கமும் துன்பமும் தவிரவேறொன்றும் இல்லையென்பது உண்மையாகாது. உலகில் இன்பதுன்பம் இரண்டும் உண்டு. பௌத்தர்கள் இச்சித்தாந்தத்தில் நம்பும்பொழுது அன்

ஞகாரம் முதலியவைகளைப் புசித்து, சுகவாழ்வைத் தேடி, பிணிக்கு மருந்து முதலானவைகளை, உட்கொண்டு ஏன் சரீர ரக்ஷணத்திற்காகப் பாடுபட வேண்டும். இவைகளெல்லாம் சுகத்தையளிக்கிறதென்று நம்புவானேன். இவைகளைச் செய்கிறோம். செய்தும் துக்கத்தையும் துன்பத்தையுமே அவை அளிக்கின்றனவென நம்புகிறோம் என்று சொல்லுவார்களேயானால் அது பொருந்தாது. ஏனெனில் ஜீவன் தனக்கு ஏற்றதையே எடுத்துக்கொள்ளும் வேண்டாததைத்தள்ளி விடும். தர்மப்பழக்கம், நல்லறிவு, நல்லாருடன் பழகுதல், ஆகியவைகளெல்லாம் சுகத்தைக்கொடுக்கின்றன. எவ்வறிஞனும் இவைகளிலிருந்து துக்கமும் துன்பமும் விளைகிறதெனச்சொல்லான். பௌத்தர்களே கூறத் துணியார்கள். ஸ்கந்தங்கள் ஐந்தும் பூர்த்தியானதாகவில்லை. ஏனெனில் ஸ்கந்தங்களை விரித்துக்கொண்டேபோனால் அவை எங்கு முடியுமென்று எவரும்கூறமுடியாது. அநாதியாயும் தனித்தலைவனுயுமிருக்கிற பரமாத்மாவை மதிக்காமல் தீர்த்தங்கரர்களை உபதேசகர்களாகவும் லோகநாயகர்களாகவும் நம்புகிறார்களே. தீர்த்தங்கரர்களுக்கு உபதேசித்தவர் யாவர்? தானாகவேஅறிந்து கொண்டார்களென்றால் காரணமில்லாமல் காரியமாகாதாகையினால் அது ஒவ்வாது. அவர்கள் கூறுவதையே சரியெனக்கொண்டாலும் படிக்காமலும், படித்துக் கேட்க்காமலும், ஞானிகளுடைய சேர்க்கை சங்கமில்லாமலும், இப்பொழுது பௌத்தர்கள் ஏன் வித்வான்களாகக்கூடாது? ஆதாரமற்று புத்திக்கு விரோதமான அவர்களுடையதருக்கமும், நோய் கண்டவன் பிதற்றுவதுபோல், பொருளற்றவைகளேயாகும். உள்ள பொருள்களினுடைய சூன்யரூபத்தை பௌத்தர்கள் நம்புவார்களேயானால் சரியாகாது. ஏனெனில் இருக்கும்படியான பொருள் ஒரு பொழுதும் சூன்யரூபத்தை அடையமுடியாது. சூக்ஷ்ம காரணரூபத்தையாவது அடையமுடியும். ஆகவே இதுவும் சித்தப் பிரமையே. திரவியங்களைச் சேமித்தலே மோக்ஷத்தை யளிக்கும் என்றும் முன்கூறின துவாதசாயதன பூஜையையும் (பன்னிரண்டு வாய்களின்* பூஜை) செய்யமுடியுமென்றால் பத்து பிராணன் (பதினொன்றாவது) ஜீவாத்மா, இவைகளையும்கூட ஏன்சேர்த்துக் கொள்ளக்கூடாது? ஐம்புலன்கள், அந்தக் கரணம், ஆகியவைகளுடைய பூஜையே மோக்ஷத்தை யளிக்குமென்றால், பௌத்தர்களுக்கும் காமாதுரமானவர்களுக்கும் என்ன வித்தியாசமிருக்கின்றன. ஐம்புலன்களுடைய ஆதீனத்திலிருந்தே மீறமுடியாமலிருக்க பௌத்தர்கள் முக்தியை எவ்விதம் அடைவார்கள்? ஐம்புலன்களுடைய அடிமைகளால் முக்தி என்பது என்னவென்றுகூட ஊகிக்கமுடியாது. அறியாமையில் எவ்வளவு தூரமுன்னேற்ற மடைந்திருக்கிறார்கள்? அவர்களுக்கு நிகரானவர்கள் இவ்விஷயத்தில் எவருமே கிடையாது. வேதம் ஈசுவரன் இவைகளுக்கு விரோதமானதின் பலனேயாகும் இது. உலகமுழுவதும் துக்கரூபமானதென்று முதலில் நினைத்துக்கொண்டார்கள், பிறகு துவாதசாயதன பூஜையை உண்டு பண்ணினார்கள். இத்துவாதசாயதன பூஜை உலகத்திற்கு வெளியே யுள்ள

---

* ஐந்து கர்மேந்திரியங்கள், ஐந்து ஞானேந்திரியங்கள், மனம், புத்தி ஆக வாயில்கள் பன்னிரண்டு.

பொருள்களுக்கு மாத்திரமா? இப்பூஜைகளினால் முக்தி ஏற்படுமேயானால் கண்களைமூடிக்கொண்டு இரத்தினங்களையும் அடையலாமே. வேதங்களையும் ஈசுவரனையும் மதிக்காததினாலேயே இப்புத்திபற்றவார்த்தைகளை நம்பலானார்கள். சுகத்தைக் கோரினால் இப்பவும் வேதம் ஈசுவரன் ஆகியவைகளைத் தழுவி தங்கள் பிறப்பை புனிதமாக்கிக் கொள்ளட்டும். விவேக விலாச மென்னும் நூலில் பௌத்தர்களுடைய மதம் விரிக்கப்பட்டிருக்கிறது.

बौद्धानां सुगतो देवो विश्वं च क्षणभंगुरम् ।
आर्य्यसत्त्वाख्यययादत्वचतुष्टयमिदं क्रमात् ॥

1. பௌத்தர்களுடைய நம்பிக்கையில் நான்கு முக்கியமான தத்துவங்களாவன:—

(i) சுகததேவர் எனப்படுகின்ற புத்தரே பூஜிக்கத் தக்கவர் (ii) பிரபஞ்சம் க்ஷணபங்குரமானது (iii) மேன்மைபெற்றிருக்க, ஆடவர்களும் பெண்டிர்களும் பாடுபடவேண்டும். (iv) தத்வங்களுடைய ஞானத்தை எல்லோரும் கற்றறிய வேண்டும்.

दुःखमायतनं चैव ततः समुदयो मृतः ।
मार्गश्चेत्यस्य च व्याख्या क्रमेध श्रूयतामतः ॥

(2) இப்பிரபஞ்சம் துக்கத்திற்கு இருப்பிடம் என்று அறியட்டும். அதன் பின்னரே முன்னேற்றமடையமுடியும். அதற்கு வழிகளாவன:—

दुःखसंसारिणस्कन्धास्ते च पञ्च प्रकीर्त्तितः ।
विज्ञानं वेदनासंज्ञा संस्कारो रूपमेव च ॥

3. உலகிலுள்ளது துக்கமும் துன்பமுமே. முன் சொன்ன(ஐந்து) பஞ்சஸ்கந்தங்களை அறியட்டும்.

पञ्चेन्द्रियाणि शब्दा वा विषयः पञ्च मानसम् ।
धर्मायतनमेतानि द्वादशायतनानि तु ॥

4. ஐந்து ஞானேந்திரியம், அவைகளுடைய பொருள்கள் ஐந்து, மனம் புத்தி, அந்தக்கரணம், ஆகப் பனிரண்டும் தர்மத்தினுடைய இருப்பிடமாகும்.

रागादीनां गणो यः स्यात्समुदेति नृणां हृदि ।
अस्मात्मीयस्वभावाख्यः स स्यात्समुदयः पुनः ॥

5. மனிதனுடைய ஹிருதயத்திலுண்டாகும் ஆசை, வெறுப்பு, முதலானவைகளுக்குச் சமுதயம் என்று பெயர். ஆத்மா, அதனுடன் சம்மந்தப்பட்ட குணம், முதலானவைகளுக்கு ஆக்யம் என்று பெயர். இதிலிருந்தே சமுதயம் உண்டாகிறது.

क्षणिकाः सर्वसंस्कारा इति या वासना स्थिरा ।
स मार्ग इति विज्ञेयः स च मोक्षोऽभिधीयते ॥

6. சம்ஸ்காரங்களெல்லாம் க்ஷணபங்குரமானதே. இந்த உணர்ச்சியே புத்தர்களுடைய வழியாகும். சூன்யதத்துவத்தின்படி சூன்யமாவதேமோக்ஷ மாகும்,

**प्रत्यक्षानुमानं च प्रमाणं द्वितयं तथा ।**

**चतुःप्रस्थानिका बौद्धः ख्याता वैभाषिकादयः ॥**

7. பிரத்தியக்ஷம், அனுமானம் இவை இரண்டு பிரமாணங்களையே நம்புகிறார்கள். இவைகளில் நான்குவிதமுண்டு (i) வைபாஷிகம் (ii) சௌதந்திரிகம் (iii) யோகாசாரம் (iV) மாத்யமீகம்.

**अथो ज्ञानान्वितो वैभा केण बहुमन्यते ।**

**सौत्रान्तिकेन प्रत्यक्षग्राह्योऽर्यो न बाह्र्मतः ॥**

8. நம்முடைய ஞானத்தில் விளங்கும் பொருள்களை யெல்லாம் இருப்பதாகவே வைபாஷிகர்கள் நம்புகிறார்கள். ஏனெனில் ஞானத்திலில்லாததை இருப்பதாக நினைப்பது சித்தர் (அதாவது புத்தர்) களால் முடியாத காரியம். சௌதந்திரிகளோ அகப்பொருளாக யாவற்றையும் நினைக்கிறார்கள். வெளியிலிருப்பதாக நினைக்கிறதில்லை.

**आकारा सहिताबुद्धिर्योगाचारस्य संमता ।**

**केवलां संविदां स्वस्थां मन्यन्ते मध्यमाः पुनः ॥**

9. யோகாசாரர்கள் உருவத்துடன் கூடினதும் விஞ்ஞானத்துடன் கூடினதுமான புத்தியில் நம்புகிறார்கள். மாத்யமீகர்களோ தங்களுடைய ஞானத்திலேயே பொருள்கள் விளங்குவதாக நினைக்கிறார்கள். பொருள்கள் வெளி உலகிலிருப்பதாக நினைப்பதில்லை.

**रागादि ज्ञानसन्तानवासनाच्छेदसम्भवा ।**

**चतुर्णामपि बौद्धानां मुक्तिरेषा प्रकीर्त्तिवा ॥**

10. இன்பம் துன்பம் முதலிய சித்த விகாரங்கள் மனதிலில்லாமல் ஒய்வடைவதையே நான்கு வகையான பௌத்தர்களும் முக்தியெனத் திடமாய் நம்புகிறார்கள்.

**कृत्तिः कमण्डलुर्मौण्ड्यं चीरं पूर्वाह्णभोजनम् ।**

**संघो रक्तांवरत्वं च शिश्रिये बौद्धाभिक्षुभिः ॥**

11. மான்தோல் (ஆசனமாக) உபயோகித்தல், கப்பரையை ஜலம் ஏந்திக்கொள்ளப்பிடித்தல், தலை, தாடி மீசை இவைகளைச் க்ஷௌரம் செய்துகொள்ளல் மர உடைதரித்தல், காலை ஒன்பது மணிக்கு முன்னரே புசித்தல், தனித்தில்லாமலிருத்தல், சிகப்புவர்ண வஸ்திரங்களைத்தரித்தல் இவைகளெல்லாம் பௌத்தசாதுக்களுடைய நடையாகும்.

விடை:— (I) புத்தனென்னப்படுகிற சுகத்தேவனே, பௌத்தர்களுடைய தேவனாயிருந்தால் அவருடைய குரு யார் (என அறிய விரும்புகிறோம்.)

6. பிரபஞ்சம் க்ஷணப்பங்குரமானதாயிருந்தால், வெகுநேரம் சென்றுஒரு வஸ்துவை ஒருவன் பார்க்குங்கால் தான் முன் பார்த்த பொருளிதுதானென்று ஞாபகம் வரக்கூடாது. அப்பொருளும் அங்கிருக்கக்கூடாது. ஆகவே ஒருவருக்கும் அதனுடைய ஞாபகம் இருக்கக்கூடாது. பிரபஞ்சம் க்ஷணபங்குரமானதென்று பௌத்தர்கள் உண்மையாக நம்புவார்களேயானால் அவர்களுடைய மோட்சமும் அவ்விதமே இருக்கும்

(8) உணரப்படும்படியான பொருள்களெல்லாம் ஞானத்துடன் கூடினதாயிருக்குமேயானால்,ஜடப்பொருள்கள்கூடஞானத்துடன்கூடினதாயிருக்கவேண்டும். ஐம்புலன்களால் அறியக்கூடிய வஸ்துக்கள் இல்லாததாக எவ்விதம் இருக்கும் ?

(9) புத்தி உருவத்துடனிருந்தால் கண்களுக்குப் புலப்படவேண்டுமே. வெளியுலகம் நம்முடைய அறிவில் மாத்திரம் இருந்து உண்மையான உருவமற்று, இருக்கிறதென்றால் சரியாகாது. ஏனெனில் நம்முடைய அறிவில் அமரக்கூடிய பொருள்கள் இல்லாமல், ஞானமுண்டாகாது.

(10) இன்பதுன்ப முதலானவைகளுடைய ஒய்வே முக்தியாகுமானால் சுஷுப்தியும் (கனவில்லாத தூக்கம்) முக்தியாகுமே? இவ்விதம் நினைப்பது அறிவிற்கு விரோதமானபடியினால் ஏற்றுக்கொள்ளத்தக்கதாகாது.

பௌத்தர்களுடைய கொள்கைகளையும் நம்பிக்கைகளையும் சுருங்கச் சொன்னோம்.அறிவாளர்கள் இதைப்பார்த்தே இவர்களுடைய வித்தை மதம் எல்லாம் எவ்விதமானது என்று தெரிந்துகொள்ளக்கூடும். சமணர்களும் இதில் நம்புகிறார்கள்.

## சமணமத விசாரணை.

பிரகரணரத்னாகரம், முதல்பாகம், நயசக்கிர சாரத்தில் எழுதப்பட்டிருப்பதாவது: பௌத்தர்கள் எப்பொழுதும் நான்குவிதமான அஸ்திவாரத்தை அங்கீகரித்துக்கொண்டிருக்கிறார்கள்:—

(1) ஆகாசம் (2) காலம் (3) ஜீவன் (4) புத்கல (கணிசமான அணுக்கள்) சமணர்கள் ஆறுவகைகளில் நம்புகிறார்கள்.

1. தர்மாஸ்திகாயம் (2) அதர்மாஸ்திகாயம் (3) ஆகாசாஸ்திகாயம் (4) புத்கலாஸ்திகாயம் (5) ஜீவாஸ்திகாயம் (6) காலம்.

இவ்வாறில் காலத்தை அஸ்திகாயமாக (அஸ்திபாரம்) கொள்ளுவதில்லை. பழக்கவழக்கத்தில் அஸ்திகாயமானபொழுதிலும்உண்மையாகஅதுஒன்றுகாது.

(1) (அசையினுடைய வேற்றுமைகளினால் மாறுதலை அடைகிறது) இம்மாறுதலின் காரணத்திற்கு ஆதாரவாயிருக்கும் புத்கலத்திலும் ஜீவனிலும் இருக்கிறதே தர்மாஸ்திகாயமாகும். கணக்கற்ற உலகங்களிலும் பிரதேசங்களிலும் எல்லையற்று அது பரவி யிருக்கிறது.

(2) ஜீவனிலும், அமைதியினால் மாறுதலையடையும் புத்கலத்திலும், அமைதியை ஆதரிக்கும் அஸ்திவாரமே அதர்மாஸ்திகாயமாகும்.

(3) எல்லாப்பொருள்களுக்கும், இருப்புக்களுக்கும் வெளியேறுதல், பிரவேசித்தல், அமிழ்தல் முதலியவைகளை உடைய ஜட அணுக்களுக்கு ஆதரவாயுள்ள சர்வவியாபகமான அஸ்திபாரமே ஆகாசமாகும்.

4. காரணரூபமே புத்தகலம். அது சூக்ஷமமானது, நித்தியமானது, சாதாரணமானது. உருசி, வர்ணம், வாசனை முதலான காரியங்களால் அதை அறியவுங்கூடும். பெருக்கலுக்கும் சிதைவுக்கும் அது உட்பட்டது.

5. ஜீவன் உணர்ச்சிக்கு இருப்பிடமான மூலமாகும். ஞானத்தை அறிவதற்கு உபயோகமாகும். கணக்கற்றமாறு தல்களினால் பாதிக்கப்படுகிறது. கர்த்தா போக்த்தா (அனுபவிக்கிறவன்) இரண்டும் அதுவேயாகும்.

6. மேலே சொன்ன பஞ்சாஸ்திகாயங்களும் சமீபத்திலிருக்கிறதா, புதிதானதா, பழமையானதா, என்பதைக்குறித்துக்காட்டுவதும் நிகழ்காலத்தில் நடக்கிறதை எல்லாம் செய்வதுமே காலமாகும்.

விடை:— அஸ்திவாரங்களை ஒவ்வொரு காலத்திலும் புதிபதாக சமணர்கள் நம்புவது சரியாகாது. ஏனெனில் ஆகாசம், காலம், ஜீவன், அணுக்கள் ஆகியவைகள் ஒருபொழுதும் புதியதாகாது, பழமையானது மாகாது. இவைகள் அநாதியானபொருள்கள். காரணரூபத்தினால் அழிவற்றதாகும், இவ்விதமிருக்க அவைகளைப் புதியதென்றும் பழையதென்றும் எவ்விதம் கூறமுடியும்? சமணர்களுடைய (மேற்கூறின ஆறு அஸ்திபாரங்களில்) நம்பிக்கையும் தப்பானதே. ஏனெனில் தர்மா தர்மங்கள் ஒரு பொழுதும் அஸ்திவாரமாகாது, இவைகள்(ஜீவாஸ்திகாயத்தினுடைய)குணங்களேயாகும். ஆகாசம் பரம அணு ஜீவன், காலம் இந்நான்கையுமே நம்பியிருந்தால் மேலாயிருந்திருக்கும். வைசேஷிக சாத்திரத்தில் கூறப்பட்டுள்ள ஒன்பது அஸ்திவாரங்களும் சரியானது. அவைகளாவன்:—பிருதிவி முதலிய ஐந்துதத்துவங்கள், காலம், இடம், ஆத்மா மனம். இவ்வொன்பதையும் தனித்தனியானதென்று அறிந்திருக்கிறார்கள். ஜீவனை மாத்திரம் சேதனமாகமதித்து ஈசுவரனை மதிக்காமலிருப்பது பௌத்த சமணர்களுடைய பக்ஷபாதமே யாகும்.

**சப்த** (ஏழு) பங்கங்கள் **ஸ்யாதவாதம்** என்று பௌத்தர்களும், சமணர்களும் மதிக்கிறவைளாவன:—

1. பொருள் ஒன்றினுடைய இருப்பைத்திடப்படுத்துவது முதல் பங்கமாகும். உதாரணமாக "பானை இருக்கிறது" என்னுங்கால் அதனுடைய இருப்பை உறுதிப்படுத்தி இல்லாமலிருப்பதை ஒதுக்குகிறோம். 2. பொருளொன்றின் இல்லாதிருத்தலைத் திடப்படுத்துவது இரண்டாவது பங்கமாகும். பானை இல்லை என்னும் பொழுது அதன் இருப்பைத்தள்ளுகிறோம். 3. பொருள் ஒன்றின் இருப்பை உறுதிப் படுத்தி, இருக்கிறதிலிருந்து அது வேறானதில்லை என்று சொல்லுவது மூன்றாவதாகும். "பானை இருக்கிறது. 'அது துணித்துண்டு ஆகாது'' என்னும் பொழுது பானையின் இருப்பைச்சொல்லி அது துணித்துண்டில்லையென்கிறோம். முதல் இரண்டிற்கும் இதற்கும் பேதமுண்டு, 4. பொருளின் பாவத்தை ஸ்தாபித்து, மறு பொரு

ளாக அதேவகையின் வேறுபொருள் என்னும்பொழுது அதனுடைய பாவத்தைத் தள்ளுவதுமே நான்காவது பங்க மாகும். உதாரணமாக "பானையிருக்கிறது. ஆனால் இரண்டாவதாக இல்லை" எனுங்கால் இருத்தல் இல்லாதிருத்தல் இரண்டையும் ஒருதடவையில் சொல்லுகிறோம். 5. இல்லாததை உண்டு என்று சொல்லியழைப்பதே ஐந்தாவதாகும். உதாரணமாகப்பானையைத் துணி (துண்டு) என்பது. கட (பானை) த்தினுடைய கடபனை (அதுகுடமாயிருத்தலை) ஸ்தாபிப்பதே ஏற்றதாகும். கடபனை துணித் துண்டம் என்று தாபிப்பதுமாறுகும். 6. பானை இல்லாதிருத்தலைச் சொல்லாமலிருப்பது சரி, இருப்பதைச் சொல்லுவதும் சரியானது. பொருள் எதுவாக இல்லையோ அதை இல்லை யென்பதும், எதுவாக இருக்கிறதோ அதை இருக்கிறதென்றும் சொல்லுவதே ஆறுவது பங்கமாகும், 7. சொல்லுவதற்கு ஆசையுண்டு அது இல்லை. பானையென்றழைக்கவும் தகுதியானதன்று. இதுவே ஏழாவது பங்கமாகும்.

**स्यादस्ति जीवोऽयं प्रथमो भंगः ॥१॥ स्यान्नास्ति जीवो द्वितीयो भंगः ॥ स्यादवक्तव्यो जीवस्तृतीयो भंग ॥३॥ स्यादस्ति नास्ति नास्तिरूपो जीवश्चतुर्थो भंगः ॥४॥ स्यादस्ति अवक्तव्यो जीवः पंचमो भंग ॥ स्यान्नास्ति अवक्तव्यो जीवः षष्ठो भंगः ॥६॥ स्यादस्ति नास्ति अवक्तव्यो जीव इति सप्तमो भंगः ॥७॥**

1. ஜீவனிருக்கிறது. ஆனால் ஜடப்பொருள்களில்லை என்பதே முதல் பங்கமாகும். 2. ஜடப்பொருள்களில் ஜீவனில்லை யென்று உறுதிப்படுத்துவதே இரண்டாவது பங்கமாகும். 3. ஜீவன் விவரிக்கதக்கதல்ல என்று உறுதிபடுத்துவதே மூன்றுவது பங்கமாகும். 4. ஜீவன் சரீரமெடுக்கும்பொழுது வெளிப்படுகிறதென்றும், சரீரத்திலிருந்து பிரியும்பொழுது தெரியாமல் போகிறதென்றும் சொல்லுவது நான்காவது பங்கமாகும் 5. ஜீவனுண்டு ஆனால் விவரிக்க முடியாது என்பதே ஐந்தாவது பங்கமாகும் 6. பிரத்தியக்ஷ பிரமாணங்களினால் ஜீவன்வெளியாகிறதில்லையென்பதும் புலப்படுகிறதில்லை யென்பதுமே ஆறுவது பங்கமாம். 7. ஜீவனிருக்கிறது ஏனெனில் அனுமானத்தினால் அறிகிறோம். அது இல்லை; ஏனெனில் புலப்படுகிறதில்லை. மாறமுடியாததாக இல்லை. ஆனால் அடிக்கடிமாறுகிறது. அது இருக்கிறதுமில்லை. இல்லாததுமில்லை. உள்ளதுமில்லை. இல்லாததுமில்லை. காரியமுமில்லை. இதுவே ஏழாவது பங்கமாம். இவ்விதமே நித்தியமானவும் அநித்தியமானவும் சப்தபங்கங்கள் இருக்கின்றன. அதனுடைய சாதாரணகுணம், சுவபாவம், சிறந்தகுணம் சுபாவம் மாறுதல் (அவைகளில் ஏற்படுகிற) இவைகளைக்கொண்டு ஒவ்வொரு பொருளினுடைய சப்தபங்கிகளை அறியலாம். இவைகளே பௌத்தர்களுடையவும் சமணர்களுடையவும் சப்தபங்கிகளும் ஸ்யாதவாத நியாயங்களுமாகும்.

விடை:— அனன்யபாவம், சாதர்மியம் (ஒற்றுமை) வைதர்மியம் (வேற்றுமை) இவைகளுடைய உதவிகொண்டு மேற்சொன்னவைகளெல்லாம் கூறலாம்

இத்தகைய எளியசொற்களை ஒதுக்கிவிட்டு சுற்றுனபேச்சுகளைக் கையாளுவது ஒன்றுமறியாதபேதைகளை ஏமாற்ற வேண்டும் என்கிற எண்ணத்துடனேயே தவிர,வேறெஒருஎண்ணத்துடனுமில்லை.கவனியுங்கள் ஜீவன் அஜீவனு? ஜீவனில்லாததாக இராது. அஜீவனில் ஜீவனுடைய பாவம் உண்டாகாது. ஜீவனும் சடத்தினுடைய இருப்பும் இருக்கிறபடியினுலேயே சாதர்மியமும், சேதனமும் ஜடமும், இருக்கிறபடினுலேயே வைதர்மியமும் முறையே ஒலிக்கின்றன. அதாவது ஜீவனில், சேதனமிருக்கிறது. ஜடத்தனம் இல்லை. (பலபொருள்களின்) குணகர்ம ஸ்வபாவத்திற்கு ஏற்றவாறு ஒற்றுமைவேற்றுமைகளை ஆராய்ச்சி செய்வதினுலேயே இவர்களுடைய சப்தங்கிகளும் ஸ்யாதவாதமும் எளிதிலேயே விளங்கும். இவ்விதமிருக்க சுற்றுச் சுழலானவும் அர்த்தமற்றதுமான இவைகளைக் கையாளுவானேன்? அற்ப விஷயங்களில் நம்பிக்கை மாறுதல்கள் இருந்தபொழுதிலும் பௌத்தர்களும் சமணர்களும் சப்தபங்கி ஸ்யாதவாத ஆகியவைகளில் நம்புகிருர்கள்.

இனி சமணசமயத்தைப் பற்றியே பேசுவோம்.

**चिदचिद्द्वे परे तत्त्वे विवेकस्तद्विवेचनम् ।**
**उपादेयमुपादेयं हेयं हेयं च कुर्वतः ॥१॥**

சமணர்கள், சித், அசித் அதாவது சேதனம், ஜடம் என இரண்டு சத்துக்களில் மாத்திரமே நம்புகிருர்கள். ஒன்றிலிருந்து மற்றொன்றை யறிவதே விவேகமெனப்படும். ஏற்றுக்கொள்ளவேண்டியதை ஏற்றுக்கொண்டு தள்ள வேண்டியதைத்தள்ளுகிறவனே விவேகி.

**हेयं हि कर्तृरागादि तत् कार्य्यमविवेकिनः ।**
**उपादेयं परं ज्योतिरुपयोगैकलक्षणम् ॥२॥**

காமக்குரோதங்களிலிருந்து மீறின பிரபஞ்ச கர்த்தாவான சர்வேசுவரன் உலகத்தைஉண்டுபண்ணினுனென்கிற அவிவேகிகளுடைய மதத்தைவிட்டு, யோகப் பழக்கத்தினுல் அறியக்கூடிய பஞ்சேந்திரிய ஸ்வரூபமான ஜீவனை ஏற்றுக் கொள்ளுவதே ஏற்றதாகும். ஜீவனைத்தவிர இரண்டாவதான சேதன தத்துவ ஈசுவரனை நம்புகிறதில்லை. அநாதியானவும் பரிபூரணமுமான இறைவனெருவனிருப்பதாகச் சமணர்களும் பௌத்தர்களும நம்புகிறதில்லை. ராஜ சிவப் பிரசாத், தன்னுடைய இதிகாச திமிர நாசக் என்னும் நூலில் இரண்டேபெயர்கள் சமண,பௌத்த,உண்டென்கிருர். இவையிரண்டும் சமானுர்த்தமுள்ள பதங்களே. ஆனுல் பௌத்தர்களில் சிலர் வாமமார்க்கிகள். மாம்சாகாரமும் மதுபானமும் செய்வார்கள். இவர்களுக்கும் சமணர்களுக்கும் பேதம் உண்டு.

மகாவீர, கௌதம கர்தார்கள் (கணங்களுடைய தலைவர்) இவர்களைப் பௌத்தர்கள் புத்தர் என்றும், சமணர்கள், கர்தர், ஜினவர், என்றும் முறையே அழைக்கிருர்கள். பரம்பரையாய் சமணசமயத்தைச் சேர்ந்த ராஜசிவ பிரசாத், இதிகாசதிமிர நாசக், என்றும் நூலின் மூன்றுவது அத்தியாயத்தில் சங்கராசாரியாருக்கு ஒராயிரவருஷங்களுக்குமுன் ஜீனர் இருந்ததாகச்

சொல்லுகிறார். பாரதவருஷம் பூராவும் பௌத்த அல்லது சமணசமயம் பரவியிருந்ததாம். மேலும் அவர் சொல்லுவதாவது "கணதர், மகாவீர, கௌதம சுவாமிகளுடைய காலத்திலிருந்து சங்கரசுவாமிகளுடைய காலம்வரையில் பாரதவருஷத்திலிருந்ததும், அசோகர், சாம்பிரதிமுதலான சக்ரவர்த்திகளால் நம்பப்பட்டும் வந்த வேதவிரோதமான மதத்தையே, பௌத்த (மதம்) என்னும்வார்த்தையினால் அறிகிறோம். சமணமதமும் கூடச்சேர்ந்ததே. ஜினவிலிருந்துண்டான ஜயின சமண பதமும், புதவிலிருந்துண்டான பௌத்தபதமும் ஒரே பொருள் உள்ளவைகளே. இவ்விருபதங்களுக்கும் ஒரே பொருள்தான் என்று அகராதியில் கூறப்பட்டிருக்கிறது. இருவரும் (சமணர்கள், பௌத்தர்கள்) கௌதமரை (புத்தரை) மதிக்கிறார்கள். புத்தர்களுடைய தீபவம்சம் போன்ற புராண நூல்களில் சாக்கியமுனி கௌதம புத்தரை மகாவீரன் என்ற பெயரைக் கொண்டும் அழைக்கின்றது. எனவே அவருடைய காலத்திலாவது இவ்விரண்டும் ஒன்றாகவே இருந்ததென்பது தெளிவாகிறது. அயல் நாட்டவர்கள் பௌத்தன் என்கிற பெயரையே கையாண்டிருக்கிறபடியினால், கௌதமருடைய மதத்தவர்களைச் சமணர்களென்று சொல்லாமல் புத்தர்களென்றே கூறியுள்ளோம்"

सर्वज्ञः सुगतो बुद्धो धर्मराजस्तथागतः ।
समन्तभद्रो भगवान्मारजिल्लोकजिज्जिनः ॥
षडभिज्ञो दशबलोऽद्वयवादी विनायकः ।
मुनीन्द्रः श्रीघनः शास्ता मुनिः शाक्यमुनिस्तु यः ॥
स शाक्यसिंह सर्वार्थः सिद्धश्शौद्धोदनिश्च सः ।
गोतमश्चार्कबन्धुश्च मायादेवी सुतश्च सः ॥ அமரகோசம்* 1,1,8,9,10.

சர்வஞ்ஞ, சுகத, புத்த, தர்மராஜ, ததாகத, சமந்த, பத்திர, மராஜித், லோகஜிதே, ஜின, என்று அவருடைய நாமங்கள் பல. புத, ஜின, அல்லது பௌத்த ஜைனி, இவைகள் ஒரே பெயரா? அல்லது வேறுபட்டவைகளா? என்று இப்பொழுது கூட விளங்கவில்லை. புத, ஜின, இரண்டும் ஒருவருடைய பெயரே என்று சொல்லுவதில் அமர்சிங் கூட வழுவிவிட்டாரா? அறிவில்லாத சமணர்களுக்குத் தங்களுடைய சமயத்தைப்பற்றியுந் தெரியாது. பிறருடையதைப் பற்றியுந் தெரியாது. துராபிமான மயக்கத்தினால் மதியீனமாய்ப் பேசுகிறார்கள். அவர்களிலே கற்றுணர்ந்தவர்கள் புத்த, ஜின, பௌத்த, ஜைன, இவ்விரண்டுகளையும் ஒன்றானதென்றே நன்கறிவார்கள். இதைப்பற்றி கொஞ்சமேனும் சந்தேகங் கிடையாது.

ஜீவனே பரமேசுவரனாகிறதென்றும், தீர்த்தங்கரர்கள் முக்தியைப்பெற்று பரமேசுவரனாய் விட்டார்களென்பதுமே சமணர்களுடைய உறுதி. அவர்கள் அநாதி பரமேசுவரனில் நம்புகிறதில்லை. சர்வஞ்ஞ (எல்லாமறிந்தவர்) வீத

* இது ஒரு பெரிய வடமொழி அகராதியாகும். இதை ஆக்கினவர் சமண சமயத்தைச் சார்ந்த அமர்சிங் என்பார்.

ராக (ஆசைமுதலியவைகளிலிருந்து மீறினவர்) அர்க்கன் (பூஜிக்கத்தகுந்தவர்) கேவலி (காப்பாற்றப்பட்டவர்) தீர்த்தங்கிருத் (பரிசுத்தமடைந்தவர்,) ஜின்(ஜெயித்தவர்) ஆக இவைகள் நாஸ்திகர்களுடைய தேவர்களின் பெயர்களாகும். ஆதி தேவனுடைய ஸ்வரூபத்தைக்குறித்து சந்திர சூரி என்பவர் " ஆபத் நிச்சயாலங்கார " என்னும் தன்னுடைய நூலில் எழுதுவதாவது:—

सर्वज्ञो वीतरागादिदोषस्त्रैलोक्यपूजितः ।
यथा स्थितार्थवादी च देवोऽर्हन् परमेश्वरः ॥

1. ராகத்துவேஷங்களிலிருந்து மீறினவர். இவ்வுலகத்திலேயும் பூஜிக்கத்தகுந்தவர். உள்ளவாறே பொருள்களைக்கூறுபவர், சர்வஞ்ஞர்; தக்க தேவன் இவரே பரமேச்வரர்.

सर्वज्ञो दृश्यते तावन्नेदानीमस्मदादिभिः ।
दृष्टो न चैकदेशोऽस्ति लिङ्गं वा योऽनुमापयेत्

2. தௌதாதித்தில் சொல்லுவதாவது; இச்சமயத்தில் பரமேசுவரனைப் பார்க்க முடியாதானபடியினால் எச்சர்வஞ்ஞமான அநாதி பரமேவசுரனும் பிரத்தியக்ஷமாக ஆகிறதில்லை.

न चागमविधिः कश्चिन्नित्यसर्वज्ञ बोधकः ।
न च तत्रार्थवादानां तात्पर्यमपि कल्पते ॥

3. ஈசுவரன் பிரத்யக்ஷப்பிரமாணங்களினால் வெளியாகாமலிருக்க, அநுமானத்தினாலும் ஆகமாட்டார்- ஏனெனில் ஒருவிடத்தில் பிரத்யக்ஷமாகாமல் அனுமானமாகாது. அநாதியாயும் சர்வஞ்ஞமாயுமுள்ள பரமாத்மாவுடைய இருப்பு வாய் வார்த்தையினால் கூட வெளியாகாது. இம்மூன்று *பிரமாணங்களும் பிரயோசனமற்றதாயிருக்க, அர்த்தவாதம் ஆதி நிந்தை பரகிருதி (ஜீவிய சரித்திரம்) இதிகாசம் (சரித்திரம்) இவைகளால் யாது பிரயோஜனம்?

न चान्यार्थप्रधानैस्तैस्तदस्तित्वं विधीयते ।
न चानुवादितुं शक्यः पूर्वमन्यैरबोधितः ॥

4. (வடமொழியிலுள்ள) பஹுவ்ரிஹீ; சமாசத்தைப்போல் பரமாத்மாவின் இருப்பை மெய்ப்பிக்கமுடியாது. உபதேசகர்களிடமிருந்து ஈசுவரனைப் பற்றிக் கேழ்க்காமல் எவ்விதம் உறுதி கூறமுடியும்?

விடை:—அநாதி ஈசுவரன் ஒருவரில்லாமலிருந்தால் உங்களுடைய அர்ஹ தேவதையின் பெற்றோர்களுடைய சரீரத்தைச்சிருஷ்டித்தது யார்? ஒத்த பரிமாணம், பலம் முதலானவைகளுடன் கூடினதும் சக்தியையுடையதுமான சரீரத்திற்குச்சகலஅவயவங்களையும் சேர்த்துவைக்க கர்த்தா ஒருவன் அவசியமாய்வேண்டும்? ஏனெனில் ஜடப்பொருள்களானபடியினால் இவ்வளவுநேர்த்தியான கட்டுடன் கூடின சரீரம் தானாகவே வெளியாகமுடியாது. அதனுடைய பகுதிகளுக்கெல்லாம் சுயமாகவே ஒன்று சேரும் சக்திகிடையாது. ராகத்துவேஷமுதலான சித்தவிகாரங்களுடன் கூடினபிறகு, அதிலிருந்து மீறினவன்

* மூன்றாவது அத்தியாயத்தில் இதை விளக்கியுள்ளோம்.

ஈசுரவனுகமாட்டான். ஏனெனில் எக்காரணத்தினுல் அது ராகத்துவேஷங்களி லிருந்து மீறி முக்தியைபெருகிறதோ அது பிரயோஜன மற்ற தாகிறது. அத னுடைய காரியமான முக்தியும் அநித்தியமாகிறது. அற்பனும், அற்பஞ்ஞு னும் ஒரு பொழுதும் சர்வவியாபகனுயும் சர்வஞ்ஞனுயுமாகமுடியாது? ஜீவ னுடைய ஸ்வரூபம் எல்லேக்கும் கட்டுக்கும் உட்பட்டகுணகர்ம சுபாவத்து டன் கூடினபடியினுல் சகல கலேகளேகளுடைய ஞானத்தை அதனுல் புகட்ட முடியாது? எனவே உங்களுடைய தீர்த்தங்கரர்களும் பரமேசுவரனுக முடி யாது?

2. பிரத்தியக்ஷமானவைகளே மாத்திரம் நம்பி அதற்கு மாருனவைகளே நம்புகிறதில்லேயா? காதினுல் உருவத்தையும் கண்ணினுல் சப்தத்தையும் உணரமுடியாது. அநாதியான சர்வேசுவரனேக்காண சத்தமான அந்தஃகரணம் ஞானம்,யோகப்பியாசம் ஆகியவைகளேவேண்டிய சாதனங்களாகும். பரிசுத்த மான ஆத்மாவே பரமாத்மாவைப் பிரத்யக்ஷமாகக் காண்கிறது. அறியாமல் வித்தையுடைய பிரயோசனத்தைக்கொள்ள முடியாதாதலால் யோகாப்பி யாசம், விஞ்ஞானம் ஆகியவைகளன்னியில் பரமாத்மாவைக் காணமுடியாது. பிரிக்கமுடியாமல் இணேக்கப்பட்டிருக்கிற அதனுடைய உருவம் முதலான குணங்களேப்பார்த்து அறிவதனுல் பூமி பிரத்தியக்ஷமாவதுபோல் பிரபஞ்சக்தி யினுடைய அதியற்புதசிறப்புகளேக்காணுங்கால் பரமாத்மாபிரத்யக்ஷமாகிருர். பாபகாரியங்களேச் செய்யுங்கால் அச்சமயம், வெட்கம், சந்தேகம், ஆகியவை நம்முடைய மனதில் உதிக்கிறது. இவைகள் அந்தர்யாமியாயிருக்கும் பர மாத்மாவினுல் ஏவப்படுகின்றன. எனவே பரமாத்மா பிரத்தியக்ஷமாகிருர்.

3 பிரத்யட்சப் பிரமாணம், அனுமானம், இரண்டும் சரியாயிருக்க, அநாதி யாயும் சர்வஞ்ஞுமான பரமாத்மாவைத் தாங்க சப்த பிரமாணமும் ஏற்றதே யாகும். இப்பிரமாணங்களெல்லாமிருக்க பரமேஸ்வரனுடைய குணங்களேத் துதிப்பதும் சரியானதேயாம். ஏனெனில் நித்தியமான பொருளாயிருக்க அத னுடைய குணகர்மசுபாவங்களும் நித்தியமானதே. எனவே அதைப்புகழுவதி லிருந்து நம்மைத்தடுப்பது ஒன்றுங் கிடையாது.

4. கர்த்தாவன்னியில் காரியம் ஒன்றும் முடியாது. அதுபோலவே இப் பெருங்காரியம்—பிரபஞ்சம்—கர்த்தாவன்னியில்பிரகாசிக்காது. இவ்விதமிருக்க முழு முட்டாள் கூட அவருடைய இருப்பில் நம்பாமலிருக்க மாட்டான். உப தேசகர்களிடமிருந்துஅறிந்தபின்னர் பரமாத்மாவை உறுதிப்படுத்துவது சுலப மானதே. எனவே பிரத்யக்ஷ பிரமாணங் கிடையாதெனக் கூறி ஈசுவர னில்லே யென்று சொல்லுவது சமணர்களுக்கு ஒவ்வாத காரியமாகும்.

**अनादेरागमस्यार्थो न च सर्वज्ञ आदिमान्।**

**कृत्रिमेण त्वसत्येन स कथं प्रतिपाद्यते ॥**

வினு:—1. அநாதிசாஸ்திரத்தை ஆக்கப்பட்டதெனல் முடியாது. ஆகவே அநாதியில்லாததொருநூல் நம்பமுடியாது. சர்வஞ்ஞமான ஈசுவரனேக் குறித்து எவ்விதம் உரைக்கும்?

अथ तद्वचनेनैव सर्वज्ञोऽन्यैः प्रदीयते ।
प्रकल्पेत कथं सिद्धिरन्योऽन्याश्रययोस्तयोः ॥

2. தன்வார்த்தையினுலேயே பரமேசுவரன் வெளியானுல் அநாதி ஈசுவரனுல், அநாதி சாஸ்திர சித்தியும், அநாதிசாஸ்திரத்தினுல் அநாதி ஈசுவரசித்தியும் முறையே உண்டாகின்றன. இது* அன்யோன்யாசிரியகுற்றத்திற்குள்ளாகிறது.

सर्वज्ञोक्ततया वाक्यं सत्यं तेन तदस्तिता ।
कथं तदुभयं सिध्येत् सिद्धमूलान्तराहते ॥

3. சர்வஞ்ஞன் சொன்னதைக்கொண்டு வேதவாக்கை நீங்கள் சத்தியமாக நம்பும்பொழுது, அதே வேதப்பிரமாணத்தைக் கொண்டு, கடவுள் இருக்கிருரென்பதை எவ்விதம் நிரூபிக்கமுடியும்? பரமேசுவரன் இருக்கிருரென்பதற்கும் வேதம் அவருடையவாக்கேயென்பதற்கும் வேருன தனிப்பிரமாணமொன்றை நீங்கள் காட்டவேண்டும். எனவே பிரமாணத்திற்கு முடிவே ஏற்படாது.‡

விடை:—வேதங்களில் நம்புகிற நாங்கள் பரமேசுவரன், அவருடைய குண கர்மசுபாவம் ஆகியவைகளை அநாதியாகக் கருதுகிருேம். அநாதிப்பொருள்களை அன்யோன்யாசிரிய தோஷம் பாதிக்காது. காரணத்தினுல் காரியமும், காரியத்தினுல் காரணமும் வெளியாகிறமாதிரி காரியத்தில் காரணத்தினுடைய சுபாவமும் நித்தியமாயிருக்கின்றன. பரமேஸ்வரனும், பரமேஸ்வரனுடைய அனந்த கலைமுதலான குணங்களும் நித்தியமானபடியினுல் ஈசுவரனுல் ஆக்கப்பட்ட வேதத்தை அனவஸ்த தோஷம் பாதிக்காது. தீர்த்தங்கரர்களைத் தெய்வமாகக்கருதுவது எக்காலமும் உண்மையாகாது. ஏனெனில் பெற்ருேர்களன்னியில் அவர்களுடைய சரீரம் அமையவில்லை. எனவே ஞானத்தையும் முக்தியையும் எவ்விதம அடைதல் கூடும்? சம்யோகத்தினுல் உண்டானதிற்கு ஆரம்பம் வேண்டும். ஏனெனில் வியோகமன்னியில் சம்யோகம் கிடையாது. ஆகவே அநாதியான பரமாத்மாவைச் சிருஷ்டிகர்த்தாவாக நம்புங்கள் ஒருவன் எவ்வளவு சிறந்த சித்தனுன பொழுதிலும் சரீரவமைப்பு முழுவதையும் செவ்வனே அறியமாட்டான். சித்தனுடைய ஜீவனுக்கு சுஷுப்தி நிலையில் ஞாபகம் ஒன்றுங் கிடையாது: துக்கத்தையடையுங்கால் ஜீவனுடைய ஞானமும் குன்றிப்போகிறது.

தமோறிய புத்தியையுடைய சமணர்களைத்தவிர வேறுயாரும் ஓரேவிடத்திலிருக்கிறதும், கட்டுக்குட்ப்பட்ட சத்தியையும் உடையவனைத் தெய்வமாகக் கொள்ளமாட்டார்கள். தங்களுடைய பெற்ருேர்கள் மக்களென்றே தீர்த்தங்காரர்களைச்சொல்லுவீர்களேயாளுல் பெற்ருேர்கள்எவருடைய மக்கள்? எங்கிருந்து உண்டானுர்கள். ஆகவே முடிவேகிடையாது.

---

* அதாவது ஒன்றையொன்று பொருத்திருக்கிறது. பிரமாணத்திற்கு ஒன்றுக்கொன்று ஆதாரவாயிருக்கிறது.

‡ வடமொழியில் இதை அனவஸ்த தோஷமென்பார்கள். அதாவது முடிவில்லாமல் சொல்லிக்கொண்டே போவது. பிரமாணத்தில் தீர்ப்பு இல்லாதது:

## ஆஸ்திக நாஸ்திக வாதம்.

ஆஸ்திகன் நாஸ்திகன் இருவனுக்கும் நடந்த வாதானுவாதத்தைப்பற்றி பிரகரண இரத்தினகரம் இரண்டாவது பாகத்தில் கண்டுள்ளவண்ணமேஎழுது வோம். இது ஒரே மனதாய் ஜைனர்களால் ஒப்புக்கொள்ளப்பட்டு பம்பாயில் பிரசுரஞ்செய்யப்பட்டது.

நா:—ஈசுவரசங்கல்பத்தினல் நடப்பது ஒன்றுங்கிடையாது. நடப்பதெல் லாம் கர்மங்களினலேயே.

ஆ:—யாவும் கர்மத்தினுடைய பயனேயானல் கர்மங்களைச் செய்கிறவன் யாவன்? செய்கிறவன் ஜீவனே என்றால் அதற்குச்சாதகமாயுள்ள காது முத லிய அவயவங்களை ஆக்கியவன் எவன்? அவைகள் அநாதிகாலந்தொட்டுஇருக் கிறதென்றும் சுபாவத்தினலுண்டாகிறதென்றும் சொன்னல் அநாதியாயுள் ளது அழியாதே. எனவே முக்தி அசம்பவமாகுமே. பிராக்பாவத்தைப் (இருப்பிற்கு முன்னல் இல்லாமலிருக்கிற நிலை) போல் அதற்கு ஆரம்பங் கிடையாது; முடிவு மாத்திரமுண்டு என்றால் பிரயாசையன்னியில் எல்லோரு டைய கர்மங்களும் ஒழிந்துவிடுமே. (ஊழ்வினைப்பிரகாரம் சுகதுக்கங்களை யளிக்கும்) ஈசுவரனில்லாமல் போனல் திருடர்களும் குற்றவாளிகளும் தங்க ளுடைய களவுமுதலிய குற்றங்களுக்காகத் தாங்களாகவே மனமிசைந்து தண் டனைகளை ஏற்றுக்கொள்வதில்லை போலவே, எஜ்ஜீவனும் சுயமாகவே அதனு டைய பாபகாரியத்திற்காகக் கஷ்டத்தை அனுபவிக்காது. இராஜநீதி அவர்களை அனுபவிக்கச் செய்கிறது. அதேமாதிரி பரமேஸ்வரன் ஜீவனுடைய பாபபுண்ணியபயன்களை அனுபவிக்கச் செய்கிறர். அவ்விதமில்லாமல் போ னல் அமைதியற்றுப்போய்விடும். அதாவது ஒரு ஜீவன் கர்மங்களைச் செய்ய மற்றென்று அதனுடைய பயனை அனுபவிக்கும்.

நா:—ஈசுவரன் செய்கையற்றவர். ஏனெனில் கர்மங்களைச்செய்தால் அத னுடைய பயன்களை அனுபவிக்கவேண்டியவராகிறர். ஆதலால் எங்களைப் போலவே நீங்களும் முத்தியடைந்த செய்கையற்றவர்களில் நம்புங்கள்.

ஆ:— கடவுள் செய்கையற்றவரல்லர். அவர் சுறுசுறுப்பாகவேயிருக்கி றர். சேதன ஸ்வரூபமாயிருக்கும்பொழுது கர்த்தாவாய் ஏனிருக்கக்கூடாது? கர்த்தாவாயிருக்கையில் கிரியைகளிலிருந்து பிரிந்திருக்கமுடியாது. முக்தியைப் பெற்ற மானிடசரீரங்களாகிய தீர்த்தங்கரர்களைத்தவிர வேறென்றுமில்லாத உங்களுடைய போலித்தெய்வங்களை அறிவாளர்கள் எவரும் நம்பார்கள். நிமித் தக்காரணங்களினல் செய்யப்பட்ட ஈசுவரன் அநித்தியமாகவும் பராதீனமாகவு மேயிருக்கும். ஈசுவரனவதற்குமுன்னர் ஜீவனகவேயிருந்தது. பின்னர்ஏதோ ஒரு நிமித்தகாரணத்தினல் ஈசுவரனச்சுது. பிறகும் ஜீவனய்விடும். ஏனெனில் ஜீவத்தன்மையான தன் சுபாவத்தை ஒருநாளும் உதரமுடியாது. அனந்தகாலம் வரையில் ஜீவனகவிருந்து அவ்விதமே யிருக்கும். ஆகவே அநாதியான சுயம்சித்த ஈசுவரனிடத்தில் நம்பிக்கைவைப்பதேமுறை. நிகழ் காலத்தில் ஜீவன் பாப புண்ணியத்தைச் செய்கிறது. சுகதுக்கங்களை

யும் அனுபவிக்கிறது. செய்கையற்றவராயிருந்தால் பிரபஞ்சத்தை ஆக்கமுடியாது. பிராக்பாவத்தைப்போல்கர்மங்களை ஆரம்பமற்றதாகவும் அழிவையுடையதாகவும் நம்பினுல் கர்மம் சமவாய (இணைவிடாமல் நெருங்கின) சம்பந்தத்திலிராது. அதிலில்லாமல் போனுல் சம்யோக (சேர்க்கையின்பயன்) ஏற்படும். எனவே அழிவையும் அடையும். முக்தி நிலையிலிருக்கும்ஜீவன்களைச்செய்கையற்றதாக நீங்கள் நம்பினுல் அவைகள் ஞானத்துடன் கூடினதா ? இல்லையா? கூடினதென்ருல் மனேவேலையுடன் கூடினதாயிருக்கின்றது. கூடினதல்லவென்ருல் இறந்துபோய் கல்லைப்போல் ஜடமாய் ஒரு மூலையில் விழுந்து செய்கையற்றிருக்கிறதா வென்றுகேட்கிருேம் ? இதற்கும் ஆம் என்பீர்களானல் உங்களுடைய முக்தி உண்மைமுக்தியாகாது. இருளும் பந்தமுமேயாகும்.

நா:—எங்கும் ஈசுவரன் வியாபித்திருக்கவில்லை, வியாபித்திருந்தால் சசலபொருள்களும் சேதனத்துடன் கூடினதாயிருக்குமே. பிரம்ம க்ஷத்திரிய வைசிய சூத்திரரென்னும் மானிடர்களுள் பிரிவும் வித்தியாசமும் ஏற்பட்டிருக்காதே ? ஈசுவரன் ஒரே மாதிரியாய் எல்லாவற்றிலும் பரவியிருக்கிறபடியினுல் பிராணிகளுள் ஏற்றத் தாழ்விருப்பானேன் ?

ஆ:— 'பரவுகிறவர்' பரவியிருப்பது இரண்டும் ஒன்றேயாகாது. பரவுகிறவரோ எல்லாவிடங்களிலுமிருக்கிருர். ஆகாசம் எல்லாவற்றிலும் பரவியிருக்கிறது. பூமி, பானை, துணித்துண்டு ஆகியவைகளைப்போன்றவைகள் ஒரே விடத்திலிருக்கின்றன. இருந்தும் ஆகாசமும் பூமியும் ஒன்ருகாது. பானைத் துணித்துண்டு ஆகியவைகளில் ஆகாயம் பரவியிருந்தும், அவைகள் ஆகாசமாகாதுபோலவே பரமேசுவரன் சகலத்திலும் இருக்கிருர். இருந்தும் எல்லாம் சேதனமாகாது. அறிந்தவன் அறியாதவன், தர்மாத்மா அதர்மாத்மா ஆகியவர்கள் ஏற்றவர்களாயில்லாதிருப்பதுபோலவே வித்தை முதலான நற்குணம் உண்மை உறைத்தல் ஆகிய கர்மம், நந்நடத்தை ஆகிய சுபாவம் இவ்வேற்றத் தாழ்வுகளினுலேயே பிர்ம்ம க்ஷத்திரிய வைசிய சூத்திர தீண்டாதவன் என்கிற வித்தியாசங்களுமிருக்கின்றன. வர்ணவியவகாரங்களைக் குறித்து முன்னரே சொல்லியுள்ளோம் (நான்காவது அத்தியாயத்தில் காணவும்).

நா:—ஈசுவரன் சிருஷ்டிகர்த்தாவாயிருக்கப் பெற்ருேர்களுடைய பிரயோசனம் யாது ?

ஆ:—ஆதியில் ஈசுவரனுல் சிருஷ்ட்டிக்கப்பட்ட ஆண்களும் பெண்களும் மைதுனத்தினுல் உண்டானவர்களல்ல. இதுவே ஐசுவரிய சிருஷ்டி எனவறியப்படும். சிருஷ்டிகர்த்தா அவரல்ல. ஜீவனுடைய வேலையைக்கடவுள் செய்யமாட்டார். மரம் பழம் பச்சிலை உணவுப்பொருள் ஆகியவைகளைச் சிருஷ்டித்திருக்கிருர். இவைகளைத் திரட்டிப் போரடித்து பொடியாக்கிச் சமையல்செய்து மனிதன் சாப்பிடாமல்போனுல் அவனுக்குப்பதிலாக ஈசுவரன் எதையும் செய்யமாட்டார் ? தன்னுடைய வேலைகளைச்செய்யாமல் போனுல் ஜீவனுக்குங்கூட ஜீவனங்கிடையாது. ஆதி சிருஷ்டியில் (மானிட) சரீரத்தைச்சிருஷ்டிப்பது ஈசுவரனுடைய வேலையும் அதற்குப்பின்னர் மக்களைப் பெறுவது மனிதனுடைய வேலையுமாகும்.

நா:—பரமாத்மா சாசுவதமாயும், அநாதியாயும், சிதானந்த ஞானஸ்வரூபமாயுமிருக்க அவர் ஏன் பிரபஞ்ச கஷ்டநஷ்டங்களிலும் சுகதுக்கங்களிலும் அகப்பட்டுக்கொள்ளவேண்டும் ? சிற்றறிவையுடைய மனிதன்கூட சுகத்தைத் தள்ளி துக்கத்தைக்கொள்ளமாட்டான். ஈசுவரன் மாத்திரம் ஏன் அவ்விதம் செய்யவேண்டும் ?

ஆ:—பரமாத்மா சுகதுக்கங்களிலகப்பட்டு உழலுவதுமில்லை; தன்னுடைய இன்பநிலையிலிருந்து மாறுவதுமில்லை. ஏனெனில் குறித்த ஒருவிடத்திலிருப்பவனே சுகதுக்கங்களுக்கு ஆளாகிறான். எங்கும் பரவியுள்ளவர் ஆகிறதில்லை. சிதானந்த ஞானசுவரூபமான பரமாத்மாவைத்தவிர வேறுயாரால் இப்பிரபஞ்சத்தைச் சிருஷ்டிக்கமுடியும்? பிரபஞ்சத்தைச் சிருஷ்டிக்கவேண்டிய சக்தி ஜீவனிடம்கிடையாது, ஜடத்திற்கும் சுயமாகவே ஆக்கச் சக்திகிடையாது. ஆகவே பிரபஞ்சத்தைச்சிருஷ்டித்து இன்பநிலையிலிருப்பவர் பரமாத்மாவே. பரமாணுக்களிலிருந்து பரமாத்மா சிருஷ்டியைச்செய்ததுபோலவே நிமித்தகாரணமான பெற்றோர்களின் மூலமாக மக்கட்பேறு உண்டாகவேண்டுமென கட்டளையிட்டிருக்கிறார்.

நா:—முக்தி இன்பஸ்வரூபமாய், அவ்வின்பத்தில் இருக்கும் ஈசுவரன், ஆக்குதல் அளித்தல், அழித்தல் முதலிய சிறு தொழில்களில் புகுவானேன் ?

ஆ:—எக்காலமும் முக்தியிலிருப்பவர் ஈசுவரர். குறிப்பிட்ட இடத்திலிருந்துகொண்டு, மூக்தியைப்பெறுவதற்குமுன்னால் பந்தத்திலிருக்கும் உங்களுடைய தீர்த்தங்கரர்களைப்போன்றவர் அல்லர். ஆனந்தசுவரூபமான குணகர்மசுபாவத்துடன் கூடின பரமாத்மா அற்பமான உலகத்தினுடைய ஆக்குதல் அளித்தல் அழித்தல் ஆகியவைகளைச் செய்வதினால் பந்தத்திற் குள்ளாகமாட்டார். ஏனெனில் ஒன்றையொன்று பற்றின உறவை உடையதே பந்தமும் மோக்ஷமும். பந்தத்திற்கு முக்தியும் முக்திக்குப் பந்தமுமுண்டு. பந்தத்தினால் பாதிக்கப்படாத அவருக்கு முக்தி எங்கிருந்து வரும். ஒரே விடத்திலுள்ள ஜீவனே பந்தம் முக்தி இவைகளையுடையதாகவாகிறது. அனந்தமாயும் எங்கும்பரவியும், எவ்விடத்திலும் இருக்கிற ஈசுவரன் நிமித்த காரணங்களினாலேற்படும் முக்திக்குள்ளாகமாட்டார். எனவே எக்காலமும் அவர் முக்தன்.

நா:—கஞ்சா சாப்பிடுகிறவர்கள் சுயவாகவே மயக்கத்தையடைவதுபோல் கர்மங்களின் பயனை ஜீவன் அடைகிறது. இதில் ஈசுவரவேலை யொன்றுமில்லையே.

ஆ:—அரசனன்னியில் திருடனும் கள்ளனும் சுயமாகவே சிறைக்குள் செல்லமாட்டான். கொலைபாதகனும் தூக்குமர மேறமாட்டான். நாட்டின் நியாயப்பிரகாரம் அவனே அவர்களை தண்டிக்கிறான். இதேமாதிரி அவனுடைய கர்மங்களுக்கேற்றவாறு, ஜீவன்களுக்கு ஈசுவரன் தண்டனையளிக்கிறார். தீயகாரியங்களுடைய பலனை அனுபவிக்க எஜ்ஜீவனும் விரும்புகிறதில்லை. எனவே பரமாத்மா நீதிபதியாயிருத்தல் அவசியமாகிறது.

நா:—சிருஷ்டிக்கு ஈசுவரன் ஒருவனேயாகமாட்டான். முக்தியடைந்த ஜீவன்களெல்லாம் ஈசுவரனாகிறது.

ஆ:—இது வீண்வாதமேயாகும். ஏனெனில் பந்தத்திலிருந்தபின்னர் முக்தியைப்பெற்ற ஜீவன் மீண்டும் பந்தத்திலகப்படவேண்டும். ஏனெனில் இயற்கையாகவே அது முக்தனில்லை. முக்தியைப்பெறுமுன் உங்களுடைய இருபத்திநான்கு தீர்த்தங்கரர்களும் பந்தத்திலிருந்தவர்களேயாம். எனவே அவசியம் மீண்டும் பந்தத்திலுழளவேண்டியவர்களே. பல ஈசுவரனிருந்தால் (ஜீவன்கள் அநேகமானபடியினால்) நம்மிலிவ்விடமிருப்பதுபோலவே, ஒருவருக்கொருவர் சண்டைச் சச்சரவினால் அடித்துக்கொண்டிருப்பதில்லையா.

நா:—மடையா! உலகத்தை ஆக்கியோன் எவனுங்கிடையாது. சுயமாகவே சித்தமானது இவ்வுலகம்.

ஆ:—இது சமணர்களுடைய பெரும்பிழையாகும். கர்த்தாவன்னியில் காரியமும் உண்டோ? ஆக்கியோனுக்குக் கஷ்டமில்லாமல் காரியம் சித்திக்குமா? மனிதப்பிரயத்தன மன்னியில் கோதுமை மாவாக அரைபடுவதையும் மாவு ரொட்டியாக மாறுவதையும், மாறின ரொட்டி கஷ்டமன்னியில் சமணர்களுடைய நெஞ்சைத்தாண்டி உள்ளே செல்வதையும்,பார்த்தவர்கள், எவரேனும் உண்டோ? நூல், சொக்காய், கைகுட்டை, கால்சராய், தலைகுட்டை, முதலானவைகளாகப் பட்டணங்களுக்கு அனுப்புமுன்னால் பஞ்சு இவ்விதமான மாறுதல் அடைந்ததைப் பார்த்ததில்லை. எனவே, கர்த்தாவாகிய ஈசுவரன்னியில் நானாவிதமான இப்பூவுலகம் எவ்விதம் உண்டாகும்? வீண்பிடிவாதத்தினால் கர்த்தாவன்னிலேயே பிரபஞ்சம் அனைத்தும் உண்டாச்சுதென்றால் மேற்சொன்ன துணிமுதலானவைகளும் சுயமாகவே உண்டாச்சுதென்பதைப் பிரத்தியட்சம் செய்ய வேண்டும். ? இவ்விதம் நிரூபிக்காமல் போனால் பிரமாண சூன்யமான உங்களுடைய வார்த்தைகளை அறிவாளர்கள் நம்பமாட்டார்கள்.

நா:—ஈசுவரன் விரக்தனா (சகலத்தையும் துறந்தவனா) அல்லது மோகிதனா(உலகப்பொருள்களில் பற்றுள்ளவனா)? விரக்தனாயிருந்தால் உலகச் சிருஷ்டியைப்பற்றிக்கஷ்டப்படுவானேன்? மோகிதனானால் பிரபஞ்சத்தை ஆக்க வேண்டிய சக்தி அவனிடம் கிடையாது?

ஆ:—கடவுளைப்பற்றி வைராக்யம் (துறத்தல்)மோகம் (ஆசை)இரண்டையும் சொல்லமுடியாது. ஏனெனில் எங்கும் பரவியுள்ளவன் எதையும் ஏற்றுக்கொள்ளவும் முடியாது, எதையும் மறுக்கவு முடியாது. ஈசுவரனைவிட மேலானது ஒன்றுங்கிடையாது. அவருக்குக் கிடையாப் பொருளுங்கிடையாது. எனவே எதையும் ஏற்றுக்கொள்ளவும் முடியாது. வைராக்கியமும் மோகமும் ஜீவனைக்குறித்ததே தவிர ஈசுவரனைக் குறித்ததாகாது.

நா:—ஜகத்கர்த்தாவாயும் ஜீவன்களுடைய கர்மபலனை அளிக்கிறவராயும் ஈசுவரனை எண்ணுவீர்களேயானால் அவர் உலகவிவகாரங்களில் ஈடுபட்டு துன்பங்களை அனுபவிக்கநேரிடுமே?

ஆ:—மனிதர்களுடைய காரியங்களுக்கேற்றவாறு கஷ்டசுகங்களை அளிக்கிற தர்மசீலனை நீதிபதிகூட இவ்வுலகில், உலக இன்பதுன்பங்களினால் பாதிக்கப்படாமலிருக்க, அளவற்ற சக்தியைக்கொண்ட பரமேசுவரனை, இவ்வுலகிலகப்பட்டுக்கொண்டு சுகதுக்கங்களினால் பாதிக்கப்படுவார்? உங்களைப்போலவும் பரமேசுவரனிருக்கிறார் என்று உங்களுடைய அறியாமையினால் நம்புகிறீர்கள். அறிவின் குறைவு முதலிய தீமைகளிலிருந்து மீறவிரும்பினால் வேதாதி சத்திய சாஸ்திரங்களைக்கைப்பற்றுங்கள். மாயையிலகப்பட்டு ஏன் தடுமாறுகிறீர்கள்?

सामिअणाइ अणन्ते च तूगइ संसार घोरकान्तरे । मोहाइ कम्मगुरु ठिइ विवाग वसनुभमइजवि रौ ॥ பிரகர. இரண்டாம்பாகம். 60.

பிரபஞ்சத்தைக்குறித்துச் சமணர்கள் எவ்விதஎண்ணங்கொண்டிருக்கிறார்களென்று அவர்களுடைய சூத்திரங்களின் துணைகொண்டே காண்பிப்போம். சுருக்கமாக மூலத்தைச்சொன்னபின்னர், அது எவ்வளவு பொய்யானது, என்பதைச்சொல்லுவோம்.

இதை ரத்தினசாரபாக என்னும் நூலின் இரண்டாவது பாகத்தின் சம்யக்தவபிரகாச பிரகரணத்தில் கௌதமருடையவும் மகாவீரருடையவும் சம்வாதத்தில் காணலாம்.

உலகத்திற்கு ஆதியும்கிடையாது; அந்தமுங்கிடையாது. ஆக்கவும்படவில்லை; அழிந்தும்போகாது. அதாவது ஒருவரும் இதைப்படைக்கவில்லை யென்பதேயாம். ஏ. மடையா! பிரபஞ்சகர்த்தா எவனும் கிடையாது. அது ஆக்கப்படவில்லை. இல்லாமலும்போகாது''

ஆ:—சம்யோகத்தினாலுண்டானவைகள் அநாதியாயுமிராது! அனந்தமாகவுமிராது. காரியத்திற்கு, முதல் முடிவு, இரண்டும் தேவை. உலகிலிருக்கும் பொருள்களெல்லாம் சம்யோகவிசேஷத்தினாலுண்டானதே. ஆக்குதலுக்கும் அழித்தலுக்கும் காரணமானதே. ஏற்ற அறிவுள்ளவர்களாக உங்களுடைய தீர்த்தங்கரர்கள் இருந்திருந்தால் இவ்வித அசம்ப வார்த்தைகளை எழுதியிருக்கமாட்டார்கள். உங்களுடைய குருவைப்போலவே சிஷ்யர்களான நீங்களும். சமணர்களான உங்களுடைய பேச்சை நம்புகிறவர்களுக்கு உட்பொருள்களுடைய உண்மையான அறிவு விளங்காது. சம்யோகத்தினின்று பொருள்களை நேரிட்டுக்காணும்பொழுதே அதனுடைய உற்பத்தியிலும் அழிவிலும் ஏன் நம்பமாட்டேன் என்கிறீர்கள்? அவர்களுடைய ஆசான்களுக்குப் பூகோளசாஸ்திரம் வானசாஸ்திரம் முதலானவைகளுடைய அறிவுகிடையாது. சமணர்களுக்கும் இவைகளைப்பற்றி யொன்றும் தெரியாது. கீழ்க்கண்ட அசம்பாவித வார்த்தைகளை எங்ஙனம் நம்பமுடியும்? கவனியுங்கள்! சமணர்கள் கூறும்வண்ணம் பிருதிவியும் 'பூமியும்' ஜீவனின் சரீரமே; ஜலத்தினிலிருக்கிறபொருள்களையும் இங்ஙனமே நம்புகிறார்கள். இவ்விதம் எவனாவது மதிப்பானா? பரிபூரண ஞானியென்றும் பரமேசுவரன் என்றும் ஜைனர்களால்

போற்றப்படும் தீர்த்தங்கரர்களின் பொய்ப்போதனைகளையுடைய சிலவற்றைக் கூறுவோம்:—

**இரத்தினசாரபாகம்** (இதைப் பிரமாணமாகச் சமணர்கள் போற்றுகிறார்கள். ஸ்ரீ காசி, சைன பிரபாகர அச்சியந்திர சாலையில் நானக்சந்த் ஜதீ என்பவரால் 1879 ஆம் ஏப்ரல் மீ 28உ அச்சிட்டு வெளியிடப்பட்டது) 145 பக்கத்தில் காலப்பகுதியின் விளக்கம் இங்ஙனம் கூறப்பட்டிருக்கிறது.

**சமயம் சூட்மகால** மாகும்.

**அசங்கியாத சமயங்கள்**=1 ஆவலி.

16, 27, 216 ஆவலிகள்=1 முகூர்த்தம். 30 முகூர்த்தங்கள்=1 திவஸ். (நாள்) 15 திவஸங்கள்=1 பக்ஷம். 2 பக்ஷம்=1 மாசம். 12 மாசம்=1 வருஷம்.

7,000,000 × 10,000,000
+ 50,000 × 10,000,000 } வருஷங்கள்=1 பூர்வம்

அஸங்கியாத பூர்வம் = 1 பல்யோபமகாலம்

**அஸங்கியாதத்தின்** பொருள் இதுவேயாகும். நான்கு***கோசங்களையுடைய** சரிசமானமான பக்கங்களையும், அதே ஆழத்தையும் உடைய சதுரமான குழி ஒன்றைத் தோண்டவேண்டும். பின்னர் ஜுகுலி மனிதனுடைய சரீரத்தின் மயிர்களின் துண்டுகளால் அதைக் கீழ்க்காணும்வண்ணம் நிரப்பவேண்டும். நம் காலத்திய சாதாரண மனிதனுடைய மயிரைவிட ஒரு ஜுகுலியுடைய மயிர் 4096 தடவை இலேசானது. அதாவது ஜுகுலியுடைய 4096 மயிர்கள் கொண்டது சாதாரண மனிதனுடைய மயிர். ஒரு கைவிரல்பரிமாணம் அகலம் நீளம் உள்ள ஜுகுலி மனிதனுடைய மயிரை எடுத்துக் கொள்ளுங்கள். அதை எட்டுத்துண்டுகளாகப் பிரியுங்கள். அது 2,097,152 துண்டுகளாகும் வரையில் பிரித்துக்கொள்ளுங்கள். இவ்விதத் துண்டுகளால் குழியை நிரப்புங்கள். பின்னர் 100 வருஷங்களுக்கு ஒரு தடவையாகக்குழியிலிருந்து ஒவ்வொரு மயிராக எடுங்கள். இவ்விதம் குழியில் ஒன்றுமில்லாமல் காலியாக வேண்டும். இவைகளெல்லாம் செய்து முடிவதற்கு எடுத்துக்கொள்ளும் காலமே ஒரு **சங்கியாதம்** ஆகும். 'அசங்கியாதம் அல்ல'. பின்னர் ஒவ்வொருதுண்டையும் அசங்கியாதத் துண்டமாகச் செய்யுங்கள். ராஜ இராஜனுடைய சேனைகள் அதன்பேரில் போனபொழுதிலும் கூட காலடி அடையாளம் விழாமலிருக்கும்படி அக் குழியை முன்சொன்ன துண்டங்களினால் நிறைக்கவேண்டும். **மீண்டும்** 100 வருஷங்களுக்கொருமுறை ஒவ்வொரு மயிர்த்துண்டாக எடுத்துக் குழியை காலி செய்யுங்கள். இவ்வேலைகள் முழுவதும் முடிவதற்கு வேண்டிய காலமே ஒரு **பூர்வமாகும்**. இதேமாதிரி அநேக அஸங்கியாதாதி பூர்வங்கள் கொண்டது ஒரு **பல்யோபம காலமாகும்**,

---

*மைல்=$1\frac{7}{8}$ கோசம். இந்தியாவின் சில விடங்களில் 2 மைல்கள்=கோசம்.

| | |
|---|---|
| 1,00,000 × 1,00,000,000 பல்யோ பமகாலம் | = 1 சாகரோபமகாலம். |
| 1,00,000, × 100,000000. சாகரோப மகாலம் | 1 = உத்ஸர்ப்பணி |

1 உத்சர்ப்பணியும், 1 அவஸர்ப்பணியும் சேர்ந்தது. 1 **காலச்சக்கரம்.** அனந்தகாலச்சக்கரங்கள் கொண்டது 1 **புத்கலபராவிருத்தம்.** சமண நூல்களுடைய கணக்கை மீறினதாயும், ஒன்பது உதாரணங்களினால் விளக்கப்பட்டதாயுமுள்ளதே **அனந்தகல்பம்.**

ஜீவன் திரியவாரம்பித்ததிலிருந்து இவ்விதமான அநேக அனந்த **புகலபராவிருத்தம்** கழிந்துள. கணித சாஸ்திரத்தில் கை தேர்ந்த புலவர்களே! சைன நூல்களில் சொல்லி யுள்ள வண்ணம் காலத்தை நிர்ணயம் செய்வீர்களா? செய்தாலும் அதில் நம்புவீர்களா? நவீன முறையிலுள்ள கணித வித்தையைக் கற்றிருக்கிறீர்கள். சனசமயத்தின் ஆசான்களும் சீடர்களும் இத்தகையோர்களே! அவர்களுடைய அஞ்ஞானத்தின் ஆழத்தை அளவிடுதல் அரிதாகும். அவர்களுடைய அஞ்ஞான இருளை விளக்க வேண்டி இன்னும் சில உதாரணங்களைக குறிக்க விரும்புகிறோம். **ரிஷபதேவன்** முதல் மகாவீரன்வரையுள்ள இருபத்திநான்குதீர்த்தங்கரர்களாலெழுதப்பட்ட சமணசமயத்தின் சாரம் எனபதை **ரத்தினசாரபாகம்** பக்கம் 133ல் காணலாம். இப்புத்தகத்தின் 148 பக்கத்திலேயே பூமியின் பகுதிகளான பூமியையும் கற்களையும் **பிருதிவிகாயப்** பிராணிகளென்று கொள்ளவேண்டும் என்கிறது. இப்பிராணிகளின் சரீரப்பரிமாணம், விரலுடைய அகலத்தின் ஒரு சிறு துளிபாகத்தை யொத்திருக்கிறது. அதாவது அதி நுட்பமானது; அவைகளின்வயது 22,000 வருஷங்களுக்குமேலிருக்கும். இதே நூலின் 149 பக்கத்தில் கூறும் வண்ணம். செடியொன்றில் எண்ணுதற்கியலாத ஜீவன்களிருக்கின்றன. இவைகளே சாதாரண வனஸ்பதியாகும். கந்தமூலங்களும், வேர்களும், அனந்தகாயமுதலானவைகளும் சாதாரணசெடிகளுடைய ஜீவனுகும். அவைகளுடைய ஆயுள் காலம் ஒரு **அனந்தமுகூர்த்தமாகும்.** மேலே சொன்ன சைன முகூர்த்தமேயாகும் இது. ஒரே இந்திரியம் (ஸ்பர்சேந்திரியம்) ஒரே ஜீவன் இவைகளையே யுடையது **சாதாரணசெடி.** அஜ்ஜீவனின் சரீரப்பரிமாணம் 4,000 யோசனைகள் நீளமுள்ளது. புராணிகர்கள் (புராணங்கள் முதலானவைகளை நம்புகிறவர்கள்) சொல்லும் வண்ணம் 4 கோசங்கள் கொண்டது ஒரு யோசனையாகும். சைனர்கள் கூறும் வண்ணமோ 10,0000 கோசம் கொண்டது ஒரு யோசனை 10,000 வருடங்களுக்குமேல் அதனுடைய வாழ்நாளாகும். சரீரம், முகம் ஆகிய இரண்டு இந்திரியங்களை கொண்ட ஜீவனைப்பற்றி சொல்லுவோம். சங்கு, பேன் இவைகளைப்போன்றது. அவைகளுடைய ஸ்தூலசரீரம் குறைந்தது 48 கோச நீளமுள்ளது. ஆயுள்காலம் 12 வருஷங்களே. ஆசிரியர் இவ்விஷயத்தில் பெரும்பிழையை இழைத்தவருகிறார். இவ்

வளவு பெரிய சரீரத்தையுடைய பிராணியின் ஆயுள் காலம் இன்னும் அதிக மாயிருத்தல்வேண்டும். 48 கோச நீளமுள்ள பேன்கள் சமணர்களுடைய சரீரத்திலேயேகாணப்படும். அவர்களே அதைக்காண்கிறவர்களும். வேறுயாரும் அவ்வளவு அதிர்ஷ்டசாலிகள் அல்லர். இரத்னசாரபாக பக்கம் 150:-அவர்களுடைய தேள், மூட்டைப்பூச்சி, தெள்ளுப்பூச்சி, ஈ, முதலியவைகளுடைய சரீரம் ஒருயோஜனை நீளமுள்ளது. அதிகமாக அவைகள் 6 மாசத்திற்கு மேலிருப்பதில்லை, சைனர்களைத்தவிர மற்றவர்கள் 8 மைல் நீளமுள்ள தேள்களையும் ஈக்களையும் கண்டது கிடையாது. சைனசமயத்திலேயே 8 மைல் நீளமுள்ள தேள்களும் ஈக்களுமுண்டு. இவ்விதத்தேள்களும் ஈக்களும் சைனர்களுடைய வீட்டிலேயே இருக்கும். உலகில் அவர்களே அவைகளைக் கண்டிருப்பார்கள். இவ்வித தேள்களிலொன்று சைனர்களைக்கொட்டிவிட்டால் எவ்வித கஷ்டத்தை அனுபவிப்பார்கள் என்று ஊகிக்கமுடியாது. நீரில்வாழும் மீன்போன்ற இவைகளின் சரீரங்கள் 1,000 யோசனை நீளமுள்ளன. ஒரு யோசனைக்கு 10,000 கோசங்களாக, ஜலப்பிராணிகளுடைய சரீரம் 10,000,000 கோசங்கள் நீளமானதாக இருத்தல் வேண்டும். அவைகளுடைய வயது 10,000,000 பூர்வ வருஷங்களாம். இப்பெரிய பிராணிகளைச்சைனர்களைத்தவிர வேறு யாவர் கண்டிருப்பர்கள்? யானைகளைப்போன்ற நாலுகால்விலங்குகளுடைய சரீரம் 2 லிருந்து 9 கோச நீளம் வரையிலிருக்கிறது. அவைகளுடைய வயதும் 84,000 வருஷங்கள். சைனர்களைத்தவிர வேறு எவரும் அவைகளைக் கண்டிருக்கமாட்டார்கள். அவர்களே அவைகளுடைய வகுப்பில் நம்பவுங்கூடும். அறிவுள்ளவன் எவனும் இவை போன்றவைகளை நம்பமுடியாது.

இரத்தினசாரபாக பக்கம் 161:—நீரில்வாழும் முலையூட்டும் பிராணி வர்க்கத்தினுடைய சரீரம் 1,000 யோசனை அல்லது 10,000,000 கோசங்கள் நீளமாகவும், 100,000,000 வருஷங்கள் வயதுள்ளதாகவு மிருக்கின்றன. இப்பெரும் சரீரத்துடன்கூடின பிராணிகளைச் சைனசமயத்தைத் தாபித்த ஆசாரியர்களே அவர்களுடைய கனவில் கண்டிருக்கக்கூடும்? இவைகளெல்லாம் பெரும்புரட்டுகளில்லையா? அவ்வளவு அவநம்பிக்கையானவைகளாயிருக்கின்றன.

பூமியுடைய பரிமாணத்தைக் கேளுங்கள்.

இரத்தினசாரபாக பக்கம் 153:—கோணலான இக்கிரகத்தில் அசங்கியாத நிலங்களும் அசங்கியாத சமுத்திரங்களும் இருக்கின்றன. 2½ சாகரோபம காலத்தில் எவ்வளவு வருஷங்களிருக்கின்றனவோ அவைகளே அசங்கியாத காலத்தினால் குறிக்கப்பட்ட வருஷங்களாகும். இப்பூமியில் சகல தீவுகளின் மத்தியில் ஜம்பூத்துவீபம் இருக்கின்றது. அதன் சுற்றளவு 100,000 யோஜனைகள் அல்லது சதுரகோசங்களில் 1,000,000,000. நான்கு பக்கமும் உப்பு சமுத்திரத்தினால் சூழப்பட்டது. இதன் சுற்றளவு 200, 000 யோஜனைகள் அல்லது 2, 000, 000, 000 (சதுர) கோசங்கள். அதற்கடுத்தாற்போல், ஜம்பூத்வீபத்திற்கப்புரம் காதகீகண்டமிருக்கிறது. 4, 000, 00 யோஜனை அள்வுள்

ளது. அதற்குப்பிறகுக் காலோததி என்னும் சமுத்திரம் இருக்கிறது; அத னுடைய சுற்றளவு 2, 000, 000, 000 (சதுர) கோசங்கள். அதற்குப்புறம் புஷ்கராவர்த்த என்னும் தீவு இருக்கிறது. அதனுடைய உள்பாகம் ரேகை களினால் பிரிக்கப்பட்டிருக்கிறது. சரி பாதிமனிதர்களால் வசிக்கப்பட்டிருக் கின்றது. இதற்கப்பால் கணக்கற்ற தீவுகளும் சமுத்திரங்களும் இருக்கின் றன. இவைகளில் ஊர்வனவைகள் உயிர் வாழுகின்றன.

இரத்தின சாரபாகபக்கம் 153:—ஜம்பூத்வீபத்தில் ஹிமவந்தம் ஏறண்ட வந்தம், ஹரிவர்ஷம், ரம்யக், தேவகுரு, உத்தரகுரு என கண்டங்கள் ஆறு இருக்கின்றன.

விடை:—பூகோள சாஸ்திரம் அறிந்தவர்களே! உலகத்தின் அளவை அறிவதில் வழுவினவர்கள்நீங்களா அல்லது சைனர்களா? சைனர்களுடையது தப்பாயிருந்தால் தயவு செய்து திருத்துவீர்களா? அல்லது உங்களுடைய தாயிருந்தால் திருத்திக்கொள்வீர்களா? இதைத் தீர்மானஞ் செய்து முடிவு செய்து கொள்ளுங்கள். சிறிதளவு யோஜனையில், சமண நூலாசிரியர்களுக்குப் பூகோள சாஸ்திரம், கணிதசாஸ்திரம், வானசாஸ்திரம் ஆகியவைகள் கொஞ் சங்கூட தெரியாதென்பது நன்கு விளங்கும். இவ்விதமானவர்கள் சிருஷ் டியை ஆக்கப்படாததாக நினைப்பதும் கடவுளை இல்லாததாகக் கருதுவதும் விந்தையோ? சைனர்கள் பிறமதங்களைச்சார்ந்த கற்றுணர்ந்தவர்களிடம் தங் கள் நூல்களைப் படிக்கக்காண்பிக்கிறதில்லை. ஏனெனில் பிரமாணங்களாகவுள்ள அவர்களுடைய தீர்த்தங்கார்களா லெழுதப்பட்ட புத்தகங்கள் அறிவிற்கு மாறானவைகளால் நிறைந்திருக்கின்றன. எவரேனும் கண்டால் அதனுடைய ஊழல்களை வெளிப்படுத்துவராகையினால் மற்றவர்களைக் காணவும் விடுகிற தில்லை. ஜைனர்களைத்தவிர கொஞ்சம் அறிவுள்ளவேறு எவரும் இவ்வித கயிறுகளை நம்பமாட்டார்கள். உலகம் அநாதி என்பதைப்புகட்டவே ஒவ்வாத இவைகளைத்தாபித்தார்கள். இது முழுப்பொய்யே! உலகத்தின் காரணம் அநாதியென்பது உண்மையே, ஏனெனில் பரமாணுக்கள்—எவ்விதத்திலும் மேலும் பிரிக்க முடியாதுளிகள்—அடிப்படை ஆதாரங்கள். ஆக்கப்படாத வைகளுக்கு நியம பூர்வகமாய் (ஏற்றவாறு) கலந்து கொள்ளவும் பிரிந்து கொள்ளவும் போதிய சக்தி கிடையாது: பரமாணுக்கள் பொருளே தனித் தனியானது ஜடமானது. தக்கவாறு தானாகவே சேர்ந்துகொள்ளாது. எனவே சேர்த்துவைக்கச் சேதன பரம்பொருள் ஒன்று தேவை. அவரே ஞானஸ்வரூ பர். பிருதிவி, சூரியன் முதலான உலகங்களை நியமித்திலிருத்துவது அநாதி யானசேதன பரமாத்மாவினுடைய வேலையே. எதில் சம்யோக (சேர்க்கை) காரியத்தினுடைய சிறப்புவெளிப்படுகிறதோ, அந்த தூல உலகம் அநாதியா காது. காரியத்தையே அநாதியென்றால், அதற்குக்காரணமிராது. அதாவது காரணமும் காரியமும் ஒன்றே யாகும். எனவே ஆத்மசிரயி இதுவோ உண் மையாகாது. ஏனெனில் தன்னுடைய தோள்களில் தானே நிற்கமுடியாது.

தன்னுடைய தகப்பனும், பிள்ளையும், தானே ஆகமுடியாது. எனவே உலகத்தைச் சிருஷ்டிக்கும் கர்த்தாவினுடைய அவசியம் வெளியாகிறது.

வினா:—கடவுள் ஜகத்தைப்படைத்தவராயிருக்க, அவரைப்படைத்தவன் யார்?

விடை:—படைத்தவனுக்குப் படைத்தவனும் காரணத்திற்குக் காரணமுங்கிடையாது. முதல் படைத்தவர் அல்லது முதல் காரணம் இருந்ததினாலேயே (உலகம்) காரியம் வெளியாகிறது. சம்யோகவியோகம் இல்லாததும் முதல் சம்யோக வியோகத்தின் காரணமுமானதைப்படைத்தவரும் கிடையாது. காரணமுங்கிடையாது. இதைப்பற்றி இந்நூலின் எட்டாவது அத்தியாயத்தில் நன்கு விளக்கியுள்ளோம். சந்தேக நிவர்த்திகளுக்கு அதைக் கவனிக்கவும். வெகுசுலபமானவிஷயங்களைப்பற்றியே அறியமுடியாமலிருக்க மிகவும் நுட்பமான சிருஷ்டி விஷயத்தைப்பற்றிச் சைனாகள் எவ்விதம் அறிவார்கள்?

சிருஷ்டி அநாதியானது; அனந்தமானது. ஒவ்வொரு பொருளின் சேர்க்கையும் அநாதியானது: அனந்தமானது. பிரதிகுணங்களும் அநாதியானது, அனந்தமானது. பிரகரண ரத்தினாகரத்தில் கூறப்பட்டுள்ள சமணர்களின் இந்நம்பிக்கைகள் ஒவ்வாதது. ஏனெனில் குணங்களும் குணக்குறிகளும் எல்லையுள்ளதாயிருக்கஅவைகள் முடிவுள்ளதாகவேயிருத்தல் வேண்டும். முடிவற்றது என்னும்பதத்திற்குகணக்கற்றதெனப்பொருள் கொள்வீர்களானால் அதுவும் தப்பானதே. ஜீவனைப்பொறுத்தவரையில் அதுசரியாயிருக்கலாம். ஆனால்பரம்பொருளைப்பொறுத்தவரையில் ஆகாது. கீழ்க்காணும் சைனர்களுடையநம்பிக்கைகளிலிருந்து அவர்களுடைய சிற்றறிவு வெளியாகும். உலகிலுள்ள ஒவ்வொருவஸ்துக்களும் வெவ்வேறானது; மீதி யொன்றுடன் பேச முடியாதது, காரியத்தைவிளைவிக்கவல்லது; காரணரூபங்களாகப்பிரியவல்லது. கணக்கற்றவஸ்துக்கள் உலகிலிருக்கிறபடியினால், உருவங்களும் அனந்தமானதே. வஸ்துக்களில் உள்ளசக்தியும் அனந்தமானதே. எல்லையுள்ளதாயிருக்க பரமாணுவில் எவ்விதம கணக்கற்ற உருவங்களிருக்கக்கூடும்? குணங்களைப் பொருத்தமட்டில கணக்கற்ற உருவங்களைக் கொண்டதென்று பொருள்களை நம்புவது குழந்தைப்பேச்சாகும். ஏனெனில் பரிமாணமுள்ளதாய்இடம் இருக்க, அதனுள் அடங்கியிருக்கும் பொருள்கள் எவ்விதம் அனந்தமாகமுடியும்? சமணர்களுடைய நூல்களில் காகா பூனைக்கதைகள் இன்னும் அதிகமாகவிருக்கின்றன. ஜீவன் அஜீவன் இவ்விருபொருள்களைப்பற்றி அவர்களுடைய சித்தாந்தமென்னவென்றால்:—

चेतनालक्षणो जीवः स्यादजीवस्तदन्यकः ।
सत्कर्मपुद्गलाः पुण्यं पापं तस्य विपर्ययः ॥

ஜினதத்த ஸூரி என்னும் நூலில் இதைக்காண்கவும். சேதன விளக்கத்துடன் கூடினது ஜீவன். சேதனமற்றது அஜீவன். (சடம்) நற்கிரியைகளுடைய அணுவே புண்ணியமும் தீயகர்மங்களுடைய அணுவே பாபமுமாகும்.

விசாரிப்போன்:—ஜீவன், ஜடம், இவைகளுடைய விளக்கம் பொருத்தமானதே. ஆனால் ஜட அணுக்களைப் புண்ணியமானது பாபமானது என்று கூறுவது பொருந்தாது. ஏனெனில் பாப புண்ணியங்களைச் செய்யும் சுபாவம் சேதனித்திலேதான் உண்டு. கவனியுங்கள்! உள்ள சகல ஜடப்பொருள்களும், பாபபுண்ணியங்களிலிருந்து, விலகினதாயிருக்கிறது. ஜீவனை அநாதியாகக் கருதுவது சரியே. ஆனால் அற்பஞ்ஞமான ஜீவனை முக்தியின்பத்தில் சர்வஞ்ஞமாக வெண்ணுவது பொய்யே. ஏனெனில் எது அற்பமோ அற்பஞ்ஞமோ அது அதனுடனேயே விளங்கும். பிரபஞ்சம், ஜீவன், ஜீவனுடைய கர்மம், பந்தம் ஆகியவைகளைச் சைனர்கள் அநாதியாகக்கருதுகிறார்கள். இவ்விஷயத்திலுங்கூட சமணர்களுடைய தீர்த்தங்கரர்கள் வழுவி விட்டார்கள். ஏனெனில் படைக்கப்பட்ட பிரபஞ்சம் (சம்யோகவிசேஷத்தினாலுண்டானது), சிருஷ்டியானபிறகு சங்கிலித்தொடரைபபோல் காரியங்கள் நடைபெறுவது, மனிதனுடைய கர்மங்களும், புனா ஜனனம், இவைகள் அநாதியாகவிருப்பது வீண்வார்த்தையே. இவ்விதமிருந்தால் சைனர்கள் இருப்பின் கோர்வையில் எவ்விதம் நம்புவார்கள். கர்மங்களைச் செய்யவேண்டியதின் அவசியமு மற்றுப் போகுமே? அநாதிக்கு முடிவு கிடையாது. அநாதிப் பொருள்களெல்லாம் அழிவுள்ளதே என்று சொல்லப்படுமேயானால் உங்களால் அநாதியென மதிக்கப்படுகிறவைகளெல்லாம் ஒரு சிலகாலமே இருக்கும். அநாதி என்னும் பதத்திற்கு 'முடிவற்றது' எனப்பொருள் கொள்ளப்படும் பட்சத்தில் கர்மங்களையும் மறு ஜனனத்தையும் எக்காலமுமில்லாததாக நினைக்காமலிருப்பது முடியாத காரியம். இவ்விதமிருக்க, ஒரு சிலகாலத்திற்கே ஓய்வை யடையும் முக்தியானது கொஞ்சகாலமே இருக்கும். எக்காலமும் இராது. கர்த்தா, காரியம் இவ்விரண்டினுடைய பாஸ்பர ஒற்றுமையும் நிரந்தரமாயிருக்கையில் காரிய மற்றுபோகாது. அழியாத முக்தியின்பத்தைத் தீர்த்தங்கரர்கள் அடைந்துவிட்டார்களென்பதும் அதைப்போலவே மற்ற சமணர்களும் அடையலாம் என்பதும் சமணர்களுடைய இந்நம்பிககை மறுக்கிறது.

வினா:—உமியிலிருந்து வெளியானபொழுதிலும் அல்லது அக்கினி சம்பந்தப்பட்டபொழுதிலும் நெல் விளையாது. எனவே முக்தியடைந்த ஜீவன் திரும்பவும் பிறப்பு இறப்பு ரூபமாகிற சம்சாரத்தில் வரமுடியாது?

விடை:—ஜீவனுக்கும் கர்மங்களுக்கும் உள்ள சம்பந்தம் அரிசிக்கும்உமிக்கும் உள்ள சம்பந்தத்தைப்போன்றதல்ல. சமவாயி(பிரிக்கமுடியாத சேர்க்கை) சம்பந்தமேயாகும். ஜீவன் அநாதி; கர்மங்களும், கர்மங்களைச் செய்யவல்ல ஜீவனுடைய சக்தியும், அநாதி காலந்தொட்டே பிணைக்கப்பட்டது. அவைகளில் கர்மங்களைச்செய்ய வேண்டிய சக்தி இல்லையென நினைத்தால், சகல ஜீவன்களும் கற்களைப்போலாகி, முக்தியின்பத்தை யனுபவிக்கத்தகுதியற்றதாகிறதென ஏற்படுகிறது. அநாதி காலந்தொட்டு ஏற்பட்டுள்ள கர்மங்களுடைய கட்டிலிருந்து ஜீவன் விலகினால், (சமணசமயப்பிரகாரம்) நிரந்தரமாயுள்ள முக்தியை யடைந்தபிறகு மறுபிறப்பிற்கு ஆளாகும். ஏனெனில் முக்திக்குக் காரணமான கர்மங்களுடைய கட்டிலிருந்து மீறின ஜீவன், ஓயாத நித்திய

முக்தியை அடையுமேயானால், அது நித்திய முக்தியை விட்டு(பிறப்பு, இறப்பு) கட்டுக்களில் பின்னும் வரக்கூடும்? சிலகாரணங்களின் பயனாக விளையும் காரியம் எப்பொழுதும் நித்தியமாகமாட்டாது. அதற்குவேண்டிய சாதகங்களைப் பழகாமலே முக்தி சித்திக்கும் என்று நம்புவீர்களேயானால், சாதகங்களன்னியிலேயே பந்தத்திற்கு ஜீவன்களுடைய திரும்புதலில் நம்ப ஏன் முடியாது? அழுக்கினால் பாழான துணியானது தோய்ப்பதினால் சுத்தமாகிறது. பின்னும் அழுக்காகிறது. இதைப்போலவே இராகத்துவேஷத்தினால் பிடிக்கப்பட்டு பகையினால் பாதிக்கப்படுவதினால் ஜீவன்கள் கர்மங்களைச் செய்ய வேண்டியவைகளாகின்றன. மெய்யறிவு, சத்சங்கம் நல்லொழுக்கம் முதலானவைகளினால் ஜீவன் பரிசுத்தமடைந்து, கெடுதலானவைகளினால் அசுசியாகிறது என்று நம்பினால் முக்தி இன்பத்திலிருக்கும் ஜீவன்கள் (பிறப்பு இறப்பாகிற) பந்தத்திற்குத்திரும்பும் என்பதை நீங்கள் ஒத்துக்கொள்ளவேண்டும். ஏனெனில் வெளிச் சந்தர்ப்பங்கள் அதைப் பரிசுத்தமாக்குகிற மாதிரியே பாதிக்கவும் செய்யும். சிருஷ்டிகாலந்தொட்டு பந்தம்முக்தி இவைகளினால் ஜீவனை அநாதி என்று எண்ணுங்கள். அனந்தத்தினால் அநாதியில்லை, இதுவே உண்மையானது.

வினா:—எக்காலமும் ஜீவன் சுத்தமாகாதே. அசுசியானதே?

விடை:—எக்காலமும் சுத்தமில்லாமலிருந்தால் எப்பொழுதும் சுத்தமுள்ளதாகாது. சுயவெள்ளையான தகட்டின்பேரிலிருக்கும் அழுக்கைக்கழுவினால் சுத்தமாகும்: ஆனால் அதனுடைய இயற்கை வெள்ளை நிறத்தை மாற்ற முடியாது. ஒருதடவை கழுவினபின்னரே அழுக்கு, தட்டை அசுசிபடுத்தக்கூடும், எனவே முக்தியடைந்த ஜீவன் பாபத்திற்காளாகலாம்.

வினா:—ஊழ்வினைப் பயனுக்கேற்ப மனிதப் பிறப்பையடையக் கடவுளுடைய இருப்பில் நம்புவது மடமையே?

விடை:—ஊழ்வினைப்பயனாலேயே சரீரமுண்டாகிறதே தவிர ஈசுவரனால் அல்ல என்றால் ஒரு ஜீவன் தானாகவே துன்பத்தைத்தரும் பிறப்பையடையாது. எககாலமும் மேன்மேலான பிறப்பையே எடுத்துக்கொள்ளும். ஊழ்வினைப்பயனின் வசமானதே ஜீவன் என்றால் சரியாகாது. ஏனெனில் சுயமாகவே திருடன் தண்டனையை விதித்துக்கொள்ளமாட்டான் (கொலைபாதகனும்) தூக்குமரத்திலேறமாட்டான். அதிகாரம் படைத்த அரசனுடைய ஆஞ்ஞைகளினாலேயே இவைகள் நிறைவேற்றப்படுகின்றன. சரீரமெடுப்பதற்கும் ஊழ்வினைபயன்களுக்குத்தக்கவாறு பிறப்பையளிப்பதற்கும் கடவுளே காரணமென்று நீங்கள் நம்பாமலிருக்கமுடியாது.

வினா:—குடி, மயக்கத்தை உண்டுபண்ணுவதுபோலவே வெளிசகாயமன்னியிலேயே தன் கர்மங்களுக்கேற்ற பயனை ஜீவன் பெறுகிறது?

விடை:—இது அறிவீனமே. குடிப் பழக்கத்திற்குப் புதிதானவர்கள் மயக்கத்தை அடைவதுபோல, பழகினவர்கள் அடைவதில்லை. உங்களுடைய சித்தாந்தம் சரியாயிருக்குமேயானால், சில பாபஞ்செய்தவர்கள் அடையும் கஷ்டங்களைவிட குறைவாகவே பெரும்பாபிகள் பெறல்வேண்டும்.

வி௵:—சுபாவத்திற்கு ஏற்றவண்ணம் ஒவ்வொருவனும் தண்டிக்கப்படுகிறான். விடை:—சுபாவத்திற்கேற்ற விதமானல் அதற்கு ஆரம்பமும் முடிவும் கிடையாது. எவ்விதமெனில் எதிர்பாராத காரணங்களினல் சுத்தமான தகடு அழுக்காகாமலும் அழுக்கடைந்தது பழைய சுத்தத்திற்குத் திரும்பாமலும் இருப்பதுபோலவே அன்னியகாரணங்களால் பாபபுண்ணியபயன் ஏற்படுகிறதில்லை.

வி௵:—காரியசித்திக்குச் சம்யோகம் (சேர்க்கை) தேவையானது. தயிருக்குப் பால், புளிப்பு இவ்விரண்டினுடைய சேர்க்கையும் அவசியமானது. இவ்விதமிருக்க (பரிசு, தண்டனை) இவைகள், கர்மங்களுடன் ஜீவன் சேருவதினல் உண்டாகிறதென நம்பக்கூடாது ?

விடை:—சேர்த்துவைக்கிற அன்னியப் பொருளன்னியில் பாலும் புளிப்பும் சேருகிறதில்லை. ஜீவன்களுடைய கர்மங்களுடன், அவைகளுடைய பலனைச் சேர்த்துவைக்க மூன்ருவதான ஈசுவரன் தேவை. ஏனெனில்ஜடப்பொருள்கள் ஏற்றவாறு இயற்கையாகவேசேர்ந்துக்கொள்ளகூடியதன்று. ஜீவன் அற்பஞ்ஞமானபடியினல் தானகவே தன்னுடைய கர்மபலன்களை அறியக்கூடியதன்று. எனவே ஈசுவரனல் நிர்ணயிக்கப்பட்ட சிருஷ்டி கிரமப்பிரகாரமே ஊழ்வினைகளுடைய பலன்விளைகின்றன.

வி௵:—கர்மங்களிலிருந்து விடுதலையடைகிறவனே (முக்தியைப்பெற்று) ஈசுவரனுகிறன்! விடை:—அநாதிகாலந்தொட்டு ஜீவனுடன் கூடவே கர்மமும் இருந்துவருகிறது. அதிலிருந்து ஜீவன் விலகியிருக்கமுடியாது.

வி௵:—கர்மங்களைச்செய்யவேண்டிய அவசியம் ஆரம்பமற்றதன்று.

விடை:—இவ்விதமானல் கர்மங்களை ஜீவனுக்குச் செய்ய சக்தியில்லாதிருந்தகாலம் ஒன்றிருந்திருக்கவேண்டும். எனவே அது விளங்காமலிருந்த பொருள் ஒன்றில் கர்மங்களைச் செய்யும் சக்தி புகுத்தப்பட்டதாகும். இவ்விதமிருக்க ஏன் முக்தியைப்பெற்ற ஜீவன்களைக்கொண்டு கர்மங்களைச் செய்யச் சொல்லக்கூடாது? கர்த்தாவிற்கும் கர்மத்திற்கும் உள்ள சம்பந்தம் பிரிக்கமுடியாதது. எக்காலமும் வேருகாது. இதைப்பற்றி எட்டாவது அத்தியாயத்தில் எழுதியுள்ளோம். எவ்வளவு படர்ந்தஞானம் சக்தி ஆகியவைகளைக் கொண்டிருந்த பொழுதிலும் ஜீவன், கடவுளுக்குச்சரியாகாது. ஏனெனில் இக்குணங்கள் எல்லையுள்ளவைகளே. யோகபலத்தினல் தன் சக்தியை வேண்டிய அளவுஉபயோகித்துக் கொள்ளலாம். சரீரத்தைப்போலவே ஜீவனும் விருத்தியடையக்கூடியதென்று சமணர்கள் நம்புகிருர்கள். இது ஏற்காததே. ஏனெனில் சிறு புழுவினுடைய ஜீவன், யானையுடைய சரீரத்திலும், யானையுடைய ஜீவன் புழுவினுடைய சரீரத்திலும் தங்கமுடியாதே என்று வினவவேண்டும். தூளி அணுவினுங்கூட இருக்கவல்ல சூக்ஷ்மபொருளேயாகும் ஜீவன். ஆனல் அதனுடைய சக்தியோ நிரம்பு,மின்சாரம்,சரீரம் முதலானவைகளுடன் கூடியிருந்திருக்கிறது. எனவே சரீரத்தில் நடக்கும் எல்லாவற்றினுடைய அறிவும் அதற்கு உதயமாகிறது. நல்லொழுக்கத்தினல் நன்மையையும் தீயவொழுக்கத்தினல் தீமையையும் அடைகின்றது. சமணசமய நம்பிக்கைகளை இவைகள் விளக்கிக்காட்டும்.

रे जीव भवदुहाइं इकं चिय हरइ जिणमयं धम्मं ।
इयराणं परमं तो सुहकय्ये मूढमुसि ओसि ॥ பிரக. இரத். 2, 60, 3.

"ஏ ஜீவனே! சமணமுனிகளால் வெளியிடப்பட்ட தர்மத்தைப் பற்று வதினாலேயே பிறப்பு இறப்பினுடைய துக்கங்களும், லௌகிகப்பொருள்களின் ஆசைகளும் தீரும். சமணமுனிகளையே பரமாசிரியர்களாகவும் மெய்யான தேவர்களாகவும் நீ நம்புவாயாக. ரிஷபதேவர் முதற்கொண்டு மகாவீரன் வரையிலுள்ள சமணமுனிவர்களைத்தவிர வேறான பிரம்மா ஹரிஹர முதலானவர்கள் பூஜிக்குத்தகுந்தவர்களல்லர். சுய க்ஷேமத்திற்காக அவர்களைப் பூஜிப்பவர்கள் பேதைகளே. சமணசமயத்தையும் அதனுடைய முனிகளையும் நம்பாமல் பிறசமயஆசாரியர்களின் போதனைகளை நம்புகிறவர்களுக்கு நன்மை யொன்றும் விளைகிறதில்லை" இங்ஙனம் சமணர்கள் கூறுகிறார்கள். சமண நூல்கள் எவ்வளவு திறமையற்றதென்பதை கற்றுணர்ந்தவர்கள் கவனிக்கவேண்டும்.

अरिहं देवो सुगुरु सुद्धं धम्मं च पंच नवकारो ।
धन्नाण कयच्छाणं निरन्तरं वसइ हिययस्मि ॥ பிரக. இரத். 2, 60, 2.

தேவர்களுக்கெல்லாம் தேவனையும், பிரகாச சுவரூபனையும், புண்ணிய புருஷனையும், சர்வத்தையும் அறிந்தவனையும், சாஸ்திரங்களைப் போதிக்கிற வனையும், பரிசுத்தனையும், மாசற்றவனையும், தயாளுவாயும், உள்ள ஜினர்களால் கூறப்பட்டவழிகளைக்கொண்டு ஒழுகுவதினாலேயே துக்கத்திலுழலுகிறவர்கள் முன்னேற்றமடையலாம். ஹரிஹர முதலானவர்களால் போதிக்கப்பட்ட சமயமானது உலகநன்மையை உண்டாக்கக் கூடியதன்று.

சால சிறந்த புண்ணியவான்காளால் வெளியிடப்பட்டு போற்றப்பட்ட நான்கு நன்மை களாவன:—(1) ஜீவகாருண்ணியம் (2) மன்னிப்பு (3) மெய்யறிவு (4) நல்லோருடைய சேர்க்கையும், நல்ல ஒழுக்கமும். விசாரிப்போன்:— சகல மனிதனிடத்தும் கருணை யற்றிருப்பது ஜீவகாருண்ணியமாகாது. மன்னிப்பு விஷயத்திலும் இப்படியே. அறிவைப் பற்றிப் போற்றும்பொழுது அறியாமையிலிருப்பது; நல்லோர்களுடைய சங்கம் சேர்க்கை இவைகளைப்பற்றி பேசிக்கொண்டு இருளில் திண்டாடுவது; பட்டினியிருப்பதை முக்தியென்று கூறுவது, இவைகளெல்லாம் அழகானதல்ல. சமண சமயத்தைப்பற்றி இவ்விதம் புகழப்பட்டிருக்கிறது.

जइन कुणसि तव चरणं न पढसि न गुणोसि देसि नो दाणम् ।
ता इत्तियं न सक्किसिजं देवो इक्क अरिहन्तो ॥ பிர. இரத். 2, 2.

"மனிதனே! தவங்களைச்செய்ய நீ சக்தியற்றிருந்த பொழுதினும், உன்னுடைய சுபாவத்தைத் திருத்திக்கொள். நீ சூத்திரங்களைப்படிக்கமுடியாது. பிரகரண இரத்தினாகரம் முதலான நூல்களில் சொல்லப்பட்டிருக்கும் உண்மைகளைக் குறித்துத் தியானஞ்செய்; உன்னால் வேண்டியவர்களுக்குத் தானங்கொடுக்கமுடியாது. அர்ஹத் (சமணமுனி) ஒன்றையே ஆராதனைக்கும் பூஜை

க்கும் யோக்கியமென்று அறி; சமண சமயத்தை மிகச்சிறந்த சமயமென்று நம்பு; இந்நம்பிக்கைகளெல்லாம் உன் முன்னேற்றத்திற்குப் பெரும் சாதகங்களாகும்.''

விசா-ன்:—ஜீவகாருண்யமும், தயையும் நல்ல குணங்களே. என்றாலும் பட்சபாதத்தினால்மங்கிப்போனால்' ஜீவகாருண்யம் மிருகத்தன்மைக்கும் தயை அபகாரத்திற்கும் சமானமாகின்றன. எக்காலமும் எப்பிராணியிடத்தும் தயையுடனிருப்பது ஆகாதகாரிய யாகும். தண்டிப்பதினாலேயே துஷ்டனிடத்தில் தயைக்காட்டுகிறோம். தண்டியாமல் அவனை விட்டுவிட்டால் ஆயிரக்கணக்கானவர்கள் அவனால் துன்பத்திற்காளாவார்கள். மிருகத்தனத்தினால் ஏற்படக்கூடிய கஷ்டம் இவ்வித ஜீவகாருண்ணியத்தினாலும், பழிக்குப் பழிவாங்கும் குணத்தினால் விளையும் துன்பங்கள் இத்தகைய தயையினாலும் உண்டாகும். சகலபிராணிகளுடைய துன்பத்தைப் போக்குவதும், அவைகளுடைய நன்மையைக் கோருவதுமே ஜீவகாருண்யமாகும். துண்டு துணியைக் கொண்டு வடிகட்டி ஜலத்தைக்குடிப்பதும், அற்பப்புழுக்களினுடைய பிராணனைக் காப்பாற்றுவதும் அல்ல. இவ்வித ஜீவகாருண்யத்தை வாய்ப்பேச்சிலேயே சமணர்கள் நம்புகிறார்கள். காரியமுறையில் செய்து காண்பிப்பது கிடையாது. நிறத்தைக் கவனியாமல் அன்னமளிப்பதும் பிறமதத்திலுள்ள மேதைகளை வணங்கிப் போற்றுவதும் ஜீவகாருண்யமாகாது. உண்மை ஜீவகாருண்யத்தின் தத்துவத்தை யறிந்திருந்தால் இவ்விதம் கூறமாட்டார்கள்:—

(1) பிற மதவாதியைப்புகழுவது, அவனுடைய நல்ல குணங்களை மெச்சுவது; (2) அவனை வணங்குவது; (3) அதிகம் அவனுடன் 'பேசுவது; (4) அடிக்கடி அவனுடன் பேசுவது, (5) நல்ல உடை அன்னம் ஆகியவைகளை அவனுக்கு அளிப்பது; (6) அவனுக்கு விக்கிரக ஆராதனைக்குத் தேவையான புஷ்பம் வாசனைகள் முதலியவைகளை யளிப்பது. இவைகளைச் செய்வதிலிருந்து சமணர்கள் தடுக்கப்பட்டிருக்கிறார்கள், இதை **விவேகசாரம்** பக்கம் 121-ல் காணலாம்

**விடை:**— தங்களுடைய சமயத்தைச் சேராமல் பிறமதத்தைக் கொள்கிறவர்களிடம் எவ்வளவு வெறுப்பு, பகை துவேஷம், ஆகியவைகளுடன் கூட சமணர்கள் நடந்துகொள்ளுகிறார்கள் என்பதை புத்திமான்கள் அறியட்டும். பிறமதத்வர்களிடம் கொஞ்சங்கூட மரியாதைக் காட்டாதவர்களை ஜீவகாருண்ணியமற்றவர்களென்றே சொல்லவேண்டும். தன் சொந்த குடும்பத்தைச் சேர்ந்தவர்களைப் போற்றுவது பெருங்காரிய மாகாது. பெரும் குடிம்பத்தைச் சேர்ந்தவர்களென்றே சமணர்களைச் சொல்லலாம். ஏளியோர்களிடம் கொஞ்சங்கூட மரியாதைக் காட்டாதவர்களைப் புத்திமான்கள் ஜீவகாருண்ணியவிளக்கமற்றவர்களென்றே கூறுவ்ரர்கள். மதுராபுரியின் அரசனுடைய திவானான நமூசி என்பவரைச் சமணர்கள், தங்கள் மதவிரோதி யென நினைத்துக்கொண்டு கொலை செய்து விட்டார்களென்று விவேகசாரம் பக்கம் 108-ல் கூறப்பட்டிருக்கிறது. தவப்பயனால் பிராயச்சிதம் செய்துகொள்ளவே கொலை பாதகர்களும்

சுத்தமாய் விட்டார்களாம். பிறமதக்காரர்களுடைய பிராணனைப் பழிவாங்கும் வகையில் குரோதபுத்தி யுடையவர்களைப் பாதகர்கள் என்று தான் கூற வேண்டும். கொலை செய்வதுதான் ஜீவகாருண்யமோ?

சத்சங்கம் முதலானவைகளின் விளக்கம் பரமா கமன சார் என்னும் நூலில் இருக்கிறது. ஏற்றநம்பிக்கை, நல்லசங்கம் நல்ல அறிவு, நல்லொழுக்கம் இந்நான்குமே மோட்ச சாதனங்களாகும். யோகதேவர் இவைகளை விரித்து விளக்கியுள்ளார். ஜீவனையும், மற்றபொருள்களையும் பற்றி ஜயின நூல்கள் கூறுவதில் உறுதியான நம்பிக்கை: சமண சமயத்தில் ஆசை: இவைகளே ஏற்ற நம்பிக்கையும் நல்ல சங்கமுமாகும்.

**रुचिर्जीनोक्ततत्त्वेषु सम्यक् श्रद्धानमुच्यते ।**

ஜயினர்களால் நம்பபட்ட தத்வங்களைத் தவிர்த்து வேறொன்றையும் நம்பாமலிருப்பது.

**यथावस्थिततत्त्वानां संक्षेपाद्विस्तरेण वा ।**
**यो बोधस्तमत्राहुः सम्यग्ज्ञानं मनीषिणः ॥**

ஜீவன், தத்வங்கள் இவைகளைப்பற்றின பூரணஞானத்தையும் பூரணமில்லாத ஞானத்தையும் புத்திமான்கள் நல்ல அறிவு என்கிறார்கள்.

**सर्वथाऽनवद्ययोगानां त्यागश्चारित्रमुच्यते ।**
**कीर्तितं तदाहिंसादि व्रतभेदेन पञ्चधा ॥**
**अहिंसासूनृतास्तेयब्रह्मचर्य्यापरिग्रहाः ।**

நிந்திக்கத்தகுந்த பிறமதங்களுடைய எவ்வித சேர்க்கையு மன்னியிருப்பது நல்லொழுக்கமாகும். விரதங்கள் ஐந்துள. (1) (அஹிம்சை) எப்பிராணிக்கும் தீங்கிழைக்காமலிருப்பது. (2) (ஸூனிருதா) இன்சொல் (3) (ஆஸ்தேய) களவாடாமலிருத்தல் (4) (பிரம்மச்சரிய) காமஇந்திரியங்களை அடக்குதல் (5) (அபரிக்கிரக) துறந்து விடுதல். அஹிம்சை, களவாடாமலிருத்தல், முதலானவைகள் சிறந்தவைகளே. ஆனால் பிறமதங்களின் நிந்தனை, முதலானவைகளெல்லாம் கொடியவைகளாச்சுதே. முன் சொன்னதினுடைய நன்மைகளையும் பழுதாக்கி விடும் போலிருக்கின்றனவே.

ஹரி, ஹரன் முதலானவர்களால் விதிக்கப்பட்ட கொள்கைகளின் பிரகாரம் உலகத்தின் மேன்மை பெருகாதென்று மேற் சொன்னதிலிருந்து வெளியாகிறது. சகல சாஸ்திரங்களிலே வல்லவனையும், தர்மாத்மாவாயும் செய்யக்கூடிய ஒரு மதத்தை நிந்திப்பது பொறாமையே யாகும். கேவலம் தீர்த்தங்கரர்களை புகழ்வது வெறும் பிடிவாதமேயாகும். நல்லொழுக்கம், அறிவு, தர்மகுணம் இவைகளற்றிருந்த பொழுதிலும் சமண சமயத்தைச்சரியானதென்றும் சத்திய மானதென்றும் சொல்லுகிறவனைச் சிறந்தவன் என்பதும், தர்மகுணம் நல்ல எண்ணம் உடையவர்களைச் சமணசமயத்தை நம்பாத காரணத்தினால் குறைந்தவர்களென்பதும் எவ்வளவு அறிவீனமான பேச்சு? மயக்கமுடைய

வர்களென்றும், பாலபுத்தியை யுடையவர்களென்றும் சொல்லுவதை விட அவர்களை என்னவென்பது. இவைகளிலிருந்தெல்லாம் அவர்களுடைய குருமார்கள், முழுவதும் கற்றுணர்ந்தவர்களில்லை யென்பது விளங்கும். அவர்கள் சுயநலத்தைக் கருதுகிறவர்களே. மதங்கள் யாதொன்றையும் நிந்திக்காமலிருந்தால் எவரும் நேர்நெறியிலிருந்து சுயங் காட்டி [இழுக்கப்பட்டிருக்க மாட்டார்கள். இவர்களுடைய மனோ வெண்ணமும் சித்தித்து இராது. மக்களை நாசஞ்செய்யவே சமண சமயம் வல்லதென்றும் வேத மதமே கைத்தூக்கி விடவல்லதென்றும், ஹரிஹரன் முதலானவர்கள் சு (சரியான) தேவர்களென்றும் ரிஷபதேவர் முதலானவர்கள் பொய்யானவர்களென்றும் விளங்கும்.

**जिणवर आणा भङ्गं उमग्ग उस्सुत्तले सदेसणउ ।**
**आणा भगे पावंता जिणमय दुक्करं धम्मम् ॥** பிர. இர. 2, 6, 11.

முற்றுங்கடந்த தீர்த்தங்கரர்களால் ஆக்ஞாபிக்கபட்ட கட்டளைகளைமீறுவதினல் அவைகளைக் கீழ்படியாமலிருக்கிறவன் சிர்குலைந்து பாபரூபமான துக்கத்தை யடைந்து துன்பப்படுவான். ஜினேசுவரர்களால் விதிக்கப்பட்ட கடமைகள் போன்றவைகளைப் பின்பற்றி நடப்பது மிகவும் கடினமான காரியமாகும். எனவே அவைகளுக்குப்பங்கம் ஏற்படாத வண்ணம் நடந்து கொள்ளவேண்டும். தற்புகழ்ச்சி, சுயசமயத்தின் பெருமை, பிற சமயங்களின் நிந்தை, இவைகளெல்லாம் அறிவீனமேயாம். பிறமதங்களிலுள்ள வித்வான்களால் புகழப்பட்டதே போற்றுவதற்கு ஏற்றதாகும். மேலும்:—

**षहुगुणविज्भा निलयो उत्सुत्तभासी तहा विमुत्तव्वो ।**
**जह्वरमणिजुतो विहुविग्घकरो विसहरो लोए ॥** பிர. இர. 2, 18.

விஷப்பாம்பின் முடியில் விளங்கும் மரகதமணியைத் தோடாமலிருப்பதே சரியானதுபோல் எவ்வளவு கற்றுணர்ந்தவர்களாயிருந்த பொழுதிலும் ஜயினரல்லாதவர்களுடைய சங்கத்தை ஜயினர்கள் தேடவேக்கூடாது. இது எவ்வளவு ஒழுங்கீனமானதென்று கவனியுங்கள்?! சமண முனிவர்களும் அவர்களுடைய சீடர்களும் கற்றுணர்ந்த வர்களாயிருந்தால், அறிவாளர்களிடம் ஆசையுள்ளவர்களாயிருப்பார்கள். அவர்களுடைய தீர்த்தங்கரர்கூட அவித்வானுயிருக்க, வித்வான்களை அவர்கள் எவ்விதம் போற்றக்கூடும்? மலம் மண் குப்பைகளிலிருந்த பொழுதிலுங் கூட மரகதத்தை விரும்பாதவன் எவன்? சமணர்களைவிட, பட்சபாதக்காரர்களும், பிடிவாதக்காரர்களும் முரண்பாடானவர்களும், வித்தை யற்றவர்களும் வேறு யாரும் இல்லை என்பது இதிலிருந்து வெளியாகிறது.

**अइ सयपा वियपा वाधम्मि अपव्वे सुतो विपावरया ।**
**न चलन्ति सुद्धधमार धन्ना किविपावपव्वेसु ॥** பிர. இர. 2, 3, 26.

சமண சமயத்திற்கு விரோத மானவர்களைச் சமணர்கள் பார்க்க வேண்டாம்,

இக்கட்டளை எத்தனை அசங்கியமாகயிருக்கிற தென்பதைப் படிப்போரே ஊகித்துக்கொள்ளலாம். சத்திய சமயத்தைப் பரவச் செய்கிறவன் எவனுக்கும் பயப்படவேண்டியதில்லை யென்பதில் சந்தேகம் கிடையாது. சமண ஆசிரியர்கள் தங்களுடைய போதனைகள் அறிவீனமானதென்றும் விசாரணையில் விழுந்து போய்விடுமென்றும் அறிவார்கள். எனவே வேறான மற்றவைகளைத் தூஷித்து ஒன்றும் அறியாதவர்களைத் தங்கள் வசித்திலேயே வைத்துக் கொள்ளலாம் என நினைத்தார்கள். மேலும்:—

नामं पितस्सअ सुहं जेणनिदिठाइ मिच्चपव्वाइ ।
जोसिं अणुसङ्गा उधम्मीणविहोइ पावमई ॥ பிர. இர. 3, 27.

சமணசமயத்திற்கு மாறான மற்றவைகளெல்லாம் மனித ஜாதியைப் பாபத்திற்கு ஆளாக்கும். ஆதலால் யாவற்றையும் தள்ளி சமண சமயத்தைப் பின்பற்றுதல் சிறப்பானது.

சமண சமயம், அதைச்சேராதவர்களைப் பகைத்து துவேஷம் செய்து கொண்டு விரோதம் செய்து கொள்ளச் சொல்லுகிறது. எனவே ஜனங்களைத் தீயக் குணமுள்ளவனுக்குகிறது. பிறமதங்களை வெறுப்பத்தில் சமணர்களைப் போன்றவர் வேறெவருமில்லை; சரிசமமாகச் சகலத்தையும் பழித்து தன்னுடையதைப் புகழுகிறார்கள். அறிவாளர்கள் எச்சமயத்தைச் சேர்ந்தவர்களாயினும் சரி! ஒரு சமயத்தனுடைய நன்மைகளை எடுத்துச் சொல்லி தீமைகளை உதறி விடுவார்கள். இதுவும் இன்னுமொரு உதாரணமாகும்:—

हाहा गुरुअअ कज्भं सामीनहु अच्छिकस्स पुक्करिमो ।
कह जिण वयण कह सुगुरु सावया कहइय अकज्मं ॥ பிர. இர. 2, 36.

சமண சமயம், எல்லாம்வல்ல சமண முனிவர்களுடைய உபதேசம், சமணர்களுடைய போதனை இவைகளுடன் உற்று நோக்கும் பொழுது மற்றவைகள் மெலிந்துபோகும்; இதிலிருந்து விளங்குவது என்ன வென்றால் சைன ஆசாரியர்களே உண்மையான தேவர்கள். சமணசமயமே சத்தியசமயம். பிறமதாசாரியார்களுடையது பொய்யானது, அவர்களும் பொய்த் தேவர்களே!

கடைத் தெருவில் பழம் விற்கும் பெண் மக்களைப்போலவே சமண சமயமுமெனத்தோன்றுகிறது. புளித்துக் கொண்டிருந்த பொழுதிலும் தன்னுடையதை இனிமையானதெனப் புகழ்ந்து பிறர்கள் விற்பத்தைத் தூஷிப்பதுபோலவேயாம். பிறமதக்காரர்களைப் பணிவது கூடபாபம் என்று சமணசமயம் கற்பிக்கிறது.

सप्पो इक्कं मरणं कुगुरुअणंता इदेइ मरणाइ ।
तोत्ररिसप्पं यहियुं मा कुगुरुसेवणं भद्दम् ॥ பிர. இர. 2. 37.

நாகத்தின் முடியிலுள்ள வைரத்தை வேண்டாமல் விட்டு விடுவது போலவே சமணர்களல்லாத தர்மபுருஷர்களைக் கூட விலக்குவதையே சமணர்கள் சரி யென்கிறார்களென்பதை முன்னரே கூறியுள்ளோம். பிறமத தூஷணையில் இன்னும் ஒரு பங்கு அதிகரித்திருக்கிறார்கள். சொல்லுவார்கள்:—

சமண முனிவர்களைத் தவிர ஏனையோர்களெல்லாம், பொய்யாச்சாரியர்களே. பாம்பை விடகெட்டவர்கள். அவர்களைக் காண்பதும் பணிவிடை செய்வதும், கூடிசேருவதும் கூடாது. பாம்புக்கடியினால் ஒருவன் ஒருதடவையே மரணத்தை யடைகிறான். சமணரல்லாத சமயத்தைப் பற்றின பிறமதாசாரியருடன் சேருவதினால் பிறப்பு இறப்புச்சக்கரங்களில் அகப்பட்டுக் கொள்ளுகிறான். நல்லவனே! சமணசமயத்தைச் சேராத ஆசான் பக்கத்தில் கூட நில்லாதே. அவனுக்குக் கொஞ்சம் பணிவிடை செய்தால் கூட துன்பம் விளையும்.

சமணர்களைவிட கல்நெஞ்சர், தவறானவழியில் செல்லுபவர், அதைச் சரியெனக் கூறுபவர் எவருமிலர். உண்டோ? பிறரைத் தூற்றியும் தன்னைப் போற்றியும் கொள்ளாவிடில் தங்களுக்குப் பணிவிடை செய்து பூசை செய்ய மாட்டார்கள் என எண்ணுகிறார்கள் போலும். உண்மையாதெனில் அவர்கள் பெரும் பாக்கியமற்றவர்களே. சிறந்த மேதைகளைப் பணிந்து அவர்களுடன் சேராதவரையில் மெய்ஞ்ஞானமும் சத்தியநெறியின் சேர்க்கையும் கிடைக்காது. எனவே கல்விக்கு விரோதமான பொய்களைக் களைந்து வேதங்களால் விதிக்கப்பட்ட சத்தியவார்த்தைகளைக்கொண்டு நடப்பதே சமணர்களுக்கு உசிதமாகும்.

மூல—किं भणिमो किं करिमो ताणह्यासाण धिठदुठाणं ।
त्ते दंसि ऊण लिङ्गं खिन्ति नरयम्मि मुद्धजणं ॥ பிர. இர. 2. 40.

சீர்திருத்தம், மாறுதல், தீச்செயல்கள் இவைகளிலிருந்து மீறினவர்களுடைய சேர்க்கையை விலக்கவேண்டும். இவர்கள், ஈவோனுடைய அழிவைத்தேடுகிறவர்களே. (பிறசமயத்தைச்சேர்ந்த) பொய்யாசாரியருக்கு நன்மை செய்யவிரும்புகிறவன் சுய நாசத்தை தேடுபவனேயாவான். சிங்கத்தின்மேல் கருணைகொண்டு அதனுடைய கண் கட்டை அவிழ்த்து விட்டவன் அதனாலேயே கொல்லப்பட்டு மாண்டுபோவது போலாம். ஆதலால் பொய்யாசாரியர்களிடமிருந்து விலகியிருப்பதே சாலச்சிறந்தது.

சமணரல்லாதவர்களை எவ்வளவு பகையுடன் சமணர்கள் நடத்துகிறார்களோ, அவ்வளவு பகையுடன் அவர்களையும் பிறர் நடத்துவார்களானால் பெருங்கெடுதல் விளையும். எவனும் அவர்களுக்கு எவ்வித உதவியும் செய்யாமலிருந்துவிட்டால் துக்கத்திற்காளாகி காரியசித்தி பெறாமலிருப்பார்கள். தன்னைப்போலவே பிறர்களையும் ஏன்சமணர்கள் நினைக்கக்கூடாது?

மூல—जहजहतुट्टइ धम्मो जहजह दुठाणहोय अइवदउ ।
समद्दिठिजियाण तह तह उल्लसइस मत्तं ॥ பிர. இர. 2. 42.

பார்வைக்கு அருவருப்பை யளிக்கிறவர்களும், நிஷ்டையினல் பிராயச்சித்தம் செய்துகொள்ள வேண்டிய தீயச் செயல்களுடன்கூடினவர்களும், தண்டனைக்கேற்றவர்களும், பாபிகளும், நான்காம் ஆசிரமத்தைத் தழுவின திரிதண்டத்தையுடைய சந்நியாசிகளும், பிராமணர்களும் இவர்களுக்குப் பணிவிடை செய்து மரியாதை செய்வதைப் பார்த்தால், (அறியும் தன்மையைப் படைத்த) சமணமுனிகளின் பெருமையும், அறிவும் வெளியாவதில் விந்தை என்ன?

கவனியுங்கள்!! சமணர்களைப் போல் பிறரிடத்தில் பகை, துவேஷம், பட்சபாதம் இவைகளை அதிகமுடையவர்கள் வேறு எவரேனும் இருத்தல் முடியுமோ? பிறரிடத்தும் இக்குற்றம் உண்டு. ஆனல் இவ்வளவு அதிகமாக கிடையாது. பாபத்திற்குக் காரணம் பகையே. எனவே பாபாசாரங்களைச் செய்கிறவர்களாக ஏன் சமணர்கள் ஆகமாட்டார்கள்.

**மூல—सङ्गो विजाण अहितत्ते सिंघम्माइ जेपकुव्वन्ति ।**

**मुतूण चोरसङ्गं करन्ति ते चोरियं पावा ॥** பிர. இர. 2. 75.

திருடர்களுடன் சேருவதினல் உண்டாகும் பயம் மூக்கை * வெட்டி விடுவதினல் விலகிவிடுவது போல், திருடர்கள் சேர்ந்து உண்டாகும் பிறமதங்களைச் சேருவதினல் சமணர்களால்லாதவர்கள் பயப்படுகிறதில்லை.

பிறரைக்குறித்து கூறுமிடத்து மனிதனின் மனதுவெளியாகிறது. சமண சமயத்தில் மாத்திரம் யோக்கியமானவர்களிருக்க பிற மதங்களில் திருடர்களிருக்கிறர்களென்பது உண்மையாகுமா? அறியாமையினலும், தீயோர்களுடைய சேர்க்கையினலும் மாறின புத்தியையுடையவர்களே பிறர்களுடைய விஷயத்தில் பகையுடனும் துவேஷத்துடனும் இருக்கிறர்கள். சமண சயயத்தைப்போல் பிறமதங்களிடம் பகை கொள்ளும்படி போதிப்பது வேறுஎதுவும் கிடையாது.

**மூல—जच्छ पसुमहिसलरका पव्वंहोमन्ति पावन वसीए ।**

**पूअन्तितंषि सड्ढाहा ही लावी परायस्सं ॥** பிர. இர. 5. 76.

சமண சமயத்தைச் சேராதவர்கள் பொய்ப் போதனை செய்பவர்களே. சமணர்களுக்கே சத்திய அறிவுண்டு. எனவே பொய்ப் போதனை செய்வோர்களின் மதத்தைப் பரவச்செய்கிறவன் பாபியாவான்.

சாமுண்டா, காலிகா, ஜுவாலா, இத்தேவதைகளுக்காக நவமி விரதமிருப்பது பாபமானல் பஜுஸண் முதலானவைகளைப் போன்ற சமண விரதங்கள் ஏன் பாபமாகாது? விரதமிருக்கப் பெரும் கஷ்டம் உண்டாகிறது. வாமமார்க்கிகளுடை லீலையைக்கண்டிப்பது பொருத்தமானதே. சாஸனதேவி, மருத தேவி முதலானவைகளைப்போன்ற அவர்களுடைய தேவதைகளைக்கண்டிக்காமலிருப்பதின் காரணந்தெரியவில்லை. இவைகளைத் துர்தேவதைகளல்லவென்று சொல்லியும் விடமுடியாது. ஏனெனில் சாஸனதேவி மனிதன், ஆடு, இருவர்களுடைய கண்களைப் பிடுங்கியிருக்கிறள். இந்த ராக்ஷஸியை

*திருடர்களுக்குப் பண்டை காலத்தில் அளிக்கப்பட்ட தண்டனையாகும்

துர்கை, காளி முதலானவர்களின் சகோதரிகளாக ஏன் சொல்லக்கூடாது? தங்களுடைய விரதமாகிற இயச்சகானத்தைச் சால சிறந்ததென்றும், நவமி முதலானவைகளை இழிவானதென்றும் கூறுவது அறியாமையின் அடையாளமே யாகும். உண்மை உரைத்தல் என்பவைகளைப்போன்ற சத்தியவிரதங்கள் சகலருக்கும் மேன்மை யானது. சமணர்களாலும் மற்றவர்களாலும் கருதப்பட்ட விரதங்கள் ஏற்றதாகாது.

**मूल—चेसाणवन्दियाणय माहणडुं बाणजर कसिरकाणि ।**

**भत्ता भर कठाणं यियाणं जन्ति दूरेणं ॥** பிர. இர. 2. 82.

வேசி, கோமாளி, பாடகன். பிராம்மணர்கள், யாகங்களை அங்கீகரிக்கிறவர்கள், கணேசன் இவைகளைப் போன்ற பொய்த்தேவர்களையும் தேவதைகளையும் பூஜை செய்கிறவர்கள், இவர்களெல்லோரும் அறியாமையில் அழுந்தினவர்களே. பிறருக்கும் தப்பு வழிகாண்பிப்பவர்களே. ஏனெனில் இத்தெய்வங்களினாலேயே தங்களுடைய மனோவெண்ணங்களுடையசித்தியை எதிர்பார்க்கிறார்கள். எனவே சமண முனிவர்களிடமிருந்து விலகியிருக்கிறார்கள்.

பிறதேவதைகளைப் பொய்யென்றும் சுயமானவைகளை மெய்யென்றும் அழைப்பது சமணர்களுடைய பட்சபாதமேயாகும். வாமமார்க்கிகளுடைய தேவர்களைக் கண்டிக்கிறார்கள்; ஆனால் தங்களுடைய சாஸனைவக் கொடியதெனச்சொல்லமாட்டார்கள். (உபவாசம் இருக்கவேண்டிய) இரவில் சாப்பிட்டதற்காகச் சாஸனதேவி ஒருவனையடித்து அவனுடைய கண்களிளொன்றையும் பிடுங்கிவிட்டதாகச் சிரத்தா தின கிருத்திய (பக்கம் 46) த்தில் சொல்லப்பட்டிருக்கிறது. பின்னர் ஆட்டினுடைய விழியைக் காலியாயிருந்த மனிதனுடைய கண்குழிகளில் வைத்தாளென்றும் சொல்லப்பட்டிருக்கிறது. இரத்னசாகரத்தில் (இரண்டாம்பாகம், பக்கம் 67) உள்ளதைக் கவனியுங்கள். வழிப்பிரயாணிகளுடைய உபயோகத்திற்காக மருத்தேவி தன்னை விக்கிரகமாக மாற்றிக் கொண்டாள்.

**मूल—किंसोपि जणणि जाओ जणणी इकिं अगोविर्द्धि ।**

**जइमिच्छरओ जाओ गुणे सुतमच्छरं वहइ ॥** பிர. இர. 2. 81.

சமணசமயவிரோதிகள்—பிறமதத்தவர்கள்—பிறக்காமலிருந்தாலும் மேலாயிருக்கும். அல்லது பிறந்து வளராமலிருந்தாலும் நன்றாயிருக்கும்.

முனிவர்களால் போற்றப்பட்டு கருணையை ஆதாரவாய்க்கொண்ட சமண சமயம் வேண்டுமிடத்து சமணரல்லாதவர்களுடைய இறப்பைப்போதிக்கிறது. உண்மை யாதெனில் கருணையைப் பற்றி வெறும் பேச்சு பேசுகிறவர்களே. (கிரியாம்சத்தில் காட்டுகிறதில்லை.) கருணையைக் காண்பித்தால் புழு பூச்சிகளிடமே தவிர, சமணரல்லாத மானிடவகுப்பினிடமல்ல.

**मूल—शुद्धे मग्गे जाया सुहेण मच्छति सुद्धिमग्गामि ।**

**जे पुणअम्मग्गजाया मग्गे गच्चन्ति ते चुप्पं ॥** பிர. இர. 2. 83.

சமண சமயத்தைத் தழுவுகிறவர் மோட்சத்தைப் பெறுவது அதிசயமாகாது. ஆனால் சமணரல்லாத சமயத்தினிடைப்பிறந்து பொய்ச்சமயத்தைப்பற்றினவர் மோட்சத்தையடைவது விந்தையே:

சமண சமயத்தவர்கள் மாத்திரம் மோட்சத்தையடைகிறார்களென்பதும் ஏனையவர்கள் நரகத்தை யடைகிறார்களென்பதுமே இதன் வாதமாகும். நரகத்தையடைய சமணர்களிலேயே தீயோர்களே இல்லையா என்ன? அவர்களெல்லோருமா சுவர்க்கத்தை யடைவார்கள். அடைகிவார்களென்பது வீண் பைத்தியமே யாகும். இவ்வித ஒவ்வாதவார்த்தைகளில் அறிவீனர்களைத் தவிர வேறு எவரும் நம்பமாட்டார்கள்:

**मूल—तिच्छराणं पूआसम्मत्तगुणाणकारिणी भणिया ।**
**सावियमिच्छत्तयरी जिण समये देसिया पूआ ॥** பிர. இர. 2. ௯0.

சமண மூர்த்திகளைப் பூசிப்பது நல்லது. சமணரல்லாத மூர்த்திகளைப் பூஜிப்பது நல்லதல்ல. சமணக்கட்டளைகளை நிறைவேற்றுகிறவனே ஞானியாகிறான். காப்பாற்றாதவன் அங்ஙனம் ஆவதில்லை.

என்னவிந்தை!! வைணவர்களுடையதைப்போலவே சமணர்களுடைய மூர்த்திகளும் உயிரிழந்த ஜடம் அல்லவா? விக்கிரக ஆராதனை பொய்யானதே. இது சமணர்களுடையதுமாதிரியாயிருந்தாலும்சரி அல்லது வைணர்வகளுடையது மாதிரியாயிருந்தாலும் சரி. தங்களைத் தத்துவஞானிகளென வழைத்துக் கொண்டு அன்னியர்களை அவ்விதமாக அழைக்காமலிருப்பது அவர்களுடைய தத்துவஞான சூன்னியத்தைக் காட்டுகிறது.

**मूल—जिण आणा एधम्मो आणा राहि आण फुडं अहमुत्ति ।**
**इयमुणि ऊण यतत्तंजिण आणाए कुणहु धम्मं ॥** பிர. இர. ௯2.

தயை தாக்ஷிண்யம் இவைகள் சமண முனிகளால் போதிக்கப்பட்டவாறே தர்மமாகிறது. இதிலிருந்து வேறான பிறருடைய கட்டளைகளெல்லாம் அதர்மமே.

சமணர்களைத் தவிர மற்றவர்களில் சத்தியவாதியும் தர்மாத்மாவும் இல்லையென்பது எவ்வளவு அநியாயமானவார்த்தை? தர்மாத்மாவான பிறமதத்தவனைப் போற்றவுங்கூடாதா? சரீரவமைப்பு முதலானவைகள் மற்றவர்களுக்கிருப்பதைவிட விபரீதமாயிருந்தால் இது (அதாவதுசமயநெறிகளில் சார்வாதிகாரம்) ஏற்கும். தங்களுடைய நூல், வார்த்தை, சாது, முனி, முதலானவர்களைத் துதிப்பதில் கூலிக்குக் கூத்தாடுகிறவர்களைக்கூட தோற்கடிக்கிறார்கள். மேலும்

**मूल—वन्नेमिनारया उविजेसिन्दुरकाइ सम्भरंताणम् ।**
**भव्वाण जणइ हरिहररिद्धि समिद्धि विरुद्धोसं ॥** பிர. இர. 2. 25.

ஹரிஹரமுதலானவர்களைப்போன்ற தெய்வங்களுடைய அதிக ஆராதனையும் ஆதிக்கியப்பெருக்கும் ஜனங்களை நரகத்தில் தள்ளும். இதைக்காணுங்கால்

சமணர்களுடைய சரீரம் சிலிர்க்கிறது. அரசனுடைய உத்தரவை பங்கம் பண்ணுவதினால் துன்பங்கள் விளைவது போலவே சமணமுனிகளுடைய கட்டளைகளைக் கெடுப்பதனால் பிறப்பு இறப்பு துக்கத்தைப்பெறுகிறான்.

கவனியுங்கள்! அவர்களுடைய சூழ்ச்சி புரட்டு, எண்ணம் இவைகளை வெளிப்படுத்தியாய்விட்டது. ஹரிஹரருடைய அதிகாரமும் பக்தர்களும் இவ்வுலகில் அதிகமாவதை அவர்கள் காணச்சகியார்கள். பிறமதத்தைச் சேர்ந்தவர்கள் பொருளைச்சேமித்தால் அவர்களுக்கு பொறாமைத் தீ பொங்குகிறது. உலக ஐசுவர்யங்களெல்லாம் அவர்களைச் சேர்ந்து (அவர்களுடைய எதிரிகள்) ஆண்டிகளாக வேண்டுமென்றே எண்ணுகிறார்கள்போலும். அவர்களுடைய ஆசான்களின் போதனைகளை மன்னனின் கட்டளைக்கு ஒப்பிட்டிருக்கிறார்கள். ஏனெனில் அவர்கள் பொய்யர்களும் கோழைகளும் ஆவார்கள். மன்னனுடைய கட்டளைகளைச் சத்தியநெறிக்கு விரோதமானவைகளைக்கூட கொண்டு நடத்த வேண்டும். துவேஷபுத்தி, பகை இவைகளில் சமணர்களைவிட அதிகமானவர்கள் இருப்பார்களென்று நாம் எண்ணவேயில்லை. மேற்கொண்டு சொல்லுவதாவது

**மூல—जो देइशुद्धधम्मं सो परमप्पा जयम्मि नद्दु अन्नो ।**
**किं कप्पहुम्म सरिसो इयत्तरू होइकइयावि ॥** பிர. இர. 2. 101.

சமண சமயத்தை மறுக்கிறவர்கள் மடையர்களே. சமண முனிகளால் கூறப்பட்ட போதகாசிரியர்கள் சாதுக்கள், துறவிகள், கிரகஸ்தர்கள், ஆசிரியர்கள் முதலானவர்கள் தீர்த்தங்கரர்களுக்குச் சமானமானவர்களே. அவர்களை எதிர்க்கக்கூடியவர்கள் எவருமே கிடையாது'

என்னவிந்தை! பாலபுத்தியைக்கொண்டவர்களாகவில்லாவிடில் சமணர்கள் இவ்வறிவீனங்களுக்கு ஆளாகி அவைகளையும் நம்பிவரமாட்டார்கள். தற்புகழ்ச்சியைக்கூறும் வேசிகளைப்போன்றவர்களே இவர்களுடைய குருமார்களும்.

**மூல—जे अमुणि अगुण दोषाते कह अवुहाणहुन्तिमभच्छा ।**
**अहते विहुम भच्छाता विसअमि आण तुल्लत्तं ॥** பிர. இர. 2. 102.

பெருந்தேவருக்கு (ஜின)ப் பணிவிடைசெய்யாமலும் அவர்களுடைய கொள்கைகளை ஒழுகாமலும் இருப்பது சமணர்களுக்கு அழகல்ல.

பட்சபாதம், அறியாமை, பிடிவாதம் இவைகளின் பயன் போலும். இல்லாவிடில் இவ்விதம் கூறியிருக்கமாட்டார்கள். சமண சமயத்தின் உண்மைகளெல்லாம் ஏற்றுக்கொள்ளத்தகாதவைகள். சாதாரண அறிவைக் கொண்டவன்கூட ஒருதடவை சமணதெய்வம் நூற்கள் முனிகள் இவைகளில் கொஞ்சம் அறிவானேயனால் அவர்களுடைய சேர்க்கையை அடியோடே ஒழித்துவிடுவான்.

**மூல—वयणे विसुगुरुजिणवल्लहस्तके सिन उल्लस इसम्मं ।**
**अहकहदिण भणितेयं उलुआणंहरइ अन्धत्तं ।** பிர. இர. 2. 108.

சமணமுனிகளுடைய போதனைகளைப் போற்றுகிறவன் பூஜிக்கத்தகுந்தவன். மீறி நடக்கிறவன் பூஜிக்கத்தகாதவன். சமணமுனிகளைத்தவிர வேறு யாரையும் பின்பற்றி நடக்கக்கூடாது.

சமணர்கள் பேதைகளை ஏமாற்றி அவர்களைத் தங்கள்முன் ஆடுமாடுகளைப்போல் ஓட்டாமல் இருந்திருந்தால், தானாகவே வாழ்க்கையின் பயனைக் கைப்பற்றி முக்திக்கேற்றவர்களாக்கிக் கொண்டிருப்பார்கள். வழிதப்பினவர்களென்றும் பொய்யர்களென்றும், பொய்ப்போதகாசிரியர்களென்றும் சொன்னால் சமணர்க்ளுடைய மனம் புண்ணாகாதா? பிறர்களை இவ்விதமெல்லாம் கூறியழைப்பதினால் அவர்களும் அவ்விதமே வருந்துவார்கள். இதைப்போலொத்த அறிவீனங்களைப் போதிக்கிறார்கள், பாருங்கள்.

मूल—तिहुअण जणंमरन्तं दटूण निअन्तिजेन अप्पाणं ।
विरमातिन पावा उधिद्वी धिठत्तणं ताणम् ॥ பிர. இர. 2. 109.

மரணம் நேரிட்டபொழுதும் வியவசாயத்தையும் வாணிபத்தையும் கொள்ளவேண்டாம். இத்தொழில்களினால் நரகமே உண்டாகும்.

சமணர்கள் இத்தொழில்களை விடுவதற்கும் மனமில்லாமலிருப்பது விந்தையே. இதை விட்டால் ஜீவனோபாயத்திற்கு வழி கிடையாது போய்விடும். எல்லோரும் இச்சமண கட்டளையைக் கைகொண்டு நடப்பார்களேயானால் சமணர்களுக்கு உண்ணவும் பிழைத்திருக்கவும் எதுவும் கிடைக்காது. இம்மாதிரி ஒவ்வாதவைகளைப் போதிப்பது அறிவீனமே. சமணமுனிகளைச் சொல்லுவதில் குற்றமில்லை. அவர்களுக்குப் படிப்பில்லை. சத்சங்கமில்லை. ஆதலால் இவ்விதமாக எழுதிவிட்டார்கள்.

मूल—तइया हमाण अहमा कारण रहिया अनाण गव्येण ।
जेजंपन्ति उशुत्तं तेसिंदिद्धिछपाम्मिचं ॥ பிர. இர. 2. 121.

சமண நூற்களுக்கு விரோதமான நூற்களில் நம்புவோர்கள் தீயோர்கள். காரியசித்தியாகுமென்று இருந்த பொழுதிலும் சமணசமயத்திற்கு விரோதமாகப் பேசவுங்கூடாது நடக்கவுங்கூடாது. ஏதோ லாபமுண்டாகுமென்றிருந்தாலும் பிற யாதொருசமயத்தையும் கைப்பற்றவேண்டாம்.

சகல சமணமுனிகளும், அதைத்தாபித்தவர் உள்பட, பிறமதங்களைத் தூற்றுவதைவிட வேறொன்றும் செய்யவில்லை. இவ்வழியிலிருந்து மாறுவார்களென்றும் எதிர்பார்ப்பதற்கில்லை. சுயகாரியம் சித்திபெறவேண்டியிருக்குங்கால் சிடர்களுக்குச் சிடர்களாகவும் ஆகத்தயங்குகிறதில்லை. இவ்வார்த்தைகளைச் சொல்வதில் வெட்கமும் உண்டாகிறதில்லை. இதுவருந்ததக்கதே. மேலும்,

मूल—जम्वीर जिणस्सजिओ मिरइ उस्सुत्तले सदेसणओ ।
सागरकोड़ा कोड़िहिं मइ अइ भी भवरेण ॥ பிர. இர. 2. 122.

சமணமுனிவர்களிடம் தர்மமிருக்கிறது. அதுபோலவே தங்களிடத்திலும் பிறரிடத்திலும் இருக்கிறதென்கிறவன் கோடானுகோடி வருடங்கள் நரகத்திலிருப்பான். பின்னும் இழிவான பிறப்பையடைவான்.

அடடா! எவரும் அவர்களை மறுக்காமலிருக்கவேண்டி, அறிவிற்கு விரோதிகளான இவர்கள், இத்தடையைப் பிறப்பித்திருக்கிறார்கள். அனால் இதுமுடியாதகாரியமேயாகும். இவர்களுடன் எவ்விதம் வாதஞ்செய்யமுடியும்? மாறாகத்தெரிவித்து பிற மதங்களைத் தூற்றி காரியசித்தியைப் பெறுவதே ஏற்றதென்று எண்ணி யிருக்கிறார்கள்.

मूल—दूरे करणं दूरम्मि साहूणं तहयभावणा दूरे ।
जिधणम्भ सद्दहाणं पितिर कदुरकाइनिठवइ ॥ பிர. இர. 2. 127.

சமணசமயத்தைத் தழுவாவிட்டாலும் உலகத்தில் இதை யொன்றையே சத்தியமென்று நம்புகிறவன் துக்கசமுத்திரத்தைத் தாண்டுவான்.

மூர்க்கர்களை இழுக்க வேறுவழியும் உண்டோ? ஏனெனில் கர்மங்களொன்று மில்லாது முக்தியைப் பெறலாமே என்றெண்ணுவார்கள். இத்தனை அறிவிற் குறைந்த மதமும் உண்டோ?

मूल—कइया होही दिवसो जइया सुगुरुण पायमूलम्मि ।
उस्सुत्त सविसलवर हिलेओनिसुणे सुजिणधम्मं पிர. இர. 2. 128.

சமண நூற்களைநம்பி பிற மதநூற்களில் பக்திகொள்ளாதிருப்பவன் துன்பக்கடலைத் தாண்டுவான்.

பேதைகளைப் பிடிப்பதற்காகவே இவ்வார்த்தைகள் கூறப்பட்டிருக்கின்றன. ஏனெனில் இவ்வாசையைக் கொள்வதினாலேயே எவனும் துக்கசமுத்திரத்தைத் தாண்டமுடியாது. முன்பிறப்பில் செய்த பாபகர்மங்களின் பயனை அனுபவிக்காமலுமிருக்க இயலாது. அறிவிற்கு விரோதமான இப்பொய்களைச்சமணசமயத்தார் எழுதாமலிருந்திருந்தால் அவர்களுடைய சீடர்கள் வேதங்கள், சத்தியசாத்திரங்கள் முதலானவைகளைப் படித்து உண்மையை யறிந்து சமணநூலின் சிறுமையையும் சத்தியநூற்களின் பெருமையையும் அறிந்திருப்பர். மதியீனர்கள் மயங்கிவிட்டார்கள். கற்றுணர்ந்தவர்களே இவ்வலைகளை அறுக்கமுடியும். அறிவீனர்களால்முடியாது.

मूल—जह्नजेणं हिंभाणियं सुयववहारं विसोहियंतस्स ।
जायइ विसुद्ध बोही जिणआणा राह गत्ताओ ॥ பிர. இர. 2. 128.

சமண ஆசாரியர்களாலியற்றப்பட்ட இலக்கணம், உரை, பாஷ்யம், நியாயம், முதலானவைகளைப் படிப்பவர்களே இன்பமடைந்து தர்மாத்மாவாகிறார்கள். மற்றவர்களாலெழுதப்பட்டவைகளைப் படிப்பவர்கள் முன்னேறமாட்டார்கள்.

(விரதம்) பட்டினியிருப்பதன் துன்பத்தை அனுபவிப்பது தர்மகாரியமாகுமா? ஆகாரம் பானம் இவைகளன்னியிருத்தல் தர்மகாரியமாகுமேயானால் பஞ்சத்தின் கொடுமையிலிருந்து வருந்தி பட்டினி யிருப்பவர்களும், வறுமையினால் ஆகாரமன்னியிலிருப்பவர்களும் புனிதமாகி, அதன் முடிவைப் பெறவேண்டுமே? அவர்களும் புனிதமாகிறதில்லை. இன்பப்படுவதைவிட துன்பப்படு

கிறார்கள் என்பதே உண்மையாகும். ஏனெனில் பித்தத்தினாலும், அகச்சூட்டினாலும், அவஸ்தைப்பட்டு கஷ்டப்படுகிறார்கள். நியாயம் பிறழாமலிருத்தல்; பிரம்மச்சரியம் சத்தியமுறைத்தல் இவைகளே தர்மநெறியாகும்: அநியாயத்தைக்கொள்ளல் அசத்தியம்பேசுதல் இவைகள் அதர்மநெறியாகும். ஏற்றவாறு பரோபகாரம் செய்வதையே தர்மநெறியெனலாம். அன்னாகாரமற்றிருப்பதற்கும் தர்மத்திற்கும் யாதொரு சம்பந்தமுங்கிடையாது. இந்த சூத்திரங்களை நம்புகிறவர்கள், அதிகம் பொய்யும் கொஞ்சம் மெய்யு மிருக்கிறபடியினால், துக்க சமுத்திரத்தில் முழுகுகிறார்கள்.

மூல—जइजाणासि जिणनाहो लोयाया राविपरकएभूओ ।

तातंतं मन्नं तो कहमन्नसि लोअ आयारं ॥ பிர. இர. 2. 148.

அதிர்ஷ்டமுள்ளவர்களே சமணசமயத்தைப் பின்பற்றுகிறார்கள். அதாவது சமணரல்லாதவர்கள் அதிர்ஷ்டமற்றவர்களாம்.

இதை என்னென்று சொல்வது? இது பொய்யல்லவா? பிறமதத்தவர்களுக்கு அதிர்ஷ்டமும் சமணசமயத்தவர்களுக்கு துரதிர்ஷ்டமும் சம்பவிக்கிறதே கிடையாதா? ஒருவருக்கொருவர் சண்டையிட்டுக்கொள்ளக் கூடாதென்றும் பரஸ்பர பிரேமையுடனிருக்கவேண்டுமென்றும் சமணமுனிகள் கூறுகிறார்கள். பிறமதத்தவர்களுடன் சண்டைசெய்வதினால் தீமை ஒன்றும் விளையாதென்று இதிலிருந்து தெளிவாகிறது. இதுவும் மடத்தனமேயாகும். ஏனென்றால் நல்லோர்களை நேசித்து தீயோர்களைத் திருத்துவதே கடமையெனப் பெரியார்கள் கொண்டுள்ளார்கள். பிராம்மணர்களும் துறவிகளும், சந்நியாசிகளும் சமணசமயத்தின் விரோதிகளென்பதே சமணமுனிவர்களின்முடிவு. பகையுடன் யாவரையும் நோக்கி அவர்களைத் தூற்றும்பொழுது கருணை, தயை என்றும் நெறிகளைச் சமணர்கள் பழகுகிறார்கள் என்பது முறையுமாகுமோ? கருணையும் தயையும் பிறரைத் தூஷித்தல் என்பதுடன் பொருந்துமா? பிறரை வெறுக்க இங்கிலையைவிட கேடானது வேறொன்றும் வேண்டாம். சமணர்கள் பிறரிடம் பகைக்காட்டும் வகுப்பினர் ஆவார்கள். இதில் அவர்களுக்கு நிகரானவர் எவருமே யில்லை. ரிஷபதேவர் முதல் மகாவீரர் வரையிலுமுள்ள இருபத்திநான்கு தீர்த்தங்கரர்களைப் பொறாமைக் காரர்களென்றும், துவேஷயுத்தியுள்ளவர்களென்றும், பொய்சொல்லுகிறவர்களென்றும், சமணர்களை வெறிபிடித்தவர்களென்றும், அவர்களுடைய மதத்தை நரகத்திற்கும் விஷத்திற்கும் சமானமானதென்றும் முறையே கூறினால் சமணர்கள் என்ன நினைப்பார்கள். பிற சமயங்களை ஏற்காத அபவாதங்களுக்கு ஆளாக்குகிறபடியினால் சமணர்கள் பெரும் துன்பப் படுகிறார்கள். இவ்வழக்கத்தை விட்டுவிட்டால் நலமாயிருக்கும்.

மூல—एगो अगरू एगो विसाव गोचे इआणि विवहाणि ।

तच्छयजं जिणदव्वं परुप्परन्तं न विचन्ति ॥ பிர. இர. 2. 160

சகல சத்திய சீடர்களுக்கும் உள்ளது ஒரே தெய்வம் ஒரே ஆசாரியர், ஒரே சமயம். சமணவிக்கிரகங்கள், சமணகோயில்கள், அதைச் சேர்ந்த

சொத்துகள், இவைகளைக் காப்பாற்றி சமண விக்கிரகங்களைப் பூஜைசெய்வதே கர்மமாகும்.

பல விக்கிரக பூஜைகளும், அவைகளுடன் கூடின கெடுதல்களும் தீமைகளும் சமணர்களிடமிருந்து ஆரம்பமாயின. எனவே எல்லாப்புரட்டுக்களுக்கும் முதற்காரணம் சமணர்களே.

**नवकोरण विवोहो ॥ अनुसरणं सावउ ॥ वयाइं इमे ॥ जोगो ॥ चिय वन्दणगो ॥ यच्चरखाणं तु विहि पुच्छम् ॥**

சிராவகர்கள் (சமண சீடர்கள்) யாவரும் ஆலயத்தின் வாயிலில் நமஸ்காரஞ்செய்யவேண்டும். இரண்டாவது வாயிலில் நமஸ்கரித்தவுடன் **நான் உண்மையான சீடன்** என்று உரைக்கவேண்டும். மூன்ரும் வாயிலில் நமஸ்கரித்தவுடன் எங்களில் எத்தனை பேர்களுண்டு எனவேண்டும். நான்காவது வாயிலண்டை நமஸ்கரித்தவுடன் "வாழ்வின் நோக்கங்கள் நான்கில் மோட்சமே முதன்மையானது. அதைப் பெறுவதற்குச் சத்திய ஞானமே தேவை ஆதலால் யோகம்" என்று சொல்லவேண்டும். பாபங்களைக் கழிக்க வழிகள் ஏழும் இவைகளேயாகும். இவைகளுக்கும் யோகம் என்ற பெயருண்டு. "நாம் அதை அடைவோம்". ஐந்தாவது வாயிலில், விக்கிரகத்தின் முன் நமஸ்காரம் செய்து நைவேத்தியம் அளித்து மனதில் பூஜை செய்வேன் என்று, சொல்லிக் கொள்ளட்டும். ஆறுவது வாயிலில் கதைகளை—ஒன்பதுபிரமாணமான கதைகள்—சொல்லவேண்டிய கடமையை நினைத்துக்கொள்ளவேண்டும். மேலும் இதே புத்தகத்தில், இராப்போஜன சமயத்தில் தீர்த்தங்கரர்களுடைய மூர்த்திகளையும், கோயில் கதவுகளையும் பூஜை செய்யவேண்டுமென்று கூறப்பட்டிருக்கிறது. கதவையொட்டின பூஜை முதலான முறைகள் பெருஞ்சலிப்பைத் தரக்கூடியது. பழைய கோயில்களைப் புதுப்பித்தும் கட்டியும் கொர்டுக்கிறவர்கள் மோட்சத்தை யடைவர்களெனக் கூறப்பட்டிருக்கிறது. விதிப்பிரகாரம் பூஜை செய்கிறவன் கோயிலில் உட்காரவேண்டும். பய பக்தியுடன் பூஜை செய்ய வேண்டும். விக்கிரத்திற்கு அபிஷேகம் செய்யும்பொழுது "ஜின தேவருக்கு நமஸ்காரம்—பணிகிறேன்" என்றும், "அலங்கார தூப தீப நைவேத்தியங்களை" அளிக்கிறேன் என்றும் சொல்லவேண்டும். சமணக் குருக்கள் அரசனின் ஆட்சிக்குக் கூட அகப்படாதவர்கள் என்று **ரத்தின சார பாகம்** பக்கம் 12ல், கூறியிருக்கிறது. விக்கிரகங்களைப் பூஜை செய்வதினுல் பிணிகள் நீங்கி சாதாரண தீச்சயல்களிலிருந்தும் ஒருவன் காப்பாற்றப்படுகிருனென்று சொல்லுவதை **ரத்தின சார பாகம்** பக்கம் மூன்றில் காணவும். ஐந்து சோழி விலையுள்ளப் புஷ்பங்களை யளித்துவிட்டதற்குப் பதிலாக 18 நாடுகளுடைய ஆட்சியையடைந்தான் என்று சொல்லப்பட்டிருக்கிறது. அவன் பெயர் தான் **குமாரபாலன்**.

இவைகளெல்லாம் பொய்வார்த்தைகளே. அறிவீனர்களை ஏமாற்றவே இச்சூழ்ச்சி. விக்கிரகங்களைப் பூஜைசெய்தும் பிணிகளிலிருந்து வருந்துகிற

சமணர்களும், அவைகளைப் பூஜை செய்து ஒரு எக்கர் நிலங்கூட கிடைக்காத சமணர்களும் பலர் இருக்கிறார்கள். ஐந்து சோழிகள் விலையுள்ள புஷ்பத்திற்கு ஆட்சி கிடைக்குமேயானால், ஐந்தைந்து சோழி விலையுள்ள புஷ்பங்களை யளித்து ஏன் பூலோகமுழுவதும் சமணர்கள் பெறக் கூடாது? தங்களுடைய அரசாங்கம் விதிக்கும் தண்டனைக்கு ஏன் ஆளாகிறார் கள்? விக்கிரக ஆராதனையினால் துக்க சமுத்திரத்தைத் தாண்ட முடியுமானால் சத்தியஞானம், சத்சங்கம், சத்தியநெறி இவைகளால் யாது பிரயோஜனம்? கௌதமருடைய விரல்நுனியில் அமிருதம் இருக்கிறதென்றும், அவரைத் தியானிப்பதினால் இஷ்ட்ட சித்தியாகு மென்றும் எழுதப்பட்டிருப்பதை இரத்தினசாரம் 14வது பக்கத்தில் காணலாம். இது உண்மையானால் சமணர்க ளெல்லோரும் சிரஞ்சீவியாயிருத்தல் வேண்டும். ஆனால் உண்மையில் மரணத் திற்காளாகிறார்கள். பேதைகளைக்குத் தப்புவழிக் காட்டவே இவ்வித கதை கள் உண்டாயிருக்கின்றன. இவைகளில் உண்மை கிடையாது. பூஜை செய் யும்பொழுது அவர்கள் ஜெபிக்கும் மந்திரத்தை இரத்தின சார பாகம் பக்கம் 92ல் காணவும்.

जलचन्दनधूपनैरथ दीपाक्षतकैर्नैवेद्यवस्त्रैः ।
उपचारवरैर्जिनेन्द्रान् रुचिरैरद्य यजामहे ॥

ஜலம், சந்தனம், புஷ்ப்பம், தூபதீபநைவேத்தியம் ஆடை முதலியவை களைக் கொண்டு தீர்த்தங்கரர்களை (விக்கிரகங்களை) பூசிப்போமாக? இதைக் கொண்டே மூர்த்தி பூஜைக்குக் காரணம் சமணர்கள் என்றோம்.

“சமணவாலயத்தில் மோக்ஷம் எவனுக்குங் கிடையாது. இதைக் கொண் டே உலகக்கடலைக்கடக்கலாம்'' (விவேக சாரம் பக்கம் 21).

மூர்த்தி பூஜையினால் முக்தி கிடைக்கும். சமணவாலயத்திற்குச் செல்வ தினால் மெச்சத்தகுந்த சுகங்களுண்டாகும். சந்தனம், ஜலம், முதலியவை களைக் கொண்டு திர்த்தங்கரர்களுடைய விக்கிரகங்களைப் பூஜை செய்வோர்கள் நரகத்திலிருந்துமீறி சுவர்க்கத்தை யடைவார்கள். (விவேகசாரம் பக்கம் 51-52)

சமணவாலயத்திலுள்ள இருஷபதேவர் முதலானவர்களுடைய விக்கிரங் களைப் பூஜிப்பதினால் அறம்பொருள் இன்பம் முதலியவைகள் உண்டாகும்.
(விவேகசாரம் பக்கம் 55)

சமண விக்கிரகங்களைப் பூஜை செய்வதினால் உலகதுன்பங்களெல்லாம் தூரவிலகிவிடும். (விவேகசாரம் பக்கம் 61)

இவைகளுடைய அறிவீனத்தையும் அசம்பவத்தையும் கவனியுங்கள். இவ்விதம் செய்வதினால் பாபங்களிலிருந்து மீறி, நல்ல குணங்கள் ஏற்பட்டு, நரகத்திலிருந்து தப்பி சுவர்க்கத்தை யடைந்து, அறம் பொருள் இன்பம் வீடு இவைகளைப்பெற்று, மனோவெண்ணங்கள் நிறைவேறி, துன்பங்களி லிருந்தும் மீறுவார்களேயானால், சமணர்கள் ஏன் கஷ்டப்படவேண்டும்? விரும் பிய சிறந்த பொருள்களை ஏன் அடையாமலிருக்கவேண்டும்?

சமணவிக்கிரங்களை ஸ்தாபித்தவர்கள் தங்களுடையவும் தங்கள் குடும்பங்களுடையவும் ஜீவனோபாயத்தின் வழியைக்கண்டு பிடித்துவிட்டார்கள் என்று எழுதப்பட்டிருப்பதை விவேகசாரம் பக்கம் 3ல் காணவும். சிவன் விஷ்ணு முதலானவர்களுடைய விக்கிரகங்களைப் பூசிப்பது மிகவும் கெடுதலான காரியமாகும் என்று விவேகசாரம் பக்கம் 225ல் எழுதியிருப்பதைக் காணலாம். இப்பூஜைகளினால் நரகமே கிடைக்குமாம்.

சிவன், விஷ்ணு, முதலான விக்கிரகங்களினால் நரகம் விளையும்பொழுது சமணவிக்கிரகங்களினால் ஏன் நரகம் விளையாதென்ற கேள்வி பிறக்கிறது? எங்களுடைய விக்கிரகங்கள் துறவிகளென்றும் சாந்த மூர்த்திகளென்றும் கூறுவீர்களேயினால், மூர்த்திகளுக்காக லட்சகணக்காய்ச் செலவு செய்து கோயில்கள் கட்டி சந்தனம் கற்பூரம் முதலானவைகள் அளிக்க அவைகள் எவ்விதம் துறவியாகும்? சிவன் முதலானவைகள் வானத்தின் கீழிருக்க ஏன் துறவியாகாது? சாந்த மூர்த்திகளென்றால் ஜடப்பொருள் களெல்லாம் சாந்தமானதே. ஏனெனில் அவைகள் அசையாதவைகளே.

வினா:—ஆடை உடைகளினால் அலங்கரிக்கப் படாமலிருப்பதினாலேயே எங்களுடைய விக்கிரகங்கள் சிறந்தவைகளாகின்றன. விடை:—எல்லோருடைய முன்னிலையில் விக்கிரகங்களை நிர்வாணவாக நிறுத்துவது மிருகத்தன்மையானது.

வினா:—பெண்களுடைய பொம்மைகளைக் காணுங்கால் காம விகாரங்களின் எழுச்சியுண்டாவது போலவே சாது, யோகி முதலானவர்களுடைய விக்கிரகங்களைக் காணுங்கால் நல்லெண்ணங்கள் உண்டாகின்றன. விடை:—கல்விக்கிரகங்களைக் காணுங்கால் நல்ல குணங்களுண்டாகுமென்று எண்ணுவாயானால், சடத்தனம் முதலான விக்கிரகங்களுடைய குணங்கள் உன்னை ஏன் பாதிக்காது? சடபுத்தியுடையவனாக ஆவாயானால் உபயோகமற்றவனாய் விடுவாய். கல்விக் கேள்விகளில் சிறந்தோர்களுடைய சங்கத்திற்குப்பதிலாக விக்கிரக ஆராதனையைப் பின்பற்றுவாயேயானால் முதலிலிருந்ததை விட பெரும் மதியீனனாவாய். இந்நூலின் பதினொன்றாவது அத்தியாயத்தில் சொல்லப்பட்டுள்ள குற்றங்களுக்குள்ளாகிவிடுவாய். விக்கிரக பூஜையைப்பற்றி பலவித ஆபாசங்களைச் சமணர்கள் சொல்லுவது போலவே அவர்களுடைய மந்திரங்களும் பலமதியீனங்களைப் போதிக்கின்றன. உதாரணமாக.

नमो अरिहन्ताणं नमो सिद्धाणं नमो आयरियाणं नमो उवज्झायाणं नमो लोए सव्वसाहूणं एसो पञ्च नमुक्कारो सव्व पावप्पणासणो मङ्गलाचरणं च सव्वे सिपढमं हवइ मङ्गलम् ॥

அரிஹந்தைப்பணிகின்றேன்; சித்தர்களைப் பணிகின்றேன் முதலானவைகள்"

இம்மந்திரம் தெய்வத்தன்மையானதாம். இது குரு மந்திரமாம். இதைச் ஜபிப்பதினால் அளவிலா நன்மைகள் விளையுமாம். புராண தந்திரங்களின் ஆசிரி

யர்கள் பாடகர்கள் முதலானவர்களைவிட (இம்மந்திரத்தின் சக்தியை மிகைப் படுத்துவதில்) சமணர்கள் சிறந்தவர்களே.

नमुक्कार तउपढे ॥

जउकव्वं । मन्ताणमन्तो परमो इमुत्ति धेयाणधेयं परमं इमुत्ति ।

तत्ताणतत्तं परमं पवित्तं ंसारसत्ताणदुहाहयाणम् ॥

ताणं अन्नन्तु नो अत्थि । जीवाणं भव सायरे ।

बुड्डूं ताणं इमं मुत्तुम् । न मुक्कारं सुपोययम् ॥

कव्वम् । अणोगजम्मन्तरसं चिआणम् । दुहाणंसारीरिअमाणुसाणुसाणम् ।

कत्तोय भव्वाणभविज्जनासो न जावपत्तो नवकारमन्तो ॥

சிரத்தின கிருத்திய என்னும் நூலில் இம்மந்திரத்தைப் பவித்திரமான தென்றும் பரம மந்திர மென்றும் கூறியிருப்பதைக் காணலாம். தியானஞ் செய்யவேண்டியவைகளில் முதன்மை யானது. உள்ளது எல்லாவற்றையும் விட உண்மையானது. சமுத்திரத்தைக் கடக்க கப்பலைப்போல நவகார மந்திரமும் உபயோகமானது. இதன் துணையைத் தேடாதவர்கள் உலகக்கடலில் முழுகிப் போவார்கள். தேடுகிறவர்கள் துக்கங்களை மீறுவார்கள். இம்மந்திரம் ஒன்றே துன்பங்களைத் துலைக்கும். பாபங்களிலிருந்து ஆத்மாவைக் காப்பாற்றும். முக்தியைப் பெறக் காரணமாயிருக்கும். உலகக்கடலைத் தாண்டவல்ல சக்தியையளிப்பது இம்மந்திரம் ஒன்றே. அதாவது பல பிறப்புகளில் செய்த கர்மங்க்ளின் பாபங்களை விலக்குகிறது. தீ முதலான எண்வித தண்டனைகளை யனுபவிக்குங்கால் இம்மந்திரத்தைப் போல் உதவி யளிப்பதொன்றும் கிடையாது. இம் மந்திரத்தை விளக்கக்கூடிய ஆசான், வைடூரியம் உள்ளவனைப்போல் போற்றத்தகுந்தவனுகிருன்; சத்துருக்களின் மத்தியில் பயப்படுகிறவனுக்குக் குறையாத ஆயுதங்களைப் போலாகிறது. தெய்வப்புலமை வாய்ந்த 12 மந்திரங்களுள், சாலச்சிறந்தது இங் நவகாரம மந்திரமேயாகும். அதாவது:—(1) சகல தீர்த்தங்கரர்களுக்கும் தாழ்மையான நமஸ்காரம் (2) சகல சமண முனிவர்களுக்கும் நமஸ்காரம் (3) சகல சமண ஆசான்களுக்கும் நமஸ்காரம் (4) சகல சமண சமய போதகாசிரியர்களுக்கும் வந்தனம் (5) இவ்வுலகிலுள்ள சகல சமண சாதுக்களுக்கும் வந்தனம். மூலத்தில் சமண பதம் இல்லாதபொழுதிலும் நாம் அதைக்கூட சேர்த்து எழுதியிருக்கிறோம். ஏனெனில் சமணத்தைச் சேராதவன் எவனும் வந்தனத்திற்கு ஏற்றவனில்லை யென்று அநேகமாக எல்லா சமண நூல்களும் போதிக்கின்றன.

கற்கள், கட்டைகள், முதலானவைகளைத் தெய்வமென்று எண்ணிப் பூஜிப்பவர்கள் தக்க லாபத்தைப் பெறுவார்களென்று தத்துவ விவேக நூல் பக்கம் 169ல் இருப்பதைக்காணவும். இவ்விதமிருக்க விக்கிரகங்களைப் பூசித்தும் ஏன் சமணர்கள் சுகமடையவில்லை? பாரஸ்வநாத விக்கிரகத்திற்குப் பூஜை செய்வதினல் பாபங்களெல்லாம் போய் விடும் என்று இரத்தனசாரம் பக்கம்

10ல் எழுதியிருப்பதைக் காணவும். **கல்ப பாகம்** பக்கம் 51ல் ஒரு இலட்சத்து இருபதினாயிரம் ஆலயங்கள் ஒழுங்குபடுத்தப்பட்டதாகக் கண்டிருக்கிறது. சமணர்களிட மிருந்தே விக்கிரக பூஜை உண்டான தென்பதை விளக்க இன்னும் எவ்வளவோ அத்தாட்சிகள் இருக்கின்றன.

**சமண சாதுக்களுடைய லீலைகளைக் கவனிப்போம்.**

**கோச** என்னும் வேசியுடைய சோரநாயகனுன் சமண சாது விரக்தியடைந்து சுவர்க்கத்தைப் பெற்றாரென்று **விவேகசார** பக்கம் 228ல் இருக்கிறது. இந்நூலின் 10வது பக்கத்திலேயே **அர்ணக் முனி** நீதி நெறியிலிருந்து வழுவி, தத்தர்களுடைய குடும்பத்தில் சிற்றின்பசுகங்களை யனுபவித்தபின்னரே சுவர்க்கத்தை யடைந்ததாகச் சொல்லுகிறது. ஸ்தாலியா, **ஸ்ரீகிருஷ்ணனின்** குமாரனை **டன்டகன் முனியைக்** கொள்ளை கொண்டுபோய்ப் பின்னர் ஒரு தெய்வமானுன். பேருக்குமாத்திரம் சாதுவாயிருந்தாலும் கூட சமணமுனிகளைச் சிராவகர்கள் வணங்கவேண்டுமென்று இதே நூலில் 193ம் பக்கத்தில் எழுதப்பட்டிருப்பதைக் காணலாம். நன்னடத்தையுடன் கூடினவர்களாயிருந்தாலும் சரி,துர் நடத்தையுடன் கூடினவர்களாயிருந்தாலும் சரி, இச் சாதுக்கள் போற்றத்தக்கவர்கள். பிற மதத்தைச்சேர்ந்த சாது நல்லொழுக்கத்துடன் கூடினவனயிருந்தாலும் ஒழுக்கமற்ற சமண சாதுவே போற்றத் தக்கவரெனச் சொல்லியிருப்பதை 168ம் பக்கத்தில் காணலாம்.

சமண லௌகிகர்கள், ஒழுக்கமற்றவனுயும் நெறிகெட்டவனுயு மிருந்தபொழுதிலும் சமண சாதுக்களைச் சேவிக்கவேண்டும் என்று 71ம் பக்கத்தில் கூறியிருக்கிறது. திருடன் தன் தலைமயிரைக் கிழித்துக்கொண்டான்; வாழ்க்கையின் நெறியைத் தழுவினுன்; பச்சாத்தாபப் பட்டான்; உடனே உண்மை அறிவையடைந்ததினுல் ஆறுமாதத்திற் கெல்லாம் **சித்தனுய்** விட்டான். இதை பக்கம் 276ல் காணலாம். கவனியுங்கள். காமியான சாதுவுங்கூட சித்தியடைந்தான் என்பதும் **ஸ்ரீகிருஷ்ணன்** மூன்ருவது நரகத்தை அடைந்தாரென்பதும் (பக்கம் 106ல், பார்க்கவும்) இவர்களுடைய சமய நம்பிக்கையாகும்.

* **தன்வந்திரி** நரகத்தைச் சேர்ந்தார் என்று பக்கம் 145ல் காணப்பட்டிருக்கிறது. **யோகிகள், புராணிக சாதுக்கள், காஜிகள்** (மகம்மதியப் புரோகிதர்கள்) **முல்லாக்கள்**(மகமதியப் பெரியோர்கள்)இவர்கள் அறிவீனத்தின் காரணமாகத் தவஞ்செய்து கஷ்டப் பட்ட போதிலும், கீழ்க்கதியை யடைந்தார்களென்று பக்கம் 48ல் இருப்பதைக் காணவும். திருபிருஷ்ட்ட வாசுதேவ, துவிப்பிருஷ்ட வாசுதேவ, சுயம்புவாசுதேவ, புருஷோத்தம வாசுதேவ, சிம்ஹ புருஷ வாசுதேவ, புருஷபுண்டரீக வாசுதேவ, தத்தவாசுதேவ, லட்சுமண வாசுதேவ, ஸ்ரீகிருஷ்ண வாசுதேவ ஆக ஒன்பது வாசுதேவர்களும் 11வது, 12வது, 14வது, 15வது, 18வது, 20வது, 22வது, **தீர்த்தங்கரர்களுடைய** காலத்தில் நரகத்தை யடைந்தார்களென்றும், அசுவக்கிரீவப்பிரதி வாசுதேவ, தாரகப்பிரதி

---

* வைத்திய சாஸ்திரத்தில் பெயர் பெற்ற துறவி பெரியார்

வாசுதேவ, மோதகப்பிரதி வாசுதேவ, மதுப்பிரதி வாசுதேவ, நிசும்பப்பிரதி வாசுதேவ, பலிப்பிரதி வாசுதேவ, ராவணப்பிரதி வாசுதேவ, ஜராசிந்துப்பிரதி வாசுதேவ, ஆக நவப் (ஒன்பது) பிரதி வாசுதேவர்களும் நரகத்தையே அடைந்தார்களென்று பக்கம் 171ல் சொல்லிருப்பதைக் காணவும். இருஷப தேவர் முதல் மகாவீரர் வரையிலுள்ள தீர்த்தங்கரர்க ளெல்லோரும் மோட்சத்தை யடைந்தார்களென்று கல்ப பாஷியத்தில் கூறப்பட்டிருக்கிறது.

வியபசாரித்தனம் செய்தவர்கள், வேசிகளின் சோரநாயகர்கள், முதலானவர்கள் பல; உள்பட சமண சாதுக்களும் வெளகிகர்களும், தீர்த்தங்கரர்களும் மோட்சத்தைப் பெற பெரிய ஆத்மாக்களான ஸ்ரீகிருஷ்ணன் முதலானவர்கள் நரகத்தை யடைந்தார்களென்று கூறுவது எவ்வளவு தப்பென்று புத்திமான்களே அறிந்துகொள்ளுவார்களாக. உண்மையைச் சொல்லப்புகில் நல்லார் சமணர்களுடைய சேர்க்கையை வைத்துக்கொள்ளவுங் கூடாது; அவர்களைக்காணுவதுங் கூடாது. ஏனெனில் அந்த நல்லோர்க்கும் அறிவினர்களிடம் நம்பிக்கை ஏற்பட்டுவிடும். பிடிவாதம் பாரபட்சம் இவைகளுடன் கூடி இணங்குதலினால் கெடுதல்களே விளையும். சமணர் சார்பிலுள்ள நல்லோர்களுடன் சேருவதில் குற்ற மொன்று மில்லை. கங்கை ஸ்நாநம் காசியாத்திரை முதலானவைகளைப் போன்றதினால் நன்மை எதுவும் ஏற்படாதாம். தங்களுடைய கிர்நார், பாலிடானு, ஆபு ஆகியவைகளைக்காணுவதினால் தான் முக்திபெற முடியுமாம். (விவேகசாரம், பக்கம் 55.) சைவ வைணவர்களுடையதைப் போலவே சமணத் தீர்த்தங்களும் க்ஷேத்திரங்களும் நீரிலும் நிலத்தின்பேரிலுமே இருக்கிறதென்பதைத் தனியாகக் கவனிக்கவேண்டியது. முன் சொன்னவைகளைத் தூற்றி, பின் சொன்னவைகளைப் போற்றுவது புத்தியின்மையேயாகும்.

### சமணமுக்தியின் வர்ணனை
(இரத்தின சாபகாரம், பக்கம் 23)

மகாதேவ தீர்த்தங்கரர் கௌதமரைப் பார்த்துச் சொல்லுவதாவது:— வடப்பிரதேசத்தில் சித்தசிலா என்ற ஒரு இடம் இருக்கிறது. சுவர்க்கத்தைவிட உயரமானது. நாலரைக்கோடி யோசனை நீளமும் அகலமும் உள்ளது. 8 யோஜனைபரிமாணமுள்ளது. பசும்பாலை விடவும் முத்துமாலையைக் காட்டிலும் வெண்மையாயுள்ளது. 19வது பரப்பில் உச்சியிருக்கிறது. தங்கத்தைப் போல் பிரகாசிக்கும். ஸ்படிகத்தைவிடத் தெளிவாயிருக்கும். இன்னும் மேலே சிவபுரம் இருக்கிறது. இங்கேயே முக்தியைப் பெற்றவர்கள் வசிக்கிறார்கள். பிறப்பு இறப்பை மீறினவர்கள். முக்தியின்பத்தை நுகருகிறார்கள். இவ்வுலகத்திற்கும் திரும்புகிறதில்லை. கர்மங்களைச்செய்ய வேண்டிய தேவையும் கிடையாது.

இதுவே சமண முக்தியாகும். வைகுண்டம், கோலோகம், சிவபுரி முதலானவைகள், நான்காவது உப்பரிகை, ஏழாவது உப்பரிகை இவைகளை முறையே புராணிகர்கள், கிறிஸ்துவர்கள், மகம்மதியர்கள் முக்திஸ்தானமாக ஸ்தாபித்துஇருப்பதுபோலவே சித்தசிலையும் சிவபுரத்தையும் சமணர்கள் உண்டு

பண்ணியிருக்கிறார்களென்பது சிறிது யோசித்தால் விளங்கும். சமணர்களால் உயர்ந்ததெனக் கருதப்படுகிறவைகளெல்லாம், பூகோளத்தில் சிலபாகங்களி லிருக்கும் ஜனங்களால் தாழ்ந்ததெனக்கருதப்படுபவையே. உயர்ந்ததும் தாழ்ந்ததும் தனிச் சொற்களல்ல. இந்தியாவிலுள்ள சமணர்களுக்கு எது உயர்ந்ததாயிருக்கிறதோ அது அமெரிக்கர்களுக்குத் தாழ்ந்ததேயாகும். இப்படியே அமெரிக்காவிலுள்ளவர்கள் விஷயத்திலும். சித்தசிலை யென்பது 90லக்ஷம் யோஜனைகள் நீளமிருந்தபொழுதிலும் முக்தியடைந்த ஜீவன் களெனப்படுகிறவைகளெல்லாம், கட்டுப்பட்டேயிருக்கும். ஏனெனில் அதை விட்டகன்றவுடன் முக்தியை இழந்துவிடும். அந்த விடத்தில் பற்றும் அதை விட்டு வெளிக்கிளம்ப வெறுப்பும் முக்தியைப்பெற்ற ஜீவன்களுக்கு உள்ளது இயல்பேயாம். விருப்பு, வெறுப்பு, ஆசை இவைகளுள்ள நிலை எவ்வி தம் முக்தி நிலையாகும்? முக்தியில் உண்மையானதை ஒன்பதாவது அத்தியா யத்தில் சொல்லியுள்ளோம். சமணர்கள் நம்பும் முக்தி கட்டேயாகும் (சிறை யேயாகும்). முக்திவிஷயத்தில் சமணர்கள் சிறிதளவு வழுவிட்டார்கள். வேதங் களுடைய ஞானமன்னியில் இன்ப எண்ணத்தின் சரியானதத்துவம் உண்டாகா தென்பதே உண்மையாகும். இன்னும் சில நாய்நரிக்கதைகளைச்சொல்லுவோம். கீழ்கண்டவைகளை விவேகசாகரத்தில் காணலாம்:—மகாவீரர் பிறந்தவுடன் ஒரு கோடியே ஏழு லட்சத்து கலசங்களின்நீரில் ஸ்நாநம் செய்தார்—(பக்கம் 78.) தசாரன அரசன் மகாவீரதரிசனத்திற்குச் சென்றார். அங்கு இறுமாப்புட னிருக்கவே அதைக் கண்டிப்பதற்காக 16, 777, 216,00. இந்திரர்களும், 13, 370, 572,800,000,000 இந்திராணிகளும், தோன்றினார்கள். இதைக் கண்ட அரசன் ஆச்சரியமடைந்தான்.''

(நம் பூமி அளவுகொண்ட) எவ்வளவு உலகங்கள் இந்திரனும் இந்திராணி யும் நிற்கத் தேவையாயிருந்ததோ? சிரத்ததினகிருத்திய (ஆத்ம நிந்தபாவனா) வின் 13 வது பக்கத்தில் குளங்கள் வெட்டக் கூடாதென்றும் கிணறுகள் தோண்டக் கூடாதென்றும் தடுக்கப்பட்டிருக்கிறது.

இம்மறுப்பைக் கொண்டு வாழ்ந்தால் தண்ணீர் ஜனங்களுக்கு எங்கிருந்து கிடைக்குமோ?

வினா:—குளம் கிணறுகளைத் தோண்டுவதினால் அநேகம் ஜீவராசிகள் மடிந்து அதனால் பாபம் விளைகிறபடியினால் சமணர்கள் இதைச் செய்வதில்லை.

விடை:—அறிவிலியே!! அற்ப ஜீவன்களுடைய பாபத்தைக் கருதுங்கால மனிதன், பசு முதலானவைகளுக்கு வேண்டிய தண்ணீரைக் கொடுப்பதினால் உண்டாகும் பெரும் புண்யத்தை ஏன் எண்ணாமலிருக்கிறாய்? நந்தமணி கார் என்னும் தனவான் பாவடி (ஒருவித கிணறு) யைத்தன் ஊரில் தோண்டினான். என்றிருப்பதை தத்துவ விவேகத்தின் பக்கம் 196ல் காணலாம். நேர் நெறியினின்றும் வழுவின படியினால் தர்மப்பிரஷ்டனாய் 16 பெரும் நோய்களால் பாதிக்கப்பட்டான். மறுபிறப்பில் அதே கிணற்றில் தன் காலத் தைக் கழிக்கவேண்டித் தவளையாய்ப்பிறந்தான். மகாவீரரைக் கண்டவுடன் அத்தவளைக்கு முன் ஞாபகம் வந்தது. பூர்வ ஜன்மத்தில் தன் தலைவனாயிருந்

ததின் ஞாபகம் வந்ததாக மகாவீரர் கூறுகிறார். அவருக்கு முன் நமஸ்காரம் செய்யச் சென்றார். சிரேனிகனின் குதிரையினால் இடரப்பட்டு இறந்துவிட்டான். நல்லெண்ணத்தின் பயனால் தர்துராங்க் என்னும் பெயரை யுடைய கடவுளானான். அற்ப புத்தியைக் கொண்டிருந்தபடியினால் மகாவீரன் அவ்விடத்திலிருப்பதாக வெண்ணி நமஸ்கரித்த பின்னர் திரும்பிச் சென்றான்.

அறிவிற்கு விரோதமான இவ்வசம்பவங்களையும் பொய்களையும் கூறுகிறவனை மகாவீரனாகக் கருதுவது பிரமையே. சிரத்ததினகிருத்ய பக்கம் 36ல் சாது மரித்தவனுடைய ஆடை உடைகளைக் கொள்ளக்கூடும் என்றிருக்கிறது.

இச்சாதுக்களும் மகாப்பிராமணர்களைப் போலாகவில்லையா? ஆபரணங்களை யார் எடுத்துக் கொள்ளுவது? மீதியிருக்கிறவர்கள், விலையுள்ளதானபடியினால், அதைத் தனக்குத் தானே வைத்துக் கொள்ளுவார்கள் போலும். இவர்களைக் குறித்து என்னவென்றெண்ணுவது.

ரத்னசாரம் பக்கம் 105ல் வறுத்தல், அரைத்தல், சமைத்தல், முதலிய காரியங்கள் பாபகரமானதன்று சொல்லப்பட்டுள்ளது.

இங்ஙனம் கூறல் முட்டாள்த்தனமாகாதா? இக்காரியங்கள் இல்லாது மனிதன் எங்ஙனம் வாழமுடியும்? சமணர்களும் சமைத்தல், புசித்தல், இவைகள் விடுத்தால் சாகவேண்டியவர்கள்தானே. இந்நூல் இத்துடன் நிற்கவில்லை.

தோட்டத்தைப் பயிருடுகிற தோட்டக்காரன் லட்சமடங்கு பாபியாகிறான் என்று பக்கம் 104ல் சொல்லுகிறது. தோட்டக்காரன் வியவசாயி பெறும் பாபியானபொழுதிலும் மலர், இலை, கரிகாய்கள் தானியம் முதலிய இனியபொருள்களையும் தருவதால் பெறும்புண்ணியம் செய்தவனாகவில்லையா?

லப்தி என்னும் சாது ஒருவர் தமோறி வேசி வீட்டை யடைந்து தர்மத்தின் பெயரால் பிச்சை கேட்டார். தன்னுடைய வாழ்க்கையில் தர்மத்திற்கு இடமில்லை யென்றும் பொருளுக்கே தான் இடம் உண்டென்றும் பதில் சொன்னாள். இதைக் கேட்டு அவள்வீட்டில் 12½ லட்சம் மோகர்களை வாரி எறிந்தார். (தத்வவிவேக பக்கம் 202)

மடையனைத் தவிர வேறு எவன்தான் இதை நம்புவான். ரத்னசார பாகம் பக்கம் 67 ல், வேண்டும்பொழுது கல் விக்கிரகம் குதிரைமேல் ஏறி வந்து மனோபீஷ்டத்தை யளிக்கிறதென்று, சொல்லியிருப்பதைக் காணவும். திருடர்கள், கொள்ளைக்காரர்கள், சத்துருக்கள் முதலானவர்கள் தாக்கப்பட்டபொழுது சமணர்கள் அவ்விக்கிரகத்தினால் காப்பாற்றபடாததின் காரணம் என்ன? போலீஸ் ஸ்டேஷன் களுக்குச் சென்று முறை யிடுவானேன்?

சமண சாதுக்களுடைய குணங்களைக் காட்டவேண்டி, ஜினதத்த சூரி இச்சுலோகங்களைச் செய்துள்ளார்:—

सरजोहरणभैक्षभुजो लुञ्चितमूर्द्धजाः ।
श्वेताम्बराः क्षमाशीला निःसङ्गा जैनसाधवः ॥

लुञ्चिता पिच्छिका हस्ता पाणिपात्रा दिगम्बराः ।
ऊर्ध्वासिनो गृहे दातुर्द्वितीयाः स्युर्जिनर्षयः ॥
भुङ्क्ते न केवलं न स्त्री मोक्षमेत दिगम्बरः ।
प्राहुरेषामयं भेदो महान् श्वेताम्बरैः सह ॥

(1) *சம்ரீ வைத்துக் கொள்ளுதல், பிச்சையெடுத்துச் சாப்பிடுதல் தலையை க்ஷவரஞ் செய்து கொண்டிருத்தல், வெள்ளை வஸ்திரம் தரித்தல், பிறருடன் கூடிக்கலவாதிருத்தல் இவைகளைக் கொண்டவனே யதியாகிறான். இவர்கள் **சுவேதாம்பர** வகுப்பைச் சேர்ந்தவர்கள். (2) ஆடையுடை தரியா திருத்தல், தலைமயிரைப்பிடுங்கி யிழுத்தல், தரையைப் பெருக்க, கம்பளத்தினால் செய்யப்பட்ட துடைப்பத்தைக்கொண்டிருத்தல், பிச்சையெடுத்துகிடைப்பதைச்சாப்பிட்டிருத்தல், இவைகளே **திகம்பர** சாதுக்களுடைய அடையாளங்களாகும். கிரகஸ்தர்கள் சாப்பிட்ட பின்னர் சாப்பிடுகிறவர்களே, **ஜினரிஷி சாதுக்களாவார்கள்.** (3) திகம்பரர்களுக்கும், சுவேதாம்பரர்களுக்கும் உள்ள வித்தியாசம் இதுவேயாகும். பின் சொல்லப்பட்டவர்களுடையக், கட்சிப்பிரகாரம் ஸ்திரீகளும் மோட்சத்தைப் பெறலாம்; முன் சொல்லப் பட்டவர்களின் பிரகாரம் அது முடியாத காரியம். சமணர்களால் மதிக்கப்பட்ட மோட்ச மார்க்கங்களிதுவே யாகும். சமணர்கள் தலைமயிரைப்பிடுங்கிக் கொள்வது தெரிந்த விஷயமே. கைகிறைய ஐந்துதடவைப் பிடுங்கிக்கொள்ள வேண்டுமென்று அவர்களுடைய நூற்களில் கூறப்பட்டிருக்கிறது **விவேகசாரம்** பாகம் 2, பக்கம் 216ல், கைகிறைய ஐந்து தடவை மயிரைப்பிடுங்கிக்கொண்ட பிறகே ஒருவருக்குத் தீட்சையை அளித்தார்களென்று சொல்லிருப்பதைக் காணலாம். பசுவின் சரீரத்தை மூடத் தேவையானது போக மீதியான ரோமத்தைச் சாதுவினிடமிருந்து பிடுங்கி விட வேண்டுமென்று **கல்பசூத்ர பாஷ்யம்** பக்கம் 108ல் எழுதியிருப்பதைக் காணவும். இவ்விதமிருக்க சமணர்களா இரக்க முள்ளவர்கள்? தானேசெய்துகொண்ட பொழுதிலும் அல்லது குருவே செய்தபொழுதிலும், மயிரைப்பிடுங்குவதினால் பெரும் உபத்திரவம் உண்டாகு மல்லவோ? ஜீவப்பிராணிகளுக்குக் கஷ்டம் கொடுப்பதே ஹிம்சை யாகும்.

**விவேகசாரத்தில்** விக்கிரம சகாப்தம் 1033 (கி. பி. 976)ல் சுவேதாம்பர வகுப்பைச் சேர்ந்த **டூண்டியர்கள்** தோன்றினதாக எழுதப்பட்டிருக்கிறது. இதேவருடத்தில் **தேஹ்பந்திகளும்** தோன்றினார்கள். டூண்டியர்கள் கல் விக்கிரக பூஜைகளில் நம்புகிறதில்லை. ஸ்நாநகாலம், போஜனகாலம், இவ்விரண்டு வேளைகளில் தவிர மீதிகாலங்களில் வாயைத் துணியினால் மூடிக்கொண்டிருக்கிறார்கள். யதிகளோ பாடங்களைப் பயிலுங் காலத்தில்தவிர மீதி காலங்களில் கூடக்கட்டிக்கொள்ளுவதில்லை.

வினா:— வாயுவில் சூக்ஷ்ம சரீரத்தை யுடைய ஜீவப்பிராணிகள் பல வாசஞ் செய்கின்றன. மூச்சுக் காற்றினால் அவைகள் உயிர் துறந்துவிடுமோ

* உட்காரும் இடத்திலிருக்கிற தூசிகளைத்துடைக்க உபயோகமாகும்ஒருவித குச்சு.

கையினால், அந்தபாபத்திலிருந்து மீற, துணியைக் கொண்டு வாயைமூடிக் கொள்ளவேண்டும்.

விடை:— கல்விப்பயிற்சிக்கும் பிரத்தியட்சாதி பிரமாணத்திற்கும் இது முற்றும் விரோதமாயிருக்கிறது. ஜீவன் எக்காலமும் சிரஞ்சீவியானது. மூச்சுக்காற்றினால் அது இறந்து போகாது. உங்களுடைய நம்பிக்கையும் இதுவே தானன்றோ?

வினா:— ஜீவன் இறக்காது என்பது உண்மையே: ஆனால் மூச்சுக்காற்றினால் பல ஜீவன்கள் கஷ்டப்படுகின்றன. கஷ்டத்தைக்கொடுப்பவன் பாபியாகிறான். ஆதலால் வாயைத் துணியினால் மூடிக்கொள்ள வேண்டும்.

விடை:— இது முடியாத காரியம். ஏதாவது ஒரு பிராணியைக் கஷ்டப்படுத்தாமல் உலக நிர்வாகம் நடைபெறுவது அரிது. நீங்கள் கூறும் வண்ணம் வாயிலிருந்து வெளிவரும் மூச்சுக்காற்றினால் துன்பமும் துக்கமும் விளைகிறதென்றால் நடத்தல், உட்காரல், கையைத் தூக்கல், கண்ணிமைக்கொட்டல் முதலிய செய்கைகளினாலும் துன்பமும் துக்கமும் விளையவேண்டுமே? எனவே நீங்கள் கூறும் வண்ணம் பிறருக்குத் துன்பமில்லாது வாழ்க்கை நடத்தல் முடியாதகாரியம்:

வினா:— கூடுமானவரை ஜீவராசிகளைக் காத்தல் முறை அல்லவோ? ஜகமெங்கும் உயிர்ப்பிராணிகள் பரவிக்கிடக்கின்றன. வாயைமூடிக்கொள்வதைப்பரிகாசம் பண்ணுகிறீர்கள். துணியால் வாயைக் கட்டிக்கொள்ளாவிட்டால் அநேக ஜீவன்கள் இறக்காதா? அது நமக்குப்பாபமல்லவா?

விடை:— என்ன அறிவீனமான பேச்சு!! துணியைக் கொண்டு கட்டிக்கொள்ளுவதினால் பிராணிகளுக்கு இன்னும் பெரும் கஷ்டம் விளைகின்றன. எங்ஙனமெனில் வாய் அடைக்கப்பட்டிருக்கும் பொழுது, வெளிவிட வேண்டிய மூச்சுக்குப் போக வழியில்லாமல் கட்டுப்பட்டு, பின்னர் வேகத்துடன் வாயின் ஓரமாகவும் மூக்குத் துவாரங்களின் வாயிலாகவும் வெளிவரும். அடைபட்டிருந்த மூச்சின் உஷ்ணம் அதிகமாயிருக்குமாதலால் நீங்கள் கூறும் வண்ணம் பெரும் துன்பத்தை விளைவிக்கும். கவனியுங்கள். ஜன்னல்களெல்லாம் திறந்திருக்குங்காலத்தில் இருந்ததைவிட அடைக்கப்பட்டிருந்த காலத்தில் ஒரு இடத்தினுடைய காற்றின் சூடு அதிகமாயிருக்கும். நீங்கள் கூறுவதையே சரியென்று எடுத்துக்கொண்டாலும் உபத்திரவம் அதிகமாகும். எப்படியென்றால் அடைபட்டிருந்த மூச்சு, முழுவேகத்துடன் வெளியில் வருவதினால் பிராணிகளுக்கும் பெருங்கஷ்டத்தைக் கொடுத்து துன்பத்திற்கு ஆளாக்குகிறது.

ஒருவன் வாயினாலும், மற்றொருவன்குழாயினாலும் நெருப்பை ஊதுகிறான் என்று எடுத்துக்கொள்ளுவோம். வாயிலிருந்து வெளிவரும் மூச்சு விசாலமாகப் பரவி அதன் காரணமாகப் பயனற்று போகும். அடைத்து வைத்து முழுமனதுடன் ஊதும் குழாய்க் காற்றின் குணமோ இதற்கு முற்றிலும் மாறினதாயிருக்கும். வாயை மூடிக்கொள்வதின் பயனாக மூக்கில் சேர்ந்திரு

க்கும் காற்றின் தன்மையும் குணமும் இவ்விதமேயாகும். எனவே வாயைத் துணிகொண்டு கட்டிக் கொள்ளுகிறவர்களைவிட கட்டிக் கொள்ளாதவர்களே தர்மாத்மாக்கள். கட்டிக் கொள்ளுவதினால் வார்த்தைகளையும் எழுத்து களையும் செவ்வனே பேசவும், உச்சரிக்கவும், முடியாது. மூக்கினால் கூடா ததை மூக்கினாலேயே பேசுவது தகாதது அல்லவா? மேலும் வாயிலிருந்து வெளிவரும் துர்நாற்றத்தை(வெளிவிடாமல் தடுக்கிறீர்கள்). வெளிவரும் காற்று யாவும் அசுத்தமானதே. அதை வெளிப்படுத்தாமலிருந்தால் துர்நாற்றம் வீசத்துவக்கும். காற்றுப்போக்கு வரத்திற்கு வழியிருக்கிற கக்கூசைக் காட்டி லும் வழியில்லாத கக்கூசினுடைய துர்நாற்றம் அதிகமாயிருக்கிறது. சமணர் கள் வாயைக்கட்டிக் கொள்ளுகிறார்கள்; பற்களைத் தேய்ப்பதில்லை; முகத்தைக் கழுவுவதுமில்லை; ஸ்நானமும் செய்வதில்லை; எனவே அழுக்கை வெளிப்படுத்தி, வியாதிகளுடையப் விருத்திக்குக் காரணமாகிறார்கள். அதன் காரணமாக பாபஞ்செய்தவர்களாகிறார்கள். பெரிய கூட்டங்களில் கழிச்சல் முதலான தொத்துவியாதிகள் வருவதற்குக் காரணம் காற்று கெட்டுப்போவதேயாகும். வாயில் துணி கட்டிக் கொள்ளாமல் பற்களைத் தேய்த்து, முகத்தைக் கழுவி, ஸ்நானம் பண்ணி, ஆடையுடைகளைச் சுத்தமாக வைத்துக் கொள்வதில் கண் ணும் கருத்துமாக யுள்ளவர்களைக் காட்டிலும், சமணர்கள் வாயுமண்டலத் தின் அழுக்குக்குக் காரணமாகிறார்கள். சுத்தமில்லாதத் *தீண்டாதவர்களி டமிருந்து விலகியிருப்பவன் நல்லவனுவதைப் போல் பின் கூறினவர்களைவிட முன் கூறினவர்களே மேலானவர்கள். கக்கூசுகளைக்கழுவுதல் முதலான அசுத்த வேலைகளைச் செய்வோர்களிடம் கூடிக்கலப்பதினால் புத்தி விருத்தி யடைகிறதில்லை. அதுபோலவே சமணர்களுடைய புத்தியும் அழுக்கடைந்தே யிருக்கும். குதர்க்க புத்தியையுடையநோயாளி தர்மத்தின் தத்துவங்களை அறியமாட்டான். இது சமணர்களுக்கும் தகும்.

வினா:— வாசல் கதவு அடைக்கப் பட்டிருக்கிற வீட்டினுள்ளிலிருந்து அக்கினி சுவாலை வெளிவர வழியிராது. அதன் காரணமாக வெளிப்பிராணி ளுக்கு யாதொருவித உபத்திரவமும் விளையாது. இதேமாதிரி துணியைக் கொண்டு வாயைக்கட்டிக் கொள்வதினால் வெளியிலிருக்கும் ஜீவப்பிராணிகளு க்கு யாதொரு வித ஹிம்சையும். விளையாது. கைகளைக்கொண்டு முகத்தை மூடிக்கொள்ளுகிறவன் அவனுக்கு முன்னே எரியும் நெருப்பின் வெப்பத்தை அதிகமாக உணருகிறதில்லை. வாயுமண்டலத்திலுள்ள பிராணிகள் சரீரத்துடன் கூடினதானபடியினால் துன்பத்திற்கு ஆளாகும்.

விடை:— இப்பேச்சு சிறுபிள்ளைத்தனமானது. சுவர்களில் வெடிப்புகளில் லாததும், காற்றின் போக்குவரத்திற்கு வசதியுமில்லாததுமான சபண வீட்டில் நெருப்பு எரியாது. இதை நீயே அறிந்துகொள்ளலாம். எரிகிற மெழுகு வத் தியை மூடப்பட்ட ஒரு பாண்டத்திற்குள் வை. சிறது நேரத்திற்குள் அது அணைந்து விடும். நிலத்தில் வாழும் மனிதன் முதலானவர்கள் வெளிக்காற்

* கக்கூசு கழுவுதல் முதலான அசுத்த வேலைகளைச் செய்கிறவர்கள்

றின் உதவியன்னியில் பிழைத்திருக்க முடியாது. இதேமாதிரி அக்கினியின் விஷயத்திலும். ஒரு விடத்தில் அடைக்கப்பட்டிருந்தால் மறுவிடத்தில் முழு வேகத்துடன் வெளிக்கிளம்பும். எனவே நீங்கள் கூறுவது சரியாகாது.

வினு:— பெரியவர்கள் சிறியவர்களிடத்தில் பேசுங்கால், உமிழ்நீர் அல்லது துர்க்கந்தம் வீசாமலிருக்கவேண்டி கையைக் கொண்டாவது அல்லது துணியைக் கொண்டாவது, வாயை மூடிக்கொள்ளுவது யாவரும் அறிந்த விஷயமேயாகும். புஸ்தகங்களைப் படிக்குங்காலத்திலும் எச்சில் விழுகிறது.

விடை:— ஜீவப்பிராணிகளைக் காப்பாற்றுவதற்காக வாயைக் கட்டிக் கொள்ளுவது வீணே என்று இதிலிருந்து வெளியாகும். இரகசியத்தைப் பிறர் கேழ்க்காமலிருக்கவேண்டிய வாயை மூடிக்கொள்வார்கள்: பகிரங்கமான சமாச்சாரங்களைப்பற்றி பேசும் பொழுது மூடிக்கொள்ளார்கள். பல் தேய்த்தல் முதலியவைகளைச் செய்யாததினுல் உங்கள் முகம் முதலான அவயவங்களிலிருந்து துர்க்கந்தம் வீசும். உங்களைச்சுற்றி உட்கார்ந்து கொண்டிருக்கிறவர்கள் மேல்பரவும். இதற்காகவே சம்பாஷணை சமயங்களில் ஜனங்கள் வாயை மூடிக்கொள்ளுகிருர்கள். இதற்கு இன்னுமொரு காரணமும் உண்டு. வாயைமூடிக்கொள்ளாமல் பேசும் இரகசிய சமாச்சாரம் காற்றின் மூலமாக பரவும். தனிவிடங்களில் பேசுங்கால் எவனும் மூடிக்கொள்ளுவதில்லை. உமிழ்நீரிலிருக்கும் அணுக்கள் காற்றுடன் கலந்து எல்லோரையும் அடைகிறது. எனவே அதனுடன் கலக்காமலிருக்கவேண்டுமென்பது வெறும் பேச்சேயாகும். இதை யொருதனி மனிதன் தப்பு என்பது வீண்வாதமேயாகும். மூச்சுக் காற்றினுல் வாயு மண்டலத்தில் வாழும் ஜீவப்பிராணிகள் உயிர்துறக்கிறதென்பது மடமையே-ஏனெனில் இது உண்மையானுல் கோடைகாலத்து வெப்பம் அவைகள் எல்லாவற்றையும் கொன்றுவிடுமே. எனவே (துணியைக்கட்டிக் கொள்ளும்) நம்பிக்கை பொய்யானதே. உங்களுடைய தீர்த்தங்காரர்கள் மேதைகளாயிருந்திருந்தால்இம்மாதிரி கூறியிருக்கமாட்டார்கள். சகல உறுப்புக்களுடன் கூடின யோஜனு சக்தியைக் கொண்ட பிராணிகளே ஹிம்சையை உணரக்கூடும். இதற்குப் பிரமாணமாவது:—

पञ्चावयवयोगात्सुखसंवित्तिः ॥ சாங்கியம், அத். 5. 27.

பஞ்சேந்திரியங்களும் அவைகளுக்கேற்ற பொருள்களுடன் சேரும்பொழுதே இன்ப துன்பங்களை ஜீவன் உணரும். தூஷணையினுல் செவிடனும், சிங்கம் புலி முதலிய கொடிய மிருகங்களின் வருகையினுல் குருடனும், வாசனையினுல் முகருந்தன்மையை யிழந்தவனும், தொடுவதினுல் பாரிசவாயுக்காரனும், உருசியினுல் நாக்கில்லாதவனும், முறையே பாதிக்கப்படுகிறதில்லை. இஃதே போல் இச்சிறு பிராணிகள் உபத்திரவத்தைப் யடைவது கிடையாது. சுஷுப்தி சமயத்தில் இன்ப துன்பங்களை மனிதன் அறிகிறதில்லை. ஏனெனில் சரீரத்தில் அவைகள் அப்பொழுதும் இருந்தாலும், அச்சமயத்தில், சரீர உருப்புக்கள் அவைகளுடன் சேருகிறதில்லை. (ஆபரேஷன்) இரணசிகிச்சை செய்யுங்காலத்தில் குளோரோபாரம் என்னும் மயக்க மருந்தை வைத்

தியர்கள் அளிக்கும்பொழுது நோயாளி, நோவுண்டாகிறதை உணருகிற தில்லே. வாயு மண்டலம் முதலானவைகளிலிருக்கும் பிராணிகள் இன்ப துன்பங்களால் பாதிக்கப்படுகிறதில்லே. அறிவிழந்தது இன்ப துன்பங்களே உணருகிறதில்லே. அதே மாதிரியே இப்பிராணிகளும் இங்ஙனமிருக்க கஷ்டட த்திலிருந்து காப்பாற்று என்ற பேச்சிற்கு பொருள் என்ன?

வினு:—ஜீவன்களான படியினுல் சுகதுக்கங்கள் ஏன் அவைகளேயும் பாதிக்காது?

விடை:—கேளும்! பேதைகளே!! சுஷுப்தி யிலிருக்குங்கால் ஏன் இன்ப துன்பங்களே நீங்கள் உணருகிறதில்லே யென்று கூறுங்கள்? சுகதுக்கங்களுக்குக் காரணம் (ஆத்மாவிற்கும் அவயவங்களுக்கும்) உள்ள பிரசித்த சம்பந்தமே யாகும். குளோரோபாரம் கொடுத்தபின்னர் வைத்தியர்கள் அங்கங்களே அறுக்கிருர்கள்; சரீரத்தின் பாகங்களேக் கீறுகிருர்கள். இருந்தும் நோயாளி ஹிம்சையை உணருகிறதில்லே. இதேமாதிரி எக்காலமும் மூர்ச்சையிலிருக்கும் ஜீவன்களுக்கு இன்ப துன்பங்களுடைய உணர்ச்சி கிடையாது.

வினு:—பாருங்கள்! நாங்கள் கந்த மூல பல, கனுவர்க்கங்களே உண்பது கிடையாது. ஏனெனில் முன் சொன்னவைகளில் பல ஜீவன்களிலிருக்கின் றன, பின்சொன்னவைகளிலோ கணக்கு வழக்கில்லாதிருக்கின்றன. இவைகளே த்தின்போமேயானுல் இவ்வுயிர்களேத் துன்புறுத்தி கொலே செய்த பாபத்திற் காளாவோம்.

விடை:--இந்நம்பிக்கைக்கும் காரணம் உங்களுடைய அறிவீனமேயாகும்? காய் கரிகளேச் சாப்பிடுவதினுல் எவ்விதமாக ஜீவன்கள் துன்புறுத்தப்பட்டுக் கொல்லப்படுகிறதென்று நம்புகிறீர்கள்? பிரத்தியட்சப் பிரமாணத்தினுல் அறிகி றீர்களா? ஆம் என்ருல் இவ்வழியை நாங்களும் அறிய ஆவலுள்ளவர்களாயிருக் கிருேம். நீங்களும் அறியமாட்டீர்கள்; எங்களுககும் சொல்லமாட்டீர்கள். பிரத் தியட்சப் பிரமாணத்தினுலேயே இது சித்திக்காமல் போனுல், அனுமானம்' உபமானம், சப்தம் முதலிய பிரமாணங்களினுல் யாது பிரயோஜனம்? அடர் ந்த அந்தக்காரத்திலும், பெரும் மயக்கத்திலும் இருக்கும் ஜீவன்கள் இன்ப துன்பங்களின் உணர்ச்சியை அறிகிறதென்று நினேத்த உங்களுடைய தீர்த்தங் கரர்களின் தப்பேயாகும் இது. யுக்திக்கும் புத்திக்கும் விரோதமான இவை களே உங்களுக்குக கற்பித்துள்ளார்கள். விசாலத்தில் கட்டுப்பட்டுள்ள பொருள் களில் கணக்கற்ற பிராணிகள் எவ்விதம் இருக்க முடியும்? காய்கரி கிழங்குகளு டைய பரிமாணத்தை நாம் பார்க்கும்பொழுது அவைகளிலிருப்பதின் தொகை எவ்விதம் அனந்தமாகும்? எனவே நீங்கள் கூறுவது மதியீனமேயாகும்.

வினு:—நெருப்பைக் கொண்டு காய்ச்சாத தண்ணீரைக் குடிப்பதினுல் பாப த்தைச் செய்தவர்களாகிறீர். காய்ச்சின ஜலத்தையே எங்களேப் போல், நீங்களும் அருந்தவேண்டும்.

விடை:—இதுவும் பிரமையே. தண்ணீரைக் காய்ச்சுங்கால் அதிலுள்ள பிராணிகளெல்லாம் உயிர் துறக்க நேரிடுமே? காய்ச்சின தண்ணீரில் அவைக

களுடைய சரீரத்தின் அணுக்கள் முழுவதும் கலந்து கொள்ளுகிற படியினல் இச்சிறிய இறந்த ஜீவப் பிராணிகளின் கஷாயத்தையே குடிக்கிறவர்களாகிறீர்கள்.* எனவே நீங்கள் பெரும் பாபிகள். காய்ச்சப்படாத நீரைக் குடிக்கிறவர்கள் பாபம் ஒன்றும் செய்கிறவர்களாக ஆகிறதில்லை. ஏனெனில வயிற்றுச் சூடு பட்டவுடன், மூச்சுக் காற்றுடன் வெளியில் வந்து விடும். உண்மையைச்சொல்லப்புகில் இருவர்களும் பாபம் செய்கிறார்களில்லை. ஏனெனில் முன் கூறின விதம் இன்ப துன்பங்களின் உணர்ச்சியை இச்சிறு பிராணிகள் அறிகிறதில்லை.

வினு:—வயிற்றுச் சூட்டினுல் இவைகள் வெளியாகும் பொழுது, வெளியில் காய்ச்சும் பொழுதும் ஏன் வெளியாகாது?

விடை:—வெளியாய்விடுவது உண்மையே. ஆனுல் நீங்கள் கூறும் வண்ணம் மூச்சுக் காற்றினுல் கூட இறக்கிற இவைகள், காய்ச்சுவதினுல் ஏன் மரிக்காது. அல்லது சரீரத்துடன் தப்பியோடுவதற்கு முந்தி ஏன் பெருங்கஷ்டத்தையடையாது? அல்லது ஜலத்துடனேயே ஏன் சேர்ந்துவிடாது? இதினுல் நீங்கள் பெரும் பாபிகளாகிறீர்கள் அல்லவா?

வினு:—நாங்கள் எங்கள் கைகளைக் கொண்டு காய்ச்சுகிறதில்லை. அல்லது கிரகஸ்தர்களையும் காய்ச்சச் சொல்லுவதில்லை. எனவே பாபிகளாக மாட்டோம்.

விடை:—வெந்நீரை நீங்கள் காய்ச்சவும் குடிக்கவும் மறுக்கும் பொழுது உங்களுக்காகக் கிரகஸ்தனும் காய்ச்சமாட்டான். ஆதலால் பாபத்திற்குக் காரணம் நீங்களேயாவீர்கள். நாங்களறிந்த வரையில் கிரகஸ்தர்களைக் காட்டிலும் நீங்கள் பெரும் பாபிகள். ஏனெனில் கிரகஸ்தர்களிடம் முன்னரே சொல்லியிருந்தால் அவாகள் ஒரு தரமே காய்ச்சுவர்கள். சாதுக்களாகிய உங்களுடைய வருகை நேரத்தை யறியாத, அவர்களில் ஒவ்வொருவரும் எக்காலமும் கொதித்த ஜலத்தை வைத்துக்கொண்டிருக்கிறார்கள். எனவே பாபத்திற்கு நீங்களே காரண புருஷர்கள் என்று கூறவேண்டும்.

உணவு பதார்த்தங்களைச் சமைத்தல், உழுது பயிரிடல், வியாபாரஞ் செய்தல் முதலிய வேலைகளில் செலவாகும் ஏரி துரும்புகளுக்கும், தீக்கும் காரணம் நீங்கள்தான் என்று மேற்சொன்னவைகளைக் கொண்டே காட்ட முடியும். நீரைக் கொதிக்க வைப்பதற்குக் காரணம் நீங்களே. காய்ச்சின ஜலத்தைக் குடித்துக் காய்ச்சாததைக் குடிக்காமலிருக்க உபதேசம் செய்கிறவர்களும் நீங்களே. ஆதலால் முக்கியமாக நீங்களே பாபிகள். உங்களை பின் பற்றி நடப்பவர்களும் பாபிகள். அறியாமையால் அழுந்தினவர்களென்று உங்களை அழைப்பது மிகையாது. சமணசமயத்தைச் சேராதவர்களைத் தூஷித்து நிந்தனை செய்வது பாபமல்லவா? உங்களுடைய தீர்த்தங்கரர்

* இதிலிருந்து நூலாசிரியர் காய்ச்சின தண்ணீரைக் குடிப்பதற்கு விரோதமாயிருக்கிறாரென்று எடுத்துக்கொள்ளக் கூடாது. சமணர்களுடைய ஆயுதத்தைக் கொண்டே அவர்களை எதிர்க்கிறார். (மொ—ர்)

களின் மதம் உண்மை யாகுமேயானுல் கடவுள் இச்சிருஷ்ட்டியில் நதிகளை ஓடச் செய்வானேன்? ஜலத்தை விடுவானேன்? உங்களுடைய நம்பிக்கைப் பிரகாரம் கோடிக்கணக்கான ஜீவன்களை வதைக்கவல்ல உஷ்ணத்தைக் கொடுக்கும் சூரியனையும் கூட சிருஷ்ட்டித்திருக்கக்கூடாது. நீங்கள் ஈசுவரன என்று நம்பு படியானவர்கள் ஏன் கருணை கூர்ந்து சூரியவெப்பத்தைத் தணித்து மேகத்தைக் கூடாமல் செய்யக்கூடாது? நாம் முன் சொன்ன வண்ணம் விளங்கும் பிராணிகளைத் தவிர கந்தமூல பலங்களில் வாழும் ஜீவராசிகள் சுக துக்கங்களை அனுபவிக்கிறதில்லை. சகல பிராணிகளிடத்தும் தயையுடனிருப்பது துக்ககரமானதே. ஏனெனில் இவைகள் (இப்பிராணிகள்) எல்லாம், உங்களுடைய நம்பிக்கை பிரகாரம் மானிடப் பிறப்பை யடைந்து, திருடன் கள்ளன் முதலானவர்கள் கூட தண்டிக்கப் படாமலிருந்துவிட்டால், பாபம் பெருகிக் கொண்டு போகுமே. தீயோர்களைத் தண்டித்து நல்லோர்களைக் காப்பாற்றுவதே உண்மையான கருணையாகும். இதற்கு மாறுபடுவது கருணை கடாட்சம் இவ்விரண்டும் பிறழுவதேயாகும். வியாபாரத்திலிறங்கி, பொய் சொல்லி, பணம்பறித்து, எழைகளை ஏமாற்றுகிற சமணர்கள் பலரிருக்கிறார்கள். சிறப்பாக இத்தீயவழக்கங்களைத் தொலைத்துவிடும்படி ஏன் நீங்கள் உபதேசம் செய்யக்கூடாது? வாயை மூடிக்கொள்ளுதல் முதலான சூழ்ச்சிகளை ஏன் கையாளுகிறீர்கள்? (ஆண் பெண் இருபாலர்களுக்கும்) தீட்சை யளிக்கும் பொழுது தலைமயிரைப் பிடுங்கல், பல நாள் உபவாசம் இருத்தல், முதலான கஷ்ட்டங்களை ஏற்று ஆத்மஹத்திக்கு ஆளாகிறீர்கள். யானை, குதிரை, ஒட்டகம், இவைகளில் சவாரி செய்வதையும், பிறர் உங்களுக்காக உழைப்பதையும் ஏன் பாபமாக நீங்கள் எண்ணுகிறதில்லை? நன்ருய்த் தெரிகிற பொய் புரட்டுகளைக் கூட சரியானதென, உங்களால் நிரூபிக்க முடியாமலிருக்க, தீர்த்தங்கரர்களினுலுங்கூட அது முடியாததேயாகும். உங்களுடைய சமய நூற்களைப் படிக்கும் பொழுதும் சொல்லும் பொழுதும், உங்கள் நம்பிக்கைப் பிரகாரமே, நீங்களும், உங்களுடைய சீடர்களும் பல பிராணிகளை வதைக்கிறீர்கள். இப்பாபத்தை ஏன் செய்கிறவர்களாகிறீர்கள்? நாம் விரிவாகக் கூறியில்லாமலிருந்த பொழுதிலும் இதை அறிந்து கொள்ளவேண்டியது அவசியமாகிறது. பூமி, ஜலம், ஆகாரம் முதலான விடங்களில் இருக்கும், ஸ்தாவர சரீரத்தையுடைய முழு அறிவுமிழந்திருக்கிற பிராணிகள் ஒரு பொழுதும் உணரமாட்டாது.

சமணர்களுடைய இன்னும் சில அசம்பவங்களைச் சொல்லுவோம். மானிட சரீரத்தின் கையைப் போல் மூன்றரை கொண்டது ஒரு தனுஷ். இது ஒரு அளவைக் கருவியாகும்.

கால அளவை முன்னரே கூறியுள்ளோம். இரத்தின சாரம், முதல் பாகத்தின் 166, 167 பக்கங்களில் எழுதப்பட்டிருப்பதாவது:—

| | பெயர். | சரீரநீளம். | வயது. |
|---|---|---|---|
| 1. | இருஷபதேவர் | 500 தனுஷ் | 8,4000,000 பூர்வவருடங்கள், |
| 2. | அஜிதநாதர் | 450 ,, | 7,200,000 ,, |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 3. | சம்பவநாதர் | 400 | ,, | 6,000,000 | ,, |
| 4. | அபிநந்தனர் | 350 | ,, | 5,000,000 | ,, |
| 5. | சுமதிநாதர் | 300 | ,, | 4,000,000 | ,, |
| 6. | பத்மப்பிரம | 140 | ,, | 3,000,000 | ,, |
| 7. | பாரசுவநாதர் | 200 | ,, | 2,000,000 | ,, |
| 8. | சந்திரப்பிரபா | 150 | ,, | 1,000'000 | ,, |
| 9. | ஸுவிதிநாதர் | 100 | ,, | 200,000 | ,, |
| 10. | சீதளநாதர் | 90 | ,, | 100,000 | ,, |
| 11. | சிரேயாம்சநாதர் | 80 | ,, | 8,400,000 | ,, |
| 12. | வாசுபூஜ்யசுவாமி | 70 | ,, | 7,200,000 | ,, |
| 13. | விமலநாதசுவாமி | 60 | ,, | 6,000,000 | ,, |
| 14. | அநந்தநாதசுவாமி | 40 | ,, | 3,000,000 | ,, |
| 15. | தர்மநாதசுவாமி | 45 | ,, | 1,000,000 | ,, |
| 16. | சாந்திநாதசுவாமி | 40 | ,, | 100,000 | ,, |
| 17. | குந்துநாதசுவாமி | 35 | ,, | 95,000 | ,, |
| 18. | அமரநாதசுவாமி | 30 | ,, | 84,000 | ,, |
| 19. | மல்லிநாதசுவாமி | 25 | ,, | 5,5000 | ,, |
| 20. | முனிஸுவிருதசுவாமி | 20 | ,, | 30,000 | ,, |
| 21. | நமிநாதசவாமி | 14 | ,, | 10,000 | ,, |
| 22. | நேமிநாதசுவாமி | 10 | ,, | 10,000 | ,, |
| 23. | பாரசுவநாதசுமாமி | 9 | ,, | 100 | ,, |
| 24. | மகாவீரசுவாமி | 7 | ,, | 72 | ,, |

இவ்விருபத்தி நான்கு தீர்த்தங்கரர்களும் சமண சமயத்தையுண்டு பண்ணின ஆசாரியர்களும் குருமார்களுமாவார்கள். சமணர்கள் இவர்களைச் சருவேசுவரனுக்கக்கருதுகிறுர்கள். இவர்களெல்லோரும் மோட்சத்தை யடைந்தவர்கள். மானிட சரீரம் இவ்வளவு பெரிய உடலைத் தாங்கி, இவ்வளவு காலம் வாழ முடியுமா வென்பதைப் புத்திமான்கள் யோசிக்கவேண்டும். இம்மாதிரி யானவர்களிருந்தால் இப்பூகோளத்தில் வெகு சிலரே இருக்க முடியும். இஜ்ஜயின புரட்டுகளைப் பின்பற்றி புராணிகர்களும். 1,000. 10,000. 100,000. வருடங்கள் மக்கள் வாழ்ந்திருந்ததாக எழுதி வைத்திருக்கிறுர்கள். இவைகளெல்லாம் அசம்பவமான படியினல் சமணர்கள் கூறுவதும் அங்ஙனமே. இன்னும் சில உதாரணங்களாவன:—

1. நாககேது ஒருகிராமத்தையொத்தக் கல்லைத் தன் கைவிரலில்) தாங்கினுன். (கல்பபாஷியம் பக்கம் 4.)

2. மகாவீரர் தன் கை விரலைப் பூமியின் பேரில் அழுத்தவே சேஷ சர்ப்பம் நடுங்கிற்று. (ஷை பக்கம் 46.)

3. பாம்பு மகாவீரரைக் கடித்தது. இரத்தத்திற்குப் பதிலாக பால் வந்தது. பாம்பும் சுவர்க்கத்தை யடைந்தது. (ஷை பக்கம் 46.)

4. மகாவீரருடைய பாதங்களின் மேல் பணியாரம் சமைத்தார்கள். இருந்தும் கால் எரிந்து போகவில்லை. (ஷை பக்கம் 47.)

5. சிறியதொரு பாண்டத்தில் ஒட்டகத்தை நிற்கச் செய்தார்கள். (ஷைபக்கம் 10.)

6. சரீரத்தின் அழுக்கைக் கழுவவுங் கூடாது, துடைக்கவுங் கூடாது. (இரத்தின சாரம் முதற்பாகம் 14 பக்கம்.)

7. தமசாரர் எனப் பெயருள்ள சமண சாது கோபங் கொண்டு மந்திரத்தை ஜபிக்கவே பட்டணம் தீக்கிரையாயிற்று. (விவேகசாரம், முதற்பாகம், பக்கம் 15.)

8. அரசாக்ஞையைக் கீழ்ப்படிந்தே தீரவேண்டும். (விவேகசாரம். முதற்பாகம் பக்கம் 14.)

9. கோஷா என்னும் வேசி, தட்டில் எண்ணெய் விதைகளை நிறப்பினாள். பூக்களினால் மூடப்பட்ட ஊசியை நடுவில் நிறுத்தி அதன் மேலிருந்துகொண்டு தாண்டவமாடினாள். இருந்தும் ஊசி காலைக் குத்தவில்லை. விதைகளும் இடம் விட்டு இடம் மாறவில்லை. (ஷை 227.)

10. ஸ்தூலமுனி இதே வேசியுடன் 12 வருடகாலம் கூடி வாழ்ந்தார். பின்னர் தீட்சை பெற்று நற்கதியை யடைந்தார். வேசியும் சமண சமயத்தைப் பின்பற்றின படியினால் நல்ல கதியை யடைந்தாள். (தத்துவ விவேக 228.)

11. சித்தருடைய கழுத்திலிருந்து தொங்கிக் கொண்டிருந்த பையானது ஒரு வேசிக்கு 500 மோகர்களை யளித்தது. (விவேகசாரம்,முதற்பாகம், 185.)

12. பலமுள்ளவன், கடவுள், குரு, பெற்றோர், குலப்புரோகிதர், உற்றார் உறவினர்,இவர்களுடைய வார்த்தைகளைக் காப்பாற்றவேண்டிய சமயத்திலும், வனத்தின் நடுவிலும், தர்மத்தினின்று பிறழின போதிலும் பயனில்லாமல் போய்விடாது. (ஷை பக்கம் 228.)

இவர்களது பெரும் பொய்களின் சிறுமை என்னே! கிராமத்தின் பரிமாணக் கல்லைத் தூக்குவதும், கை பெருவிரலைக் கொண்டு பூமியை அழுத்துவதும், சாத்தியமா? பூமியின் கீழ் பாம்பில்லாமலிருக்க அது எவ்விதம் நடுங்கமுடியும்? சமையல் செய்த பொழுது மகாவீரரின் கால்கள் ஏன் எரிந்து போகாமலிருந்தது? ஒரு சிறிய பாண்டத்தில் ஒட்டகம் அடங்குவதுசாத்தியமா? இவைகளை வாசகர்கள் கவனித்தல் வேண்டும். சரீரத்திலுள்ள அழுக்கைக் கழுவாமல் இருக்கிறவர்கள், அத்துர் நாற்றத்தினால் கஷ்டப் படுவார்கள். நகரத்தை எரித்த சாது கருணையற்றவராயும் கடின சித்த முள்ளவராயுமிருந்திருக்கவேண்டும். மகாவீரருடைய சேர்க்கையினால்கூட ஆத்ம சுத்தியுண்டாகாமலிருக்க அவரின் மூலமாகச் சமணர்களுக்கு நற்கதி எவ்விதம் கிடைக்கும்?(ஏனெனில் அவர் இறந்துபோய் விட்டாரே.) அரசனைக் கீழ்ப்படி யென்பது சிறந்ததே. ஆனால் பனியா வகுப்பைச் சேர்ந்தவர்களான படியினால் பயத்தின் மேலீட்டினால் இத் தாக்கீதை உண்டு பண்ணி யிருப்பார்கள் போலும். கால் குத்தாமலும்,விதைகள் பரவாமலும் வேசி கோஷா எவ்வளவு இலேசான சரீரத்தையுடைவளாயிரு

ந்தபொழுதிலும்—ஊசி யின் பேரில் நடனம் பண்ணினுளென்பது பொய்யே யாகும். என்ன நேர்ந்த பொழுதிலும் தர்மத்தைப் போற்றி நடக்க வேண்டும். உடையோ துணியாலர்க்கப் பட்டது. இருந்தும் அது எவ்விதம் 800 தங்க மோகர்களை அளிக்கும்? இவ்வித அசம்பவங்களைத் தொகுத்துக்கொண்டு போனுல் சமண நூற்களைப் போல் நம்முடையதும் விரியும். சிற்சிலவற்றைத் தவிர சமணசமயம் கூறுவதனைத்தும் பொய்யேயாகும்.

दोससि दोरवि पदमे । दुगुणा लवणं मिधाय ईसं मे ।
वारससि वारसरवि । तत्यभि इंनि दिठ ससि रविणो । பிரகரண, 4. 77.

ஜம்பு துவீபத்தின் பரப்பு 1,00,000, யோஜனைகள். தீவுகளில் முதன்மை யானது இதுவே. இதில் இரண்டு சந்திரனும் இரண்டு சூரியனும் பிரகாசிக்கி ருர்கள். உப்பு சமுத்திரத்திலுள்ளது 4 சூரியன்கள், 4 சந்திரன்கள். காதகீ கண்டத்தில் 12 சூரியன்களும், 12 சந்திரன்களும் இருக்கின்றன. $12 \times 3 = 36$. இத்துடன் கூட ஜம்புதவீபத்திலுள்ள 2 சூரியன்களையும் 2 சந்திரன்களையும் உப்பு சமுத்திரத்திலுள்ள நான்கையும் சேர்க்கவும். ஆகவே கலோததி சமுத் திரத்திலுள்ளது 42 சந்திரன்களும் சூரியன்களும் ஆகும். ஆகமொத்தம் $42 \times 3 = 126$ சந்திர சூரியன்கள். உப்புசமுத்திரத்திலுள்ள 4 சூரியன், 4 சந்திரன், காதகீபரப்பிலுள்ள 12, ஜம்புதவீபத்திலுள்ள 2, இவற்றைச் சேர்க்கவும். ஆக மொத்தம் புஷ்கரதுவீபத்திலுள்ளது 144 சந்திரன்கள். மனிதர்கள் வாழும் மொத்தத்தில் பாதியான பூகோளத்தின் கணக்கேயாகும் இவைகள். மனித வாழ்க்கை யற்ற பரப்புகளில் சூரியச் சந்திரன்கள் பல விருக்கின்றன. ஆனுல் அவைகள் அசைவற்றிருக்கிறது. $144 \times 3 = 432$. ஜம்புதவீபத்திலுள்ள 2, உப்பு சமுத்திரத்திலுள்ள 4, காதகீயிலுள்ள 12, கலோததீயிலுள்ள 42, இவைகள் எல்லாவற்றையும் சேர்த்துப் பார்த்தால், புஷ்கரத்தில் இருப்பது 492 சூரியன்களும் 492 சந்திரன்களும் என்று வெளியாகும். இவைகளெல் லாவற்றிற்கும் சித்தாந்த கிரந்தங்களான ஸ்ரீஜினபத்திர கனீணீ க்ஷமாசிரமண சங்கியாமி, யோதி ஸகாண்டக பயன்னுச் சந்திரபன்னதீ, சூரபன்னதீ முதலான வைகளில் காணலாம்.

பூகோள சாஸ்திர, கணித சாஸ்திர மேதாவிகள் கவனித்தல் வேண்டும். ஒரு வகைப் பட்ட கணக்கின் உதவியைக்கொண்டு இப்பூகோளத்தில் 492 சூரி யன்கள், 492 சந்திரன்கள் இருப்பதாகவும், வேருெரு வகையான கணக்கைக் கொண்டு கணக்கிடமுடியாத சூரிய சந்திராதிகளும் இருப்பதாகச் சமணர்கள் அறிகிருர்கள். வேதத்தில் நம்பிக்கையுள்ள வானசாஸ்திரி முதலானவர்களாலெ ழுதப்பட்ட சூரியசித்தாந்தம் முதலிய நூல்களைப் படிப்பதினுல் இச்சாத்திரங்க ளின் உண்மையை நீ அறிந்து கொள்ளமுடியும். அது உன்னுடைய அதிர்ஷ்ட் டவசமேயாகும். சமணமாகிற இருட்டிலகப்பட்டுக் கொண்டிருந்தால், சமணர் களைப்போல் திசை தெரியாமல் தவிக்கவேண்டியதே. ஜம்புதவீபம் முழுவ திற்கும் ஒரே சூரியன் சந்திரன் போதாதென்று அவ்வறிவில்லாதவர்களுக்கு யாராவது சொல்லியிருக்கவேண்டும். ஏனெனில் ஒரே சந்திர சூரியன் 24 மணி

நேரத்தில் பூமியைப்போன்ற பெரிய பரப்புகளில் பிரகாசிக்க முடியாது. சூரி யனைவிடப் பூமி பெரியதென்கிற நம்பிக்கை கொண்டவர்கள் இத்தப்பிற்கு ஆளாகிறார்கள். மேலும் சமண நூற்கள் கூறுவதாவது:—

**दो ससि दो रवि पंती एगंतरियाछ सठिसंखाया ।**
**मेरुंपयाहिणंता । माणुसखित्ते परिअडंति ॥** பிரகாண. 4. 79.

சூரிய சந்திரன்களுடை தொடர்ச்சியைக் குறித்து பேசுவோம். இவ்வித தொடர்புகளில் இரண்டிருக்கின்றன். 10,000 யோஜனை தூரத்திலிருந்து ஒவ் வொன்றும் நடக்கிறது. சந்திரர்களுடைய தொடர்பையடுத்து சூரியர்களுடை யதும் சூரியர்களுடையதையடுத்துச் சந்திரர்களுடையதுமிருக்கின்றன. ஆகவேதொடர்ச்சிகளின் எண்ணிக்கை நான்காகின்றன. சூரியனுடைய தொடர்ச்சி ஒவ்வொன்றில் 66 சூரியன்களும், சந்திரனுடைய தொடர்ச்சி ஒவ்வொன்றில் 66 சந்திரன்களும் இருக்கின்றன. இந்நான்கு தொடர்ச்சிகளும் ஜம்பு துவீபத்திலுள்ள மேருபர்வதத்தை வலம் வந்த பின்னர் மனித சஞ்சாரமுள்ள பூகோளத்தில் திரிகிறது. மேருவிற்குத் தெற்கேயொன்றும், அதற்குத் தெற்கில் மற்றொன்றும் சுற்றுகின்றது. உப்பு சமுத்திரத்தின் ஒவ்வொரு திசையில் இரண்டுசூரியனும், காதகீபரப்பில் 6 ம், கலோததியில் 21 ம், புஷ்கரத்தில் 26 ம் முறையே திரிகின்றன. இவ்விதமாக வடதிசையில் 66 சூரியன்களும் தென் திசையில் 66 சூரியன்களும் திரிகின்றன. எல்லாவற்றையும் கூட்டினால் 132 சூரியன்களும் 132 சந்திரன்களும் பூகோளத்தில் மனித சஞ்சாரமுள்ள பரப்பு களில் திரிகின்றன. சந்திரன்களுடைய நக்ஷத்திரங்களின் தொடர்ச்சி பலவை களுமிருக்கின்றன."

கவனிக்கவேண்டும். 132 சந்திரன்களும் 132 சூரியன்களும் சமணர்க ளுடைய இல்லத்திலிருக்கின்றனவோ என்னமோ? இருந்தால், அதில் வாழுகிறவர்கள் எவ்விதம் இவைகளுடைய குளிரையும், வெப்பத்தையும் சகித்துக்கொண்டு இருக்கிறார்களோ? பூகோள சாஸ்திரம் பூமி சாஸ்திரம் இவைகளையறியாதவர்களே இப்பொய்யை நம்புவார்கள். நாமிருக்கும் கிரகத்தையொத்த, பலவைகளில் பிரகாசிக்கவல்ல ஒருசூரியன் இருக்கும்பொழுது, அது நம் பூமிக்கு வெளிச்சங்காட்ட முடியாதென்பதை எவன் சந்தேகிப்பான்? சூரியனைச் சுற்றி பூமியும், பூமியைச் சுற்றி சூரியனும் பிரயாணம் செய்யாமலிருந்தால் பலவருடங்கள் வெளிச்சத்திலேயோ அல்லது இருட்டிலேயோ நாம் வாழ நேரிடும். ஹிமாலயத்திற்குச் சுமேரு என்ற மற்றொரு பெயருண்டு. குடத்திற்கு முன் கடுகு எப்படியோ அப்படியே தான் அது சூரியன் முன்னிலையிலும். அவர்கள் சமயத்திலுள்ளவரையில் சமணர்கள் இவைகளை யறியாமல் இருட்டிலேயே திண்டாடுவார்கள்.

**समत्तचरण सहियासव्वंलोगं फुसे निरवसेसं ।**
**सत्तयचउदसभाए पंचयसुपदेसविरईए ॥** பிரகாண. 4, 135

"முக்தியைப் பெற்ற, தர்மஜீவன்கள், சுயேச்சையாயிருப்பதினால், 14 இராஜ்யங்களிலும் திரியும், இதற்குக் காரணம் அவைகளுடைய ஆத்மசக்தியேயாகும்," 14 வது இராச்சியத்தின் உச்சியில் சர்வார்த்த சித்தி விமானத்தின் கொடிமரத்திற்குக் கொஞ்ச தூரத்திற்கு மேல், சமணர்கள் கூறும் வண்ணம், சித்தசிலை திவ்விய ஆகாசம் என்னும்படியான சிவபுரி முதலானவைகளிருக்கின்றன. சர்வஞ்ஞமும் பரிபூரண பரிசுத்தமும் அடைந்தவர்களே அவ்விடத்தில் போகமுடியும். அவ்விடத்திலும் சுய ஆத்ம பலத்தைக் கொண்டு வசிக்கமுடியும்".

வரையறுக்கப்பட்ட எல்லையையுடையது எங்கும் பரவியதாகாது. எங்கும் பரவாதது எல்லாம் அறிந்த சர்வஞ்ஞமாகாது. எதனுடைய ஆத்மா குறிப்பிட்ட ஒரு பிரதேசத்திலிருக்கிறதோ அதுவே போய் வந்து கொண்டிருக்க முடியும். கட்டுப்பட்டது, ஞானி, அஞ்ஞானி, இவைகளைப் பொருத்தவரையிலேயே இது சரியாகும். சர்வ வியாபியாயும் சர்வஞ்ஞமாயுமுள்ளவனுக்கு இது ஏற்காது. சமணர்களுடைய தீர்த்தங்கரர்கள் அற்பமாயும் அற்பஞ்ஞர்களாயும், இருந்திருந்தால் ஒருபொழுதும் சர்வஞ்ஞர்களாயும், சர்வ வியாபிகளாயும் மாறமுடியாது. ஆதியந்தமற்ற சர்வ வியாபக சர்வஞ்ஞ, பவித்திர ஞானசுவரூபரான இறைவனைச் சமணர்கள் நம்பாதது வருந்தத்தக்கதே. மேலும் அவர்கள் சொல்லுவதாவது:—

गब्भनरति पलियाऊ । तिगाउ उक्कोसते जहन्नेणं ।
मुच्छिम दुहावि अन्तमुहु । अङ्गुल असंख भागतणू ॥ பிரகரண, 4, 241.

மானிடவகுப்பை இருவிதமாகப் பிரித்திருக்கிறார்கள். (1) கர்ப்பந்தரித்து பிறந்தவர்கள். (2) கர்ப்பந்தரிக்காமல் பிறந்தவர்கள். பின் கூறினவர்கள் 3 பல்யோபம காலம் வசித்து 3 கோச நீளமுள்ளவர்களாகவிருப்பார்கள்.

இத்துணை ஆயுசும் பரிமாணமும் உள்ள வெகு சிலரே இவ்வுலகில் இருக்கமுடியுமென்றே நாம் நம்புகிறோம். ஆயுள் காலம் முழுவதும் ஜீவித்திருந்தால் அவர்களுடைய மக்களும் அவர்களைப் போலவே யிருப்பார்கள். பம்பாயையொத்த நகரத்தில் இம்மாதிரி 2 மனிதர்களும், கல்கத்தாவில் 3 அல்லது 4 மனிதர்களுமே இருக்கமுடியும். சமணர்களோ பட்டணங்களில் கோடிக்கணக்கானவர்கள் வசித்தார்களென்கிறார்கள். ஆகையினால் அப்பட்டணங்களுடைய விஸ்திரணம் லக்ஷக்கணக்கான மைல்களிருக்கவேண்டும். பூகோளத்தில் அம்மாதிரி பட்டணம் ஒன்றைக்கூட அமைக்கமுடியாதே.

पणया ललरकयोयण । विरकंभा सिद्धिशिलफलिहविमला ।
तदुवरि गजोयणंते लोगन्तो तच्छ सिद्धठिई ॥ பிரகரண, 4. 245.

சர்வார்த்த சித்தி விமானத்தின் கொடி மரத்தின் மேல் 12 யோஜனை தூரமுள்ள சித்தசிலையின் விஸ்தீரணம் 45 லக்ஷம் யோஜனைகள். சித்தசிலையிலமைக்கப்பட்டுள்ள சித்தபூமிவெண்மை நிறமானது, பளப்பளப்பானது, தங்கமயமானது, கண்ணாடியைப் போல் பிரகாசிக்கக்கூடியது, சித்தர்களிருக்கும்

இடம் இதுவேயாகும். சிலர் இதை ஈஷத் பிராக்பரா என்றும் அறிகிறார்கள். சர்வார்த்தசித்தி விமானத்திற்கு 12 யோஜனைகளுக்கப்பால் அலோகம் (ஸ்பரிசிக்கமுடியாதது) இருக்கிறது. முக்தியை யடைந்தவர்களே இதன் மர்மத்தை யறியமுடியும். விமானத்தின் மத்தியதேச பரிமாணம் 8 யோஜனைகள். நான்கு திக்குகளிலும் சித்தசிலை அமைக்கப்பட்டு அங்கிருந்து வளர்ந்து போகிறது. பரந்த குடையை யொத்திருக்கிறது. சிறிய ஈயின் இரகைப் போலிருக்கிறது. சிலையின் 1 யோஜனைத் தூரத்திற்கப்பால் முக்தியின்பப் பிரதேசத்தின் முடிவாகும். சித்தர்கள் வாழும் இடம் இதுவேயாகும்''.

கவனியுங்கள்! சர்வார்த்த சித்தி விமானத்தினுடைய கொடிமரத்தின் மேல் இருப்பது சமணர்களுடைய முக்தியிடம். அதன் விஸ்தீரணம் 45,000,000 யோஜனைகளாம். எத்துணை சிறந்ததாயும், நிர்மலமாயும் அந்த விடமிருந்தபொழுதிலும், அதில் வசிக்கும் முக்தியடைந்த ஜீவன்களை ஒருவிதத்தில் பந்தத்திற்குட்பட்டதென்றே சொல்லலாம். ஏனெனில சிலையிலிருந்து வெளிவந்தவுடன் முக்தியிலிருந்து நழுவி விடுகிறதாகிறது. உள்ளே வாசம் செய்யும் வரையில் சுவாசிக்கக் காற்றுகூட கிடையாது. இவைகளெல்லாம் பேதைகளைப் பிடிப்பதற்கென்று பரப்பப்பட்ட வலைப் பின்னலேயாகும். மேலும் சமண நூற்களில் சொல்லுவதாவது:—

**वितिचउरिं दिस सरीरं । वार सजोयणति कोसच उकोसं जोयणसहस**
**पणिंदिय । उहे वुच्छन्ति विसेसंतु ॥** பிரகரண 4. 267.

ஏகேந்திரியத்தைக் கொண்ட (ஒரே இந்திரியம்) பிராணியின் தேகத்தின் அதிக நீள அளவு 1,000 யோஜனைகள். இரண்டு இந்திரியங்களை (சங்கு முதலானவைகளைப் போன்றது) உடையதின் நீளம் 12 யோஜனை; நான்கு இந்திரியங்களைக் கொண்டதின் அளவு 5 கோசம்; பஞ்சேந்திரியங்களைக் கொண்டதின் அளவு 1000 யோஜனைகள்.

1000 யோஜனை நீளமுள்ள சரீரத்தையுடையவைகளிருந்தால், பூமி நிறைந்துவிடுமே. நூறு பேர்களைக்கூடப் பிடிக்காதே. அச்சமயத்தில் எங்கு வசிப்பது, எவ்வழி போவது, என்று கேட்டால், அவர்களுடைய நூல்கள் வீட்டினுள் அடைப்பட்டு கிடக்கும். 4000 கோசம் பருமனுள்ள மனிதனுக்குக் குறைந்தது 320,000 கோசம் விஸ்தீரணமான வீதி வேண்டியிருக்கும். இவ்வளவு விசாலமான வீட்டைச் சமணர்கள் எல்லோரும் சேமித்து வைத்திருக்கும் தொகையைக் கொண்டுகூட கட்டமுடியாது. 8,000 மைல்களுக்கதிகமான விஸ்தீரணத்தையுடைய கூரைகளைத் தாங்கவிட்டங்கள் ஏது? இவ்வித வீட்டிற்குத் தூண்கள் வைப்பது எங்ஙனம் முடியும்? எனவே எல்லாம் பொய்யே. மீண்டும் இந்நூலிலியே சொல்லுவதாவது:—

**ते थूला पल्ले विहुसं खिज्जाचे वहुति सव्वेवि ।**
**तेइक्कि असंखे । सुहुमे खम्मे पकप्पेह ॥** பிரகரண். 4. 4.

4 கோசம் அகலமும் 4 கோசம் ஆழமுமுள்ள கிணறு கைவிரல் நீளமுள்ள மயிரினல் கிரப்பட்டிருக்கிறது. கைவிரல் நீளமான மயிரை மொத்தம் 20,97,152 பாகங்களாகத் துண்டிக்கலாம் 330,762,108,246,562,542,199, 6097,5361,000,0000 இவ்வளவு விசாலபான பல்யோமத்திலிருக்கும் மயிர்களே சங்கியாத காலமெனப்படும். எண்ணுவதற்கியலாத மயிரின் பாகங்கள் பலவற்றை ஊகிப்பதே அசங்கியாத காலமாம்.

சமணர்களுடைய கணக்கின் போக்கை கவனியுங்கள். எவ்விதமாக மயிர் ஒரு அளவு கருவியாகும்? அசங்கியாத காலத்தை ஊகித்தறிவதற்கு மயிரின் பாகங்களை மனதில் எண்ணிக்கொள்ளவேண்டுமென்றபொழுது, கைகளின் உதவியால் (சங்கியாத காலத்தை அறியுங்கால்) முதலில் மயிரை கோடானக் கோடிக் கணக்காய்த் துண்டிக்கவேண்டும் என்று ஏற்படுகிறது. கைகளினல் இவ்வேலை யாகாமலிருக்கும் பொழுது மனதைத் தேடினர்கள். கைவிரல் நீளமான மயிரைச் சங்கியாதப் பாகங்களாககூடத் துண்டிக்க முடியுமா?

जंबूदीपपमाणं गुलजोयाणलरक वट्टविरकंभी ।
लवणाईयासेसा बलया मादुगुणदुगुणाय ॥ பிரகரண, 4. 12.

ஜம்பூத்துவீபத்தின் விஸ்தீரணம் 4 லக்ஷம் யோஜனை. நடுவில் பள்ளமாயிருக்கிறது. (முன் சொன்ன மாதிரி) பூமியில், ஜம்பூதுவீபத்தைப் போல் ஏழு துவீபங்களும் (தீவுகளும்) உப்பு சமுத்திரத்தைப் போல் ஏழு நீர் பரப்புகளும் இருக்கின்றன. ஒவ்வொன்றும் பரிமாணத்தில் ஜம்புத்துவீபத்தைக் காட்டிலும் பெரியது. அதாவது வரிசைக் கிரமத்தில் முன்னுக்குட் பின்னிருப்பது பெரியது,

ஜம்பூத்துவீபத்தை விடப் பெரியதான இரண்டாவதின் விஸ்தீரணம் 200,000 யோஜனை, மூன்றுவதின் விஸ்தீரணம் 400,000; நான்காவதின் வீஸ்ரணம் 8000,000; ஐந்தாவதின் விஸ்தீரணம் 1,160,000 ஆறுவதின் விஸ்தீரணம் 3,2,00,000; ஏழாவது 6,400.000 இதேமாதிரியோ அல்லது அதிகமான பரிமாணத்தையுடைய ஏழு சமுத்திரங்கள் இவைகளை யெல்லாம் 50000 யோஜனை சுற்றளவுள்ள பூமி தாங்குமோ?

कुरुनईचुलसी सहसा । छश्चेवन्तनरई उपइ विजयं ।
दोदो महानईउ । चनुदस सहसा उपत्तेयं ॥ பிரகரண. 4. 63.

விடை:—குருக்ஷேத்திரத்திற்குள் 84,000 நதிகள் இருக்கின்றனவே.

வினு:—குருக்ஷேத்திரம் நிலத்தின் ஒரு சிறியதுண்டேயாகும். அவ்விடத்தைச் சென்று பார்க்காமல் சமண ஆசிரியர்களுக்கு இதை யெழுதுவதில் நாணந் தோனறவில்லையா? மேலும்

यासुत्तरा उताउ । इगेग सिंहासणाउ अइपुव्वं ।
चउ सु ।वितास निआसण, दिसिभवजिण मणज्जं होई ॥ பிரகரண. 4. 116.

சிலையின் தெற்கிலும், வடக்கிலும் சிங்காசனங்களிருக்கின்றன. நேர் தெற்கே யிருக்கும் நிலத்தின் பெயர் அதிபாண்டகம்பளா; நேர் வடக்கே யிருப்பதின் பெயர். அதிரிக்தகம்பளா. இச்சிம்மாசனங்களில் வீற்றிருப்பவர் தீர்த்தங்கரர்களே. தீர்த்தங்கரர்களுடைய பிறந்த தினத்தைக் கொண்டாடும் இடங்கள் இது! சமணமுக்திக் கிருப்பிடம் இச்சித்தசிலையே யாகும்

சமண நூற்களில் இவ்விதம் நாய்ப் பூனைக் கதைகள் பலவிருக்கின்றன. அவைகளெல்லாவற்றையும் பற்றி கூறுவதால் பயனில்லை. சமண சமயத்திலுள்ள மூன்று நல்ல விஷயங்களாவன:—

1. வடிக்கட்டின தண்ணீரைக்குடித்தல். 2. (ஒப்புக்குமாத்திரமே யானாலும்) சிறியஜீவனிடம் கருணையுடன் இருத்தல். 3. இரவு வேளைகளில் சாப்பிடாமலிருத்தல்.

அவர்களுடைய மீதி உபதேசங்களெல்லாம் வீணே. சமண நூற்களிலுள்ள அசம்பவங்களை யெல்லாம் எடுத்து எழுதப்புகின் இதைப்போல் அநேகம் புத்தகங்கள் எழுதவேண்டிவரும். மனிதாயுசுக்குள் படிக்கவும் முடியாது. சிறியபுல், காற்று எத்திசையில்வீசுகிறதென்பதைக் காட்டுவதுபோல், சமண வெண்ணங்களை யறிய புத்திமான்களுக்கு நாம் கொடுத்திருக்கும் உதாரணங்களே போதுமானது. அதிநுட்பமாகப் போவதில் பிரயோஜனமில்லை. புத்திமான்களுக்கு எப்பொழுதும் ஒரு வார்த்தை போதுமானதல்லவா?

அடுத்த அத்தியாயத்தில் கிறிஸ்துவ மதவிசாரணை செய்வோம்.

பனிரண்டாவது அத்தியாயம்

முற்றிற்று.



## பதின்மூன்ருவது அத்தியாயத்தின்

# முகவுரை.



பைபிலிலிருந்து பிறந்த மதங்களில் கிறிஸ்துவ மதமே சிறந்தது. யூதமதமும் பைபிலைத் தழுவியதேயாகும். நாம் இப்பதின்மூன்ரும் அத்தியாயத்தில் கிறிஸ்துவமதத்தைத்தான் எடுத்துக் கொண்டிருக்கிறேம். ஏனெனின் பைபிளினின்று எழுந்தமதங்களில் இது சிறந்ததும், முக்கியமானதுமாகும். யூதமதமும், வேறுசிலவும் கிறிஸ்துவமதத்தைப்போல் தலைசிறந்து விளங்கவில்லை. நாம் கிறிஸ்துவ மதவிஷயமாய்ச் சொல்லுவதே, இதர மதங்களுக்கும் என்று எல்லோரும் கொள்ளவும். கிறிஸ்துவர்களாலும், யூதர்களாலும் ஏற்றுப் போற்றப்படும் பைபிலை எடுத்து ஆராய்வோம்.

பைபில் சிறந்த பாதிரிமார்களால் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. பொது பாஷையாகிய ஹிந்தியிலும் சமிஸ்கிருதத்திலும் மொழிபெயர்ப்பு உளது. நாம் இவைகளைப் படித்துப்பார்த்ததில் நமக்குப் பல சந்தேகங்கள் ஏற்பட்டன. எல்லோரும் அறியும் பொருட்டு இவைகளில் சிலவற்றை இவ்வத்தியாயத்தில் விடுக்கிறேம்.

சத்யவிருத்தி, அசத்தியநாசம், இந்நோக்கத்துடனே தான் இவ்வத்தியாயத்தைத் துவக்குகிறேம். ஒருவருக்கு அதிருப்தியைக் கொடுப்பதும் மனதைப் புண்படுத்துவதும் அல்லது பொய்க் குற்றங்களைச் சுமற்றுவதும் நமது கருத்தல்ல. இவ்வத்தியாயத்தைப் பார்த்த பின்பு இப்பைபில் எத்தகையது, இதன் உட்கருத்தென்ன, இதனல் எவ்வாறு பயனுளது, என்பது புலனுகும். கிறிஸ்துவமதக் கொள்கைகளை எல்லோரும் ஊன்றிப் படித்தல் எளிதாகும். மேலும் மனிதர்களுடைய தர்மவிஷயங்களின் ஞானம் இதனல் பெருகவே சத்தியாசத்தியம், முதலியவை விளங்கும். அசத்யத்தை (செய்யக்கூடாத காரியம் இவைகளை) விட்டு சத்தியத்தை (செய்யவேண்டிய காரியத்தை) கைப்பிடிக்க உபகாரமாயிருக்கும்.

ஒரு மதத்தை ஏற்கவோ, அல்லது கண்டிக்கவோ ஒருவன், சகலமதங்களை முதலிற் கற்றுணரவேண்டும். எல்லா மதங்களின் சாரத்தை அறியாது வாயில் வந்ததைப் பேசுவது மனிதத் தன்மையாகாது. படியாதவர்கள் கேள்விமூலம் எல்லாவற்றையும் அறிதல்வேண்டும். படிப்பதால் ஒருவன் பண்டிதனுவதுபோல் கேட்பதாலும், அறிவைப் பெறல்கூடும். மேலும் கேட்

டவன் பிறருக்குப் போதிக்க முடியாதபோதிலும், தான் விஷயத்தை அறிதல் கூடும். ஆத்மா சத்தியாசத்தியத்தை அறியும் சக்தி பெற்றது. எனவே, படித்தவனும், கேட்டவனும் தான் படித்ததையும் கேட்டதையும் சரியானதா அல்லவா என்று நிர்ணயித்தல் முடியும். சமயங்களின் ஞானமில்லாமல் விஷயங்களை விவாதித்தறியமுடியாது. அஞ்ஞானிகள் அசத்தியப் படு குழியில் எளிதில் விழுந்துவிடுவார்கள். அவர்களைத் தப்புவிக்கவே இந்நூல். இந்நூலைப் படித்தவர்கள், இதிலில்லாத பிறவிஷயங்களை அனுபவத்தினால் அறிந்து கொள்ளலாம்.

எல்லோராலும் ஒப்புக்கொள்ளத் தகுந்த உண்மயானது எச்சமயத்திற்கும் ஏற்றதே. எவ்விடத்தில் பொய்க் கொள்கைகளும், எவ்விடத்தில் ஒருபுறம் பொய்யும் மற்றொருபுறம் மெய்யும் இருக்கிறதோ அவ்விடத்திலேயே வாதங்கள் விளையும். உண்மையை அறியவேண்டுமெ என்கிற முழு எண்ணத்துடனேயே விவாதித்தால், எளிதில் முடிவைப் பெறலாம்.

எல்லோரும் அறியும்பொருட்டு இப்பதின்மூன்றும் அத்தியாயத்தில் கிறிஸ்துவமத விஷயங்களை விடுக்கிறோம். அவரவர்களின் இஷ்டப்பிரகாரம் அறிந்துகொள்ளவும்.

புத்திமான்களுக்கு ஒரே வார்த்தை போதுமானதென்று நம்புகிறோம்.

---

## பதின்மூன்றாவது அத்தியாயம்.

### கிறிஸ்துவமத சித்தாந்த ஆராய்ச்சி.

—:o:—

இனி நாம் கிறிஸ்துவ சமயத்தைப்பற்றி ஆராய்தல் வேண்டும். அம்மதம் மாசற்றதா என்றும், சத்தியவேதம் என்று அழைக்கப்படும் 'பைபில்' தேவ வாக்குத்தானா என்றும் விசாரணை செய்வோம்.

### ஆதியாகமம்.

1. ஆதியிலே தேவன் வானத்தையும், பூமியையும் சிருஷ்டித்தார். பூமியானது ஒழுங்கின்மையும் வெறுமையுமாய், இருந்தது; ஆழத்தின்மேல் இருள் இருந்தது; தேவ ஆவியானவர் ஜலத்தின்மேல் அசைவாடிக் கொண்டிருந்தார்.

ஆராய்ச்சிக்காரர்:—ஆதியென்று எதைசொல்லுகிறீர்.

கிறிஸ்துவர்:—ஆதியான சிருஷ்டியை.

ஆ:—சிருஷ்டியின் துவக்கமே இதுதானா? இதற்கு முன் வேறு சிருஷ்டிகள் இருந்ததில்லையோ?

கிறி:—இதைப்பற்றி எங்களுக்கு ஒன்றும் தெரியாது. எல்லாம் வல்ல தேவனுக்குத்தான் தெரியும்.

ஆ:—தெரியாதாயின் இப் 'பைபில்' என்னும் புத்தகத்தின்மேல் ஏன் நம்பிக்கை வைக்கவேண்டும்? சிருஷ்டியைப்பற்றி சந்தேகமற விளக்காத புத்தகத்தில் நம்பிக்கை வைத்தும், பிறருக்கு இதை உபதேசம் செய்தும் சந்தேக நிவர்த்தி செய்யாத சித்தாந்தங்களைக் கூறி ஜனங்களை இதில் சிக்கவைத்தும் வருகிறீர்கள். எல்லாச் சந்தேகங்களையும் நிவர்த்தி செய்யும், சுடர்விளக்குப்போன்ற வேதத்தை ஏன் நீங்கள் கொள்ளலாகாது? ஈசுவர சிருஷ்டியை அறியாத நீங்கள், சிருஷ்டிகர்த்தாவான ஈசுவரனை எங்ஙனம் அறியப்போகிறீர்கள். நிற்க 'வானம்' என்று எதைக்கருதுகிறீர்கள்?

கிறி:—எட்டாததும், அதிக உயரத்திலிருக்கிறதும், சூன்யத்தைக்கொண்டதுமானதை நாங்கள் ஆகாசம் என்கிறோம்.

ஆரா:—ஒன்றுமில்லாத சூன்யவஸ்து எங்ஙனம் சிருஷ்டிக்கப்படும். அது எங்கும் நிறைந்தது. அதிக சூட்சுமமானது. நீளம், மேலும் ஒருதன்மையைக் கொண்டது. ஆகாசம் சிருஷ்டிக்கப்படுவதற்கு முன் அங்கு என்ன விருந்தது என்று எண்ணுகிறீர்கள்? வானம் என்பது இருந்ததா? இல்லையா? ஆகாசம் சிருஷ்டிக்கப்படுமுன் வானம் இல்லையானால், பிரபஞ்சத்திற்குக் காரணமான ஈச்வரனும், ஜீவன்களும் எங்கு இருந்தன? ஆகாசம் இல்லாது எப்பதார்த்தமும் இருக்கமுடியாது. ஆகாசம் சிருஷ்டிக்கப்பட்டது என்று உங்கள் நூல் கூறுவது ஏற்கக் கூடாததல்லவா? இது நிற்க இன்னொரு விஷயத்தைக்

கேட்கிறேன். ஈச்வரன் ஒழுக்கம், முறை இவைகள் அற்றவரா? அல்லது அவரது கர்மமும் ஞானமும் ஒழுங்கான முறையைக் கொண்டவையா?

கிறி:— ஒழுங்கைப் பூஷணமாகக் கொண்டவரே கடவுள்.

ஆரா:—நல்லது. அப்படியானல் ஈச்வரனல் சிருஷ்டிக்கப்பட்ட பூமி ஒழுங்கீனமாய் இருந்தது என்று பைபில் கூறுகிறதே. அதைப்பற்றி என்ன சொல்லுகிறீர்கள்.

கிறி:—ஒழுங்கீனம் என்ருல் மட்டமானதாயிருக்கவில்லை என்பது பொருள். அதாவது மேடு பள்ளங்களை உடையதாயிருந்தது. பிறகு மட்டமாகச் செய்யப்பட்டது.

ஆரா:—இன்னும் பூமி மேடு பள்ளங்களைக் கொண்டிருக்கவில்லை. ஈச்வர சிருஷ்டி ஒருநாளும் ஒழுங்கு அற்றதாய் இருக்கமுடியாது. பகவான் சர்வஞ்ஞர். அவரது சிருஷ்டியில் பழுதும், தவறுதலும் இருந்தால் முடியாது. எனவே சிருஷ்டியை ஒழுங்கற்றதாயிருந்தது என்று கூறும் பைபில் ஈச்வரனல் செய்யப்பட்டதல்லவென்பது விளங்கவில்லையா? இனியும் பார்ப்போம். ஈச்வரனின் ஆத்மா எத்தகையது? அது விஷயமாய் உங்கள் அபிப்பிராயமென்ன?

கிறி:—சேதனமானது.

ஆரா:—உருவ முள்ளவரா? உருவ மில்லாதவரா? எங்கும் பரவியுள்ளவரா? ஓர் இடத்திற்குரியவரா?

கிறி:—உருவ மில்லாதவர் (நிராகாரர்) சேதனர். ஆனல் சனயி பர்வதத்திலும், நான்காவது சுவர்க்கத்திலும், இன்னும் சில இடங்களிலும் விசேஷமாக இருக்கிருர்.

ஆரா:—நிராகாரரா யிருந்தால் அவரை யார் பார்த்திருக்கக்கூடும்? எங்கும் வியாபகமாயுள்ள வஸ்து ஜலத்தின்மேல் அசையமுடியாது. ஆவியானது (ஆத்மா) ஜலத்தின்மேல் அசையும் போது தேவன் (ஈச்வரன்) எங்கிருந்தார் அவருடையதேகம் வேறெங்கேயாவது இருந்திருக்கவேண்டும். அல்லது அவரது ஆத்மாவின் ஒரு பாகத்தை ஜலத்தின்மேல் அசையவிட்டிருக்க வேண்டுமென்பதைக் காண்பிக்கிறது. ஆனல் இப்படி இருக்கும் பட்சத்தில் சர்வவியாபகராயும் சர்வஞ்ஞராயும் இருக்க இயலாது. சர்வஞ்ஞராயும் வியாபகராயுமவரில்லையானல், ஆக்கல், அளித்தல், அழித்தல், இவைகளைச் செய்வதும், கர்மங்களுக்குத்தகுந்த பிரயோஜனங்களைக் கொடுப்பதும் இயலாது. ஏனென்ருல் எல்லை யுள்ளவருக்கு எல்லையுள்ள காரியந்தான் செய்யமுடியும். வேதத்தில் அவர் சர்வவியாபகர், அனந்த குணகர்ம ஸ்வபாவயுக்தர், சச்சிதானந்த ஸ்வரூபர், நித்யர், பரிசுத்தமுள்ளவர், மேதாவி, இயற்கையாய் முக்தி (விடுதலை) யடைந்தவர் ஆதி அந்தமில்லாதவர் என்று சொல்லப்படுகிறது. இக்குணங்களைக் கொண்ட ஈச்வரனை மதிக்கவேண்டும். இவ்வெண்ணமே காப்பாற்றும்.

2. தேவன் வெளிச்சமுண்டாகக் கடவது என்றார். வெளிச்ச முண்டா யிற்று. வெளிச்சம் நல்லது என்று தேவன் கண்டார்; வெளிச்சத்தையும் இருளையும் தேவன் வெவ்வேறாகப் பிரித்தார். (1. 3. 4.)

ஜடரூபமான வெளிச்சம் ஈச்வரன் சொன்னதைக் கேட்கும் சக்திபெற் றதா? கேட்குந் திறமையுண்டானால் தற்காலம் சூரியன், தீபம், அக்னி, இவை கள் ஏன் நாம் சொல்லுகிறதைக்கேட்கிறதில்லை? ஜடமான ஒளி ஒருபோதும் சொல்வதை கேட்க்கமுடியாது. ஈச்வரன் வெளிச்சத்தைப் பார்த்தபிறகு தான அதை நல்லதென்று கண்டார். முதலில் அவருக்குத் தெரியவில்லை போலும். தெரிந்திருக்குமேயானால் பார்த்த பின்னரே நல்லது என்று தெரிந்து கொண்டிருக்க மாட்டார். தெரியாமலிருந்திருப்பின் அவர் ஈச்வரனாகமாட் டார். ஆகையால் பைபில் தேவவாக்கல்ல. அதில் சொல்லப்பட்ட ஈசுவரனும் சர்வஞ்ஞரல்ல.

3. பின்பு தேவன் ஜலத்தின் மத்தியில் ஆகாய விரிவு உண்டாகக் கடவது என்றும் அது ஜலத்தி னின்று ஜலத்தை பிரிக்கக் கடவதென்றும் சொன்னார். தேவன் ஆகாயவிரிவை உண்டு பண்ணி ஆகாய விரிவுக்குக் கீழே இருக்கிற ஜலத்திற்கும் ஆகாய விரிவுக்கு மேலே இருக்கிற ஜலத்திற்கும் பிரிவுண்டாக்கினார். அது அப்படியே ஆயிற்று. தேவன் ஆகாய விரிவுக்கு வானம் என்று பேரிட்டார். சாயங்காலமும் விடியற்காலமுமாகி இரண்டாம் நாள் ஆயிற்று. (1. 6. 7. 8.)

ஜலமும் அகாயமும் கூட ஈச்வரன் சொன்னத்தைக் கேட்டு அதன்படி நடந்ததா? ஜலத்தின் நடுவில் ஆகாசமில்லையானால் ஜலம் எங்கிருந்திருக்கக் கூடும்? முதல்வரியில் ஆகாசம் சிருஷ்டிக்கப்பட்டது என்று சொல்லி யிருக்கி றபடியால் இரண்டாந்தடவை அதைச் சிருஷ்டிப்பது பிரயோஜன மற்ற தேயாம்.

ஆகாசம் சுவர்க்கமாகும் பட்சத்தில் அது சர்வவியாபக மாகிற படி யினால் ஸ்வர்க்கமும் எங்கும் வியாபகமானதாகவிருக்கவேண்டுமே. அப்படி ஆகும் பட்சத்தில் உயரத்தில் தான் ஸ்வர்க்கம் இருக்கிறது என்பது பொருள ற்றதே. சூரியன் சிருஷ்டிக்கப்படாத காலத்து இரவும் பகலும் எங்ஙனமுண் டாகும்? இனிவரும் அசம்பாவித மானவரிகளைக் காண்க:—

4. பின்பு தேவன் நமது சாயலாகவும் நமது ரூபத்தின்படியேயும் மனி தனை உண்டாக்குவோமாக; அவர்கள் சமுத்திரத்தின் மச்சங்களையும் ஆகா யத்துப் பறவைகளையும் மிருக ஜீவன்களையும் பூமியனைத்தையும் பூமியின் மேல் ஊரும் சகல பிராணிகளையும் ஆளக் கடவர்கள் என்றார். தேவன் தம் முடைய சாயலாக மனிதனை சிருஷ்டித்தார். அவனை தேவசாயலாகவே சிரு ஷ்டித்தார். ஆணும் பெண்ணுமாக அவர்களைச் சிருஷ்டித்தார். (1. 26. 27. 28.)

ஈச்வான் தன்னைப் போலவே மானிடர்களை உண்டுபண்ணியிருந்தால் அவருடைய ஸ்வரூபம் பரிசுத்தம், ஞானரூபம் ஆனந்த மயம் என்னும் இலட் சணங்கள் மனிதனிடத்தி லிருக்கவேண்டும். அவருக்குச் சமானமாய் மனி தர்கள் அவரது ஸ்வரூபத்தைக் கொள்ளவில்லை என்பது விளங்கும். மனி

தன் சிருஷ்டிக்கப்பட்டு அவருடைய ஸ்வரூபத்தி லிருக்கிறபடியால் கடவுளு டைய ஸ்வபாவமும் உற்பத்திக்குள்ளாகிறது. இதனுல் அவரது நித்ய லட்ச ணம் பங்கப்படுகிறது. கிற்க, மனிதனைக் கடவுள் எதன் துணை கொண்டு படைத தார் என்பதை விளக்குவீர்களா ?

கிறி:—மண்ணிலிருந்து சிருஷ்டித்தார்.

ஆரா:—மண்ணை எதிலிருந்து உண்டுபண்ணினர்?

கிறி:—அவரது ஒப்பற்ற சாமர்த்தியத்தினுல்.

ஆரா—அவருடய சாமர்த்தியம் ஆதியந்த மற்றதா?

கிறி:—ஆதியற்றதே.

ஆரா:—அனுதியாயிருக்கும் பட்சத்தில் ஜகத்தின் காரணமும் அனுதி (சனுதனம்) ஆகின்றது. அபாவத்திலிருந்து பாவம் எங்ஙன முண்டாகும்.

கிறி:—சிருஷ்டியின் முன் ஈச்வரனைத் தவிரவேறு ஒரு வஸ்துவும் இல்லை.

ஆரா:—பிறகு இவ்வுலகம் எங்கிருந்துவந்தது?

ஈச்வானுடைய சமர்த்தியம் ஒருபொருளா; அல்லது குணமா? பொருளா யிருக்கும் பட்சத்தில் அவரை விடவேருன பதார்த்தம் ஒன்று இருந்திருக்க வேண்டும். குணமாயிருக்கும் பட்சத்தில் அதிலிருந்து பதார்த்தம் உண்டாக இயலாது. அதாவது உலகமும் அதிலிருந்து சிருஷ்டியும் ஆகமுடியாது. வெளிச்சத்தி லிருந்து பொருளும் நீர்த் தன்மை லிருந்து நீரும் ஒருநாளு முண்டாகாது. ஈச்வரனிலிருந்து உலகம் உண்டாயிருந்தால் ஈச்வரனிடத்தி லிருக்கும் சமானமான குணம், கர்மம் ஸ்வபாவம், உலகத்திற்கும் இருக்க வேண்டும். அப்படி யில்லாம லிருப்பதே அவரிடமிருந்து உண்டாகவில்லை யென்பதை நிச்சயஞ்செய்கிறது. ஆனல் பரம அணு முதலிய ஜடபதார்த்தங் களே இதற்குக் காரணமாகும். வேத சாஸ்த்திரங்களில் சொல்லும் வண்ணம் சர்வ வல்லமையுள்ள ஈச்வரனே சிருஷ்டிக்குக் காரணம்.* ஆதாமின் அகக் குணத்தை ஜீவனுகவும், வெளிரூபத்தை மனிதனுகவும் கருதும் பட்சத்தில் ஈச்வரனுடைய ஸ்வபாவமும் ஏன் அப்படி யிருத்தல்கூடாது? ஏனென்றுல் ஆதாமை ஈச்வர ஸ்வரூபத்தி லிருந்து உண்டு பண்ணினபடியால் ஈச்வரனும் மனித ஸ்வரூப மாகவேதானிருக்கவெண்டும்.

> 5. தேவனுகிய கர்த்தர் மனிதனை பூமியின் மண்ணினுலே உருவாக்கி ஜீவ சுவாசத்தை அவன் நாசியிலே ஊதினர். மனிதன் ஜீவாத்மாவானுன். தேவ னுகிய கர்த்தர் கிழக்கே ஏதேன் என்னும் ஓர் தோட்டத்தை உண்டாக்கி தாம் உருவாக்கின மனுஷனை அதிலே வைத்தார். தேவனுகிய கர்த்தர் பார்வைக்கு அழகும் புசிப்புக்கு நலமுமான சகலவித விருட்சங்களையும், தோட்டத் தின் நடுவே ஜீவ விருட்சத்தயும் நன்மை தீமை அறியத்தக்க விருட்சத்தையும் பூமியிலிருந்து முளைக்கச் செய்தார். (2. 7. 8 9.)

எப்பொழுது ஏதேன் தோட்டத்தை உண்டுபண்ணி ஆதாமை அதில் வைத்தாரோ, அதிலிருந்து அவனை வெளிப்படுத்தப் போகிறேமென்பது அவருக்குத் தெரிந்திருக்க வில்லையா? மண்ணிலிருக்கும் தூளினுல் ஆதாமை

உண்டுபண்ணின படியால் அவன் ஈச்வர ஸ்வரூபமாகச் செய்யப்படவில்லை. ஏனென்றால் அப்பொழுது ஈச்வரனும் தூளியிலிருந்து செய்யப்பட்டிருக்க வேண்டும். ஆதாமினுடைய நாசியில் ஊதின ஜீவ சுவாசம் ஈச்வரஸ்வரூபமா அல்லது அவரைவிட வேரானவஸ்துவா? வேறு வஸ்துவாயிருக்கும் பட்சத்தில் தன் சுய ஸ்வரூபத்தில் செய்யப் படவில்லை யென்றாகிறது. வேறு வஸ்து இல்லாமலிருக்கும் பட்சத்தில் ஈச்வரனும் ஆதாமும் ஒன்றே போல் ஆகிறார்கள். ஒன்று போல் ஆகிறபடியால் ஈச்வரனும், மனிதனைப் போல பிறப்பு, இறப்பு, மூப்பு, க்ஷயம் பசி தாகம் முதலிய ஸ்வபாவமுள்ளவராக ஆகிறார். இத்தோஷங்களால் பாதிக்கப்படுபவர் எங்ஙனம் ஈச்வரனாதல் கூடும்? இக்காரணங்களால் இப்பழைய ஏற்பாட்டில் எழுதியிருப்பவைச் சரியானவையாகாது. இப்பழைய நூல் தேவவாக்காகாது என்று வெளிப்படையாகிறது.

6. அப்பொழுது தேவனாகிய கர்த்தர் ஆதாமுக்கு அயர்ந்த நித்திரையை வரப்பண்ணினார். அவன் நித்திரை அடைந்தான். அவன் விலா எலும்புகளில் ஒன்றை எடுத்து அந்த இடத்தை சதையினால் அடைத்தார். தேவனாகிய கர்த்தர் தாம் எடுத்தவிலா எலும்பை மனுஷியாக உருவாக்கி அவளை மனிதனிடம் கொண்டுவந்தார். (2. 21. 22.)

இங்ஙனம் பைபில் கூறுகிறது. ஈச்வரனானவர் மண்தூளியிலிருந்து ஆதாமை உண்டு பண்ணியபோது அவனுடைய ஸ்திரீயையும் ஏன் அப்படி செய்யவில்லை? எலும்பிலிருந்து ஸ்திரீயை செய்யும்போது ஏன் ஆதாமையும் அப்படிசெய்யவில்லை? (23. 24. யும் பார்க்க) ஆணிலிருந்து உண்டுபண்ணிய படியால் பெண் என்றபெயர் ஏற்பட்டதென்றால், பெண்ணிலிருந்து மனிதன் உற்பத்தியாவதால் ஆண் என்று வந்தது எனக் கொள்ளவேண்டும். பரஸ்பர அன்புவேண்டுமே. ஸ்திரீ புருஷனை எப்படி நேசிக்கிறாளோ அப்படியே புருஷனும் ஸ்திரீயை நேசிக்கவேண்டும். நேயர்கள் கவனிக்க வேண்டும். ஈச்வரனுடைய தத்துவ ஞானம் எங்ஙனம் பிரகாசிக்கின்றது? மனிதனுடைய விலாவெலும்பின் ஒன்றிலிருந்து பெண் உண்டுசெய்யப் பட்டதால் மனிதர்களுக்கு ஏன் ஒரு எலும்பு குறைவாயில்லை? ஒருவிலா எலும்பி லிருந்தே ஸ்திரீ செய்யப்பட் டிருந்தால் அவளில் ஒரு எலும்பே இருக்கவேண்டும். எந்தப் பதார்த்தங்ளினால் உலகத்தை உண்டு பண்ணினாரோ அதனால் ஸ்திரீயையும் செய்து இருக்கக் கூடாதா. இதனால் பைபிலின் சித்தாந்தங்கள் சிருஷ்டிமுறைக்கும் வித்தைக்கும் விரோதமாகக் காணப்படவில்லையா?

7. பைபில் மேலும் கூறுவதாவது:—தேவனாகிய கர்த்தர் உண்டாக்கின சகல காட்டுஜீவன்களை காட்டிலும் சர்ப்பமானது தந்திரமுள்ள தாயிருந்தது. அது ஸ்திரீயை நோக்கி நீங்கள் தோட்டத்திலுள்ள சகல விருட்சங்களின்கனியையும் புசிக்கவேண்டாம் என்று தேவன் சொன்னது உண்டோவென்று கேட்டது. ஸ்திரீ 'நாஙகள் தோட்டத்திலுள்ள விருட்சங்களின் கனிகளைப் புசிக்கலாம்:—ஆனால் தோட்டத்தின் நடுவில் இருக்கிற விருட்சத்தின் கனியை நீங்கள் சாகாதிருக்க விரும்பினால் புசிக்கவும் அதைத்தொடவும் வேண்டாம் என்று தேவன் சொன்னார்' என்றாள். அப்பொழுது சர்ப்பம் ஸ்திரீயை நோக்கி 'நீங்கள் சாகமாட்டீர்கள். நீங்கள் இதைப்புசித்தால் உங்கள் கண்கள் திறக்கப்

படும். நன்மை தீமைஅறிந்து நீங்கள் தேவர்களைப் போல் இருப்பீர்கள் என்று தேவன் அறிவார் என்றது.

அப்போது ஸ்திரீயானவள் அந்த விருட்சம் புசிப்புக்கு நல்லதும் பார்வைக்கின்பமும் புத்தியை வளர்க்கத்தக்கதாயும் அவ்விருட்சமிருக்கிறதெனக் கண்டு அதின் கனியைப் பறித்து புசித்துத் தன்புருஷனுக்கும் கொடுத்தாள். அவனும் புசித்தான்—அப்பொழுது தேவனுகிய கர்த்தர் சர்ப்பத்தை நோக்கி "நீ இதைச் செய்தபடியால் சகல மிருகங்களிலும் சபிக்கப்பட்டு இருப்பாய். நீ உன்வயற்றினுல் நகர்ந்து உயிரோடிருக்கும் நாளெல்லாம் மண்ணைத் தின்பாய். உனக்கும் ஸ்திரீக்கும் உன்வித்துக்கும் அவள் வித்துக்கும் பகை உண்டாக்குவேன். அவர் உன் தலையை நசுக்குவார், நீ அவர் குதிகாலை நசுக்குவாய் என்றுர். அவர் ஸ்திரீயைநோக்கி "நீ கர்ப்பவதியாயிருக்கும் போது உன் வேதனையை மிகவும் பெருகப் பண்ணுவேன். வேதனையோடு பிள்ளைபெறுவாய், உன் ஆசை உன்புருஷனைப் பற்றியிருக்கும். அவன் உன்னை ஆண்டுகொள்ளுவான்" என்றுர். பின்பு அவர் ஆதாமை நோக்கி "நீ உன் மனைவியின் வார்த்தைக்குச் செவிகொடுத்து புசிக்கவேண்டாமென்று நான் உனக்குச் சொன்ன விருட்சத்தின் கனியை புசித்தபடியால் பூமி உன் நிமித்தம் சபிக்கப்பட்டிருக்கும். நீ உயிரோடிருக்கும் நாளெல்லாம் வருத்தத்தோடு அதன் பலனை புசிப்பாய் அது உனக்கு முள்ளும் குருக்கும் முளைப்பிக்கும். வெளியின் பயிர்வகைகளைப் புசிப்பாய். (3. 1-7. 14-18.)

ஈச்வரன் சர்வஞ்ஞராயிருந்திருக்கும் பட்சத்தில் தந்திரமுள்ள சர்ப்பத்தை (சைதானை) ஏன் படைப்பிக்கவேண்டும்? அவர் படைத்தபடியால் சைதான் செய்யும் துஷ்டசெயல்களுக்கெல்லாம் ஈச்வரனும் பொறுப்பாளி. அவர் படைத்திராமல் இருந்தால் சைதானும் துஷ்டகாரியங்கள் செய்திருக்காது. பூர்வஜன்மத்தை நம்பாத கிறிஸ்துதேவன் யாதொரு தப்பையுங் காணுமல் ஏன் சர்ப்பத்தைத் துஷ்ட சுவபாவமுள்ளதாய் சிருஷ்டிக்கவேண்டும். உண்மையை உரைக்குங்கால் அது சர்பபமில்லை. மனிதனுகத்தானிருக்கக் கூடும். இல்லையேல் எங்ஙனம் மனித நாக்குடன் பேசும்? பொய்சொல்லி ஏனையோர்களையும் அப்படிச்செய்யச் சொல்லி தூண்டுவதே சைதான் என்றுல் இச்சநதர்ப்பத்தில் அவன் (சைதான்) உண்மையை உரைத்தான். ஸ்திரீயை கெட்டவழியில் தூண்டவில்லை. உண்மையையே உரைத்தான். ஈச்வரன் ஆதாம் ஏவாளுக்கு பொய்யைச் சொன்னுர். ஞானத்தையும் பகுத்தறிவையும் உண்டுபண்ணுகிற பழத்தைத் தின்பதினுல் மரணம் விளையும் என்றுரைத்தது பொய். நல்லது கெட்டது என்பதைக் காண்பிக்கிறதும் அமரத்துவத்தைக் கொடுக்கத் தக்கதுமான பழத்தைத்தின்ன கூடாதென்று அவர் ஏன் உரைத்தல் வேண்டும்? மரத்தின் பழம் ஞானத்தையும், சுகத்தையும் உண்டுபண்ணி; மரணத்தையும் அஞ்ஞானத்தையும் ஒழித்தது. பழம் தின்பது கூடாது என்றுல் ஏன் அவ்விருட்சத்தைச் செய்யவேண்டும்? தன் உபயோகத்திற்காகச் சிருஷ்டித்துக் கொண்டார் என்றுல், அஞ்ஞானம், மரணம் இவைகளினுல் அவருக்கு அவசியமாயிருந்ததா? மனிதர்களுக்கெனச் சிருஷ்டிக்கப்பட்டிருந்தால் அதைத் தின்பதனுல் யாதொரு பாபமும் கிடையாது. ஞானமும் அமரத்துவமும் கொடுக்கிறதான எவ்வித மரமும் தற்காலத்தில் எங்கும் இல்லையே.

அவைகளினுடைய வித்தைகளையும் அழித்து விட்டாரா? இவ்விதமே மனிதொருவன் செய்திருந்தால் கபடன் வஞ்சகன் என்றழைக்கப்படுவான். அப்படி கடவுளும் செய்யும் பட்சத்தில் அவரையும் ஏன் அங்ஙனம் அழைக்கக்கூடாது? மூன்று நிரபராதிகளுக்குச் சாபங்கொடுத்தமையால் ஈச்வரன் அநியாயஞ்செய் தவராகிறார். அந்த ஈச்வரன் சபிக்கப்பட் டிருக்கவேண்டும். ஆதாம் ஏவாளை வஞ்சித்துப்பொய் சொல்லியபடியால் அவரே சாபத்திற்கு ஏற்றவர். வலியும் துக்கமு மன்னியில் எப்பொழுதாவது ஸ்திரீகள் கருத்தரித்து பிள்ளை பெறுதல் முடியுமோ. கஷ்ட்டப்படாமல் எவனாவது சீவனஞ் செய்யமுடியுமோ. முள், செடி முதலியவைகள் முன்னர் இல்லையா? புல் பூண்டு காய் கனிகளைப் புசிப்பது நியாயமானபடியால் புதிய ஏற்பாட்டில் மாம்சாதிகளைச் சாப்பிட ஏன் அனுமதி கொடுத்தல் வேணடும். இரண்டில் ஒன்று பிழையானது. பாபச் செய்கைகளைச் செய்த குற்றங்கள் ஒன்றும் நிரூபிக்கப்படாதிருக்க ஆதாமின் சந்ததியான மனிதர்களை ஏன் கிறிஸ்துவர்கள் பாபிகள் என்றழைக்கவேணடும். எப்படி இப்புத்தகமும் இதில் கூறப்படும் ஈச்வரனும் அறிஞர்களால் அபிமானிக்கப்படும்?

8. பின்பு தேவனாகிய கர்த்தர் இதோ மனிஷன் நன்மை தீமை அறியத்தக்கவனாய் நம்மில் ஒருவரைப் போல் ஆனான் இப்பொழுதும் அவன் தன்கைகளை நீட்டி ஜீவவிருட்சத்தின் கனியையும் பறித்து புசித்து என்றைக்கும் உயிரோடிராதபடிக்குச செய்யவேண்டும், என்று அவர் மனுஷனைத் துரத்திவிட்டு ஜீவவிருட்சத் துக்குப் போம்வழியை காவல்செய்ய ஏதேன் தோட்டத்துக்கு கிழக்கே கேருபீன்களையும் வீசிக்கொண்டிருக்கிற சுடரொளி பட்டயத்தையும் வைத்தார். (3, 22. 24.)

ஈச்வரன் ஏன் ஆதாமினிடத்தில் அவ்வளவு பொறாமை யுள்ளவராக வேண்டும்? ஞானத்தில் தனக்குச் சமானமாய் விட்டான் என்று ஏன் அவ்வளவு தடுமாற்ற மடையவேண்டும்? தனக்குச் சமான மாய்விடுவானோ என்ற பயம் ஏன் வேண்டும்? எப்படி யிருந்தபோதிலும் அவருக்குச் சமானமாய் எவனால் வரமுடியும்? இதுவே அவர் மனிதனைத் தவிர கடவுள் இல்லை என்று காண்பிக்கின்றது. பைபில் மனிதனைப் போலதான் கூறுகிறது, ஆதாமுக்கு ஞானம் விருத்தியாவதில ஈச்வரனுக்கு எவ்வளவு வருத்தம் வருவானேன்? அமர விருட்சத்தின் பழங்களைத் தின்பதினால் ஆதாமின் பேரில் எவ்வளவு பகை காட்டினார். ஆதாம் ஏவாளை முதலில் தோட்டத்தில் இருக்க செய்கையில் அவர்களை இதிலிருந்து வெளிக் கடத்தவேண்டி வரும் என்று அவருக்குத் தோன்ற வில்லையா. மேற்கூறியகாரணங்களால் கிறிஸ்துவர்களின் ஈச்வரன் சர்வஞ்ஞரில்லை. ஜீவ விருட்சத்தைக் காப்பதற்கு சுவாலையுள்ள கத்தியை வைத்தது மனிதனுடைய வேலை என்று காண்பிக்கறதே ஒழிய ஈச்வரனுடையாகத் தெரியவில்லை.

9. சில நாள் சென்ற பின்பு காயீன் நிலத்தின் கனிகளை கர்த்தருக்குக் காணிக்கையாகக் கொண்டு வந்தான்—ஆபேலும் தன்மந்தையின் தலையீற்றுகளிலும் அவைகளில் கொழுமையானவை களிலும் சிலவற்றைக் கொண்டு வந்தான். ஆபேலையும் அவன் காணிக்கையையும் கர்த்தர் அங்கிகரித்தார்,

காயீனையும் அவன் காணிக்கையையும் அவர் அங்கீகரிக்கவில்லை. அப்பொழுது காயீனுக்கு மிக்க எரிச்சலுண்டாகி அவன் முகநாடிவேறுபட்டது. அப்பொழுது கர்த்தர் காயீனைநோக்கி உனக்கு ஏன் எரிச்சல் உண்டாயிற்று? உன் முகநாடி ஏன் வேறுபட்டது. (4. 3. 4. 5. 6.)

கடவுள் மாம்சசாரியாய் இல்லாதிருந்திருக்கும் பட்சத்தில் அவர் எப்படி ஆபேலின் காணிக்கைகளை ஏற்றுக்கொண்டு காயீனின் காணிக்கையை மறுத்திருக்கக் கூடும்? அவ்விருவருக்கு முண்டான இச்சண்டைக்குக் காரணமா யிருந்து ஆபேல் இறந்ததற்குங் காரணம் இவரே. கிறிஸ்துவ தேவன் மனிதரைப் போலவேபேசுகிருர். தோட்டத்தை உண்டுபண்ணி மனிதனைப் போல் வருகிறதும் போகிறதுமாக யிருந்தார். ஆதலால் பைபில் மனிதன் செய்தபுத்தகமே என்பதில் என்னசந்தேகம்?

10. கர்த்தர் காயீனை நோக்கி உன் சகோதரனுகிய ஆபேல் எங்கே என்ருர். அதற்கு அவன் நான் அறியேன் என் சகோதரனுக்கு நான் காவலாளியோ என்ருன். அதற்கு அவர் என்னசெய்தான்? உன் சகோதரனுடைய இரத்தத்தின் சத்தம் பூமியிலிருந்து என்னைநோக்கி கூப்பிடுகிறது. இந்த பூமியில் சபிக் ப்பட்டிருக்கிருய். (4 9. 10. 11.)

காயீனை விசாரிக்காமலே உங்களுடைய தேவனுக்கு ஆபேலின் மரணம் தெரிந்திருக்காதா? யாரிடத்திலாவது மண்ணிலுள்ள இரத்தம் மூறையிடுமா? அறிவீனர்களின் வார்த்தைகளே இவைகள்.

11. ஏனேக்கு மெத்தாசலாவைப் பெற்றபின் முன்னூறுவருஷம் தேவனேடே சஞ்சரித்து குமாரரையும் குமாரத்தியையும் பெற்ருன். (5 22.)

கிறிஸ்துதேவன் மனிதராயில்லாமலிருந்திருக்கும் பட்சத்தில் ஏனேக்கு எப்படி அவருடன் நடந்திருக்கக்கூடும்? இதனுல் கிறிஸ்துவர்கள் வேதோக்தமாயுள்ள நிராகார ஈச்வரனை மதிக்கும் பட்சத்தில் ஆனந்தம் அடைவார்கள்.

12. மனுஷர் பூமியின்மேல் பெருகத்துவக்கி அவர்களுக்குக் குமாரத்திகள் பிறந்தபோது தேவகுமாரர் மனுஷகுமாரத்திகளை அதிகசௌந்தர்ய முள்ளவர்களென்று கண்டு அவர்களுக் குள்ளே தங்களுக்குப் பெண்களை தெரிந்துகொண்டார்கள். அப்பொழுது கர்த்தர் என் ஆவி என்றைக்கும் மனுஷனேடே போராடுவதில்லை; அவன் மாம்சந்தானே அவன் இருக்கப்போகிற நாட்கள் நூற்றிருபதுவருஷமென்ருர். அந்நாட்களில் இராட்சதர்கள் பூமியிலே இருந்தார்கள். பின்பு தேவகுமாரர் மனுஷகுமாரத்திகளோடு கூடுகிறதினுல் இவர்கள் அவர்களுக்கு பிள்ளைகளைப் பெற்ற போது, இவர்களும் பூர்வத்தில் பேர்பெற்ற மனுஷராகிய பலவான்களாஞர்கள். மனுஷனுடைய அக்கிரமம் பூமியிலே பெருகினது என்றும், அவன் இருதயத்தின் நினைவுகளின் தோற்றமெல்லாம் நித்தமும் பொல்லாததே என்றும் கர்த்தர்கண்டு—தாம் பூமியிலே மனுஷனை உண்டாக்கினதற்காக கர்த்தர் மனஸ்தாபப் பட்டார். அது அவர் இருதயத்திற்கு விசனமா யிருந்தது. அப்பொழுது கர்த்தர்நான் சிருஷ்டித்த மனுஷனை பூமியின்மேல் வைக்காமல் மனுஷன் முதற்கொண்டு மிருகங்கள் ஊரும் பிராணிகள் ஆகாயத்துப் பறவைகள் பரியந்தமும் உண்டாயிருக்கிற வைகளை நான் நிக்கிரகம் பண்ணுவேன். நான் அவர்களை உண்டாக்கினது எனக்கு மனஸ்தாபமா யிருக்கிறது என்ருர். (6. 1. 7).

ஈச்வரனுடைய மக்கள், மாமனூர், மாமியார், மைத்துனன் முதலிய வர்கள் யார் என்று கிறிஸ்துவர்களைக் கேட்கவேண்டும். அவர்களுடைய குமாரர்கள் மானிடப் பெண்களை மணந்தபடியால் ஈச்வரன் அவர்களுக்குப் பந்துவாகஆகிறார். அவர்கள் குழந்தைகள் இவருக்கு பேரன் பேத்திகளாக ஆகிறார்கள். ஈச்வரவிஷயத்தில் இவைகள் உண்மையாகக்கூடுமோ? அவருடைய புத்தகத்திலும் இவைகள் இருக்கக்கூடுமோ? இப்புத்தகங்களை யெல்லாம் எழுதியவர் கடவுளைப் பற்றி கொஞ்சமேனும் அறியாத காட்டுத்தன்மை யுள்ள மனிதராக இருக்கவேண்டும். சர்வஞ்ஞராக இல்லாதவர், எதிர்காலம் அறியாதவர் கடவுள் அல்ல; மனிதர்தான். உலகத்தைச் சிருஷ்ட்டி செய்யு முன்னால் மனிதர்கள் இப்படி துஷ்டர்களாகப் போவார் என்பதை அறியமாட்டாரா? காரியத்தைச் செய்தபின் துக்கமுறுதலும், பிழைபடக் காரியம் செய்ததற்குப் பச்சாத்தாபப்படலும் கிறிஸ்துவ தேவனுக்குத் தான் இயல்பு. அவர்கள் கடவுள் பூர்ண வித்வானாகவும், யோகியாகவும் கூட இல்லாதபடியினால் தான் சாந்தம், விஞ்ஞானம், முதலிய சோகாதி துக்கங்களிலிருந்து விலகியிருப்பது முடியாமல் போய்விட்டது. மிருகங்களும் பட்சிகளும் கூடவா அழிக்கத்தகுந்த அவ்வளவு கெடுதலாக ஆகிவிட்டது? அவர் சர்வஞ்ஞராக இருந்திருக்கும் பட்சத்தில் இப்படி ஏன் புத்தி யற்றவராக ஆகவேண்டும்? இதனால் இவர் ஈச்வரனு மல்ல; அவர்கள் புத்தகமும் தேவவாக்கல்ல. பாபம், சோகம், கிலேசம், துக்கம் முதலிய வைகளிருந்து விலகின வேதோக்த ஈச்வரனாகிய சச்சிதானந்த ஸ்வரூபத்தை வழிபட்டு இருக்கும் பட்சத்திலும் இனியாவது வழிபடும் பட்சத்திலும் பலனை யடைந் திருப்பார்கள், அல்லது இனியாவது அடைவார்கள்.

13. நீ அதைப் பண்ணவேண்டிய விதம் என்னவென்றால் பேழையின் நீளம் முன்னூறுமுழமும் அதின் அகலம் ஐம்பதுமுழமும் அதின் உயரம் முப்பது முழமுமா யிருக்கவேண்டும்—நீயும் உன்னோடேகூட உன் குமாரரும் உன் மனைவியும் உன் குமாரரின் மனைவிகளும் பேழைக்குள் பிரவேசியுங்கள். சகலவிதமாம்சமான ஜீவன்களிலும் ஆணும் பெண்ணுமாக வகையொன்றுக்கு ஒவ்வொரு ஜோடு உன்னுடன் உயிரோடே காக்கப்படுவதற்கு பேழைக்குள்ளே சேர்த்துக் கொள். ஜாதி ஜாதியான பறவைகளிலும் ஜாதி, ஜாதியான மிருகங்களிலும், பூமியிலுள்ள சகல ஜாதி ஜாதியான ஊரும் பிராணிகளிலும் வகை ஒன்றுக்கு ஒவ்வொரு ஜோடு உயிரோடே காக்கப்படுவதற்கு உன்னிடத்திலேவரக்கடவது. உனக்கும் அவைகளுக்கும் ஆகாரமாக சகலவித போஜன பதார்த்தங்களையும் உன்னிடத்தில் வைத்துக்கொள் என்றார்—நோவா அப்படியே செய்தான்-தேவன் தனக்குக் கட்டளை யிட்டபடியெல்லாம் செய்து முடித்தான்.

(6-15, 18, 22.)

அசம்பவமாகிற இவைகளைக் கூறுபவனை ஈச்வரனாக படித்தவர் எவரேனும் கருதுவரா? மேற்சொல்லிய அளவுள்ள பேழையில் (ஆண், பெண்) யானை குதிரை, ஒட்டகம், இன்னும் இலட்சக்கணக்கான உயிர்ப் பிராணிகளுடன், எல்லாவித அன்ன ஆகாரதி பானதிகளும், நோவாவின் குடும்பங்களுடன் எப்படி அடைந்து உள்ளே இருக்க முடியும்? இதனாலேயே புன்கவிகளின் கூற்றே இப்புஸ்தகம் என்று புலனாகவில்லையா?

14. அப்பொழுது நோவா கர்த்தருக்கு ஒரு பலி பீடங்கட்டி சுத்தமான சகல மிருகங்களிலும், சுத்தமான சகல பறவைகளிலும் சிலவற்றைத் தெரிந்து கொண்டு அவைகளைப் பலிபீடத்தின் மேல் தகனபலிகளாகப் பலியிட்டான். சுகந்த வாசனையை கர்த்தர் முகர்ந்தார். அப்பொழுது கர்த்தர் நான் இனி மனுஷன் நிமித்தம் பூமியைச் சபிப்பதில்லை. மனுஷனுடைய இருதயத்தின் நினைவுகள் அவன் சிறுவயது தொடங்கி பொல்லாததாயிருக்கிறது. நான் இப்பொழுது செய்தது போல இனி சகல ஜீவன்களையும் சங்கரிப்பதில்லை. பூமியுள்ள நாளளவும் விதைப்பும் அறுப்பும் சீதளமும் உஷ்ணமும் கோடை காலமும் மாரிகாலமும் பகலும் இரவும் ஒழிவதில்லை. என்று தம்முடைய உள்ளத்தில் சொன்னர்—(8. 21• 20. 22)

பலிபீடம் கட்டுவதும், பலியிடுவதும் வேதத்திலிருந்து கடன் வாங்கப் பட்டவை. சுகந்தவாசனைகளை நுகர அவருக்கு மூக்கும் உண்டா? மனிதர்களைப் போல் கிறஸ்துவக்கடவுள் அற்பஞானமுள்ளவரா? சாபம் கொடுக்கிருர். பிறகு பச்சாத்தாபப் படுகிருர். இனிமேல் சபிப்பதில்லை என்கிருர். முதலிலும் சாபம் கொடுத்திருக்கிருர். இனிமேலும் கொடுப்பார். எல்லா ஜீவப் பிராணிகளையும் முதலில் அழித்தார். பிறகு இனிமேல் அழிக்கப் போவதில்லை என்கிருர். குழந்தைகளுடைய காரியம் போல் இருக்கிறதே வொழிய ஈச்வரனுடைய சொல்களாகக் காணப்படவில்லை. படித்தவர்களும் முறன்படக் கூறமாட்டார்கள். கிறிஸ்தவக் கடவுள் கூறுவதெல்லாம் முறணுக விருக்கிறது.

15. பிறகு தேவன் நோவாவையும் அவன் குமாரரையும் ஆசிர்வதித்து நீங்கள் பலுகிப் பெருகி பூமியை நிரப்புங்கள். நடமாடுகிற எல்லா ஜந்துக்களும் உங்களுக்கு ஆகாரமாய் இருப்பதாக. பசும் பூண்டுகளை உங்களுக்குத் தந்தது போல் அவைகள் எல்லாவற்றையும் உங்களுக்குத் தந்தேன். மாமிசத்தை அதின் உயிராகிய இரத்தத்துடன் புசிக்கவேண்டாம். (9. 1. 3. 4)

ஒரு பிராணனின் கஷ்டத்தினல் மற்றொரு ஜீவனை ஆனந்தப்படச் செய்வது கிறிஸ்து தேவனின் இரக்கமற்ற தன்மையைக் காண்பிக்கவில்லையா? ஒரு பிள்ளையை மற்றொரு பிள்ளையின் ஆகாரத்திற்காகக் கொல்லுபவர்கள் பாபிகள் அல்லரா? எல்லாரும் கடவுளின் பிள்ளைகள் அல்லவா? கிறிஸ்துவ தேவன் கசாப்புக்காரன் போல் ஆகிருர். மனிதர்கள் கல் நெஞ்சாயிருப்பதற்கும் கொடியவராவதற்கும் இதுவே காரணம். தேவனே இரக்கமற்றவரா யிருக்கையில் ஏன் பாபியாக மாட்டார்?

16. பூமியெங்கும் ஒரே பாஷையும், ஒரேவிதமான பேச்சும் இருந்தது. பின்னும் அவர்கள் நாம் பூமியின் மீதெங்கும் சிதறிப் போகாதபடிக்கு நமக்கு ஒரு நகரத்தையும் வானத்தை அளாவும் சிகரமுள்ள ஒரு கோபுரத்தையும் கட்டி நமக்குப் பேர் உண்டாகப் பண்ணுவோம் வாருங்கள் என்று சொல்லிக்கொண்டார்கள். மனுபுத்திரர் கட்டுகிற நகரத்தையும் கோபுரத்தையும் பார்க்கிறதற்கு கர்த்தர் இறங்கினர்: அப்பொழுது கர்த்தர் : இதோ ஜனங்கள் ஒரே கூட்டமாக இருக்கிருர்கள். அவர்கள் அனைவருக்கும் ஒரே பாஷையும் இருக்கிறது. அவர்கள் இதைச் செய்யத் தொடங்கினர்கள். இப்பொழுது தாங்கள் செய்ய நினைத்தது ஒன்றும் தடைப்படமாட்டாது என்று இருக்கிருர்கள். நாம் இறங்கிப் போய் ஒருவர் பேசுவதை மற்றொருவர் அறியாதபடிக்கு அங்கே அவர்கள்

பாஷையை தாறுமாறுக்குவோம் என்றார். அப்படியே கர்த்தர் அவர்களை அவ்விடத்திலிருந்து பூமியின்மீதெங்கும் சிதறிப்போகப் பண்ணினர். அப்பொழுது நகரம் கட்டுகிறதை விட்டுவிட்டார்கள். (11. 1. 4. 8.)

இவ்வுலகத்தில் ஒரேபாஷை யிருந்திருக்கும் பட்சத்தில் எவ்வளவு ஆனந்தமாய் இருந்திருக்கும்? பொறாமையுள்ள கிறிஸ்துவ தேவன் பாஷைகளைப் பல வாறுகச் செய்து, ஆனந்தத்தைக் கெடுத்த படியால் நாம் அவரை என்னென்று அழைப்பது? இதனால் சத்யத்தின் அழிவை உண்டுபண்ணி பெரிய தோஷத்தைச் செய்தார். சைதான் செய்ததைவிட மிகவும் கெட்ட காரியமில்லையா? கிறிஸ்துவதேவன் சனயி போன்ற மலையில் எங்கேயோ இருந்துகொண்டு ஜனங்களின் நன்மையை நாடவில்லை. சாதாரணமாகப் படித்தவனும் இவ்வேலையைச் செய்யத் துணியமாட்டான். இப்புத்தகம் எப்படி தேவவாக்காய் இருக்கக்கூடும்?

17. தன்மனைவி சாராவைப் பார்த்து நீ பார்வைக்கு அழகுள்ள ஸ்திரீ என்றறிவேன்—எகிப்தியர் உன்னைக் காணும்போது இவள் அவனுடைய மனைவி என்று சொல்லி என்னைக்கொன்றுபோட்டு உன்னை உயிரோடே வைப்பார்கள். ஆகையால் உன்நிமித்தம் எனக்கு நன்மை உண்டாகும்படிக்கும் உன்னால் என்னுயிர் பிழைக்கும்படிக்கும் நீ உன்னை என்சகோதரி என்று சொல் என்றார்.

(12-11-13).

கவனியுங்கள்; தீர்க்கதரிசி என்று கிறிஸ்துவாகளாலும் மகம்மதியர்களாலும் கருதப்படும் இந்த ஆபிரஹாம் பொய்வார்த்தைகளைச் சொல்லுகிறவனும் இன்னும் பல கெட்ட காரியங்களைச் செய்பவனுகவும் ஆகிறான். தாழ்ந்த சுவபாவங்களோடு கூடிய இந்த தீர்க்கதரிசிகளைக் கைப்பற்றுபவர் எப்படி உண்மையான ஆனந்தத்தையும் அறிவையும் அடையக் கூடும்?

18. பின்னும் தேவன் ஆபிரகாமை நோக்கி இப்பொழுது நீயும் உனக்கு பின் தலைமுறை தலைமுறையாகவும் உன்சந்ததியும் என் உடன்படிக்கையைக் கொள்ளுங்கள். எனக்கும் உங்களுக்கும் உனக்கு பின்வரும் உன் சந்ததிக்கும் நடுவே உண்டாகிறதும் நீங்கள் கைகொள்ள வேண்டியதுமான என் உடன்படிக்கை என்னவென்றால்:—உங்களுக்குப் பிறக்கும் சகல ஆண் பிள்ளைகளும் விருத்தசேதனம் பண்ணவேண்டும். உங்கள் நுனித்தோலின் மாம்சத்தை விருத்தசேதனம் பணணக்கடவீர்கள். அது எனக்கும் உங்களுக்கு முள்ள உடன்படிக்கைக்கு அடையாளமா யிருக்கும்—உங்களில் தலைமுறை தலைமுறையாய்ப் பிறக்கும் ஆண்பிள்ளைகளெல்லாம் எட்டாம் நாளிலே விருத்தசேதனம் பண்ணப்படவேண்டும். வீட்டிலேபிறந்த பிள்ளையும் உன்வித்தல்லாத அந்நிய னிடத்தில் பணத்திற்குக் கொள்ளப்பட்டவனும் விருத்தசேதனம் பண்ணப்பட வேண்டும் உன் வீட்டில் பிறந்த பிள்ளையும் உன் பணத்திற் கொள்ளப்பட்டவனும் விருத்தசேதனம் பண்ணப்பட வேண்டியது அவசியம். இப்படி என் உடன்படிக்கை உங்கள் மாமிசத்திலே நித்திய உடன் படிக்கையாக இருக்கக்கடவது. நுனித்தோலின் மாம்சம் விருத்தசேதனம் பண்ணப்படாதிருக்கிற நுனித்தோலுள்ள ஆண்பிள்ளை யிருந்தால் அந்த ஆத்மா என் உடன்படிக்கையை மீறினபடியால் தன் ஜனத்தில் இராதபடிக்கு அறப்புண்டு போவான் என்றார். (17-9-14).

இயற்கைக்கு விரோதமான தேவனின் கட்டளையைப் பாருங்கள்! நுனித் தோலைச் சேதனஞ்செய்வது அவருக்கு இஷ்டமானால் சிருஷ்டிசெய்யும்போதே அதில்லாமல் உண்டு பண்ணி யிருக்கக்கூடாதா? கண்ணின்மேல்மூடி கண்ணை க்காப்பாற்றுவதற்கு இருப்பது போல், உள்ளிருக்கும் நுண்ணிய கருவியை காப் பாற்று வதற்கே நுனித்தோல் இருக்கின்றது. கொஞ்சம் பட்ட போதிலும் அதி கம் நோவைப்பும், எறும்பு கடித்தபோலும் அதிகக்கஷ்டத்தையும் உண்டு பண் ணும் அந்த அமைப்பிற்கு நுனித்தோல் இல்லையேல் பெருந்தீங்கு உண்டா கும். வெளியில் போனபிறகு மூத்திரம் துணியில்பட்டு கெட்ட வாசனையும் வராமலிருப்பதைத் தடுக்கும். இதனால் நுனித்தோலைச் சேதனஞ் செய்வது தப்பானதே. கிறிஸ்துவர்கள் ஏன் இக்கட்டளையைக் கையாளுவதில்லை. எப் போதும் கையாளத் தகுந்த ஆஞ்ஞையில்லையா? கட்டளையில் "ஒரு வார்த் தையும் பொய்யில்லை" என்று கிறிஸ்து சொன்னதைப் பொய்யாக செய்துவிடு கிறது. கிறிஸ்தவர்கள் இதை யோசிக்கவெண்டும்.

19. தேவன் ஆபிரகாமோடே பேசிமுடிந்த பின்பு அவர் அவனை விட்டு எழுந்தருளினார். (**17**-22.)

தேவன் மனிதனா அல்லது மேலும் கீழும் போகும் பட்சியா என்று தெரியவில்லை? இந்திரஜால வித்தைகாரன் போலும்.

20. இதோ மூன்று புருஷர்கள் அவனுக்கெதிரே நின்றார்கள். அவர்களை க்கண்டவுடனே அவன் கூடாரவாசலில் இருந்து அவர்களுக்கு எதிர்கொண்டு ஓடி தரைமட்டும் குனிந்து—ஆண்டவரே உம்முடைய கண்களில் எனக்குக் கிரு பை கிடைத்தால் நீர் உமது அடியேனை விட்டுக்கடந்து போகவேண்டாம்— கொஞ்சம் தண்ணீர் கொண்டுவரட்டும். உங்கள் கால்களைக் கழுவி மரத்தடியில் சாய்ந்து கொண்டிருங்கள். நீங்கள் உங்கள் இருதயங்களைத் திடப்படுத்த கொஞ்சம அப்பம் கொண்டுவருகிறேன். அப்புரம நீங்கள் உங்கள் வழியே போகலாம். இதற்காகவே அடியேன் இடம் வரைக்கும வந்தீர்கள் என்றான். அத ற்கு அவர்கள் நீ சொன்னபடிசெய் என்றார்கள். அப்பொழுது ஆபிரகாம் தீவிர மாய் கூடாரத்தில் சாராளிடத்திற்குப் போய் நீ சீக்கிரமாய் மூன்றுபடி மெல் லியமாவு எடுத்துப் பிசைந்து அப்பம் சுடு என்றான். ஆபிரகாம் மாட்டு மந் தைக்கு ஓடி ஒரு நல்ல இளங்கன்றைப் பிடித்து வேலைக்காரன் கையிலே கொ டுத்தான். அவன் அதை சீக்கிரத்தில் சமைத்தான். ஆபிரகாம் வெண்ணெயை யும் பாலையும் சமைப்பித்த கன்றையும எடுத்துவந்து அவர்கள் முன்பாக வைத்து அவர்கள் அருகே மரத்தடியில் நின்றுகொண்டிருந்தான். அவர்கள் புசித்தார்கள். (**18**-2-8.)

கவனியுங்கள்! பக்தர்களான கிறிஸ்துவர்கள் ஏன், பசு, கன்று முதலிய மிருகங்களின் மாம்சங்களைச் சாப்பிடுகிறார்கள்? வாய் இல்லாத மிருகங்களின் பேரில் தயையில்லாதவரும் மாம்சாகாரத்தில் ஆசை உள்ளவரும் ஒருநாளும் ஈச்வரனா யிருக்கமுடியாது. அவர் மனிதன் தான். தேவனுடன்கூட யாரோ இருவர் இருந்ததாகச் சொல்லப்படுகிறது. அவர்களை யார் என்று சொல்ல வில்லை. காட்டுத் தன்மையுள்ள ஒருகூட்டத்தின் தலைவருக்கு ஈச்வரன் என்ற நாமம் சூட்டப்பட்டது. இப்பேர்ப்பட்ட விஷயங்கள் தான் (மாம்சாகாரம்

முதலியவைகள்) இவரைக் கடவுளாக மதிப்பதற்கு இடம் கொடுக்கவில்லே. பைபிலேக் கடவுளுடைய புத்தகமாகக் கருதவும் கூடவில்லே.

21. அப்பொழுது கர்த்தர் ஆபிரகாமை நோக்கி, சாராள் நகைத்து நான் கிழவியாயிருக்கப் பிள்ளே பெறுவது மெய்யோ என்று சொல்வானேன்—கர்த்தரால் ஆகாத காரியம் உண்டோ? உற்பவ காலத் திட்டத்தில் உன்னிடத்தில் திரும்பவருவேன் அப்பொழுது சாராளுக்கு ஒரு குமாரன் இருப்பான் என்ருர். (**18**-13-14.)

ஆகா!! கவனியுங்கள்—குழந்தைகளேப் போலவும் ஸ்திரீகளே போலவும் சீக்கிரத்தில் வெறுத்து விட்டு, சாராவைப் பயமுறுத்துவானேன்?

22. அப்பொழுது கர்த்தர் சோதோமின் மேலும் கோமோராவின் மேலும் கர்த்தராலேவானத்திலிருந்து கந்தகத்தையும் அக்னியையும் வருஷிக்கப் பண்ணி அந்தப் பட்டணங்களேயும், அந்தச்சம பூமியனைத்தையும் அந்தப் பட்டணங்களின் எல்லாக் குடிகளேயும், பூமியின் பயிரையும் அழித்து போட்டார். (**19**-24-25.)

பைபில் தேவனின் இந்த லீலேயையும் பாருங்கள்! ஸ்திரீகள் பேரிலும் குழந்தைகள் பேரிலுங்கூட தயை வரவில்லே. பட்டணங்களே அழித்து அவர்களே அதன் கீழே புதைப்பதற்கு யோக்யதையான அவ்வளவு துஷ்டச்செயல்களே அவர்கள் செய்தார்களா? இவைகளெல்லாம், நியாயத்திற்கும் தயைக்கும், ஞானத்திற்கும் விரோதமாகிறது. தோஷமுள்ள இத்தேவனின் செயல்களே ஏன் கிறிஸ்துவர்களும் செய்யக் கூடாது.

23 நம்முடைய தகப்பனுல் சந்ததியுண்டாகும்படிக்கு அவருக்கு மதுவை குடிக்கக்கொடுத்து அவரோடே சயனிப்போம் வா என்ருள். அப்படியே அன்றிரவிலே தங்கள் தகப்பனுக்கு மதுவைக் குடிக்கக்கொடுத்தார்கள். மூத்தவள்போய் தன் தகப்பனேடே சயனித்தாள். அவள் சயனித்ததையும் எழுந்திருந்ததையும் அவன் உணராதிருந்தான். மறுநாளிலே மூத்தவள் இளேயவளேப் பார்த்து, நேற்று இராத்திரி நான் தகப்பனேடே சயனித்தேன். இன்று இராத்திரியும் மதுவைக் குடிக்கக் கொடுப்போம். நம்முடைய தகப்பனுல் சந்ததி உண்டாகும்படி நீபோய் அவரோடே சயனி என்ருள். அப்படியே அன்று இராத்திரியிலும் தங்கள் தகப்பனுக்கு மதுவைக் குடிக்கக் கொடுத்தார்கள். அப்பொழுது இளேயவள் எழுந்து போய் அவனேடே சயனித்தாள். அவள் சயனித்ததையும் எழுந்ததையும் அவன் உணராதிருந்தான். இவ்விதமாய் லோத்தின் குமார்த்திகள் இருவர்களும் தங்கள் தகப்பனலே கர்ப்பவதியானர்கள். (**19**-32-34-36)

மதுபானம் செய்வதினுல் எவ்வளவு கெடுதல் விளேகிறது என்பதைப் பாருங்கள். பெற்ருேர், மக்கள் என்கிற வித்தியாசமும் இல்லாமல் எவ்வளவு அநீதமான காரியம் செய்தார்கள். நல்லோர்கள் மதுபானம் செய்யும் எண்ணத்தையே நினேக்கலாகாது.

**24**. கர்த்தர் தாம் சொல்லியிருந்தபடி சாராள் பேரில் கடாட்சமானர். கர்த்தர் தாம் உரைத்தபடியே சாராளுக்குச் செய்தருளினர். சாராள் கர்ப்பவதியானள். (**21**. 1. 2)

எங்ஙனம் கர்ப்பமடைந்தாள்? வாசகர்களே கவனியுங்கள். கடவுள் சாராளிடம் கடாட்சமானார். அதனால் சாராள் கர்ப்பவதியானாள். அவள் கருவிற்கு, சாராளையும் விட வேறு யாராவது காரணமுண்டோ? பரமேச்வரனுடைய கிருபையினால் கர்ப்பவதியாயிருக்கலாம்!!

25. ஆபிரகாம் அதிகாலையில் எழுந்து அப்பத்தையும ஒரு துருத்தி தண்ணீரையும் எடுத்து, ஆகாரினுடைய தோளின் மேல்வைத்து பிள்ளையையும் ஒப்புக் கொடுத்து அவளை அனுப்பி விட்டான். அவள் புறப்பட்டுபோய் பெயர் சேபாவின் வனாந்திரத்திலே அலைந்து திரிந்தாள்.—துருத்தியிலிருந்த தண்ணீர் செலவழிந்த பின்பு அவள் பிள்ளையை ஒரு செடியின் கீழே விட்டு பிள்ளை சாகிறதை நான் பார்க்கமாட்டேன் என்று எதிராக அம்பு பாயும் தூரத்திலே போய் உட்கார்ந்து சத்தமிட்டு அழுதாள். தேவன் பிள்ளையின் சப்தத்தைக் கேட்டார்—(21. 14. 17)

கிறிஸ்து தேவனின் கோண வழியைப் பாருங்கள். நியாயமன்னியில் சாராவுடன் முதலில் சேர்ந்தார். (21-12) பிறகு ஆபிரகாமை வீட்டை விட்டுத் துரத்தினார். பிறகு அவள் கத்தினதும் குழந்தையின் சப்தத்தை செவியுற்றார். என்னபுதுமை!! குழந்தையின் குரலைத தவறுதலாய் செவியுற்றிருக்கலாம். அவர் கடவுளாக இருக்க இயலுமா! பைபிலும் தேவவாக்காக முடியுமா? சாதாரண மனிதர்களால் எழுதக்கூடிய சில உண்மைகளைத் தவிர, மற்றதெல்லாம் ஒவ்வாதவைகளே.

26. இந்தக் காரியங்கள் நடந்தபின்பு, தேவன் ஆபிரகாமைச் சோதித்தார்; எப்படியெனில், அவர் அவனை நோக்கி: ஆபிரகாமே என்றார்; அவன்: இதோ அடியேன் என்றான்.—அப்பொழுது அவர்: உன் புத்திரனும் உன் ஏகசுதனும் உன் நேசகுமாரனுமாகிய ஈசாக்கை நீ இப்பொழுது அழைத்துக்கொண்டு, மோரியா தேசத்துக்குப் போய், அங்கே நான் உனக்குக் குறிக்கும் மலைகள் ஒன்றின்மேல் அவனைத் தகனபலியாகப் பலியிடு என்றான்.......................
தன் குமாரனாகிய ஈசாக்கைக் கட்டி, அந்தப் பலிபீடத்தில் அடுக்கிய கட்டைகளின்மேல் அவனைக் கிடத்தினான்.—பின்பு ஆபிரகாம் தன் குமாரனை வெட்டும்படிக்குத் தன் கையை நீட்டிக் கத்தியை எடுத்தான்.—அப்பொழுது கர்த்தருடைய தூதனானவர் வானத்திலிருந்து, ஆபிரகாமே, ஆபிரகாமே என்று கூப்பிட்டார்; அவன்: இதோ, அடியேன் என்றான்.—அப்பொழுது அவர்: பிள்ளையாண்டான்மேல் உன் கையைப் போடாதே, அவனுக்கு ஒன்றும் செய்யாதே; நீ தேவனுக்குப் பயப்படுகிறவன் என்று இப்பொழுது அறிந்திருக்கிறேன் என்றார்—(22. 12, 9, 12.)

இப்பொழுதேனும் பைபில் தேவனுடைய ஞானம் எல்லைக்குட்பட்டதேயென்றும் அகண்டமானதல்லவென்றும் விளங்கும். ஆபிரகாம் ஒன்றுமறியாதவர். இல்லையேல் அவ்விதம் செய்திருப்பாரா? பைபில் தேவன் எல்லாம் அறிந்தவராயிருந்தால் தன்னுடைய சர்வஞ்ஞ அறிவின் உதவியினால் ஆபிரகாமனுடைய பக்தியின் ஆழத்தைக் கண்டிருக்கலாமே. இதிலிருந்து அவர் அங்ஙனமில்லை யென்பது விளங்கும்.

27. தங்கள் கல்லறைகளில் முக்கியமானதிலே பிரேதத்தை அடக்கம் பண்ணும்; நீர் பிரேதத்தை அடக்கம் பண்ண எங்களில் ஒருவனும் தன் கல்லறையை உமக்குத் தடைசெய்வதில்லை (11 23. 6.)

பிரேத அடக்கம் செய்வது உலகத்திற்கே பாதகமானது. ஏனெனில் சவம் அழிய வராம்பிக்க அதிலிருந்து வெளிவரும் நாற்றம் வாயுவை நாசம் செய்து வியாதியைத் தருகிறது.

கிறி:—நாம் நேசிக்கிறவர்களைத் தகனஞ்செய்வது சரியாகாது. பிரேத அடக்கம் செய்வதே அவர்களைத் தூங்கசெய்வது போலாம். ஆகவே அடக்கம் செய்வதே உசிதமானது.

ஆரா:—இறந்தவர்களை நேசித்தால் ஏன் அவர்களை உங்கள் வீட்டினுள்ளேயே வைத்துக்கொள்ளக் கூடாது? ஏன் புதைக்க வேண்டும்? நீங்கள் நேசிக்கும் ஜீவாத்மா வெளியேறி விடுகிறது. துர்க்கந்தத்துடன் கூடின சவத்தை நேசிப்பதினால் யாதுபயன்? நீங்கள் நேசிப்பீர்களே யானால் பூமியின் கீழ் ஏன் புதைக்கிறீர்கள். "பூமியினுள்ளே உன்னைப் புதைப்போம்" என்று சொல்லுவதைக் கேழ்க்க எவனும் விரும்ப மாட்டான். மேலும் சரீரத்தின், கண்கள், வாய், மார் முதலிய பாகங்களில் மண், கட்டி, கல், சுண்ணும்பு முதலானவைகளைப் போடுவது நேசபாவத்தைக் குறிக்காது. புதைப்பதற்கு முன்னால், சவப்பெட்டியில், பிரேதத்தை வைப்பதினால் நாற்றம் வெளிக்கிளம்புகிறது. அது வாயுவுடன் கலந்து வியாதிகளுக்கு இடங்கொடுக்கிறது. மேலும் குறைந்தது 3 கெஜ நீளமும் 2 கெஜ அகலமுமுள்ள பிரேதம் ஒன்றை அடக்கம் செய்ய இடம் வேண்டும். இவ்விதமே லக்ஷக்கணக்கான பிரேதங்களைப் புதைப்பதால் பூமிநாச மாகிறது. பிரேதங்களால் நிரப்பப்பட்ட பூமி பயிர் செய்யவும் பிரயோஜனப்படாது, வசிக்கவும் ஏற்றதாகாது. ஆதலால் புதைத்தல் மிகவும் கெடுதலானது. ஓடுகிற தண்ணீரில் எறிந்து விடுவதே கொஞ்சம் மேலானது. ஏனெனில் தண்ணீரில் வசிக்கிற முதலை முதலான பிராணிகள் அதைக்கிழித்துத்தின்றுவிடும். ஆனபொழுதிலும் மீதி யிருக்கும் எலும்பு முதலியவைகள் அழிந்து நீருடன் கலந்துபோய் அதையும் காற்றையும் நாசஞ் செய்துவிடுகிறது. அதனால் உலகத்திற்குக் கேடு ஏற்படும். வனத்தில் விட்டுவிடுவது இன்னும் கொஞ்சம் மேலானது. மாம்சாகாரிகளான மிருகங்களும் பக்ஷிகளும் அதைத் தின்றுவிடும். எலும்பு முதலானவைகள் காற்றை நாசம் பண்ணி அதற் கேற்றவாறு பொதுஜன சுகத்திற்குப் பாதகம் விளைவிக்கும். தகனம் செய்வதே எல்லாவற்றையும் விடச் சிறந்தது. ஏனெனில் நெருப்பினால் ஒவ்வொருபொருளும் அதனுடைய அணுக்களாகப் பிரிக்கப்பட்டு ஆகாசத்தை அடையும்.

கிறி:—தகனஞ் செய்வதினாலேயும் துர்நாற்றம் உண்டாகுமே?

ஆரா:—சரியாகத் தகனஞ் செய்யாவிடில் கொஞ்சம் உண்டாகும். ஆனால் புதைப்பது முதலானவைகளினால் உண்டாவதைப்போல அவ்வளவாகாது. வேதத்தில் சொல்லப்பட்டிருக்கும் முறைப்பிரகாரம் தகனஞ் செய்தால் காற்று கெட்டுப்போகாது.

அதாவது:—$7\frac{1}{2}$ அடி நீளம் $4\frac{1}{2}$ அடி ஆழம் $5\frac{3}{4}$ அடி அகலமுள்ள வேதி ஒன்று பூமியில் தோன்றவேண்டும். அகலத்தில் பாதி கீழேயிருக்கும்

வண்ணம் பக்கச்சுவர்களைச் சாய்த்து வெட்டவேண்டும். சந்தனக்கட்டை கஸ்தூரிக்கட்டை முதலான மரத்துண்டுகளை வேதியில் அடுக்கி அதன்பேரில் பிரேதத்தை வைக்கவேண்டும். அதன் மேலேயும் அதேமாதிரி துண்டுகளை (வேதியின் வாயிலிருந்து ஒரு அடிக் குறைய) அடுக்கவேண்டும். கட்டைக் குவியலில்வேண்டிய அளவு கற்பூரம் ஆகியவைகளை, அங்கும் இங்கும் தெளிக்க வேண்டும். பின்னர் குவியலுக்கு நெருப்புவைக்கவும். பிரேதத்தின் கனத்திற்குச் சரியான அளவு, நெய்யைக் கொண்டு ஆஹுதி செய்யவேண்டும். ஒரு பவுன் எடை நெய்யிற்கு ஒருதோலா பச்சைக்கற்பூரம் ஒருதோலா குங்குமப்பூவும் சேர்க்கப்பட்டிருக்கவேண்டும். இவ்விதத் தகனஞ் செய்வதானது துர்நாற்றம் ஒன்றையும் உண்டு பண்ணாது. இதை அந்தியேஷ்டி நரமேத, புருஷமேதயக்ஞம் என்றும் கூறுவார்கள். இறந்தவன் என்ன ஏழையாயிருந்தபொழுதிலும் பிரேதத் தகனத்திற்குக் குறைந்தது 40 பவுன் நெய்யாவது உபயோகம் செய்யவேண்டும். அந்நெய் பிச்சையெடுத்து கிடைத்தாலும் சரி; சாதிச் சனங்களிடமிருந்து இனமாகக் கிடைத்தாலும் சரி; அல்லது வேண்டியிருந்தால் கவர்ன்மெண்டிடமிருந்தாலும் சரி; எவ்விதத்திலும் சரீரம் மேற் சொன்னமாதிரியே தகனஞ் செய்யப்பட வேண்டும். நெய் முதலானவைகள் எவ்வழியுலும் கிடைக்காமல் போகும் பக்ஷத்தில், புதைப்பதை விட, கட்டையைக் கொண்டு தகனஞ் செய்வது மிகவும் மேலானது. 20¼ சதுர கெஜமுள்ள அல்லது ஒரே வேதியில்கூட கோடிக் கணக்கான பிரேத தகனஞ் செய்யலாம். புதைப்பதிலாவதுபோல் பூமியும் கெட்டுப்போகிறதில்லை. கோழை மனது சவக்குழியைக் கண்டும் நடுங்கும். ஆகவே புதைப்பது வெறுக்கத் தகுந்தது.

28. என் எஜமானாகிய ஆபிரகாமின் தேவனாயிருக்கிற கர்த்தருக்கு ஸ்தோத்திரம்; அவர் தம்முடைய கிருபையையும், தம்முடைய உண்மையையும் என் எஜமானை விட்டு நீக்கவில்லை; நான் பிரயாணம் பண்ணி வருகையில், கர்த்தர் என் எஜமானுடைய சகோதரர் வீட்டுக்கு என்னை அழைத்துக் கொண்டு வந்தார் (**24**. 27.)

அவர் ஆபிரகாமின் ஈச்வரன் மாத்திரமா என்ன? வழியைக்காட்டிக் கொண்டு தன் யஜமானனுக்கு முன்னால் வழிகாட்டி அல்லது தூதன் போவதே போல் ஈசுவரனும் செய்தார். தற்காலத்திலும் ஏன் அப்படியே அவர் செய்லாகாது? முன் காலத்தில் செய்தது போலவே இப்பொழுதும் ஏன் மனிதர்களிடம் அவர் பேசுகிறதில்லை? இவ்வார்த்தைகள் ஈசுவரனைக் குறித்தாவது அல்லது ஈசுவர புஸ்தகத்தைக் குறித்தாவது ஒரு பொழுதும் உண்மையாகாது. காட்டுத் தன்மையுள்ளவர்களைக் குறித்தே இவைகள் சரியாகும்.

29. பற்பல சந்ததிகளாய்ப் பிரிந்த இஸ்மவேலின் புத்திரருடைய நாமங்களாவன; இஸ்மவேலுடைய மூத்த மகன் நெபாயோத்; பின்பு கேதார்; அத்பியேல்; மிப்சாம்;—மிஷ்மா; தூமா; மாசா—ஆதார், தேமா, யெத்தூர், நாபீஸ் கேத்மா என்பவைகளே. (**25**—13-15)

இந்த இஸ்மவேல், தன் பணிவிடைக்காரியுடன் ஆபிரகமாகிற்குப் பிறந்த மகன்.

30. நான் அவைகளை உன் தகப்பனுக்குப் பிரியமானபடி ருசியுள்ள பதார்த்தங்களாகச்சமைப்பேன். உன் தகப்பன் தாம் மரணமடையுமுன்னே உன்னை ஆசீர்வாதிக்கும்படி அவர் புசிப்பதற்கு நீ அதை அவரிடத்தில் கொண்டு போக வேண்டும் என்றாள். பின்பு ரெபெக்காள் வீட்டிலே தன்னிடத்திலிருந்த தன் மூத்த மகனாகிய ஏசாவின் நல்ல வஸ்திரங்களை எடுத்துத் தன் இளைய மகனாகிய யாக்கோப்புக்கு உடுத்தி வெள்ளாட்டுக் குட்டிகளின் தோலை அவன் கைகளிலேயும் ரோமமில்லாத அவன் கழுத்திலேயும் போட்டாள். அப்பொழுது யாக்கோபு தன் தகப்பனை நோக்கி நான் உமது மூத்தமகனாகிய ஏசா: நீர் எனக்குச் சொன்ன படியே செய்தேன்; உம்முடைய ஆத்மா என்னை ஆசீர்வதிக்கும்படி நீர் எழுந்து உட்கார்ந்து, நான் வேட்டை யாடிக் கொண்டு வந்ததைப் புசியும் என்றான். (**27**—9, 10. 15, 17, 19)

பாருங்கள்! இம்மாதிரி மோசத்தினால் (தகப்பனாரிடமிருந்து) ஆசீர்வாதம் பெற்று, சித்தனென்றும் தீர்க்கதரிசி என்றும் பேசிக்கொள்ளுகிறான். இது அவ்வளவு அதிசயமாகாது? கிறிஸ்து மத போதகர்கள் இவ்விதமிருக்க அம்மதம் முரண்பாடுகளால் நிறைந்திருப்பது வியக்க தக்கதல்ல.

31. அதிகாலையிலே யாக்கோபு எழுந்து, தன் தலையின் கீழ்வைத்திருந்த கல்லை எடுத்து, அதைத் தூணாக நிறுத்தி அதின்மேல் எண்ணெய் வார்த்து அந்தஸ்தலத்திற்கு பெத்தேல் என்று பேரிட்டான். நான் தூணாக நிறுத்தின இந்தக் கல் தேவனுக்கு வீடாகும். (**28**, 18, 19, 22.)

இதைச் சற்று கவனியுங்கள். அவர்கள் கற்களைப் பூஜித்தும் பிறரைப் அங்ஙனம் பூஜை செய்யவும் சொன்னது காட்டுமனிதர்களைப் போல் நடந்ததாகாதா? இதை முஸ்லீம் "பயதல் முகதஸ்" (பரிசுத்த பெத்தேல்) என்கிறார்கள். அக்கல்லில் மாத்திரமா ஈச்வரனிருக்கிறார். அதுவா அவருடைய இருப்பிடம்? அடடா: கிறிஸ்துவர்களே: என்ன சொல்ல விருக்கிறது. நீங்கள் பெரும் விக்கிரக ஆராதனைக் காரர்களேதான்.

32. தேவன் ராகேலை நினைத்தருளினார்; அவளுக்குத் தேவன்செவிகொடுத்து அவள் கர்ப்பந்தரிக் கும்படி செய்தார்—அவள் கர்ப்பவதியாகி ஒரு குமாரனைப் பெற்று தேவன் என் நிந்தையை நீக்கிவிட்டார் என்றாள்.

(**30**. 22-23.)

நல்லவேலை செய்தீர்; கிறிஸ்துதேவரே! நீங்கள் பெரும் வைத்தியரேயாவீர்கள். கர்ப்பப்பையைத்திறக்கும் பொழுது என்ன என்ன ஆயுதங்களையும் மருந்துகளையும் உபயோகித்தீர். அல்லது இதையெல்லாம் குருட்டுத்தனமாய்ச் செய்தீர்களா?

33. அன்று ராத்திரி தேவன் சீரியா தேசத்தானாகிய லாபானுக்குச் சொப்பனத்தில் தோன்றி; நீ யாக்கோபோடே, நன்மையே அன்றித் தீமை ஒன்றும் பேசாதபடிக்கு எச்சரிக்கையாயிரு என்றார். இப்பொழுதும் உன் தகப்பனுடைய வீட்டின் மேலுள்ள வாஞ்சையினால் நீ புறப்பட்டுப் போகிறதானால் போகலாம், என் தெய்வங்களை ஏன் திருடிக் கொண்டு போகிறாய் என்று கேட்டார். (**31**. 24, 30.)

மனிதர்களுடைய கனவில் தோன்றினார் பேசினார், தூங்காமல் தூங்கிக்கொண்டிருக்குங்கால் வந்தார், உண்டார், உறங்கினார், போனார், என்று

பைபிளில் கூறப்பட்டிருக்கும்படியான ஆயிரக் கணக்கானவைகளில் இது ஒன்றேயாகும். ஆனால் இப்பொழுது அவர் இருக்கிறாரோ இல்லையோ என்று சொல்ல முடியாது. ஏனெனில் எவருடைய கனவிலேயும் தோன்றவில்லை. இக்காட்டு மனிதர்கள் கல் முதலான விக்கிரகங்களை இறைவனாக நினைத்து பூஜித்துவந்தார்கள். கிறிஸ்துவர்களுடைய ஈசுவரன்கூட கற்களைக் கடவுளாகக் கருதுகிறார். இல்லையென்றால் "தெய்வங்களைத் திருடிக்கொண்டு போகிறாய்" என்று எவ்விதம் சொல்லமுடியும்?

34. யாக்கோப்பு பிரயாணம் பண்ணுகையில் தேவதூதர்கள் அவனைச் சந்தித்தார்கள். யாக்கோபு அவர்களைக் கண்டபோது, இது தேவனுடைய சேனை என்று சொல்லி அந்த ஸ்தலத்திற்கு மக்னாயீம் என்று பேரிட்டான். (**32**. 1. 2.)

கிறிஸ்துவர்களுடைய ஈசுவரன் மனிதனாகவிருப்பதில் கொஞ்சமேனும் சந்தேகமுண்டோ? ஏனெனில் சேனை வைத்துக்கொண்டிருக்கிறார். அவரிடத்தில் யுத்த தளவாடங்களுமிருக்கவேண்டும். பிறரைத்தாக்குஞ் சுபாவத்திலுமிருக்கவேண்டும். சண்டையையும் செய்யவேண்டும். இல்லையென்றால் சைனியம்வைத்துக் கொள்ளுவதினால் என்ன பிரயோஜனம்?

35. யாக்கோபு பிந்தித் தனித்திருந்தான்; அப்பொழுது ஒரு புருஷன் பொழுது விடியுமளவும் அவனுடனே போராடி, அவனை மேற்கொள்ளாததைக் கண்டு, அவனுடைய தொடைச் சந்தைத் தொட்டார்; அதினால் அவருடன் போராடுகையில் யாக்கோபின் தொடைச் சந்து சுளுக்கிற்று—அவர்; நான் போகட்டும் பொழுது விடிகிறது என்றார். அதற்கு அவன் நீர் என்னை ஆசீர்வதித்தாலொழிய உம்மை போகவிடேன் என்றான். அவர் உன்பேர் என்ன என்று கேட்டார்; யாக்கோபு என்றான்—அப்பொழுது அவர் உன்பேர் இனி யாக்கோபு எனப்படாமல் இஸ்ரவேல் எனப்படும்; தேவனோடும் மனிதரோடும் போராடி மேற்கொண்டாயே என்று கேட்டான். அதற்கு அவர் நீர் என் நாமத்தைக் கேட்பானேன் என்று சொல்லி, அங்கே அவனை ஆசீர்வதித்தார்—அப்பொழுது யாக்கோபு; நான் தேவனை முகமுகமாய்க் கண்டேன், உயிர் தப்பிபிழைத்தேன். என்று சொல்லி அந்த ஸ்தலத்துக்கு பெனியேல் என்று பேரிட்டான்.

அவன் பேனியேலைக் கடந்து போகையில் சூரியன் உதயமாயிற்று; அவன் தொடைச் சுளுக்கினாலே நொண்டி நொண்டி நடந்தான்—அவர் யாக்கோபுடைய தொடைச் சந்து நரம்பைத் தொட்டபடியினால், இஸ்ரவேல் புத்திரர் இந்நாள்வரைக்கும் தொடைச் சந்து நரம்பைப் புசிக்கிறதில்லை. (**32**. 24- 32.)

கிறிஸ்துவர்களுடைய ஈசுவரன் சரியான மல்லுக்கு செட்டியான படியினாலேயே சாராவிற்கும் ராகலிற்கும் புத்திரப் பேறுண்டாகுமாறு அருளினார். இவர் எப்பொழுதாவது ஈசுவரனாக முடியுமா? பின்னும் அவருடைய நடவடிக்கையைக் கவனியுங்கள். யாக்கோபு அவரைப் பெயரென்னவென்று கேட்டான். அவர் சொல்லவில்லை. யாக்கோபினுடைய தொடைச் சந்தைச்சுளுக்கச் செய்தார். ஆனால் அவர் தோற்றுவிட்டார். அவர் வைத்தியராயிருந்திருக்கும் பக்ஷத்தில் அதையுங்கூட நிவர்த்தி செய்திருப்பார். இவ்வித ஈசுவர பக்தியினால் யாக்கோப்பு நொண்டியானது போல் இதர பக்தர்களும் நொண்டியாக வேண்

டும். இறைவனை நேராகக் கண்டு மல்யுத்தம் செய்தானென்றால் சரீரத்தை யுடைய ஒருவனாலேயே அதுமுடியும். இதுவெறும் குழந்தைப்பேச்சேயாகும்.

36. யூதாவின் மூத்தமகனாகிய ஏர் என்பவன் கர்த்தரின் பார்வைக்குப் பொல்லாதவனாயிருந்ததினால், கர்த்தர் அவனை அழித்துப்போட்டார். அப்பொழுது யூதா ஓனானை நோக்கி நீ உன் தமையன் மனைவியைச் சேர்ந்து, அவளை மைத்துனச் சுதந்தரமாய் படைத்து உன் தமையனுக்குச் சந்ததியை உண்டாக்கு என்றான். அந்தச் சந்ததி தன் சந்ததியாயிராதென்று ஓனான் அறிந்தபடியினாலே, அவன் தன் தமையனுடைய மனைவியைச் சேரும்போது தன் தமையனுக்குச் சந்ததி உண்டாகாதபடிக்குத் தன் விந்துவைத் தரையிலே விழவிட்டுக் கெடுத்தான். அவன் செய்தது கர்த்தரின் பார்வைக்குப் பொல்லாததாயிருந்ததினால் அவனையும் அழித்துப் போட்டார்.

இதெல்லாம் மனிதர்களுடைய வேலையே என்றும் இறைவனுடையதல்ல வென்றும் எல்லோருக்கும் புலப்பட்டிருக்கவேண்டும். ஓனான் ஏருடைய மனைவியுடன் *நியோகம் செய்தான். ஏன் இறைவன் அவனைக் கொன்று அழிக்க வேண்டும்? அவனுடைய புத்தியை ஏன் சரியாகச்செய்யவில்லை.

## யாத்திராகமம்

37. மோசே பெரியவனானகாலத்தில், அவன் தன் சகோதரரிடத்தில்போய், அவர்கள் சுமை சுமக்கிறதைப் பார்த்து, தன் சகோதரராகிய எபிரெயரில் ஒருவனை ஒரு எகிப்தியன் அடிக்கிறதைக் கண்டு அங்கும் இங்கும் பார்த்து, ஒருவரும் இல்லை என்று அறிந்து, எகிப்தியனை வெட்டி, அவனை மணலிலே புதைத்துப் போட்டான். அவன் மறுநாளிலும் வெளியே போன போது, எபிரேயமனுஷர் இருவர் சண்டை பண்ணிக் கொண்டிருந்தார்கள். அப்பொழுது அவன் அநியாயம் செய்கிறவனை நோக்கி; நீ உன் தோழனை அடிக்கிறது என்ன என்று கேட்டான். அதற்கு அவன் எங்கள் மேல் உன்னை அதிகாரியாகவும் நியாயாதிபதியாகவும் ஏற்படுத்தினவன் யார்? நீ எகிப்தியனைக்கொன்றுபோட்டதுபோல, என்னையும் கொன்று போட நினைக்கிறாயோ என்றான். அப்பொழுது மோசே காரியம் நிச்சயமாக வெளிப்பட்டது என்று பயந்தான். (2. 11-14.)

பைபிளினுடைய முக்கிய தீர்க்கதரிசியும் மதாசாரியருமான மோசையே கோபம் முதலிய தீயக் குணங்களுக்கு அடிமை யானவன். சாதாரண திருடனைப் போல் தண்டனையிலிருந்து தப்பித்துக் கொள்ளவேண்டி தன் குற்றத்தை மறைத்தபடியினால், பொய் சொல்லும் பழக்க முடையவனாயிருக்கவேண்டும். இம்மாதிரி மனிதன் கூட ஈசுவரனைச்சந்தித்தான்; பெரும் தீர்க்கதரிசி யானான். யூதசமயத்தையும் ஸ்தாபித்தான். ஆகவே மோசேய் முதலான கிறிஸ்துவர்களுடைய தீர்க்க தரிசிகள் எல்லோரும் நாகரீகமற்றவர்கள்; கல்விப் பயிற்சியற்றவர்கள் என்பது திட்டமாய் தெரியவருகிறது.

38. பஸ்காவை அடியுங்கள்—ஈசோப்புக் கொழுந்துகளின் கொத்தை எடுத்துக்கிண்ணியிலிருக்கும் இரத்தத்தில்தோய்த்து, அதில் இருக்கும் அந்த இரத்தத்தைவாசல் நிலைக்கால்களின் மேல் சட்டத்திலும் வாசலின் நிலைக்கால்கள் இரண்டிலும் தெளியுங்கள்! விடியற்காலம் உங்களில் ஒருவரும் வீட்டு வாசலை

* தேசங்கள் எல்லாவற்றிலும் நியோகமிருந்ததென்பது இதிலிருந்து தெளிவாகிறது

விட்டுப் புறப்படவேண்டாம்—கர்த்தர் எகிப்தியரை அதம் பண்ணுகிறதற்குக் கடந்துவருவார்: நிலையின்மேல்ச் சட்டத்திலும் வாசலின் நிலைக் கால்கள் இரண்டிலும் அந்த இரத்தத்தைக் காணும்போது, கர்த்தர் சங்காரக் காரனை உங்கள் வீடுகளில் உங்களை அதம் பண்ணுகிறதற்கு வரவொட்டாமல் வாசற்படியை விலகிக் கடந்து போவார். (12 21-23)

மந்திர சக்தியைப்போல் காணப்படுகிறது. இஸ்ரவேல் குலத்தவர்களுடைய வீட்டை ரத்தக்குறியன்னியில் அறியமுடியாத அவர் சர்வஞ்ஞராயிருக்க முடியுமா? அற்பபுத்தியுள்ள மனிதர்கள் செய்யும் வேலையைப் போலிருக்கிறது. ஏதோ ஒரு காட்டு மனிதரால் இவைகள் எழுதப் பட்டதென்று இதிலிருந்து விளங்கும்.

39. நடுராத்திரியிலே சிங்காசனத்தின் மேல் வீற்றிருக்கும் பார்வோனுடைய தலைப்பிள்ளை முதல், காவல் கிடங்கிலிருக்கும் சிறைப்பட்டவனின் தலைப்பிள்ளை வரைக்கும், எகிப்து தேசத்திலிருந்த முதற்பேறனைத்தையும் மிருக ஜீவன்களின் தலையீற்றனைத்தையும் கர்த்தர் அழித்தார். அப்பொழுது பார்வோனும் அவனுடைய சகல ஊழியக்காரரும் எகிப்தியர் யாவரும் இராத்திரியிலே எழுந்திருந்தார்கள்; மகா கூக்குரல் எகிப்திலே உண்டாயிற்று; சாவில்லாத ஒரு வீடு எதுவும் இருந்ததில்லை. (12. 29. 30.)

சபாஷ்! கிறிஸ்துவ ஈச்வரன் என்ன அருமையான வேலையைச் செய்தார். கன்னக் கள்வனைப் போல் நடு நிசியில் தயை யன்னியில் குழந்தைகளையும், குழவிகளையும், முதிர்ந்தவர்களையும் ஒன்றுமறியாத ஆடு மாடுகளையும் கூடக் கொன்ருர். அவர்களின் பேரில் கொஞ்சங்கூட இரக்கங்காட்டவில்லை. "மகா கூக்குரல் எகிப்திலே உண்டாயிற்று" உண்டாகியும் இக்கிறிஸ்துவ இறைவனின் உள்ளம் உருகவில்லை. ஈசுவரனை விட்டுவிட்டபொழுதிலும் கேவலம் மனிதன் கூட இக்காரியத்தைச் செய்யமாட்டான். "மாம்சாகாரக் காரனுக்குத் தயை எங்கிருந்து வரும்" என்பது போல் இதில் அதிசயம் ஒன்றுமில்லை. கிறிஸ்துவ ஈசுவரன் மாம்சாகாரரான படியினல் தயை இரக்கம் இவைகளைக் கொண்டு அவருக்கு ஆகவேண்டியதென்ன?

40. கர்த்தர் உங்களுக்காக யுத்தம் பண்ணுவார்......புறப்பட்டுப் போங்களென்று இஸ்ரவேல் புத்திரருக்குச் சொல்லு. நீ உன் காலை ஓங்கி ,உன் கையை சமுத்திரத்தின் மேல் நீட்டி, சமுத்திரத்தைப் பிளந்து விடு; அப்பொழுது இஸ்ரவேல் புத்திரர் சமுத்திரத்தின் நடுவோகக் கட்டாந்தரையில் நடந்து போவார்கள். (14. 14-16.)

நல்லது! ஐயா! ஆதிகாலத்தில், தன்னுடைய மந்தையை ஒட்டிக்கொண்டு ஆட்டிடையன் பின்னல் போவது போல், ஈசுவரன் இஸ்ரவேல் குல மக்களுக்குப் பின் போய்க்கொண்டிருந்தார். இப்பொழுது எங்கு மறைந்துக் கொண்டிருக்கிருரோ? அவர் இருந்திருப்பாரானல், உலகத்திற்கே பெரும் உபகாரத்தைச் செய்கிற ரயில் பாதையைச் சமுத்திரம் முழுவதும் போட கிறிஸ்துவர்களுக்கு உதவியாயிருந்திருப்பார். கப்பல்கள் முதலானவைகளைக் கட்டும் கஷ்டத்தையும் அது குறைத்திருக்கும். என்ன செய்வது? இக்

கிறிஸ்துவ இறைவன் எங்கு மறைந்திருக்கிறார் என்று யாரும் அறியார்கள். அசம்பவ லீலைகள் அநேகத்தை இதுமாதிரி மோஸையின் பைபிளில் காணும் படி ஈசுவரன் செய்திருக்கிறார். கிறிஸ்துவ ஈசுவரன் எப்படியோ, அப்படியே அவருடைய பக்தர்களும்; அவரால் செய்யப்பட்ட நூலும்; என்னும் வார்த்தையின் உண்மை வெளியாகிவிட்டது. இம்மாதிரி நூலும் இம்மாதிரி ஈசுவரனும் நம்மிடமிருந்து தூர விலகியே இருக்கட்டும். அப்பொழுது தான் நமக்கு க்ஷேமம் உண்டாகும்.

> 41.……உன் தேவனாகிய கர்த்தாவாயிருக்கிற நான் எரிச்சலுள்ள தேவனாயிருந்து, என்னைப் பகைக்கிறவர்களைக் குறித்துப் பிதாக்களுடைய அக்கிரமத்தைப் பிள்ளைகளிடத்தில் மூன்றாம் நான்காம் தலைமுறை மட்டும் விசாரிக்கிறவராயிருக்கிறேன்……(**20**. 5)

தகப்பனாரின் பாவத்திற்காக, நாலு தலைமுறைவரையிலுள்ள குழந்தைகளைத் தண்டிப்பது என்ன நீதியாகும்? நல்ல தகப்பனுக்குத் துஷ்ட குமாரனும் துஷ்ட தகப்பனுக்கு நல்ல குமாரனும் உண்டாகிறதில்லையா? இவ்விதமிருக்க நான்கு தலை முறைவரையில் எவ்விதம் தண்டிக்கலாம்? ஐந்தாவது தலைமுறைக் கப்புறம் துஷ்டர்களாகிவிட்டால் தண்டிக்க முடியாதே. அபராத மன்னியில் தண்டிப்பது அநியாயக்காரர்களுடைய பேச்சேயாகும்.

> 42. ஓய்வு நாளைப் பரிசுத்தமாய் ஆசரிக்க நினைப்பாயாக. ஆறு நாளும் நீ வேலை செய்து; ஏழாம் நாளோ உன் தேவனாகிய கர்த்தருடைய ஓய்வு நாள் ……கர்த்தர் ஓய்வு நாளை ஆசீர்வதித்து, அதை பரிசுத்தமாக்கினார். (20. 9-11.)

ஞாயிற்றுக் கிழமை மாத்திரமா பரிசுத்தமானதினம்? மிகுந்த நாட்கள் ஆறும் பரிசுத்தமற்றதா? பரமேச்வரன் ஆறு நாளும் அவ்வளவு சிரமப் பட்டுவிட்டாரா ஏழாம் நாள் ஓய்வு எடுத்துக் கொள்ள? ஞாயிற்றுக் கிழமையைப் புனிதமாக்கினாரென்றால், மீதி ஆறுநாள்களுடன் என்ன செய்தார்? அவைகளைச் சபித்திருக்க வேண்டும்? இக்காரியத்தைக் கற்றுணர்ந்தவர்களே செய்யமாட்டார்களென்றால், ஈசுவரனைப் பற்றி என்ன சொல்லுவது? ஒன்றைப்புனிதமாக்கி வரம் கொடுத்து மீதியானவைகளைப் பரிசுத்தமில்லாததாகச் செய்யவேண்டிவளவு ஞாயிற்றுக் கிழமையில் என்ன குணத்தையும் மற்றவைகளில் என்ன தோஷத்தையும் கண்டாரோ அறியோம்.

> 43. பிறருக்கு விரோதமாகப் பொய்ச் சாட்சி சொல்லாதிருப்பாயாக. பிறருடைய வீட்டை இச்சியாதிருப்பாயாக;பிறருடைய மனைவியையும், அவனுடைய வேலைக்காரனையும், அவனுடைய வேலைக்காரியையும் அவனுடைய எருதையும், அவனுடைய கழுதையும், பின்னும் பிறருக்குள்ள யாதொன்றையும் இச்சியாதிருப்பாயாக. (**20**. 16, 17.)

அடே! தாகமுள்ளவனும் பசியுள்ளவனும் வெகு ஊக்கத்துடன் குடிக்கத் தண்ணீரையும் உண்ண உணவையும் முறையே தேடுவது போல் கிறிஸ்துவர்கள் அந்நியர்களுடைய பொருளுக்கும் உடமைக்கும் ஆசைப்படுகிறார்கள். இந்நிபந்தைகளின் அதிகாரியைப் போலவே கிறிஸ்துவ ஈசுவரனும் பேராசையும் பொறாமையும் உள்ளவராக யிருப்பார். பிறர் என்னும் வார்த்தை

க்கு யாரேனும் மனிதவர்க்கமே என்று பொருள் படுத்துவாராகில் அது உண்மையாகாது. ஏனெனில் இச்சிக்க, மனைவி, வேலைக்காரி முதலியவர்களை உடையவர்கள் யாவரும் இருக்கமாட்டார்கள். ஆகையினால் இதெல்லாம் சுயநலப் பிரியர்களான மனிதர்களுடையதே. ஈசுவரனுடையதில்லை.

44. ஆகையால் குழந்தைகளில் எல்லா ஆண்பிள்ளைகளையும், புருஷ சம்யோகத்தை அறிந்த எல்லா ஸ்திரீகளையும் கொன்று போடுங்கள், புருஷ சம்யோகத்தை யறியாத எல்லா ஸ்திரீகளையும் உங்களுக்காக உயிரோடே வையுங்கள். (எண்ணாகமம் **20**. 17. 18.)

நல்லது! உங்களுடைய தீர்க்கதரிசி மோசேய், உங்களுடைய ஈச்வரன் இவர்கள் புனிதமானவர்கள்? பெண்பிள்ளைகள், குழந்தைகள், வயது சென்றவர்கள், ஆடு மாடுகள் இவர்களுடைய பிராணனை வாங்குவதிலிருந்து கூட தனியாக விருக்கமாட்டார்கள். மோசேய் காமாதுரமுள்ளவனாயிருந்திருக்கவேண்டுமென்று இதிலிருந்து நன்றாகப் புலப்படுகிறது. சிற்றின்பப் பிரியமுள்ளவனாய் இருந்திராமல் போனால் கன்னி கழியாதப் பெண்களைத் தனக்காகவும் தன்னைப் பின்பற்றுகிறவர்களுக்காகவும், மன்னித்திருக்கமாட்டார். தயையில்லாத இவ்வளவு குரூரமான ஆக்ஞையும் (சிற்றின்பத்தை பெருகச் செய்கிற) வெளிப்படுத்தியிருக்கமாட்டார்.

45. ஒருமனிதனை சாகும்படி அடித்தவன் நிச்சயமாய் கொலை செய்யப்படக்கடவன். ஒருவன் பதிவிருந்து கொல்லாமல், தெய்வச்செயலாய் தன் கைக்கு நேரிட்டவனைக் கொன்றால் அவன் ஓடிப்போய்ச் சேரவேண்டிய ஸ்தலத்தை உனக்கு நியமிப்பேன். (யாத்திராகமம்-**21**. 12, 13.)

ஈசுவரனுடைய இந்தநீதி சரியானபடியிருந்தால் ஒருமனிதனைக்கொன்று புதைத்துவிட்டு ஓடிப்போன மோசேயக்கு ஏன் தண்டனை அளிக்கவில்லை? மோசேயினிடத்தில் பக்ஷபாதம் காட்டின குற்றத்தினுடனிருக்கிறார். இல்லையென்றால் நாட்டின் அதிகாரியினால் விசாரிக்கப் படுவதற்கு மோசையை ஏன் அவர் விடவில்லை?

46. .........கர்த்தருக்குச் சமாதானப் பலிகளாகக் காளைகளை பலியிட்டார்கள். அப்பொழுது மோசே அந்த இரத்தத்தில் பாதி எடுத்து, பாத்திரங்களில் வார்த்து பாதி இரத்தத்தை பலிபீடத்தின் மேல் தெளித்தான். அப்பொழுது மோசே இரத்தத்தை எடுத்து ஜனங்களின் மேல் தெளித்து இந்த வார்த்தைகள் யாவையுங்குறித்து கர்த்தர் உங்களோடே பண்ணின உடன்படிக்கையின் இரத்தம் இதுவே என்றான். (**24**, 5. 6, 8. 12.)

இக்காரியங்களின் அதிகாரிகளெல்லோரும் மிருகத் தன்மையுள்ளவர்களா, இல்லையா? என்று இதைப்படிக்கிறவர்கள் தெரிந்துகொள்ளவேண்டியது. காளைகளின் பலிதானத்தை ஏற்றுக்கொண்டு, பரமேச்வரன், பலிபீடத்தின் மேல் இரத்தத்தைத் தெளிக்க ஒத்துக்கொண்டார் என்று நினைக்க எவ்வளவு கடினமாயும் குரூரமாயும் இருக்கிறது. அவர்களுடைய தெய்வம் இவ்விதமிருக்க அவருடைய பக்தர்கள் காளை, பசு, முதலானவைகளின் மாமிசத்தைக் கொண்டு வயிறு நிரப்பி அதனால் உலகத்திற்கே ஏன் கஷ்டத்தை விளைவிக்

காமலிருப்பார்கள்? இத்திய உபதேசங்களை பைபிள் கொண்டிருக்கிறது. இத்திய வழக்கத்தைக்கொண்டே வேதங்களிலும் இக்கொடிய குற்றம் இருக்கிறதைப் பார்க்கிறார்கள். ஆனால் வேதங்களில் இவ்வார்த்தைகளின் பெயர்கூட இல்லை. கிறிஸ்துவ ஈசுவரன் மலைவாசியென்றும் மலையிலேயே வசித்திருந்தாரென்றுங்கூடத் தெரியவருகிறது. காகிதம், மை, பேனா இவைகளைச் செய்யமுடியாமலும் கிடைக்காமலும் போகவே கல்விலைகளில் எழுதி மோசேக்குக் கொடுத்தார். காட்டு மனிதர்முன் அவர் ஈசுவரனாயிருந்திருக்கலாம்.

47. நீ என் முகத்தைக் காணமாட்டாய், ஒரு மனுஷனும் என்னைக் கண்டு உயிரோடிருக்கக் கூடாது என்றார். பின்னும் கர்த்தர்: இதோ என்னண்டையில் ஒரு இடம் உண்டு; நீ அங்கே கல்மலையில் நில்லு; என் மகிமை கடந்து போகும்போது நான் உன்னை அந்தக் கல்மலையின் வெடிப்பிலே வைத்து, நான் கடந்து போகும் மட்டும் என் கரத்தினால் உன்னை மூடுவேன். பின்பு என் கரத்தை எடுப்பேன்; அப்பொழுது என் பின் பக்கத்தைக் காண்பாய். என் முகமோ காணப்படாது என்றார். (**33**. 20-23.)

இதைப் படிக்கிறவர்களே! கிறிஸ்துவ ஈசுவரன் மனிதனைப் போல் சரீரத்தைத் தரித்து இருந்தாரென்பதற்குச் சந்தேகமுண்டோ? கவனியுங்கள். மோசேயுடன் கூடி ஈசன் என்று சொல்லிக்கொண்டார். பின்பக்கத்தைப் பார்க்கிறவன் உருவத்தைக் காணமாட்டானா?

## லேவியராகமம்.

48. கர்த்தர் ஆசரிப்புக் கூடாரத்திலிருந்து மோசேயைக் கூப்பிட்டு அவனை நோக்கி இஸ்ரவேல் புத்திரரிடத்தில் சொல்லவேண்டியது என்னவென்றால், உங்களில் ஒருவன் கர்த்தருக்குப் பலிசெலுத்த வந்தால், மாட்டுமந்தையிலாவது ஆட்டுமந்தையிலாவது ஒரு மிருகத்தைத் தெரிந்தெடுத்து, பலி செலுத்தவேண்டும். (**1**. 1, 2.)

காளை, பசு, இவைகளுடைய பலியை ஏற்றுக்கொள்கிறவரும், தனக்காக இல்வித பலிதானங்களைச் செய்யச் சொல்லி உபதேசிக்கிறவருமான கிறிஸ்துவர்களுடைய ஈச்வரன், பசு முதலான மிருகங்களுடைய மாமிசத்திற்கும் இரத்தத்திற்கும் ஆசைப்படவில்லையா என்று பார்க்கவேண்டும். இவ்வித மிருக்க ஈசுவரனாகமாட்டார். அஹிம்சையுடன் கூடினவராயும் காணப்படவில்லை. மாம்சாகாரம் செய்யும் பூதம்போல் காணப்படுகிறார்.

49. கர்த்தருடைய சந்நிதியில் அந்தக் காளையைக் கொல்லக்கடவன்! அப்பொழுது ஆரோனின் குமாரராகிய ஆசாரியர்கள் அந்த இரத்தத்தை எடுத்து, அதை ஆசரிப்புக் கூடாரவாசலிலிருக்கிற பலிபீடத்தின் மேல் சுற்றிலும் தெளிக்கக் கடவர்கள். பின்பு அவன் அந்த சர்வாங்க தகன பலியைத் தோலுரித்து அதைச் சந்துசந்தாகத் துண்டிக்கக் கடவன். அப்பொழுது ஆசாரியனாகிய ஆரோனின் குமாரர் பலிபீடத்தின் மேல் அக்கினியைப் போட்டு, அக்கினியின்மேல் கட்டைகளை அடுக்கி,— அவன் குமாரராகிய ஆசாரியர்கள், துண்டங்களையும் தலையையும் கொழுப்பையும் பலிபீடத்திலுள்ள அக்கினியிலிருக்கிற கட்டைகளின் மேல் அடுக்கி வைக்கக் கடவர்கள். அதின் குடல்களையும் தொடைகளையும் அவன் தண்ணீரினால் கழுவுவானாக; அவைகளையெல்லாம் ஆசாரியன் பலி

பீடத்தின்மேல் சர்வாங்கதகனபலியாகத் தகனிக்கக்கடவன்; இது கர்த்தருக்குச் சுகந்த வாசனையான தகனபலி. (1. 5-9.)

பரமேச்வரனுக்கு முன் அவருடைய பக்தர்கள் யாட்டை வெட்டுவது; பலிபீடத்தின் நாலாப்பக்கங்களிலும் அதனுடைய இரத்தத்தைத் தெளிப்பது; பலிபீடத்தின்பேரில் அதன் மாமிசத்தைப் பலியாக ஹோமம் செய்வது; அதை ஈசுவரன் சுகந்தத்துடன் முகர்வது; இதெல்லாம் கொலைக்களத்தைவிட மேலாயிராது. பைபிள் ஈசுவரனால் செய்யப்பட்டதல்ல வென்றும், அதனுடைய ஈசுவரன் காட்டு மனிதனைவிட மேலானவரல்ல வென்றும் இவைகள் நிரூபிக்கும்.

50. பின்னும் கர்த்தர் மோசேயை நோக்கி:—நீ இஸ்ரவேல் புத்திரரிடத்தில் சொல்லவேண்டியது என்னவென்றால், ஒருவன் கர்த்தருடைய கட்டளைகளில் யாதொன்றை அறியாமையினால்மீறி, செய்யத்தகாததைச் செய்து பாவத்துக்கு உட்பட்டால் அறியவேண்டியதாவது:—அபிஷேகம்பெற்ற ஆசாரியன், ஜனங்கள் குற்றத்திற்கு உட்படத்தக்கதாகப் பாவம் செய்தால், தான் செய்த பாவத்தினிமித்தம் பழுதற்ற ஒரு இளங்காளையை பாவநிவாரண பலியாகக் கர்த்தருடைய சந்நிதியில் கொண்டுவரக்கடவன்.—அவன் அந்தக் காளையை ஆசரிப்புக் கூடாரவாசலிலே கர்த்தருடைய சந்நிதியில் கொண்டுவந்து, அதின் தலைமேல் தன் கையை வைத்து, கர்த்தருடைய சந்நிதியில் அதைக் கொல்லக்கடவன்.—(2. 1. 3. 4.)

பாவங்களுடைய பரிகாரத்தைக் கவனியுங்கள். மனிதன் பாபஞ் செய்கிறான். அதற்குப் பிராயச்சித்தமாக உபயோகமான மிருகங்களைக் கொலை செய்கிறான். கிறிஸ்து ஈசுவரனும் அதை ஆதரிக்கிறார். புனிதமான கிறிஸ்துவர்களே!! இவ்வேலைகளைச் செய்யச் சொல்லுகிறவரைக்கூட ஈசுவரனாக நினைத்து அவர்மூலமாய் முக்தியையடைய விரும்புகிறீர்கள்.

51. ஒரு பிரபு பாவத்துக்குட்பட்டுக் குற்றவாளியானால்.........அவன் வெள்ளாடுகளில் பழுதற்ற ஒரு இளங்கடாவைப் பலியாகக் கொண்டுவந்து......கர்த்தருடைய சந்நிதியில் சர்வாங்க தகனபலி சொல்லப்படும் இடத்தில் அதைக்கொல்லக் கடவன்; இது பாவநிவாரணபலி. (4. 22-24.)

சபாஷ்! ஓ கிறிஸ்துவர்களே! இவ்விதமிருக்க கிறிஸ்தவ அதிகாரி, நீதிபதி, சேனாதிபதி முதலானவர்கள் பாபம் செய்வதிலிருந்து பயப்படுவானேன்? அவரவர்கள் மனங்கொண்ட வரையில் பாபம் செய்யலாம். அதற்குப் பிராயச்சித்தமாகப் பசு, கன்றுகுட்டி, முதலான மிருகங்களுடைய பிராணனைப் பழிவாங்கலாம். மிருகம், பக்ஷி, இவைகளுடைய பிராணனை அழிப்பது என்பதில் கிறிஸ்துவர்களுக்கு அச்சமே இருப்பதில்லை. கேளுங்கள் கிறிஸ்துவ மகாஜனங்களே! நீங்கள் இந்த மிருகத்தன்மையான மதத்தை விட்டுவிட்டு அறிவுமயமாயும் தர்மமயமாயுமிருக்கிற வைதிகமதத்தை அங்கீகரியுங்கள். அதுவே உங்களுக்குச் சுகத்தைக் கொடுக்கும்.

52. ஆட்டுக்குட்டியைக் கொண்டுவர அவனுக்குச் சக்தியில்லாதிருந்தால், அவன் செய்த குற்றத்தினிமித்தம் இரண்டு காட்டுப் புறாக்களையாவது, இரண்டு புறாக் குஞ்சுகளையாவது, கர்த்தருடைய சந்நிதியில் கொண்டுவரக்கட

வன், அதின் தலையை அதின் கழுத்தினிடத்தில் கிள்ளட்டும்...........ஆனால் அதை இரண்டாக்கக் கூடாது...........இவ்விதமாக அவன் செய்த பாவத்தை ஆசாரியன் நிவிர்த்தி செய்யக்கடவன்; அப்பொழுது அது அவனுக்கு மன்னிக்கப்படும். இரண்டு காட்டுப் புறாக்களையாவது, இரண்டு புறாக்குஞ்சுகளையாவது கொண்டுவர அவனுக்குச் சக்தியில்லாதிருந்தால் பாவம் செய்தவன், * பாவ நிவாரணத்துக்காக ஒருஎப்பா அளவான மெல்லிய மாவிலே பத்தில் ஒரு பங்கைத்தன் காணிக்கையாகக் கொண்டுவருவானாக. அதன்மேல் எண்ணெய் வார்க்காமலும் இருப்பானாக. (5. 7, 8. 10, 11. 13.)

கிறிஸ்துவர்கள் பணக்காரனானாலும் சரி, ஏழையானாலும் சரி; பாபம் செய்வதிலிருந்து பயப்படவேண்டியதில்லை. ஏனெனில் செய்த பாபங்களின் பிராயச்சித்தத்தை வெகு எளிதில் முடிக்கலாம். கஷ்டம் ஒன்றுமன்னியில், தன் பாபங்களிலிருந்து ஒருவன் மீறலாம் என்று சொல்லுவதே கிறிஸ்துவபைபிளிலுள்ள விந்தையாகும். கிறிஸ்துவன் பாபம் ஒன்றைச் செய்துவிடுகிறான்; அதனுடைய கஷ்டங்களிலிருந்து மீற மிருகங்களைக் கொலை புரிகிறான். அதனுடைய மாமிசத்தைச் சாப்பிட்டு பாபங்களைக் கழித்துக் கொள்கிறான். புறாவின் கழுத்திலிருந்து தலையைக் "கிள்ளின"வுடன் கொஞ்ச நேரம் அது துடிக்குமே. அப்பொழுது கூட கிறிஸ்துவர்கள் பக்ஷியினிடம் பரிதாபப் படமாட்டார்களா? ஹிம்சை செய்வதற்கு ஈசுவரனுடைய அதிகார மிருக்கும்பொழுது பரிதாபம் எவ்விதம் உண்டாகும்? சகல பாபங்களையும் இவ்விதமாகக் கழிக்கலாமென்றிருக்கும்பொழுது இயேசுவினிடத்தில் நம்பிக்கை வைப்பதினாலேயே பாபங்கள் தீருமென்கிற பெரும் புரட்டை ஏன் ஏற்படுத்தியிருக்கிறார்கள்?

53. ஒருவனுடைய, சர்வாங்க தகனபலியைச் செலுத்தின ஆசாரியன் தான் செலுத்தின தகனபலியின் தோலைத் தனக்காக வைத்துக்கொள்ளவேண்டும். அடுப்பிலே பாகம் பண்ணப்பட்டதும் சட்டியிலும் தட்டின்மேலும் சமைக்கப்பட்டதுமான போஜனபலியாவும் அதைச் செலுத்தின ஆசாரியனுடையவைகளா யிருக்கும். (7. 8. 9.)

---

*குறிப்பு:—கன்றுக்குட்டி, ஆடு, ஆட்டுக்குட்டி. புறா. மாவு, இவைகளை ஏற்றுக்கொள்ள உடன்பட்ட இந்த ஈசுவரனுக்கு ஆயிரக் கோடி வந்தனம்! கழுத்திலிருந்து கிள்ளப்பட்ட தலையையுடைய புறாக்களை ஏற்றுக்கொள்ளுவது விந்தையே! அதாவது கழுத்திலிருந்து தலையைக்கிள்ளும் சிரமம் கூட அவருக்குக் கிடையாது. அக்காட்டுமிராண்டிகளில் அதிகம் புத்தியுள்ள ஒருவனிருந்தானென்றும் அவன் மலையுச்சியில் வசித்துக்கொண்டு ஈசுவரன் என்று சொல்லிக்கொண்டிருந்தானென்றும் இவ்வார்த்தைகளிலிருந்து தெளிவாகிறது. அறிவில்லாத காட்டுமிராண்டிகள் அவனை ஈசுவரனென்று அங்கீகாரம் செய்துகொண்டார்கள். அவனுடைய தந்திரத்தினால் அம்மலையேலேயே, தன் ஆகாரத்திற்கு வேண்டிய மிருகம்.பக்ஷி,மாவு, உணவுப்பொருள் முதலானவைகளைக் கொண்டுவர செய்துகொண்டிருந்தான். தன் ஏவல்களைசெய்ய தூதர்களென்கிறவர்களை வைத்துக்கொண்டிருந்தான். கன்றுக்குட்டி. ஆடு. ஆட்டுக்குட்டி, புறா, "மெல்லிய" மாவு முதலானவைகளைச் சாப்பிடுகிற பைபிளிலிருக்கிற இந்த ஈசுவரனுடன், சர்வ வியாபகனையும், சர்வஞ்ஞனையும், பிறப்பற்றவனையும், உருவமில்லாதவனையும், சர்வ சக்திமானையும், நியாயம் செய்கிறவனையும், இன்னும் இவ்விதமான சிறந்தகுணங்களுடன் கூடின வேதத்திலிருக்கிற ஈச்வரனைப் புத்திமான்கள் ஒப்பிட்டுப் பார்க்கவேண்டும்.

பைரவதேவியின் ஆலய வழிபாட்டுக்கர்த்தாக்களின் போப்லீலைகளையே, தந்திரமானது என்று இதுவரையில் எண்ணியிருந்தோம். ஆனால் கிறிஸ்துவ ஈசுவரனுடையதும் அவருடைய பூஜாரிகளுடையதும் ஆயிரம் தடவை அதிகமாக விருக்கிறது. பலிகொடுத்த மிருகங்களின் தோலை விற்ற திரவியத்தைப் பெறவும், அவைகளுடைய மாம்சத்தைச் சாப்பிடவும் கிறிஸ்துவாகளுக்கு அகமகிழ்ச்சியை யளித்திருக்கும். தகப்பன் தன் இரண்டு பிள்ளைகளில் ஒன்றைக் கொன்று, அம் மாமிசத்தை மற்ருெருவனுக்குச் சாப்பிடக் கொடுப்பானு? அதேமாதிரி எப்பொழுதாவது முடியுமா? அப்படிப் பிள்ளையைப்போலிருக்கிற, மனிதன், மிருகம் பக்ஷி, முதலானவைகளிலெல்லாம் பரமேசுவரன் இக்காரியத்தைச் செய்வாரா? பைபிள் ஈச்வரனல் செய்யப்பட்டதில்லையென்றும், அதிலெழுதியிருக்கும் ஈச்வரனும், அதைப் போற்றுகிறவனும், தர்மம் சத்தியம் இன்னதென்று விளங்காதவர்களென்றும் இதிலிருந்து நன்கு விளங்குகின்றன. சொல்லமுடியாத இம்மாதிரி ஒவ்வாத வர்த்தைகளினல் இந்நூல் நிரைக்கப்பட்டுள்ளது.

## எண்ணுகமம்.

54. கர்த்தருடைய தூதனனவர் உருவின பட்டயத்தைத் தம்முடைய கையிலே பிடித்துக்கொண்டு வழியிலே நிற்கிறதைக் கழுதை கண்டு, வழியை விட்டு வயலிலே விலகிப் போயிற்று. கழுதையை வழியில் திருப்ப பிலேயாம் அதை அடித்தான். உடனே கர்த்தர் கழுதையின் வாயைத் திறந்தார்; அது பிலேயாமைப் பார்த்து; நீர் என்னை இப்பொழுது மூன்றுதரம் அடிக்கும்படி நான் உமக்கு என்ன செய்தேன் என்றது. (22. 22, 28.)

ஆதியில் கழுதையுங்கூட தேவதூதர்களைப் பார்க்கும். இப்பொழுதோ பிஷப்பும், பாதிரியும் கூட (நல்லவர்களும், கெட்டவர்களும்) தேவனையாவது அல்லது அவருடைய தூதரையாவது பார்க்கமுடிகிறதில்லை. இக்காலத்தில் கடவுளும் அவருடைய தூதர்களும் இருக்கிருர்களா இல்லையா? இருந்தால் ஏன் காணப்படுகிறதில்லை? அவர்கள் அயர்ந்து தூங்குகிருர்களா அல்லது நோயினல் பிடிக்கப்பட்டுக் கொண்டிருக்கிருர்களா அல்லது வேறு உலகம் போய்விட்டார்களா? அல்லது கிறிஸ்துவர்களுடன் வருத்தப்பட்டுக் கொண்டிருக்கிருர்களா? அல்லது இறந்துபோய்விட்டார்களா? அவர்களுக்கு யாது நேரிட்டதென்று எவரும் அறியார்கள். ஆனல் இப்பொழுது அவர்களில்லை யென்றும் காணப்படுகிறதில்லை யென்றும் இதற்கு முன்னிருந்ததில்லை யென்றும் காணப்படவில்லை யென்றும் எல்லோரும் அறிவார்கள். இந்நூல்களை நூற்றவர்கள் பைபிலை உண்டுபண்ணின ஆசிரியர்களே யாவார்கள்.

## II. சாமுவேல்.

55. அன்று ராத்திரியிலே கர்த்தருடைய வார்த்தை நாத்தானுக்கு உண்டாகி அவர்: நீ போய் என் தாசனகிய தாவீதை நோக்கி; கர்த்தர் சொல்லுகிறது என்னவென்ருல் நான் வாசமாயிருக்கத்தக்க ஆலயத்தை நீ எனக்குக் கட்டுவாயோ?—நான் இஸ்ரவேல் புத்திரரை எகிப்திலிருந்து புறப்படப்பண்ணின நாள் முதற்கொண்டு இன்னுள் வரைக்கும், நான் ஒரு ஆலயத்தில் வாசம் பண்ணுமல், கூடாரத்திலும், வாசஸ்தலத்திலும் உலாவினேன். (7. 4-6.)

கிறிஸ்துவ ஈசுவரன் மனிதனைப் போல் சரீரத்துடன் கூடினவராயிருந்தாரென்பதில் கொஞ்சமேனும் சந்தேகம் கிடையாது. நான் ரொம்ப கஷ்டப் பட்டேன் என்றும் இங்குமங்கும் அலைந்து கொண்டிருந்தேன் என்றும், கூடாரத்திலும் வாசஸ்தலத்திலும் உலாவிக்கொண்டிருந்தேன் என்றும், இருக்க ஒரு வீடுமில்லை யென்றும் புலம்புகிறார். தாவீது வீடு ஒன்று அமைத்துக்கொடுத்தால் அதில் தங்கியிருப்பார். இவ்வித ஈச்வரனையும் புஸ்தகத்தையும் நம்ப கிறிஸ்துவர்களுக்கு வெட்கமாகவில்லையா? அவர்களுக்காக இரங்க வேண்டும். பேதை கிறிஸ்துவர்கள்!! வலையில் அகப்பட்டுக் கொண்டுவிட்டார்கள். அதிலிருந்து மீற பெருமுயற்சி செய்யவேண்டும்.

## 2. இராஜாக்கள்

56. ஐந்தாம் மாதம் ஏழாந்தேதியிலே நேபுகாத்நேச்சார் என்னும் பாபிலோன் ராஜாவின் பத்தொன்பதாம் வருஷத்திலே, பாபிலோன் ராஜாவின் ஊழியக்காரனாகிய நெபுசராதான் என்னும் காவல் சேனாபதி எருசலேமுக்கு வந்து—கர்த்தருடைய ஆலயத்தையும், ராஜாவின் அரமனையையும், எருசலேமின் சகல கட்டடங்களையும், பெரிய வீடுகள் எல்லாவற்றையும் அக்கினியால் சுட்டெரித்துவிட்டான். காவல் சேனாபதியோடிருந்த கல்தேயரின் ராணுவத்தாரெல்லாரும் எருசலேமைச்சுற்றிலும் இருந்த அலங்கங்களை இடித்துப் போட்டார்கள். (**25.** 8, 9, 10.)

கிறிஸ்துவ ஈச்வரனிடம் அனுதாபங்காட்ட வேண்டும். தாவீதினால் அவருக்கென்று வசிக்க வீடொன்று கட்டப்பட்டது. அதில் அவர் சுகமாய் காலங்கழித்திருக்கவேண்டும். நேபுசராதான் அதை அக்கினியால் சுட்டெரித்துவிட்டான். தேவனும் அவருடைய தூதர்களும் அவனுக்கு எதிராக ஒன்றும் செய்யமுடியவில்லை. ஆரம்பத்தில் யுத்தஞ்செய்து பெருஞ்சண்டைகளில் ஜெயித்திருக்கிறார். ஆனால் இப்பொழுதோ நெபுசராதான் தன் வீட்டை நாசஞ்செய்ய விட்டு விட்டிருந்தார். அவருடைய தூதர்களும் எங்கு ஓடிப் போனார்களோ? இச்சந்தர்ப்பத்தில் எவரும் உபயோகப் படவில்லை. ஈசுவரனுடைய பராக்கிரமும் எங்கு சென்றிருந்ததோ? சிறகுகளின் உதவியால் பறந்து போய்விட்டதா? இங்கே கூறியிருக்கும்படியானது உண்மையாயிருக்குமேயானால் பைபிளில் எழுதப்பட்டிருக்கும்படியான வெற்றிக் கதைலாம் வீண் பொய்யேயாகும். எகிப்தியக் குழந்தைகளைக் கொன்று போடுவதில் மாத்திரந்தானா அவருக்கு அவ்வளவு வீரசூரத்தனமிருந்தது. வீரபுருஷர்களின்முன் இவர் ஏன் ஒன்றும் செய்யாமலிருந்தார்? இந்நடத்தையினால் கிறிஸ்துவ ஈசுவரன் தனக்கே அபகீர்த்தியையும் அவமரியாதையையும் வரவழைத்துக் கொண்டார். இம்மாதிரி விவேகமில்லாத ஆயிரக் கணக்கான கதைகளினால் நூல் நிறைந்திருக்கின்றன.

## 2. நாளாகமம்.

57. ஆகையால் கர்த்தர் இஸ்ரவேலில் கொள்ளைநோயை வரப்பண்ணினார். அதினால் இஸ்ரவேலில் எழுபதினாயிரம் பேர் மடிந்தார்கள். (**21.** 14.)

கிறிஸ்தவ ஈசுவரனின் லீலையைப் பாருங்கள்! தான் அநேக வரங்களை யளித்து, அல்லும் பகலும் அதைக் காப்பாற்றுவதிலேயும் பாடுபட்டுக்கொண்டிருந்த இஸ்ரவேலில், கோபவெறியில், கொள்ளை நோயை யுண்டுபண்ணி எழுபதினாயிரம் பேரை மடியச் செய்தார்.

क्षणे रुष्टः क्षणे तुष्टो रुष्टतुष्टः क्षणे क्षणे ।
अव्यवस्थितचित्तस्य प्रसादोऽपि भयङ्करः ॥

ஒரு கவி கூறும் வண்ணம் "ஒரு 'கனத்தில் சந்தோஷத்தையும், மறு கனத்தில் கோபத்தையும் அடைகிற அதாவது கோபமும் சந்தோஷமும் க்ஷணபங்குரமாயிருக்கும் மனிதனுக்கு, சந்தோஷமிருக்கும் பொழுதுங்கூட பயப்படவேண்டியதே"

கிறிஸ்துவ ஈசுவரனுக்கு இது ஏற்றதாகும்.

## யோபுடைய சரித்திரம்.

58. பின்னொரு நாளிலே தேவபுத்திரர் கர்த்தருடைய சந்நிதியில் வந்து நின்றபோது சாத்தானும் அவர்கள் நடுவிலே கர்த்தருடைய சந்நிதியில் வந்து நின்றான். கர்த்தர் சாத்தானைப்பார்த்து; நீ எங்கேயிருந்து வருகிறாய் என்றார். சாத்தான் கர்த்தருக்குப் பிரதியுத்தரமாக: பூமியெங்கும் உலாவி, அதில் சுற்றித் திரிந்து வருகிறேன் என்றான். அப்பொழுது கர்த்தர் சாத்தானைநோக்கி: நீ என் தாசனாகிய யோபின்மேல் கவனம் வைத்தாயோ? உத்தமனும் சன்மார்க்கனும், தேவனுக்குப் பயந்து, பொல்லாப்புக்கு விலகுகிறவனுமான மனுஷனாகிய அவனைப் போல் பூமியில் ஒருவனுமில்லை.; முகாந்தரமில்லாமல் அவனை நிர்மூலமாக்கும்படி நீ என்னை ஏவினபோதிலும் அவன் இன்னும் தன் உத்தமத்திலே உறுதியாய் நிற்கிறான் என்றார். சாத்தான் கர்த்தருக்குப் பிரதியுத்தரமாக தோலுக்குப் பதிலாகத் தோலையும் தன் ஜீவனுக்குப் பதிலாகத் தனக்கு உண்டான எல்லாவற்றையும் மனுஷன் கொடுத்துவிடுவான்—ஆனாலும் நீர் உம்முடைய கையை நீட்டி அவன் எலும்பையும் அவன் மாம்சத்தையும் தொடுவீரானால், அப்பொழுது அவன் உமது முகத்துக்கு எதிரே உம்மைத் தூஷிக்கானோ பாரும் என்றான். அப்பொழுது கர்த்தர் சாத்தானைநோக்கி: இதோ அவன் உன் கையிலிருக்கிறான். ஆகிலும் அவன்பிராணனை மாத்திரம் தப்பவிடு என்றார். அப்பொழுது சாத்தான் கர்த்தருடைய சந்நிதியைவிட்டுப் புறப்பட்டு யோபின் உள்ளங்கால் தொடங்கி அவன் உச்சந்தலை மட்டும் கொடிய பருக்களால் அவனை வாதித்தான். (2. 1-7.)

கிறிஸ்துவ ஈசுவரனுடைய பராக்கிரமம் எவ்வளவு வலியது! பாருங்கள்! சாத்தான் அவருக்கு எதிரிலேயே அவருடைய பக்தரைத் துன்புறுத்துகிறான். சாத்தானைத் தண்டிக்கவுமில்லை; தன் பக்தனைக் காப்பாற்றவுமில்லை; அவருடைய தூதர்களில் ஒருவரேனும் அவனை எதிர்க்க முடியவில்லை. சாத்தான் ஒருவனே அவர்களை உள்ளங்கலங்க பயமுறுத்திவிட்டான். மேலும் கிறிஸ்துவ ஈசுவரன் சர்வஞ்ஞரில்லைபோலிருக்கிறது. சர்வஞ்ஞராயிருந்தால் சாத்தான்மூலமாய் யோபைப் பரிசோதனை செய்வதேன்?

## பிரசங்கி.

59. என் மனம் மிகுந்த ஞானத்தையும் அறிவையும் கண்டறிந்தது. ஞானத்தை அறிகிறதற்கும் பைத்தியத்தையும் மதியீனத்தையும் அறிகிறதிற்கும், நான் என் மனதைப் பிரயோகம் பண்ணினேன்; இதுவும் மனதுக்குச் சஞ்சலமாயிருக்கிறதென்று கண்டேன். அதிக ஞானத்திலே அதிக சலிப்புண்டு; அறிவு பெருத்தவன் நோவு பெருத்தவன். (1. 16-18.)

கவனிக்கவேண்டியது! ஞானம், அறிவு இவ்விரண்டும் சமானார்த்தபதம். இதை வேறுபட்ட இரண்டாக நினைக்கிறார்கள். ஞான விருத்தியினால் சோகமும் துக்கமும் விருத்தியாகிறதென்று அறிவில்லாதவர்களைத் தவிர வேறு யார் சொல்லக்கூடும். பைபிள் ஈசுவரனால் செய்யப்பட்டதென்பது ஒரு புறமிருக்கட்டும். கற்றறிந்தவன்கூட இவ்விதம் எழுதமாட்டான்.

பழைய ஏற்பாட்டைப் பற்றி சுருக்கமாக எழுதினோம். மத்தேயு எழுதின சுவிசேஷம் முதலானவைகளையுடையவும், கிறிஸ்துவர்களால் பெரும் பிரமாணமாகக் கருதப்படுவதும், பைபில் எனப்படுவதுமான புதிய ஏற்பாட்டைப் பற்றி கொஞ்சம் எழுதுவோம்.

## மத்தேயு எழுதின சுவிசேஷம்.

60. இயேசு கிறிஸ்துவினுடைய ஜெநநத்தின் விவரமாவது. அவருடைய தாயாராகிய மரியாள் யோசேப்புக்கு நியமிக்கப்பட்டிருக்கையில் அவர்கள் கூடி வருமுன்னே அவள் பரிசுத்த ஆவியினாலே கர்ப்பவதியானாள் என்று காணப்பட்டது. கர்த்தருடைய தூதன் சொப்பனத்தில் அவனுக்குக் காணப்பட்டு; தாவீதின் குமாரனாகிய யோசப்பே, உன் மனைவியாகிய மரியாளைச்சேர்த்துக்கொள்ள ஐயப்படாதே; அவளிடத்தில் உற்பத்தியாயிருக்கிறது பரிசுத்த ஆவியினால் உண்டானது. (1. 18-20.)

பிரத்தியக்ஷாதி பிரமாணங்களுக்கும், சிருஷ்டி நியாயத்திற்கும் எதிரிடையான வார்த்தைகளில் நம்புவது அறிஞர்களுக்கு ஏற்றதாகாது. காட்டுமிராண்டிகளாலேயே இது நம்பமுடியும். கற்றுணர்ந்தவர்களால் முடியாது. பரமேச்வரனுடைய நியமங்களைத் தலைகீழாகச் செய்யமுடியுமா? அவ்விதமானால் அவருடைய நிபந்தனைகளை யாரும் கைப்பிடித்து நடக்கமாட்டார்கள். அவரே கீழ்ப்படியாமலிருக்கமுடியாது. ஏனெனில் அவர் சர்வஞ்ஞர், பிழைபடாதவர். கிறிஸ்து பிறப்பைக் கூறும் இக்கதை உண்மையென்றால் கலியாணமாகாமல் கர்ப்பந்தரிக்கிறப் பெண்ணும் பரிசுத்த ஆவியினால் கர்ப்பவதியானேன் என்று சொல்லிக்கொள்ளலாம். பரமேச்வரனுடைய தூதன் கனவில் கண்டு "தன்னிடத்தில் உற்பத்தியாயிருப்பது, பரிசுத்த ஆவியினால் உண்டானது" எனச் சொல்லிற்றென்று தெரிவித்துக் கொள்ளலாம். புராணங்களில் குந்தி சூரியனால் கர்ப்பவதியானாள் என்பதைப் போல் அசம்பாவிதமானது. 'மூளையைவிட திரவியம்' அதிகமுள்ளவர்களே இப்பிரமையிலகப்பட்டு பொய் நம்பிக்கைகளுக்கு ஆளாவார்கள். ஏதாவதொரு புருஷனுடன் சம்யோகஞ் செய்ததினால் மேரி கர்ப்பவதியாயிருத்தல் வேண்டும். அவள் அல்லது, வேறு ஒருத்தி ஈசுவரனால் கர்ப்பவதியானதாகக் கூறியிருக்கவேண்டும்.

61. அப்பொழுது இயேசு பிசாசினல் சோதிக்கப் படுவதற்கு ஆவியான வராலே வனந்திரத்திற்குக் கொண்டுபோகப் பட்டார். அவர் இரவும் பகலும் நாற்பதுநாள் உபவாசமிருந்த பின்பு அவருக்குப் பசியுண்டாயிற்று. அப்பொழுது சோதனைக்காரன் அவரிடத்தில் வந்து நீர் தேவனுடைய குமாரனேயானல், இந்தக்கல்லுகள் அப்பங்களாகும்படி சொல்லும் என்ருன். (4. 1-3.)

திட்டமாக இதிலிருந்து என்ன வெளியாகிறதென்ருல் கிறிஸ்துவ ஈசுவரன் சர்வஞ்ஞரல்ல. ஏனெனில் சர்வஞ்ஞராயிருந்தால் சாத்தானைக்கொண்டு இயேசுவைப் பரிசோதனை செய்வானேன்? தன்னுடைய சர்வசக்தியினல் தானகவே எல்லாவற்றையும் அறிந்திருப்பார். நாற்பது நாளும் நாற்பது இரவும் அன்ன ஆகாரமில்லாது வைத்திருந்தால் கிறிஸ்துவனெருவன் பிழைத்திருத்தல் கூடுமா? இயேசுவும் தேவபுத்திரன் அல்ல; அவருக்கு அதிசய சக்தியும் ஒன்றும் கிடையாது; என்று இதிலிருந்து வெளியாகிறது. இல்லையென்ருல் ஏன் கற்களை அப்பங்களாக மாற்றியிருக்கமாட்டார்? பசியின் கொடுமையினல் அவரே வருந்திருப்பானேன். உண்மை யாதெனில் பரமேச்வரன் கற்களையுண்டுபண்ணினர். அதை எவருலும் அப்பங்களாக மாற்ற முடியாது. ஈசுவரனே முதல் செய்த நியாயத்திற்கு விரோதமாய்ப் போகமுடியாது. ஏனெனில் அவர் சர்வஞ்ஞர். அவருடைய காரியங்களெல்லாம் பிழைப்படாதது.

62. என் பின்னே வாருங்கள், உங்களை மனுஷரைப் பிடிக்கிறவர்களாக்குவேன் என்ருர். உடனே அவர்கள் வலைகளை விட்டு, அவருக்குப் பின் சென்ருர்கள். (4. 19-20.)

இப்பாபத்தின் காரணத்தினலேயே அதாவது பத்து ஆஞ்ஞைகளில் ஐந்தாவதான "தேசத்திலே உன் நாட்கள் நீடித்திருப்பதற்கு உன் தகப்பனையும் தாயையும் கனம் பண்ணுவாயாக" இவ்வாக்ஞையை, மீறி நடந்ததினலேயே அவர் அதிகநாள் வாழவில்லை போலும். ஏனெனில் தன் தாயையும் தகப்பனையும் அவர் பணியவில்லை. பிறரையும் பணியவிடவில்லை. பிறரை ஏய்ப்பதற்காகவே இயேசு தன் மதத்தை உண்டுபண்ணினர் போலிருக்கிறது. செம்படவனைப்போல் மற்றவர்களைத் தன் வலையில் அகப்படச் செய்து தன் எண்ணத்தை முடித்துக்கொள்ளப் பார்த்தார்போலும். தங்களுடைய மதத்திற்கு ஆள் சேர்த்துக் கொள்வதில் கிறிஸ்துவ பாதிரிமார்கள் தங்கள் தலைவரைப் பின்பற்றி நடக்கிறதில் ஏதேனும அதிசயமுண்டோ? அநேகம் பெரிய மீன்களைப் பிடிக்கிறவனுக்கு நல்ல பெயரும், பொருளும் வருவது போல் கிறிஸ்துவ வலையில் அதிகம் ஜனங்களைப் பிடிக்கிற பாதிரிக்கு நல்ல புகழும், பதவியும் கிடைக்கிறது. வேதம், சாஸ்திரம் இவைகளைப் படிக்காமலும் படித்தும் கேட்டிராத பேதைகளை அவர்களுடைய வலையில் இழுத்துக் கொண்டு தாய் தகப்பன் குடும்பம் முதலானவைகளிலிருந்தும் பிரிக்கிருர்கள். ஆகையால் கற்றுணர்ந்த ஆரியர்கள், இப்பிரமஜால வலையிலிருந்து தப்பி ஒன்றுமறியாத ஏனையோர்களையும் அப்படியே அதிலிருந்து காப்பாற்ற பாடுபடவேண்டும்.

63. பின்பு இயேசு கலிலேயா எங்கும் சுற்றி நடந்து அவர்களுடைய ஜெப ஆலயங்களில் உபதேசித்து ராஜ்யத்தின் சுவிசேஷத்தைப் பிரசங்கித்து,

ஜனங்களுக்கு உண்டாயிருந்த சகல வியாதிகளையும் சகல நோய்களையும் நீக்கிச் சொஸ்தமாக்கினார். அவருடைய கீர்த்தி சீரியா எங்கும் பிரசித்தமாயிற்று. அப்பொழுது பலவித வியாதிகளையும் வேதனைகளையும் அடைந்திருந்த சகல பிணியாளிகளையும், பிசாசு பிடித்தவர்களையும், சந்திர ரோகிகளையும், திமிர்வாதக்காரரையும் அவரிடத்தில் கொண்டுவந்தார்கள். அவர்களைச் சொஸ்தமாக்கினார். (4. 23, 24.)

மந்திர சக்தி, மந்திரோச்சாரணம், ஆசீர்வாதம், சாம்பல் அளித்தல் முதலானவைகளினால் பேய் பிசாசுகளை ஓட்டி நோய்களைத் தீர்த்துவிடுவதாகச் சொல்லும் தற்போதைய போப்பீலைகள் உண்மையாகுமானால், இயேசுவைப் பற்றி பைபிளில் எழுதப்பட்டிருப்பதையெல்லாம் நம்புவோம். ஒன்றுமறியாத கபடமற்ற பேதை மனிதர்களைக் குருட்டு நம்பிக்கைகளில் பிடிக்க இவைகளெல்லாம் ஏற்ற வழியாகும். இயேசுவினுடைய வார்த்தைகளைக் கிறிஸ்துவர்கள் நம்பும்பொழுது, நம்முடைய போப்புக்கள் தேவியைப்பற்றி சொல்வதில் ஏன் அவர்கள் நம்புகிறதில்லை, ஏனெனில் இரண்டும் சமமாகவே இருக்கிறது.

64. ஆவியில் எளிமையுள்ளவர்கள் பாக்கியவான்கள். பரலோக ராஜ்யம் அவர்களுடையது. வானமும் பூமியும் ஒழிந்துபோனாலும், நியாயப் பிரமாணத்திலுள்ளதெல்லாம் நிறைவேறு மளவும், அதில் ஒரு சிறு எழுத்தாகிலும், ஒரு எழுத்தின் உறுப்பாகிலும் ஒழிந்து போகாது என்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன். ஆகையால், இந்தக் கற்பனைகள் எல்லாவற்றிலும் சிறிதான தொன்றையாகிலும் மீறி, அவ்விதமாய் மனுஷருக்குப் போதிக்கிறவன் பரலோக ராஜ்யத்தில் எல்லாரிலும் சிறியவன் எனப்படுவான். (5. 3, 18, 19.)

சுவர்க்கம் ஒன்றாகவே யிருந்தால் ராஜாவும் ஒருவனே அங்கிருக்க வேண்டும். "ஆவியில் எளிமையுள்ள" எல்லோரும் சுவர்க்கத்தையடைந்தால், அவ்விடத்தில் இராஜ்யாதிகாரம் எவனுக்கு ஏற்படும்? இவ்விஷயமாகப் பெருங் கூக்குரலும் அமளியும் உண்டாகி, சமாதானமில்லாமல் போய்விட்டாலும் விடுமே. "ஆவியில் எளிமையுள்ளவர்கள்" என்பதற்கு ஏழையாயிருக்கிற எல்லோரும் என்றாலும் உண்மையாகாது. "எண்ணத்திலிருந்து மீறினவர்கள்", என்றாலும் சரியாகாது. ஏனெனில் "ஆவியில் எளிமையுள்ளவர்களென்பதும்" எண்ணத்திலிருந்து மீறினவர்களென்பதும் ஒன்றானதல்ல. "ஆவியில் எளிமையுள்ள"வன் ஒருபொழுதும் மனமுவந்தவனாயிருக்கமுடியாது. 'நியாயப் பிரமாணம்" வானமும் பூமியும் இருக்குமளவே இருக்கும் என்பது மனிதனால் செய்யப்பட்ட சட்டங்களுக்கே ஏற்றதாகும். ஏனெனில் அது அழியக்கூடியது. சர்வஞ்ஞமான ஈச்வரனால் செய்யப்பட்ட நித்திய சட்டங்களைப் பற்றி இது உண்மையாகாது. "இந்தக் கற்பனைகள் எல்லாவற்றிலும் ஒன்றையாகிலும் மீறி அவ்விதமாய் மனிதருக்குப் போதிக்கிறவன் பரலோகராஜ்யத்தில் சிறியவன் எனப் படுவான்" என்று ஜனங்களைக் கலங்கச் செய்து பயமுறுத்துவதற்காகவே சொல்லப்பட்டிருக்கிறது.

65. எங்களுக்கு வேண்டிய ஆகாரத்தை இன்று எங்களுக்குத் தாரும்; பூமியிலே உங்களுக்குப் பொக்கிஷங்களைச் சேர்த்து வைக்கவேண்டாம். (6. 11, 19.)

ஜனங்கள் வறுமையினின்றும் கஷ்டப்பட்டுக்கொண்டு வெறுங்காட்டாளர்களாய் இயேசு நாதர் காலத்திலிருந்ததாகவும் அன்றன்றைக்கு வேண்டிய ஆகாரத்திற்குக்கூட ஈசுவரனை வேண்டிக்கொண்டும் மற்றவர்களையும் வேண்டிக்கொள்ளச் சொல்லும் ஏழ்மைத்தனத்தில் எல்லோரையும் போல் கிறிஸ்துவும் இருந்ததாகவும் இதிலிருந்து தெரியும். பைபிலின் கோட்பாட்டிற்கு விரோதமாயிருக்க, கிறிஸ்துவர்கள் ஏன் புதையல்களைக் குவிக்கிருர்கள்? இயேசுவினுடைய கட்டளைகளுக்கு விரோதமாகப் போகாமல் சகல ஐசுவரியத்தையும் தானம் செய்துவிட்டு ஏழைகளாகவேண்டும்?

66. என்னை நோக்கி; கர்த்தாவே, கர்த்தாவே, என்று சொல்லுகிறவன் பரலோக ராஜ்யத்தில் பிரவேசிப்பதில்லை. (7. 21.)

பெரிய பிஷப்புக்களும், பாதிரிகளும், கிறிஸ்துவர்களும் இயேசுவினுடைய இவ்வார்த்தையை நம்பினல், இயேசு கிறிஸ்துவை 'கர்த்தாவே' என்று ஒருபொழுதும் அழைக்கக் கூடாது. அப்படிச் செய்ய மறுப்பார்களேயானல், அவர்கள் பாபியாவார்கள்.

67. அன்னளில் அநேகர் என்னை நோக்கி; கர்த்தாவே, கர்த்தாவே என்பார்கள்; அப்பொழுது நான் ஒருக்காலும் உங்களை அறியவில்லை; அக்கிரமச் செய்கைக்காரரே என்னைவிட்டு அகன்றுபோங்கள் என்று அவர்களுக்குச்சொல்வேன். (7. 22, 23.)

கிறிஸ்து எவ்விதம் காட்டு மிராண்டிகளை ஏமாற்றி, தீர்ப்பு தினத்தில் சுவர்க்கத்தில் நீதிபதியாயிருப்பது போல் பாவனைக் காட்டினர் என்று கவனியுங்கள். இது ஒன்றுமறியாத கபடமற்ற பாமரர்களுக்கு ஆசைக் காட்டவேயாகும்.

68. அப்பொழுது குஷ்டரோகி ஒருவன் வந்து அவரைப் பணிந்து; ஆண்டவரே! உமக்குச் சித்தமானல், என்னைச் சுத்தமாக்க உம்மால் ஆகும் என்ருன். இயேசு தமது கையை நீட்டி அவனைத்தொட்டு; எனக்குச் சித்தமுண்டு, சுத்தமாகுமென்ருர். உடனே குஷ்டரோகம் நீங்கி அவன் சுத்தமானன். (8. 2, 3.)

இவையெல்லாம் அறிவில்லாதவர்களை அகப்பட்டுக் கொள்ளச் செய்வதற்கேயாகும். ஞானத்திற்கும் சிருஷ்டிக் கிரமத்திற்கும் மாருன இவ்வார்த்தைகளைச் சத்தியமாகக் கிறிஸ்துவர்கள் நம்பும்பொழுது, புராணங்களிலுள்ள சுக்கிராசாரியர், தன்வந்தரி, கச்யப முதலானவர்களை ஏன் நம்புகிறதில்லை? உதாரணமாகப் புராணங்களில் இறந்துகிடந்த தைத்தியர்களுடைய சேனைகளில், பலபிழைத்தெழுந்தன எனவிருக்கிறது. பிரகஸ்பதியுடைய பிள்ளை கச் என்பவனைத், துண்டுதுண்டாக வெட்டப்பட்டு மீன்களால் விழுங்கப்பட்டிருந்தும், சுக்கிராச்சாரியர் அவரை உயிர் பிழைக்க செய்தார். பிறகு அதே சுக்கிராசாரியர் கச்சைக் கொலை செய்து இறையாக அளித்துவிட்டார். பிறகு வயிற்றிலேயே உயிர் பிழைக்கசெய்து வெளியில் கொண்டுவந்தார். சுக்கிராசாரியரே இறந்துவிட, கச் அவரைத் திரும்பவும் உயிர்பிழைக்கச் செய்தார். தக்ஷகனல் சாம்பலாக்கப்பட்ட பிறகு மரத்தையும், மனிதனையும் காச்

யப முனி, உயிருள்ளதாகச் செய்தார். தன்வந்திரி லக்ஷக்கணக்கானவர்களுக்கு உயிர் அளித்தார். கோடிக் கணக்கான குஷ்ட்ட ரோகிகளைச் சொஸ்தமாக்கினார்; லக்ஷக்கணக்கான குருடர் செவிடர்களுக்குப் பார்வையையும் கேட்கும் சக்தியையும் தந்தார். இக்கதைகளெல்லாம் பொய்யெனப்படும்பொழுது இயேசுவினுடைய வெறுங்கதை ஏன் பொய்யாகலாகாது? ஒரு இனத்தார் கூறுவனவற்றைப் பொய்யென்றும் ஆனால் தான் கூறுவனவெல்லாம், மனித அறிவிற்குப் பெரும் பொய்யெனப்பட்டபோதிலும், மெய்யென்றும் சொல்லுபவன் பிடிவாதக்காரன் அல்லவா? எனவே கிறிஸ்துவர்கள் செய்வது பிடிவாதமேயாகும். பிடிவாதம் செய்தல் குழந்தைகளின் செயலாகும்.

69. பிசாசு பிடித்திருந்த இரண்டு பேர் பிரேதக்கல்லறைகளிலிருந்து அவருக்கு எதிராக வந்தார்கள். அவர்கள் அவரை நோக்கி இயேசுவே தேவகுமாரனே! எங்களுக்கும் உமக்கும் என்ன? காலம் வருமுன்னே எங்களை வேதனைப்படுத்த இங்கே வந்தீரோ என்று கூப்பிட்டார்கள். அவர்களுக்குக் கொஞ்ச தூரத்தில் அநேகம் பன்றிகள் கூட்டமாக மேய்ந்துகொண்டிருந்தன. அப்பொழுது பிசாசுகள்; நீர் எங்களை துரத்துவீரானால் நாங்கள் அந்தப் பன்றிக் கூட்டத்தில் போகும்படி உத்தரவு கொடும் என்று அவரை வேண்டிக் கொண்டன. அதற்கு அவர் போங்கள் என்றார். அவைகள் புறப்பட்டு, பன்றிக் கூட்டத்தில் போயின; அப்பொழுது பன்றிக் கூட்டமெல்லாம் உயர்ந்த மேட்டிலிருந்து கடலிலே பாய்ந்து, ஜலத்தில் மாண்டுபோயின. (**8.** 28, 33.)

இவ்வார்த்தைகளெல்லாம் பொய்யானவையேயென்று கொஞ்ச யோசனை செய்தால் புலப்படும். சவக்குழியிலிருந்து இறந்தவர்கள் ஒரு பொழுதும் வரவும் முடியாது. ஒருவரிடமும் சென்று சம்பாஷணை செய்யவும் முடியாது. ஒன்றுமறியாதக் காட்டுமனிதர்களே இவ்விஷயங்களை நம்புவார்கள். அப்பன்றிக் கூட்டத்தினுடைய நாசத்திற்குக் காரணம் இயேசுவானபடியினால், அக்கூட்டத்தின் சொந்தக் காரனுக்கு நஷ்டத்தைச் செய்த பாபத்திற்கு ஆளாகிறார். பாபங்களை மன்னித்து பரிசுத்தம் செய்வதாகக் கிறிஸ்துவர்கள் இயேசுவை நம்பும்பொழுது, அப்பிசாசுகளை ஏன் அவர் பரிசுத்தமாக்கவில்லை. சொந்தக்காரனுடைய நஷ்டத்திற்கு ஏன் அவர் ஈடு கொடுக்கவில்லை? ஐரோப்பியரைப் போன்ற கற்றுணர்ந்த கிறிஸ்துவர்கள், இந்தக்கட்டுகளை நம்புகிறார்களா? நம்பினால் மூடபக்தியில் முழுகினவர்களாவார்கள்.

70. அங்கே படுக்கையிலே படுத்திருந்த ஒரு திமிர்வாதக்காரனை அவரிடத்தில் கொண்டுவந்தார்கள். இயேசு அவர்களுடைய விசுவாசத்தைக் கண்டு திமிர்வாதக்காரனை நோக்கி மகனே, திடன்கொள். உன் பாவங்கள் உனக்கு மன்னிக்கப் பட்டது என்றார். நீதிமான்களையல்ல பாவிகளையே மனந்திரும்புகிறதிற்கு அழைக்க வந்தேன் என்றார். (**9.** 2, 13.)

முன் சொல்லப்பட்டவைகளைப்போல் இதுவும் அசம்பவமானதே. பாபங்கள் மன்னிக்கப்படுமென்பது பேதைகளுக்கு ஆசைகாட்டி இழுக்க மயலூட்டும் இரையேயாகும். கள்ளு, கஞ்சா, சாராயம் இவைகள், குடிக்கிறவர்களையே மயக்கி மற்றவர்களைப் பாதிக்காமலிருப்பது போலவே ஒருவன் செய்த பாபம் மற்றொருவனைக் கஷ்டப்படுத்தாது. செய்கிறவனே அநுபவிப்பான்.

இது ஈச்சுவர நியாயமாகும். ஒருவன் செய்த பாப புண்யங்களுக்கு வேருெருவன் ஆளாளுலும், குற்றவாளியினுடைய குற்றத்தை நீதிபதி, தானே ஏற்றுக்கொண்டாலும் ஈசுவரன் அநியாயம் செய்கிறவராவார். தர்மம் ஒன்றே சுபத்தை உண்டுபண்ணும்; இயேசுவினல் முடியாது. அல்லது தீர்க்கதரிசியினல் முடியாது அல்லது வேறு எதினுலும் முடியாது. தர்மாத்மாக்களுக்கு இயேசு முதலானவர்கள் தேவையில்லை. பாபிகளுக்கும் தேவையில்லை. ஏனெனில் எவனுடையும் பாபத்தை மன்னித்தில் முடியாது.

71. அப்பொழுது அவர் தம்முடைய பன்னிரண்டு சீஷர்களையும் தம்மிடத்தில் வரவழைத்து அசுத்த ஆவிகளைத் துரத்தவும், சகல வியாதிகளையும் சகல ரோய்களையும் நீக்கவும், அவர்களுக்கு அதிகாரம் கொடுத்தார். பேசுகிறவர்கள் நீங்கள் அல்ல, உங்கள் பிதாவின் ஆவியானவரே உங்களிலிருந்து பேசுகிறவர். பூமியின்மேல் சமாதானத்தை அனுப்பவந்தேன் என்று எண்ணுதிருங்கள்; சமாதானத்தையல்ல, பட்டயத்தையே அனுப்ப வந்தேன். எப்படியெனில், மகனுக்கும் தகப்பனுக்கும், மகளுக்கும் தாய்க்கும், மருமகளுக்கும் மாமிக்கும், பிரிவினை யுண்டாக்க வந்தேன். ஒரு மனுஷனுக்குச் சத்துருக்கள் அவன் வீட்டாரே. (**10**. 1, 20, 34-36.)

இச்சீடர்களிலொருவன் 30 ரூபாய்க்குக் கிறிஸ்துவைக் காட்டிக்கொடுத்து துரோகஞ் செய்தான். மற்றவர்கள் ஓட்டமெடுத்தார்கள். பிசாசு பிடிக்கிறது, பிசாசை ஓட்டுகிறது, மருந்து, பத்தியம் இவைகளில்லாது வியாதியைச் சொஸ்தப் படுத்துகிறது, முதலானவைகளெல்லாம் அறிவிற்கும் சிருஷ்டிக்கும் விரோதமானது. ஆகையால் அசம்பவமே. இவைகளில் நம்பிக்கை வைப்பது அறிவில்லாதவர்களுடைய வேலை. ஈசுவர ஆவியே பேசுவது, ஜீவனல்ல என்ருல், ஜீவனுடைய வேலையென்ன? மனிதனுடைய பாப புண்யத்தின் சுக துக்கத்தை அனுபவிக்கிறவர் ஈசுவரனேயாகவேண்டும். இது வீண் பொய்யேயாகும். கிறிஸ்து ஒருவருக்கொருவர் பிரிவினையையும் சண்டையையும் உண்டாக்கவே வந்தார். அதில் அவருக்கு ஜயமும் கிடைத்தது. அதே சச்சரவு இன்றும் மனிதர்களுக்குள் இருந்துவருகிறது. மனிதர்களுக்கு எப்பொழுதும் துக்கத்தைக் கொடுக்கும் பிரிவினையையுண்டாக்குவது எவ்வளவு தீய காரியம். ஆனல் கிறிஸ்துவர்கள் இதைக் குருமந்திரமாக ஏற்றுக்கொண்டிருக்கிருர்கள் போலிருக்கிறது. கிறிஸ்துவே ஒருவருக்கொருவரைப் பிரிக்கவந்தபொழுது அவரைப் பின்பற்றுகிறவர்கள் ஏன் அம்மாதிரி நடக்கக் கூடாது. வீட்டிற்குள்ளேயே சத்துருத்தனம் செய்து வைப்பது இயேசுவினுடைய வேலை. சிறந்தவர்களுடையதாகாது.

72. இயேசு உங்களிடத்தில் எத்தனை அப்பங்கள் உண்டென்று கேட்டார். அவர்கள் ஏழு அப்பங்களும் சில சிறுமீன்களும் உண்டு என்ருர்கள். அப்பொழுது அவர் ஜனங்களைத் தரையில் பந்தியிருக்கக்கட்டளையிட்டு அந்த ஏழு அப்பங்களையும் அந்த மீன்களையும் எடுத்துஸ்தோத்திரம் பண்ணி பிட்டுத் தம்முடைய சீஷர்களிடத்தில் கொடுத்தார்; சீஷர்கள் ஜனங்களுக்குப் பரிமாறினுர்கள். எல்லாரும் சாப்பிட்டுத் திருப்தியடைந்தார்கள்; மீதியான துணிக்கைகளை ஏழு கூடை நிறைய எடுத்தார்கள். ஸ்திரீகளும், பிள்ளைகளும் தவிர, சாப்பிட்ட புருஷர் நாலாயிரம் பேராயிருந்தார்கள். (**15**. 34-39.)

தற்போதைய செப்படி வித்தைக்காரன் ஜாலவித்தைக்காரன் இவர்களு டைய மாய வேலைகளைவிட இது எவ்விதத்திலாவது சிறந்ததா? (ஜனங்களுக் குப் பரிமாற) அப்பங்களும் மீன்களும் எங்கிருந்து கிடைத்தது? இயேசுவினி டத்தில் அவ்வளவு, மந்திர சக்தி இருக்கும்பொழுது தனக்குப் பசி யுண்டாயி ருந்த காலத்தில் அத்தி மரத்தின் பழத்திற்காக ஏன் அவர் அவ்வளவு பாடு பட்டிருக்கவேண்டும்? கற்கள், மண், ஜலம் இவைகளை ஏன் அப்பங்களாகவும் பானகமாகவும் மாற்றியிருக்கக் கூடாது? இதெல்லாம் சிறு குழந்தை விளை யாட்டைப் போலவிருக்கிறது. (இவ்வித) சூதுகளால் வைராகிகளும் பிச்சைக் காரர்களும் அநேகம் பெயர்கள், ஒன்றுமறியாத பேதைகளை ஏமாற்றி பணத் தைப் பறித்து விடுகிறார்கள்.

73. அப்பொழுது அவனவன் கிரியைக்குத் தக்கதாக அவனவனுக்குப் பலனளிப்பார். (**16**.27.)

கிரியைக்குத்தக்க பலனளிக்கும்பொழுது பாபம் மன்னிக்கப்படுமென்று கிறிஸ்துவர்கள் உபதேசம் செய்வது வீணேயாம். பின் சொன்னது மெய் யானால் முன் சொன்னது பொய்யாயிருத்தல் வேண்டும். மன்னிக்க யோக்கிய முள்ளவர்களை மன்னித்து யோக்கியமில்லாதவர்களை மன்னிக்கிறதில்லை யென்று கிறிஸ்துவர்கள் சமாதானங்கூறினால் சரியாகாது. ஏனெனில் கர்மத் திற்கு ஏற்ற பலாபலன்களைச் சரியாக அளிப்பதினாலேயே நியாயமும், தயை யும், ஏற்றதாகும்.

74. விசுவாசமில்லாத மாறுபாடுள்ள சந்ததியே, எதுவரைக்கும் நான் உங் களோடு இருப்பேன்? எதுவரைக்கும் உங்களிடத்தில் பொறுமையாயிருப் பேன்? அவனை என்னிடத்தில் கொண்டுவாருங்கள் என்றார். கடுகு விதைய ளவு விசுவாசம் உங்களுக்கு இருந்தால் நீங்கள் இந்தமலையைப் பார்த்து, இவ் விடம் விட்டு அப்புறம் போ என்று சொல்ல அது அப்புறம் போம்; உங்களால் கூடாத காரியம் ஒன்றுமிராது, என்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகி றேன். (**17**. 17-20.)

"வாருங்கள்-எங்களுடைய மதத்தைப் பின் பற்றுங்கள். பாபங்களைப் போக்கிக் கொள்ளுங்கள். முக்தியை யடையுங்கள்" என்று கிறிஸ்துவர்கள் உபந்நியாசஞ் செய்துகொண்டே போகிறார்கள். இதெல்லாம் முழுப் பொய்யே. இயேசுவிற்குப் பாபங்களை மன்னிக்கவும் தமதுமதத்தைச் சேராத வர்களுக்கு நம்பிக்கையுண்டாக்கி பரிசுத்தமாகச் செய்யவும் சக்தியிருந்திருந் தால் ஏன அவர் தன் சிடர்களைப் பாபங்களிலிருந்து மன்னித்து அவர்களைப் பரிசுத்தமானவர்களாகச் செய்திருக்கக் கூடாது? தன் கூடவே வந்துகொண் டிருந்தவர்களைப் பரிசுத்தமாகவும் நம்பிக்கையுள்ளவர்களாகவும் பாபமில்லாத வர்களாகவும் செய்ய முடியவில்லை. அவர் எங்கிருக்கிறார் என்று இப்பொழுது நமக்குத் தெரியாது. எனவே நமக்குத் தெரியாது ஒளித்துக்கொண்டிருக்கும் இயேசு நாதர் எங்ஙனம் நம்மைப் பரிசுத்தமாக்கப் போகிறார்? இயேசுவுடைய சிஷர்களுக்குக் கடுகு விதையளவுகூட விசுவாசம் இல்லாமலிருந்தது. இவர்கள் தான் பைபில் புஸ்தகத்தைச் செய்தவர்கள்: இது எவ்விதமாகப் பிரமாணமா

கும்? விச்வாசமில்லாதவர்கள், பரிசுத்தமில்லாதவர்கள், தர்மமில்லாதவர்கள் இவர்களாலெழுதப்பட்ட நூல்களை க்ஷேமத்தை விரும்புகிற மனிதர்கள், நம்பக் கூடாது. இயேசுவினுடைய இவ்வார்த்தை உண்மையாயிருக்கும் பக்ஷத்தில், கடுகுவிதையளவு கூட விசுவாசம் கிறிஸ்துவர்களுக்கு இல்லையென்று ஏற்படு கிறது. எங்களுக்கு முழு விச்வாசமோ அல்லது துளி விச்வாசமோ இருக் கென்று சொல்லும் கிறிஸ்துவர்களிடத்தில், ஓரிடத்திலிருந்து மற்ரெரு விட த்திற்கு மலையைப் போகச்செய்யும் என்று சொல்லவேண்டும். அவ்விதம் மலை யைப் போகச் செய்வதில் ஜெயித்தாலுங்கூட, முழு விச்வாசமுள்ளவனுகச் சொல்லமுடியாது. கடுகு விதையளவு விசுவாசம் உள்ளவனென்றே சொல்ல வேண்டும். ஜெயிக்காமல் போனுல் ஒரு துளி விசுவாசம் அல்லது தர் மங்கூட இல்லாதவனுக ஆகிருன். 'இதெல்லாம் கட்டுரை, 'மலை' என்ருல். ஆர்வம் முதலான மனேகுணங்களையே குறிக்குமென்ருலும் சரியாகாது. ஏனெனில் இறந்தவர்களை உயிர் பிழைக்கச் செய்தல், குருடர்களுக்குப் பார் வை அளித்தல், குஷ்டரோகத்தைத் தீர்த்து வைத்தல், பிசாசடித்தல் முதலானவைகளெல்லாம் கட்டுரையாகாது. இறந்தவர்களையும் சோம்பலான வர்களையும் பிழைக்கச்செய்தார்,சோம்புதனத்திலிருந்துதிருப்பினுர், குருடனை ச்சரியாகச் செய்தார் என்ருல் மனக்கண் குருடானவர்களின் இருளை, ஒளி மயமாக்கினுரென்றும், வியபசாரியை வியபசாரித்தனத்திலிருந்தும், மூட நம்பிக்கைக்காரனை மூட நம்பிக்கையிலிருந்தும் இயேசு மீற்ருர் என்றும் அர்த் தங்கொள்ளலாம். இவ்விதம் பொருள் கொள்ளுவதும் சரியாகாது. ஏனெ னில் இவ்விதமிருந்தால் தன் சொந்த சீஷர்களை ஏன் திருத்தியிருக்கக் கூடாது? அசம்பவ வார்த்தைகளைச் சொல்லுவதினுல் இயேசு தன்னுடைய அஞ்ஞான த்தை வெளிப்படுத்துகிருர். இயேசுவினிடத்தில் கொஞ்சமேனும் வித்தை இருந்திருந்தால், கல்வி, அறிவு, உலகஞானம் அற்ற காட்டிலிருந்து வந்த மனிதனைப் போல் அவர், பொருளற்ற வார்த்தைகளைக் கூறியிருக்கமாட்டார். "மரமில்லாத ஊரில் ஆமணக்கெண்ணெய் செடியே எல்லாவற்றையும் விட பெரிய மரமாயும் மேலானதாயும் கருதப்படும்" என்பது போல் அறிவில் லாத பெருங்காட்டு மிருண்டிகளுடைய தேசத்தில் இயேசு பெரியவராயிருக்க லாம்; ஆனுல் அறிவு நிரம்பிய இன்னுளில் அவர் பெரியவராயிருத்தல் முடி யாது.

75. நீங்கள் மனந்திரும்பிப் பிள்ளைகளைப் போல் ஆகாவிட்டால் பரலோக ராஜ்யத்தில் பிரவேசிக்கமாட்டீர்களென்று, மெய்யாகவே உங்களுக்குச் சொ ல்லுகிறேன். (18. 3.)

மனந்திரும்பி ஒருவன் மாறுவதினுல் சுவர்க்கத்தையும் மாருதிருப்பதி னுல் நரகத்தையும் அடைந்தால், ஒருவனுடைய பாப புண்யத்தை மற்ரெரு வன் ஏற்றுக்கொள்ள முடியாதென்று, தெரிகிறது. "நீங்கள் பிள்ளைகளை ......." என்று சொல்லுவதெல்லாம் அறிவிற்கும் சிருஷ்டித்தன்மைக்கும் விரோதமா யிருக்கிறது. ஜனங்கள் சிறு குழந்தையைப் போல் நான் சொல்லுவதை ஏற்று க்கொள்ளட்டும் என்று அவருடைய மனதிலிருந்தது போலும். அதாவது

கேள்வி கேட்க்காமல் கண்மூடித்தனமாய் ஒத்துக்கொள்ளவேண்டும் என்பதே யாகும். குழந்தையைப் போல் குருட்டு நம்பிக்கையுள்ள கிறிஸ்துவர்கள் பலரிருக்கின்றனர். இல்லையென்றால் சாஸ்திரத்திற்கும் புத்திக்கும் விரோதமாயிருக்கிற இவ்வார்த்தைகளில் நம்புவானேன்? இயேசுவே வித்தையில்லாமலும் பாலபுத்தியுடனும் கூடினவராக இல்லாமலிருந்தால் ஏன் பிறருக்குப் பாலபுத்தியுடனிருங்கள் என்று உபதேசம் செய்கிறார்? ஏனெனில் தானிருப்பது போலவே மற்றவர்களையும் ஆக விரும்புவது சகஜமே?

76. ஐசுவரியவான் பரலோக ராஜ்யத்தில் பிரவேசிப்பது அரிதென்று, மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன். மேலும் ஐசுவரியவான் தேவனுடைய ராஜ்யத்தில் பிரவேசிப்பதைப் பார்க்கிலும் ஒட்டகமானது ஊசியின் காதிலே நுழைவது எளிதாயிருக்கும் என்று உங்களுக்குச் சொல்லுகிறேன் என்றார். (**19**. 23, 24.)

இயேசு ஏழையாயிருந்தார் என்று இதிலிருந்து புலப்படும். ஐசுவரியவான்கள் இவரை மரியாதை செய்யவில்லைபோலும்; அதினாலேயே இதைச் சொல்லியிருப்பார். ஐசுவரியவான்களிலும் ஏழைகளிலும் நல்லோர்கள் தீயோர்களிருக்கிறபடியினால் இது உண்மையாகாது. மனிதன் நல்லகாரியத்தைச்செய்தால் நல்லபலனையும் கெடுதலைச்செய்தால் கெட்டபலனையும் முறையே அடைகிறான். ஈசுவரனுடைய ராஜ்யம் ஒரே விடத்திலிருப்பதாகவும், எங்குமில்லாததாகவும் இயேசு நினைத்ததாகத் தெரிகிறது. அவ்விதமாயின் அவர் ஈசுவரனாகமாட்டார். யார் ஈசுவரனோ, அவருடைய ராஜ்யம் எங்கும் பரவியுள்ளது. மேலும் அதில் "பிரவேசிப்பது" அல்லது "பிரவேசிக்காமலிருப்பது" என்று சொல்லுவது அறிவில்லாதவர்களுடைய வார்த்தையேயாகும். தனவான்களான கிறிஸ்துவர்கள் எல்லோரும் நரகத்தையே அடைவார்களா? தரித்திரர்கள் எல்லோரும் சுவர்க்கத்திற்கே செல்வார்களா? (நல்லது செய்ய) தனவந்தர்களுக்குச் சாதனங்களிருப்பதுபோல் ஏழைகளுக் கில்லையென்று இயேசு கிறிஸ்துவிற்குக் கொஞ்சயோசனையில் தெரிந்திருக்கும். தனவான்கள் விவேகத்துடன் தர்மமார்க்கத்தில் தங்கள் திரவியத்தைச் செலவிட்டால் உத்தம பதவியை யடைவார்கள். தரித்திரன் இழிவான பதவியிலே கிடப்பான்.

77. அதற்கு இயேசு: மறு ஜென்ம காலத்திலே மனுஷ குமாரன் தம்முடைய மகிமையுள்ள சிங்காசனத்தின் மேல் வீற்றிருக்கும் போது, என்னைப் பின்பற்றி நீங்களும் இஸ்ரவேலின் பன்னிரண்டு கோத்திரங்களையும் நியாயந்தீர்க்கிறவர்களாகப் பன்னிரண்டு சிங்காசனங்களின் மேல் வீற்றிருப்பீர்களென்று, மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன். என் நாமத்தி நிமித்தம் வீட்டையாவது, சகோதரரையாவது, சகோதரிகளையாவது, தகப்பனையாவது, தாயையாவது, மனைவியையாவது, பிள்ளைகளையாவது, நிலங்களையாவது விட்டவன் எவனோ, அவன் நூறத்தனையாய் அடைந்து நித்திய ஜீவனையும் சுதந்தரித்துக்கொள்ளுவான்; ஆகிலும் முந்தினோர் அநேகர் பிந்தினோராயும், பிந்தினோர் அநேகர் முந்தினோராயும் இருப்பார்கள் என்றார். (**19**.. 28, 29.)

விஷயம் வெளியாகிவிட்டது; பாருங்கள். அவர் இறந்தபிறகும்கூட அவருடைய வலையிலிருந்து யாரும் தப்பித்துக்கொள்ளக் கூடாதென்ற எண்ணத்

றுடனேயே தன் சிஷர்களுக்கு இதைச் சொன்னர். அற்ப ரூபாய் முப்பதிற்காக தன் கர்த்தாவைக் காண்பித்துக்கொடுத்து அவரைச் சிலுவையில் அறைவதற்கும் காரணமாயிருந்த படுகள்ளனை அந்த சீடன்கூட அவருடன் சிங்காசனத்தில் வீற்றிருப்பான். அவர்கள் (12சிஷர்கள்) இஸ்ரவேலின் பன்னிரண்டு கோத்திரங்களையும், நியாயந்தீர்க்கிறவர்களாவார்களென்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆனல் இஸ்ரவேல் மக்களின் பாபங்களெல்லாம் மன்னிக்கப்படுமாதலால், இஸ்ரவேலைத் தவிர மற்ற கோத்திரங்களின் நியாயந்தீர்க்கிறவர்களாகவே இருப்பார்கள்போலிருக்கிறது. இக்காரணத்திலேயே தங்களுடைய சுயஜாதிச் சனங்களிடத்தில் கிறிஸ்துவர்கள் அவ்வளவு அன்புடனிருக்கிருர்கள். மேலும் வெள்ளைமனிதன், கருப்புமனிதன் ஒருவனைக் கொலை செய்துவிட்டால், நீதிபதியும் ஜூரிகளும் வெள்ளைமனிதர்களானபடியினல் குற்றவாளியைத் தப்புசெய்யவில்லை என்று சொல்லி சில சமயங்களில் விட்டுவிடுவதை அடிக்கடி பார்க்கப்படுகிறது. இப்படியே இயேசுவுடைய சுவர்க்கத்திலும் நியாயங்கிடைக்கலாம். ஒருவன் உலகாரம்பத்தில் இறந்துபோயிருக்கலாம். மற்றொருவன் தீர்ப்புதினத்தின் முந்தின சாயந்திரம் இறந்துபோயிருக்கலாம். ஆகையினல் 'விசாரணை நாள்' எனப்படும் ஒரே தினத்தில் எல்லோரையும் விசாரிப்பதானது விரும்பத்தகாததே. ஒருவன் ஆரம்பத்திலிருந்து சிருஷ்டி முடிவுவரையில் தன்னுடைய விசாரணைக்குக் காத்துக்கொண்டிருக்க வேண்டிவரும்! மற்றொருவனே உடனே விசாரிக்கப்படுவான். அவன் கார்த்திருக்கவேண்டிய அவசியமே கிடையாது. இது என்ன அநியாயம்? மேலும் நரகத்தை யடைகிறவன் அனந்தகாலமும் அதிலேயே கஷ்டப்படவேண்டும். சுவர்க்கத்தைப் பெறுகிறவன் எப்பொழுதும் அதையே அநுபவிக்கவேண்டும். இதுவும் பெரும் அநியாயமேயாம். ஏனெனில் முடிவையுடைய கர்மங்களினுடையவும் சாதனங்களினுடையவும் பலன்கள் முடிவுள்ளதாகவே இருக்கவேண்டும். சரியான பாப புண்யத்தையுடைய இரண்டு ஜீவன்கள் ஒருபொழுதுங் கிடையாது. ஆகவே இன்பதுன்பங்கள் ஏற்றகுறைவாயிருக்க, அந்தந்த ஜீவனுக் கேற்றவைகளை அனுபவிக்கத்தக்க அநேக நரகங்களும் சுவர்க்கங்களும் இருக்கவேண்டும். கிறிஸ்துவர்களுடைய புஸ்தகத்தில் இதைப்பற்றி ஒன்றுமில்லாதபடியினல் அது தெய்வவாக்கு ஆகாது. இயேசுவும் தேவனுடைய குமாரனுயிருக்கமாட்டார். நூறு பெற்ரோர்களையுடைய ஒருவனிருக்கிருனென்பது பொருளற்ற வெறும்பேச்சாகும். ஒருவனுக்கு ஒரே தாய் தகப்பன்தானிருக்கமுடியும். இருந்தும் "என் நாமத்தினிமித்தம்........................ நூறத்தனையாய் அடைந்து" என்று பைபிள் கூறுகிறது. மகம்மதியர்களுடைய நூலில் விசுவாசமுள்ளவன் சுவர்க்கத்தில் மாதர்களை யடைவான் என்றிருப்பது பைபிலிலிருந்தே எடுத்ததுபோல் காணப்படுகிறது.

78. காலையிலே அவர் நகரத்திற்குத் திரும்பி வருகையில், அவருக்குப் பசியுண்டாயிற்று. அப்பொழுது வழியருகே ஒரு அத்திமரத்தைக் கண்டு, அதினிடத்திற் போய் அதிலே இலைகளையன்றி வேறென்றையும் காணமல்; இனி ஒருக்காலும் உன்னிடத்தில் கனி உண்டாகாதிருக்கக்கடவது என்ருர்; உடனே அத்திமரம் பட்டுப்போயிற்று. (21. 18. 19.)

பாதிரிகள் இயேசு எப்பொழுதும் சாந்தத்தைப் பூஷணமாகக் கொண்டவர் அன்புள்ளவர் கோபம் முதலான தீயக்குணங்களிலில்லாதவர் என்று சொல்லுகிறார்கள். இயேசு கோபமுள்ளவரென்றும், பருவகாலங்களினுடைய அறிவு இல்லாதவரென்றும், காட்டுமனிதனைப்போல் நடந்துகொண்டார் என்றும் இதிலிருந்துதெரியவரும். மரம், சடப்பொருளாச்சுதே? சாபமிடும்படியான தப்பு அதென்னசெய்தது. மரம் பட்டுபோன தென்பது உண்மையானால் அது சாபத்தினாலிராது; ஏதாவது மருந்தினால் அது பட்டுப்போயிருந்தால் நமக்கு விந்தையாகாது.

79. அந்நாட்களில் உபத்திரவம் முடிந்தவுடனே, சூரியன் அந்தக்காரப்படும், சந்திரன் ஒளியைக் கொடாதிருக்கும், நட்சத்திரங்கள் வானத்திலிருந்து விழும், வானத்தின் சத்துவங்கள் அசைக்கப்படும். (**24**. 29.)

சபாஷ் இயேசுவே!! நட்சத்திரங்கள் வானத்திலிருந்து விழுமென்று எச் சாத்திரத்தினாலறிந்தீர்? இயேசு கொஞ்சம் படித்திருந்தால் நட்சத்திரங்களெல்லாம் நம்முடைய பூமியைப்போல் கோளங்களென்றும் அது விழக்கூடியதல்லவென்றும் திட்டமாக அறிந்திருப்பார். அவர் தச்சனுடைய பிள்ளையென்றும் பலவ்ருடங்கள் மரங்களை வெட்டி, அறுத்து இழைத்து, புனைத்துத் தச்சு வேலை செய்திருக்கவேண்டும் என்றும் இதனால் தெரியவரும். நானும் இந்தக் காட்டுஊரில் தீர்க்கதரிசி ஆவேன் என்று அவருக்குத் தோன்றினவுடனே, உபதேசம் செய்யவாரம்பித்தார். சில நல்ல வார்த்தைகளையும் பல தீயவார்த்தைகளையும் சொன்னார். அவ்வூர் மனிதர் காட்டாளர்களானபடியினால் அவர் சொல்லுவதை நம்பினார்கள்; இப்பொழுதிருக்கும் வண்ணம் ஐரோப்பா சிறந்த யோஜனையுடன் அப்பொழுது இருந்திருந்தால் இவர் தீர்க்கதரிசியாயிருக்கமாட்டார். இப்பொழுது கொஞ்சம் சிறந்த யோசனையுடன் கூடினவர்களாயிருந்தபொழுதினும் ஐரோப்பியர்கள் சுயலாபத்தினாலோ அல்லது பிடிவாதத்தினாலோ இந்த வெறுமையான மதத்தைத் தள்ளி, எப்பொழுதும் உண்மையான வேதமார்க்கத்தைத் தழுவாமலிருப்பது அவர்களுடைய குறைகளில் ஒன்றேயாம்.

80. வானமும் பூமியும் ஒழிந்துபோம்; என் வார்த்தைகளோ ஒழிந்துபோவதில்லை. அந்த நாளையும் அந்த நாழிகையையும் என் பிதா ஒருவர் தவிர மற்றொருவனும் அறியான். (**24**. 35.)

இதுவும் இயேசுவுடை அறிவின் குறைவையும் மூடத்தனத்தையும் வெளிப்படுத்துகிறது. (ஆகாசம்) வானம் எங்கே ஒழிந்துபோகும்? ஆகாசம் அதிசூட்சமமானபடியினால் கண்ணால் காணமுடியாதது. ஒழிந்துபோவதை எவரால் பார்க்கமுடியும்; தானாகவே தன்னைப் புகழ்ந்து கொள்ளுவது நல்லமனிதர்களுடைய வேலையாகாது.

81. அப்பொழுது, இடதுபக்கத்தில் நிற்பவர்களைப் பார்த்து அவர் சபிக்கப்பட்டவர்களே, என்னைவிட்டு, பிசாசுக்காகவும் அவன் தூதர்களுக்காகவும் ஆயத்தம் பண்ணப் பட்டிருக்கிற நித்திய அக்கினியிலே போங்கள். பசியாயிருந்தேன், நீங்கள் எனக்குப் போஜனங்கொடுக்கவில்லை; தாகமாயிருந்தனே, நீங்கள் என் தாகத்தைத் தீர்க்கவில்லை. (**25**. 41.)

தன் சீடர்களைச் சுவர்க்கத்திற்கும் மற்றவர்களை 'நித்திய அக்கினிக்கும்' அனுப்புவது எவ்வளவு பக்ஷபாதமான செயல். ஆகாசமில்லாமலிருக்க நித்திய அக்கினியும், நரகமும் எங்கு இருக்கும்? சாத்தானையும் அவனுடைய தூதர்களையும் ஈசுவரன் படைக்கவில்லையா? அப்படியிருக்க நரகத்திற்கு இவ்வளவு ஏற்பாடுகளைச் செய்வானேன்? சாத்தான் என்பவன் ஈசுவரனுக்குப் பயந்து நடுங்காமலிருக்க அவர் ஈசுவரன் எப்படி ஆவார். ஏனெனில் அவருடைய தூதனாகவேயிருந்தான். அவருக்கு விரோதமானான். அவனை முதலிலேயே பிடித்து ஏன் சிறைபடித்திருக்கக்கூடாது? இயேசுவிற்கே நாற்பது நாள் கஷ்டத்தை யுண்டு பண்ணினான். இப்படி யிருக்க அவருக்கு ஈசுவரத் தன்மை எங்கிருந்துவரும்? இயேசு, கர்த்தருடைய குமாரனா யிருந்தும் ஒன்றும் செய்யமுடியவில்லை. ஆகையினால் இயேசு ஈசுவரனுடைய குமாரனாக மாட்டார். பைபிலினுடைய ஈசுவரனும், ஈசுவரனாகமாட்டார்.

82. அப்பொழுது பன்னிருவரில் ஒருவனாகிய யூதாஸ்காரியோத்து என்பவன் பிரதான ஆசாரியரிடத்திற்குப் போய்—நான் அவரை உங்களுக்குக் காட்டிக் கொடுக்கிறேன். நீங்கள் எனக்கு என்ன கொடுக்கிறீர்கள் என்றான். அவர்கள் அவனுக்கு முப்பது வெள்ளிக்காசைக் கொடுக்க உடன்பட்டார்கள். (**26**. 14. 15.)

இதோ இயேசுவினுடைய ஈசுவரத்தன்மையும் மாயாசக்தியும் வெளியாகி விட்டது. தன்னுடன் எப்பொழுதும் கூடியிருந்த முக்கிய சிஷ்யனைப் பரிசுத்தமாகச் செய்ய முடியாதிருக்க, இறந்தபிறகு அவர் ஜனங்களைப் பரிசுத்தமாக எவ்விதம் செய்யமுடியும்?

83. அவர்கள் போஜனம் பண்ணுகையில், இயேசு அப்பத்தை எடுத்து ஆசீர்வதித்து அதைப் பிட்டு சீஷர்களுக்குக் கொடுத்து! நீங்கள்வாங்கிப் புசியுங்கள்; இது என்னுடைய சரீரமாயிருக்கிறது என்றார். பின்பு பாத்திரத்தையும் எடுத்து, ஸ்தோத்திரம் பண்ணி அவர்களுக்குக் கொடுத்து நீங்கள் எல்லாரும் இதிலே பானம் பண்ணுங்கள். இது புது உடன்படிக்கைக் குரிய என்னுடைய இரத்த மாயிருக்கிறது என்றார். (**26**. 26. 28.)

அறிவாளி ஒருவன் இக்காரியத்தைச் செய்வானா? ஒன்று மறியாத காட்டுமிராண்டியே செய்வான். கற்றுணர்ந்த எவனும் தன் சிஷ்யர்களுடைய ஆகாரத்தைத் தன் சரீரம் (மாமிசம்) என்றும், பானத்தைத் தன்னுடைய இரத்தமென்றும் சொல்ல மாட்டான். தற்போதைய கிறிஸ்துவர்கள் இதைக் கர்த்தருடைய போஜனமென்று அழைக்கிறார்கள். தங்களுடைய அப்பம் கிறிஸ்துவுடைய மாம்சம் என்றும், பானம், அவருடைய இரத்தமென்றும், நினைத்துக் கொண்டு சாப்பிட்டுக் குடிக்கிறார்கள். ஐயோ! தன் குருவுடைய மாம்சம் இரத்தமென்ற எண்ணத்தி லிருந்து தன்னுடைய ஆகாரத்தையும் பானத்தையும் கூடப் பிரிக்கமுடியாம லிருக்கிறவர்கள், பிறருடைய மாம்சத்தையும் இரத்தத்தையுமா விட்டுவிடுவார்கள்?

84. பேதுருவையும், செபெதேயுவின் குமாரர் இருவரையும் கூட்டிக் கொண்டு போய், துக்கமடையவும் வியாகுலப்படவும் தொடங்கினார். அப்பொ

ழுது அவர்; என் ஆத்மா மரணத்துக் கேதுவான துக்கங்கொண்டிருக்கிறது; நீங்கள் இங்கே தங்கி என்னோடே கூடவிழித்திருங்கள் என்று சொல்லி சற்று அப்புறம் போய், முகங்குப்புறவிழுந்து; என் பிதாவே இந்தப் பாத்திரம் என்னை விட்டு நீங்கக் கூடுமானால் நீங்கும்படி செய்யும்; ஆகிலும் என் சித்தத்தின்படியல்ல, உம்முடைய சித்தத்தின் படியே ஆகக்கடவது என்று ஜெபம் பண்ணினார். (**26**. 37. 39.)

கேவலம் வெறும் மனிதனாக வில்லாமல், ஈசுவரனுடைப் பிள்ளையாயும், திரிகாலதரிசியாயும், வித்வானும் மிருந்திருந்தால் இவ்வேலையை செய்திருக்க மாட்டார். இயேசு தேவகுமாரர்; வருங்கால மறிந்தவர்; பாபங்களை மன்னிக்கக் கூடியவர்; இப் பொய்யெல்லாம் இயேசுவினாலேயோ அல்லது அவருடைய சீடர்களினாலேயோ வெளிப் படுத்தப் பட்டிருக்கவேண்டும் என்று இவைகளின்று புலனாகின்றன. கள்ளங் கபடமற்ற கல்விப் பயிற்சி பெறாத சாதாரண மனிதரென்பது நிச்சயமாகிறது. அவர் அறிஞருமல்லர், யோகியுமல்லர், சித்தனுமல்லர்.

85. அவர் இப்படி பேசுகையில், பன்னிருவரில் ஒருவனாகிய யூதாஸ் வந்தான்; அவனோடே கூடப் பிரதான ஆசாரியரும் ஜனத்தின் மூப்பரும் அனுப்பின திரளான ஜனங்கள் பட்டயங்களையும் தடிகளையும் பிடித்துக் கொண்டு வந்தார்கள். அவரைக் காட்டிக் கொடுக்கிறவன்; நான் எவனை முத்தஞ்செய்வேனோ அவன்தான், அவனைப் பிடித்துக் கொள்ளுங்கள் என்று அவர்களுக்கு அடையாளம் சொல்லியிருந்தான். உடனே அவன் இயேசுவினிடத்தில் வந்து; ரபீவாழ்க என்று சொல்லி அவரை முத்தஞ் செய்தான்.........அப்பொழுது அவர்கள் கிட்டவந்து இயேசுவின்மேல் கைப்போட்டு அவரைப் பிடித்தார்கள். அப்பொழுது சீஷர்களெல்லாரும் அவரைவிட்டு ஓடிப்போனார்கள். கடைசியில் இரண்டு பொய்ச் சாட்சிகள் வந்து; தேவனுடைய ஆலயத்தை இடித்துப் போடவும் மூன்று நாளைக்குள்ளே அதைக் கட்டவும் என்னாலே ஆகும் என்று இவன் சொன்னான் என்றார்கள். அப்பொழுது பிரதான ஆசாரியன் எழுந்திருந்து, அவரை நோக்கி இவர்கள் உனக்கு விரோதமாய்ச் சாட்சி சொல்லுகிறதைக் குறித்து நீ ஒன்றும் சொல்லுகிறதில்லையா என்றான்.—இயேசுவோ பேசாமலிருந்தார். அப்பொழுது பிரதான ஆசாரியன் அவரை நோக்கி நீ தேவனுடைய குமாரனாகிய கிறிஸ்துதானா? அதை எங்களுக்குச் சொல்லும்படி ஜீவனுள்ள தேவன் பேரில் உன்னை ஆணையிட்டுக் கேட்கிறேன் என்றான். அதற்கு இயேசு நீர் சொன்னபடிதான்; அன்றியும் மனுஷகுமாரன் சர்வவல்லவருடைய வலது பாரிசத்தில் வீற்றிருப்பதையும் வானத்தின் மேகங்கள்மேல் வருவதையும் இது முதல் காண்பீர்களென்று உங்களுக்குச் சொல்லுகிறேன் என்றார். அப்பொழுது பிரதான ஆசாரியன் தன் வஸ்திரங்களைக் கிழித்துக் கொண்டு இவன் தேவதூஷணம் சொன்னான். இனிச் சாட்சிகள் நமக்கு வேண்டியதென்ன, இதோ இவன் தூஷணத்தை இப்பொழுது கேட்டீர்களே. உங்களுக்கு என்னமாய்த் தோன்றுகிறது என்று கேட்டான். அதற்கு அவர்கள் மரணத்திற்குப் பாத்திரனாயிருக்கிறான் என்றார்கள். அப்பொழுது அவருடைய முகத்தில் துப்பி அவரைக் குட்டினார்கள். இவர் அவரைக் கன்னத்தில் அறைந்து; கிறிஸ்துவே உம்மை அடித்தவன்யார்? அதை ஞானதிருஷ்டியினால் எங்களுக்குச் சொல்லும் என்றார்கள். அத்தருணத்தில் பேதரு வெளியே வந்து அரமனை முற்றத்தில் உட்கார்ந்திருந்தான். அப்பொழுது வேலைக்காரி ஒருத்தி

அவனிடத்தில் வந்து; நீயும் கலிலேயனுகிய இயேசுவின் கூட இருந்தாய் என்ருள். அதற்கு அவன் நீ சொல்லுகிறது எனக்குத் தெரியாது என்று எல்லாருக்கும் முன்பாக மறுதலித்தான். அவன் வாசல் மண்டபத்திற்குப் போன பொழுது வேருெருத்தி அவனைக் கண்டு இவனும் நசரேனுகிய இயேசுவோடே கூட இருந்தான் என்று ஆணையிட்டு, மறுபடியும் மறுதலித்தான். அப்பொழுது அவன் அந்தமனுஷனை அறியேன் என்று சொல்லி சபிக்கவும் சத்தியம் பண்ணவும் தொடங்கினுன். (**26**. 47-50. 56. 60-72. 74.)

பேராசையினுல் குருவைக் காட்டிக் கொடுத்து, விற்றுப் பொய்சொல்லி, பொய்ச்சாட்சி கூருமல் இருக்கச் செய்யவும் தனக்கு வேண்டி சீஷர்கள் பிராணனையும் துறக்க சித்தமா யிருப்பதற் கான நம்பிக்கையைத் தன் சீஷர்களிடம் உண்டுபண்ண வேண்டிய சக்தியும் பிரதாபமும் இல்லாத இயேசுவை என்னவென்று நினைக்கிறீர்கள்? அல்லது ஆச்சரிய சக்தியையும் கொண்டவரல்லர், * சொதோம் பட்டணத்து மனிதர்கள் எல்லோரும் ஈசுவரனுடைய இரண்டு தூதர்களைக் கொல்ல, அவர்கள் விருந்தினர்களா யிருந்த லோத்தினுடைய வீட்டை உடைக்க லானுர்களென்று ஆதியாகமத்தில் சொல்லப் பட்டிருக்கிறது. அவர்கள் (தூதர்கள்) அவர்களுடைய கண்பார்வையை இழக்கச் செய்தார்கள். இவ்வார்த்தையும் அசம்பவமா யிருந்த பொழுதிலும் தூதர்களிருவரிடமு மிருந்த சாமர்த்தியங்கூட இயேசுவிற்கு இல்லையே. இவ்விதமிருக்க இயேசுவுடைய அபாரசக்திகளைப் பற்றி கிறிஸ்துவர்கள் கூறுவதற்கு முடிவு முண்டோ?. இத்துர்த்திசையில் இறந்திருப்பதை விட அவர் ஆயுதங்கொண்டு தற்கொலைசெய்து கொண்டிருந்தாலும் அல்லது வேறு எவ்விதமாயிருந்தாலும் நலமாயிருந்திருக்கும். வித்தையில்லாம லிருக்க இவருக்குப் புத்தி எங்கிருந்துவரும்?

86. நான் இப்பொழுது என் பிதாவை வேண்டிக்கொண்டால் அவர் பன்னிரண்டு லேகியானுக்கு அதிகமான தூதரை என்னிடத்தில் அனுப்பமாட்டாரென்று நினைக்கிருயா? (**26**. 53.)

தன் தகப்பனுடைய மகிமையையும் தன்னுடையதையும் பற்றி வீம்பு பேசிக் கொள்கிருர். இருந்தும் ஒன்றும் செய்யமுடியவில்லை. பிரதம ஆசாரியன் எழுந்திருந்து அவரை நோக்கி இவர்கள் உனக்கு விரோதமாய்ச் சாட்சி சொல்லுகிறதைக்குறித்து நீர் ஒன்றும் சொல்லுகிறதில்லையா என்ருன். இயேசு அதற்குப் பேசாமலிருந்தார். அவர் அம்மாதிரி செய்தது முறையோ? உண்மையை உரைத்திருக்க வேண்டும். தன் பெருமையை இவரும் புகழ்ந்து கொண்டிருக்க கூடாது. பொய்க் குற்றத்தின் பேரில் அவரை மரணத்திற்கு ஆளாக்கினவர்கள் செய்ததும் சரியானதில்லை. இயேசுவினிடத்தில் அவர்கள் குற்றஞ் சுமத்திய தப்பும் கிடையாது. ஆனுல் அவர்களும் காட்டுமிருண்டிகள். நியாயத்தை பற்றி யாது அறிவார்கள். இயேசு ஈசுவர குமாரன் என்ற பாவனை பண்ணிக் கொள்ளாமலும் அவர்களும் (யூதர்களும்) அவ்வளவு கொடுமையாய் நடத்தாமலு மிருந்திருந்தால் இருகக்ஷிக்கும் நன்ரு யிருந்திருக்கும்.

* ஆதியாகமம் 19. 11.

ஆனால் இதை அறிந்து உணர்ந்து நடக்கவேண்டிய வளவு வித்தை, தார்மிகத் தன்மை, நீதி நெறி இவைகள் எங்கிருந்து வரும்?

87. இயேசு தேசாதிபதிக்கு முன்பாக நின்றார்! தேசாதிபதி அவரை நோக்கி; நீ யூதருடைய ராஜாவா என்று கேட்டான். அதற்கு இயேசு; நீர் சொல்லுகிறபடிதான் என்றார். பிரதான ஆசாரியரும் மூப்பரும் அவர்மேல் குற்றஞ் சாட்டுகையில், அவர் மாறுத்தரம் ஒன்றுஞ் சொல்லவில்லை. அப்பொழுது பிலாத்து அவரை நோக்கி; இவர்கள் உன்மேல் எத்தனையோ குற்றங்களைச் சாட்டுகிறார்களே. நீ அவைகளைக் கேட்கவில்லையா என்றான். அவரோ ஒரு வார்த்தையும் மாறுத்தரமாகச் சொல்லவில்லை; அதினால் தேசாதிபதி மிகவும் ஆச்சரியப்பட்டான். பிலாத்து அவர்களை நோக்கி அப்படியானால், கிறிஸ்து எனப்பட்ட இயேசுவை நான் என்ன செய்வேண்டுமென்று கேட்டான். அவனைச் சிலுவையில் அறைய வேண்டுமென்று எல்லாரும் சொன்னார்கள். அப்பொழுது அவன் பரபாசை அவர்களுக்கு விடுதலையாக்கி, இயேசுவையோ வாரினால் அடிப்பித்து, சிலுவையில் அறையும்படிக்கு ஒப்புக் கொடுத்தான். அப்பொழுது தேசாதிபதியின் போர்ச்சேவகர் இயேசுவை தேசாதிபதியின் அரமனையிலே கொண்டுபோய் போர்ச்சேவகரின் கூட்டம் முழுவதையும் அவரிடத்தில் கூடிவரச் செய்து அவர் வஸ்திரங்களைக் கழற்றி சிவப்பான மேல் அங்கியை அவருக்கு உடுத்தி முள்ளுகளால் ஒரு முடியைப் பின்னி அவர் சிரசின்மேல் வைத்து, அவர் வலதுகையில் ஒரு கோலைக் கொடுத்து, அவர் முன்பாக முழங்காற்படியிட்டு; யூதருடைய ராஜாவே வாழ்கஎன்று அவரைப் பரியாசம் பண்ணி அவர்மேல் துப்பி, அந்தக்கோலை எடுத்து, அவரைச் சிரசில் அடித்தார்கள். அவரைப் பரியாசம் பண்ணின பின்பு அவருக்கு உடுத்தின மேலங்கியைக் கழற்றி, அவருடைய வஸ்திரங்களை அவருக்கு உடுத்தி, அவரை சிலுவையில் அறையும்படி கொண்டுபோனார்கள். கபாலஸ்தலம் என்று அர்த்தங்கொள்ளும் கொல்கொதா என்னும் இடத்துக்கு அவர்கள் வந்தபோது கசப்புக்கலந்த காடியை அவருக்குக்குடிக்கக் கொடுத்தார்கள்; அவர் அதை ருசிபார்த்து குடிக்க மனதில்லாதிருந்தார். அவரைச்சிலுவையில் அறைந்தார்கள். அன்றியும் அவர் அடைந்தஆக்கினையின் முகாந்தரத்தைக் காண்பிக்கும் பொருட்டு இவன் யூதருடய ராஜாவாகிய இயேசு என்று எழுதி, அவர் சிரசுக்கு மேலாகவைத்தார்கள். அப்பொழுது அவருடைய வலதுபக்கத்தில் ஒருவனும் அவருடைய இடதுபக்கத்தில் ஒருவனுமாக இரண்டு கள்ளர் அவரோடேகூடச் சிலுவையில் அறையப் பட்டார்கள். அந்த வழியாய் நடந்து போகிறவர்கள் தங்கள் தலைகளைத் துலுக்கி தேவாலயத்தை இடித்து மூன்று நாளைக்குள்ளே கட்டுகிறவனே; உன்னை நீயே இரட்சித்துக்கொள். நீ தேவனுடைய குமாரனானால் சிலுவையிலிருந்து இறங்கிவா என்று அவரைத் தூஷித்தார்கள். அப்படியே பிரதான ஆசாரியரும் வேதபாரகரும் மூப்பரும் பரியாசம் பண்ணி மற்றவர்களை இரட்சித்தான்; தன்னைத்தான் இரட்சித்துக் கொள்ளத் திராணியில்லை; இவன் இஸ்ரவேலின் ராஜாவானால் சிலுவையிலிருந்து இறங்கி வரட்டும், அப்பொழுது இவனை விசுவாசிப்போம்—தன்னை தேவனுடைய குமாரன் என்று சொல்லி தேவன்மேல் நம்பிக்கையாயிருந்தானே. அவர் இவன்மேல் பிரியமாயிருந்தால் இப்பொழுது இவனை இரட்சிக்கட்டும் என்றார்கள்.—அவரோடேகூடச் சிலுவைகளில் அறையப்பட்ட கள்ளரும் அந்தப்படியே அவரை நிந்தித்தார்கள். ஆறுமணிநேரம் முதல் ஒன்பதாம் மணிநேரம் வரைக்கும் பூமியெங்கும் அந்தகாரம் உண்டாயிற்று. ஒன்பதாம் மணிநேரத்தில் இயேசு" "எலி! எலி! லாமா சபக்தானி" என்று மிகுந்த

சத்தமிட்டுக் கூப்பிட்டார். அதற்கு என் தேவனே! என் தேவனே! என் என்னை கைவிட்டீர் என்று அர்த்தமாம். அங்கே நின்றவர்களில் சிலர் அதைக் கேட்டபொழுது இவன் எலியாவைக் கூப்பிடுகிருன் என்ருர்கள். உடனே அவர்களில் ஒருவன் ஓடி கடற்காளானை எடுத்து காடியில் தோய்த்து, அதை ஒரு கோலில் மாட்டி அவருக்குக் குடிக்கக் கொடுத்தான். இயேசு மறுபடியும் மகா சத்தமாய்க் கூப்பிட்டு ஆவியை விட்டார். (**27.** 11-14, 22, 26-31, 33-35, 37-48, 50.)

எப்பொழுதும் இயேசுவை அத்துஷ்டர்கள் கொடுமையுடனேயே நடத்தினர்கள். ஆனல் இயேசுவிடத்திலும் தோஷமுண்டு. ஏனெனில் ஈசுவரனுக்குக் குமாரன் யாருங்கிடையாது. அவர் யாருடைய தகப்பனு மாகார். இவ்விதமிருந்தால் அவர் மாமனர், மச்சினன் முதலானவராயு மிருக்கவேண்டும். தேசாதிபதி நீ யூதர்களுடைய ராஜாவா என்று கேட்ட கேழ்விகளுக்கு இவருக்கு உண்மை என்று விளங்கினதை உரைத்திருக்க வேண்டும். இவரால் செய்யப்பட்ட அற்புதங்களெல்லாம் உண்மையானல் சிலுவையிலிருந்து கீழே இறங்கிவந்து எல்லோரையும் திருப்பியிருப்பார். அவர் ஈசுவரனுடைய குமாரனயிருந்தால் அவரே காப்பாற்றி யிருப்பார். திரிகாலமும் மறிந்தவரா யிருந்தால் கசப்புக் கலந்த காடியை ருசிபார்க்காமலே குடிக்க மறுத்திருப்பார். அதனுடைய குணங்கள் முன்னமேயே அவருக்குத் தெரிந்திருக்கவேண்டும். அவரிடம் பெருஞ் சக்தி எதாவ திருந்திருந்தால் ஆவியை விடுமுன்னே அவ்வளவு சத்த மிட்டிருக்க மாட்டார். மனிதன் எவ்வளவு தந்திரமுள்ளவன யிருந்தபொழுதிலும் கடைசியில் உண்மை வெளியாகிவிடு மென்பதை இது புகட்டுகிறது. அக்காலத்துக் காட்டு மிருண்டிகளில் இவர் கொஞ்சம் மேலானராவரென்றும் தெரிகிறது. அவரிடத்தில் அற்புத சக்தி ஒன்றும் கிடையாது. அவர் ஈசுவரனுடைய குமாரனு மில்லை; வித்வானு மில்லை. இருந்தால் ஏன் இப்படித் துக்கங்களை அனுபவிக்க வேண்டும்.

88. அப்பொழுது பூமி மிகவும் அதிரும்படி, கர்த்தருடைய தூதன் வானத்திலிருந்து இறங்கிவந்து வாசலிலிருந்த கல்லைப் புரட்டித்தள்ளி அதன் மேல் உட்கார்ந்தான். அவர் இங்கே இல்லை. தாம் சொன்னபடியே உயிர்த்தெழுந்தார்! கர்த்தரைவைத்த இடத்தை வந்துபாருங்கள். அவர்கள் அவருடைய சிஷர்களுக்கு அறிவிக்கப் போகிறபோது, இயேசுதாமே அவர்களுக்கு எதிர்ப்பட்டு வாழ்க என்ருர். அவர்கள் கிட்டவந்து அவர் பாதங்களைத்தழுவி அவரைப் பணிந்து கொண்டார்கள், அப்பொழுது இயேசு அவர்களை நோக்கி; பயப்படாதிருங்கள்; நீங்கள் போய் என் சகோதரர் கலிலேயாவுக்குப் போகும்படி அவர்களுக்குச் சொல்லுங்கள்; அங்கே அவர்கள் என்னைக் காண்பார்கள் என்ருர். பதினெரு சிஷர்களும் கலிலேயாவிலே இயேசு தங்களுக்குக் குறித்திருந்த மலைக்குப் போனர்கள். அங்கே அவர்கள் அவரைக்கண்டு பணிந்துகொண்டார்கள். சிலரோ சந்தேகப்பட்டார்கள். நான் உங்களுக்குக் கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள். இதோ உலகத்தின் முடிவுபரியந்தம் சகல நாட்களிலும் நான் உங்களுடனேகூட இருக்கிறேன் என்ருர். (**28.** 2, 6, 9, 10, 16-18, 20.)

சிருஷ்டிக் கிரமத்திற்கும் வித்தைக்கும் விருத்தமாயிருக்கிற இவ்வார்த்தைகள்கூட நம்புவதற்கு முடியாதது. ஈசுவரனிடம் தூதர்க ளிருப்பதாகவும்

அவர்களை இங்குமங்கும் அனுப்பினதாகவும், மேலேயிருந்து அனுப்பின தாகவும் நம்புவதால் கிறிஸ்துவர்கள் கடவுளைத் தாசில்தாராகவும்க் கலக்டராக வும் செய்யவில்லையா? அதே சரீரத்துடன் சுவர்க்கத்திற்குப போனரா? ஸ்திரீகள் பாதங்களைத்தழுவி அவரைப் பணிந்து கொண்டார்களெனச் சொல்ல ப்பட்டிருக்கிறது. அப்பொழுது அதே சரீரம் இருந்ததா? மூன்று நாளைக்கு அச்சரீரம் புதைக்கப் பட்டிருந்தபடியினால் அது கெட்டுப் போகவில்லையா என்று அறியவிரும்புகிறோம். வானத்திலும் பூமியிலும் சகல அதிகாரமும் எனக்குக் கொடுக்கப்பட்டிருக்கிற தென்று அவர் வாயினாலேயே சொல்லுவது வீண்பெருமை வார்த்தையேயாகும். சிஷ்யர்களைச் சந்தித்து, பேசினாரென்பது அசம்பவமேயாம். ஏனெனில் இதெல்லம் உண்மையானால் தற்காலத்தில் ஏன் யாரும் இறந்ததிலிருந்து உயிர் பெற்று எழுந்து அதே சரீரத்துடன் சுவர்க்கத் திற்குப் போகிறதில்லை.

இதுவரை மத்தேயு எழுதின சுவிஷேத்தைப் பற்றி எழுதினோம். இனி மாற்கு எழுதினதைக் கவனிப்போம்.

## மாற்கு எழுதின சுவிசேஷம்.

89. *இவன் தச்சன் அல்லவா?* (**6. 3.**)

ஜோசப் உண்மையாக தச்சனே. இயேசுவும் (அவருடைய பிள்ளை யான படியினால்) தச்சனே. கொஞ்ச வருடங்கள் அவ்வேலையிலேயே இருந்துவிட்டு பிறகு தீர்க்கதரிசியாக வேண்டுமென எண்ணங் கொண்டார். ஈசுவரகுமாரன் என்று வேஷங் காட்டிக்கொள்ள, (அவரைச் சுற்றியிருந்த) காட்டுச் சனங்க ளும் அப்படியே நம்பினார்கள். சனங்களைப் பிரித்து சண்டை சச்சரவுகளை உண்டு பண்ணினது அதிசயமில்லை.

## லூக்கா எழுதின சுவிசேஷம்.

90. *அதற்கு இயேசு; நீ என்னை நல்லவன் என்று சொல்வானேன் தேவன் ஒருவர் தவிர நல்லவன் ஒருவரு மில்லையே.* (**18. 9.**)

'தேவன்' ஒருவரைத் தவிர வேறுயாரும் நல்லவனில்லையென்று சொல்லு கையில் கிறிஸ்துவர்களுக்குப் பரிசுத்த ஆவி, பிதா, பிள்ளை என இம்மூன்றும் எங்கிருந்து வந்தன.

91. *அவன் (பைலாத்து) ஏரோது வினிடத்திற்கு அவரை அனுப்பினான். ஏரோது இயேசுவைக் குறித்து அனேகக் காரியங்களைக் கேழ்விப்பட்டிருந்ததி னாலும், அவரால் செய்யப்படும் அடையாளத்தைப் பார்க்கவேண்டுமென்று விரும்பி யிருந்ததினாலும் அவரைக் காணும்படி வெகுநாளாய் ஆசைகொண் டிருந்தான். அநேக காரியங்களைக் குறித்து அவரிடத்தில் வினவினான். அவர் மறுமொழியாக அவனுக்கு ஒன்றும் சொல்லவில்லை.* (**23. 7-9.**)

மத்தேயுவினால் எழுதப் பட்டதில் இவ்விஷயம் காணப்படவில்லை. ஆகை யினால் இச்சாட்சிகளெல்லாம் நம்பமுடியாதவர்கள். ஏனெனில் சாட்சிகளில் ஒற்றுமை வேண்டும். இயேசுவிற்குச் சாமர்த்திய மிருந்து அற்புதங்களைக் காட்டச் சக்தியிருந்திருந்தால் ஏரோது வினவினவுடன் மறுமொழியாக அற்

புதச் செயலைக்காட்டி யிருக்கவேண்டும். இயேசுவிற்கு வித்தையும், அற்புதச் செயலை செய்யும் குணமும் கிடையாதென்றும், இதிலிருந்து தெளிவாகிறது.

## யோவான் எழுதின சுவிசேஷம்.

92. *ஆதியிலே வார்த்தை இருந்தது; அந்தவார்த்தை தேவனிடத்தி லிருந்தது. அந்த வார்த்தை தேவனுயிருந்தது. அவர் ஆதியிலே தேவனோடி ருந்தார். சகலமும் அவர் மூலமாய் உண்டாயிற்று. உண்டான தொன்றும் அவ ராலே யல்லாமல் உண்டாகவில்லை. அவருக்குள் ஜீவன் இருந்தது. அந்த ஜீவன் மனுஷருக்கு ஒளியாயிருந்தது.* (1. 1-4.)

சொல்லுகிறவ னில்லாமல் ஆதியிலே வார்த்தை இருந்திருக்க முடியாது. ஆகையினுல் அந்தவார்த்தை ஈசுவரனிடத்தி லிருந்ததென்பது வீண்வார்த் தையே யாகும். வார்த்தை ஒருபொழுதும் ஈசுவர ஞகமுடியாது. தேவனுடன் ஆதியில் வார்த்தையும் இருந்தபடியினுல் முதலில் தேவனிருந்தாஞ அல்லது வார்த்தை யிருந்ததா என்று சொல்லமுடியாது. வார்த்தையைக் கொண்டு ஒரு பொழுதும் சிருஷ்டியை, அதற்கு வேண்டிய காரணமில்லாமல் செய்யமுடி யாது. வார்த்தை யில்லாமலே, பேசாமல் இருந்துகொண்டு படைத்தவர் சிருஷ்டியைச் செய்யக்கூடும். ஜீவன் எதிலிருந்தது என்னவாக விருந்தது? (அவருக்குள் ஜீவனிருந்தது)இவ்வார்த்தையினுல் ஜீவன் அநாதியாகும். அநாதி யானுல் மனிதருடைய நாசித்துவாரங்களில் கர்த்தாவான தேவன் மூச்சைப் புகவிட்டார் என்று ஆதியாகமத்தில் சொல்லியிருப்பது தப்பாகும். ஜீவன் மனிதனுக்கு மாத்திரமா ஒளியாகிறது? மிருகங்கள் முதலான பிராணி களுக் கில்லையா?

93. *போஜனம் முடிந்தபிறகு சீமோனின் குமாரனுகிய யூதாஸ்காரி யோத்து அவரைக் காட்டிக் கொடுக்கும்படி, பிசாசானவன் அவன் இருதயத் தைத் தூண்டினுன்.* (13. 2.)

இது உண்மையாகாது. ஏனெனில் பிசாசானவன் எல்லோரையும் தூண்டு கிருன் என்ருல் பிசாசைத் தூண்டுகிறவன் யாரென்று கிறிஸ்துவர்களை வினவ வேண்டும். பிசாசு தன்னைத் தானே தூண்டிக்கொள்ளுகிறதெனின் மனிதனும் தன்னைத்தானே தூண்டிக்கொள்ளக்கூடும். அப்படி யிருக்கப் பிசாசுக்கு என்ன வேலை? பிசாசைத் தூண்டுகிறவன் பரமேச்வரனே யானுல் கிறிஸ்துவ ஈசுவரன் பெரும் பிசாசுகும். தன் மூலமாகச் சகல மனிதர்களை ஏமாற்றின குற்றவாளி யாகவேண்டும். இக்காரியத்தைப் பரமேச்வரன் கூடச் செய்வாரா? உண்மை என்ன வென்ருல் இப்புத்தகத்தை (பைபிள்) எழுதி, இயேசுவை ஈசுவரகுமா ரன் என்று அழைத்தவர்கள் பிசாசு என்ருல் நமக்கு வியப்பு உண்டாகக்கூ டாது. இந்நூல் ஈசுவரவாக்கு மாகாது; அதிலிருக்கிற ஈசுவரனும் உண்மை ஈசுவரனுகாது; இயேசவும் ஈசுவரகுமாரனுகமாட்டார்.

94. *உங்களுடைய இருதயம் கலங்காதிருப்பதாக; தேவனிடத்தில் விசு வாசமா யிருங்கள்; என்னிடத்திலும் விசுவாசமா யிருங்கள். என் பிதாவின் வீட்டில் அநேக வாசஸ்தலங்கள் உண்டு. அப்படி யில்லாதிருந்தால் நான் உங்க ளுச் சொல்லியிருப்பேன்; ஒரு ஸ்தலத்தை உங்களுக்காக ஆயத்தம் பண்ணப்*

போகிறேன். நான் போய் உங்களுக்காக ஆயத்தம் பண்ணின பின்பு, நான் இருக்கிற இடத்திலே நீங்களும் இருக்கும்படி நான் மறுபடியும் வந்து உங்களை என்னிடத்தில் சேர்த்துக் கொள்வேன். நான் போகிற இடத்தை அறிந்திருக்கிறீர்கள் என்றார். நானேவழியும் சத்தியமும் ஜீவனு மாயிருக்கிறேன். என்னாலே யல்லாமல் ஒருவனும் பிதாவினிடத்திலே வரான். என்னை அறிந்தீர்களானால் என் பிதாவையும் அறிந்திருப்பீர்கள். (**14**. 1-4, 6, 7.)

இயேசுவினுடைய வார்த்தையைக் கவனியுங்கள். போப்பிலைகளைவிட இது குறைவானதா? இப்பிரமையை அவர் உண்டுபண்ணும விருந்தால் எவர் தான் அவருடைய வலையில் அகப்பட்டு கொண்டிருப்பார்கள்? தன் பிதாவினுடைய ஏகபோகப்பத்திரம் இயேசுவிற்கே உள்ளதா? அவருடைய மேற்பார்வையின் கீழிருந்தால், பராதீனமாய் அதினாலே ஈசுவரனை யிருக்கமுடியாது. என்னாலே யல்லாமல் ஒருவனும் பிதாவினிடத்திலே வரான் என்று சொல்லுவது எப்பொழுதும் உண்மையாகாது. ஏனெனில் இசுவரனுக்குப் பரிந்து பேசுவோர் யாரும்வேண்டியதில்லை. இயேசுவிற்கு முந்தியாரும் ஈசுவரனை அடையவில்லையா? தன் தகப்பனுடைய வாசஸ்தானங்கள், தன் சிஷர்களுக்கு ஸ்தலத்தை ஆயத்தம் பண்ணுவது, தானாகவே தான் வழியும், சத்தியமும், ஜீவனும் என்று சொல்லிக்கொள்ளுவது, இப்புகழ்ச்சிகளெல்லாம் வீண்பெருமையே தவிர வேறே ஒன்றுமில்லை. ஆகையினால் இதெல்லாம் உண்மையாகா.

95. மெய்யாகவே மெய்யாகவே நான் உங்களுக்குச் சொல்லுகிறேன். நான் என் பிதாவினிடத்திற்குப் போகிறபடியினால் என்னை விசுவாசிக்கிறவன் நான் செய்கிற கிரியைகளைத் தானும் செய்வான். இவைகளைப் பார்க்கிலும் பெரிய கிரியைகளையும் செய்வான், (**14**. 12.)

கிறிஸ்துவர்கள் இயேசுவை நம்பி விசுவாசம் வைத்திருந்தால் ஏன் அவர்கள் இறந்தவர்களைப் பிழைப்பு மூட்டுதல் முதலிய அற்புதங்களைச் செய்யக்கூடாது? இயேசுவினிடத்திலுள்ள விசுவாசத்துடன் கூட அற்புதங்கள் ஒன்றும் செய்ய முடியாதென்பது நிச்சயமானது. ஏனெனில் என்னை விசுவாசிக்கிறவன்.....................கிரியைகளையும் செய்வான்'' என்கிறார். ஒரு தனி கிறிஸ்துவன்கூட அற்புதம் ஒன்றும் செய்யமுடியாமலிருக்க இயேசுவுடைய அற்புதச் செயல்களில் நம்புகிறவன் சிந்தனைசக்தி இழந்தவனே யாவான்.

96. ஒன்றான மெய்த்தேவன். (**17**. 3.)

இரண்டற்ற ஒரே ஈசுவரனிருக்கக் கிறிஸ்துவர்கள் மூன்றுஎன்பது எப்பொழுதும் புரட்டேயாகும்.

(பிதா - குமாரன் - பரிசுத்த ஆவி.)

**திவ்ய வாசகனாகிய யோவானுக்கு வெளிப்படுத்தின விசேஷம்.**

யோவான் சொல்லும் அதிசயங்களைக் கேளுங்கள்.

97. தங்கள் சிரசுகளில் பொன்முடி சூட்டிக் கொண்டிருந்தது............ தேவனுடைய ஏழு ஆவிகளாகிய ஏழு அக்கினி தீபங்கள் சிங்காசனத்திற்கு முன்பாக எரிந்து கொண்டிருந்தன. அந்தச் சிங்காசனத்திற்கு முன்பாகப்

பளிங்குக்கொப்பான கண்ணாடிக் கடலிருந்தது.........அந்த சிங்காசனத்தை ச்சுற்றிலும் நான்கு ஜீவன்களிருந்தன. அவைகள் முன்புறத்திலும் கண்களால் நிறைந்திருந்தன. (4. 4-6.)

கிறிஸ்துவ சுவர்க்கம் நகரமொன்றுக்குச் சரியாயும் அவருடைய ஈசுவரனும் தீபத்தைப் போலவும் இல்லையா? பொன்முடி முதலிய ஆபரணங்கள் சூட்டிக் கொள்ளுவதும் முன் 'புறத்திலும் பின் புறத்திலும்' கண்களால் நிறைந்த ஜீவன்களிருப்பதும் அசம்பாவமான காரியமே. இவைகள் நாலுசிங்கங்களெனப்பட்டிருக்கிறது. எவனுல் இதை நம்பமுடியும்?

98. உள்ளும் புறம்பும் எழுதப்பட்டு ஏழுமுத்திரைகளால் முத்தரிக்கப் பட்டிருந்த ஒரு புஸ்தகத்தைச் சிங்காசனத்தில் வீற்றிருக்கிறவருடைய வலது கரத்திலே கண்டேன். புஸ்தகத்தைத் திறக்கவும் அதின் முத்திரைகளை உடைக்கவும் பாத்திரவான் யார்............? வானத்திலாவது, பூமியிலாவது, பூமியின் கீழாவது, ஒருவனும் அந்தப் புஸ்தகத்தைத் திறக்கவும் அதைப் பார்க்கவும் கூடாதிருந்தது. ஒருவனும் அந்தப் புஸ்தகத்தை திறந்து வாசிக்கவும் அதைப் பார்க்கவும் பாத்திரவானுகக் காணப்படாததினுல் நான் மிகவும் அழுதேன். (5. 1-4.)

என்ன கேர்த்தியான கிறிஸ்துவ சுவர்க்கம்!! சிங்காசனங்களும், ஜனத்திரளும், அநேகம் முத்திரைகளால் முத்திரிக்கப் பட்டிருந்தவும், வானத்திலாவது பூமியிலாவது அதைத்திறக்கக் கூடியவர்களாவது பார்க்கக்கூடியவர்களாவது இல்லாத நூலும் அங்கு இருக்கின்றன. அப் புஸ்தகத்தைத் திறந்து படிக்கவும் பார்க்கவும் யோக்யதையுள்ள ஒருவனையும் காணுதது பற்றி அழுத யோவானும் அங்கு இருக்கிறுர். "யாருக்குக் கலியாணமோ அவனுடைய புகழே" என்பது போல் இயேசுவைப் பெரியவராக்குவதற்கே இவையெல்லாம் கூறப்பட்டுள்ளன. இவையெல்லாம் கட்டுக்கதைகளைப் போல் இருக்கவில்லையா?

99. அப்பொழுது, இதோ, அடிக்கப்பட்ட வண்ணமாயிருக்கிற ஒரு ஆட்டுக்குட்டி சிங்காசனத்திற்கும், நான்கு ஜீவன் களுக்கும், மூப்பர்களுக்கும் மத்தியில் நிற்கக்கண்டேன்; அது ஏழு கொம்புகளையும் ஏழு கண்களையும் உடையதாயிருந்தது; அந்தக் கண்கள் பூமியெங்கும் அனுப்பப்படுகிற தேவனுடைய ஏழு ஆவிகளேயாம். (5. 6.)

திவ்யவாசகனுகிய யோவானுடைய கனவின் கற்பனுசக்தியைக் கவனியுங்கள். அச்சுவர்க்கத்தில் நான்கு ஜீவன்களும் கிறிஸ்துவும், கிறிஸ்துவர்களும் மாத்திரமேயிருக்கிறுர்கள். வேறு யாருமில்லை. பூமியிலிருக்கும் பொழுது இயேசுவிற்கு இரண்டு கண்கள் மாத்திரம் இருந்து கொம்பின் பெயர் கூட இல்லாமலிருந்து சுவர்க்கத்தில் ஏழு கண்களும் ஏழு கொம்புகளும் அவருக்கு உண்டானது விந்தையே. அவர்கள் ஈசுவரனுடைய ஏழு ஆவிகளாம். கிறிஸ்துவர்கள் இவ்வித வார்த்தைகளைச் சுருதியாகக் கருதுவதே மிகவும் வருந்தத்தக்கது. கொஞ்சம் யோசனை செய்திருக்க வேண்டும்.

100. அந்தப் புஸ்தகத்தை அவர் வாங்கினபோது, அந்த நான்கு ஜீவன்களும். இருபத்திநான்கு மூப்பர்களும் தங்கள் தங்கள் சுரமண்டலங்களையும்,

பரிசுத்தவான்களுடைய ஜெபங்களாகிய தூபவர்க்கத்தால் நிறைந்த பொற்கலசங்களையும் பிடித்துக்கொண்டு ஆட்டுக்குட்டி யானவருக்கு முன்பாக வணக்கமாய் விழுந்தார்கள். (5. 8.)

இயேசு சுவர்க்கத்திலில்லாம லிருந்தபொழுது இந்நான்கு ஜீவன்களும், இருப்பத்திநான்கு மூப்பர்களும் எவருக்குத் தூபதீபநைவேத்திய ஆரத்தியைச் செய்துக் கொண்டிருந்தார்களென்றே நாம் யோசிக்கிறோம். இவர்களுடைய சுவர்க்கம் மூர்த்தி பூஜைக்கு இருப்பிடமா யிருக்கப் பிராட்டஸடண்டு கிறிஸ்துவர்கள் மூர்த்தி பூஜையைக் கண்டனஞ் செய்கிறார்கள்.

101. ஆட்டுக்குட்டியானவர் முத்திரைகளில் ஒன்றை உடைக்கக் கண்டேன். அப்பொழுது நான்கு ஜீவன்களில் ஒன்று என்னை நோக்கி: நீ வந்து பார் என்று இடிமுழக்கம்போன்ற சத்தமாய்ச் சொல்லக் கேட்டேன்.—நான் பார்த்தபோது இதோ. ஒரு வெள்ளைக் குதிரையைக் கண்டேன்; அதின்மேல் ஏறியிருந்தவன் வில்லைப் பிடித்திருந்தான்; அவனுக்கு ஒரு கிரீடங் கொடுக்கப்பட்டது; அவன் ஜெயிக்கிறவனாகவும் ஜெயிப்பவனாகவும் புறப்பட்டான்.

அவர் இரண்டாம் முத்திரையை உடைத்தபோது, இரண்டாம் ஜீவனானது: நீ வந்துபார் என்று சொல்லக் கேட்டேன்.—அப்பொழுது சிவப்பான வேறொரு குதிரை புறப்பட்டது; அதின்மேல் ஏறியிருந்தவனுக்கு, பூமியிலுள்ளவர்கள் ஒருவரை யொருவர் கொலைசெய்யத் தக்கதாகச் சமாதானத்தைப் பூமியிலிருந்தெடுத்துப் போடும்படியான அதிகாரம் கொடுக்கப்பட்டது; ஒரு பெரிய பட்டயமும் அவனுக்குக் கொடுக்கப்பட்டது.

அவர் மூன்றும் முத்திரையை உடைத்தபோது.........ஒரு கறுப்புக் குதிரையைக் கண்டேன்; அவர் நாலாம் முத்திரையை உடைத்தபோது............ இதோ, மங்கின நிறமுள்ள ஒரு குதிரையைக் கண்டேன்; அதின்மேல் ஏறியிருந்தவனுக்கு மரணம் என்று பெயர். (6. 1-5, 7-8.)

புராணங்களின் கதைகளைவிட இது இன்னும் அசங்கதமானதாயில்லையா? புஸ்தகங்களின் முத்திரைகளுள் குதிரையும், குதிரை சவாரிக்காரர்களும் எவ்வித மிருக்கமுடியும்? யோவன் கனவினுடைய பேத்தல்களை உண்மையென கைக்கொள்ளுகிறவர்கள் அறிவில்லாமையின் உருவமே யாவார்கள்.

102. அவர்கள்: பரிசுத்தமும் சத்தியமுமுள்ள ஆண்டவரே, தேவரீர் பூமியின்மேல் குடியிருக்கிறவர்களிடத்தில் எங்கள் இரத்தத்தைக் குறித்து எதுவரைக்கும் நியாயத்தீர்ப்புச் செய்யாமலும் பழிவாங்காமலும் இருப்பீர் என்று மகா சத்தமிட்டுக் கூப்பிட்டார்கள்.—அப்பொழுது அவர்கள் ஒவ்வொருவருக்கும் வெள்ளை அங்கிகள் கொடுக்கப்பட்டது; அன்றியும், அவர்கள் தலைகளைப் போலக் கொலைச் செய்யப்படப் போகிறவர்களாகிய தங்கள் உடன் பணிவிடைக்காரரும் தங்கள் சகோதரருமானவர்களின் தொகை நிறைவாகுமளவும் இன்னுங் கொஞ்சகாலம் இளைப்பாறவேண்டும் என்று அவர்களுக்குச் சொல்லப்பட்டது. (6. 10, 11.)

ஊரில்லாமல் சுற்றிக்கொண்டிருக்கும் நியாயாதிபதிகளிடம் கிறிஸ்துவர்களை ஒப்புவிக்க, அவர்கள் நியாயத் தீர்ப்புச் செய்வதற்காக உரக்கவே சத்தமிடுவார்கள். ஆனால் வேதமார்க்கத்தைத் தழுவுகிறவர்கள் நியாயத் தீர்ப்பிற்

காகக் காத்திருக்கவேண்டாம். ஈசுவரனுடைய காரியாலயம் மூடப்பட்டு இப்பொழுது நியாயத்தீர்ப்பு செய்யப்படாமலாவிருக்கிறதென்று அவர்களை வினவ வேண்டும். நியாயாதிபதிகள் வேலையில்லாமலா உட்கார்ந்திருக்கிருர்கள்? கிறிஸ்துவ ஈசுவரனை வெகு சுலபமாய் ஏமாற்றி விடலாம். ஏனெனில் இவர்களுடைய வேண்டுகோளின்பேரிலேயே அவர்களுடைய சத்துருக்களின்பேரில் பழிவாங்கப்புறப்படுகிருர். அது பகைசாதிக்கிற குணமாயிருக்கிறது. ஏனெனில் இறந்துங்கூட பகைவரிடத்தில் பழிவாங்குகிருர்கள். அவர்களுக்குக் கொஞ்சங்கூட பொறுமையில்லை யென்று தோன்றுகிறது. பொறுமையில்லாதவிடத்தில் துக்கத்திற்கும் கஷ்டத்திற்கும் அளவு கிடையாது.

103. அத்திமரமானது பெருங்காற்றினுல் அசைக்கப்படும்போது அதின் காய்கள் உதிருகிறதுபோல, வானத்தின் நட்சத்திரங்களும் பூமியிலே விழுந்தது.—வானமும் சுருட்டப்பட்ட புஸ்தகம்போலாகி விலகிப் போயிற்று; மலைகள் தீவுகள் யாவும் தங்கள் இடங்களைவிட்டு அகன்றுபோயின. (6. 13, 14.)

திவ்யவாசகனுகிய யோவானுக்கு வித்தையில்லாதபடியினுலேயே இவ்வித அர்த்தமற்றவைகளைப் பேசினுன். நட்சத்திரங்கள் கிரகங்களாயும் கோளங்களாயுமிருக்கப் பூமியில் எப்படி விழும்? கிரகமண்டலத்தைவிட்டுச் சூரியன் அங்கும் இங்கும் மாறிப்போகுமா? ஆகாசம் பாயைப் போலிருக்கிறதென்று (சுருட்டுவதற்கு) நினைத்தானு? ஆகாசம் உருவமில்லாதபடியினுல் அதைச் சுருட்டவும் முடியாது. திரட்டவும் முடியாது. யோவான் முதலானவர்கள் காட்டுமிருண்டிகளா யிருந்தார்களென்றும் அவர்களுக்கொன்றும் தெரியாதென்றும் நன்கு விளங்குகிறது.

104. முத்திரை போட்டவர்களின் தொகையைச்சொல்லக் கேட்டேன்; இஸ்ரவேல்புத்திரருடைய சகல கோத்திரங்களிலும் முத்திரை போடப்பட்டவர்கள் இலட்சித்து நாற்பத்து நாலாயிரம்பேர்.— யூதாகோத்திரத்தில் முத்திரை போடப்பட்டவர்கள் பன்னீராயிரம். (7. 4, 5.)

பைபிளில் எழுதப்பட்டிருக்கும் ஈசுவரன் இஸ்ரவேல் குலத்தின் தெய்வமா அல்லது உலக தெய்வமா? அவர்களுடைய தெய்வமாக மட்டுமில்லாமலிருந்தால் அக்காட்டாளர்களுக்கு மாத்திரம் பரிந்து கொள்ளமாட்டார். அவர்களுக்கே அவர் உதவி எப்பொழுதும் புரிந்தார். பிறரைப் பெயரால் கூடச் சொல்லவில்லை. ஆகையினுல் அவர் ஈசுவரனுகமாட்டார். இஸ்ரவேல் குலச்சனங்களுக்கு மாத்திரம் முத்திரைவைப்பது அவருடைய கட்டுக்குட்பட்ட ஞானத்தைக் காட்டலாம் அல்லது யோவானுடைய தப்பெண்ணமாயு மிருக்கலாம்.

105. ஆனபடியால் இவர்கள் தேவனுடைய சிங்காசனத்திற்கு முன்பாக இருந்து இரவும்பகலும் அவருடைய ஆலயத்திலேயேஅவரைச் சேவிக்கிருர்கள். (7.15.)

ஒழுங்கீனமான விக்கிரக ஆராதனை யல்லவா இது? பைபிளினுடைய ஈசுவரன் மனிதனைப்போல் தேகத்தையுடையவராயும், ஒரேவிடத்தைச் சேர்ந்தவராயு மில்லையா? இரவு முழுவதும் கிறிஸ்துவர்களுடைய ஈசுவரன்

தூங்குவதுங்கூட கிடையாது. தூங்கினால் இரவில் ஏன் பூஜை செய்கிறார்கள். தூங்கினாலும் அதிகத்தொந்திரவுகளின் நடுவே தூங்கவேண்டும். இரவும் பகலும் வேலை செய்தாலும் மிகவும் சிரமப்பட்டு பலவித ரோகங்களிலிருந்து வருந்துவேண்டுமே.

106. வேறொரு தூதனும் வந்து தூபக்காட்டும் பொற்கலசத்தைப் பிடித்து பலிபீடத்தின் படியிலே நின்றான். மிகுந்த தூபவர்க்கம் அவனுக்குக் கொடுக்கப் பட்டது. அப்படியே பரிசுத்தவான்களுடைய ஜெபங்களோடும் செலுத்தப்பட்ட தூபவர்க்கத்தின் புகையானது தூதனுடைய கையிலிருந்து தேவனுக்கு முன் பாக எழும்பிற்று. பின்பு; அந்தத் தூதன் தூபகலசத்தை எடுத்து, அதைப் பலி பீடத்து நெருப்பினால் நிரப்பி, பூமியிலே கொட்டினான்; உடனே சத்தங்களும், இடிமுழக்கங்களும், மின்னல்களும், பூமியதிர்ச்சியும் உண்டாயின. (8. 3, 4, 5.)

(கிறிஸ்துவர்களுடைய சுவர்க்கத்தில்) கூட பலிபீடம், தூபதீப நைவேத்தியமும் எக்காளம் ஊதுவதின் சத்தமும் இருக்கின்றன. பைராகிகளுடைய ஆலயத்தைவிட கிறிஸ்துவர்களுடைய சுவர்க்கம் குறைவானதா என்ன? பகட்டும் ஆடம்பரமுமே அதிகமாக விருக்கிறது.

107. மரங்களில் மூன்றிலொருபங்கு வெந்துபோயிற்று, பசும்புல்லெல்லாம் எரிந்துபோயிற்று. (8 7.)

கிறிஸ்துவ, முக்கால மறிவோனே! நல்லது! இந்த ஈசுவரன், ஈசுவரனுடைய தூதன், தாரைகளின் சப்தம், பிரளம் இல்லிலைகளெல்லாம் சிறுபிள்ளை விளையாட்டைப் போலிருக்கின்றன.

108. ஐந்தாம் தூதன் எக்காலம் ஊதினான்; அப்பொழுது வானத்திலிருந்து பூமியின்மேல் விழுந்த ஒரு நட்சத்திரத்தைக் கண்டேன்; அவனுக்குப் பாதாளக்குழியின் திறவுகோல் கொடுக்கப்பட்டது:— அவன் பாதாளக்குழியைத்திறந்தான்; உடனே பெருஞ்சூளையின் புகையைப்போல அந்தக் குழியிலிருந்து புகை எழும்பிற்று; அந்தக் குழியின் புகையினால் சூரியனும் ஆகாயமும் அந்தகாரப் பட்டது:—அந்தப் புகையிலிருந்து வெட்டுக்கிளிகள் புறப்பட்டுப் பூமியின்மேல் வந்தது; அவைகளுக்குப் பூமியிலுள்ள தேள்களின் வல்லமைக்கொப்பான வல்லமை கொடுக்கப்பட்டது.—பூமியின் புல்லையும் பசுமையான எந்தப் பூண்டையும் எந்த மரத்தையும் சேதப்படுத்தாமல், தங்கள் நெற்றிகளில் தேவனுடைய முத்திரையைத்தரித்திராத மனுஷரை மாத்திரம் சேதப்படுத்த அவைகளுக்கு உத்தரவு கொடுக்கப்பட்டது.—ஐந்துமாதமளவும் அவர்களை வேதனைப் படுத்தும்படிக்கு உத்தரவு கொடுக்கப்பட்டது. (9. 1-5.)

தாரைகளின் சப்தத்தைக் கேட்டவுடன் தூதர்களின் மேலும் சுவர்க்கத்திலேயுமா விழுந்திருக்கும்? இப்பூமியில் ஏன் விழவில்லை. பிரளயகாலத்திற்காகவா ஈசுவரன் பாதாளக் குழிகளை வைத்து வெட்டுக்கிளிகளை வளர்த்து வந்தார்? மனிதரைச் சேதப்படுத்துவதற்கும், படுத்தாதற்கும், முத்திரையைத் தரித்திருக்கிறாரென்று வெட்டுக்கிளிகள் பார்த்து அறிந்துகொள்ள வேண்டும். அவிவேகியான பேதைகளை ஏமாற்றி பயமுறுத்திக் கிறிஸ்துவ மதத்தைச் சேரச்செய்வதற்காகவே இதெல்லாம் ஏற்பட்டது. அதாவது கிறிஸ்துவமதத்தைக் கைப்பற்றிவிட்டால் வெட்டுக்கிளிகளுடைய சித்திர

வதைக்கு ஆளாவார்களென்றுப் பயப்படுகிருர்கள். வித்தை குன்றின நாட்டிலேயே இவ்வார்த்தைகள் பெருகி நிகழும். ஆரியவர்த்தத்தில் நடவாது. பிராளவார்த்தை ஆசக்கூடியதா?

109. குதிரைச் சேனைகளாகிய ராணுவங்களின் தொகை இருபது கோடியாயிருந்தது. (9. 16.)

இவ்வளவு குதிரைச் சேனைகள் சுவர்க்கத்தில் எங்கே மேய்ந்து நிற்கின்றன உலாவுகின்றன? கழிவு எவ்வளவு சேரும்? அதிலிருந்து துர்நாற்றம் எவ்வளவு வீசும்? இச்சுவர்க்கம் இவ் ஈசுவரன், இம் மதம், எல்லாவற்றிற்கும் ஆரியர்கள் எள்ளும் தண்ணீரும் விட்டுவிட்டார்கள். கிறிஸ்துவர்களும் சர்வ சக்திமானுடைய கிருபையினுல் இத்தடைகளி லிருந்து மீற நலமாயிருக்கும்

110. பின்புபலமுள்ள வேறொரு தூதன் வானத்திலிருந்து இறங்கிவரக் கண்டேன்; மேகம் அவனைச் சூழ்ந்திருந்தது. அவனுடைய சிரசின்மேல் வான வில்லிருந்தது, அவனுடையமுகம் சூரியனைப் போலவும், அவனுடைய கால்கள் அக்கினி ஸ்தம்பங்களைப் போலவும் இருந்தது.—திறக்கப்பட்ட ஒரு சிறு புஸ்தகம் அவன் கையில் இருந்தது; தன் வலது பாதத்தைச் சமுத்திரத்தின்மேலும், தன் இடது பாதத்தைப் பூமியின்மேலும் வைத்தான். (10 1-3.)

இத்தூதர்களுடைய கதை புராணங்கள், கோமாளிகள் முதலியவர்களுடையதை கூட மங்கச் செய்யவில்லையா?

111. பின்பு கைக்கோலுக்கு ஒப்பான ஒரு அளவுகோல் என்னிடத்தில் கொடுக்கப்பட்டது, அப்பொழுது தேவதூதன் நின்று, என்னை நோக்கி: நீ எழு தேவனுடைய ஆலயத்தையும், பலிபீடத்தையும், அதில் தொழுதுகொள்ளுகிறவர்களையும் அளந்துபார்.—(11. 1.)

பூமியில் மாத்திரமே யல்லாமல், கிறிஸ்துவர்களுடைய சுவர்க்கத்திலும் ஆலயங்களைக்கட்டி யிருக்கிருர்கள். அளந்தும் பார்க்கிருர்கள், அவர்களுடைய சுவர்க்கத்தைக் போலவே உபதேசமும் மதியீனமா யிருக்கிறது. கர்த்தருடைய போஜனத்தை எடுத்துக் கொள்ளுவோம். அதில் அப்பத்தையும், கள்ளையும், கிறிஸ்துவுடைய மாம்சம் என்றும் இரத்தமென்றும் முறையே எண்ணிக் கிறிஸ்துவர்கள் சாப்பிட்டுக் குடிக்கிருர்கள். மாதாக் கோவிலில் சிலுவையின் விக்கிரகத்தை வைப்பது விக்கிரக ஆராதனையைவிடக் குறைந்ததல்ல.

112. அப்பொழுது பரலோகத்தில் தேவனுடைய ஆலயம் திறக்கப்பட்டது. அவருடைய ஆலயத்திலே அவருடைய உடன்படிக்கையின் பெட்டி காணப்பட்டது. (11. 19.)

சுவர்க்கத்திலிருக்கிற ஆலயம் சாதாரணமாய் அடைப்பட்டிருக்கிறது போலிருக்கிறது. சிலசமயங்களில் திறக்கப்படுகிறது. பரமேச்வரனுக்கு ஆலயங் கூட உண்டோ? வேதானுகூலமான சர்வவியாபக ஈசுவரனுக்கு ஆலயங் கிடையாது. உருவத்துடன் கூடின கிறிஸ்துவர்களுடைய பரமேச்வரனுக்கு சுவர்க்கத்திலும், பூமியிலும், ஆலயமுண்டு. பூ! பூ! என்று தாரைகளின் முழக்கம இங்கிருப்பது போலவே சுவர்க்கத்திலுமுண்டு. உடன்படிக்கையின்

பெட்டியைக் கிறிஸ்துவர்கள் சமயாசமயங்களில்தான் பார்க்கிறார்கள். அதை அங்கு வைத்திருப்பதின் அபிப்பிராயத்தை எவனும் அறியான். மனிதர்களுக்கு ஆசை காட்டுவதற்காகவே இதெல்லாம் செய்யப்படுகிறது மேலும்.

113. அன்றியும் ஒரு பெரிய அடையாளம் வானத்திலே காணப்பட்டது; ஒரு ஸ்திரீ சூரியனை அணிந்திருந்தாள், அவள் பாதங்களின் கீழே சந்திரனும், அவள் சிரசின்மேல் பன்னிரண்டு நட்சத்திரங்களுள்ள கிரீடமும் இருந்தன.—அவள் கர்ப்பவதியாயிருந்து; பிரசவவேதனை யடைந்து, பிள்ளைபெறும்படி வருத்தப்பட்டு அலறினள்.

அப்பொழுது வேறொரு அடையாளம் வானத்திலே காணப்பட்டது; ஏழு தலைகளையும், பத்துக் கொம்புகளையும், தன் தலைகளின்மேல் ஏழுமுடிகளையுமுடைய சிவப்பான பெரிய வலுசர்ப்பமிருந்தது.—அதின் வால் வானத்தின் நட்சத்திரங்களில் மூன்றிலொருபங்கை இழுத்து, அவைகளைப் பூமியில் விழத்தள்ளிற்று: (**12.** 1-4.)

(திவ்யவாசகனை யோவான் நூற்ற) நூலகள் எவ்வளவு நீளமானது. பாவம்! அவள் கிறிஸ்துவசுவர்க்கத்தில்கூட வருத்தப்பட்டு அலறினள். இருந்தும் அவளுடைய வருத்தத்தைத்தீர்க்கிறவர்கள் யாருமில்லை. விசாரிக்கிறவர்களுமில்லை. வானத்தின் நட்சத்திரங்களில் மூன்றிலொருபங்கை இழுத்து பூமியில் விழத்தள்ளின அந்தவலு சர்ப்பத்தின் வால் எவ்வளவு பெரியதா யிருக்கவேண்டும். பெருங்கோளங்களான நட்சத்திரங்களுடன் நம் பூமியைப்பார்க்கும் பொழுது இது மிகவும்சிறியது. அவைகளிலொன்றை நம்முடைய பூமிதாங்காது. வானத்தின் நட்சத்திரங்களில் மூன்றிலொருபங்கு இந் நூலை எழுந்தினவருடைய இல்லத்தில் விழுந்ததாகவும், வானத்தின் மூன்றிலொரு பங்கு நட்சத்திரங்களை இழுத்துக் கீழேதள்ளக்கூடியவளவு பெரியதான வாலையுடைய வலுசர்ப்ப (பறவைநாகம்) மும் இவருடைய இல்லத்திலேயே இருந்ததாகவும் நாம் திடமாகக்கொள்ளலாம்.

114. வானத்திலே யுத்தமுண்டாயிற்று; மிகாவேலும் அவனைச் சேர்ந்த தூதர்களும் வலுசர்ப்பத்தோடே யுத்தம் பண்ணினார்கள்; வலுசர்ப்பமும் அதைச்சேர்ந்த தூதரும் யுத்தம் பண்ணியும் ஜெயங்கொள்ளவில்லை.—(**12. 7.**)

கிறிஸ்துவர்களின் சுவர்க்கத்திற்குப் போகிறவர்களெல்லாம் அங்கு நடக்கிற யுத்தத்தினால் பெருந்துக்கத்தை அனுபவிக்கவேண்டும். அச்சுவர்க்கத்தின் ஆசையைவிட்டு கையைக் கட்டிக்கொண்டு இங்கேயிருப்பதே நலமானது. சமாதான பங்கமுண்டாகி யுத்தம் நடக்கிற விடங்களே கிறிஸ்துவர்களுக்கு ஏற்றவிடம் போலும்.

115. உலகமனைத்தையும் மோசம் போக்குகிற பிசாசு என்றும் சாத்தான் என்றும் சொல்லப்பட்ட பழைய பாம்பாகிய பெரிய வலுசர்ப்பம் தள்ளப்பட்டது. (1?. 9.)

சாத்தான் சுவர்க்கத்திலிருந்தகாலத்தில் ஜனங்களை ஏமாற்றவில்லையா? ஏன் அதை ஆயுள்பரியந்தம் அடைக்காவது அல்லது அதனுடைய பிராணனையாவது எடுக்கவில்லை? ஏன் அதைப் பூமியில் தள்ளிவிட்டார்? சாத்தான்

உலகமுழுவதும் தூண்டினல் அதைத் தூண்டுகிறவன் யார்? தன்னைத்தானே தூண்டிக்கொண்டால், மனிதனும் அதனுடைய ஏவுதலன்னியில் தன்னைத்தானே தூண்டிக் கொள்ளக் கூடும். பரமேச்வரன் அதைத் தூண்டினல் அவர் ஈச்வரனுக மாட்டார். கிறிஸ்துவர்களுடைய ஈசுவரனும் சாத்தானுக்குப் பயப்படுவதுபோல் புலப்படுகிறது. சாத்தானைவிட ஈசுவரன் சக்தியுள்ளவாரனல் ஏன் அது தப்புச் செய்யும்பொழுதே தண்டித்திருக்கக் கூடாது? உலகில் சாத்தானுக்கு எவ்வளவு அதிகாரமிருக்கிறதோ அதில் நூறில் ஒரு பங்கு கூட கிறிஸ்துவர்களுடைய ஈசுவரனுக்கு இல்லையா? அவனுடைய போக்கிரித்தனமான காரியங்களிலிருந்து சாத்தானைத்தடுக்க அந்த ஈச்வரனல் முடியவில்லை போலும்: கள்ளன் துஷ்டன் முதலானவர்களுக்கு உடனே சிட்சையை அளிக்கிற தற்கால இராச்சியாதிகாரிகளைப் போன்றவரும் அல்லர்: வைதிகமதத்தை விட்டு பெரய மதமான, கிறிஸ்துவ மதத்தைக் கைப்பற்றும் படியான புத்தியில்லாதவர்கள் இருக்கிருர்கள்?

116. பூமியிலும் சமுத்திரத்திலும் குடியிருக்கிறவர்களே! ஐயோ, பிசாசானவன் உங்களிடத்தில் இறங்கினபடியால், உங்களுக்கு ஆபத்துவரும். (**12**. 12.)

கிறிஸ்துவ ஈசுவரன் அவ்விடத்தினுடைய (சுவர்க்கம்) சவாமியும் ஈச்வரனு மாத்திரமா? பூமி, மனிதன், முதலான ஜீவன்களுடைய ரக்ஷகனும் சுவாமியுமல்லவா? பூமிக்கும் இராஜாவாயிருந்தால் சாத்தானை ஏன் அவர் கொல்ல முடியவில்லை? சாத்தான்போய் ஒவ்வொருவனையுந் தூண்டுகிருன். ஈசுவரனே நேராகப் பார்த்துக்கொண்டிருக்கிருர். உண்மை யாதெனில் ஒரு நல்ல கடவுளும், ஒறு கெட்ட கடவுளும் (வலுவுடன் கூடியதாய்) இருப்பதாகத் தோன்றுகிறது.

117. நாற்பத்திரண்டுமாதம் யுத்தம்பண்ண அதற்கு அதிகாரங் கொடுக்கப்பட்டது.—அது தேவனைத் தூஷிக்கும்படி தன் வாயைத் திறந்து, அவருடைய நாமத்தையும் அவருடைய வாசஸ்தலத்தையும் பரலோகத்தில் வாசமாயிருக்கிறவர்களையும் தூஷித்து, மேலும் பரிசுத்தவான்களோடே யுத்தம் பண்ணி அவர்களை ஜெயிக்கும்படிக்கு அதிகாரங் கொடுக்கப்பட்டதுமல்லாமல் ஒவ்வொரு கோத்திரத்தின்மேலும் பாஷைக்காரன் மேலும் ஜாதிகள்மேலும் அதற்கு அதிகாரங் கொடுக்கப்பட்டது. (**13**. 5, 6, 7.)

பூமியிலிருக்கிற ஜனங்களைத் தூண்டவும் பரிசுத்த மனிதர்களுடன் யுத்தஞ்செய்யவும் சாத்தான், மிருகம் முதலானவைகளை அனுப்புகிற அவர் கள்ளக் கூட்டத்தலைவரைப் போலாகவில்லையா? இக் காரியங்கள் ஈசுவரன் அல்லது அவருடைய பக்தர்களால் செய்ய முடியாது.

118. பின்பு நான் பார்த்தபோது, இதோ, சீயோன் மலையின்மேல் ஆட்டுக்குட்டியானவரையும் அவரோடேகூட அவருடைய பிதாவின் நாமம் தங்கள் நெற்றிகளில் எழுதப்பட்டிருந்த இலட்சத்து நாற்பத்து நாலாயிரம் பேரையும் நிற்கக்கண்டேன். (**14**. 1.)

வாசகர்கள் கவனிக்கவேண்டியது. கடவுள் சீயோன் மலைமேல் வசிக்கிருர். அப்படியே அவருடைய குமாரன் இயேசு கிறிஸ்துவும் தகப்பனு

டன் வசிக்கிறார். நாற்பத்து நாலாயிரம் ஜனங்கள் எவ்விதம் கணக்கிடப்பட்டார்கள். 44,000 ஜனங்கள் மாத்திரமா சுவர்க்கத்திலிருக்கிறார்கள். அவருடைய பிதாவின் நாமம் தங்கள் நெற்றிகளில் எழுதப்பட்ட கோடிக் கணக்கானவர்களைப் பற்றி என்னவாச்சுது? அவர்கள் எல்லோரும் நரகத்தையடைந்தார்களா? சீயோன் மலைக்குக் கிறிஸ்துவர்கள் போய் இயேசுவின் பிதாவும் அவருடைய சைனியங்களும் அங்கு இருக்கிறார்களாவென்று காணவேண்டும். அவர்கள் அங்கே யிருந்தால் பைபிளில் எழுதியிருப்பதெல்லாம் உண்மையே. இல்லையென்றால் அதெல்லாம் பொய்யே. அவர்கள் வேறு எங்கேயிருந்தாவது வந்தால் எங்கிருந்து வந்தார்கள்? சுவர்க்கத்திலிருந்தென்றால் மேலுங் கீழும் பறக்கக் கூடிய பறவைகளா அவர்கள். மேலும் கீழும் போய் வருகிறவர் என்னும் ஊர் சுற்றுகிற மாஜிஸ்டிரேட்டைப் போலாகிறார். அவர் அப்பொழுது ஒன்று, இரண்டு அல்லது மூன்றாய்கூட இருக்கமுடியாது. அவருடைய எண்ணிக்கைக் கணக்கில்லாததாயிருத்தல் வேண்டும் நம்முடைய பூமியைப்போன்ற கோளத்திற்கு ஒருவர் வேண்டும். ஒருவர், இருவர் கணக்கற்ற பிரம்மாண்டங்களிலுள்ளவர்களுக்கு நியாயந்தீர்க்க முடியாது. ஒரே இடத்தில் ஒரே சமயத்திலிருக்கவு முடியாது.

119. அவர்கள் தங்கள் பிரயாசங்களை விட்டொழிந்து இளைப்பாறுவார்கள்; அவர்களுடைய கிரியைகள் அவர்களோடே கூடப்போம்'' என்று பரலோகத்திலிருந்து உண்டான சத்தம் சொல்லிற்று (14. 13.)

கவனிக்கவும். மனிதர்களுடைய கிரியைகள் அவர்களுடன் கூடப்போகும் எனக் கிறிஸ்துவ ஈசுவரன் கூறுகிறார். அதாவது கர்மானுசார பலனை அளிப்பார் என்றாகிறது. ஆனால் இயேசு பாபங்களை ஏற்றுக் கொள்வார். மன்னிப்பார். என்று சொல்லுகிறார்கள். ஈசுவரன் சொல்லுவது சரியா அல்லது கிறிஸ்துவர்கள் நமக்குரைப்பது சரியாவென்று புத்திமான்கள் ஊகிக்கக் கூடும். இரண்டும் சரியாயிருக்க முடியாது. ஏதாவதொன்று தப்பாகவிருக்க வேண்டும். கிறிஸ்துவர்களோ அல்லது அவர்களுடைய தெய்வமோ. எதுவாயிருந்தாலும் நமக்குப் பாதகமில்லை.

120. தேவனுடைய கோபாக்கினையென்னும் பெரிய ஆலையிலே போட்டான்.—நகரத்திற்குப் புறம்பேயுள்ள அந்த ஆலையிலே அது மிதிக்கப் பட்டது; அந்த ஆலையிலிருந்து ஆயிரத்தறுநூறு ஸ்தாதி தூரத்திற்கு இரத்தம் புறப்பட்டுக் குதிரைகளின் கடிவாளங்கள் மட்டும் பெருகி வந்தது. (14. 19-20.)

புராணங்களுடைய நூலைவிட இது இன்னும் நீளமாகவில்லையா? கிறிஸ்துவர்களுடைய ஈசுவரன் கோபமாயிருக்கும் பொழுது ரொம்ப துக்கத்தையடையவேணடும். ஆலைகள் நிரம்பவும் அவருடைய கோபாக்கினையிருந்ததினால், அது நீரா அல்லது பாத்திரங்களில் நிறையக்கூடிய திரவ பதார்த்தமா? "ஆயிரத்தறுநூறு ஸ்தாதி தூரத்திற்கு'' இரத்தம் புறப்பட்டுப் பெருகமுடியாது. ஏனெனில் காற்று கலந்தவுடன் அது இறுகிவிடும். பிறகு எப்படி அது பெருகும்? ஆகவே இதெல்லாம் பொய்ப் பேச்சேயாம்.

121. இவைகளுக்குப் பின்பு, நான் பார்த்தபோது. இதோ, பரலோகத்லே சாட்சியின் கூடாரமாகிய ஆலயம் திறக்கப்பட்டது. (15. 5.)

கிறிஸ்துவர்களுடைய ஈச்வரன் சர்வஞ்ஞராயிருந்தால் சாக்ஷிகளுக்கு என்ன அவசியமிருக்கிறது. ஏனெனில் தாஞகவே எல்லாவற்றையும் தெரிந்து கொண்டிருப்பார். இவர்களுடைய ஈச்வரன் சர்வஞ்ஞரில்லை என்பது எப்பொழுதும் நிச்சயமாகும். மனிதனைப்போல் 'அற்பஞ்ஞனே'. அவரால் ஈச்வரனுடைய வேலையை எப்படிச் செய்யமுடியும்? ஒரு பொழுதும் முடியாது. இப்புத்தகத்தில் தூதர்களைப்பற்றி அசம்பவமான அதிக வார்த்தைகள் சொல்லப்பட்டிருக்கிறது. அவைகளை உண்மையென எடுத்துக்கொள்ள முடியாது. கூற முடியாத மதியீனமான விஷயங்களால் புஸ்தகம் நிறைந்திருக்கிறது.

122. அவருடைய அநியாயங்களைத் தேவன் நினைவுகூர்ந்தார்.—அவள் உங்களுக்குப் பலனளித்ததுபோல நீங்களும் அவளுக்குப் பலனளியுங்கள்; அவருடைய கிரியைகளுக்குத் தக்கதாக அவளுக்கு இரட்டிப்பாகக் கொடுத்துத் தீருங்கள்; அவள் உங்களுக்குக் கலந்து கொடுத்த பாத்திரத்திலே இரட்டிப்பாய் அவளுக்குக் கலந்து கொடுங்கள்.—(**18**. 5, 6.)

கிறிஸ்தவ ஈசுவரன் பிரத்தியக்ஷமாக அநியாயம் செய்கிறவருகிருர். எவ்வளவு கர்மங்களை எப்படி செய்திருக்கிருனே அதற்கு ஏற்ற வண்ணம் தண்டனையையாவது, பரிசையாவது கொடுப்பதே நியாயமெனப்படும். அதற்கு அதிகமான பலனளிப்பது அநியாயமாகும். அநியாயஞ் செய்கிறவரைத் துதிக்கிறவன் ஏன் அநியாயம் செய்கிறவனுகமாட்டான்.

123. ஆட்டுக்குட்டியானவருடைய கலியாணம் வந்தது. (**19**. 7.)

கிறிஸ்துவர்களுடைய சுவர்கத்தில் விவாகமும் நடைபெருகிறது. ஏனெனில் இயேசுவுடைய விவாகத்தை ஈசுவரனே அங்கே நடத்தினுர். அவருடைய மாமனுர், மாமியார், மச்சினன் முதலானவர்கள் யாராரென்று கிறிஸ்துவர்கள் தயவு செய்து நமக்கு சொல்லுவார்களா? அக் கலியாணத்தினுல் அவருக்குக் குழந்தைகளுண்டு. வீரிய நாசத்தினுல் பலம், புத்தி, பராக்கிரம், ஆயுசு, எல்லாம் குன்றி போகிற படியினுல் இயேசு இதுவரையில் இறந்திருக்கவேண்டும். இதுவரையில் கிறிஸ்துவர்கள் இயேசுவிடத்தில் நம்பிக்கை வைத்து ஏமாந்தார்கள். இன்னும் அப்படியே எவ்வளவு நாளிருப்பார்களென்று யார் அறிவார்?

124. பிசாசென்றும் சாத்தானென்றும் சொல்லப்பட்ட பழைய பாம்பாகிய வலுசர்ப்பத்தை அவன் பிடித்து, அதை ஆயிரம் வருஷமளவுங் கட்டிவைத்து, அந்த ஆயிரம் வருஷம் நிறைவேறும்வரைக்கும் அது ஜனங்களை மோசம் போகாதபடிக்கு அதைப் பாதாளத்திலே தள்ளியடைத்து, அதின்மேல் முத்திரை போட்டான். (**20**. 2-3.)

பெரும் பிரயாசையினுலேயே சாத்தான் பிடிக்கப்பட்டு ஆயிரம் வருஷம் தள்ளியடைக்கப்பட்டான். விடுதலை செய்தவுடன் திரும்பவும் ஜனங்களைத் தூண்டமாட்டாஞ? அத் துஷ்டனை ஆயுள் பரியந்தம் அடைத்திருக்கவேண்டும். அல்லது கொலை செய்திருக்கவேண்டும். உண்மை யாதெனில் இது கிறிஸ்துவர்களுடைய பிரமையே. சாத்தான் என்பது எதுவுங் கிடையாது. ஜனங்களை நடுங்கச் செய்து தங்களுடைய வலையில் பிடி

க்கவே இவ்வழியைக் கண்டு பிடித்திருக்கிறார்கள். "என்னுடன் வாருங்கள். சுவாமி நாராயணனைக் காண்பிக்கிறேன்" என்று போக்கிரி ஒருவன் பேதை ஜனங்கள் சிலரிடம் சொன்னது போலாகும். நாலு கையுள்ளவராகத் தோற்றும் படியாக ஒருவனை முன்னமேயே அடர்ந்த வனத்தின் நடுவில் தனியானவிடம் ஒன்றில் உட்கார வைத்திருந்தான். அவன் சொன்னபொழுது கண்களை மூடிதிறக்கவேண்டுமென்று அவர்களுக்குச் சொன்னான். அப்படி சொல்லுகிறதைக் கேழ்க்காதவர்களுடைய கண்கள், பார்வையை இழந்துவிடும் என்றான். பிறகு அவர்களுடன் கூட அந்த இடத்திற்குச் சென்றான். நாலு கை மனிதனுள்ள இடத்திற்கு வந்தவுடன் அவர்களை முன்புறம் பார்க்கச் சொல்லிவிட்டு அடுத்த கணத்தில் கண்களை மூடிக் கொள்ளவேண்டியதென உத்திரவளித்தான். நாலு கை மனிதன் புதரின் மத்தியில் மறைந்துகொண்டவுடன், அவர்களுக்குக் கண்களைத் திறந்துகொள்ளும்படி உத்தரவிட்டான். உடனே "நீங்கள் எல்லோரும் நாராயணனைக் கண்டீர்கள்" என்றான். அவர்களுடைய வலையில் விழாமல் கவனித்துக் கொள்ளவேண்டியது அவசியம்.

> 125. அவருடைய சமுகத்திலிருந்து பூமியும் வானமும் அகன்று போயின; அவைகளுக்கு இடங்காணப்படவில்லை.
>
> மரித்தோராகிய சிறியோரையும் பெரியோரையும் தேவனுக்கு முன்பாக நிற்கக்கண்டேன்; அப்பொழுது புஸ்தகங்கள் திறக்கப்பட்டன; ஜீவபுஸ்தகம் என்னும் வேறொரு புஸ்தகமும் திறக்கப்பட்டது; அப்பொழுது அந்தப் புஸ்தகங்களில் எழுதப்பட்டவைகளின்படியே மரித்தோர் தங்கள் கிரியைகளுக்குத் தக்கதாக நியாயத்தீர்ப்படைந்தார்கள்.—(20. 11. 12.)

இதெல்லாம் குழந்தைத்தனமில்லையா? பூமியும் வானமும் எவ்விதம் அகன்று போகும்? எவருடைய சமுகத்திலிருந்து அகன்று போயிற்று. அவரும் அவருடைய சிங்காசனமும் எங்கேயிருந்தது. இறந்தவர்கள் முன்னிலையில் நிற்க, பரமேச்வரன் உட்கார்ந்திருக்கவேண்டும் அல்லது நின்றுக்கொண்டிருக்கவேண்டும். சச்சரவுகளையும், கணக்குகளையும் தீர்க்கக் கச்சேரிகளும் கடைகளிலும் புஸ்தகம் தஸ்தாவேஜுகள், வேண்டியிருப்பது போலவே ஈசுவரனுடைய வேலையுமா? ஜீவபுஸ்தகத்தில் ஈச்வரனால் தாகல் செய்யப்பட்டதா? அல்லது அவருடைய குமாஸ்தாவினால் செய்யப்பட்டதா? இவ்வித அநீச்வரனை ஈச்வரனாகவும் ஈச்வரனை அநீச்வரனாகவும் கிறிஸ்துவமதத்தவர்கள் செய்து விட்டார்கள்.

> 128. தீட்டுள்ளதும் அருவெறுப்பையும் பொய்யையும் நடப்பிக்கிறதுமாகிய ஒன்றும் அதில் பிரவேசிப்பதில்லை. (21. 27.)

இவ்வாறிருக்க ஏன் பாபிகள் கூட கிறிஸ்துவர்களாக மாறினால் சுவர்க்கத்தையடையலாம் எனக் கிறிஸ்துவர்கள் கூறுகிறார்கள்? இது வுண்மையாகாது. இதுவுண்மையானால் திவ்யவாசகனாகிய யோவான் சுவர்க்கத்தில் பிரவேசிக்க முடியாது. ஏனெனில் அவருடைய நூலில் அவ்வளவு பொய்களைச் சொல்லியிருக்கிறார். இயேசுவுங்கூடப் போயிருக்க முடியாது. ஏனெனில் ஒரு

பாபிகூட பிரவேசிக்கக் கூடாதென்றிருக்க அநேக பாபிகளுடைய பாபத்தின் சுமையுடன் கூடியிருக்கிற அவர் எவ்விதம் சுவர்க்கவாசியாகக்கூடும்?

129. இனி ஒரு சாபமுமிராது. தேவனும் ஆட்டுக்குட்டியானவரும் இருக்கிற சிங்காசனம் அதிலிருக்கும்.—அவருடைய ஊழியக்காரர் அவரைச் சேவித்து, அவருடைய சமுகத்தைத் தரிசிப்பார்கள்; அவருடைய நாமம் அவர்களுடைய நெற்றிகளில் இருக்கும்.—அங்கே இராக்காலமிராது; விளக்கும் சூரியனுடைய வெளிச்சமும் அவர்களுக்கு வேண்டுவதில்லை; தேவனுகிய கர்த்தரே அவர்கள்மேல் பிரகாசிப்பார். அவர்கள் சதாகாலங்களிலும் அரசாளுவார்கள். (**21.** 3-5.)

கிறிஸ்துவர்களுடைய சுவர்க்கவாசத்தைக் கவனியுங்கள். தேவனும் ஆட்டுக்குட்டியும் எக்காலமும் தங்கள்தங்களுடைய சிங்காசனங்களில் உட்கார்ந்துகொண்டிருப்பார்களா? ஊழியக்காரர் எப்பொழுதும் அவர்களுடைய முகத்தைப் பார்த்தவண்ணமாயிருப்பார்களா? உங்களுடைய ஈச்வரன் முகம் ஐரோப்பியரைப் போல் வெண்மை நிறமானதா அல்லது நீக்ரோவைப் போல் கறுப்பானதா? அந்த ஈசுவரன் எத்தகையது. உங்களுடைய சுவர்க்கங்கூட சிறையைப்போலிருக்கிறது. பெரியவர்கள் சிறியவர்களென்ற வித்தியாசமிருக்கிறது. சமத்வங்கிடையாது. அதற்குத்தக்க துக்கமுமிருக்கும். முகத்தையுடைய ஈச்வரன் சர்வஞ்ஞராயும் சர்வேசுவரனுயும் ஒருபொழுது மிருத்தல் முடியாது.

130. இதோ, சீக்கிரமாய் வருகிறேன்; அவனவனுடைய, கிரியைகளின்படி அவனவனுக்கு நான் அளிக்கும் பலன் என்னேடேகூட வருகிறது. (**22.** 12.)

அவனவனுடைய கர்மானுசாரம் பலனடைகிருன் என்பது உண்மையானுல், பாபங்களைமன்னிக்கவேமுடியாது. அவைகள் மன்னிக்கமுடியுமேயானுல் பைபிளில் இது சொல்லப்பட்டிருப்பது தவறு. பாபங்களை மன்னித்தல் கூட பைபிளில் கூறப்பட்டிருக்கிறதென்ருல் இவ்விரண்டும் ஒன்றுக்கொன்று முரண்பாடுடையதாகும். ஆகையால் அவைகளை நீ நம்பக்கூடாது.

கிறிஸ்துவ பைபிளில் லக்ஷக்கணக்கானவைகள் கண்டிக்க விருக்கிறது: மதிகீனமான சிலவற்றையே உதாரணமாக நாம் எடுத்தோம். புத்திமான்களுக்கு அவைகளுடைய பொய்யை விளக்க அதுவே போதும். ஒரு சிலவற்றைத் தவிர, மற்றவையெல்லாம், முழுப் பொய்யானதே. ஜலத்துடன் கலந்த பால், பாலாகாதது போல், பொய்யுடன் கலந்த உண்மை உண்மையாகாது. ஆகையினுல் அவைகளிருக்கிற நூலும் ஏற்றுக்கொள்ளத் தக்கதாகாது. எனவே வேதங்களை அங்கீகாரம் செய்வது சகல சத்தியத்தையும் அங்கீகாரம் செய்வதேயாகும்.

பதின்மூன்ருவது அத்தியாயம்

முற்றிற்று.

---

பதினான்காவது அத்தியாயத்தின்

# முகவுரை.



இப்பதினான்காவது அத்தியாயத்தில் முகம்மதிய மத ஆராய்ச்சி செய்துள்ளோம். குர்-ஆன்வாக்குகளைத்தழுவியே இவ்வாராய்ச்சி செய்யப்பட்டிருக்கிறது. குர்-ஆன் வாக்குகளில் சில பதங்களையொட்டிப் பொருள் வேற்றுமையும் அதையொட்டின பிரிவினைகளும் இருக்கின்றன. எனினும் குர்-ஆன் ஆண்டவன் வாக்கு என்பதை எல்லோரும் ஏற்றுக்கொள்ளுகின்றனர். அரபி மொழியிலுள்ள குர்-ஆன் தேர்ந்த முகம்மதியக் கல்விமான்களால் உருது பாஷையில் செய்யப்பட்டுள்ளது. இம்மொழி பெயர்ப்பு சம்ஸ்கிருத எழுத்தில் ஹிந்தியிலெழுதப்பட்டு, அரபி படித்தவர்களால் பார்வையிடப்பட்டு திருத்தப்பட்டிருக்கிறது. நமது மொழி பெயர்ப்பைப்பற்றி குறை கூறுபவர்கள் முதலில் முகம்மதியக் கல்விமான்களால் மொழி பெயர்க்கப்பட்டிருப்பதைத் தவறென்று என்று ருசுபிக்கவேண்டும். பற்பல மதங்களின் போதனைகளையறியவும் உண்மையிலிருந்து பொய்யைத் தள்ளி அதன் மூலமாக மானிடவகுப்பின் முன்னேற்றத்தைத் தேடுவதுமே இவ்வாராய்ச்சியின் நோக்கமாகும். எவ்விதமெனில் குற்றங்களைத் தள்ளி குணங்களைக்கொள்ள பேருதவியியிருக்கும். அன்யோன்ய வாதத்திற்கு இடங்கொடுக்கும்.

இதையாவது அல்லது வேறு எதையாவது காரணமன்னியில் கண்டிக்க வேண்டும் என்ற நோக்கத்துடன் இதை ஆக்கவில்லை. சத்தியமற்றதை விலக்கவும், சத்தியத்தை ஏற்றுவளரச் செய்ய உபகாரமாயுமிருக்கவே இவ்வேலையை முற்கொண்டோம். ஏனெனில்எவனும் பொய்யை மெய்யெனக்காட்டி சத்திய வளர்ச்சியைத் தழித்தல் கூடாது. இவ்விஷயங்களில் கட்டாயப்படுத்த முடியாதாகையினால் இதைப் பிரசுரித்த பின்னரும் சத்தியத்தை ஏற்பதற்கும் விலக்குவதற்கும் அவரவர்களுக்குப் பூரண சுயேச்சையுண்டு. நல்லோர்கள், அவைகளுடைய குணகுணங்களைக் கண்டறிந்தவுடன் நன்மைகளைப் போற்றி தீமைகளைத் தள்ளி, பிடிவாதம் பாரபட்சம் இவைகளைக் கண்டவிடங்களிலெல்லாம் புறக்கணித்து விடுவார்கள். பிடிவாதத்தினால் விளையும் பெருங் கெடுதல்களை அறியாதார் யார்? நிலையற்ற இவ்வாழ்க்கையில் பிறருக்குத் துன்பம் விளைத்தல், தனது நலத்தை நாடுதல் என்பது முறையல்ல. இவ்வாராய்ச்சியில் விஷயங்களுக்கு விரோதமாய் யாதேனும் உளதாயின் வாசகர்கள் எடுத்துக் காட்டலாம். அதை நாம் எடுத்துக் கொள்ளுவோம். ஏனெனில் பிடிவாதம், பாரபட்சம், பகை, பொறாமை அசூயை, வீண் வாதங்களில் (ஆசை) இவைக்களைந்து, வளர வொட்டாமல் தடுப்பதே இதன் எண்ணமாகும். பிறருக்குத் துன்பம் விளையாமல் பார்த்துக் கொள்ளுவதும் ஒவ்வொருவருடைய நன்மையை மேம்படுத்துவதுமே நம்முடைய கடமைகளில் சாலச்சிறந்ததாகும். இதை நன்றாகப் பார்த்த பின்னர் அறிவிற்கும் புத்திக்கும் சரியெனப்பட்டதை எடுத்துக்கொண்டு அவைகளுக்கு விரோதமானவைகளைத் தள்ளிவிடுவார்கள் என்னும் நம்பிக்கையுடன் முகம்மதிய மதவாராய்ச்சியாகிற இவ்வத்தியாயத்தைச் சத்தியத்தைக் கோருகிறவர்களின் பார்வைக்கு விடுக்கிறோம்.

புத்திமான்களுக்கு ஒரே வார்த்தை.

## பதினான்காவது அத்தியாயம்.

இந்த அத்தியாயத்தில் நாம் இஸ்லாம் மதத்தைப்பற்றி ஆராய்வோம்.

(1) பொறுத்தருள்பவனே! தயாபரனே, ஆண்டவனே (அல்லாவின் திருநாமத்தால் ஆரம்பஞ் செய்கிறேன்). *

முகம்மதியர்கள் குர்.ஆனைக் கடவுளின் அருள்மொழி எனக் கொள்கிறார்கள். மேல் கூறப்பட்டதிலிருந்து இந்நூலை ஆக்கியவர் கடவுள் இல்லை என்றும் ஒருதனி மனிதன் என்றுமே புலனாகும். இந்நூல் கடவுளால் ஆக்கப்பட்டதெனின் 'அல்லாவின்பேரால் இந்நூலைத் ஆரம்பிக்கிறேன்' என்று சொல்லப் பட்டிருக்க வேண்டியதில்லை. மனித ஜாதியின் நன்மையை ஒட்டி நான் இப்புத்தகத்தை ஆக்குகிறேன் என்று சொல்லியிருக்கலாம். மனிதன் வாழ்க்கையில் எப்படி நடக்கவேண்டும் எக்காரியத்தைச் செய்யவேண்டுமென்பதைக் காட்டவே இது செய்யப்பட்டது என்றால், மனிதன் கெட்ட காரியத்தைக் கடவுளின் பெயரால் செய்து அவருக்கு அவமதிப்பை விளைவித்தல் கூடும். நிற்க கடவுள் தயாளு என்று துவக்கத்தில் கூறப்படுகிறது. தயாளுவாயின் ஜீவன்களைக் கொலைசெய்து வருத்துதலை அவர் எங்ஙனம் ஆமோதித்தல்கூடும். ஜீவஹிம்சை கடவுளின் தயாளுத்தன்மைக்கு பங்கம் விளைப்பதாகுமன்றோ. கால்நடைகள் நிரபராதிகள் அல்லவா? அவை யாருக்குத் தீங்கு இழைத்துள்ளன. அவைகள் ஆகாராதியாகக் கொல்லப்படுகின்றன. கால்நடைகளும் கடவுளின் சிருஷ்டியில் உட்பட்டவைகள் அல்லவா? கடவுள் குர்.ஆனைச் செய்திருப்பின் அவர் மனிதனைக் கெட்டகாரியம் செய்யும்படி ஒருநாளும் கூறியிருக்கமாட்டார். எனவே துவக்கத்தில் கூறப்பட்ட வாசகம் பொருளற்றதாக இருக்கிறது. கொலை, களவு, வியபசாரம், பொய் இவைகள் கடவுள்பேரால் செய்யப்படலாமா என்று கேட்கிறோம்? கொலைக்காரர்கள், கால்நடைகளைக் கொலை செய்கையில் "பிஸ்மில்லாகி" என்கின்றனர்

இதிலிருந்து விளங்குவதென்னை? இஸ்லாம் மதத்தினர் மேற்கூறிய கொடுந்தொழிலைக் கடவுளின்பேரால் செய்கிறார்கள். எனவே இஸ்லாம் மதக் கடவுளைத் தயாளு, கருணாநிதி என்று அழைத்தல் முடியாது. ஏனெனின் அவர்கள் பிராணிகளிடம் கருணை காட்டவில்லை. இந்த முதல் வாக்கியத்தின் பொருள் வேறாயின் அது என்னவென்று முகம்மதியர்களைக் கேட்கிறோம்.

(2) எல்லாச் சிருட்டியின் முதல்வனே அல்லாவே, அருளாளனே, தயாபரனே, உனக்கே எனது வழிபாடு. (1 I-2).

கடவுள் சிருஷ்டியின் நாயகனாய், தயாளுவாய், ஜீவன்களிடத்தில் கருணை வாய்ந்தவராயிருப்பின், அவர் பிறமதத்தாரையும், கால்நடைகளையும் கொலை செய்தலை ஆதரிப்பாரா? உண்மையில் தயாளுவாயின் பாபிகளிடமும் அவர் கருணை காட்டுவாரா? கருணைக் காட்டுவார் என்று பதில் அளிக்

---

* குறிப்பு :—இது ஸூரா அல்லது அத்தியாயத்தின் எண்ணிக்கை.

கப்படுமாயின், அப்பதில் பொய்யான வார்த்தையாகும். ஏனெனில் காப்பிரிகளைக் கத்திக்கு இறையாக்கு என்று இம்மதம் கூறுகிறது. (அதாவது) குர்ஆனில் நம்பிக்கையில்லாதவன், மதத்தில் நம்பிக்கை யில்லாதவன் என்று கொள்ளப்படுகிறான், எனவே; குர்-ஆனை ஏற்காதவனையும் நபியிடம் நம்பிக்கை அற்றவனையும் கொல்லுதல்சரியென்று ஆகிறது. மகம்மதியர்களல்லாதாரிடத்தில் குர்-ஆன் கொடுமையுடனிருப்பதால், பசு முதலிய கால்நடைகளிடத்தில் பச்சாத்தாபமற்றதா யிருப்பதால் இது கடவுளின் வாக்காகாது.

(3) நீர்ப்புராளின் தலைவா! உனக்கே தொழுகை. உன்னையே நாடுகிறேன். எனக்கு வழிகாட்டி அருள்வாய். (1. 3-5).

கடவுள் எப்பொழுதும் நியாயத்தை அளிப்பவரல்லவா? நியாய காரியங்களைப்பற்றி அவர் குறித்த ஒரு நாளில்தான் கவனிப்பார் என்றால் அவர் குற்றம் செய்பவராவார். துஷ்கிருத்தியங்களைப் புரிவதற்கும் அவரது துணை நாடுவது நியாயமாகுமா? மற்ற மார்க்கங்கள் சரியானவை அல்லவா? தீயவழியில் நடத்தும் மார்க்கத்தை அவர்கள் சரியான மார்க்கம் எனக் கூறுகிறார்களா. நல்லது என்பது சகல மதங்களின் சம்மதமாயின் முகம்மதிய மதம் மாத்திரம் எல்லா மதங்களையும்விட எப்படி உயர்ந்ததாகும்? மற்ற மதங்களும், தங்களுடையதைபோல், நல்லமார்க்கம் தர்மம் இவைகளைக் கொண்டுள்ள தல்லவென்றால் அவர்கள் அசூயையினால்தான் சொல்ல வேண்டும்.

(4) உன் கோபத்திற்குள்ளாகாதும் உனது ஆக்ஞையை மீறி நடக்காதும் இருப்போருக்கு அருள்புரிந்து வழியைக் (காண்பிப்பாயாக). (1. 6-7).

முகம்மதியர் பிறவிகளில், முன் ஜென்மத்தில், மறுபிறப்பில் நம்பிக்கை யில்லாதவர்கள். எனவே, கர்மவினைக்கேற்றவாறு பயன் என்பது அவர்கள் மதப்பிரகாரம் ஏற்படாது. ஆதலால், ஒருவனைக் கஷ்டத்திற்குள்ளாக்குவதும், ஒருவனுக்குச் சுகத்தைத் தருவதும், மற்றொருவனுக்குத் துக்கத்தைத் தருவதும் கடவுளின் பாரபட்சத் தன்மையைக் காட்டவில்லையா? ஒருவனைக் காரணமில்லாது சுகப்படுத்துவதும், ஒருவனைத் துக்கத்திற்குள்ளாக்குவதும், கடவுள் தன்மையைக் குலைக்கிறது. மேலும் தனது இஷ்டப்படியும் இக்காரியம் செய்தல் முறையல்ல. ஜென்மமில்லாதும் எனவே புண்ணிய பாப கிருத்தியங்களுக்கு உள்ளாகாததுமான ஜீவன்களில் ஒன்றிற்கு நன்மையையும் மற்றொன்றிற்குக் கெடுதலையும் தருதல் தருமமாகுமா? கடவுளுக்கு அழகுதான் ஆகுமா!

மேலும் மேலே குறிக்கப்பட்டிருக்கும் வரியைக் கடவுள், ஜனங்கள் இதை உச்சாரணம் செய்யும்படி நேரில் சொல்லிக்கொடுத்தார் என்று ஒரு உரை கூறுகிறது. அரிச்சுவடியையும் கடவுளே நேராகச் சொல்லி வைத்திருக்க வேண்டுமென்று இதிலிருந்து தோன்றவில்லையா! இல்லையேல் இந்தச் சுலோகத்தை அவர்கள் எங்ஙனம் கற்றிருக்க முடியும்? அல்லது கடவுள் வாய்ப் பாடமாய்ச் சொல்லி வைத்தாரா? அப்படியாயின் குர்-ஆன் முழுவதும் வாய்ப் பாடமாய் கற்கப்பட்டதாகும்.

நிற்க மேற்கூறியதின் மூலம் கடவுள் பாரபட்சமானவர் என்று புலனாகிறது. அத்தகையாரைக் கடவுள் என்று வழிபடக்கூடாது. குர்-ஆன் அரபி பாஷையில் எழுதப்பட்டது என்று கூறப்படுகிறது. அங்ஙனமாயின் அரபியர்கள் இதைச் சீக்கிரத்தில் கற்றிருக்க முடியும். பிறர் அவ்வளவு இலகுவாய் கற்றிருக்க முடியாது. வேதத்தை இறைவன் எல்லாருக்கும் பொதுவானதும்; ஒரு வகுப்பாருக்கு நாட்டாருக்குச் சொந்தமற்றதுமான பாஷையில் அருளியதுபோல் செய்திருந்தால் நலமாயிருந்திருக்கும். எல்லோரும் படித்து அறியலாம், உலகத்தில் அனைவரும் சிரமப்பட்டுப் படித்து வேதத்தை அறியவேண்டும். சம்ஸ்கிருதம் ஒருவர் பாஷையல்ல, பொது பாஷை, இங்ஙனம் குரான் செய்யப்படவில்லை.

(5) இப்புத்தகத்தைக் குறித்துச் சந்தேகமே இல்லை. பயமுள்ளவன், நம்புபவன், குறிப்பிட்ட நேரத்தில் நமாசு படிப்பவன், அருளால் பெற்றதைத் தானஞ் செய்பவன், முதலியவர்களுக்குப் பாதையைக் காண்பிக்கும். உனக்காக அனுப்புவித்த இப்புத்தகத்தை நம்புபவன், உனக்கு முன்னமேயே தீர்க்கதரிசிகளுக்கு அருள்புரிந்து, வரும் வாழ்நாளில் பூர்ண நம்பிக்கை உள்ளவன், இவர்களெல்லாம் ஆண்டவனாலேயே ஆட்டப்படுகிறார். அவர்கள் வாழ்வார்கள். காபிரிகளுக்கோ நம்பாதவர்களுக்கோ எச்சரிக்கை செய்வதும் வீண், அவர்கள் நம்பார்கள். ஆண்டவனால் அவர்கள் மனமும் செவிகளும் அடைக்கப்பட்டிருக்கிறது. கண்கள் மேல் மூட்டம். அவர்களுக்கோ அளவற்ற தண்டனை. (2. 1-6).

கடவுள் தமது புத்தகமாகிய குரானை அதிகம் புகழுகிறார். இது தற்புகழ்ச்சி அல்லவா? நல்லவர்கள், பக்தர்கள் எத்துணையுமில்லாது ஒளியின் பாதையில் நடப்பார்கள். அவர்களுக்குக் குர்-ஆன் துணை தேவையில்லை. கெட்டவர்களுக்குக் குரான் ஒளிதரமறுக்கிறது. அவர்களுக்கல்லவோ துணை வேண்டும். இஸ்லாம் கடவுள் முகமதியர்களுக்கு அவர்களது செலவிற்கென்று தமது பொக்கிஷத்திலிருந்து பொருள் உதவுகிறாரா? மனிதன் சிரமமில்லாது, அவனது செயலை கவனியாது. கடவுள் எல்லோருக்கும் பணமூட்டையைக் கட்டிக் கொடுக்கிறாரா? அங்ஙனமாயின் ஏன் அவர் எல்லோருக்கும் பணத்தைத் தரலாகாது? ஏன் முகமதியர்கள் கஷ்டப்பட்டுச் சம்பாதிக்கிறார்கள்' பைபிளும் வேதபுத்தகமல்லவா? அங்ஙனமிருக்க முகம்மதியர்கள் ஏன் அவர்கள் குரானில் வைக்கும் நம்பிக்கையைப் பைபிளில் வைக்கக்கூடாது? பைபிளினும் நம்பிக்கை வைத்தலை முகம்மதியர் கண்டிக்கவில்லை என்றால் குர்-ஆன் ஏன் அருளப்பட்டிருக்க வேண்டும். குர்-ஆன் பைபிளைவிட அதிக விரிவான தத்துவங்களைக் கொண்டதெனின், கடவுள் முதல் புத்தகத்தில் எல்லாவற்றையும் சொல்ல மறந்துவிட்டாரா? அவர் மறந்திருப்பின் குர்-ஆனை ஆக்கியதும் பிரயோசனமற்றதாகும். குர்-ஆனையும் பைபிளையும் நோக்கின் இரண்டிற்கும் அதிகவித்தியாசமில்லை. அனேக விஷயங்களில் இரண்டும் ஒன்றாய்த்தான் இருக்கின்றன. கடவுள் ஆக்கியதெனின் ஏன் இரண்டு புத்தகமில்லாது வேதத்தைப்போல் ஒரு நூலை அவர் அருளியிருக்கக்கூடாது.

தீர்ப்புத்தினம் என்னும் ஒரே தினத்தைத்தானு நம்பவேண்டும். கிறிஸ்துவர்களும், முகம்மதியர்களுந்தானு கடவுள் அருள்பெற்றவர்கள். இங்ஙனம் கடவுள் கூறின் அவரது பாரபட்சமுள்ள தன்மையைப் புலப்படுத்தவில்லையா? அந்த இருமதத்தினர்களில் பாபிகள் இல்லையா? கிறிஸ்துவ முகம்மதிய வகுப்பில் பாபிகளும் வளர்ச்சி அடைவார்கள்; மற்றவர்கள் எவ்வளவு தர்மாத்மாக்களா யிருந்தாலும் கடவுள் அருள்பெற்று வளரமுடியாது. இதுதான் முகம்மதியர்கள் அபிப்பிராயமா? இஸ்லாமில்லாதவர்களைக் காப்பிரிகள் என்பதுதான் நியாயமோ? எனவே கடவுள் கூறிய தத்துவம் மனிதனைத் தீய வேலைகளில் புகச் செய்யின், அது கடவுளின் குற்றமேயாகும். அங்ஙனம் கடவுள் செய்துவிட்டு நல்லுவழியில் செல்லாதவனைத் துன்புறுத்தலும் துஷ்டத்தனமாகும். ஒருவன் ஏன் கஷ்டப்படவேண்டும்? ஒருவன் சுகப்படவேண்டும்?

(6) அவர்கள் உள்ளத்தில் இருப்பவை ரோகம். அல்லாவானவர் அதை அதிகரிக்கிறுர். (2. 9).

அவர்கள் நிரபராதியாயிருக்கத், தீய விஷயங்களில் நடத்தல் என்னும் ரோகத்தை வளர்க்கிறுர் என்பதுதான் உங்கள் கொள்கையோ. கடவுளுக்கு இரக்கமில்லையா? இது மிருகத்தனமல்லவா? ரோகத்தை வளர்த்தல் என்பது கடவுளின் வேலையாயிருத்தல் கூடாது. மனிதன் தீய விஷயம் செய்வது அவனது பாபச் செயல்களினுல்தான். அது அவனது காரியமேயாகும்.

(7) பூமியைப் படுக்கைபோல் விரித்து, ஆகாசத்தை உனக்கு போர்வைபோல் செய்துளார். (2. 20).

சுவர்க்கலோகம் பூமியின் கூரையாகுமா? இது குரான் செய்த கடவுளின் அறியாமையைக் காட்டவில்லையா? வானம் கூரையென்று கூறுதல் அசட்டுத்தனமாகும். முகம்மதியர்கள் சில கிரகங்களை சுவர்க்கம் என்று கூறினர். அது அவர்களுடைய மனுேபாவ சிருஷ்டியே யாகும்.

(8) அல்லாவின் கிருபையால் உண்டான குர்ஆனில் சந்தேகமுற்றுல் இதைப் போலுள்ள ஒரு அத்தியாயத்தைச் செய்வாயாக! உண்மையானுல் அல்லாவைத் தவிர வேறு சாட்சியைத் தயார் செய்வாயாக.

நம்பி, நற்காரியஞ் செய்வோர்களுக்கு ஆனந்த திருப்தி வாக்கியத்தை அளி. அவர்களின் தோட்டத்தில் ஆற்று நீர் பாயும். (2. 21-22).

சரி, கவனிப்போம். இதைப்போல் ஒரு அத்தியாயம் எழுதுதல் முடியாததா? அக்பர் காலத்தில் மோல்விபெய்ஸ் என்பவர் குர்-ஆன் உதவியில்லாது ஒரு புதிய குர்-ஆனைச் செய்யவில்லையா? நரகம் என்பதில் இருக்கும் தீ எத்தகையது. இந்த உலகத்திலுள்ள நெருப்புக்கு அஞ்சவேண்டாமா! தீ தன் வயப்பட்டவைகளை அழிக்கவில்லையா? குரான் நம்பிக்கை அற்றவர்களுக்கு (இஸ்லாம் மதத்தினரல்லாதவர்களுக்கு) கல்லுதான் என்று கூறுவது புராணங்களில் மிலேச்சர்களுக்கு நரகந்தான் என்பது போலிருக்கிறது. இந்த இரண்டில் புராணங் கூறுவதை ஏற்பதா? அல்லது குரான் சொல்வதை ஏற்பதா?

இரண்டும் உண்மையாக முடியாது. நல்லவர்களும், தர்மாத்மாக்களுந்தான் நற்கதியை அடைவார்கள். துஷ்டர்கள் துக்கத்தைத்தான் அடைவார்கள்.

(9) ஆகாரத்திற்காகப் பழம் தின்னும்பொழுதெல்லாம் இதுதான் நாம் முன் தின்றது என்பார்கள். ஒன்றேபோல் வேறொன்று உள்ள பலவகைப் பழங்கள் அவர்களுக்களிக்கப்படும். மிகவும் புனிதமான மனைவிகளை அடைவார்கள். இவர்களைத் தவிர மற்றவர்கள் தீயவழியில் திருப்பப்படுவார்கள். (2. 24).

குரானில் கூறும் சுவர்க்கம் இந்த உலகத்தைவிட மேலானதாகவில்லை. இந்த உலகில் கிடைக்கக் கூடியதுதான் அங்கும் கிடைக்கிறது. ஒரு வித்தியாசமுளது. இங்கு மனிதர்கள் சாகிறார்கள். அங்கு சாகிறதில்லை. மாதர்கள் இங்கு இறக்கிறார்கள். அங்கு சிரஞ்சீவியாக இருக்கிறார்கள். சுவர்க்கதியிலிருக்கும் மாதர்கள் தீர்ப்பு தினம் வரையில் எங்ஙனம் காலத்தைக் கழிக்கிறார்கள். முகம்மதியக் கடவுள், இம்மாதர்களின் துணையாயிருந்து காலங்கழிக்க உதவுகிறார் போலும். இது கோஸாவிகள் கூறும் கோலத்தைப் போலிருக்கிறது. கடவுளின் சந்நிதியாகிய சுவர்க்கத்தில் மாதர்களுக்கு மதிப்பு அதிகமாயிருக்கிறது. மாதர்கள் எப்பொழுதும் சுவர்க்கத்தில் இருக்கிறார்கள். மனிதர்கள் மாத்திரம் அங்கு இல்லை. இத்தகைய ஏற்பாடு கடவுள் விருப்பமின்றிருக்க முடியாது. எனவே முகம்மதியக் கடவுளுக்கு ஸ்திரீகளின் காம வலையில் சிக்கும் ஆபத்திருந்து வருகிறது.

(10) ஆதாமுக்கு எல்லாப் பெயரையும் கற்பித்தார். தேவர்களின் முன்னிலையில் வைத்து உண்மையை உரைப்பாயானால் "இதன் பெயரை எல்லாம் சொல்" என்றார். "ஆதாமே அவர்களுக்கு இப்பெயரைச் சொல்" என்றார். அவர்களின் பெயரை உரைத்தவுடன் பூமியினுடையவும் ஆகாசத்தினுடையவும் இரகசியங்களையும் நீ அறிவதையும் நீ மறைப்பதையும் நான் அறிவேனென்று சொல்லவில்லையா என்றார்?

தனது பெருமையை விளக்கும்பொருட்டு கடவுள் இங்ஙனம், தன்னகமுள்ள தேவர்களை ஏமாற்றலாமா? இங்ஙனம் செய்தல் பிசகல்லவா? அறிவாளிகள் இங்ஙனம் கடவுள் செய்தலை நம்பமாட்டார்கள். கடவுளும் இங்ஙனம் செய்யாது. இத்தகைய புன்சொல், அறிவும் நாகரிகமும் படைத்தவர்களிடம் செல்லாது. காட்டுமிராண்டிகள்தான் நம்புவார்கள்.

(11) ஆதாமைத் தொழு எனத் தேவர்களுக்குச் சொல்ல எல்லோரும், எபிலிசை (சைத்தான்) தவிர அவரைத் தொழுதார்கள். அவன் கர்வத்தினால் நிரம்பி காபிரிகளில் ஒருவனானான். (2. 32).

இது முகம்மதியக் கடவுளின் சர்வ வல்லமையுள்ள சக்தியைக் காட்டவில்லை. இதிலிருந்து அவருக்கு முற்காலத்தை உணரும் தன்மையிருப்பதாகவும் தெரியவில்லை. சர்வ வல்லமையுள்ள அருட்பெருங் கடவுளாயிருப்பின் சாத்தானை அவர் படைத்திருக்கமாட்டார். சாத்தான் கடவுள் கட்டளையை மறுத்தும், அவரால் சாத்தானை அடக்க முடியவில்லை. இந்த ஒரு சாத்தானை அடக்கி ஆளும் திறமை படைக்காத கடவுள் எங்ஙனம் லட்சக் கணக்கில்

இருக்கும் சாத்தான் துணைவர்களைத் (நம்பிக்கை யற்றவர்கள்) தீமை செய்யாது பார்த்துக்கொள்ள முடியும். மனிதன் மனத்திடை உள்ள பலஹீனத்தைக் கடவுள் வளர்க்கிறார். சிலரைத் தப்பு வழியில் செல்லவிடுகிறார். இதிலிருந்து கூறப்படும் உண்மையாது? சாத்தானிடம் இருந்து கடவுள் கொஞ்சம் படித்துக் கொண்டுள்ளார். சாத்தான் கடவுளிடமிருந்தும் கொஞ்சம் கற்றுங் கொண்டிருக்கிறான்.

(12) ஆதாமே நீயும் உன் மனைவியும் தோட்டத்தில் வசி. எல்லா மரங்களின் பழத்தை நன்றாய் உருசிபார்க்க. ஆனால் இம்மரத்தண்டை அணுகாதீர்கள். இல்லையேல் அத்துமீறி நடப்பவர்கள் ஆவீர்கள். ஆனால் எபிலிசு அவர்களைச் சுவர்க்கத்தைத் துறக்கச்செய்து ஆனந்தத்திலிருந்து தூரத்தப்படும் படி செய்தான். நாம் உடனே சொன்னதாவது. பூமியே உன் இருப்பிடம். உங்கள் ஒருவருக்கொருவர் பரஸ்பர சத்துருவாவீர்கள். சிலகாலம் கழியும்வரை இலாபம். தலைவனின் சிலவார்த்தைகளைக் கேட்டு பூமியில் இறங்கினான். (2. 33-35).

முதலில் கடவுள் ஆதாமைச் சுவர்க்கம்போன்ற தோட்டத்தில் இருக்கச் செய்தார். பிறகு தோட்டத்திலிருந்து தள்ளிப் போட்டார். வருங்காலத்தை அவர் அறிந்திருந்தால் ஆதாமிற்கு இந்த உயர் வாழ்வைத் தந்திருக்க வேண்டாம். மேலும் கடவுளுக்குப் பிறரை மயக்கித் தீமையை விளைக்கும் சாத்தானைத் தண்டிக்கவும் போதிய சக்தியில்லை.

நல்லது கெட்டது என்று உணர்ச்சி தரும் மரத்தைத் தோட்டத்தில் பயிராக்கியது யார். கடவுள் பயிர் செய்தாரா? அவருக்காகவா? அல்லது பிறருக்காகவா? பிறருக்கென்றால் ஆதாம் எவாளை இம்மரத்தின் பழத்தைத் தின்னவேண்டாம் என்று தடுத்திருக்க வேண்டியதில்லையே? உண்மையான கடவுள் இத்தகைய முரண்பாடான காரியங்களைச் செய்திருக்கமாட்டார். அவர் புத்தகத்திலும் இத்தகைய கதைகள் இருத்தல் முடியாது. ஆதாம் கடவுளிடம் இருந்து கற்றுக்கொண்டதொன்றே? அந்தச் சுவர்க்கத் தோட்டத்திலிருந்து ஆதாம் எவாளுடன் எங்ஙனம் வீழ்ந்தார்? சுவர்க்கத் தோட்டம் எங்கிருக்கிறது? வானத்திலா? எங்காவது மலையுச்சியிலா? பட்சிபோல் பறந்து ஆதாம் கீழே விழுந்தாரா? அல்லது கல்லைப்போல் கீழே விழுந்தாரா?

ஆதாம் இருந்த சுவர்க்கத் தோட்டத்தில் மண் இருப்பதாகத் தெரிகிறது. ஏனெனின் ஆதாம் மண்ணால் செய்யப்பட்டார். மண்ணால் செய்யப்பட்டது மண்ணுடன் மடியவேண்டியது நியாயமே. சுவர்க்கத்திலிருக்கும் தேவதைகளும் சாவுடையவர்கள் எனின் அவர்கள் செத்தபிறகு எங்கு செல்லுகிறார்கள். அவர்கள் சாகமாட்டார்கள் என்றால், சாவற்றதற்குப் பிறப்புமில்லை. ஏனவே தேவதைகள் என்பவை இருக்க முடியாது. பிறந்தது இறந்தே தீரவேண்டும். இங்ஙனமிருக்கக் குர்-ஆன் சுவர்க்கத்திலிருக்கும் மாதர்கள் சிரஞ்சீவி என்று கூறுகிறது. அங்ஙனம் இருத்தல் முடியாது. எனவே இதிலிருந்து அறியற்பாலது என்னவென்றால் சுவர்க்கத்தி லிருப்பவர்களுக்கும் சாவுண்டு என்பதே.

(13) ஒரு ஜீவன் மற்றொன்றுக்குத் திருப்தி யளிக்க வல்லமையற்றது. அந்த தினத்தைப்பற்றிப் பயப்படு. அவர்களிடமிருந்து எந்தவிதமான சிபார்சும் ஏற்படாது. பிரதிபயனும் ஏற்படாது. சகாயமும் கிடைக்காது. (2, 46).

நாம் எப்பொழுதும் தீச் செயல்களைக் கண்டு அஞ்சவேண்டும். இது நாம் என்னாளும் செய்யவேண்டியதே. உனக்காகப் பரிந்து பேசுபவர்களின் பேச்சு ஏற்கப்படாது என்று குர்-ஆன் கூறுகிறது. தீர்க்கதரிசிகளின் துணையினால் ஒருவன் சுவர்க்கம் செல்லலாம் என்னும் முகம்மதிய நம்பிக்கைக்கு இது முரணாகவில்லையா? கடவுள் சுவர்க்கத்தி லிருப்பவர்களைத்தானா ஏற்று உதவிபுரிகிறார்? நரகத்தி லிருப்பவர்களிடம் அவருக்குக் கருணையில்லையா? அங்ஙனமாயின் கடவுள் பாரபட்சமுடையவர் என்று தோன்றவில்லையா?

(14) மூசாவிற்கு புத்தகங்களையும் அற்புதங்களையும் அளித்தோம். நிந்திக்கும் குரங்குகளாக மாறுவாய் என்றோம். அக்காலத்தி லுள்ளவர்களுக்கு அது உதாரணமாவது மன்னியில் வருபவர்களுக்கும் அப்படியே புனிதமானவர்களுக்கும் அது எச்சரிக்கையாகிறது. (2, 50,61).

இப்புத்தகம் மூசா கையில் கொடுக்கப் பட்டதெனின் குர்-ஆன் கடவுளால் அளிக்கப்பட்டது என்பது பொருளற்றதாகிறது. குரானும், பைபிளும் மோசேயினிடம் அரும் பெரும் சக்தி அளிக்கப்பட்டதென்று கூறுகின்றன. இது நம்பத் தக்கதல்ல. ஒருவனும் ஆச்சரிய சக்திகளைச் செய்யும் இயல்புடையவனாய் இருக்க முடியாது. இருப்பின் ஏன் இக்காலத்தில் நாம் அத்தகைய சக்தி படைத்தவனைக் காண முடியவில்லை. இன்று இல்லாதது, பண்டைக்காலத்திலும் இருந்திருக்க முடியாது.

அறியாமையில் இருக்கும் சாதாரண ஜனங்களைக் கெட்டிக்காரனாய் இருப்பவன் ஏமாற்றுவதுபோல, மூசாவும் செய்திருக்கிறார் என்றே கொள்ள வேண்டும். கடவுள் இக்காலத்தி லிருப்பவர்களில் ஒருவனிடம் கூட ஏன் அந்த அபார சக்திகளைத் தரவில்லை. அக் கடவுள் இன்றுமிருக்கிறார். அவரைப் பின் பற்றுபவர்களும் இருக்கிறார்கள். ஏன் ஒருவரும் பெருஞ் சக்தியையும் படைத்தவர்களா யிருக்கவில்லை. மூசாவினிடம் கடவுள் ஒரு நூலைத் தந்த பிறகு, ஏன் அவர் மீண்டும் குரானை வழங்கவேண்டும்? கடவுளின் போதனை மனிதர்களைத் தீய காரியங்களிலிருந்து விலக்கி நன்மார்க்கத்திற்குக் கொண்டு வருதல் ஆயினும், பைபில், குரான் என்னும் இரண்டு புத்தகம் எதற்கு? ஒரு புத்தகம் போதாதா? மூசா கையில் கொடுத்த புத்தகத்தில் சொல்ல மறந்ததைக் கூறக் குரானை அளித்தாரா? மேலும் கடவுள் காட்டிய பாதையினின்று விலகியுள்ளவர்கள் குரங்காக மாற்றப்படுவார்கள் என்று கடவுள் கூறியது இதுவரை நடந்தேறவில்லை. எனவே இது மோசவார்த்தையாகும். மேலும் இங்ஙனம் யாராவது செய்தாலும், அவர்கள் கடவுளாகமாட்டார்கள். இங்ஙனம் கூறும் புத்தகமும் சத்திய நூலாகாது.

15. அப்படியே அல்லாவானவர் இறந்தவனை உயிர்ப்பிக்கிறார். அவர் அடையாளங்களை நீ அறிந்து கொள்வதற்காகக் காண்பிக்கிறார். (2, 67).

பழமையில் கடவுள் இறந்தவர்களைப் பிழைக்கச் செய்யின், அவர் ஏன் இப்பொழுது அவ்வாறு செய்தல் கூடாது? இறந்தவர்கள் தீர்ப்புத்தினம் வரையில் புதை குழியில் இருக்க வேண்டியதுதானு? உங்கள் கடவுளுக்கு நேரம் அகப்படாதோ. சுற்றுப் பிரயாணம் செய்து வருகிறாரா? அந்த தீர்ப்புத்தினத்தன்றுதான் அவகாசம் ஏற்படுகிறதா? செத்தவர்களைப் பிழைக்கச் செய்தல் கடவுள் இருப்பதற்காகச் செய்யப்படும் வேலையா? பூமியும், சந்திரனும், சூரியனும் அவர் இருப்பதைக் காட்டுவதற்காகச் செய்யப்படும் வேலையாகாதா? கிரகங்களின் நிலை கடவுளின் இருப்பைப் புலப்படுத்தவில்லையா?

(16) அவர்கள் எப்பொழுதும் தெய்வலோக வாசிகளாக இருப்பார்கள் (2, 75).

ஆத்மா வரம்புகுட்பட்டது. அதன் கிருத்தியங்கள் நல்லதாயினும் சரி கெட்டதாயினும் சரி வரம்பிற்குட்பட்டதே. ஆத்மா, நரகத்திற்கோ, சுவர்க்கத்திற்கோ அழைத்துச் செல்லப்படாது. கடவுள் அப்படிச் செய்தால் அவரது பாரபட்சமற்ற நியாயம் என்பதற்கு குறைவு ஏற்படும். நல்ல ஆத்மாவாயினும் சரி, தீய ஆத்மாவாயினும் சரி தீர்ப்புத்தினம் வரை காத்திருக்கவேண்டுமெனின் தீமைக்கும், நன்மைக்கும் வேற்றுமையில்லாது போய்விடுகிறது. மனித கர்மங்கள் வரம்பிற்குட் பட்டதாகையால், அதற்கு அளிக்கும், வெகுமானமோ அல்லது தண்டனையோ வரம்பிற்குட்பட்டதாகவே யிருக்கவேண்டும். முகம்மதியர்கள் இவ்வுலகம் 7000 அல்லது 8000 வருஷங்களாகத்தான் இருப்பதாக நினைக்கிறார்கள். நம்பவும் செய்கிறார்கள். அங்ஙனமாயின் கடவுள் சிருஷ்டிக்குமுன் என்ன செய்து கொண்டிருந்தார். சும்மா கையைக் கட்டிக் கொண்டு சோம்பேரியாய் இருந்தாரா? கடவுளுக்கு ஓய்வென்பது கிடையாது. எப்பொழுது வேலை செய்துகொண்டே யிருக்கிறார். அவர் சோம்பேரியல்ல. நன்மை தீமை அறிந்து அவைகளுக்கு ஏற்றவாறு வெகுமானமும், தண்டனையும் அளித்து வருகிறார். எனவே குர்-ஆன் சொல்வது உண்மையல்ல. குழந்தை விளையாட்டே ஆகும்.

(17) உன் இரத்தத்தைச் சிந்தக் கூடாதென்றும், பரஸ்பரம் இருப்பிடத்திலிருந்து விலகக்கூடாது என்றும் உம்மிடம் பிரதிக்ஞை செய்யப்பட்டபொழுது அதற்கு நீங்கள் சம்மதித்தீர்கள். அதற்குச் சாட்சிகளும் நீங்களே. நீங்கள் தான் ஒருவரை யொருவர் கொன்றீர்கள், உங்களுடைய ஜனங்களையே நீங்கள் இருப்பிடத்திலிருந்து துரத்தினீர்கள். (2, 78, 79).

மனித சமூகத்தார் சௌக்கியத்தை ஒட்டிய விதிகளையும், பாகுபாடுகளையும் செய்தல் மனிதன் வேலையா? கடவுள் வேலையா? கடவுள் எல்லாம் வல்லவராயிருக்க, மனிதனைப்போல் காரியங்கள் செய்தல் கூடாது. மனிதனைக் கொல்வதும், வருத்துவதும், அவன் சொத்துக்களைப் பறிப்பதும் தப்பு இல்லை என்று கருதுதல் எங்ஙனம் முறையாகும். இத்தகைய நம்பிக்கைக்குக் காரணம் அறியாமை. முகம்மதியக் கடவுள், கிறிஸ்தவக் கடவுளைப் போலவேதான் அனேக அச்சங்களில் இருக்கிறார். குரான் தனிப்புத்தகம் என்று சொல்லப்படினும், இது பைபிளின் எதிரொலியே யாகும்.

(18) வருங்கால வாழ்வை வாங்குபவர்கள் இவர்களே. அவர்கள் பாபம் குறைக்கப்படாது; அவர்களுக்குச் சகாயமும் கிடைக்காது. (2, 80).

இங்ஙனம் கடவுள் ஆக்கையுடனும், சந்தேகத்துடனும் நிகழ்த்தல் அவருக்கு அழகாமோ? பாபங்களைச் செய்திருப்பின கடவுளின் ஆதரிப்பையும் பெறும், நபர்கள் யாவர். இங்ஙனம் சிலரின் பாபகிருத்தியம் மன்னிக்கப்படின் பட்சபாதமாகக் காரியங்களைச் செய்பவராகாரா? பக்தர்களின் பாபங்கள் மன்னிக்கப்படும் எனின், பக்தர்கள், பாபகிருத்தியம் செய்தல் முடியாது. எனவே எவரது துணையும் அவர்களுக்கு வேண்டியதில்லை யல்லவா? ஆதலால் இத்தகைய முரண்பாடான தத்துவத்தைக் கூறினவர் அறிஞராகமாட்டார்; என்பது வெளிப்படை. நற்கர்மம் செய்தார் நன்மையையும், தீய கர்மங்களைப் புரிந்தோர் தண்டனையையுந்தான் ஏற்பார்கள். நல்லவர்கள் சந்தோஷத்தைப் பெறுவர். இதுதான் சத்தியமாகும்.

(19) மூசாவிற்குக் 'கிரந்தத்தை" அருளினேம். அவருக்குப் பின் தீர்க்கதரிசிகளை யனுப்பினேம். மேரியம்மாளின் மகனான இயேசுவிற்குத் தெய்வசக்தியையும் சாமர்த்தியத்தையும் (அற்புதத்தையும்) அருளினேம். எவ்வளவு தடவை தீர்க்கதரிசிகள் வந்தபோதிலும் கர்வத்தால் நிரம்பி சிலரை நிராகரித்துக் கொல்லவும் செய்கிறீர்கள். (2. 81).

கடவுள் மூசாவிக்குச் சட்டத்தை அளித்ததைக் குரான் அறியுமாகுல் முகம்மதியர்கள் மூசா வகுத்த சட்டத்தில் அல்லவா நம்பிக்கை வைக்க வேண்டும். ஆச்சரியங்களைப்பற்றிச் சொல்லப் பட்டிருப்பதும் பொருளற்றதாகும். சாதாரண ஜனங்களை ஏமாற்றவே தந்திரக்காரர்கள் இக்கதையைக் கட்டிவிட்டிருக்கின்றனர். இயற்கையின் தத்துவத்திற்கு விரோதமான எல்லாச் சட்டங்களும், பாகுபாடுகளும் பொய்யானதே. சிலர் ஆச்சரியங்களைச் செய்தார்கள் என்று வைத்துக்கொள்வோம். அந்நாளில்தான் அவை செய்யப்பட வேண்டுமோ? அந்நாளில் செய்யப்படுமாயின் இந்நாளிலும் செய்யப்பட வேண்டுமெல்லவா? இப்பொழுது எவராலும் அந்த அபூர்வ சக்தியைக்கொள்ள முடியவில்லை. எனவே அந்நாளிலும் ஒன்றும் செய்ய முடியாது.

(20) தொழுகை செய்யாதவர்களுக்கும் அவர்கள் ஐயத்தின் நிமித்தம் தொழுகை செய்தவர்கள் அதைப்பற்றி அறிந்திருந்தும் குரான் சரீபு இறங்கின வுடன் அதை ஆதரிக்கவில்லை. காபிரிகளுக்கு அல்லாவின் சாபம். (2, 83).

இஸ்லாம் மதத்தைத் தழுவாத பிறமதத்தினரை நம்பிக்கையற்ற மதமற்ற புல்லியர் என்று அழைக்கிறீர்கள். அவர்களும் உங்களை அங்ஙனந்தான் அழைக்கிறுர்கள். உங்கள் கடவுள் அவர்களைச் சபித்திருப்பதுபோல அவர்கள் கடவுளும் உங்களைச் சபிக்கவே செய்கிறது. இவைகளில் எது சரியானது. எது பொய் என்று அறிய விரும்புகிறேம். எல்லாக் கொள்கைகளிலும் தப்பு இருக்கிறது.

(21) எவனொருவன் அல்லாவின் அல்லது தேவனின் அல்லது கேபிரியிலின் அல்லது மைக்கலின் விரோதியோ அவன் அல்லாவின் சத்துருவே

ஆகிறான். ஏனென்றால் உண்மையாகக் கடவுள் காபிரியின் விரோதியா யிருக்கிறார். (2, 92).

இந்தக் கூட்டாளிகள் எங்கிருந்து வருகின்றனர். இஸ்லாம் மதம் சொல்வதுபோல் கடவுள் ஒருவர் எனின் கூட்டாளிகள் இருக்க முடியாதல்லவா? பிறருக்கு விரோதி கடவுளுக்கு விரோதியே. எனவே கடவுள் எவனுக்கும் விரோதியல்ல. கடவுள் நம்பிக்கை அற்றவர்கள் விரோதி என்பதில் பொருள் இல்லை.

(22) பொறுத்தருள்வாய் என்று உரை. உன் பாபங்களை எல்லாம் மன்னித்து விடுவோம், நற்காரியங்களைச் செய்வோருக்கு அதிகரிப்போம். (2, 54).

தெய்வ தத்துவம் என்று சொல்லப்படும் இவை மனிதனைப் பாபச் செயல்களைப் புரியுமாறு தூண்டவில்லையா? பாபத்திலிருந்து நீக்கப்படுவார்கள் என்று கூறப்படுகையில் ஒருவர் ஏன் பாபத்திலிருந்து விலகவேண்டும். பாபத்திலிருந்து காப்பாற்றுவேன் என்று வாக்குக் கொடுப்பவன் கடவுளாகமாட்டான். அங்ஙனம் கூறும் நூலும் சத்திய நூலாகாது. கடவுள் ஒருநாளும் நியாயமற்றதைச் செய்யமாட்டார்; பாபிகளை அவர் மன்னித்தால் அவர் நியாயம் செய்பவராகமாட்டார்.

(23) ஜனங்களின் நிமித்தம் மூசா பருகக் கேட்டபொழுது "கல்லைக் கழியால் அடியும்" என்றோம், அதிலிருந்து பன்னிரண்டு சுனைகள் பாய்ந்தது. (2, 57).

இஸ்லாம் கடவுளைத் தவிர வேறு யாரும் இவ்வளவு தைரியமாய், இத்தகைய பொய்களையும், முடியாத பொருளற்றவைகளையும், கூற முடியாது. ஒரு மலையை மாத்திரம் கோலால் தொட்டவுடன் பன்னிரண்டு ஊற்றுக் கண்கள் கிளம்பியது என்பது பெரும் சொப்படி வித்தை. மலையைத் துளைத்து தண்ணீரைவிட்டு, 12 துவாரங்களைச் செய்திருக்க வேண்டும். இல்லையேல் எங்ஙனம் ஊற்றுக்கண் நிரம்பக்கூடும்.

(24) அவருக்கு இஷ்டமானவிடத்தில் தனித் தயையை அல்லாவானவர் அருளுவார். (2, 99).

கடவுள் விரும்பிய சிலருக்குத் தமது விசேஷ மன்னிப்பைக் காட்டுவாரா? அங்ஙனம் செய்யின் அவர் துஷ்டராவார். மனிதனைப் பாப கர்மத்தைச் செய்யும்படி தூண்டிய பாபத்திற்குள்ளாவார். மேலும் இங்ஙனம் ஒரு வேத நூல் கூறுமாயின் உலகில் எவரும் நற்காரியத்தைச் செய்ய முற்படார். ஏன் என்று கேட்கலாம். கடவுள் தமது இஷ்டப்படி மன்னிப்பையும் கோபத்தையும் அளிக்கிறார் என்று கூறப்படுகிறது. தன் கர்மத்திற்குத் தக்கவாறு பலன் அளிக்கப்படுவதில்லை என்பது சித்தமாகிறது. எனவே எல்லோரும் கெட்ட காரியங்களைச் செய்யவே முற்படுவார்கள்.

(25) ஈர்ஷையினால் உன்னை, ஜனங்கள் உன் மதத்திலிருந்து திருப்பாமலிருக்கட்டும், நம்புபவர்களின் நண்பர்கள் பலர் அதில் இருக்கின்றனர். (2, 110).

இந்த ஆச்சரியத்தை நோக்குங்கள். ஜனங்கள் தங்கள் மதத்தைவிட்டு வேறு மதம் செல்லாதிருக்க வேண்டி பந்தோபஸ்துக்களையும் செய்திருக்கிறார். இங்ஙனமாயின் சர்வ வல்லமை அற்றவரா? இத்தகைய கூற்றுகள் உண்மையாகுமா?

(26) எப்பக்கம் திரும்பியபோதிலும் அல்லாவின் முகமே (2, 109).

இது உண்மையாயின் ஏன் முகம்மதியர்கள் பிரார்த்தனை சமயம் மெக்கா இருக்கும் திசையில் திரும்பவேண்டுமென்கிறார்கள். இத்திசையாகத் திரும்ப வேண்டுமென்று கடவுள் கூறியிருப்பின் எத்திசையிலும் நான் இருக்கிறேன் என்றும் கூறியிருக்கிறார். எனவே எத்திசையிலும் திரும்பி பிரார்த்தனை செய்யலாம் அல்லவா? இந்த இரு கட்டளைகளில் எதை எடுத்துக் கொள்கிறது, எதை விட்டுவிடுவது. கடவுளுக்கு முகம் இருக்குமாயின் அந்த முகம் ஒரு திசையில்தான் இருக்கவேண்டும். எல்லா திசையிலும் இருக்க முடியாது.

(27) பூமியையும், ஆகாசத்தையும் முழுவதும் உற்பத்தி செய்தவர் அவரே. அவர் எதை வேண்டியபோதிலும் உரைக்க வேண்டியதுதான் பாக்கி. அது அப்படியே நடந்துவிடும். (2, 111).

'அப்படியே யாகட்டும்' என்று கடவுள் கூறியதை யார் பார்த்தார்கள். யாருக்கு இவ்வார்த்தை சொல்லப்பட்டன. எப்பொழுது? குர்-ஆனைச் சிருஷ்டிக்குமுன் கடவுளைத் தவிர யாருமில்லை, ஒன்றுமில்லை என்று சொல்லப்பட்டிருக்கிறது. 'அப்படியே யாகட்டும்' என்ற வார்த்தையாலா உலகம் உண்டாச்சுது. இந்த உலகத்தின ஆக்குதலுக்குக் காரணமென்ன, காரணமில்லாது காரியம் ஏற்படல் கூடுமா? ஜடக்காரணம் இல்லாது எதுவும் செய்தல் முடியாது. ஒரு ஈயின் காலைக்கூட உன்னால் செய்யமுடியாது. கடவுளது பொருளற்ற உள்ளத்திலிருந்து சிருஷ்டி ஏற்பட்டது என்று குர்-ஆன் நம்புதல் கூடுமா?

முகம்மதியர்:—கடவுள் சர்வ வல்லமை உள்ளவர். அவர் நினைத்த எதையும் செய்ய முடியும்.

ஆரா:—'சர்வ வல்லமை' என்பதின் பொருள் என்ன?

முகம்மதியர்:—அவர் விரும்பியதைச் செய்யும் சக்தி.

ஆரா:—அவர் இன்னொரு கடவுளைச் சிருஷ்டிக்க முடியுமா? அவர் சாக முடியுமா? அவருக்கு நோய் வருமா? அறிவை இழப்பாரா?

முகம்மதியர்:—இல்லை.

ஆரா:—கடவுள் அவரது இயற்கைத் தத்துவத்திற்கு விரோதமாய் எதையும் செய்ய முடியாது என்பது இதிலிருந்து விளங்கவில்லையா? குண கர்ம ஸ்வபாவங்களுக்கு விரோதமாகவும் ஒன்றும் செய்ய முடியாது. ஒரு காரியத்தைச் செய்ய இக்காரணங்கள் தேவை. அவையாவன:—

(1) பானை செய்யக் குயவன் தேவைப்போல் படைப்பின் அதிகாரி ஒருவர் வேண்டும்.

(2) பானை செய்ய குயவன் மாத்திரம் போதுமா? மண்ணும் தேவை. அதைப்போல் ஜடமும் தேவை.

(3) பானை செய்ய ஒரு ஆயுதமும் தேவையாயிருக்கிறது. இது பிரகிருதி

ஒரு பானை செய்யக் களிமண்ணும், ஆயுதமும், பானை சிருஷ்டியின் முன்னிருக்க வேண்டும். இதேபோல் கடவுளும், ஜட பதார்த்தமும், பிரகிருதியும் உலகத்தை ஆக்க வேண்டும். எனவே குர்-ஆன் சொல்வது பொருளற்றது. அறியாமையினின்று எழுந்தது.

(28) காபா என்பது புனிதமென்று நான் ஆக்ஞாபித்தபடியால் ஆபிரகாமினுடைய இடஞ்சென்று தொழுகை செய்யவேண்டும். (2, 117).

காபா வென்னுமிடத்தைப் புண்ணிய ஸ்தலமாகச் செய்யுமுன் கடவுள் வேறு ஒரு ஸ்தலத்தையும் விடுக்கவில்லையா? அப்படிச் செய்யவில்லை எனின் ஏன் இப்பொழுது செய்யவேண்டும்? காபா புண்ணிய ஸ்தலமாகுமுன் ஜனங்கள் எங்கு சென்று தொழுதார்கள். ஐயோ பாவம், காபாவிற்குமுன் பிறந்த ஜனங்களுக்குத் தொழவும் புண்ணிய ஸ்தலம் கிடையாது. காபாவைப் புண்ணிய ஸ்தலமாக்குவதற்கு முன் முகம்மதியக் கடவுளுக்கு ஒரு புண்ணிய ஸ்தலம் ஏற்படுத்த வேண்டுமென்று தோன்றவில்லை போலும்: பரிதாபம்.

(29) தன் ஜீவனை இழிவாகச் செய்தவனைத் தவிர வேறு எவன் ஆபிரகாமை விரும்பாமல் இரான். இவ்வுலகில் அவனை விரும்பினோம். வருங்காலத்தில் நியாயத்தில் சேர்ந்திருப்பான். (2, 124).

ஆபிரகாமை நம்பாதவன் முட்டாள் என்பது உண்மையாகுமா? ஏன் கடவுள் ஆபிரகாமை மாத்திரம் மதஸ்தாபகராக எடுக்கவேண்டும். ஆபிரஹாம் பக்திமான் என்றால், அவரைப்போல் அநேக பக்திமான்களில்லையா? ஏன் அவர்களை எடுத்திருக்கக் கூடாது. ஆபிரஹாம் பக்திமான் இல்லாதிருந்தும் எடுத்திருப்பின் கடவுள் துஷ்டர்களைத்தான் தமக்கு வேண்டியவர்களாகச் சேர்த்துக் கொள்கிறார் என்பது சித்தமாகிறது.

30. ஆகாசத்தின் ஒவ்வொரு திசையிலும் அவர் திரும்புவதைப் பார்த்திருக்கிறோம். கிப்லாப்பக்கம் உங்களைப் பார்க்கச் செய்வோம். அது உங்களுக்கு இன்பமளிக்கும். புனித மசூதியின் திசையில் உன் முகத்தைத் திருப்பு. எங்கு இருந்தபோதிலும் அப்பக்கமே உன் முகத்தைத் திருப்புவாயாக. (2, 139).

இது உருவ வணக்கமே யாகும் முரட்டுத்தனமான மூர்த்தி பூஜையே யாகும்.

முகம்மதியர்:—முகம்மதியர்களாகிய நாங்கள் உருவ வழிப்பாட்டுக்காரர்களல்ல. உருவத்தைத் தகர்ப்பவர்கள். ஏனெனில் கிப்லாவைக் கடவுளென்று நம்பவில்லை.

ஆராய்ச்சிக்காரன்:—உருவத்தை வழிபடுபவர் என்று உங்களாலழைக்கப்பட்டவர்களும் உருவத்தை வழிபடவில்லை. உருவத்தினுள் இருக்கும் கடவுளைத்

தான் வழிபடுகிறார்கள். நீங்கள் உருவத்தை உடைப்பவர்களாயின் ஏன் பெரும் உருவமான கிப்ளாவை உடைக்கக் கூடாது ?

**முக :—** நல்லது. கிப்ளாவை நோக்குவதற்குக் குர்-ஆன் அத்தாட்சியிருக்கிறது. உருவ வழிபாட்டிற்கு வேதத்தில் எதுவும் சொல்லப்படவில்லை. நாங்கள் கடவுளுக்குக் கீழ்ப்படிய வேண்டும்.

**ஆரா :—** உங்களுக்குக் குர்-ஆன் எங்ஙனம் சொல்லுகிறதோ அங்ஙனமே அவர்களது புராணங்களும் கூறுகின்றன. நீங்கள் குர்-ஆனைக் கடவுள் வாக்கென நம்புவதுபோல அவர்களும் வியாச பகவானால் வகுக்கப்பட்ட புராணங்களைக் கடவுள் வார்த்தைக்குச் சமானமாக மதிக்கிறார்கள். உங்களுக்கும், புராணிகர்களுக்கும் ஒரு வித்தியாசமுண்டு. நீங்கள் ஒரு பெரிய உருவத்தை வழிபடுகிறீர்கள். புராணிகர்கள் பல சிறிய உருவங்களை வழிபடுகின்றனர். நீங்கள் வேதத்தைப பின்பற்றி இந்த வழக்கங்களை விடுதலே சரியான வழி. நீங்கள் மலைபோன்ற மருதியாகிய உருவ வழிபாட்டை விடாது, பிறரை விக்கிரக ஆராதனைக்காரரென்று தூற்றுவது உங்களுக்கு வெட்கமாயில்லையா ? நீங்கள் பிறரைப் பழிக்குமுன் உயர்வைப் பெற முயலுங்கள். உருவ வழிபாட்டை விடுங்கள்.

31. *அல்லாவின் காரியத்தில் இறந்தவர்கள் இறந்தவர்களல்ல. அவர்கள் உயிருடன் இருப்பவர்களே. நீ இதை அறிகிறாய் இல்லை.* (2, 149).

ஏன் ஒருவரைக் கொல்லவேண்டும் ? இதெல்லாம் உங்களுடைய சுய நலத்திற்காகச் செய்யப்படும் காரியமல்லவா ? ஏன் யோக்கிய பொறுப்புடன் இதை ஏற்றுக்கொள்ளக் கூடாது. பிறரைக் கொன்று கொள்ளையடித்து நீங்கள் நன்றாயிருக்கப் பிறருடன் சண்டை செய்கிறீர்கள்.

32. *அல்லாவானவன் கஷ்டியரத்தை யளிப்பவன். ஷைத்தானை ஒரு நாளும் தொடராதே. நீ யறியாத தீயச் செயல்களையும் கடுங்காரியங்களையும் அவன் செய்யச் சொல்வான்.* (2, 164-165).

உங்கள் கடவுள் தீயோர்களைத் தண்டித்து நல்லோர்களைக் காப்பாற்றியும் வருகிறாரா ? அல்லது முகம்மதியர்களைக் காப்பாற்றியும் மற்றவர்களை வருத்தியும் வருகிறாரா ? பின்னர் கூறியதை எங்கள் கடவுள் செய்யின் அவர் கடவுளாகமாட்டார். முன்னர் சொன்ன விதமாயிருப்பின் குர்-ஆனிலும் மகம்மதுனிடமும் நம்பிக்கை பொய்யாகும். கடவுள் ஏன் சயித்தானைப் படைக்க வேண்டும் ? படைத்ததினாலல்லவா அவன் மனித ஜாதியை ஏமாற்றி வருகிறான். கடவுளுக்கு வருங்காலம் தெரியாதா ? மனிதனைப் பரீட்சிக்கச் சயித்தானைப் படைத்தார் கடவுள் என்று சொல்லுவீர்களே யானால் இது ஒழுங்காகாது. கட்டுக்குட்பட்ட அறிவை யுடையவன்தான் இத்தகைய பரீட்சை முறைகளை அநுசரிப்பான். சரி சயித்தான் மனிதவர்க்கத்தைத் தீய வழிகளில் திருப்புகிறான் என்றாலும் சயித்தானைக் கெட்டகாரியம் செய்யுமாறு தூண்டியது யார்? சயித்தான் தன்னைத் தானே தூண்டிக் கொண்டான் என்றால் ஏன் பிறரும் தன்னைத் தானே கெடுத்துக் கொள்ள முடியாது ? அல்லது கடவுள் பிசாசை

ஏமாற்றுபவராயின், இவர் பிசாசைவிடக் கெட்டவராகாரா ? கடவுளைப்பற்றி இங்ஙனம் கூறல் முடியாது. கெட்டவழியில் செல்லுபவர்கள் அறியாமையினால் தாங்களாகவே தான் செல்லுகிறார்கள்.

33. தானாக இறந்ததும், இரத்தமும், பன்றி மாம்சமும், தின்னத் தகாவை. அல்லாவின் பெயரன்னியில் அழிக்கப் பட்டதையும் அங்ஙனமே கருதவேண்டும். (2, 168).

இங்கு நாம் கொஞ்சம் நிதானித்தல் வேண்டும். பிராணிகள் கொல்லப் பட்டாலும் சரி, தானாச் செத்தாலும் சரி, அது சவமே. பன்றியின் மாமிசம் தடுக்கப்பட்டிருக்கிறது. (ஆனால் மனிதன் மாமிசம் தடுக்கப்படவில்லை) எனவே நாம் மனிதனைக் கொன்று தின்னலாம் என்று கொள்ளல் கூடுமா ? இங்ஙனம் கூறில் கடவுள் பேரில் பழிசுமத்தல் ஆகுமா ? பிராணிகளிடத்தில் முகம்மதியக் கடவுள் அன்பு கொண்டவரல்லவா ? மேலும் முகம்மதியக் கடவுள் மனிதனுக்கு உபயோகமாயுள்ள பிராணிகளைக் கொல்லவேண்டாம் என்று சொல்லவில்லை. இதனால் கடவுள் மனித ஜாதியின் விரோதியாய் விட்டார். அம்மட்டோ ? தன்மீது பாபங்களைச் சுமத்திக் கொண்டார். உண்மையான கடவுள் இங்ஙனம் ஒன்றும் கூறியிருக்க முடியாது.

34. நோன்பின் இரவுகளில் மனைவிகளோடு நன்றாய்ச் சேரலாம். அவர்கள் உங்களுடைய உடை. நீங்கள் அவர்களுடைய உடை. அதில் எற்படும் பிழையை அறிகிறார். ஆனால் உம்மைப் பார்த்து மன்னிக்கிறார். எதற்காக உம்மை உண்டு செய்தாரோ அதை மனம் திருப்தியளிக்குமளவும் அனுபவி. உதயத்தில் கருப்பு வெள்ளை நூல் வித்தியாசங் காணுங்கால் அதை விட்டுவிடு. (2, 183).

முகம்மதிய மதம் கிளம்புமுன் ஒரு அராபியன் சாந்திராயன விரதம் எப்பொழுது எப்படி அனுஷ்டிப்பதென்று ஒரு புராணிகனைக் கேட்டிருக்க வேண்டும். இப்புராணிகன் விஷயத்தைச் சரியாய் அறியாது சந்திரனைப் பார்த்துச் சாப்பிடவேண்டும் என்று கூறியிருக்க வேண்டும். முகம்மதியர்கள் இவ்விரதத்தை மாறான ஒரு வழியில் அனுஷ்டிக்கத் துவக்கினர் போலும். இந்தச் சாந்திராயன விரதத்திற்கும் முகம்மதியர்கள் அனுஷ்டிக்கும் விரதத்தும் வித்தியாசமுண்டு. சாந்திராயன விரதத்தில் மாதருடன்கூடல் கூடாது. குர்-ஆன் பூர்ண ஆசையுடன் இந்த விரதகாலத்தில் மாதர்களை யனுபவி யென்று கூறிவிட்டது. மேலும் விரதம் என்றால் பட்டினியிருப்பது என்பது பொருள். முகம்மதியர்கள் இரவில் பலமுறையும் இவ்விரதகாலத்தில் புசிக்கலாம். பகலில் சாப்பிடாமலும் இரவில் சாப்பிடுவதும் விரதமாகுமா ? மேலும் இது இயற்கைக்கும் விரோதமாயிருக்கிறது

35. உன்னிடம் சண்டை செய்பவர்களிடம் அல்லாவின் காரணத்திற்காகச் சண்டை செய். எங்கு பார்த்தாலும் அவர்களைக் கொன்றுவிடு. எங்கிருந்தெல்லாம் உங்களைத் துரத்தினார்களோ அங்கிருந்தெல்லாம் அவர்களைத் துரத்து. கொலையைக் காட்டிலும் கரச் சச்சரவு தீங்கானது. உள் சச்சரவு ஒழியும்பொழுது கொலையை நிறுத்து. (2, 186-187, 189).

குர்ஆனில் இவ்விஷயங்களில்லாவிடில் முகம்மதியர்கள் பிற மதத்தாரிடம் இவ்வளவு கொடுமையுடன் இருக்கமாட்டார்கள். பல நிரபராதிகளை முகம்மதியர்கள் மதத்தின் பெயரால் கொன்றனர். முகம்மதியரல்லதவர்களைக் கொல்லல் நியாயம் என்று முகம்மதியர் கருதுகிறார்கள் போலும். இங்ஙனம் இவர்கள் கடவுள் "சண்டை"ப்பட்டு அரசியல் செல்வாக்கையும் இழந்தனர். இஸ்லாம் கொடிய தத்துவங்களைப் போதிக்கிறது. நமது வீட்டில் புகுந்து திருடியவர் வீட்டில் நாமும் புகுந்து திருடவேண்டுமா? ஒரு அறியாதவன் ஒரு காரியத்தைச் செய்யின் நாமும் அதை உடனே செய்தல் வேண்டுமா? இதுதான் அறவழியோ. இவ்விதம் கடவுளும் அவரது தீர்க்கதரிசிகளும் கூறல் கூடுமா? இங்ஙனம் சுயநலப் பிரியர்களும், முட்டாள்களும் அல்லவா கூறுவார்கள்.

36. அவர் ஒழுங்கின்மையை விரும்புகிறதில்லை (சண்டையின் சிநேகதரில்லை). நம்புவோர்களே!! உண்மை மதத்தில் முழுவதும் பிரவேசியுங்கள். (**2**, 202, 204).

கடவுள் குழப்பத்தை விரும்பாதிருந்தால் ஏன் சண்டையைச் செய்யச் சொல்லவேண்டும்? முகம்மதிய மதத்தைத் தழுபவன் மீதுதான அவர் அன்பு கொள்கிறார். அங்ஙனமாயின் அவர் ஓர் வஞ்சனைக்காரர் என்பதில் என்ன தடை? இத்தகையார் உலகக் கடவுளாய் இருத்தல் முடியாது? குர்-ஆனில் கூறும் கடவுளும் உண்மைக் கடவுளல்ல. குர்-ஆனும் தேவ வாக்கல்ல.

37. இஷ்டப்பட்டவருக்கு அளவன்னியில் அளிக்கிறார். (**2**, 208).

நம்முடைய நன்மை தீமைகளைக் கவனியாது அவர் எல்லோருக்கும் அருள் புரிகிறாரா? எனவே துன்பத்தையளிப்பதும் இன்பத்தைக் கொடுப்பதும் அவரிஷ்டத்தைப் பொருத்திருக்கிறதா? இத்தகைய துர்போதனைகள் தான் முகம்மதியர்களைக் கெடுத்துவிட்டது. அவர்களைத் தீய வழிகளில் நடத்தி வருகிறது. இத்தகைய துர்ப்போதனையின்படி நடவாத முகம்மதியர்களில் பலர் அற வாழ்க்கையை நடத்தி வருகிறார்கள்.

38. ஸ்திரீகளின் தீண்டலைப்பற்றிக் கேட்பார்கள். ஆமாம் தீண்டல் தான். அவர்கள் சுத்தமாகும் வரையில் அவர்களை அணுகாமல் தனிமையாய் இருங்கள். அவர்கள் சுத்தமானவுடன் அவர்களை அணுகுங்கள். அதுதான் அல்லாவின் ஆக்ஞை. ஸ்திரீகள் உங்களின் பயிரிடும் நிலம் போன்றவர்கள். உங்களது இஷ்டம்போல் அவர்களைச் சேருங்கள். கவனமற்ற ஆணைகளுக்கு அல்லாவானவர் உங்களைத் தண்டிக்கமாட்டார். (**2**, 222, 209. 224).

மாத விடாய்க்காலத்தில் பெண்களிடம் போகலாகதென்று தடுக்கப்பட்டிருத்தல் மிகவும் சிறந்தது. ஆனால் பெண்களை வயலுக்கு ஒப்பிட்டு புருஷர்கள் இஷ்டப்பட்ட பொழுது அவர்களிடம் செல்லலாம் என்று கூறல் மனிதனைக் காமியாக்கும். கவனமற்ற சத்தியம் செய்பவர்களைக் கடவுள் தண்டிக்கவில்லையெனின் எல்லா மனிதர்களும் பொய்யர்களாகி விடுவார்கள். கடவுள் மனிதர்களைப் பொய் சொல்லும் வரையில் தூண்டினவராவர்.

39. நல்லதோர் கடனை அல்லாவுக்கு யார் அளிப்பார்கள்? அவனுக்கு மறு படியும் மறுபடியும் இருமடங்கு பொருள் ஏற்படும். (2, 246).

கடவுள் ஏன் கடன் வாங்கவேண்டும்? உலகத்தைச் சிருஷ்டிக்கக் கடவுளுக்கு மனிதன் உதவி வேண்டுமோ? கடவுளுக்கு மனிதன உதவி எக்காலும் வேண்டாம். அறிவிலிகள் கடவுளுக்கு இந்த இழிவான குணங்களைக் கற்பிப்பார்கள். கடவுள் பொக்கிஷம் வற்றிவிட்டதா? கடவுள் வர்த்தகம் செய்து ஏழையாய்ப் போய்விட்டாரா? தனக்குக் கடன் கொடுப்பவர்களுக்கு அவர்கள் கொடுத்ததைபோல் இரட்டிப்பு மடங்கு தருவேன் என்பது வியாபாரிகள் கூறும் வார்த்தையைப் போலாகவில்லையா? பொருளில்லாதவனும் தனது கைப்பொருளுக்குமேல் செலவழிப்பவனுந்தான் இத்தகைய வார்த்தைகளைக் கூறிக் கடன் வாங்குவான். கடவுள் அங்ஙனம் செய்யமாட்டார்.

40. சிலர் நம்பினவர்கள், சிலர் காபிரிகள். அல்லாவானவர் இஷ்டம் வைத்திருந்தால் அவர்கள் இங்ஙனம் சண்டை யிடமாட்டார்கள். அல்லாவானவர் இஷ்டமானதைச் செய்கிறார். (2, 254).

உலகத்தினிடம் சண்டைகளெல்லாம் கடவுள் விருப்பத்தினாலா உண்டாகிறது. இத்தகைய பாபங்களைக் கடவுள் விருப்பங் காரணமாகச் செய்யலாமா? இங்ஙனம் விரும்புபவனும், விருப்பத்தை யொட்டி காரியங்களை நிகழ்த்துபவனும் ஒருபொழுதும் கடவுளாகமாட்டான் கடவுள் ஒரு புறமிருக்க நற்கிருத்தியங்களைச் செய்யும் மனிதனும் இத்தகைய நிகழ்ச்சிகளை ஏற்படுமாறு செய்யமாட்டான்.

41. பூமியிலும், வானத்திலும் உள்ளதெல்லாம் அவருக்காகவே. அவருடைய நாற்காலி வானத்திற்கும், பூமிக்கும் சமானமா யிருக்கிறது. (2, 150).

கடவுள் கிரகங்களையும், வானத்தையும, மற்றவைகளையும் ஜீவன்களின் நன்மைக்காகப் படைத்தார். தமது நலத்திற்கல்ல. தமது இச்சையைக் கடவுள் செய்வர். இதனால் கடவுளுக்குப் "பூர்ணகாமன்" என்று பெயருண்டு. கடவுளுக்கு ஒன்றுந் தேவையில்லை. எதனுடைய உதவியில்லாமலும் அவர் சுகமாயிருக்க முடியும். நாற்காலி முதலிய புறப்பொருளைத் தேடுபவன் கடவுளுமல்ல.

42. "அல்லாவானவர் சூரியனைக் கிழக்கிலிருந்து, உதிக்கச் செய்கிறபடியினால் நீ, மேற்கிலிருந்து, செய்வாயோ" காபிரி கலவரத்தை யடைந்தான். ஏனென்றால், அல்லாவானவர் தீயோனுக்கு வழிகாட்டுகிறார் இல்லை. (2, 260).

என்னே அறியாமை! அதனால் ஏற்படும் மயக்கம்!! சூரியன் கிழக்கிலும் உதிக்கவில்லை; மேற்கிலும் முடியவில்லை, மேற்கிலும் உதயமாகவில்லை; கிழக்கிலும் மறையவில்லை. தன்னிருப்பிடத்தைக் சுற்றிக் கொண்டிருக்கிறது. குரானுக்கு வான சாஸ்திரமுந் தெரியவில்லை; பூமி சாஸ்திரமுந் தெரியவில்லை. கடவுள தப்பு செய்கிறவருக்குத் துணையா யிருக்கமாட்டார். எனவே நல்லவர்களுக்கு துவருடைய குணை தேவையில்லை. வழி தப்பியிருக்கும் அறி

விலிகளுக்குத்தான் துணைவன் வேண்டும். குர-ஆன் கடவுள் அறியாதவனுக்கு உதவி செய்தல் என்னும் கடமையிலிருந்து வழுவிவிட்டார்.

43. "நான்கு பட்சிகளை எடுத்துத் துண்டு துண்டாகச் செய்து ஒவ்வொரு மலையிலும் ஒரு பாகத்தை வைத்து, நீ கூப்பிட்டால் அவைகள் வேகமாக வருமென்று" அல்லாவானவர் உரைத்தார். (**2**. 262).

இதிலிருந்து முகம்மதியக் கடவுள் வித்தையாண்டியாகச் செய்து கொண்டு விட்டார் அவரது கடவுட்டன்மை இத்தகைய செய்கைகளில் தானு விருக்கிறது. அறிஞர் இக்கடவுளை விட்டகன்று தூரத்திலிருப்பர். அறிவிலிகள் தான் இக்கடவுளின் மாயவலையில் சிக்கிக்கொள்வர். முகம்மதியக் கடவுள் தன்னை உயர்த்திக் கொள்வதற்குப் பதிலாக வீழ்த்திக் கொள்கிறார்.

44. இஷ்டமானவர்களுக்கு வழிகாட்டுகிறார். (**2**, **274**).

தனக்கு இஷ்டமானவர்களைத்தான் கடவுள் சரியான வழியில் நடத்துகிறார் என்றால் தமக்கு இஷ்டமில்லாதவர்களைத் தவறான வழியில் நடத்துகிறாரென்று விளங்கவில்லையா? எல்லோரையும் பாரபட்சமில்லாது நடத்துபவர்தான் உண்மையான கடவுளாவார்.

45. இஷ்டம் வைத்தவரைப் பொறுத்தருள்வர். இஷ்டமானவரைத் தண்டிக்கச் செய்கிறார். ஏனென்றால் அவர் சர்வ சக்திமான். (**2**, 266).

மன்னிக்கத் தக்கவர்களை மன்னிக்காதும், மன்னிக்கத் தகாதவர்களை மன்னிக்கும் கடவுள் காரியங்களைச் செய்வாரானால் அவர் ஒரு கொடுங்கோலனாகமாட்டாரா? கடவுள் தமது இஷ்ட காரியங்களை நடத்தினால் ஆத்மா கர்மங்களுக்கு எங்ஙனம் ஜவாப்தாரியாகும்? ராணுவக்காரன் தனது அதிகாரியின் ஆணைப்படி ஒருவனைக் கொன்றால் அந்த ராணுவக்காரன் இக்கொலைக்கு ஜவாப்தாரியல்ல. எனவெ ஆத்மாவும் ஜவாப்தாரியல்ல.

46. அல்லாவின் முன்னிலையில் பயப்படுவோனுக்கு உண்டாகும் சிறந்த வஸ்துக்களைச் சொல்லட்டுமா. அங்கு பூங்காவனம் உண்டு, அதன்கீழ் ஆறுகள் ஓடும். அங்கு எப்பொழுதும் புனிதபெண்கள் இருக்கிறார்கள். ஏனென்றால் கடவுள் தனது தாசர்களைக் கருதுகிறார். (**3**, 12).

இது சுவர்க்கமா அல்லது வேசிகள் வசிக்கும் இல்லமா? இத்தகையோனை நாம் கடவுள் என்றழைப்பதா? அல்லது காமியென்றழைப்பதா? இத்தகைய நூலை அறிவாளி சத்திய நூலெனக் கொள்ளமாட்டான். கடவுள் ஏன் பாரபட்சம் காட்டவேண்டும்? சுவர்க்கத்தில் வாழும் மாதர்கள் எங்கே பிறந்தவர்கள்? இவ்வுலகில் பிறந்து பின்னர் சுவர்ககம் சென்றார்களா? பிறக்காமலே அங்ஙனமே அங்கேயிருக்கிறார்களா? இவ்வுலகத்திலதான் பிறந்து அங்கு சென்றார்களெனினும் அவர்கள் தங்களது புருஷனுக்கு முன் அங்கு செல்ல வேண்டும். தீர்ப்பு தினத்திற்குமுன் ஏன் கடவுள் மாதர்களை மாத்திரம் கவனிக்கவேண்டும். மாதர்களை யொட்டி அவரது சட்டத்திற்கு விரோதமாகக் காரியங்களைச் செய்கிறார். சுவர்க்கத்திலேயே இருக்கிறார்கள் எனின் அவர்கள் எங்ஙனம் அவர்களுடைய காமத்தை அடக்கமுடியும். அல்லது மாதர்கள்

தங்கள் புருஷர்களுடன் தானிருக்கிறார்களெனின், கடவுள் எங்ஙனம் தன்னிடம் அன்புகொண்டவர்களுக்குச் சுவர்க்கத்தில் பெண்களைக் கொடுக்க முடியும்? ஏன் கடவுள் மனிதர்களையும் சுவர்க்கத்தில் எப்பொழுதும் வைத்துக் கொள்ளவில்லை? இதிலிருந்து முகம்மதிய கடவுள் அறிவிலி என்றும் நியாய மற்றவரென்றும் புலனாகவில்லையா?

47. அல்லாவின் உண்மை மதம், இஸ்லாமே. (3, 17.

கடவுள் என்பவர் முகம்மதியர்களுக்குத்தான் சொந்தமானவரோ. ஆயிரம் வருடங்களுக்கு முன் தெய்வமதம் நிலைநின்று வரவில்லையா? இதிலிருந்து குர்-ஆனில் சொல்லப்படுவது கடவுள் வாக்கு அல்லவென்பதும் ஒரு பிடிவாதக்காரன் வார்த்தையென்பதும் புலனாகவில்லையா?

48. ஜீவன்கள் சம்பாதித்ததெல்லாம் அவைகளுக்கே கொடுக்கப்படும். அநியாயம் ஒருபொழுதும் செய்யப்படமாட்டாது. சர்வசக்தி அமைந்த அல்லாவே! இஷ்டமானவர்களுக்குக் கொடுத்து மற்றவர்களிடமிருந்து எடுத்துவிடுகிறாய். இஷ்டமுடையோனை உயர்த்தி எவனையோனைக் இறக்கிவிடுகிறாய். எல்லாம் உன் கையிலேயே. இரவு முடிவுபெற்று பகலாவதற்கும் பகல் இரவாவதற்கும் நீயே காரணம். இறந்தவனை உயிருடனும், உயிருள்ளவனை இறக்கவுஞ் செய்கிறாய். அளவன்னியில் இஷ்டமுடையோனுக்கு ஆதரவு அளிக்கிறாய். காபிரிகளை ஒருபோதும் நண்பர்களாகக் கருதாதே. நம்புகிறவர்களே அதற்கு யோக்கியதை. இங்ஙனஞ் செய்வோர்கள் அவனிடமிருந்து ஒன்றையும் எதிர்பார்த்தால் வேண்டாம். அல்லாவை நேசித்தால் என்னைப் பின்பற்று. அல்லா உன்னை நேசித்து உன்னை பொறுத்தருள்வார். ஏனென்றால் பொறுத்தருளுகிறவனும் தயாபரனும் அவரே. (3, 21-24 27).

ஒவ்வொரு ஆத்மாவும் தனது கர்மங்களுக்கேற்றவாறு தண்டனையையோ நன்மையையோ பெறுகிறதெனின், ஒரு ஆத்மா செய்த பாபங்கள் மன்னிக்கப் படலாகாது. பாபத்தை மன்னிப்பது நியாய விரோதமாகும். கடவுள் சட்டம் மாற்றவும், மீறவும் முடியாதது. எனவே இறந்தவர்களை உயிர்ப்பிழைக்கச் செய்வதும் உயிரோடிருப்பவனைச் சாகச் செய்வதும் முடியாத காரியமாகும்.

நிற்க இஸ்லாம் மதத்தைச் சேராதவரைக் காபிரிகளென்று அழைத்தல் முறையோ? இங்ஙனம் கூறல் சிறுமைத் தனத்தையல்லவா காட்டுகிறது. பிற மதத்திலுள்ள மிகவும் நல்லவர்களான மனிதர்களுடனும், கூட்டுறவு வைத்துக் கொள்ளலாகாது என்று முகம்மதியர்களுக்குப் போதிக்கும் பிராணி கடவுளாகுமா? துஷ்டராயினும் முகம்மதியர்களாயின் நண்பர்களெனக்கொள் என்றும், கூறுகிறது. அதிலிருந்து குர்-ஆன் கடவுளும், குர்-ஆனும் முகம்மதியர்களும் அறியாமை, பிடிவாதம், என்னும் நோயின் வசமாயிருக்கிறார்களென்பது விளங்கும். இருட்டில் நடமாடுகின்றனர், வாசகர்களே கவனியுங்கள்!! முகம்மது சாமார்த்தியத்தைக் கவனியுங்கள். முகம்மதிய மதத்தினரைக் கடவுள் நேசிக்கிறாரென்றும், அவருடைய பாபங்களை மன்னிப்பார் என்றும் முகம்மது கூறுகிறார். இது தூய்மைய ஹிருதயத்தைக் காட்டவில்லை. சயநலத்தைக் கருதியே முகம்மது குர்-ஆனைச் செய்தார்.

49. மேரியே! அல்லா உன்னையே புனிதமாக்கினர். எல்லாப் பெண்களிலும் உயர்ந்தவள் நீயே! (3, 33).

கடவுளும் தேவதைகளும் பூலோகம் வந்து மனிதர்களுடன் அக்காலத்தில் பேசினார்கள் என்பதை நாம் எப்படி நம்புவது? அக்காலத்தில் ஜனங்கள் நல்லவர்களா யிருந்தனரென்று கூறலாம். அது ஏற்கக் கூடியதல்ல. அக்காலத்தில் அதிகமாகச் சனங்கள் நாகரிகமில்லாது கல்வி அறிவு இல்லாது இருந்து வந்தார். எனவே தான் இந்த கிறிஸ்துவ மதமும் முகம்மதிய மதமும் கல்வி அறிவில்லாத ஜனங்களிடம் வேரு ஊன்றிற்று. அறிவு ஒளியுடன் கூடின இந்நாளில் எவரும் இந்திர ஜாலங்களை நம்பமாட்டார்கள். இந்த நம்பிக்கையும் சுருங்கிவருகிறது.

50. "ஆகட்டு" மென்றார். அப்படியே முடிந்தது. காபிரிகள் அல்லாவிடம் வஞ்சகஞ் செய்தார்கள். அல்லாவும் அப்படியே செய்தார். ஏனென்றால் அவர் இதில் மகா தந்திரசாலி. (3, 52-50).

குர்-ஆன் கூற்றின்படி சிருஷ்டிக்குமுன் கடவுளைத் தவிர வேறு எவரும் இருக்கவில்லை. எனவே கடவுள் யாருக்கு இந்த உத்தரவிட்டார்? எது உண்டாயிற்று? இக்கேழ்விகளுக்கு முகம்மதியர்கள் ஏழு ஜன்மமெடுத்தாலும் பதில் கூற முடியாது. காரண பதார்த்தமில்லாது காரியம் ஒருநாளும் ஏற்படாது. வேறு விதமாக எண்ணுபவர்கள் தனது பிறப்பிற்குத் தனது பெற்றோர்களை மறப்பவர்கள் ஆவார்கள். பிறரை ஏமாற்றுபவரும், தந்திரங்கள் செய்பவரும், ஒருநாளும் கடவுளாகமாட்டான். அவனைக் கடவுளென்றும் அழைக்கக் கூடாது.

51. மேலிருந்து மூவாயிரம் தேவர்களைக் கொடுத்து உதவுவது போதாதா. (3, 120).

உண்மையில் கடவுள் 3000 தேவதைகளின் துணைகொண்டு முகம்மதியர்களுக்கு உதவி செய்திருக்குமேயானால் ஏன் இப்பொழுதும் அங்ஙனம் செய்தல் கூடாது. இந்தியாவிலும், மற்ற நாடுகளிலும், அவர்கள் ஆட்சி புரிய உதவக்கூடாது? சாதாரண சனங்களை ஏமாற்றவே இம்மேற்கோள் செய்யப்பட்டிருக்கிறது. சாதாரண ஜனங்களை முகம்மதிய வலையில் சிக்கவைக்க இது ஒரு கருவியாகும்.

52. நம்பாதவர்களிலிருந்து என்னைக் காப்பாற்றும், அல்லாவே!! அல்லாவே உன் உண்மைத் தலைவன். உண்மை சகாய யளிப்பவன், கடவுள் பாதையில் கொல்லப்பட்டாலும், இறந்தாலும். (3, 141, 142, 151).

வாசகர்கள் இங்கு முகம்மதியர்களின் பெரும் பிழையை நன்கு கவனிக்க வேண்டும். தங்கள் மதத்திற்கு வேறுபாடான மத நம்பிக்கையுள்ளவர்களின் அழிவிற்கு முகம்மதியர்கள் பிரார்த்தனை செய்கின்றனர். கடவுள் இவர்களது பிரார்த்தனைகளைப் பூர்த்தி செய்துவைக்கக் கூடிய அவ்வளவு அசடரா? மேலும் கடவுள் முகம்மதியர்களின் உண்மையான துணைவராயிருப்பின் ஏன் முகம்மதியர்கள் தாங்கள் தொடுக்கும் காரியங்கள் அனைத்திலும் வெற்றி பெறுகிறதில்லை. நிற்கக் குர்-ஆனின்படி கடவுள் முகம்மதியர்கள் பால் அதிக

நேசம் கொண்டவராயிருக்கிறார். இவர் இத்தகைய பாரபட்ச முடையவரா யிருப்பின் நல்லவர்கள் அவர் வழிபடத் தகுந்தவர் அல்லர்.

53. அல்லாவின் இரகசியத்தை உனக்கு வெளியிடக் கட்டுப்படவில்லை. அவைகளைத் தூதர்கள் அறியும்வண்ணஞ் செய்வார். ஆதலால் தூதர்களையும், அவரையும் நம்பு. (3, 174).

கடவுளைத் தவிர தாங்கள் யாரையும் பணிவதில்லை யென்று முகம்மதியர்கள் கூறுகின்றனா. அங்ஙனமிருக்க இம்மேற்கோள் ஏன் முகம்மது நபியை உயர்த்துகிறது? அவரிடம் நம்பிக்கை வைக்குமாறு கூறுகிறது. இதிலிருந்து கடவுள் நிகாற்றவரென்று கூற முடியாதல்லவா? முகம்மது தீர்க்கதரிசி என்ற வகையில் அவரிடம் நம்பிக்கை வைக்க வேண்டுமெனின் தீர்க்கதரிசிக்குத் தான் அவசியமேது? தீர்க்கதரிசியின் துணையில்லாது கடவுளுக்கு அவர் காரியத்தைச் செய்யமுடியாதாயின் கடவுள் வல்வமையற்றவரென்று புலனுக விலலையா?

54. நம்புபவர்களே! பொறுமையா யிருங்கள். அததனிடத்தில் அவ்வவைகளை இறுத்துங்கள். சண்டைசெய்து கொண்டே இருங்கள். முக்தி அடைய. அல்லாவிற்கு பயப்படுங்கள். (3, 178).

குர்-ஆன் கடவுளும் தீர்க்கதரிசியும் சண்டைக்காரர்கள். தன்னைப்பின் தொடர்பவர்களைச் சண்டையிடுமாறு கூறும் மனிதன் அமைதியை குலைப்பவனுவன். ஒருவன் கடவுளுக்குப் பயந்திருப்பதினுல் மோட்சம் பெறுவானு? அல்லது நியாயமற்ற சண்டையிலிருந்து விலகியிருந்து மோட்சம் பெறுவானு? முன்னது பொருளற்றது: பின்னது சரியானது.

55. இவைகளெல்லாம் அல்லாவின் எல்லைகள். அல்லாவையும், தூதனையும் நம்புபவர்கள் ஓடும் அருவிகளுள்ள விண்ணை அணுகுவார்கள். அதுதான் மானிடமோக்கம் அல்லாவோ அல்லது தீர்க்கதரிசியின் கட்டளையைத் தாண்டுகிறவர்கள் அவர் எல்லையிலிருந்து நீக்கப்படுவர். அழியா நெருப்பில் எரிக்கப்படுவன் நித்திய கட்டம் அவன் துக்கத்தை அதிகரிக்கும். (4, 12-13).

கடவுள் முகம்மதைத் தமது கூட்டாளியாகச் செய்து கொண்டுவிட்டாரென்று முகம்மது குர்-ஆனில் கூறுகிறார். கடவுளுக்கு முகம்மதினிடங் அவ்வளவு பிரியம். சுவர்க்கத்திலும் தனது சரி பாகஸ்தனுக வைத்துக்கொண்டு விட்டார். எனவே முகம்மதிய கடவுளே சுதந்தரநாயகன் எனக் கூறமுடியாது. எச்சிறுகாரியத்திலும் கடவுளுக்கு முகம்மதின் துணைவேண்டியிருக்கிறது. சத்திய நூலில், கடவுலாலளிக்கப்பட்ட, புத்தகத்தில் இத்தகைய பொருளற்ற முரண்படான விஷயங்கள் இருத்தல் முடியாது.

56. அநியாயத்தை ஒரு அணுக்கூட அல்லாவானவர் செய்கிறதில்லை. நற்காரியங்களுத் இருமடங்காய்த் தருகிறார். (4, 45).

பாரபட்சமற்ற கடவுள் ஏன் முகம்மதியர்களுக்கு அவர்களது நற்கருமத்திற்கு இரண்டு மடங்கதிகமாய் வெகுமானத்தைக் கொடுக்கவேண்டும். இது பாரபட்சமல்லவா? நற்காரியத்திற்கோ அல்லது தீயகாரியத்திற்கோ அள

விற்கு மீறிக் கடவுள் வெகுமானமோ, தண்டனையோ, கொடுத்தல் நியாய விரோத மாகாதா ?

57. உன் முன்னிலையிலிருந்து அகன்றால் அவர்களில் சிலர் உன் வார்த்தைகளில் நழுவி ஏனைய எண்ணங்களை எண்ணுகிறார்கள். அவர்கள் எண்ணுவதையெல்லாம் அவர் எழுதிவிடுகிறார். அல்லாவினிடமிருந்து அகன்றவர்களுக்கு வழியைக் காட்டு. அல்லாவால் அகற்றப்பட்டவனுக்கு உன்னாலும் வழி காண்பிக்க இயலாது. (4, 4·90).

இதிலிருந்து சர்வவல்லமையற்றவர் என்று சித்தமாகிறது. அவர் பேரேடு, குறிப்பு முதலியவைகளை ஞாபகார்த்தமாக வைத்துக் கொள்ளுகிறார். கடவுளே ஜனங்களைத் தீயவழியில் செல்லப் பாதைகாட்டுகையில், கடவுளுக்கும், சாத்தானுக்கும் என்ன வித்தியாசமிருக்கிறது என்று ஒருவர் கேட்கக்கூடும் ? ஆனால் ஒரு வேற்றுமை உண்டு. கடவுள் சாத்தானைக் காட்டிலும் பொல்லாத சாத்தான். இதுதான் வித்தியாசம். பிசாசைப் படைத்தவன் பெரும் பிசாசு என்று முகம்மதியர்களே கூறுகின்றனர். எனவே முகம்மதியக் கடவுள் பெருந் துஷ்டப் பிசாசு.

58. அவர்கள் கையை விடாமல் இருந்தால் காணும் இடங்களில் எல்லாம் அவர்களைப் பிடித்துக் கொல்லுங்கள். முசல்மான் தவறால் மாத்திரமே முசல்மானைக் கொல்லுகிறான். தவறிக் கொன்றால் அடிமையிலிருந்து ஒருவனை மீட்க வேண்டியவனாகிறான். பழியின் பணத்தையோ, பிச்சைக் காசையோ நஷ்டமடைந்த வீட்டார்களுக்குக் கொடுக்கவேண்டும். முசல்மானாயிருக்கும் அடிமையை விடுதலைசெய். வேண்டுமென்றே யோசனைசெய்து முசல்மானைக் கொல்லுபவன் அழியா நரகத்தை அடைந்து அல்லாவின் கோபத்திற்கு ஆளாவான். (4, 94-95).

இது பிறமதங்களிடத்திலுள்ள அசூயையைக் காட்டுகிறது. குர்-ஆன் முகம்மதியர்களைக் காப்பாற்றுமாறும், அல்லாதவர்களைக் கொல்லுமாறும இரக்கமின்றிக் கூறுகிறது. ஒரு முகம்மதியனை ஒருவன் தவறிப்போய்க் கொன்றுவிடின், அதற்கு அவன் ஜவாப்தாரியாகவேண்டும். அல்லாதவனைத் தெரியாது கொல்லவும் உடனே சுவர்க்கம் கிடைக்கிறது. இத்தகைய போதனைகள் அகற்றத் தக்கவையாகும். இத்தகைய புத்தகமும், இத்தகைய தீர்க்கதரிசியும், மதமும் யாருக்கும் நன்மையைத் தராது. உலகத்தில் தீமையை வளர்க்கும். இவைகள் இல்லையேல் உலகிற்கு நன்மை. அறிஞர்கள் இத்தகைய சிறுமை மதங்களைத் தள்ளி வேத மதத்தைக் கைப்பற்றல் நலம். வேத மதம் மாசு அற்றது. முகம்மதியர்களைக் கொன்றால் நரகமென்றும், அல்லாதவர்களைக் கொன்றால புண்ணியமென்றும் குர்-ஆன் கூறுகிறது. பிறமதங்கள் முகம்மதியர்களைக் கொல்லல் புண்ணியம் என்கின்றன. எதை நம்புவது. எது உண்மையானது மாசுடைய எல்லா மதக்கொள்கைகளையும் களைந்து வேதமதத்தைப் பின்பற்ற வேண்டும்.

59. "வழி" விளக்கப்பட்டபின் தீர்க்கதரிசியைப் பின்பற்றாமல் முசல்மான் வழியிலிருந்து வேறு வழி சென்றால் அவனை நாம் நரகத்தில் இடுவோம். (4, 113).

கடவுளுடையதும், தீர்க்கதரிசியுடையதுமான, அசுயையைச் கவனியுங்கள். முகம்மது கெட்டிக்காரர். தெய்வச் சிறப்புத் தராவிடில், தமது போதனைகளைச் சனங்கள் ஏற்கமாட்டார்கள். தாங்களும் சுகவாழ்வு வாழ முடியாது. தனது சுயநலத்தை ஒட்டி நன்கு காரியங்களைச் செய்தார். சுயநலப் பிரியன் மனித ஜாதியின் நண்பனாக முடியாது. இத்தகையார்கள் அறிவிலிகளாலும் ஏற்கப்படார்கள்.

60. அல்லாவையும், தேவர்களையும், புத்தகத்தையும், தீர்க்கதரிசியையும், கடைசிதினத்தையும் நம்பாதவர்கள் வழிதப்பியவர்கள். (4, 135).

இனி நீங்கள் கடவுள் ஒருவர் என்றும் அவருக்கு நிகரான இரண்டாவதானவன் கிடையாதென்றும் எப்படிக் கூற முடியும்? அப்படிச் சொல்லுவீர்களேரானால் முன்னுக்குப்பின் முரண்படக் கூறியதாகாதா? கடவுள் ஒருவர் என்றும் கூறுகிறீர்கள், உடனே அவருக்குச் சமானமானவர்களும் இருக்கின்றனர் என்கிறீர்கள். மூன்றுமுறை அல்லா-வாசுத்-ஆலா பாபத்தை மன்னித்துவிட்டதால் அவர் பாபத்தை மன்னித்துவிடுகிறார் அல்லவா? மனிதர்கள் அல்லாவையும் அவரது தூதர்களையும் மூன்றுமுறை அவமதித்தும் கடவுள் மனிதனுக்குத் துணையாயிருந்து வருகிறார் அல்லவா? இம்மேற்கோள் மனிதனைத் தீயவழியில்தான் நடத்தும்.

61. காபிரி முசல்மானாக மாறி, மறுபடியும் காபிரியாகி முசல்மானாக மாறினவன் ஒருநாளும் மன்னிக்கப்படுகிறதில்லை. வழியையும் அடைகிறதில்லை. (4, 134).

வஞ்சகர்கள் அல்லாவை ஏமாற்றுவார்கள். ஆனால் அவர்களே அல்லாவால் ஏமாற்றப்படுவார்கள். (4, 141).

முசல்மான்களைத் தவிர காபிரிகளைச் சிநேகிதர்களாகச் செய்துகொள்ள வேண்டாம். (4. 148).

முகம்மதியர்கள் சுவர்க்கம் செல்வார்களென்பதற்கும், காப்பிரிகள் நரகம் செல்வார்களென்பதற்கும், என்ன ருசு விருக்கிறது. இந்தக் கடவுள் நல்ல கடவுள். மனிதனை ஏமாற்றியும் மனிதனால் ஏமாற்றப்பட்டும் இருந்துவரும் கடவுள் நம்மைவிட்டு விலகி யிருக்கட்டும். அவர் போக்கிரியோடும், துஷ்டர்களோடும், அயோக்கியர்களோடும் சேர்ந்துகொள்ளட்டும். ஏனெனில் இனத்துடன் இனஞ் சேருமல்லவோ? ஏமாற்றும் குணமுள்ள கடவுளைப் பின்பற்றுபவர்களும் பிறரை மோசம் செய்பவர்களே யாவார்கள். ஒரு பொல்லாத முகம்மதியரை நேசிப்பதும், பரம சாதுவான முகம்மதியரல்லாதவனை வெறுப்பதும் நியாயமாகுமா?

62. மானிடர்களே! அல்லாவினிடமிருந்து தீர்க்கதரிசி உண்மையைக் கொண்டுவந்து இருக்கிறான். அவைகளை நம்புகள் (4, 168).

குர்ஆன் தீர்க்கதரிசிகளிடம் மகம்மதியர்களைப் பக்தியாயிருக்குமாறு கூறுகிறது. எனவே கடவுளது பிரத்தியேக உரிமைகளை இவர்கள் பகிர்ந்துகொள்கிறார். மனிதர்களின் வழிபாட்டை ஏற்கிறார். தீர்க்கதரிசி அவரிடமிருந்து வந்தவர் என்றால் கடவுள் சர்வஞ்ஞர் என்பதற்கு விரோதமாகிறது.

எனவே இது கடவுளாகாது. குர்-ஆனில் ஓரிடத்தில் கடவுள் எங்கும் நிறைந்தவரென்று சொல்லப்பட்டிருக்கிறது. மற்றொரு விடத்தில் அவருக்குத் தனியிடமும் சர்வஞ்ஞரில்லாத தன்மையும் அளிக்கப்பட்டிருக்கிறது. இதிலிருந்து புலனாவது குர்-ஆன் ஒருவனு லெழுதப்படவில்லை; பலராலெழுதப்பட்டது.

63. விலக்கப்பட்டவைகளாவன:—தானாக இறந்தது, இரத்தம், பன்றிறைச்சி, அல்லாவின் நாமத்தைத் தவிர வேறு நாமத்தால் கொல்லப்பட்டது, தூக்கில் இட்டது, அடியால் மடிந்தது, விழுந்தது, கொம்பினால் குத்தப்பட்டது, பறவையினால் உருசிபார்க்கப்பட்டது. (5, 4).

தடுக்கப்பட்ட பிராணிகள் இவைகள் தானா? இதிலிருந்து இவைகளைத் தவிர மற்ற ஜீவப்பிராணிகள் ஊர்வன, பறப்பன வாகிய சிறு பூச்சிகள், எறும்புகள், உள்பட எல்லாம் முகம்மதியர்களின் ஆகாராதிகளாகக் கொல்லப்படலாம் என்று சித்தமாகிறது. இதிலிருந்து குர்-ஆன் கடவுள் வாக்கல்லவென்பதும் வெளிப்படையாகிறதல்லவா? இது மனிதனுடைய வேலையே. எனவே இதை நம்புதல் கூடாது.

64. தீச்செயல்களை உன்னிடமிருந்து விலக்குவேன். அருவிகளோடும் பூங்காவனத்தில் உன்னைச் சேர்ப்பேன். கடனைத் தாராளமாகக் கொடு. உன்னைச் சுவர்க்கத்திற்கு அனுப்புவேன். (5, 10).

மகம்மதியக் கடவுள் கொடிய வறுமையினின்றும் அவஸ்தைப்படுகிறாறெனத் தெரிகிறது. இல்லையேல் உங்களுக்குப் பாபத்தை நீக்கி சுவர்க்கத்தை அளிக்கிறேன் கடன் கொடுங்கள் என்று முகம்மதியர்களைக் கேட்கத் தேவையில்லை. கடவுள் பேரைச் சொல்லி ஜனங்களை ஏமாற்றி மகம்மது தனது நன்மையைத் தேடிக்கொண்டார் என்பது நன்கு விளங்குகிறது.

65. தமது இஷ்டப்படி ஒருவனைத் தண்டிக்கவும், மன்னிக்கவும் வல்லவர் அல்லா. இதுவரை மானிடர்களுக்குத் தராததை அருளி யிருக்கிறார். (5, 21-23).

சாத்தான் அவனது இஷ்டப்படி மனிதர்களைக் கலைத்து தீயவழிகளில் நடத்துவதுபோலவே முகம்மதியக் கடவுள் தமக்கு இஷ்டமானவர்களுக்குச் தண்டனையைத் தருகிறார். குர்-ஆன்படி நல்லதையும், கெடுதலையும் செய்பவர் அவரே. என்வே கடவுள் சுவர்க்கத்திற்கோ நரகத்திற்கோ செல்ல வேண்டும். ஆத்மாவிற்கு விடுதலை இல்லை. எனவே நன்மை தீமை யென்னும் சொற்களுக்கு ஆத்மா பொருப்பாளியல்ல. கடவுளே ஜவாப்தாரி, ஏனெனில் சேனாதிபதியைப்போல் கடவுள் ஆட்டிவைக்கிறார்.

66. அல்லாவையும், தீர்க்கதரிசியையும் கீழ்ப்படி. (5, 93).

"இரண்டற்ற ஒரே கடவுள்" என்பதை இது மறுக்கிறது. ஏனெனில் அவருக்குச் சமானமானவர்களிருக்கிறார்கள். இங்ஙனம் நம்புவது மதியீனமாகும்.

67. கழிந்தவைகளை மன்னித்துவிடுகிறார். மீண்டுஞ் செய்வோனைப் பழிவாங்குகிறார். (5, 96).

பாபத்தை மன்னிப்பது என்பது பாபச் செயலை ஆதரிப்பது போன்ற வளவு கெட்டது. பாப வளர்ச்சிக்குத் துணை நின்று அதை வளரச் செய்யும் நூல் ஈசுவர வாக்கும் ஆகாது; அறிஞன் மொழியு மாகாது. இந்நூல் தீயகாரியங்களை வளர்க்க வல்லது. கடவுளைத் துதித்து, செய்த காரியங்களுக்கு வருந்தி, இனி நல்ல காரியங்களைச் செய்ய முயலுவது, முதலானவைகளெல்லாம் ஏற்கக் கூடியதே.

68. அல்லாவைப்பற்றி பொய்ச் சொல்வோனைக் காட்டிலும் தீயோன் உண்டோ? அருளப்படாமல் இருக்கும்பொழுது "அல்லாவிலிருந்து இறங்கியது" என்று கொள்ளப்பட்டவனும் அப்படியே. இதைப்போலுள்ள அல்லாவால் அருளிய கிரந்தத்தைச் செய்வேன் என்பவனும் தீயோனே. (5,93).

முகம்மது நபி இறைவன் மொழி யெனக் குர்-ஆனைக் கூறின காலத்து வேறு ஒருவன் கடவுள் வர்க்கென்று வேறு புத்தகத்தைக் கொண்டு வந்திருக்க வேண்டும். அவனும் தன்னை நபிநாயகம் என்று கூறியிருக்கவேண்டும். தனது எதிரியை விரட்டவும், சுயமதிப்பை அதிகப்படுத்தவும், குர்-ஆனில் இது சேர்க்கப்பட்டிருக்கிறது போலும்.

69. உம்மைப் படைத்தோம், திருத்தி அமைத்தோம். ஆதாமுக்குப் பணி என்றோம். எபிலிசானவன் மறத்து அல்லாவைவிட நான் உத்தமன் என்றான். மண்ணிலிருந்து யாவற்றையும் சிருஷ்டித்தாய், என்னையோ அனலிலிருந்து உண்டு செய்தாய் என்றான். சுவர்க்கம் உன்னுடைய இடம் அல்ல. இழிவுள்ளவனே! இங்கு இருந்து ஓடு. இறப்பிலிருந்து எழும்வரை அங்கிருப்பாய் என்று சபித்ததும் அவன் என்னைச் சபித்தபடியால் உனது நேர் வழியிலிருந்து வருபவர்களைத் தடுப்பேன். அவர்கள் முன்னிலிருந்தும், பின்னிலிருந்தும், வலதிலிருந்தும், இடதிலிருந்தும் வேலை செய்வேன். உனக்கு நன்றியுள்ளவர்கள் அதிகம் இரார்கள். என்னிடம் நில்லாதே! நிந்திக்கப்பட்டவனே! தள்ளப்பட்டவனே! உன்னைப் பின்பற்றுபவனும் நரகத்தை அடைவான். (10, 10-17).

கடவுளுக்கும் சாத்தானுக்கும் ஏற்பட்ட வாக்கு வாதத்தை வாசகர்கள் ஊன்றிக் கவனிக்க வேண்டும். இந்தச் சாத்தான் சுவர்க்கத்தில் இருந்த ஒரு தேவதை. கடவுளால் இதை அடக்கி ஆள முடியவில்லை. இந்த தேவதையின் மனதைச் சுத்தப்படுத்தி வைக்கவும் முடியவில்லை. மேலும், இந்தச் சாத்தானைக் கடவுள் தன் வழி நடக்க விட்டுவிட்டார். சாத்தான் மனிதவர்க்கத்தைத் தீய வழிகளில் பயமில்லாது நடத்த கடவுள் இச்சாத்தனைத் தண்டிக்கவில்லை. இது கடவுள் செய்த பெரும் பிழை. சாத்தான் மனிதரை ஏமாற்றுபவன், கடவுள் சாத்தானை ஏமாற்றுபவர். ஏனவே கடவுள் பெரிய ஏமாற்றக்காரர். இதிலிருந்து சித்தமாவது என்ன? கெடுதல்களுக்கு எல்லாம் மூல காரணம் கடவுள் என்பதல்லவா? முகம்மதியர்களால் எங்ஙனம நம்பிக்கை வைக்க முடியும். அறிஞர்கள் இக்கதையில் நம்பிக்கை வைக்கமாட்டார்கள். கடவுள் அளவிற்குடபட்டவர், நியாயமற்றவர் என்பதும் இவர் தேவதைகளுடன் மனிதரைப்போல் பேசினர் என்பதும் இதிலிருந்து விளங்கவில்லையா? ஆகவே கல்விமான்கள் இஸ்லாம் மதத்தை ஏற்க மறுக்கின்றனர்.

70. உன் தலைவன் அல்லா. ஆறு தினத்தில் வானத்தையும் பூமியையுஞ் செய்தான். பிறகு சிம்மாசனம் ஏறினன். பணிவுடனும் இரகசியமாயும் உன் அல்லாவை அழைப்பாய். (7, 52-53).

ஆறு தினங்களில் உலகத்தைச் சிருஷ்டித்து, பின்னர், சுவர்க்கத்தில் சுகமாக வீற்றிருப்பவர் சர்வ வல்லமை யுள்ளவராய் சர்வ வியாபியாய் இருக்க முடியுமா? அத்தகைய பரிபூரண சுவபாவமில்லாததைக் கடவுளென்று அழைக்க முடியுமா? சத்தத்துடன் கூவினல் உங்கள் கடவுளுக்குக் கேழ்க்குமா? இதெல்லாம் கடவுளிடமிருந்து வெளிவந்ததாகாது. எனவே குர்-ஆன் இறைவன் அருளியதாகாது. ஆறு தினங்கள் பிரயாசையுடன் உலகத்தைச் சிருஷ்டித்த கடவுளுக்கு ஓய்வு வேண்டியதுதான். அவர் இன்னும் தூங்கிக்கொண்டிருக்கிறாரா அல்லது இப்பொழுது விழித்துக் கொண்டுவிட்டாரா என்று நமக்குத் தெரியவில்லை. விழித்துக் கொண்டுவிட்டார் எனின் என்ன செய்துக் கொண்டிருக்கிறர்? உல்லாசமாக உலாவிக்கொண்டு களிப்புடனிருந்து வருகிறாரா?

71. அட்டூழியத்தினல் பூமியை நாசஞ் செய்யாதே. (7, 52).

இது நல்ல புத்திமதியே. வேறு பல விடங்களில், குர்-ஆன் சண்டையிடும்படி கூறுகிறதே. காபிரிகளைக் கொல்லுமாறு தூண்டுகிறதே. இது முன்னுக்குப் பின் முரண் அல்லவா? இதன் பொருள் என்ன? மகம்மது தனது அதிகாரத்தைப் பூர்ணமாய் ஸ்தாபிக்குமுன் சண்டை செய்யுமாறு தூண்டினர் போலும். தான் சகல அதிகாரத்துடன் கூடினவுடன் பின்னதைக் கூறினர் போலும். முன்னது, பின்னதும் முரண்பாடானபடியினல் உண்மையாகாது.

72. கழியைக் கீழே எறிந்தார். ஓகோ அது பாம்பாக மாறிற்று. (5, 105).

கடவுளும், முகம்மதும் இப்பொய்களில் நம்பிக்கை உள்ளவர்கள் என்பதைக் காட்டுகிறது. எனவே இருவரும் அறிவற்றவர்கள். இயற்கைச் சட்டத்தை மாற்றி அமைக்க முடியாது. காது பார்க்கும் சக்தி பெறவும், கண் கேட்கும் சக்தி பெறவும் யாராலாவது செய்ய முடியாது. இது ஜாலமாகும்.

73. பிரளயத்தையும், தத்துக்கிளியையும், பல்லி, தவளை, இரத்தம் முதலியவற்றை அனுப்பினேம். பழிக்குப்பழி வாங்க, அகாதத்தில் அவர்களை அமிழ்த்தினேம். கடல்தாண்டி இஸ்ரவேல் குழந்தைகளைக் கொணர்ந்தோம். அவர்கள் செய்யும் தொழுகை வீண். (7, 130, 132, 134).

ஒருவனைப் பயப்படுத்த வேண்டி பாம்பை வரவழித்து உன்னைக் கொல்லச் செய்வேன் என்று ஒரு ஜால வேடிக்கைக்காரன் கூற்றைப்போல் இது தோன்றவில்லையா? ஏன் கடவுள் ஒரு ஜாதியாரைக் கடலில் முழுகிப் போகுமாறு செய்யவேண்டும். மற்றொரு ஜாதியார் நன்மைக்காகக் கடவுள் இங்ஙனம் செய்யலாமா? இங்ஙனம் செய்யும் கடவுள் பாபி அல்லவா? பிறமதம் பொய் என்றும், தனது மதந்தான் உண்மையானது என்றும் கூறும் மதம் உண்மை மதம் ஆகுமா? ஒரு மதத்தைப் பின்பற்றுபவர் அனைவரும் நல்லவர்கள் என்று சொல்ல முடியுமா? ஒருதலைப் பட்சபாதமான தீர்ப்பு முட்டாள்கள் வேலையாகும். பழைய பைபிளின்மேல் ஸ்தாபிக்கப்பட்ட மதம் பொய்

யானதோ. அல்லது வேறு எந்த மதம் பொய் என்று கூறப்படுகிறது. குர்.ஆன் பொய் என்று கூறும் மதம் எது.

74. என்னைப் பார்க்கவேண்டாம். அல்லாவானவர் மலையில் பிரகாசிக்க அவர் பொடிப் பொடியாக செய்துவிட்டார். மூசாவானவன் மயங்கி விழுந்தான். (7, 139).

கண்ணில் புலப்படும் பொருள் சர்வ வியாபியாக இருத்தல் முடியாது. அவர் பெரும் ஆச்சரியங்களை அப்பொழுது செய்திருப்பின் இப்பொழுதும் ஏன் செய்யலாகாது? தருக்கத்திற்குமுன் நிற்காததும், அறிவிற்கு விரோதயானதுமானதையும் நம்ப முடியாது.

75. உன்னிலேயே அல்லாவை நீ பயமுடனும் பணிவுடனும், சப்தமன்னியிலும் காலை மாலையிலும் நினை. (7, 204).

ஓரிடத்தில் குர்-ஆன் கடவுளைக் கூவி அழைக்க வேண்டுமென்று கூறுகிறது. இங்கு மனதில் சத்தமில்லாது ஸ்மரிக்கவேண்டும் என்று குர்-ஆன் கூறுகிறது. இந்த இரண்டில் எது உண்மையானது. எதை நம்புவது? இத்தகை முன்னுக்குப்பின் விரோதமான வார்த்தைகளைப் புத்தி மாறாட்டக்காரன், தான் கூறுவான். மனிதன் பிழை செய்யலாம். அதை ஒப்புககொண்டால் நல்லது.

76. அபகரித்தவைகளைப் பற்றி கேட்பார்கள். அபகரித்தவைகள் அல்லாவிற்கும் தீர்க்கதரிசிக்கும் சொந்தமானவைகள். ஆகையால் அவருக்குப் பயமுடன் இரு, (8, 1).

பிறரை வதைத்து கொள்ளை யடிப்பவர்கள், கொள்ளையையே பிழைக்குந் தொழிலாகக் கொள்ளுபவர்கள் பிறரைக் கொள்ளை வழியில் தூண்டுபவர்கள் கடவுள் என்றும், தீர்க்கதரிசி என்றும், உண்மையான நம்பிக்கை கொண்டவர்கள் என்றும் அழைத்துககொள்ளுதல் நமக்கு வியப்பைத் தருகிறது. ஒரு மூச்சில் கொள்ளை; இரண்டாவதில் கடவுளுக்கு அஞ்சேல் என்று போதிப்பவர்கள், தங்கள் மதந்தான் சத்தியமதம் என்று வெட்கமில்லாது கூறிக்கொள்கிறார்கள். பிடிவாதத்தினால் வேத மதத்தைத் தழுவ மறுப்பவர்களுமுண்டோ?

77. காபிரிகள் உயர்வாக மதிப்பதை வெட்டிவிடுங்கள். ஒன்றின்பின் ஒன்றாய் ஆயிரம் தேவர்களைத் துணை அனுப்புவோம். காபிரிகளின் மனதில் பயத்தை இறுத்துவோம். ஆகையால் அவர்கள் கழுத்தை எடுத்துவிடு. ஒவ்வொரு விரல்களையும் துண்டித்துவிடு. (8, 7, 9, 12).

காபிரிகளின் தலையை வெட்டு என்று கூறும் நபியும் கடவுளும் எவ்வளவு கருணை அற்றவர்கள்? இங்ஙனம் சொல்லுமாறு தூண்டுபவர்கள் ராவணன் என்னும் ராக்ஷஸனைவிட எவ்விதத்தில் மேம்பட்டவர்கள். இது குர்.ஆனைச் செய்தவன் கூற்று. கடவுள் கூற்றல்ல. இது கடவுளின் கூற்றாயின் அக்கடவுள் நம்மைவிட்டு விலகி நிற்கட்டும்.

78. முசல்மான்களோடு அல்லா, ஏ நம்புபவர்களே அவரையும் தீர்க்கதரிசியையும் கீழ்ப்படியுங்கள். அவரையும் தீர்க்கதரிசியையும் வஞ்சிக்காதே

யுங்கள். உங்கள் மதத்தைப் புத்திக்கு விரோதமாய் செய்யாதே யுங்கள். அல்லா வானவர் அவர்களுக்கு விரோதமாய் சதிசெய்து இருக்கிறார். சதி செய்வதில் சிறந்தவர். (8. 19, 23, 26, 29).

கடவுள் மகம்மதியரிடந்தான் பற்றுக் கொண்டவரா? அங்ஙனமாயின் அவர் அநியாயக்காரர். கடவுள் லோக நாயகன். அவர் மகம்மதியருக்கு மாத்திரம் நாயகரல்லர். உங்கள் கடவுள் செவிடரா நீங்கள் கூவி வழிபடு வதற்கு? கடவுளின் நாமத்துடன் நபியையும் சேர்ப்பது பிழையல்லவா? கடவுள் பொக்கிஷம் எங்கிருக்கிறது. யாராவது அதைத் திருடிவிடுவார் என்று அவர் அஞ்சக் கூடிய அப்பொக்கிஷம் எங்குளது என்று சொல்லக் கூடுமோ? கடவுளுடைய பொக்கிஷத்தையும், முகம்மதின் பொக்கிஷத்தை வும் தவிர மற்றவர்களுடைய சொத்துக்களைக் களவாடல் நியாயமாகுமா? அறி விலியும், போக்கிரியுந்தான இத்தகைய போதனைகளைச் செய்யக்கூடும், இவை களிலிருந்து ஒருவர் அறியக் கிடப்பது குர்-ஆன் கடவுள் வாக்கல்லவென்பதே. இதை ஆக்கியவன் பொய்யன்; தந்திரக்காரன். இல்லையேல் இத்தகைய துர் போதனைகள் நூலில் மலிந்து கிடக்க முடியாது.

79. ஒழுக்கின்மை ஒழியும் வரை சண்டை செய். முழுவதையும் அல்லா வின் மதமாகவேச் செய்துவிடு. கொள்ளையடித்ததில் ஐந்தில் ஒருபங்கு அல்லா வுக்கும் தீர்க்கதரிசிக்கும் சொந்தமானவை. (8. 40-42).

சண்டை செய்வதும், பிறரைச் செய்யுமாறு தூண்டுவதும், அமைதி யைக் குலைப்பதுமான செயல்களையும் மகம்மதியக் கடவுளைத் தவிர வேறு யாவர் செய்வார்கள்? நபியின் நன்மைக்காக இம்மதம் கொள்ளை யடித்தலை ஆதரிப்பதைக் கவனியுங்கள், தக் என்போர்களைக் காட்டிலும் இவர்கள் மேம் பட்டவர்களா? கொள்ளையில் தனது பாகத்தை ஏற்கும் கடவுளும் அதில் கலந்தவராவர். இத்தகைய தீய காரியங்களை ஆதரிப்பதினால் கடவுள் தன் மானத்தைக் குறைத்துக் கொள்கிறார். உலகத்தார்கள் நேசத்தையும் உலகத் தின் சந்தோஷத்தையும் குலைத்து மானிட வகுப்பிற்குத் துன்பத்தை விளைக்க வல்ல இம்மதமும், கடவுளும், நபியும், குர்-ஆனும் எங்கிருந்து வந்தது என வியப்படைகிறோம்? இத்தகைய பொய் மதங்கள் தோன்றியிராவிடில் உலகம் அமைதியில் வாழ்ந்திருக்கும்.

80. காபிரிகளைத் தேவர்கள் கொல்வதைப் பாருங்கள். கன்னங்களிலும் முதுகிலும் அடித்து அனலின் அவஸ்தையை அனுபவியுங்கள். பாபத்திற்காக அவர்களை அழித்தோம். பரோவாவின் ஜனங்களை அமிழ்த்தினோம். உன் சக்தியையெல்லாம் திரட்டி அவர்களுக்கு விரோதமாயிரு. (8. 52, 56, 62).

தற்பொழுது ருஷியா துருக்கியை யடக்கிற்று. இங்கிலாந்து எகிப்ததைத் தன் வசபடுத்திக் கொண்டது. இருந்தும் கடவுளும், தேவதைகளும். முகம் மதியர்களுக்கு எவ்வித உதவியும் புரியவில்லை. அவர்கள் தூங்குகிறார்களா? பழமையில் முகம்மதியர்களின் விரோதிகளைக் கடவுள் கொன்றும், ஜலத்தில் மூழ்கடித்தும் வந்தார். ஏன் இப்பொழுது மாத்திரம் முகம்மதியர்களுக்கு உதவி செய்யாதிருக்கிறார்? இதிலிருந்து அவர் எக்காலத்திலும் எதுவும் செய்யு

வில்லை யென்பது உள்ளங்கை நெல்லிக்காய். காபிரிகளை வறுத்துங்கள், துன்புறுத்துங்கள், என்று கடவுளிடம் உத்தரவைக் கவனியுங்கள். கடவுள் ஒருபுற மிருக்கப் படித்தவன் தயாள குணமுள்ளவன் எவனும் இங்ஙனம் சொல்லான். ஆனால் முகம்மதியர்கள் தங்கள் கடவுளைத் தயாளு, நியாயஞ் செய்கிறவர் என்று அழைக்கின்றனர். இது பொருந்துமோ என்பதே கேள்வி.

81. நாதனே! அல்லாவே உனக்கு ஆதரவு. முசல்மான்களைச் சண்டைக்குமுன் செலுத்தும் தலைவனாயிரு. இருபது ஆட்கள் ஒற்றுமையுடன் எப்பொழுதும் இருந்தால் இருநூறு ஆட்களை வென்றுவிடலாம். சம்பாதித்ததையும் சரியானதையும் சிறந்தவைகளையும் தின்னுங்கள். அவர் தயாபரனும் பட்சமுள்ளவர். (8. 65-66-70).

தன்னைச் சேர்ந்தவர்கள் என்ற காரணமாகப் பெரும் தீய காரியங்களைச் செய்பவர்களை ஆதரிப்பது என்பது எத்தகைய நீதியென்பதைக் கவனியுங்கள். கொள்ளை யடிக்கத் தூண்டுபவனும், கொள்ளையில் பங்கெடுத்துக் கொள்பவனும் கொள்ளையை நியாயமென்று அழைப்பவனும் தயாளுவாயிருக்க முடியுமா? நல்ல மனிதனும் இக்காரியங்களைச் செய்யான். செய்தலையும் ஆதரியான். இத்தகைய துர்போதனைகள் குர்-ஆன் கடவுள் வாக்கு என்பதை நம்ப இடந்தரவில்லை.

82. அவர்கள் அதிலேயே எப்பொழுதும் இருப்பார்கள். அல்லாவே அளவற்ற வெகுமதி. முசல்மானைவிடக் காபிரியாக இருந்தால் அப்படியுள்ள தகப்பனையும், சகோதரனையும் நண்பனாக எண்ணாதீர்கள். முசல்மான்களுக்கும் அல்லாவிற்கும் தன் சந்தோஷத்தை யனுப்புவித்தார். தேவர்களின் சைனியத்தை யனுப்புவித்து அவர்களைத் தண்டித்தார். அவைகளை அவர்கள் காணவில்லை. கிருபையுள்ளவனிடம் திரும்புவார். அல்லாவை நம்பாதவனோடு சண்டை செய்யுங்கள். (8. 12, 20, 24, 25, 27).

சுவர்க்கத்தில் வசிப்பவர்களின் பக்கத்தில கடவுளிருக்க அவர் எங்ஙனம் சர்வ வியாபியாக இருக்க முடியும்? சர்வ வியாபியாக இல்லாதவன் உலகத்தைச் சிருஷ்டிக்க முடியாது. அதன் நாயகனாகவுமிருக்க முடியாது. பெற்றோரை மறுத்தல் பிசகே. ஆனால் பெற்றோர்கள் தீய போதனைகளைக் கூறி வந்தால் நாம் எப்படி கீழ்ப்படிய முடியும்? அவைகளுக்கு நாம் கீழ்ப்படிய முடியாது. முகம்மதியர்கள் மீது வரம்பு கடந்த அன்புகொண்டு அவர்களுக்குதவி காத்த தேவதைகளை யனுப்பிய கடவுள் இன்று ஏன் அங்ஙனம் செய்யாது சும்மாயிருக்கிறார். காபிரிகளைக் கடவுள் தண்டித்தது உண்மையாயின் இன்றும் ஏன் அங்ஙனம் செய்யக்கூடாது? கடவுள் தன்னைப்பின் பற்றுகிறவர்களைச் சண்டைக்குத் தூண்டாது அவரது மதத்தைச் சனங்களிடம் பரப்ப முடியவில்லை போலும். அத்தகைய ஈசனுக்கு நாம் செலவு கொடுத்தனுப்புவோம்.

83. அல்லாவினிடமிருந்தாவது அல்லது என்னிடமிருந்தாவது நீ தண்டனை அடைவதற்கு காத்திருக்கிறோம். (8. 58)

மகம்மதியர்கள் கடவுளின் போலீஸ்காரர்களா? பிற மதத்தாரை இவர்கள் பிடித்து வறுத்த உத்தரவுபெற்றவர்களா? கோடிக் கணக்காய் இருக்கும் பிற மதத்தார் கடவுளின் விரோதிகளா? பெரும் பாபிகளாகியும் மகம்மதியர்கள் கடவுளின் நண்பர்களா? இங்ஙனமாயின் மகம்மதியக் கடவுள் பெரும் கொடுங்கோலன். அறிஞர்களான மகம்மதியர்களும், சிந்தனைக்கும், தருக்கத்திக்கும் முன் நிற்க முடியாத ஆதாரமற்ற இந் நூலில் நம்பிக்கை வைத்திருப்பது நமக்கு வியப்பைத் தருகிறது.

84. முசல்மான்களுக்கு (ஆண் பெண் அடங்க) அருவியுடன் கூடின பூங்காவனத்தையும் தங்கியிருக்க அந்த ஏடேன் நந்தவனத்தில் மாளிகையையும் வாக்களிக்கிறார். அதில் சிறந்ததான அல்லாவின் ஆனந்தம் அவர்கள் மேல் உண்டு. இதுதான் பரமானந்தம். இதை நிந்திப்பவர்கள் அல்லாவால் நிந்திக்கப்படுவார்கள். (8, 75-80).

மீனைப்பிடிக்க, தூண்டியில் ஆகாரம் வைப்பதுபோல் முகம்மது தனது சுயநலத்திற்காகக் கடவுள் பேரால், மகம்மதியர்களைத் தனது தூண்டியினால் இழுக்கிறார். முகம்மது தூண்டியில் சிக்கிவிட்டனர். மனிதன்தான் ஒருவனையொருவன் நிந்திப்பான். கடவுள் அங்ஙனம் செய்யமாட்டார். அங்ஙனம் செய்தல் கடவுள் தன்மையாகாது. குர்-ஆன் அண்டப்புளுகை ஆதாரமாகக் கொண்ட கட்டுக்கதை.

85. சரீரத்தினாலும் பணத்தாலும் தூதனும் அவர்களும் மதத்திற்காகப் பாடுபடுகிறார்கள். இதெல்லாம் அவர்களுக்காக. அவர்கள் மனதை அல்லாவானவர் முத்திரையிட்டிருக்கிறார். அவர்கள் அறியவில்லை. (8, 89-94).

சுயநலத்தைக் கவனியுங்கள். முகம்மதினிடம் நம்பிக்கை வைத்தவர்கள்தான் நல்லவர்களாம். மற்றவர்கள், கண்டிக்கத் தகுந்தவர்களாம். இக்கூற்று விந்தையாக இருக்கவில்லையா? கடவுளே அவர்கள் இருதயத்தில் நல்லவர்கள் என்ற முத்திரை வைத்துவிட்டபடியால் அவர்களை நாம் குறைகூற முடியாது. குற்றம் கடவுளுடையது. நல்லது செய்தல் என்னும் எண்ணத்தைக் கடவுள் ஒழித்துவிட்டார். அநியாயத்தைக் கவனியுங்கள்.

86 தானத்தின் இரசத்தை எடு. புனிதமாகச் சென்று அதற்குத் தொழுகை செய். உன்னுடைய தொழுகை அவர்களுக்கு ஆறுதல் அளிக்கும். சத்தியையும் சரீரத்தையும் சுவர்க்கத்தின் நிமித்தம் அர்ப்பணஞ் செய்தார்கள். அல்லாவின் வழியில் நின்று சண்டை செய்யவும் சிதறுண்டு போகவும் தயார். (இவையெல்லாம் சுவர்க்கத்திற்கே). (10, 106-113).

இது விந்தையே! தன்னைத் திருப்தி செய்கிறவர்களின் நன்மைக்காகத் துதிசெய்யும் போப் புரோகிதரைப்போல், முகம்மதும் காணப்படுகிறார். முகம்மதியர் மூலமாய் ஏழை எளியோர்களுடைய உயிர்வதையினால் அவர் வியாபாரஞ் செய்கிறாரென்று நினைப்பவன் எவன்? அநாதைகளை நரகத்திற் தள்ளி துன்புறுத்துகிற கடவுள் கொடுமைக்கும் அநீதிக்கும் ஆளாகிறார். இது அவருடைய ஈசுவரத் தன்மையைக் குலைப்பதாகும். தர்மாத்மாக்களும் பெரியார்களும் காரணமன்னியில் அவரை மதிக்கவில்லை.

87. முசல்மான்களே! அண்டையிலுள்ள காபிரிகளுடன் சண்டை செய்யுங்கள். உங்களைக் கடுமையானவர்கள் என்று அவர்கள் அறியட்டும். வருடத்தில் ஒருமுறை அல்லது இருமுறை அவஸ்தையைப் பார்க்காமல் இரார்களா? அவர்கள் திரும்புகிறதுமில்லை. எச்சரிக்கையும் வேண்டாம். (9, 124-127).

மனிதனின் உயர் வெண்ணத்திற்கு மாறாக ஒருவனுடைய நண்பனையுங் கொல்லுமாறு கூறுவதைக் கவனியுங்கள். அயலார்களுடன் சண்டையிடவும் அவர்களைக் கொல்லவும் செய்யுமாறு தூண்டுகிறது. அறிவு ஒளிபடர்ந்த இந்நாளில் இத் துர்போதனைகளைக் களையவேண்டும். இங்ஙனம் செய்ய முற்படாபவர்கள் பலனைப் பெறுவார்கள்.

88. வானத்தையும் பூமியையும் ஆறே தினங்களில் செய்தது அல்லாவே! இவைகளைக் காக்க சிங்காசன மேறினர். (15, 3).

ஆகாசம் என்பது செயற்கைப் பொருளல்ல. அது சிருஷ்டிக்கப்படாத பெரும்பொருள். அது சிருஷ்டிக்கப் பட்டதென்று உறுதிசெய்வது குர்-ஆன் ஆசிரியரின் இயற்கைத் தத்துவஞான சூன்யத்தை வெளிப்படுத்துகிறது. கடவுள் ஆறு தினங்களில் பிரயாசைப்பட்டு சிருஷ்டித்தாரா? "இரு" என்றார், உலகம் "இருந்தது" என்று குர்-ஆன் கூறுவது ஆறுநாள் சிருஷ்டியைப் பொய்யாக்குகிறது. முகம்மதியக் கடவுள் சர்வ வியபகராயிருந்தால் ஏன் வானத்திலோ அல்லது சுவர்க்கத்திலோ தனது இருப்பிடத்தை ஏற்படுத்திக் கொள்ள வேண்டும்? தமது அதிகாரத்தைப் பற்றியும் அதை அமுல் செய்வதைப் பற்றியும் சிந்தித்து வருவாராகுல் கடவுள் மனிதரைப் போலாவார். சர்வ வல்லமையுள்ள கடவுள் ஏன் சுவர்க்கத்திலிருந்து கொண்டு சிந்தனை செய்ய வேண்டும்? கடவுளறிவில்லாதவனும் அறியாமையிலழுந்தினவனுமே குர்-ஆனைச் செய்தானென்று விளங்குகிறது.

89. வழியும் தயையும் முசல்மான்களுக்கு. (10, 55).

கடவுள் முகம்மதியர்களுக்குத்தான் சொந்தமானவரா? பிறருக்கு அவர் சொந்தமானவரல்லரா? அவர் அவ்வளவு பாரபட்சமானவரா? முஸ்லீம்களுக்குத்தான் அவர் அருள் புரிகிறாரா. மற்றவர்களிடத்தில் கருணையற்றவரா? முஸ்லீம்களைத் தவிர மற்றவர்களுக்கு அவர் ஆணவரா யிராவிடில் அவரது அறிவு பயனற்றதாகும்.

90. உங்களில் சிறந்தோன் என்பதை நிரூபணஞ் செய்வதற்கு. "இறந்த பின் எழுவாய்" என்றால் "இது ஏதோ ஜாலம்" என்பார்கள். (11, 9-10).

கடவுளுக்குத் தான் செய்த வேலையை மீண்டும் பரிட்சித்துப் பார்க்கும் அவசியம் ஏற்படின் அது அவருடைய சர்வ வல்லமையைக் காட்டாது. எனவே இங்ஙனம் செய்யும் கடவுள் சர்வ வல்லமை யுள்ளவராகமாட்டார். இறந்தவர்களைக் கடவுள் உயிர்ப்பிக்கிறாரென்றால், இங்ஙனம் உயிர்ப்பிக்கப் பட்டவர்கள் எல்லையில்லாத காலம் வரை தாங்கள் விதியின் முடிவைப்பெறாது காத்திருக்கவேண்டுமே. மேலும் இறந்தவர்களை உயிர்ப்பித்தாரென்பது அவருடைய தெய்வக் கட்டளைக்கு விரோதமாகவிருக்க வில்லையா? இங்ஙனம் அவர்தான் தனது சட்டத்தை மீறலாமா?

91. பூமியே! "ஜலத்தை விழுங்கிவிடு", "வானமே நின்றுவிடு" என்று சொல்லப்பட்டது. ஜலங் குறைந்தது. இதுதான் அல்லாவின் பெண் ஒட்டகம். இதுதான் அடையாளம். எங்கும் போகட்டும். அல்லாவின் பூமியில் மேயட்டும். (**11**, 43, 46).

இது குழந்தைப் பேச்சாகக் காணப்படவில்லையா? பூமிக்கும் சுவர்க்கத்திற்கும் கேட்கும் சக்தி யிருக்கிறதா? கடவுள் ஒரு பெண் ஒட்டகத்தை வைத்திருப்பின், அவர் ஒரு ஆண் ஒட்டகத்தையும் வைத்திருக்கவேண்டும். தவிரவும் அவர் யானை, குதிரை, கழுதை முதலிய பரிவாரங்களையும் வைத்திருக்கவேண்டுமே. தனது பெண் ஒட்டகத்தைக் கடவுள் பிறர் தோட்டத்தில் மேயவிட்டால் அவர் பெருமைக்குப் பங்கம் விளைக்காதா? கடவுள் பெண் ஒட்டகத்தில் ஏறி சவாரி செய்கிறாரா? இது முகம்மதியக் கடவுளின் வாழ்க்கையாயின் பூலோகத்திலிருக்கும் சீமான்களைப்போல் அவரும் ஆடம்பர வாழ்க்கையையும் வீடு வாகனங்களையும் கொண்டவரா?

92. வானமும் பூமியும் இருக்கும்வரை அங்கு இருப்பார்கள். அருளியவர்களுக்குப் பூங்காவனமே. அங்கே அவர்கள் வானமும் பூமியும் இருக்கும்வரை இருப்பார்கள். (**11**, 109-110).

தீர்ப்புத் தினத்திற்குப் பிறகு மனிதர்கள் சுவர்க்கம் அல்லது நரகத்திற்குச் செல்ல வேண்டுமெனின் பிறகு உலகம் எதற்கு? வானம் எதற்கு? பூமியும் வானமும் இருக்குமளவும் சுவர்க்கமும் நரகமும் இருக்க வேண்டுமாயின்" எக்காலமும் அவர்கள் சுவர்க்கத்திலோ அல்லது நரகத்திலோ வாழ்வார்களென்பது" ஆதாரமற்ற வார்த்தையே. அறிவிலிகளே இங்ஙனம் கூறுவார்கள். கடவுளும் அறிஞர்களும் கூறமாட்டார்கள்.

93. "தகப்பனே உண்மையாகவே பதினொன்று நட்சத்திரங்களையும் சூரிய சந்திரனையும்" ஜோசப் பார்த்தேன் என்றபொழுது. (**1**, 4).

இம்மேற்கோளில் தகப்பனுக்கும், பிள்ளைக்கும் ஏற்பட்ட வாக்கு வாதம் குறிக்கப்பட்டிருக்கிறது. இதிலிருந்து குர்ஆன் கடவுள் வாக்கல்ல வென்றும், யாரோ ஒரு மனிதன் மானிட வர்க்கத்து வாழ்க்கைச் சரிதையை வைத்து எழுதியது என்பதும் சித்தமாகும்.

94. அல்லாவானவர் வானத்தைத் தூண் அன்னியில் நிறுத்தினர். அதை நீ அறியாய். சிங்காதனமேறி சூரிய சந்திரனைச் சட்டத்திற்குட்படுத்தினர். பூமியைப் பரப்பினர். வானத்திலிருந்து மழையைப் பெய்யச் சொல்லுகிறார். அருவிகளையும் ஓடச்செய்கிறார். (**13**, 15)

இஷ்டம்போல் தாராளக்கைகளை உடையவர். நிதானமாகவும் உபயோகப்படுத்துபவர். (**13**, 2, 3, 15, 22).

மூஸ்லீம் இறைவனுக்கு ஜட சாஸ்திரம் தெரியாதென்று இதிலிருந்து விளங்கும். எனெனில் ஜடசாஸ்திர ஞானம் இருப்பின் சுவர்க்கம் தூண்களிலிருக்கிறதென்று கூறியிருக்கமாட்டார். ஒரு தனிவிடத்திலோ அல்லது சுவர்க்கத்திலோ கடவுள் இருப்பாரானல் அவர் சர்வ வியாபியாகவும்

சர்வ வல்லமை யுள்ளவராகவும் இருத்தல் முடியாது. மேகத்தைப்பற்றின சாஸ்திர ஞானமிருந்திருப்பின் கடவுள் "சுவர்க்கத்திலிருந்து மழையைப் பெய்யச் செய்தார்" என்பதுடன் "ஆகாயத்தில் நீரைப் போகச் செய்தார்" என்றும் சேர்த்திருப்பார். எனவே குர்-ஆனை ஆக்கியவருக்கு மேக அறிவு போதாதென்பது சித்தம். மனிதனுடைய காரியங்களைக் கவனியாது சிலருக்குச் சுகத்தையும் வேறு சிலருக்குத் துக்கத்தையும் அவர் தருவாரேயானால் அறிவில்லாதவரென்றே சொல்லவேண்டும்.

95. இஷ்டப்பட்டவர்களைக் கெட்டவழியில் சேர்ப்பவர். தன்னைப் பார்ப்பவர்களுக்கு வழிகாட்டுபவர் (**13**, 23).

கடவுள் இங்ஙனம் மனிதனை மயக்குவாரானால் அவருக்கும் சாத்தானுக்கும் என்ன வித்தியாச மிருக்கிறது? ஜனங்களை ஏமாற்றித் தீய வழியில் நடத்துங் காரணத்திற்காகச் சாத்தான் கண்டிக்கப் பட்டான். சயித்தானைப்போல் காரியம் செய்யும் கடவுளைத் தண்டித்துத் தள்ளிப் போடவேண்டாமா? இத் தப்பு கர்மத்திற்காக ஏன் கடவுளை நரகத்தில் தள்ளக் கூடாது?

96. குர்-ஆன் ஷரீபை அரபியில் கட்டளைபோல் அனுப்பி யிருக்கிறோம். இவ்வறிவு தெரிந்தவுடன் அல்லாவிற்கு விரோதமாக உனக்கு ஆதரவு உள்ளவனும் காப்பாற்றுபவனும் இல்லை. **13**, 38).

குர்-ஆனைக் கடவுள் எங்ஙனம் அனுப்பினார்? அவர் ஆகாசத்தில் வசிக்கிறாரா? இங்ஙனம் அவர் எங்கும் நிறைந்த ஸ்வரூபியாயிருக்க முடியாதல்லவா? கடவுள் அவ்வளவு உயரத்திலிருந்தால் அவருக்கு ஒரு தூதன் தேவை. எனவே மனிதனைப் போன்றவராகிறார். இதிலிருந்து குர்-ஆன் கடவுளால் அருளப்பட்டதல்லவென்பதும் மனிதனால் செய்யப்பட்ட தென்பதும் நன்கு விளங்கவில்லையா?

97. சந்திர சூரியனை அலைய ஆக்ஞாபித்தார். மனிதன் உண்மையாகவே பாபியும் அநியாயமும் செய்பவன். (**14**, 27).

சூரியனும் சந்திரனும் ஓயாது அலைந்து கொண்டிருக்கின்றனவா? பூமியும் சுற்றுமலிருக்குமானால் இரவு பகல் பல வருடங்களாக மாறும். நிற்க மனிதன் இயற்கையாகவே கொடுஞ் சுபாவம் உள்ளவன். எனவே குர்-ஆன் மூலமாக அவனுக்கு எச்சரிப்பு முடியாது. இயற்கையிலேயே தீயோர்கள் நல்லோர்களாவது கஷ்டம். உலகத்தில் நல்லவர்களும் கெட்டவர்களும் இருக்கின்றனர். எனவே இத்தகைய மாறுபாடான விஷயங்களைக் கூறும் புத்தகம் கடவுளது நூலாகுமா? ஒரு நாளும் ஆகாது.

98. "அவனை அமைத்து என் உணர்வை அளித்தபொழுது கீழேவிழுந்து அவனைத் தொழு." "என் பிரபுவே! என்னை வஞ்சித்தபடியால் பூமியிலுள்ள யாவற்றையும் நல்லதுபோல் தென்படச் செய்கிறேன். நிச்சயமாகவே எல்லோரையும் ஏமாற்றுகிறேன்". (**16**. 29, 39).

தனது தன்மையைக் கடவுள் ஆதாமிடம் அளித்தார் என்றால், ஆதாமும் கடவுளாக வேண்டுமே. அவர் சயித்தானை ஏமாற்றுபவராயின் சயித்தானின்

குருவாகிய கடவுள் ஏன் பெரிய சயித்தானைக் கண்டிக்கின்றனர். உண்மையில் கடவுளை அல்லவா அவர்கள் நிராகரிக்கவேண்டும்? மேலும் கடவுள் முன்னிலையில் சயித்தான் "நான் நல்லோரையும் கெடுப்பேன்" என்று கூறிய பொழுது அவனைக் கொல்லவோ அல்லது பிறரைக் கெடுக்காமலிருக்க வேண்டி ஒரு சிறையிலிடவோ கூடாது?

99. ஒவ்வொரு ஜனங்களுக்கும் தூதரை அனுப்பினேம். நினைத்த போது எது வேண்டுமானாலும் ஆகக் கடவது என்போம். அது ஆகிவிடுகிறது (**16**, 38, 42).

எல்லா வகுப்பு ஜனங்களுக்கும் கடவுள் தமது தூதரை அனுப்பினர் என்றால், பிறமதங்களைப் பின்பற்றுபவரை நம்பிக்கை அற்றவர் என்று ஏன் அழைக்கவேண்டும். உங்களுடைய நபிகளைத் தவிர பிற நபிகளை எவரும் பணிதல் கூடாதா? இங்ஙனம் கூறுதல் பிடிவாத குணமல்லவா? எல்லா நாட்டிற்கும் கடவுள் தூதரை அனுப்பினர் என்பது உண்மையாயின், அவர் ஏன் ஆரியவர்த்தத்திற்கும் ஒருவரை அனுப்பவில்லை? எனவே குர்-ஆனின் கூற்று ஏற்கத் தக்கதல்ல. கடவுள் 'பூமி இருக்கட்டும்' என்று கூறிய கட்டளையை உயிரற்ற பூமி எங்ஙனம் கேட்க முடியும்? முகம்மதியர்கள் கூறியதுபோல் சிருஷ்டிக்குமுன் எதுவும் இல்லையெனில் கடவுள் கட்டளையை எது கேட்டது? அது எங்ஙனமாயிற்று. சாஸ்திர ஞானம் அற்றவர்களே இங்ஙனம் கூறுவார்கள். இங்ஙனம் கூறுவதையும் நம்புவார்கள். இவைகள் எல்லாம் அறியாமையின் மயக்கமேயாகும்.

100. அல்லாவிற்குப் பெண்கள் உண்டென்பார்கள். அவருக்கு ஜயம்! இதற்கு முன்னமேயே அவர்களுக்குத் தூதர்களை அனுப்பியிருக்கிறேம் (**16**, 59, 65).

கடவுள் பெண்களை வைத்துக் கொண்டு என்ன செய்யமுடியும்? மனிதர்களுக்குத்தான் பெண்கள்வேண்டும். கடவுளுக்கு ஏன் ஆண்குழந்தைகள் தேவையில்லை? ஏன் பெண்களை மாத்திரம் புத்திரிகளாகக் கொண்டார். அயோக்கியர்களும் பொய்யர்களுந்தான் சத்தியம் செய்வார்கள். கடவுளுக்குச் சத்தியம் செய்ய வேண்டியதில்லை. நமது அனுபவத்தில் பொய்யர்கள் சத்தியம் செய்வதைக் காண்கிறேம். உண்மையைப் பேசுபவர்கள் ஏன் சத்தியம் செய்யவேண்டும்? நல்லவர்களுக்குச் சத்தியத்தின் உதவி தேவையில்லை.

101. அல்லாவினல் மூடப்பட்ட மனம் காது கண் இவைகளை உடையவர்கள்; ஒவ்வொரு ஜீவனும் காரியங்களுக்குத் தக்க பயனை அனுபவிக்கும். அவைகளுக்கு ஒருபொழுதும் அனியாயம் செய்வதில்லை. (**16**. 110, 112.)

கடவுளே மனிதர்களின் ஹிருதயத்தைப் பூட்டி விட்டார் என்று கூறுகிறீர்கள். அங்ஙனமாயின் மனிதர்கள் தாங்கள் ஜவாப்தாரியாகாத குற்றங்களுக்குத் தண்டிக்கப் படுகின்றனர். இதென்ன நியாயம் பாருங்கள். குர்-ஆன் முழுவதிலும் முரண்பாடான விஷயங்கள் மலிந்து கிடக்கின்றன. மற்றொரி

டத்தில் மனிதர்கள் அவர்களது செயலுக்கு ஏற்றவாறு தண்டிக்கவோ அல்லது வெகுமதி கொடுக்கவோ படுகிறார்கள் என்று கூறப்பட்டிருக்கிறது.

மனிதர்களைத் தங்கள் பாப கர்மங்களுக்கு ஜவாப்தாரியாகாது விட்டுப் பின்னர் அவர்களது பாபத்திற்குத் தண்டித்தல் பொருந்துமோ? தண்டனைக்குள்ளாக்க வேண்டியவர் கடவுளே அல்லவா? அவர் பாபத்தை மன்னித்துவிடுகிறார் என்று கூறின் கடவுள் நியாயத்தை அழிப்பவராகிறார். இவ்வாறு கடவுள் காரியங்களை நிகழ்த்த முடியாது. மனிதன் தான் செய்ய முடியும்.

102. காப்பிரிகளுக்கே நரகம் சொந்தமானவை. அவனவனுடைய விதியை அவனவன் கழுத்தில் கட்டி இருக்கிறோம். தீர்ப்பு தினத்தில் தூங்கி எழுங்காலையில் திறந்த புத்தகம் மொன்று கொண்டுவரப்படும். நோவாவுக்குப் பின் எத்தனை தேசங்களை அழித்திருக்கிறோம்? (**17**. 8, 14, 18.)

குர்-ஆனையும், முகம்மதையும் குர்ஆன் கடவுளையும் ஏழு சுவர்க்கங்களையும், முகம்மதியர் பிரார்த்தனைகளையும் நம்பாதவர்கள் நம்பிக்கை அற்ற காபிரிகளானால் அவர்கள் நரகத்திற்குச் செல்லவேண்டியது என்றால், இது பிடிவாதமுள்ளவர்களின் கூற்று என்பதில் என்ன சந்தேகம்? குர்-ஆனில் நம்பிக்கை உள்ளவர்கள் அனைவரும் நல்லவர்களா? அற்றவர்கள் கெட்டவர்களா? ஒவ்வொருவனது தலைவிதியும் அவனவன் கழுத்தில் கட்டப்பட்டிருக்கிறது என்று கூறல் குழந்தைப் பேச்சாகக் காணப்படவில்லையா? எவர் கழுத்திலும் விதிச்சீட்டிருப்பதைக் காணமுடியவில்லை. இதின் பொருள் அவனவது கருமத்திற்கேற்ற பலன் என்பதாகுமானால் கடவுள் ஹிருதயத்தையும், கண்களையும் பூட்டி முத்திரை போட்டுவிட்டார் என்று கூறுதல் விநோதமாய்க் காணப்படவில்லையா? தீர்ப்புத்தினத்தன்று கடவுள் தமது சிட்டைப்புத்தகத்தை எடுத்துக்கொண்டு வருவார் என்று கூறப்படுகிறது. அது உண்மையாயின் அப்புத்தகம் இப்பொழுது எங்கிருக்கிறது? வியாபாரிகளைப்போல் கடவுள் தினம் குறிப்பு எழுதுவரோ? முன்பிறப்பு என்பது இல்லையெனில் மனிதனின் கர்மங்கள் எங்கிருந்து வருகிறது. பின்னர் சிட்டை எழுதுவதற்குத் தேவையே யிராதல்லா? மனிதன் கர்மாதிகளைச் செய்யாதிருக்கையில் சீட்டு எழுதப்படுமாயின் கடவுளைக் கொடும்பாபி என்று கூறவேண்டும். முற்பிறப்பு, முன்கர்மம் இல்லையெனில் ஏன் சிலர் சுகமாய் இருக்கவேண்டும், சிலர் கஷ்டப்படவேண்டும்? கர்மம் இல்லாத காலத்தில் கடவுள் இங்ஙனம் சுகதுக்கங்களை அளிப்பின் அவரது செயல் நியாயமாகுமா? தீர்ப்பு தினத்தன்று யார் புத்தகத்தைப் படிப்பவர்? கடவுளே வாசிப்பாரா? அல்லது வேறு ஒரு தூதுவனைப்பழகும் பொருட்டு அமர்த்திக்கொள்வாரா? மேலும் சீக்கிரம் தீர்ப்பு சொல்லாது. ஆத்மாக்களை வெகுநாள் காத்திருக்கவைப்பவன் கடவுளல்ல; கொடுங்கோலனே. கொடுங்கோலன் கடவுளாக முடியாது.

103. அவர்கள் கண் எதிராக தேமாவேுக்கு ஒட்டகத்தைக்கொடுத்தோம். உன்குரலால் முடியாதவர்களை வயப்படுத்து. ஒருநாள் ஜனங்களையும் அவர்களது தலைவர்களையும் அழைப்போம். அவர்களுடைய வலதுகையில் புஸ்தகங்கள் அளிக்கப்படும்.

தனது ர்வவல்லமையை ருசுப்படுத்தவே இறைவன் பெண் ஒட்டகத்தை வைத்திருக்கிறார்போலும். சாத்தானைக் கடவுள் ஜனங்களைத் தியவழியில் நடத்தச் சொல்லின் அவர் பெரிய சாத்தான். இத்தகைய செயல்களைக் கொண்டவனைக் கடவுள் என்றழைப்பது மடமை. தீர்க்கதரிசியையும் அவரது அநுசரணைக் காரர்களையும் தீர்ப்புத் தினத்தன்று விசாரணை செய்ய அழைப்பார் எனில் அதுவரையில் அவர்கள் துன்பப்பட்டுக் கொண்டிருக்கவேண்டுமே. அதாவது விசாரணையில்லாவது காவலில் வைத்திருப்பதைப் போல் தோன்றுகிறது. இது முறையாகுமோ? 50 அல்லது 60 வருடங்களுக்கு ஒரு முறை எல்லாக் குற்றவாளிகளையும் ஒன்றாக சேர்த்து விசாரித்து நியாயமளிப்பதாகச் சொல்லும் நீதிபதியின் கூற்றாகத் தோன்றவில்லையா? இது நியாயமாகாது. நியாயமென்பதை அறிய வேதத்தைப் படியுங்கள். மனுஸ்மிருதியைப் படியுங்கள். ஒரு நிமிஷமும் தாமதமின்றி நியாயம் செய்யவேண்டுமென்று மனுஸ்மிருதி கூறுகிறது. மேலும் தீர்ப்புத்தினத்தன்று கடவுள் சாட்சியாக முகம்மது நபியைக் கூப்பிடுகிறாரென்பது கடவுளது அபாரசக்திக்கு ஹானியை விளைக்கிறது. இத்தகைய புத்தகம் தெய்வ நூலாகுமா? இதை ஆக்கியவன் கடவுளுமாக முடியுமா?

104. அவர்களுக்காக ஏதேன் தோட்டம். அந்த நிழலில் நல்ல அருவிகள் ஓடுகின்றன. நகைகளால் அவர்கள் அலங்காரம் செய்து கொண்டும் பச்சைப்பட்டும் விலை உயர்ந்த ஆடைகளும் அணிந்து உல்லாஸமாகச் சாய்ந்து இருப்பார்கள். ஆனந்தம், பேரானந்தம் உல்லாஸமான சயனம். **(18. 30.)**

குர்-ஆனில் கூறப்பட்டுள்ள சுவர்க்கம் உண்மையில் நல்ல சுகமான விடமாகும். அங்கு தோட்டங்களிருக்கின்றன. நகைகளுக்குக் குறைவில்லை. மெத்தைகளும் நாற்காலிகளும், ஆடைகளும் இருக்கின்றன. அங்கு வாழ்தல் சுகமாகவே யிருக்கும். அறிஞன் தான் பொறுப்பாளியாகாத கர்மங்களுக்கு நரகத்தையும் சுவர்க்கத்தையும் அநுபவித்தல் என்னும் கூற்றைக்கண்டு ஆச்சரியப்படுவான். மேலும் வரம்பிற்குட்பட்ட கர்மங்களுக்கு வரம்புகடந்த தண்டனை யென்பதும் விரோதமானதே. வரம்பு கடந்த இன்பமும் துன்பமாய் முடியும். இனிப்புள்ள பதார்த்தங்களை அளவுக்கு மிஞ்சி உண்டால் அதில் வெறுப்பு ஏற்படாதா? எனவே ஹிந்துக்கள் கூறும் விதம் அவரவர்கள் கர்மங்களுக் கேற்றமாதிரி கடனற்ற சுகதுக்கங்களை அனுபவித்து ஆத்மா பிறவியை எடுத்து வருகிறது என்பதும் யுகப்பிரளயம் வரையில் அங்ஙனமே நடந்து வருகிறது என்பதுமே நம்பக்கூடிய சத்தியதத்துவமாகும்.

105. பாபிகளான பிறகு அவர்களுடைய நகரங்களை அழித்தோம். அவர்களின் அழிவை முன் எச்சரிக்கை செய்தோம். (18. 58.)

ஒரு குறித்தவிடத்தில் இருக்கும் ஜனங்களனைவரும் எப்பொழுதும் பாபிகளாயிருக்கமுடியுமா? சில விடங்களில் பாபகர்மங்களதிகரித்தலைப் பார்த்த பின்னர் கடவுள் அழித்தாரென்பது அவரது அளவற்ற வல்லமையைப் புலப்படுத்தவில்லை. வருங்கலஞானம் கடவுளுக்கில்லை என்று இதனால் தெரிய

வில்லையா? பல கிரகங்களை அவர் அழித்தார் என்பது அவரது கருணை அற்ற தன்மையையும் புலப்படுத்துகிறது.

106. சிறுவனுக்கோ அவன் பெற்றோர்கள் முஸல்மான்கள். அவன் பிழையாலும் பாபத்தாலும் தொந்தரவு செய்வான் என்று அஞ்சினோம். சூரியாஸ்தமனமாகையில் சூரியன் சேற்றுநீரில் அஸ்தமிப்பதைக் கண்டான். "ஜஜூல் கர்னெங்கே" யாஜூஜ் மாஜூஜ் நிலத்தை அழிக்கிறார்கள். உமக்குக்காணிக்கை செலுத்தட்டுமா? நமக்கும் அவர்களுக்கும் நடுவில் கோட்டை ஏற்படுத்தவேண்டுமா.

என்னே கடவுளின் நியாயத்தன்மை. அந்த பையனின் பெற்றோர்கள் தனது கட்டளையை மீறு மாறு செய்யப் படுவார்கள் என்று கண்டு கடவுள் அஞ்சினார். இது கடவுட்டன்மைக்கு ஏற்றதாகுமா? மேலும் குர்-ஆன் ஆசிரியனின் அறியாத்தன்மையைப் பாருங்கள். அவர் சூரியன் ஒரு ஏரியில் மாலையில் மூழ்கி வருகிறது என்று எண்ணினார். விடியற் காலையில் மீண்டும் ஏரியினின்று வெளிக்கிளம்புகிறான் என்று எண்ணினார். சூரியன் பூமியை விடப் பெரிதானது என்பதை அவர் அறியவில்லை. பூமியைவிடப் பெரிய சூரியன் எவ்வாறு ஏரியிலே சமுத்திரத்திலே இருக்கமுடியும். குர்ஆன் ஆசிரியருக்கு, பூகோள சாஸ்திரமும் வான சாஸ்திரமும் தெரியாதென்று புலனாகவில்லையா? இச்சொல்லில் நம்பிக்கை வைத்தவர்களும் கல்வி அறிவில்லாதவர்கள். இல்லையேல் இப்புத்தகத்தில் அவர்கள் நம்பிக்கை வைத்திருக்க மாட்டார்கள். கடவுள் சிருஷ்டி நாயகனாயிருந்தும் காக்கும் மாகாக்கும் சண்டை யிடுமாறு செய்தார். இத்தகைய புத்தகத்தை காட்டுமிராண்டிகள்தான் நம்புவார்கள்.

107. குர்-ஆனில் மேரியின் கதையை நினை. அவள் குடும்பத்திலிருந்து கிழக்குப்புறமாய்த் திரும்பியபொழுது காபிரியலை மனித உருவத்தில் அவள் முன் நிறுத்தினோம். அவனை அஞ்சி என்னை அணுகாதே என்று கெஞ்சி அல்லாவே தஞ்சம் என்றாள். நான் அவன் தூதன் நீ மக்கட்பேறு அடைவாய் என்றான். புருஷன் தொடாமல் எப்படி அடைவேன் என்றதற்கு காப்பிரியல் அல்லாவின் கிருபையால் எனக்கு இது சுலபம். நாம் செய்வோம். மனிதர்களுக்கு அடையாளமாகும். நம்முடைய கருணை. இதுவே கட்டளை. அவள் கருத்தரித்து கர்ப்பாசயத்தில் அவனுடன் தூரமாகச் சென்றாள். (**19**. 12, 16, 18)

தேவதைகளனைத்தும் கடவுள் சுபாவமுள்ளவர்கள், எனின் அவர்கள் கடவுளிலிருந்து பிரிந்து வேறாக இருக்க வேண்டியதில்லை? மேரி கன்னிகையாயிருக்கையில் குழந்தையைப் பெற்றாள். அவள் ஆணுடன் கூட விரும்பவில்லை. ஆனால் கடவுளின் விருப்பப்படி தேவதைகளின் உதவியினால் கர்ப்பவதியானாள். கடவுள் இங்ஙனம் செய்தல் பிழையல்லவா? இன்னும் குர் ஆனில் விரும்பத்தகாத விடயங்கள் இருக்கின்றன. அவைகளை நாம் ஈண்டு கூற விரும்பவில்லை.

108. காப்பிரிகளைப் பாபத்தில் செலுத்த சயிதானை அனுப்பப்படுவதைப் பார்க்கவில்லையா. (**19**. 78.)

கடவுள் காப்பிரிகளைத் தீயவழியில் நடத்த துர்த்தேவதைகளை அனுப்புவதால் நாம் துஷ்டதேவதைகளின்மீதும் காப்பிரிகளின்மீதும் கோபங் கொள்ள

வேண்டியதில்லை. நியாயகர்த்தாவாகிய கடவுளே அவரது இத்தீச் செயலுக்கு நரகத்தை யனுபவிக்கவேண்டும். அங்ஙனம் செய்யாவிடில் அவர் பாபத்தை உலகில் பரப்புபராவர்.

109. பச்சாதாபப்பட்டு நம்புவோனுக்கு எனது கிருபை. சரியானவழியில் போவான். அதுவே சரியானவழி. (**20**. 76.)

ஒருவரது பாபங்கள் அவர் பச்சாதாபப்பட்டால் கழிந்து போகிறது என்று குர்-ஆன் கூறுகிறது. எனவே இது பாபத்தைச் செய்யத் தூண்டுகிறது. எனவே குர்-ஆனும் அதன் ஆசிரியரும் பாபச்செயல்களை வளர்க்கின்றனர்.

110. அசையாமலைகளைப் பூமியிலவைத்தோம். ஏனென்றால் அது அவைகளுடன் அசையும். (**21**-31.)

பூமி சுழலுகின்ற தத்துவத்தைக் குர்-ஆன் ஆசிரியர் அறிந்திருப்பின், பூமி அசையாமல் அப்படியே இருக்கிறதென்று கூறியிருக்கமாட்டார். மலைகள் பூமியை அசையாது செய்கிறது, எனக் கூறப்படுகிறது. பூமியில் உஷ்ணம் அதிகப்படுங்கால் ஏன் அசைகிறது.

111, கன்னிகைப் பருவத்தைக்காத்தவளை நினை. அவளுக்கு நம் உணர்வை அளித்தோம். (**21**-88.)

இத்தகைய விரும்பத்தகாத விஷயங்கள்த் தெய்வநூலில் கூறப்படலாமா? நாகரிகமுள்ள படித்தமனிதனும் கூறத்துணியான். மனிதன் விரும்பாத விஷயங்களைக் கடவுள் எவ்வளவு துணிவுடன் கூறுகிறார்? இத்தகைய கூற்றுகள் குர்-ஆனின் மதிப்பைக் கெடுக்கின்றன. குர்-ஆன் சத்திய நெறிகளைக் கூறியிருப்பின் வேதத்தைப்போல் போற்றப்படும்.

112. பூமியிலும், ஆகாயத்திலும் உள்ளவைகளெல்லாம் தொழுவதை நீ பார்க்கவில்லை? சூரியன், சந்திரன், நட்சத்திரம், மலை, மரம், மிருகம், அனேக மானிடர்கள். தங்காபரணங்களும், முத்துக்களும், பட்டாடைகளும் அணிவார்கள். நிற்போருக்கும் என்மேல் ஆசையுள்ளோருக்கும் "என் வீட்டைப் புனிதமாகச் செய்". அவர்களில் நீக்கப்பட்டவைகளைச் சேர்ப்பி. தங்களின் வேண்டுகோள்களை நிறைவேற்றி முடியுங்கள். அல்லாவின் பெயரை நித்தியமாக்குங். (**22**. 18, 23. 28, 30, 32.)

தாவர வர்க்கங்களும் மனிதரில்லாத பிராணிகளும் கடவுளை யறிய முடியாதெனின் அவைகள் எங்ஙனம் ஈசனை பக்திப் பண்ணமுடியும்? இது தெய்வ நூலாகாது. அறிவிலியால் எழுதப்பட்ட நூலெனவே காணப்படுகிறது. பட்டாடை உடை ஆபரணங்கள் இருக்கும் சுவர்க்கம் அழகானதே. அரசமாளிகையைக் காட்டிலும் இச்சுவர்க்கம் உயர்ந்ததாக விருக்க முடியாது. கடவுளிருக்கு மிடம் சுவர்க்கமாயின் குர்-ஆன் உருவ ஆராதனையை ஆதரிப்பதாகத் தோன்றவில்லையா? புராணத்தில் கூறும் தர்க்கை பைரவிக் கூற்றுப் போலவேத்தான் குர்-ஆனும் கூறுகிறது. ஏனெனில் மனிதன் அளிக்கும் சாப்பாடு முதலானவைகளைக் கடவுள் ஏற்கிறார். மக்கா ஒரு பெரிய விக்கிரகமாகும். எனவே முகம்மதியர்கள் கேவலமான விக்கிரக ஆராதனைக்காரர்கள். புராணிகர்களும்

சமணர்களும், முகம்மதயர்களுக்குச் சமானமான விக்கிரக ஆராதனைக்காரர் களல்ல.

113. பிறகு தீர்ப்புநாளில் எழுப்பப்படுவாய் (23, 16).

கடைசி நாள்வரை இறந்தவர்கள் கல்லறைகளில் வசிக்கிறார்களா ? அல்லது வேறு இடத்தில் வசிக்கிறார்களா ? கல்லறைகளில் வசிக்கிறார்களெனின் நல்ல ஆத்மாக்களும் அங்கே தானிருக்க வேண்டுமா ? இந்நியாயம் ஆச்சரியமாயிருக்கிறது. மேலும் முகம்மதியக் கடவுளும் அவரைப் பின்பற்றுபவர்களும் எங்கும் பிணியைப் பரப்புவர்கள்ளாவார்கள்.

114. அவர்கள், அவர்களின் கைகால் அவைகளின் செய்கைகளினால், நாவானது அவர்களுக்கு விரோதமாய் சாட்சி கொடுக்கும். வானத்திற்கும் பூமிக்கும் அல்லாவே தீபம். சுவற்றின் சிறு அறையிலுள்ள தீபம்போல். தீபமுள்ள கண்ணாடி, நட்சத்திரம் போல் பிரகாசிக்கிறது. தீபம் விருட்ச எண்ணெயால் எரிக்கப்படுகிறது. கிழக்குமேற்கினுடையது இல்லை. அதற்கு வேண்டியது சிறியதளவு. அவ்வெண்ணெயால் வெளிச்சம். ஆனால் அளவோ படவில்லை. தீபத்தில் தீபம் சேர்ந்தது போலாகின்றது. இஷ்டமுடையோனுக்குத் தீபத்தை யருளுபவர். (24, 24-35).

காலும் கையும் உணர்வற்ற படியினாலே அவைச் சாட்சியம் கூறமுடியாது. இரண்டாவதாகக் கூறப்பட்டவை இயற்கைத் தத்தவத்திற்கு மாறுபானவை. எனவே உண்மையாகாது. கடவுள் நெருப்பா மின்சாரமா? குர்-ஆனில் கூறியிருப்பவைப் பொருந்தாது.

115. ஜல ஜந்துக்களை அவனே சிருட்டித்தான். வயிற்றால் சிலவை நகருகின்றன. யார் அல்லாவையையும் தூதனையும் பணிகிறானோ—சொல்லு. அல்லாவையும் தூதனையும் பணி. தயைப் பெற தூதனைப் பணி. (24, 45, 51, 53, 55).

ஜலத்திலிருந்து ஆத்மாக்களின் கூடு முதலிய ஜடப் பொருள்கள் உண்டானதெனக் கூறுவது நூதனமானது. இது அறியாதார் கூறும் வார்த்தை. கடவுள் வார்த்தைபோல் நபிகளின் வார்த்தைகளுக்கும் கீழ்ப்படியவேண்டுமென்பது கடவுளுக்குச் சமானமான பங்காளிகளை ஏற்படுத்துவதாகும். இது உண்மையாயின் கடவுளுக்கு அருகர் எவருமில்லை என்று குர்-ஆனில் சொல்லப்பட்டிருப்பது பொருளற்றதா? எனவே ஏன் இப்படி மாறுபாடான விஷயங்களைப் போதிக்கவேண்டும்?

116. அந்நாளில் ஆகாயம் அதிர்ச்சி பெறும். தேவர்கள் தெரியும் வண்ணம் இறங்குவார்கள். ஆகையால் காபிரிகளை ஒருபொழுதும் நம்பாதே. இயன்ற அளவு அவர்களை எதிர்த்துப் போராடு. அல்லாவானவர் அவர்களைத் தீய வொழுக்கங்களிலிருந்து திருப்புவர். உண்மையாக உணர்ந்து பச்சாதாபப் படுபவன் மாறு யோக்கியதையுள்ளவன். (25, 25, 50, 68, 69).

வானம் மேகத்தால் இரண்டாகப் பிரிக்கப்பட்டிருக்கிறதென்று கூறுதல் ஒருநாளும் உண்மையாகாது. வானம் ஜடமானதால்தான் பிரிக்கப்படும் குர்-ஆன் போதனைகள் சண்டையும் அமைதியின்மையும் உண்டாக்குகிறது.

எனவே தான் நல்லவர்கள் புண்ணியாத்மாக்கள் இதில் நம்பிக்கை வைப்ப தில்லை. பாபமும் புண்ணியமும் எண்ணெய் வித்துக்கு ஒப்பிடல் பொருந் தாது. செய்த தவறுதல்களுக்கு வருத்தமுறுவதால் பாபம் நீங்கி கடவுளைக் கிட்டலாம் எனின் எவனும் பாபம் செய்யப் பயப்படமாட்டான். வருத்தப் படுதல் என்னும் மருந்து இருப்பதால் பெரும் பாபங்களைச் செய்ய முற்படு வான். இவைகள் எல்லாம் ஆராய்ச்சிக்கு முன் நிற்பவைகளல்ல.

117. மூசாவுக்கு முன்னதாக அறிவித்தோம், "இரவில் ஆள்களுடன் ஓடிப் போய்விடு. அல்லது பிடிக்கப்படுவாய்" பாரோவானவன் சைனியங் களைச் சேர்ப்பிக்க அதிகாரிகளை அனுப்பினான். சிருட்டித்தது யார், வழி காட்டுவது யார்? அன்னபானம் அளிக்கும் அவர் தீர்ப்புநாளில் என்னை மன் னிப்பார். (26, 50, 51, 76, 77, 80).

கடவுள் மூசாவிற்குப் புஸ்தகத்தை யளித்தார் எனின் பின்னர் அவர் ஏன் தாவீதிற்கும், இயேசுவிற்கும் முகம்மது நபிக்கும் முறையே உப தேசத்தை யளிக்கவேண்டும். இரண்டாவதாகக் கடவுள் உபதேசம் செய்த படியினுல் முதல் செய்த உபதேசம் குற்றமுடையதென்று புலப்படுகிறது. முதலில் கூறிய மூன்றும் உண்மை நூற்களாயின் குர்-ஆன் பொய்யாகவேண் டும். இந்நான்கு புத்தகங்களும் சத்திய நூற்களாக முடியாது. மேலும் இந் நான்கு புத்தகங்களிலும் ஒன்றிற்கொன்று முரண்பாடான விஷயங்களும் இருக்க முடியாது. கடவுள் ஆத்மாக்களைப் படைத்தார் என்ருல் ஒருநாள் அவைகள் முடிவைக் காணவேண்டும். கடவுள் மனிதனைப் போஷிக்கிருரென் ருல் மனிதனுக்கு நோய்கள் ஏன் ஏற்படவேண்டும்? ஏன் எல்லோரும் ஒரே அளவு உணவை யடைகிறதில்லை? அரசன் அதிகமாகவும் ஏழை குறைவாகவும் உணவை ஏன் அடைதல் வேண்டும். கடவுளே போஷித்துச் சுகாதாரத் திட் டத்தைச் செய்கிறபடியினுல் நோயே இருத்தல் கூடாது. ஆனுல் முகம்மதி யர்களும் நோயினுல் வாடுகின்றனர். கடவுள் நோயை விலக்குகிருரென்ருல் முகம்மதியர்கள் மாத்திரமே தப்பித்தல் வேண்டும். எனவே முகம்மதிய அல் லாவானவர் சிறந்த வைத்தியரல்லவென்பதாகிறது. அப்படியானுல் முகம்மதி யர்கள் வழியில் திரும்புவார்கள். அவரே ஜனங்களைச் சிருஷ்டித்துச் சம் ஹாரம் செய்வாரென்ருல் அவரே அதன் பயனை அடையவேண்டும். பல பிறப்புகளின் கர்மங்களுக்கேற்றவாறு பயனெனென்ருல் அவரைக் குறை கூறு வதற்கில்லை. கடை தினத்தில் மன்னித்து நியாயம் வழங்குகிருர் என்ருல் பாபியும் அதை அதிகரிக்கிறவனுகவு மாகிருர். பாபத்தை மன்னிக்கவில்லை யானுல் இவ்வுபதேசமடங்கிய குர்-ஆனைப் பொய்யன்னியில் வேறு என்ன சொல்லுவது?

118. என்னைப்போல் நீயும் ஒருமனிதனே. உண்மையானுல் ஒரு அடை யாளத்தைக் காண்பியும். பெண் ஒட்டகமே அடையாளம். அவள் பங்கு ஜலத்தை அடைவள் என்று சொன்னுர். (26. 154-155).1

கல்லிலிருந்து ஒட்டகம் உண்டாயிற்று என்று கூறல் யாவர் ஏற்பர்? இதில் நம்பிக்கை வைப்பவர்கள் காட்டு மிருண்டிகளே. ஒட்டகத்தினிடம்

தெய்வ குணங்கிடையாது. முரட்டுதனமாய்க் காணப்படுகிறது. கடவுளருளிய நூலாயின் இத்தகைய அறிவற்ற விஷயங்கள் இராது.

119. மூசாவே! உண்மையாகவே நானே அல்லா, வல்லவன், ஞானமுள்ளவன். கழியைக் கீழேவிடு. அவன் அது விழுந்ததையும் அது அசைந்ததையும், பாம்புபோல் நகருவதையும் பார்த்துப் பயந்தோடினான். மூசாவே பயம் வேண்டாம். என் முன்னிலையில் தூதர்களுக்கு யாதொரு பயமும் இல்லை யென்றார்.

எனக்கு விரோதமாகக் கிளம்பாதே. என்னைச் சரணம் புகு. (**27**. 9, 10, 27, 32).

வாசகர்களே! ஊன்றிக் கவனியுங்கள்! கடவுள் தாமாகவே பெரியவரென்று கூறிக்கொள்கிறார். மனிதனும் இவ்வண்ணம் தற்புகழ்ச்சி செய்து கொள்ளமாட்டான். இக்கடவுள் காட்டுமிராண்டிகளை ஏமாற்றி அவர்களுக்கு ஆண்டவனாய் விட்டார். கடவுள் நூலில் இத்தகைய வேடிக்கைகளிருக்குமா. கடவுள் ஏழாவது சுவர்க்கத்தின் நாயகனாயின் அவர் எங்கும் பரவியுள்ள கடவுளாக முடியாது. சண்டையிடுவது தவறாயின் கடவுள் தூண்டுதலின்மேல் மகம்மது நபி எவ்வளவு பேர்களை வதைத்துள்ளார். இது நியாயமா? குர்-ஆன் முழுதும் பொருளற்றதும் முரண்பட்டதுமான விஷயங்கள் மலிந்து கிடக்கின்றன.

120. மலைகள் அழுத்தமாய் நிறுத்தப்பட்டிருக்கிறதே என்று எண்ணாதே. மேகங்கள்போல் அவைகள் மறைந்துவிடும். இது அல்லாவின் வேலை. எல்லாவற்றையும் முடிப்பவர். நீ செய்வதெல்லாவற்றையும் அவர் அறிவர். (**27**. 90).

குர்-ஆன் ஆசிரியர் வசித்த நாட்டில் மலைகள் மேகங்களைப்போல் பறந்தன போலும். வேறு எங்கும் இத்தகைய நிகழ்ச்சிகள் இருக்க முடியாது. சாத்தானைப் பிடித்துத் தண்டிக்க முடியாததிலிருந்தே கடவுளின் பெருமை விளங்கவில்லையா? கலகம் விளைக்கக் கூடியவனைப் பிடித்து அடக்க முடியாததிலிருந்து கடவுளின் செயல் புலப்படவில்லையா?

121. மூசா மனிக் கட்டினால் அடித்துக் கொன்றான். என் ஜீவனுக்கே தீங்கு விளைவித்துக் கொண்டேன் என்று அல்லாவினிடம் கதறினான். அவர் அவனை மன்னித்தார். அல்லா மன்னிக்க எப்பொழுதும் தயார். அவர் தயாளு. நினைத்ததைச் சிருட்டிப்பார். எல்லாம் அவர் இஷ்டம். (**28**. 14, 15, 66).

மீண்டும் ஊன்றிக் கவனியுங்கள். கடவுளும், மூசாவும், இஸ்லாம் நபிகளும், கிறிஸ்துவர்களும் நியாயமற்றவர்களென்று காணப்படவில்லையா? பினனவர் ஜனங்களைக் கொன்றனர். இப்பாபம் மன்னிக்கப்பட்டது. கடவுள் அவரிஷ்டத்தால் உலகைச் சிருஷ்டித்தார். ஒருவன் அரசனாய்ப் பிறப்பதும் ஒருவன் ஆண்டியாய்ப் பிறப்பதும் கடவுள் இஷ்டந்தானே? ஒருவன் முட்டாளாயிருப்பதும் படித்தவனாயிருப்பதும் கடவுளிஷ்டந்தானே? இது உண்மையானால் குர்-ஆன் சத்தியத்தைப் போதிக்கும் நூலாகாது. முகம்மதியக் கடவுள் இத்தகைய நியாயமற்ற செயல்களைச் செய்வதால் கடவுளாக முடியாது.

122. பெற்றோர்களுக்குக் கீழ்படிந்து நடக்க வேண்டுமென்பதை முன்பே வற்புறுத்தியிருக்கிறோம். நீ யறியாத ஒன்றில் என்னைக் கலந்து உனக்குச் சொன்

னல் அதைக் கீழ்ப்படிய நீ மறுப்பாயாக. முன்பு இதற்கேதான் நோவாவை அனுப்பித்தோம் அவர் பூலோகத்தில் ஆயிரத்தில் ஐம்பது குறைய இருந்தார். (**29**, 7-13).

பெற்றோர்களைப் பணிதல் நன்மையே. வேறொருவருக்கு அடங்கியிருக்கும் கடவுளைப் பணிதல் வேண்டுமென்றால் அதை நிராகரிப்பதே உசிதமாகும். பொய் சொல்வது கட்டளையானால் அதை நம்புதல் கூடாது. எனவே இக்கட்டளையின் அரைப் பாகமே உண்மையாகிறது. நோவாவையும் நபியையும் அவர் அனுப்புகிறாரென்றால் ஏனைய ஜீவன்களை அனுப்புவது யார். எல்லாவற்றையும் அனுப்புவாரென்றால் எல்லோரையும் நபி என்று ஏன் நம்புதல் கூடாது. பூர்வத்தில் 1000 வருடங்கள் வாழ்ந்தார்களென்றால் இப்பொழுது ஏன் முடிகிறதில்லை. இதுவும் பொய்யே.

123. சிருட்டிகளைச் செய்கிறார். மறுபடியும் உயிர்ப்பிப்பார். அப்பொழுது எல்லாரும் அவனிடம் திரும்புவார்கள். தீயோன் பயந்து மௌனமாவன். நம்பினோன் (முசல்மான்) நற்காரியஞ் செய்தோன் ஆனந்த மைதானத்தில் அமருவான். புயற்காற்றை ஏவினால் அவர்கள் தானியம் மஞ்சள் நிறமடைந்து எரிந்துவிடும். காபிர்களின் மனதை இப்படிதான் மூடிடுவார். (**30**. 10, 11, 14, 50, 58).

கடவுள் இரண்டுதரந்தான் சிருஷ்டி செய்கிறாரென்று கூறினால் முதல் சிருஷ்டிக்கு முன்னும் இரண்டாவது சிருஷ்டிக்குப் பின்னும் அவர் சும்மா அல்லவா வீற்றிருக்க வேண்டும். உலகத்தை இருமுறை சிருஷ்டித்துவிட்டு அவர் சோம்பேரியாய்த் திண்ணைத் தூக்கம் போடுவாரேயானால் அவர் வலியிழந்து அல்லவா போய்விடுவார். நிற்கப் பாபிகள் தீர்ப்பு தினத்தன்று வழி தெரியாது ஊமையாக மாறுகின்றனர் என்று சொல்லப்படுகிறது. முகம்மதியர்களல்லாத மற்றவர்கள் தான் இப்படி ஊமையாக மாறி தவிப்பார்கள் என்பது இம்மேற்கோளின் கருத்தவல்லவென்று நம்புகிறோம். இச்சந்தேகம் ஏன் எழுந்தது என்றால் குர்-ஆனின் பலவிடங்களில் காப்பிரிகள் தான் பாபிகளெனக் கூறப்பட்டிருக்கிறது. முகம்மதிய சுவர்க்கத்தில் கட்டடங்களும் இதர சுகங்களும் இருப்பின் அது இவ்வுலகைப் போன்றதேயாகும். எனவே அங்கு தோட்டக்காரர்களும் ஆபரணங்களை ஆக்குவோரும் இருக்கவேண்டுமென்று சித்தமாகிறது. எனவே குறைவான ஆபரணாதிகளைக் கொண்டவர்கள் திருடமுற்படுவார்கள். பிறகு அவர்கள் நரகத்திற்கு அனுப்பப் படுவார்கள். எனவே சுவர்க்கத்தின் பெருமை குறைகிறது. கடவுள் விவசாய விஷயங்களைக் கவனித்து மேற்பார்வை செலுத்தி வருகிறாரென்றால் அவர் விவசாய அனுபவம் சிறந்த நிபுணராய் இருக்கவேண்டும். மனிதர்களின் மனதைமூடி பாபச் செயல்களைச் செய்யுமாறு செய்த கடவுள் மனிதனின் பாபத்திற்கு உத்தரவாதியாகவேண்டும்.

124. ஞானக் களஞ்சியத்தின் அடையாளம். பார்க்க இயலாத தூண்களால் வானத்தை நிறுத்தியுள்ளார். திடமாய் ஆழ்ந்திருக்கும் மலைகளையும் நிறுத்தியுளார். ஏனென்றால் அவை நகரும். பகலுக்குப் பின் இரவு, இரவுக்குப் பின் பகல் ஆகிறதையும் பார்க்கவில்லையா? அல்லாவின் ஆக்ஞையால கப்பல்

மிதப்பதையும் பார்க்கவில்லையா. இதெல்லாம் அவரின் அடையாளங்கள். (**31**. 1, 9, 28, 30).

என்ன விந்தை பாருங்கள். இந்நூல் அறிவு புகட்டும் நூலெனக் கூறப்படுகிறது. இந்நூலோ அறிவிற்கும் சாஸ்திரத்திற்கும் மாருன விஷயங்களைப் பூரணமாய்க் கொண்டிருக்கிறது. சுவர்க்கம் கண்ணிற்குட்படாத தூணின் துணையைக் கொண்டிருக்கிறதாம். மலை பூமியை ஓடாது அசையாது செய்கிறதாம். சொஞ்சம் படித்தவனும் இங்ஙனம் எழுதியிருக்கமாட்டான். இரவும் பகலும் இணை பிரியாது சேர்ந்திருக்கிறதாம். இது யாருக்குத் தெரியாது? வேதத்தில் இத்தகைய முட்டாள்தனமான வாசகங்கள் இருக்கமாட்டா. கடவுள் துணையில் கப்பல் சமுத்திரத்தில் செல்லுகிறது என்று கூறுவது எவ்வளவு வேடிக்கையாக விருக்கிறது. உண்மையில் இயந்திரங்களும் மானுமிகளும் கப்பல்களை நடத்துகின்றனர். இரும்பால் அல்லது கல்லால் கப்பல் செய்யப்பட்டிருப்பின் அது முழுகிவிடும். அப்பொழுது கடவுள் என்ன செய்வார்? எனவே இந்நூல் கடவுளால் அருளப்பட்டதல்ல. கற்றறிந்தவனல் செய்யப்பட்டதுமல்ல.

125. ஆகாயத்திலிருந்து பூமிவரை ஆளுகிருர். நீ எண்ணும்படியான ஆயிர வருடங்களுக்கப்பால் அவரிடம் போய் சேர்வார்கள். நிகழ்வதையும், எதிர்காலத்தையுமறிவார். வல்லவன் தயாளர். ஒழுங்கான உருவை அமைத்து உணர்வை ஊதினர். உன்னைக் காவல் புரியும் தேவனே உன் மரணத்திற்குக் காரணமாயிருப்பான். நினைத்திருந்தால் ஜீவனைச் சரிவழியில் விட்டிருப்பேன். ஆனல் நான் நினைத்ததை முடித்தே தீர்வேன். நரகம் பெரியோராலும் மனிதனாலும் நிரம்பி இருக்கும். (**32**. 4, 5, 8, 10-12).

இதிலிருந்து கடவுள் மனிதனைப் போல் வரம்பிற்குட்பட்டவர் என்று சித்தமாகிறது. கடவுள் சர்வ வியாபியாகவிருந்தால் அவர் ஓரிடத்திலிருப்பதாகக் கூற முடியுமா? அவர் கீழே வருவதும் மேலே போவதுமாக விருப்பாரா? மேலும் அடிக்கடி தேவதைகள் கடவுளின் தூதராகக் கீழே அனுப்பப்படுகின்றனர் என்றும் கூறப்படுகிறது. இது கடவுளது பெருமையைக் குறைப்பதாகும். மேலும் உலக விஷயங்களை அறியவோ தூதர்களை யனுப்புகிருர். இதனல் கடவுள் இருந்த விடமிருந்தே எல்லா விஷயங்களையும் அறியும் வல்லமை அற்றவர் என்பது சித்தமாகிறது. மனிதர்கள் லஞ்சம் வாங்கிக் கொண்டு பொய் சொன்னல் கடவுள் உண்மையை எப்படி அறிவார். சர்வ சக்திமானும் முக்கால மறிந்தோனும் இருந்தால் தூதர்களை அனுப்பத் தேவையில்லை. தூதாகச் செல்லும் தேவதைகள் மீண்டும் கடவுளிடம் செல்ல 1000 வருடம் செல்லும் என்றும் சொல்லப்படுகின்றன. தேவதைகளில் சாகும் தேவதைகள் உண்டெனின் அவர்களுக்குச் சாவைத் தருவது எது? அவர்கள் அநாதிகளானல் கடவுளின் அநாதி தத்துவத்திற்குப் பங்கம் ஏற்படுகிறது. ஒரு தேவதை ஒரே சமயத்தில் பலரை நரகத்திற்கு அனுப்ப முடியாது. கடவுள் நரகத்தில் வாடும் நிரபராதிகளைக் கண்டு களிக்கிருர் எனின் அவர் கொடியவரே ஆவார். இங்ஙனம் கூறும் நூலும் தெய்வ நூல் ஆகுமா? இந்நூல் கூறுவதில் நீதி, கருணை யென்பதே காணவில்லை.

126. சாவில் இருந்தாவது சிதையிலிருந்தாவது பறந்தால் வெளிச்சம் உனக்கு இலாபத்தை அருளாது. தூதனின் மனைவிகளே, விளங்கும் தீயச் செயல்களைச் செய்தீர்களானால் நீங்கள் இருமடங்கு தண்டனை அடைவீர்கள். இது அல்லாவிற்குச் சுலபம். (**33.** 16-30).

யுத்தகளத்திலிருந்து மரணத்திற்குப் பயந்து ஓடாதிருக்குமாறு செய்ய முகம்மது இம் மேற்கோளைச் செய்தார் போலும். ஏன்? தனக்குக் கதிகாரம் செல்வாக்கு அதிகரிகக; வெற்றிபெற; தனது மதம் வளர. நபியின் நாயகி முகமூடி யில்லாது வெளிச் செல்லலாகாது என்று கூறின் நபி மாத்திரம் செல்லலாமா? மனைவி சென்றால் தண்டனை; நபிக் கொன்றுமில்லை.

127. உம் இருப்பிடத்திலேயே இருங்கள். அல்லாவையும் அவன் தூதனை யும் கீழ்ப்படியுங்கள்.

தத்துபிள்ளைகளின் மனைவிகளை விவாகஞ் செய்த அபவாதம் வரும் என் கிறதை, ஜயித் தீர்மானித்தவுடன் உமக்கு விவாகஞ் செய்து கொடுத் தோம். அல்லாவின் ஆக்ஞை நடைபெறல்வேண்டும்.

அல்லாவின் ஆக்ஞை என்று அபவாதம் எதையாவது தூதர்கள் செலுத்தலாகாது. உங்களில் எவரது தந்தையும் அவரல்ல. தூதனுக்குச் சரணமடைந்த ஸ்திரீகளிலும் இல்லை. இஷ்டமுள்ள மனைவிகளைத் தாமதப் படுத்திப் படுக்கைக்குப் பின் அழைத்துக் கொள்ளலாம். இஷ்டமுள்ளவளை முன் அழைத்துக் கொள்ளலாம். அது பிழையாகாது. முசல்மான்களே! தூதன் வீட்டில் நுழையாதேயுங்கள். (**33.** 32, 37, 38, 40, 44, 51, 53).

மனிதன் மாத்திரம் எங்கும் செல்லலாம், பெண்கள் மாத்திரம் வீட்டுக் குள்ளேயே கைதிபோல் அடைத்துக் கிடக்கவேண்டும். இது கொடுமை அல் லவா? நல்ல காற்றைச் சுவாசிக்க, தோட்டங்களில் நடக்க, இயற்கை வளத் தைக் கண்டு அநுபவிக்கப் பெண்களுக்கு ஆசையிராதா? இதன் காரணமாக முகம்மதியர்கள், வியபசாரத்தில் அதிகமாயிருக்க வேண்டும். எனவேதான் இம் மாதிரி நிபந்தனை ஏற்பட்டிருக்கவேண்டும். கடவுளும் நபியும் ஓரே மாதிரி யான சட்டங்களைத்தான் போடுகிறார்களா? அல்லது ஒன்றிற்கொன்று முரண் பாடான சட்டதிட்டங்களை இடுகிறார்களா? முன்னதாக இருவர் சட்டங்களை களுக்கும் கீழ்ப்படிய வேண்டுமெனின் அதற்குப் பொருள் இல்லை. பின்னது என்றால் ஒன்றுதான் உண்மையானதா யிருக்கவேண்டும். இரண்டும் உண்மை யாய் இருத்தல் முடியாது.

இது நிற்க மேலே கவனிப்போம். பிறர் துன்பத்தில் தனது நலத்தைத் தேடும் போதனையைக் கொண்ட நூல் தெய்வ நூலாகுமா? குர்-ஆன் இத் தகைய விஷயங்களைக் கொண்டதாயிருக்கிறது. மேற்கூறியதிலிருந்து முகம் மது பெரும்காமி என்று விளங்குகிறது. இல்லையேல் தனது மருமகளை (பிள்ளையின் மனைவியை) தனது மனைவியாகக் கொள்வாரா? இதைக் கடவு ளும் ஆதரிக்கிறார். இது நியாய விரோதமான செயல் அல்லவா? முகம்மது யாருக்கும் தந்தை அல்லவெனின் ஜையித் என்னும் அடிமையின் தந்தையா ரென்று அறிய விரும்புகிறோம். தனது மகன் மனைவியை அனுபவிக்க எண்ணிய

முகம்மது பெண்கள் கூட்டத்தில் யாரைத்தான் அனுபவிக்க விரும்பான். இதை எந்தவிதமாக மறைக்கக் கருதினாலும், மறைத்தல் முடியாது. அவ்வளவு பெரிய குற்றமாகும். இங்ஙனம் ஒருமாது தனது இஷ்டப்படி காரியத்தை நிகழ்த்தினால் அது சரியென்று கருதப்படுமோ? முகம்மது தனது மனைவிகளைத் தள்ளியது கொடுஞ்செயல் அல்லவா? அவர் தனது இஷ்டப்படி மனைவிகளைத் தள்ளும் உரிமை ஏற்கக் கூடியதா? புருஷன் தவறாக நடந்தாலும் பெண்கள் புருஷனைத் தள்ளக்கூடாது. அவர்களுக்கு அந்த உரிமை கூடாதா? முகம்மதின் மனைவிகளை அனுபவிக்கவேண்டும் என்னும் எண்ணத்துடன் எவனும் முகம்மதின் வீட்டில் நுழையக் கூடாது எனின், முகம்மது மாத்திரம் பிறர் வீட்டில் அவர்களது மனைவிகளை அனுபவிக்க வேண்டும் என்னும் தீய எண்ணத்துடன் செல்லலாமோ. முகம்மதிற்கு மாத்திரம் ஏன் இந்த உரிமை? இத்தகைய விஷயங்களைக் கொண்ட குர்-ஆனைத் தெய்வநூல் என்றும், முகம்மதை நபி என்றும் குர்-ஆனில் கூறப்படும் கடவுளை, எல்லாம் வல்ல இறைவன் என்றும் நம்புகிறவர்கள் முட்டாளகவே யிருக்கவேண்டும். அராபியர்கள் இந்த நன்னெறியற்ற நூலில் நம்பிக்கை வைத்தது நமக்கு ஆச்சரியத்தைத் தருகிறது.

> 128. தூதனுக்கு யாதொரு கவலையையும் அளியாதேயுங்கள். அவன் மனைவிகளை விவாகஞ்செய்து கொள்ளாதேயுங்கள். அல்லாவின் முன்னிலையில் இது பாபமாகும். அல்லாவையும் தூதனையும் தூஷிப்பவனுக்கு அல்லாவின் சாபம். முஸ்லிம் ஆண் பெண் இருவருக்கும் தீங்கு செய்பவர்கள் விளங்கும் அநியாயத்திற்கும் அபவாதத்திற்கும் அகாரண பாத்திரர்கள் ஆகிறார்கள். சபிக்கப்பட்டபடியால், கண்ட இடங்களில் எல்லாம் அவர்கள் கொலை செய்யப்படுவார்கள். அல்லாவே அவர்களுக்கு இருமடங்கு தண்டனை அளியும். பெருஞ்சாபமும் இடவேண்டும். (33. 54, 57. 58, 62, 68).

முகம்மதியக் கடவுள் நியாய முறையில் தனது சர்வ சக்தியை வெளியிடுத்தலோ இது. ஆச்சரியம்! முகம்மதிற்கு எவரும் துன்பம் விளைக்கக் கூடாதாயின், முகம்மதுவும் பிறருக்குத் தீங்கு செய்தல் தடுக்கப்படவேண்டுமல்லவா? ஏன் கடவுள் அங்ஙனம் ஆக்ஞை செய்யவில்லை. கடவுள் துன்பங்களுக்கு உட்பட்டவரா? அங்ஙனமாயின் அவர் கடவுளாக முடியாது. கடவுளுக்கும், முகம்மதுவுக்கும் துன்பங்களைத் தரலாகாது என்று கடவுள் ஆக்ஞை இடுவதிலிருந்து இவர்கள் மாத்திரம் மற்ற ஜனங்களுக்கு துன்பம் தரலாம் போலும். இந்த இரு நபர்களைத் தவிர மற்றவர்கள் கஷ்டப்படத்தான் வேண்டுமோ? நிற்க, முகம்மதியர்களுக்கும் அவர்களது மனைவிகளுக்கும், எவரும் தீங்கு இழைத்தல் ஆகாதெனின் முகம்மதியர்கள் அல்லாதாருக்கும் எவரும் தீங்கு செய்தலாகாது. இதை முகம்மதியர்கள் ஏற்க மறுத்தால், அவர்களும், அவர்களது கடவுளும், முகம்மதும், பட்சபாதமுள்ளவர்கள், அநயைப் பிடித்தவர்கள் என்றே சொல்லவேண்டும். முகம்மதியர்கள் அல்லாதாருக்கு இரண்டுமடங்கு கடுமையான தண்டனை கிடைக்க வேண்டுமென்று கடவுளைத் துதிக்கிறார். இது நெறிமுறையா? அறிவில்லாத மனிதர்கள் மிருகங்களை ஒப்பார் என்று கூறப்பட்டிருக்கும் வாக்கியம் ஏற்கத்தக்கதே.

129. அல்லாவே காற்றை அனுப்புகிறார். மேகத்தைக் கிளப்புகிறார். அதையே நாட்டில் ஓட்டுகிறோம். இறந்தபின் பூமியை சுறுசுறுப்பாகச் செய்கிறோம். அப்படியே தீர்ப்புக் காலத்தையும் அவருடைய கருணையால் நித்திய இருப்பிடத்தையும் அடைந்தோம். எக்கஷ்டமும் நம்மை அணுகாது. எக்களைப்பும் நம்மைப் பாதிக்காது. (**35**. 9, 35).

கடவுள் கூறும் நூதன தத்துவ முறையைக் கவனியுங்கள். கடவுள் காற்றைக் கிளப்பினார். மேகத்தை வரவழித்தார், இவைகளின் துணையால் இறந்தவனைப் பிழைப்பித்தார் என்று கூறப்படுகிறது. இது கடவுள் தன்மையைக் காட்டுமோ? கட்டினால்தான் விடாகும். கட்டப்பட்டது எக்காலமும் இருக்க முடியாது. தேகத்தைப் படைத்தவன் காரியமில்லாது சலனமில்லாது சும்மாயிருக்க முடியாது. இருந்தால் மனவமைதி யில்லாதிருப்பான். நோய்க்கு ஆளாவான். ஒரு மாதோடு வாழ்ந்தாலே துக்கத்தையும் நோயையும் அடையவேண்டி வரும். சோம்பேரியாய் பலமாதர்களுடன் புணர்ச்சியில் வாழ்ந்தவர்கள் கதி என்னகும்? எனவே முகம்மதியர், சுவர்க்கத்தில் திருப்தியாய், பூர்ண சந்தோஷத்துடன் இருத்தல் முடியாது.

130. அறிவுபுகட்டும் குர்-ஆன் ஆணையுடன், நான் சொல்வதாவது நீ கடவுளின் தூதனே. நல்வழி காட்ட யனுப்பப்பட்டவன். வல்லவனும் தயாபரனும் அனுப்பினது. (**35**. 1, 2, 3, 4).

குர்-ஆன் கடவுள் நூலாயின் அவர் அக்குர்-ஆனின் மேல் சத்தியம் செய்வாரா? முகம்மது கடவுளால் அனுப்பப்பட்ட நபியாயின் அவர் மருமகளிடம் காதல் கொள்வாரா? குர்-ஆனில் நம்பிக்கை யுள்ளவன்தான் சத்திய வழியில் நடப்பவன், நற்வாழ்க்கையுடையவன், சத்தியம் பேசுபவன், நியாயத்தைத் தர்மமாக உடையவன், அசுயை யற்றவன், பட்சபாதமில்லாதவன் என்று கூறுதல் முட்டாள்தனமாகும். குர்-ஆனும் கடவுளும் நன்னெறி என்னும் விதிக்கு அடங்கியவர்களாகக் காணப்படவில்லை. முகம்மது உண்மையான நபியாக இருப்பின், அவர் கல்விக் களஞ்சியமாக இருக்கவேண்டும். அங்ஙனம் ஒன்றும் காணப்படவில்லை. முகம்மது, மகம்மதிய மதத்தைப் புகழ்வது, மாம்பழ வியாபாரி தனது பழம் உயர்ந்தது என்று சொல்வதுபோல் இருக்கிறது.

131. பேரிகை முழுக்கத்துடன் கல்லறையிலிருந்து கிளம்பி அல்லாவை அணுகுவார்கள். அவர்கள் கைகளும் கால்களும் அவர்களைப் பற்றிக் கூறும். அவர் கட்டளை நினைத்தமாத்திரத்திலேயே "ஆகுக" என்றால் அங்ஙனமே முடிந்துவிடும். (**36**. 50, 63, 80).

என்னே அறிவீனம்!! கால்கள் சாட்சியம் கூறமுடியுமா? கடவுளைத் தவிர எதுவும் சிருஷ்டிக்குமுன் இல்லை என்று குர்-ஆன் கூறுகிறது. யாருக்குக் கடவுள் உத்தரவிட்டார். யார் இவரது கட்டளையைக் கேட்டார்கள். என்ன கட்டளையின்படி எழுந்தது. சிருஷ்டிக்குமுன் ஒன்றுமில்லையாயின், மேற்கூறியது பொருள் அற்றது. ஏதாவது இருந்திருப்பின், கடவுளைத் தவிர வேறு எதுவும் இல்லை என்பது பொய்.

132. பானகப் பிரியர்களுக்குக் கலக்கமற்ற சுனையிலிருந்து கிண்ணத்தில் சுத்த ஜலம் சுற்றி யளிக்கப்படும். காதலர்களைத் தவிர ஏனையோர்களிடஞ் கண் செல்லாமலிருக்கும் தேவகன்னிகைகள் அவர்களிடம் இருப்பார்கள். தனி களிலுருந்து காப்பாற்ற சிறகினால் மூடப்பட்ட தீப்பறவை முட்டைபோல் அவர்கள் கண்கள். எம்மால் அனுப்பப்பட்டவரில் லூத் ஒருவன். பின் தின்ற தில் இறந்த அவன் மனைவியும் கிழவியும் தவிர அவனையும் அவன் குடும் பத்தையும் மீட்டோம். பின் மற்றவர்களை நாசஞ் செய்தோம். (**43**. 44, 45, 48, 57, 131, 132, 133, 134);

நல்லது. இப்பூலோகத்தில் சாராயம் குடிப்பது பாபமாகும் என்று முகம் மதியர்கள் கூறுகிறார்கள். முகம்மதியர்கள் சுவர்க்கத்திலோ என்றால் சாராயம் ஆறுகளாக ஒடுகிறது. குடியை ஒழிக்கும் வகையில் முகம்மதியர்கள் உதவி யானார்கள் என்பது ஏற்கத்தக்கது. இதற்குப் பதிலாக அவர்கள் சுவர்க்கம் குடியைத் தொழிலாகக் கொண்டது. சுவர்க்கத்திலோ எவ்வொரு மனிதனுக் கும் பலமாதர்கள் இருக்கிறார்கள். பலர் இருப்பதால், ஒருவன் தனது விருப்பை ஒருவர்பால் வைத்தல் கஷ்டமாயிருக்கும். சுவர்க்கத்தில் இருப்பவர்களுக்குத் தேகம் இருந்தால், அவர்கள் இறக்கவேண்டும். தேகம் இல்லையாயின் புணர்ச்சி என்பது முடியாது. பிறகு சுவர்க்கத்தில் பிரயோசனந்தான் என்ன. லூத்தை நபியெனக் கொள்வீர்களேயானால் தன் மகளிடத்திலேயே அவர் மக்களைப் பெற்றாரென்று பைபிளில் கூறியிருப்பதை நம்புவீர்களா? அத்தகையோர் களுக்கும் அவர்களுடைய துணைவர்களுக்கும் உங்கள் இறைவன் முக்தியளிப் பாராயின் அவரும் அவர்களைப்போலவே யிருக்கவேண்டும். பழங்குருடி கதை களைக் கூறிக்கொண்டு பொறாமையினால் பிறரைக் கொன்றும் வருகிறவர் கடவு ளாகார். ஏனெனில் அத்தகைய கடவுள் முகம்மதியர்களுடைய வீட்டில் தவிர வேறு எங்கும் வசிக்கமாட்டார்.

133. நித்திய இருப்பிட ஸ்தலம். அவைகளின் கதவுகள் எப்பொழுதும் திறக்கப்பட்டிருக்கும். அங்கு படுப்பார்கள். பற்பல பழவர்க்கங்களைக் கேட்பார்கள். பானங்களையும் கேட்பார்கள். தேவகன்னிகைகள் சமீபத்தில் காத லர்களைத் தவிர பிறரைப் பார்க்காமல் இருப்பார்கள். சம வயதுள்ளவர்கள்.

கர்வத்தினால் திமிரடைந்த எபிலிசைத் தவிர எல்லா தேவதைகளும் அவனைத் தொழுகை செய்தார்கள். அல்லாவானவன், "என் கையால் சிருஷ்டிக் கப்பட்டதைத் தொழுகை செய்ய உன்னைத் தடுப்பதேது. வீண் கர்வம் ஏனோ? உண்மையில் உயர்ந்தவனோ நீ?" "அவனைவிட நான் உயர்ந்தவன். என்னை அனலில் இருந்தும், அவனை மண்ணிலிருந்தும் சிருஷ்டித்தாய்". "நீங்கிப்போ இனிமேல் தயவு இல்லை தீர்ப்புநாள்வரை உன்மேல் என் சாபம்". "தீர்ப்பு நாள்வரை என்னை தண்டனை செய் என்றான். உண்மைதான் தண்டனை அடை வதில் நீ ஒருவன் என்றான். சத்தியமாக நான் எல்லாரையும் கெடுத்துவிடு கிறேன் என்றான். (**38**. 49, 50, 51, 70-78).

சுவர்க்கத்தில் பூந்தோட்டங்களும் பழமரங்களும் இருக்கின்றனவென்று குர்-ஆன் கூறுவதை நீங்கள் நம்பினால், அவைகள் சாசுவதமாய் அழியாமல் இருக்க முடியுமா? ஜடப்பொருளின் கூட்டால் ஏற்பட்டவைகள் அழியவேண்டு மல்லவா? அவைகள் சாசுவதமாய் இருக்க முடியாது. ஜடசங்கமத்திற்கு

முன்னும் இருக்க முடியாது, பின்னும் இருக்க முடியாது. எனவே பூந்தோட்டங்களும், பழமரங்களும், அழியவேண்டியவைகளே. இவைகள் அழியுங்கால் சுவர்க்கவாசிகள் எங்ஙனம் அங்கு எப்பொழுதும் இருக்க முடியும்? சுவர்க்கத்தில் சுகமும், பொருளும், கனியும் இருப்பதாகச் சொல்லப்பட்டதிலிருந்து முகம்மதியமதம் காணப்பட்டபொழுது அராபியர்கள் ஏழ்மையில் வாழ்ந்தவர்களென்று தெரிகிறது. அவர்கள் நகரமும் செழுமையா யிருக்கவில்லை என்பதைக் குறிக்கிறது. இவ்வித சுவையான வார்த்தைகளால் முகம்மது ஜனங்களைத் தமது வலையில் சிக்கவைத்தார்போலும். மேலும் மாதர்களிருக்குமிடத்தில் சாச்வதமான இன்பம் இருத்தல் முடியாது. சுவர்க்கத்திலிருக்கும் மாதர்கள் எங்கிருந்து வந்தார்கள்? அங்கு அழைத்துச் செல்லப்பட்டார்களா? அல்லது சாசுவதமாய் அங்கு இருந்தார்களா?

உலகில் புத்துயிர் ஏற்படும் வரை அம்மாதர்கள் என்ன செய்து கொண்டிருந்தார்கள். சோம்பேரிகளாகக் காலத்தைக் கழித்து வந்தார்களா? சாத்தானைத் தவிர மற்ற தேவதைகள் அனைவரும் ஆதாமை வழிபட்டுக் கடவுளைத் திருப்தி செய்தனர். கடவுளின் பெருமையை நோக்குங்கள். சாத்தான் மாத்திரமே தனியாக விருந்தான். "நான் ஆதாமை எனது இரு கைகளினல் செய்தேன். கர்வம் கொள்ளாதே" என்று கடவுள் சாத்தானுக்குக் கூறினாராம். இதிலிருந்து கடவுள் இரண்டு கையுள்ள ஜீவன் என்பது புலனாகிறது. எனவே இச்சீவன் சர்வ வல்லமை படைத்த கடவுளாகாது. ஆதாமைவிட நான் உயர்ந்தவன் என்று சாத்தான் கூறியது சரியான வார்த்தையே. இதில் ஏன் கடவுளுக்குக் கோபம் ஏற்படவேண்டும். கடவுளுடைய வீடு ஆகாயத்திலிருக்கிறதா? அல்லது பூலோகத்திலிருக்கிறதா? காபா என்னுமிடம் கடவுளின் வாசஸ்தானம் என்று முதலில் அழைக்கப்பட்டது. எக்காரணம் கொண்டு இங்ஙனம் அழைக்கப்பட்டது? கடவுள் எங்ஙனம் தனது சிருஷ்டியினின்று தன்னைப் பிரித்துக் கொள்ள முடியும். உண்மைக் கடவுளுடையது சிருஷ்டி. சிருஷ்டியினின்று கடவுள் வேறாக முடியாது. குர்-ஆனின்படி கடவுள் சுவர்க்கத்தின் சொந்தக்காரர் என்று புலப்படுகிறது. அவர் சாத்தானைச் சபித்து சிறைபிடித்தாராம். சாத்தான் தீர்ப்புதினம் வரைத்தன்னை விடுதலை செய்யுமாறு கேட்டுக் கொண்டானும். அவர் அவனது இஷ்டப்படியே விடுதலை செய்தார். சாத்தான் விடுதலை பெற்றவுடன் நான் ஜனங்களைத் தீய வழிகளில் நடத்துவேன் என்று கூறி கடவுளுக்கு விரோதமாகக் கலகக் கொடியைத் தாங்கினன். உனது வார்த்தையைக் கேட்டு கெடுபவர்களை நான் நரகத்தில் தள்ளுவேன் என்று இறைவன் கூறினர். வாசகர்களே! இதை ஊன்றிக் கவனியுங்கள்!! கடவுள் சாத்தானைக் கெடுத்தாரா? அல்லது அவன் தானுகவே கெட்டானு? கடவுள் தான் சாத்தான் கெட்டதிற்குக் காரணம் எனில் கடவுள் பெரிய பிசாசு. அவன் தானுகவே கெட்டான் என்றால் இதைப்போல ஜனங்களும் பிறர் துணையில்லாது கெட்டுப் போகக் கூடும். எனவே ஜனங்கள் கெட சாத்தான் துணைவேண்டாம். அவர் சாத்தானை விடுதலை செய்ததால் அவன் செயலுக்கு ஜவாப்தாரியாகவேண்டும். திருடும்படி ஒருவனைத் தூண்டிவிட்டுப்

பிறகுத் திருடனைத் தண்டிப்பவர் கெட்டவரா? அல்லது திருடன் கெட்டவனா?

134. அல்லாவானவர் எல்லா பாபத்தையும் மன்னிக்கிறார். அவர் பட்சமும் தயவுமுள்ளவர். தீர்ப்புநாளில் இவ்வுலகமெல்லாம் அவர் கைப்பிடியிலேயே அடங்கிவிடும். ஆகாயம் அவரது வலதுகையில் அடங்கிவிடும். பூமி அல்லாவின் ஒளியால் விளங்கும். புத்தகம் திறந்து வைக்கப்படும். தூதர்களும், தியாகிகளும் சாட்சிகளும் இருப்பார்கள். தீர்ப்பு அளிக்கப்படும். (**39**. 53, 67, 69).

கடவுள் எல்லோருடைய பாபத்தையும் மன்னிக்கிறார் என்றால், அவர் உலகத்தைத் தீய வழியில் செல்லத் துணை செய்தவராவார். துஷ்டனை மன்னிப்பதால், கருணையற்றவராகிறார். ஏனெனில் துஷ்டர்களை மன்னிப்பதால் பல நல்லவர்களுக்குத் தீங்கிழைத்தவராகிறார். ஒரு சிறு குற்றமும் தண்டிக்கப்படாதுபோயின் உலகம் அதிக துன்பத்தை அனுபவிக்கவேண்டிவரும். கடவுள் தீயைப்போல் ஜோதியாயிருக்கிறாரா? விதிப் புஸ்தகம் எங்கே? அதை யார் எழுதுகிறவர்? நபிகளினதும், சாட்களினதுமான வாக்கு மூலங்களை அறிந்து கடவுள் விசாரணை செய்கிறார் என்றால், அவர் வரம்பிற்குட்பட்ட புத்தியை உடையவராவர். கடவுள் நீதிபதியாயின், பாரபட்சமில்லாது மனித ஜாதிகளுக்கு அவரவரது கர்மத்திற்கேற்றவாறு வெகுமானத்தையோ, அல்லது தண்டனையையோ அளித்து வரவேண்டும். பாபத்தை மன்னித்தல், ஹிருதயத்தை மூடல், ஜனங்களிடம் அறிவு புகாது செய்தல் பிசாசு வலை போடல், ஜனங்கள் அகப்படுதல் அக்குற்றத்திற்குத் தண்டித்துத் துன்புறுத்தல், இவை போன்றவைகள் பெருந் தவறாகும்.

135. இக்குர்-ஆன் ஷரீபானது அல்லாவினிடமிருந்து அருளப்பட்டது. வல்லவர். சர்வஞ்ஞானி. பாபத்தைப் பொறுத்தருள்பவர். (**40**. 1, 2).

நிறைந்த அறிவுபெறாதவர்களை இதை ஏற்குமாறு செய்யும் நோக்கத்தையே இந்நூல் கொண்டதாகும். குறைவான எண்ணங்களையும் பொய்த் தத்துவங்களையும் இது கொண்டிருக்கிறது. குர்-ஆனும், குர்-ஆன் கடவுளும், இதை ஏற்பவர்களும், உலகத்தில் பாபம், அநியாயம், இவைகளை வளர்க்கவும், பாபகாரியங்களைச் செய்யத் தூண்டவுமே துணை நிற்கின்றன. இத்தகைய போதனைகள் முகம்மதியர்களைப் பாப கர்மங்களைச் செய்யச் செய்கிறது.

136. ஏழு சுவர்க்கமாக இரண்டு தினத்தில் செய்தார். ஒவ்வொரு சுவர்க்கத்திலும் அதன் தொழிலை விளக்கினார்.

அங்கு சேரும்வரை அவர்கள் கண்கள் காதுகள், தோல் அவர்களின் செயல்களைப் பற்றிச் சாட்சி கொடுக்கும். தோலே எனக்கு விரோதியாய் என் சாட்சி சொல்லுகிறாய் என்றால், எல்லாவற்றிற்கும் கொடுத்ததுபோல் அல்லாவானவர் எனக்கும் வாயை அருளியிருக்கிறார் என்று கூறும். (**40**. 11, 19, 20, 38).

முகம்மதியர்களே நல்ல காரியம் செய்தீர்கள். இவர்தானா உங்கள் சர்வ வல்லமையுள்ள கடவுள். ஏழு சுவர்க்கங்களைச் செய்யக் கடவுளுக்கு இரண்டு

நாள் பிடித்தது. உள்ளபடி சர்வ சக்தியுள்ள கடவுள் இவ்வுலகத்தைக் கண் கொட்டும் நேரத்திற்குள் செய்துவிடலாம். கடவுள் காது, கண், தோல் இவைகளை உயிரற்றதாகச் செய்திருக்கும் பொழுது எப்படி இவைகள் ஒன்றிற்கொன்று சாட்சியங்களாக விருக்க முடியும்? அவரால் இவைகளுக்குத் தீர்ப்புத் தினத்தன்று உயிரளிக்க முடியுமென்று கூறுவீர்களேயானால் கடவுளது இயற்கைத் தத்துவத்தை நீங்கள் மீறுவதாகாதா? இது மலடிவயற்றுப் பிள்ளையின் முகத்தைக் கண்டேன் என்பதைப் போலிருக்கிறது. மலடிக்குப் பிள்ளை யிருப்பின் அவள் மலடியாயிருக்க முடியாது. உண்மையில் மலடியா யிருப்பின் அவளுக்குப் பிள்ளை யிருக்க முடியாது. செத்தவர்களைக் கடவுள் எழச் செய்தால், அவர் ஏன் முதலில் சாகச் செய்யவேண்டும்? அவர் தாமாகச் சாவாரா? சாவார் என்றால் ஏன் அவர் சாவைக் கேவலமாகக் கருதவேண்டும்? எந்த முகம்மதியர் இல்லத்தில் ஆத்மாக்கள் தீர்ப்புத்தினம் வரை இருந்துவருகின்றன? ஏன் கடவுள் தீர்ப்பு நாளை அதிகம் ஒத்திப் போட்டு வைக்கிறார்? ஏன் அவர் உடனுடனே விசாரித்து தீர்ப்புதரல் கூடாது? கடவுள் தத்துவத்திற்கு இவைகள் யெல்லாம் குறையல்லவா?

137. சுவர்க்கத்தினுடையவும் பூமியுடையவும் சாவிகள் அவரிடம். இஷ்டம் போல் தாராளமாயும் செட்டாயும் செலவழிக்கிறார்.

இஷ்டம்போல் சிருஷ்டித்து பெண்களை வேண்டிய இடத்திலும் பிள்ளைகளை வேண்டிய இடத்திலும் அருளுகிறார். இரண்டையும் அளித்து பிள்ளைகள் இல்லாமையும் சிலருக்குச் செய்கிறார். அல்லாவானவர் மனிதனோடு பேசத் தேவையில்லை. கனவிலாவது திரை மூடியின் மூலமாவது பேசுகிறார். இஷ்டமானதைக் காண்பிக்கத் தூதனை அனுப்புகிறார். (42. 48, 49, 50, 51).

பல விடங்களின் கதவை ஒவ்வொன்றாய்த் திறக்க வேண்டியிருப்பதால் கடவுளிடம் கணக்கற்ற சாவிக் கொத்துகளிருக்க வேண்டுமென்று தோன்றுகிறது. பாப புண்ணியங் கருதாது தனக்கு இஷ்டமானவர்களுக்குச் சுகத்தைத் தருவதும் வேறு சிலருக்குத் தண்டனையைத் தருவதும் குழந்தைத்தனமாக விருக்கவில்லையா? தமது இஷ்டப்படி காரியங்களைக் குழந்தைகளைப் போல் செய்பவராயின், அவர் அநியாயம் செய்பவராவர். குர்-ஆன் ஆசிரியர் மிகவும் சமர்த்தர். மாதர்களைத் தனது வலையில் சிக்கவைக்கச் செய்யப்பட்ட தந்திரமாகும். முகம்மதியக் கடவுள் தான் விரும்பியதைச் சிருஷ்டிக்குந் திறமையுடையவராயின் அவரால் மற்றொரு கடவுளைப் படைக்க முடியுமா? முடியாதாயின் அவரது சக்தி அவ்வளவுதான் என்று நாம் கொள்வதா? மாதர்களுக்குக் குழந்தையை யளிப்பவர் கடவுளாயின் பறவை மீன் முதலிய ஜீவராசிகளுக்கும் கால்நடைகளுக்கும் குட்டிகளைத் தருவது யார்? கடவுள் குழந்தைகளைத் தருபவராயின் ஏன் ஆணும் பெண்ணும் சேராத காலத்திலும் தரக் கூடாது. ஏன் அவர் சில மாதர்களை மலடியாயிருக்குமாறு செய்கிறார். நிற்க அவரிருக்கையில் ஒருவரும் பேசக்கூடாது என்றிருக்கிறது. ஆச்சரியமான கடவுளே! திரை மறைவிலிருந்து பேசலாம் என்று கூறியிருக்கிறார். இது உண்மையாயின் கடவுள் நபி தேவதை

இவர்களது கைப்பொம்மை யாவார். அவர் எல்லாம் வல்ல சர்வ வியாபியென்பது உண்மையாயின் அவருக்குத் திரைமறைவுப் பேச்சும், சமாசாரங்களைச் சொல்ல இடைமனிதர்களும தேவையில்லை யல்லவா? இடை மனிதர் துணை அவசியமா யிருப்பின் அவர் கடவுளாகார். வினோதமான சுவபாவமுள்ள மனிதனாகவே இருத்தல் வேண்டும். எனவே குர்-ஆனைத் தெய்வ நூலென முடியாது.

138. விளக்கும் நிருபணத்தோடு இயேசு வந்தபொழுது. (**42**. 59).

இயேசுநாதரை அனுப்பியவரும் கடவுளாயின், அவர் என் பிறகு குர்-ஆனை—பைபிளுக்கு மாறான நூலை—அருளவேண்டும்? பைபிளும், குர்-ஆனும் ஒன்றுக்கொன்று எதிரான கொள்கைகளை யுடையதாயிருப்பதால் இரண்டும் அதாவது குர்-ஆனும், பைபிளும் தெய்வ நூல்களாகாது.

139. அனலின் நடுவில் அவனைப் பிடித்து இழுக்கவும். கறுத்துப் பெருத்த கண்கள் உள்ளவர்களோடு கலியாணஞ் செய்துவைப்போம். (**44**. 43, 50).

கடவுள் மனிதனைப் பிடிப்பதும், அவனை இழுப்பதும் போன்ற காரியங்களைச் செய்தல் வினோதமாகவே யிருக்கிறது. கடவுள் இங்ஙனம் செய்கையில், அவரைப் பணியும் முகம்மதியர்கள், வலியற்றவர்களை, துணையற்றவர்களை திக்கற்றவர்களை வருத்துதல் ஆச்சரியமாகாது. கலியாணங்களில் கடவுள் துணை நிற்கிறாரா? துணை நிற்கிறார் என்றால், கடவுள் கலியாணம் செய்து வைக்கும் ஆள் போன்றவராகிறார். இது முகம்மதியர்களின் காஜி என்பவர்களின் வேலையைப் போலிருக்கிறது.

140. காபிரிகளைக் கண்டால் அவர்கள் கழுத்தை வெட்டிவிடவும். அதிகமாக அவர்களைக் கொலை செய்தவுடன் மீதியுள்ளோரை விலக்கிடவும். (**47**. 4).

உன்னை நழைத்துவித்த நகரங்களைக் காட்டிலும் எவ்வளவு பெரிய பெரிய நகரங்கள். அவைகளை அழித்தோம். அவைகளைக் காப்பாற்ற ஒருவருமில்லை. (**47**. 14).

அல்லாவிடம் பயமுள்ளோருக்குக் கிட்டும் சுவர்க்கம் எங்ஙனம் இருக்குமென்றால் கெடாத தண்ணீர் உடைய நதிகள், எப்பொழுதும் கெடாமல் இருக்கும் பால் ஆறுகள், உருசியுள்ள சாராயம். (**47**. 16).

தெளிந்த தேன் நதிகள் அல்லாவினிடமிருந்து பலவகை பழவர்க்கங்கள் (**47**. 17).

இவைகளிலிருந்து குர்-ஆன் கடவுளும், முகம்மதியர்களும் அமைதி நிலையைக் குலைப்பவர்கள், துன்பம் இழைப்பவர்கள், சுயநலக்காரர்கள்; என்று விளங்கும். காபிரிகள் முகம்மதியர்களை வருத்தினால், முகம்மதியர் எங்ஙனம் கருதுவர். அதைப்போலத்தானே பிறரும் கஷ்டமுறுவார்கள். நபியை விரட்டிய நாடுகளைக் கடவுள் அழித்தது அனியாயமேயாகும். நல்ல ஜலத்தையும், பாலையும், தேன் ஆறுகளையும் கொண்ட முகம்மதியர்கள் சுவர்க்கம் இவ்வுலகத்தைவிட உயர்ந்ததாகக் காணப்படவில்லை. ருசி மாறாத பால் நதியிருக்க முடியாது. பழம் பால் புளிக்க வேண்டியதே. இத்தகைய வினோத போதனைகளைக் கூறும் இதைப் புத்திசாலிகள், ஒருநாளும் ஏற்று நம்பமாட்டார்கள்.

141. பூமி அதிர்ச்சியால் அதிரும் மலைகள் பொடிப் பொடியாகிச் சுற்றியும் பரவும். (56. 4, 6).

வலது பக்கம் ஜனங்கள், வலது பக்கம் ஜனங்கள் யாராய் இருப்பார்கள். இடது பக்கம் ஜனங்கள் யாராய் இருப்பார்கள். (56. 8, 9).

இருபக்கமும் நட்சத்திரம் பதித்த அச்சயனம் தங்கத்தினால் செய்யப்பட்டதாய் இருக்கும். இளங்காளைகள் மதுபான கலசத்தை ஏந்திச் செல்வார்கள். அவர் புருவங்களுக்கு சிரமம் உண்டாகிறதில்லை. உணவும் குறைகிறதில்லை. நினைத்த பழங்கள் கிடைக்கும். இஷ்டமுள்ள பறவைகளின் மாமசங்களும் சிப்பியில் மூடியுள்ள முத்துக்கள் போல் பெருங் கண்கள் உள்ள கன்னிகைகள். (56, 18-22).

உயர்ந்த சயனத்தில், அபூர்வமான கன்னிகைகளாகவே அவர்களை வைத்திருக்கிறோம். சமவயதுள்ள காதலர்களோடு அன்புடன் இருப்பார்கள். நன்றாய் வயிற்றை நிரப்புங்கள். விழும் நட்சத்திரத்தினால் ஆணை செய்கிறேன். (56. 54, 74).

குர்-ஆன் ஆசிரியரது லீலையைக் கவனியுங்கள். பூமி எப்பொழுதும் சுற்றிக்கொண்டே யிருக்கிறது. குர்-ஆன் ஆசிரியர் பூமி ஒரேவிடத்தில் சாச்வதமாய் இருப்பதாக எண்ணியுள்ளார். குர்-ஆன் கடவுள் மலைகளைப் பட்சிகள் போல் பறக்கச் செய்வாரா? துண்டங்களாக மாற்றப்படுமேயானால் அவைகள் சிறு சரீரத்தைக் கொண்டேதானிருக்கும். இங்ஙனமிருக்க ஏன் அவைகளுடைய மறுபிறப்பை மறுக்கிறீர்கள். இஸ்லாம் கடவுள், ஜடமில்லாதவரானால் அவருக்கு முன்னும் பின்னும் எங்ஙனம் எவனாவது நிற்கமுடியும்? சுவர்க்கத்தில் தங்கத்தினாலாக்கப்பட்டு நட்சத்திரங்களால் அலங்கரிக்கப்பட்ட ஆசனங்கள் இருக்குமேயானால் அங்கு தங்கவேலைக்காரரும் தட்டான்களும் இருக்கவேண்டும். படுக்கையில் தூங்குகிறவர்களை உபத்திரவம் செய்ய மூட்டைப் பூச்சியும் இருக்கவேண்டும். சுவர்க்கத்திலிருப்பவர்கள் ஒரு வேலையுமில்லாது தங்கள் தலையணிகளில் சாய்ந்துகொண்டு காலத்தைக் கழிக்கிறார்களா? அல்லது ஏதாவது செய்கிறார்களா? அவர்கள் வேலை யில்லாது இருப்பின் உண்ணும் உணவும் ஜீரணமாகாதே. எனவே உடனே நோய் வருமே. பிறகு இறக்கவேண்டியதே. ஏதாவது வேலை செய்யின் அவர்களுக்குக் கூலி கிடைக்கவேண்டும். இது இவ்வுலகைப் போலவே யிருக்கிறது. பின்னர் இங்கிருக்கும் மனிதர்களுக்கும் சுவர்க்கத்திலிருப்பவர்களுக்கும் வேற்றுமையொன்றையுமே காணுமே. உண்மையில் பொய் சொல்வதைத் தொழிலாகக் கொண்டவர்கள்தான் சத்தியம் செய்பவர்கள். சத்தியவாதிகளுக்குச் சத்தியம் செய்யவேண்டிய தேவையில்லை. கடவுள் சத்தியம் செய்வதால் அவர் பொய் சொல்லும் சுபாவமுடையவராகவே யிருக்கவேண்டும்.

அந்தப் பையன்கள் எப்பொழுதும் சுவர்க்கத்திலிருந்தால் அவர்களுடைய பெற்றோர்கள் மாமியார்களும், மாமனார்களும் அங்கேதான் எக்காலமு மிருக்க வேண்டும். எனவே சுவர்க்கம் ஒரு குடியேற்ற நாடாகவேண்டும். அங்கு மல ஜலாதி அழுக்குகளால் நோயும் பிணியும் குடிகொண்டிருக்க வேண்டும்.

அங்கிருப்பவர்கள் பழத்தைத் தின்று தண்ணீரையும் சாராயத்தையும் குடித்து வந்தால் அவர்களுக்குத் தலைவலி முதலிய நோய்கள் ஏற்பட வேண்டுமே. நெறி மீறிய செயல்களையும் அவர்கள் நிகழ்த்திவரவேண்டும். அவர்கள் மிதமிஞ்சி பழங்களையும் தின்று வந்தால் நோய் வயப்படவேண்டியவர்களே. மேலும் அங்கு கால் நடைகளை வதைக்கும் சாலைகளும் இருக்கவேண்டும். கசாப்பு கடைகளும் இருக்கவேண்டும். இத்தகையது முஸ்லீம் சுவர்க்கம். இதை எங்ஙனம் புகழ்ந்துரைப்போம் என்று தெரியவில்லை. அரபியாவைவிட மேலானதென்றே தோன்றுகிறது. மாமிசாகாரங்களையும் மதுபானங்களையும் செய்பவர்களைக்கொண்ட சுவர்க்கத்தில் அழகிய இளம் மாதர்களும் காளையர்களும் இருக்கவேண்டுவது அவசியமேயாகும். இல்லையேல் மூளையில் மயக்கமும் புத்தியில் தடுமாற்றமும் ஏற்படும். அங்கு வசிப்பவர்களின் சுகத்திற்குப் படுக்கைகளும் இருக்கவேண்டியதவசியமே.

சுவர்க்கத்தில் இள மாதர்களைக் கடவுள் படைத்திருக்கையில் இளங்காளையர்கள் இருக்கவேண்டியது நியாயத்திற்கடங்கிய விஷயமே. ஆனால் இம்மாதர்கள் பூலோகத்திலிருந்து சுவர்க்கத்திற்கு வரும் மனிதர்களுக்கென்று சொல்லப்படுகிறது. அங்கு சாச்வதமாய் வசிக்கும் ஆடவர்களின் கதி என்ன? இவ்வாடவர்களுக்குக் கலியாணம் கிடையாதா? இது விஷயத்தில் கடவுள் மௌனமாய் இருக்கிறார். சுவர்க்கத்திற்கு வரும் மனிதர்களுக்கு அளிக்கும் பெண்களுடன் இந்த ஆடவர்களும் அளிக்கப்படுவார்களா? இது விஷயமான விவரம் ஒன்றையும் கூறாது அவர் விட்டார். சரிவயதுள்ள ஆடவரும் பெண்டிரும் இணைக்கப்படுகிறார்கள் என்றால் பொருத்தமாயிராது. ஆடவன் பெண்ணைக் காட்டிலும் மூப்படைந்தவனாயிருக்கவேண்டும். இனி இஸ்லாம் நரகத்தைப் பற்றி கவனிப்போம். அதற்குத் தோஹர் என்று பெயர். (இப்பதத்தின் பொருள் முற்களடைந்த புதர் என்பதேயாம்) இம்மரத்துப் பழத்தைத் தின்று வெந்நீரைக் குடிப்பார்கள். இவ்வித வேதனைக்குள்ளாகவேண்டும்.

142. கனத்த சுவற்றைப்போல் நின்று சண்டை செய்வோரிடம் அல்லா அன்பு பாராட்டுகிறார். நெருங்கி நின்று சண்டை செய்வோரையும் அப்படியே நேசிக்கிறார். (54. 4).

இத்தகைய போதனையினால்தான் அராபியர்கள் சண்டைக்குத் தூண்டப்பட்டார்கள். பிற நாட்டாரை எதிரியாகச் செய்து கொண்டார்கள். மதம் ஜனங்களைச் சண்டைக்குத் தூண்டும் கருவியாயிற்று. இதனால் ஜனங்களுக்குக் கஷ்டம். அறிவாளி இவ்வாறு போதனை செய்யும் ஜீவனைக் கடவுள் என்று ஒருநாளும் கொள்ளான். மனிதருக்குள் சச்சரவை தருபவன்தான் துக்கத்திற்கும், மனித ஜாதியின் கஷ்டத்திற்கும் காரணமாவான்.

143. ஓ! நபியே உனக்கு சட்டமானதை ஏனையோருக்கு ஏன் மறுத்தாய்? உன் மனைவிகளைத் திருப்தி செய்வதற்காகவோ? அவர் தயாளுவும் கருணையுமுள்ளவர். அல்லாவே அவர் இரட்சகர். உங்கள் இருவர்களையும்

தள்ளிவிட்டார்களேயானல் அதற்குப் பதிலாகவே வேறு நல்ல மனைவிகளை அவர் அளிப்பர். முசல்மான்களே ! நம்புபவர்களே ! பக்தியுள்ளவர்களே, பச்சாதாபமுள்ளவர்களே, நோன்பு நூற்பவர்களே கன்னிகைகளையும் காளைகளையும் அறிந்தவர்களே ! (66. 1-5).

கொஞ்சம் சிந்தனை செய்தால் வாக்கியங்களிலிருந்து கடவுள் முகம்மதுவின் வேலையாள் என்று புலனுகும். முதல் வாக்கியத்தை யொட்டி இரண்டு சிறு கதைகள் கூறப்படுகின்றன. முகம்மதுவிற்கு ஜலத்தின் பேரிலும் மதுவின்பேரிலும் அதிகப் பிரியம். முகம்மதுவிற்குப் பல மனைவிகள் உண்டு. ஒரு மனைவி வீட்டில் இருந்துவர இவருக்கு நாழிகை ஆனதனுல் மற்ற மனைவிகளுக்குக் கோபம் உண்டாயிற்று. எனவே குடித்ததினுல் அல்லவா, நாழிகை ஆயிற்று என்றுநினைத்து அவர் இனி மதுபானம் செய்வதில்லையென்று வாக்குதத்தம் செய்துகொண்டார். இது முதற்கதை. இரண்டாவது கதையாவது :—ஒரு நாள் முகம்மது ஒரு மனைவியின் வீட்டிற்குச் சென்றுர். அவள் அங்கு இல்லை. தனது தகப்பனது வீட்டிற்குச் சென்றிருந்தாள். அப்பொழுது ஒரு அடிமை வேலைக்காரியை உயர்வடையச் செய்துவிட்டார். மனைவி, செய்தியை யறியலானதும் கோபங் கொண்டாள். முகம்மதுவை இனி இத்தகைய காரியம் செய்வதில்லை யென்று வாக்குதத்தம் செய்து தாச்சொன்னுள். இவ்விஷயத்தை வெளியிடாமலிருப்பதாகவும் அவள் ஒப்புக்கொண்டாள். பிறகு முகம்மது வேறு மனைவியின் வீட்டிற்குச் சென்றதும் இக்கதையைச் சொன்னுர். அப்பொழுது கடவுள் முகம்மதுவின் பேரில் ஆவேசமாகப் பின்வருவது வெளிப்பட்டது :—கடவுள் சட்டத்திற்குள்ளடங்கியதாகச் செய்திருப்பதை நீ ஏன் மறுக்கப்பட்டதெனக் கொள்ளுகிருய்.........".

மனிதனது குடும்ப விஷயங்களில் கடவுள் வந்து தலையிடுவாரா வென்பதை அறிவாளிகள் சிந்திக்கவேண்டும். மேற்கூறிய கதைகளில் முகம்மது குணம் நன்கு புலனுகிவிட்டது. பலமாதர்களைப் பெண்டாளுபவன் எங்ஙனம் யோக்கியனுகவும் தெய்வ பக்தியுள்ளவனுகவும் நபியாகவும் இருக்க முடியும். இவர் மனைவிகளிடம் பட்சபாதமாய் நடக்கவில்லையா ? பட்சபாதமாய் நடத்தல் பாபமில்லையா ? ஒரு மனைவியிடம் அதிகம் அன்பு காட்டியும் ஒருவளைப் புறக்கணித்தும் நடப்பது பாபமில்லையா ? தனக்கோ பல மனைவிகள். மனைவிகளும் போதாமல் அடிமைப் பெண்களுடனும் கூடும் மனிதன் பக்தனுய் எங்ஙனம் இருக்க முடியும் ? "வியபசாரம் செய்பவன் வெட்கமடைகிறதில்லை" என ஒருவர் சொல்லியது பொருத்தமான வார்த்தையே.

மேலும் இஸ்லாம் கடவுள் முகம்மதுவிற்கும அவரது மனைவிகளுக்கும் ஏற்படும் சண்டைகளில் மத்தியஸ்தர் வேலையை ஏற்றுர். இதிலிருந்து குர்-ஆன் கடவுள் அருளிய நூலா, சுயநலப் பிரியமுள்ள ஒருவன் செய்த நூலா வென்பதை அறிவாளிகள் அறியலாம். இது நிற்க இரண்டாவது வாக்கியத்தைப் பற்றி ஆராய்வோம். முகம்மதுவின் மனைவிகள் முகம்மதுவினிடம் சண்டையிட்டதால் மனைவிமார்களைக் கடவுள் பயமுறுத்தி வந்தார். நீங்கள்

சண்டையிட்டுக் கொண்டு விலக்கப்பட்டால் நான் முகம்மதுவிற்குப் புருஷர்களுடன் கூடாத நல்ல பெண்களைத் தருவேன் என்றும் கூறிவந்தார். இங்ஙனம் கடவுள் கூறுவாரா? இது சுயநலப் பிரியர்களின் விஷமமல்லவா? மேற்கூறியவைகளில் ஒரு விஷயம் நன்கு புலனாகவில்லையா? கடவுள் அங்ஙனம் ஒன்றும் சொல்லவில்லை. முகம்மது வேண்டியவைகளை வகுத்து அது அருள் வாக்கென்று கூறியுள்ளார் என்று புலனாகவில்லையா? சிந்தனைசக்தியுள்ளவர்கள் முகம்மதியக் கடவுள் முகம்மதுவிற்கு மனைவி தேடிக் கொடுப்பவர் என்றே கூறுவார்கள்.

144. நபியே!! காபிரிகளின்மேலும் வஞ்சகர்களின்மீதும் சண்டை செய்யவும். கடுமையுடன் நடத்தவும். (66. 9.

முகம்மதியக் கடவுளால் செய்யப்பட்ட ஆச்சரியங்களை ஊன்றிக் கவனியுங்கள். முகம்மதுவையும், முகம்மதியர்களையும் பிறமதத்தினருடன் சண்டை செய்யும்படி கடவுள் தூண்டுகிறார், இக்காரணத்தால்தான் முகம்மதியர்கள் ஓயாது சண்டையிடுகின்றனர். முகம்மதியர்கள் சண்டையிடுதலை ஒழித்துப் பிறருடன் நட்புரிமை பூண்டு வாழக் கடவுள் அருள் புரியட்டும்

145. ஆகாயம் உடைந்துபோய்விடும், ஏனெனில் அந்நாளில் பலவீனமாயிருக்கும். தேவர்கள் பக்கத்திலிருப்பார்கள். உன் அல்லாவின் பீடத்தை எட்டு தேவர்கள் தாங்குவார்கள். வலது கையில் புஸ்தகத்தை அளிக்கப்பட்டவன் தன் நண்பர்களிடம் சொல்வான் "இதை எடுத்து எனக்காகப் படியும் என்பான்" இடது கையில் புத்தகம் அளிக்கப்பட்டவன் "இதை நான் அடையவேயில்லை" என்பான். (69. 16-19, 25).

என்ன தத்துவம்! என்ன நியாயத்தின் போக்கு. சுவர்க்கம் இரண்டாக வகுக்கவோ பிரிக்கவோ படுமா? சுவர்க்கம் இஷ்டப்படி கிழிக்கப்படும் துணியோ? நாம் அறியோம். ஆகாயத்தைச் சுவர்க்கம் என்று அழைத்தால் வான சாஸ்திரத்திற்கு விரோதமாகும். இதிலிருந்து குர்-ஆன் கடவுளுக்குத் தேகமுண்டு என்பது சித்தமாகிறது. தேகம் இல்லாதவன் சிங்காசனத்தில் வீற்றிருக்க முடியாது. எட்டு மனிதர்கள் தாங்கியிருக்கும் ஆசனத்தில் அமரும் கடவுளுக்கு மனிதனைப்போல் தேகமிருக்கவேண்டும். தேகந் தாங்கியவன் வரம்பிற்குள்ளாகவேண்டும். உடலைத் தாங்கியவர் சர்வ சக்தியையும் சர்வ வியாபகத் தன்மையும் கொண்டிருக்க முடியாது. ஜீவன்களின் செயல்களையும் அறிய முடியாது. நல்லவர்களின் வலது கையில் அவர்களது புண்ணிய கர்மங்களைக் கொண்ட புத்தகத்தை வைத்து சுவர்க்கத்திற்கு அனுப்புவதும் பாபிகளின் இடது கையில் அவர்களது துஷ்கிருத்தியங்களைக் கொண்ட புத்தகத்தை வைத்து நரகத்திற்கு அனுப்புவதும் சர்வ வல்லமையுள்ள கடவுளின் செயலாகுமா? எல்லாம் அறிந்த கடவுள் இங்ஙனம் காரியங்களை நிகழ்த்துவாரா? இது வேடிக்கையாகவே யிருக்கிறது. இது குழந்தைகள் கூறும் மழலைப்பேச்சல்லவா?

146. 50,000 வருடம் நீளமுள்ள ஒரு நாளில் அவனிடம் தேவர் முதலானவர்கள் எதனால் ஏறுவார்களோ, கொடிமரத்தினிடம் போய்ச் சேருகிற

வர்களைப்போல் எத்தினத்தில் கல்லறைகளிலிருந்து சேருவார்களோ. (70. 4-42)

50 ஆயிரம் வருஷம் ஒரு பகலானல், இரவும் அவ்வளவு பெரியதாகத் தான் இருக்க வேண்டும். இரவு அவ்வளவு பெரிதல்லவாயின் பகலும் அவ்வளவு பெரிதாயிருக்க முடியாது. கடவுளும் தேவதைகளும் கையில் விதிப் புத்தகத்தைத் தாங்கிய வண்ணம் 50 ஆயிரம் வருஷங்களைக் கொண்ட நாள் முழுதும், அலைந்து கொண்டிருக்க வேண்டும். இதுவாயின் எல்லோரும் நோய் கொண்டு இறக்க வேண்டியதுதான். செத்தவர்கள் உயிர்பெற்று தீர்ப்பு தினத்தன்று எழுந்திருப்பார்களா? கல்லறைகளுக்கும் எவ்வாறு சம்மன் அனுப்பபடுகிறது. செத்தவர்களில் நல்லவர்களும் இருக்கலாம். பாபிகளும் இருக்கலாம். ஏன் இந்த நல்ல ஆத்மாக்களும் இவ்வளவு வருஷம் காத்திருக்கவேண்டும்? மற்ற நாட்களில் கடவுளின் நியாயஸ்தலம் முடப்பட்டிருக்கிறதா? நியாய ஸ்தலம் மூடியிருக்கும் காலங்களில் கடவுளும் மற்ற தெய்வலோக வாசிகளும் குடிப்பதும், நடப்பதும், உறங்குவதும், நடன லீலைகளைக் கண்டு களிப்பது மாகிய வாழ்க்கை நடத்தியே வரவேண்டும். மனிதனுடைய வாசஸ்தலத் திலும் இத்தகைய நிகழ்ச்சிகள் ஒன்றுமிராது. இத்தகைய வார்த்தைகளை காட்டு மிருண்டிகளைத் தவிர மற்ற யார் நம்புவர்.

147. ஒன்றன்பின் ஒன்ருய் உன்னை உருவாக்கியது அவர்தான். ஏழு சுவர்க்கத்தையும் ஒன்றன்மேல் ஒன்ருய் எங்ஙனம் செய்தார் என்பதை நீ காணவில்லையா? சந்திரனைத் தீபம்போலவும் சூரியனைத் தீவத்திபோலவும் நிறுத்தியிருக்கிருர். (71. 14-16).

கடவுள் ஆத்மாவைச் செய்திருப்பின் அது அழியாத் தன்மையைக் கொண்டதாயிருக்க முடியாது. சிருஷ்டிக்கப்பட்டது இறக்க வேண்டியதே. சுவர்க்கத்திற்கு மேல் சுவர்க்கத்தைக் கடவுள் எங்ஙனம் செய்ய முடியும்? ஆகாசந்தான் சுவர்க்கம். அதைத் தவிர வேறு எதற்கும் அப்பெயர் பொருந்தாது. சுவர்க்கம் என்பது உருவற்றது. சுவர்க்கத்திற்குமேல் சுவர்க்கமாகக் கடவுள் கட்டியிருப்பின் சூரியனும் சந்திரனும் எங்ஙனம் இரண்டிற்கும் இடையில் வைக்கப்பட முடியும்? இடையில் இருப்பின் எப்படி இரண்டு சுவர்க்கத்திற்கும் வெளிச்சம ஏற்படும்? இவையெல்லாம் கட்டுக்கதை.

148. அல்லாவிற்காகவே கோவில் ஏற்பட்டது. வேற எதையும் அல்லாவுடன் அக்கு அழைக்காதே. (72. 18).

இது உண்மையாயின் ஏன் முகம்மதியர்கள் முகம்மது நபியின் பெயரைச் சேர்க்கிருர்கள். எனவே "அல்லாவும் அவரது நபியுமான முகம்மதையுந் தவிர வேறு ஆண்டவன் கிடையா" தென்பது குர்-ஆனுக்கு விரோத மானதே. இவ்வாக்கியம் உண்மையாயின் குர்-ஆன் மேற்கோள் பொய்யானதே. மசூதிகள் கடவுள் இருப்பிடமாயின் முகம்மதியர்கள் பெரும் விக்கிரக ஆராதனைக்காரர்களே. ஏனெனில விக்கிரகங்களைக் கடவுள்வாழும் இடம் என்று அழைக்கும் புராணிகர்களும் சமணர்களும் விக்கிரகஆராதனைக்காரர்

களாயின், மசூதியைக் கடவுள் வசிக்கும் இடம் என்று கூறும்முகம்மதியர்களும் உருவ ஆராதனைக் காரர்களல்லவா ?

149. சந்திரனும் சூரியனும் சேர்ந்திருக்கும். (75. 8).

சூரியனும் சந்திரனும் எப்பொழுதாவது ஒன்று சேரமுடியுமா? இது என்ன விந்தை ! சூரியனையும் சந்திரனையும் சேர்ப்பதினால் எப்பயன் விளையும்? ஏன் சகல உலகத்தையும் ஒன்றாய்ச் சேர்த்தல் கூடாது ? இத்தகைய செய்ய முடியாத காரியங்களைக் கடவுள் கூறல் ஆகுமா? இவைகள் அறிவிலியின் மனோநிகழ்ச்சிகளே.

150. உன்னைச் சுற்றியுள்ள இளங்காளைகளைப் பார்த்தால் வாரி இறைத்த முத்துக்களென வெண்ணுவாய். வெள்ளி நகைகளால் அலங்கரிக்கப்பட்டு பரிசுத்த பானகம் அல்லாவால் பருக அளிக்கப்படும். (76. 19-21).

முத்தையொத்த முகத்தினையுடைய காளையர்கள் ஏன் சுவர்க்கத்திருக்கும்படி கடவுள் செய்யவேண்டும். சுவர்க்கத்திற்கு வருபவர்களுக்கு வயது சென்றவர்களும் மாதர்களும் பணி செய்து திருப்தி செய்தல போதாதா ? சில கெட்ட மனிதர்கள் இயற்கைக்கு விரோதமான செயல்களைச் சிறு பையன்களுடன் செய்யும் பழக்கம் இதிலிருந்துதான் உண்டாச்சுதோ என்னவோ அறியோம். சிலருக்கு மாத்திரம் வேலையாளர் கொடுக்கும் பாரபட்சம் சுவர்க்கத்திலு மிருப்பானேன் ? சுவர்க்க வாசிகளுக்குக் கடவுள் சாராயத்தைத் தன் கையில் அளிக்கிறார் என்றால் கடவுளும் ஒரு வேலைக்காரனே. இது கடவுளின் பெருமைக்குப் பங்கம் விளைக்கவில்லையா? சுவர்க்கத்திலிருக்கும் மாதர்கள் புணர்ச்சியினால் கருத்தரிக்கிறார்களா? குழந்தைகள் பிறக்கின்றனவா ? இல்லையேல் தேக சம்பந்தம் பிரயோசனமற்றதே. பொருளற்றதே. (பூலோகத்தில்) கடவுளை வழிபடாது ஏன் சுவர்க்கத்தில் பூஜிக்கப் படுகிறார்கள். சிலர் மத நம்பிக்கையுடன் பூலோகத்தில் வாழவும் சுவர்க்கம் பெறவும், வேறு சிலர் மத நம்பிக்கை யில்லாது பூலோகத்தில் வாழாது சுவர்க்கத்திலே எப்பொழுதும் இருக்கவும் செய்வது நியாயமாகுமா?

151. தக்க பயன் அளிக்கப்படுவோர்கள். விண்ணங்கள் நிறைந்திருக்கும். தேவர்களும் ஒரே வரிசையிலிருப்பார்கள். (78. 26, 32, 36).

பாப புண்ணியங்களுக்கேற்றவாறு இறந்தவர்கள் சுவர்க்கத்தையும் நரகத்தையும் அடைகிறார்கள் என்றால் ஹௌரிகளும் தேவதைகளும் முத்தின் முகமுறுவலைக்கொண்ட காளையர்களும் எந்நாளும் சுவர்க்கத்திலிருக்கும் பாக்கியத்தை எங்ஙனம் பெற்றார்கள். எப்பொழுதும் குடித்துக் கொண்டிருந்தால் சுவர்க்கவாசிகள் குடிவெறி கொள்ளமாட்டார்களா? அதனால் சண்டையிட்டுக் கொள்ளமாட்டார்களா? எல்லாத் தேவதைகளைக் காட்டிலும் அதிக பலமுடைய தேவதையின் பெயர் ரூஹ். ரூஹையும் ஏனைய தேவதைகளைக் கொண்டு கடவுள் படையைத் தயார் செய்வாரா? தவறு செய்யும ஆத்மாக்களைத் தண்டிக்கும் அதிகாரத்தை அதற்களிப்பாரா? உட்கார்ந்து கொண்டிருப்பாரா? தீர்ப்பு தினத்தன்று கடவுள் இப்படைகளைக் கூட்டிச் சயித்தானைப் பிடித்துவிட்டால் அவரது ஆட்சி சாசுவதமாய விடும். நல்ல கடவுள்!

152. சூரியன் மடிக்கப்படும். நட்சத்திரம் விழும். மலைகள் அசையும். சுவர்க்கம் கீழே இறக்கப்படும். (**18.** 1,3, 11).

சூரியன் பாய்போல் மடிக்கப்படும் என்று சொல்லுவது முட்டாள் சொல்லும் வார்த்தையைப்போல் தொனிக்கவில்லையா? எப்படி நட்சத்திரம் விழும்? உயிரற்ற மலைகள் எப்படி நகரச் செய்யப்படும்? ஆகாயம் என்பது ஒரு மிருகமா? அதையெப்படி அடிக்க முடியும்? காட்டு மிருண்டி நம்பிக்கையேயாகும் இது.

153. சுவர்க்கம் பிரியும்; நட்சத்திரம் கலையும்; சமுத்திரங்கள் கலக்கும்; கல்லறைகள் திருப்பப்பட்டு மேலே எழும். (**80.** 1, 4).

குர்-ஆனின் வேதாந்த ஆசிரியரே! எப்படி சுவர்க்கத்தைக் கிழித்து நட்சத்திரங்களை யகற்றுவீர்? ஆறுகள் மரக்கட்டைகளா? நீர் துண்டுகளாக அறுப்பதற்கு. உயிர்பெற்று எழுந்திருக்கச் சவக்குழிகள் சவங்களா? குழந்தை பேச்சைவிட இவைகள் சிறந்ததல்ல.

154. கோபுரம் நட்சத்திரங்களினால் நிறைந்துள்ள ஆகாயம். நித்தியக் கற்களில் செதுக்கப்பட்ட குர்-ஆன் ஷரீபு. (**85.** 1, 21).

குர்-ஆன் ஆசிரியருக்கும் கோளமும் வான சாஸ்திரமும் தெரியாது. யாராவது ஆகாயத்தைக் கோபுரங்களையுடைய கட்டடங்களுக்கு ஒப்பிடுவார்களா? மேஷம் முதலான இராசிகளைக் கோபுரங்களென்று அழைத்தால் ஏனைய நட்சத்திரங்களை ஏன் அங்ஙனமே அழைக்கக் கூடாது. இவைகள் கோபுரங்களல்ல. பல கிரகங்களே. குர்-ஆன் ஆசிரியர் கடவுளானால், அறியாமையில் முழுகியவரா யிருக்கவேண்டும்.

155. எனக்கு வஞ்சகஞ் செய்கிறார்கள். அவர்களுக்கு வஞ்சகம் நான் செய்வேன். (**86.** 46).

ஏமாற்றலும் மோசஞ் செய்தலும் ஒன்றே. ஒருவன் திருடினால் நாமும் பதிலுக்குத் திருடவேண்டியதுதானே? பொய்க்குப் பதில் பொய்தானா? நல்ல உபதேசம். குர்-ஆன் ஆசிரியரே.

156. அல்லாவும் வருவார். தேவர்களும் படிப்படியாக வருவார்கள். நரகமும் அங்கு கொண்டுவரப்படும். (**89.** 23, 24).

கடவுள் போலீஸ் இன்ஸ்பெக்டர் அல்லது தளகர்த்தனைப்போல் படையைப் பரீட்சிக்கிறாரா? நரகம் பானையைப் போன்றதா? நினைத்த விடத்திற்குத் தூக்கிச் செல்ல. இவ்வளவு சிறியதாயின் கணக்கற்ற கைதிகளை எங்ஙனம் அடக்கிக் கொள்ளும்?

157. அவர்களுக்குத் திரு நபி சொன்னதாவது :—“ அல்லாவின் ஒட்டகத்தைக் கவனி. அது ஜலமருந்தட்டும்.” பொய் வஞ்சகனைப்போல் அவனைக் கருதி அவன் காலைத் துண்டித்தான். அக்குற்றத்திற்கு அவனை அழித்தார். எல்லாரையும் அப்படிச் செய்தார். (**91.** 15, 18).

கடவுள் ஒட்டகம் மீதேறி சவாரி செய்கிறாரா? இல்லையேல் அம்மிருகம் அவருக்கு எதற்கு? தீர்ப்பு தினத்திற்கு முன் தமது சட்டத்திற்கு விரோத

மாய்ப் பிணிகளைப் பரவச் செய்து ஜனங்களைத் துன்புறுத்துவானேன்? தண்டனையாக இவைகளைச் செய்தால் தீர்ப்பு தினமும் அத்தினத்தில் ஜனங்களை விசாரிப்பதும் பொய்யே. ஒட்டகக் கதையிலிருந்து அரேபியாவில் அதைத் தவிர வேறு மிருகங்களில்லை யென்பதும் அரேபியா வாசி யொருவன் இதை எழுதினன் என்பதும் விளங்கும்.

158. அவன் நிற்கவில்லையானல் பாபஞ் செய்யும் வஞ்சகமான நெற்றி மயிரைப் பிடிப்போம். நரகத்தின் காவலாளர்களையும் அழைப்போம். (**76**. 15, 16, 18).

ஒருவனைக் கட்டியிழுப்பது—கடவுள் சாதாரண வேலைக்காரன் வேலையையும் செய்தவராகிறார். தலைமயிர் குற்றவாளியும் பொய்யனுமாகுமா? ஆத்மாதான் ஆகும். ஜயில் அதிகாரி வார்டர்களை யழைப்பதுபோல நரகக் காவல் காரர்களை அழைக்கிறவர் கடவுளாமோ?

159. அல் கதர் இரவில் இறக்கக் காரணமா யிருந்தோம். அல் கதர் இரவு என்ன என்பதை யார் கற்பிப்பார்? ஒவ்வொரு விஷயத்திற்கும் தேவரோ, குருக்களோ அல்லாவின் ஆக்ஞையால் அங்கிருந்து இளம்பும். (**77**. 1, 2, 4).

குர்-ஆன் முழுதும் ஒரே இரவில் செய்யப்பட்டதாயின் சிற்சில சமயங்களில் சிற்சில பாகங்கள் கடவுளா லருளப்பட்டதென்பது எங்ஙனம் உண்மையாகும்? இரவு இருளாய்த்தானிருக்க முடியும். இதற்கு உபதேசம் தேவையில்லை. ஆகாயத்தில் மேலுங்கீழு மிருக்க முடியாதென்று கூறியுள்ளோம். ஆனல் ஆண்டவன் ஆணைப்படி தேவதைகளும் பரிசுத்த ஆவியும் பூலோகத்துக் காரியங்களை நிர்வகிக்க வந்தார்களெனக் கூறப்பட்டிருக்கிறது. இதிலிருந்து மனிதனைப்போல் கடவுளும் ஒரே விடத்தில் இருக்கிறாரென்பது சித்தமாகிறது. இதுவரையில் குர்-ஆன், கடவுள், தேவதை, நபி, இவர்களைப்பற்றியே பேசிற்று. இப்பொழுது பரிசுத்த ஆவியெனப் புதிதொன்று வந்திருக்கிறது. இது யார் யென்று தெரியவில்லை. கடவுள், மகன், பரிசுத்த ஆவி என்று கிறிஸ்துவர்கள் கூறுவதற்கு மேல் இதொன்று அதிகமாகச் சேர்க்கப்பட்டிருக்கிறது. முன் கூறிய மூன்றையும் கடவுள் என்று முகம்மதியர்கள் நம்பவில்லையாயின் அப்படியே இருக்கட்டும். பரிசுத்த ஆவி வேருனதாயின் மற்றவைகளை என்ன வென்றழைப்பது? மற்ற மூன்றும் தெய்வ தத்துவமுடையதெனின் ஏன் ஒன்றைமாத்திரம் பரிசுத்த ஆவியென்றழைக்க வேண்டும்? நிற்கக் கடவுள் இரவு, பகல், குதிரை, பிற மிருகங்கள் குர்-ஆன் இவைகளின் மேல் ஆணையிடுகிறார். நல்லவர்கள் ஆணையிடுவார்களா?

எமது குர்-ஆன் ஆராய்ச்சியைக் கற்றறிந்து சிந்தனைசக்தி யடைந்தவர்களின் யோசனைக்கு அளிக்கிறோம். அவர்களே இந்நூலின் பெருமை சிறுமை இவைகளை யறிந்து கொள்ளட்டும். இக்குர்-ஆன் கடவுளால் செய்யப்பட்டதுமல்ல. கல்வி அறிவு பெற்றவன் ஆக்கியதுமாகாது என்பது வெளிப்படை. இதில் மலிந்துகிடக்கும் குறைகளையும் தவறுகளையும் எடுத்து விளக்கியுள்ளோம். வேதத்திற்கும் சாஸ்திரத்திற்கும் மாறுபடாத இதிலிருக்கும் ஒரு சில உண்மைகள் ஏற்கக் கூடியதே. பெரும்பாகம் பொய்களையும் பிழைகளையும் கொண்டுள்ளது இந்நூல். மனித ஜாதியின் துன்பங்களை யதிகரிக்கச்

செய்ய வல்லது. மனிதனை மிருகமாக்குகிறது. அமைதியைக் குறைக்கும் தன்மையது. கூறியது கூறல் என்னும் குற்றத்திற்குக் குர்-ஆன் இருப்பிடமாயிருக்கிறது. மனிதவர்க்கம் அன்பில் வாழவும் பரஸ்பர பிரேமையுடன் நேசிக்கவும் எல்லாம் வல்ல இறைவன் அருள் புரிவாராக. பாரபட்சமன்னியில் பிறருடைய குற்றங் குறைகளையும் என்னுடையதையும் எடுத்துக் காட்டியிருக்கிறேன். அறிஞர்களெல்லோரும் இவ்வழியே நடந்தால், ஜனங்கள் பரஸ்பர பகையைவிட்டு உண்மையை யடைய பாடுபடும் ஒரே சமயத்தின சமாதானத்தையும் சாந்தியையும் அநுபவித்து வாழ பெரும் பிரயாசை யாகுமோ? குர்-ஆனைக் குறித்துச் சுருங்கச் சொன்னோம். அறிஞர்களும் தர்மாத்மாக்களும் நல்லெண்ணத்துடன் உட்கருத்தையறிந்து பயனடைவார்களாக. பிழையிருப்பின் சரிவர அறிய அதைத் தயவுடன் திருத்தவேண்டும்.

நாம் இதை முடிப்பதற்குமுன் ஒரு விஷயத்தை மாத்திரம் கூற விரும்புகிறோம். சாதாரணமாக முகம்மதியர்கள் அவர்களுடைய மதம் எழுத்து மூலமாகமோ பேச்சு மூலமாகவோ அதர்வ வேதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது என்று கூறுகின்றனர். இதைப்பற்றி அவ்வேதத்தில் ஒரு வார்த்தை கூட கிடையாதென்பதே இதற்குப் பதில்.

வி:—அதர்வ வேதம் முழுவதையும் நீங்கள் பார்த்திருக்கிறீர்களா பார்த்திருந்தால் அல்லோப நிடதத்தைக் கவனியுங்கள். இதில் இப்பதம் கூறப்படவில்லையா? இவ்விதமிருக்க நீங்கள் ஏன் ஒரு வார்த்தை கூட இல்லையென்று கூறிவிடுகிறீர்கள்.

अस्माल्लां इल्ले मित्रावरुणा दिव्यानि धत्ते। इल्लल्ले वरुणो राजा
पुनर्ददुः। हया मित्रो इल्लां इल्लल्ले इल्लां वरुणो मित्रस्तेजस्काम् ॥ १ ॥
होतारनिन्द्रो होतारमिन्द्र महासुरिन्द्राः। अल्लो ज्येष्ठं श्रेष्ठं परमं पूर्णं
ब्रह्माणं अल्लाम् ॥ २ ॥ अल्लोरसूल महामद्रकबरस्य अल्लो अल्लाम ॥ ३ ॥
आदल्लाबूमकमेककम् । अल्लाबूक निखातकम् ॥ ४ ॥ अल्लो यज्ञेन हुत-
हुत्वा। अल्लासूर्य चन्द्र सर्व नक्षत्राः ॥ ५ ॥ अल्ला ऋषीणां सर्व दिव्यां
इन्द्राय पूर्वं माया परममन्तारक्षाः ॥ ६ ॥ अल्लः पृथिव्या अन्तरिक्ष
विश्वरूपम् ॥ ७ ॥ इल्लो कबर इल्लो कबर इल्लां इल्लल्ले ति इल्लल्लाः ॥ ८ ॥
ओम् अल्ला इल्लल्ला अनादिस्वरूपाय अथर्वणाश्यमा हुँ ह्रीं जनानपशुन-
सिद्धान् जलचरान् अदृष्टं कुरुकुरु फट ॥९॥ असुरसंहारिणी हुं ह्रीं अल्लोर-
सूल महमद्रकबरस्य अल्लो अल्लाम इल्लल्लेति इल्लल्लाः ॥ १० ॥ அல்லோபநிடதம்

முகம்மது ரஸூல் அல்லாஹ் என்னும் வார்த்தைக் கண்காணத் தெரிகிறதே. கடவுளின் நபியாச்சுதே முகம்மது. எனவே முகம்மதியர்களின் மதம் வேதாதாரவைப் பெற்றதென்று வெளியாகவில்லையா?

விடை :—ஐயா! நீர் அதர்வ வேதத்தைப் படித்திராவிடில் எங்களிடம் வாரும், படியும். அல்லது அதை யறிந்த யாரிடமாவது செல்லும்! 20 அத்தியாயங்களையும் ஆரம்பமுதல் கடைசிவரையில் கேட்டறியும். அப்பொழுது உங்களுடைய நபியின் பெயர் அதிலில்லாததை அறிவீர்கள். அல்லோபநிஷத் தென்பது வேதத்திலும் கிடையாது கோபத பிராம்மணத்திலும் கிடையாது. உரைகளெதிலும் கிடையாது. அக்பர் காலத்தில் யாரோ எழுதியிருப்பதாகப் புலப்படுகிறது. அவருக்குக் கொஞ்சம் வடமொழியும் அரபியும் தெரியுமென்று நூலிலிருக்கும் அரபு சமஸ்கிருத பதங்களிலிருந்து புலனாகிறது. உதாரணமாக அஸ்மல்லாம், இல்லே என்னும் சொற்களுக்குச் சரியான சம்ஸ்கிருத மொழிகளாவன :—மித்ரா வருண திவ்யானி தத்தே. மொத்த, மாகப்பார்த்தால அரபு சமஸ்கிருதம் இரண்டையும் அறிந்தவனாலேயே செய்யப்பட்டிருக்கிறதென்பது வெளியாகும். பொருளைக் கவனித்தாலும், வேதம், வியாகாரணம் இவைகளுக்கு விரோதமாயும் பிரயாசையுடனும் சம்பந்தமில்லாமலும் செய்யப்பட்டதாகத் தெரியும். இதைப்போல் மதப் பிரிவினைக்காரர்கள் பலர், ஸ்வரோபநிடதம், நிருஸிம்ஹதாபனி, ராமதாபனி, கோபாலதாபனி என்னும் முதலியவைகளைச் செய்திருக்கிறார்கள்.

வினா :—இதுவரை உங்களைப்போல் எவரும் கூறியதில்லை. எனவே நீங்கள் கூறுவதை எங்ஙனம் நம்புவது ?

விடை :—நீர் நம்பினும் நம்பாவிடினும், நாம் சொல்வது தவறாயிருக்க முடியாது. நான் ருசுபிப்பதுபோல் நீர் உபநிஷத்தை அதர்வேதம், கோபதம் அல்லது அதனுடைய கிளைகள் அல்லது பழைய சுவடிகள் அல்லது தர்க்க நியாயம் முதலானவைகளைக் கொண்டு ருசுபிக்கவேண்டும்.

வினா :—எங்களுடையது எவ்வளவு உயர்ந்த மதம்? இன்ப சுகங்களும் இருக்கின்றன. முடிவில் முக்தியும் கிடைக்கும்.

விடை :—பிற மதக்காரர்களெல்லோரும் எங்களதுதான் உயர்ந்ததென்றும் எங்களது கொள்கையை ஏற்காது எவனும் முக்திபெற முடியாதென்றும் மாறானவைகளெல்லாம் கெட்டதென்றும் கூறுகிறார்கள். எதை சரியென்று ஏற்பது? உண்மை உரைத்தல், பச்சாதாபம், ஒழுங்கு, அஹிம்சை, முதலான சுபகுணங்கள் எல்லா மதத்திற்கும் சமானமானதென்றே நாம் நம்புகிறோம். பிடிவாதம், பகை, துவேஷம், பொய்பேசுதல், இவைகள் எம்மதத்திலிருந்த பொழுதிலும் கெடுதலானதே. சத்திய சமயத்தைப் பெற விரும்பினால், வைதிகத்தை அங்கீகரியுங்கள்.

பதினான்காவது அத்தியாயம் முற்றிற்று.



# எனது கொள்கை.

—:o:—

எல்லோராலும், எக்காலமும், எவ்வுலகிலும் எத்தருமம் மதிக்கப்பட்டும் மதிக்கப்படுகிறதும் மதிக்கப்படுவதுமாயிருக்கிறதோ அதுவே ஸநாதன தர்மம். எனவே அது மானிட வகுப்பு வேற்றுமைகளை மீறினது. அறியாமையிலகப் பட்டுக் கொண்டவர்களாலும், கட்சிபேதங்களைக் கொண்டவர்களாலும் நம்பப் பட்டவைகள் அறிஞர்களால் போற்றத் தகுந்தவைகளல்ல. மனோவாக்குக் காயம் முதலானவைகளினால் சத்தியமாயிருப்பவர்கள்; பாரபட்சமற்றவர்கள்; அறிஞர்கள்; முதலானவர்களான ஆப்தர்களெனப்படுவோர்களால் நம்பப்படு பவைகளே சத்தியமானது. அவர்களால் ஒதுக்கப்பட்டவைகளெல்லாம் நம்பத்தகாதவைகளென்றும் பொய்யானவைகளென்றும் கொள்ளவேண்டும். வேதாதிசத்திய சாஸ்திரங்களின் ஆதரவைப் பெற்றதும் பிரம்மா முதல் ஜெய் முனிவரை ஏற்கப்பட்டதுமான தத்துவங்களை அடிப்படையாகக் கொண்டதே, இறைவன் விஷயம், உலகாயுத நோக்கம் முதலியவைகளைப் பற்றி நான் கொண்டுள்ள கொள்கை. நல்லோர் அங்கீகாரத்திற்காக நான் அவைகளை வெளி யிடுகிறேன். எக்காலமும் எல்லோராலும் நம்பத் தகுதியுள்ளதையே ஏற்ற தெனக் கொள்ளுகிறேன். புதியதொரு சமயத்தையோ வகுப்பையோ சமைக்கவேண்டுமென்ற எண்ணத்தைக் கொஞ்சமேனும் நான் கொண்டவ னல்ல. சத்தியத்தை நம்பிப் பிறரையும் நம்பச் செய்வது; சத்தியமற்றதைத் தள்ளி பிறரையும் தள்ளச்செய்வது; இது என்னுடைய முக்கிய நோக்கம். நான் ஒருதலை வாதியாயிருந்திருப்பேனேயானால் ஆரிய வர்த்தத்தில் இப் பொழுது இருந்துவரும் பற்பல சமயங்களில் ஏதேனும் ஒன்றைப் போற்றி யிருப்பேன். ஆனால் நான் அவ்விதம் செய்யவில்லை. இந்நாட்டிலாயினும் சரி பிறநாட்டிலாயினும் சரி எங்கிருந்த பொழுதிலும் அதர்மத்தை நான் அங்கீ கரிக்கவில்லை; தர்மத்தை வெளிதேசத்திலிருந்தாலும் ஏற்றுக்கொள்ள நான் மறுத்ததில்லை. ஏனெனில் அங்ஙனம் செய்யாவிடில் மனிதத் தன்மைக்கே விரோதமாகும். தன்னைப்போலவே பிறருடைய சுகதுக்கம், லாபநஷ்டம் முதலானவைகளைக் கருதியும், எத்துணை செல்வாக்குடனும் பலத்துடனும் கூடியிருந்த பொழுதிலும் அநியாயத்திற்குப் பயப்படாமல், பலக் குறைவான தாயிருந்தபொழுதிலும் நியாயத்திற்குப் பயப்படுகிறவனே மனிதன் என்னும் பெயருக்கு ஏற்றவன். வறுமை, பலயீனம், பதவி முதலானவைகளிருந்த பொழுதிலும் தர்மாத்மாக்களைச் காப்பாற்றி அவர்களுடைய முன்னேற்றத் திற்குப் பாடுபட்டு அவர்களுடைய நன்மையைத் தேடுவதிலேயே காலத்தைக் கழிக்கவேண்டும். சீரு, செல்வாக்கு, பழு, இவைகளுடன் கூடினதா

யிருந்த பொழுதிலும் அநியாயம் இவ்வுலகில் எங்கு காணப்பட்டாலும் அதை அவமானப்படுத்தி அழிப்பதற்குப் பாடுபடவேண்டும். அதாவது அதர்மத்தை அழித்து தர்மத்தை நிலைநிறுத்தத் தன்னால் கூடிய வரையில் மனிதன் பாடுபட வேண்டும். பெருந் துன்பங்களும் கஷ்டங்களும் விளையும். கடமையைச் செய்து முடிப்பதில் பிராணனையே கொடுக்க நேரிடும். ஆனால் மனித தர்மத்தைச் செய்வதிலிருந்து பின்வாங்கக் கூடாது.

பர்த்திருஹரி சொல்லுவதுபோல்.

निन्दन्तु नितिनिपुणा यदि वास्तुवन्तु
लक्ष्मीः समाविशतु गच्छतु वा यथेष्टम् ।
अद्यैव वा मरणमस्तु युगान्तरे वा
न्याय्यापथः प्रविचलन्ति पदं न धीराः ॥

நிபுணர்களென்போர்கள் தூற்றுவார்கள், அல்லது போற்றுவார்கள், வறுமைத் துன்புறுத்தும் அல்லது செல்வம் சிரிக்கும், உடனே மரணம் வரும் அல்லது வெகு காலம்வரை உயிர் இருக்கும், எங்ஙனமிருந்தாலும் அறிஞர்கள் அறமார்க்கத்திலிருந்து பிறழமாட்டார்கள்.

न जातु कामान्न भयान्न लोभाद् ।
धर्मं त्यजेज्जीवितस्यापि हेतोः ।
धर्मो नित्यः सुखदुःखे त्वनित्ये ।
जीवो नित्यो हेतुरस्य त्वनित्यः ॥ மகாபாரதம்.

வெறி, ஆசை, பயம், மோகம், உயிர், எக்காரணத்தைக் கொண்டாயினும் தர்மத்தை மனிதன் நழுவவிட வேண்டாம். ஏனெனில் தர்மம் அழியாதது, இன்ப துன்பங்கள் அழிந்துபோவது; ஜீவன் நித்தியமானது, சரீரம் அநித்தியமானது.

एक एव सुहृद्धर्मो निधनेप्यनुयातियः ।
शरीरेण समं नाशं सर्वमन्यद्धि गच्छति ॥ மநு.

இறந்த பின்னரும் இருப்பது தர்மம் ஒன்றே. வேறு யாவும் சரீரத்துடன் நாசமடையும்.

१. सत्यमेव जयते नानृतं सत्येन पन्था विततोदेवयानः ।
येनाक्रमन्त्यृषयो ह्याप्तकामा यत्र तत्सत्यस्य परमं निधानम् ॥ ॥ ४ ॥
२. नहि सत्यात्परो धर्मो नानृतात्पातकं परम् ।
नहि सत्यात्परं ज्ञानं तस्मात्सत्यं समाचरेत् ॥ உபநிடதம்.

1. சத்தியம் ஒன்றே ஜயிக்கும், பொய் ஜெயிக்காது. உண்மை வழியையே அறிவாளிகளும் பக்திமான்களும் ஒழுகியிருக்கிறார்கள். இவ்வழி சென்றதினாலேயே ஆசையை யடக்கின ஆதிரிஷிகள் சுவர்க்கத்தைச் சேர்ந்தார்கள்.

2. சத்தியத்தைக் காட்டிலும் சிறந்ததொரு தர்மங் கிடையாது சத்தியமற்றதைவிட இழிவானதொன்றும் கிடையாது. உண்மையைவிட உயர்ந்ததொரு அறிவுங் கிடையாது. எனவே எல்லோரும் கைப்பற்றவேண்டியது சத்தியமே யாகும். உண்மையாயும் உயர்ந்ததாயும் பாரபட்சமன்னியிலுமிருக்கும் மேற்சொன்ன இருஷிகளின் அறவழியை யாவரும் போற்றி நடக்கட்டும்.

எனது கொள்கைகளைக் கூறுவேன். விவரங்களை இந்நூலில் வேண்டிய விடங்களில் கூறியுள்ளேன்.

1. எவன் பிரஹ்மமமோ; பரமாத்மாவோ; எங்கும் பரவியுள்ளவனோ; சச்சிதானந்த ஸ்வரூபனோ; பரிசுத்த குணகர்ம ஸ்வபாவத்தையுடையவனோ, சர்வஞ்ஞனோ; நிராகாரனோ; பரிபூரணமான சகல சக்தியையுங் கொண்டவனோ; கருணாநிதியோ; நீதிபதியோ; சர்வசிருஷ்டிக்கும் காரணமோ; அவைகளைப் பரிபாலித்து அழிக்கிறவனோ; சகல ஜீவன்களுடைய கர்மங்களுக்கேற்ற வண்ணம் முறையே பலாபலன்களை யளிக்கிறவனோ; அத்தகையயோனையே பரமேச்சுரன் எனவறிந்து நம்புகிறேன்.

2. அறிவுக் களஞ்சியமாயும், தர்மஸ்தானமாயும் விளங்கும் நான்கு வேதங்களையும் தேவ வாக்கெனக் கொள்ளுகிறேன். இவைகள் சம்ஹிதையும் மந்திர பாகமுமேயாகும். பிழையன்னியில் அவைகள் தனக்குத்தானே பிரமாணமாய் இருக்கின்றன. எனவே அவைகளைக் காக்க வேறொரு நூலின் தேவையில்லை. சூரியன் (அல்லது விளக்கு) சுய வெளிச்சத்தினால் தன் குணங்களையும் பிரபஞ்சத்திலுள்ள சகல பொருள்களின் குணங்களையும் காட்டுவது போலவே வேதங்களுமாகும். வேதங்களின் உரைகளாவன:—ஐதிரேயம், சதபதம், சாமம், கோபதம், எனப் பிரமாணங்கள் நான்கு; சிட்சை, வியாகரணம், சந்தசம், நிருக்தம், சோதிடம், கற்பம், என வேதாங்கங்கள் ஆறு; ஆயுர்வேதம், அர்த்தவேதம், தனுர்வேதம், காந்தர்வவேதம், என உப வேதங்கள் நான்கு; சாகைகள் ஆயிரத்து நூற்றிருபத்தியேழு; இவைகளையெல்லாம் துணைப் பிரமாணங்களாகக் கருதுகிறேன். அதாவது வேதங்களுக்கு ஒற்றுமையிருக்கிற வரையிலேயே பிரமாணங்களாகும். அதற்கு மாறுங்காலத்தில் பிரயோசனமற்றவைகளே.

3. பாரபட்சமன்னியில் அறவழியை அநுசரித்தல்; உண்மையை மனோ வாக்குக் காயங்களினால் போற்றுதல்; ஈசுவர வாக்கான வேதங்களுக்கு விரோத மன்னியிலிருத்தல்; இவைகளே தர்மமெனப்படும். பாரபட்சத்துடனிருத்தல், மனோவாக்குக் காயங்களினால் உண்மையில்லாததைப் போற்றுதல்

ஈசுவர் வாக்கான வேதங்களுக்கு விரோதமாயிருத்தல் இவைகளே அதர்ம மெனப்படும்.

4. இராகத்துவேஷம், சுகதுக்கம், இன்பதுன்பம், ஞானம் முதலான குணங்களுடனும் அற்ப அறிவுடன் கூடினதும், நித்யமானதுமானதே ஜீவன்.

5. இயற்கையாய் வேறுபட்டும், மாறுன குணம், சுபாவம் இவைகளுடனும் கூடினபடியானுல் கடவுளும், ஜீவனும் வெவ்வேறுனதே. ஆனுல் வியாப்ய வியாபக சம்பந்தத்தினுல் இரண்டும் இணைக்கப்பட்டிருக்கிறது. எனவே அவைகளுக்குச் சமானமான குணங்களுண்டு. பொருளொன்று ஆகாசத்தின் ஆதாவிலிருந்தாலும் அதிலிருந்து வேறுகவும் தனிமையாகவுமே இருக்கிறது, இருந்தது, இருக்கும். ஆனுல் எக்காலமும் ஒன்றுக ஆகாது. அஃதேபோல் ஈசுவானும் ஜீவனும் ஆகும். இரண்டிற்கும் உள்ள உறவு வியாபகவியாப்ய சம்பந்தமேயாகும். தகப்பன் பிள்ளையைப் போலாம். இது உபாசிக்கிறது. அது உபாசிக்கப்படுகிறது.

6. ஈச்சுரன், ஜீவன், உபாதான காரணமான பிரகிருதி இம்மூன்றும் அநாதி, நித்தியமானது. இவைகள் எப்படி நித்தியமோ அப்படியே இவைகளுடைய குணகர்மஸ்வபாவங்களுமாகும்.

7. சம்யோகத்தின் பயனுக விளையும் பொருள், குணம், சுபாவம் முதலியவைகள் வியோகத்தினுல் விலகிவிடும். ஆனுல் சம்யோகத்திற்குக் காரணமாயிருக்கும் சக்தி எக்காலமும் அநாதியானது. அது சம்யோகத்திற்கும் வியோகத்திற்கும் காரணமாக யிருந்து கொண்டேயிருக்கும். சம்யோகம், வியோகம், ஆக்கல் அழித்தல் முதலானவைகள் முறையே அநாதியாக நடந்து வருகின்றன.

8. வெவ்வேறுன பொருளை ஞானத்திற்கும் யுக்திக்கும் ஏற்றவாறு கலந்திருப்பதினுல் ஏற்படும் விளைவே சிருஷ்டி.

9. ஈச்சுரனிடத்திலுள்ள படைக்குந் தன்மையை இயற்கையாய் உபயோகிப்பதே சிருஷ்டியின் நோக்கமாகும். "கண்களினுலயாது பயன்" என்று வினவுங்கால் "உண்மையாகவே பார்ப்பதற்கு" என்பதுபோலவே இவ் விஷயத்திலும். கடவுள் படைக்குந் தன்மையைப் பிரயோகிக்கவும், ஜீவன்களுடைய கர்மாநுசாரம் பலாபலன்களை யனுபவிக்கவும் பிரபஞ்சத்தைச் சிருஷ்டிக்க வேண்டியது அவசியம்.

10. பிரபஞ்சம் படைக்கப்பட்டது. படைத்தவர் மேற்சொன்ன ஈச்சுவரன். பிரபஞ்சத்தின் கண் காணப்படும் அமைப்பையும், விதைமுதலானவைகளைப் போன்ற ஜடப்பொருள்கள் சுயமாகவே ஏற்றவாறு சேர்ந்துகொள்ள சக்தியற்றிருப்பதையும் நோக்குங்காலே சிருஷ்டி கர்த்தாவின் தேவை தெளிவாகும்

11. பந்தத்திற்குக் காரணமுண்டு. பாபத்திற்கு இருப்பிடமான இதுவே அவித்தையாகும். இதுவே கடவுளளற்ற பிறபொருளை உபாசிக்கவும், அஞ்

ஞானத்தை விளைவித்து அதன் பயனாகத் துக்கத்தையும் துன்பத்தையும் தரும். இதிலிருந்து எல்லோரும் விலக முயலுவதால் பந்தமென்ற பெயர் உண்டாயிற்று.

12. பற்பல துன்பம் துக்கம் முதலியவைகளிலிருந்து மீறி விடுதலையடைந்து சர்வவியாபியான ஈச்சுரவனிடத்திலும் அவனுடைய சிருஷ்டியிலும் நிர்ணயஞ் செய்த காலம் வரையில் திருப்தி யின்பத்தை யனுபவித்து ஆனந்தமடைந்த பின்னர் சுயரூபத்தில் உலகத்திற்குத் திரும்புவதுமே முக்தியாகும்.

13. முக்திக்குச் சாதனங்களாவன:—யோகப்பியாசம், தர்மானுஷ்டானம், பிரம்மச்சரியாப்பியாசத்தினால் அறிவைப் பெறல், அறிவாளர், புத்திமான் இவர்களுடைய சேர்க்கை, மெய்ஞ்ஞானவாசை, நல்லெண்ணம், புருஷப் பிரயத்தினம் முதலியன.

14. தர்மவழியில் பெறுவது அர்த்தம் (பொருள்). மாறானவழியில் பெறுவது அனர்த்தம்.

15. தர்மம் அர்த்தம் இவைகளினால் விளைவதே கர்மம்.

16. குணகர்மஸ்வபாவப் பிரகாரம் வருணாச்சிரமத்தை யறிகிறேன்.

17. சுபகுணகர்மசுவபாவத்துடன் கூடினவனும் பாரபட்சத்திலிருந்து விலகினவனும் நீதிநெறி வழியே பெற்றோர்களைப்போல் பிரஜைகளிடம் நடந்துகொண்டு அவர்களுடைய அபிவிருத்தியைப் பெருக்குவதிலேயே பிரயாசைப்படுகிறவனுயு மிருப்பவனே அரசன்.

18. சுத்தகுணகர்ம ஸ்வபாவத்துடன் கூடினவர்களாய் பாரபட்சமற்று அறவழியைக் கைப்பற்றி பிற பிரஜைகளுடையவும் அரசனுடையவும் சுகத்தைப் பரப்புவதிலேயே கருத்து கொண்டு இராஜத்துரோகமில்லாதவர்களாய் பெற்றோரைப்போல் அரசனைப் பாவித்து நடக்கிறவர்களே பிரஜைகள்.

19. தீர விளங்க ஆலோசித்து எச்சமயத்திலும் உண்மையைக் கைக்கொள்ள பேராவல்கொண்டு அநியாயத்தை யழித்து நியாயத்தை நிலைநிறுத்தி தன்னுயிரைப்போல் மன்னுயிரை நினைப்பவனையே நீதிமான் என்று எண்ணுவேன்.

20. அறிஞர்களே தேவர்கள். அறிவிலிகளே அசுரர்கள், தீயபாபத்தை மதிக்கிற தீயோர்களே பிசாசுகள். குணவேஷதாரிகளே இராக்ஷசர்கள்.

21. அறிஞான், பெற்றோர், ஆசாரியன், அதிதி, நீதிமான், அரசன், தர்மாத்மா, பதிவிரதை, ஏகபத்னிவிரதன் இவ்விதமானவர்களை மதித்துப் பூஜை செய்வதே தேவபூஜையாகும். இதற்கு மாறாய் இவர்களுடையவும் ஏனைய மூர்த்திகளையும் பூஜிப்பது அதேவ பூஜையாகும். ஜடவர்களைப் பூஜிப்பதே ஏற்றது, வேறான உயிரற்ற சடங்களைப் பூஜிப்பது ஏற்காததே.

22. அறிவு, ஞானம், அறவழி, தன்னடக்கம், முதலானவைகளைப் பெற எது துணையா யிருக்கிறதோ, எதனால் அவித்தை முதலான குற்றங் குறைகள் நீங்குகிறதோ அதுவே சிட்சை (பயிற்சி).

23. பிரம்மா முதலான இருடிகளால் ஆக்கப்பட்ட ஐத்ரேயம் முதலிய பிரமாணக் கிரந்தங்களே புராணமாம். கல்ப்பம் காதம் (கதை) நாரசம்ஸீ (சரிதை) முதலானவைகளிலேயே உண்மையான இதிகாசம் கிடைக்கும். புராணங்களென்பது பாகவதம் முதலானவைகளல்ல.

24. துன்பக் கடலைத் தாண்ட துணையா யிருப்பதே தீர்த்தம். எனவே அவைகளாவன:—மெய்யுரைத்தல், அறிவு வளர்ச்சி, நல்லோருடன் இணங்கல், இயமநியமங்களைப் பழகுதல், யோகப்பியாசம் செய்தல், புருஷப் பிரயத்தினம், அடக்கம், மனக்கட்டு, பெருந்தன்மை, விஞ்ஞானவாராய்ச்சி, உதார குணம் ஆகியவைகளே. அறிவிலிகள் அழைக்கும் நகரங்கள், நதிகள், ஓடைகள், முதலானவைகள் துன்பக்குழியும் பயங்கரப் பள்ளமுமேயாகும்.

25. பூர்வவினைப் பிரகாரம் விளையும் விதியெனப்படுபவைக்கு விடுத்துச் சும்மாயிராமல் சுறுசுறுப்புடனிருத்தலே சிறந்தது. ஏனெனில் மறுபிறப்பில் கர்மங்களைத் திருத்தி அதுவே யமைக்கிறது. பிரயத்தினமன்னியிலிருப்பது யாவற்றையும் கெடுத்துவிடும். எனவே குருட்டுத் தலைவிதியைக் காட்டிலும் இப்பிறப்பில் செய்யும் கர்மங்களே சிறந்தது.

26. பிறருடைய இன்பதுன்பம் லாபநஷ்டம் முதலியவைகளை இரக்கத்துடன் நோக்கி, குணங்களுக்கேற்றவாறு அறிவதினுலேயே மனிதனின் சிறந்த சுபாவம் வெளியாகும். இதற்கு மாறானது வெறுக்கத்தக்கதே.

27. எதினுல் மனோ வாக்கு காயம் மூன்றும் மேம்படுகிறதோ அதுவே சம்ஸ்காரம். தொட்டிலிலிருந்து சுடுகாடுவரையிலுள்ள சம்ஸ்காரங்கள் 16. இவைகளை மனிதன் நடத்தியே தீரவேண்டுமென வெண்ணுகிறேன். இறந்தவர்களுக்குத் தகனத்திற்குப்பின் ஒன்றும் செய்யக்கூடாது.

28. தகுதிகளுக்குத் தக்கவாறு அறிஞர்களை அபிமானித்தல்; தொழில் முறை; சிற்பசாஸ்திரம்; இரசாயனம் முதலானவைகளைப் பயிற்சி செய்து பயன்படுத்திக்கொள்ளல்; கல்வியறிவை யூட்டுதல்; அக்னிஹோத்திரத்தின் மூலமாக வாயு, வானம், மழை, காற்று முதலியவைகளையும் பரிசுத்தமாக்கல்; இவைகளே யக்ஞம். கடமைகளில் சாலச்சிறந்தது இதுவே.

29. சிறந்த குணகர்ம சுபாவத்துடன் கூடினவர்களைப் பழைய முறைக்கேற்க ஆரியர் எனவேண்டும். இழிவான குண கர்மஸ்வபாவத்தையுடையவர்களைத் தஸ்யுக்களெனவேண்டும்.

30 சிருஷ்டி முதற்கொண்டு மானிடவர்க்கத்தின் பகுதியான ஆரியர்கள், இங்கு வசித்தபடியினுல் இந்தியாவிற்கு ஆரியவர்த்தம் என்று பெயர். வடக்கில் ஹிமாலயமலைகளினுலும், கிழக்கில் அட்டக்கினுலும் தெற்கில் விந்தியபர்வதத்தினுலும் மேற்கில் பிரம்மபுத்திர நதயினுலும் சூழப்பட்டிருக்கிறது. இவ்வெல்லைக்குள் வாழும் சனங்கள் ஆரியர்கள்.

31. சாங்கோபாங்கமாய் வேதவித்தையைக்கற்று சத்தியாசாரத்தைக் கைப்பற்றி பொய்யாசாரத்தை விலக்குகிறவரே ஆசாரியர்.

32. சத்தய சிக்ஷையையும் வித்தையையும் கிரகிப்பதற்கு அருஹனும் அதை அடைவதற்கு இச்சையுள்ளவனும், ஆசாரியரிடத்தில் பிரியத்தை உண்டுபண்ணுகிறவனுயுமே இருப்பவனுமே சிஷ்யன்.

33. தாய் தகப்பன், சத்தியத்தைக் கிரகிக்கச் செய்து அசத்தியத்தை விடச்செய்கிறவன் இவர்களே, குரு.

34. தன்னைப் பின்பற்றுபவர்களுக்கு நன்மை செய்து சத்யத்தை உபதேசிக்கிறவர் புரோகிதர்.

35. வேதத்தில் ஒரு பாகத்தையாயினும் அங்கத்தையாயினும் கற்றுக் கொடுக்கிறவர் உபாத்தியாயர்.

36. தர்மாசரணையின் பிரகாரம் பிரம்மசரியத்திலிருந்து வித்தைகளைக் கற்றுப் பிரத்தியட்சாதி பிரமாணங்களினால் சத்தியாசத்தியங்களை நிர்ணயித்து அசத்தியத்தை விட்டொழிப்பதே சிஷ்டாசாரம். இத்தகையவர்தான் சிஷ்டர்.

37. பிரத்யக்ஷாதி பிரமாணங்களான எட்டையும் ஒற்றுக்கொள்ளுகிறேன்.

38. உண்மையைப் பேசுகிறவன் தர்மாத்மா. சகலருடைய சுகத்தின் பொருட்டு பாடுபடுகிறவன் ஆப்தன்.

39. பரீட்சை ஐந்து வகைப்படும். (i) ஈஸ்வரன் குணகர்ம ஸ்வபாவம் வேதவித்தை. (ii) பிரத்யக்ஷாதி எட்டுப் பிரமாணம். (iii) சிருஷ்டி கிரமம். (iv) ஆப்தர்களுடன் விவாதம். (v) ஆத்மா வித்தை. இவ்வைந்து பரீக்ஷைகளினால் சத்யாசத்யத்தை நிர்ணயித்துச் சத்யத்தைப் பின்பற்றி அசத்தியத்தை ஒழிக்கவேண்டும்.

40. மனிதனின் துராசாரம் கலக்கம் இவைகளிலிருந்து நீங்கிக் கொண்டு சிரேஷ்டாசாரத்தையும் சுகத்தையும் விருத்திபண்ணுவதே பரோபகாரம்.

41. ஜீவன் தன்னுடைய காரியங்களைச் செய்வதில் சுதந்திரன். கர்மங்களுடைய பலன்களை அநுபவிப்பதிலோ பரதந்திரன். ஈசுவரன் தன்னுடைய சத்யாசார முதலிய காரியங்களைச் செய்வதில் சுதந்திரன்.

42. தடையில்லாது சுக விசேஷங்களை அனுபவிப்பதும் அதற்குத் தகுந்தவைகளைப் பெறுவதுமே சுவர்க்கம்.

43. துன்பங்களை அனுபவிப்பதும் அதற்கு வேண்டியவைகளைச் செய்வதுமே நரகம்.

44. சரீரத்துடன் உலகில் ஜீவன் பிரவேசிப்பதே (பிறப்பு) ஜன்மம். காலக்கணக்கில் இறந்தகாலம் நிகழ்காலம் வருங்காலம் எனப் பிரிக்கப்படுகிறது

45. ஜீவன் சரீரம் இவைகளுடைய சம்யோகம் பிறப்பும் வியோகம் இறப்பும் ஆகிறது.

46. நியாயப் பிரகாரம் பகிரங்கமாய் பரஸ்பர சம்மதத்துடன் சம்பந்தம் செய்துகொள்ளுவதே விவாகம்,

47. புருஷன் இறந்த காரணத்தினாலோ அல்லது நபும்சகம் முதலிய ஸ்திரீ ரோகங்களினாலோ, பெண் தன் வர்ணத்தில் அல்லது உயர்ந்த வர்ணத்திலுள்ள புருஷனுடன் சிறிதுகாலம் மக்கட்பேறுக்காகச் சேர்ந்திருப்பதே நியோகம்.

48. ஞாபகமிருக்கவேண்டி குணங்களைப் பாடிப் புகழ்வது ஸ்துதி, அதனால் அன்பும் அதையொத்தநன்மைகளும் மிளிரும்.

49. சுயப்பிரயத்தினத்தினால் கைகூடாத அறிவு முதலிய வரங்களைக் கேழ்ப்பதே பிரார்த்தனை. இதனால் விளைவது நிரபிமானம், வணக்கம், சாந்தி இவைகளே.

50. ஈசுவரனுடைய குணகர்ம சுவபாவங்களைப்போல் தனது குணகர்ம ஸ்வபாவங்களைப் பரிசுத்தமாகச் செய்துகொண்டு அவரைச் சர்வ வியாபியாக வெண்ணி, ஈசுவரனின் சமீபத்தில் தானும், தன் சமீபத்தில் ஈசுவரனும் இருப்பதை யோகப்பியாசத்தினால் பிரத்தியட்சம் செய்து கொள்வதே உபாசனை. இதனால் அறிவைப்பெற மனம் இடங்கொடுக்கும்.

குணங்களைக் கற்பித்து பிரார்த்தனை உபாசனை செய்வது சகுணோபாசனை. அனீசுவர குணங்களிலிருந்து அவரை வேறுபடுத்திக் கூறுவதே நிர்குணோபாசனை. தர்மகுணங்களை பெறக்கோருவதே சகுணோபாசனை; தீயகுணங்களைத் துலைக்கக் கடவுளருளைக் கோருவது நிர்குணோபாசனை. கடவுளின் பரிசுத்தத்தில் பூரண நம்பிக்கை சகுணோபாசனை. கடவுளுடைய நியாயத்திற்கும் அருளுக்கும் அடிமையாயக் கிடப்பதே நிர்குணோபாசனை.

என்னுடைய புஸ்தகங்களாகிற **சத்தியார்த்தப் பிரகாசம், இருக் வேதாதி பாஷ்ய பூமிகை** முதலானவைகளில் விளக்கப்பட்டுள்ள இவைகளே எனது கொள்கை. மெய்யுரைத்தல், பொய்பேசாதிருத்தல் முதலிய தத்துவங்களையொத்துக்கொள்ளுகிறேன். ஆனால் பலபதப் பிரிவினைகளுடைய சண்டைகளை வெறுக்கிறேன். ஏனெனில் அதன் பயன் வீண் கோபமும் மதத்தின் பெயரால் முரட்டுத்தனமான சித்தாந்தங்களுமே. எனவே எனது வாழ்நாளின் நோக்கங்களாவன:—மனோவாக்கு எண்ணங்களில் சத்தியத்தை நிலவச் செய்தல்; சமயசேர்க்கை; பரஸ்பர பகையொழித்தல்; நேசபாவத்துடன் தர்க்கித்தல்; மானிட குடும்பத்தின் க்ஷேமத்திற்குக் கீழ்ப்படிந்து பொது நன்மையை வளர்த்தல். சர்வவல்லமையுள்ள பரமாத்மாவின் கருணையினாலும் அருளாலும் ஆப்தர்களுடைய உதவியாலும், எல்லா சனங்களும சுலபமாகவே தர்மார்த்த காமமோட்சத்தைப் பெற்று அதன் பயனாக எந்நாளும் சிறந்து விளங்கி இன்பமடைய வேண்டி "இச்சித்தாந்தங்கள் சகல பூகோளத்திலும் சீக்கிரமாகவே பரவவேண்டும்".—ஓம்—சாந்தி—சாந்தி—சாந்தி.



இரண்டாம் பாகம் முற்றிற்று.

# சூசிகை.

சூசிகை முற்றிற்று.

## பதினான்காவது அத்தியாயத்தின் பிழைதிருத்தம்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 282 | 20 | யார்—செய்தாரா? | யாருக்காக |
| 283 | 34 | எனவே இது—வார்த்தையாகும் | நீக்கிவிடவும் |
| 284 | 26 | எனவே—ஆகும். | ,, |
| ,, | 35 | சொத்துக்களை | வீடுகளை |
| 285 | 31 | மதமற்ற புலவியர் | நீக்கிவிடவும் |
| 286 | 21 | பொய்களையும், பொருளற்ற, யும், | ,, |
| 288 | 26 | துஷ்டர்களை—சித்தமாகிறது. | அநியாயஞ் செய்தவராகிறார் |
| 291 | 24 | அவர்களை—வருகிறது. | நீக்கிவிடவும் |
| 297 | 30 | உலகத்தில்—கும் | ,, |
| ,, | 31 | சிறுமை | ,, |
| 298 | 6 | அறிவிலிகளாலும் | அறிஞர்களாலும் |
| ,, | 17 | மனிதனை—நடத்தும். | அவநம்பிக்கையையதிகரிக்கும் |
| ,, | 28 | போக்கிரியோடும் | நீக்கிவிடவும் |
| 300 | 3 | தீய | பாப |
| 303 | 14 | துர் | நீக்கிவிடவும் |
| ,, | 16 | ஒழுங்கின்மை | விக்கிரக ஆராதனைக்கு அனுகூலமானவைகள் |
| 304 | 13 | கொள்ளை—வனும். | அமைதியைக் குலைப்பதும் |
| 308 | 19 | இங்ஙனம் | இங்ஙனமிருக்க |
| 312 | 6 | யாஜூஜ் மாஜூஜ் | காக்கும் மகாக்கும் |
| 313 | 21 | நெறிகளை | த்தை |
| 319 | 25 | முகம்மதியர்கள் | சிறுவர்கள் |
| 320 | 15 | நன்னெறியற்ற | தர்மமற்ற |
| 321 | 12 | மாதோடு | மனிதனுடன் |
| ,, | 24 | நன்னெறி—விதிக்கு. | இவைகளுக்கு |
| 324 | 10 | தீய | அதர்ம |